# நா. பார்த்தசாரதி சிறுகதைகள்

– இரு தொகுதிகள் –

**1**

**நா. பார்த்தசாரதி**

தொகுப்பு : அகிலன் கண்ணன்




**தமிழ்ப் புத்தகாலயம்**

புது எண் 34/ப.எண். 35, சாரங்கபாணித் தெரு
காமராஜர் இல்லம் அருகே, திருமலைப்பிள்ளை சாலை குறுக்கே
தி.நகர் சென்னை – 600 017 ☎ - 28340495, 28344528
மின்அஞ்சல் : tamilputhakalayam@yahoo.com
வலைப்பக்கம் : http://expage.com/tamilputhakalayam
http://akilan.50megs.com

நா. பார்த்தசாரதி சிறுகதைகள் (முதல் தொகுதி)
முதற் பதிப்பு : டிசம்பர் 2005
விலை ரூ.950/- (இரு தொகுதிகளும் சேர்த்து)

NA. PARTHASARATHI SIRUKATHAIGAL
by **Na. Parthasarathi**
Compiled by Akilan Kannan

First edition : December 2005
Pages : 1248 (in two volume)
Cover Design: K. Uma
**TAMIL PUTHAKALAYAM**
N.No34/O.No.35, Sarangapani Street
Near Kamaraj House
Off : Thirumalai Pillai Road
T. Nagar, Chennai - 600 017
Phone : 28340495, Fax : 28344528
E-mail : tamilputhakalayam@vsnl.com
Website : http://expage.com/tamilputhakalayam
http://akilan.50megs.com

**Price Rs.950/-**

ISBN No.81-89628-01-01(set - two vol.)



Laser Typeset at : **Shree Srinivasa Designs**, Ph : 9841384410
Printed at : M/s. Jai Ganesh Offset Printers, Chennai - 600 004. ☐

# இந்தப் புத்தகம்

பண்டிதர்; பள்ளி ஆசிரியர்; தமிழ்ச்சங்கப் பணி; பத்திரிகை துணை ஆசிரியர்; இதழாசிரியர்; கவிஞர்; பேச்சாளர்; எழுத்தாளர். சுமார் முப்பதாண்டுகளில் தமிழ் இலக்கிய உலகில் அளப்பரிய சாதனைகளைப் புரிந்துவிட்டு மின்னலென மறைந்தவர்.

தன் எழுத்தாலும் பேச்சாலும் தமிழ் வாசகர்களிடம் உயர்ந்து நின்றவர். செருக்கு மிகுந்தவர். ஆம்! ஞானச்செருக்கு மிகுந்தவர். தன்னம்பிக்கை, சுயகௌரவம் மிகுந்தவர். தன் படைப்பால் வாசகரிடமும் இந்தக் குணங்களை விதைக்க முயன்றவர்.

பலருக்கு முன்மாதிரியாக Role Model ஆகத் திகழ்ந்தவர். நாவல், சிறுகதை, கவிதை, கட்டுரை, நாடகம் எல்லாம் படைத்தவர்.

தனக்கென தனிநடை, தனிப் பாதை கண்டவர்; தன் நடையைத் தானே விமர்சித்தும் பார்த்தவர்.

கருத்துக்களை நயம்பட உரைத்தவர். சற்று விளக்கமாகவே எழுதியவர்.

வடிவத்திற்கு மட்டுமே அதிக முக்கியத்துவம் தராதவர். உள்ளடக்கத்திற்கு உரம் கண்டவர்.

பலவித அரசியல் சித்தாந்தங்களையும் அணுக்கமாய் உணர்ந்தவர். அடித்தளத்தில் தேசியமும் மக்கள் நலனும் ஓடு பாதையாகக் கொண்டு தன் இலக்கியப் பயணத்தை மேற்கொண்டவர்.

1946ல் ‘இளம்பூரணன்’ என்கிற புனை பெயரில் ஆரம்பித்து, வளவன், மணிவண்ணன், பொன்முடி, கூடலழகன் என்றெல்லாம் பெயர் சூடி 200க்கும் மேற்பட்ட சிறுகதைகளைப் படைத்தவர். அவர் நா.பார்த்தசாரதி எனும் நா.பா.

குமரிமலர், கல்கி, விகடன், கலைமகள், அமுதசுரபி, தினமணிக்கதிர், தாமரை, சுதேசமித்ரன், உமா, கலாவல்லி, காதல், தமிழ்ப்பொழில், தீபம், இதயம் பேசுகிறது, குங்குமம், கலாவல்லி போன்ற பற்பல இதழ்களில் சிறுகதைகள் எழுதினார் நா.பா.

ஒவ்வொரு கதையும் ஒரு சேதி சொல்லும். ஆசிரியர் உணர்ந்த அதே அனுபவத்தை அதே படிநிலையில் வாசகரும் உணரும் வண்ணம் சிறுகதைகளைச் செம்மையாகப் படைத்தவர் நா.பா.

அவர் சார்ந்திருந்த அரசியல் சித்தாந்தங்களின் தாக்கமும் அவர்தம் படைப்புக்களில் பிரதிபலிக்கின்றன.

அவர் தம் எழுத்தை வித்தை காட்டும் கருவியாக்கிவிடவில்லை. பகிர்ந்தளிக்கும் பக்குவத்துடன் அதே சமயம் வாசகரைக் கைகொடுத்து மேலுயர்த்திக் கரம் கோர்த்து நடைபயின்றிருக்கிறார் நா.பா. இக்கதைகளில்.

அவர்தம் இலக்கியக் கொள்கைகள், சிறுகதை பற்றிய அவரது நோக்கு நிலைகள் ஆகியவை அவர்தம் முன்னுரைகளிலிருந்து பகுத்துத் தொகுத்துத் தரப்பட்டுள்ளது.

நா.பா. மிகக் குறுகிய காலத்திலேயே அசுர சாதனைகள் புரிந்து விட்டு விடைபெற்றுக் கொண்டார்.

அவரது சிறுகதைகளைக் காலவரிசைப்படி தொகுக்க எம்மால் இயன்ற அளவு முயன்றுள்ளோம். ஒருவித குறிப்புகளோ, இதழ், காலம் போன்ற வெளியீட்டு விபரங்களோ முழு அளவில் கிடைக்கவில்லை. நா.பா.வின் மரணத்தைக் கொஞ்சம்கூட எதிர்பாராத தருணத்தில் சந்தித்ததால் பாதி வழிப் பயணமாக முடிந்துவிட்டதை உணர்கிறோம்.

எம்மால் இயன்ற அளவு கதைகளைச் சேகரித்துள்ளோம். எனினும் நா.பா.வின் முதல் கதை கிட்டவில்லை. இடையிலும் சில கதைகள் விடுபட்டிருக்கக்கூடும்.

நா.பா.வின் சமூகச் சிறுகதைகளை இரு தொகுதிகளாகவும் சரித்திரச் சிறுகதைகளை ஒரு தொகுதியாகவும் பதிப்பித்துள்ளோம்.

நெடுங்கதைகள், குறுநாவல்களைத் தவிர்த்துள்ளோம். அவை தனியே தொகுக்கப் பெற்று பின்னர் வெளிவரும்.

தனிமனித குணங்கள், அரசியல் சமுதாயப் போக்குகள் இவை இரண்டுமே இவரது தண்டவாளங்கள்.

ஒரு கவியாய் - கனவு மட்டுமே கண்டு சொப்பனாவஸ்தைகள் மட்டுமே படவில்லை இவர். அடிப்படையில் இவர் ஒரு கவி. ஆகவே, கவியாகவே விஷயங்களைப் பார்க்கிறார்; ஆனால், அதே சமயம் ஒரு சிந்தனையாளராக - சமுதாய அக்கறை கொண்ட படைப்பாளியாக மிகத் தெளிவாக, தீர்க்கமாகப் பிரச்னைகளை அலசுகிறார்; அழுத்தம் திருத்தமாகப் பிரச்னைகளைப் பேசுகிறார். தீர்வும் தருகிறார் - தன் நோக்கில்.

இவை தவிர, போகிற போக்கில் முகத்தில் படும் ஒரு தென்றல் வருடலாய் இவர் தரும் சிந்தனைச் சிதறல்கள் மிக ரசிக்கத்தக்கன.

காதல், கவிதை, போலியான தன்மைகள், எள்ளல், மோசடிகள், குடும்பம், சமுதாயம், சட்டம், தனிமனித குணவெளிப்பாடுகள் எனப் பலவிதப் பிரச்சினைகள் உலா வருகின்றன இத் தொகுப்பில்.

இத் தொகுப்புக்காக ஓராண்டுக்கு மேலான எங்களது உழைப்பு தமிழ் வாசகர்களுக்குக் கருத்துப் பெட்டகமாக இது பயன்தரும் போது உணரப்பெறும்.

தமிழ்ச் சிறுகதை வடிவத்திலும், உள்ளடக்கத்திலும் காலங்காலமாய் மாற்றம் பெற்று வருகிறது. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய உலகில் குறிப்பிடத்தகுந்த படைப்பாளிகளில் ஒருவரான நா.பா. தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தில் தம் பங்கை எப்படிச் சாதித்துள்ளார் என்பதை இத்தொகுதிகள் துல்லியமாகக் காட்டும்.

இத் தொகுப்பிற்கு உதவியர்களுள் குறிப்பிடத் தகுந்தவர் நா.பாவின் உறவினரான திருமதி. லதா ரமேஷ் ஆவார். நா.பா.வின் சிறுகதைகளில் ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவரிவர். அவருக்கும் நா.பா.வின் துணைவியார் திருமதி. சுந்தரவல்லி பார்த்தசாரதி அவர்கட்கும் எமது நன்றி. 1946-ல் குமரி மலரில் வெளிவந்த 'புதிய நிர்மாணம்' கதையை நகலெடுக்க உதவிய ரோஜா முத்தையா நூலகத்திற்கும் எமது நன்றி.

இந்தச் சிறுகதைகளை முதலில் நா.பாவிடமிருந்து கேட்டு வாங்கி தமது இதழ்களில் வெளியிட்ட அனைத்துப் பத்திரிகை ஆசிரியர்களுக்கும், பின்னர் நூலாக வெளியிட்ட பதிப்பகங்களுக்கும் எமது நன்றி.

வாங்கிப் பயன் பெறும் இனிய வாசகர் உங்கட்கு என்றும் எம் நன்றி.

**– தமிழ்ப்புத்தகாலயம்**

## நா.பா.வின் முன்னுரை

☐ கதாசிரியனின் சிந்தனையில் பிறந்து வாசகனின் சிந்தனையில் நிறைவு பெறுவதுதான் சிறுகதை என்று எனக்குத் தோன்றுகிறது. சில சமயம் கதாசிரியனின் நினைவு வித்து வாசகனின் மனத்திற் புகுந்தும் நிறைவு பெற்றுவிடாமல் வளர்வது உண்டு. கதைக்கு மையமான கருத்து எதுவோ அதன் சிந்தனை வளர்ச்சியையும், வலுவையும் பொறுத்தது அது. கதைகளின் அழகோ, வளமோ, சிந்தனையோ, எதுவானாலும் அது சங்கமமாகும் இடம் வாசகர் சிந்தனையே.

எனது இந்தத் தொகுதியுள் அமைந்த கதைகள் வாசகர் மனத்தில் சங்கமமாகும் போது என்னென்ன உணர்வுகள் கிளருமோ அவை என்னால் எழுபவை, அவை நல்லனவாகுக.

இந்தச் சிறுகதைகள் தமிழ் வாசகர்கள் மனங்களில் வலுவான சிந்தனைகளை நிறைத்தாலும் சரி, வளர்த்தாலும் சரி - அவற்றுக்காக இவற்றை உருவாக்கியவன் பெருமிதம் அடைய முடியும். அப்படி அடையலாம் அல்லவா?

☐ கற்பனை இலக்கியம் படைக்கும் எழுத்தாளனின் மனத்தில் பூக்கும் உணர்ச்சி மலர்களில் உதிர்ந்து மடிந்துவிடுவன சில. பிஞ்சுவிட்டுக் காய்த்துக் கனிந்து கனிகளாய்ச் சுவை நல்குவனவோ மிகவும் சில. ஒரு நல்ல சிறுகதையில் பல நல்ல சிறுகதைகளுக்கான வித்துக்கள் பொதிந்திருக்க வேண்டும். பழத்தின் உள்ளீடாகிய வித்துக்களைப்போல் நல்ல சிறுகதைக்கு இந்த உள்ளீடு இன்றியமையாதது.

போட்டோ ஆல்பத்தைப் பேணும் புகைப்படக் கலைஞனைப் போல உலகத்துக் காட்சிகளின் பல்வேறு உயிர்ப் படங்களைத் தன் மனமாகிற ஆல்பத்தில் சேர்த்து வைத்துக் கொண்டு சிந்திக்கிறவன் எழுத்தாளன்.

இங்கே தொகுக்கப்பட்டுள்ள இந்தச் சிறுகதைகளின் படைப்பாளியாகிய நான் இப்போது விலகி நின்று இவற்றைப் பார்க்கிறேன். என்னுடைய கண்களும், மனமும் எண்ணங்களும் உலகத்தைக் கண்டு, கற்று, உணர்ந்து கொண்ட எத்தனையோ உண்மைகளைக் கதையாக்கிவிடத் துடித்தேன். சில கதைகளாயின! சில கனவுகளாயின. இன்னும் சில நினைவுகளாகவே தங்கிவிட்டன. எரிகிற தீபத்திலிருந்து குறைவது தெரியாமல் எண்ணெயைத் திரி உறிஞ்சிக் கொண்டு எரிகிற மாதிரிப் பிரபஞ்ச வாழ்க்கை என்று என் கண்களுக்கு முன் எந்தப் பேரியக்கம் நடந்து கொண்டிருக்கிறதோ அதிலிருந்து

ஏதோ ஒன்றைக் குறைவது தெரியாமல் நான் எடுத்து என் மனத்தில் சேர்த்துக் கொண்டு வருகிறேன்.

சந்தர்ப்பங்கள் நேரும்போது அப்படி மனத்தில் சேர்த்துக் கொண்டு வருகிற இலக்கிய முதலில் இருந்து வேண்டியதை எடுத்துக் கதைகளை எழுதுகிறேன். இந்தத் தொகுதியிலுள்ள கதைகளையும் அவ்வப்போது சேர்த்த இலக்கிய முதலிலிருந்து உருவாக்கித் தந்திருக்கிறேன். இவற்றில் நயமும், நளினமும் நயமின்மையும், நளினமின்மையும், கருத்தும், கற்பனையும், கருத்தின்மையும், கற்பனையின்மையும் எல்லாம் இருக்கலாம். எப்படியிருந்தாலும் இவற்றைப் படைத்து இவற்றுக்குத் தாய்மையும், தந்தைமையும் பூண்ட சொந்தக்காரன் நான்தான். இந்தக் கதைகளை இப்போது காண்கிற சமயத்தில் என்னையே பல்வித நிலைகளில் காண்பதுபோல் எனக்கு ஒரு பிரமை உண்டாகிறது. அப்படி உண்டாவது இயல்பே!

என் மனத்தில் சேர்த்து வைத்திருக்கும் இலக்கிய முதலீட்டிருந்து உருவாக்கிய இந்தச் சிறுகதைகளைத் தமிழ் வாசகர்களுக்கு முன் வைக்கிறேன்.

விருந்தோம்பல் தமிழர்களுக்கு மிகவும் நல்லதொரு பண்பு. இலக்கியப் படைப்பாளியும் விருந்து பேணத் தகுந்தவனே. ஆனால் அவன் அளிக்கிற விருந்தும் இலக்கிய விருந்தாகத்தான் இருக்க முடியும்.

இலக்கிய ஆசிரியனுக்குப் பெருமை ஒரு கற்பு. அதை விட்டுவிடாமல் போற்றிக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும். இலக்கியப் பணி புரிகிறவனுக்கு நேர்மையும், பெருமை பேணிக் கொள்ளுதலும் ஒழுக்கங்கள்; கற்பை ஒத்த சிறந்த ஒழுக்கங்கள். இன்றுவரை இந்த ஒழுக்கங்களைக் காப்பாற்றிக் கொண்டும், இனி என்றும் காப்பாற்றிவிட வேண்டுமென்ற ஆசை கொண்டும் ஏதோ தமிழில் எழுதி வருகிறேன். எழுத்து ஒரு தொழிலாக என்றும் என் மனத்தில் பட்டதில்லை. நான் எழுதத் தொடங்கிய நாளிலிருந்து இன்றுவரை அதை ஒரு தூய புனிதமான வேள்வியாகவே எண்ணிக் கொண்டு வருகிறேன்.

என் கதைகளைப் படிப்பதற்கு முன்னால் என்னைப் படித்துக் கொள்ள வாசகர்களுக்கு இந்தச் சில வார்த்தைகளை எழுதினேன்.

☐ நாவலுக்கும், சிறுகதைக்கும், குறுநாவலுக்கும் எல்லை, உத்தி, அமைப்பு எல்லாம் வேறுபடலாம். ஆனால் படைப்பதனால் ஏற்படும் இன்பமும் செருக்கும், இரசிப்பதனால் ஏற்படும் சுவையும் எல்லா இலக்கிய வகையினாலும் தருவோர் - பெறுவோர் இரு தரப்பிலும் நிச்சயமாகவும் நிரந்தரமாகவும் உண்டு.

கவிகளின் இதயதாபங்களையும், சொற்களுக்காகச் சமயா சமயங்களில் அவர்கள் தவமிருக்கும் நிலைகளையும் பல சந்தர்ப்பங்களில் அநுபவித்து உணர்ந்திருக்கிறேன். ஒவ்வொரு முறையும் அந்த அனுபவம் ஒரு சிறுகதையாகக் கிடைத்திருக்கிறது. சண்பகப்பூவும் லண்டன் ஸ்கூலும், வேனில் மலர்கள்

போன்ற என் சிறுகதைகள் கவியின் மோகனமான மனக்கிறக்கத்தின் வேறு வேறு சுழிப்புகளை ஒரே அடிப்படையிற் கூறுபவை.

'இந்தக் கதைகள் எல்லாம் ஒரே அடிப்படையில் உள்ளனவே?' என்று என்னுடைய வாசகர்களே பலர் வினாவியிருக்கிறார்கள். மேலே கூறிய கவி மனநிலையை மையமாக வைத்துப் பார்த்தால் இக்கதைகளில் வேறு வேறு நயங்கள் இருப்பது புரியும். புரிந்து கொள்ள வேண்டுகிறேன்.

சிவந்த தாமரைப் பூப்பாதங்கள், நளினமான வளை ஒலிக்கும் கரங்கள், கவியின் நளினம், நாட்டியக்காரிகளின் இங்கிதம், பதங்களின் பக்குவம் - இவையே என் கதைகளில் திரும்பத் திரும்ப வருவதாகக் கூறப்படுகிறது. எழுத்துலகில் எனக்கு என்று ஒரு நளினமான தமிழ் நடை, இங்கிதம், கவிதைப் போக்கு இவை நிச்சயமாக உண்டு என்பதையே இது காட்டுகிறது. ஒவ்வொருவருக்கும் இப்படிச் சில முத்திரைகள் இருப்பதை ஆராய்ந்தால் கண்டுபிடிக்க முடியும். இதற்கு உலகின் எந்த எழுத்தாளருமே விதிவிலக்கு இல்லை.

'சண்பகப்பூவும் லண்டன் ஸ்கூலும்' வியாபாரக் குடும்பத்தில் பிறக்கும் ஒரு வாலிபக் கவியின் - மனநிலையை நுணுக்கமாகச் சித்திரிக்கிறது. 'கவிகள் இடம் மாறியும் பிறக்கிறார்கள்'. தொடர்ந்து கவிகளாகவே இருக்கிறார்களா என்பதை வைத்துத்தான் அவர்களுடைய இடம் நிர்ணயிக்கப்படுகிறது. ஒரு பெரிய தொழிலதிபரின் இயந்திர மனப்பான்மையைத் தன் கவி மனப்பான்மையினால் ஒரு சிறுவன் இளகச் செய்துவிடுவதென்பதும் அமைதியாக நடந்தேறும் பெரும் புரட்சிகளில் ஒன்றாக அமைய வேண்டியதுதானே? பதினேழாவது நம்பருக்கு ஒரு பதில், வண்டு என்ற இரு கதைகளும் எப்படிப்பட்ட வாசகரையும் மனத்தைப் பிசைந்து கண்களில் நீர் நெகிழச் செய்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. காக்கை வலிப்பு, இரவல் ஹீரோ, இரண்டும் சமூக நிலையின் ஏற்றத்தாழ்வுகளை எண்ணிச் சித்திரிக்கப்பட்டவை.

'சிறுகதை என்பது நிமிஷத்தை நித்தியமாக்குவது' என்கிறார்கள். சொற்கள் கிடைக்கும் ஏதோ நிமிஷத்தை நித்யமாக்கும் கவியும், ஏதோ ஒரு நிமிஷத்தில் தன் பேரன் வியாபாரியாயில்லாததையும் அங்கீகரித்துக் கொள்ளும் தொழிலதிபரும், ஏதோ ஒரு விநாடியில் மனம் மாறிய அறிவுச் செல்வனும், நன்மைக்காக மனம் மாறி ஒரு விநாடியில் பொய் சொல்லும் தபால்காரரும், நிமிஷ நேர ஹீரோவான தோட்டியும், நிமிஷ நேரக் கிழிசலில் அனைத்தையும் கிழியக் கொடுத்த ஒருவரும், பிறரும் இச் சிறுகதைகளில் விநாடியை நித்தியமாக்குகிறார்கள். இவற்றின் சிறுகதைத் தன்மையை இந்த எல்லையில் மாற்றியறியுமாறு வாசகர்களை வேண்டுகிறேன்.

□ 'இந்தப் பிரதிபிம்பத்தின்' கண்ணாடிகளில் சிறிதும் பெரிதுமாகப் பல்வேறு பிம்பங்களின் எதிர் விளைவுகளைக் காண்கிறீர்கள். கலை, கதை, கவிதை எல்லாமே ஏதோ ஒரு வகையில் எதிரே தெரிகிற வாழ்க்கையின்

'பிரதிபிம்பம்'தான். இந்தத் தொகுதியில் உள்ள சிறுகதைகள் எத்தனையோ பிரதிபிம்பங்களை - சாயைகளை வாசகர்களுக்குக் காட்டலாம். இவை வெறும் கதைகள் மட்டுமில்லை. கதாசிரியனின் மனத்தில் எந்த அடிப்படையில் எந்த வேளையில் இவை முனைந்து நின்று கருக் கொண்டு வளர்ந்து வெளிப்பட்டன என்பதற்கான கருத்தோட்டத்தை வாசகனுக்கு ஒளிக்காத படைப்புக்களாக இவற்றைக் கூர்ந்து கவனிக்கிற வாசகர்கள் புரிந்து கொள்ள முடியும். எதனோடும் ஒட்டாமல் எவற்றோடும் பட்டுக் கொள்ளாமல் அந்தரத்தில் தொங்குவது போன்ற திரிசங்குக் கற்பனைகளோ, சொப்பனாவஸ்தைச் சித்திரிப்புக்களோதான் மேலே கூறியது போன்ற ஒரு கருத்தோட்டத்தைத் தவிர்க்க முடியும். அப்படிப்பட்ட சொப்பனாவஸ்தைச் சித்திரிப்புக்கள் மரத்தூளையோ தவிட்டையோ தின்பது போல் சப்பென்றிருக்கும். அப்படிக் கதைகளை நீங்கள் இதில் எங்கும் காண முடியாது. ஒவ்வொரு கதையும் உங்கள் மனத்தை அலைக்கழிக்கக் கூடியது. இதில் யார் யாருடைய பிரதிபிம்பங்களை நீங்கள் காண்கிறீர்களோ அல்லது காண்பதாக நினைக்கிறீர்களோ அவர்களில் சிலர் உங்கள் மத்தியிலும் இருக்கலாம். ஏனெனில் இந்தக் கதைகள் வாழ்க்கையிலிருந்து விளைந்தவை. வாழ்க்கையோடு போய்க் கலக்கின்றவை. வாழ்க்கையை அடையாளம் காட்டுகின்றவை.

இதை ஞாபகம் வைத்துக் கொண்டு இந்தக் கதைகளை நீங்கள் படித்தால் கதாசிரியனுக்குப் பெரிதும் உதவியவர்களாவீர்கள். அந்த உதவிக்கு நீங்கள் கடமைப்பட்டிருக்கிறீர்கள்.

☐ இந்தக் கதைகள் நான் பல்வேறு சூழ்நிலைகளில் எழுதியவை. சமீபகாலத்து அரசியல் பொருளாதார மாற்றங்களின் சாயல்கள் உள்ள சில கதைகளும், சமூக மாறுதல்களின் சாயல்கள் உள்ள சில கதைகளும் இத்தொகுதியில் உள்ளன. பிரியத்துக்கு ஏங்கும் பெண்கள். அதே வகை ஆண்கள், பெருமிதம் நிறைந்த பௌருஷம் நிறைந்த ஆண்கள், புரிந்து கொள்வதற்குச் சற்றே சிக்கலான நவீன காலத்துப் பெண்கள், நளினமான கவிகள், இங்கிதமான இளைஞர்கள், அவர்களின் உணர்வுகள், தாபங்கள், தாகங்கள், எல்லாவற்றையும் இக்கதைகளில் அங்கங்கே நீங்கள் சந்திக்கலாம். இந்திய நாட்டுக் கிராமத்தின் ஒளிநிறைந்த பெருமை தரும் ஒரு பாத்திரத்தைப் 'பனையூர் என்றொரு பல்கலைக் கழகம்' என்ற கதையிலும், கிராமத்துக்குப் பெருமை தராத பழமையிலும் சேராத புதுமையிலும் சேராதவர்களை 'அமெரிக்காவிலிருந்து ஒரு பேராசிரியர்' - என்ற கதையிலும் காணலாம். ஜமீன்தாரி ஒழிப்பு, ராஜமான்யம் ஒழிப்பு ஆகிய மாறுதல்களுக்குப் பின்பும் காலத்தோடு ஒத்துப் போகத் தெரியாத சமஸ்தானங்களும், சமஸ்தானாதிபதிகளும் அரச குடும்பங்களும் படும் சிரமங்களைச் சித்தரிக்கும் 'ஓர் அரண்மனை ஏலத்துக்கு வருகிறது' என்ற கதைக்காக நானே ஒரு பழைய சமஸ்தானத்தைச் சுற்றிப் பார்க்க நேர்ந்தது. இந்தக் கதைகள் வெறும் கதைகளில்லை. இவற்றின்

உயிர்த்துடிப்புள்ள சிந்தனைகள் இக்கதைகளை நீங்கள் படித்து முடிப்பதோடு முடிந்து விடுபவை அல்ல. பல சிந்தனைகள் இவற்றை நீங்கள் படித்து முடிக்கும் போதுதான் ஆரம்பமாகவே செய்யும். சிந்தனைகளை முடித்துக் கணக்குத் தீர்த்து முற்றுப் புள்ளி வைத்துவிடாத இக்கதைகள் உங்களையும் தொடர்ந்து சிந்திக்க வைக்கும் உங்களிடம். இவை பற்றிக் கேள்விப்படுகிறவர்களையும் அவை சிந்திக்க வைக்க வேண்டும். அதுவே இதை எழுதியவனுடைய ஆசை, நோக்கம் எல்லாம் ஆகும்.

☐ எனது இந்தச் சிறுகதைகள் வாழ்க்கை அநுபவங்களின் சாயல்கள் உள்ள கற்பனைக் கதைகள். சில முழுவதும் கற்பனையாகவே உருவாக்கப்பட்ட கதைகள். பல பிரச்னைகளைத் தழுவிய கற்பனைகள் இவை. பயண அநுபவத்தை இணைத்து உருவாக்கிய கற்பனையே 'சந்தேகங்களின் முடிவில்!' வெளி நாடுகளில் புதிய சூழலில் வளரும் பேரனைக் கீழ்நாட்டுத் தாத்தா ஒருவர் பார்க்க நேரும்போது ஏற்படும் சிக்கலே 'அமெரிக்காவிலிருந்து பேரன் வருகிறான்' சிறுகதை. நாட்டு நடப்பும் அரசியல் லஞ்ச ஊழலுமே 'களவும் கற்று' கதைக்கு ஆதார சுருதியாகக் கிடைத்தவை. சினிமா, பொதுவாழ்வு, செமினார் என்ற பெயரில் நடக்கும் ஹம்பக்குகள் ஒருமைப்பாடு விவகாரம், முதலிய பலவற்றைத் தழுவி நடக்கும் கதைகள் இத்தொகுதியில் உள்ளன.

சிறுகதைகளில் கதாசிரியனின் அனுபவச் செல்வமும், அவற்றை அவன் விவரிக்கும் திறமும் நயமுமே முக்கியம். அந்தச் சுகானுபவம்தான் அவனுக்கும் அவன் வாசகர்களுக்குமிடையே உள்ள இலக்கிய உறவு. அவ்வுறவு இத்தொகுதி மூலம் செழிக்க முடியும் என்ற நம்பிக்கையோடு இதை வாசகர்கள் முன் வைப்பதில் மகிழ்கிறேன்.

நா. பார்த்தசாரதி

# ஆசிரியர் நா. பார்த்தசாரதி

'நா. பா' என்று வாசகர்களால் அன்புடன் அழைக்கப் பெறும் நா. பார்த்தசாரதி அவர்கள் 18.12.1932ல் இராமநாதபுரத்தைச் சேர்ந்த நதிக்குடியில் பிறந்தவர். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் 'பண்டிதர்' பட்டம் பெற்றவர். சென்னைப் பல்கலையில் வித்வான் பட்டமும், முதுகலைப் பட்டமும் பெற்றவர். பழந்தமிழர் கட்டிடக் கலையும் நகரமைப்பும் என்கிற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வேடும் சமர்ப்பித்தவர்.

இளம் வயதிலேயே எழுதத் தொடங்கிய இவர் சுமார் 50 நாவல்களையும் 200க்கும் மேற்பட்ட சிறுகதைகளையும் பல குறு நாவல், நெடுங்கதைகளையும் படைத்தார். கவிதை, கட்டுரை, பயணநூல், நாடகம், இலக்கணம் என்று பல துறைப் படைப்புக் களில் முத்திரை பதித்தார். மணிவண்ணன், பொன்முடி, வளவன், கூடலழகன், இளம் பூரணன், செங்குளம் வீரசிங்கக் கவிராயர் என்று பல புனை பெயர்களில் எழுதியவர்.

பள்ளியாசிரியர், மதுரைத் தமிழ்ச் சங்கப் பணி, 'தீபம்', தினமணிகதிர் ஆசிரியப் பணி, 'கல்கி' துணையாசிரியப் பணி என்று இவர் எழுத்தையும், பேச்சையும் தம் வாழ்வாகக் கொண்டார். சாகித்ய அகாதமி விருது (சமுதாய வீதி) ராஜா சர் அண்ணாமலை இலக்கியப் பரிசு (துளசி மாடம்) தமிழ்நாடு அரசின் பரிசு (சாயங்கால மேகங்கள்) ஆகியவற்றைப் பெற்றார்.

தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் ஆகியவற்றில் முக்கியப் பொறுப்பு வகித்தார். சாகித்ய அகாதமி கமிட்டி உறுப்பினராகவும், திரைப்பட நிதிக் குழுமத்தின் உறுப்பினராகவும், தேசிய திரைப்பட பரிசுத் தேர்வுக் குழு நடுவராகவும் பணியாற்றினார்.

1976ல் இந்திய அரசின் கலாசாரத் தூதராக, சோவியத் யூனியன், போலந்து, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, சுவிட்சர்லாந்து, ரோம், எகிப்து, குவைத் நாடுகளுக்குப் பயணம் சென்றார். சிங்கப்பூர், இலங்கைக்கும் பலமுறை சென்று வந்தார். மலேயாவில் நடந்த 6வது உலகத் தமிழ் மாநாட்டில் பங்கேற்றுப் பயணம் மேற்கொண்டு உடல் நலம் குன்றினார்.

இவர் உலகின் முக்கியமான தமிழ் வானொலிகள் அனைத்திலும் உரையாற்றிய தோடு இந்தியாவெங்கும் சொற்பொழிவாற்றியுள்ளார். இவரது பல படைப்புக்கள் வானொலி, தொலைக்காட்சிகளிலும் வெளிவந்துள்ளன.

ஆங்கிலம், இந்தி, உருது, மலையாளம், கன்னடம், தெலுங்கு மொழிகளில் இவரது படைப்புகள் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன.

பல அரசியல் கட்சிகளில் ஈடுபாடு கொண்டிருந்தாலும் தேசிய அரசியலில் நாட்டம் கொண்டவரிவர். இவரது படைப்புக்கள் குறித்துப் பலர் ஆய்வுகள் சமர்ப்பித்து முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்.

நா. பா தமது 'தீபம்' இதழை தமிழகத்தில் நடுநிலையான இலக்கிய இதழாகத் திகழச் செய்து பல படைப்பாளிகளை அறிமுகம் செய்ததோடு பல் நோக்கு இலக்கியப் போக்குகளுக்கும் சிறந்த மேடையமைத்துத் தந்தார்.

13.12.1987ல் தமது 55ஆவது வயதில் மறைந்தார் நா. பா.

# உள்ளே...

(முதல் தொகுதி)

(இரண்டாம் தொகுதி)

# 1. புதிய நிர்மாணம்

அன்பார்ந்த ராமு,

என் கண்கள் தெளிவடையவில்லை - அறிவுக் கண்களைத்தான் குறிப்பிடுகிறேன். வாழ்க்கை, விடுவிக்க முடியாத சிக்கல்கள் நிறைந்த பெரும் புதிராகக் காண்கிறது.

எனக்கு உங்களிடத்தில் ஏதோ ஒருவிதமான நம்பிக்கை. அது நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே வருகிறது. அது எவ்விதமானது என்பதை உணர்ந்து கொள்ளவும் என்னால் முடியவில்லை. எது எனக்குத் தெரிந்து, தெளிய முடியாததாயிருக்கிறதோ அதைத்தான் நான் புதிர் என்று குறிப்பிடுகிறேன். இப்படி நீங்களும் எனக்கு ஒரு புதிராக இருப்பதனால்தானோ என்னவோ, எனக்கு விளங்காத புதிர்களை எல்லாம் உங்களிடம் தங்கு தடையின்றி - என் உள்ளத்தைத் திறந்து காண்பிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

என் மனதில் சிந்தனைகள் குவிகின்றன, கலைகின்றன. எவ்வளவோ எழுத வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் மறைந்தும் விடுகிறது. தோன்றி மறைவதாகிய இந்த வாழ்க்கையில் எண்ணற்ற மக்கள் வந்து கொண்டிருக்கின்றனர். மறைந்து கொண்டும் இருக்கின்றனர். பலதரப்பட்ட வாழ்க்கைகளின் ஓட்டமே காலத்தோடு பின்னப்பட்டு சரித்திரம் ஆகிறது என்பது என் துணிபு. என் துணிபு என்று நான் குறிப்பிடுவதன் காரணம், இன்று நமக்குக் கற்பிக்கப்படும் கல்வியில் சரித்திரம் என்ற ஒரு பகுதியும் இருக்கிறதல்லவா...? நீங்கள்தான் அடிக்கடி சொல்வீர்கள், "பள்ளியில் படிப்பு நமக்கு எதை அளிக்க வேண்டுமோ அதை அளிக்கவில்லை. படித்து வெளியேறும் மாணவர்கள் மனிதப் பண்பு முற்றிய 'மனிதர்களாய்' வாழ்வதற்கும் கூட அது உதவுவதில்லை" என்று. நீங்கள் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு நடைமுறை வாழ்வில் இறங்கிவிட்டீர்கள். கல்லூரியில் பி.ஏ. வகுப்பின் படி மேல் காலை வைத்துக் கொண்டுதான் இதை உணர்கிறேன்

திடீரென்று ஒரு நாள், 'இதுவரை நாம் கற்றது என்ன?' என்று என்னையே கேட்டுக் கொண்டேன். 'கர்வம் ஒன்று, அசட்டை அடுத்தபடியாக; சோம்பேறித்தனம் மூன்றாவதாக. தன்நம்பிக்கையின்மை அதற்கு மேலாக...' என்று என் மனசாட்சி பதில் சொல்லிக் கொண்டே போயிற்று. என்னால் சகிக்க முடியவில்லை. உதாரணமாக சரித்திரத்தையே எடுத்துக் கொண்டாலும், அது ஏதோ சென்ற காலங்களின் 'காலண்டர்' மாதிரி இருக்கிறதே அன்றி மனித சமுதாயத்தின் வளர்ச்சியையும், பண்பையும் கூறவே இல்லை.

கலாசாலைப் படிப்பிலிருந்து விலகிவிடுவதென்று தீர்மானித்துவிட்டேன். கலைத்துறையில் அது கற்பதன் மூலம் எதை அளிக்குமோ அதைச் சொந்த

முயற்சியிலேயே பெற்றுக் கொள்ளலாம் என்கிற நம்பிக்கை எனக்குப் பிறந்துவிட்டது. என் நண்பர்களில் பலர் அது என் எதிர்காலத்தை ரொம்பவும் பாதிக்கும் என்று கூறி என்னை, மேலும் படிக்கும்படி தொந்தரவு செய்கிறார்கள். ஆனால் எனக்கு விருப்பம் இல்லை. நான் முடிவு செய்துவிட்டேன்.

"எதிர்காலம்" என்று அவர்கள் எந்த அர்த்தத்தில் கூறுகிறார்கள் என்பதை நான் புரிந்து கொண்டேன். "கல்யாண மார்க்கெட்டில் தங்கள் மதிப்பை உயர்த்திக் கொள்வது, ஏதாவது ஒரு உத்தியோகத்தில் ஒட்டிக் கொள்வது. இவ்வளவுதான்" அவர்கள் குறிப்பிடும் எதிர்காலத்திற்கு அர்த்தம். எனக்கு இந்த இரண்டிலும் விருப்பம் இல்லை. காலத்தின் நெஞ்சிலே காலை வைத்து நடக்க வேண்டும் என்று என் மனம் விரும்புகிறது. மனித வாழ்விலே மடியாமை பெற்று மக்கள் மனத்திலே என்றும் விளங்கும் பெரிய காரியம் ஏதாவது செய்யவேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

நண்ப, அரசியலிலே பிரவேசிக்க எனக்கு ஆர்வம் இல்லை. அது பிளவுகளையும் வேற்றுமைகளையும் பெருக்கிக் கொண்டுதான் இருக்கிறது என்று எண்ணுகிறேன். என் முழுமுயற்சியையும் கலைத்துறையில் திருப்ப வேண்டும் என்று நான் எண்ணுகிறேன். ஆனால் அதற்காக என்ன செய்ய வேண்டும் என்பதும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் ஒரு கவிஞனாக வேண்டும் என்று கனவு காண்கிறேன். சிந்தனையில் மின்னொளி கண்டு மக்கள் மனத்தினிலே ஒளி ஏற்றி வைக்க வேண்டும் என்று துடிக்கிறேன். இதற்காகக் கற்பதிலும் கவிதை நெஞ்சோடு பழகுவதிலும் ஈடுபட்டிருக்கிறேன்.

இந்த நிலையில் உங்கள் உதவியை ரொம்பவும் எதிர் பார்க்கிறேன். என் மனம் ஏனோ உங்கள் முன்னால் கட்டுப்படுகிறது! எனக்கு நீங்களே யோசனை கூற முடியும் என்று நம்புகிறேன். உங்கள் பதிலை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன்.

வணக்கம்.

அன்புடைய நண்பன்,
கணபதி

கணபதிக்கு ராமு பதில் எழுதினான். ரொம்பவும் சுருக்கமாக:

நண்பா,

தங்கள் முயற்சிகளை நான் வரவேற்கிறேன். மக்களுக்கு எது தேவையோ அதைக் காலத்தையும் பண்பையும் அனுசரித்து அளிப்பது தான் கலைஞர்களின் லட்சியமாக இருக்க வேண்டும். இது ஒன்றை மாத்திரம் மனதில் வைத்துக் கொண்டால் போதும் உன்னத வாழ்வை எட்டிப் பிடித்துவிடலாம்.

அடுத்தபடியாக செய்யும் காரியங்களில் தெளிவு வேண்டும். அவையும் புதிர்களாக இருக்கக்கூடாது. அதற்கு மனதில் தூய்மை வேண்டும். தூய்மை ஒழுக்கத்தின் பயன் ஆகும்.

மனதின் தூய்மையில் மலரும் ஒளியில் அறிவின் சுடர் பிரகாசிக்குமேயானால் அது மனித சமூகத்திற்குப் புதிய உயிர்ப்பையும், விழிப்பையும் அளிக்குமானால் தங்கள் லட்சியம் கைகூடும். கலைத் தேவி அருள் புரிவாளாக.

வணக்கம்.

ராமு

*****

சில நாட்களில் கணபதி சினிமாக் கம்பெனி ஒன்றில் வசனம் எழுதும் வேலையில் 'பெரிய மனிதர்' ஒருவரின் உதவியால் சேர்ந்து கொண்டான் என்பதை ராமு அறிந்தான். அதோடு கணபதி எழுதிய கடிதத்தில் பணத்தை அடைந்தவர்களாலேயே உலகில் எதையும் சாதிக்க முடிகிறதென்றும், சமூக நன்மைகள் செய்வதையே மேற்கொண்டாலும் அதற்கும் பணம்தான் பிரதானமாக இருக்கிறதென்றும், அதனால் பணவருவாயைக் குறிக்கோளாகக் கொண்டே சினிமாக் கம்பெனியில் சேர்ந்திருப்பதாகவும் எழுதியிருந்தான் ராமு. கூடுமான வரையில் உயர்ந்த கருத்துக்களைக் கலையின் மூலம் பரவச் செய்வதே சிறந்த முறை ஆதலால், சினிமாத் துறையிலும் லட்சிய வழி செல்ல முயற்சிக்கும்படி பதில் எழுதினான்.

நாட்கள் இயற்கையின் உருவில் வனப்பும் வளர்ச்சியும் முதிர்ச்சியும், பயனும் எழுப்பிக் கொண்டே ஓடிக் கொண்டிருந்தன. ராமு பல நாட்களை சிந்தனையிலேயே கழித்துக் கொண்டிருந்தான். ஏழ்மை! குடும்பத்தைப் பாதுகாக்கும் பொறுப்பும் அவன் தலையிலேயே சுமத்தப்பட்டிருந்தது. இளம் சிறுவர்களான அவன் சகோதரர்கள் படிக்க வேண்டும். தந்தை இறக்கும் பொழுது மனைவி மக்களுக்கு உதவியாக இருக்க வேண்டும் என்ற ஆசையில், வைத்தியம் பார்க்கச் செலவு செய்து பட்ட கடனை அடைக்க வேண்டி இருந்தது. அன்றாடத் தேவைகளுக்கும் சம்பாதித்தே ஆக வேண்டும். சும்மா உட்கார்ந்து கொண்டிருந்தால் முடியுமா?

அவன் மனதில் தீக்கொழுந்து சுடர் விட்டுக் கொண்டிருந்தது. நான் பிறந்த இந்த நாட்டுக்காக நாட்டின் மக்களுக்காக... ஏதாவது செய்ய வேண்டும். என் உடன் பிறந்த மக்கள் மனித வாழ்வில் இன்பமும் அன்பும் தழைத்துப் பதிய பொருளும் பயனும் அளிப்பதாக இருக்க வேண்டும் என்று அவன் சிந்தித்தான்.

சில நாள் உத்தியோகம் பார்த்து வந்தான். அது அடிமைத்தனத்தின் சிறைக்கூடமாகப்பட்டது அவனுக்கு. 'கடமை என்ற பொறுப்பும், கண்ணியமும் சுயேச்சையும் உள்ளதல்லவோ தொழில். அது அல்லவோ மனிதனுக்கு மனித உணர்வுகளை வழங்கக்கூடியது' என்று அவன் அறிவு சொல்லிற்று. இடையில் அவன் சிந்தனைகள் தழைத்துப் படர்ந்து மலர ஆரம்பித்தன. இந்த நிலையில் கணபதியின் யோசனை அவன் மனதில் படவே, தன் உணர்வுகளுக்கு உருவம் கொடுத்து கட்டுரைகளாகவும், கதைகளாகவும், கவிதைகளாகவும் தொடுக்க ஆரம்பித்தான். அவை புது மணம் கமழ இலக்கிய உலகிலே புகழுடன் பரவ ஆரம்பித்தன.

ஒவ்வொரு நாளும் புதிய புதிய சிந்தனைகள், புதிய கற்பனைகள். மனித வாழ்வு இப்படி ஆக வேண்டும், அப்படி மாற வேண்டும், இந்த விதமாக உயர்ந்து ஒவ்வொரு மனிதனும் பூரணத்துவம் பெற வேண்டும். சத்தியப் புகழ் சாத்தியப்பட வேண்டும். எல்லோரும் ஒரு இனம், ஒரு நிறை, ஒரு நிலை என்றாக வேண்டும்... என்றெல்லாம் அவன் நினைத்தான். அந்த நினைவுகள் வாழ்க்கைச் சித்திரங்களாக மாறின. அவை படித்தவர் உள்ளத்தைத் தொட்டன. பண்பை விளைத்தன. புரட்சிகரமான புது எழுத்தாளனாக, ஆசிரியனாக அவன் வளர்ச்சியடைந்தான். ஆனால்...!

ஆனால்...! அவன் மனம் அமைதி அடையவில்லை. சலனப்பட்டுக் கொண்டிருந்தது பல படங்கள், பல விதங்களில்... அவன் சொல்லிக் கொண்டான்... 'நான் அதைச் செய்ய வேண்டும், இதைச் செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன், எழுதுகிறேன்; ஆனால் நானாக எதையும் செய்து காட்ட முடியவில்லை. எனக்கு ஆக்கும் சக்தி இருக்கிறது என்ற நம்பிக்கை இருந்தும் எதையும் ஆக்கிக் காட்ட முடியவில்லை....' என்று.

மனதிற்கு ஒவ்வாத தன்க்கென்றும் ஏதும் உரிமை இல்லாத உத்தியோகத்திலிருந்து விடுபட வேண்டும் என்ற தாகம் அதிகரித்தது. அடிமைத் தொழிலை விட்டான். இயற்கை வாழ்வை ஏற்றுக் குடிசைத் தொழிலைக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உண்டாயிற்று. அடுத்த நாளே அவன் பொதுமக்களில் ஒருவனாக மாறிவிட்டான்.

சாதாரண ஏழைத் தொழிலாளிகள் தாங்களாகச் செய்த தொழில்களில் போதிய வருமானம் இல்லாமல் திண்டாடிக் கொண்டிருந்தனர். மூலதனம் இல்லாத குறை, விற்பனைப் போட்டி, செய்த பண்டங்களைத் தேவை அதிகம் உள்ள பட்டணப் பிரதேசங்களுக்குக் கொண்டு போய் விற்க முடியாமை... ஆகிய காரணங்களால் தொழில்கள் வளம் குன்றி நலிந்து கொண்டிருந்தன. கிராமங்கள் பெருமை இழந்து, பொலிவு குன்றி வறண்ட இடங்கள் ஆயின. கிராம வாசிகளை உயிர் பெறச் செய்ய புதிய நிர்மாணம் தேவை. புதிய வழி ஒன்று தேவை என்று அவன் மனம் இடைவிடாமல் கூறிக் கொண்டிருந்தது. இந்த நாட்டின் நமது இந்திய நாட்டின் உயிர் கிராமங்கள். நமது மதத்தின் வேர் கிராமங்கள். நமது வாழ்வின் நலன் கிராமங்கள். நமது சமுதாய அமைப்பின் இயற்கைத் தத்துவத்தின் இலக்கணம் கிராமங்கள். நமது இயற்கை, வாழ்வின் பொழிவு, விளக்கம், மாண்பு எல்லாம் கிராமங்களிலே. இந்திய கலாசாரம், இந்திய இரத்த ஓட்டம், இந்திய மனம் கிராமவாசியின் உடலிலே உள்ளத்திலே காணக்கிடப்பவை.

கிராமம் உயிர் பெற்றால் இந்திய வாழ்வு உயிர் பெறும். இதற்கு வழி என்ன என்று இரவு பகலாக அவன் சிந்திப்பான்.

உண்மையும், உறுதியும் படைத்த அவன் உள்ளத்திலே தொழில்களைக் கூட்டுறவு முறையில் வளர்க்கும் யோசனை அபூர்வமாகத் தோன்றியது. தொழிலாளிகளின் தொழில் வாரியாக ஒன்று திரட்டினான். கிராமவாசிகளை ஐக்கியப்படுத்தினான். அறிவுப் போதனையால் ஆயிரம் சாதிகளின் கூண்டுகளிலே அடைப்பட்டுக் கிடந்த மக்களை ஒன்று திரட்டினான். எல்லோரும் ஒன்றை நினைப்போம், ஒன்றையே

செய்வோம், அது எல்லோரும் ஒன்றாக இருப்பதற்காக... என்பதே அவன் நிர்மாண கோஷமாக மாறியது. கிராமவாசிகள் அனைவரும் ஒன்றாயினர்.

இரண்டு மூன்று வருஷங்களில் கிராமம் புதிய ஒளியுடன் மலர்ந்தது. இந்த சாதனை கண்டு யாவரும் வியந்தனர். அரசியல்வாதிகள் புதுமைக் கண்களுடன் பார்த்தனர். ஒவ்வொரு கிராமத்தையும் இந்த முறையில் ஒன்றுபடுத்த வேண்டும். நமது சமுதாய வாழ்வைக் காட்ட வேண்டும் என்ற பிரசாரம் பத்திரிகைகளின் வாயிலாக வலுத்தது. அநேகப் பத்திரிகைகள் அவன் உருவத்தை முகப்புப் படமாகப் போட்டன. அந்தக் கிராம வளர்ச்சியைப் பற்றிப் பத்தி பத்தியாகக் கட்டுரைகள் எழுதின.

"இதை எப்படிச் செய்தீர்கள்?" என்று கேட்டவர்களுக்கு அவன் அளித்த விடை இவ்வளவுதான். "உண்மை என் மூலதனம், அதுதான் வித்து. தன்னலமற்ற என் மனம், இதன் வளர்ச்சிக்கான நீர்... உரமோ.... உழைப்புத்தான்."

*****

திடீரென்று ஒரு நாள் கணபதி அவன் முன் நின்றான். அவன் கண்களில் அசாதாரண வெறுப்பும் தோல்வியின் அலுப்பும் வழிந்துகொண்டிருந்தன. ராமு அவனை ஆர்வத்துடன் வரவேற்று அமரச் சொன்னான். கணபதியின் உருவத்திலே ஒரு புதிய மாற்றம் இருந்தது. எவ்வளவுக்கெவ்வளவு அலுப்புடனும் ஏக்கத்துடனும் அவன் காணப்பட்டானோ அவ்வளவுக்கவ்வளவு அழகுடன் தளதளப்பாக இருந்தான். அவன் உடலில் ஒரு பொன்நிறம் ஊறி இருந்தது. அதை எடுத்துக் காட்டும் படியாக அழகான சில்க் உடைகளை அணிந்து கொண்டிருந்தான். விரல்களிலே வைரமும், பச்சையும், நீலமும் பதித்த மோதிரங்கள். இடது கையில் வைரங்கள் இழைத்த சங்கிலியில் மாட்டிய 'ரிஸ்ட் வாட்ச்'.

ராமு ஆச்சர்யத்துடன் கேட்டான். "காலத்தின் நெஞ்சிலே காலை வைத்து நடக்கக் கற்றுக் கொண்டாயா....?" என்று.

கணபதி சொல்லத் தொடங்கினான், "ராமு... தோல்விகளிலே மனம் உடைந்து போன நான், என்னுடைய உயர்ந்த உள்ளத்தைப் பணவெறிக்கு அடிமைப் படுத்தினேன். என் லட்சியங்களை எட்டிப் பிடிக்கப் பணம் ஒன்றே குறுக்குப் பாதை என்று உறுதியாக நம்பினேன். ஆனால் ஏமாந்தேன். எவ்வளவுக்கெவ்வளவு நான் பொருளைக் குவித்துக் கொண்டே போனேனோ அவ்வளவுக்கவ்வளவு என் ஆசையும் அதிகரித்துக் கொண்டே வந்தது. என் லட்சியங்கள் எப்போதோ குழந்தைப் பருவத்தில் கண்ட காலைக் கனவுகளாக மங்கி மறைந்து போயின.

"ஐயோ..! ராமு... நீங்கள் அளித்த ஒவ்வொரு போதனையையும் மறந்தேன் நான். அறிவை நட வேண்டிய உள்ளத்திலே ஆசைகளை நட்டேன். தூய்மை துளிர்க்க வேண்டிய இடத்திலே காமக்கணைகள் படை எடுக்க விட்டேன். உள்ளத்தை மெருகேற்றுவதற்குப் பதிலாக உடலுக்கு அழகூட்ட மருந்துகள் வாங்கினேன். மக்கள் நலன் பெற எண்ணுவதற்குப் பதிலாக மோகக் களி ஆட்டங்களில் கிடைக்கும் இன்பத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன். என்ன சொல்ல? பாவியானேன்!

"கலையின் மூலம் அறிவைப் பரப்ப முயற்சிக்கும்படி நீங்கள் யோசனை கூறினீர்கள். ஆனால் நானோ... அழகழகான, மனத்தை மயக்கத்தில் ஆழ்த்தக்கூடிய, போதை நிறைந்த காமலாகிரிச் சொற்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கலையை அழகு பெறச் செய்ய முயன்றேன். அதுதான் என் தொழிலாக ஆக்கப்பட்டிருந்தது. எவ்வளவுக்கெவ்வளவு நான் என்னைக் கெடுத்துக் கொண்டேனோ அவ்வளவுக் கவ்வளவு நான் புகழப்பட்டேன். என் காமக்கலையை விருத்தி செய்து கொள்வதற்காக அனுபவத்தில் ஈடுபட எண்ணி... அதை எல்லாம் ஏன் கேட்கிறாய். நான் பாவி ஆகி, மற்றவர்களையும் பாவ வழியில் தூண்டுபவற்றைச் செய்து கொண்டிருந்ததற்காக நான் பொருளும் புகழும் பெருமிதமும் அடைந்தேன்.

"நீங்கள் இவ்வளவு பெரிய எழுத்தாளரும், கவிஞரும் ஆகி இருப்பீர்கள் என்று எண்ணவில்லை. ஆச்சரியகரமான சமூக முன்னேற்ற வழியும் அரசியலில் செயல் முறையில் சில சாதனைகளும் செய்து காட்டியதற்காக நீங்கள் புகழப்படுகிறீர்கள், போற்றப்படுகிறீர்கள் என்று எண்ணினேன். ஆனால், 'தூய்மை' பத்திரிகையில் தங்கள் 'விடுதலை' என்ற கவிதையைக் கண்டதும் என் மனம் ஆச்சரியத்தில் மூழ்கிப் போய்விட்டது. விடுதலை என்றால் என்ன? தேவைகளில் விடுதலை. நினைக்க, பேச, தொழ, விருப்புடன் வாழ போதுமான உரிமைகள் - இவை தாம் விடுதலை. இவற்றில் ஒவ்வொன்றையும் எடுத்தெடுத்துக் கூறி தமிழன்னை ஒருத்தி பாடி வரும் பாட்டு... அந்தக் கவிதை என் உள்ளத்தில் புதிய விழிப்பையே உண்டு பண்ணிவிட்டது என்று சொல்ல வேண்டும். அப்பொழுதுதான் என் பழைய லட்சியங்களைப் பற்றியும் உங்கள் புதிய வாழ்வு எப்படி இருக்கும் என்பதைப் பற்றியும் சிந்தனைகள் என் மனதில் துளிர்த்தன. கேவலமான என் வாழ்வின் நிலை கூரிய பாணங்களைப் போல் என் நெஞ்சைத் துளைத்தது. ஓடி வந்தேன்.

"இழந்து போன லட்சிய வாழ்வை எனக்கு நீங்கள் தான் மீட்டு அளிக்க வேண்டும்" என்றான் கணபதி.

அடுத்த மாதத்தில் அங்கே 'சர்வகலா நிலையம்' தோன்றியது. கலையின் மூலம் அறிவைப் பரப்ப புதுமைக் கலையை உயிர் பெறச் செய்வதே லட்சியமாக அமைந்தது சர்வகலா நிலையம். அங்கே வாழ்வை சித்தரிக்கும் நாட்டியம், நாடகம், படிப்பு, கதை, சித்திரம், சிற்பம் எல்லாம் மலர்ந்தன.

கவிஞர் ராமுவின் புதிய நிர்மாணத்திலே வாழ்வின் விடுதலை முழுதும் பொலிந்து விளங்குவதைக் காணலாம். அங்கே எல்லோரும் ஒன்றையே நினைக்கிறார்கள். ஒன்றையே செய்கிறார்கள். அந்த ஒன்று எல்லோரும் நன்றாக இருக்க வேண்டும் என்பதே.

அங்கே ஒவ்வொரு மனிதனும் மன்னன். ஒவ்வொருவன் வாழ்வும் இன்பம். ஒவ்வொரு வீடும் கலைக்கூடம்.

அவ்வளவிற்கும் வித்து உண்மை. தன்னலமற்ற பொன் உள்ளம்தான் வளர்க்கும் நன்னீர்.

(குமரி மலர், நவம்பர், 1946)

## 2. சிலந்தி சிரித்தது

**க**ட்டுரை எழுதுவதற்காகக் கற்பனைப் பறவையின் இறக்கைகளை அவிழ்த்துப் பறக்கவிட்டவாறு உச்சிமோட்டைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அங்கே சிதைந்த தன் வலையைச் சீர்ப்படுத்திக் கொண்டிருந்தது ஒரு சிலந்தி. அதன் செய்கை உலகம் ஒப்பும் ஒரு உண்மையை நினைவுறுத்தியது.

அந்த உண்மை - "உலகில் உள்ள ஒவ்வொரு உயிரும் வாழ விரும்புகிறது; எப்படியாவது எந்த வழியிலாவது தான் வாழ வேண்டும் என்று நினைக்கிறது." இல்லாவிட்டால் இந்தச் சிலந்தி பட்டிழையைவிட மெல்லிய மின்னும் இழைகளைக் கொண்டு அழகாக மாயவலை பின்னி அதிலே பல சிறு உயிர்களைச் சிக்க வைத்து அவைகளின் உயிர்களைப் போக்கி உண்டு மகிழுமா?

இந்த உலகப் படைப்பே எனக்கு விசித்திரமாக விடுவிக்க முடியாத புதிராகத் தோன்றியது; பதுங்கும் புலிக்குப் பாய்ந்தோடும் புள்ளிமான் இரையாகிறது. வாழ நிற்கும் கொக்கிற்கு நீரில் ஓடி விளையாடும் மீன் இரையாகிறது. ஒருவன் உழைத்துச் சாக மற்றொருவன் உண்டு மகிழ்ந்து உப்பரிகையிலே உலாவுகிறான். இப்படித்தானே உலகம் நடைபோடுகிறது. இயற்கையின் போக்கே இப்படித்தானோ? இயற்கையின் போக்கு இப்படி இருந்தால் விட்டுவிடலாமா?... ஒன்றின் உயிரும், உழைப்பும் மற்றொன்றின் உணவிற்கும் உல்லாசத்திற்கும் உறைவிடமாக அமையத்தான் வேண்டுமா?...

இவ்விதமாக வினாக்களை எழுப்பி அதற்கு விடை கண்டு கொண்டிருக்கையில் "அண்ணா! அண்ணா!!... நரி! நரி!" என்று படத்தை எடுத்துக் கொண்டு என்னிடம் ஓடி வந்தான் ஏழாண்டுகள் நிரம்பிய என் தம்பி. படத்தைப் பார்த்தேன். மிக அழகாக இருந்தது. அதை ஒரு ஆற்றல்மிகுந்த ஓவியன்தான் தீட்டி இருக்க வேண்டும். வண்ணச் சேர்க்கையைச் சரியாகக் கூட்டிக் குழம்பாக்கி ஒளிவிடும் ஓவியமாக அவன் அந்த எழிலுருவைச் சமைத்ததற்காக மட்டும் நான் அவனைச் சிறந்த ஓவியக்கலைஞனாகக் கருதவில்லை. அவன் அந்த ஓவியத்தை அதன் நிலைக்கேற்ப உணர்வுகளை வெளியிடுமாறு வரைந்திருந்தான். அந்த ஓவியத்தில் நரியோடு நண்டும் இடம் பெற்றிருந்தது. ஆனால் எங்கே?...

நரியின் வாயில் சிக்கிக் கொண்டு தன் உயிர்ப் போராட்டத்தை நடத்திக் கொண்டிருந்தது: ஆனால் நரியோ தன் கண்களின் விஷமச் சிரிப்பைச் சிந்தவிட்டு அது படும் துன்பத்தைக் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தது! எப்படி இருக்கிறது ஓவியத்தின் முழு உருவம்!...

*ஓவியத்தின் கீழே உள்ள வரிகளைப் படித்தேன். 'நரிக்குக் கொண்டாட்டம், நண்டுக்குத் திண்டாட்டம்' என்றிருந்தது. அந்த இரண்டு வரிகளில் அழகும் அர்த்தமும் பொதிந்து கிடப்பதைக் கண்டு வியந்தேன். வியப்பிற்குப் பிறகு என் இதழ் இணைகள் விரிந்து ஏளனச் சிரிப்பைச் சிந்தின. ஏன்?...*

*"ஸார்! பேப்பர்!" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன். பையன் செய்தித்தாளைப் போட்டுவிட்டுப் போய்க் கொண்டிருந்தான். எடுத்துப் பார்த்தேன். பசுமையான இலைகளின் நடுவே வண்ண மலர்கள் எளிதில் தெரிவதைப் போல் அதிலிருந்த பெரிய எழுத்துக்கள் முதலில் தெரிந்தன. வாய்விட்டு தலைப்பை வாசித்தேன். 'கோரக் கொலை! சிறு நிலத்தின் காரணமாக வாய்ச்சண்டை வளர்ந்து வாழ்வை முடித்துக் கொண்ட அதிசயம்' என்றிருந்தது.*

*அறியாமை காரணமாக அழித்தொழித்துக் கொண்ட மக்களுக்காக அனுதாபப்பட்டுக் கொண்டிருந்தேன். அப்பொழுது சிரிப்பொலி கேட்டது. சுற்றிலும் பார்த்தேன்; யாரையும் காணவில்லை. ஆனால் அந்தக் குரல் மட்டும் ஒலித்துக் கொண்டிருந்தது. எப்படி?...*

*'மழையின்மையின் காரணமாக வயல்கள் எல்லாம் வறண்டு வெடித்துப் பாழ்நிலமாகக் கிடக்கின்றன. அதனால் சிறிதும் பயனில்லை. அந்த நிலையிலேகூட இந்த மக்களுக்கு நிலத்தாசை விடவில்லை. வரப்பைப் பெயர்த்து ஒரு அடி தள்ளி அடுத்தவன் நிலத்தில் வரப்பிடுகிறான். ஏன்?... பின்னால் எப்பொழுதோ ஒரு காலத்தில் மழை பெய்து விளையும்போது அதிக விளைவைப் பெற்றுச் சுகமடைவதற்கு! வரப்பைத் தள்ளிப்போடத் தெரிந்தவனுக்கு சினத்தைத் தள்ளிப்போடத் தெரியவில்லை. சுகமாக வாழ வரப்பைப் பெயர்த்தான். ஆனால் வாழ்ந்தானா?...*

*ஆறறிவு படைத்த மனிதனே அதிசயப் பிராணியாக இருக்கிறானே! அவனுக்கே தெரியாதபொழுது ஐயறிவு படைத்த விலங்குகளும் பூச்சிகளும் உயிர் வாழ் அவசியமான உணவிற்காகக் கொன்று கொள்வதைப் பற்றி வருந்துகிறாயே உனக்கு வெட்கமாக இல்லையா? என்று அந்தக் குரல் பலமாக நகைத்தது.*

*உச்சி மேட்டில் ஒலி வந்த திசையை நோக்கினேன். யாரையும் காணவில்லை. அந்தச் சிலந்தி தன் வலையின் நடுவே இருந்தவாறு மேலும் கீழுமாக ஆடிக் கொண்டிருந்தது. ஆம்! அந்தச் சிலந்திதான் சிரித்துப் பேசி இருக்க வேண்டும். அதைத் தவிர வேறு ஒருவரும்தான் இல்லையே.*

*நான் வெட்கிப் போனேன் - 'தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினை' என்ற குறள் மருந்தை நாடிக் குணமடையாமல் மக்கள் குத்திக் கொண்டு சாகிறார்களே என்றுதான்.*

(தமிழ்ப் பொழில், ஜூன், 1954)

## 3. தெய்வம் எங்கே?

**மா**லை நேரம். நண்பர். அழகனைப் பார்த்து வரலாம் என்று பூங்குளம் கிராமத்திற்குச் சென்றேன். நண்பர் கிராமப் புணரமைப்பு வேலையில் பங்கு கொண்டு பெரிதும் உழைத்தவாறு இருந்தார். வேலை முடிந்ததும் ஓய்வு நாடி சோலைப்புறம் வந்தார். சந்தித்தேன். "பொய்யாமொழியார் எங்கே?" என்றேன்.

"சிறுவர்களோடு செடிகளுக்கு நீர் ஊற்றிக் கொண்டிருக்கிறார்" என்றார்.

"தளர்ந்த உடலாயிற்றே, தாங்குமா?" என்றேன்.

"முடிந்தவரையில் உழைக்க வேண்டும் என்ற சீரிய நோக்கத்தை அவர் எப்பொழுதும் செயலில் கடைப்பிடிப்பவர்" என்றார். இதைக் கேட்டதும் நான் பொய்யா மொழியாரின் இனிய குணங்களை, இலட்சியக் கொள்கைகளை எண்ணி வியந்தவாறு சிறிது நேரம் இருந்தேன். அழகன் வியர்வை உலர உலாவிக் கொண்டிருந்தார்.

பொய்யா மொழியார் - பெரிய புலவர். ஆண்டிலே பழுத்து அனுபவத்தில் கனிந்தவர். சுருங்கச் சொன்னால் கறைபடாத வாழ்வு வாழக்கூடியவர். "எல்லா இன்பங்களும் இங்கே இந்த உலகத்தில்தான் இருக்கின்றன" என்பதில் அசையாத நம்பிக்கை கொண்டு அந்த இன்பங்களையெல்லாம் மக்கள் பெற வேண்டும் என்பதற்காக கிராமங்கள் தோறும் இளைஞர்களோடு புணரமைப்பு வேலையில் ஈடுபட்டு மக்கள் வாழ்வில் நலங்காணத் துடிப்பவர். அரசாங்க உதவியோ அன்பர்களின் பொருள் உதவியோ இல்லாமல் உழைப்பை மூலதனமாகக் கொண்டு புணரமைப்புத் தொழிலை நடத்திவந்தார். அந்தத் தொண்டர் படையிலேதான் என் நண்பர் அழகன் இருந்தார்.

"அழகன்! தஞ்சைப் பெரிய கோவிலுக்குப் போகலாமா?... எனக்கு அதன் நிர்மாண அழகை, சிற்ப சித்திர வேலைப்பாடுகளைக் கண்டு மகிழ பல நாளாக ஆவல்.... உங்களை அழைத்துப் போகலாம் என்று தான் வந்தேன்" என்றேன்.

"வருந்துகிறேன் வளவன்; எனக்கு இப்பொழுது ஓய்வில்லை" என்றார்.

"உயிர் பெறும் சித்திரங்களும், உணர்வை அள்ளும் ஓவியங்களும் நிறைந்த கலைக் கோயிலை, தலை நிமிர்ந்து நிற்கும் கோபுரம் காட்டும் தமிழரின் தலைசிறந்த கலைத்திறனைக் கண்டு மகிழ ஆசை இல்லையா அழகன்?"

"இல்லை வளவா! இல்லவே இல்லை!... அங்கே கலைஞன் கல்லை தன் கைத்திறத்தால் அழகுறச் செதுக்கி உயிர் உள்ள உருவம்போல அமைத்திருக்கிறான்.

*ஆனால் இங்கே காலம் உயிர் உள்ள உருவங்களை உதிர வாய்க்கால் ஓடும் உடல்களை பசி, பிணி என்ற உளிகளால் அங்க அழகுகளையெல்லாம் சிதைத்து உயிரைப் போக்கிக் கொண்டிருக்கையில் கலையை, கைத்திறத்தை கற்பனை உயர்வைத் தமிழனின் தனிவீரத்தை, தலைசிறந்த பண்புகளைக் கண்டு மகிழ்ந்து இன்புற்றிருக்கும் நேரமா இது? கலை வேண்டியதுதான்! ஆனால் எப்பொழுது? உண்டு உடுத்த பிறகு உல்லாசமாக இருப்பதற்கும், வாழ்வு கசக்காமல் இருப்பதற்கும் தான் கலையும் அதன் குழந்தைகளான சிற்ப சித்திரங்களும்.*

*"பசி... ஏழைகளின் சிறுகுடலைப் பெருகுடல் விழுங்கிக் கொண்டிருக்கிறது. இந்தச் சமயத்தில் பெரிய கோவிலைக் கண்டு, அது காட்டும் கலைக் கண்காட்சியை, காவியப் படப்பிடிப்பை, இராசராசன் கண்ட கற்பனைக் கனவு, நனவாக உருவாகி உயர்ந்த விதத்தை அந்த எழிற்கோவிலிலே இன்ப நடனம் புரியும் இதிகாசச் சிற்பங்களையெல்லாம் கண்டு இன்புற முடியுமா வளவன்?*

*"பெரியகோவில் - பெருமையில் மட்டும் அல்ல! உருவத்திலும் உயரத்திலும் பெரியது. அதனால்தான் அங்கே ஆயிரத்தெட்டு சிவலிங்கங்கள் இருக்கின்றன! அவைகளுக்கெல்லாம் அந்திமகால பூசை நடக்கிறது. பாதாதி சேகமாக நெய்யும் பாலும் வழிந்தோடுகிறது. அதைப் பார்த்து கடவுளின்பால் பக்தர்கள் கொண்டிருக்கும் தெய்வீக அன்பை என்னால் நினைக்கவே முடியாது. நினைத்துப் பாராட்ட என் நாக்கு மறுத்துவிடும். ஆனால் என் நினைவெல்லாம் எங்கிருக்கும் தெரியுமா? பூங்குளம் கிராமத்தில், பொற்கலசமில்லாத என் கோவிலில் நெய்யையும் பாலையும் நினைத்தறியாத நடமாடும் தெய்வங்களை வழிபட்டு நிற்கும். சுவாமி விவேகானந்தர் என்ன சொல்லியிருக்கிறார் தெரியுமா?*

*"'ஏழைகள்தான் நான் வணங்கும் கடவுள்' என்கிறார். அது மட்டுமா? 'கடவுளைத் தேடி எங்கே செல்கிறீர்கள்?... ஏழைகள், துன்பப்படுவோர், பலவீனர்கள் எல்லோரும் கடவுள்கள் இல்லையா? அவர்களை ஏன் நீங்கள் முதலில் தொழக்கூடாது' என்கிறார்.*

*"காந்தியார் கண்ட முடிவு என்ன தெரியுமா? 'கடவுள் தெய்வ லோகத்திலும் இல்லை, பாதாள லோகத்திலும் இல்லை! ஒவ்வொரு மனிதனிடத்திலும்தான் குடிகொண்டிருக்கிறார். அதனால்தான் மனித வர்க்கத்திற்குச் சேவை செய்வதன் மூலமாக நான் கடவுளைக் காண முயன்று கொண்டிருக்கிறேன்' என்றார்." ஒரு பெரிய விரிவுரை நடத்தி முடித்தார் அழகன். அப்பொழுது பொய்யாமொழியார் செடிகளுக்கு நீருற்றிவிட்டு திருக்குறள் வகுப்பு நடத்தப் போய்க் கொண்டிருந்தார்.*

*"வணக்கம்" என்றேன்.*

*"வாழ்க" என்று கூறிவிட்டுச் சென்றார். நானும் நண்பரிடம் விடைபெற்று அறை நோக்கி வந்து கொண்டிருந்தேன். தூரத்தில் எங்கோ ஆலய மணி அடிக்கும் ஓசை கேட்டுக் கொண்டிருந்தது. என் உள்ளம் 'தெய்வம் எங்கே?' என்ற வினாவை எழுப்பி விடை காணத் தவித்துக் கொண்டிருந்தது.*

(தமிழ்ப் பொழில், செப். 1954 - மார்ச் 1955)

## 4. தூக்கம்

தேசயாத்திரை செய்ய நாள், நட்சத்திரம், போக்குவரத்து வசதிகள், செலவுக்குப் பணம் என்ற இந்த விஷயங்களைப் பற்றிக் கவலைப்படாமல் தைரியமாகப் பிரயாணம் செய்கின்ற கூட்டத்தில் திடீரென்று இந்த நான்காண்டு காலத்திற்குள் சில ஆயிரம் மக்கள் சேர்ந்தார்கள் - அவர்கள் யார்? - கைத்தறி நெசவாளிகள். அவர்களில் ஒருவன்தான் தங்கசாமி.

தங்கசாமி! - அவனுடைய உடலிலே ஒரு குண்டுமணி எடை பொன்கூட ஒட்டியிருக்கவில்லை. ஆனால் அவன் உள்ளம் மட்டும் அவன் பெயரைப் போலவே தங்கமாக இருந்தது. அதோடு அவன் மனைவி தங்கத்திற்கும் அவன் சாமியாக இருந்தான்.

பணத்திற்கு மதிப்புத் தருகின்ற உலகத்தில் அவன் குணத்திற்கு யார் மதிப்புத் தரப் போகிறார்கள்? அதனால்தான் அவன் தேச யாத்திரை செய்யப் புறப்பட்டு விட்டான் பெண்டு பிள்ளை சூழ!

நூல் கிடைக்காததால் தங்கசாமி தனக்குத் தெரிந்த ஒரே தெழிலான நெசவுத் தொழிலை விட வேண்டியதாயிற்று. வாழ வேறு வழியோ, துறையோ தெரியாத காரணத்தால் அவனும் இந்தக் கூட்டத்தில் சேர்ந்துவிட்டான்.

மழையை நம்பிப் பயிரிடும் உழவனைப்போல் நூலை நம்பி தறியிலே உழைத்தவன்தான் தங்கசாமி. அவனது பொருள் சில தறிகள், ஒரு சிறிய வீடு ஆக இவ்வளவுதான். இந்த ஆஸ்திகளோடு அவன் தன் உழைப்பையும் மூலதனமாக வைத்துக் கொண்டு வயிறு வளர்த்து வந்தான். நூல் தட்டப்பாடு வந்தது; மாதத்திற்குச் சில நாட்கள் உண்ணா நோன்பிருக்கக் கற்றுக் கொண்டான். நூலே கிடைக்கவில்லை - அதனால் தறி போடவில்லை. அதைத் தொடர்ந்து தங்கசாமியின் வாழ்க்கைத் தேரும் அசைய மறுத்துவிட்டது. தேர் ஓடாது என்று தெரிந்து கொண்டதும்தான் அவனும் அவன் மனைவியும் தங்கள், தங்கள் கால்களை நம்பிப் பயணத்தைத் தொடங்கினார்கள்.

அவர்கள் துவக்கிய பயணத்தில் திட்டமோ குறிக்கோளோ இருக்கவில்லை. எங்கெங்கோ சுற்றினார்கள்; கிடைத்ததைச் சாப்பிட்டார்கள். சத்திரம் சாவடிகளிலே அதைக் கட்டி வைத்த புண்யவான்களை வாழ்த்திக் கொண்டு குடியிருந்தார்கள்.

ஊரிலே நன்றாக வாழ்ந்த காலத்தில் சிறுசிறு விஷயங்களுக்கெல்லாம் பக்கத்து வீட்டாருடன் பெரிதாகச் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள் தங்கசாமியும் அவன் மனைவியும். ஆனால் இப்பொழுது நடந்துவிட்ட எவ்வளவோ பெரிய தவறுகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு சகித்திருந்தார்கள். காலம் அவர்களுக்குச்

சகிப்புத்தன்மையை மட்டும் கற்றுக் கொடுக்கவில்லை. இன்னும் எவ்வளவோ பெரிய விஷயங்களைக் 'காலம்' என்ற ஞான போதகர் அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்திருந்தார்.

சமயவழியிலே உயர்ந்தவன் - தாழ்ந்தவன் என்ற பாகுபாடுகள் காட்டாமல், பொருளாதாரத் துறையிலே பணக்காரன் ஏழை என்ற பிரிவினைகள் இல்லாமல் ஒற்றுமையாக வாழ்ந்தார்கள். 'ஒன்றே குலம் - ஒருவனே தேவன்' என்ற உயரிய தத்துவம் தெரிய வந்தது. 'யாதும் ஊரே - யாவரும் கேளிர்' என்ற பரந்த மனப்பான்மை பழக்கத்தில் வந்தது.

காலம் கற்றுக் கொடுத்த இந்த உண்மைகளை எப்பொழுதும் கடைப்பிடிப்பார்கள் என்று சொல்வதற்கும் இல்லை. பின்னர் அவர்கள் வாழ்க்கையில் மறுமலர்ச்சி ஏற்படும்பொழுது காலம் கற்றுக் கொடுத்த இந்த உயர்ந்த பண்பாட்டை, சிறந்த பழக்கங்களை மறந்தாலும் மறப்பார்கள். ஏன்?... மனம் அப்படிப்பட்டது.

மனித மனம் ஒரு நூலறுந்த காற்றாடியைப் போன்றது. சாந்த சூழ்நிலை என்ற சூறாவளிக் காற்றுகளையெல்லாம் அது தனக்குச் சாதகமாகக் கொள்ளும். அந்தச் சூறாவளிக் காற்றுகள் தன்னை எங்கே கொண்டு போய் விடும் என்ற கவலையே அதற்குக் கிடையாது.

ஒரு காலத்தில் தங்கசாமி பத்துத் தறிகளுக்குச் சொந்தக்காரன்; அவன் பதினாறு தொழிலாளிகளுக்கு வேலை கொடுத்து வந்தான். ஊம்... அதையெல்லாம் நினைத்துக் கொண்டால் இந்த வேளைப் பசி போகுமா? அதனால்தான் அவன் நடையை எட்டிப் போட்டுக் கொண்டிருந்தான், பக்கத்தில் உள்ள கிராமத்தை நோக்கி.

தோளுக்கு ஒரு குழந்தையாக அவனுடைய குழந்தைகள் இரண்டும் வாகனமேறியிருந்தன. அவைகள் இரண்டும் சுற்றுப்புறக் காட்சிகளைக் கண்டு கைகொட்டிச் சிரித்து மகிழ்ந்தபடியே இருந்தன. பாவம்! அவைகளுக்குத் தெரியுமா தன்னைப் பெற்றெடுத்தவர்களின் பரிதாப நிலைமை?

தங்கசாமி தன்னுடைய கஷ்டகாலத்திலும் அந்தப் பசலைகள் வெம்பிவிடாதபடி பாதுகாத்து வந்தான். இனிமேல் அவர்களை எப்படிப் பாதுகாப்பது என்பதுதான் அவனுக்குப் பெரிய புதிராக இருந்தது.

இந்த வேளைப் பசியை எப்படிப் போக்குவது என்ற பிரச்சனையில் மூழ்கியவாறே நடந்து கொண்டிருந்ததால் அவன் முதுகில் தொங்கிய கந்தல்துணி மூட்டையின் பாரம்கூட அவனுக்குத் தெரியவில்லை. தன்னுடைய கோலத்தைக் கண்டு குலைக்க வரும் நாய்களை விரட்டுவதற்காகக் கையில் வைத்திருந்த குச்சியை ஊன்றிக் கொண்டே கிராமத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் மனைவி தங்கமோ நெடுந்தொலைவு நடந்த களைப்பினால் சோர்ந்து போய் பின்தங்கி வந்து கொண்டிருந்தாள். தங்கத்தோடு சேர்ந்து போவதற்காக குடை போல் விரிந்து குளிர்ந்த நிழலைத் தந்துகொண்டிருந்த ஆலமரத்தின் நிழலில் குழந்தைகளை இறக்கிவிட்டு, பாரம் குறைந்ததனால் வெளிவந்த பெருமூச்சை விட்டுக் கொண்டே

உட்கார்ந்தான். அப்பொழுது சூ...சூ... சூ... என்ற சப்தம் பக்கத்தில் இருந்த தென்னந்தோப்பில் இருந்து வந்தது. சத்தம் கேட்கும் திசையைப் பார்த்தான் தங்கசாமி. பத்துப் பன்னிரண்டு குரங்குகள் இளநீர்க் காய்களைத் திருடிக் கொண்டு தென்னந் தோப்பிலிருந்து ஆலமரத்தை நோக்கி ஓடிவந்தன. அதைப் பார்த்த அவன் இந்தக் குரங்குகள் செய்த பாக்கியம்கூட நாம் செய்யவில்லையே என்று எண்ணி நொந்து கொண்டான். உண்மையிலேயே அவன் நிலை குரங்கைவிட மோசமாகத்தான் இருந்தது.

குரங்கு கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறி மனிதனாக மாறியதாக டார்வின் என்ற பெரியார் கூறியிருக்கிறார். ஆனால் அந்த முன்னேற்றத்தினால் என்ன பிரயோஜனம்? மனிதன் குரங்கைவிட மோசமாகச் சில சமயங்களில் மதிக்கப்படுகிறானே.

குரங்குகள் தன் பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக இளநீர்க் காய்களை திருடியது. அதைக் கண்ட தோட்டக்காரன்... சூ... சூ.. என்று அவைகளை விரட்டியடித்தான். அவ்வளவுதான், குரங்குகள் திருடிய அந்த இளநீர்க் காய்களை திரும்ப அடைவதற்கு அவன் எந்த முயற்சியும் செய்யவில்லை. ஆனால் தங்கசாமி தன் பசிக்காக - வேண்டாம்; குழந்தைகளின் பசிக்காக ஒரு இளநீர்க் காயைப் பறித்துவிட்டால் சும்மா விடுவானா தோட்டக்காரன்?

குழந்தைகள் இருவரும் குரங்குகளைக் கண்டு சந்தோஷ மிகுதியால் கை தட்டிக் கொண்டு குதித்தார்கள். ஆனால் தங்கசாமி மாத்திரம் கல்லை எடுத்துக் கொண்டு எதிர்த் திசையில் இருந்து வேகமாகக் குரங்குகளை விரட்டினான். எங்கிருந்து அவனுக்கு அவ்வளவு சக்தி வந்ததோ தெரியவில்லை. அவ்வளவு வேகமாக ஓடி குரங்குகளை விரட்டினான். பசி அதிகமாக இருக்கும்பொழுது சக்தியும் அதிகமாக இருக்குமோ என்னவோ!

சிறிது தூரம் குரங்குகள் இளநீர்க் காய்களைத் தூக்கிக் கொண்டு ஓடின. தங்கசாமியும் அவைகளை விடுவதாக இல்லை. தொடர்ந்து விரட்டினான். இந்தப் பந்தயம் சுமார் அறுபது, எழுபது கெஜ தூரம் நடந்திருக்கும். ஆபத்து அண்மையில் வந்துவிட்டதை உணர்ந்த குரங்குகளில் சில இளநீர்க் காய்களைப் போட்டுவிட்டு ஓடின. அவ்வளவுதான்! தங்கசாமியின் முகம் சந்தோஷத்தால் புடம் போட்டு எடுக்கப்பட்ட தங்கத்தைவிடப் பிரகாசமாகியது.

இளநீர்க் காய்களையெல்லாம் ஒன்று சேர்த்தான். எண்ணிக்கையில் அவைகள் ஏழாக இருந்தன. தலைக்கொன்றாக வைத்துக் கொண்டாலும் மூன்று மிச்சம் இருந்தது. அதனால் கொஞ்சம் தாராளமாகவே இளநீர் குடிக்கலாம் என்ற ஆசையில் கக்கங்களில் இரண்டும் கையிலே ஐந்துமாக எடுத்துவந்தான். அப்பொழுது ஆலமரத்தடிக்கு வந்து சேர்ந்த தங்கம் அவனை ஆச்சரியத்தோடும் சந்தோஷத்தோடும் பார்த்தாள். நடந்த வேடிக்கையைக்கூடச் சொல்லாமல், தங்கசாமி பக்கத்தில் இருந்த கருங்கல்லில் இளநீர்க் காய்களை மோதி அதன் மட்டைகளை நீக்கி இளநீரைப் பகிர்ந்து குடும்பத்தோடு குடித்தான்.

வெயிலில் நெடுவழி கடந்து நாவறண்டுபோன சமயத்தில் நல்ல இளநீரும் குளிர்ந்த மரநிழலும் கொடுத்த இன்பத்தில் பல மாதங்களுக்குப் பிறகு அவர்கள் அனைவரின் முகங்களும் மலர்ந்தன.

கிராமத்தின் எல்லையில் இருந்த அந்த ஆலமரத்தின் நிழல் அவர்களுக்கு அதிகமாகப் பிடித்துவிட்டதால் தங்கசாமி தன் கந்தல் துணிக் கூடாரத்தை அங்கேயே போட்டான். பிறகு கிராமத்தில் வேலைதேடி இரண்டு மூன்று நாட்கள் அலைந்தான். ஒன்றும் கிடைக்கவில்லை. பக்கத்தூரில் இருக்கும் பஞ்சாலையில் வேலைக்கு ஆள் எடுப்பதாக யாரோ சொன்னார்கள். வழியை விசாரித்துக் கொண்டு பஞ்சாலையை நோக்கி பசியையும் பொருட்படுத்தாமல் போனான். ஒரு மைல் நடப்பதற்குள்ளாகவே அந்தப் பஞ்சாலையின் பிரம்மாண்டமான பெரிய உருவம் கம்பீரமாகத் தெரிந்தது. இவ்வளவு பெரிய உருவம் நம்மோடு போட்டியிட்டால் நம்மால் எதிர்த்து நிற்க முடியுமா என்ன? என்று உள்ளம் தளர்ந்து பெருமூச்சுவிட்டான் தங்கசாமி. ஆம்! அவ்வளவு பெரிய போட்டிதான் கைத்தறித் துணிக்கும், மில் துணிக்கும் மார்க்கெட்டில் நடந்தது. இறுதியாக அந்தப் போட்டியில் வெற்றி பெற்றது யார்?

பூஊம்... ம்...ம்... என்று அப்பொழுது அந்த ஆலை மில் சில நிமிஷநேரங்கள் தன் வெற்றிச் சங்கநாதத்தை ஊதியது. ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் அதன் அழைப்பை ஏற்றுக் கொண்டு உள்ளே போனார்கள். தங்கசாமியும் போனான். தான் வந்த விஷயத்தை விளக்கமாகச் சொல்லி தன்னை உள்ளே விடுமாறு வேண்டினான். அவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்த காவலாளி வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஆனால் அவன் தலைக்குமேல் தொங்கிக் கொண்டிருந்த ஒரு போர்டைச் சுட்டிக் காட்டினான். தங்கசாமியைப் போன்று ஆயிரமாயிரம் பேர்களுக்குப் பதில் சொல்லி அவர்களை அனுப்பி வைத்த அந்த அழகான போர்டு தங்கசாமியின் கண்களில் தென்பட்டது. அந்தப் பச்சை நிற போர்ட்டில் இரத்தச்சிவப்பு வர்ணத்தால் எழுதப்பட்ட 'வேலை காலி இல்லை' என்ற மூன்று வார்த்தைகளும் பளபளத்தன. வார்த்தைகளின் பளபளப்பு தங்கசாமியின் கண்களைக் கூசின. கண்களைக் கைகளால் மூடிக் கொண்டு திரும்பி நடந்தான் தங்கசாமி.

வயிறு காய்ந்தது; மழலைகளின் சிரித்த முகம் வாடியது. பசிக்கு அதிகப் பழக்கமில்லாத தங்கம் சோர்ந்து போனாள். நிலைமையைச் சமாளிக்க மானத்தை விட்டு வெட்கத்தை விட்டு யாசகம் கேட்கச் சென்றான் தங்கசாமி. யாசகமும் கிடைக்க வில்லை. ஆனால் "ஆளை பாரு! ஆறடி இருக்கிறாயே! உழைத்துப் பிழைக்கக் கூடாதா?" என்ற வசைவுகளும், திட்டுகளுமான வாசகங்கள் நிறையக் கிடைத்தன. தங்கசாமிக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. கையை மோவாய்க்கு முட்டுக் கொடுத்துக் கொண்டு யோசித்துக் கொண்டே இருந்தான். அப்பொழுது அவனுக்குப் பக்கமாகக் காக்கைகள் கூட்டம் ஒன்று கரைந்து கொண்டிருக்கும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தான். அங்கே ஒரு பிச்சைக்காரக் குழந்தை தான் பொறுக்கி வந்த எச்சிலிலைகளில் ஒட்டியிருந்த பருக்கைகளை உதிர்த்துக்கொண்டு இலைகளை விட்டெறிந்து கொண்டிருந்தது. அந்த எச்சிலிலைக்குத்தான் அப்படி அடித்துக்கொண்டன காக்கைகள்.

*அந்தக் காட்சியைப் பார்த்த தங்கசாமியின் உள்ளத்தில் ஒரு எண்ணம் உதித்தது. உடனே துள்ளியெழுந்தான். உள்ளே ஓடினான். ஒரு கிழிந்த வேட்டியை எடுத்துப் பை போல் கட்டி பசிக்கு ஆலம்பழம் பொறுக்கித் தின்று கொண்டிருந்த தன் மகனை இழுத்து வந்து அவன் முதுகிலே தொங்கவிட்டான். பசியால் சோர்ந்து தூங்கிக் கொண்டிருந்த மூன்றாண்டுகள் நிரம்பிய தன் மகனை அந்த இளந்தளிரை எழுப்பினான். அந்தக் குழந்தை தூக்கக் கலக்கத்தில் இமைகளை மூடி மூடித் திறந்தது. கலயத்தில் இருந்த நீரில் தன் மேல்துண்டை நனைத்து குழந்தையின் கண்களைத் துடைத்துத் தூக்கத்தைத் தெளிய வைத்தான். பிறகு தன் எதிரே இரு குழந்தைகளையும் நிற்க வைத்துப் பாட்டு சொல்லிக் கொடுத்தான். அந்தப் பிஞ்சு நெஞ்சங்கள் பாட ஆரம்பித்தன.*

**"ரகுபதி ராகவ ராஜா ராம்**
**பதீத பாவன சீதா ராம்"**

*இன்னும் சில அடிகளைச் சேர்த்துதான் தங்கசாமி சொல்லிக் கொடுத்தான். ஆனால் அந்த மழலைகள் இந்த இரண்டடிகளைத் தவிர மற்ற அடிகளைச் சொல்ல மறந்தன.*

*இவ்வளவாவது வந்ததே என்ற எண்ணத்தோடு அந்த இரண்டடிகளையும் பலமுறை பாடச் சொல்லிப் பழக்கப்படுத்தினான். இறுதியில் தான் பெற்றெடுத்த அந்த அன்புச் செல்வங்களை, அழகுத் தெய்வங்களைத் தொட்டு முத்தமிட்டு, தன் கண்கள் வடிக்கும் நீர் முத்துக்களைத் துடைத்துக் கொண்டு தைரியம் கூறி வழியனுப்பி வைத்தான்.*

*அந்தப் பசுந்தளிர்கள் பழக்கமில்லாத காரணத்தால் தயங்கித் தயங்கி திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றன. அந்தக் காட்சியைக் காணச் சகிக்காமல் குமுறி வந்த அழுகையை நீர்சொட்டும் கண்களைத் திரும்பி மறைத்துக் கொண்டான். அப்பொழுது சற்று தூரத்தில் பாத்திரம் துலக்கி சம்பாதித்த காசில் குழந்தைகளுக்கு 'இட்லி' வாங்கி வரும் தன் மனைவியைக் கண்டான். அவளிடம் இந்த ஈனச் செய்கையைச் சொல்ல தைரியம் இல்லாதவனாய் அவள் அருகே வந்ததும் அழுதேவிட்டான். தங்கசாமியின் வாயிலாக கொஞ்சம் கொஞ்சமாக விஷயத்தைத் தெரிந்து கொண்ட தங்கம் அவன் செய்தது சரிதான் என்று கூறி தங்கசாமியைச் சமாதானப்படுத்தினாள்.*

*சிறிது நேரத்திற்கெல்லாம் ஓடேந்திச் சென்ற அந்த ஓவியக் குழந்தைகள் ஒன்பது காசும் வட்டியில் சிறிது சோறும், பையில் கொஞ்சம் அரிசியும் கொண்டு வந்தன. அதை நிரந்து சாப்பிட்டு அன்றையப் பொழுதைக் கழித்தார்கள்.*

*தங்கசாமிக்கு தான் ஒரு ஆண்மகனாக இருந்து கொண்டு மனைவியையும் மக்களையும் வெளியே அனுப்பி அவர்கள் சம்பாதித்து வருவதைச் சாப்பிட வேண்டியிருக்கிறதே என்ற அவமானத்தை அவனால் தாங்க முடியவில்லை. பலவிதமான எண்ணங்கள் அவனுள்ளே படமெடுத்து ஆடின...*

*குழந்தைகள் பிச்சை எடுக்கச் சென்ற இடத்தில் "எந்தப் பாவிமகன் உங்களைப் பெற்று இப்படி நடுத்தெருவில் பிச்சை எடுக்கவிட்டானோ; ஐயோ பாவம்!" என்று*

ஊரார் குழந்தைகளைப் பார்த்து கண்டன இரக்கம் பேசுவதுபோல் ஒரு பிரமை. பைத்தியம் பிடித்தவன் போல் தலை மயிரைப் பிய்த்துக் கொண்டான் தங்கசாமி!

தன் மனைவி வேலை செய்யச் சென்ற இடத்தில் அவள் அழகை வேற்று ஆண்கள் ஏற இறங்கப் பார்ப்பது போன்ற ஒரு தோற்றம் அவ்வளவுதான்! தங்கசாமியால் தாங்க முடியவில்லை. எழுந்தான். எங்கேயோ ஓடினான். கால் போன போக்கில் களைத்துச் சோரும்வரை ஓடினான்.

பிச்சை எடுக்கச் சென்ற குழந்தைகள் பெரியவர் ஒருவர் பின் தொடர வருவதைக் கண்டாள் தங்கம். எழுந்து நின்று வரவேற்று விசாரித்தாள்.

அதற்கு வந்தவர், தான் அந்த ஊரில் உள்ள இந்து அனாதை ஆசிரமத்தின் தலைவர் என்றும் குழந்தைகளை ஆசிரமத்தில் சேர்த்துக் கொள்ள அனுமதி கேட்கவே வந்ததாகவும், தங்கம் விரும்பினால் ஆசிரம வேலைகளைச் செய்து கொண்டு ஆசிரமத்திலேயே இருக்கலாம் என்றும் கூறினார்.

இதைக் கேட்டதும் தங்கத்திற்கு உண்டான ஆச்சர்யத்தில் பேச்சே வரவில்லை. இந்த விஷயத்தைத் தங்கசாமியிடம் சொல்லுவதற்கே மரத்தடிக்கு ஓடினாள்! ஆனால் அவன் அங்கே இருந்தால்தானே!...

விஷயத்தை ஊகித்தறிந்து கொண்ட பெரியவர், "கலங்காதேயம்மா! நான்தான் தங்கசாமியை என் நண்பரிடம் அனுப்பியிருக்கிறேன். அவனுக்கு நல்ல வேலையும் நிறைய சம்பளமும் கிடைக்கும்" என்று சொல்லித் தேற்றி அவர்களை ஆசிரமத்திற்கு அழைத்துப் போனார். ஆசிரமத் தலைவர் தங்களைத் தேடி வந்து உதவி செய்வது எதனால் என்பது தங்கத்திற்குத் தெரியப்போகிறதா என்ன?...

வழக்கம்போல் அன்று அதிகாலையில் எழுந்த ஆசிரமத் தலைவர் காவேரியில் நீராட ஆலமரப் படித்துறைக்குப் போனார். ஆனால் அங்கே அவர் கண்டது என்ன?...

அந்த ஆலமரம் வழக்கம்போலத்தான் தன் விழுதுத் தோரணங்களைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அவற்றிலே ஒரு விழுதிற்கு மிகுந்த பேராசை போலிருக்கிறது. விரைவாக வளர்ந்து நிலமகளினைத் தீண்டுவதற்காக அருகே வந்த ஒரு மனிதக் கொடியைச் சுருக்கிட்டு முடிந்து கொண்டு நீளமாக வளர்ந்திருந்தது. அவனும் அதன் அன்புப் பிணைப்பிலே மயங்கியவனாய் தூங்கிக்கொண்டிருந்தான். தென்றல் தன் நீண்ட கரங்களை நீட்டிப் பறவைகள் இடும் சப்தத்தால் அவன் விழித்துக் கொள்ளாமல் இருப்பதற்காக அவனைத் தாலாட்டிக் கொண்டிருந்தது. காதிற்கு இனிமையான ஜலதரங்க தாலாட்டுப் பாட்டை இசைத்தவாறு காவேரி ஓடிக் கொண்டிருந்தது. இவ்வாறு தென்றலின் மிருதுவான அசைவும், காவேரியின் தாலாட்டும் கிடைத்துவிட்டால் இடி இடித்தாலும் தெரியாதவாறு எந்த மனிதன் தான் தூங்கமாட்டான்?

அவன் தூங்கிய விதம்தான் விநோதமாக இருந்தது. நின்றபடியே தூங்கிக் கொண்டிருந்தான். இதைவிட அழகாக அதிக வசதியோடு இயற்கை அன்னையால்

*தொட்டில் கட்டித்தர முடியுமா என்ன? நின்றபடியே தூங்குவது முதலில் சிறிது சிரமாக இருந்திருக்கலாம். ஆனால் இப்பொழுது...!*

*அவனும் எவ்வளவோ முறைகள் தன் வாழ்நாளில் தூங்கியிருக்கிறான். ஆனால் இது போன்ற இயற்கைத் தூக்கத்தின் சுகத்தை இதற்குமுன் என்றாவது அவன் அனுபவித்திருக்க முடியுமா?*

*ஆசிரமத் தலைவர் அவனைப் பற்றிய தகவல்களையெல்லாம் சேகரித்தார். அவன் தறிகார தங்கசாமி என்று தெரியவந்தது.*

*'பாவம்! உலகத்தோடு போராட இவனுக்குச் சக்தி இல்லை. பயந்து பின் வாங்கியிருக்கிறான். உலகம் கொன்றுவிட்டது' என்று எண்ணி இரக்கப்பட்டு அவனை அடக்கம் செய்ய எல்லா ஏற்பாடுகளையும் செய்தார். அப்பொழுது தூரத்தில் இருந்தபடியே பூஊம்..ம் என்று தன் வெற்றிச் சங்கநாதத்தை ஊதித் தீர்த்தது ஆலை.*

*பிறகுதான் ஆசிரமத் தலைவர் தெருவில் ஓடேந்தி வந்த குழந்தைகளை அழைத்துக் கொண்டு தங்கத்தைக் காண வந்தார்.*

*தங்கத்திற்குத் தன் சாமி எப்பொழுது வருவார் என்று தெரிந்து கொள்ள ஒரே ஆவலாக இருந்தது. ஆவலை அடக்க முடியாமல் கேட்டும் விட்டாள். பலவிதத் துன்பங்களால் துளைக்கப்பட்டுப் புண்ணான அந்த மென்மையான நெஞ்சத்தை மேலும் துன்புறுத்த விரும்பாத அந்த நல்ல மனம் 'நிறைய சம்பாதித்துக் கொண்டு ஒரு மாதத்தில் திரும்பி வருவான்' என்று சொல்லி வைத்தது.*

*தங்கமும் மனதிற்குள் 'அப்பனே முருகா! அவருக்கு கஷ்டங்கள் வராமல் நீதான் காப்பாற்ற வேண்டும்' என்று வேண்டிக் கொண்டாள்.*

**(தமிழ்ப் பொழில், 1955)**

## 5. ஏணி

மோகனரங்கம் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் ரகுநாதன். பாலக்கரை ஆஸ்பத்திரியில் இருந்தவாறே கீழ்ப்புறத்து ஜன்னல் வழியாக சூரிய உதயக் காட்சியை ரசித்துக் கொண்டிருந்தார். இரண்டு வாரங்களாக அவரைப் பொறுத்த மட்டில் பாலக்கரை ஆஸ்பத்திரியின் டிபி. வார்டுதான் அவருடைய உலகம். அவரைப் பிடிக்கத் தொடங்கியிருந்த அந்தப் பயங்கர வியாதியின் சின்னங்கள் தோற்றத்திலேயே நன்றாகப் புலப்பட்டன. சூம்பிப்போன தென்னங் குரும்பையைப் போன்ற அந்த முகமும் அதிலே ஆழ்ந்து குழிவிழுந்த கண்களும் கூரிய நீண்டமூக்கும் காண்பதற்கு விகாரமாகவும், குரூரமாகவும் காட்சியளித்தன. கல்லூரி நிர்வாகிகள் அவருடைய நிலைக்கு இரங்கிச் சம்பளத்தோடு இரண்டு மாத லீவு கொடுத்திருந்தார்கள். அதற்குள் அவர் மேல் அனுதாபம் கொண்டு அந்த நோய் அவரை விட்டுப் போனால் அவர் பிழைத்து வெளியுலகைக் காண முடியும்; திருச்சி மோகனரங்கம் கல்லூரிக்கும் ஓர் அருமையான பேராசிரியரை இழக்க வேண்டிய துர்ப்பாக்கியம் நேராது. ஆனால்...? ஆதியையும் சரி அந்தத்தையும் சரி, நிர்ணயிக்க வேண்டியது எவனுடைய பொறுப்போ, அந்த 'அவன்' கண்களல்லவா திறக்க வேண்டும்? பிராணாரம்பம், பிராணந்திகம், பிராணாவஸ்தை, இவைகளை எழுதாத எழுத்துக்களாலே எழுதி வைத்து, அதன் வழி இயக்குபவன் அவன்தானே? "ஸார்! ஜன்னலை மூடிவிடுங்கள் - அந்த வெய்யில் மேலே படக்கூடாது. அது இழைப்பையும் இருமலையும் கிளப்பி விட்டுவிடும்!" கூறிக்கொண்டே அந்த வார்டின் டாக்டர் உள்ளே நுழைந்தார்.

டாக்டர் பரிசோதனை முடிந்தது. "என்ன டாக்டர் ஸார், ஏதாவது நம்புவதற்கு இடமிருக்கிறதா?" வேதனையோடு இழைந்த சிரிப்பு ஒன்றை இதழ்கள் நடிக்க, இவ்வாறு கேட்டார் ரகுநாதன்.

"புரொபஸர் ஸார், உங்கள் விஷயத்தில் என் முயற்சியை எந்த அளவு வெற்றிக்கேற்பப் பயன்படுத்த முடியுமோ அவ்வளவையும் செய்கிறேன். ஒன்று மட்டும் வைத்துக் கொள்ளுங்கள். மனத்தளர்ச்சியும் வீண் அவநம்பிக்கையும்தான் முக்கால்வாசி நோய்! நீங்கள் பேராசிரியர். நான் உங்களுக்கு அதிகம் சொல்வதற்கு என்ன இருக்கிறது? நம்பிக்கையின் அளவு உங்களிடம் எவ்வளவிற்கு அழுத்தமாக இருக்கிறதோ, அதைப் பொறுத்தே இருக்கிறது என் சிகிச்சையின் வெற்றியும்..."

"என்னவோ டாக்டர், எங்கள் காலேஜ் பையன்களின் அதிர்ஷ்டம் என்னைப் பொறுத்தே இருக்கிறது."

"ஸார்! சொல்ல மறந்துவிட்டனே. மோகனரங்கம் காலேஜ் மாணவர்கள் இருபது இருபத்தைந்து பேர்கள் இருக்கும். நேற்று இங்கே உங்களைப் பார்க்க வந்திருந்தார்கள்.

இந்த நிலையில் நீங்கள் அவர்களைச் சந்தித்துப் பேசுவது என்று வந்தால், உங்கள் நிலை இன்னும் சீரியஸாக ஆகிவிடுமோ என்று எனக்குப் பயமாக இருந்தது..."

"என்னைச் சந்திக்காமல் போகச் சம்மதித்திருக்க மாட்டார்களே?"

"அதையேன் கேட்கிறீர்கள் ஸார்? காலேஜுகளில் படிக்கும் மாணவர்களைப் பற்றிய ஒரு பெரிய உண்மையையே நான் நேற்றுத்தான் தெரிந்து கொண்டேன். உங்கள் நிலையை நான் அவர்களிடம் உருக்கமாக விவரித்தபோது பெரும்பாலான பையன்கள் கண்ணீர் விட்டுவிட்டார்கள் ஸார்! 'எப்படியாவது அவருக்கு உயிரைக் கொடுத்து எங்கள் படிப்பைக் காப்பாற்றுங்கள் டாக்டர்' என்று உங்கள் பையன்கள் என்னை மன்றாடிக் கேட்டுக் கொண்டபோதுதான் காலேஜில் உங்களுக்கும் உங்கள் மாணவர்களுக்கும் உள்ள தொடர்பு எனக்குப் புரிந்தது ஸார்! உங்களை அவர்கள் கண்டிப்பாகச் சந்திக்காமல் போகமுடியாது என்று வற்புறுத்தினார்கள். நான் விவரம் சொன்ன பின்பே சந்திக்காமல் போவதற்குச் சம்மதித்தார்கள்."

"அந்தச் செல்வாக்கில் எல்லாம் ஒன்றும் குறைவு இல்லை டாக்டர்!..."

"எதற்கும் பயப்பட வேண்டாம்! எல்லாம் நன்றாக முடியும் புரொபஸர் ஸார்! வரட்டுமா நான்?" கூறிவிட்டு நகர்ந்தார் டாக்டர். அவர் சென்றதும், 'வழக்கமாக வீட்டிலிருந்து ஓவலும் பழங்களும் கொண்டுவரும் தம் பையனை இன்னும் காணவில்லையே!' என்ற கவலை பேராசிரியர் ரகுநாதனுக்கு ஏற்பட்டது.

சற்றைக்கெல்லாம் அவர் புதல்வன் மணி கையில் பிளாஸ்க், பழப்பை சகிதம் வார்டுக்குள் நுழைந்தான்.

"ஏண்டா மணி இவ்வளவு நாழி?"

"அம்மாவுக்கு உடம்பு சரியில்லே அப்பா! நான்தான் அடுப்பை மூட்டிப் பாலைக் காய்ச்சி ஓவல் கலந்து கொண்டு வந்தேன் அப்பா."

'இந்தச் சமயம் பார்த்துத்தானா அவள் வேறு படுத்துக்கொள்ள வேண்டும்? எல்லாம் தலையெழுத்து. விதி.'

மணி சூடான ஓவலை பிளாஸ்கில் இருந்து கிளாஸில் ஊற்றி நீட்டினான். ரகுநாதன் வாயில் அடக்கிக் கொண்டிருந்த கோழையை ஜன்னல் வழியே துப்பி விட்டுக் கிளாஸைக் கையில் வாங்கினார்.

ஆஸ்பத்திரி நர்ஸ் கையில் ஒரு விஸிட்டிங்கார்டுடன் உள்ளே நுழைந்தாள். ஓவலைப் பருகிவிட்டுக் கிளாசைக் கீழே வைத்தார் ரகுநாதன். நர்ஸ் எதிரே விஸ்ட்டிங் கார்டுடன் நின்று கொண்டிருப்பதைக் கண்டார். கார்டை அவர் படுக்கைக்கு முன் இருந்த ஸ்டூலில் வைத்தாள் நர்ஸ். ரகுநாதன் அதை எடுத்துப் பார்த்தார்.

கே.எஸ்.நரசிம்மன், ஐ.ஏ.எஸ். திருச்சி கலெக்டர்...

ரகுநாதனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. நரசிம்மன் இவ்வளவு தூரம் தன்னை நினைவு வைத்துக் கொண்டு பார்க்க வருவான் என்று அவரால் நம்பவும் முடியவே இல்லை. எத்தனையோ வருஷங்களுக்கு முன் பிரஸிடென்சி காலேஜில் படித்த அந்தக்

காலம் நினைவிற்கு வந்தது அவருக்கு. அதற்குப் பின்பு நரசிம்மனை அருமையான இரண்டொரு முறையே அவரால் சந்திக்க முடிந்தது. "இவர் வெளியிலே காத்துக் கொண்டிருக்கிறாரா நர்ஸ்?" விஸிட்டிங்கார்டைக் காட்டி நர்ஸிடம் கேட்டார் ரகுநாதன்.

"ஆமாம், ஸார். வரச்சொல்லவா?"

"வரச் சொல்லுங்கள்."

நரசிம்மன் உள்ளே வரவும், "வா, வா, நரசிம்மா! வா" என்றார் ரகுநாதன்.

"ஆமாம்! ரகு! போன வாரமே என்னை இந்த ஜில்லாவுக்கு மாற்றி விட்டார்கள். உன்னைப் பற்றி இன்றுதான் விசாரித்து அறிந்து கொள்ள நேர்ந்தது."

நரசிம்மன் ஸ்டூலில் அமர்ந்து கொண்டு தான் கொண்டு வந்திருந்த ஆப்பிள் முதலிய பழங்களைப் பையிலிருந்து எடுத்து வைக்கலானார்.

"இதெல்லாம் எதற்கு அப்பா நரசு? நீ என்னை விசாரிக்க வந்ததே பெரிய காரியம்!"

"என்ன ரகு அப்படிச் சொல்லிவிட்டாய்? ஆயிரமிருக்கட்டும்! நோயாளிகளையும், குழந்தைகளையும் வெறுங் கையோடு போய்ப் பார்க்கலாமா?"

"டேய் மணி, இதோ, இந்த மாமா வந்திருக்கிறார், பார். எதிர்ப்புறம் இருக்கும் ஹோட்டலில் போய் காப்பி, டிபன் வாங்கிக் கொண்டு வா. நீ அப்புறம் வீட்டிற்குப் போகலாம்."

"வேண்டாம் ரகு! பையனை எதற்காகக் கஷ்டப்படுத்துகிறாய்? வீட்டிலேயே டிபனை முடித்துக் கொண்டுதான் புறப்பட்டேன்."

"பரவாயில்லை நரசு! நீ போய் வாங்கிக் கொண்டு வாடா மணி. சுருக்க வா."

மணி கிளாஸை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

"ஐயோ ரகு! உன் கதி இப்படியா ஆக வேண்டும்? தமிழ்த்தொண்டு, தமிழ்த்தொண்டு என்று இந்தப் பயங்கரமான நோய்க்கு இடங்கொடுத்து விட்டாயே? என்ன காலேஜ் புரொபஸர் வேலை வேண்டியிருக்கிறது? கத்திக் கத்தித் தொண்டை புண்ணாகும் வேலை! ஏதோ நீ நல்லபடியாகப் பிழைத்தெழுந்தால் இந்தச் சனியன் பிடித்த வேலையை விட்டு விடு. அப்புறம் என்ன செய்யலாமென்று நான் சொல்லுகிறேன், உனக்கு."

"உன்னைப் போல் ஒரு கலெக்டராகவோ, ஐட்ஜாகவோ இருப்பவர்களுக்குப் பணமும் பவிஷும் அளவற்றுக் கிடைக்கலாம் நரசு. ஆனால் இந்தக் கல்லூரிப் பேராசிரியர் வேலையிலே எனக்குக் கிடைக்கும் ஆத்மதிருப்தி இருக்கிறதே, அது..." ரகுநாதன் கூறிக் குறையையும் முடிக்கவில்லை. நரசிம்மன் இடைமறித்தார்.

"ஆமாம்! பெரிய ஆத்மதிருப்தியைக் கண்டுவிட்டாய்! உன் ஆத்ம திருப்தியின் இலட்சணத்தைத்தான் நான் இதோ பார்க்கிறேனே! என்ன கோரம்! போன தடவை உன்னைப் பார்த்தபோது நீ எப்படி நன்றாக இருந்தாய் ரகு! இப்போது வெறும் தோல் மூடிய எலும்புக்கூடுதான் உன் தோற்றம். ஐயோ! இதையா நீ ஆத்மதிருப்தி என்கிறாய்?

'ஆத்மஹத்தி' என்று சொன்னாலாவது பொருந்தும் ரகு!" உணர்ச்சி மிகுதியால் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும் போதே நரசிம்மனுக்குக் கண்களில் நீர் துளித்துவிட்டது. குரல் நைந்து கரகரத்தது.

"நீ தவறாக எண்ணுகின்றாய் நரசு! எனக்கு வந்திருக்கும் இந்த நோய்க்குக் காலேஜும், வேலையும் காரணம் என்று மட்டும் சொல்லிவிடலாமா? நான் அப்படி நினைக்கவில்லை. இதோ பாரேன்! இரண்டு மாதச் சம்பளத்தோடு, காலேஜ் செலவிலே என்னை இங்கே சிகிச்சைக்கு அனுப்பியிருக்கிறார்கள். காலேஜின் நிர்வாகக் குழுவினரோ என்மேல் தேவதா விசுவாசம் வைத்திருக்கிறார்கள். பையன்களும் மற்றவர்களுமோ என்மேல் உயிரையே வைத்திருக்கிறார்கள். திருப்தியோடு வாழ்வதற்கு இந்த அன்பும் ஆதரவுமே போதுமானவை என்று எனக்குத் தோன்றுகிறது. நரசு, இதை நீ என் குறையாகவோ, பலஹீனமாகவோ, நினைத்துக் கொண்டாலும் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. வாழ்வின் ஜீவதத்துவம் நம்மைச் சுற்றியுள்ளவர்கள் நம்மேல் செலுத்தும், அன்பு, ஆதரவு, புகழ் இவைகளிலே இருப்பதைப் போல, செல்வத்திலோ, செல்வாக்கிலோ இருப்பதாக நான் கருதவில்லை. அன்று கல்லூரியில் படிக்கும் நாளிலிருந்தே இது என் மனத்தின் இலட்சியமாக அமைந்துவிட்டது, நரசு! நான் செய்ய இனி என்ன இருக்கிறது?"

"உன்னுடைய இந்த மனோபாவம் பாராட்டத்தக்கதாக இருக்கலாம் ரகு! ஆனால் ஒன்று மட்டும் நினைவு வைத்துக் கொள். செல்வத்துக்கும், செல்வாக்கிற்கும் ஆசைகொள்ளாமல், தொண்டுக்கும் தூய்மையான வாழ்விற்குமே ஜீவனை அர்ப்பணிக்கும் தியாகிகளை இந்தப் பொல்லாத உலகம் வெறும் ஏணியாகப் பயன்படுத்திக் கொண்டு, என்றாவது அது ஒடிந்தால் தூக்கி எறிந்துவிடுகிறது, ரகு!"

மணி காப்பி, டிபனுடன் வந்தான். "பேச்சு இருக்கட்டும் நரசு! நீ முதலில் டிபன் சாப்பிடு. பின்பு பேசுவோமே?" ரகுநாதன் நரசிம்மனை வேண்டிக் கொண்டார். ரகுநாதனின் வற்புறுத்தலை மீற முடியாமல் நரசிம்மன் சாப்பிடத் தொடங்கினார்.

"அப்பா! நான் போய்த்தான் அம்மாவுக்கு ஜவ்வரிசிக்கஞ்சி போட்டுத் தர வேண்டும்." மணி சொன்னான்.

"ஏன் ரகு, வீட்டிலும் ஏதாவது உடம்பு சௌகரியம் இல்லாத நிலையோ? இதுவரை பேசிக் கொண்டிருந்தோமே நீ என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையே!" நரசிம்மன் ரகுநாதனைக் கேட்டார்.

"ஆமாம் நரசு! எனக்கே இப்போதுதான் தெரியும். இவன் சொன்னான்..." என்று நரசிம்மனுக்கு மறுமொழி கூறிவிட்டு, மணியின் பக்கம் திரும்பி, "மணி, நீ ஒன்று செய்யேன்? நேரே வீட்டுக்குப் போய் அம்மாவை ஒரு வண்டி வைத்து அழைத்துக் கொண்டு உறையூரில் தாத்தா வீட்டில் கொண்டு போய் விட்டுவிடேன். உடம்பு சௌகரியமில்லாமல் அவள் தனியே இங்கே கஷ்டப்பட வேண்டாம் பாரு. இங்கே என்னைக் கவனித்துக் கொள்ள நிறையப் பேர் இருக்கிறார்கள். 'அவளுக்கு' சொஸ்தமாகி, இங்கே திரும்பலாம் என்ற நிலை ஏற்படும்வரை நீயும்கூடப்

பள்ளிக்கூடத்திற்கு லீவு போட்டுவிட்டு உறையூரிலேயே அவளுடன் இருந்துவிடு. மாமா, தாத்தா எல்லோருக்கும் நடுவில் ஒரு வாரம் இருந்தால் அவள் தேறிவிடுவாள். போ... நீ அப்படிச் செய். அதுதான் இப்போதைக்கு நல்லது" என்று தம் பையனை நோக்கிக் கூறினார் ரகுநாதன். பையன் மணி 'சரி' என்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்துவிட்டுப் புறப்படத் தயாரானான்.

"கொஞ்சம் பொறு ரகு. உன் மனைவியின் பிறந்த வீடு உறையூரில்தானே இருக்கிறது? இப்போது உன் பையனை வீட்டுக்குச் சென்று உறையூருக்குத்தானே அழைத்துக்கொண்டு போகச் சொல்கிறாய்? வண்டியிலே அழைத்துக் கொண்டு போக வேண்டாம். இதோ! இங்கே வாசலில் என் கார் நிற்கிறது. டிரைவரிடம் உன் பையனைக் காட்டி, உனது வீடு சென்று அழைத்துக் கொண்டு போய் மணியையும் உன் மனைவியையும் உறையூரில் விட்டுவரச் சொல்கிறேன். சரிதானே?"

"உனக்கு மிகுந்த நன்றி நரசு!" ரகுநாதனின் குரல் தழுதழுத்தது. நரசிம்மன் மணியை அழைத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக் காம்பவுண்டுக்கு வெளியே கார் நிற்குமிடம் சென்றார்.

* * * * *

ரகுநாதன் டாக்டரை ஏமாற்றப் பார்த்தார். ஆனால், டாக்டரா விடுகின்றவர்! ரகுநாதனிடமிருந்து உண்மையை வரவழைப்பதற்குப் பெருமுயற்சி செய்தார் அவர்.

"புரொபஸர் ஸார், நீங்கள் என்னிடம் மறைக்கப் பார்க்கிறீர்கள். நேற்றைவிட இன்று உங்கள் உடல் நிலையில் ஏற்பட்டிருக்கும் இந்த மாறுதல் என்னைச் சிறிது பயங்கொள்ளச் செய்திருக்கிறது. உங்கள் உள்ளத்தை ஏதோ ஓர் புதிய கவலை அரித்து வாட்டத் தொடங்கியிருக்கிறது."

ரகுநாதன் டாக்டருக்குப் பதிலே சொல்லவில்லை. "செல்வத்துக்கும் செல்வாக்கிற்கும் ஆசை கொள்ளாமல், தொண்டுக்கும் தூய்மையான வாழ்விற்குமே ஜீவனை அர்ப்பணிக்கும் தியாகிகளை இந்தப் பொல்லாத உலகம் வெறும் ஏணியாகப் பயன்படுத்திக் கொண்டு, என்றாவது அது ஒடிந்தால் தூக்கி எறிந்து விடுகிறது!" முதல்நாள் நரசிம்மன் கூறிவிட்டுச் சென்றிருந்த இச்சொற்கள், கூரிய ஆணிகளை அடித்ததுபோல் அவருடைய உள்ளத்தில் பதிந்து வேதனையைக் கிளப்பி விட்டிருந்தன. அந்தச் சந்தர்ப்பத்தில் ஏதோ 'ஆத்ம திருப்தி?', 'அது இது' என்றெல்லாம் கூறி, நரசிம்மனை மடக்கி அனுப்பிவிட்டார். என்றாலும் 'வருடத்திற்கு வருடம் உன்னிடத்தில் படித்துப் பட்டம் பெற்று வெளியேறுகின்ற மாணவர்களிலேயே எத்தனையோ பேர் ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். என்று பரீட்சைகளை எழுதிப் பற்பல உயரிய உத்தியோகங்களை அடைந்த வண்ணம் இருக்க, நீ மட்டும் ஏணியைப் போலச் சார்த்தின இடத்திலேயே நின்று கொண்டிருக்கிறாயே? இது உண்மைதானே? ஆனால், நரசிம்மன் உன் போன்ற இலட்சியப் பைத்தியங்களை 'ஏணி?' என்று கூறியதில் பிழை என்ன இருக்கிறது? பொருத்தமான உவமைதானே அது?' என்று ரகுநாதனுடைய உள்ளம் அவரையே குத்திக் காட்டியது.

மேலும் கீழும் ஏறியும் இறங்கியும் போகின்றவர்கள் தவிர, ஏணி சார்த்தின இடத்திலேயேதானே இருக்கிறது? பள்ளிக்கூடத்து ஆசிரியரானால் என்ன? கல்லூரிப் பேராசிரியரானால் என்ன? அவர்கள் சமுதாயத்திற்கு ஒரு வகையில் ஏணியாகவே பயன்படுகிறார்கள் என்பது பூர்ணமான உண்மைதானே? 'எழுத்தறிவித்தவன் இறைவன் ஆகும்' என்று அவர்களுக்கு இந்தச் சமூகம் கொடுத்திருக்கும் பாராட்டுப் பழமொழியும்கூடக் குதிரையைச் சவாரியில் ஈடுபடுத்தும்போது கண்ணை மறைத்து இடும் கண்ணுறைபோல ஓர் பெரிய ஏமாற்று வேலைதான்!

'சை! இது என்ன வேலை? இந்தப் பாழாய்ப்போன வியாதியிலிருந்து பிழைத்தெழுந்தால் முதல் காரியமாக இதை விட்டுத் தொலைக்க வேண்டும். எம்.ஏ. முதல் வகுப்பில் தேறியவனுக்கு வேறு வேலையா கிடைக்காமல் போய்விடப் போகிறது? இதயம் வறண்டு போகும்படி தொண்டைக்குழி புண்ணாகின்றவரை கத்திக் கத்தி உயிரை விட வேண்டிய இந்த 'உத்தியோகம்' நம்மை என்றைக்கு எப்படிக் கொன்று வைக்குமோ?... நித்ய கண்டம் பூர்ணாயுள்தான்... சொல்லுவதற்கில்லை!

'வாழ்ந்தால் நரசிம்மனைப்போல ஒரு கலெக்டராகவோ சர்க்காரில் பெரிய உத்தியோகஸ்தராகவோ வாழ வேண்டும். ஆத்மாவாவது, திருப்தியாவது? பையன்களும், காலேஜ் நிர்வாகிகளும் பிரியமாக இருந்தால், அதனால் நமக்கென்ன ஆயிற்று? வேலை என்னவோ, 'ஏணியைப் போல மற்றவர்கள் மேலே ஏறிச் செல்வதற்குப் பயன்படும் வேலையே ஒழிய, தான் முன்னேற முடியாததுதானே. உண்மையில் நரசிம்மன் சொல்லிவிட்டுப் போனமாதிரி, 'என் ஆத்ம திருப்தியா இது? ஆத்மஹத்திதானே?' என் ஆத்மாவை தானாகவே ஏன் ஏமாற்றிக் கொள்ள வேண்டும்? ஆம்! கூடாது! கூடவே கூடாது? இங்கிருந்து பிழைத்து வெளியேறினால் முதல் வேலை காலேஜில் என் உத்தியோகத்தை ராஜிநாமா செய்வதுதான்.' ரகுநாதன் ஒரு தீர்மானத்திற்கு வந்துவிட்டார். நரசிம்மனின் வார்த்தைகள் அவர் மனத்தில் உண்டாக்கியிருந்த கொந்தளிப்பு அவரை இந்த முடிவுக்கு வரச்செய்துவிட்டது.

'எனக்கிருப்பது ஒரு பையனும் மனைவியும். நான் நாளைக்குச் செத்துவைத்தேன் என்றால், அவர்கள் நடுத்தெருவில் நிற்க வேண்டியதுதானே? வேறு சர்க்கார் உத்தியோகத்தில் இருந்துவிட்டுச் செத்தேன் என்றால், அவர்களுக்கு ஏதாவது உதவியாவது கிடைக்கும்!'

இந்த முடிவான தீர்மானம் உறுதியாவதற்குத் தூண்டுகோல் போல நரசிம்மன் அடிக்கடி அவரைச் சந்தித்துப் பேசி விட்டுப் போகும் பேச்சுகளும் பயன்பட்டன. ஒவ்வொரு தடவை வந்துவிட்டுப் போகும்போதும் அந்த 'ஏணி' என்ற உபமானத்தைச் சொல்லாமல் நரசிம்மன் போவதில்லை. ரகுநாதனின் இதே உறுதியான மனமாற்றத்தினால், 'வேறு உத்தியோகம் பார்ப்பதற்காகவாவது விரைவில் உடம்பு தேறி ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேற வேண்டும்' என்ற நம்பிக்கையும் அவருக்கு உண்டாகிவிட்டிருந்தது. இதயத்தை அறுத்துவந்த கவலையும் ஓரளவு எதிர்காலத் தீர்மானம் எனும் அந்த நம்பிக்கையினால் போக்கப்பட்டுவிட்டது.

பதினைந்து, இருபது நாட்களுக்குப் பின்பு......

டாக்டர், அன்று, ரகுநாதன் ஆஸ்பத்திரியில் பூர்ணகுணமடைந்து விட்டதனால் வீட்டிற்குப் போகலாமென்று அனுமதித்துவிட்டார். மாலை நான்கு மணிக்கு அவர் ஆஸ்பத்திரியை விட்டுக் கிளம்பலாம் என்று ஏற்பாடு. மனைவியும் பையன் மணியும் உறையூரில் அவருடைய வேட்டகத்திலேயே இருந்ததனால் ஆஸ்பத்திரியிலிருந்து நேரே உறையூருக்குப் புறப்பட்டுச் செல்ல வேண்டும் என்று அவர் கருதியிருந்தார். நரசிம்மன் மூன்றரை மணிக்கே ஆஸ்பத்திரிக்குத் தம்முடைய காருடன் வருவதாகச் சொல்லி அனுப்பியிருந்ததனால் காரை எதிர்பார்த்துக் காத்திருந்தார் ரகுநாதன். ஆஸ்பத்திரி வராந்தாவில் டாக்டரும் அவரும் நாற்காலியில் அமர்ந்து பேசியவாறே, நரசிம்மனின் காரை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். 'மணி நான்கும் ஆகிவிட்டது. இன்னும் நரசிம்மனின் காரைக் காணவில்லையே?' என்று நினைத்துக் கொண்டிருந்தார் ரகுநாதன்.

அதேசமயத்தில் ஆஸ்பத்திரி கேட்டிற்குள் நுழைந்தது ஒரு கார். டாக்டர், ரகுநாதன் இருவருமே எதிர்பாராத விதமாக மோகனரங்கம் கல்லூரி பிரின்ஸிபாலும், காரியதரிசியும் அந்தக் காரிலிருந்து இறங்கினர். டாக்டரும் ரகுநாதனும் எழுந்து அவர்களை வரவேற்றனர். பரஸ்பரம் குசலப்பிரச்னம் எல்லாம் நடந்தன.

"ஸார்! பையன்களும் ஆசிரியர்களும் சேர்ந்து உங்கள் உடல் சௌக்கியமுற்றதைப் பாராட்டும் நோக்கத்தோடு காலேஜில் ஒரு விழா ஏற்பாடு செய்திருக்கின்றோம்." பிரின்ஸிபால் குழைந்த சொற்களால் வேண்டினார்.

"எனக்கு இப்போது உறையூருக்கு அவசரமாகப் போக வேண்டியிருக்கிறதே ஸார்! மேலும் இன்னொரு விஷயம்!... உங்களிடமும் காரியதரிசி அவர்களிடமும் இப்போதே சொல்லிவிடுகிறேனே! எனக்கு இனிமேல் காலேஜில் வேலை பார்க்கவே ஆசையில்லை ஸார்... அங்கே வரவேண்டும் என்றாலே மனம் கசக்கின்ற மாதிரி தோன்றுகிறது! தயவுசெய்து என்னை வற்புறுத்தாதீர்கள்!"

பிரின்ஸிபாலும் காரியதரிசியும் திடுக்கிட்டனர். ரகுநாதனின் மறுமொழி அவர்களைப் பிரமிக்கச் செய்தது.

"ஸார்! கூட்டத்திற்குக் கலெக்டர் நரசிம்மன் தலைமை வகிக்க இசைந்துள்ளார். ஏற்பாடுகளைச் செய்துவிட்டோம். மற்ற விஷயங்களைப் பின்பு பேசிக் கொள்வோம். பையன்களும் நாங்களும் ஆர்வத்தோடு செய்திருக்கும் இந்த ஏற்பாட்டைத் தாங்கள் கட்டாயம் ஏற்றுக் கொண்டு வர வேண்டும்."

"நரசிம்மனா?" ரகுநாதன் வியப்புடனே கேட்டார். "ஆமாம்! புதிதாக வந்திருக்கிறாரே கலெக்டர், அவர் உங்கள் நண்பர் என்று கேள்விப்பட்டு, ஏற்பாடு செய்தோம் ஸார்."

வேண்டா வெறுப்பாக அவர்களுடனே புறப்பட்டார் ரகுநாதன். பிரின்ஸ்பாலின் வேண்டுகோளுக்கிணங்கி டாக்டரும் புறப்பட்டார்.

காலேஜ் வாசலில் காரை விட்டு இறங்கிய ரகுநாதன் திகைத்துப் போனார். திருச்சி நகரத்து இளைஞர் உலகமே அங்கே ஒன்று கூடியிருந்தது. அவரிடம் படித்த

இளைஞர்கள், படிக்கின்ற மாணவர்கள் மட்டுமல்லாமல் வேறு கல்லூரி மாணவர்களும் அவரை வரவேற்கக் கூடியிருந்தனர். தன் கல்லூரிப் புரொபஸர்களோடு தானும் ஒருவனாகக் கலந்து கொண்டவன் போல நரசிம்மன் தன்னை வந்து வரவேற்றது ரகுநாதனுக்கு மிக்க ஆச்சரியத்தை அளித்தது.

விழா ஆரம்பித்தது. கலெக்டர் நரசிம்மன் பேசினார். "அன்பார்ந்த மாணவ இளைஞர்களே! பேராசிரியர்களே! நான் முகஸ்துதிக்காகக் கூறுகிறேன் என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். கல்லூரியிலே பேராசிரியராக இருந்து போதிக்கும் பணியைப் போலப் புனிதமானது வேறு ஒன்றும் இல்லை. அந்தப் புனிதமான பெருந்திருப்பணியில் என் நண்பரும் உங்கள் தமிழ்ப் பேராசிரியருமான ரகுநாதன்..."

'தூ!' யாவரும் திரும்பிப் பார்த்தனர். பேராசிரியர் ரகுநாதன் தொண்டைக் கோழையைப் பக்கத்திலிருந்த குரோட்டன்ஸ் செடியின் தொட்டியில் காறிதுப்பிக்கொண்டிருந்தார். அதற்குப் பின், கலெக்டர் நரசிம்மன் தன்னைப் பாராட்டிப் பேசிய எந்தப் புகழுரைகளும் ரகுநாதனுடைய செவிகளில் விழவேயில்லை. 'கலெக்டராகவும் பெரிய பதவிக்காரர்களாகவும் இருப்பவர்கள், சமயத்திற்கு ஏற்றபடி மனத்தை மறைத்து எப்படி எப்படிப் பேசவும் நடிக்கவும் வேண்டியதாக இருக்கின்றது!' ரகுநாதன் சிந்தனையில் ஆழ்ந்தார். உண்மை அவர் மனத்திற்குள்ளே மெல்ல மெல்ல மலர்ந்து கொண்டிருந்தது.

அன்றைய விழாவில் ரகுநாதனைப் பாராட்டி மேடைமேல் பேசாதவர்களே பாக்கி இல்லை எனலாம். மாணவர்கள் அவருக்கு மாலைமேல் மாலையாகச் சாற்றி மகிழ்ந்தனர். 'தமக்கு இருக்கும் செல்வாக்கின் சக்தி இவ்வளவு மகத்தானதா?' என்று ரகுநாதனுக்கே வியப்பு ஏற்பட்டுவிட்டது.

எங்கும் அமைதி சூழ்ந்தது. பாராட்டு விழாவுக்கு மறுமொழியாக நன்றியுரை கூற எழுந்தார், ரகுநாதன். "பிறருக்கு ஏணியாக இருப்பதில்தான் மெய்யான இன்பம் இருக்கிறது போலும்! என் நண்பர், கலெக்டர் நரசிம்மன் அடிக்கடி என்னோடு பேசும்போதெல்லாம் ஆசிரியர் வாழ்வை ஏணியோடு ஒப்பிடுவது வழக்கம். ஆனால், என் அருமை நண்பராகிய அவரும் இன்று ஓர் உண்மையைப் பிரத்தியட்சமாகப் புரிந்து கொண்டிருப்பார். வாழ்க்கையில் தான் தனக்கே ஏணியாக இருப்பதில் தியாகமோ, இன்பமோ இல்லை. பிறருக்கு ஏணியாக இருப்பதிலேதான் அவை உள்ளன. அந்த அரும்பெரும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருப்பதாகக் கலெக்டரவர்கள் உங்கள் முன் கூட்டத்திலாவது ஒப்புக் கொண்டாரே, அவருக்கும் உங்களுக்கும் என் நன்றி." இவ்வளவுதான் பேசினார், ரகுநாதன். அதில் ஒளி நிறைந்திருந்தது.

(1955)

## 6. ஆறிய தழும்பு

*"ஏன் ஸார்! ஏது இந்தத் தழும்பு? ஏதோ பெரிய தீக்காயத்தினாலே ஏற்பட்டது போலிருக்கிறதே?"*

*வலது கையைப் பிடித்துப் பார்த்துக் கொண்டே முழங்கைக்குச் சற்றே தள்ளியும் மணிக்கட்டுக்கு முன்பாகவும் இருந்த அந்தத் தழும்பு திருஷ்டியில் படவே, டாக்டர் என்னிடம் கேட்டு வைத்தார்.*

*"ஆமாம்! தீக்காயம் தான் ஸார்! பத்து வருஷங்களுக்கு முன் பட்ட காயம்... அதன் தழும்புதான் இது..."*

*நான் சொன்ன பதிலில் தொனித்த சோக உணர்வை அவர் புரிந்து கொண்டாரோ என்னவோ, எனக்குத் தெரியாது. அவர் காரியத்தை முடித்துக் கொண்டு போய்விட்டார். ஆனால்... ஆனால்... உள்ளக் காய்ச்சலையும் கிளப்பிவிட்டுப் போய்விட்டார்.*

*மறக்க முடியாத இன்ப நிகழ்ச்சிகளை நினைவூட்டும் சின்னமாக அந்தத் தழும்பு இருந்திருந்தால் நான் கவலைப்பட வேண்டியதில்லை - கவலைப் பட்டிருக்கவும் மாட்டேன்! முழங்கைக்குக் கீழே கையையே வெட்டிக் கொண்டுவிட்டால் என்ன? என்று எண்ணுகிற அளவுக்கு அது என்னைப் பித்தனாக்கி விட்டது.*

*அது மட்டுமல்ல; அனலாகக் கொதிக்கும் இந்தக் காய்ச்சல் என் வாழ்க்கையின் முடிவுரையாக அமைந்து விடுமானால் எவ்வளவோ நன்றாக இருக்குமே என்றுகூட எண்ணச் செய்தது.*

*ஊர் ஊராக மாற்றிக் கொண்டு நாடோடியாகச் சுற்றி 'அவளை' மறக்க முயன்று பார்த்தேன். வேறுபட்ட இடங்களோடும் வேறுபட்ட புது மனிதர்களோடும் மாறி மாறிப் பழகிக் கொண்டே வந்தால் 'அவளை' மறந்து விடலாம் என்று எண்ணினேன். ஆனால் மறக்க முடியாமல் செய்து வந்தது அந்தத் தழும்பு.*

*கால விருக்ஷத்தில் பத்து ஆண்டு மலர்கள் மலர்ந்து வரிசையாய் வாடி உதிர்ந்து போயின. ஆனால்... என்னில் மலர்ந்த அவளைப் பற்றிய நினைவு மலர் நித்தியமாக நிலைத்து விட்டதே! காய்ந்துபோன கடல் நுரையைப் போன்ற வறட்டு ரொட்டியையும் கோப்பை நிறையப் பாலையும் எடுத்துக் கொண்டு ஆஸ்பத்திரி நர்ஸ் உள்ளே நுழைந்தாள்.*

*அவள் வைத்துப்போன பால் கோப்பையைக் கையில் எடுத்து உதட்டுக்குச் சரியாகக் கொண்டு சென்ற பொழுது வலது கையில் வெள்ளை வெளேரென்றிருந்த அந்தத் தழும்பு என் திருஷ்டியில் முழுமையாக விழுந்தது.*

“ஏன் ஸார்? ஏது இந்தத் தழும்பு? ஏதோ பெரிய தீக்காயத்தினாலே ஏற்பட்டது போலிருக்கிறதே?” - கால் மணி நேரத்துக்கு முன் டாக்டர் கேட்ட அதே கேள்வி மீண்டும் நெஞ்சில் சுருண்டு சுருண்டு நினைவு அலைகளாகப் புரளத் தொடங்கியது.

சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்துவிட்ட என்னைப் பரிவாக ஆதரித்துப் பேணித் தம்முடைய கஷ்ட நஷ்டங்களையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் என் மாமா எஸ்.எஸ்.எல்.சி. வரை என்னைப் படிக்க வைத்திருந்தார். அதற்குப் பிறகும் அவருக்குப் பாரமாக இருப்பது கூடாது என்ற உணர்ச்சி என்னை வேலை தேடும் முயற்சியில் ஈடுபடுத்தி அலைய வைத்தது. மாதக் கணக்கில் கால் கடுக்க எத்தனையோ இடங்களுக்கு அலைந்து படியேறி இறங்கியதைத் தவிரக் கண்ட பயன் ஒன்றுமில்லை. கடைசியில் எனக்குப் புகலிடம் அளித்தது ஆசிரியப் பயிற்சிப் பள்ளிதான்.

இங்கே தான் எனக்கு வாழ்க்கையில் அவளது தொடர்பும் ஏற்பட்டது. இதோ, என்னில் இருந்தவாறே என்னை வாட்டும் இந்தத் தழும்பின் தோற்றத்துக்குக் காரணமான நிகழ்ச்சியும் நடந்தது. எண்ணத் தொலையாத கற்பனைக் கனவுகளை உண்டாக்கிய அவள் சந்திப்பு இறுதியில் இப்படி ஒரே ஒரு துயரத் தழும்பாக மட்டும் நின்று நம்மை வருத்தும் என்று அப்போது நான் சிந்தித்திருக்க நியாயம் ஏது? கடைசியாக நாங்கள் பிரிந்தபோது கண்ணீர் சிந்த வைத்த அந்த நிகழ்ச்சியினால் என் மனம் அவள் காதலைக் கைவிட்டுவிடவில்லை. ஆனால் அவள்தான் என் வாழ்வு வீணாகக் கூடாது என்று தன் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டிருக்க வேண்டும்.

நான் அவளைச் சந்திக்க நேர்ந்தது, அவளோடு பழக நேர்ந்தது, அனைத்துமே இப்போது நினைத்தாலும் விசித்திரமாக இருக்கிறது. ஆனால் இந்த விசித்திரம் அன்று கண்ட அதே தனிப்பட்ட விசித்திரமல்ல! இது, வேதனை முழுக்க முழுக்கக் கலந்த விசித்திரம். அழ வைக்கும் விசித்திரம். துன்பத்தில் ஆழ்த்திவிடக் கூடிய விசித்திரம்.

அன்று, என்னவோ பள்ளி முடிவதற்குள் காலையிலே இலேசாக இருந்த மண்டைக் கனம் பொறுக்க முடியாத தலைவலியாக உருவெடுத்து வாட்டியது. வகுப்பில் உட்கார முடியவில்லை. சக மாணவர்களிடம் சொல்லிவிட்டு என் அறைக்குப் புறப்பட்டேன்.

அறைக்கு வந்து படுத்த எனக்கு அப்புறம் என் நினைவே இல்லை. நான் காலையில் சமையல் செய்துவிட்டுப் போட்டிருந்த பாத்திரங்களெல்லாம் போட்டது போட்டபடியே கிடந்தன.

“தம்பீ! உடம்பு சுகமில்லையா, தம்பீ! சுருண்டு படுத்து விட்டாயே! ராத்திரிக்குச் சமையல்கூடச் செய்யவில்லையே!” என்று கேட்ட பக்கத்து வீட்டுக் கிழவியின் குரல் என்னை நிமிர்ந்து கண் விழித்துப் பார்க்கச் செய்தது.

“ஆமாம் பாட்டி! பள்ளிக் கூடத்திலேயே ஏதோ தலைவலி மாதிரி இருந்தது. நாலு மணிக்கு இங்கே வந்து படுத்தவன்தான். குளிர்க் காய்ச்சல் வேறே சேர்ந்து கொண்டது. எழுந்திருக்கவே முடியவில்லை” என்று நான் பதில் கூறினேன்.

"அப்படியானால் நீ பேசாமல் படுத்திரு, தம்பீ! இதோ நான் கஞ்சி போட்டுக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கிழவி கிளம்பினார்.

மறுபடியும் எனக்கு நினைவு வந்து நான் கண் விழித்தபோது, "பாட்டி! அவரை எழுப்பேன் பாட்டி! பாவம்... எப்போ சாப்பிட்டு விட்டுப் போனதோ?" - குயிற் குரல் காதுகளில் விழவே, இரண்டு தடுக்காகப் பிரித்திருந்த எனது அறையின் சமையற்கட்டுப் பக்கமாகப் பார்வையை ஓட்டினேன்.

அந்த மங்கிய சிமினி விளக்கின் ஒளியில் சமையற்கட்டு வாசலில் அவள் நின்று கொண்டிருந்த தோற்றம் இப்போதும் எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. அதுதான் இந்தத் தழும்பைப் போலவே ஒரு அழியாத சித்திரக் காவியமாக என் நெஞ்சில் எழுதப்பட்டு விட்டதே! நினைவு மறக்குமா?

தழையத் தழையக் கட்டிக் கொண்டிருந்த நீலச் சிற்றாடை பருவத்துக்குத் தகுந்த உயரம். மலர்ந்த முகம். குறுகுறுவென்று சிரிப்பது போலவே பார்க்கும் கண்கள். அடுப்பில் காரியம் செய்திருந்ததனால் கலைந்து ஓரங்களில் சுருண்டு சுருண்டு காதுக் குண்டலங்களோடு சுழலும் சுரி குழல். கடைந்தெடுத்தது போன்ற நாசி. அதில் மகிழம் பூவைப் பதித்தது போல ஒரு மூக்குத்தி. ரோஜா இதழ்கள் மூடித் திறக்கும்போதே சிறுநகை புரிவது போன்ற நளினம் செறிந்த இதழ்கள். தலையில் தாழம்பூவை அடுக்கிப் பின்னிக் கொண்டிருந்தாள்.

'நல்லவன், ஒரு வம்பு தும்புக்குப் போகமாட்டான்' என்ற நம்பிக்கையினாலோ என்னவோ, முத்துப்பாட்டி தன் பேத்தியின் பணிவிடையைத் தொடர்ந்து அந்த ஐந்து நாட்களும் எனக்கு அளித்திருந்தாள். முதலில் இரண்டொருநாள் பாட்டியும் கூடவே வந்தாள். பின் 'அவளே' தனியாக வந்து போகத் தலைப்பட்டாள்.

ஜுரம் விட்டு நான் எழுந்த பிறகும்கூட எங்கள் தொடர்பு நீடித்தது. இறுதியில் எங்களது அந்தத் தொடர்பு இதயத்தின் தொடர்பாகப் பரிணமித்தது.

வெள்ளை நெஞ்சம் படைத்த முத்துப்பாட்டியும் எங்கள் பழக்கத்தைப் பற்றி எந்த விதமான குறையும் பட்டுக்கொள்ளவில்லை. காரணம், எங்களது இதயத்தில் மலர்ந்த காதல் அப்படிக் குறைப்பட்டுக் கொள்ளும்படியான எந்தக் களங்கத்துக்கும் இடம் கொடுக்கும்படியானதாக இல்லாமல் இருந்ததுதான்.

அந்த ஊரில் நல்ல நிலபுலன்களும் மதிப்பிடத்தக்க சொத்தும் உள்ளவள் முத்துப்பாட்டி. அவளது ஒரே மகள் தலைப் பிரசவத்தில் கோமதியை அவளிடம் ஒப்படைத்துவிட்டுக் கண்களை மூடிவிட்டாள். கோமதியின் தந்தையும் அதிக நாள் - அவள் மழலையைக் கேட்கும் வயசு வரை கூட இருக்கவில்லையாம் - இவ்வளவு விவரங்களையும் அவள் வாயைக் கிண்டியே கேட்டு அறிந்து கொண்டிருந்தேன் நான். "நமக்கும் கோமதிக்கும் பிறப்பு வளர்ப்பில் அதிக வித்தியாசமில்லை. நம்முடைய மாமா அவ்வளவாகச் சொத்துக்காரர் இல்லை. கோமதியின் பாட்டி கொஞ்சம் சொத்துக்காரி. இவ்வளவுதான் வித்தியாசம்" என்று எண்ணிக் கொள்வேன்.

இரண்டாவது வருஷப் படிப்புக்காக லீவு முடிந்து நான் திரும்பிய பிறகு எங்கள் அன்பு புதிய வேகம் பெற்றது. ஆனால் அப்போதுதான் அந்த எங்கள் அன்பு மரத்தின் ஒரு பகுதி பாழடையும்படியான அந்த இடியும் விழுந்தது. அந்த நாள்தான் என் வாழ்வை வறண்டுபோகச் செய்ததற்கு மூல காரணமாக இருந்த நாள்!

வழக்கம்போலத்தான் அன்று காலையும் கோமதி வந்தாள். பாட்டியிடம் சொல்லிவிட்டு வந்த பொய்யைக் கொஞ்சமாவது உண்மையாக்க எண்ணிக் கணக்குப் பாடத்தில் இரண்டொரு சந்தேகங்களையும் கேட்டாள். நான் சொன்னேன். பின் ஏதேதோ சிரிப்பு, கேலி, கும்மாளம் இப்படிக் கொஞ்ச நேரம் கழிந்தது. வழக்கம் போல் அடுப்பில் உலை வைத்துச் சமையலை ஆரம்பித்தேன் அன்றும்.

என்னிடம் விடைபெற்றுக் கொண்டு போகப் புறப்பட்ட கோமதி என்ன நினைத்துக் கொண்டாளோ? "ஆமாம்! நீங்கள் இன்னும் சமையலை முடிக்கவில்லை போலிருக்கிறதே? அடடா! மணி ஆகிவிட்டதே. நீங்கள் பள்ளிக்கூடத்துக்குப் போவதற்குள் சமையல் ஆகாது போல் இருக்கிறதே... ம்ம்... நேரத்தை வீணாக்கி விட்டேன். நீங்கள் போய் குளித்துவிட்டு வாருங்கள். அதற்குள் நானே அடுப்புக் காரியத்தை முடித்துவிட்டு அப்புறம் வீட்டுக்குப் போகிறேன்" என்றாள்.

இப்படிச் சொல்லிவிட்டு அவள் அடுப்பினருகே சென்றபோது என்னால் மறுக்க முடியவில்லை.

குளித்துக் கொண்டிருந்த என்னைத் தூக்கிவாரிப் போடச் செய்தது கோமதியின் அலறல். ஓடி வந்தேன், அரைத் துண்டுடன். அங்கே நான் கண்ட காட்சி என்னைத் திடுக்கிடச் செய்தது. கொதிக்கும் சோற்றை முழங்கையில் கொட்டிக் கொண்டு உட்கார்ந்தவாறே துடித்துக் கொண்டிருந்தாள். புடவை நுனியில் தீப்பற்றத் தொடங்கியிருந்தது. அதை அவள் உணரவில்லை. ஒரு கணம் நான் அப்படியே பித்துப் பிடித்தவன்போல் நின்று விட்டேன். அடுத்த வினாடி ஓடிப்போய் அவள் புடவைப் பக்கமாக இருந்த எரியும் விறகைப் பிடித்துத் தள்ளினேன். தள்ளின வேகத்தில் அது எகிறித் துள்ளி வந்து என் வலது முழங்கைக்கும் மணிக்கட்டுக்கும் நடுவே எரியும் கொள்ளியோடு அழுத்தியடித்தது. கையில் அடித்து மோதி அதன் மேலேயே நின்றுவிட்ட கொள்ளிக் கட்டையை ஒதுக்கிவிட்டு, அவளை நெருப்பிலிருந்து காப்பாற்றுவதற்குள் என் உயிர் போய் மீண்டது. கோமதியின் அலறலைக் கேட்டோ, தற்செயலாகவோ அங்கே வந்த முத்துப் பாட்டி எங்கள் நிலையைக் கண்டு ஒரேடியாக அழுது விட்டாள். என் வலது கையில் அழுத்தமான நெருப்புக் காயம்.

என் கையில் பட்ட நெருப்புக் காயம் பத்து இருபது நாட்களில் ஆறி இதோ இருக்கும் இந்தத் தழும்பாக ஆறி விட்டது. ஆனால் கோமதியின் காயம்....?

ரணமேறிப் புரையோடி விட்டது, அவள் கை. "விரலோடு கூடிய முன் கை முழுவதையும் உடனே ஆபரேஷன் செய்து எடுக்கவில்லையானால் கைக்கு முழுவதுமே ஆபத்து" என்று நெருக்கினார் டாக்டர். என் நெஞ்சு துடித்து விழுந்தது. பாட்டி அழுது கதறினாள். டாக்டர் சொன்னபடி காரியத்தை முடித்துவிட்டார்.

கைமுடப்பட்டு வீடு வந்த பின்னும் அந்த அழகுச் செல்வத்தை நான் புறக்கணிக்கக் கனவிலும் கருதவில்லை. ஆனால் அவள்தான் 'என் நன்மைக்காக' என்று கண்டிப்பாக என்னைப் புறக்கணித்து விட்டாள். "நான் கன்னியாகவே வாழ்ந்து கழிப்பேன். கை முடமாக உங்களை எனக்கு உரியவராக உரிமை கொண்டாட என் மனம் துணியவில்லை. என்னை மறந்து விடுங்கள்!" என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டாள். நான் எதிர்த்துப் பேசி அவள் பிடிவாதத்தை அதிகரிக்க விட விரும்பவில்லை. காலப் போக்கில் அவள் மனம் மாறும், நம் காதலையும் நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று நினைத்து மௌனம் சாதித்தேன். அதே சமயம் மாமாவுக்கு உடல் நலமில்லை என்று கடிதம் வரவே, நான் ஊருக்குப் புறப்படும் படியாகிவிட்டது.

ஊருக்குச் சென்றவன் ஏறக்குறைய ஒன்றரை மாதம் அங்கிருந்து புறப்பட முடியாதபடி செய்துவிட்டது மாமாவின் உடல்நிலை.

மாமாவின் உடல்நிலையைப் பற்றி இனிமேல் கவலையில்லை என்ற சந்தர்ப்பம் ஏற்பட்டபின், நான் அங்கே சென்றேன். சென்ற எனக்கு வீடு நிலங்கரைகளை ரொக்கமாக்கிக் கொண்டு பாட்டியும் கோமதியும் ஊரைவிட்டே சென்று விட்டார்கள் என்ற பேரிடி காத்திருந்தது. அக்கம் பக்கத்தில் விசாரித்ததில் அவர்கள் எங்கே போயிருப்பார்கள் என்பது யாருக்குமே சரியாகத் தெரியவில்லை. 'கோமதி எனக்காகத் 'தியாகம்' செய்வதாக நினைத்துக் கொண்டு எவ்வளவு பைத்தியக்காரத்தனமாக நடந்துவிட்டாள்? என்று எண்ணும் போது எனக்கே அழுகையாய் வந்தது. டிரெயினிங் சர்டிபிகேட்டுடன் அன்று ஆரம்பித்த நாடோடி வாழ்க்கை இன்னும் நடந்து கொண்டிருக்கிறது. என்னால் அவளை மறக்க முடியவில்லை. வருடங்கள் கழிந்தாலென்ன? அவள் நினைவு தழும்பாக நிலைத்து நின்று விட்டதே?

உடம்பு தேறிப் பள்ளிக்கூடத்துக்குப் போய் வரலாம் என்ற அளவுக்கு உடம்பில் தெம்பு வந்ததும் நான் ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறினேன்.

அன்று சாயங்காலம் பள்ளிக்கூடம் முடிந்ததும் அருவிக்கரைப் பக்கமாக உலாவச் சென்ற நான் பாறையொன்றில் உட்கார்ந்து பொங்கிவிழும் அருவி நீரின் பொலிவை ரசித்துக் கொண்டிருந்தேன் . எவ்வளவு நேரம் நான் அப்படியே என்னை மறந்து உட்கார்ந்து கொண்டிருந்தேனோ, எனக்கே தெரியாது!

ஆ ஐயோ!... இந்த அலறலை அடுத்து யாரோ பக்கத்தில் அருவி நீர்ப் பரப்பில் விழும் சத்தம் என்னைத் தூக்கி வாரிப் போடச் செய்தது. அலறிய குரல் ஒரு பெண்ணினுடையது என்பதும் ஒலியால் தெரிந்தது. நான் திடுக்கிட்டுப் பக்கத்தில் விரைந்தேன்.

தடித்து விழுந்து கொண்டிருந்த நீர் புரட்டிப் புரட்டித் தள்ளிட ஒரு இளம்பெண் முங்கி முழுகி நீரோடு போராடிக் கொண்டிருந்தாள். அருவியின் அசுர வேகத்தையும் மறந்து தண்ணீரிலே விழுந்து, அவளைக் காப்பாற்றிவிடலாம் என்ற அசாதரணமான நம்பிக்கையுடன் தண்ணீரில் குதித்து விட்டேன்.

நீண்ட கூந்தலைப் பிடித்து இழுத்து மேலே தூக்கிய அந்தப் பெண்ணின் முகத்தைக் கண்டு கண்ட நான் வாய்விட்டு, ‘ஆ! கோமதி! நீயா?’ என்று அலறியே விட்டேன். அவளுக்குக் கொஞ்சம் நினைவு இருந்தது. கண்ணைத் திறந்து என்னைப் பார்த்த அவளது வெளிறிய முகத்தில் ஆச்சரியம் நிழலிட்டது. ‘நீங்களா? இங்கே... எப்படி வந்தீர்கள்?’ என்று கேட்காமல் பார்வையின் சக்தியினால் கேட்டாள்.

நம் கண்களுக்குப் புலனாகாத சக்தி நம்மை ஆட்டி வைக்கிறது என்பது எவ்வளவு உண்மை! இல்லாவிட்டால் யானை வாயில் சென்ற கரும்பு போல் அருவி வாயில் சிக்கிய நாங்கள் இப்படி உயிர் பெற்றுப் பிழைத்து வந்திருப்போமா? ஆறிய தழும்பு தான் ஆனந்தத் தழும்பாக உருப் பெற்றிருக்குமா?

(கல்கி - மே 8, 1955)



# 7. அலைபட்ட கடலுக்கு மேலே

## அந்தி

கடற்கரையில் இருள் கவிந்துவிட்டது. எல்லையற்ற கருநீல நீர்ப்பரப்பின் மேல் தரங்கப் பாய்கள் சுருண்டு சுருண்டு கரையைத் தொட்டுத் திரும்பிக் கொண்டிருந்தன. ரொட்டி, பட்டாணி விற்றுக் கொண்டிருந்த இரண்டொரு சிறுவர்களும் கடையைக் கட்டிக் கொண்டு போய்விட்டனர். பீச் ரோடிலிருந்து மெரீனா சாலையில் திரும்பும் கார்களின் விளக்கொளி இடையிடையே இருள் மூட்டத்தை ஊடுருவியது. கடற்கரை விளக்குகள் எரிந்து கொண்டுதான் இருந்தன. விளக்குக்கு அப்பால் தொலைவில் தள்ளி உட்கார்ந்திருந்தேன்.

கடல், அலை, ஓசை, இருள், நான் எல்லோரும் இருந்தோம். நிம்மதி, அமைதி, ஒளி, எல்லாம் இல்லை.

அடி மாலா! நீ என் வாழ்வில் ஏனடி குறுக்கிட்டாய்? எவ்வளவு வேகமாகக் குறுக்கிட்டாயோ அவ்வளவு வேகமாகப் போய்விட்டாயே! இரக்கமில்லாமல் தூண்டில்காரன் கரையில் இழுத்துப் போடும் மீன்போல என்னை இழுத்தெறிந்து விட்டு நீ எங்கே போனாய்? போவதுதான் போனாய்! இந்த முடவன்கூட வர முடியாத இடத்துக்கு ஏன் போனாய்? எல்லாம் இறுகிப் போன கல்லாயிருந்தவனை நீ வந்து மலர் ஆக்கினாய்! போகிற போக்கில் அந்த மலரை ஏன் நெருப்பில் போட்டாய்?

ஆசையே இல்லாதவனுக்கு ஆசையை எதற்காக உண்டாக்கினாய்? ஐயோ, நீ பெண் இல்லையடி! சிரிப்பும் கும்மாளமுமாகத் திரியும் வெறும் யுவதி இல்லையடி! திரிபுராந்தகனை ஆட்டி வைத்த ஆதி பரையின் மூல அணுவின் கோடானு கோடி பின்னங்களில் நீயும் ஒரு பின்னமா?

என்னைச் சோதிக்க வந்தாயா? என் நாதத்தைச் சோதிக்க வந்தாயா? அல்லது உன்னையே சோதித்துக் கொள்ளத்தான் வந்தாயா? எதற்காக வந்தாய்? ஏன் போய்விட்டாய்?

இந்த முடவனோடு விளையாட வந்தாய்! விளையாட்டு முடிந்தது. போய்விட்டாய். போனதுதான் போனாய்; உன்னைப் பற்றிய நினைவுகளையும் கொண்டு போயிருக்கக்கூடாதா? அவற்றை ஏன் என்னிடம் விட்டுவிட்டுப் போனாய்?

## உதயம்

வாடின பூவின் மணத்தைப் போல இப்போதும் அந்தப் பழைய நினைவுகளை மங்கலாக எண்ணிப் பார்க்கிறேன். நீ வந்தது, வாழ்ந்தது, போனது எல்லாம் இன்னும் பசுமையாக நினைவிருக்கின்றன.

*ஐப்பசி மாதத்தில் ஒருநாள் காலை நேரம். வெளியே மழை பிசுபிசுவென்று தூறிக் கொண்டிருந்தது. வீணையை எடுத்து வைத்து என்னை மறந்த லயிப்பில் ஒன்றிச் சாதகம் செய்து கொண்டிருந்தேன். அப்போதுதான் என் நண்பரும் அந்தப் புதிய மனிதரும் என்னைத் தேடி வந்தார்கள். முழங்கைக்குக் கீழே முடமாயிருந்த இடது கையை மேல் துண்டால் மறைத்துக் கொண்டு அவர்களை வரவேற்றேன்.*

*"சார்! இவருடைய மருமகள் ஒரு பெண் இருக்கிறாள். தாயாரும் கிடையாது, தகப்பனாரும் கிடையாது; இவர்தான் வைத்துக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறார். ஹைஸ்கூல் படிப்பு வரை படித்திருக்கிறாள். நல்ல சங்கீத ஞானமும் லயமான, சாரீரமும் இருக்கின்றன. நீங்கள் மனம் வைத்துக் கொஞ்சம் சங்கீத ஞானத்தை விருத்தி பண்ணிவிட்டால்..."*

*"நான் பெண்கள் யாருக்கும் சொல்லிக் கொடுக்கிற வழக்கமில்லையே!... இப்பொழுது வரவர டியூஷன்களையே குறைத்துக் கொண்டுவிட்டேன். தற்சமயம் யாருக்குமே சொல்லிக் கொடுக்கவில்லை."*

*அந்தப் புதிய மனிதருக்குப் பதில் கூறுவதுபோல் என் நண்பரைப் பார்த்துக் கூறினேன் நான்.*

*"இல்லை! நீங்கள் அப்படிக் கண்டிப்பாக மாட்டேன் என்று சொல்லிவிடக் கூடாது. இப்படி ஏதாவது ஒரு வழியில் அந்தப் பெண் முன்னுக்கு வந்தால்தான் உண்டு. இவரும் அவ்வளவாக வசதி நிறைந்த ஆள் இல்லை. இவருக்கே மூன்று பெண்கள் கலியாணத்துக்குக் காத்துக் கொண்டிருக்கின்றனர். இந்த நிலையில் மருமகள் கலியாணத்தைக் கவனிக்க இவரால் எங்கே முடியப் போகிறது?"*

*"அதற்கு நான் என்ன செய்யலாம்?"*

*"இல்லை! ஒரு திக்கற்ற பெண்ணுக்குச் செய்யும் நல்ல உபகாரமாக இதை நீங்கள் கருத வேண்டும்."*

*"நீங்கள் சொல்கிறது எனக்குப் புரிகிறது ஐயா! என்னிடம் சங்கீதம் படித்துக்கொண்டு போனால் அந்தப் பெண் கச்சேரி செய்து வாரிக் குவித்து விடுவாள் என்ற எண்ணமா உங்களுக்கு?"*

*"அப்படியெல்லாம் ஒன்றும் தவறாக நினைத்துக் கொள்ளக்கூடாது. இதில் ஆர்வ மிருக்கிறது. படித்து முன்னுக்கு வரட்டுமே என்றுதான்... நீங்கள் என்னுடைய தாட்சண்ணியத்திற்காகவாவது இந்தப் பெண் விஷயத்தில் கொஞ்சம் அக்கறை காட்ட வேண்டும்."*

*என் நண்பர் குழைந்தார். குரல் மட்டுமல்ல, முகமும் குழைந்து கெஞ்சுகிற பாவனையில் நின்றது.*

*"ஏதோ சங்கீதம் உண்டு; நான் உண்டென்று தனிக் கட்டையாய்க் காலம் தள்ளிக் கொண்டு வருகின்றேன். என் தலையில் கொண்டு வந்து சுமையைக் கட்டுகிறேன் என்கிறாயே!"*

"சுமையில்லை, ரகு! அந்தப் பெண் பாடிக் கேட்டால் நீயே பிரமித்துப் போவாய். 'மாட்டேன்' என்றே சொல்லத் தோன்றாது உனக்கு."

"என்னவோ அப்பா! உன் சிபாரிசைத் தட்டுவதற்குத் தயங்க வேண்டியிருக்கிறது... இன்னொரு விஷயம்! எனக்கு மூடி மறைத்துச் சொல்லத் தெரியாது!"

"என்ன? சொல்லேன்..."

"நான் தனி ஆள். கட்டைப் பிரம்மச்சாரி. ஒரு வயது வந்த பெண் என்னிடம் சங்கீதம் படிக்க வந்து போகிறாள் என்றால் அக்கம் பக்கத்தில் நாலு பேர் நாலு விதமாகப் பேசுவார்கள். அதற்காகத்தான் பெண்கள் டியூஷனை இதுவரை நான் ஏற்றுக்கொண்டதே இல்லை!"

"நமக்கு உறுதியும் நல்லெண்ணத்தினால் வைரம் பாய்ந்த மனமும் இருக்கும்போது அக்கம் பக்கத்தார் பேசுவதைப் பற்றி என்ன கவலை?"

"எனக்குக் கவலை இல்லை. நான் கை நொண்டி; சங்கீதம் ஒன்றைத் தவிர வாழ்க்கையில் வேறெல்லாவற்றையும் வெறுத்தவன்."

"எனக்கும் அப்படித்தான்! உங்களை நான் பரிபூரணமாக நம்புகிறேன். எப்படியாவது அந்தப் பெண்ணின் கலாஞானத்தை விருத்தி செய்துவிடுங்கள்." நண்பருடன் வந்திருந்தவர் (அதாவது உன் மாமா) கூறினார்.

"பெண்ணின் பெயர்?"

"மாலா..."

"வயது என்ன இருக்கும்?"

"இந்த மார்கழிக்குப் பதினாறு முடியப் போகிறது."

"கீர்த்தனைகள் - சில்லறைப் பாட்டுக்கள் - ஏதாவது மனப்பாடம் உண்டா?"

"ஏதோ கொஞ்சம் படித்திருக்கிறாள்."

"நல்லது! சாயங்காலம் ராகுகாலத்திற்கு முன்பாகக் கூட்டிக் கொண்டு வாருங்கள்! பரீட்சித்துப் பார்த்து விட்டுச் சொல்கிறேன்."

"கண்டிப்பாக ஏற்றுக்கொள்ள வேண்டும். அவளுக்கு நீங்கள்தான் கதி. சாயங்காலம் ஐந்து மணிக்கு மேல் அழைத்துக் கொண்டு வருகிறோம்."

"வாருங்கள்! பார்க்கலாம்..."

நண்பரும் வந்தவரும் விடைபெற்றுக்கொண்டு சென்றனர். நான் வீணையை எடுத்து உறை போட்டு மூடி வைத்துவிட்டுக் குளிக்கச் சென்றேன். வாழ்நாளிலேயே இதுவரைஅடைந்திராத புதிய அனுபவம் ஒன்று என்னை நோக்கி வந்து கொண்டிருப்பதுபோல எனக்குள் ஒரு கலவரம். மனத்தில் எண்ணங்களின் அலை மோதல்.

## ஒளி

மாலை ஐந்தேகால் மணி. மழை மூட்டமாக இருந்ததனால் உள்ளே பொய் இருட்டுப் படர்ந்திருந்தது. விளக்குகளைப் போட்டேன். வாசனை ஊதுபத்திகள் நாலைந்தை எடுத்து ஸ்டாண்டில் கொளுத்தி வைத்தேன். விளக்கொளியில் சுருள் சுருளாக எழுந்த ஊதுபத்தியின் புகை வளையங்கள் 'கமகம' வென்று சுகந்தத்தைப் பரப்பின.

உறையைக் கழற்றிவிட்டு வீணையை ஐமுக்காளத்தில் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தேன்.

அப்போது அந்த இனிய நேரத்தில் நீ உன் மாமாவோடு அங்கே வந்தாய். உங்களோடு என் நண்பரும் வந்திருந்தார். முதல் முதலாக உன்னைப் பார்த்தபோதே நீ என்னைக் கவர்ந்துவிட்டாய். அழகும் இனிமையும் நிறைந்த ராகங்களெல்லாம் ஒரு பெண் வடிவு பெற்று எனக்கு முன் நிற்பதுபோல் தோன்றினாய் நீ. கரு வண்டுகளைப் போன்ற உன்னுடைய அந்தக் கண்கள், தந்தத்தில் செதுக்கிப் பொருத்தினது போன்ற நாசி, ரோஜா மொட்டுக்களைப் போன்ற இதழ்கள், தவள சந்திரன் போன்ற வட்டவடிவமான முகம்; கரு கருவென்று கீறி விட்டாற்போன்ற புருவங்கள்; அவற்றின் இடையே கருஞ்சாந்துப் பொட்டு!

அடி மாலா! நீ பெண்ணாகவா எனக்கு முன் வந்து நின்றாய்? சங்கீதக் கலையின் அதி தேவதையைப் போல அல்லவா வந்து நின்றாய்!

"அம்மா, மாலா! இவர்தான் உனக்குக் குரு. இவருக்கு நமஸ்காரம் பண்ணு."

உன் மாமா கூறினார். தாமரைப் பூவோடு கூடிய வஞ்சிக் கொடி ஒன்று குனிந்து நமஸ்காரம் செய்வதுபோல நீ எனக்கு நமஸ்காரம் செய்தாய்.

என் இடது கையை மறைத்துக் கொண்டிருந்த அங்கவஸ்திரம் நழுவியது. அந்த ஊனம் உன் கண்ணில் பட்டுவிடக்கூடாதே என்பதற்காக அவசர அவசரமாக அதை அங்கவஸ்திரத்துக்குள் மறைத்துக் கொண்டேன்.

நீ அன்று நீலமேகத்தின் நிறத்தில் ஒரு வாயில் புடவையைக் கட்டிக் கொண்டிருந்தாய். கருநாகமாகப் பின்னித் தொங்கவிட்டிருந்த ஜடையின் உச்சியில் மல்லிகைப் பூச்சரத்தை அள்ளிச் சொருகியிருந்தாய்.

உன் மாமாவும் என் நண்பரும் முன்பே ஐமுக்காளத்தில் உட்கார்ந்து கொண்டு விட்டனர். நீ மட்டும் மரியாதையை நினைத்தோ என்னவோ, அடக்க ஒடுக்கமாகக் குனிந்த தலை நிமிராமல் நின்று கொண்டிருந்தாய்.

"உட்கார்ந்து கொள்!..." மெல்லிய குரலில் சொன்னேன். நீ உடனே ஐமுக்காளத்தில் உட்கார்ந்து கொண்டாய். எனக்கு முன் வீணை; வீணைக்கு முன் நீ!

மாலா! நீ அப்போது எப்படி உட்கார்ந்து கொண்டிருந்தாய் தெரியுமா? நவராத்திரியின் போது கோயிலில் அம்மனின் தங்கச்சிலைக்கு அலங்காரம் செய்து

*வைப்பார்களே தெரியுமா? அதேபோல - ஆனால் உயிருள்ள ஒரு தெய்வச் சிலையாக அழகெல்லாம் திரண்ட பிம்பமாய் நீ எனக்கு முன் உட்கார்ந்து கொண்டிருந்தாய். எனக்கு அப்படியே உன்னைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்று ஆசை! ஆனால் உன் மாமா இருந்தார்; என் நண்பர் இருந்தார். ஆசையை வெட்கம் அடித்துவிட்டது. துணிவு பதுங்கிக் கொண்டது.*

*"தமிழ்க் கீர்த்தனம் தெரிந்தால் ஏதாவது ஒன்று பாடு, பார்ப்போம்!" உன்னை நேரடியாக ஏறிட்டுப் பார்க்கத் துணிவில்லை. எங்கோ பார்த்துக் கொண்டு தான் இப்படிச் சொன்னேன். நீ கொஞ்சம் யோசித்தாய் போலிருக்கிறது. நான் வீணையை உன் பக்கமாக நகர்த்தினேன்.*

*உன் மாதுளை மொட்டுப் போன்ற விரல்கள் வீணைத் தந்தியின் மேல் படிந்தன.*

*"நமக்கினி நம பயமேது? - தில்லை*

*நடராஜன் இருக்கும்போது..."*

*நந்தனார் சரித்திரக் கீர்த்தனை உன் கண்டத்திலிருந்து கணீரென எழுந்தது. வீணையின் ஒத்துழைப்பு அபாரம்! நீ பாடினாய், இல்லை; அமுதத்தை வர்ஷித்தாய்.*

*சதைப் பிண்டமாகிய சாதாரணத் தொண்டையிலிருந்து பிறந்த வெறும் குரலா அது? அமுதம், குயில், தேன், பால், கற்கண்டு, எல்லாமாகிய கலப்பின் இனிமைக் கிளர்ச்சி அல்லவா அது?*

*மாலா! அன்றைக்கு அந்த ஒளி மங்கிய மாலை நேரத்தில் ஜடப்பொருளான எனது வீணையின் தந்திகளை மட்டுமா நீ வருடினாய்? அல்ல! உன் எதிரே கல்லாய், சிலையாய், உணர்வை எல்லாம் பறி கொடுத்து வீற்றிருந்த என் இதயத்தின் அணுஅணுவான மெல்லிய நரம்புகளையெல்லாம் அல்லவா மீட்டினாய்?*

*"என்ன சார்? இவள் சாரீரம் எப்படி?" உன் மாமாவின் குரல் என்னை இந்த உலகிற்குக் கொண்டு வந்து சேர்த்தது. நீ பாடி நிறுத்தியிருந்தாய். அலர்ந்த ரோஜாவின் நிலையில் பனித்துளிகளைப் போல் உனது செம்பொன் நிறமான முகமண்டலத்தில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பியிருந்தன. உனது மாமாவின் கேள்விக்கு நான் கூறப்போகும் பதிலை அறிந்து கொள்ளும் ஆர்வத்தால் உன் விழிகள் குனிந்த நிலை நிமிராமலே என் முகத்தை ஒருக்கொளித்துப் பார்த்தன.*

*"சாரீரமா?இது சாதாரண சாரீரமில்லை. தெய்வீக சாரீரம்! இவளுக்குச் சொல்லிக் கொடுக்காவிட்டால் அந்தப் பாவம் ஏழேழு ஜன்மத்துக்கு என்னைச் சும்மா விடாது." இப்படிச் சொல்லிவிட்டு ஜாடையாக உன் முகத்தைப் பார்த்தேன் நான். இருப்பிடம் தெரியாமல் மணக்கும் மனோரஞ்சிதப் பூவின் மணத்தைப் போல உதடுகள் அசையாத நுணுக்கமான நாணங்கலந்த புன்னகை ஒன்று இதழ்களிடையே நெளிவதைக் கண்டேன். அதே சமயத்தில், கயல்மீன்களைப் போல பாலைப் பூசி நடுவே கருமணி பதித்தாற்போல, நெஞ்சை அள்ளும் உனது நயனங்களை எனது நயனங்களால் துழாவினேன்.*

*உன் விழிகளில், விழிகளின் மையமான கரு மணிகளில், கருமணிகளின் நுண்ணொளியில் - அந்த நுண்ணொளியின் பொருளில், பொருள் வரம்புக்கு உட்படாத ஒரு மெல்லிய உணர்வு கிளர்ந்து கொண்டிருந்தது. அது எனக்கு மட்டும் புரிந்தது.*

*இப்போது மீண்டும் என் தோள்துண்டு நழுவியது! கவனக்குறைவாக இருந்துவிட்டேன். அந்த நொண்டிக்கை... அதை நீ பார்த்துவிட்டாய்... தவறு... நீ பார்க்கும்படியான ஒரு சந்தர்ப்பத்தை என் அஜாக்கிரதையினால் ஏற்படுத்திக் கொடுத்துவிட்டேன்.*

*நீ பார்க்கவிடக்கூடாது என்று எதை ஜாக்கிரதைப்படுத்தினேனோ அதையே பார்த்துவிட்டாய்! என்னுடைய இந்த ஊனம் உன்னிடம் பயத்தையும், பரிதாபத்தையும் ஒரே சமயத்தில் உண்டாக்கியிருக்கிறது என்பதை உன் விழிகளின் சலனத்திலிருந்து நான் புரிந்து கொண்டேன். என்னுள் ஒரே குமுறல்; நீ என்னைப் பற்றி என்ன நினைக்கிறாயோ என்ற கொந்தளிப்பு. இனம் புரியாத ஏக்கம். நான் ஒரு முடவன்! ஐயோ நான் ஏன் முடவனானேன்?....*

*"அப்போ... நாளைக்கு முதல் தேதி. நாளையிலிருந்து டியூஷனைத் தொடங்கிவிட்டால் கணக்காக இருக்கும்." உன் மாமா மீண்டும் குறுக்கிட்டார்.*

*"ஆகா! அப்படியே செய்வோம். நாளைக்கு இதே வேளைக்கு அனுப்பிவிடுங்கள். உங்களிடம் வீணை இருந்தால் கொடுத்து அனுப்புங்கள்; இல்லையானால் அதற்காக இப்போது பணம் செலவழித்து வாங்க வேண்டாம். இருக்கிறது. இதை வைத்துப் பார்த்துக் கொள்ளலாம்" நான் மறுமொழி கூறினேன். உன் மாமா எழுந்தார்.*

*"வாம்மா, போகலாம்! குருவுக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டு எழுந்திரு." உன் மாமா உன்னை அழைத்தார். மேல் துண்டின் மறைவிலிருந்த என் நொண்டிக் கை 'வெட வெட' என்று புறாவின் சிறகுகள் குளிரில் உதறுவது போல் நடுங்கின.*

*நீ எழுந்திருந்தாய். நமஸ்காரம் செய்தாய். நமஸ்காரம் செய்வதற்காகக் குனியும்போது உன் கண்கள் என்னிடம் - எனது முகத்தில் எதையோ தேடின!*

*அப்புறம்? அப்புறம் என்ன? நீயும் உன் மாமாவும் நண்பரும் விடைபெற்றுக் கொண்டு போய்விட்டீர்கள்.*

**சாயை**

*சாயை! எதனுடைய சாயை? காலத்தின் சாயை! எண்ணங்களின் சாயை! காலத்திலும் எண்ணத்திலும் குழம்பி உன்னை நானும் என்னை நீயும் புரிந்து கொண்டோமே; அந்த மனோரம்மியமான உணர்வின் சாயை!*

*ஒன்றா? இரண்டா? ஒன்பது மாதங்கள்! நீ என்னிடம் படிக்க வந்து முக்கால் வருஷம் ஆகிவிட்டது. ஆகா! இந்த நாட்கள், இந்த வாரங்கள், இந்த மாதங்கள், இவைகள் யாரைத் தேடி ஓடுகின்றன? இவைகளுக்கு ஏன் இவ்வளவு வேகம்? எதற்காக இந்தக் கொள்ளைபோகிற அவசரம்?*

பழகப் பழக எண்ணங்கள் நெருங்கி விடுகின்றன. பயம் குறைந்து விடுகிறது. வெட்கம், நாணம் சங்கோஜம், எல்லாம் மாறிவிடுகின்றன. ஆரம்பத்தில் எந்த இடது கையின் 'ஊனம்' உனக்குத் தெரியக்கூடாதென்று மறைத்தேனோ, அந்த நொண்டிக் கையை மேல் துண்டால் மறைப்பதையே விட்டுவிட்டேன். முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கமுடியுமா? மறைத்துதான் ஆகப் போவதென்ன?

என்னிடம் நாதம் இருக்கிறது. அதிசயமான சங்கீதக் கலையை உபாசித்து வருகிறேன். அதைக் கற்றுக்கொள்வதற்காகத்தானே நீ வந்தாய்? என் கைகளும் கால்களும் சாமுத்திரிகா லட்சணத்தோடு இருக்க வேண்டுமென்பதைப் பரிசோதிப்பதற்காக நீ வரவில்லையே? இப்போதெல்லாம் மேல் துண்டே போட்டுக் கொள்ளாமல் திறந்த மார்போடுதான் பாட்டுச் சொல்லிக் கொடுக்கிறேன். இடது கை ஊனம்; முழங்கைக்குக் கீழே ஒன்றுமில்லாத சூன்யம்; சூம்பிப் போன நீண்ட வெள்ளரிக்காய் மாதிரி; அதை நீ சதா பார்ப்பது போலவும், பார்க்காதது போலவும் நேரடியாகவும் மறைமுகமாகவும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறாய்! அதுவும் எனக்குத் தெரியும்!

நான் அதைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. உன்னைப் பற்றிக் கவலைப் பட்டிருக்கிறேன். உன் அழகை நினைத்து ஏங்கியிருக்கிறேன். பொய்யில்லை. உண்மையாகத்தான். உன் இனிய குரலை நினைத்து, அந்தக் குரலுக்குக் கலை வரம்பு கட்டிக் கொடுக்கும் குருவாக நான் அமைந்ததை எண்ணி, உள்ளூறப் பெருமிதப் பட்டிருக்கிறேன். இதெல்லாம் வாஸ்தவம்.

ஆனால், மாலா! நீ ஒரு அழகான யுவதி. நான்...நான்... நான்? அழகு முகத்தில் மட்டும் இருப்பதானால் உன்னைப் போலவே அழகன்தான்! கை முடமான அழகன்! கை முடமானவனை யாராவது அழகனென்று ஒப்புக்கொள்வார்களா?

எப்படித்தான் எனக்கு அவ்வளவு துணிவு வந்ததோ? ஸ்வரங்களை வரிசைப்படுத்தி எழுதிக் கொள்வதற்காகவும் புதிய பாட்டுக்களைக் குறித்துக் கொள்வதற்காகவும் நீ ஒரு கனத்த நோட்டுப்புத்தகம் கொண்டு வருவாய். அன்று மறந்து போய் அந்த நோட்டுப் புத்தகத்தை என் அறையிலேயே விட்டு விட்டுப் போய்விட்டாய்.

என் உள்ளத்தின் ஊமைக் கனவுகள், அனுராகச் சிந்தனைகள் இவைகளுக்கெல்லாம் அன்றைக்கு ஏன்தான் அவ்வளவு வெறி பிடித்தனவோ? அந்த நோட்டுப் புத்தகத்தை எடுத்தேன்! என் நெஞ்சத்தின் குமுறல்களை எல்லாம் எழுத்தாக்கினேன். மறுநாள் வழக்கம்போல நீ வந்தாய். பாடம் முடிந்தது. நீ வீட்டிற்குப் போகும்போது ஒன்றும் தெரியாதவனைப் போல நடித்துக் கொண்டு என் ஆசைகளையெல்லாம் கொட்டி மெழுகியிருக்கும் அந்த நோட்டுப் புத்தகத்தை உன்னிடம் கொடுத்தேன்.

"மாலா! நேற்று இதை மறந்து போய் வைத்து விட்டுப் போய் விட்டாயே? இந்தா! இதில் கடைசிப் பக்கத்தில் புதிய 'பாட்டு' ஒன்று எழுதியிருக்கிறேன். வீட்டுக்குப் போனதும் தனியாக உட்கார்ந்த பிரித்துப் பார்..."

"ஆகட்டும் சார்! பார்க்கிறேன்...."

"அவசியம் பார் மாலா! மறந்துவிடாதே...."

"கட்டாயம் பார்க்கிறேன் சார்! வீட்டுக்குப் போனவுடன் பார்க்கிறேன்." என் நெஞ்சு 'படக் படக்' கென்று அடித்துக்கொண்டது. அது ஏனோ? நீ சிரித்த முகத்தோடு விடைபெற்றுக் கொண்டு போனாய்! உன் மாமா பார்த்துவிட்டால்?... அல்லது உன் மாமாவின் பெண்கள் யாராவது பார்த்துவிட்டால்...? ஐயையோ! நான் ஏன் அப்படிச் செய்தேன்? என் மனம் பதைபதைத்தது. அதன்பின் அன்று இரவு முழுவதும் எனக்கு உறக்கமே இல்லை. என்னென்னவோ பயங்கரமான கற்பனைகள்! என்னென்னவோ பதைப்புகள்! என்னென்னவோ நடுக்கங்கள்!

மறுநாள் மாலை. அன்று வெள்ளிக்கிழமை. வழக்கமாக நீ வருகின்ற நேரமும் கடந்து அதற்கு மேலும் ஆகிவிட்டது. நீ வரவில்லை. என் மனத்தில் மெல்ல நடுக்கம் தலைகாட்டியது. அசட்டுத்தனமாக நான் எழுதிய கடிதத்தின் விளைவு என்ன ஆயிற்றோ? உன் வீட்டில் என்ன கலவரத்தை உண்டாக்கிவிட்டதோ? உன் மாமாவும் மாமியும் மற்றவர்களும் என்னென்ன பழிகளைச் சொல்லி உன் முகத்தில் இடிக்கிறார்களோ? நேரம் ஆக ஆக நான் பொறுக்க முடியாத வேதனைக்கு ஆளானேன்.

மாலை ஆறரை மணிக்கு மேலும் ஆகிவிட்டது. நான் சற்றும் எதிர்பாராதவிதமாக உன் மாமாவும் என் நண்பரும் பரபரப்பாக உள்ளே நுழைந்தார்கள். உண்மையாகவே சொல்கிறேன். அப்போது அவர்கள் வரவு என் அடிவயிற்றில் புளியைக் கரைத்தது. உடம்பில் உதறலெடுத்துவிட்டது.

நல்லவேளை! அப்படி ஒன்றும் மானக்கேடாக நடந்துவிடவில்லை. என் நண்பர் தான் முதலில் பேச்சை ஆரம்பித்தார்.

"சார்! இன்றைக்கு வெள்ளிக்கிழமை. நல்ல நாளாக இருக்கிறது. உங்கள் ஜாதகம் இவருக்கு வேண்டுமாம். கொடுக்கிறீர்களா?"

எனக்கு என் காதுகளையே நம்ப முடியவில்லை. தூக்கிவாரிப் போட்டது. கனவா? நனவா? எதுவென்றே புரியவில்லை.

"ஜாதகமா?... எதற்கு?..."

என் நண்பர் கண் இமைகளை மூடித் திறந்து குறும்புத்தனமாகச் சிரித்தார்.

"என்ன சார்? ஒன்றும் தெரியாதவரைப் போலக் கேட்கிறீர்களே?"

"இல்லை! இல்லை! என்னை விட்டுவிடுங்கள். நான் ஏதோ அசட்டுத்தனமாக அப்படி எழுதியிட்டேன். மாலாவின் அழகுக்கு நான் சற்றும் பொருத்தமே இல்லை. நான் முடவன்!" - நான் வாய்விட்டு அழாத குறையாக அலறினேன். கதறினேன். ஆனால் உன் மாமாவோ என் நண்பரோ அந்த அலறலையும், கதறலையும் இலட்சியமே செய்யவில்லை.

"நீங்கள் விட்டுவிடத் தயாராக இருக்கலாம். ஆனால் அந்தப் பெண் மாலா உங்களை விடத் தயாராயில்லையே? உங்கள் கலைக்கு அடிமையாக இருந்தவள், இப்போது உங்கள் வாழ்க்கைக்கும் அடிமையாக விரும்புகிறாள்."

"அவள் இளம் பெண்; சிறியவள், அறியாதவள். நானும் ஏதோ வெறியில் தத்துப்பித்தென்று எழுதி அவள் மனத்தில் ஆசைக் கனலை மூட்டியிருப்பேன். என்னை மன்னித்துவிடுங்கள். அவளுக்கு ஏற்றவனே இல்லை நான்."

என் பேச்சை யாருமே கேட்கவில்லை. இறுதியில் நான்தான் தோற்றேன். என் ஜாதகத்தை உன் மாமாவிடம் கொடுத்தேன். மறுநாளும் நீ பாட்டுக்கு வரவில்லை. நம்முடைய அந்தக் கல்யாணம் நடக்கின்றவரை வரவே இல்லை!

வீட்டுக்கே வரப்போகிறவள்; பாட்டுக்கு வராவிட்டால் என்ன என்று பேசாமல் இருந்துவிட்டேன். என் மனத்தோடு எண்ணங்களும் கனவுகளும் சேர்ந்து துடித்திருக்கும். ஏன்? ஏங்கக்கூட ஏங்கியிருக்கலாம்!

கனவா? வேடிக்கையா? அல்லது என்றோ மலர்ந்து வாடிப்போன வெறும் கற்பனையா? அந்தக் கலியாணம் - 'நீயும்' 'நானும்' 'நாமாக' மாறி, உன்னையும் என்னையும் பிணைத்த அந்தத் தாம்பத்ய உறவு மெய்யாகவே வடபழநியில் முருகன் திருமுன் நடந்துவிட்டது.

"ஏழையானால் என்ன? தாலி கட்டுவதற்கும் இன்னொரு ஏழை இந்தப் பரந்த உலகத்தில் கிடைக்காமலா போய்விட்டான்? ரதி மாதிரிப் பெண்ணை வளர்த்து இப்படி ஒரு நொண்டியாய்ப் போனவனுக்கா கொடுப்பார்கள்?"

"யார் கொடுத்தார்கள்? அந்தப் பெண்தான்அவனைத் தவிர வேறு யாரையும் பண்ணிக்கமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்ததாம்."

"பாடிப் பாடிப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கிற சாக்கில் அந்த நொண்டி அவளை அப்படி மயக்கிவிட்டான் போலிருக்கிறதே! அதனால்தான் இப்படி நடந்திருக்கிறது."

ஊர் உலகத்தில் உனக்கும் எனக்கும் நடந்த திருமணத்தைப் பற்றி என்னென்னவோ பேசினார்கள். இந்த உலகத்தில் பேசுகிற வாய்களுக்கும், கேட்கிற காதுகளுக்கும் வியவஸ்தை என்று ஏதாவது இருந்தால்தானே?

நீ என் வீட்டுக்கு விளக்கேற்ற வந்தாய்! இருளை மட்டுமா போக்கினாய்? என் இதயத்தைப் பற்றுள்ளதாக மாற்றினாய்! பாசமுள்ளதாக மலர்த்தினாய்! உன்னோடு உன் அன்பு வந்தது. உன் அன்போடு உன் அழகு வந்தது. உன் அழகோடு இனிய பண்பும் வந்தது. நான் கை நொண்டி என்பதையே மறக்கச் செய்துவிட்டாய். என்னை, என்னுடையதை, எனக்கு என்பதையெல்லாம் இழந்து கிடந்தவனை, நம்மை, நம்முடையதை, நமக்கு என்றெண்ணி வாழவைத்தாய். மாலா! நீ பெண்ணல்ல! பெண் தெய்வம்.

## இருள்

*உன் வயிற்றில் ஆலிலை போன்ற அந்த மணி உதரத்தில் நம்முடைய அன்பின் உரு எட்டு மாத வளர்ச்சியை எட்டியிருந்தது. இன்னும் சில மாதங்கள் கழிந்தால் உனக்கும், எனக்கும் முறையே நீயும் நானுமே பரஸ்பரம் குழந்தையாக இருந்த நிலை மாறி, மூன்றாவது உயிர் ஒன்று குழந்தையாகப் பிறந்துவிடும்.*

*அன்பு, காதல், பிரேமை - எத்தனை ஆயிரம் நளினமான சொற்களால் வாழ்க்கையை வர்ணித்தால் என்ன? இரண்டு உயிர்கள் சேர்ந்து மூன்றாவது உயிரை சிருஷ்டிப்பதுதான் வாழ்க்கை! சிருஷ்டியும் மனித ஜாதிக்கு ஏற்படுகின்ற பயங்கரமான நோய்களில் ஒன்றுதானா? சிருஷ்டியில் உயிர்கள் தோன்றுவதைப் போலவே உயிர்கள் தவறவும் செய்கின்றனவே?*

*அது உனக்கு நிறை மாதம். அடிக்கடி வந்து உன்னைப் பரிசோதித்துக் கொண்டிருந்த லேடி டாக்டர் இரண்டு வாரம், பத்து நாள், ஐந்தே நாட்கள் என்று தவணை போட்டுக் கொண்டிருந்தாள். அன்று வேலூரில் ஒரு கல்யாணம். கச்சேரிக்கு அழைத்திருந்தார்கள். நிலைமையைச் சொல்லி மறுத்தேன். மிகவும் வேண்டியவர்கள். கட்டாயப்படுத்தினார்கள். தாட்சணியம் இருந்து தொலைக்கிறதே! என்ன செய்யலாம்? கச்சேரிக்குப் போனேன்.*

*இரவு ஒன்பதரை மணி; கலியாண வீட்டுப் பந்தலே காணாமல் கூட்டம் கூடியிருந்தது. கச்சேரி நடந்து கொண்டிருந்தது. பாடத் தொடங்கினால் நான் என்னை மறந்துவிடுவது வழக்கம்.*

*மெல்ல ஒருவர் மேடையேறி வந்தார். காதருகே பதறிய குரலில் முணுமுணுத்தார். "சார், உங்களுக்கு ஒரு தந்தி! இதோ!... எதற்கும் பிரித்துப் பார்த்துவிடுங்கள்..."*

*நான் தந்தியைப் பிரித்தேன். "மாலாவுக்கு அபாயம். உடனே புறப்படுக." இதயம் பதறியது. கச்சேரி அரைகுறையில் அலங்கோலமாக முடிந்தது.*

*மணிக்கு முப்பது மைல் வேகத்தில் காரை ஓட்டச் சொன்னேன். உள்ளம்? அது நான் சொல்லாமலே அவ்வளவு வேகத்தில் ஓடியது. சென்னையை அடையும்போது மணி ஒன்றாகிவிட்டது.*

*அடையாறு பிரசவ ஆஸ்பத்திரி. நான் உள்ளே வந்தேன். ஒரு நர்ஸ் எதிர்ப்பட்டாள்.*

*"நீங்கள் யார்?"*

*நான் விவரங்களைக் கூறினேன்.*

*"அந்த அம்மாள் காலமாயிட்டாங்களே. பதினொன்றரை மணிக்கே அவங்க மாமா வந்து பிரேதத்தை வாங்கிக்கிட்டுப் போயிட்டாங்களே..."*

*"குழந்தை...?"*

"வயிற்றிலேயே இறந்து போய்த்தான்...."

என்னைச் சுற்றிலும் ஒரே இருள்! கோவென்று கதறினேன். கார் என்னைச் சுமந்து கொண்டு அடையாற்றின் ஒரு கோடிக்கு ஓடியது.

அங்கே..? என் உள்ளங் கவர்ந்த பொன்னுடல் நெருப்பாகிப் புகையாகி எரிந்து கொண்டிருந்தது! அடி நாசகாரி! நீ எரிந்து கொண்டிருந்தாய். என் இதயத்தையும் எரிய வைத்துவிட்டு எரிந்து கொண்டிருந்தாய்.

தொலைவில் அலைபட்ட கடலுக்கு மேல் ஏதோ ஒரு கப்பல் துறைமுகத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருந்தது. கடற்கரை இருளின் நடுவே தட்டுத்தடுமாறி எழுந்து நடக்கிறேன். அங்கே கடலின் அலைகள். அலைகளின் மேல் கப்பல். கப்பலின் மேல் மனிதர்கள். இங்கே என் இதயக் கடலில் எண்ண அலைகள்! அடி மாலா! அதன் மேல் நீங்காது மிதப்பவள் யார் தெரியுமா? நீதானடி! நான் கை முடவனாக மட்டும் இருந்தேன். இதயத்தையும் முடமாக்கிவிட்டுப் போய்விட்டாய்! அடி மாலா!

(கலாவல்லி, ஜனவரி - 1, 1957)



## 8. மூட நம்பிக்கை

"ஒரு மாதமாய்ப் படித்துப் படித்துச் சொல்கிறேன். நீங்கள் காதில் போட்டுக் கொண்டால்தானே?"

"எதைச் சொல்கிறாய் ராஜம்?"

"எல்லாம் தெரிந்து கொண்டே ஒன்றும் தெரியாதது போலப் பாவனை பண்ணுவதுதான் உங்கள் வழக்கமாயிற்றே! நீங்கள் கதாசிரியர் இல்லையா?"

"இந்தா! அநாவசியமாக வந்ததும் வராததுமாக என்னை வம்புக்கு இழுக்காதே... சுற்றி வளைத்துக் குத்திக் காட்டாமல் விஷயத்தைச் சொல்... கேட்கிறேன்."

"இந்த வீட்டுக்கு வந்ததிலிருந்து நோயும் நொடியுமாகப் பிடுங்கித் தின்னுகிறது. இது நமக்கு ஆகவில்லை. மருந்துக்கும் டாக்டருக்குமாகக் கொட்டிக் கொடுத்துக் கடன் ஏறினதுதான் கண்டது. 'தப்பினோம் பிழைத்தோம்' என்று பேசாமல் வேறு வீடு பாருங்கள்."

"இதெல்லாம் சுத்த அசட்டுத்தனம். எனக்குக் கொஞ்சங்கூட நம்பிக்கை இல்லை. நோய், நொடிகள் இந்த வீட்டை மட்டுமா குத்தகைக்கு எடுத்திருக்கின்றன? உலகம் பூராவும் நோயும் மருந்தும் வைத்தியனும் இருக்கத்தான் செய்கிறார்கள்!"

"நான் சொல்லுகிறேனே என்று நீங்கள் நம்ப வேண்டாம்! நீங்களாகவே சுயமாக யோசித்துப் பாருங்களேன். இங்கு வந்து ஆறு மாதமாகவில்லை. அதற்குள் எவ்வளவு பேர் படுத்துக்கொண்டோம்? வந்ததும் வராததுமாக எனக்கு டைபாய்டு... இருபது நாள் மருந்தும் ஊசியுமாகப் படுத்த படுக்கையாகக் கிடந்தேன். வைத்தியச் செலவு இருநூறு ரூபாய்க்கு மேல் ஆகிவிட்டது. நான் பிழைத்து எழுந்திருந்தேனோ இல்லையோ மறு வாரம் உங்களுக்கு நிமோனியா, நீங்கள் படுத்துக் கொண்டுவிட்டீர்கள்! ஒரு மாதத்திற்கு மேல் ஆபீஸுக்கு லீவு போட்டுவிட்டுக் கிடந்தீர்கள். முந்நூறு ரூபாய் வைத்தியச் செலவோடு எலும்பும்தோலுமாகக் கொத்தவரக்காய் வற்றல் மாதிரி பிழைத்து எழுந்திருந்தீர்கள்..."

"சே! சே! இது என்ன? ஓயாத தொந்தரவாகப் போச்சு உன்னோடு; உடம்புக்கு வந்ததெல்லாம்கூட அதிகக் கஷ்டமாகத் தோன்றவில்லை. நீ சொல்கிற காரணந்தான் சகிக்கவில்லை."

"இன்னும் கேளுங்கள்! என்னோடும் உங்களோடும் போயிருந்தால்கூடப் பரவாயில்லையே? மறு மாதமே குழந்தைக்கு 'வைசூரி' போட்டுப் பிழைத்தது மறுபிழை என்று ஆகிவிட்டது. நீங்கள் நம்பினால் நம்புங்கள்; நம்பாவிட்டால் போங்கள். நாள் தவறாமல் நோயும் நொடியும் அலைக்கிறதைப் பார்த்தால்

கண்டிப்பாக இந்த வீட்டில் ஏதோ 'தோஷம்' இருக்கிறது என்றுதான் நினைக்க வேண்டியிருக்கிறது."

"நீ என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள். அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. எனக்கு இருக்கிற அலைச்சல் போதாது என்று மறுபடியும் என்னை வீட்டுக்காக வேறே அலையச் சொல்கிறாயா? என்னால் கண்டிப்பாக முடியாது..."

"முடியாவிட்டால் யாருக்கு என்ன? இதோ உங்கள் அருமைப் பிள்ளை பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் சுருட்டிப் போர்த்திக் கொண்டு படுக்கையில் விழுந்துவிட்டான். தொட்டுப் பார்த்தால் ஜுரம் நெருப்பாய்க் கொதிக்கிறது. போய் டாக்டரைக் கூட்டிக் கொண்டு வாருங்கள்."

"என்ன?... இதை ஏன் வந்ததுமே சொல்லவில்லை?"

"நான் சொல்ல ஆரம்பிப்பதற்குள் நீங்கள்தான் வரிந்து கட்டிக் கொண்டு என்னோடு வாய்ச் சண்டை போட வந்துவிட்டீர்களே?"

"என்ன இழவு சனியனோ! வீட்டுக்குத் தோஷமானால், 'நிமோனியாவும், டைபாய்டும்' பாழய்ப்போன வீட்டுக்கல்லவா வரவேண்டும்? மனிதர்களுக்கு ஏன் வந்து தொலைக்கிறது?"

"நன்றாயிருக்கிறதே உங்கள் தர்க்க நியாயம்? யாராவது கேட்டால் சிரிக்கப் போகிறார்கள்! பேசாமல் போய் டாக்டரைக் கூட்டிக் கொண்டு வாருங்கள். என்னோடு விவாதம் செய்வதை அப்புறம் வைத்துக் கொள்ளலாம்!"

"சரி! காப்பியைக் கொண்டு வா. சாப்பிட்டு விட்டுப் போய் டாக்டரைக் கூட்டிக் கொண்டு வருகிறேன்."

ராஜம் காப்பியை எடுத்துக்கொண்டு வருவதற்காக உள்ளே சென்றாள். நான் படுக்கையில் போர்த்திப் படுத்துக்கொண்டிருந்த பையன் அருகிற் சென்றேன். போர்வையை ஒதுக்கிவிட்டு நெஞ்சில் கையை வைத்துப் பார்த்தேன். காய்ச்சல் அனலாகக் கொதித்துக்கொண்டிருந்தது. பையனுக்குத் தன் நினைவு இருந்ததாகத் தெரியவில்லை.

"போன ஜன்மத்தில் டாக்டருக்கும் மருந்துக் கடைக்காரனுக்கும் எந்த வகையில் கடன்பட்டேனோ? பொழுது விடிந்து பொழுது போவதற்குள் டாக்டருக்கும் மருந்துக்கும் செலவாகிற பணத்துக்குக் கணக்கு வழக்கே இல்லை!"

காப்பியைச் சாப்பிட்டுவிட்டு டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு வருவதற்குள் கிளம்பினேன்.

டாக்டர் வந்தார், பார்த்தார்.

"பையனுக்கு மலேரியா ஜுரம் சார்."

"ஐயையோ! மலேரியாவா?..."

"ஜுரம் கடுமையாகத்தான் இருக்கிறது! ஆனாலும் கவலைப்படாதீர்கள். இரண்டு ஊசி போட்டுவிட்டுப் போகிறேன். இராத்திரிப் பொழுது கடந்துவிட்டால் கவலை இல்லை. விடிவதற்குள் அநேகமாக இறங்கிவிடும்."

டாக்டர் ஊசியைப் போட்டு விட்டுக் கிளம்பினார். அப்போது மாதக் கடைசி. கையில் வறண்ட நிலைமை. பையனின் வைத்தியச் செலவுக்கு யாரிடமாவது கைமாற்றாகப் பணம் வாங்கிக் கொண்டு வரலாம் என்று நானும் வெளியே கிளம்பினேன்.

நாராயணன் நெருங்கிய நண்பர். இந்த மாதிரி விஷயம் என்றால் உடனே உதவி செய்வார். நான் அவர் வீட்டுக்குத்தான் சென்றேன்.

"என்ன சார்! வாருங்கள்! ஏது இப்படி? அடியேனைத் தேடிக்கொண்டு...?" நாராயணன் மகிழ்ச்சியோடுதான் வரவேற்றார்.

மென்று விழுங்கிக் கொண்டே வந்த காரியத்தைச் சொன்னேன்.

"பணத்துக்கென்ன சார்? இதோ தருகிறேன்... சம்பளம் வந்ததும் திருப்பிக் கொடுத்துவிட்டுப் போகிறீர்கள். இந்தப் புதுவீட்டிற்கு வந்ததிலிருந்து உங்கள் வீட்டில் யாருக்காவது ஏதாவது நோக்காடு வந்த வண்ணமாகத்தான் இருக்கிறது. பணத்துக்குப் பிடித்த செலவு..." அனுதாபப்பட்டுக் கொண்டே நான் கேட்ட தொகையை எண்ணிக் கொண்டு வந்து கொடுத்தார் நாராயணன்.

"நம்ம போதாத காலத்துக்கு வீடு என்ன செய்யும்? வாசல் என்ன செய்யும்? 'அவள்' கூட அடிக்கடி இப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறாள். எனக்கென்னவோ இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை. நீங்கள் கூட இதையெல்லாம் நம்புகிறீர்களா நாராயணன்?"

"நம்புவதிலும் நம்பாததிலும் என்ன இருக்கிறது? இதெல்லாம் ஒரு ஆசாபாசம்தான். தொடர்ந்து ஒரு மாறுதல் இருந்தால் அதைப் பற்றி எப்படியாவது சிந்திக்க வேண்டித்தானே இருக்கிறது?"

இதற்கப்புறம் பதினைந்து நாட்கள் கழித்துப் பையன் தலைக்குத் தண்ணீர் விட்டுக் கொண்டான். மெடிகல் சர்டிபிகேட் வாங்கி மறுபடியும் பள்ளிக்கூடத்தில் கொண்டுபோய் விட்டு வந்தேன்.

பையன் எழுந்து நடமாடத் தொடங்கி முழுசாக இரண்டு நாட்கள் ஆகவில்லை. கைக்குழந்தைக்கு ஒரு பயங்கரமான வியாதி வந்துவிட்டது.

இருந்தது இருந்தாற்போல் திடீரென்று மூச்சுப் பேச்சு இல்லாமல் இரண்டு மணி நேரம் மூன்று மணி நேரம் கட்டைப்போலக் கிடந்தது. "சரி! கொடுத்து வைத்த ஆயுள் அவ்வளவுதான்! இனிமேல் மூச்சாவது, பேச்சாவது" என்று நினைத்தபோது திடீரென்று வீரிட்டு அழுதது. அரை மணி முக்கால் மணி நேரம் அது மாதிரி வீரிட்டு அழுது விட்டு மீண்டும் பழையபடி மூச்சுப் பேச்சில்லாமல் கிடந்தது.

டாக்டரை அழைத்துக் கொண்டு வந்து காட்டினேன். அவர் பார்த்து விட்டு உதட்டைப் பிதுக்கினார்.

"சார், இது சிறு குழந்தைகளுக்கு வருகிறதுண்டு! 'கணை' என்று பெயர். எங்களை விட நாட்டு வைத்தியர்களிடம் தான் இதற்குச் சரியான மருந்து இருக்கும். நீங்கள் எதற்கும் உடனே நல்ல நாட்டு வைத்தியராக ஒருவரைப் பார்த்துக் காண்பியுங்கள்."

டாக்டர் கண்ணியமான மனிதர். ஒளிவுமறைவில்லாமல் தம்மால் முடியாது, தமக்கு அது தெரியாது என்பதை ஒப்புக் கொண்டு போய்விட்டார்.

ஓடோடிச் சென்று கைராசியும் நல்ல பெயரும் பெற்றிருந்த ஒரு நாட்டு வைத்தியரை அழைத்து வந்தேன். அவர் நாடி பிடித்துப் பார்த்தார். பின் பச்சை நிறமுள்ள ஒரு தைலத்தைக் குழந்தையின் கை கால்களில் உள்ளங்கைகளினால் தடவிச் சூடு பறக்கத் தேய்த்தார். ஏதோ ஒரு செந்தூரப் பொடியைத் தேனில் குழைத்துக் கொடுக்கும்படி சொன்னார்.

அவரை வாசல்வரை கொண்டு போய் விட்டு வழி அனுப்பியபின் ஒன்றும் தோன்றாமல் வாசற்படியிலேயே நின்றேன். தெருவில் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தேன். "சார்! குழந்தைக்கு இப்ப எப்படி இருக்கு? தேவலையா?" - குரல் கேட்டுத் திரும்பினேன். பக்கத்து வீட்டுக்காரர் தம்முடைய வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்தார்.

"எப்படி இருக்கு?"

"அப்படியே தான் இருக்கு! வைத்தியர் வந்து ஏதோ தைலத்தைத் தேய்த்தார். உள்ளுக்கும் மருந்து கொடுத்து விட்டுப் போயிருக்கிறார். குழந்தைக்கு இன்னும் பிரக்ஞைதான் வரவில்லை..."

"அடடா! என்ன கஷ்டம் உங்களுக்கு? ஒரு நாளாவது நீங்கள் நிம்மதியா இருக்க முடியறதில்லே. சனியன் பிடிச்ச வீடு குடி வந்த நாளிலிருந்து உங்களைப் பாடாய்ப் படுத்துகிறது..."

"நம்ம கஷ்டத்துக்கு வீடு என்ன செய்யும்?..."

"அதென்ன அப்படி அலட்சியமாகச் சொல்லிட்டீங்க! இதிலெல்லாம் உண்மை இருக்கு சார். நீங்க தப்பா எடுத்துக்காதீங்க. எனக்குத் தெரிஞ்சதை நான் சொல்றேன்."

அடுத்த வீட்டுக்காரர் நிறுத்துகிற வழியாகக் காணோம். நான் அவருடைய அனுபவத்தை மேலும் கேட்டுக் கொண்டிருக்கத் தயாராக இல்லை.

"நான் வரேன் சார்! உள்ளே காரியம் இருக்கு..."

"ஆமாம்! ஆமாம்! போய்ப் பக்கத்திலிருந்து குழந்தையைக் கவனியுங்கள். எதற்கும் நான் சொன்ன விஷயத்தைக் கொஞ்சம் யோசனை பண்ணிக்குங்க. வேறே வீடு..."

நான் உள்ளே வந்துவிட்டேன். நின்று கொண்டே இருந்தால் அவரும் பேசிக்கொண்டேதான் இருப்பார்.

"என்ன ராஜம்? குழந்தைக்கு எப்படி இருக்கு?"

"இருக்கு! உயிர் மட்டும் மிச்சம் இருக்கு... இந்தச் சனியன் பிடித்த வீட்டை நீங்க காலி பண்றதுக்குள்ளே அதுவும் என்றைக்காவது ஒரு நாள் போய்விடும்..."

"உன் பேச்சு உனக்கே நன்றாகயிருந்தால் சரி! தென்னை மரத்திலே தேள்கொட்டினால் பனை மரத்திலே நெறி பிடிக்கும் என்கிற கதையாக அல்லவா இருக்கிறது?"

"இந்தாருங்கள்! உங்களைப் போல உபமான, உபமேயங்கள் சொல்லி அழகாகப் பேச எனக்குப் படிப்பு போதாது. மனசிலே பட்டத்தைச் சொல்லத்தான் தெரியும்! இந்த வீட்டுக்கு வந்ததிலேயிருந்து எதுவுமே விளங்கவில்லை. குடும்பத்திலே ஒருத்தர் விடாமல் வியாதி பிடுங்கித் தின்னுகிறது. நிம்மதியே இல்லை. காலி பண்ணிவிட்டு வேறே எங்கேயாவது போனால்தான் பிழைக்கலாம். இவ்வளவுதான் எனக்குச் சொல்லத் தெரியும்..."

"சொல்லு! சொல்லு! உனக்கு வாய் அலுக்கிறவரை சொல்லிக் கொண்டே இரு. நான் கேட்டால்தானே? விட்டிலுக்குப் பயந்து விளக்கை அணைக்க என்னால் முடியாது! இப்போதைக்கு இந்த வீட்டைக் காலி செய்கிற நினைவே எனக்குக் கிடையாது."

விவாதத்தை மேலும் தொடரவிடாமல் அப்படியே நிறுத்தினேன். அவளும் பேச்சை நிறுத்திவிட்டாள். பத்துப் பன்னிரண்டு நாட்கள் ஆயிற்று. குழந்தை அந்த அவஸ்தையிலிருந்து ஒரு மாதிரிப் பிழைத்து எழுந்தது. அது ஒரு பயங்கரமான 'கண்டம்' என்று தான் சொல்ல வேண்டும். எப்படியோ ஆண்டவன் காப்பாற்றிவிட்டான். தங்கச் சிலைமாதிரி இருந்த குழந்தை விலா எலும்பு குத்திட்டுப் பார்க்க அருவருப்பான தோற்றத்தை அடைந்துவிட்டது.

வீட்டில் அவளுக்கும் எனக்கும் பேச்சு வார்த்தை இல்லை. உடனடியாக வேறு வீடு மாற்றியாக வேண்டுமென்பது அவள் கட்சி. மலையே புரண்டு வந்தாலும் சரி; 'இந்த மாதிரி ஒரு அசட்டு நம்பிக்கைக்காக வீடு மாற்ற முடியாது' என்பது என் கட்சி. அவள் கட்சிக்குச் சுற்றுப்புறத்திலும் அக்கம் பக்கத்தார்களிடமும் ஆதரவு அதிகம். என் கட்சிக்கு நான் மட்டும்தான் ஆதரவாளன்.

தன் சபதப்படியே குழந்தை பிழைத்தெழுந்ததும் 'அப்பாவுக்கு'க் கடிதம் எழுதிப் பிறந்த வீட்டுப் பிராயணத்துக்கும் ஏற்பாடு செய்துவிட்டாள் அவள். என் மாமனாரிடமிருந்து அவளையும் குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு போகப் புறப்பட்டு வருவதாக எனக்குக் கடிதமும் வந்து விட்டது. ஆனால் என் பிடிவாதத்தை நான் விட்டுக் கொடுக்க விரும்பவில்லை.

கடிதத்தை அவளிடம் கொடுத்துவிட்டு நான் கூறினேன்... "இங்கே பார் ராஜம்! ஒன்றுமில்லாத விஷயத்திற்காக வீண்கோபம் கோபித்துக் கொண்டு ஊருக்குப் போகிறாய்! கடைசியாகச் சொல்கிறேன். எனக்கும் ரோஸம் உண்டு. உன் முகத்தில்கூட விழிக்கமாட்டேன். அப்புறம், 'நாம் போன பின் நாளைக்கே இருப்புக் கொள்ளாமல் தவித்துப் போய் வேறு வீடு மாற்றி விட்டு உடனே நம்மை அழைத்துப் போக ஓடி

வருவார்' என்று கனவில்கூட நினைக்காதே! உனக்கு எவ்வளவு அகம்பாவமும் பிடிவாதமும் உண்டோ, அதைவிட ஒரு படி அதிகமாகவே எனக்கும் உண்டு. இவ்வளவுதான்! இதற்கு மேல் நான் ஒன்றும் சொல்வதற்கு இல்லை. புறப்படுவதற்கு முன் இன்னும் நன்றாக யோசித்துக்கொள்..."

அவள் பதிலே சொல்லவில்லை. கடிதத்தை வாங்கிக் கொண்டு பேசாமல் சமையலறைக்குள் போய்விட்டாள். நானும் பேசாமல் ஆபீஸுக்குப் போய் விட்டேன். 'வந்தது வரட்டும், எந்த விதத்திலும் அறிவுக்கோ, ஆராய்ச்சிக்கோ, காரண காரியங்களுக்கோ பொருந்தாத இந்த மூடநம்பிக்கைக்கு இடம் கொடுப்பதில்லை' என்று எனக்குள் உறுதி செய்து கொண்டேன்.

அன்று முதல்தேதி. சம்பளம் கிடைத்ததும் நேரே நண்பர் நாராயணன் வீட்டிற்குச் சென்று அவருக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்தேன்.

"என்ன சார்? நான் சொன்னதைக் கவனித்தீர்களா?" அவர் கேட்டார்.

"எதைச் சொல்லுகிறீர்கள்?"

"இந்த வீடு உங்களுக்கு ஆகிவரவில்லை; வேறு வீடு பாருங்கள் என்று முன்பே சொன்னேனே?

"நீங்கள் சொன்னீர்கள்! நான் இதை பெரிய காரணமாக நினைக்கவில்லை... 'வீடு' என்ன சார் செய்யும்?"

"சரி! உங்கள் இஷ்டம். இதற்கு மேல் நான் வற்புறுத்தமாட்டேன்."

படித்தவர், சிந்தனை ஆற்றலுள்ளவர், இவர்கூட ராஜத்தைப் போலவே அசட்டுத்தனமானதை எல்லாம் நம்புகிறாரே! என்று நாராயணனைப் பற்றி எண்ணிக் கொண்டே அவர் வீட்டிலிருந்து வெளியேறினேன் நான். நாராயணன், ராஜம், அடுத்த வீட்டு அனுபவஸ்தர், இவர்களைப் போலவே இன்னும் அநேகர் வீட்டை ஒரு காரணமாக என்னிடம் சுட்டிக் காட்டிப் பேசினார்கள். அவர்களிடம் எரிந்து விழுந்து காரசாரமாகப் பதில் கூறினேன். சிலரிடம் பெரிய பெரிய பிரசங்கங்களைப் போலக்கூட வெளுத்து வாங்கி விட்டேன். 'இது ஒரு முரடு; சுமுகமாகப் பேசத் தெரியவில்லை' என்று என்னைப் பற்றி அவர்கள் எண்ணிக் கொண்டால் எண்ணிக் கொள்ளட்டுமே! அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை.

அன்று காலை ராஜத்தின் தகப்பனார் அதாவது என் மாமனார் அவளை அழைத்துக் கொண்டு போக ஊரிலிருந்து வந்துவிட்டார். எனக்கும் அவளுக்கும் இடையே வீடு மாற்றல் காரணமாக மனஸ்தாபம்; அதனால்தான் ஊருக்குக் கிளம்புகிறாள் என்பதையெல்லாம் அறிந்து கொள்ளவிடாமல் சாமர்த்தியமாக ஏற்பாடு செய்திருந்தாள் அவள்.

"மாப்பிள்ளை! ராஜமும் குழந்தைகளும் இரண்டு மாசம் ஊரில் இருக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள். குழந்தைகளுக்கும் சீக்காய்க் கிடந்த உடம்பு தேறும். கூட்டிக் கொண்டு போகட்டுமா?"

இப்படி சுபாவமாக என்னிடம் கேட்டதிலிருந்தே இதை நான் புரிந்து கொண்டேன். "தாராளமாகக் கூட்டிக் கொண்டு போங்கள்" என்று சுபாவமாகவே பதிலும் சொல்லிவிட்டேன். காலையிலிருந்தே அப்பாவும் மகளுமாகப் பிரயாணத்திற்கு ஏற்பாடு செய்யத் தொடங்கிவிட்டார்கள். நான் அதை கவனித்தும் கவனிக்காதவன்போல் ஆபீஸுக்குக் கிளம்பிவிட்டேன். எனக்கு வேறு ஒரு வேதனையும் சேர்ந்திருந்தது. முதல்நாள் மாலையிலிருந்து குடலைப் புரட்டிப்புரட்டி எடுத்தது! வலி தாங்க முடியவில்லை. சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் 'விதியே' என்று சகித்துக் கொண்டிருந்தேன். குடலின் மெல்லிய தசையில் ஊசியை 'நறுக் நறுக்' கென்று குத்தி எடுப்பது போல வலித்தது.

வழக்கமாக என் வீட்டுக்கு வருகிற டாக்டரைத் தேடி ஓடினேன். நல்லவேளை! டாக்டர் 'டிஸ்பென்சரி'யில் தான் இருந்தார்.

நிலைமையை டாக்டரிடம் சொன்னேன்.

"புகையிலைப் பழக்கம் உண்டா?"

"உண்டு!"

"அடிக்கடி காப்பி சாப்பிடுவீர்களா?"

"ஆமாம்!"

"அப்படியானால் இது 'அல்ஸர்' (குடற்புண்) ஆகத்தான் இருக்க வேண்டும்."

"அல்ஸரா? நன்றாகப் பார்த்துச் சொல்லுங்கள் டாக்டர்!"

"சந்தேகம் எதற்கு? எக்ஸ்-ரே எடுத்தே பார்த்து விடுகிறேன்."

எக்ஸ்-ரே எடுக்கப்பட்டது.

"படம் நாளைத் தெரியும். நீங்கள் இப்போதைக்கு இந்த மருந்தைச் சாப்பிடுங்கள். வீட்டிற்குப் போய்ப் பூர்ண ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும். காரமாக எதையும் சாப்பிட வேண்டாம். சூடும் ஆகாது. உடம்பை அலட்டிக் கொள்ளாமல் படுக்கையில் படுத்திருங்கள்..."

டாக்டர் கொடுத்த மருந்தை வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டேன்.

"மிஸ்டர்... ஒரு நிமிஷம்! உங்களை ஒன்று கேட்கிறேன். தவறாக நினைக்க மாட்டீர்களே?" புறப்படும்போது டாக்டர் என்னைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டு இப்படிக் கேட்டார்.

"என்ன டாக்டர்?"

"ஒன்றுமில்லை! இந்த வீட்டிற்குக் குடி வந்ததிலிருந்து உமக்கோ, குழந்தைக்கோ, மனைவிக்கோ, ஏதாவது வந்து கொண்டே இருக்கிறதே? வீட்டில் ஏதாவது 'தோஷம்' உண்டோ?"

"என்ன டாக்டர்! நீங்கள் கூடவா இதை எல்லாம் நம்புகிறீர்கள்? மனுஷனுக்கு உடம்புக்கு வந்தால் அதற்கு வீடா பழி?"

"எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை எப்போதுமே உண்டு! உடனே வேறு வீடு மாற்றிவிடுமே ஐயா! அதில் உமக்கென்ன கஷ்டம்?"

"பார்க்கிறேன் டாக்டர்..."

"பாரும்! அதுதான் நல்லது. எனக்கு அன்றே உம்மைக் கேட்க ஆசை. நீர் இங்கே வந்து முழுசா அரைவருஷம் ஆகலே! அதற்குள் நோய் அதிகமானால் எனக்கு லாபம்தான். அதுக்காக..." டாக்டர் சிரித்துக்கொண்டார்.

நான் வீட்டுக்கு வந்தேன். சுருட்டிப் போர்த்துக்கொண்டு படுக்கையில் படுத்துவிட்டேன். குடல் வலி, வாயைத் திறந்து அலறவேண்டும் போல் தோன்றியது. பொறுத்துக்கொண்டேன். ராஜத்தின் பிரயாணம் தடைப்பட்டு விட்டது. அவள் எனக்கு என்னவோ, ஏதோ என்று பதறிவிட்டாள். மாமனாரும் அதே நிலையை அடைந்தார். விடிய விடிய என் அருகே தூக்கம் விழித்து உட்கார்ந்து கொண்டிருந்தாள். ஆனால் ஒரு தரமாவது வீடு மாற்றும் பேச்சை எடுக்கவில்லை. மாமனார்தான் இரண்டு மூன்று தடவை சொல்லிவிட்டார்.

"மாப்பிள்ளை ஸார்! முதலில் இந்த நாசமாய்ப்போகிற வீட்டைக் காலி பண்ணிவிட்டு மறுவேலை பாருங்கள். வந்ததிலிருந்து ஒருவருக்காவது சுகம் கிடையாது" என்று திரும்பத் திரும்பச் சொன்னார்.

என் வியாதியை நாலைந்து நாளில் குணப்படுத்திவிட்டார் டாக்டர். இதையெல்லாம் விடப் பெரிய ஆச்சரியம் அந்த ஐந்து நாட்களில் மறந்தும்கூட ராஜம் வீட்டைப் பற்றி ஒரு வார்த்தை பேசவில்லை. என் பிடிவாதம் தான் கரைந்து போயிருந்தது. பொய்யோ, மெய்யோ, இந்த வீடு நமக்கு இனி ஒத்து வராது என்கிற மாதிரி ஒருணர்வு எனக்குள் மெல்லக் கிளை விட்டுப் படர்ந்து கொண்டிருந்தது!

அப்போது சாயங்காலமாகியிருந்தது. முதல்நாள் மாமனார் ஊருக்குப் போய்விட்டார்.

"ராஜம்! புறப்படுகிறாயா? போகலாம்!"

"எங்கே? நான் எதற்காக வரவேண்டும்?"

"அடுத்த தெருவில் நல்ல வீடு ஒன்று வாடகைக்குக் காலியாக இருக்கிறதாம்..."

"என்ன! பேசுகிறது நீங்கள்தானா? என்னால் என் காதுகளையே நம்ப முடியவில்லையே?"

"கேலி பண்ணாதே! நேரமாகிறது, புறப்படு ராஜம்."

"வீடு என்ன செய்யும்? இதெல்லாம் சுத்த அசட்டுத்தனம்!"

"இன்னும் கேலி பண்ணினால் எனக்குக் கோபம் வரும்!" நான் அதட்டினேன். அவள் புடவை மாற்றிக் கொண்டு கிளம்பினாள். எல்லாம் உடனடியாகவே முடிந்து விட்டன. அன்றே புது வீட்டுக்கு 'அட்வான்ஸ்' கொடுத்துவிட்டுத்தான் திரும்பினோம்.

**(கலாவல்லி, மார்ச், 1957)**

# 9. நல்லதோர் வீணை செய்து

**கா**லையில் பிடித்த மழை, கொஞ்சமாவது நிற்க வேண்டுமே? இல்லை. கொட்டித் தீர்த்துவிடுவேன் என்பது போல் விடாமல் பெய்து கொண்டிருந்தது. தார் பூசிய சுவர்போல் வானம் மேகங்களால் இருண்டு கிடந்தது. மலைக்குளிர் வேறு சேர்ந்து கொண்டால் கேட்கவா வேண்டும்?

"ஏன் இங்கு வந்து மாட்டிக் கொண்டோம்?" என்று ஆகிவிட்டது எனக்கு. தேயிலை எஸ்டேட்டின் நடுவில் இடிந்த அந்தச் சின்னஞ்சிறிய தகரக் கொட்டகை இருந்தது. அதில் ஒழுகிய இடம் போக மிஞ்சிய ஒரே ஒரு மூலையில் நானும் டிரைவரும் ஒண்டிக் கொண்டு நின்றோம்.

உடுமலைப் பேட்டையிலிருந்து தீர்த்தங்கரர் பாறையையும் திருமூர்த்தி மலையையும் பார்த்துப் போகலாமென்று ஜீப்பில் புறப்பட்டிருந்தோம். நானும் டிரைவருமாக இரண்டே இரண்டு பேர்தான். திருமூர்த்தி மலையைப் பார்த்து முடிந்ததும் மலையில் தேயிலைத் தோட்டங்கள் இருக்கும் பகுதிகளை சென்று பார்க்க வேண்டும் என்று எனக்கு ஒரு ஆசை உண்டாயிற்று. என் விருப்பத்தை டிரைவரிடம் கூறினேன்.

"மூணாறு போகிற ரோட்டிலே அதிக தூரம் போனால்தான் எஸ்டேட்டுகளைப் பார்க்க முடியும்! இப்பொழுதே மழை தூறுகிறது. பெரிசாகப் பிடித்துவிட்டால் அங்கே போய்த் திரும்புவது கஷ்டமாச்சே?" என்று பதில் சொன்னான் அவன்.

"பரவாயில்லை அப்பா! போய்விட்டுத்தான் வருவோமே. இதற்கென்று தனியாக இன்னொரு நாளா புறப்பட்டு வரப் போகிறோம்? மழை இலேசாகத்தான் தூறுகிறது" என்றேன் பிடிவாதமாக.

"சரி, நீங்கள் ரொம்பச் சொல்றீங்க. எப்படி மாட்டேன்கிறது?" என்று அரைகுறை மனத்தோடு புறப்பட்டான் அவன்.

அந்த டிரைவருக்கு ஜோசியம் தெரியுமோ என்னவோ? இப்போது அவன் சொன்னது உண்மையாகிவிட்டது. எங்கள் ஜீப் எஸ்டேட்டுகள் இருக்கும் மலைப்பகுதியை அடைந்தபோதே மழை பலமாகப் பிடித்துக் கொண்டுவிட்டது. அப்போது காலை பதினொரு மணிக்குமேல் இருக்கும். ஜீப்பை நிறுத்திவிட்டு அந்தத் தகரக் கொட்டகையில் ஒண்டினோம். மழை நிற்கவே இல்லை. மாலை ஆறேகால் மணி ஆகிவிட்டது. என் மணிக்கட்டில் கடிகாரமும், காலடியில் ஒழுகின மழைத் தண்ணீரும் வஞ்சகமின்றி ஓடிக் கொண்டிருந்தன.

டிரைவர் என்னை விழித்து விழித்துப் பார்த்தான். வாயால் சொல்லிக் காட்ட முடியாததைக் கண்களால் நிறைவேற்றிக் கொண்டிருந்தான் அவன். யானை தன் தலையிலேயே மண்ணை வாரிப் போட்டுக் கொண்ட மாதிரி ஆகிவிட்டது என் நிலை.

"இது என்னாப்பா சனியன் பிடித்த மழை? பிரளயத்துக்கு வர்ஷிக்கிறது போலப் பொழிந்து தள்ளுகிறதே! என்ன வந்தாலும் சரியென்று இப்படியே ஜீப்பை ஓட்டிக் கொண்டு கிளம்பிவிட்டால் என்ன?"

"நடக்கிற காரியமாப் பேசுங்க. இந்த மழையிலே ஜீப் நின்ற இடத்திலேயிருந்து ஒரு அங்குலம்கூட நகராது. மலை ஓடைகளிலே தண்ணீர் கரை நிமிர ஓடிக் கொண்டிருக்கும். ரோடு தண்ணீர் அரித்து மேடும் பள்ளமும், சேறும் சகதியுமாக இருக்கும். இந்த நிலையிலே இனிமேல் ஒன்றும் செய்வதற்கில்லை."

"என்னப்பா! பெரிய குண்டாகத் தூக்கிப் போடுகிறாயே, பசியும் பட்டினியுமாக இரவு முழுவதும் இந்த நட்ட நடுக்காட்டில் ஓட்டைத் தகரக் கொட்டகையிலா தங்கியிருக்க வேண்டும்? இது துஷ்ட மிருகங்கள் பழகுகிற இடமாயிற்றே?"

"நான் சொன்னேனே, நீங்கள் கேட்டீர்களா? போய்த்தான் ஆகவேண்டுமென்று ஒன்றைக் காலிலே நின்றீர்கள். புறப்பட்டு வந்தாயிற்று. இனிமேல் வருவதை அனுபவிக்க வேண்டியதுதான்..."

அவன் தன் ஆத்திரத்தைப் பேசித் தீர்த்துக் கொண்டான்.

நான் தகரக் கொட்டகை வாசலில் வந்து பார்த்தேன். கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஒரே இருளின் ஆட்சி. தங்களுக்கும் இருளுக்கும் அதிக வேறுபாடின்றித் தொலைவில் கருநீல மலைச்சிகரங்கள் இருளோடு இருளாக ஐக்கியப்பட்டிருந்தன. மலைப்பகுதியில் சாதாரணமாகவே ஐந்து ஐந்தரை மணிக்கே இருண்டுவிடும். மழை மூட்டத்தினால் அப்போது மணி ஏழுகூட ஆகாமலிருந்தும் இருள் கனத்துப் போயிருந்தது. ஜீப்பின் அருகே நெருங்கிப் பார்த்தேன். உட்காருகிற ஸீட்டுகள் உட்பட எல்லாம் சொட்ட நனைந்து போயிருந்தன.

ஜீப்பின் முன்புறத்து ஸீட்டை உற்றுப் பார்த்தவன் சட்டென்று திடுக்கிட்டுப் போய், நாலடி பின்னுக்கு நகர்ந்தேன். பயம் மனத்தைக் கவ்வியது. மயிர்க்கால்கள் மேலே எழும்பிக் குத்திட்டன.

"ஏய் டிரைவர்! இங்கே வா, அந்த டார்ச் லைட்டை இப்படிக் கொண்டா, இது என்னவென்று பார்ப்போம்!" என் குரல் நடுக்கத்தினால் மிரண்டு குழறிப் போயிற்று.

"என்னது? என்ன, அங்கே? இதோ வந்துவிட்டேன்!" டிரைவர் ஓடிவந்தான். நடுங்கும் கைகளால் அவனிடமிருந்த டார்ச்சை வாங்கினேன்.

ஸ்விட்சை அமுக்கக் கைவிரல் தயங்கியது. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அமுக்கினேன். 'டார்ச்' ஒளி வட்ட வடிவமாக முன் சீட்டில் விழுந்து பரவியது.

அப்பாடா நல்லவேளை! நான் நினைத்துப் பயந்தது போல எந்தத் துஷ்ட மிருகமும் வண்டிக்குள் ஏறிப் படுத்திருக்கவில்லை. மனித உருவம்தான் முகம்

தெரியாமல் இழுத்துப் போர்த்து வெள்ளைப் போர்வையால் மூடிக் கொண்டு மழைக்கு அடக்கமாக ஜீப்பின் முன் ஸீட்டில் சுருண்டு முடங்கியிருந்தது. அதைப் பார்த்த பிறகுதான் எனக்கு நிதானமாக மூச்சு வந்தது. படுத்துக்கிடந்த விதத்தைப் பார்த்தால் கைகளில் வேறு ஏதோ ஒரு பையையோ, மூட்டையையோ, அணைத்துக் கொண்டிருந்த மாதிரியும் இருந்தது.

“இந்தா ஐயா! எழுந்திரு. ரோட்டிலே ஏதாவது வண்டி நின்று கொண்டிருந்தால் யாருடையதென்று கேட்காமல் நீ பாட்டுக்கு ஏறிப் படுக்கலாமா? எழுந்திரு ஐயா, எழுந்திரு!” வெள்ளைப் போர்வையின்மேல் ஓங்கி ஒரு தட்டுத் தட்டினார் டிரைவர்.

குபீரென்று வாரிச் சுருட்டிக் கொண்டு ஒரு இளம் பெண் எழுந்திருந்தாள். அவள் கையில் ஒரு குழந்தை. எங்கள் இருவருக்குமே ஆச்சரியம் நிலை கொள்ளவில்லை. எவனாவது ஒரு எஸ்டேட் கூலி குளிருக்கு அடக்கமாக முடங்கியிருப்பான் என்றுதான் நாங்கள் எதிர்பார்த்தோம்.

அந்த நேரத்தில் அந்த மலைக்காட்டில் இப்படி ஒரு நிகழ்ச்சியை யார்தான் எதிர்பார்க்க முடியும்? பதறி நடுங்கிக் கொண்டே குழந்தையும் கையுமாகக் கீழே இறங்கி நின்றாள் அவள். குளிரில் உதறும் மணிப்புறாவின் அழகிய மென்மையான சிறகுகளைப் போல அவள் பூவுடல் நடுங்கியது.

மழை குறைந்து மெல்லிய சாரலாக விழுந்து கொண்டிருந்தது. கல்யாண வீட்டில் பன்னீர் தெளிக்கிறமாதிரி, எதிர்பாராத நிகழ்ச்சியால் எதைப் பேசுவது, முதலில் யார் பேசுவது, எப்படிப் பேசுவது என்று எதுவும் தோன்றாமல் மூன்று பேரும் நனைந்து கொண்டே சில விநாடிகளாவது நின்றிருப்போம்.

திடீரென்று வெளிக்காற்றும் மழைத் துளியும் பட்டு உறைக்கவே குழந்தை வீறிட்டு அழ ஆரம்பித்துவிட்டது. டிரைவர் குனிந்த தலை நிமிர்வேயில்லை. நான் சமாளித்துக் கொண்டேன். குழந்தையின் அழுகை எனக்கு நிதானத்தைக் கொடுத்துவிட்டது.

டார்ச் ஒளியை அவள் முகத்துக்கு நேரே பாய்ச்சினேன். அழகிய முகம். கோவிலிலுள்ள அம்மன் சிலைபோல் அவள் அழகு ஒருவிதமான பயத்தையும் உண்டாக்கியது. மஞ்சள் கொன்றை நிறம். மிரண்டு பாயும் விழிகள். தந்தத்தில் செதுக்கினாற்போன்ற நாசி. வட்ட முகத்தில் சுருள்சுருளாகக் கேசம் புரளும் நெற்றி. இயற்கையாகவே சிவந்த ரோஜா இதழ்கள். விளக்கொளியில் நான் அவளையே பார்ப்பதைக் கண்டு அவள் தலையைச் சாய்த்தாள். விழிகள் தரையை நோக்கின. குழந்தையும் அழகாகத்தான் இருந்தது. கழுத்துவரை போர்த்தியிருந்தாள். இருட்டில் ‘டார்ச்சின்’ சிறிய ஒளியில் முகத்தோற்றத்தை மட்டுமே கொண்டு அது ஆண் குழந்தையா, பெண் குழந்தையா என்று அனுமானிக்க இயலவில்லை.

“மழையில் நனைந்துகொண்டே நிற்கிறாயே, குழந்தைக்கு மழைத் தண்ணீர் ஆகாது. இதோ இப்படி இந்தத் தகரக் கொட்டகைக்கு வா...” நான் தயங்கித் தயங்கித்தான் வார்த்தைகளை வெளியிட்டேன்.

"இல்லை, ஐயா! உங்கள் காரில் படுத்துக் கொண்டதற்கு என்னை மன்னித்துவிடுங்கள். நான் மட்டுமானால் எப்படியாவது நனைந்து கொண்டே போயிருப்பேன். குழந்தைக்காகத்தான் காரில் ஏறி முடங்கினேன். இப்போது மழை குறைந்துவிட்டது. நான் போய்விடுகிறேன்." குரல் அழகுக்கேற்ற இனிமை நிறைந்துதான் இருந்தது.

"இரு அம்மா இரு! நீ யார்? எங்கிருந்து வந்தாய்? எங்கே போகிறாய்? இந்த மலைக்காட்டில் மழை இருட்டில் எப்படிப் போவாய்? தனி ஆளாகச் சின்னஞ்சிறு குழந்தையையும் எடுத்துக் கொண்டு இந்த மழை நேரத்தில் கிளம்பியதே தவறு. யானையும், புலியும் சர்வசாதாரணமாக நடமாடுகிற இந்தப் பிரதேசத்தில், ஒரு சிறு வயசுப் பெண் பச்சைக் குழந்தையோடு தனியே போவதற்குத் துணிந்தால் என் மனம் அதை ஒப்புக்கொள்ள மாட்டேனென்கிறதே?"

"ஐயா! நீங்கள் கேட்பதையேதான் நானும் என் மனதைக் கேட்கிறேன். 'எங்கிருந்து வந்தேன்? எங்கே போகிறேன்? எதற்காகப் போகிறேன்? ஏன் தனியாகப் போகிறேன்?' பதில்தான் தெரியவில்லை."

"அம்மா! உன்னைக் கண்டால் ஏதோ மனக் கஷ்டமடைந்து வீட்டுக்காரரோடு மனஸ்தாபப்பட்டுக் கொண்டு வந்ததுபோல் தோன்றுகிறது. என்னையும் இந்த டிரைவரையும் உன்னுடைய சகோதரர்களாக நினைத்துக் கொண்டு உன்னைப் பற்றிய விவரங்களைச் சொல்... எங்களால் உனக்கு ஏதாவது உதவி செய்ய முடியுமானால் மகிழ்ச்சியோடு செய்ய சித்தமாயிருக்கிறோம். வா அம்மா... மழையில் நனைந்து கொண்டு நிற்காதே. உள்ளே போய்ப் பேசுவோம். தகரக் கொட்டகையில் மழை ஜலம் ஒழுகினாலும் உள்ளே மூன்று பேர்கள் உட்காரலாம்."

அந்தப் பெண் ஒரு கணம் எங்கள் இருவரையும் உற்றுப் பார்த்தாள். பார்வையா அது? மனத்தின் ஆழத்தை முகத்திலிருந்து ஊடுருவித் தெரிந்து கொள்ள முயலும் தூண்டில்! எங்கள் நாணயத்தைக் கண்களாலேயே பரிசோதிக்கிறாள் போலிருந்தது.

"ஐயா! உங்கள் இருவருக்கும் மிக நன்றி. என்னிடம் உங்களுக்குச் சொல்லுகிறாற்போல பெரிய விஷயம் ஒன்றுமில்லையே? உங்கள் கருணைக்கும் அநுதாபத்துக்கும் நானும் இந்தக் குழந்தையும் தகுதியற்றவர்கள். தயவுசெய்து என்னை நான் போக வேண்டிய வழியில் போவதற்கு அனுமதியுங்கள்..."

தொலைவில் யானைகள் பிளிறும் ஒலி பயங்கரமான இருளில் எதிரொலித்தது. காற்றில் மரங்கள் பேய் பிடித்து ஆடுபவை போல் ஆடிக் கொண்டிருந்தன. இலேசாகத் தூறிக் கொண்டிருந்த சாரலும் நின்றுவிட்டது. மழையின் பங்கையும் சேர்த்துக்கொண்டு காற்று விசுவரூபம் எடுத்திருந்தது. மரக்கிளைகள் உரசும் 'மர்மர' சத்தமும், காட்டுமிருகங்களின் ஓலமுமாகச் செவிகள் அதிர்ந்தன. குழந்தையும் அழுகையை நிறுத்தவில்லை. அந்தப் பெண்ணும் இடத்தை விட்டு நகரவில்லை.

"சொன்னால் கேள், அம்மா! நீ அவசரமாகப் போக வேண்டுமானால் ஜீப்பிலே கொண்டு போய் விடுகிறோம். தனியாக இந்த மலைப்பாதையில் இப்படிப்பட்ட

வேளையில் குழந்தையோடு நடந்து போகக்கூடாது. வழியில் எவ்வளவோ அபாயங்கள் நிறைந்திருக்கின்றன..."

அந்தப் பெண் இரைந்து சிரித்தாள். கலகலவென்று வெளிப்பட்டது சிரிப்பு. ஆனால் அதில் ஏதோ உட்பொருளும் கலந்திருந்தது.

"போக வேண்டிய இடம்...? நான் இனிமேல் போக வேண்டிய இடம்தானே? அதை... அதை நீங்களா கேட்கிறீர்கள்? அது உங்களுக்குத் தெரியத்தான் வேண்டுமா? வீணாக என்னை ஏன் இப்படி இங்கே நிறுத்தி வைத்துக்கொண்டு கஷ்டப்படுத்துகிறீர்கள்?"

"ஜீப்பிலேயே கொண்டுபோய் விட்டுவிடலாமே என்றுதான் கேட்டோம். வேறு ஒன்றுமில்லை!"

"ஐயா! நான் போகிற இடத்துக்கு ஜீப்பில்தான் போகவேண்டும் என்ற அவசியமில்லையே! நடந்தும் போகலாம்; நடக்காமலும் போகலாம். ஓடியும் போகலாம், ஓடாமலும் போகலாம், இருந்த இடத்திலிருந்தேகூடப் போக முடியுமே அந்த இடத்துக்கு?"

"அம்மா நீ ஏதோ மனவியாகூலத்தில் பேசுகிறாய். உள்ளதை உள்ளபடி எங்களிடம் சொன்னால் தேவலை."

"நான் எங்கேயோ எப்படியோ தொலைந்து போகிறேன்; நீங்கள் யார் அதைக் கேட்க?" என்றாள் வெறிபிடித்தவள் போல.

"முடியாது! இப்போது உன்னை விட்டுவிட்டால் நீ ஏதாவது ஏடாகூடமாகச் செய்து கொள்வாய். எனக்குத் தெரிந்து இரண்டு உயிர்கள் போவதை நான் சிறிதும் விரும்பவில்லை.

"........"

அவள் பதில் சொல்லவில்லை. பேசாமல் தரையைப் பார்த்துக் கொண்டு நின்றாள். டிரைவர் ஜீப் அருகில் போய் அதைச் சரி பார்த்துக்கொண்டிருந்தான். கார் இயந்திரங்கள் மழையால் கெட்டுவிட்டதா, இல்லையா? அப்போதே அதில் புறப்பட முடியுமா? என்று அவனுக்குக் கவலை!

இந்த நிலையில் திடீரென்று பாதையின் தென் பகுதியிலிருந்து ஒரு பெரிய லாரி வேகமாக வருவது தெரிந்தது. அதன் 'ஹெட்லைட்' வெளிச்சம் எங்களைக் கவர்ந்தது. மூன்று பேர்களுமே அதனால் கவரப்பட்டுத் தெற்குப் பக்கம் திரும்பினோம்.

"ஐயோ! அவர்தான் போலிருக்கிறது. அடபாவிகளா நானாகச் சாவது பொறுக்காமல் நீங்கள் வேறு துரத்திக் கொண்டு வந்துவிட்டீர்களா?" அந்தப் பெண் அலறினாள். நானும் டிரைவரும் அவள் கூறியவற்றைக் கேட்டுத் திடுக்கிட்டு அவள் பக்கம் திரும்பினோம்.

"ஐயா! காப்பாற்றுங்கள் ஐயா! என்னையும் என் குழந்தையையும் கொல்ல வருகிறார்கள். உங்களைக் கெஞ்சிக் கேட்கிறேன். முன் போலவே நானும் குழந்தையும்

துணியால் போர்த்திக் கொண்டு உங்கள் ஜீப்பின் முன்பக்கத்து ஸீட்டில் முடங்கிக் கொள்கிறோம்'' என்றாள்.

எனக்கு அவளுடைய பயத்துக்கும் பதற்றத்துக்கும் அர்த்தமே தெரியவில்லை. வியப்புத்தான் வளர்ந்தது. - இரக்கமாகவும் இருந்தது.

"சரி! ஏறிக்கொள். நன்றாகப் போர்த்திக் கொள். குழந்தை அழுது காட்டிக் கொடுத்துவிடப் போகிறது. ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தேன்.

அவள் அவசரம் அவசரமாக ஜீப்பில் ஏறி முன் போலவே துணியால் போர்த்தி விட்டு முடங்கிக்கொண்டாள். ஜீப்புக்குள் டிரைவர் கொண்டு வந்திருந்த 'கித்தான்' ஒன்று இருந்தது. வருகிறவர்கள் சந்தேகம் கொள்ளாமல் இருப்பதற்காகத் துணிக்கு மேல் அந்தக் கித்தானையும் போட்டு மூடி வைத்தேன். மந்திரத்துக்குக் கட்டுப்பட்டதுபோல் குழந்தையும் அழுகையை நிறுத்தி அடங்கிவிட்டது. எப்படித்தான் அதன் அழுகையை அவள் நிறுத்தினாளோ, தெரியவில்லை!

அசுர வேகத்தில் மலை ரஸ்தாவே அதிரும்படி பாய்ந்து வந்தது அந்த லாரி. இருளில் வரும் இரண்டு பெரிய கொள்ளிவாய்ப் பிசாசுகளைப்போல லாரியின் முன் விளக்குகளின் வெளிச்சம் விநாடிக்கு விநாடி நாங்கள் இருந்த இடத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

லாரிக்குள்ளிருந்து வந்த ஆட்களின் பேச்சுக் குரலிலிருந்து குறைந்தது ஏழெட்டுப் பேர்வழிகளாவது அதில் இருக்கலாம் என்று தோன்றியது.

சொல்லி வைத்தாற்போல எங்கள் ஜீப்புக்கு அருகில் வந்ததும் லொடலொடத்து ஓடும் தன் 'புலன்களை' அடக்கிக் கொண்டு டக் கென்று நின்றது அந்த லாரி. டிரைவர் உட்பட ஏழெட்டு முரட்டு ஆட்கள் அதிலிருந்து கீழே குதித்து எங்களை நோக்கித் திடுதிடுமென்று ஓட்டமும் நடையுமாக வந்தனர். வந்தவர்களில் இரண்டுபேர்கள் துப்பாக்கி வைத்திருந்தார்கள். வேட்டையாடுகிறவர்கள் உபயோகிக்கிற பெரிய துப்பாக்கிகள் அவை.

"இந்தப் பக்கமாகக் குழந்தையோடு ஒரு பெண் வந்தாளே! நீங்கள் பார்த்தீர்களா? வெள்ளைப் புடவை கட்டிக் கொண்டிருப்பாள். இருபது இருபத்தெட்டு வயசிருக்கும்.'' அந்த லாரி டிரைவர் என்னிடம் கேட்டான்.

"இல்லையே! நாங்கள் சும்மா எஸ்டேட்டுகளைச் சுற்றிப் பார்க்க வந்தோம். எப்போதோ திரும்பிப் போயிருக்க வேண்டியவர்கள். மழை பலமாய்ப் பிடித்துக் கொண்டுவிட்டதனால் ஜீப்பை இப்படி நிறுத்திவிட்டு இந்தத் தகரக் கொட்டகையில் நின்றுகொண்டிருந்தோம். இப்போதுதான் மழை நின்றதும் வெளியே வந்தோம்.'' நான் மனத்தைச் சமாளித்துக் கொண்டு பதறாமல் நிதானமாக இப்படி ஒரு பொய்யைச் சொன்னேன்.

ஆனால் அடுத்த கணமே என் பொய் வெளுக்கும்படியாக ஒரு துரதிர்ஷ்டம் அங்கே நடந்துவிட்டது. கித்தானையும் வெள்ளைத் துணிப் போர்வையையும் மீறிக்

கொண்டு குழந்தை முனகி அழுகின்ற சத்தம் மெல்லக் கிளம்பிற்று. உடனே எனக்குப் பகீரென்றது.

“அங்கென்ன? ஜீப்புக்கள் குழந்தை முனகுகிற சப்தம் கேட்கிறதே?” என்று கேட்டுக் கொண்டே அந்த லாரி டிரைவரும் அவனோடு வந்த முரட்டு ஆட்களும் பின் ஸீட்டை நோக்கிப் பாய்ந்தனர்.

எனக்குச் சர்வநாடியும் ஒடுங்கிவிட்டது. இந்த நெருக்கடியான சமயத்தில் என்னைக் காப்பாற்ற முன் வந்தான் டிரைவர். அவர்களுக்கு முன்னாலே பாய்ந்து அவர்களைத் தடுத்து நிறுத்தி, “ஐயா சம்சாரம் படுத்திருக்கிறாங்க. சுற்றிப் பார்க்க வந்த இடத்திலே குழந்தைக்குக் குளிர் ஜுரம், கூதலடிக்காமலிருக்கக் கித்தானைப் போர்த்திப் படுத்திருக்காங்க. குழந்தை ஜுரத்தைப் பொறுக்கமாட்டாமல் முனகுது” என்று என்னைச் சுட்டிக் காட்டினான். எனக்கும் தன் தந்திரத்தைக் கண் ஜாடையினாலே தெரிவித்தான்.

“சரி, நீங்க சொன்னால் போதும். எங்க ஆத்திரம் நாங்கள் தேடி அலையறோம். பாவிப் பெண், ஒரு தோட்ட முதலாளியைக் கத்தியாலே குத்தி விட்டு ஓடி வந்துவிட்டாள். அதுதான் அப்போதிலிருந்து லாரியை எடுத்துக் கொண்டு தேடி அலைகிறோம்” என்று கூறிவிட்டு அவர்கள் திரும்பிப் போய் லாரியில் ஏறிக் கொண்டனர். லாரி புறப்பட்டது. அந்த லாரி டிரைவர் போகிற போக்கில் கூறிவிட்டுப் போன செய்தியைக் கேட்டவுடன் எங்கள் இருவருக்கும் தூக்கிவாரிப் போட்டது. அப்படியே உச்சந்தலை படீரென்று வெடித்துவிடும் போலிருந்தது.

அதற்குள் போர்வையைப் பற்றிக் கொண்டு குழந்தையோடு இறங்கிய அவளிடம், “என்னம்மா, இது? அவங்க சொல்லிவிட்டுப் போகிறது நிஜம்தானா?...” என்று திகைப்புடன் கேட்டேன்.

“நிஜம்தான்... சந்தர்ப்பம் என்னை அப்படிச் செய்ய வைத்துவிட்டது!”

“என்ன? ஒரு ஆளைக் குத்திக் கொலை செய்துவிட்டா ஓடி வருகிறாய்?”

“ஐயா! நீங்கள் சகோதரிகளோடு பிறந்த மனிதர் என்றே நினைக்கிறேன். இல்லாவிட்டால் சற்றுமுன் நீங்கள் கூறியதுபோல் உங்கள் சகோதரியாக நினைத்துக் கொண்டு நான் சொல்லப் போவதை நம்பிக்கையோடு கேளுங்கள். கேட்டபின்பாவது நான் என் நிலையில் அப்படிச் செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்!” என்றாள் அவள்.

“டிரைவர்! சீக்கிரமாக ரிப்பேரை முடி... ஊரார் வம்பெல்லாம் நமக்கு எதற்கு? யார் கதையையும் நாம் கேட்க வேண்டாம். நீ வண்டியைக் கிளப்புவதற்கு வழி செய்! ஊருக்குப் போகலாம்...” அந்தப் பெண்ணிடம் ஒருவிதமான வெறுப்பும் அருவருப்பும் திடீரென்று எனக்கு ஏற்பட்டன.

என்னுடைய இந்தத் திடீர் மாற்றத்தை அவள் புரிந்து கொண்டாளோ, இல்லையோ? பேசுவதை நிறுத்திவிட்டாள். டிரைவர் வண்டிக்கு அடியில் படுத்து

டார்ச் விளக்கின் உதவி கொண்டு ரிப்பேர் வேலையைச் செய்ய ஆரம்பித்துவிட்டான். நான் கீழே உட்கார்ந்துகொண்டே அவனுக்கு ரிப்பேரில் ஒத்தாசை செய்து கொண்டிருந்தேன்.

குழந்தையின் அழுகை ஒலி கேட்கவில்லை. அழுது அழுது அவள் தோளில் சாய்ந்தபடி தூங்கிவிட்டது போலிருக்கிறது.

கால்மணி நேரம் வெகு மும்முரமாக ரிப்பேர் வேலையில் ஈடுபட்டிருந்தோம். கீழேயிருந்து எழுந்து தலை நிமிர்ந்தேன். அப்போது அவள் நின்று கொண்டிருந்த இடம் சூனியமாக இருந்தது. 'சரிதான்! எங்கோ புறப்பட்டுப் போய்விட்டாள் போலிருக்கிறது. சனி விட்டது; நிம்மதியாக ஊருக்குப் போகலாம்' என்று எண்ணி மனத்தைத் திருப்திப்படுத்திக்கொள்ள முயன்றேன் நான்.

டிரைவர் வண்டிக்கு அடியிலிருந்து டார்ச் லைட்டும் கையுமாக எழுந்திருந்தான். "நீ வண்டியைக் கிளப்புகிற வழியைப் பாரு" என்று அவனிடம் கூறிவிட்டு, சாயந்துகொள்ள வசதியாக இருக்குமே என்று பின் ஸீட்டுப்பக்கம் போனேன். ஸீட்டில் ஏறுவதற்குக் காலை எடுத்து வைத்தவன் பதறிப் போய்க் கீழே இறங்கினேன்.

"அந்த டார்ச்சை இப்படிக் கொடு!" என்று கேட்டு வாங்கிய நான் பின் ஸீட்டில் 'டார்ச்' ஒளியைப் பரவவிட்டேன். அங்கே வெள்ளைத் துணியில் போர்த்தி முகம் மட்டும் தெரியும் படியாக அந்தக் குழந்தை விடப்பட்டிருந்தது. குழந்தை நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

"அடாடா! குழந்தையை நம் தலையிலே கட்டிவிட்டுப் போய்விட்டாள் போலிருக்கே?"

"தலை எழுத்து அப்பா! தலையெழுத்து. இன்றைக்கு திருமூர்த்தி மலைக்குப் புறப்பட்டு வந்ததை ஏழேழு ஜன்மத்துக்கும் மறக்கமாட்டேன்..."

டார்ச் ஒளியில் அந்தக் குழந்தையின் முகத்தைப் பார்த்தேன். மலர்ந்து விகசித்த தாமரைப் புஷ்பம்போல் தங்க நிறத்தில் அந்தப் பச்சிளம் சிசு நிர்மலமானதாகக் காட்சியளித்தது. துணியை இலேசாக விலக்கிப் பார்த்தேன். அது பெண் குழந்தை. ஒரு வயதுக்கு மேலிருக்கும். குழந்தை என்றால் வெறும் குழந்தையா? அந்த மாதிரி அழகு நிறைந்த குழந்தையை ஆயிரத்தில் ஒன்று, பத்தாயிரத்தில் ஒன்றாகத்தான் காண முடியும்.

குழந்தையை மறுபடியும் போர்த்திவிட்டேன். அது தூக்கத்தில் புரண்டு படுத்தது. சிரிப்புக் கொஞ்சும் அந்தப் பிஞ்சு இதழ்கள் எந்தக் கல் மனத்தையும் இளக்கிவிடும்.

"டிரைவர்! உட்காரு... கொஞ்ச நேரம் காத்திருந்து பார்ப்போம். வரவில்லையானால் பின்பு குழந்தையையும் கொண்டு போக வேண்டியதுதான்."

நேரம் கடந்து கொண்டே இருந்தது. மணி பத்தேகால். இரண்டு பேருக்கும் பசி வயிற்றைக் கிள்ளியது. "இனிமேல் பார்ப்பதில் பயனில்லை. புறப்பட வேண்டியதுதான். அவசியமானால் ஊருக்குப் போய் குழந்தையைப் புகைப்படம் பிடித்துப்

பத்திரிகைகளில் விளம்பரம் செய்து கொள்ளலாம்" என்ற தீர்மானத்துடன் இருவரும் கிளம்பினோம்.

யார் செய்த புண்ணியமோ? அந்த இருளில், அவ்வளவு பயங்கர மழை பெய்து முடிந்தபிறகு, குறுகிய மேடுபள்ளம் நிறைந்த மலை ரஸ்தாக்களில் ஒரு துன்பமுமின்றி ஜீப் மலை அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தது. 'குழந்தை தூக்கம் கலைந்து அழுதால் சமாதானப்படுத்த முடியாதே' என்று கவலைப்பட்டோம். நல்லவேளையாக ஊர் வருவதற்குள் குழந்தை தூக்கத்திலிருந்து ஒருதடவைகூட விழித்துக் கொள்ளவே இல்லை.

ஊர் வந்து சேர்ந்தபோது இரவு ஒன்றரை மணி. இரண்டாவது ஆட்டம் சினிமா விடுகிற நேரம். டிரைவர் காலையில் வருவதாகக் கூறிவிட்டுத் தன் வீட்டுக்குப் போனான். நான் என் மனைவியை அழைத்துச் சுருக்கமாக அந்தக் குழந்தையின் வரலாற்றை அவளுக்குச் சொல்லி அதை அவளிடம் கொடுத்தேன்.

அவள் குழந்தையைத் தோளில் சாத்திக்கொண்டு சமயலறைக்குள் போனாள். நான் வருகிற வழியிலேயே ஒரு சினிமாக்கொட்டகை வாசலில் இருந்த ஹோட்டலில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு வந்திருந்தேன்.

"குளுகோஸைப் போட்டுக் குழந்தையை அழாமல் தூங்கப் பண்ணு" என்று அவளை எச்சரித்துவிட்டுப் படுக்கச் சென்றுவிட்டேன் நான். அலைச்சலும் மனக்குழப்பமும் மிகுந்து ஓய்ந்திருந்த உடல் விரைவில் தூக்கத்தின் வசப்பட்டது.

மறுநாள் காலை எழுந்திருக்கும்போது ஒன்பது மணிக்கு மேல் ஆகிவிட்டது.

"குழந்தை ரொம்பச் சமர்த்தாக இருக்கே? அழுகை, முரண்டு ஒண்ணும் கிடையாது! காலையிலே எழுப்பிப் பால் காய்ச்சிப் புகட்டினேன். புது முகம்னு கொஞ்சமாவது சிணுங்கணுமே? பெற்ற குழந்தை மாதிரி ஒட்டிக் கொண்டுவிட்டது!" இடுப்பில் அந்தக் குழந்தையும் கையில் காப்பி தம்ளரும் காட்சியளிக்க என் மனைவி என்னை நோக்கி வந்தாள்.

"எப்படியானால் என்ன? திருமூர்த்தி மலைக்குப் போய் விட்டு இப்படி ஒரு குழந்தையோடு வருவேன் என்று நீ கனவில்கூட நினைத்திருக்கமாட்டாய்!"

"எல்லாம் நாம் நினைக்கிறபடி நடக்கிறதா என்ன?" குழந்தையை ஆசைதீரக் கொஞ்சிக்கொண்டே காப்பித் தம்ளருடன் திரும்பிப் போனாள் அவள்.

நான் அன்றைக்கு ஆபீஸ் போகவில்லை. லீவு போட்டு விட்டேன். பதினொன்றரை மணி சுமாருக்கு டிரைவர் வந்து சேர்ந்தான்.

"வாப்பா! வா... குழந்தை அம்மாவிடம் எவ்வளவோ நாள் பழகினாப்போல இருக்கிறது. அழவே இல்லை. 'போட்டோ' பிடித்து எல்லாப் பத்திரிகையிலும் விளம்பரம் போட்டு விடுவோமா? அவளுக்குத் தெரிந்தவர்கள் யாராவது பத்திரிகை பார்த்துச் சொன்னால் அதைக் கேட்டு இங்கே வரமாட்டாளா? வந்தால் குழந்தையைக் கொடுத்து அனுப்பிவிடுவோம்."

"எதற்கும் நாளை ஒருநாள் பார்த்துவிட்டுச் செய்யலாமுங்க! எனக்கென்னவோ அவள் உயிரோடு இருப்பாள் என்கிற நம்பிக்கையே இல்லீங்க."

கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு வீட்டுக்குப் போய்விட்டான் அவன்.

மறுநாள் பத்திரிகையில் அந்தச் செய்தியைப் படித்தபோது திடுக்கிட்டேன். வியப்பும் வேதனையும் ஒருங்கே அடைந்தேன்.

"மூணாறில் சோத்துப் பாறை எஸ்டேட் அருகே இளம்பெண் தற்கொலை. ஏற்கனவே அவள் போலீஸாரால் தேடப்பட்டுக் கொண்டிருந்தவளாம். அவளுக்கு ஒன்றரை வயதில் ஒரு பெண் குழந்தை உண்டென்றும், அவள் வேலை பார்த்து வந்த எஸ்டேட் முதலாளி அவளிடம் தவறாக நடந்து கொள்ள முயன்றதனால் அவரைக் குத்திக் கொலை செய்துவிட்டுத் தன் குழந்தையோடு ஓடிய அவள் நேற்றிரவு தற்கொலை செய்து கொண்டுவிட்டாள் அவள் குழந்தை என்ன ஆயிற்றென்று தெரியவில்லை, போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்."

என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்துப் போய் உட்கார்ந்தேன்.

"பத்திரிகையைப் படித்தீர்களா? விளம்பரத்துக்கு அவசியமே இல்லை! குழந்தை இங்கேயே வளரட்டும்" என்று கூறிக் கொண்டே வந்தான் டிரைவர்.

"இதோ பாருங்கள். குழந்தை என்ன அழகாகச் சிரிக்கிறது? 'அம்மா' என்றே என்னைக் கூப்பிடுகிறது!" என் மனைவி குழந்தையைத் தூக்கிக் கொண்டு வந்தாள். குழந்தை உலகத்தையெல்லாம் விலையாகக் கொடுத்தாலும் ஈடு காணாத அழகுச் சிரிப்பு ஒன்றைத் தன் சின்னஞ்சிறு மாதுள இதழ்களில் சிந்திக் கொண்டிருந்தது. டிரைவர் அதையே பார்த்துக்கொண்டு இருந்தான். நான் எதிரே சுவரில் மாட்டி இருந்த சர்வேசுவரனின் படத்தைப் பார்த்தேன்.

'இறைவா! நீ நல்ல வீணைகளைப் படைக்கிறாய். மண்ணுலகம் தாங்காத அழகையெல்லாம் உருவாக்கி அனுப்புகிறாய்! சேற்றில் செந்தாமரை! குப்பையிலே குருக்கத்தி! ஆனாலும் என்ன பயன்? அந்த நல்ல வீணைகளைச் சில சமயம் நலங்கெடப் புழுதியிலும் எறிந்துவிடுகிறாயே!' என்று என் மனம் இறைவனை இறைஞ்சிக் கேட்டது.

**(கல்கி, 10.3.1957)**

## 10. உனக்கு மட்டும்

பழனிமலையில் கோவிலுக்கு வெளியே தென்புறத்துப் பிராகாரத்தில் உட்கார்ந்து யோசனையில் மூழ்கியிருந்தேன். பின்புறம் கொடைக்கானல் மலைத்தொடர் நீலக் காரிருளின் நடுவே பனியிலும் மேகத்திலும் நெய்த வெண்பட்டுப் போர்வைக்குள் உறங்கிக் கொண்டிருந்தது. கீழே ஊர் விளக்குகள் மினிக்கிக் கொண்டிருந்தன. ஊரின் ஓசைகளும் சந்தடிகளும் எட்டாத உயரத்தில் உட்கார்ந்திருந்தேன்.

பார்வதி! கதையை மேலே எழுதுவதற்கு முன்னால் உனக்கு ஒரு வார்த்தை. உன்னைப் பற்றித்தான் எழுதப் போகிறேன் என்பதை இதற்குள் நீ புரிந்து கொண்டிருப்பாய். ஆனால் யாருக்காகவோ எதற்காகவோ, எதையோ, எழுதுகிறேன் என்று நினைத்து நீ படிக்காமல் இருந்துவிடக்கூடாது அல்லவா? உன்னையே நினைத்து, உன் பொருட்டு, உனக்கு மட்டுமே இதை எழுதுகிறேன். ஏக்கத்தை உண்டாக்கியவள் நீ. அன்பை அளித்து மறைந்தவள் நீ. உனக்குத்தானே சொல்ல வேண்டும். நீ எங்காவது இருக்கத்தான் இருப்பாய்! ஆளைக் கொள்ளை கொள்ளும் அந்த அழகும் உன்னோடு இருக்கத்தான் இருக்கும். இதை நீ படிக்காமலிருக்க மாட்டாய்! இவ்வாறெல்லாம் எனக்கு நானாகவே நம்பிக் கொண்டுதான் சிதறிப் போன ஆசையின் பின்னங்களை இப்படி எழுத்தில் வாரி இறைத்திருக்கிறேன்.

ஊர் சந்தடி நிறைந்திருந்தால் என்ன? மயான பூமி போல் அமைதியாக இருந்தாலென்ன? விளக்குகள் மினுமினுத்தால் என்ன? தனி இடத்தில் தற்கொலை செய்து கொள்வதற்காக உட்கார்ந்து கொண்டிருப்பவனுக்கு இதனாலெல்லாம் ஆக வேண்டியதென்ன? ஆகப்போவதுதான் என்ன?

மூன்று தடவைகள் பரீட்சையில் தவறிவிட்டு, மாதம் முப்பது ரூபாய்ச் சம்பளத்தில் ஒரு வேலைகூடக் கிடைக்காமல் திண்டாடிக் கொண்டிருந்த சமயம் அது. அன்றாடங்காய்ச்சியான ஒரு ஏழைக் குடும்பத்து வாலிபனுக்கு இந்த வறண்ட நிலையை எவ்வளவு காலம் சகித்துக்கொண்டிருக்க முடியும்? வீட்டுக்கும் பாரமாக தனக்கும் பாரமாக வாழ்வதைவிடச் சாவது எவ்வளவோ மேல்.

அப்போது எனக்கு இருந்த மனநிலையில் அவநம்பிக்கையும், வறட்சியும் தற்கொலை நினைவுகளும், இடைவிடாமல் குமுறிக் கொண்டிருந்தன. எங்கும் புறக்கணிப்பு, எதிலும் தடை, வாழத்துடிக்கும் வயசில் வசதியற்ற நிலை, இப்படி இருந்தால் எந்த இளைஞனுக்குத்தான் தற்கொலை நினைவு தோன்றாது?

நான் பள்ளிக்கூடத்தில் படித்த புத்தகங்களையும், பேப்பர்களையும் பழைய சாமான்களையும் விலைக்குப் போட்டுச் சேர்த்து வைத்திருந்த பத்து ரூபாய் பணத்தை

எடுத்துக் கொண்டேன். உடுத்திய அரை வேஷ்டியோடும் போட்டுக் கொண்டிருந்த மேல் சட்டையோடும் வீட்டில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் கிளம்பிவிட்டேன். வீட்டிலிருந்து கிளம்பும்போது இரவு ஏழேகால் மணி. கால் போன போக்கில் எங்கெல்லாமோ நடந்து, பேச்சியம்மன் படித்துறை வழியே வைகையைக் கடந்து செல்லூர் ரஸ்தாவை அடைந்தேன். மேற்குப்புறம் திரும்பித் தத்தனேரி ரோட்டில் மதுரைப் பாலத்தை நோக்கிச் சென்றபோது பாதை வழியே பஸ் வந்தது. கையை நீட்டி நிறுத்தி அதில் ஏறிக் கொண்டேன். அது 'எந்த ஊருக்குப் போகிற பஸ்?' என்றுகூடப் பார்க்கவில்லை. ஏறி உட்கார்ந்துகொண்ட பின் பஸ் கண்டக்டர் டிக்கெட்டுக்குப் பணம் கேட்டபோதுதான் அது பழனிக்குப் போகிறது என்று தெரிந்தது.

கண் காணாத இடத்தில் தெரிந்தவர்களுடைய முகத்தில் விழிக்காமல் உயிரைப் போக்கிக் கொள்ள வேண்டும். 'அந்த இடம் பழனியாகத்தான் இருக்கட்டுமே!' என்று எண்ணிக் கொண்டேன். சாதாரண நாளாக இருந்தால் மாலை நாலரை மணிக்குமேல் மதுரையிலிருந்து பழனிக்குப் போவதற்கு பஸ் கிடையாது; தைப் பூசத்துக்காக ஸ்பெஷல் பஸ் விட்டிருந்ததனால் நான் அந்த நேரத்திலும் அன்று பழனிக்குப் போவதற்கு முடிந்தது.

முன்பின் போய்ப் பழக்கமில்லாதவன் புது ஊருக்கு நள்ளிரவில் போய் எங்கே இறங்குவது? எப்படித் தங்குவது? இதைப் பற்றி எல்லாம் யோசிக்கவே தோன்றவில்லை. கலங்கிப் போன மனத்துக்கு, வேதனையால் தளர்ந்திருக்கும் சந்தர்ப்பத்தில் முன்யோசனை குறைவு. நடக்கப் போவதை எண்ணி, வருவனவற்றை அனுமானித்து, எச்சரிக்கையாக இருக்கும் இயல்பு, வெறுப்பும் வேதனையும் நிறைந்த உலகத்துக்குக் கிடையாது.

பஸ் பழனியை அடையும்போது ஏறக்குறைய பன்னிரண்டு மணி. வழியில் ஒட்டன்சத்திரத்தில் பஸ் நிற்குமிடத்தில் நாலைந்து மலைப்பழங்களை வாங்கிச் சாப்பிட்டதுதான். இரவுப் பாட்டுக்கு அது போதும்.

சட்டைப்பையில் ஏழு ரூபாய் பதினைந்தணா மீதப் பணத்தோடும் மனத்தில் இவ்வளவென்று தொகை வகுத்துச் சொல்ல முடியாத கவலைகளோடும், பஸ்ஸிலிருந்து இறங்கினேன். புதிய இடம், புதிய ஆள், புதிய பார்வை, விழிகள் மிரண்டு மிரண்டு சுழன்றன. யார் யாரிடமோ வழி விசாரித்துக்கொண்டு மலை அடிவாரத்திலிருந்த ஒரு சத்திரத்துக்குப் போய்ச் சேர்ந்தேன். ஆறணா வாடகையில் ஒரு அறை பிடித்துத் தங்கினேன்.

உள்ளத்தில் ஒரே குழப்பம். உடலில் அலுப்பு. சாவுக்கு ஆசைப்பட்டுப் புது இடத்தைத் தேடி வந்தால் மட்டும் போதுமா? மனம் திடீரென்று துணிய மறுக்கிறதே! அறையை உட்புறமாகத் தாழிட்டுக் கொண்டு வெகு நேரம் யோசித்தேன்.

உயிரை எந்தெந்த விதங்களில் போக்கிக் கொள்ளலாம்? தினப் பத்திரிகைகளிலும் கதைகளிலும் தற்கொலைகளைப் பற்றி எவ்வளவோ நாட்கள், எத்தனையோ பல

சம்பவங்களைப் படித்திருக்கிறேன். ஆனால் சொந்த அனுபவத்துக்கென்று பயன்படுத்தத் தேடும்போது அவையெல்லாம் அசாத்தியமானவையாகத் தோன்றுகின்றன. பயங்கரமாகவும், குரூரமாகவும் படுகின்றன.

சிந்தித்தபடியே வெறுந்தரையில் படுத்து உறங்கிவிட்டேன். அன்று இரவு அப்படியே கழிந்துவிட்டது. மறுநாள் காலையில் குளித்துவிட்டு முருகனைத் தரிசித்துவிட்டு மலைப்பிரகாரத்தில் சுற்றிவரும்போது, 'தற்கொலை செய்து கொள்வதற்கு இதைவிட வசதியான இடம் வேறில்லை' என்று தீர்மானித்தேன்.

மலையின் தென்புறச் சரிவில் ஒரு பெரிய பூவரசு மரம். கைக்கு எட்டுகிறாற்போல ஒரு கிளை தென்புறத்தில் பள்ளத்தை நோக்கி இறங்கியிருந்தது. சாவதற்குக்கூட முன்கூட்டியே திட்டம் போட வேண்டியிருக்கிறதே?

அந்த மரக்கிளையில் ஒருபாக நீளமுள்ள கயிற்றைக் கட்டிக் கழுத்தில் சுருக்கிக் கொண்டு தொங்கிவிட்டால் காரியம் முடிந்துவிடும். திருவிழாக் காலம். ஆகையினால் மலைமேல் ஜனசந்தடி ஓய்ந்து தனிமை பெறுவதற்கு இரவு பதினோரு மணிக்கு மேலும் ஆகலாம். ஆனால் பரவாயில்லை. அதுவரை காத்திருந்தாவது எண்ணத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டியதுதான்.

பகற்பொழுதை எப்படியோ கழித்துவிட்டேன். அவ்வளவு பெரிய ஊரில் திருவிழாக் கோலாகலத்திலும் கூட்டத்திலும் பொழுதைக் கழிப்பதா பெரிய காரியம்?

இரவு எட்டரை மணி. சாப்பாட்டை முடித்துக் கொண்டேன். ஜன்மத்திலேயே கடைசிச் சாப்பாடு அது! சத்திரத்து அறையில் எனக்குச் சொந்தமென்று சொல்லிக் கொள்ள எந்த மூட்டை முடிச்சுமில்லை. எல்லாச் செலவும் போக எஞ்சியிருந்த ஆறரை ரூபாய்ப் பணமும் சட்டைப் பையிலேயே இருந்தது. ஆனாலும் அறையை இழுத்துப் பூட்டிச் சாவியையும் பைக்குள்ளேயே போட்டுக்கொண்டேன். அது இனிமேல் என்னிடம் இருக்க வேண்டிய அவசியமில்லை. மரணப் பூட்டையே திறக்கத் துணிந்தவனுக்கு அறையின் பூட்டைத் திறக்கும் சாவி தேவையில்லைதான். ஆனாலும் எனக்கென்னவோ அது என்னிடம் இருக்கவேண்டுமென்று தோன்றியது.

மனம் பதற, உடல் நடுங்க, ஏதோ செய்யத்தகாத காரியத்தைச் செய்யத் துணிந்தவன்போல் படிகளில் ஏறி மலையுச்சியை அடைந்தேன். கடைசித் தடவையாக முருகனை கண்குளிரத் தரிசித்துக் கொண்டபின், காலையில் பார்த்து வைத்திருந்த மரத்தடியை அடைந்தேன்.

கோவிலுக்கு வெளியே மலைப் பிராகாரத்திலிருந்த விளக்குகளை எல்லாம் அணைத்துவிட்டார்கள். மணியும் பதினொன்றுக்குக் குறையாமல் ஆகியிருந்தது. சுற்றிலும் இருள் கவிந்துவிட்டது. மேல் துண்டை இரண்டாகக் கிழித்து கயிறு போல முறுக்கினேன். சுருக்குப் போட்டேன். இறுதியாக ஒருமுறை சுற்றும் முற்றும் பார்த்தேன். பார்த்தவன் அப்படியே அரண்டுபோய் நின்றேன். இருளில் நிழல் வடிவமாகத் தெரிந்த அந்தக் காட்சி என்னைத் திடுக்கிடச் செய்தது. பத்துப் பன்னிரண்டடிக்கு அப்பால் இருந்த மற்றோர் மரத்தில் என்னைப் போலவே வேறொரு

மனித உருவமும் தற்கொலை முயற்சியில் ஈடுபட்டிருப்பதைக் கண்டேன். சில விநாடிகள் என் கண்களையே என்னால் நம்ப முடியாமல் இருந்தது.

தான் விரும்பி செய்து கொள்ளுகிற ஓர் தவறான காரியத்தை, மற்றவர் செய்து கொள்ளக் கண்டால் மனித மனம் திடுக்கிடுகிறது. அது தழும்பேறிய இயற்கை.

குபீரென்று என் கையிலிருந்த சுருக்குக் கயிற்றைத் தூர எறிந்துவிட்டு, அந்த மரத்தை நோக்கி வேகமாக ஓடினேன்.

"யாரது? நில்லுங்கள்... நில்லுங்கள்... வேண்டாம்" என்று இரைந்து கத்திக் கொண்டே ஓடினேன்.

அந்த உருவத்தினிடமிருந்து பதில் வரவில்லை.

'பேயா? பிசாசா? அல்லது நம் கண்களை ஏமாற்றும் வெறும் பிரமையா?'

"யாரது? பதில் சொல்லுங்கள்!" என் தைரியத்தை எல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு கத்தினேன்.

"நான்தான்..." மிரண்டு குழறுகிற தொனியில் ஓர் இனிய பெண் குரல் என் காதுகளில் ஒலித்தபோது, எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"நான்தான் என்றால் ... யார்?... இந்த மாதிரி அசட்டுத்தனம் செய்யலாமா? எல்லோரையுங் காத்து அருள் புரியும் முருகன் சன்னிதிக்குப் பின்புறமே இந்த அக்கிரமத்தைச் செய்யத் துணியலாமா?" என் குரலில் அதட்டும் தன்மை ஒலித்ததைக் கண்டு நானே வியந்து கொண்டேன். அந்தப் பெண்ணை அதட்டும் போது சற்றுமுன் அதே அக்கிரமத்தை அதே இடத்தில் நானும் செய்து கொள்ள இருந்தேனென்பதை மறந்துவிட்டேன்... அப்படி மறந்துவிடுவதுதானே மனித சுபாவம்!

"அதையேதான் நானும் திருப்பிக் கேட்கிறேன்! நீங்கள் யார்? ஏதோ என் வேதனை எனக்கு!" - குரல் இளங்குரலாகத்தான் ஒலித்தது.

"வேதனைகள் எல்லோருக்கும் எப்போதும் உண்டு அம்மா. உங்கள் குரல் இளங்குரலாகத் தென்படுகிறது. இந்த வயதில் இவ்வளவு விரக்தி கூடாது. உயிரைக் கொடுத்தவனுக்கு எப்போது அதைத் திருப்பி எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது தெரியும். அவனை முந்திக் கொண்டு நாமாகவே அதை அவனிடம் ஒப்படைக்க முயல்வது சிருஷ்டியோடு எதிர் நீச்சுப் போடுவதாகும்...."

"ஐயா! நீங்கள் யாராயிருந்தாலும் சரி, உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். பேசாமல் போய்ச் சேருங்கள். எனக்கு வேண்டாம். இந்த வறட்டு வேதாந்தமெல்லாம்..."

"அப்படிச் சொல்லாதீர்கள். வாருங்கள், கீழே போகலாம்."

அந்தப் பெண் கீழே வரமுடியாதென்று சண்டித்தனம் செய்தாள். நயத்திலும் பயத்திலுமாக அவளை மிரட்டி அங்கிருந்து அவளைக் கீழே அழைத்துக் கொண்டு போனேன்.

என் இதயத்தில் அப்போது என்ன என்ன எண்ணங்கள் தோன்றின, தெரியுமா?

*'முருகா! நீ கண் கண்ட தெய்வம்! உயிர்களின் ரட்சகன். தற்கொலைக்காக உன் கோவிலை நாடி வந்தேன். நீ என்னைக் கொண்டு என்னையே காப்பாற்றி விட்டாய்! என்னை மட்டுமா, இன்னொரு பெண்ணையும் காப்பாற்றச் செய்துவிட்டாய்? பிழைப்பது, பிழைக்கச் செய்வது, வாழ்வது, வாழ்விப்பது! இதுதான் உன் அருள் போலும்.'*

இருளில் படிகளின் பாதையாக இறங்குவது சாத்தியமில்லை. இருவரும் சிறு ரோடு போலிருந்த யானைப் பாதை வழியே மலையிலிருந்து கீழே இறங்கினோம். அவள் முகத்தையோ, உருவத்தையோ, இருளில் சரியாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. அடிவாரத்துக்கு வந்து சேர்ந்ததும் தெருவிளக்கின் வெளிச்சத்தில் ஒருவரை ஒருவர் நன்றாகப் பார்த்துக் கொண்டோம். நான் எதிர்பார்த்ததைவிட அதிகம் சிறுவயது அவளுக்கு. பதினெட்டு அல்லது பத்தொன்பது வயது இருக்கும். பருவத்தின் அழகை எடுத்துக்காட்டும் வளர்ச்சி, வளர்ச்சியோடு இயைந்த வாளிப்பு. வஞ்சிக்கொடி துவண்டு நிற்பதுபோல் அந்த ஒற்றை நாடியான செளந்தரிய சரீரம் எனக்கு முன் தெரு விளக்கின் மங்கிய ஒளியில் துவண்டு நின்றது.

"உனக்கு எந்த ஊர்?"

சிறிதுநேரம் அவள் பதிலே பேசவில்லை. கால் பெருவிரலால் தரையைக் கீறிக் கொண்டு நின்றாள்.

"உன்னைத்தான் கேட்கிறேன்! பேசமாட்டாயா?... உனக்கு எந்த ஊர்?"

"எனக்குத் தாராபுரம்..." இரண்டு நீளமான ரோஜாமொட்டுக்களைப் பூட்டி வைத்திருந்தாற்போன்ற அந்த அழகிய உதடுகள் மெல்லத் திறந்தன.

"உன் பெயர் என்னவோ?"

இப்படிக் கேட்டவுடன் தலைநிமிர்ந்து தீர்க்கமாக என்னை ஒரு பார்வை பார்த்தாள் அவள். பின்பு மெல்லிய குரலில் பதில் கூறினாள்; "என் பெயர் பார்வதி."

"தனியாகத்தான் பழனிக்குப் புறப்பட்டு வந்தாயா?"

"தற்கொலை செய்து கொள்ள வருகிறவர்கள் தனியாக வராமல் நாலைந்து பேரைத் துணைக்குக் கூட்டிக் கொண்டா வருவார்கள்?" வறண்ட - உணர்வற்ற சிரிப்பு ஒன்று அவளிடமிருந்து கிளம்பிற்று.

"அதற்குக் கேட்கவில்லை! இந்த வயதில் இப்படிப்பட்ட துணிச்சல் ஒரு பெண்ணுக்கு இருக்க முடியுமா என்று ஆச்சரியமாக இருக்கிறது. அதனால்தான் கேட்டேன்!"

"அதே கேள்வியை நான் உங்களைத் திருப்பிக் கேட்டால் என்ன பதில் சொல்வீர்களோ? இந்த வயதில் இப்படித் துணிச்சல் ஒரு ஆணுக்கு...?"

எனக்குப் பகீரென்றது.

"என்ன? நீ எதைச் சொல்லுகிறாய்?"

"எதையா? நீங்கள் அந்தப் பூவரச மரத்தடியில் என்ன செய்து கொண்டீர்கள் என்பது எனக்கும் தெரியும்!" குறும்புத்தனம் இழையோடும் அவள் வாயிதழ்களில் சிரிப்பொலி எழுந்தது.

முதல் தடவையாக அந்தப் பெண்ணுக்கு முன்னால் நான் தலைகுனிந்தேன். என் துணிவு அடிப்பட்டுச் செத்த பாம்பு மாதிரி சுருண்டு விழுந்துவிட்டது.

"சரி! இனிமேலும் இந்த நள்ளிரவில் இப்படி மலையடிவாரத்தில தனி வழியில் நீயும் நானும் நின்று கொண்டிருப்பது பொருத்தமில்லை. ஜனங்களோ, ரோந்து போலீஸ்காரர்களோ இந்த நிலையில் உன்னையும் என்னையும் பார்த்தால் தப்புக் கணக்குப் போட்டு விடுவார்கள்! வா... போகலாம்..."

"எங்கே போவது?..."

"நீ எங்கேயாவது தங்கியிருக்கிறாயா?"

"தங்கவாவது ஒன்றாவது? தாராபுரத்திலிருந்து இரவு எட்டரை மணிக்கு மேல்தானே வந்தேன்? பாழும் உயிர் இதற்குள் போயிருக்க வேண்டியது! நீங்கள் போட்டித் தற்கொலைக்கு வந்து எல்லாம் குட்டிச் சுவராய் அடித்து விட்டீர்கள்!"

"உன்னாலே நான் கெட்டேன், என்னாலே நீ கெட்டாய். அப்படித்தானே?"

அவள் பதில் சொல்லாமல் சிரித்தாள். மனத்தைக் கவரும் அந்தக் கன்னிச் சிரிப்பில் என் உணர்வுகள் கிறங்கின.

"நான் ஒரு சத்திரத்தில் அறை எடுத்திருந்தேன். இன்னும் சாவி என்னிடம்தான் இருக்கிறது. நீ கதவை உட்புறம் தாழிட்டு அறைக்குள் படுத்துக் கொள். நான் சத்திரத்து வெளி வராந்தாவில் படுத்துக் கொள்கிறேன்."

"நாளை பொழுது விடிந்தால் உங்களையும் என்னையும் சேர்த்துப் பார்க்கிற உலகம் என்ன எண்ணும்?"

"உலகம் ஆயிரம் எண்ணும். உனக்கு உன் மேலும் என் மேலும் நம்பிக்கை இருக்கிறதா இல்லையா? உன்னால் முடியுமானால் வரலாம். முடியாவிட்டால் அப்புறம் நான் வற்புறுத்தத் தயாராயில்லை."

"உங்களை நான் எப்படி நம்புவது? என்னை உள்ளே படுத்துக் கொள்ளச் சொல்லிவிட்டுத் திரும்பவும் ஓசைப்படாமல் மலைக்குப் போய் அந்தப் பூவரசமரத்தில் தொங்கிவிட்டால்?" -அவள் என்னை மறுபடியும் கேலி செய்தாள்.

"உன்னை மட்டும் நான் எப்படி நம்புவது? வெளி வராந்தாவில் நான் தூங்கிய பிறகு ஓசைப்படாமல் கதவைத் திறந்து கொண்டுபோய் உயிரை மாய்த்துக் கொண்டால்...?"

இந்தப் பரஸ்பர விவாதத்தால் இருவருமே சிரித்துவிட்டோம்.

"சரி, நான் வருகிறேன். வாருங்கள். உங்கள் சத்திரத்துக்குப் போகலாம்." கடைசியாக அவள் என்னோடு வர இணங்கினாள்.

இருவரும் மலையடிவாரத்திலிருந்து சத்திரத்துக்குப் போகிற பாதையில் நடந்தோம்.

நல்லவேளையாக சத்திரத்து வாசற்கதவு திறந்தே இருந்தது. சத்திரத்து வேலைக்காரன் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தான். அந்த நிலையில் அந்தப் பெண்ணோடு என்னை யாரும் பார்த்துவிடக்கூடாதே என்று உள்ளூற பயமாக இருந்தது.

பூட்டைத் திறக்கும் ஓசைகூடக் கேட்காமல் மெல்லக் கதவைத் திறந்தேன்.

"பார்வதி! உள்ளே போய்க் கதவைத் தாழிட்டுப் படுத்துக் கொள்."

அந்த அழகிய யுவதி அறைக்குள் போனாள்.

"இந்தா! இந்தச் சட்டையை உள்ளே மாட்டி வை. பணம் இருக்கிறது!" நான் சட்டையைக் கழற்றி அவளிடம் கொடுத்தேன். அவள் புன்னகையோடு அதை வாங்கிக் கொண்டாள்.

கதாசிரியர்கள் எந்த எந்தச் சந்தர்ப்பங்களில் எல்லாமோ காதல் பிறப்பதாக அளக்கிறார்களே! இங்கே எனக்கும் பார்வதிக்கும் இடையே பிறந்த காதல் சாவின் முளையிலே தோன்றியது. வாழ்க்கை முட்களில் விழுந்து வேதனையடைந்த இரண்டு இளம் உயிர்கள் தற்கொலை என்னும் இலட்சியத்தை எட்டியபோது அகஸ்மாத்தாகப் பிணைந்த இணைப்பு!

'பயம்', 'பறிபோய்விடுமோ' என்ற அவநம்பிக்கை - இதெல்லாம் ஏழைக்குத்தான் அதிகமாக இருக்கின்றன. பையிலிருந்த ஆறரை ரூபாய் காசுகளை எவனாவது தட்டிப் பறித்துக் கொண்டு போய் விடுவானோ என்று பயந்து உள்ளே பார்வதியிடம் கொடுத்து வைத்திருக்கிறேன் நான். இந்தப் பாலக்காட்டுப் பேர்வழியோ ஆயிரக்கணக்கில் பெறுமானமுள்ள நகைகளுடன் திறந்த கதவை மூடாமல் தம் அறையில் நிம்மதியாக உறங்குகிறார்! விசித்திரமாகத்தான் இருக்கிறது,

அறைக்குள்ளே வளையல்கள் குலுங்கும் ஒலி இனிமையாகக் கேட்டது. சில மணி நேரப் பழக்கத்துக்கு எவ்வளவு சக்தி? அவளையே எண்ணி ஏங்க வைத்துவிட்டாளே!

மூன்று மணி வாக்கில் நானும் உறங்கிவிட்டேன். சர்க்கரைப் பாகுப்போல இனிய எண்ணங்களுடன் கண்களை உறக்கம் தழுவிவிட்டது. என்னை மறந்து தூங்கிவிட்டேன்.

எவ்வளவு நேரம் அப்படித் தூங்கினேனோ, எனக்கே தெரியாது.

விலாவில் ஏதோ ஒரு தடிக் கம்பால் ஓங்கிக் குத்தினமாதிரி இருந்தது. அலறி உளறிக் கொண்டே வாரிச் சுருட்டி எழுந்திருந்தேன். பொழுது விடிந்தது. ஏழெட்டு போலீஸ்காரர்கள் சத்திரத்து வராந்தாவில் என் அறை வாசலில் என்னைச் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவன்தான் கையிலிருந்த லத்திக் கம்பினால் என்னை விலாவில் குத்தி எழுப்பியிருந்தான்.

என் எதிரே அடுத்த அறையில் இருந்த பாலக்காட்டு வியாபாரி முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க ஆத்திரத்தோடு நின்றுகொண்டிருந்தார். அவர் கைவிரல்களில் மோதிரம் ஒன்றுகூட இல்லை. என்னுடைய அறையைப் பார்த்தேன். கதவுகள் திறந்து கிடந்தன. உள்ளே ஒரு ‘ஸுட்கேஸ்’ திறந்து அதிலிருந்த பொருள்களெல்லாம் அலங்கோலமாகச் சிதறப்பட்டிருந்தன. உள்ளே பார்வதியைக் காணவில்லை. பாலக்காட்டுக்காரரின் சூட்கேஸ் என் அறையில் கிடப்பதற்குக் காரணம் எனக்குப் புரியவில்லை.

“எந்தாயா மனுஷ்யன்? அயோக்கியத்தனமா பண்ணறே?” என்று மலையாளத்தில் இறைந்து கத்தினார் பாலக்காட்டு வியாபாரி. நான் உள்ளே போய்ப் பார்த்தேன். சுவரில் மாட்டியிருந்த என் சட்டைப்பை காலியாயிருந்தது. அதிலிருந்த ஆறு ரூபாய் எட்டணாவைக் காணவில்லை.

பார்வதி மோசம் செய்துவிட்டாள். நான் ஏமாந்துவிட்டேன். பழிகாரி! என்ன நடிப்பு நடித்தாள்? சிரித்துச் சிரித்துக் கடைசியில் கழுத்தை அல்லவா அறுத்துவிட்டாள்?

பாலக்காட்டுக்காரருக்குப் பத்தாயிரம் ரூபாய் திருட்டுப் போய்விட்டது. மோதிரங்கள். பணம், கைக்கடிக்காரம் எல்லாம் சேர்த்துதான்! நான் நடந்தை நடந்தபடியே அவரிடம் சொல்லிக் கதறினேன்.

அவர் அதை நம்பவில்லை. யார்தான் நம்புவார்கள்? கான்ஸ்டேபிள் ஒருவன் என் கைகளில் விலங்கு மாட்டினான். நான் கத்தின கதறலையும் அழுத அழுகையையும் எவரும் லட்சியம் செய்யவில்லை.

போலீஸ் ஸ்டேஷனில் அடி, உதை, நகக்கண்களில் ஊசி ஏற்றுதல் எல்லா மரியாதைகளும் நடந்தன. நான் சொன்னதையே விடாப்பிடியாகத் திருப்பித் திருப்பிச் சொன்னேன். நம்பவில்லை. பாலக்காட்டுக்காரனிடம் வழக்கைப் பதிவு செய்து கொண்டு என்னைச் சிறையில் அடைத்தார்கள். சில நாட்களில் விசாரணை நடந்தது. எனக்கு ஆறு வருஷம் கடுங்காவல் தண்டனை கிடைத்தது. ஒரு பெண்ணின் சிரிப்பையும் பேச்சையும் வெள்ளை உள்ளத்தோடு நம்பிய எனது நம்பிக்கைக்குக் கிடைத்த தண்டனை அது!

பார்வதி! முடிந்துவிட்டது. உனக்கு நான் எழுதிய கதை முடிந்துவிட்டது. நீ பெண் இல்லை. பெண் உருவில் உலாவும் வஞ்சகி. ஆனாலும் உன்னை, உன் சாமர்த்தியத்தை, அந்தச் சாமர்த்தியத்திற்குப் பொருத்தமான அழகை எண்ணி இந்த ஐந்தரை வருஷங்களுக்கு அப்பாலும் நான் ஏங்குகிறேன். வெறுப்புக்குப் பதிலாக இந்த ஏக்கம் ஏன் உண்டாகின்றதென்று என்னாலேயே புரிந்து கொள்ள முடியவில்லை.

நன்னடத்தைக்காக ஆறு மாதங்களுக்கு முன் என்னை விடுதலை செய்துவிட்டார்கள். வேலூர் சப்-ஜெயிலிலிருந்து நேரே பழனிக்குத்தான் திரும்பி வந்திருக்கிறேன். இதோ இப்போது நான் உட்கார்ந்து கொண்டிருக்கும் இடமும் அதே

பழைய பூவரச மரத்தடியில்தான். அன்று மாதிரி இப்போதும் இருள்தான் என்னைச் சூழ்ந்திருக்கிறது.

என்னிடமிருந்து நீ திருடியது கொஞ்சம்தான். ஆறரை மணி நேரத்தையும், ஆறரை ரூபாயையும்தான் உன்னால் திருட முடிந்தது! பாலக்காட்டுக்காரர்தான் நிறையப் பறிகொடுத்தவர். அது அவர் தலையெழுத்து. பணத்தையும், நேரத்தையும் தவிர 'இன்னம் வேறு ஏதாவது' நீ என்னிடமிருந்து திருடிக் கொண்டு போயிருந்தால் உடனே திருப்பி அனுப்பிவிடு. உனக்கு மட்டும் காதோடு இதைச் சொல்கிறேன்; "கட்டாயம் அதைத் திருப்பி அனுப்பிவிடு."

(கல்கி, 24.3.1957)



## 11. காலத்துக்கு வணக்கம்

அன்றைய காலைத் தபாலில் ஒரே ஒரு கடிதந்தான் வந்திருந்தது. பிரித்துப் பார்த்தேன். விக்கிரமசிங்க புரத்திலிருந்து வீரராகவன் எழுதியிருந்தான். வழக்கமான குசலப்பிரச்னத்துக்கு அப்புறம் கீழ்க்கண்ட விவரம் அதில் எழுதப்பட்டிருந்தது.

"வருகிற ஆடி அமாவாசைக்குப் பாணதீர்த்தம் போகலாம் என்று தீர்மானித்திருக்கிறோம். நீங்களும் அம்மாவை அழைத்துக் கொண்டு வர வேண்டும் என்பதுதான் என் ஆசை. கட்டாயம் நாலு நாட்களுக்கு முன்பாகவே புறப்பட்டு வாருங்கள்."

"இந்தா... உன்னைத்தானே?... தூக்கமா? உன் பிள்ளையாண்டான் விக்கிரமசிங்கபுரத்திலிருந்து கடுதாசி எழுதியிருக்கிறான்."

அடுக்களைக் காரியத்தை முடித்த அலுப்புடன் ரேழி வாசற்படியில் தலை வைத்துப் படுத்துக் கொண்டிருந்த அவள் எழுதியிருந்தாள்.

"ஆடி அமாவாசைக்குப் பாணதீர்த்தம் போகிறார்களாம். உன்னையும் என்னையும் புறப்பட்டு வரச்சொல்லி எழுதியிருக்கிறான்."

"நாம் அவசியம் அங்கே போகணும்!"

"பாணதீர்த்தம் பார்க்க வேண்டியதுதான். அதை நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இராமேசுவரம், குற்றாலம், கொடைக்கானல், உதகமண்டலம் இந்த மாதிரி வேறு எங்கேயாவது போகலாமே? பாணதீர்த்தத்துக்கு எதற்கு? அங்கே போய்த் திரும்புவது ரொம்பக் கஷ்டம். வேண்டாம்."

"நானும் பார்த்துக்கொண்டே வருகிறேன். நான்கு வருஷங்களாக நீங்கள் இப்படித்தான் தட்டிக் கழிக்கிறீர்கள். 'பாணதீர்த்தம்' என்ற பெயரை எடுத்தாலே உங்கள் மனம் சம்மதிக்கிறதில்லை."

"சரி, சரி, சண்டைக்குக் கிளம்பிவிடாதே. போவதா வேண்டாமா என்று நாளைக்குள்ளே முடிவு செய்யலாம். அப்புறம் வீரராகவனுக்குக் கடிதம் எழுதுவோம்." சொல்லிவிட்டு என் அறையை நோக்கி நடந்தேன்.

பெட்டிக்குள் நாற்பது வருஷ காலம் நாள் தவறாமல் எழுதிய டைரிகள் குவிந்து கிடந்தன. அவை வெறும் டைரிகளா? அல்ல. எழுபதாவது வயதை எட்டிக் கொண்டிருக்கும் ஒரு கிழவன் கடந்த காலத்தில் கண்ட அனுபவங்கள்.

டைரிகள் எல்லாவற்றையும் மேலும் கீழுமாகப் புரட்டியபோது 1929வது வருஷத்து டைரி மேலே வந்தது. உத்தியோக வாழ்க்கையில் மறக்க முடியாத நினைவை

உண்டாக்கியதும், அந்த முரட்டு உத்தியோகத்தையே விட்டு விடுவதற்குக் காரணமாயிருந்ததும் 1929ம் வருஷம். நினைவுப் புண்ணுக்கு மருந்து ஏது?

**ஜனவரி 1929**

அம்பாசமுத்திரம் ரூரல் போலீஸ் ஸ்டேஷனுக்கு மாற்றலாகிய புதிது. பழைய சப்-இன்ஸ்பெக்டர் அரைகுறையாக வைத்துவிட்டுப் போயிருந்த கேஸ்களின் பைல்களையெல்லாம் புரட்டினேன். தேச சுதந்திரப் போராட்டத்துக்காக ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டுப் பல குற்றங்கள் செய்தவனும் சர்க்காருக்கு எதிராகப் பல சதிச் செயல்களில் தலைமை தாங்கி நடத்தியவனுமான ஊர்க்காடு ரங்கநாதன் என்னும் இளைஞனைப் பற்றிய ஸ்டேட்மெண்டுகள் அதிகமாக இருந்தன. தலைமறைவாகப் பொதிகைமலைக் காடுகளில் திரிந்து வரும் அந்த ரங்கநாதனை முன்பிருந்த இன்ஸ்பெக்டர் எவ்வளவோ முயன்றும் கண்டுபிடிக்க முடியவில்லை. ரங்கநாதனோடு புரட்சி இயக்கத்தில் சம்பந்தப்பட்டிருந்த பத்துப் பன்னிரண்டு வாலிபர்களின் பெயரும் 'காத்தியாயினி' என்ற ஒரு பெண்ணின் பெயரும் ஸ்டேட்மெண்டிலும் பைல்களிலும் இருந்தன.

அப்போது திருநெல்வேலியில் சர்க்கிளாக இருந்தவர் ஒரு ஆங்கிலோ இந்தியர். பாளையங்கோட்டையிலிருந்து என்னை அம்பாசமுத்திரத்துக்கு மாற்றி உத்தரவு போட்டது அவர்தான். நான் மேற்படி ரங்கநாதனையும் அவன் கோஷ்டியைச் சேர்ந்த தேச பக்தர்களையும் சீக்கிரம் எப்படியாவது மடக்கிப் பிடித்துப் போட்டுவிடுவேன் என்று அவருக்கு அளவற்ற நம்பிக்கை.

**பிப்ரவரி**

மாதம் ஒன்று கழிந்துவிட்டது. இன்னும் உருப்படியாக ஒரு காரியமும் செய்யவில்லை. நாலைந்து நாட்களுக்கு முன் ரங்கநாதன் பிறந்த ஊராகிய ஊர்க்காட்டுக்குப் போய்ச் சில விவரங்களைச் சேகரித்துக்கொண்டு வந்தேன்! 'காத்தியாயினி' என்ற பெண்ணைப் பற்றியும் சில முக்கியமான செய்திகள் அங்கே தெரிய வந்தன.

அக்காலத்தில் வண்ணார் பேட்டையில் நாகராஜ சர்மா என்று ஒரு வக்கீல் இருந்தார். அவருக்கு ஒரே ஒரு பெண் காத்தியாயினி. தாயில்லாக் குழந்தை. பெண்ணுக்கு அளவுக்கு மீறிச் செல்லம் கொடுத்து வளர்த்தார். சாதாரணமாக ஹைஸ்கூல் படிப்புக்கே பெண்களை அனுப்புவதற்குத் தயங்கும் காலம் அது, ஆனால் நாகராஜ சர்மாவோ ஹைஸ்கூல் படிப்பு முடிந்ததோடு திருப்தியுறாமல் காத்தியாயினிகைக் காலேஜிலும் சேர்த்துவிட்டார்.

ரங்கநாதனும் காத்தியாயினியும் ஒரே வகுப்பில் ஒரே பிரிவில் படித்து வந்தனர். காத்தியாயினிக்கு அவன் பிரசங்கங்கள் என்றால் உயிர். திலகருடைய கொள்கைகளில் அசைக்க முடியாத ஆர்வம் அவளுக்கு உண்டு.

ஊர்க்காட்டில் இருந்த ரங்கநாதனின் தாயார் நிலபுலன்களிலிருந்து வரும் குத்தகை வருமானத்தை மாதம் தவறாமல் ஒரு குறிப்பிட்ட தொகை வீதம் அவனுடைய படிப்புச்

செலவுக்கு அனுப்புவாள். ரங்கநாதனின் தகப்பனார் அவன் சிறுவனாக இருந்தபோதே காலமாகிவிட்டார். 'ரங்கநாதனின் நடவடிக்கைகளால் அவன் படிப்புக் கெட்டுப் போகும்' என்ற விஷயம் தெரிந்த இரண்டொருவர் அவன் தாயிடம் புகார் செய்தனர். ஆனால் 'கைக்கு மீறி வளர்ந்துவிட்ட பிள்ளையை எப்படிக் கண்டிப்பது?' என்று பேசாமல் விட்டுவிட்டாள் அந்த அம்மாள்.

அங்கே நாகராஜ சர்மாவின் நிலையும் அப்படித்தான் இருந்தது. இளமையிலிருந்தே செல்லமாக வளர்ந்த பெண் கண்டிப்புக்கு அடங்கவில்லை. நாலு வார்த்தை இரைந்து பேசினால் கண்ணைக் கசக்கிக் கொண்டு அழ ஆரம்பித்துவிடுகிறாள். வெள்ளை அரசாங்கத்தின் தயவில் நடந்து வந்த கல்லூரியில் எவ்வளவு நாட்கள்தான் இப்படிப்பட்ட மாணவர்களை வைத்துக் கொண்டிருப்பார்கள்.

ஒருநாள் திடீரென்று ரங்கநாதனும் அவனுக்கு ஆதரவாளர்களாகக் கருதப்பட்ட ஏழெட்டு மாணவர்களும் காத்தியாயினியும் காலேஜிலிருந்து சஸ்பெண்டு செய்யப்பட்டிருப்பதாகப் பிரின்ஸிபல் அறிவித்தார்.

நாகராஜசர்மா வழக்கத்தை மீறிப் பெண்ணைக் கண்டித்தார். அவளை வீட்டை விட்டு வெளியேறாமல் கண்காணிக்கத் தொடங்கினார்.

ரங்கநாதனோ சஸ்பெண்டு ஆனபின்னும் ஊருக்குப் போகவில்லை. அவனும் கோஷ்டியாருமாகச் சேர்ந்து கொண்டு கைலாசபுரத்தில் ஒரு வீட்டை வாடகைக்குப் பேசி அதிலிருந்து இயக்க வேலைகளில் ஈடுபட்டனர்.

ஊர்க்காட்டில் முக்கியமாக நான் விசாரித்தறிந்து கொண்ட விவரங்கள் இவ்வளவுதான்.

**மார்ச்-ஏப்ரல்-மே**

அப்பப்பா! இந்த மூன்று மாதங்களிலும் நான் அலைந்த் அலைச்சல் சொல்லி மாளாது. பாளையங்கோட்டைக்கும் தூத்துக்குடிக்கும் பாபநாசத்துக்கும் அலைந்தேன்.

தன்னைப் பெரிய குற்றவாளியாகச் சர்க்கார் கருதும்படியான வேறோர் காரியத்தையும் ரங்கநாதன் செய்தான். ஒரு விழாவுக்காகத் திருநெல்வேலி கலெக்டர் பாளையங்கோட்டைக்கு விஜயம் செய்ய ஏற்பாடாகி இருந்தது. கலெக்டருடைய கார் தாமிரபரணியில் சுலோசனமுதலியார் பாலத்தைக் கடக்கின்ற சமயத்திலே பாலத்தை வெடிகுண்டுகள் மூலம் தகர்க்க ரங்கநாதன் கோஷ்டியார் சதித் திட்டமிட்டிருந்தனர். ஆனால் துரதிர்ஷ்டவசமாகத் திட்டம் நிறைவேறுவதற்கு முன்பு இரகசியங்கள் வெளியாகிவிட்டன.

திட்டம் வெளியான அன்று ரங்கநாதன் கோஷ்டியார் தலைமறைவாக ஒளிய இடம் தேடித் திருநெல்வேலியிலிருந்து ஓட்டம் பிடித்தனர். அதே தினம் வண்ணார்பேட்டையில் காத்தியாயினி காணாமற் போய்விட்டாள்.

சர்மா பதறிப்போய் 'பெண்ணைக் காணோம்' என்று போலீசுக்கு ரிப்போர்ட் செய்தார். 'ரங்கநாதன் கோஷ்டி ஊர் எல்லையிலிருந்து தப்பிச் சென்றுவிட்டனர்' என்ற செய்தியும் போலீஸாருக்குத் தெரிந்தது. இரண்டையும் சம்பந்தப்படுத்தி யோசித்த போலீஸார் சர்மாவை அழைத்து 'உம்முடைய பெண்ணுக்கும் ரங்கநாதனுக்கும் தொடர்பு உண்டா?' என்று விசாரித்தனர். சர்மா 'காலேஜில் படிக்கும்போது பழக்கம் உண்டு' என்று கூறவே காத்தியாயினி ரங்கநாதன் கோஷ்டியோடு சென்றிருக்க வேண்டும் என்று அனுமானித்தனர்.

இதன் பிறகு ஆறு மாதங்கள் போலீஸாருக்கு ஒரு தகவலும் தெரியவில்லை. பெண், போய்விட்டாளே என்ற ஏக்கத்தினால் நாகராஜசர்மா மனமுடைந்து உயிரைவிட்டார்.

**ஜூன்-ஜூலை**

ஜூன் மாதம் மூன்றாந்தேதி தூத்துக்குடியில் சட்டத்தை மீறி உப்புக் காய்ச்சப் போவதாகத் துண்டுப் பிரசுரங்கள் இரகசியமாக விநியோகிக்கப்பட்டிருந்தன. தகவல் எனக்கு எட்டிவிட்டது.

இரண்டாந்தேதி சாயங்காலமே பாளையங்கோட்டை சென்று சர்க்கிளிடம் கூறினேன். 'மப்டி'யில் நாலைந்து போலீஸ்காரர்களுடன் என்னையே தூத்துக்குடிக்கு அனுப்பினார்.

தூத்துக்குடிக்கும் மணப்பாட்டுக்கும் நடுவே ஜனநடமாட்டம் அதிகமில்லாத ஒரு பகுதியில் உப்புக் காய்ச்ச ஏற்பாடாகியிருந்தது. நானும் போலீஸ்காரர்களும் அந்த இடத்துக்குப் போனபோது உடைந்த பானைகளும் இடிந்த அடுப்புகளும்தான் எங்களை வரவேற்றன.

விசாரித்ததில் இரண்டாந்தேதி சாயங்காலமே யாரோ பத்துப் பன்னிரண்டு ஆண்பிள்ளைகளும் ஒரு பெண்ணும் வந்து உப்புக் காய்ச்சிவிட்டுப் போய்விட்டதாக அக்கம் பக்கத்துக் கிராமத்தார்கள் கூறினர்.

மேலும் புலன் விசாரித்ததில், திருநெல்வேலியிலிருந்து தப்பி ஓடிய மறுமாதமே காத்தியாயினியும் ரங்கநாதனும் பாபநாசம் சிவன்கோவிலில் கலியாணம் செய்து கொண்டார்கள். அவர்கள் தம்பதிகளாகி ஒன்றே கால் வருஷத்துக்கு மேல் ஆகப் போகிறது. ரங்கநாதன் கோஷ்டியார் பொதிகை மலையில் பாணதீர்த்தத்துக்கு அருகில் ஒரு ஆசிரமம் மாதிரி அமைத்துக் கொண்டு அங்கே அஞ்ஞாத வாசம் செய்கிறார்கள். அவர்கள் அடிக்கடி மாறுவேடங்களில் ஊருக்குள் வந்து தேசியப் போராட்டங்களுக்கும் பிரசங்கங்களுக்கும் தூண்டுகிறார்கள். தூத்துக்குடியில் உப்புக் காய்ச்சிவிட்டுப் போனது அவர்கள்தான் என்று தெரியவந்தது.

அதோடு, இரண்டு மூன்று மாசமாகக் காத்தியாயினி ஆசிரமத்தை விட்டு வெளியேறுவது இல்லையென்றும் அவள் வயிறும் பிள்ளையுமாக நிறைமாதமாக இருக்கிறாள் என்றும் கூடத் தெரியவந்தன.

போராட்டத்துக்கும் அஞ்ஞாத வாசத்துக்கும் இடையே தாம்பத்திய உறவும் வளர்ந்து கனிந்திருப்பதை எண்ணும் போது எனக்கு வியப்பாக இருந்தது.

"சரி! உங்களுக்குத் தேவையான விவரங்களை எல்லாம் விசாரித்துத் தெரிந்து கொண்டாயிற்று. இனிமேல் தேடிப் பிடித்து உள்ளே தள்ளவேண்டியது உங்கள் பொறுப்பு" என்று எனக்கு உத்தரவிட்டார் சர்க்கிள்.

**ஆகஸ்டு-செப்டம்பர்**

இந்த இரண்டு மாதங்களில் உத்தியோகக் காரியங்களில் இருந்த கவலையைவிட வீட்டுக்கவலை அதிகமாக இருந்தது. அப்போது என் மனைவிக்குப் பிரசவ சமயம். இது அவளுக்கு மூன்றாவது பிரசவம். முதல் இரண்டும் கசப்பு நிறைந்த அனுபவங்களாக முடிந்துவிட்டன. தலைச்சன் குழந்தை வயிற்றிலேயே இறந்து பிறந்தது. இரண்டாவது குழந்தை பிறந்த மறுநாள் இறந்தது. இந்த இரு ஏமாற்றங்களால் அதிர்ச்சியும், பயமும் கொண்டிருந்தாள் அவள். அம்பாசமுத்திரம் எங்களுக்குப் புதிய ஊர். என்னையும், அவளையும், வேலைக்காரியாக நியமிக்கப்பட்டிருந்த ஒரு வயதான கிழவியையும் தவிர ஒத்தாசைக்கு வேறு ஆட்கள் இல்லை. நானோ அடிக்கடி வெளியூருக்கும் அங்கும் இங்குமாக அலைந்து கொண்டிருந்தேன். வீட்டில் தங்கி அவள் மனத்தைத் தேற்றவோ ஆறுதல் கூறவோ எனக்கு நேரமில்லை.

"இந்தாருங்கள்! எவன் வேண்டுமானாலும் எங்கே வேண்டுமானாலும் உப்பையோ புளியையோ காய்ச்சித் தொலைத்துப் போகட்டும். நீங்கள் பேசாமல் மூன்று மாதத்துக்கு லீவு போடுங்கோ. திருநெல்வேலிக்குப் போய்விடலாம். எனக்கென்னமோ மாசம் நெருங்க நெருங்கப் பயமாக இருக்கிறது" என்றாள் அவள். எனக்கு அவள் சொல்வது சரியென்றே தென்பட்டது. இந்த அம்பாசமுத்திரத்தில் நமக்கு வேண்டிய உறவினர்களும் இல்லை. ஆஸ்பத்திரியில் சேர்த்துவிடலாம் என்றால், பிரசவ ஆஸ்பத்திரியே கிடையாது. பேசாமல் திருநெல்வேலிக்குப்போய்விட்டால் வீட்டில் வைத்துக் கொண்டாலும், ஆஸ்பத்திரியில் சேர்த்தாலும், சொந்தக்காரர்கள் ஒத்தாசை கிடைக்கும். முந்தின இரண்டும்தான் அப்படியாகிவிட்டது. இந்தப் பிரசவத்திலேயாவது பெற்றுப் பிழைத்துத் தேற வேண்டுமே என்ற கவலை எனக்கு.

இதையெல்லாம் நினைத்துத்தான் சர்க்கிளிடம் மூன்று மாதங்கள் லீவு கேட்க எண்ணியிருந்தேன். ஆனால் நிலைமை லீவைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே இடம் கொடுக்கவில்லை. கிடைத்திருந்த செய்திகளால் நான் சுறுசுறுப்பாக வேலையில் ஈடுபட வேண்டிய கட்டாயத்தில் இருந்தேன். நான் பாளையங்கோட்டையிலிருந்து திரும்பியபோது லீவு பெற்று வந்திருப்பேன் என்று அவள் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டு இருந்தாள்.

"என்ன, லீவு கிடைச்சுதா?"

"சும்மா நச்சரிக்காதே. இப்போது லீவு கேட்கவே வழியில்லை. கேட்டாலும் கிடைக்காது. பிரசவத்துக்கு இங்கேதான்!" என்று எரிந்து விழுவதுபோல் பதில் சொன்னேன்.

அவளுக்கு அழுகை வந்துவிட்டது. விசித்துக்கொண்டே விக்கி விக்கி அழத் தொடங்கிவிட்டாள். என் கோபம் மாறியது.

"சே! இதென்ன? அசடு மாதிரி இப்படியா அழுவது? என்ன செய்யலாம்? நமக்கு வாய்த்த உத்தியோகம் அப்படி இருக்கிறதே!" என்று கூறி அவளைச் சமாதானப்படுத்தினேன்.

"இந்தத் தடவையாவது நான் முழுசா உயிரோடு பெத்துப் பிழைக்கணுமே என்று உங்களுக்கு அக்கறை இருந்தால்தானே? அசம்பாவிதமாக ஏதாவது நடந்தால் அப்புறம் நான் பிழைச்சு எழுந்திருப்பேன் என்று கனவிலேகூட நினைக்காதீங்கோ!" - அவள் குரலில் ஒரு அழுத்தம் ஒலித்தது. மேலே வளர்த்தாமல் நான் பேச்சை நிறுத்தினேன்.

அன்று மலைமேல் போய் வருவதற்குத் திட்டமிட்டிருந்தோம். இரண்டு நாட்களாகப் பாபநாசத்தில் முகாம் போட்டிருந்தேன். அக்காலத்தில் விக்கிரமசிங்கபுரத்தில் அவுட் ஸ்டேஷனும், அதில் ஒரு ஏட்டும் சில கான்ஸ்டபிள்களுமே உண்டு. அவர்களும் எனக்கு ஒத்தாசையாகப் பாபநாசத்துக்கு வந்திருந்தார்கள். அன்று காலை எல்லோரும் பதினோரு மணி சுமாருக்குக் கலியாண தீர்த்தத்தின் ஓரமாகவே சென்று பாண தீர்த்தத்தை அடைவதென்று தீர்மானம் செய்திருந்தோம்.

பாபநாசத்தில் நாங்கள் தங்கியிருந்த இடம் லோக்கல் பண்டு ஆஸ்பத்திரிக்கு எதிர்த்தாற் போலிருந்தது. பழைய காலத்துப் பாணியில் கட்டப்பட்ட முசாபரி பங்களா அது. பத்தேகால் மணி சுமாருக்கு முசாபரி பங்களாவின் வாசலுக்கு வந்து வெளியே சென்றிருந்த கான்ஸ்டபிள்கள் வருகிறார்களா என்று எட்டிப் பார்த்தேன். அப்போது ஒரு ஆள்மீது என் பார்வை நிலைத்தது. உற்றுப் பார்த்தேன். அவனும் என்னைப் பார்த்தான். நான் போலீஸ் உடையிலிருந்தேன்.

**அக்டோபர்-நவம்பர்**

போலி மீசை ஆளை மாற்றிக் காட்டினாலும் அவன் ரங்கநாதன் தான் என்பதை நான் உடனே தெரிந்து கொண்டு விட்டேன். அவன் கையில் ஏதோ ஒரு மருந்துப்புட்டி வேறு இருந்தது.

உடனே உள்ளே சென்று சாதாரண உடையிலிருந்த இரண்டு கான்ஸ்டபிள்களை அனுப்பினேன். ஐந்தே நிமிஷங்களில் கான்ஸ்டபிள்கள் அவனை உள்ளே இழுத்துக்கொண்டு வந்துவிட்டனர். ஏறக்குறைய இரண்டரை வருஷங்களாக அகப்படாத ஆள் அகப்பட்டுவிட்டான்.

"என்னப்பா ரங்கநாதா! உன்னைத் தேடிப் பாணதீர்த்தத்துக்குப் புறப்பட ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறோம். நீ என்னடா என்றால் எங்களுக்குக் கொஞ்சம்கூடச் சிரமம் வைக்காமல் இங்கேயே வந்துவிட்டாய்!" என்று நான் எகத்தாளமாகக் கேட்டேன்.

"சார்! உங்கள் காலில் விழுந்து கும்பிடுகிறேன். இன்னும் நாலுமணிநேரம் எனக்கு அவகாசம் கொடுங்கள் சார். இந்த மருந்தைக் கொண்டு போய் கொடுத்துவிட்டு நானே உங்களிடம் சரணாகதி அடைந்துவிடுகிறேன். குழந்தையைப் பெற்றுவிட்டு உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறாள் சார்! தயவுசெய்யுங்கள்..." - அவன் துடித்தான்.

"யார்? உன் மனைவி காத்தியாயினிதானே?"

"ஆமாம், சார்! கருணை பண்ணுங்கள்!" என்று கதறினான். நான் அவனை ஊடுருவி நோக்கினேன். அது போலி நடிப்பாகத் தோன்றவில்லை. உண்மையிலேயே பாணதீர்த்தக்கரையிலுள்ள ஆசிரமத்தில் காத்தியாயினி பிரசவித்திருக்கிறாள் என்றே தோன்றியது. ஆனால் போலீஸ் ஒழுங்குப்படி கையில் சிக்கிக் கொண்ட அவனை நாலுமணிநேரம் விட்டுப் பிடிக்க எனக்கு உரிமையில்லை.

"ரங்கநாதா! நான் போலீஸ் அதிகாரி. சட்டத்துக்கும் கருணைக்கும் வெகுதூரம். உன்னை விட முடியாது. அந்த மருந்தை என்னிடம் கொடு. நாங்கள் உன் கோஷ்டியைச் சேர்ந்தவர்களைப் பிடிப்பதற்காகப் பாணதீர்த்தம் போகிறோம். உன் மனைவியையும் குழந்தையையும் காப்பாற்ற நான் முடிந்தவற்றைச் செய்கிறேன்" என்றேன். அவன் வேண்டாவெறுப்புடன் மருந்துப் புட்டியை என்னிடம் கொடுத்தான். உடனே தக்க பாதுகாப்போடு பஸ் ஏற்றி அவனைப் பாளையங்கோட்டை சப் ஜெயிலுக்கு அனுப்பிவிட்டேன். மருந்துபுட்டியோடு நானும் மற்றவர்களும் வேகமாகப் பாணதீர்த்தத்துக்கு விரைந்தோம்.

காட்டிலே வழியை அடையாளம் கண்டுகொண்டு ஏற்ற இறக்கமான பாதைகளில் நடந்து பாணதீர்த்தத்தை அடையும்போது மாலை மூன்று மணிக்கு மேல் ஆகிவிட்டது. ஆனால் நாங்கள் எதிர்பார்த்தபடி வேறு தேசபக்தர்கள் யாரும் அப்போது அங்கே ஆசிரமத்தில் இல்லை. ஒரு கட்டிலில் பிரசவித்த தாயும் குழந்தையும் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர்.

மருந்துப் புட்டியோடு அவசரம் அவசரமாகக் கட்டில் அருகே சென்று கையைத் தட்டி ஓசை மூலம் எழுப்ப முயன்றேன். குழந்தை விழித்துக் கொண்டு அழுதது. தங்க விக்கிரகம் போல் அழகான ஆண் குழந்தை. தாய் அசையவே இல்லை. இன்னும் பலமாகக் கையைத் தட்டினேன்.

ஊஹூம்! அவள் எழுந்திருக்கவில்லை! என் மனத்தில் பீதி ஏற்பட்டது. திடுக்கிட்டுப் போய் மூக்கருகில் கை வைத்துப் பார்த்தேன். மூச்சு வரவில்லை. என் கையிலிருந்த மருந்துப் புட்டி கீழே நழுவி விழுந்து உடைந்தது.

ஆம்! பெற்றவனைத் துறந்து, கல்லூரிப் படிப்பைத் துறந்து ஒரு தேசபக்தனோடு காட்டுக்கு ஓடிவந்த அந்தப் புதுயுகச் சீதையான தேசசேவிகை காத்தியாயினி நிரந்தரமாக உறங்கிக் கொண்டிருந்தாள். காலன் அவளுடைய உயிரைப் பறித்துக் கொண்டு விட்டான். போலீஸ் வாழ்வில் இரக்கம் என்ற பண்பை அதிகம் பெறாத எனக்கே கண்களில் நீர் துளித்தது. நெஞ்சில் ஏதோ கனமாக அமுக்குவது போலிருந்தது.

அருணோதயத்தில் மலர்ந்த அந்தக் குழந்தை கையையும் காலையும் உதைத்துக் கொண்டு வீறிட்டு அழுதது. பாலுக்காகத் தாயின் நெஞ்சை எட்டித் தடவியது. தாய் பால் கொடுக்கும் நிலையிலா இருந்தாள்! கட்டிலில் கிடந்த ஒரு துணியோடு குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டேன். கான்ஸ்டபிள்களை அவளை எரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தூண்டினேன்.

அன்று! காலம் காலமாய்ப் பொங்கி விழுந்து கொண்டிருக்கும் பாணதீர்த்த அருவியின் கரையில் ஒரு தாயின் உடல், உடல் என்ற நிலையைக் கடந்து சாம்பலாயிற்று. காத்தியாயினி என்ற தாய்மை, காத்தியாயினி என்ற உண்மை, என்றும் இனி என்றும் தலையெடுக்க முடியாமல் பொதிகை மண்ணில் கலந்துவிட்டது.

குழந்தையோடு நானும் கான்ஸ்டபிள்களும் பழைய பாபநாசத்தை அடைந்தபோது அங்கே எனக்குப் பொறி கலங்கக்கூடிய இன்னொரு பேரிடி காத்திருந்தது.

'மனைவிக்கு அபாயம், உடனே வரவும்' என்று அம்பாசமுத்திரத்திலிருந்து தந்தி வந்திருந்தது. உடனே விக்கிரமசிங்க புரத்திலிருந்த போலீஸ் ஜீப்பை எடுத்துக்கொண்டு கிளம்பினேன். காத்தியாயினியின் குழந்தையை வேறு எங்கும் விட்டுச் செல்ல இயலாததனால் என்னோடு ஊருக்குக் கொண்டு சென்றேன். புறப்படுவதற்கு முன் பாபநாசத்தில் கொஞ்சம் பசும்பால் வாங்கிக் காய்ச்சிப் புகட்டியிருந்ததினால் குழந்தையின் பசி அடங்கியிருந்தது. அம்பாசமுத்திரத்தை அடையும்போது இரவு ஒன்பதரை மணி.

வீட்டில் வேலைக்காரக் கிழவி இருந்தாள். அவள்தான் யாரோ படிக்கத் தெரிந்த ஆளைத் தேடி தந்தி எழுதச் சொல்லி அடித்தாளாம்.

"என்ன? எப்படியாச்சு?"

"அதை என் வாயாலே எப்படிச் சொல்லுவேனுங்க! இப்பத்தான் ஆச்சு! குழந்தை உசிரோட பிறக்கலை. அம்மாவுக்கு இன்னும் தெரியாது. தெரிஞ்சா மனசு விட்டுப் போயிடும்..."

வேலைக்காரி கண்ணீரைத் துடைத்துக் கொண்டே கூறினாள்.

குபீரென்று எனக்கு ஒரு யோசனை தோன்றியது. "நீ போய் டாக்டரை அழைத்துக் கொண்டு வா!" என்று வேலைக்காரியைத் துரத்திவிட்டுக் காத்தியாயினியின் குழந்தையை ஜீப்பிலிருந்து எடுத்து வந்தேன்.

குழந்தைகள் இடம் மாறின. காத்தியாயினியின் குழந்தை என் மனைவியின் அருகே இடம் பெற்றது. என் மனைவிக்குப் பிறந்த குழந்தை காத்தியாயினியின் 'இறந்த குழந்தை' போலீஸ் டாக்டரிடம் அனுப்பப்பட்டது. டாக்டர் வந்தார். மனைவிக்கு பிரக்ஞை வரவழைத்தார். அவள் குழந்தையின் முகம் கண்டு மலர்ச்சி பெற்றாள்.

காத்தியாயினியும் குழந்தையும் இறந்துவிட்டதாகப் பாளையங்கோட்டை சப் ஜெயிலில் ரங்கநாதனிடம் நானே நேரில் சென்று கூறியபோது அவன் கதறிக் கதறி

அழுதான். அந்த அழுகை என் இதயத்தைக் கலக்கியது. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு உண்மையை மறைத்துக் கொள்வது எவ்வளவு கஷ்டமான காரியம்!

**டிசம்பர்**

என் மனைவி உடம்பு தேறி எழுந்துவிட்டாள். தன்னுடைய, அழகான ஆண் குழந்தையைக் கொஞ்சுவதற்கு நேரம் போதவில்லை அவளுக்கு.

"இந்தாங்கோ இதென்ன வேடிக்கை? நீங்கள் அட்டை கரி நிறம், நான் மா நிறம், நமக்கு எப்படி இவ்வளவு சிவப்பாகக் குழந்தை பிறந்தது?" என்று வேடிக்கையாகக் கேட்டாள் ஒரு நாள். என் உடல் அப்போது கிடுகிடுவென நடுங்கியது.

டிசம்பர் கடைசியில் ஒரு நாள் என்னைத் திருச்சிராப்பள்ளிக்குச் சர்க்கிள் இன்ஸ்பெக்டராகப் பிரமோஷனோடு மாற்றியிருப்பதற்காக என் சம்மதத்தைக் கோரி மேலதிகாரியிடமிருந்து உத்தரவு வந்தது.

அந்த உத்தரவு வந்த அதே சமயத்தில் வேறோர் கடிதத்தை உறைக்குள் இட்டு மேலதிகாரிக்கு அனுப்புவதற்கு விலாசம் எழுதிக் கொண்டிருந்தேன் நான்.

அது என் ராஜினாமாக் கடிதம்! முதலில் மேலதிகாரி என் ராஜினாமாவை ஒப்புக் கொள்ள மறுத்தார். பின் நான் வற்புறுத்தி ஒப்புக் கொள்ளச் செய்தேன். என் மனம் நிம்மதி அடைவதற்காக வேலையை உதறித்தள்ளினேன். ஆனால் அதன் பின்பும் நிம்மதி கிடைக்கவில்லை. சத்தியத்தை மறைத்து அசத்தியத்தை இரகசியமாக வைத்துக் கொண்டிருப்பவனுக்கு நிம்மதி ஏது?

டைரியைப் படித்து முடித்தாயிற்று. எத்தனையோ வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் மூழ்கி எழுந்து கரையேறிவிட்டேன். அதோ அவள் ஐம்பத்தாறு வயதுக் கிழவி. நான் எழுபது வயசுக் கிழவன். வீரராகவனுக்கு இருபத்தொன்பது வயது! மனைவி குழந்தையோடு விக்கிரமசிங்கபுரத்தில் வேலை பார்க்கிறான். அம்மாவையும் அப்பாவையும் பாணதீர்த்தம் பார்க்க வரச்சொல்லி கடிதம் எழுதியிருக்கிறான். 'யார் அம்மா? யார் அப்பா? அதோ ரேழி வாயில்படியில் தலைவைத்து உறங்குபவள் அவன் தாயாரா? நான் அவன் தகப்பனா? எது உண்மை?'

உலகம் அப்படிச் சொல்லி உறவு உண்டாக்க வைத்தவன் நான்தானே? நான் சாகிறவரை அந்த ரகசியமும் சாகாது. பாணதீர்த்தம் பார்க்க வேண்டுமாம், பாணதீர்த்தம். அந்த இடத்து மண்ணை இன்னொரு முறை இந்த ஜன்மத்தில் மிதிக்கமாட்டேன்! நல்ல வேளை! காலம் மட்டும் இப்படி மறதியை உண்டாக்காவிட்டால் என் மனமே என்னைக் கொன்றிருக்கும்! மறந்து கொண்டே வாழ்கிறேன்.

"காலமே! ஓயாத சக்கரமே! எனக்கு இன்னும் நிறைந்த ஞாபகமறதியைக் கொடுத்தருள். நினைவே வேண்டாம். உனக்கும் உன் சக்திக்கும் ஒரு வணக்கம்."

(கல்கி, 28.4.1957)

# 12. மெய்

நீதிமன்றத்திலிருந்து திரும்பி வந்து அரை மணி நேரம் ஆயிற்று. ஒரே அலுப்பாக இருந்தது. உடை மாற்றிக் கொண்டு சிற்றுண்டி காப்பி அருந்தினேன். மனத்தில் துளி நிம்மதி இல்லை. ஏதோ படுபாதாளத்தில் விழுந்துவிட்டதுபோல ஒரு தாழ்மை மனப்பிராந்தி பிடித்து ஆட்டியது. பெருமையும், பேரும், புகழும் அன்றைய தினம் ஏற்பட்ட ஒரே ஒரு தோல்வியில் முழுகிப் போயின.

ஆம், மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டு அன்று வாதாடிய வழக்கிலே என் கட்சி தோற்றுவிட்டது. என் கட்சி மட்டுமா? நியாயமே தோற்றுவிட்டது. இப்போது நினைத்தாலும் நெஞ்சு குலுங்குகிறது. கொலை செய்யாத அப்பாவி மனிதனான என் கட்சிக்காரன் நீதியின் தீர்ப்பைக் கேட்டுக் குமுறிக் குமுறி அழுதுகொண்டே சிறைக்குப் போனான். உண்மையில் அந்தக் கொலையைச் செய்தவனான எதிர்க்கட்சிக்காரன் சந்தர்ப்ப சாட்சியங்களின் உதவியால் 'நிரபராதி' என்று கருதப்பட்டு விடுதலை செய்யப்பட்டான்.

"ஐயோ சாமீ! தர்மம் நியாயம் எல்லாத்துக்குமே கண் அவிஞ்சு போச்சுங்களா?" என்று 'குற்றவாளியாக்கப்பட்டவன்' கதறிய போது என் நெஞ்சை யாரோ இறுக்கி அமுக்குவதுபோல இருந்தது.

யார் என்ன செய்யலாம்? இந்தக் காலத்தில் சத்தியத்தின் தலைவிதி, சாட்சி சொல்பவர்களின் யோக்கியதையைப் பொறுத்தல்லவா இருக்கிறது!

மனம் மேலும் மேலும் குழம்பியது. நான் படம் பார்க்கப் புறப்பட்டேன். பெயரைப் பார்த்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"அரிச்சந்திரன்" - முதலிலேயே தெரிந்திருந்தால் வந்திருக்கவே மாட்டேன். எந்த மனக்குழப்பதைப் போக்கிக் கொள்ளலாம் என்றெண்ணி வந்தேனோ, அதே குழப்பத்தைச் சித்திரிக்கும் கதை.

பொறியிலிருந்து தப்புவதாக எண்ணிக் கொண்டு பொறிக்குள்ளேயே மாட்டிக் கொண்ட எலியின் நிலையை அடைந்தேன். என் கதை? - மெய்க்கும் பொய்க்கும் ஏற்பட்ட போராட்டத்தில் பொய் வென்ற கதை! அரிச்சந்திரன் கதை - அது பொய்க்கும் மெய்க்கும் ஏற்பட்ட போராட்டத்தில் பொய் தோற்ற கதை.

இந்த இரண்டு கதைகளுக்கும் இடையே காலம் என்ற கொத்தன் புகழ் என்ற பெரிய மதிலை எழுப்பியிருந்தான்.

அன்று கோர்ட்டில் நடந்த வழக்கில் நிரபராதியைக் காப்பாற்ற முயன்றவன் நான், என் கட்சி மெய்யின் கட்சி. ஆனால் அது தோற்றுவிட்டது. பிரதிவாதிக்காக வாதாடிய

வக்கீல் ஒரு கொலைகாரனை நிரபராதி என்று நிரூபிக்க முயன்றார். அவர் கட்சி பொய்யின் கட்சி; ஆனால் அது வென்றுவிட்டது! இதுதான் இந்த யுகத்தின் தர்மமா?

திரையில் படம் 'விறு விறு' என்று ஓடிக் கொண்டிருந்தது. விசுவாமித்திரர் அரிச்சந்திரனை எப்படியாவது ஒரு பொய் சொல்ல வைத்துவிட வேண்டும் என்று பிரம்மப்பிரயத்தனம் செய்து கொண்டிருந்தார்.

"கண்ணுக்குத் தெரியாததெல்லாம் பொய்யானால் பகுத்தறிவும் பொய்தான், கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் மெய்யானால் கானல் நீரும் மெய்தான்; எது மெய்? எது பொய்? விஷய ஞானத்தின் தெளிவுதான் மெய்யா-பொய்யா என்பதற்கு அளவு கோல், காட்சியும் காணாமையும், மெய் பொய்களுக்கு இலக்கணமல்ல!" - படத்தில் வசனகர்த்தா தன் சாமர்த்தியத்தையெல்லாம் அள்ளித் தெளித்திருந்தார். 'பளிச் பளிச்'சென்று மின்வெட்டுப் போல அங்கங்கே வசனத்தில் தத்துவக் கருத்துக்களும் தர்க்க நியாயங்களும் மின்னின.

எல்லா நட்சத்திரங்களுமே தத்ரூபமாக நடித்திருந்தார்கள். படத்தைத் தயாரித்தவர்களுக்கு நல்ல வெற்றியைக் கொடுத்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

அரிச்சந்திரன் நாடு இழந்தான்; மனைவி, மகன், இருவரோடும் காட்டுக்குப் போகிறான். அலைகிறான், கஷ்டப்படுகிறான்; அப்போது நட்சத்திரேயன் வந்து மிரட்டுகிறான். அந்தச் சத்தியபுருஷன் கடனுக்காக மனைவியை விலைக்கு விற்கிறான். சுடுகாட்டுப் பறையனாகிறான். லோகிதாசனைப் பாம்பு கடிக்கிறது. சந்திரமதி நள்ளிரவில் பிள்ளையின் பிணத்தோடு சுடுகாட்டுக்கு வருகிறாள்.

"முனிசிரேஷ்டரே! நாட்டை இழந்தேன், அரசை இழந்தேன், மனைவியை இழந்தேன், மகனை இழந்தேன், என்னையுங்கூட இழந்தேன், உயிரையே இழக்க நேர்ந்தாலும் சரி, சத்தியத்தை இழக்கத் தயாராயில்லை!" - அஞ்சா நெஞ்சுடனே அரிச்சந்திரன் விசுவாமித்திரரை எதிர்த்துப் பேசுகிறான்.

சோதனை முடிகிறது. தேவர்கள் மலர் மாரி பொழிகின்றனர். விசுவாமித்திரர் அரிச்சந்திரனை வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறார். இழந்தவற்றையெல்லாம் பெறுகிறான் அரிச்சந்திரன். கதை சுபமாக முடிகிறது. அரிச்சந்திரன் வென்றான்; சத்தியம் வென்றது.

படம் முடிந்தது.

நான் சென்ற ஆட்டோ ரிக்ஷா அத்துமீறிய வேகத்தில் ஓடிக் கொண்டிருந்தது.

"மெல்ல ஓட்டுப்பா; அகப்பட்டுக் கொண்டால் வம்பு."

"நீ சும்மா வா ஸாமீ! நம்ப கையிலே வாகனத்தைப் பிடிச்சா புஷ்ப விமானங் கணக்கா பறக்கணுமுங்க..."

'சரி, இவன் நிஜமாகவே சுயநினைவில் இல்லை' என்று தெரிந்து கொண்டேன். தொடர்ந்து அவனிடம் பேசவுமில்லை. கடவுள் புண்ணியத்தில் எப்படியாவது வீடு போய்ச் சேர்ந்தால் போதுமென்று மனத்தில் தியானம் செய்து கொண்டிருந்தேன்.

"எங்கே ஸாமீ போகணும்னு சொன்னீங்க...?"

"அதுக்குள்ள மறந்துட்டியா? மைலாப்பூர் - மந்தைவெளி."

"மறப்பேனா சாமி? சும்மா விளையாட்டுக்காகக் கேட்டேன்!"

ஸம்ஸ்க்ருத காலேஸ், ராமகிருஷ்ணமடம் ஒவ்வொன்றாகக் கடந்தன. பி.எஸ். ஹைஸ்கூல் வாசலில் ஒரு பிச்சைக்காரன் ஆலமரத்தடியிலிருந்து புறப்பட்டுச் சாலையின் நடுவே நடந்து கொண்டிருந்தான்.

"ஹாரன் கொடப்பா; குருடனோ என்னவோ?"

"சும்மா இரு ஸாமீ. அந்தப் பய உயிரை மதிக்கல்லே, நமக்கென்ன?..."

"ஐய்யோ... அப்பா!..." குரூரமான ஓர் அலறல். 'ஆட்டோ' நின்றது. அது அவன்மேல் ஏறி விட்டது. எனக்குச் சப்த நாடியும் ஒடுங்கிவிட்டது. டிரைவர் மலங்க மலங்க விழித்தான்.

தூரத்தில் ஒரு போலீஸ் கான்ஸ்டபிள் ஓடி வருவதைக் கண்டதும் எனக்கு உடம்பு 'வெட வெட' வென்று நடுங்கியது. ஓடிவிடலாமா என்றுகூடத் தோன்றியது. ஆனால் அப்படிச் செய்யவில்லை.

"கொஞ்சம் இருங்க; ஒரு தந்திரம் செய்றேன்" என்று அவன் குபீரென்று ஓடி ஆட்டோ ரிக்ஷாவுக்குள் அடியிலிருந்து ஏதோ சீசாவை எடுத்தான். சக்கரத்தின் அடியில் அடிபட்டுக் கிடந்த பிச்சைக்காரனின் கையில் அதைத் திணித்துவிட்டு நின்று கொண்டான். விளக்கொளியில் அது ஒரு பிராந்தி பாட்டில் என்பது எனக்கு நன்றாகத் தெரிந்தது.

இரண்டே நிமிஷத்தில் கூட்டம் கூடிவிட்டது. போலீஸ்காரர்களும் இரண்டு மூன்று பேர் வந்துவிட்டார்கள்.

எனக்கு நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாம் போல அவமானமாக இருந்தது. சமூகத்தில் பேரும் புகழும் பெற்ற ஒரு வக்கீல் இந்த மாதிரிச் சில்லறை விபத்தில் மாட்டிக் கொண்டால் பத்திரிகையிலே தலை உருளுமே...? என் மனம் வெட்கத்தால் குன்றியது!

"ஸார் பாருங்க ஸார்...! பயல் நிறையச் குடிச்சிட்டுத் தன் நினைவில்லாமல் தெருவிலே நடந்து வந்தான். கை வலிக்கிறாப்பலே ஹாரன் அடிச்சேன். பாவிப் பய காதிலேயே போட்டுக்கலை சார்... இதோ பாருங்கள். கையிலேகூடப் பிராந்திப் புட்டி வச்சிருக்கான்...!"

டிரைவருடைய நாடகத்தை அந்தக் கூட்டம் உண்மையாகவே நம்பியது.

ஆம்புலன்ஸ் வந்தது. போலீஸ் ஜீப்பும் வந்தது. காரில் அடிபட்டு விழுந்தவனை அதே நிலையில் - பிராந்திப் புட்டியும் கையுமாகப் போட்டோ எடுத்தார்கள். கால் மணி நேரத்தில் பத்திரிகை நிருபர்கள் வேறு காமிராவும் கையுமாக ஓடிவந்துவிட்டார்கள். அடிபட்டவனை ஆம்புலன்ஸ் ஏற்றிக் கொண்டு போயிற்று. நானும் டிரைவரும் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கூட்டிக் கொண்டு போகப்பட்டோம்.

சப்-இன்ஸ்பெக்டர் எனக்கு ஜாமீன் வேண்டுமென்றார். நான் ஒரு மனிதரை போனில் அழைத்து ஜாமீன் கொடுக்கச் செய்தேன். அவர் ஸ்டேஷனுக்கு வந்து ஜாமீன் கொடுத்தார். ஆட்டோ டிரைவரை 'ரிமாண்டில்' வைத்துவிட்டார்கள். அடிபட்டவன் ஸ்தலத்திலேயே மாண்டிருப்பதாக ஆஸ்பத்திரியிலிருந்து போலீசுக்குச் செய்தி வந்தது.

"நீங்கள் போகலாம். சம்மன் வரும்போது கோர்ட்டில் ஆஜராக வேண்டும்" என்று இன்ஸ்பெக்டர் கூறினார்.

'அந்த டிரைவருக்கு ஜன்ம தண்டனை விதிச்சு, இனி ஆட்டோ ரிக்ஷாவையே தொட முடியாமல் செய்ய வேண்டும்' என்று நான் முடிவு செய்தேன்.

எதை எதிர்பார்த்துப் பயந்தேனோ அது வீண் போகவில்லை. மறுநாள் எல்லாப் பத்திரிகைகளிலும் அந்த விபத்துச் செய்தி வந்துவிட்டது. ஆனால் ஓர் அதிசயம். விபத்து டிரைவரின் அஜாக்கிரதையால் நிகழ்ந்ததென்றோ, அவன்தான் விபத்துக்குக் காரணம் என்றோ, ஒரு பத்திரிகையாவது எழுதவேயில்லை!

'விபத்துக்குள்ளான பிச்சைக்காரன் குடிபோதையில் இருந்ததால் 'ஆட்டோ' முன் விழுந்துவிட்டான்' என்ற பல்லவியை எல்லாப் பத்திரிகைகளும் பாடியிருந்தன. சில பத்திரிகைகளில் சாராயப் புட்டியோடு கூடிய அடிபட்டவனின் படம்கூட வெளியாகியிருந்தது.

"மேற்படி வாடகை ஆட்டோவில் பிரயாணம் செய்து கொண்டிருந்தவர் மைலாப்பூரைச் சேர்ந்த பிரபல வக்கில் ஸ்ரீ.......... என்பது குறிப்பிடத்தக்கது!" இந்த வரிகளைப் படிக்கும்போது மட்டும் என் மனம் அடித்துக் கொண்ட வேகம் சொல்லி முடியாது.

அன்று மாலையில் அந்த டிரைவரும் ஜாமீனில் வெளிவந்துவிட்டான். வந்ததும் வராததுமாக நேரே என்னிடம் ஓடிவந்தான்.

"சாமீ, நீங்கத்தான் காப்பத்தாணும், நிசத்தை வெளியிட்டுட்டீங்கன்னா நான் அகப்பட்டுக்கிடுவேன். பிள்ளை குட்டிக்காரன் மேலே இரக்கம் காட்டுங்க..."

"நீ ஒரு ராட்சஸன். உன்னை என்ன செஞ்சாலும் தகும். உனக்கு இரக்கம் ஒரு கேடா?"

"ஐயையோ! அப்படிச் சொல்லாதீங்க. நான் சரியானபடி சாட்சியங்களை எல்லாம் தயார்ப் பண்ணிட்டேனுங்க... எல்லாரும் என் வழிப்படி சொல்லச் சம்மதிச்சிட்டாங்க... நீங்களும்..."

"நான் உண்மையைத்தான் சொல்வேன்."

"ஐயோ சாமீ!... மடத்தனமாகக் குடிச்சிட்டு அன்னிக்கி அப்படி நடந்துக்கிட்டேன். நடந்ததை எல்லாம் மறந்து மன்னிச்சிடுங்க. பணத்தைப் பணம்னு பாராமே செலவழிச்சு வக்கீலுக்கும் சாட்சியங்களுக்கும் கொடுத்திருக்கேனுங்க?..."

"நீ செய்த துரோகம் உனக்கே நன்றாக இருக்கிறதா? ஒரு அப்பாவிப் பிச்சைக்காரனை..."

*"துரோகந்தானுங்க; ஆனா என்ன செய்யிறது? எனக்காக மட்டுமா செஞ்சேன்? உங்க கௌரவமும் சம்பந்தப்பட்டிருந்ததே? ஏதாவது தந்திரமாகச் செய்தால்தானே தப்பிக்கலாம்? அதான் அப்படிச் செய்தேனுங்க."*

*"சரி, எப்படியாவது தொலை!"*

*"எப்படியோ, உள்ளதை வெளியிட்டிடாதீங்க, காலிலே விழுந்து கும்பிடறேன்." அந்த டிரைவர் உண்மையாகவே என் காலில் விழுந்துவிட்டான்.*

*அவனது பொய்யில் என் கௌரவமும் உள்ளடங்கியிருப்பதாக அவன் சொன்ன சொல் என்னைத் திகைக்கச் செய்தது!*

*"நான் காட்டிக் கொடுக்கவில்லை, போ...!"*

*அன்று, என் கண் முன்னேயே நீதி செத்தது. இன்றோ, உண்மைக் கொலைகாரன் யார் என்ற மெய் எனக்குத் தெரியும். தெரிந்து என்ன பிரயோசனம்? என் கௌரவம் அந்த மெய்யைச் சொல்லவிடாமல் தடுக்கிறது. ஓர் அப்பாவிப் பிச்சைக்காரன் மேல் ஆட்டோரிக்ஷாவை ஏற்றிக் கொன்ற அந்த டிரைவரை நான் நினைத்தால் காட்டிக் கொடுக்க முடியும் - ஆனால், அந்த விபத்து நடக்கும்போது அவனுடன் நானும்கூட இருந்திருக்கிறேன். உண்மையைச் சொன்னால் 'கேஸ்' என் பேரிலும் தொடருமே?*

*விசாரணை நாள் வந்தது. கோர்ட்டில் ஒரே கூட்டம். பிச்சைக்காரனுக்கு யார் வக்கீல்? - ஒருவருமே கிடையாது. சர்க்கார் தரப்பு வக்கீலும் டிரைவரின் வக்கீலும் காரசாரமாக விவாதித்தனர்.*

*'டிரைவர் மேல் குற்றமே இல்லை. பிச்சைக்காரன் குடித்துவிட்டு ரோட்டில் அசையாமல் நின்றான். அதனால்தான் விபத்து ஏற்பட்டது!' என்பதற்கு ஐந்தாறு பேர் சாட்சி கூறினார்கள்.*

*"பிச்சைக்காரனுக்குக் குடிப்பழக்கம் உண்டு!" என்று அவனைச் சேர்ந்த வேறு சில பிச்சைக்காரர்கள் வந்து சாட்சி கூறினார்கள். எல்லாம் டிரைவரின் பணம் செய்த வேலை.*

*'பிச்சைக்காரனின் மரணத்திற்கு அவனே காரணம். அவன் குடித்துவிட்டு வேண்டுமென்றே ஆட்டோரிக்ஷாவுக்கு முன்னே வந்து விழுந்ததால்தான் இறக்க நேர்ந்தது. டிரைவர் நிரபராதி!' என்று சட்டம் தீர்ப்பு வழங்கியது!*

*சாயங்காலம் அந்த டிரைவர் வந்தான். பழம், மாலை முதலியனவும் அவனுடன் வந்தன.*

*அவனுடைய பரிசுப் பொருள்களைக் காலால் உதைத்தேன். நான் விம்மினேன்.*

*ஆம்! அன்று மெய்க்கு மனிதன் பயந்தான்; இன்று மனிதனுக்கு மெய் பயப்படுகிறது. அன்று சத்தியம் மனிதனை ஆண்டது. இன்று சத்தியத்தை மனிதனின் சட்டம் ஆளுகிறது.*

**(உமா, மே, 1957)**

## 13. நடுத்தெருவில் நாற்பது நிமிஷம்

அது ஒரு முச்சந்தி. இரண்டு ஹைரோடுகளும் ஒரு தெருவும் சந்திக்கிற இடம். அந்த இடத்தில் ஒன்று கூடுகின்ற சந்துகளையும், முடுக்குகளையும் சொல்லிமுடியாது. ஜனக்கும்பலும், காரும் வண்டியும் ஜட்காவும், ரிக்ஷாவும் சதா புழங்குகிற இடம்.

இவற்றுக்கெல்லாம் முத்திரை வைப்பது போல அந்த முச்சந்தியின் நான்கு திசைகளிலும் நான்கு வேறு அம்சங்கள் சிறப்பாக அமைந்திருந்தன. கலகலப்புக்கும் ஆரவாரத்துக்கும் இவைகளையும் முக்கியமான காரணங்கள் என்று சொல்லலாம்.

வடக்குப் பக்கத்தில் நகரத்தின் ஜெனரல் போஸ்ட்டாபீஸ். மாடியோடு கூடிய பிரம்மாண்டமான கல் கட்டடம்; கட்டடத்தின் முகப்பை எடுத்துக்காட்டும் அழகாகக் கத்தரித்து விடப்பட்ட சவுக்குமர வேலி.

தென்புறத்தில் நகரத்திலேயே பிரபலமான 'பாங்கு' ஒன்றின் பெரிய கட்டடம். வெள்ளை வெளேரென்று கம்பீரமாகக் காட்சியளிக்கும் நான்கு மாடிக் கட்டடம். வாசலில் முறுக்கிவிட்ட கிருதாவும் கத்தியுமாக விறைத்தது விறைத்தபடியே ஒரு கூர்க்காப் பாராக்காரன் நின்று கொண்டிருக்கிறான். முன்புறம் முழுவதும் அழகான பல குரோட்டன்ஸ் செடிகள். கண்ணைக் கவரும் வண்ண மலர் குலுங்கும் பூந்தொட்டிகள். அதற்கு இப்பால் இரும்புக் கிராதியோடு கூடிய வாயில் - கேட்.

கீழ்ப்புறம் பெண்கள் படிக்கிற கான்வென்ட் ஹைஸ்கூல். அதன் கட்டடம் மஞ்சள் காவி பூசிக் கொண்டு மங்களகரமாகத் தோற்றமளித்தது. பெண்கள், புத்தகமும் கையுமாக உள்ளே போய்க் கொண்டும் வெளியே வந்து கொண்டும் இருக்கிறார்கள்.

மேல்புறம் ரயில்வே கூட்ஸ் ஷெட்டிலிருந்து சாமான்களையும், பார்சல்களையும் விலாசதாரர்கள் வாங்கிக் கொண்டு வருகிற வழியில் பிரதானமான வாசல். கை வண்டிகளும், மேலே மூடப்பெறாத திறந்த லாரிகளும், வேறு வாகனங்களுமாகக் கூட்ஸ் ஷெட்டின் வாசல் 'ஜே ஜே' என்றிருக்கிறது.

இந்த வியூகத்தின் நடுவே தென்புறமுள்ள 'பாங்கு' கட்டடத்தை ஒட்டி நகர பஸ் நிற்குமிடம் வேறு இருந்தது.

ஐப்பசி மாதத்து அடைமழையில் ஒருநாள் காலை அவசரமாகத் தபாலாபீஸுக்குப் போக வேண்டியிருந்தது. மழை, குடைக்கு அடங்குகிற தினுசாக இல்லை. வெளுத்து வாங்கிக்கொண்டிருந்தது. எப்படியோ ஒரு டாக்ஸியை வாடகைக்குப் பிடித்துக் கொண்டு வந்துவிட்டேன்.

தபாலாபீஸில் என் காரியம் முடிந்தபோது மழை குறைந்து தூறலாக மாறியிருந்தது. வரும்போது குடைகொண்டு வரவில்லை. நகர பஸ்ஸில் ஏறிப்

போய்விடலாம் என்று எண்ணிக் கொண்டு எதிர்ப்புறம் பாங்குக் கட்டிடத்தின் ஓரமாக மழைத்துளிகள் மேலே விழாமல் ஒண்டிக் கொண்டு நின்றேன். கைக்கடிகாரத்தில் ஒன்பதரை மணி ஆகியிருந்தது. தெருவில் ஜனநடமாட்டம் மழையின் காரணமாகக் குறைந்திருந்தது. கார், பஸ் முதலியன வழக்கம்போல் போய்க் கொண்டுதான் இருந்தன. தெருவில் கணுக்கால் அளவு தண்ணீர் தேங்கியிருந்தது.

கூட்ஸ் ஷெட்டும் தபாலாபீஸும் எட்டரை மணிக்கே திறக்கப் பெற்று வேலையை நடத்திக் கொண்டிருந்தன. பள்ளிக்கூடத்துப் பெண்கள் காரிலும், வண்டியிலும், நடந்து குடை பிடித்துக் கொண்டும் கூட்டம் கூட்டமாகவும் தனியாகவும் வந்து கொண்டிருந்தார்கள். பாங்கு வேலை நேரம் பத்து மணி ஆகையால் அப்பொழுதுதான் கதவுகளையெல்லாம் ஒவ்வொன்றாகத் திறந்து கொண்டிருந்தார்கள்.

எனக்குப் பஸ் வரவில்லை! நான் இன்னமும் அங்கேதான் நின்று கொண்டிருந்தேன். தெருவிலே தண்ணீரும் என் மணிக்கட்டிலே கடிகாரமும் ஓடிக் கொண்டிருந்தன. மழையில் நனையாமல் ஒண்டி நின்றவாறே அந்த நட்ட நடுத்தெருவில் முச்சந்தியின் கலப்பில் வாழ்க்கை எந்த விதமாகப் பெருகியும், குன்றியும், வடிந்தும், தேங்கியும் ஓடுகிறது என்பதை ரசித்து நோக்கினேன். கண்களில் ஆவலும் மனத்தில் சிந்தனையும் கொண்டவனுக்கு இது ரஸமான பொழுதுபோக்கு அல்லவா?

சல்லடையில் மைதா மாவைக் கொட்டி உயரத் தூக்கிப் பிடித்தால் ‘புருபுரு’ வென்று மாவு விழுதே அந்த மாதிரி மெல்லிய சாரல் விழுந்து கொண்டிருந்தது. பாழாய்ப்போன நகர பஸ் இன்னும் வந்து சேரவில்லை. தெருவையும் கைக்கடிகாரத் தையும், பஸ் வருகிற வழியையும் திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டிருப்பதைத் தவிர வேறு வழி இல்லை.

தெருவைப் பார்ப்பது சலித்துப் போனால், பஸ் வருகிற வழியையும், அதுவும் சலித்துப் போனால் கைக்கடிகாரத்தையும் பார்த்துக் கொண்டே இருந்ததில் நேரம் கழிந்து கொண்டிருந்தது.

மணி பத்தும் ஆகி அதற்கு மேலும் ஐந்து நிமிஷம் ஆகிவிட்டது. ‘பாங்கு’ திறந்து வேலை தொடங்கிவிட்டது. பாங்கு வாசலில் ஒரு ஆட்டோ ரிக்ஷா வந்து நின்றது. சூட்டும், கோட்டும் டையுமாகக் கண்கள் தெரியாமல் கறுப்புக் கண்ணாடி அணிந்த ஒரு பெரிய மனிதர் அதிலிருந்து கம்பீரமாக இறங்கினார். புத்தம் புதிய தோல் பை ஒன்று அவருடைய கையில் இருந்தது. ‘டக் டக்’ என்று பூட்ஸ் ஒலிக்க அவர் பாங்கு வாசற்படியில் ஏறியபோது அங்கே நின்ற கூர்க்கா ஒரு வணக்கம் செலுத்திவிட்டு ஒதுங்கி நின்று கொண்டான்.

இவர் இந்த பாங்கியின் காரியதரிசியாகவோ, மானேஜராகவோ அல்லது டைரக்டருள் ஒருவராகவோதான் இருக்க வேண்டும் என்று நானாக எனக்குள் ஒரு குருட்டு அனுமானம் செய்து கொண்டேன். அனுமானம் என்பதே அறிவின் குருட்டுத்தனம்தானே?

மணி பத்தும் பத்து நிமிஷமும் ஆகிவிட்டது. குதிகால் உயர்ந்த பூட்ஸும் ஜப்பான் பட்டுக் குடையும் ‘பாப்’ செய்த தலையுமாக ஒரு ஆங்கிலோ இந்திய யுவதி, உதட்டில்

சாயம் பளபளக்க ஒய்யாரமாக நடந்து கான்வென்ட் பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்தாள்.

'விர்'ரென்று வாயு வேகத்திலே ஒரு சிவப்பு வண்ண சைக்கிள் தபாலாபீஸிக்குள் போயிற்று. அதன்மேல் உட்கார்ந்திருந்த தந்திப் பியூனுக்கு ஏன்தான் அவ்வளவு தலை போகிற அவசரமோ? ஏதோ குதிரைப் பந்தயத்தில் குதிரையை ஓட்டிக் கொண்டு போகிற 'ஜாக்கி'யைப் போல அசாத்திய வேகத்தில் ஓட்டிக் கொண்டு போகின்றான்.

மேற்கே 'கூட்ஸ் ஷெட்' வாசல் பார்சலில் வந்த சாமானை ஏற்றிக் கொண்டு புறப்பட்டு வருவதற்குத் தயாராக நின்றது ஒரு கை வண்டி. அதன் பக்கத்தில் மூன்று பேர்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஒருவர் பார்சலின் சொந்தக்காரர். தூரத்திலிருந்து பார்த்த என் பார்வைக்கு அசப்பில் அவர் நான் அடிக்கடி மருந்து வாங்கச் செல்லும் ஒரு மருந்துக்கடையின் சொந்தக்காரர் போல் தோன்றினார். 'கடைக்கு ஏதாவது மருந்துச் சாமான்கள் பார்சலில் வந்திருக்கும். எடுத்துக் கொண்டு போவதற்காக வந்திருப்பார்' என்று எனக்குள் எண்ணிக் கொண்டேன். மற்றும் இரண்டு பேரில் ஒருவன் கைவண்டியை முன்புறமிருந்து இழுப்பவன். இன்னொருவன் பின்புறமிருந்து தள்ளுபவன்.

பத்து மணி பன்னிரண்டு நிமிஷம், மூன்றரை செகண்டு ஆகியிருந்தது! 'கூட்ஸ்' ஷெட்டிலிருந்து கைவண்டி கிழக்கு நோக்கிப் புறப்பட்டது. அதேசமயத்தில் தபாலாபீஸிலிருந்த அந்தத் தந்திப் பியூன் தன் சைக்கிளை அசுரவேகத்தில் மேற்கு நோக்கிச் செலுத்தினான். பாங்கு வாசற்படியிலிருந்து 'டக் டக்' என்று ஆள் இறங்கி வருவதற்கு அறிகுறியான பூட்ஸ் ஒலி கேட்டது. திரும்பிப் பார்த்தேன். கறுப்புக் கண்ணாடிக்காரர் தோல் பையும் கையுமாக வந்து கொண்டிருந்தார். அவர் ஏறிக் கொண்டதும் ஆட்டோ ரிக்ஷா கிழக்கு நோக்கிக் கிளம்பியது.

கிழக்கே பள்ளிக்கூடத்து வாசலிலிருந்து அந்த லிப்ஸ்டிக் அழகி கையில் ஒரு கத்தை பைல்களுடன் குடையை ஒயிலாகப் பிடித்துக் கொண்டு தெருவில் வடக்கு நோக்கி இறங்கினாள். கிழக்கே இருந்து ஒரு போலீஸ் லாரி வந்து கொண்டிருந்தது.

திடீரென்று மழை பெரிதாகப் பெய்யத் தொடங்கிவிட்டது. 'சடசட'வென்று மழை ஓசை. கடிகாரத்தை மீண்டும் பார்த்தேன். மணி சரியாகப் பத்தே கால்!

'படார்' என்ற பேரிடி போன்ற ஓர் ஓசை. அதை அடுத்து 'ஐயோ' என்ற அலறல் ஒலிகள். திடுக்கிட்டுப் போய் தலைநிமிர்ந்து பார்த்தேன்.

பார்சல் சாமான்கள் வந்த கைவண்டியும், போலீஸ் லாரியும், இவை இரண்டுக்கும் நடுவே பாங்கிலிருந்து போன கறுப்புக் கண்ணாடிக்காரரின் ஆட்டோரிக்ஷாவும் சிக்கிக் கொண்டிருந்தன. இந்தப் பயங்கரமான மோதலில் சிவப்பு சைக்கிள் தந்திப் பியூனோடு வடபுறம் தூக்கி எறியப்பட்டிருந்தது. கையிலிருந்த பைல்கள் தண்ணீரில் சிதறி மிதக்க உடம்பெல்லாம் சேறாகி அலங்கோலமான நிலையில் தெருவில் நின்றாள் ஆங்கிலோ இந்திய அழகி.

கறுப்புக் கண்ணாடிக்காரரின் தோல் பை திறந்து அதிலிருந்து கத்தை கத்தையான புத்தம் புதிய நோட்டுகள் சிதறின. மருந்துக் கடை பார்சலில் சாதிக்காய்ப் பெட்டி

உடைந்து விட்டதனால் உள்ளே இருந்த பாட்டில்களின் நுனி வெளியே தலை நீட்டின. தந்திப் பியூனின் பையிலிருந்து தந்திகளும், தந்தி மணியார்டர் பாரங்களும், ரூபாய் நோட்டுகளும், முழு ரூபாய் நாணயங்களும் சில்லறைகளுமாக நாலா பக்கமும் சிதறி விழுந்திருந்தன.

எதுவும் சிந்தாமலும் சிதறாமலும் சேதமின்றிப் பிழைத்தது போலீஸ் லாரி ஒன்றுதான். லாரியிலிருந்து மடமடவென்று மழையில் நனைந்து கொண்டே போலீஸ்காரர்கள் இறங்குவதைக் கவனித்தேன்.

விநோதமான இந்த விபத்தை மழையில் நனைந்து கொண்டாவது மேலும் பார்க்க வேண்டும் என்றுதான் எனக்கு ஆசை. ஆனால் என் ஆசை அந்த பஸ்ஸுக்குத் தெரியாததனாலோ என்னவோ அது வந்துவிட்டது.

'சரி, எங்கே போய்விடப் போகிறது? நாளைக்குப் பத்திரிகையில் விபத்தைப் பற்றித் தெரிந்து கொண்டால் போயிற்று' என்று நினைத்துக் கொண்டு பஸ்ஸில் ஏறி வீட்டுக்கு வந்துவிட்டேன். நாற்பது நிமிஷம் நடுத்தெருவில் மழைக்கு ஒண்டிக் கொண்டு நின்றதே அதிகம். அதற்கு மேலும் நின்றால் என் நேரம் பாழாய்ப் போய்விடுமே என்ற கவலையும் ஒரு புறம். எழுத்தாளனுக்கு நேரம்தான் வியாபார முதல்! அதை விரயம் செய்தால் தொழில் என்ன ஆவது?

மறுநாள் பொழுது விடிகிற வரையில் அந்த விபத்து என் மனத்தை விட்டு அகலவே இல்லை. தற்செயலாக நிகழ்ந்த ஒரு சங்கமம் போல, இயற்கையின் முறை தவறிய நாடகம் போலத் தோன்றியது.

ஐந்து பேர்களை அவர்கள் போகும் திசைக்குப் போகவிடாமல், செய்யும் செயலைச் செய்யவிடாமல் நடுத்தெருவில் தடுத்து உருட்டிய அந்த விபத்து வேண்டுமென்றே இயற்கை செய்து முடித்த சதியா? அழகான யுவதி, கம்பீரமான சீமான் ஒருவர், வேகமாகச் சைக்கிள் ஓட்டும் தந்திப் பியூன், நரம்புகள் இழுக்க வண்டி இழுக்கும் கூலி, எங்கோ போய்க் கொண்டிருந்த போலீஸ் லாரி - ஆட்டோ. மொத்தம் ஐந்து பேர்களை, ஐந்து வழிகளை, ஐந்து லட்சியங்களை, ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் சிதறிப் போகச் செய்த விதியை எப்படித் தூற்றுவது அல்லது பாராட்டுவது?

பொழுது விடிந்தது! பத்திரிகையும் வந்தது! அதில் விபத்தைப் பற்றிய செய்தியும் வந்திருந்தது.

"இயற்கையின் விநோதமான சந்திப்பு!

போலீஸுக்கு உதவிய விபத்து!!

ஜெனரல் போஸ்டாபீஸ் அருகே

அதிசயமான சம்பவம்!!!

கதைகளில்கூட நடந்திருக்க முடியாதென்று சொல்லத்தக்க ஒரு அதிசய அற்புதமான சம்பவம் நேற்று காலை பத்தேகால் மணி சுமாருக்கு ஜெனரல் போஸ்டாபீஸ் அருகே நடந்தது. நகர் முழுவதும் அகஸ்மாத்தாக நடந்த இந்த அதிசயத்தைப் பற்றியே பேச்சாக இருக்கிறது.

மேற்கே கூட்ஸ் ஷெட்டிலிருந்து வந்து கொண்டிருந்த மருந்துக்கடைப் பார்சல் அடங்கிய கைவண்டி ஒன்றும், கிழக்கேயிருந்து வந்து கொண்டிருந்த போலீஸ் லாரி ஒன்றும், தெற்கே பாங்கியிலிருந்து வந்து கொண்டிருந்த ஆட்டோ ரிக்ஷாவும், வடக்கே தபாலாபீஸிலிருந்து வந்து கொண்டிருந்த தந்திப் பியூன் சைக்கிளும், நேற்று காலை பத்தேகால் மணி சுமாருக்கு ஒரே சமயத்தில் மோதிக் கொண்டன. இந்த மோதலின் நடுவே கான்வென்ட் பள்ளியிலிருந்து வந்து கொண்டிருந்த ஆங்கிலோ இந்திய யுவதி ஒருவரும் அகப்பட்டுக் கொண்டார். விபத்து நடந்தபோது மழை பலமாகப் பெய்துகொண்டிருந்தது. பாங்கிலிருந்து வந்த கறுப்புக் கண்ணாடிக்காரர், தபாலாபீஸிலிருந்து வந்த தந்தி பியூன், கைவண்டி இழுத்து வந்த கூலி, கான்வென்ட் ஸ்கூலிலிருந்து வந்த யுவதி ஆகிய நால்வருக்கும் சிறுசிறு காயங்கள் பட்டிருப்பதனால் அவர்கள் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

ஆஸ்பத்திரியில் அவர்களுக்குச் சிகிச்சை முடிந்ததும் போலீஸார் அவர்களைப் புலன் விசாரித்ததில் விபத்தின் காரணமாக அற்புதமான சில உண்மைகள் வெளிப்பட்டன.

விசாரணை நடந்துகொண்டிருக்கும்போதே முறையே பாங்கு, போஸ்டாபீஸ், கான்வென்ட் ஸ்கூல், ரயில்வே கூட்ஸ் ஷெட் ஆகிய நான்கு இடங்களிலிருந்தும் நான்கு ரிப்போர்ட்டுகள் போலீஸுக்கு வந்த சேர்ந்தன. எல்லா ரிப்போர்டுகளிலுமே நேரம் பத்தேகால் மணி என்று குறித்திருந்தது.

கறுப்புக் கண்ணாடி அணிந்த ஒருவர் பத்தாயிரம் ரூபாய்க்குக் கள்ள நோட்டுக்களைக் கொடுத்துவிட்டு நல்ல நோட்டுக்களை மாற்றிக் கொண்டு போய்விட்டதாக பாங்கியிலிருந்தும், ஒரு கேடி தந்திப் பியூனின் உடையில் வந்து மணியார்டர் பாரங்களையும் பணத்தையும் திருடிக் கொண்டு தப்பிவிட்டதாக தபாலாபீஸிலிருந்தும், ஒரு ஆங்கிலோ இந்தியப் பெண்மணி போல் வந்து ஜில்லா கல்வி அதிகாரியின் அந்தரங்கக் காரியதரிசி என்று சொல்லிப் பள்ளிக்கூடத்துப் பைல்களைக் கடத்திக் கொண்டு போய்விட்டதாகக் கான்வென்ட் ஸ்கூலிலிருந்தும், மருந்துக் கடைக்காக வந்த பார்சலில் சாராயப் புட்டிகள் இருக்கலாமென்று சந்தேகிப்பதாக ரயில்வே கூட்ஸ் ஷெட்டிலிருந்து - ரிப்போர்ட்டுகள் வந்திருந்தன. போலீஸார் நான்கு பேர்களையும் கைது செய்தனர். இந்த அதிசய விபத்தில் உயிர்ச் சேதமே இல்லை என்பது குறிப்பிடத்தக்கது."

பத்திரிகை படிப்பதாகத் தெரியவில்லை. சுவாரஸ்யமாகக் கனவு காண்பது போலிருந்தது. அன்று அந்த நட்ட நடுத்தெருவில் நாற்பது நிமிஷத்துக்குள் லாரியும், வண்டியும் சைக்கிளும், ஆட்டோ ரிக்ஷாவும் மட்டுமா மோதிக் கொண்டன? நான்கு திருடர்களின் அதிர்ஷ்டமும் மோதிச் சிதறித் தூள் தூளாகிவிட்டது. நான்கு நேர்மையற்ற எண்ணங்கள் பாழ்பட்டு விட்டன.

அதிசயமான நிகழ்ச்சிகளெல்லாம் கதையில்தான் வர வேண்டுமா? கற்பனையில்தான் நிகழ வேண்டுமா? வாழ்க்கையில் வரக்கூடாதா என்ன?

**(கல்கி, 2.6.1957)**

## 14. சந்திப்பு

### 1. காட்சி

"**பா**லு! அதோ அந்த ஏரியிலே படகு ஏறிப் போவோமா?"

"பயமா இருக்குமே, அப்பா!..."

"போடா பயந்தாங்கொள்ளி. நான் கூட வருகிறபோது உனக்கென்னடா பயம்?"

"சரி அப்பா, போகலாம்!" - கொடைக்கானலின் குளிரில் மிரண்டு என் அருகில் ஒட்டிக்கொண்டு நின்ற பையன் சம்மதத்துக்கு அறிகுறியாய்த் தலையை ஆட்டினான். முழுக் கை கம்பளிச் சட்டையும், கனமான நிஜாரும், மப்ளருமாகச் சேர்ந்துகொண்டு, ஐந்து வயதுப் பையனைப் பெரியவனாகக் காட்டின.

"வா பாலு! போகலாம்!" பையனைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு ஏரியை நோக்கிக் கிளம்பினேன்.

"அப்போவ்..."

"என்னடா? என்ன வேணும்?"

"ஏரி ரொம்ப ஆழமா இருக்குமோ?" - மலர்ந்த விழிகள் இரண்டும் விரிய என்னை நிமிர்ந்து பார்த்துக்கொண்டே கேட்டான் பாலு. அந்தக் கண்களையும் அவன் முகத்தையும் பார்க்கிறபோது 'அவள்' நினைவு வந்தது. பாவி! எப்படித்தான் இந்தக் குழந்தையை விட்டுச் சாக மனம் வந்ததோ? மூன்றரை வருஷ வாழ்க்கை. எனக்குப் பாரமாக இந்தப் பையனை விட்டு விட்டுப் போய்ச் சேர்ந்தாள். வேண்டுமென்றா போனாள்? மரணத்தை வெல்ல நாம் யார்? பையனை மட்டுமா? என் சரோஜா என்னையும் அனாதையாக்கிவிட்டுப் போய்விட்டாள்.

பாலு தாயில்லாத குழந்தை. நான் மனைவியை இழந்த வாலிப வயதுத் தந்தை. அவனுக்குத் தாயுறவு இல்லை. எனக்கு மனைவி உறவு இல்லை. இருவரும் இருவேறு விதத்தில் நிராதரவானவர்கள்.

"என்னப்பா? நீ பதில் சொல்லமாட்டாயா? உனக்கு என் மேலே கோபமா?"

"என்னடா? ஏரி ஆழமான்னு கேட்டாயா? ஆழமானால் நமக்கென்னடா கண்ணு? படகிலேதானே போகப் போகிறோம்? ஒரு பயமும் இல்லை." நான் சிந்தனையிலிருந்து விடுபட்டு அவன் கேள்விக்குப் பதில் கூறினேன். அவன் பேசாமல் நடந்து வந்தான். தூரத்திலிருந்து பார்க்கும்போதே ஏரியில் கூட்டம் அதிகமாக இருந்தது. வாடகைப் படகு கிடைக்குமோ, கிடைக்காதோ என்ற சந்தேகத்தோடு காலை எட்டிப் போட்டுத் துரிதமாக நடந்தேன் நான்.

"அப்பாவ்...?"

"ஓ! என்னடா மறுபடியும்? தொண தொணவென்று..."

"இல்லேப்பா? இப்போது அம்மா உசிரோடு இருந்தால் நம்மோடு கொடைக்கானலுக்கு வந்திருப்பாள் இல்லையா அப்பா?"

"நீ பேசாமல் வரமாட்டாய்?" - அவன் கேள்வி புண்ணைக் கிளறிவிட்டது. வாயை அடக்குவதற்காக இப்படிச் சத்தம் போட்டேன். என் சத்தத்தைக் கேட்டுப் பையன் 'கப்சிப்' என்று அடங்கிவிட்டான்.

படகுகள் புறப்படும் இடத்தில் ஒரே ஒரு படகு யாரும் வாடகைக்குப் பேசாமல் மீதமிருந்தது. அதற்கான வாடகையைக் கொடுத்துவிட்டுப் பையனை ஏற்றிக்கொண்டு புறப்பட்டேன். சுற்றிலும் அடர்த்தியான மலைக்காட்சிகளுக்கு நடுவே நீல நிற வெல்வெட்டை அளவு கத்தரித்துத் தைத்தாற்போன்ற அந்த ஏரியில் படகில் செல்வது எவ்வளவு பெரிய இன்பம்! சிறிதும் பெரிதுமாக இன்னும் எத்தனையோ படகுகள் ஏரியில் சென்று கொண்டிருந்தன.

"அப்பா! அப்பா! அதோ, அங்கே பாரேன்!" பையன் சுட்டிக் காட்டிய திசையில் பார்த்தேன். இருபது - இருபத்துமூன்று வயது மதிக்கத்தக்க பெண் ஒருத்தி படகைச் செலுத்திக் கொண்டிருந்தாள். படகில் அவளோடு பாலுவின் வயதையொத்த சிறு பெண் ஒருத்தியும் உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

"அந்த மாமி படகை என்ன வேகமாகச் செலுத்தறா பாரு அப்பா!" - பையனுக்குக் குதூகலம் கிளம்பிவிட்டது.

"அதுக்கென்னடா! நீ பயப்படாமல் இருந்தால் நானும் வேகமாக விடுவேன்." - என் பதிலை அவன் கவனிக்கவில்லை. அந்தப் படகையும் அதிலிருந்து சிறு பெண்ணையுமே பார்த்துக் கொண்டிருந்தான். என் கவனமும் அந்தப் படகின்மேல் சென்றது. அதைச் செலுத்திக் கொண்டிருந்தவளைக் கவனித்தேன் நான். ஆசையால் உந்தப்பட்டுப் பார்த்த பார்வை அல்ல அது! ஏதோ தற்செயலாகச் சென்று லயித்த பார்வைதான்.

'இந்தப் புத்தகத்தில் நாம் படிப்பதற்கு என்ன இருக்கப் போகிறது?' என்ற அலட்சியத்தோடு பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருக்கும்போது நமக்குப் பிடித்தமான ஒன்று அதில் அகப்பட்டுவிட்டால் எப்படியிருக்கும்? அந்த நிலைதான் தற்செயலாகச் சென்ற என் பார்வைக்கும் ஏற்பட்டது.

என் கண்கள் சென்ற திசையிலேயே நிலைத்தன. அப்படி ஒன்றும் அவள் பிரமாதமாக அலங்கரித்துக் கொண்டிருக்கவில்லை. வாயில் புடவையும் கறுப்பு நிறச் சோளியும் அணிந்து கொண்டிருந்தாள். செல்வக் குடும்பத்துக்கே உரிய கம்பீரமான அழகு. அவள் முகத்தில் படிந்திருந்ததும் வெளிறிய சிவப்பு நிறம் - யானைத் தந்தத்தைப் போல. நியாயமாகப் பார்த்தால் அவளுக்கு இருந்த அழகுக்கு இன்னும், எவ்வளவோ அலங்காரம் செய்து கொண்டிருக்கலாம். அதிகம் ஆடம்பரத்தை விரும்பாதவள் போலிருக்கிறது! என்ன எளிமை! எவ்வளவு அழகு!

"என்னப்பா! அங்கேயே பார்க்கிறே? படகைத் தள்ளு!" நினைவு திரும்பியது. நகராமல் தத்தளித்துக் கொண்டிருந்த படகை துடுப்புகளால் தள்ளினேன். பாலு இன்னும் அந்தப் படகில் உட்கார்ந்திருந்த சிறுமியையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"அப்பா! அந்தப் பொண்ணு அந்த மாமிக்கு மகளா, அப்பா?"

"சீ! போடா... அந்த மாமியின் தங்கையாக இருக்கும்" என்றேன். சிறுமி அவளுக்கு நேர்மாறாக அலங்காரத்தின் சிகரமாகக் காட்சி அளித்தாள் தோற்றத்தில். பட்டுப் பாவாடை, வைர நெக்லஸ், இரட்டைப் பின்னல், தலை தாங்காமல் மல்லிகைப்பூ முதலிய ஆடம்பர அலங்காரங்களால் நிறைந்திருந்தாள் அவள். எங்கள் படகுகள் வேறு வேறு திசையில் பிரிந்தன. படகு சிறிது தூரம் சென்றதும் கீழ்க்கண்ட சம்பாஷணை அரைகுறையாக என் காதில் விழுந்தது.

"... அந்த மாமாவுக்குப் பிள்ளையா அவன்?" என்று கேட்டாள் சிறுமி.

"சீ! போடி உளறாதே!" சிறு குழந்தைகளுக்கு ஒரே மாதிரி சந்தேகங்களே எப்போதும் ஏற்படுகின்றன. நான் அதைக் கேட்டு எனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டேன்.

ஏரியில் சுற்றிவிட்டுப் படகைக் கரைக்குக் கொண்டு வரும்போது மணி ஐந்தரை. அவளும் அந்தச் சிறுமியும் எங்களுக்கு முன்பே கரையேறிச் சென்றுவிட்டனர். பாலு தூக்கக் கிறக்க முற்றுத் தள்ளாடினான். பனியும் குளிரும் அதிகமாகிவிட்டிருந்தன. அவனை இழுத்துக்கொண்டு தங்கியிருந்த ஹோட்டலை அடையும்போது மணி ஆறேகாலுக்கு மேல் ஆகிவிட்டது. கொடைக்கானலில் அந்த நேரத்தில் குளிருக்கு அடக்கமாகத் தூங்குவதைத் தவிர வேறு எந்த நல்ல காரியத்தைச் செய்வதற்கு முடியும்? அதையே நானும் பாலுவும் செய்தோம்.

## 2. அனுமானம்

காட்சிக்கு வரம்பு உண்டு. கட்டுப்பாடு உண்டு. அனுமானத்துக்கு இவை இரண்டுமே இல்லை. தூக்கமோ, மயக்கமோ இன்றி மனத்தில் தன் நினைவோடு ஏற்படக்கூடிய சொப்பனாவஸ்தைக்குத்தான் அனுமானம் என்ற பெயரோ?

பாலு சிறு குழந்தை. சாப்பிட்டதும் தூங்கிவிட்டான். தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தேன் நான்.

அவள், அவளுடைய அழகு, அவள் படகைச் செலுத்திய கம்பீரமான கவர்ச்சி, "சீ! போடி, உளறாதே!" என்று தங்கையைக் கடிந்து கொண்ட இனிய குரல் எல்லாம் நினைவில் மிதந்தன. நான் தங்கியிருந்த அதே 'லேக் வியூ' ஹோட்டலில்தான் அவளும் தங்கியிருந்தாள். அன்று ஏரியிலிருந்து ஹோட்டலுக்குத் திரும்பியவுடனே இதை நான் தெரிந்து கொண்டுவிட்டேன்.

அந்தப் பெண்ணும் அந்தச் சிறுமியும் தவிர வேறு யாரும் உடன் வந்திருப்பதாகத் தெரியவில்லை. 'ஒரு இளவயசுப் பெண் இப்படி ஒரு சிறுமியோடு தனியாகக்

கொடைக்கானல் 'சீஸனை' அனுபவிக்க வந்திருக்கிறாளே, அவளுக்கு என்ன துணிச்சல்?' - என் மனத்தில் இப்படி ஒரு கேள்வி.

'அதனாலென்ன? இந்தக் காலத்தில் படித்த பெண்கள் தனியாகப் பிரயாணம் செய்வதுதான் சகஜமாகிவிட்டதே? காலேஜில் படிக்கிற பெண் போலும்; வீட்டில் யாரும் துணைக்கு வரக்கூடிய நிலையில் இருந்திருக்க மாட்டார்கள். தங்கையையும் அழைத்துக்கொண்டு தனியாகக் கிளம்பியிருப்பாள். இதில் என்ன தப்பு?' இப்படி ஒரு அனுமானம்.

'படித்து விட்டால்தான் என்ன? நெற்றிக்குப் பொட்டு வைத்துக் கொள்வது அநாகரிகமா? கைக்கு வளை போட்டுக் கொள்வது அநாகரிகமா? சே! சே! என்ன படிப்பு வேண்டியிருக்கிறது? நாலெழுத்துப் படித்துவிட்டால் மங்கலமான பழக்கவழக்கங்களையெல்லாம் தலைமுழுகி விடுகிறார்களே.'

ஆனாலும் துணிச்சல்காரப் பெண்! படகை என்ன லாகவமாகத் தள்ளுகிறாள்? தண்ணீரைக் கண்டால் மிரண்டு நடுங்குகிற ஆளாகத் தெரியவில்லை.

தூக்கக்கலக்கத்தில் புரண்டு படுத்த பாலு தன் பிஞ்சுக் காலால் இடுப்பில் உதைத்தான். போர்வையை இழுத்து அவனுக்கும் எனக்குமாகச் சேர்த்துப் போர்த்திக் கொண்டேன். எனக்கும் தூக்கம் இமைகளை அழுத்தியது. சிந்தனைகளால் எவ்வளவு நேரம்தான் தூக்கத்தை எதிர்க்க முடியும்?

இரண்டையுமே நான் எதிர்க்கவில்லை. தூக்கத்தையும், அனுமதித்து விட்டேன். சிந்தனையையும் அனுமதித்துவிட்டேன். நினைவு தூக்கத்தில் இரண்டறக் கலந்து போய்விட்டது!

### 3. கனவு

நினைவோடு கூடிய எண்ணத்துக்குச் 'சிந்தனை' என்று பெயர். தூக்கத்தில் ஏற்படும் பிரக்ஞையற்ற எண்ணத்துக்கும் பெயர் உண்டா? உண்டானால் 'கனவு' என்பதுதான் அந்தப் பெயர்.

மாலைநேரம். கொடைக்கானல் மலை அழகின் சுவர்க்கமாக விளங்கிக் கொண்டிருக்கிறது. அங்கங்கே ஹோட்டல்களிலிருந்தும், பங்களாக்களிலிருந்தும், பல நிறப் பட்டுப் பூச்சிகளைப்போல ஆண்களும் பெண்களுமாக ஏரியில் படகு செலுத்தவும், மலைக்காற்றில் உலாவவும், சினிமா பார்க்கவும் சென்று கொண்டிருந்தனர்.

நான் பாலுவை அழைத்துக்கொண்டு ஏரிக்கரைக்குப் போகிறேன். அதே சமயத்தில் அந்த அழகியும் தன் தங்கையை அழைத்துக்கொண்டு வருகிறாள். அதே வெள்ளை கலையுடுத்த கோலம். பாலுவும் சிறுமியும் வெகுநாள் பழகியவர்களைப்போலக் கை கோர்த்துக்கொண்டு நடந்து வருகின்றனர்.

ஆனால், நாங்கள் அப்படிக் கை கோர்த்துக் கொண்டு சிரித்துப் பேசி நடக்க முடியுமா? அவள் யாரோ? நான் யாரோ? ஆசை இருக்கலாம்; அப்படிச் செய்ய

வேண்டுமென்று. யாருக்கு? எனக்குத்தான். அவளுக்கும்தான். ஏன் இருவருக்குமே இருக்கலாம்! எல்லா ஆசைகளையுமே வெளிப்படையாக நிறைவேற்றிக் கொண்டுவிட முடியுமா? பச்சைக் கற்பூரத்தைப் பேழைக்குள் பொதிந்து வைத்திருந்தால் தானே வாசனை நிலைத்திருக்கிறது? சில ஆசைகளையும் அதுபோல் அடக்குவது அவசியமாகிறது.

நானும் அவளும் சாதாரணமாகச் சம்பாஷித்துக்கொண்டு நடந்தோம். இடையிடையே அவசியமான சமயங்களில் அவளுடைய முத்துப் பல் வரிசை பவழச் சிறையிலிருந்து மெல்லத் தோன்றி மறையும். அதாவது அவள் சிரிப்பாள்.

“உங்களை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது! சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறீர்கள். இந்த வருஷம் கொடைக்கானல் சீஸனுக்கு வந்ததில் உங்கள் பழக்கத்தை என்றென்றும் மறக்கமாட்டேன்.” அவள் புன்னகையோடு என்னைப் பார்த்துக் கொண்டே இவ்வாறு கூறுகிறாள்.

“எனக்கும் அப்படித்தான்” என்று சிரித்துக்கொண்டே பதில் சொல்கிறேன் நான்.

“நாமிருவரும் ஜோடியாக ஒரு புகைப்படம் எடுத்துக் கொண்டால் என்ன?” எனக்குத் தூக்கிவாரிப் போடுகிறது. ஆனாலும் மகிழ்ச்சி. யாராவது கரும்பு தின்னக் கூலி கேட்பார்களா? மகிழ்வால் பொங்கும் என் மனத்தைச் சமாளித்துக் கொண்டே, “அதற்கென்ன? எடுத்துக்கொண்டால் போயிற்று! பாலுவையும் உன் தங்கையையும் கூட உட்கார்த்தி எடுத்துக்கொள்வோம்!” என்கிறேன்.

“ஊஹும், கூடாது. நாம் இருவரும் தனியாக எடுத்துக் கொள்ள வேண்டும்.”

“சரி!... அப்படியே செய்யலாம்!” இருவரும் ஒரு ஸ்டூடியோவுக்குச் சென்று புகைப்படம் எடுத்துக் கொண்டு அதன் பிறகு ஏரிக்குச் சென்றோம்.

“இன்றைக்கு நாம் ஒரே படகில் செல்வோம். தனித்தனிப் படகுகள் வேண்டாம்.” அவள் கெஞ்சினாள்.

“இல்லை! பார்க்கிறவர்களுக்கு நன்றாக இருக்காது. யாராவது ஏதாவது தவறாக நினைத்துக் கொள்வார்கள்.”

“நான் அதைப் பற்றி கவலைப்படவில்லை. உங்கள் வாழ்க்கைப் படகிலேயே அருகில் அமர்ந்து ஓட்டத் தீர்மானித்துவிட்டவளுக்கு இந்த வெறும் படகில் உட்காரத் தயக்கமா?”

“என்னது? இப்போது நீ பேசுவது மெய்தானா? என்னால் என் காதுகளையே நம்ப முடியவில்லையே?”

“நம்புங்கள். சத்தியமாக நம்புங்கள். நான் உங்களிடம் என்னை ஒப்படைக்கத்தான் போகிறேன்...”

“ஆனால் அது என் தவப் பயன்...”

“வாருங்கள், ஒரே படகில் போகலாம்...”

"குழந்தைகள்?"

"அவர்கள் வேண்டாம். கரையிலேயே இருக்கட்டும்."

"ஏன், கூட வரட்டுமே! படகில் இடத்துக்குப் பஞ்சமா? தவிர, கரையில் குழந்தைகளைப் பார்த்துக்கொள்வது யார்...?"

"உஷ்! அதோ பாருங்கள்! அவர்களைப் போல நாமும் போக வேண்டும்."

அவள் சுட்டிக்காட்டிய திசையில் பார்த்தேன். ஒரு சிறு படகில் கணவனும் மனைவியும்போலக் காணப்பட்ட ஒரு யுவனும், யுவதியும் நெருங்கி உட்கார்ந்து கொண்டிருந்தனர். என் உடலில் பாதாதிகேச பரியந்தம் மயிர் சிலிர்த்தது. அவள் ஆவல் ததும்பும் கண்களால் இமைக்காமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பார்வை என்னை வென்றுவிட்டது. "சரி! உன் இஷ்டம்..."

குழந்தைகள் இருவரையும் படகு கிளம்பும் இடத்திலிருந்த ஆளிடம் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டுக் கிளம்பினோம்.

"அப்பா! அப்பா! என்னை மட்டும் விட்டுட்டுப் போறியே, உனக்குப் பாவம்!" பாலு மழலைக் குரலில் கூப்பாடு போடுகிறான். அந்தச் சிறுமியும் அவனோடு சேர்ந்து கொண்டு கூப்பாடு போடுகிறாள். நாங்கள் அந்தக் கூப்பாட்டைக் காதில் கேட்காதவர்களைப்போலப் படகைச் செலுத்துகிறோம்.

"எவ்வளவு மனோரம்மியமான நேரம் இது?" என்று கூறிக் கொண்டே என் தோள்பட்டையில் தலையைச் சாய்க்கிறாள் அவள். கூந்தல் என் கன்னத்தில் உரசுகிறது.

"அன்பே! இவை மறக்க முடியாத நிமிஷங்கள்..." நான் அவள் தலையைக் கோதிக் கொண்டே இவ்வாறு சொல்கிறேன்.

"இந்த நிமிஷங்கள் இப்படியே ஊழி ஊழியாக நிலைத்துவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்?" - அவள்.

தோள்பட்டையில் ஏதோ உறுத்துகிற மாதிரி உணர்ந்து கண் விழித்தேன். விழித்தால்...? அடாடா! அதுவரை நிகழ்ந்ததெல்லாம் வெறும் கனவு! தூக்கத்தில் குழந்தை பாலு தன் காலைத் தூக்கி என் தோள்பட்டை மேல் போட்டிருந்தான். ஆகா! எத்தகைய இன்பமயமான கனவு?

## 4. உண்மை

மறுநாள் மாலை பாலுவை அழைத்துக்கொண்டு ஏரிக்கரைக்குப் போனேன். சொல்லி வைத்தாற்போல் அந்த வெள்ளைக் கலையுடுத்த மோகினியாளும் தங்கையை அழைத்துக்கொண்டு வந்திருந்தாள். முதல் நாளிரவு கனவில் தோன்றி படாதபாடு படுத்திய அந்த அழகி இப்போது நான் நின்றுகொண்டிருந்த பக்கம் சாதாரணமாகத் திரும்பிப் பார்த்தாள். அவளோடிருந்த சிறுமி பாலுவைத் திரும்பிப் பார்த்தாள். பாலுவும் அவளைப் பார்த்தான்.

இருவருடைய கைகளிலும் 'சாக்லேட்' சுற்றிய வர்ணக் காகிதங்கள் இருந்தன. காகிதங்களைக் கப்பல்களாக மாற்றும் முயற்சியில் ஈடுபட்டனர். பெரியவர்களுக்குத்தான் பழகுவதற்குக் கூச்சம், சங்கோஜம் இவையெல்லாம் தடையாகக் குறுக்கிட்டுத் தொலைக்கின்றன. சிறுவர்கள் இதையெல்லாம் பார்ப்பதில்லை. ஒருவருக்கொருவர் அருகில் நெருங்கிக் கப்பல்களை உருவாக்கும் வேலையை ஆரம்பித்தனர்.

இதற்குள் படகுகள் வந்துவிட்டன! நான் படகைப் பேசி வாடகை கொடுத்துவிட்டுப் பாலுவை அழைத்துக்கொண்டு புறப்பட்டேன். அவள் மற்றோர் படகில் தங்கையை அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். இரண்டு படகுகளும் அதிகம் விலகாமல் நெருக்கமாகவே சென்றுகொண்டிருந்தன.

"உன் கப்பலைத் தண்ணீரிலே விடு. என் கப்பலையும் விடுகிறேன்!" அந்தச் சிறுமி பாலுவைக் கூப்பிட்டாள்.

"சரி! இந்தா விட்டுவிட்டேன், நீயும் விடு!" பாலு தன் காகிதக் கப்பலை என் படகுக்கு அருகில் தண்ணீரின் மேல் மிதக்கவிட்டான்.

"இதோ நானும் விட்டுவிட்டேன்!" அந்தப் பெண்ணும் தன் படகோரமாகக் காகிதக் கப்பலை மிதக்கவிட்டாள்.

இரண்டு கப்பல்களும் நேர் எதிரெதிர்த் திசையில் நகர்ந்தன.

குழந்தைகளின் இந்த வேடிக்கையைப் பார்த்து அவள் என்னை நோக்கி முறுவல் பூத்தாள். நானும் பதிலுக்குப் புன் முறுவல் செய்தேன். வேறு பேச்சில்லை. குழந்தைகள் காகிதக் கப்பல் விளையாட்டில் நெருக்கமாக ஈடுபட்டிருந்ததால் அவளோ, நானோ படகுகளை வேறு திசையில் விலக்கிச் செல்ல முடியவில்லை. நாங்கள் மட்டும் ஜடங்களா? அருகருகே எவ்வளவு நேரம்தான் பேசாமல் வெறுமனே சிரித்துக் கொண்டு மட்டும் இருக்க முடியும்? அவள்தான் முதலில் பேச்சைத் தொடங்கினாள். "சார்! பையன் உங்கள் தம்பியா? ரொம்ப 'பிரிஸ்கா' இருக்கிறானே?"

"இல்லை! என் பையன் - தாயில்லாக் குழந்தை!" மென்று விழுங்கிக்கொண்டே பதில் சொல்லிவிட்டு, அவள் முகத்தை உற்றுப் பார்த்தேன்.

அப்பப்பா! அந்த முகத்தில் எவ்வளவு ஏமாற்றம்? கண்கள் ஏன் அப்படி விரிகின்றன? துடுப்பைத் தள்ளிக் கொண்டிருந்த கை இயக்கமற்று நின்றுவிட்டதே! பாலுவுக்கு நான் தகப்பன் என்று அறிந்தபோது அவளுக்கு ஏன் இவ்வளவு ஆச்சரியமும் ஏமாற்றமும் உண்டாகின்றன?

"இந்தச் சிறுமி உங்கள் தங்கையோ?" என்று நான் கேட்டேன். சட்டென்று அவள் முகபாவம் மாறியது. கன்னங்கள் சிவந்தன. தலை கீழ் நோக்கியது. அவள் கூறிய பதில்:

"இல்லை! என் பெண். தகப்பனில்லாக் குழந்தை." என் தலைமேல் வானம் இடிந்து விழுந்ததுபோல் இருந்தது எனக்கு. அதிர்ச்சியில் துடுப்பைத் தண்ணீருக்குள்ளே நழுவ விட்டுவிட்டேன். இரு படகுகளும் ஸ்தம்பித்து நின்றன. நின்ற வேகத்தில் என்

படகடியிலிருந்து ஒரு அலை கிளம்பியது. அலைகளின் கூம்பில் பாலுவும் சிறுமியும் மிதக்கவிட்ட காகிதக் கப்பல்கள் மேலெழும்பி மிதந்தன. அலையும் அலையும் சந்தித்தபோது இரு அலைகளுமே வலுவிழந்து பின்னோக்கித் திரும்பின. காகிதக் கப்பல்கள் இரண்டும் மூழ்கிவிட்டன.

"ஐயோ! அப்பா, கப்பல் போச்சு! முழுகிப் போச்சு!" என் பையன் கூச்சல் போட்டான்.

"ஐயோ! அம்மா, கப்பல் உள்ளே முழுகிடிச்சு!" அந்தச் சிறுமி அவள் தாயை நோக்கிக் கூப்பாடு போட்டாள்.

திடீரென்று அவள் படகை வேறு திசையில் திருப்பினாள். நானும் நீரில் மிதந்த துடுப்பை எடுத்து என் படகை எதிர்த் திசையில் வேகமாகத் திருப்பினேன்.

இந்தத் திடீர்ப் பிரிவின் காரணம் புரியாமல் பாலு என்னையும், சிறுமி அவள் தாயையும் மிரள மிரளப் பார்த்தனர்.

படகுகள் எதிரெதிர்க் கோணத்தில் வெகுதூரம் சென்றுவிட்டன. இடையே பெரிய நீர்ப்பரப்பு.

என் இதயத்தை அமுக்கிக் கொண்டிருந்த நீண்ட பெருமூச்சு வெளியேறிக் காற்றோடு கலந்துவிட்டது.

'ஏ! பாழாய்போன உண்மையே! காட்சியையும், அனுமானத்தையும், கனவுகளையும்விட நீ ஏன் இவ்வளவு கசப்பாக இருக்கிறாய்?'

'எங்கும் என்றும் எந்த யுகத்திலும் நீ இப்படித்தான் மனித சமூகத்தின் கசப்பு மருந்தாக இருந்து, பெருமூச்சுக்களையும், நிராசைகளையும் ஏக்கங்களையும், ஏமாற்றங்களையும் உற்பத்தி செய்து வருகிறாய்!'

'செய்! செய்! உன்னால் முடிந்தவரையில் செய்து கொண்டிரு!'

(கல்கி, 16.6.1957)

## 15. எங்கும் இருப்பது

**ந**ண்பர் சிவசிதம்பரமும், நானும் கல்லூரியில் ஒன்றாகப் படித்த நண்பர்கள். படிப்புக்குப் பின் எங்கள் வழிகள் வேறு வேறு திசையில் பிரிந்துவிட்டன. நான் ஆசிரியப் பயிற்சி பெற்று ஆசிரியராகப் போனேன். அவர் போலீஸ் இலாகாவில் வேலை பெற்று இன்ஸ்பெக்டர் பதவிக்கு வந்திருந்தார்.

மதுரை வட்டாரத்துக்குள்ளேயே ஒவ்வொரு ஊராக மாறி அவர் இன்ஸ்பெக்டராகவும், நான் ஆசிரியராகவும் வளைய வளைய வந்து கொண்டிருந்தோம்.

அந்த வருடம் எனக்குக் கோடை விடுமுறையின்போது அவர் கோடைக்கானலில் பதவி வகித்து வந்தார். எங்காவது ஒரு சாதாரண ஊரில் அவர் இருந்தாலும் மாதத்துக்கொருமுறை அவரைப் போய்ச் சந்தித்து விட்டு வராவிட்டால் எனக்குப் பொழுது போகாது.

'என்ன நகர வாழ்க்கை? ஒரே சுழற்சி. ஒரே ஆரவாரம். தினம் விடிந்தால் பத்திரிகைகளின் முகத்தில் விழித்து ஆக வேண்டியிருக்கிறது. ஏதாவது நல்லது கண்ணில் தெரிகிறதா? 'பெண்ணைக் கடத்திக் கொண்டு போனான், பாங்கில் மோசடி, சென்னையில் நவீனத் திருட்டு, பரீட்சையில் தோல்வியுற்ற மாணவன் தற்கொலை; மூக்குறுத்தான் பட்டியில் மூன்று கால்களோடு பிறந்த கன்றுக்குட்டி!' சை! உலகத்தில் நல்லதாக ஒன்றுமே நடைபெறாதா?'

'சீ! சீ! தினப்பத்திரிகையும், திரையுலகத்துச் செய்திகளுமே தெரியாமல் ஏதாவதொரு மலைக்காட்டில் போய்ப் பத்துப் பதினைந்து நாட்கள் இருந்துவிட்டு வர வேண்டும்' என்று அலுத்துப் போயிற்று. பசுமையைக் கண் நிறையப் பார்த்து மனங்குளிர, உடல் குளிர, இயற்கையை அனுபவித்து உற்சாகத்தைப் புதுப்பித்துக் கொண்டு வர வேண்டும். கார்ச் சத்தம், இரயில் சத்தம், தார் ரோடு வெயில், காதைப் பிளக்கும் கலகலப்பு - இவற்றையெல்லாம் முழுக்க முழுக்க மறக்க வேண்டும்.

விடுமுறையைக் கழிப்பதற்கும், வெயில் காலத்துக்கும் ஏற்ற கோடைக்கானலிலேயே நண்பர் சிவசிதம்பரம் இருக்கும்போது போகாமல் இருப்பேனா? நிலப்பகுதி ஊர்களில் வெப்பம் அரசு செலுத்திக் கொண்டிருக்கும் அந்த மூன்று மாதங்களும் கோடைக்கானல் சொர்க்கந்தான். பதினைந்து நாட்கள் ஓய்வாகத் தங்கிவிட்டு வரும் நோக்கத்தோடு சிவசிதம்பரத்துக்கு முன் கடிதமும் எழுதிப் போட்டுவிட்டுப் புறப்பட்டேன்.

சிவசிதம்பரம் ஆவலோடு வரவேற்றார். ஆகா! கோடைக்கானல் கோடைக்கானல்தான்! எத்தனை உயரமான மலைச்சிகரங்கள்! எவ்வளவு அருவிகள்! பல வண்ண மலர்கள், செடிகள், கொடிகள், எப்போதும் பாலாவி போல் மெல்லிய மேகங்கள் மூட்டமிட்டுக் குளிர்ச்சியாக இருக்கும் சூழ்நிலை.

"சிவசிதம்பரம்! இந்த ஊரில் இருக்கிற வரையில் நீர் கொடுத்து வைத்தவர்தான் ஐயா!" என்று வியந்து கூறினேன். சிவசிதம்பரம் அலட்சியமாக சூள் கொட்டி விட்டுச் சிரித்தார்.

"கொடுப்பதாவது வைப்பதாவது? போலீஸ் உத்தியோகத்திலிருப்பவனுக்கு எந்த இடத்தில் இருந்தாலும் ஒரே மாதிரிதான் எங்கள் வேலை துன்பம் நிறைந்தது. துன்பத்தைத் தேடிக் கொண்டு போவது. சில சமயத்தில் மட்டும் துன்பத்தைப் போக்குவது" என்று அலுத்துக் கொண்டார் அவர்.

"என்ன ஐயா இது? பணத்தைப் பணம் என்று பாராமல் செலவழித்துக் கொண்டு 'சீஸனை' அனுபவிப்பதற்கு எங்கிருந்தெல்லாமோ இங்கே வருகிறார்கள். நீரோ இந்த இடத்திலேயே இருந்து கொண்டு அலுத்துக் கொள்கிறீரே?"

"உங்களை மாதிரி ஒரு வாரம், இரண்டு வாரம் வந்து தங்கிவிட்டுப் போகிறவர்களுக்கு எல்லாம் சுகம்தான். மலையையும் பசுமையையும் பார்த்து மனம் நிறையலாம். நாங்கள் இங்கே வந்தாலும், திருடனையும், கொலைகாரனையும் தானே பார்த்துத் தேடிப் போக வேண்டியிருக்கிறது."

"யாரை வேண்டுமானாலும் தேடிக் கொண்டு போங்கள். நான் ஊருக்குப் போனபின் அதையெல்லாம் வைத்துக் கொள்ளலாம். சுற்றிப் பார்க்க வந்த இடத்தில் என்னைத் தனியாக விட்டுவிட்டு எங்கேயாவது கிளம்பிப் போய்விடாதீர்" என்று பீடிகை போட்டுக் கொண்டேன் நான்.

கோடைக்கானலில் சிவசிதம்பரம் குடியிருந்த வீடு கோக்கலை வாக் என்ற பகுதியை ஒட்டி ஒரு மேட்டில் அமைந்திருந்தது. வீட்டைச் சுற்றி யூகலிப்டஸ் மரங்கள். பச்சைப் புல்வெளி. அதில் சித்திரக்காரன் அள்ளித்தெளித்த வர்ணங்கள் போல் பல நிற மலர்ச்செடிகள். தூரத்தில் மலைப் பள்ளத்தாக்கினிடையே இயற்கை பதித்துவைத்த பெரிய கண்ணாடியைப் போல் ஏரி. அப்பால் கண்ணுக்கெட்டிய தூரம் வீறுகொண்டு புடைத்தெழுந்த இயற்கையின் பசுமை வீக்கம் போல் மேகம் படிந்த மலைகள். மலைச் சரிவுகளில் படிப்படியாகப் பாத்தி எடுத்துக் காய்கறிகள் பயிர்செய்திருந்தார்கள். மரங்கள் அடர்ந்து தெரிந்த பகுதிகளெல்லாம் சில பேருடைய தலையில் அடர்ந்து 'கர்லிங்' விழுந்த மயிர்ச்சுருள்கள் போல் நெளிந்தன. ஒருவேளை மலைமகளின் கரிகுழற் சுருளோ அந்த அடர்த்தி?

"வெந்நீர் தயாராயிருக்கிறது! உள்ளே போய்க் குளித்துவிட்டு வாருங்கள்; சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஊர் சுற்றிப் பார்க்கக் கிளம்பலாம். ஜீப் எடுத்துக்கொண்டு வரச் சொல்லி ஸ்டேஷனுக்குச் சொல்லிவிட்டிருக்கிறேன்" என்று சிவசிதம்பரம் துரிதப்படுத்தினார்.

“வாத்தியார் மாமா வந்திருக்கிறார்” என்று கூச்சலிட்டுக் கொண்டு வந்து சூழ்ந்து கொண்ட சிவசிதம்பரத்தின் குழந்தைகளுக்கு உரிய பொருள்களைக் கொடுத்து அனுப்பியபின் குளிக்கக் கிளம்பினேன். கோடைக்கானலில் குளிரில் ஆவி பறக்க உலைநீர் போல் கொதித்த வெந்நீர்கூட ஒரு சூடாக உடம்பில் உறைக்கவில்லை.

சாப்பாடு முடிந்ததும் ஜீப்பில் சுற்றிக் காட்டுவதற்காக என்னை அழைத்துக் கொண்டு கிளம்பினார் நண்பர். காலையில் பத்துப் பதினோரு மணி இருக்கும் அப்போது. நண்பகல் இரண்டு மணிக்குள் கோடைக்கானலின் கிழக்குப் பகுதி முழுவதும் நாங்கள் சுற்றிப் பார்த்துவிட்டோம்.

சில்வர்காஸ்கேட் அருவி, செண்பகனூர் பெருமாள் மலைச்சிகரம், குறிஞ்சி ஆண்டவர் கோவில், ஒவ்வொரு இடத்தையும் பார்க்கும்போதும் உலகத்து ஓசைகளே இல்லாத அந்த மலைச்சாலைகளில் சுற்றும்போதும் எத்தனை இன்பமாக இருக்கிறது!

“சிவசிதம்பரம்! மண்ணுலகத்துத் துன்பங்களே தெரியாமல் வாழ வேண்டுமானால் இந்த மலைத் தொடர்களில் எங்கேயாவது ஒரு வீடு கட்டிக் கொண்டு ஒதுங்கி வாழ வேண்டும். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?” என்று கேட்டேன். அவர் மெல்லச் சிரித்தார்.

“இதுவும் மண்ணுலகம்தான்! இங்கும் மண்ணுலகத்துக் கவலைகள், மோசடிகள், சூது, வாது, கொலை, கொள்ளை எல்லாம் உண்டு. என்னோடு இரண்டு நாட்கள் இருந்தால் தெரியும்” என்றார்.

“சே! சே! இந்தப் போலீஸ் ஆட்களுக்கு இயற்கையழகை அனுபவிக்கவே தெரியாதா? எங்கு போனாலும், எதைப் பார்த்தாலும் கொலை, கொள்ளை, மோசடிதானா? நல்ல ஆள் ஐயா! உம்மோடு சுற்றிப் பார்க்க வந்தேனே?” என்று பொய்க் கோபத்தோடு அவருக்குச் சூடு கொடுத்தேன் நான். அவர் பதில் சொல்லாமல் சிரித்தார்.

வீட்டுக்குப் போய்ச் சிற்றுண்டி காப்பியை முடித்துக்கொண்டு மறுபடியும் ஜீப்பில் புறப்பட்டோம்.

ஏரிக்கரையில் போட் கிளப்புக்கு அருகே ஏழு ரோடுகள் பிரியுமிடத்தில் ஜீப் நின்றது. படகுத்துறைக்கு அருகில் அழைத்துப் போய் ஏரியைக் காட்டினார் சிவசிதம்பரம்.

அங்கே வைரமும் தங்கமும் இழைத்துப் பூட்டினாற்போல் ஏராளமான நகைகளை அணிந்து கொண்டு பட்டுப்பூச்சிகள் போல் இரண்டு அழகிய இளம்பெண்கள் அப்போதுதான் ஒரு படகில் கிளம்பிக் கொண்டிருந்தனர். முப்பது முப்பத்திரண்டு வயது மதிக்கத்தக்க மனிதர் ஒருவர் மேனாட்டு முறையில் நாகரிகமாக உடையணிந்து அந்தப் படகின் துடுப்பை வலித்துச் செலுத்திக் கொண்டிருந்தார். அந்தப் பெண்களில் ஒருத்தி அவருடைய மனைவியாகவும் மற்றொருத்தி அவருடைய சகோதரியாகவும் இருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றியது.

“சிவசிதம்பரம்! கோடைக்கானலை என்ன மாதிரி அனுபவிக்கிறார்கள் பார்த்தீர்களா? இப்படிக் குடும்பத்தோடு இயற்கையை அனுபவிக்கப் புறப்படும்

மனோபாவம் நம் நாட்டில் மத்தியதரக் குடும்பங்களில் இன்னும் பரவவே இல்லை. பெரும்பாலோருக்கு அழகுணர்ச்சி இல்லாமல் இருப்பதற்கும், நோய்களின் பெருக்கத்திற்கும் இதுதான் காரணம்."

சிவசிதம்பரம் முன்போலவே சிரித்தார். "அது சரி! அவர்கள் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்று உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டார்.

"ஏன்? ஒன்றாக ஒரே படகில் போவதைப் பார்த்தாலே தெரியவில்லையா?"

"ஓகோ!" அவர் முறுவல் பூத்தார்.

"போம் ஐயா! போலீஸ் மனத்தோடு, போலீஸ் கண்களால் பார்த்தால் உலகமே அயோக்யத்தனமாகத்தான் தெரியும்!" என் கோபத்தை அவரைத் தாக்கிப் பேசித் தீர்த்துக் கொண்டேன்.

அவர் சிரித்துக் கொண்டே பேசாமல் இருந்துவிட்டார்.

"பாரும் ஐயா! நன்றாகக் கண்களைத் திறந்து பாரும். அந்தப் பெண்களை உட்கார்த்தி அந்த மனிதன் சிரமப்பட்டுப் படகை செலுத்துகிறான். சரளமாகப் பேசிக்கொண்டு போகிறான். ஒரே குடும்பமென்பதற்கு வேறென்ன சான்று வேண்டும்?"

"நண்பரே! பதினைந்து ஆண்டுகளாக இந்தக் காக்கி உடுப்புகளில் புகுந்து கொண்டு உலகத்தைப் பார்த்து வருகிறவன் நான். என் கண் பார்வைக்குப் படுகிற மாதிரி உங்கள் பார்வையில் எதுவும் பட முடியாது?"

"அதெப்படி முடியும்? உங்கள் கண் பார்வைக்கு எதுவுமே நியாயமாகப் பட முடியாதே!" நான் குதர்க்கம் பேசினேன்.

"சரி! இப்போது நமக்கெதற்கு இந்த வீண் விவாதம்? நாம் மேற்கொண்டு சுற்றிப் பார்க்கப் போகலாம். வாருங்கள்" என்று கூறி, என்னை அங்கிருந்து அழைத்துக் கொண்டு புறப்பட்டார் இன்ஸ்பெக்டர்.

மூணாறு டாப் ஸ்டேஷன் ரோட்டில் திரும்பி 'பில்லர் ராக்ஸ்' போகிற வழியில் ஜீப் சென்றது. வானிலை ஆராய்ச்சி நிலையம், பெய்ரி ஃபால்ஸ், கால்ஃப் லிங்க்ஸ் - எல்லாவற்றையும் சுற்றிப் பார்த்தோம். மனித நடமாட்டமே இல்லாத மலைப்பகுதிகள் அத்தனையும், எனக்கு நிம்மதியாக இருந்தது.

மணி ஐந்தரைக்கு மேலானதும் இருட்டியதுபோல் மூடுபனி வந்து கவிந்து கொண்டது.

"இன்றைக்குப் போதும்! மற்ற இடங்கள் நகரிலிருந்து சில மைல் தள்ளிச் சுற்றுப்புறத்தில் இருக்கின்றன. நாளைக்குக் காலையில் மறுபடியும் புறப்படுவோம்" என்று கூறினார் சிவசிதம்பரம். திரும்பிவிட்டோம்.

கடுங்குளிரோடு மூடுபனியின் மங்கலில் ஒளி மங்கிய மின்சார விளக்குகள் அங்கங்கே மினுக்கின. அப்போது அந்த அந்தி நேரத்தில் கோடைக்கானல் பூப்பு நீராடி

முடித்த கன்னிகைபோல் மிக அழகாக இருப்பதாக ஒரு கற்பனை உதயமாயிற்று எனக்கு.

வீட்டுக்குத் திரும்பியதும் கேக்கர்ஸ் வாக் மலையிலிருந்து கீழே பள்ளத்தில் இருக்கும் ஊர்களை வேடிக்கை காண்பித்தார் நண்பர். இரவில் அந்த ஊர்களின் விளக்குகள் மின்மினிப் பூச்சிகளாகத் தெரிந்தன.

ஏழு, ஏழரை மணிக்கெல்லாம் ஊரடங்கிவிட்டது. குளிர் தாங்க முடியவில்லை. மூச்சுப் பலமாக விட்டால் மூக்கிலிருந்து புகை வருவது மாதிரி தெரிந்தது.

சூடான இரவு உணவு வாய்க்கு ருசியாக இருந்தது. சாப்பாடு முடிந்து வெற்றிலை போட்டுக் கொண்டதும், "பேப்பர் பாருங்கள்" என்று நாலைந்து தினசரிகளைக் கொண்டு வந்து என் முன்னால் போட்டார் அவர்.

"ஐயோ! பத்துப் பதினைந்து நாட்களுக்கு இந்த சனியன்களை என் கண்ணில் காட்டாதீர்கள். இவைகளைப் பார்க்கக் கூடாதென்றுதான் இங்கு வந்திருக்கிறேன்" என்று வெறுப்போடு அவற்றை மடித்துத் தூக்கி எறிந்தேன். சிவசிதம்பரம் சிரித்துக் கொண்டே அவற்றை எடுத்து நிதானமாக ஒவ்வொன்றாகப் பாராயணம் செய்வதுபோல் படித்த பின்புதான் என் பக்கம் திரும்பினார்.

"ஏன் ஐயா, உம்மால் எப்படி இவற்றைப் பொறுமையாகப் படிக்க முடிகிறது? பக்கத்துப் பக்கம், வரிக்கு வரி கொலை, கொள்ளை, மோசடி, சோரம் போனவள், தவிர வேறு ஏதாவது நல்ல சமாசாரம் இவற்றில் இருக்கிறதா?" என்று அவரைக் கேட்டேன் நான். பதில் சொல்லாமல் எல்லா உண்மைகளும் புரிந்த வேதாந்தியைப் போல் அந்தப் பழைய சிரிப்பைக் காட்டினார் அவர்.

காலையில் நான் எழுந்திருக்கும்போது ஏழரை மணி. எனக்கும் முன்பே எழுந்திருந்து உத்தியோக உடையுடன் எங்கோ புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தார் சிவசிதம்பரம்.

"என்ன? எங்கோ கிளம்புகிறார் போலிருக்கிறதே?" என்றேன்.

"ஸ்டேஷனிலிருந்து அவசரமாக ஜீப் வந்திருக்கிறது. நான் போகவேண்டும். நீங்களும் பல் விளக்கிக் காப்பியைக் குடித்துவிட்டு, உடன் வாருங்கள். அப்படியே ஸ்டேஷனிலிருந்து நாம் சுற்றிப் பார்க்கக் கிளம்பலாம்" என்றார் அவர்.

நானும் அவசர அவசரமாகப் பல் விளக்கிக் காப்பி சாப்பிட்டுவிட்டு அவரோடு புறப்பட்டேன். ஜீப் போலீஸ் ஸ்டேஷன் வாசலில் நின்றது. ஹெட்கான்ஸ்டபிள் வந்து சலாம் வைத்தார். "சார்! லேக் வியூ லாட்ஜ்லிருந்து அவசரமாகப் போன் செய்தார்கள்" என்று கூறினார் அவர்.

ஜீப்பில் இரண்டு கான்ஸ்டபிள்களையும் ஏற்றிக் கொண்டு லேக்வியூ லாட்ஜுக்கு விடச் சொன்னார் சிவசிதம்பரம். பத்தே நிமிடங்களில் கார் லேக்வியூ லாட்ஜின் வாசலில் போய் நின்றது. லாட்ஜின் முதலாளி பரபரப்போடும், பதற்றத்தோடும் இன்ஸ்பெக்டரை வரவேற்றார். நானும் சிவசிதம்பரத்தோடு கூடவே சென்றேன்.

மூன்றாவது மாடியில் பதின்மூன்றாம் நம்பர் அறைக்கு எங்களை அழைத்துச் சென்றார் லாட்ஜ் சொந்தக்காரர். அறை வாசலில் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இரண்டு இளம் பெண்கள் நின்று கொண்டிருந்தார்கள். அருகில் நெருங்கியதும் அவர்கள் இன்னாரென்று எனக்குத் தெரிந்துவிட்டது. முதல் நாள் மாலை ஏரிக்கரையில் படகில் பார்த்த பெண்கள் தான் அவர்கள். லாட்ஜ் முதலாளி இன்ஸ்பெக்டர் காதருகில் சென்று ஏதோ கூறினார்.

இன்ஸ்பெக்டர் அந்தப் பெண்களுக்கருகில் போய் நின்று கொண்டு பதவியின் கடுமையோடு அவர்களைப் பற்றி விசாரித்தார்.

அந்தப் பெண்கள் மதுரையில் ஒரு பெரிய கண்ணியமான குடும்பத்தைச் சேர்ந்தவர்களென்றும் கல்லூரியில் படிப்பதாகவும் தகவல் கிடைக்கிறது.

"எதற்காக இங்கே வந்தீர்கள்? யாரோடு வந்தீர்கள்?"

அந்தப் பெண்கள் ஒன்றும் பதில் கூறாமல் ஒரு ஆங்கிலத் தினசரியின் 'கட்டிங்' தாளை எடுத்து வந்து அவரிடம் நீட்டினார்கள்.

அது ஒரு விளம்பரம். அதில் சினிமாவில் நடிக்கப் படிப்பும், புதுமைக் கொள்கைகளுமுள்ள அழகான புதுமுகங்கள் தேவையென்றும், விருப்பமுள்ளவர்கள் கீழ்க்கண்ட முகவரியில் தங்கியிருக்கும் எமது புரொட்யூசரையும், டைரக்டரையும் நேரில் சந்திக்க வேண்டியது என்றும் குறிப்பிட்டுக் கோடைக்கானலில் அந்த லாட்ஜின் விலாசத்தோடு நம்பரும் குறித்திருந்தது.

"அட பைத்தியங்களா? படித்திருக்கிறீர்களே? இதை நம்பிக் கொண்டு வந்தீர்களா? நீங்கள் என்று இங்கு வந்தீர்கள்? வரும்போது யார் இங்கு இருந்தார்கள்?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"நேற்று காலையில்தான் இங்கு வந்தோம். ஒரே ஒரு நடுத்தர வயது மனிதர் 13-ம் நம்பர் அறையில் இருந்தார். அவரை லாட்ஜ் காஷியருக்கும் தெரியும். தான் அந்தச் சினிமாக் கம்பெனியின் டைரக்டர் என்றும் புரொட்யூசர் இரண்டு நாட்களில் மதராஸிலிருந்து வந்துவிடுவாரென்றும் கூறி, எங்களுக்குத் தங்க வசதி செய்து கொடுத்தார் அவர்."

"அப்புறம் என்ன நடந்தது?"

"நேற்று மாலை பூராவும் அவரோடு ஊர் சுற்றிப் பார்த்தோம்."

"அப்புறம்?"

"இன்று காலையில் எங்கள் நகைகளையும் காணவில்லை; அவரையும் காணவில்லை."

"எவ்வளவு பெறுமானமுள்ள நகைகள்?"

"இரண்டு பேருடையதும் சேர்த்துப் பத்தாயிரத்துக்குத் தேறும்! இங்கே திருட்டுப் பயம் அதிகம் என்றும் நகைகளைக் கழற்றி வைத்து விட்டுப் படுத்துக் கொள்ள வேண்டுமென்றும் நேற்றிரவு அவர்தான் சொன்னார்."

"*அதை வேத வாக்காக நம்பினீர்கள், இல்லையா?*" *இன்ஸ்பெக்டர் இரைந்தார்.*

"*ஸ்டேஷனுக்கு வந்து விரிவாக ஸ்டேட்மெண்ட் எழுதிக் கொடுங்கள். உங்கள் பெற்றோர் விலாசம் இப்போது வேண்டும்*" *என்று எழுதி வாங்கிக் கொண்டார்.*

"*என்ன ஐயா? பார்த்துக் கொண்டீரா?*" *சிவசிதம்பரம் என் பக்கமாகத் திரும்பிக் கேட்டுவிட்டுச் சிரித்தார். அந்தச் சிரிப்பைச் சிரிக்கும்போது அவர் சாதாரணப் போலீஸ் இன்ஸ்பெக்டர் மாதிரித் தெரியவில்லை. துன்பங்களைக் கேட்டுப் பார்த்து மரத்துப்போன வேதாந்தியாகவே தோன்றினார்.*

*லாட்ஜின் வாசலில் இறங்கி நடந்தபோது முதல் நாள் பூப்பு நீராடிய கன்னிகை மாதிரித் தோன்றிய கோடைக்கானலின் இயற்கை வனப்பு ஒரு குட்டரோகம் பிடித்த கிழவியைப் பார்த்த மாதிரி அருவருப்பாக இருந்தது.*

*உலகத்தில் மோசடி, ஏமாற்று இல்லாத இடமே கிடையாது போலும். மனிதக் காலடி படுகிற இடமெல்லாம் அவையும் இருக்கின்றன.*

"*சிவசிதம்பரம்! நான் சாயங்காலம் கடைசிக் காருக்கு ஊர் திரும்ப வேண்டும்!*"

"*ஏன்? பதினைந்து நாட்கள் இருக்கப் போவதாக அல்லவா சொன்னீர்கள்?*"

"*இல்லை! ஊரில் கொஞ்சம் வேலை இருக்கிறது!*"

*அவர் சிரித்தார். எத்தனையோ உலகியல் உண்மைகளைச் சீரணித்து அனுபவப்பட்ட சிரிப்பு அது.*

**(கல்கி, 28.6.1957)**

## 16. தெருவோடு போனவன்

**கை**யில் மணிக்கட்டின் மேல் கடிகாரம் ஓடிக் கொண்டிருந்தது. அப்படித்தான் வாழ்க்கையும் தெருவில் யாரோ சாவி கொடுத்து முடுக்கிய மாதிரி ஓடிக் கொண்டிருந்தது. நவராத்திரிக் கொலுவுக்கு வீட்டுக்கு வீடு போகும் பெண்கள், பட்டுப் பூச்சிகள் மாதிரித் தெருவில் அங்கும் இங்கும் போய் வந்து கொண்டிருந்தனர். பூக்காரப் பெண்கள், ரிக்ஷா வண்டிகள், கார்கள், பாதசாரிகள், தெரு அதிர ஓடும் லாரிகள் எல்லாம் கண்களுக்கு முன் வேகமாகச் சுழன்று கொண்டிருந்தன.

"மாமீ! மாமீ!... கதவைத் திறங்க மாமீ...!" அப்போதுதான் செடியிலிருந்து கொய்து கொண்டு வந்த ரோஜா மலர்போல, ஆறு வயதுச் சிறுமி ஒருத்தி கையில் குங்குமச் சிமிழோடு கதவைத் தட்டினாள்.

தோளிலிருந்து நழுவிய வெள்ளைப்புடவையை நேர் செய்து கொண்டு, ஜன்னலோரத்திலிருந்து எழுந்து போய்க் கதவைத் திறந்தேன்.

"குங்குமம் எடுத்துக்குங்கு மாமீ!... எங்காத்திலே கொலு... நான் கிருஷ்ணன் வேஷம் போட்டுண்டு டான்ஸ் ஆடப் போறேன்... நீங்க அவசியம் பார்க்க வரணும்..."

எனக்குச் சுரீரென்று இதயம் அடிவாங்கியது போல வலித்தது. கண்ணோரங்களில் ஈரம் கசிந்துவிட்டது.

"நான் குங்குமம் வச்சுக்கப்படாது குழந்தே! உன் டான்ஸைப் பார்க்கறதுக்குக் கட்டாயம் வரேன், நீ சமத்தோ இல்லியோ! அடுத்தாத்துலே போய்க் கொடு...!"

"ஐயய்யே! இதென்ன மாமீ! எங்க அம்மா ஒங்க மாதிரித்தானே இருக்கா? அம்மா தினம் ரெண்டு மூணு தரம் குங்குமப் பொட்டு வச்சுக்கறாளே? நீங்க ஏன் வச்சுக்கப்படாது?"

"நான் அதுக்குக் கொடுத்து வைக்கலியே அம்மா! என்ன செய்யறது?"

"குங்குமப் பொட்டு வச்சிண்டா உங்க முகத்துக்கு எவ்வளவு நன்னாயிருக்கும் தெரியுமா? கொஞ்சம் உக்காருங்க மாமீ! நானே வச்சு விட்டுடறேன்..." துறுதுறுவென்று இருந்த அந்தக் குழந்தையின் மலர்ந்த விழிகள், அகன்று விரிந்து ஆவலோடு என் முகத்தைக் கெஞ்சுகிற பாவனையில் ஊடுருவி நோக்கின.

நான் பூவையும், மஞ்சளையும், குங்குமத்தையும் இழந்தவள். அந்தக் குழந்தை அவற்றின் நிறைவான, மங்கலமயமான, பவித்ரம் செறிந்த வாழ்வை நோக்கி வளர்ந்து கொண்டிருப்பவள். என் பயங்கரத்தை - என் சோகத்தை - என் அமங்கலத்தை அதற்குப் புரிய வைக்க முயற்சி செய்வதைவிட, அதன் கெஞ்சுதலுக்குத்தான் தாற்காலிகமாக

நான் பணிந்துவிட்டால் என்ன? 'குழந்தையையும் தெய்வத்தையும் ஏமாற்றக்கூடாது. அப்படி ஏமாற்றும்போது நாமே நம்மை அறியாமல் ஏமாற்றிக் கொள்கிறோம்' என்று கேள்விப்பட்டிருந்தேன் நான்.

பாவமோ புண்ணியமோ, ஆகுமோ ஆகாதோ! அவற்றையெல்லாம் பற்றி எனக்குக் கவலை இல்லை. அந்தக் குழந்தை ஏமாந்து போய் நிராசையோடு திரும்பக்கூடாது. அதுதான் எனக்கு முக்கியம்.

நான் குனிந்து உட்கார்ந்தேன். என் நெற்றி அந்தப் புன்னகை நிறைந்த குழந்தையின் முகத்தை நோக்கி அண்ணார்ந்தது. தளதள வென்றிருந்த அந்தப் பிஞ்சுக் கையின் விரல்கள், ஆவலோடு குங்குமச் சிமிழில் நுழைந்தன. என் நெற்றி சிலிர்த்தது. பயங்கரமும் புளகமும் சமமாக விரவிய ஓர் உணர்வின் சலனம் என் உடல் முழுவதும் பரவியது. மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன! அந்த இளம் உள்ளத்தின் திருப்திக்காக, என் முதிர்ந்து மரத்துப்போன மனத்தின் வேதனைகளை அடக்கிக் கொண்டு சிரிக்க முயன்றேன்.

பள்ளிக்கூடத்தில் படிக்க வரும் எண்ணற்ற குழந்தைகளைப் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது காண்கிறேன். அப்போதெல்லாம் மனத்தில் சாதாரணமான வெறும் சாந்திதான் நிலவுகிறது. ஆனால்...? இந்தக் குழந்தை!... இது தெய்வலோகத்தில், சிருஷ்டியின் திறனெல்லாம் சேர்த்து உருவாக்கப்பட்ட ஒரு அற்புதமான மலர். இதயத்தின் நிராசைகளையெல்லாம் அழித்து நெஞ்ச விளிம்பில் பொங்கும் ஆசைக் குமுறலை வளர்க்கும் நிர்மால்யம்!

மாதுளை அரும்பு போன்ற அந்தப் பிஞ்சு விரல்கள், என் சூனிய நெற்றியை நெருடின. குங்குமம் புருவங்களில் சிதறி விழுந்தது.

"எப்படி மாமீ! கண்ணாடிலே பாருங்கோ! நன்னாப் பொட்டு வச்சிருக்கேன்."

"ஆகட்டும்! கட்டாயம் பார்க்கிறேன். நீ... போயிட்டு வரியா?"

"நீங்க கொலுவுக்கு வரணும்! மறந்துடப்படாது."

"அவசியம் வரேன்! வந்து உன் டான்ஸைப் பார்க்க வேண்டாமா?" - பூமியில் உருளும் சண்பகப் பூப் பந்து போல், அந்தச் சிறுமி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே குங்குமச் சிமிழோடு அடுத்த வீட்டிற்குப் போனாள். வாசல் கதவைச் சாத்திவிட்டு, மறுபடியும் ஜன்னலோரத்து நாற்காலியில் போய்ச் சாய்ந்தேன். எதிரே நாற்காலி நிறையப் பள்ளிக்கூடத்துக் 'காம்போஸிஷன்' நோட்டுக்கள்! அருகே சிவப்பு மை நிறைந்த மைக்கூடு! கட்டைப் பேனா! கைக் கடிகாரத்தில் ஏழு மணி ஆகியிருந்தது. வழக்கமாக 'டியூஷனுக்கு' வருகின்ற பெண்களை இன்று இன்னும் காணவில்லை.

எனக்கென்று வாழ எதுவும் இல்லை. வெள்ளை வாயில் புடவையைப் புரளப் புரளக் கட்டிக் கொண்டு, கால் செருப்புத் தேயப் பள்ளிக்கூடத்துக்குப் போய்விட்டு வரும் இந்த உத்தியோகந்தான், ஆசையின் ஒரே சாதனம். வாழ்வு அழிந்துவிட்டது; வருஷங்கள் பல கழிந்துவிட்டன; ஆனால் ஆசை அழியவில்லை; உள்ளத்தால்

விதவையாக, உடம்பால் வாத்தியாரம்மாவாக காலம் போய்க் கொண்டிருக்கிறது. காலத்தோடு காலமாக நானும் போய்க் கொண்டிருக்கிறேன். சிறை போன்ற வாழ்வு. பெரிய வீடு. ஒடுங்கிப் போன வாழ்வின் சிறிய பிம்பம். உயிரோடு பிணமாக உலாவி வருகிறேன். மனத்தின் சாந்தியை மங்காமல் காப்பாற்றும் இந்த உத்தியோகமும் இல்லை என்றால், என்றைக்கோ, தூக்குக் கயிறோ, கொல்லைக் கிணறோ, இந்த ஏழை ஆத்மாவைப் பலிகொண்டு போயிருக்கலாம். அதில் வியப்பென்ன? பயங்கரமென்ன? வாழ முடியாதவர்களுக்கு, எல்லைக்கு அப்பால் பிடித்துத் தள்ளப்பட்டவர்களுக்குச் சாவு ஒரு சஞ்சீவி அல்லவா?

"டீச்சர்! டீச்சர்!... கதவைத் திறங்க டீச்சர்!" எழுந்திருந்து போய்க் கதவைத் திறந்தேன். குஞ்சுவும் ராஜமும் தான் வந்திருந்தார்கள்.

"என்னடி இது? நீங்க புஸ்தகம் கொண்டு வரலியா?"

"இல்லே டீச்சர்."

"இப்ப என்ன காரியமா வந்தீங்க ரெண்டு பேரும்?"

ராஜமும், குஞ்சுவும் பதில் சொல்லாமல் என் முகத்தையே வெறித்து வெறித்துப் பார்த்தனர். பின் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"என்னடீ? என் முகத்திலே ஏதாவது எழுதி ஒட்டியிருக்கா? கேட்டதுக்குப் பதில் சொல்லாமே இப்படிப் பார்க்கிறீங்க...?"

"இல்லே டீச்சர்... நீங்க ஒரு நாளும் நெத்தியிலே குங்குமம் வச்சுக்கமாட்டீங்களே?... இன்னிக்கு மட்டும் வச்சிண்டிருக்கீங்களே...?"

என் தவறு எனக்கு அப்போதுதான் புரிந்தது. குழந்தை போனதும் அதை நான் அழித்திருக்க வேண்டும். மறந்துவிட்டது.

"ஓ! இதைச் சொல்றீங்களா?... இது வந்து..... இதை ஒரு குழந்தை விளையாட்டுக்காக வற்புறுத்தி இட்டுட்டுப் போச்சு..." - என்று சொல்லிக் கொண்டே, அவசர அவசரமாக அதை அழித்தேன்.

"ஏன் டீச்சர் அழிச்சிட்டீங்க? உங்க நெத்திக்கு அழகா இருந்துதே?"

"அது சரி, வந்த காரியத்தைச் சொல்லுங்க."

"நவராத்திரி முடியற வரைக்கும் கொலுவுக்கு இருக்கணுமாம்; 'டியூஷன்' வேண்டாம்னு அம்மா சொல்லச் சொன்னாங்க..."

"சரி! போயிட்டு வாங்க... அப்போ இன்னும் ஏழெட்டு நாளைக்கு 'டியூஷனுக்கு' வரமாட்டீங்க?... இல்லியா?"

"ஆமாம்! டீச்சர்..."

தலைநிறைய மல்லிகைப் பூ கொத்துக் கொத்தாக அசைய, சடைக்குஞ்சலங்கள் ஆட ராஜமும் குஞ்சுவும் தெருவில் திரும்பி நடந்து மறைந்தார்கள்.

பொட்டை அழித்துவிட்டேன். மீண்டும் ஒரு பிரமை! அந்தக் குழந்தையின் பட்டுக் கையிலுள்ள பிஞ்சு விரல்கள்,நெற்றியில் அமுத்திக் குங்குமத்தைத் தேய்ப்பதுபோல ஒரு உணர்வு. சுருட்டை சுருட்டையாக மயிர் புரளும் முன் நெற்றிக்கும், அடர்ந்த புருவங்களுக்கும் இடையே அந்த உணர்வின் விளைவாக ஒரு கிளுகிளுப்பு ஊடுருவிக் கொண்டிருந்தது. எண்ணங்களின் அடக்க முடியாத வேகம். சிறைப்பட்ட தண்ணீர் உடைத்துக் கொண்டு பெருகுவதுபோல, இதயவெளியில் பாய்ந்து கொண்டிருந்தது.

ஒரு பெண் கல்யாணமாகாமல் அனாதையாக வாழ்ந்துவிடலாம். கல்யாணம் ஆனபின் கணவனுக்கு முந்திக் கொண்டு இறந்துவிடலாம். ஆனால் வாழ வேண்டிய பருவத்தில், வாழ்கின்றவர்களுக்கு நடுவே, வாழாதவளாக 'விதவை' - என்ற பேரில் உயிரோடிருப்பதைப் போலச் சித்திரவதை வேறில்லை. புஷ்பங்களுக்கு நடுவே கிடந்து புரளும் சுகம்போல, யௌவன மலர்களாகிய பெண்களின் பள்ளிக்கூடத்தில் பாட்டுச் சொல்லிக் கொடுக்கும் வேலையை ஏற்றுக் கொண்டேனோ, இல்லையோ, அதனால்தான் பிழைத்தேன்! மனம் வழி தவறிய ஆசைகளின் ஒழுங்கற்ற மார்க்கங்களிலோ, ஆசைகளின் கொட்டத்துக்கு முடிவு காட்டும் சாவிலோ செல்லாமல், பொறுத்துக் கொண்டு செல்வதற்குக் காரணம் குழந்தைகளின் முகம்தான்.

இன்னும் பத்துப் பன்னிரண்டு நாட்களுக்குப் பள்ளிக்கூடம் கிடையாது. தசரா விடுமுறை. ராஜமும், குஞ்சுவும்கூட 'டியூஷனுக்கு' வருவதற்கில்லை என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். தனிமை! தனிமை! இந்தப் பெரிய வீட்டில், சிறிய உள்ளம் அலைமோதும் ஏக்கத்தினிடையே எப்படித்தான் தத்தளிக்கப் போகிறதோ? எண்ணங்களை எண்ணிப் பார்ப்பதற்கே நேரமில்லாமல், மனத்தை மற்றவர்களுக்கு நடுவே அவர்களுடைய கோலாகலத்தில் மூழ்கச் செய்துவிட்டால், வாழ்வின் அமங்கலமான பயங்கரம், தனிமையின் ஏக்கம், எல்லாம் மறைந்து விடும், போர்வையால் உடலை மூடிக் கொண்டதும், அதுவரை வெடவெடக்கச் செய்து கொண்டிருந்த குளிர் மறைகின்ற மாதிரி!

கண்களைச் சொருகிக் கொண்டு தூக்கம் இமை வழியே கனமாக இறங்கிக் கொண்டிருந்தது. மணி ஒன்பதுகூட ஆகவில்லை. வழக்கமாகத் தூங்குகின்ற நேரமும் இல்லை அது! ஆனால் என்னவோ தெரியவில்லை! காரணத்தைச் சொல்லிக் கொண்டா வருகிறது தூக்கம்? அப்படியே நாற்காலியில் தலையைச் சாய்த்தேன். சாப்பாடு?... அதைப் பற்றிய ஞாபகமே எனக்கு உண்டாகவில்லை. ஜன்னல் வழியே புகுந்த தெருவோரத்துப் பன்னீர் மரத்தின் குளுமையான வாசனை நிறைந்த காற்று, முகத்தில் ஜிலுஜிலுவென்று விளையாடியது. இந்தக் காற்றின் ஸ்பரிச சுகத்திற்கு வேறு உவமை சொல்ல வேண்டுமானால், அந்தக் குழந்தையின் பிஞ்சு விரல்கள் என் நெற்றியில் பொட்டு இட்டனவே, அந்த ஸ்பரிச சுகத்தைத்தான் சொல்ல வேண்டும்.

நெற்றியில் பளபளவென்று கருமை மின்னும் சாந்துப் பொட்டு வைத்துக்கொள்கிறேன். நாசித் துவாரங்களைத் தெய்வலோகத்திற்கு இழுத்துச் செல்லும் மணம்மிக்க குடை மல்லிகைச் சரத்தைப் பந்து பந்தாகச் சுருட்டித் தலையில் வைத்துக்கொள்கிறேன். ரோஜா நிற ஜார்ஜெட் புடவை, உடலில் பட்டும்

படாததுபோல மென்மையாக ஒட்டிக்கொண்டிருந்தது. கையில் தேங்காய் பழக்கூடையை எடுத்துக்கொண்டு, அம்மன் சந்நிதிக்குள் நுழைகிறேன்.

கோவில் வாசலில் யாரோ ஒரு சிறுமி இரைந்து கத்தி என்னைக் கூப்பிடுகிறாள். திரும்பிப் பார்க்கிறேன். கையில் எண்ணெய்க் கிண்ணத்துடன் அந்தச் சிறுமி சிரித்துக் கொண்டு நிற்கிறாள்.

"மாமீ! மாமீ! இப்ப நீங்க எவ்வளவு அழகா இருக்கீங்க தெரியுமா? எங்க அம்மாகூட இவ்வளவு அழகு இல்லை..."

அழகின் அளவுக்கு வரம்பு கட்டிவிடுகிறவளைப்போல, அந்தச் சிறுமி இரண்டு கையையும் நீட்டி விரித்து உதடுகளைக் குவிய வைத்துக் கொண்டு மலர மலரக் கண்களை விழிக்கிறாள்.

கையை விரித்தபோது, வலது கையிலிருந்த எண்ணெய்க் கிண்ணம் கீழே விழுந்து எண்ணெய் கொட்டிவிடுகிறது!

"ஐயையோ! எண்ணெய் கொட்டிட்டுதே மாமீ! எங்கம்மா கோவில் விளக்குலே விட்டுட்டு வரச் சொன்னாளே... இன்னிக்கு அடிதான் வாங்கப் போறேன்..."

"வெளக்குலே விட்டுட்டேன்னு அம்மாக்கிட்டப் போய் பொய் சொல்லிடேன்."

"பொய் சொல்லப்படாது மாமீ! அம்பாள் கண்ணை அவிச்சுப்பிடுவா, பாவம்..." - சிறுமியின் கண்களில் உலகெங்கும் தேடினாலும் காணக்கிடைக்காத பயபக்தியின் சாயல் மின்னுகிறது.

"அழாதே! வாசல்லே எண்ணெய்க் கடை இருக்கு. இந்தா, இந்தக் காசைக் கொண்டு போய்க் கொடுத்துக் கிண்ணத்துலே எண்ணெய் வாங்கிண்டு வா... அதுவரை நான் இங்கேயே நிற்கிறேன்." ஒரு முழு ஓரணா நாணயத்தை அந்தக் குழந்தையின் கையில் வைக்கிறேன்.

தங்கக் குத்துவிளக்கு ஒன்று, கையும் காலும் பெற்று ஓடின மாதிரி 'குடுகுடு' வென்று கிண்ணத்தோடு கோயில் வாசலிலிருந்த கடையை நோக்கி ஓடுகிறாள் சிறுமி.

அவள் கிண்ணத்தில் எண்ணெயை வாங்கிக் கொண்டு ஓடி வருகிறாள். சிறுமியின் கையைப் பிடித்துக் கொண்டு சந்நிதிக்குள் நுழைகிறேன். கோவில்மணி, பாவத்தின் மேல் விழும் சவுக்கடியைப் போல 'கணீர் கணீரெ'ன்று முழங்குகிறது.

நான் விழித்துக் கொண்டேன். கனவு கலைந்துவிட்டிருந்தது. தொலைவிலிருந்த மாதா கோவிலின் கால அறிவிப்பு மணி, பன்னிரண்டு முறை அடித்து ஓய்ந்து கொண்டிருந்தது. மணி அடித்து ஓய்ந்தபின்பும், ஒலியின் அலைகள் சிறிதுநேரம் ஓயாமல் செவித் துளைகளில் 'கிணுகிணு'த்துக் கொண்டிருந்தன. கனவு கலைந்துவிட்டது. கனவைப் பற்றிய இனிய நினைவுகள் மனத்திலிருந்து கலையவேயில்லை! ஓசை ஓய்ந்துவிட்டது, ஆசை ஓயவில்லை! மனம் மரத்துப் போகவில்லை! விந்தைதான்...!

விளக்குகளை அணைத்து விட்டுப் படுக்கையை விரித்துப் படுத்தேன். சுற்றிலும் நித்திரைக்கு நடை பாவாடை விரித்து வைத்ததுபோல ஒரே இருட்டு. ஜன்னலுக்கு வெளியே தெரு விளக்குகள் உறங்காமல் ஒடுங்காமல் கடமை வீரர்களைப் போல எரிந்து கொண்டிருந்தன. என்னைச் சுற்றிலும் இருட்டு. இருட்டைச் சுற்றிலும் நான்; இருளில் உறங்கும் இருளைப் போல, வாராத உறக்கத்தை வரவழைக்க முயன்று, வலியக் கண்களை மூடிக் கொண்டு பார்த்தேன். கவலைக்கும், உறக்கத்திற்கும் என்ன பகைமையோ, தெரியவில்லை.

பொழுது விடிந்தது. விடிந்த வேகத்தில் வளர்ந்தது. காலை நண்பகலாகி, நண்பகல் பிற்பகலாகி, பிற்பகல் மாலை என்ற பெருங்கிடங்கில் வந்து தேங்கியது.

"மாமீ... மாமீ!... கதவைத் திறங்க மாமீ!" - வரத்தை நாடி ஓடும் பக்தனைப்போல, ஓடிப் போய்க் கதவைத் திறந்தேன். அந்தத் தெய்வீகக் குழந்தை, கையில் குங்குமச் சிமிழோடு நின்று கொண்டிருந்தாள்.

நான் நேற்றுப் போலவே மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டேன். சிறுமி சிரித்துக்கொண்டே, என் புருவங்களுக்கிடையே குங்குமம் தோய்ந்த பிஞ்சு விரல்களை அழுத்தினாள். என் நெற்றி நரம்புகளுக்குள் 'குபுகுபு' வென்று மின்சாரத்தை அள்ளிப் பாய்ச்சியது அந்த ஸ்பரிசம். அவளுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அவளோடு சேர்ந்து கொண்டு நானும் சிரித்தேன். மீண்டும் என்னைக் கொலுவுக்கு வரச்சொல்லி வற்புறுத்திவிட்டுப் போய்ச்சேர்ந்தாள் அந்தச் சிறுமி.

திறந்த கதவை அடைத்தேன். இதயத்தையும் நினைத்தபோதெல்லாம் இப்படி அடைத்துவிட முடியுமானால், எவ்வளவு நன்றாக இருக்கும்? ஜன்னலோரத்து நாற்காலியில் என் உடம்பைச் சரணடைத்தேன். தெருவோரத்துக் காட்சிகளைக் கண்கள் பிடித்துக்கொண்டன.

சாரி சாரியாக நகைகளும், புதுப் புடவைகளும் மின்ன, நெற்றி நிறையத் திலகமும், தலை நிறைய பூவுமாகக் கொலு வீடுகளுக்குச் சென்றுவரும் பெண்கள், தெருவை நிறைத்துச் சென்று கொண்டிருந்தனர்.

ராஜமும், குஞ்சுவும் வந்து கதவைத் தட்டினார்கள். ஏதோ கலியாணப் பெண்கள் மாதிரி உடலெல்லாம் மினுக்க ஒரு அலங்காரம்! தலை நிறையப் பூ!

கொலுவுக்குச் செய்தது என்று ஏதோ பட்சணங்களைக் கொண்டு வந்து வைத்து விட்டு, விடை பெற்றுக் கொண்டு போனார்கள்.

"மல்லிகைப் பூ! மல்லிகைப் பூ! முழம் அரையணாத்தான்..."

இதயத்தின் அந்தரங்கமான மூலையொன்றில், வெட்கத்தை மறந்து தனிமையின் துணிவில் ஒரு சிறு ஆசை துளிர்த்தது.

"ஏய், பூ! இங்கே கொண்டா!" - எனக்கு எங்கிருந்துதான் அவ்வளவு துணிச்சல் வந்ததோ? எனக்கே தெரியவில்லை!

"யாரும்மா? நீங்களா கூப்டீங்க...?"

"ஆமாம், வா..." பூக்காரன் என்னை ஒரு தினுசாகப் பார்த்துக்கொண்டே கூடையை என் வீட்டு வாசலில் கொண்டு வந்து இறக்கினான்.

"நாலு முழம் நல்ல மல்லிகைப் பூவாப் பார்த்துக் கொடு..."

அவன் பூவைக் கொடுத்தான். நான் காசைக் கொடுத்தேன்.

"ஏம்மா! வீட்டுக்கு வேறே யாராச்சும் வந்திருக்காங்களா?"

"ஏன்? எதற்காக இப்படிக் கேட்கிறே நீ..?"

"இல்லே! பூ வாங்கினீங்களேஅதனாலே கேட்டேன். நீங்கதான் வச்சுக்க மாட்டீங்களே?" - அவன் போய்விட்டான்.

பூவோடு ஒரு அர்த்தம் நிறைந்த கேள்வியையும் என்னிடம் தொடுத்து விட்டுப் போய்விட்டான். இதயத்தின் அடிவிளிம்பில் 'ஜிலுஜிலு' வென்று ஆடிக் கொண்டிருந்த ஆசையின் இளந்தளிர், 'வெடவெட'வென்று நடுங்கியது. பூவை வைத்துக்கொள்ள இடமுண்டு. தலையிருக்கிறது! அதுவும் இல்லாவிட்டால் தரை இருக்கவே இருக்கிறது. அந்தக் கேள்வி?... அதை எங்கே வைத்துக் கொள்வேன்? இதயத்தில் வைத்துக் கொண்டால், இதயம் வெந்து போய்விடுமே?

முடிவில் ஆசைக்குத்தான் வெற்றி! தொலை தூரத்தில் மங்கிக் கொண்டிருந்த, 'மல்லிகைப் பூ! மல்லிகைப் பூ...'என்னும் அவனுடைய குரலின் ஒடுங்கிய தொனியைப் போலவே, அந்தக் கேள்வியும் ஒடுங்கிவிட்டது.

கதவை உட்புறமாகத் தாழிட்டுக் கொண்டேன். உள்ளே போய் அலமாரியைத் திறந்தேன். மழைக்காலத்து அருவியின் பிரவாகத்தைப்போல, கள்ளத்தனமான அந்த ஆசை உள்ளத்தைச் சிறியதாக்கி விட்டுத் தான் பெரிதாகிக்கொண்டிருந்தது.

எதிரே பெரிய நிலைக்கண்ணாடி வஞ்சகமில்லாமல் இருபத்தெட்டு வயது வாலிபத்தின் பெண்மை அழகை அப்படியே காட்டியது. என்றோ நடந்து என்றோ பாழாகவும் போன, கல்யாணக் கூறைப் புடவையை, நடுங்கும் கைகளால் பிரித்துக் கட்டிக் கொண்டேன். அலமாரிக்குள் கைப்பெட்டி நிறைய அடைபட்டுக் கிடந்த எல்லா நகைகளும் என் உடலில் தத்தம் பதவிகளை அடைந்தன. காதுகளில் வைரத் தோடுகள் மின்னின. கழுத்தில் 'நெக்லேஸ்', இரட்டை வடம் சங்கிலி, காசுமாலை! கை நிறையப் பொன் வளையல்கள், மூக்கில் சுடர் தெறிக்கும் மூக்குத்தி. நெற்றியில் அந்தக் குழந்தை தீற்றிவிட்டுப் போன மெல்லிய குங்குமக் 'கீறல்'. தலையை வட்டமாக முடிந்து கட்டிப் பிச்சோடாப் போட்டு, நாலு முழம் மல்லிகைப் பூவையும் சந்திரப் பிறைபோல் சூட்டிக் கொண்டேன்.

பூவைச் சூட்டிக் கொள்ளும்போது மட்டும் கைகள் கொஞ்சம் நடுங்கின! பூக்காரன் கேட்டுவிட்டுப் போன அந்தக் கேள்வி? சாட்டையைச் சொடுக்கி உதறியதுபோல, மனத்தில் ஒரு மின்வெட்டு வெட்டியது!

*கண்ணாடி வாழ்க! வெள்ளைப் புடவையும் மூளிக் காதுகளுமாகப் பாலைவனம் போலிருந்த என்னை, பத்தே நிமிஷங்களில் யௌவனம் ததும்பி வழியும், பருவ அழகு நிரம்பிய சுமங்கலியாகக் காட்டிவிட்டதே? இப்படியே தெருவில் இறங்கி நடந்தால் நான் 'விதவை' என்று சத்தியம்செய்தால்கூட யாரும் நம்பமாட்டார்களே? கனமான பட்டுப் புடவை, வழுக்கலும் மொடமொடப்புமாக உடம்பை யாரோ கட்டித் தழுவுகிற மாதிரி எவ்வளவு இதமாக இருக்கிறது? என்னையறியாமலே என் வாய், தானாக ஒரு புன்னகையை இதழ் ஓரங்களிடை நழுவவிட்டது! கண்ணாடியில் பார்க்கிறபோது, அந்தப் புன்னகை என்னையே ஒரு மயக்கு மயக்கிக் கிறங்க வைத்தது.*

*அலமாரியைச் சாத்தி விட்டுக் கண்ணாடிக்கு முன்பிருந்து, கூடத்துப் பக்கம் வந்தேன்! 'லேடீஸ் வாட்ச்'சின் - சிறிய எண்கள் தெரியவில்லை. விளக்கைப் போட்டு மணிக்கட்டை உயர்த்தி கைக்கடிகாரத்தில் மணி பார்த்தேன். ஏழரை மணி ஆகியிருந்தது.*

*சில நிமிஷங்களுக்குள் வாழ்க்கையின் ஓரத்தில் ஒதுக்கியிருந்த என்னுடைய எல்லா அமங்கலங்களும் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டதாக ஒரு பிரமை. அதற்குப் பதிலாக, இதுவரை கிடைக்காமல் இருந்த, அல்லது கிடைக்கவிடாமல் தடுத்துக் கொண்டிருந்த சகல சௌபாக்கியங்களும் பூர்ணமாகக் கிடைத்து, சுமங்கலியாக வாழ்வின் மலையுச்சியில் நிற்பதாக ஒரு எண்ண மிதப்பில், நீந்திக் கொண்டிருந்தேன். உடல் முழுவதும் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை இன்னதென்று இனவரம்பில் அடங்காத - அடக்கவும் முடியாத ஒரு பூரிப்பு 'கிளுகிளு'த்துக் கொண்டிருந்தது.*

*கைகளில் வளைகள் குலுங்கின. காதுத் தோடுகளின் ஒளிச் சிதறல் சுவரில் 'டால்' அடித்தது. நடந்து போய் அப்படியே ஜன்னலருகிலிருந்த நாற்காலியில் 'பொத்'தென்று உட்கார்ந்தேன். வீடு நிறைய எல்லா மின்சார விளக்குகளும் எரிந்து கொண்டிருந்தன. தெருவைப் பார்த்து இருந்த பெரிய ஜன்னல், முழுமையாகத் திறந்து கிடந்தது. அந்த ஒளி வெள்ளத்தின் இடையே மங்கலமயமான எண்ணத்தோணியின் மிதப்பில், எங்கோ கண்காணாத வாழ்வின் பூரணத்தை நோக்கிச் சென்று கொண்டிருப்பதாக, ஒரு சொப்பன அவஸ்தையில், நினைவுள்ளபோதே அமுங்கி ஆழ்ந்து கீழே, கீழே, கீழுக்கும் கீழே சௌபாக்கியத்தின் அதலத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தேன்.*

*நெஞ்சின் ஆழத்தில் எங்கோ ஒரு கோடியைத் தவிர, மற்றெல்லா இடங்களிலும் 'நான் சௌபாக்கியவதி, நான் சௌபாக்கியவதி' என்று மௌனத்தின் ஓசையில்லாத குரலில், பாஷையில்லாத சொற்களில், அர்த்தமில்லாத குறிப்பு ஒன்று கிளர்ந்து கொண்டிருந்தது. பாதத்தின் அடிப்புறம் முள் தைத்து வீங்கினால், செங்கல்லைச் சுட வைத்து ஒத்தடம் கொடுக்கும்போது அந்தச் சூடு 'வெது வெது'ப்பாய் இதமாக இருக்குமல்லவா? அது மாதிரித்தான் இந்த சௌபாக்கிய சொப்பனாவஸ்தையில், என் உடம்பு புளகித்துக் கொண்டிருந்தது.*

*தூக்கத்திற்கும், விழிப்பிற்கும் இடைப்பட்ட ஒரு நிலையில், ஜாக்கிரமுமில்லாமல் சொப்பனமுமில்லாமல் மதுவுண்ட வண்டு போல, தெருவைப் பார்த்தும் பார்க்காமலும் நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தேன். ஜன்னலோரமாகத் தெருவில் தன் போக்கில் நடந்து வந்து கொண்டிருந்த யாரோ இருவர், இரைந்து பேசிக் கொண்டு போனார்கள்.*

*"அட! நீ ஒண்ணு.. அவ அறுத்த முண்டையா லட்சணமாவா வீட்டிலே அடைஞ்சு கிடக்கிறா?... பூவும்,பொட்டும், நகையும், புடவையுமாகக் குலுக்கி மினுக்கிக்கிட்டுல்ல திரியுறா!"*

*யாரைப் பற்றியோ, கூட வந்தவனிடம் கத்திக் கொண்டு போனான் அவன். என் நெஞ்சு ஒரு குலுக்குக் குலுக்கி ஓய்ந்தது. தலை நிறைய நெருப்பை வாரி வைத்த மாதிரி ஒரு வலி. நாற்காலியிலிருந்து துள்ளி எழுந்தேன். குபீரென்று மெயின் சுவிட்சை அமுக்கினேன்! வீடு இருண்டது. கழுத்தில் காசு மாலை பாம்பு மாதிரி நெளிந்தது. பட்டுப்புடவை உடம்பில் ஒட்டவே இல்லை. 'சுளீர், சுளீர்' என்று சவுக்கடிகள் விழுகின்ற மாதிரி, உடம்பில் ஒரு வேதனை. சௌபாக்கியம் என்ற சொப்பனாவஸ்தைப் படகு, சில்லுச் சில்லாக உடைந்தது. உள்ளத்தால் அமங்கலி, உடலாலே மட்டும் சுமங்கலியாகி விட முடியுமா? புடவையை அவிழ்த்து எறிந்தேன். நகைகள் மூலைக் கொன்றாகச் சிதறின. இருண்ட வீட்டின் மூலையில் ஆசைப்பட்டுத் தேடிய எனது தாற்காலிக சௌபாக்கியத்தைக் கலைத்த அவன் யார்? யாரோ தெருவோடு போனவன்!*

**(ஆனந்த விகடன், அக்டோபர், 1957)**

## 17. தெய்வத்தால் ஆகாதெனினும்

**கோ**டை விடுமுறையைக் கழிப்பதற்காக மைத்துனன் சென்னையிலிருந்து வந்திருந்தான். ராஜத்துக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. அருமைத் தம்பியை வரச்சொல்லி விடுமுறை ஆரம்பிப்பதற்கு முன்பிருந்தே வருந்திக் கடிதம் எழுதினவள் வந்தபின் மகிழ்வதற்குக் கேட்கவா வேண்டும்?

ஆனால் என்னுடைய அந்த அழகான மைத்துனன் பட்டணத்துக் கல்லூரிகளில் பாடத்திட்டத்துக்குள் அடங்காத சில விஷயங்களையும் படித்துக் கொண்டு வந்திருந்தான். வந்து இரண்டு நாட்களுக்குள்ளேயே அவனுடைய மாறுதலை நான் கண்டுபிடித்துவிட்டேன். எதையெடுத்தாலும் மூடநம்பிக்கை என்றான். மற்றவர்கள் நம்புவது எதையும் அவன் நம்புவதற்குத் தயாராயில்லை. ஆனால் அவன் நம்புவதை எல்லோரும் நம்ப வேண்டுமென்று ஆசைப்பட்டான். எதற்கெடுத்தாலும் காரணமில்லாமலே காரசாரமாக விவாதித்தான். எங்கும் நிதானம் இழந்து உணர்ச்சியைக் கொட்டிப் பேசக் கற்றுக் கொண்டு வந்திருந்தான்.

"ஐயோ, பாவம்! இந்தப் பிள்ளை இப்படிக் குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்டு வந்த மாதிரி அறிவைக் கற்றுக்கொள்ளப் போன இடத்தில் அறியாமையைக் கற்றுக் கொண்டு வந்திருக்கிறதே!" என்று என் மனம் உள்ளூர வருந்தியது.

ஆனால் ராஜம் தன் தம்பியின் இந்த மாறுதல்களைப் புரிந்து கொண்டதாக வெளிக்காட்டிக் கொள்ளவே இல்லை. 'அம்பி அம்பி' என்று ஓடியாடி உபசரித்துக் கொண்டிருந்தாள். வாராது வந்த மாமணியைக் கண்டவள்போல் அன்பை அள்ளிச் சொரிந்தாள்.

அன்பும் பாசமுமுள்ள இடத்தில் குறைபாடுகள் இருந்தாலும் தெரிவதில்லை. தவிர பெண்களின் இயற்கை அவர்களைப் பாதிக்காத வரையில் இத்தகைய குறைகளைப் பொருட்படுத்தத் தோன்றாது.

"என்ன ராஜம்! உன் தம்பி ஒரு மாதிரி இருக்கிறானே! பழக்கவழக்கங்கள், பேச்சு, கொள்கை, எல்லாம் மாறியிருக்கின்றனவே? பார்த்தாயா?" என்று நானே ஒரு நாள் அவளைக் கேட்டுவிட்டேன்.

"அதற்கென்ன செய்கிறது? இந்தக் காலத்தில் இந்த வயசில் எல்லாப் பிள்ளைகளுமே இப்படித்தான் இருக்கிறார்கள்."

"எதற்கெடுத்தாலும் அவன் எடுத்தெறிந்து பேசுகிறானே?"

"அது அவனுடைய சுபாவம்! ஏதோ நாலு நாளைக்கு இருந்துவிட்டுப் போகலாமென்று வந்திருக்கிறான். இந்தச் சிறிய விஷயத்தைப் பெரிசுபடுத்தாதீர்கள்!"

என் மனைவி என்னைச் சமாதானப்படுத்தும் தோரணையில் பேசத் தொடங்கிவிட்டாள்.

'நாம் இவளுடைய தம்பியைப் பற்றி உண்மையான அனுதாபத்தோடு சொல்கிறோம். இவளோ அதை வேறுவிதமாக எடுத்துக் கொள்கிறாள். இனி நாம் இதைப் பற்றி இவளிடம் பேசாமல் இருப்பதே நல்லது' என்று அடக்கிக் கொண்டேன்.

அன்று மாலை அக்காவுக்கும் தம்பிக்குமே ஒரு தகராறு ஏற்பட்டுவிட்டது. ராஜம் பூஜையறைக்குள் அந்தி விளக்கு ஏற்றித் தீப வழிபாடு செய்து கொண்டிருந்தாள். அவள் தம்பி குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டுக் கொண்டே பூட்ஸ் கால்களோடு உள்ளே நுழைந்துவிட்டான்.

"என்னடா அம்பி? இப்படிச் செய்யலாமா நீ? குடிப்பதற்குத் தண்ணீர் அங்கேயிருந்தே கேட்டால் நான் கொடுக்க மாட்டேனா?"

"ஏன்? என்ன அக்கா? இப்போ நான் என்ன செய்துவிட்டேன்?" அவன் ஒன்றும் தெரியாத மாதிரி கேட்டான்.

"உனக்கு நம்பிக்கையில்லேன்னா மற்றவர்களைக் கஷ்டப்படுத்தலாமா? பூட்ஸ் காலோடு பூஜையறையில் இங்கே வந்து நிற்கிறாய்?"

"இதிலே என்ன தப்பு, அக்கா?"

"போடா போ! எதையெடுத்தாலும் உனக்கு விதண்டாவாதம்தான்!"

"தரையைத்தானே மிதிக்கிறேன்! சாமியையா...?"

"போதும் போ! உன் பேச்சும் நீயும். தண்ணீரைக் குடித்துவிட்டுப் போய்ச் சேர்..." கோபத்தோடு அலுத்துக் கொணடாள்.

கடைசிவரை நான் பேசாமல் இருந்துவிட்டேன். 'இது அக்கா தம்பி சண்டை - நான் போனால் இருவருமே என்னை எதிர்த்துக் கொண்டால் என்ன செய்வது?' எனக்கு ஒன்றும் தெரியாததுபோல் இருந்துவிட்டேன். தம்பி இப்படிச் செய்துவிட்டான் என்று அவளாக என்னிடம் பிரஸ்தாபிக்கவும் இல்லை. என்ன இருந்தாலும் சொந்தத் தம்பியைக் காட்டிக் கொடுக்க மனசு வருமா?

மறுநாள் வெள்ளிக்கிழமை. என்ன தலை போகிற காரியமாக இருந்த போதிலும் வெள்ளிக்கிழமை மாலை மீனாட்சியம்மன் கோவிலுக்குப் போகும் வழக்கத்தை நிறுத்தியதில்லை நாங்கள். மீனாட்சியைத் தரிசித்துவிட்டுப் பொற்றாமரைக் குளக்கரையில் சிறிது நேரம் உட்கார்ந்து வருவதில் புனிதமான நிம்மதி ஒன்று கிடைத்தது. தார் ரோட்டில் நடக்கும் போதோ, வீட்டிலிருக்கும்போதோ, நாடகம் சினிமா பார்க்கும்போதோ, கிடைக்காத நிம்மதி அது. கோவிலில் மட்டுமே கிடைத்தது.

வழக்கம்போல அன்று மாலையும் கோவிலுக்குப் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தோம். கூடத்தில் உட்கார்ந்து எங்கள் குழந்தை குஞ்சுவுக்குத் தலைவாரிப் பின்னிவிட்டுக் கொண்டிருந்தாள் ராஜம். 'காமிரா உள்'ளில் மைத்துனன் முகத்துக்கு

ஸ்நோ பூசித் தலையைக் 'கர்லிங்' விழும்படியாக அக்கறையுடன் வாரி விட்டுக் கொண்டிருந்தான். சினிமாப் பாட்டு ஒன்றை அவன் வாய் சீட்டியடித்துக் கொண்டிருந்தது. அரை மணி நேரமாக அவன் தலை சீவிக் கொள்ளும் இலட்சணத்தைப் பார்த்தபோது, 'தலையிலுள்ள மயிர் முழுதும் உதிர வேண்டும் அல்லது சீப்பிலுள்ள பல் முழுதும் உதிர வேண்டும்' என்று போட்டி போடுகிறது போல் தோன்றியது.

'சரி! பையனுக்குப் புத்தி வந்துவிட்டது. நம்முடன் கோவிலுக்கு வருவதற்காகத்தான் இவ்வளவு அலங்காரங்களும் செய்து கொள்கிறான் போலிருக்கிறது. பயல் அம்மனைத் தரிசிக்க வராவிட்டாலும் அம்மனைத் தரிசிக்க வரும் 'அம்மன்'களைத் தரிசிக்கவாவது வருவான்!' என்று எண்ணி உள்ளூர நகைத்துக் கொண்டேன்.

அவன் 'மேக்அப்'பை முடித்துக்கொண்டு அறையிலிருந்து கூடத்துக்கு வந்தான். நேரே என்னிடம் வந்து கேட்டான். "அத்தான்! எல்லாருமாகச் சேர்ந்து ஒரு சினிமாவுக்குப் போகலாம்!" என்றான்.

"நாங்கள் கோவிலுக்குப் போகிறோம். இன்றைக்கு வெள்ளிக்கிழமை. நீ வேண்டுமானால் சினிமாவுக்குப் போய் விட்டு வா!" என்று பதில் சொன்னேன்.

அவன் அக்காவிடம் போனான். "அத்தான் கோவிலுக்குப் போகட்டும். நீ வாயேன் அக்கா, குழந்தையை எடுத்துக் கொண்டு நாம் சினிமாவுக்குப் போய்விட்டு வரலாம்."

"இல்லையடா, அம்பி! மதுரைக்கு வந்து மூன்று வருஷங்கள் ஆயிற்று. ஒரு வெள்ளிக்கிழமைகூடத் தவறினதில்லை. நீ போய்விட்டு வா. நாங்கள் கோவிலுக்குப் போகிறோம்..." ராஜமும் அவன் வேண்டுகோளை மறுத்து விட்டாள். மைத்துனனுக்குப் பெரிய ஏமாற்றம், முகம் தொங்கிவிட்டது. திடீரென்று என்ன நினைத்துக் கொண்டானோ தெரியவில்லை. எனக்கு முன்னால் வந்து விறைப்பாக நின்றுகொண்டான். கேட்க ஆரம்பித்தான்.

"நீங்கள் படித்துப் பட்டம் பெற்றவர்தானே?"

"ஆமாம்!"

"சுயமாகச் சிந்திக்கும் பகுத்தறிவு உள்ளவர்தானே?"

"ஆமாம்!"

"உண்மை எது? போலி எது? என்று அறியத் தெரிந்தவர் தானே?"

"தெரியும்!"

"அப்படியானால் கோவிலும், குளமும், சாமியும், பூதமும் இந்தப் போலிப் பாவனைகளில் இருப்பதாக எப்படி நம்புகிறீர்கள்?"

"சீ! இதென்னடா முரட்டுத்தனமாக உளறிக் கொண்டு..." ராஜம் அவனைக் கடிந்து கொண்டாள். குழந்தை குஞ்சு மிரள மிரள எங்கள் இருவரையும் பார்த்து விழித்துக்கொண்டு நின்றாள்.

"நீ சும்மா இரு அக்கா! எங்களுக்குள் ஒரு சிறு விவாதம்... இதில் நீ தலையிடாதே..."

"எப்படியாவது போ" என்று அவள் உள்ளே போய் விட்டாள். நான் இன்னும் மைத்துனனுடைய கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. விழிகளை இமையாமல் அவனை ஏறிட்டுப் பார்த்தேன். அவனுடைய இளமை கொஞ்சும் முகத்தில் அறிவுக் கலப்பற்ற உணர்ச்சிவெறி தாண்டவமாடியது. முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பியிருந்தன. நமது கேள்விக்கு எதிரியிடம் பதில் இல்லை என்கிற மாதிரி தெம்பும் பலமும் அவன் கண்களில் ஒளியிட்டிருந்தன. நான் பதில் சொல்லாமல் மௌனமாயிருப்பதைத் தனக்குச் சாதகமாக நினைத்துக் கொண்ட அவன் மேலும் மடக்க ஆரம்பித்துவிட்டான்.

"அத்தான்! நீங்கள் மார்க்ஸ், இங்கர்சால், சி.இ.எம். ஜோட் ஆகியவர்கள் எழுதிய அறிவு நூல்களைப் படித்திருக்கிறீர்களா?"

"........"

"போகட்டும்! நம்முடைய வழிபாடு முழுவதும் ஒரு போலித்தனம். உண்மைக் கலப்பற்ற பொய். தெய்வத்தைப் போல இருப்பதெல்லாம் தெய்வமென்று எண்ணி மயங்குகிறோம் நாம். ரயில்வே 'கைடு' ரயிலாகி விடுமா? அதில் ஏறிப் பிரயாணம் செய்வதற்கு முடியுமா?"

"........"

"இந்தப் போலியான சமயமும் போதை தரும் பாவனைகளும் சமூகத்தை ஏமாற்றுகின்றன என்கிறார் கார்ல் மார்க்ஸ்."

"........"

"என்னுடைய கேள்விக்கு உங்களால் பதில் சொல்ல முடியவில்லை. அதனால்தான் மௌனம் சாதிக்கிறீர்கள்."

நான் கலகலவென்று வாய்விட்டுச் சிரித்துவிட்டேன். என்னால் சிரிப்பை அடக்கிக் கொள்ள முடியவில்லை. மேடையில் முழங்கும் அடுக்குமொழிச் சொற்பொழிவாளர்களையெல்லாம் தன்னிடம் பிச்சை வாங்கும்படி செய்துவிட்டான் என் மைத்துனன்.

"நீங்கள் சிரித்து மழுப்புவது நியாயமில்லை..." அவன் மறுபடியும் பலமாகக் கூச்சல் போட்டான்.

"நல்லது! உனக்கு அருமையான மூளை வாய்த்திருக்கிறது, அப்பா. என்னைவிட எவ்வளவோ அதிகமாகத் தெரிந்து கொண்டிருக்கிறாய். நான் மார்க்ஸ், இங்கர்சால், ஜோட் ஆகியவர்களைப் படிக்கவில்லை. சங்கரர், மாணிக்கவாசகர், ராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஆகியவர்களைப் படித்து ஏமாந்து விட்டேன்!"

"அத்தான்! நீங்கள் பதில் சொல்லவில்லை. வேண்டுமென்றே என்னைக் கேலி செய்கிறீர்கள்..."

"இப்போது எங்களுக்குக் கோவிலுக்கு நாழிகையாகிவிட்டது. உனக்குச் சினிமாவுக்கு நாழிகையாகிவிட்டது. நாளைக்கு வைத்துக் கொள்வோம்..." நான் அவனைச் சமாதானப்படுத்தி அனுப்பினேன்.

"இதென்ன இவ்வளவு முரட்டுத்தனமும் அசட்டுத்தனமும் இவனுக்கு எங்கிருந்து வந்தன?" அவன் தலை மறைந்ததும் ராஜம் என்னைக் கேட்டாள்.

"அசட்டுத்தனமில்லை, இதற்குப் பெயர்தான் பகுத்தறிவு என்கிறது. நீ புறப்படு. கோவிலுக்குப் போக நேரமாகிவிட்டது" என்றேன். இதற்குப்பின் அந்தப் பேச்சு எழவில்லை. கோவிலுக்குப் புறப்பட்டோம்.

கோவிலிலிருந்து புதுமண்டபம் வழியாக ராயகோபுரத்தின் வாசலுக்கு வந்தோம். அங்கிருந்த மரப்பொம்மைக் கடை ஒன்று குழந்தை கண்ணில் பட்டுவிட்டது. பொம்மைக் கடையைப் பார்த்தாளோ, இல்லையோ, ஏதாவது ஒரு பொம்மை வாங்கிக் கொடுத்தால்தான் அங்கிருந்து கிளம்புவேன் என்று அடம் பிடிக்கத் தொடங்கிவிட்டாள் குஞ்சு. நானும் ராஜமும் குழந்தையின் கவனத்தை வேறுபக்கம் திருப்பிச் சமாதானம் செய்து அழைத்துக் கொண்டு போக முயன்றோம். எங்கள் முயற்சி பலிக்கவில்லை.

"பொம்மை! எனக்குப் பொம்மை வேணும். அதோ அந்த யானைப் பொம்மையை வாங்கிக் கொடு!" குழந்தை அழுது கொண்டே புதுமண்டபத்துக் கல்தரையில் உருண்டு புரளத் தொடங்கிவிட்டாள்.

"சார்! குழந்தை ரொம்ப அழுகிறது. நாலணாத்தானே? ஒரு பொம்மை வாங்கிக் கொடுங்களேன்!" - கடைக்காரன் வேறு சிபாரிசுக்கு வந்தான்.

போனால் போகிறதென்று நாலணா கொடுத்து அந்த யானைப் பொம்மையை வாங்கிக் குழந்தையிடம் அளித்தேன். அழுகை நின்றது. கோடைக் காலத்தில் மழை எப்போது நிற்குமென்றும் தெரியாது. குழந்தைகளுடைய ஆசையும் பிடிவாதமும் கோடை மழைபோல. வீட்டுக்குத் திரும்பியதும் குழந்தை அந்த யானைப் பொம்மையோடு தன் விளையாட்டைத் தொடங்கிவிட்டாள். எங்கள் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. ராஜம் இரவுச் சாப்பாட்டுக்காகச் சமையலைக் கவனிக்கப் போனாள். யானைப் பொம்மையைக் கிணற்றடிக்குக் கொண்டு போய்ச் சோப்புப் போட்டுக் குளிப்பாட்டுவது, பவுடர் பூசி விடுவது இந்த மாதிரி குழந்தைத்தனமான காரியங்களைக் குஞ்சு செய்து கொண்டிருந்தாள். ஒரு ரஸிகனின் மனோபாவத்தோடு அதைச் சிறிது வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

'பொம்மை வாங்கி முழுசாக ஒரு மணிநேரம்கூட ஆகவில்லை! அதற்குள் இந்தக் குழந்தை மனம் அத்துடன் எவ்வளவு நெருங்கிய ஒட்டுறவு கொண்டாடுகிறது?' என்று சிந்தித்தேன். ஏதோ காரணகாரியத் தொடர்பற்று சிந்தனைகள் அலைமோதின.

'என் கையில் இதே யானைப் பொம்மையைக் கொடுத்துச் சோப்புப் போட்டு விடவும், பவுடர் பூசவும் சொன்னால் நான் பொறுமையோடு செய்வேனா?

குழந்தையின் அறியாமை அதற்கு இன்பத்தைக் கொடுக்கிறது. எனக்கு அறிவு தெளிந்துவிட்டதனால் அந்த இன்பத்தை அடைய முடியாது.'

இப்படிச் சிறிதுநேரம் சிந்தித்துவிட்டுப் படிப்பதற்காக அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்து வந்தேன். அது 'அலெக்ஸில் காரல்' எழுதிய அறியப்படாத மனிதன் - 'மேன் தி அன்னோன்' என்ற புத்தகம். ஆனால் புத்தகத்தில் மனம் லயிக்கவில்லை.

'மனிதனுக்கு எல்லாவற்றிலும் கட்டுப்பாடு இருப்பது போல அறிவு வளர்ச்சியிலும் கட்டுப்பாடு வேண்டும். அறிவு மீறி வளருமானால் நல்லது பொல்லாதது எதையுமே நம்பும் சக்தி குறைந்துவிடும். நாஸ்திகம் தோன்றும் காரணமே அது.' - இப்படிச் சில வரிகள் மின்வெட்டுப் போல் என் மனத்தில் ஆழமாகப் பதிந்தன.

மைத்துனன் பார்க்கப் போயிருந்தது ஆங்கில சினிமா. அதனால் ஒன்பதேகால் மணிக்கே படம் விட்டு வந்து சேர்ந்தான். நானும் அவனும் குஞ்சுவும் சாப்பிட உட்கார்ந்தோம். குஞ்சு தன் இலைக்குப் பக்கத்தில் யானைப்பொம்மையை உட்கார்த்தி அதற்கு முன்பும் ஒரு சிறு இலையைப் போட்டிருந்தாள். ராஜம் அந்த இலையில் ஒன்றும் பரிமாறாமல் போகவே அவள் அழ ஆரம்பித்துவிட்டாள்.

"அது மரப்பொம்மையடீ! சாப்பிடாது."

"மாட்டேன் போ! அதற்குப் போட்டால்தான் நானும் சாப்பிடுவேன்."

வேறு வழியின்றி அந்த இலையிலும் பரிமாறி விட்டுப் போனாள் ராஜம்.

சாப்பாடு முடிந்தது. படுக்கையில் குழந்தையை விட்டபோது யானைப் பொம்மையையும் பக்கத்தில் விட்டால்தான் தூங்குவேன் என்றாள். அப்படியே செய்தேன்; குழந்தைக்குப் பொம்மையிடம் ஏற்பட்ட பாசம் வேடிக்கையானதாக இருந்தது. மைத்துனன் வந்தான்.

"என்ன அத்தான்? என் கேள்விகளுக்குப் பதில் சொல்கிறீர்களா?"

"மணி பத்தரை. தூக்கம் இமைகளை அழுத்துகிறது. காலையில் சொல்கிறேன். நீயும் போய்த் தூங்கு" என்று அவனை அனுப்பினேன்.

பொழுது விடிந்தது. கோயில் யானை நாள்தோறும் அபிஷேகத்திற்கு நீர் கொணர எங்கள் தெரு வழியே போகும். சனிக்கிழமைகளில் மட்டும் அந்த யானைக்கு ஒரு சீப்பு வாழைப்பழம் கொடுத்துப் பழக்கப்படுத்தியிருந்தேன். இதனால் யானை மாவுத்தன் ஒவ்வொரு சனிக்கிழமையும் என் வீடு வந்ததும் யானையை நிறுத்திவிட்டு, "சார், வாழைப்பழம்" என்று குரல் கொடுப்பான்.

அன்று சனிக்கிழமை என்பது நினைவிலிருந்தும் பழம் வாங்கி வைக்க மறந்துவிட்டேன். தெருக்கோடியில் யானையைக் கண்டதும் மைத்துனனைக் கடைக்கு விரட்டினேன். அவன் அப்போது குஞ்சுவைத் தோளில் தூக்கி 'உப்பு மூட்டை' விளையாடிக் கொண்டிருந்ததனால் அவளையும் அழைத்துக்கொண்டு கடைக்குப் போனான்.

அவன் பழத்தோடு திரும்பி வருவதற்கும் யானை மாவுத்தன், வீட்டுவாசலில் யானையைக் கொணர்ந்து நிறுத்துவதற்கும் நேரம் சரியாக இருந்தது.

ஒரு சீப்புப் பழத்தில் ஒரு பழத்தை மட்டும் குழந்தையிடம் கொடுத்துவிட்டு மற்றவற்றை யானைக்குக் கொடுத்தேன்.

"குஞ்சு! அந்த ஒரு பழத்தை உன் கையாலே யானைக்குக் கொடேன்."

"ஐயோ பயமாயிருக்கு! நான் மாட்டேன்" என்று குழந்தை அலறிக் கொண்டே உள்ளே ஓடிவிட்டாள். நான் மீண்டும் அவளைப் பிடித்து வந்து யானைக்குப் பழம் கொடுக்கச் செய்யும் முயற்சியில் ஈடுபடுத்தினேன். குழந்தை பயந்து வீறிட்டுக் கதறினாள். யானையருகே நெருங்கவே அஞ்சினாள்.

"விடுங்க அத்தான்! குழந்தை பயப்படுகிறாள்" என்று மைத்துனன் கூறினான். நான் குஞ்சுவைக் கீழே இறக்கி விட்டுவிட்டேன். அவள் கையிலிருந்த பழத்துடன் வீட்டுக்குள்ளே ஓடிவிட்டாள். யானைக்காரன் யானையைச் செலுத்திக் கொண்டு போய்விட்டான். நானும் மைத்துனனும் உள்ளே வந்தோம்.

"அத்தான்! என்னை ஏமாற்றிக் கொண்டே போகிறீர்களே? என் கேள்விக்குப் பதில் சொல்லவே இல்லையே?" அவன் முதல் நாளைய விவாதத்தைக் கிளப்பினான்.

"உஷ்! இரையாதே. அதோ மூலையிலே பார்! உன்னுடைய கேள்விக்குப் பதில் அங்கே இருக்கிறது!"

மைத்துனன் ஆச்சரியத்தோடு நான் சுட்டிக்காட்டிய திசையில் திரும்பிப் பார்த்தான்.

அங்கே குழந்தை குஞ்சு உயிருள்ள யானைக்குக் கொடுக்க மறுத்த வாழைப்பழத்தை உரித்துத் தன்னுடைய பொம்மை யானையின் வாயில் திணிக்க முயன்று கொண்டிருந்தாள்.

"சாப்பிடு யானை! சாப்பிடு! ஏன் முழுங்கவே மாட்டேங்கிறே?" திருந்தாத மழலை மொழியில் வேண்டினாள்.

"பார்த்தாயா?"

"எதை?"

"அந்தக் காட்சியை!"

"பார்த்தேன், அதற்கென்ன?"

"நேற்றுக் கூறினாயே; பாரத நாட்டின் பக்தி மார்க்கம் வெறும் பாவனை, போலித்தனம் என்றெல்லாம். அந்தக் கருத்தை இப்போது தெரிந்து கொள்!"

"விளங்கவில்லையே?"

"சிந்தித்துப் பார் விளங்கும்! உன்னுடைய பகுத்தறிவு எப்படி எல்லாம் நினைக்கிறதோ, அப்படியெல்லாம் உன் முன் தோன்றவும் செயலாற்றவும் தெய்வத்தால் முடியாது! உன் அறிவைக் கொண்டு நீதான் அதைப் பாவிக்க வேண்டும்!"

"அப்படியானால் உண்மையைவிடப் பாவனை உயர்ந்ததா?" என்றான்.

"அல்ல! உண்மை அணுகுவதற்கரியது, உயிருள்ள நிஜ யானையைப் போல. பாவனை பக்திக்குரியது; யானைப் பொம்மையைப் போல" என்றேன்.

மைத்துனன் தலையைச் சொரிந்தான். "அப்பா! ஊழி ஊழியாக வரும் பாரதநாட்டுத் தெய்வப் பண்பாடு மகத்தானது. கோயிலும் குளமும் கட்டியவர்கள் அந்தப் பண்புக்கு வடிவு கொடுத்திருக்கிறார்கள்."

நான் சொன்னது அவனுக்கு விளங்கவில்லை!

(கல்கி, 7.7.1957)



## 18. வாழ்வில் நடவாதது

பரத வித்யா பவனத்தின் கலாசாலைக் கட்டடங்களுக்கு மேல் குடை பிடிப்பதுபோல் தென்னை முதலிய மரங்கள் பசுமைச் சூழலை உண்டாக்கியிருந்தன. யுவதிகளுக்கும் இளைஞர்களுக்கும் நாட்டியக் கலையின் பல்வேறு அம்சங்களையும் இசையையும் கற்பிக்கும் கலாசாலைதான் அது. நந்தகுமார் என்று ஒரு இலட்சியவாதி, தம்முடைய உடல், பொருள், ஆவி, கலைத்திறன் ஆகிய எல்லாவற்றையும் செலவிட்டு அந்தப் பரத வித்யா பவனத்தின் கலாசேவைக்கு ஆதார சுருதியாக இருந்து கொண்டிருந்தார். எல்லைக்கு உட்படாத கலையின் பிரவாக சக்திக்குக் கலாசாலை என்ற பெயரில் உன்னதமான இலட்சிய எல்லையைக் கோலி வளர்த்து வந்தார் அவர். இயற்கையழகு மிக்க கேரள தேசத்தில், மலைகள் சூழ்ந்த பள்ளத்தாக்கிலுள்ள வளமான கிராமம் ஒன்றில் பரத வித்யா பவனம் அமைந்திருந்தது.

மனோரம்மியமான ஒரு மாலைப்பொழுது. திருமணம் நடக்கிறபோது கள்ளத்தனமான ஓரக்கண்களால் கணவனை நோக்க முயலும் மணமகளின் விழிகளைப் போலக் கதிரவன் மேக முகமூடியில் மறைந்து உலகத்தைக் கள்ளப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தான். மலைச் சாரலின் குளிர்ந்த பூங்காற்று உல்லாசம் நிறைந்த எண்ணங்கள் போலப் புறத்தே வீசிக் கொண்டிருந்தது. எங்கும் குளிர்ந்த சூழ்நிலை. வித்யாபவனத்தில் 'பரதநாட்டிய வகுப்பு' முடிந்து, மாலைக் கால மணி அடித்து வெகுநேரம் ஆகிவிட்டது. மரகதக் கம்பளத்தின் மேல் பட்டுப் பூச்சிகளைப் பறக்கவிட்டாற்போல, இளைஞர்களும் யுவதிகளும் தத்தம் சிநேகிதர்கள், சிநேகிதிகள் கோஷ்டியோடு உலாவப் புறப்பட்டு விட்டார்கள்.

வாணி, அச்சன் ஓடைக் கரையில் உட்கார்ந்திருந்தாள். தில்லைநாதன் இன்னும் வரவில்லை. கரையோரத்து மகிழமரத்திலிருந்து உதிர்ந்த மகிழங் கொட்டைகளை எடுத்து, ஒவ்வொன்றாக ஓடை பரப்பில் எறிந்தாள். அது ஒரு வேடிக்கையான விளையாட்டாக இருந்தது அவளுக்கு. தில்லைநாதன் வந்து சேர்கின்றவரை தனிமையை எப்படியாவது கழிக்க வேண்டுமே? அது இந்த விளையாட்டின் மூலம் இனிமையாகக் கழிந்து கொண்டிருந்தது. தண்ணீரில் 'குபுக்' கென்று விழுந்த மகிழங்கொட்டை வளையம் வளையமாகச் சுழன்று விரியும் தரங்கங்களைத் தோற்றுவித்தது. தரங்கங்கள் விரிந்து விரிந்து இறுதியில் குறுகிக் குறுகி, தோன்றிய இடத்திற்கே வந்து ஒடுங்கின, மூலத்திலே தோன்றி முடிவில் மூலத்திலேயே ஐக்கியமாகும் பிரகிருதியைப்போல.

மகிழங்கொட்டைகளை ஒவ்வொன்றாக மெல்ல லய சுகத்தோடு அவள் வீசி எறிந்து கொண்டிருந்தபோது பின்னாலிருந்து ஒரு பெரிய கல் தண்ணீரில் வந்து

விழுந்தது. வாணி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். 'தில்லை' பின்புறம் கலகல வென்று சிரித்துக் கொண்டு நின்றான்.

வாணியும் சிரித்தாள். "கலாசாலை அப்போதே முடிந்துவிட்டதே! உங்களுக்கு மட்டும் ஏன் இவ்வளவு நேரம்?" என்று கேட்டாள்.

"நீங்களெல்லாம் மாணவர்கள்! கலாசாலை முடிந்ததும் நினைத்த இடத்திற்கு ஓடிவந்துவிடலாம். நான் ஆசிரியன். என் பொறுப்புக்களை முடித்து விட்டுத்தானே வரவேண்டும்? மேலும் இன்று கலாசாலை அதிபர் வந்திருந்தார்...."

"யார்? நந்தகுமாரா....?"

"ஆமாம் வாணி! அவர்தான் வந்திருந்தார்......"

அவன் அவள் அருகில் உட்கார்ந்தான். தெளிவாக இருந்த அச்சன் ஓடை நீர்ப்பரப்பில் அவர்களுடைய ஜோடி நிழல் ஆடி அசைந்தது.

தில்லை, நந்தகுமாரின் பரதவித்யாபவனத்தில் ஓர் நடன ஆசிரியன். நடனத்திற்கு என்றே படைக்கப்பட்டது போன்ற மன்மத சரீரம் அவனுக்கு. இருபத்தைந்து அல்லது இருபத்தாறு வயது இருக்கும். பெண்மையின் நளினமும் ஆண்மையின் கம்பீரமும் கலந்த சுந்தரபுருஷன். நல்ல இதயமும், இனிய குரலும், அன்பாகப் பழகும் சுபாவமும் அவனிடம் அடைக்கலமாகியிருந்த நற்குணங்கள்.

வாணி, தென் கேரளத்தில் உள்ள ஜனார்த்தனம் என்ற ஊரில் பிறந்தவள். தாயை இழந்து தந்தையின் ஆதரவில் படித்துக் கொண்டிருந்தபோது, தந்தையையும் பறி கொடுத்து அனாதையானாள். அவளுடைய தாய்மாமன் ஒருவர் எங்கெங்கோ சிபாரிசுகள் பிடித்து நந்தகுமாரின் பரதவித்யா பவனத்தில் கொண்டு வந்து சேர்த்துவிட்டுப் போனார். வித்யாபவனத்தில் கற்பிக்கப்படும் கலைகளில் அவளுக்கு இருந்த ஆர்வத்தையும் திறமையையும் ஆசிரியர்கள் பாராட்டியதனால் தொடர்ந்து அங்கே வசதிகளைப் பெற்றுக் கற்கும் வாய்ப்பும், ஊக்கமும் அவளுக்கு ஏற்பட்டன. இந்த வாய்ப்பையும், ஊக்கத்தையும் அவளுக்கு ஏற்படுத்தியதில் முக்கியத்துவம் தில்லைநாதனுக்கு உரியது.

கேரள தேசத்துக்கென்றே அமைகின்ற வாளிப்பான சரீரமும் உயரமும் பெற்ற வாணி, அந்த இளம் நடன ஆசிரியனின் உள்ளத்தில் அழியா இடம் பெற்றுவிட்டாள். கலைத்துறையில் அந்தப் பெண்ணுக்கு நடனம் கற்பிப்பதை ஒரு பெரும் பாக்கியமாகக் கருதினான் அவன். வித்தியா பவனத்தில் இருபத்தைந்து யுவதிகள் அவனிடம் நடனம் கற்று வந்தனர். அத்தனை பேரிலும் அவன் இதயத்தில் நடனம் ஆடியவள் வாணி ஒருத்திதான். வாணியின் இதயத்திலோ அந்த இளம் நடன ஆசிரியனைப் பற்றிய இனிய எண்ணங்கள் குடலைக்குள் இட்டுவைத்த சண்பகப் பூக்களைப்போல வாசம் மண்டிக் கிடந்தன.

தில்லைநாதன் வாணியின் மேலும் வாணி தில்லைநாதன் மேலும் கொண்ட கலைக் காதல், குணங்களின் சங்கமத்தில் தோன்றிய தெய்வீகக் காதல். தொடக்கத்தில்

கலாசாலையில் நடன வகுப்பு நேரங்களில் மட்டும் பழகிய அவர்கள், தனித்துப் பழகவும், நெருக்கம் உண்டாக்கியது ஒரு சந்தர்ப்பம்.

இந்திய சர்வ கலாசாலைகளின் பிரதிநிதிகள் அடங்கிய தூது கோஷ்டி ஒன்றைத் தமது வித்தியா பவனத்தைப் பார்வையிடுவதற்காக அழைத்து வந்திருந்தார் நந்தகுமார். அவருடைய வேண்டுகோளின்படியே கலாசாலை ஆசிரியர்களும் மாணவ, மாணவிகளும் தூது கோஷ்டியினர் கண்டு மகிழ்வதற்காகச் சில நாடக, நாட்டிய, இசை நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்திருந்தனர்.

தில்லைநாதன் தன்னுடைய நடன வகுப்பின் சார்பாக உத்தரராம சரிதத்தில் சில நிகழ்ச்சிகளை நாட்டிய வடிவில் சித்திரித்துக் காட்ட எண்ணியிருந்தான். நடன வகுப்பில் பத்துப் பன்னிரண்டு இளைஞர்களும் படித்து வந்தனர். அவர்களிலே ஒருவனை ராமனாவும், பெண்களில் வாணியைச் சீதையாகவும் நடிக்கச் செய்து ஒத்திகை பழக்கி வந்தான் அவன்.

கடைசி 'ரிஹர்சல்' அன்று நந்தகுமார் நேரில் வந்து பார்வையிட்டார். சீதையாக நடித்த வாணியின் நடிப்பு அவருக்கு மிகவும் திருப்தியாக இருந்தது. ராமனாக நடித்த மாணவனின் நடிப்பு அவ்வளவாக அவருக்குப் பிடிக்கவில்லை. "தில்லைநாதன்! தயவுசெய்து ஒரு சிறு மாற்றம் செய்து கொள்ளுங்கள். இந்தப் பெண்ணின் நடிப்பும், நடனமும் அற்புதமாக இருக்கின்றன. ஆனால், இந்த மாணவனின் நடிப்பு சோபிக்க வில்லை. அதனால் இந்த மாணவனுக்குப் பதிலாக நீங்களே இந்தப் பெண்ணோடு ராமனாக நடித்துவிடுங்கள். இனிமேல் வேறு மாணவர்களைத் தயார் செய்யவும் நாள் கிடையாது. நீங்களே நடிப்பதானால் பயிற்சி உங்களுக்குத் தேவையில்லை" என்றார்.

மாணவர் யாரேனும் நடிப்பதையே தில்லை விரும்பினான். ஆனால் அதிபரின் யோசனையை எதிர்க்கத் தயங்கியதால், அதை ஏற்றுக் கொண்டான்.

சர்வகலாசாலைத் தூது கோஷ்டியினர் முன்னால் தில்லைநாதனும், வாணியும் நடித்துக் காட்டிய உத்தரராம சரிதக் காட்சிகள் அன்றைய நிகழ்ச்சிகளுக்கு எல்லாம் சிகரம் வைத்ததுபோல அமைந்துவிட்டன. ராமன் சீதையைத் தீக்குளிக்கச் சொல்வது, தீக்குளிக்கும்போது பூமி பிளந்து, சீதையைத் தன் மடியில் தாங்கிக் கொள்வது ஆகிய நிகழ்ச்சிகளைத் தில்லைநாதனும் வாணியும் நடித்துக் காட்டியபோது பார்த்தவர் களுக்கு மெய் சிலிர்த்துவிட்டது. அரங்கத்தில் யாரோ ஒரு ஆணும் பெண்ணும் நடிக்கிறார்கள் என்பதை மறந்து, பவபூதியின் காவியம் கண்முன் தத்ரூபமாக நிகழ்வது போன்ற உணர்வை அடைந்துவிட்டனர், ரசிகர்கள். இந்தச் சம்பவத்திலிருந்துதான் தில்லைநாதன் வாணி இருவரும் நெருங்கிப் பழகத் தொடங்கினார்கள். அன்பு, உணர்ச்சியின் எல்லைக்கு வந்து பழக்கமாக மாறியிருக்கும் நிலையில் இருந்தனர் அவனும் அவளும்.

"ஏன்? இன்றைக்கு இவ்வளவு மௌனம்?" - ஓடைத் தண்ணீரைக் காலால் அளைந்து கொண்டே அமைதியாக உட்கார்ந்திருந்த தில்லைநாதனைப் பார்த்துக் கேட்டாள் வாணி.

"ஒன்றுமில்லை! ஏதோ... யோசனை..."

"அந்த யோசனை எனக்குத் தெரியக்கூடாததோ...?"

"அப்படி ஒன்றுமில்லை... அது இருக்கட்டும்! நளினியைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?"

"எந்த நளினியைச் சொல்கிறீர்கள்?"

"எத்தனை நளினிகள் இருக்கிறார்கள் இங்கே? ஒன்றும் தெரியாதவள் போலக் கேட்கிறாயே? அவள்தான்... உன்னோடு வகுப்பில் நடனம் கற்கிறாளே...? கலாசாலை அதிபரின் மகள் நளினி...?"

"அந்த நளினியைப் பற்றி நினைப்பதற்கு இப்போது அப்படி என்ன அவசியம் வந்துவிட்டது?"

"இல்லை? அவளுடைய போக்கு எனக்கு ஒரு மாதிரிப் படுகிறது!... நமக்கெல்லாம் படியளக்கும் வள்ளல் நந்தகுமாரின் புதல்வியாயிற்றே என்று பார்க்கிறேன்."

"என்ன விஷயம்...?"

"உன்னிடம் சொன்னால் நீ வேறு விதமாக நினைத்துக் கொண்டு என் மேலேயே சந்தேகப்பட ஆரம்பித்து விடுவாய். அப்பப்பா! இந்தப் பெண்கள் இருக்கிறார்களே..?" - ஓரக்கண்ணால் வாணியைப் பார்த்துக் கொண்டே கூறினான் தில்லைநாதன்.

"சொல்லாவிட்டால் அதைவிடப் பெரிய சந்தேகம் ஏற்படும். சொல்லியே விடுங்களேன்."

"வாணி! இந்த உலகத்தில் பிறக்கும்போதே நான் செய்த மாபெருங் குற்றம் அழகான நிறத்தோடும் அழகான உடலோடும் பிறந்ததுதான். நான் யாரை விரும்பவில்லையோ அவர்கள் என்னையும் என் அழகையும் விரும்பினால் அதைவிட எனக்கு வேறு என்ன அபாயம் வேண்டும்?"

"சொல்வதைக் கொஞ்சம் புரியும்படியாகத்தான் சொல்லுங்களேன்."

"இந்த விஷயத்தை நீ புரிந்து கொள்வதைவிடப் புரிந்து கொள்ளாமல் இருப்பதே நல்லது. ஆனாலும் சொல்கிறேன். இன்றைக்குக் கலாசாலை முடிந்ததும் நீங்களெல்லாம் போய்விட்டீர்கள் அல்லவா? நான் என் அறைக்குப் போய் நாட்டிய உடைகளையும், கால் சலங்கைக் கொத்துக்களையும் கழற்றி வைத்துக் கொண்டிருந்தேன். நளினி சுற்றும் முற்றும் மிரள மிரளப் பார்த்துக் கொண்டே என் அறைக்குள் நுழைந்தாள்.

"ஏதேதோ சம்பந்தா சம்பந்தமில்லாமல் சிரித்துப் பேசிக்கொண்டு நின்றாள். பின்பு சிறிது நேரம் கழித்துப் போய்விட்டாள். அவள் போன பிறகுதான் அவளுடைய தனியான வருகையின் அர்த்தம் எனக்குப் புரிந்தது. என் மேஜைமேல் இந்தக் கடிதத்தை வைத்து விட்டுப் போயிருக்கிறாள்! இதைப் படித்துவிட்டு அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை எனக்கு. இந்தா! நீயும் வேண்டுமானால் படித்துப் பார்... ஆனால் என் மேல் சந்தேகப்படாதே..."

தில்லைநாதன் தன் சட்டைப் பையில் இருந்து ஒரு கடிதத்தை எடுத்து வாணியிடம் கொடுத்தான். அவள் அதை வாங்கிக் கொண்டாள். ரசம் பூசிய கண்ணாடியில் ஆவி படிந்து ஒளி மங்குவதுபோல நுணுக்கமான மாறுபாடு ஒன்று அவள் முகபாவத்தில் ஏற்பட்டது. வாணி பதில் பேசாமல் மௌனமாக ஆழம் காண முடியாத அமைதியுடன் கடிதத்தை அப்படியே அவனிடம் திருப்பிக் கொடுத்தாள்.

"ஏன்? படிக்கவில்லையா வாணி?"

"கூடாது! நீங்கள் இந்தக் கடிதத்தை என்னிடம் கொடுத்ததே தவறு. என்னைப் போலவே நளினியும் ஒரு பெண்! உங்களைப் பற்றி அவள் மனத்தில் நிறைந்திருக்கும் உணர்ச்சி வேகங்களை நான் தெரிந்து கொள்ள விரும்பவில்லை. உங்களை நான் உறுதியாக நம்புகிறேன்."

"என்னை உறுதியாக நம்புகிறவள் என்கிறாய்? இந்தக் கடிதத்தைப் படிப்பதனால் அந்த நம்பிக்கை கெட்டுவிடப் போகிறதா! சும்மா படி, வாணி; ஒரு பெண்ணுக்கு எவ்வளவு அசட்டுத்தனம் இருக்க முடியும் என்பதற்கு இந்தக் கடிதம் ஒரு சரியான உதாரணம்." அவன் கடிதத்தைப் பிரித்துத் திரும்பவும் அவள் கையில் கொடுத்தான்.

வேண்டா வெறுப்பாக அதை வாங்கிப் படித்தாள் வாணி.

"அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமான நடன ஆசிரியர் தில்லைநாதர் அவர்களுக்கு; ஆசை வெட்கம் அறியாது என்று பழமொழி சொல்வார்கள். பலநாட்கள் பலமுறை வெட்கத்தை மீறிய ஆசையுடன் உங்களுக்குக் கடிதங்கள் எழுதியிருக்கிறேன். முடிவில் கடைசி விநாடியில் ஆசையை மீறி எழுந்த வெட்கத்தால் அவற்றை உங்களிடம் சேர்க்காமல் கிழித்துப் போட்டும் இருக்கிறேன். இதோ, இப்போது எழுதிக் கொண்டிருக்கிறேனே இந்தக் கடிதம்கூட அப்படி ஆனாலும் ஆகிவிடலாம். என் மனத்திலுள்ளதை வெளிப்படையாகத் திறந்து சொல்வதற்கு நான் ஏன் இவ்வளவு வெட்கப்பட வேண்டும் என்பதுதான் எனக்கே புரியவில்லை!

எனக்கு நினைவு தெரிந்த நாளில் இருந்து உங்களைக் கண்டிருக்கிறேன். என் மனத்தில் உங்களுக்கு ஓர் நிரந்தரமான இடம் ஏற்பட்டுவிட்டது. உங்களிடம் மாணவியாகச் சேர்ந்து நடனம் பயிலத் தொடங்குவதற்கு முன்பே அப்பாவோடு அவர் கலாசாலையைப் பார்வையிட வரும்போதெல்லாம் நானும் வந்திருக்கிறேன். கவர்ச்சிகரமான உங்கள் சுந்தரரூபம் அப்போதெல்லாம் என் மனத்தில் ஒருவிதமான குதுகுதுப்பை உண்டாக்கும். உண்மையைச் சொல்கிறேன். உங்களைப் பார்ப்பதற்காகவே நான் அப்பாவோடு வருவேன். அப்பாவிடம் பிடிவாதம் பிடித்து நடன வகுப்பில் சேர்ந்ததுகூட உங்களோடு பழகலாம் என்ற ஆசையால்தான். ஆசை வெள்ளத்திற்கு அணையாகப் போட்டு அடைத்து வைத்திருந்த வெட்கத்தை உடைத்து, இந்தக் கடிதத்தில் வார்த்தைகளாக வார்த்திருக்கிறேன். வாழ்க்கை என்ற அரங்கத்தில் என்றென்றும் உங்கள் மாணவியாகவே ஆடிக் கொண்டிருக்க விரும்புகிறேன். அந்தப் பாக்கியத்தைக் கவிகள் காதல் என்கிறார்கள் போலிருக்கிறது. கவிகள் சொல்கிற அது எதுவோ? அதை உங்கள்மேல் நான் கொண்டுவிட்டேன். என்னை நீங்கள்

புறக்கணிக்கக்கூடாது. நான் கூடிய சீக்கிரம் அப்பாவிடமே சொல்லி, உங்களை என்னுடையவராக்கிக் கொண்டுவிடலாம் என்றிருக்கிறேன்.

உங்கள் அடியாள்,

நளினி"

கடிதத்தைப் படித்துவிட்டு வாணி தில்லையைத் திரும்பிப் பார்த்தாள். "இனிமேல் உங்களுக்கென்ன கவலை? ஐசுவரியமே உங்களைத் தேடி வருகிறது. கலாசாலையின் அதிபரே தம்முடைய ஒரே புதல்வியை மணந்து கொள்ளச் சொன்னால், வேண்டாம் என்றா மறுத்து விடுவீர்கள்?"

"கனவில்கூட நினைக்காதே வாணி! இதோ! இந்தக் கடிதத்திற்கு நான் செய்யும் மரியாதையைப் பார்!" - அவள் கையிலிருந்த கடிதத்தைப் பறித்துச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து, அச்சன் ஓடையில் எறிந்தான் தில்லை. மல்லிகை அரும்புகளைத் தூவியதுபோல் நீர்ப்பரப்பில் கிழிந்த காகிதத் துணுக்குகள் மிதந்தன. "நன்றாக இருக்கிறது உங்கள் காரியம்! அதற்காகக் காகிதத்தை இப்படியா கிழிப்பார்கள்?... என்ன ஆத்திரம் உங்களுக்கு?..."

"காகிதத்திற்கு மட்டுமில்லை வாணீ! அவள் இதயத்தில் என்னைப் பற்றிக் கொண்டிருக்கும் நம்பிக்கைக்கும் இதே கதிதான் நேரப் போகிறது!"

"நான் அனாதை! ஏழை! அன்பைத் தவிர வேறு எதையும் உங்களுக்குக் கொடுக்க முடியாதவள். அவளோ உங்களைக் கலைஞராக வளர்த்துக் கலைஞராக வாழ வைத்துக் கொண்டிருக்கும் வள்ளலின் மகள்!... எனக்காக உங்கள் வசதிகளை இழக்கக்கூடாது!"

"வாணீ! நம்மை ஒன்றுபடுத்துவதற்கு ஒரு புனிதமான சந்தர்ப்பத்தை உண்டாக்கிக் கொடுத்ததே, பவபூதியின் மகாகாவியம் - அதன் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன்! என் உடலும் உள்ளமும் உன் ஒருத்திக்குத்தான் சொந்தம்..."

வாணி அவனை இமைக்காமல் பார்த்தாள். ஊடுருவும் அந்த விழிக்கூர்மை அவன் உடலைப் பார்த்ததோ? அல்லது உடல் வழியே உள்ளத்தைப் பார்த்ததோ?

நேரமாகி விட்டதை உணர்ந்து இருவரும் எழுந்து நடந்தனர். ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வந்ததும் இருவருடைய வழியும் நடையும் தனித்தனியே பிரிந்தன.

அந்த வருடம் வித்யாபவனம் கோடைவிடுமுறைக்காக மூடப்பட்டபோது தில்லைநாதன் வெளிநாடு சென்று திரும்ப வேண்டிய அவசியம் நேர்ந்தது. இந்தியாவிலிருந்து கலாசாரத் தூது கோஷ்டி ஒன்று அமெரிக்காவுக்குப் புறப்பட்டது. நந்தகுமாரின் பெருமுயற்சியால் நாட்டியக்கலையின் சார்பில் தில்லைநாதனுக்கும் அதில் ஓர் இடம் கிடைத்தது. தில்லைநாதன் அதற்கு ஆசைப்படவுமில்லை. அதை விரும்பவுமில்லை. ஆனால், தம்முடைய கலாசாலையின் சார்பில் அவன் கண்டிப்பாகப் போய்த்தான் ஆக வேண்டும் என்று வற்புறுத்தினார் நந்தகுமார். அவனால் மறுக்க முடியவில்லை. அமெரிக்கா போக ஒப்புக் கொண்டான்.

'வாணி - என்ன சொல்வாளோ?' என்று அஞ்சியே முதலில் அவன் நந்தகுமாரிடம் மறுத்துப் பார்த்தான். வாணியைத் தனியே சந்தித்தபோது, "மூன்று மாதச் சுற்றுப் பிரயாணம்தானே? நான் எப்படியும் இந்தப் பிரிவைப் பொறுத்துக் கொள்கிறேன். உங்களுக்குப் பேரும் புகழும் ஏற்பட்டால் அதில் எனக்கு மட்டும் பெருமையில்லையா? இங்கே ஒரு ஏழைப் பெண்ணின் இதயம் உங்களுக்காகத் துடித்துக் கொண்டிருக்கிறது என்பதை மட்டும் மறந்து விடாதீர்கள். இந்த அச்சன் ஓடையையும் இதன் பரிசுத்தமான தண்ணீரையும் போல என் ஆத்மாவை உங்களுக்காகச் சமர்ப்பிக்க வைத்துக் கொண்டிருக்கிறேன். சந்தோஷமாகப் போய் வாருங்கள்" என்று உருக்கமாக வேண்டிக் கொண்டாள். இதனால் தான் அவன் நந்தகுமாரிடம் சம்மதம் தெரிவித்தான்.

ஆனால் நளினியும் நந்தகுமாருமாகச் சேர்ந்து செய்திருந்த அந்தரங்க ஆலோசனைகளை அவன் கண்டானா? பாவம்!

சென்னை வரை போய் அங்கிருந்து விமானத்தில் புறப்படுவதாக ஏற்பாடு. அங்கு போய்ச் சேர்ந்த மறுநாள்தான் அவனுடைய மதிப்பிற்குரிய பெரியவராக இருந்த அந்த நல்லமனிதர் நந்தகுமாருடைய சூழ்ச்சி அவனுக்குப் புரிந்தது. சென்னையில் அவர்கள் தங்கியிருந்த ஹோட்டலின் மாடி அறையில் அன்று இரவு அவர் அவனிடம் அதைக் கூறினார். அப்போது நளினியும் அவர் அருகில் இருந்தாள்.

"தில்லைநாதன், என்னிடம் நீ இன்றுவரை கொண்டிருக்கிற நன்றியின் அளவை மீறிய ஓர் விலையை இப்போது உன்னிடம் கேட்கப் போகிறேன்!"

"என்னை வளர்த்துக் கலைஞனாக்கிவிட்ட உங்களுக்கு எத்தகைய காரியத்தையும் செய்யக் கடமைப்பட்டவன் நான்!"

"ஆனால் இன்று நான் உன்னைச் செய்யச் சொல்லுகிற காரியத்தைக் கேட்டவுடன் நீ என்னைச் 'சூழ்ச்சிக்காரன்' என்று திட்டாமல் இருந்தால் அதுவே பெரிய காரியம்!"

"நீங்கள் செய்கிற சூழ்ச்சி எதுவாக இருந்தாலும் அது நன்மைக்காகத்தான் இருக்கும்."

"தில்லை! என்னுடைய இதயத்தின் அந்தரங்க வாயிலைத் திறந்து பேசுகிறேன். கோபித்துக் கொள்ளாதே! உனது எதிர்காலத்தின் பிரகாசமான நிலையை எதிர்பார்த்து, நீயே விரும்பாத சில திட்டங்களை நான் உனக்காக வகுத்திருக்கிறேன். இதுவரை உன்னிடம் அவற்றை மறைத்ததற்காக என்னை மன்னித்துவிடு. அத்தோடு என்மேல் நீ வைத்திருக்கும் நன்றி மெய்யானால் என் சொல்லைத் தட்டாதே-"

"சொல்லுங்கள்..."

"அமெரிக்காவுக்குப் புறப்படுவதற்கு முன் உனக்கும் நளினிக்கும் திருமணம் நடந்தாக வேண்டும். நீ மட்டும் அமெரிக்கா செல்ல எற்பாடு செய்திருப்பதாக உன்னிடம் முன்பு நான் கூறியது வெறும் பொய். வருகிற ஞாயிற்றுக்கிழமை உங்கள் திருமணத்திற்குக்கூட வடபழநியில் ஏற்பாடுகளையெல்லாம் தயாராகச் செய்து வைத்திருக்கிறேன்."

"உங்கள் வேண்டுகோள் இவ்வளவு பயங்கரமானதாக இருக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. நான் ஏற்கனவே வேறொரு பெண்ணுக்கு என்னையும் என் இதயத்தையும் திருப்பிப் பெற முடியாத வகையில் கொடுத்துவிட்டேனே?"

"வாணி உன் இதயத்திலும் நீ அவள் இதயத்திலும் இடம் பெற்று ஒன்றிவிட்டதை நான்அறிவேன் தில்லை! ஆனால் எனக்காக நீ அவளைத் தியாகம் செய்துதான் ஆக வேண்டும்! எனக்குப் பின் என் மகளின் கணவனாக வாய்க்கிறவன் எவனோ அவன்தான் என் இலட்சியங்களையும் கலாசாலையையும் கொண்டு செலுத்தமுடியும்! அந்த மகத்தான பொறுப்பை உன்னிடம் ஒப்படைக்கக் கனவு கண்டேன்."

"தயவுசெய்து என்னை மன்னித்துவிடுங்கள். அந்த உயரிய இலட்சியங்களை நிறைவேற்றும் பாக்கியம் இந்த ஏழைக்கு வேண்டாம்!" - தில்லைநாதன் அவர் காலில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்தான். நந்தகுமாருக்குக் கோபம் வந்துவிட்டது.

"நீ விரும்பும் அந்த வாணியே உன்னிடம் வந்து 'நான் உங்களைக் காதலிக்கவில்லை, என்னை மறந்துவிடுங்கள்' என்று சொன்னால் நீ என்ன செய்வாய்?"

"வாணியை அங்கம் அங்கமாகச் சித்ரவதை செய்தாலும் அவள் இப்படிச் சொல்லவே மாட்டாள். சொன்னால் அப்புறம் நீங்கள் சொல்கிறபடி செய்யத் தில்லைநாதன் தயாராயிருக்கிறான்!" பந்தயம் இடுவது போலப் பேசினான் அவன்.

அவ்வளவுதான்! அன்றிரவே புறப்பட்டுப் போய் மறுநாள் காலை வாணியைச் சென்னைக்குக் கூட்டிக் கொண்ட வந்துவிட்டார் நந்தகுமார். என்ன சொல்லி அவள் மனத்தை மாற்றினாரோ தெரியவில்லை! வாணி சென்னைக்கு வந்தாள். நளினியையும் நந்தகுமாரையும் அருகில் வைத்துக்கொண்டே, "என்னை மறந்துவிடுங்கள்! உங்களை நான் காதலிக்கவில்லை. தப்பித்தவறி எப்போதாவது காதலிப்பதுபோல நடந்து கொண்டிருந்தேனானாலும் அது பொய்!" என்று குமுறி வரும் அழுகைக்கு இடையே தில்லையிடம் கூறி விட்டு, அங்கே தாமதிக்காமல் உடனே புறப்பட்டுப் போய்விட்டாள்.

இடிவிழுந்து எரிகின்ற பச்சைமரம் போல உடைந்து போய்ப் பற்றி எரிந்தது தில்லைநாதனின் இதயம். 'வாணி இப்படி மோசம் பண்ணுவாள்' என்று அவன் கனவில்கூட எதிர்பார்க்கவில்லை. எதிர்பாராதது - நடவாதது - வேகமாக நடந்தேவிட்டது. கப்பல் உடைந்து கடலில் விழுந்தவன் எது கிடைத்தாலும் அதை ஆதாரமாகப் பற்றிக் கொள்வதுபோலத் தில்லைநாதன் தன்னையும் தன் உள்ளத்து ஆசைகளையும் உயிரோடு அவருக்கு மலிவான விலையில் நன்றி என்ற பேரில் அர்ப்பணம் செய்துவிட்டான்.

ஞாயிற்றுக்கிழமையன்று வடபழநியில் நளினிக்கும், தில்லைநாதனுக்கும் திருமணத்தை நடத்தி வைத்தார். அதற்கு அடுத்த ஞாயிற்றுக்கிழமை அமெரிக்கா செல்லும் கலாசாரத் தூது கோஷ்டியுடன் புதுமணத் தம்பதிகளாகவே இருவரையும் விமானம் ஏற்றி அனுப்பினார். எல்லாத் திட்டத்தையும் வெற்றிகரமாக நடத்திவிட்ட பெருமையோடு ஊர் திரும்பினார்.

அமெரிக்காவில் சுற்றுப்பிரயாணத்தின்போது ஆங்காங்கே நளினியும், தில்லைநாதனும் ஆடிக் காட்டிய நடனங்கள் மிகச் சிறப்பாக அமைந்தன. அந்நாட்டுப் பத்திரிகைகளும் பிரமுகர்களும் அதைப் பெரிதும் புகழ்ந்தனர். அதையொட்டி இந்தியாவிலும் அவர்கள் புகழ் பரவியது. புதிய சூழ்நிலைகளும் கியாதியும் (மேன்மையும்) தில்லைநாதனுடைய மனத்தில் கவலையை மாற்றிவிட்டன.

அவர்களுக்கு வெளிநாட்டில் ஏற்பட்ட புகழையும் வரவேற்பையும் பத்திரிகைகளில் படித்துப் படித்துப் பெருமிதம் அடைந்தார் நந்தகுமார். அவர் படித்தது போலவே அந்த அபாக்கியவதி வாணியும்தான் அவற்றையெல்லாம் படித்துப் பெருமிதப்பட முயன்றாள். ஏக்கம்தான் குமுறியது. 'எல்லாம் தான் ஒருத்தி செய்த தியாகத்தால் வந்த பெருமை' - என்பது அவளுக்குத் தெரியும். இருந்தாலும் அதைப் பெருமையாக அவளால் உணர முடியவில்லை. ஏங்கி ஏங்கி உடல் இளைத்துக் களையிழந்து கொண்டிருந்தாள் அவள். தன் சொல்லுக்குக் கட்டுப்பட்டுத் தனக்காக இழக்க முடியாததை இழக்க முன் வந்த அந்தப் பெண் தெய்வம் ஏக்கம் தாளாமல் தற்கொலை முயற்சியில் இறங்கிவிடக்கூடாதே என்பதற்காகக் கலாசாலைக் கட்டடத்திற்குள்ளிருந்து வெளியேற விடாது அவளுக்கு வசதிகள் செய்து காத்து வந்தார் நந்தகுமார். ஆனால் பாவம்! அவள் இதயம் என்றோ செத்துவிட்டது என்பது அவருக்கு எப்படித் தெரியும்?

விதி, மனிதர்களுக்குப் புரியாதது மட்டுமல்ல! மனிதர்களைவிட பயங்கரமானதும்கூட! நியூயார்க்கில் தங்கியிருந்தபோது, ஒருநாள் ஜுரம் என்று சுருண்டு படுத்தாள் நளினி. தில்லைநாதன் பதறிப் போனான். பெரிய டாக்டர்கள் வந்து மருந்து கொடுத்தனர். நோயாயிருந்தால் அல்லவா மருந்துக்கு அழியும்? அதுதான் விதியின் பயங்கரமான அவஸ்தை யாயிற்றே? மூன்று நாள் ஜுரத்தோடு போராடிவிட்டு, அவனையும் உலகத்தையும் விட்டு, அவனும் உலகமும் பின்தொடர முடியாத இடத்துக்குப் போய்ச்சேர்ந்துவிட்டாள் நளினி.

தில்லைநாதன் கதறினான். தூது கோஷ்டியினர் வந்து ஒன்றரை மாதம்கூட ஆகவில்லை. மன ஆறுதலைப் பெற வேண்டும் என்பதற்காகத் தில்லைநாதனுக்கு மட்டும் ஒரு தனி விமானத்தை ஏற்பாடு செய்து இந்தியாவுக்கு உடனே திருப்பி அனுப்பியது அமெரிக்க அரசாங்கம்.

நந்தகுமாருக்கு இந்தச் செய்தி தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டிருந்தது. சென்னை விமானநிலையத்தில் கண்ணீர் வெள்ளத்திடையே தில்லைநாதனை எதிர் பார்த்து, நொந்துபோய் நின்று கொண்டிருந்தார். விமானம் வந்தது; அவன் இறங்கி வந்து அவரைக் கட்டிக் கொண்டு 'கோ' வென்று கதறியழுதான்.

"தில்லை! விதி எனக்குச் சரியான பாடத்தைக் கற்பித்துவிட்டதப்பா... நான் ஓர் அனாதைப் பெண்ணிடமிருந்து உன்னைத் தட்டிப் பறித்து என் பெண்ணிடம் கொடுத்தேன். ஆண்டவன் என் பெண்ணையே தட்டிப் பறித்துக் கொண்டான்!" அவர் ஏதேதோ அலறினார். இருவரும் ஒருவருக்கொருவர் ஆறுதல் கூறமுடியாத நிலையில் வித்தியாபவனத்துக்கு வந்து சேர்ந்துவிட்டனர்.

ஒருநாள் மாலை நேரம். விதவையின் திலகமற்ற முகம் போல வானம் கதிரவனை இழந்து இருண்டு கொண்டிருந்தது. அடையாளம் தெரிந்து கொள்ள முடியாதபடி இளைத்துப் போன வாணி, அச்சன் ஓடைக்கரையில் உட்கார்ந்து வானத்தை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். தில்லைநாதன் தலைகுனிந்து பின் தொடர, நந்தகுமார் அங்கே வந்தார். வாணியின் வெறித்த பார்வை கலையவில்லை. அவர்கள் வந்ததை அவள் கவனிக்காததுபோல் இருந்தாள்.

"வாணீ... அம்மா... உன்னைத்தான் கூப்பிடுகிறேன்!" நந்தகுமார் சிறு குழந்தையை அழைப்பதுபோல அவளை அழைத்தார். சலனம் அற்ற முகபாவத்தோடு அவர் பக்கம் மௌனமாகத் திரும்பினாள். தில்லைநாதன் தலையை இன்னும் அதிகமாகக் குனிந்து கொண்டான். அவன் கண்கள் அவளைக் காணக் கூசின.

"அம்மா! நீ பராசக்தி! தெய்வம்! உனக்கு இழைத்த துரோகத்திற்கு விதி என்னைச் சரியானபடி தண்டித்துவிட்டது. இதோ இந்த இளங்கலைஞன் நிரபராதி; இவன்மேல் சந்தேகப்படாமல் இவனைப் பழையபடி ஏற்றுக்கொள்! உன்னைக் கைகூப்பி வணங்குகிறேன்!" என்றார் நந்தகுமார்.

"......"

பதில் இல்லை. அவள் விழிகள் அனல்கீற்றுக்களைப் போல மின்னின.

"அம்மா! நீ... உத்தரராம சரித நாடகத்தில் இவரோடு நடிக்கவில்லையா? அதில் சோதனைக்குப் பின்பு ராமர் சீதையை ஏற்றுக்கொள்வது போல..."

நெருப்புத் துண்டத்தில் விழுந்த நெற்பொரிபோல அவள் விழிக் கடைகளில் உணர்ச்சி முத்துக்கள் திரண்டன.

"அம்மா! என் கலாசாலையும் இலட்சியங்களும் பாழ்போகாமல் வாழ வேண்டுமானால் இவரை ஏற்றுக்கொள்! மகாகவி பவபூதியின் வாக்கின்மேல் ஆணையாக ஏற்றுக் கொள்."

அவளுடைய வலது கைச் சுட்டுவிரல் ஓடைக்கரையின் ஈரமணலில் ஏதோ அட்சரங்களைக் கிறுக்கியது. இருளில் பேசாமல் எழுந்து நடந்தாள் அவள். அவர்கள் மணற்பரப்பைப் பார்த்தனர்:-

"காவியம், ஓவியத்துச் சந்திரன்! அதற்கு வளர்ச்சியும் தேய்வும் இல்லை. வாழ்வு பிரத்யட்சம்! அதனால் வளர்ச்சியும் தேய்வுமுண்டு. காவியத்தில் நடப்பதெல்லாம் வாழ்வில் நடக்க வேண்டுமென்பதில்லை. பவபூதிக்கு இன்னும் ஒரு உத்தரராம சரிதம் எழுத நான் வாய்ப்புக்கொடுக்கமாட்டேன்."

மணலில் எழுதியிருந்ததை அவர்கள் படித்தனர். தொலைவில் பிரபஞ்சத்தின் இருள் வாணியை விழுங்கி மறைத்துக் கொண்டிருந்தது.

(ஆனந்த விகடன், டிசம்பர், 1957)

## 19. சீ! சீ! இந்தப் பழம்!

"அழகாக இருப்பது எப்படி? மற்றவர்களைக் கவருவது எப்படி? உங்களுடைய சருமத்தைக் காந்தி நிறைந்ததாகவும், மினுமினுப்பாகவும் எப்படி வைத்துக் கொள்வது? நீங்கள் சுருள் சுருளான அழகிய கேசத்தைப் பெற வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும்?" என்று இந்த மாதிரியில் தொடங்கும் விளம்பரங்களையோ, புத்தகங் களையோ, கவனிக்காத நாட்கள் இராமசாமியின் வாழ்க்கையில் ஏற்பட்டது இல்லை.

பத்திரிகைகளில் இந்தப் பாணியில் வெளி வருகிற விளம்பரங்களை அவன் ஒன்று விடாமல் கத்தரித்து, ஒரு 'ஆல்பமே' தயாரித்து வைத்திருந்தான். கல்லூரிப் பாடப் புத்தகங்களுக்குக்கூட அவனுடைய புத்தக அலமாரியில் முதல் இடம் கிடையாது. இம்மாதிரி 'எப்படி'த் தலைப்போடு கூடிய புத்தகங்களுக்குத்தான் முதல் இடம்.

கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த அந்த இளமைப் பருவத்திலேயே, உடலைப் பேண வேண்டும், உடல் அழகினால் பிறரைக் கவர வேண்டும் என்று இராமசாமிக்கு அளவற்ற மோகம். அது ஒரு விடலைத் தனமான பருவம். அந்தப் பருவத்து உணர்ச்சிகளே தனிப்பட்டவை.

ஒரு நாளைக்கு நாற்பது தடவையாவது முகத்தைக் கண்ணாடியில் பார்த்துக்கொள்ளாவிட்டால் ஏதோ குறைந்துவிட்டது போலத் தோன்றும். தலைக்கிராப்பை வாரிக் கொள்வதற்கு ஒரு சீப்பு எப்போதும் சட்டைப் பையிலேயே இருக்க வேண்டும். ஒரு மயிர் கலைந்துவிட்டாலும் அழகே போய்விட்டது போலத் தோன்றும். பளபளப்பாக மின்னும்படி எண்ணெய் தடவி, நீரோடிய கருமணல் போல் அலைஅலையாகப் படியும்படி வாரி விட்டுக் கொண்டால் தான் அவனுக்குத் திருப்தி.

இராமசாமிக்கு இருபத்திரண்டாவது வயது. சரியான காளைப் பருவம். கவலை, அவலங்கள் இல்லாத மாணவ வாழ்க்கை. உல்லாசம் நிறைந்த எண்ணங்கள், உல்லாசம் நிறைந்த பேச்சுக்கள், உல்லாசம் நிறைந்த செயல்கள். அடுத்த வீட்டில் ஒரு அழகிய யுவதி. சிந்தையில் ஆயிரம் எண்ணங்களைச் சேர்த்து மகிழ வைக்கும் வயது. நடக்குமோ, நடக்காதோ - துணிவான அனுராக நினைவுகள் தோன்றிவிடும். அவளும் அவன் படிக்கிற அதே கல்லூரியில் படிக்கும் மாணவிதான். அந்த வயதில் அந்தச் சூழ்நிலையில் இராமசாமிக்கு ஏற்பட்ட உற்சாகத்துக்கும், உல்லாசத்துக்கும் இந்தப் பெண் ஒருவகையில் முழுக்க முழுக்கக் காரணம் என்று சொல்ல வேண்டும். அந்தப் பெண்ணின் கண்களின் பார்வை ஒரு கணம் தன்மேல் நிலைக்கலாகாதா? என்று அவன் ஏங்கிய நாட்கள் எத்தனை? அவளோடு இரண்டொரு விநாடிகள் பேசுவதற்கு முயன்று அது முடியாமல் ஏமாற்றமடைந்த தோல்விகள் எத்தனை?

வசியத் தாயத்து, வசிய மோதிரம், 'இப்னாடிஸம்' என்று இந்த உலகத்தில் செயற்கைக் காதல் முறையின் தளவாடங்களாகப் பத்திரிகைகளில் விளம்பரமாகும் சகலவிதமான சாதனங்களையும் பிரயோகித்த பின்னரும், அந்த மயில் இந்தக் கட்டிளங் காளையின் பக்கமாகப் பார்வையைச் சாய்க்கவில்லை. இராமசாமிக்கு ஏமாற்றம். சாதாரண ஏமாற்றமா? நூற்றுக்கு நூறு சதவிகித ஏமாற்றம்.

'ஆகா! இது என்ன அநியாம் நிறைந்த உலகம்? படிப்புத்தான் வரமாட்டேனென்கிறது. பரீட்சைகளும் எத்தனை தரம் எழுதினாலும் பாஸ் ஆவதில்லை. பத்திரிகைகளுக்குக் கதை கட்டுரைகள் எழுதலாம் என்றால் அவர்கள் 'நன்றாயில்லை' என்ற ஒரு காரணத்துக்காகத் திருப்பியனுப்பி விடுகிறார்கள். என்ன அக்கிரமம்? 'நன்றாயில்லை' என்பதற்காக ஒரு கதையைத் திருப்பியனுப்புவதாவது? இப்போதெல்லாம் தான் நன்றாயிருக்கிற எதுவுமே பத்திரிகையில் வருவதில்லையே! என் கதையைப் பிரசுரிக்க வேண்டுமென்று நான் ஆசைப்படுவதே, அது 'நன்றாயில்லை' என்ற ஒரே தகுதிக்காகத்தானே? சரி! இதெல்லாம் போகிறது. நம்மால் முடியாத காரியங்கள். கடைசி முயற்சியாக இந்தப் பக்கத்து வீட்டுப் பெண்ணைக் கொஞ்சம் காதலித்துப் பார்க்கலாம் என்றால் அதிலுமா இவ்வளவு தொல்லைகள்!' என்று தனக்குத்தானே எண்ணி ஏங்கிக் குமுறுவான் இராமசாமி.

கல்லூரியிலிருந்து வீடு திரும்பும்போது பஸ்ஸில் தான் நின்றுகொண்டு, அவளுக்கு எத்தனையோ நாட்கள் உட்கார இடம் கொடுத்திருக்கிறான். 'சரி! இப்படி உட்கார இடம் மட்டும் கொடுத்தால் இவள் நம்மோடு பேசுவதற்கு வாய்ப்பில்லை; நினைவில்லாமல் போட்டுவிட்டு எழுந்திருப்பது போல் பஸ்ஸில் உட்காருமிடத்தில் நம் கைக்குட்டையைப் போட்டுவிட்டு எழுந்திருப்போம். "மிஸ்டர்! இந்தாருங்கள் உங்கள் கைக்குட்டை" என்று அப்போதாவது இரண்டு வார்த்தை இவள் சொல்லித்தானே ஆக வேண்டும்!' என்று எண்ணித் திட்டமிட்டவனாக மறுநாள் அவளுக்கு இடம் கொடுப்பது போல் கைக்குட்டையையும் அந்த இடத்தில் வைத்துவிட்டு எழுந்தான்.

ஆனால் அந்தப் பெண்புலி அவன் எண்ணியதற்கு நேர்மாறான காரியத்தைச் செய்துவிட்டது. விறுவிறு வென்று அந்தக் கைக்குட்டையை ஸீட்டிலிருந்து எடுத்துச் சுருட்டிப் பஸ்ஸுக்கு வெளியே ரோட்டில் வீசி எறிந்துவிட்டாள். இராமசாமியின் தன்மானம் கொதித்து எழுந்தது. அவள் தன்னுடைய உள்ளத்தையே அந்த மாதிரி அலட்சியமாகச் சுருட்டி ஓடுகிற பஸ்ஸிலிருந்து நடு ரோட்டில் விசிறிவிட்டது போலத் துடித்தான் அவன். அத்தனை பேர் இருக்கிற பஸ்ஸில் அவளை என்ன செய்ய முடியும்? திருடனுக்குத் தேள் கொட்டினாற் போலத் தவிக்கும் நிலை அவனுடையதாயிருந்தது.

அடாடா! அந்தப் பெண்ணின் பெயரை இதுவரை சொல்லவே இல்லையே! 'நளினி' என்ற நளினமான பெயர் அவளுக்கு. மயிலேறும் பெருமாள் தெருவில் தொண்ணூற்றொன்பதாம் நெம்பர் வீடு நம்முடைய கதாநாயகனான இராமசாமியினுடையது. நூறாம் நெம்பர் வீடு கதாநாயகியாவதற்குத் தயங்குகின்ற அல்லது மறுக்கின்ற நளினியினுடையது.

தொண்ணூற்றொன்பதாம் நெம்பர் வீட்டுக்கும், நூறாம் நெம்பர் வீட்டுக்கும் பல ஒற்றுமைகள் இருந்தன. உதாரணமாகத் தொண்ணூற்றொன்பதாம் வீட்டுக்குப் பால் விடுகிற தீர்த்தவாரியா பிள்ளை (இது காரணப் பெயர்) தான் நூறாம் நெம்பருக்கும் வாடிக்கைப் பால்காரர். இரண்டு வீடுகளுக்கும் வாசல் பெருக்கிக் கோலம்போடும் வேலைக்காரி ஒருத்தி. இரண்டு வீடுகளுக்கும் தபால் கொண்டு வரும் தபால்காரன் ஒருவனே! இரண்டு வீடுகளிலும் 'செய்திக் குழப்பம்' - என்ற ஒரே தினசரி பத்திரிகையைத்தான் வாங்குகிறார்கள். இப்படி இவ்வளவு ஒற்றுமைகள் இருந்தும் இந்த வீட்டில் இருக்கின்ற ஒரு பையன் அந்த வீட்டில் இருக்கின்ற ஒரு பெண்ணைக் காதலிக்க முடியாமல் இருந்தால் அதை என்னென்பது? இராமசாமியின் வருத்தத்தில் நியாயமிருக்கிறதா? இல்லையா? என்று இப்போது நீங்கள் சொல்லுங்கள். "என்னடா இராமசாமி, உன்னுடைய முயற்சிகள் எப்படி இருக்கின்றன?" என்று அந்தரங்கமான மாணவ நண்பர்கள் கிண்டலாக விசாரித்தால் "தொண்ணூற்றொன்பதுக்கும் நூறுக்கும் நடுவில் 'மைனஸ்' ஒன்று" என்று கணித ரீதியாக ஏக்கத்தோடு பதில் சொல்வான் அவன். 'அல்ஜீப்ரா' கணக்கின்படி வேண்டுமானால் 'மைனஸும் மைனஸும் - பிளஸ் ஆக' இருக்கலாம்! ஆனால் காதலால் வெயில் காலத்துத் தார் ரோடு போல் உருகிக் கொண்டிருக்கும் இராமசாமிக்கு 'அல்ஜீப்ரா' எக்கேடு கெட்டுப் போனால் தான் என்ன?

ஒருநாள் தொண்ணூற்றொன்பதாம் நெம்பர் வீட்டுக் கதாநாயகனும், கதாநாயகியாக விரும்பாத நூறாம் நம்பர் வீட்டுத் திருமதியும் கல்லூரிக்குப் போவதற்காக ஒரே பஸ் ஸ்டாப்பில் பஸ்ஸை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். எதிர்பாராத விதமாகத் திடீரென்று மழை தூறத் தொடங்கிவிட்டது. முன் ஜாக்கிரதையாகக் குடை கொண்டு வந்திருந்த தொண்ணூற்றொன்பதாம் நெம்பர், இத்தகைய அரும்பெரும் வாய்ப்பை நழுவவிடாமல் குடையை விரித்து, "மழையில் நனைகிறீர்களே! பஸ் வருகிறவரை இப்படிக் குடையில் நிற்கலாமா!" என்று கெஞ்சும் குரலில் திருமதி நூறாம் நம்பரை அழைத்தது.

'இந்தத் தடியன் இப்படித் துணிந்து நம்மை அழைப்பதாவது?' என்று உள்ளூர ஆத்திரமடைந்த நூறாம் நம்பர், குறும்புத்தனமான முறையில் இராமசாமியின் அனுதாபத்தைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பியது.

பதில் பேசாமல் எட்டி நின்றபடியே அவனிடமிருந்து குடையை வாங்கித் தான் மட்டும் நனைந்துவிடாதபடி பாதுகாப்பாகப் பிடித்துக் கொண்டாள் அவள். தன் இதய தேவதைக்கு உதவி செய்ய முடிந்த பெருமையோடு மழையில் தெப்பமாக நனைந்து கொண்டு நின்றான் இராமசாமி. அவனை சொட்டச் சொட்ட நனைய வைத்த பிறகு 'நன்றி' என்று வாயைத் திறந்து ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல் குடையைத் திருப்பிக் கொடுத்துவிட்டு பஸ் ஏறிப் போய்ச் சேர்ந்தாள் அவள்.

காதற் போர்க் களத்தில் இரண்டாவது முஸ்தீபும் தோல்வி அடைந்துவிட்டது. அந்தோ! பரிதாபம். ஆனால் இராமசாமி முயற்சி வீரன். 'அருமை உடைத்தென்று அகாவாமை (மலையாதிருத்தல்) வேண்டும்' - என்பது போன்ற மணிமொழிகளை

எல்லாம் படித்தவனாயிற்றே அவன்! 'ஊக்கமது கைவிடேல்' என்று ஔவையார் தனக்காகவே சொல்லியிருப்பதாக எண்ணிக்கொண்டான் அவன். மூன்றாவது முஸ்தீபாகப் புதுமையான முறையில் ஏதாவது செய்ய வேண்டுமென்று எண்ணினான்.

'ஏ! முட்டாள் மூளையே! உனக்கு இதுவரை இந்த யோசனை ஏன் தோன்றாமல் போய்விட்டது? ஒரு காதல் கடிதம்கூட எழுதாமல் காதலில் வெற்றி கிடைக்கவில்லையே என்று எண்ணி ஏங்குவது எவ்வளவு பெரிய பேதைமை? இன்றைக்கே ஒரு காதல் கடிதம் எழுதிவிடுகிறேன். ஒரு பெண்ணின் உள்ளத்தை உருக்க வேண்டுமென்றால் அது இலேசான காரியமா? எழுத்தின் மூலமாகத்தான் உருக்க முடியும் போலிருக்கிறது' என்று சிந்தித்து, எதுகை, மோனைகளோடு ஒரு காதல் கடிதம் எழுதி விடுவதென்று உட்கார்ந்தான். வசனத்தில் எழுதப் போக நளினியின் மேல் அவனுக்கிருந்த அளவற்ற காதலின் வேகத்தால் அது கவிதையாகவே பிறந்து தொலைத்துவிட்டது!

"இச்சைக்கினியாளே - பச்சைக் கிளியாளே - கொச்சை மொழியாளே - பச்சையாகவே சொல்லிவிடுவேன் பாவையுனைப் பாவி நான் காதலிக்கிறேன் - சொச்சம் நாளைக்குச் சொல்லுகிறேன். சுகத்துக்கு மறு கடிதம் போட்டு விடு."

இந்த வரிகளை எழுதி முடித்தவுடன் இராமசாமி துள்ளிக் குதித்தான். "எனக்கும் கவிதை வருகிறது! ஆகா! என்ன எதுகை? என்ன மோனை?" என்று தன்னைத் தானே ஆத்மார்த்தமாகப் பாராட்டிக் கொண்டான்.

அந்தக் கடிதத்தை நேரில் கொடுப்பதோ, ஜன்னல் வழியாகப் பக்கத்து வீட்டுக்குள் வீசி எறிவதோ நேர்மையல்ல. (இராமசாமி காதலில் நேர்மை தெரிந்தவன் பாருங்கள்!) என்று எண்ணித் தபாலில் ஒட்டிப் போட்டான். மறுநாள் மாலை பதில் கவரும் தபாலிலேயே வந்து சேர்ந்தது. இராமசாமி மகிழ்ச்சியோடு அதைப் பிரித்தான். ஏதோ ஒரு பத்திரிகையிலிருந்து கத்தரித்து எடுத்த கொரில்லா - குரங்கின் படம் ஒன்று கவருக்குள் இருந்தது. அவமானம்! அவமானம்! இராமசாமிக்குத் தாங்க முடியாத அவமானம்! வந்த ஆத்திரத்தில் அந்தக் கணமே படத்தையும் உறையையும் நெருப்பை வைத்துக் கொளுத்தினான்.

இந்தச் சம்பவத்துக்குப் பிறகு நூறாம் நெம்பர் வீட்டு நளினியைக் காதலிக்கும் முயற்சியை அறவே கை விட்டு விட்டுப் படிப்பில் கவனத்தைச் செலுத்தினான் இராமசாமி. அவனுடைய போக்கே மாறிக் கொண்டு வந்தது. 'படிப்பு வீசை என்ன விலை?' என்று கேட்டுக் கொண்டிருந்தவன், 'இந்த உலகத்தில் படிப்பைத் தவிர வேறெதுவுமே இல்லை' என்று எண்ணத் தொடங்கி விட்டவனைப் போல எப்போதுமே புத்தகமும் கையுமாக வீட்டிற்குள் அடைந்து கிடந்தான். ஏதாவதொரு பயனற்ற முயற்சியில் அவமானப்பட்ட பிறகுதான் மனிதனுக்கு நல்லதில் அக்கறை ஏற்படுமென்பார்களே; அது அவன் விஷயத்தில் உண்மையாகிவிட்டது.

மார்ச் பரீட்சைக்கு இன்னும் இரண்டு மூன்று மாதங்களே இருந்தன. பூர்வாங்கமாக நடத்தப்பட்ட 'செலக்ஷன்' பரீட்சையில் கணிதத்தில் இராமசாமி

கல்லூரியிலேயே முதல் மார்க் வாங்கிவிட்டான். மற்றப் பாடங்களிலும் தரமான தேர்ச்சி. பழைய இராமசாமியின் உடலுக்குள் புதிய சக்தி ஏதாவது நுழைந்துவிட்டதோ என்ற சந்தேகம் எல்லோருக்கும் உண்டாகிவிட்டது. மாறுதல் என்றால் முற்றிலும் மாறுதல். 'அழகாக இருப்பது எப்படி?' போன்ற 'எப்படி' பாணிப் புத்தகங்களைப் படிக்கும் அசட்டுத்தனம் முதல் சகல அசட்டுத்தனங்களும் ஒவ்வொன்றாக அவனிடமிருந்து கழன்று சென்றுவிட்டன. படிப்பைத் தவிர வேறு எதையும் கவனிக்காத 'படிப்பு வெறி' அவனிடம் உண்டாகியிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும்.

மார்ச் மாதத்தில் வெய்யிலின் கொடுமை அதிகமாக இருந்தது. ஊரில் அங்கங்கே அம்மை, வைசூரி பரவியிருந்த சமயம், பரீட்சைக்கு நாலுநாள் இருக்கும்போது இராமசாமிக்கு வைசூரி போட்டுவிட்டது. உடம்பு முழுவதும் ஊசி குத்த இடமின்றி அரிநெல்லிகாயாக முத்துக்கள் வெடித்திருந்தன. முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை. கொப்புளங்கள் கோரமாக்கியிருந்தன. அசையாமல் ஒரே இடத்தில் படுத்துக்கிடந்தான். சுற்றி வேப்பிலையைத் தூவியிருந்தார்கள். உடம்பில் கொப்புளங்கள் உறுத்தக்கூடாதென்று தலைவாழை மரத்தின் மெல்லிய குருத்து இலையில் விளக்கெண்ணையைத் தடவி விரித்து அதில் படுக்கவிட்டிருந்தார்கள்.

நாலுநாட்களாகப் பரீட்சை தொடங்கி நடந்து கொண்டிருந்தது. மெடிகல் 'சர்டிபிகேட்' வாங்கிக் கொடுத்துவிட்டு அவன், பரீட்சைக்குப் போகாமல் இருந்துவிட்டான்.

அன்று கணக்குப் பரீட்சை. காலை எட்டு, எட்டரை மணி சுமாருக்கு நளினியின் தம்பி, இராமசாமி படுத்திருந்த அறைக்குள் நுழைந்தான்.

"மாமா! மாமா!" - இமைக் கொப்புளம் உறுத்தாமல் கண்களை மூடிக் கொண்டு படுத்திருந்த இராமசாமி கண்ணை விழித்துப் பார்த்தான். நளினியின் தம்பி கையில் எதையோ ஒளித்து மறைத்துக் கொண்டு நின்றான். "என்னடா அது?"

"அக்கா உங்களிடம் கொடுத்துப் பதில் வாங்கிக் கொண்டு வரச் சொன்னாள்" என்று சொல்லிக் கொண்டே தன் கையில் மடித்து வைத்துக் கொண்டிருந்த கடிதத்தை இராமசாமியிடம் நீட்டினான் பையன். இராமசாமி படுக்கையில் சாய்ந்தபடியே அலட்சியமாக ஒரு கையை நீட்டி வாங்கினான். பிரித்துப் படித்தான்.

"பத்து மணிக்குக் கணக்குப் பரீட்சை. இன்னும் இரண்டு மணி நேரமே இருக்கிறது. சில கணக்குகள் எனக்கு விளங்கவே இல்லை. இப்போது உங்களிடம் வந்தால் சொல்லிக் கொடுக்க அவகாசப்படுமா? பழைய சம்பவங்களை நினைத்து என் மேல் கோபித்துக் கொண்டு முடியாது என்று சொல்லி அனுப்பி விடாதீர்கள்! அப்போது உங்களைப் புரிந்து கொள்ள முடியாமல் போனேன். இப்போது...! தெரிந்து கொண்ட - நளினி."

படித்து முடித்ததும் தனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டான் அவன். "அப்போது உங்களைப் புரிந்து கொள்ள முடியாமல் போனேன், இப்போது...!" என்று

வார்த்தை எழுதாமல் இடைவெளியாக விட்டிருக்கும் இடத்திற்கு எவ்வளவு அர்த்தம் இருக்கிறதென்று நினைத்தபோது அவனுக்கு உடம்பில் ஒரு சிலிர்ப்பு ஏற்பட்டது. ஆனால் ஒரே ஒரு கணம்தான் அது நிலைத்தது. அதையடுத்து இனம் புரியாத ஒருவகை அருவருப்பு. "பார்க்க வருகிறாளாம் பார்க்க! பார்க்க விளங்காத உடம்போடு வைசூரி போட்டிருக்கிறபோது நீ பார்க்க வரவில்லை என்றுதான் குறை!" தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் அவன்.

"இந்தா, இந்த நோட்டை உன் அக்காவிடம் கொண்டு போய்க் கொடு, இதில் எல்லாக் கணக்குகளுக்கும், அவைகளைப் போடும் விதம் அடங்கியிருக்கின்றன. பார்த்துப் படித்துக் கொள்ளச் சொல்; என்னைப் பார்க்க இப்போது இங்கே வரவேண்டாம்! தெரிந்ததா? போய்ச் சொல்லிவிடு!" இராமசாமியின் குரலில் கண்டிப்பு ஒலித்தது. பையன் நோட்டைப் பெற்றுக்கொண்டு போனான்.

கூடத்தில் இரண்டாவது வகுப்பு படிக்கும் இராமசாமியின் தம்பி தன் பாடப்புத்தகத்திலிருந்து இரைந்து படித்துக்கொண்டிருந்தான். "நரி தன்னால் ஆன மட்டிலும் முயன்று பார்த்தது; திராட்சைக் குலை அதற்கு எட்டவே இல்லை. உடனே திராட்சைக் குலை கிடைக்காததால் ஏமாற்றமடைந்த நரி, 'சீ! சீ! இந்தப் பழம் புளிக்கும்' என்று சொல்லிக் கொண்டே போய்விட்டது!"

இராமசாமிக்காகவே தம்பி அந்த வரிகளைப் படித்தானா?

படுக்கையில் இருந்தே கேட்டுக் கொண்டிருந்த இராமசாமி சிரித்துக் கொண்டான். "ஆசை நிறைவேறினால் மகிழ்ச்சி. நிறைவேறாவிட்டால் அந்த ஏமாற்றத்தை மறைக்க ஒரு வேதாந்தம். எந்த வகையில் பார்த்தாலும் மனிதன் கெட்டிக்காரத்தனமாக எதையும் சமாளிக்கப் பழகியிருக்கிறான்" என்று அவன் வாய் முணுமுணுத்தது.

**(ஆனந்த விகடன், பிப்ரவரி, 1957)**

## 20. கற்பனையேயானாலும்...

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்து மூன்றாம் ஆண்டு என்று நினைக்கிறேன்; நானும் வேறொரு தமிழ் எழுத்தாள நண்பரும் லட்சதீப உற்சவத்திற்காகத் திருவனந்தபுரம் போயிருந்தோம். லட்சதீபம் முடிந்த மறுதினம் பல இடங்களைச் சுற்றிப் பார்க்கத் தீர்மானித்தோம். முதல் முதலாக நாங்கள் பார்க்கக் கிளம்பிய இடம் 'கோவளம்' என்ற கடற்கரைச் சிற்றூர். இயற்கைக் காட்சிகள் நிரம்பிய இடம். நானும் நண்பரும் ஒரு டாக்ஸி பிடித்து அந்த இடத்திற்குக் கிளம்பினோம்.

டாக்ஸி டிரைவர் கோவளத்திற்கு ஒரு மைல் முன்பே டாக்ஸியை நிறுத்தி இறங்கிவிட்டான். காரணம் வேறொன்றும் இல்லை. அந்த இடத்தோடு ரோடு முடிந்திருந்தது. அதற்கு மேல் ஒரு மைல் தூரம் தென்னைமரச் சோலைகளுக்கிடையே ஒற்றையடிப் பாதையில் நடந்து செல்வதைத் தவிர வேறுவழியில்லை. இறங்கி நடந்தோம். தென்னை, பலா என்று கண்ணுக்கு எட்டிய தூரம் பசுமரக் கூட்டம். அவற்றினிடையே மரவள்ளிக் கிழங்கு பயிர் செய்யப்பட்டிருந்தது. மிளகுக்கொடி புதர் மண்டிப் படர்ந்திருந்தது. இடையிடையே வீடுகளும் தென்பட்டன. பொழுது புலர்ந்தும் புலராமலும் இருக்கின்ற கருக்கிருட்டு நேரத்தில் நாங்கள் போயிருந்தோம். காற்றும் ஜில்லென்று உடலை நனைப்பது போல் இருந்தது. 'கீகீ' என்ற சிள்வண்டுகளின் ஓசை அடங்கவில்லை.

"மனிதன் வசித்தால் இந்த மாதிரி இடத்தில் வசிக்க வேண்டும், ஐயா!" என்றார் நண்பர்.

"போக பூமி, சுவர்க்கம், அது, இது என்று சொல்கிறார்களே; அவையெல்லாம் இதற்கு உறை போடக் காணுமா?" என்று அதை ஆமோதித்தேன். பேசிக்கொண்டே நடந்ததில் நடை தெரியவில்லை. கடற்கரையில் வந்து நின்றோம். பி.டபிள்யூ. இலாகாவால் அமைக்கப்பட்ட ஸ்நான கட்டடம் ஒன்று இருந்தது. அதை அடுத்து ஒரு சிறு குன்று. அந்தக் குன்றில் ஒரு வேடிக்கை. ஒவ்வோர் இடத்திலும் பாறை ஒவ்வொரு நிறமாக இருந்தது. பாறைகளுக்கிடையே இருந்த மண் இடைவெளியில் தென்னை மரங்கள் வளர்ந்திருந்தன. குன்றின் அடிவாரத்தில் கடல் அலைகள் மோதிக் கொண்டிருந்தன.

கடல் ஒலியையும் மரங்கள் காற்றில் ஆடும் ஒலியையும் தவிர வேறு சந்தடி இல்லை. அன்று காலையில் அந்தப் பிரதேசத்தில் முதல் முதலாகப் பட்ட மனிதக் காலடிகள் எங்களுடையனவாகத்தான் இருக்க வேண்டும். சந்தடியின்றிக் கண்ணுக்கு எட்டிய தூரம் கரையில் வேறு மனித வாடையே தென்படாமல் இருந்தது. எங்களைப்போல்

கற்பனை மனப்பான்மை இல்லாத வேறு எவராவது அன்று அந்த நேரத்தில் அங்கே வந்திருந்தால் பயந்து உடனே திரும்பியிருக்க நேரிடும். தனிமை என்றால் அப்படி இப்படி என்று சாதாரணமாகச் சொல்லிவிடக்கூடிய தனிமை இல்லை. நூற்றுக்கு நூறு தனிமை. நண்பர் குன்றில் ஏறத் தொடங்கினார். நானும் அவரைப் பின்பற்றி ஏறினேன். சிறிது தொலைவுதான் ஏறியிருப்போம்.

திடீரென்று முன்னே சென்ற நண்பர் திடுக்கிட்டு நின்றார். எதிரே பேயைக் கண்டுவிட்டவர் போல் பயங்கரமான குரலில் 'ஆ!' என்று அலறினார்.

"என்ன, என்ன? ஏதாவது பாம்பு?..." அவர் பதில் சொல்லவில்லை. வாய் குழறியது. அவர் உடல் கீழே விழுந்து விடுவதுபோல 'வெடவெட' வென்று நடுங்கியது. வேகமாகத் திரும்பினார். அவர் முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லை. வாய் பேச வராததனால் கைகளால், 'பேசாமல் திரும்பிவிடுங்கள்' என்று கூறுகிற பாவனையில் எனக்கு ஜாடை காட்டினார். பயத்தினால் அகன்றிருந்த அவர் விழிகளையும் முகத்தையும் கண்டு எனக்கு ஒன்றுமே புரியவில்லை. "என்ன சார்? என்ன? எதுவாகத்தான் இருக்கட்டுமே; இப்படியா உதறுவார்கள்? வழியை விடும், ஐயா! நான் பார்க்கிறேன்" என்று சூரப்புலி போல் அவரை விலக்கித் தள்ளிக் கொண்டு முன்னே பாய்ந்தேன் நான். அடுத்த கணம் என் வாயிலிருந்தும் அதே அலறல் கிளம்பியது. எதிரே கண்ட காட்சி மயிர் சிலிர்க்கச் செய்தது. செய்வதென்ன என்று தெரியாமல் அப்படியே மலைத்துப் போய் நின்றுவிட்டேன். நண்பராவது கை ஜாடை செய்கிற அளவிற்குச் சுயநினைவு பெற்றிருந்தார். எனக்கோ உடம்பு முழுவதுமே மரத்துப் போய் நின்றுவிட்டது.

எதிரே இருந்த பாறை இடுக்கில் ஒரு தென்னை மரம். அதன் அடியில் கயிறு கட்டி இரண்டு பேர் தூக்கிட்டுக் கொண்டிருந்தனர். ஒன்று பெண்ணின் உடல்; மற்றொன்று ஆணின் உடல். இருவருக்குமே வாலிப வயசு என்று அனுமானிக்க முடிந்தது. தென்னை மரத்தின் அடிப்பாகம் 'டா'னாப் பாடாக வளைந்திருந்ததனால் தூக்கிட்டுக் கொண்டு பாறையின் இடைவெளியில் தொங்க வசதியாக இருந்தது. தோற்றத்தையும் அணிந்திருந்த உடை முதலியவற்றையும் பார்த்தால் படிப்பும் பணவசதியும் உள்ள குடும்பத்து ஆட்களாகத் தோன்றியது.

எவ்வளவு நேரந்தான் நானும் நண்பரும் அப்படி மலைத்துப் போய் நின்றோமோ? உடலில் மெல்லத் தைரியமும் நினைவும் வந்தபோது, 'தப்பினோம் பிழைத்தோம்' என்று ஓட்டமெடுத்தோம். திரும்பிப் பார்க்கவே இல்லை. யாராவது ஆளோ, போலீசோ நாங்கள் நின்றுகொண்டிருப்பதையும் மரத்தடிக் காட்சியையும் சேர்த்து ஒருங்கு கண்டுவிட்டால் சாட்சி விசாரணை என்று எதிலாவது மாட்டிக் கொள்ள நேரிடுமே என்று பயம் ஒருபுறம்; உள்ளத்தை நடுங்கச் செய்யும் காட்சியின் கோரம் ஒருபுறம்; இரண்டுமாகச் சேர்ந்து எங்களை ஓட ஓட விரட்டின.

"கோவளமுமாயிற்று! இயற்கைக் காட்சியுமாயிற்று! இன்றைக்குப் பொழுது நமக்கு நன்றாக விடியவில்லை. பேசாமல் வந்த சுவடு தெரியாமல் திரும்பிப்

போய்விடுவோம்" என்றார் நண்பர். அவர் குரல் இன்னும் இயல்பான நிலைக்கு வரவில்லை.

"ஆமாம், ஆமாம்! வந்தவுடனே நல்ல இயற்கைக் காட்சியைக் கண்டு விட்டோம். பத்மநாபசாமி புண்ணியத்தில் சௌக்கியமாக ஊர் போய்ச் சேர வேண்டும். எட்டி நடையைப் போடுங்கள்" என்று நானும் ஒத்துப் பாடினேன்.

குன்றிலிருந்து இறங்கியதும் நெஞ்சு 'படக் படக்' என்று அடித்துக் கொண்டது. மேலிருந்து வேகமாகக் கீழே இறங்கிய இளைப்பும் பயத்தின் வேகமும் ஒன்று சேர்ந்து கொண்டதனால் மூச்சு இரைத்தது. சுற்றும் எங்களைப் பார்க்கவோ கண்காணிக்கவோ எவரும் இல்லை என்பதை உறுதி செய்து கொண்ட பின்னே மூச்சும் நெஞ்சுத் துடிப்பும் சராசரி நிலைக்கு வந்தன. ஈ காக்கைகூடத் தென்படாத ஜனசஞ்சாரம் அற்ற அந்த அழகிய கடற்கரையிலிருந்து குறுகலான பாதையில் வேகமாகத் திரும்பி நடக்கலானோம். போகும்போது பரஸ்பரம் இருவருக்கும் இருந்த பயத்தினால் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்ளக்கூடத் தோன்றவில்லை. ஏறக்குறையப் பத்து நிமிஷத்தில் ஒரு மைல் தூரத்தையும் கடந்து ரோட்டுக்கு வந்துவிட்டோம் என்றால் எவ்வளவு வேகமாக நடந்திருப்போம் என்பதை நேயர்களே தெரிந்து கொள்ள முடியும்.

"என்ன சார், அதற்குள்ளே திரும்பிவிட்டீர்கள்? பார்த்தாச்சா? இரண்டு மணி நேரம் ஆகுமென்று சொல்லிவிட்டுப் போனீர்களே!" என்று கேட்டான் டிரைவர்.

"அங்கே ஒன்றும் பிரமாதமாக இல்லை, பார்ப்பதற்கு. போனோம்! உடனே திரும்பி விட்டோம்" என்று பச்சைப் பொய்யைப் பூசி மெழுகினேன். அதற்கு மேல் அவனும் கேட்கவில்லை. டாக்ஸி புறப்பட்டது. நண்பரும் நானும் ஒருவர் முகத்தை ஒருவர் அர்த்தத்தோடு பார்த்துக் கொண்டோம். திருவனந்தபுரத்தில் சாலை பஜாரில் ஒரு ஹோட்டலின் மாடி அறையில் நாங்கள் தங்கியிருந்ததால்தான் அங்கு வந்து இறங்கினோம். வாடகைக்காக டிரைவர் என் முன் வந்தபோதுதான் கையோடு கொண்டு போயிருந்த 'தோல் பை' எங்கோ தவறிவிட்டதை உணர்ந்தேன். பணம் அதில்தான் இருந்தது. எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆனாலும் என் திகைப்பை வெளிக் காட்டிக் கொள்ளாமல், "நீங்கள் கொடுங்கள், சார்!" என்று நண்பரை வேண்டிக் கொண்டேன். நண்பர் வாடகையைக் கொடுத்து அனுப்பினார். டிரைவரிடம் நான் மறைத்தாலும் என்னிடம் உண்டான கலவரத்தை அவன் புரிந்து கொண்டிருக்க வேண்டும். இல்லையானால் போகும்போது அவன் என் பக்கம் திரும்பி ஒரு தினுசாகப் பரிதாபம் தோன்றப் பார்த்துவிட்டுப் போக வேண்டிய அவசியம் என்ன?

"சார், ஒரு பெரிய முட்டாள்தனம் பண்ணிவிட்டேன். என் தோல் பை அந்த இடத்தில் விழுந்துவிட்டது. இப்போது என்ன செய்யலாம்?" என்று அறைக்குள் நுழைந்ததும் மெல்லிய, பயம் நிறைந்த குரலில் நண்பரைக் கேட்டேன்.

"எந்த இடத்தில்? நினைவு இருக்கிறதா?"

"அதுதான் ஐயா! அந்தக் குன்றில், தென்னை மரத்தடியில்..."

"அடபாவி மனுஷா! அங்கேயா போட்டீர்?"

"நான் என்ன செய்வேன்! பதற்றத்தில் விழுந்ததே தெரியவில்லை. டிரைவர் இங்கே வந்து வாடகைக்கு நின்றபோதுதான் எனக்கே நினைவு வந்தது."

"எந்தப் பை? 'ஸிப்' வைத்துச் சதுரமாக வைத்துக் கொண்டிருந்தீரே; அந்தப் பையா?"

"அதுவேதான் ஐயா! கொஞ்சம் பணம், முக்கியமான காகிதங்கள் எல்லாம் உள்ளே கிடக்கின்றன."

"ஐயையோ! இப்போது என்ன செய்யப் போகிறீர்?"

"அதுதான் எனக்கே தெரியவில்லை. என்ன செய்வது?"

"ஒன்றும் செய்ய வேண்டாம். போனால் போகிறது. தலை முழுகிவிடும். திரும்ப அங்கே போவது நல்லதல்ல."

"உண்மைதான்! போவதில் பயன் இல்லை. சனி, தொலையட்டும்!"

"அதுதான் சரி. நீர் பையைத் தேடிக் கொண்டு போவீர். ஒருவேளை அங்கே போலீசும் விசாரணையுமாக இதற்குள் ஒரே களேபரம் ஆகியிருக்கும். 'நீர் எப்போது வந்தீர்? எதற்காக வந்தீர்? ஏன் பை விழுந்தது?' என்று உம்மை விசாரிக்காமல் பையைத் தரமாட்டார்கள். நீர் முழி முழி என்று முழிப்பீர். மாட்டிக்கொள்ள நேரிடும். ஆகவே போகாமல் இருப்பதே நல்லது" என்றார் நண்பர். எனக்கும் அதுதான் சரி என்று பட்டது.

இரண்டு மணி நேரமாகிவிட்டது. ஸ்நானம், சாப்பாடு எல்லாம் ஹோட்டலிலேயே முடிந்தன. அறைக்குள் உட்கார்ந்து நிம்மதியாக அரட்டை அடித்துக் கொண்டிருந்தோம். காலையில் நடந்த சம்பவத்தைப் பற்றிய பயமோ நடுக்கமோ துப்புரவாக இப்போது இல்லை. நேர்மாறாக அதே சம்பவத்தைப் பற்றிக் கதாசிரியர்கள் என்ற முறையில் ஓரளவு வேடிக்கையாகவே சிரித்துப் பேசிக் கொண்டிருந்தோம். "என்ன என்.பி.சார் இந்தச் சம்பவத்தை ஓர் அருமையான சிறுகதையாகக் கற்பனை செய்தால் நன்றாக இருக்காது? நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்" என்று நண்பர் கேட்டார்.

"ஓ! பேஷாகச் செய்யலாம். காதல் கதை ஒன்றை 'டிராஜடி'யில் (சோக முடிவு) முடித்துக் காட்டலாம்."

"அது மட்டுமா? லைலா-மஜ்னு, அம்பிகாபதி-அமராவதி, ரோமியோ-ஜூலியட் - இந்த மாதிரி படிக்கிறவனைக் கண்ணீர் சிந்த வைக்கலாம், ஐயா!"

"வெளுத்து வாங்கும். நீரே எழுதிவிடுவீர்போல் இருக்கிறதே!"

"ஏன்? நீங்கள் எழுதுவதாக இருந்தால் நான் எழுதவில்லை."

"சே சே! நீர்தாம் முதலில் பார்த்தீர். அதனால் உமக்குத்தான் முதல் உரிமை. நீரே எழுதும்" என்று சிரித்துக் கொண்டே சொன்னேன்.

"இப்பொழுதே கருத்து உருவாகிறது; எழுதினால் ஜோராக வரும்!" நண்பர் காகிதக் கற்றையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு மேஜையருகே சென்றார்.

"ஜமாய்த்துத் தள்ளும். நான் நிம்மதியாக ஒரு தூக்கம் போடுகிறேன்" என்று சொல்லிவிட்டுத் தூக்கத்தில் ஆழ்ந்தேன். நல்ல தூக்கம் வருகிறவரை 'கிர்கிர்' என்று எழுதும் ஒலியும் 'பரட் பரட்' என்று காகிதம் கிழிபடுகிற ஓசையும் சிறிதுநேரம் செவிகளில் விழுந்து கொண்டிருந்தன. பின்பு நினைவிழந்து துயிலின் வசப்பட்டுவிட்டதால் எனக்கு ஒன்றும் தெரியாது.

மூன்று மூன்றரை மணிக்கு நண்பர் எழுப்பவே தூக்கம் கலைந்து எழுந்தேன்.

"போய் முகம் கழுவிக் கொண்டு வாரும். ஹோட்டல் பையன் காபி, சிற்றுண்டி கொண்டுவரக் கீழே போய் இருக்கிறான்." நான் போய் முகம் கழுவிக் கொண்டு வந்தேன்.

சிற்றுண்டி சாப்பிட்டு முடிந்ததும், "இதோ எழுதி முடித்துவிட்டேன். படித்துப் பார்த்து அபிப்பிராயம் சொல்லும். அதற்குள் வெளியே வெயிலும் தணிந்துவிடும். நாம் சுற்றுவதற்குக் கிளம்பலாம்" என்று சொல்லியவாறே என் கையில் ஒரு கையெழுத்துப் பிரதியைக் கொடுத்தார். நண்பரின் கதையைப் படிக்கத் தொடங்கினேன்.

**முடிந்த காதல்**

(கதையின் முதல் மூன்று பக்கங்களும் கோவளம் கடற்கரையைப் பற்றிய வருணனையாகவே இருப்பதால் அதை இங்கேயிருந்து நீக்கி எஞ்சியதை மட்டும் தருகிறேன்).

அம்முவும் பாஸ்கரனும் நேரம் போவதே தெரியாமல் குன்றின்மேல் உட்கார்ந்து கடலைப் பார்த்துக் கொண்டிருந்தனர். சுற்றுப்புறம் கொஞ்சம் கொஞ்சமாக இருள ஆரம்பித்தது. கரையில் செம்படவர்களின் கட்டு மரங்கள் ஒவ்வொன்றாகத் திரும்பிவிட்டன. மீன் கூடைகளோடு அவர்கள் ஊர் திரும்பிக் கொண்டிருந்தனர். கடல் ஓசையும் தென்னை மட்டைகள் காற்றில் உரசும் சப்தமும் தவிர வேறு பேச்சுக் குரல் இல்லை. அம்முவின் செம்பவள இதழ்கள் மெல்லத் திறந்தன.

"பாஸ்கர், நேரமாகிவிட்டதே; நாம் ஊர் திரும்ப வேண்டாமா?"

"அம்மு, ஏன் இவ்வளவு அவசரப்படுகிறாய்? இந்தத் தனிமையையும், இதன் இன்பங்களையும் இன்னும் சிறிது நேரந்தான் அனுபவித்து விட்டுப் போவோமே!"

"அதற்கில்லை, பாஸ்கர்! கடைசிப் பஸ்ஸும் போய்விட்டால் எட்டு மைல் நடந்தா போக முடியும்?"

"நடந்துவிட்டால்தான் என்ன? என்னோடு நீயும் உன்னோடு நானும் உடன்வரும்போது எட்டு மைல் என்ன? எண்பது மைல்கூட நடக்கலாமே!" அவன் பேச்சைக் கேட்டு அம்மு சிரித்தாள். அந்தக் கவர்ச்சி நிறைந்த புன்னகையின் அழகில் பாஸ்கரன் அப்படியே சொக்கிப் போனான். மலரைக் காட்டிலும் மென்மையான

அவள் பட்டுக் கரத்தைத் தன் கரத்தோடு இணைத்துக் கொண்டு, "அம்மு, நீ 'பார்பரியோ'வின் கதையைக் கேள்விப்பட்டிருக்கிறாயா?" என்று இனிய குரலில் கேட்டான் பாஸ்கரன்.

"பார்பரியோவா? அப்படி என்றால்... யார்? எனக்குத் தெரியாதே!"

"சொல்கிறேன், கேள். அவள் ஒரு காவிய நாயகி. ஆங்கிலத்தில் காதலர்களைப் பற்றிப் படித்திருந்தால் பார்பரியோவைத் தெரிந்திருக்கும்!"

"என்ன செய்தாள் அவள், அவ்வளவு புகழ் பெற?"

"முடிவு இல்லாத இன்பத்தைக் காதலர்கள் அனுபவிக்க வேண்டுமென்றால் பரிபூரணமான மகிழ்ச்சி ஒன்றிற்குப் பின் தொடர்ந்து வாழக்கூடாது. அந்த மகிழ்ச்சியின் போதே இறந்துவிட வேண்டும்' என்பது பார்பரியோவின் கொள்கை."

"...ஊம்! அப்புறம்?" அம்மு அதைக் கேட்டுவிட்டு ஒய்யாரமாகத் தலையை அசைத்தாள்.

"ஒருநாள் தன் காதலன் தன்னைத் தழுவிக் கொண்டிருக்கும்போதே தன் கூந்தலால் தனது கழுத்தையும் அவன் கழுத்தையும் சேர்த்துச் சுருக்கிட்டுக் கொண்டாள் பார்பரியோ. இருவருமே ஏக காலத்தில் அமரத்துவம் அடைந்தனர். இதுதான் பார்பரியோவின் கதை."

பாஸ்கரன் கூறி முடித்ததும் அம்மு குறும்புதனமான நகைத்துக் கொண்டே, "பாஸ்கர், நானும் அப்படிச் செய்து விடட்டுமா?" என்றாள்.

"சீ குறும்புக்காரி! உதாரணத்திற்குச் சொல்ல வந்தால்..." என்று செல்லமாக அவள் கன்னத்தைத் தட்டினான் பாஸ்கரன்.

அப்போது குன்றின்மேல் யாரோ திடுதிடுவென்று நாலைந்து பேர் ஓடிவரும் ஓசை கேட்டது. இருளில் ஒன்றுமே தெரியவில்லை. பாஸ்கரனும் அம்முவும் திடுக்கிட்டு எழுந்து நின்றனர்.

இதுவரைதான் நண்பரின் கதையை நான் படிக்க முடிந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் நாங்கள் உட்கார்ந்திருந்த அறையின் கதவு வெளிப்புறம் 'தட தட'வென்று தட்டப்பட்டது. வழுவழுவென்று போய்க் கொண்டிருந்த கதையில் விறுவிறுப்புத் தட்டும் சமயத்தில் சிவபூஜை நடுவே கரடி பிரவேசித்தது போல் யாரோ வந்துவிட்டார்களே! என்று எண்ணிக் கொண்டு கதையின் பிரதியை மேஜைமேல் வைத்தேன். நண்பர் முணுமுணுத்துக்கொண்டே எழுந்து போய்க் கதவைத் திறந்தார். உள்ளே நுழைந்தவர்களைப் பார்த்தோமோ, இல்லையோ இருவரும் ஏக காலத்தில் திடுக்கிட்டோம்.

அந்த ஓட்டலின் முதலாளியும், போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் ஒருவரும், கடுகடுப்பான முகபாவத்தோடு உள்ளே நுழைந்தனர். நாங்கள் எழுந்து நின்றோம்.

"இவர்கள்தான் சார்!" - ஹோட்டல் முதலாளி இன்ஸ்பெக்டரிடம் எங்கள் இருவரையும் சுட்டிக்காட்டி இப்படிச் சொன்னார். எனக்கும் நண்பருக்கும் ஒன்றுமே

புரியவில்லை. காரணம் இல்லாமல் ஒருவிதமான பயம் மட்டும் ஏற்பட்டது. அதற்குள் இன்ஸ்பெக்டர் எங்களருகில் வந்து நேரடியாகவே பேச ஆரம்பித்துவிட்டார்.

“நீங்கள்தானே எழுத்தாளர் என்.பி.சாரதி?”

“ஆமாம், நான்தான். என்ன வேண்டும்?” - குரல் உளறிவிடாமல் சமாளித்துக் கொண்டு பதில் சொன்னேன்.

“இதோ, இந்தத் தோல் பையைப் பாருங்கள்; இதில் உங்கள் விஸிட்டிங் கார்டு, புகைப்படம், அந்த ஓட்டலில் தங்கியதற்கு உரிய ரசீது, எல்லாம் இருக்கின்றன. கொஞ்சம் பணமும் இருக்கிறது. இது உங்களுடையதுதானே?”

“ஆமாம்!”

“எங்கே போட்டுவிட்டு வந்தீர்கள்?”

அது என் பை அல்ல என்று நான் மறுத்திருக்கலாம். ஆனால் அப்படி நான் மறுத்துவிட வழியில்லாமல் பையில் உள்ள ஆதாரங்களை முழுமையாக ஒப்பித்து என்னை ஒப்புக் கொள்ளச் செய்துவிட்டார், இன்ஸ்பெக்டர். ‘இனி ஏமாற்ற முடியாது; உண்மையை நடந்தது நடந்தபடியே சொல்லிவிட வேண்டியதுதான்’ என்று தோன்றியது.

இன்ஸ்பெக்டரை அமரச் செய்து நானும் நண்பருமாகக் காலையில் நடந்ததைத் தெளிவாகக் கூறினோம்.

“நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான். ஆனால் நீங்கள் தற்செயலாகப் பார்க்கப் போனவர்கள்தாம்; உங்களுக்கும் மேற்படி கொலைக்கும் சம்மந்தம் இல்லை என்பதை உங்கள் வாய்மொழியால் மட்டுமே நம்புவதற்கில்லை. வேறு ஏதாவது ஆதாரம் வேண்டும்” என்றார் இன்ஸ்பெக்டர்.

“என்ன இன்ஸ்பெக்டர் சார் ஏதோ ஊர் சுற்றிப் பார்க்க வந்தவர்களை இப்படிப் பெரிய வம்பில் மாட்டி வைக்கிறீர்களே?” என்று கெஞ்சும் குரலில் கேட்டேன்.

“எனக்கு என்ன சார்? உங்கள் மேலே தனிப்பட்ட முறையில் எனக்குக்கூட அனுதாபமாகத்தான் இருக்கிறது. இந்தத் தோல்பையை நீங்கள் அங்கே போட்டுவிட்டு வந்ததனால்தானே இவ்வளவு வம்பும்? இது அங்கே கிடக்கவில்லையானால் ‘மனம் வெறுத்துத் தற்கொலை’ என்று நாங்களே பொதுவாக எழுதிவிட்டு நடவடிக்கையே எடுக்காமல் பேசாமல் இருந்திருப்போம். இனிமேல் எங்கள் கடமையை நான் செய்ய வேண்டியதுதான்.” இன்ஸ்பெக்டர் கையை விரித்துவிட்டார்.

“சார், அந்த டிரைவரைத் தேடிப் பிடித்துக் கொண்டு வந்து சாட்சி சொல்லச் செய்கிறோமே; அப்போதாவது நம்புவீர்களா?” என்றார் நண்பர்.

“அதில் பிரயோஜனமே இல்லை. அந்த டிரைவர் என்ன சொல்வான் தெரியுமா? ‘இவர்களைக் கோவளத்திற்குப் போகும் ரோட்டில் இறக்கிவிட்டேன். இவர்கள் இரண்டு மணி நேரம் கழித்துத் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

ஆனால் அரைமணி நேரத்திலேயே அவசர அவசரமாகத் திரும்பி வந்துவிட்டார்கள். இவ்வளவுதான் எனக்குத் தெரியும்' என்று சொல்வான். எனவே அவனுடைய சாட்சியத்தால் உங்களுக்கு நன்மை ஏற்படுவதற்குப் பதிலாகத் தீங்கே ஏற்படும்" என்றார் இன்ஸ்பெக்டர். அவர் பேசுவதைப் பார்த்தால் உண்மையில் எங்கள்மேல் அனுதாபப்படுவதுபோலவும், ஆனால் சட்டப்படி அந்த அனுதாபத்தைச் செயலளவில் காட்ட முடியாமல் வருந்துவது போலவும் தோன்றியது. நாங்கள் மேலே ஏதும் பேச வழியின்றி வாயடைத்துப் போய் நின்றோம்.

"இப்போது நான் இந்த அறையைக் கொஞ்சம் சோதனை போடலாமா?" - இன்ஸ்பெக்டரின் தொனியில் அனுதாபம் மாறி அதிகாரம் வந்துவிட்டது. நாங்கள் தலையை அசைத்தோம்.

எடுத்த எடுப்பில் அவருடைய பார்வையில் பட்டது, மேஜைமேல் இருந்த கதையின் கையெழுத்துப் பிரதிதான். அவர் அதைக் கையில் எடுத்துப் பொறுமையோடு கடைசி வரை படித்தார். பின்பு எங்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே பேசினார். "சார், நீங்கள் தப்புவதற்கே வழி இல்லை. பல வகையிலும் இந்தக் கொலைக்கும் உங்களுக்கும் சம்பந்தம் நெருங்கிக் கொண்டே வருகிறது. இதோ இந்தக் கதையை நீங்கள் எப்படி எழுதினீர்கள்?"

"அதை நான் எழுதவில்லை. இந்த நண்பர் எழுதியது. காலையில் நடந்த சம்பவத்தை மையமாக வைத்து இப்போதுதான் கற்பனை செய்து எழுதினார்." நான் இப்படிச் சொல்லிவிட்டு நண்பரைச் சுட்டிக் காட்டினேன்.

"கற்பனையா? கற்பனை! அஹ்ஹஹ்ஹா! யாரை ஏமாற்றப் பார்க்கிறீர்கள்?" - இன்ஸ்பெக்டர் இடிச் சிரிப்புச் சிரித்தார்.

"ஏன் சார், அதில் சந்தேகம் என்ன? நிச்சயமாகக் கற்பனைதான்" என்று வற்புறுத்திக் கூறினார் நண்பர்.

"சார், சும்மா அளக்காதீர்கள். பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டாமா? போலீஸ் இலாகாவில் இன்னும் அறிவாளிகள் இருக்கிறார்கள். எல்லோரும் முட்டாள்களாகிவிடவில்லை. நினைவு வைத்துக்கொள்ளுங்கள்."

"இன்ஸ்பெக்டர் சார், நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? எங்களுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. சற்றுத் தெளிவாகத்தான் சொல்லுங்களேன்?" நான் கேட்டேன்.

"தெளிவாகச் சொல்வதற்கு என்ன ஐயா இருக்கிறது? கைப்புண்ணுக்குக் கண்ணாடியா வேண்டும்? இந்தக் கொலைக்கும் உங்களுக்கும் சம்பந்தம் இல்லையென்றால் செத்தவர்களின் பெயர் உங்களுக்கு எப்படித் தெரிந்தது? அதுதான் போகட்டும்; இறந்தவர்கள் காலடியில் பாறை இடுக்கினுள் கிடந்த 'பாரம்பரியோவின் காதல்' என்ற புத்தகத்துக்கும் உங்கள் கதையில் வரும் சம்பாஷணைகளுக்கும் காப்பி அடித்தாற்போல அவ்வளவு சரியாக ஒற்றுமை இருக்கிறதே! அதற்கு என்ன சொல்கிறீர்கள்?"

"ஐயோ! நான் ஒரு பாவமும் அறியேன், சார்! இந்தக் கதையில் வரும் பாத்திரங்களின் பெயர்களும் சம்பாஷணைகளும் முற்றும் கற்பனை, சார்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு, என்னை நம்புங்கள். நான் நிரபராதி சார்!" என்று பிரலாபிக்கத் தொடங்கினார் என் நண்பர்.

"நிறுத்துங்கள் பேச்சை! குருடன்கூட நம்பமாட்டான். கற்பனை எப்படி இவ்வளவு கச்சிதமாக அமைந்தது? அட, சம்பாஷணைகள்தாம் அப்படி அமைந்தாலும் 'அம்மு, பாஸ்கரன்' என்ற பெயர்கள் கூடவா ஒன்றாக அமையும்?"

"சார், ஏதோ என் மனத்தில் தோன்றிய பெயரைப் போட்டு எழுதினேன். கொலையுண்டவர்களின் பெயரும் இப்படியே இருக்குமென்று எனக்குத் தெரியுமா?"

"சரி ஐயா, பெயர், சம்பாஷணைகள் எல்லாமே உம்முடைய சொந்தக் கற்பனை என்றே வைத்துக் கொள்வோம்! கொலை செய்யப் பெறுவதற்குச் சிறிது நேரத்திற்கு முன்வரை அவர்கள் 'பார்பரியோவின் காதலை'ப் பற்றிப் பேசியிருக்கலாம் என்பது அங்கு விழுந்து கிடந்த புத்தகத்திலிருந்து அனுமானிக்கப்படுகிறது. அதைக்கூடவா நீராகக் கற்பனை செய்து எழுதினீர்?"

"ஏன் சார்? கற்பனை செய்திருக்கக்கூடாதென்பதற்கு மட்டும் என்ன நியாயம் இருக்கிறது?" என்று ஆத்திரத்தில் இன்ஸ்பெக்டரை எதிர்த்துக் கேட்டார் நண்பர். இன்ஸ்பெக்டரின் குதர்க்கம் நிறைந்த கேள்விகள் அவருக்குக் கோபத்தை உண்டாக்கிவிட்டிருந்தன.

"இந்த விதண்டா வாதமெல்லாம் என்னிடம் வைத்துக் கொள்ளாதீர்கள். நான் போலீஸ் அதிகாரி. எனக்குக் கடமைதான் தெரியும்."

"கடமைதானே தெரியும்? தெரிந்ததைச் செய்து கொள்ளுங்கள்!" நண்பரின் பேச்சு வரம்பு மீறிவிட்டது.

"உங்கள் இருவர் மேலும் வாரண்டு பிறப்பித்திருக்கிறேன். இருவரையும் இப்போதே அரெஸ்டு செய்கிறேன். வேறு சரியான புலன்கள் அகப்படுகிற வரையில் நீங்கள் 'ரிமாண்டில்' இருக்க வேண்டியதுதான்."

நாங்கள் பதில் சொல்லவில்லை.

"புரொப்ரைட்டர்!" - மாடியே அதிரும்படி கூச்சல் போட்டார் இன்ஸ்பெக்டர். அடுத்த கணம் அந்த ஹோட்டலின் முதலாளி கை கட்டி வாய் பொத்திப் பவ்யமாகத் தெய்வத்திற்கு முன் நிற்கும் பக்தரைப்போல இன்ஸ்பெக்டருக்கு முன் ஓடி வந்து நின்றார்.

"இவர்களை 'லாக்கப்'பிற்குக் கொண்டு போகிறேன். இந்த வழக்கு விசாரணை முடிந்து தீர்ப்பாகிறவரை இந்த அறையை வேறு எவருக்கும் வாடகைக்கு விடக்கூடாது. இப்படியே பூட்டிச் 'சீல்' வைத்துவிடுவோம். இது சர்க்கார் பொறுப்பில் இருக்கும்."

"சரி சார், அப்படியே செய்யுங்கள்." புரொப்ரைட்டர் சம்மதித்தார். 'இந்தப் பாழாய்போன மனிதர்கள் நம் ஹோட்டலில் ஏன் தங்கினார்கள்? இவர்களால் எவ்வளவு தொல்லை!' என்று மனத்திற்குள் எங்களை வசை பாடியிருப்பார் அவர்.

விதியையும் போதாத வேளையையும் எண்ணிச் சபித்துக் கொண்டே இன்ஸ்பெக்டரோடு சென்றோம். "இந்த வருஷம் ஏன்தான் லட்சதீப உற்சவத்துக்கு வந்தோமோ?"

போலீஸ் ஸ்டேஷனை அடைந்ததும் இன்ஸ்பெக்டர் கொஞ்சம் சாந்தம் அடைந்திருந்தார். "சார், எதற்கும் நீங்கள் இருவரும் நடந்தது நடந்தபடியே - அதாவது நீங்கள் என்னிடம் சொல்லியதுபோல் - ஆளுக்கு ஒரு 'ஸ்டேட்மெண்ட்' எழுதிக் கொடுத்துவிடுங்கள். பின்னால் ஆகிற படி ஆகிறது!" என்று சொல்லிக் கொண்டே காகிதத்தை எடுத்து ஆளுக்கு ஒன்றாக நீட்டினார். நாங்கள் அதை வாங்கி விரிவான ஸ்டேட்மெண்டு ஒன்று எழுதிக் கொடுத்தோம். அதை வாங்கிக் கொண்டதும் எங்களை 'லாக்கப்'புக்கு அனுப்பினார். யாரை நோவது? யாரிடம் கோபித்துக் கொள்வது? குனிந்த தலை நிமிராமல் அரசாங்க 'விருந்தாளி'களாக 'விருந்தறை'க்குள் நுழைந்தோம். அந்த நாற்றம் நிறைந்த அறையையும் கிழிந்த ஓலைப்பாயையும் பார்த்தபோது குமட்டிக் குமட்டி வாந்தியெடுக்க வந்துவிடும் போலிருந்தது.

"என்ன, என்.பி.? 'அந்தக் காலத்திலே தேசியப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறைக்குப் போகவில்லையே!' என்ற குறை இப்படியா தீர வேண்டும்?" - நண்பர் ஏதோ ஹாஸ்யமாகப் பேசுவதுபோல் பேசினாலும் அந்தப் பேச்சின் முடிவில் துன்பத்தால் ஏற்படும் விரக்தியே நிறைந்தது.

"அட, அதுதான் போகிறது! நாசமாய்ப்போகிற கதையில் எப்படி ஐயா அவ்வளவு திருத்தமாக எழுதித் தொலைத்தீர்?" என்று நான் அவர் மேல் எரிந்து விழுந்தேன்.

"என்னைச் சொல்லாதீர். நீர் தோல் பையைப் போட்டுவிட்டு வராவிட்டால் இருக்கிற இடம் தேடி வந்து கதையைப் படிக்கவா போகிறான்?" என்று என் மேல் பதிலுக்கு எரிந்து விழுந்தார் அவர்.

இருவருமாகச் சேர்ந்து விதியின் மேல் எரிந்து விழுந்தோம். அந்த ஜெயில் அறையில் இருவருமாக மூன்று வாரம் கழித்துவிட்டோம். எங்கள் கதி என்ன ஆகுமென்று எங்களாலேயே சிந்தித்துப் பார்க்க முடியவில்லை. முகம் நிறையத் தாடியும் மீசையும் வளர்ந்துவிட்டன. ஜெயில் உணவும் ஒருவிதமாக நாலைந்து தடவை வாந்தியெடுத்தபின் இப்போது வழக்கமான உணவுபோல் ஒத்துக்கொண்டுவிட்டது.

"பரிபூரணமாக நிறைந்த அனுபவமுள்ளவன்தான் கதாசிரியனாக இருக்க வேண்டும் இல்லையா? அதனால்தான் இதுவரை ஏற்படாத இந்தச் சிறை அனுபவத்தைக் கற்பனாதேவி நமக்கு அளித்திருக்கிறாள்" என்று இருவருமாக மெல்ல ஆத்மதிருப்தி அடைந்து கொண்டிருந்தோம். சிறையில் பத்திரிகை கிடைத்தாலாவது அந்தக் கேஸ் நிலவரம், புலன் விசாரணை எல்லாம் எப்படி இருக்கின்றன என்று படித்துத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் அதுதானே கிடைக்கவில்லை.

இதோ அதோ என்று பின்னும் பதினைந்து நாட்கள் கழிந்துவிட்டன. மறுமாதம் முதல்தேதி காலை திடீரென்று இன்ஸ்பெக்டரும் இரண்டு கான்ஸ்டபிள்களும்

இரண்டு மூன்று முரட்டுக் கைதிகளுடன் எங்கள் அறைப் பக்கமாக வந்தனர். எங்கள் வார்டின் கதவு திறக்கப்பட்டது.

"சார், நீங்கள் இருவரும் வெளியே வாருங்கள். உங்களுக்கு விடுதலை. இவர்கள்தான் உண்மைக் குற்றவாளிகள்" என்று சிரித்துக்கொண்டே கூறினார் இன்ஸ்பெக்டர். 'அப்பாடா? பிழைத்தோம்' என்று நானும் நண்பரும் வெளியேறினோம். அவர் எங்களிடம் மிகவும் மனம் வருந்தி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

"ஆமாம் சார், அது எப்படி அந்த மாதிரி அச்சில் வார்த்தாற்போல் உங்களால் கற்பனை செய்ய முடிந்தது? நீங்கள் உங்கள் கதையை எப்படி முடித்திருக்கிறீர்களோ அப்படியேதான் உண்மையிலும் நடந்திருக்கிறது. அம்முவும் பாஸ்கரனும் பேசிக் கொண்டிருந்தபோது இருட்டிவிட்டதென்று எழுதியிருந்தீர்கள் அல்லவா? அப்போது இந்தத் திருட்டுப் பயல்கள் கைவரிசையைக் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் இருவரிடமும் இருந்த நகைநட்டுக்களைப் பறித்துக் கொண்டு தாமாகவே தற்கொலை செய்து கொண்டதுபோல் தோன்றும்படி அவர்களை அடித்துத் தென்னை மரத்தில் தூக்கில் தொங்கவிட்டுப் போயிருக்கிறார்கள். இந்த ஒரு மாதமாக அலைந்து இதைக் கண்டுபிடித்தேன். நேற்று ஒரு நகைக் கடையில் திருட்டு நகைகளை விற்க வந்தபோது இவர்கள் அகப்பட்டுக் கொண்டார்கள்" என்று எங்களுடைய பழைய ஸ்தானத்தில் இப்போது இருந்தவர்களைக் காட்டினார் இன்ஸ்பெக்டர். திரும்பத் திரும்ப அவர் நண்பரின் கதையைப் பற்றி ஆச்சரியப்பட்டார்.

"காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்ததுபோல்தான் இன்ஸ்பெக்டர் சார். இந்த மாதிரி கற்பனைதான் ஓர். எழுத்தாளனின் மனச்சக்தி. அவன் தன் பேனாவில் உருவாக்கும் கற்பனை எங்காவது என்றாவது நடந்திருக்கிறது; அல்லது நடக்கிறது; இரண்டும் இல்லாவிட்டால் நடக்க இருக்கிறது - தெரிந்து கொள்ளுங்கள்" என்று பெருமிதத்தோடு இன்ஸ்பெக்டருக்குப் பதில் சொன்னார் என் நண்பர்.

"என்னவோ போங்கள். உங்கள் இருவரையும் மகத்தான கஷ்டத்தை அனுபவிக்கும்படி செய்துவிட்டேன்!"

"நீங்களா செய்தீர்கள்? சந்தர்ப்பம் அப்படிச் செய்துவிட்டது?" நான் உபசாரமாக இப்படிக் கூறினேன்.

"அடுத்த வருஷம் லட்சதீப உற்சவத்திற்கு வந்தால் நீங்கள் அவசியம் என் விருந்தாளியாகத் தங்க வேண்டும்."

"ஐயையோ! மறுபடியுமா?"

"பார்த்தீர்களா? பார்த்தீர்களா? இந்தக் குயுக்திதானே வேண்டாம் என்கிறது? நான் என் வீட்டில் விருந்தினராகத் தங்க வேண்டுமென்று சொன்னால் நீங்கள் தப்பர்த்தம் செய்து கொள்கிறீர்களே."

"அதற்கென்ன சார், நாங்கள் அடுத்த வருஷம் வந்தால் தங்குகிறோம்."

"கட்டாயம் வர வேண்டும்."

"லட்ச தீபத்திற்குத்தானே? பிழைத்துக் கிடந்தால் வருகிறோம்... அது சரி இன்ஸ்பெக்டர், அந்தக் கதையின் பிரதியைக் கொஞ்சம் திருப்பித் தருகிறீர்களா?"

"ஓஹோ! அது உங்களுக்கு வேண்டுமா?"

"வேண்டுமாவாவது! அதன் சக்தி எவ்வளவு பெரியது, அதை விட்டுவிட்டா போவது?"

நண்பர் இன்ஸ்பெக்டரிடம் அதைக் கேட்டு வாங்கிக் கொண்டார்.

"என்னைப் பற்றி எந்தக் கதையிலாவது எழுதி மானத்தை வாங்கி விடாதீர், ஐயா! நான் சுபாவத்தில் நல்லவன்!" வேடிக்கையாக இப்படிச் சொல்லிக் கொண்டே எங்களுக்குக் கைகூப்பி விடை கொடுத்தார் அவர். நானும் நண்பரும் திருவனந்தபுரம் இருந்த திசைக்கே ஒரு பெரிய கும்பிடு போட்டுவிட்டு ஊர் திரும்பினோம்.

**(கலைமகள், செப்டம்பர், 1957)**



## 21. நாணயம்

**வ**க்கீல் ஒரு கட்டுப் பைல்களைத் தூக்கி அவன் கையில் திணித்தார். குமாஸ்தா நாராயணன் அவ்வளவையும் வாங்கிக் கொண்டான்.

"ஏன் நிற்கிறீர்? அவ்வளவுதான், நீங்கள் போகலாம். காலையில் வரும்போது எல்லாக் கேஸ்களின் பைலையும் படித்துச் சுருக்கமாகக் குறிப்பு எழுதிக் கொண்டு வாரும். மறந்துவிடாதீர்..." வக்கீல் அவனைத் துரத்தாத குறையாக விரட்டினார்.

"சார்!... வந்து... வந்து..."

"என்ன ஐயா? ஏன் குழைகிறீர்? ஏதாவது சொல்ல வேண்டுமென்றால் சட்டென்று சொல்லித் தொலையுங்கள்."

"வீட்டிலே கொஞ்சம் பணமுடை. சம்பளத்திலே முன் பணமாகப் பதினைந்து ரூபாய் கொடுத்தால் நன்றாயிருக்கும்."

"இதோ பாருங்கள். இன்றைக்குத் தேதி இருபத்தெட்டு, இன்னும் இரண்டு நாட்களில் சம்பளமே உம் கைக்கு வரப்போகிறது. அதற்குள் என்னை எதற்குத் தொந்தரவு செய்கிறீர்? போம் ஐயா, போய்விட்டுக் காலையில் வாரும். இருந்ததைப் பாங்குக்கு அனுப்பிவிட்டேன். கைவசம் 'சில்லறை'யாக இல்லை."

"அது இல்லை சார். மிகவும் நெருக்கடியான நிலை."

"ரொம்ப சாரி! இதற்கு மேல் நான் பதில் சொல்ல முடியாது. இப்போது தரமாட்டேன்." வக்கீலுக்குக் கோபம் வந்துவிட்டது. இனிமேல் அவரிடம் கெஞ்சினால் வாயில் வந்தபடி பேசுவதைத் தவிர வேறெதுவும் செய்யமாட்டாரென்று அவனுக்குத் தெரியும். கிழிந்து போயிருந்த கோட்டுப் பையைத் தடவிக் கொண்டே ஏமாற்றத்தோடும் பைல்களோடும் அங்கிருந்து வெளியேறினான் நாராயணன். மாதம் நாற்பத்தைந்து ரூபாய் சம்பாதிக்கும் ஒரு வக்கீல் குமாஸ்தாவின் வாழ்க்கையை இருபது தேதிக்கு மேல் பஞ்சப் பிரதேசமாகப் பிரகடனம் செய்ய வேண்டியதுதான், வேறு வழியில்லை.

மனைவி, நாலைந்து குழந்தைகள், பள்ளிக்கூடம், வீட்டு வாடகை, சமயங்களில் ஆஸ்பத்திரி, இவ்வளவையும் சமாளிக்கிற சக்தி நாராயணனின் நாற்பத்தைந்து ரூபாய்க்குக் கிடையாது.

மேலே உரசிவிடுவதுபோல் ஒரு டாக்ஸி அசுர வேகத்தில் வந்தது. நாராயணன் ஒதுங்கிக் கொண்டான்.

"என்ன ஐயா! வீட்டிலே சொல்லிவிட்டு வந்தியா? பார்த்துப் போ." அந்த டாக்ஸி டிரைவர் அவனை விசாரித்து விட்டுப் போனான்.

"கட்டுப்பாட்டை மீறித் தவறான பக்கத்தில் அதிக வேகத்தில் ஓட்டிக் கொண்டு வரும் இந்த மடையன் வீட்டில் சொல்லிவிட்டு வரவேண்டிய தில்லையாம். நான் வீட்டில் சொல்லிவிட்டு வரவேண்டுமாம்!" நாராயணன் சிரித்துக்கொண்டே நடைபாதையில் ஏறி நடந்தான்.

வலது கை தாங்காமல் ஃபைல் கட்டு, அரையில் அழுக்கேறிய நான்கு முழம் வேட்டி, மிதியடி இல்லாத கால்கள், இனிமேல் தைக்க இடமில்லை என்று கூறத்தக்க விதத்தில் அவ்வளவு தையல்களுக்கு ஆளாகிவிட்ட ஒரு கறுப்புக் கோட்டு; களையெடுக்காத பயிர் போல வாரப்படாமல் முன்நெற்றியில் வந்துவிழும் தலை மயிர் நரைத்தும் நரைக்காமலும் விகாரமாகத் தென்பட்டது.

ஆடம்பர வெள்ளம் நாகரிகக் குமிழியிட்டு ஓடும் அந்த மாபெரும் தெருவில் தன்னைப்போல ஒருவன் நடந்து செல்வதே அசிங்கமாக இருப்பதுபோல நாராயணன் மனத்தில் ஒரு பிரமை தட்டியது.

ஜவுளிக் கடைகள், பூக்கடைகள், காப்பி ஹோட்டல்கள், தெரு ஓரத்து ரிப்பன் வியாபாரிகள், பத்திரிகை விற்கும் பையன், ஒவ்வொன்றாக, ஒவ்வொருவராக, அவனைக் கடந்து சென்று கொண்டிருந்தார்கள். இல்லை, தவறு அவன்தான் அவைகளைக் கடந்து முன்னேறிக் கொண்டிருந்தான்.

ரேடியோ சங்கீதம், பஸ் கண்டக்டர்களின் விசில், பேச்சுக் குரல், வியாபாரிகளின் பேரம், தெருவெல்லாம் அமர்க்களமாகத்தான் இருந்தன, அந்த மாலை நேரத்தில்.

"மிஸ்டர் நாராயணன்!... சார் உங்களைத்தானே?"

யாரோ இரண்டு கைகளையும் தட்டிக் கூப்பிடும் ஓசை. கூட்டம் நிறைந்த தெருவில் இப்படிக் கை தட்டிக் கூப்பிட்டால் அத்தனை பேரும் திரும்பிப் பார்ப்பார்கள். இப்போதும் அப்படித்தான் நடந்தது.

நாராயணன் திரும்பிப் பார்த்தான். அவனுடைய பழைய நண்பன் அரட்டைக் கல்வி என்று பேர் எடுத்த ராகவன் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

"என்ன ராகவன்? சௌக்கியமா?"

"சௌக்கியத்துக்கு என்ன குறைவு?"

"எங்கே இப்படி? இந்தப் பக்கமாக..."

"சும்மாத்தான் வந்தேன்."

"இப்போது எங்கேயாவது வேலை பார்க்கிறாயா? அல்லது சுதந்திரப் பிரஜைதானா?" இப்படிக் கேட்டுவிட்டு நாராயணன் சிரித்தான். ராகவனைப் பற்றி நன்கு தெரிந்து கொண்டவர்கள் மட்டும்தான் அந்தச் சிரிப்பைச் சிரிக்க முடியும்.

"வேலையாவது ஒன்றாவது! எந்த முட்டாள் தரக் காத்துக் கொண்டிருக்கிறான் எனக்கு?"

"சரி! நான் வரட்டுமா? ஏகப்பட்ட ஃபைல்கள். இரவுக்குள் பார்த்து முடிக்க வேண்டும்."

"நாராயணன்! ஒரு முக்கிய விஷயம்."

"என்ன?"

"உன்னிடம் ஒரு இரண்டணா இருக்குமா? காப்பிக்கு வேண்டும்." ராகவனுடைய குரல் தணிந்து தாழ்ந்து உலகத்திலுள்ள நைச்சிய மெல்லாம் ஒன்று சேர்ந்து வெளி வந்தது.

நாராயணனுக்கு அழுவதா சிரிப்பதா என்று புரியவில்லை. சிறிதுநேரம் பேசாமல் நின்றான். ஒரு புன்னகை பூத்தான். "ராகவன்! இன்றைக்குப் பர்ஸ் கொண்டு வர மறந்துவிட்டேன். வேண்டுமானால் வீட்டுக்கு வா, பார்க்கலாம்." சாதுரியமாகப் புளுகியது அவன் வாய். வீட்டில் செப்பால் அடித்த சல்லிகூடக் கிடையாதென்று அவன் மனத்துக்குத் தெரியாதா, என்ன?

"வேண்டாம், நான் இங்கேயே பார்த்துக் கொள்கிறேன். குட் பை, போய்விட்டு வா!"

அப்பாடா! நாராயணனுக்கு நிம்மதியாக மூச்சு வந்தது. ராகவனிடம் விடைபெற்றுக் கொண்டு நடந்தான்.

"சாமி! பூ வாங்கலியா... கொடை மல்லிகைச்சரம்..." பூக்காரிக்குப் பதில் சொல்லாமல் ஒதுங்கி நடந்தான்.

"எதை எடுத்தாலும் ஓரணா சார். எதை எடுத்தாலும் ஓரணா! ஒரே அணா!" - நடைபாதையிலிருந்த கூட்டத்தை வகிர்ந்து கொண்டு மேலே நடந்தான் நாராயணன்.

வீட்டில் எத்தகைய வரவேற்பு காத்திருக்கும் என்பதை முன்கூட்டியே சிந்திக்கத் தொடங்கியது அவன் மனம்.

மனைவிக்கு ஜுரம். கஞ்சி போட்டுக் கொடுப்பதற்குப் பார்லி வாங்கி வருவேனென்று அவள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பாள். குழந்தை சுசி வாய்ப்பாடு புத்தகம் வேண்டுமென்று நான்கு நாட்களாக அரித்துக் கொண்டிருக்கிறாள். பெரிய பையனுக்குப் போன மாதம் பள்ளிக்கூடச் சம்பளம் கட்டவில்லை. நாளைதான் கடைசி நாள். வக்கீலிடம் பணம் வாங்கி வருவேன் என்று எல்லோரும் நினைத்துக் கொண்டிருப்பார்கள். வீட்டு வாடகைக்காரர், அந்த மனிதருக்கு மூன்று மாதம் பாக்கி. கழுகு போல் வந்து காத்துக் கொண்டிருப்பார். அவர் ஏசும் ஏச்சுக்களை காது கொண்டு கேட்க இயலாது. பால்காரி! அவள் உயிரையே வாங்கி விடுவாள்.

'இப்படியே காலடியில் ஒரு பர்ஸ் வந்து விழுந்தால்? அதில் ஒரு நூறு ரூபாயும் இருந்தால்...' - கையாலாகாதவன் மனத்தில்தான் இந்த மாதிரி ஆசை உண்டாகிறது.

'நூறு ரூபாயாம் நூறு ரூபாய்! - தரித்திரம் பிடித்த மனம். ஆயிரம், இலட்சம் என்று பெரிதாக நினையேன்!' நாராயணன் தனக்குள் சிரித்துக் கொண்டான்.

"கடவுள் அருளால் உனக்கு ஐயாயிரம் ரூபாய் கிடைத்துவிட்டதென்றால் என்ன செய்வாய்? என்று பிச்சைக்காரனிடம் ஒருவன் கேட்டானாம்."

"தங்கத்தினால் ஒரு திருவோடு செய்து மறுபடியும் பிச்சைக்குப் போவேன்!" என்று அந்த முட்டாள் பிச்சைக்காரன் பதில் சொன்னானாம்.

இது நாராயணனுக்கு நினைவு வந்தது. தரித்திரனின் மனம் பகற் கனவு கண்டால்கூட அதுவும் அற்பக் கனவாகவே இருக்கிறது. காலடியில் அகப்படுகிற பர்ஸில் கத்தை கத்தையாக ரூபாய் நோட்டுக்கள் இருந்தால் அடிக்கவா செய்யும்?

பாழாய்ப் போன மனம் 'நூறு' என்று நினைக்கிறதே?

"எங்கே ஐயா? பராக்குப் பார்த்துக் கொண்டே போறே... மேலே இடிச்சுக்கிட்டு?"

"ஸாரி! மன்னிக்கணும்!"

நாராயணன் இனியும் யார் மேலாவது இடித்துவிடக் கூடாதே என்பதற்காகச் சுதாரிப்புடன் சென்றான்.

பால்காரன், வீட்டு வாடகைக்காரர் எல்லோரையும் ஒவ்வொருவராக சால்ஜாப்புக் கூறி அனுப்பியாகிவிட்டது. மளிகைக் கடைக்காரனைக் கெஞ்சிக் குழைந்ததின் பயனாகப் பார்லி அரிசி கடனாகக் கிடைத்தது. குழந்தை சுசியை ஒரு அதட்டுப் போட்டதில் பயந்து போய் வாய்ப்பாடு புஸ்தகம் கேட்பதையே விட்டுவிட்டாள். பெரிய பையன் விவரம் தெரிந்தவன். சந்தர்ப்பத்தைப் புரிந்து கொண்டு பேசாமல் இருந்துவிட்டான்.

நாராயணன் ஃபைல் கட்டைப் பிரித்தான். இரவு எட்டே முக்கால் மணி. அரிகேன் விளக்கின் மங்கிய ஒளியில் ஒவ்வொரு காகிதமாகப் புரண்டது.

பார்த்துக் கொண்டே வந்தவனுக்குத் திடீரென்று தன் கண்களை நம்பமுடியவில்லை. ஃபைல் காகிதங்களுக்கு நடுவே ஐந்தாறு புதிய நூறு ரூபாய் நோட்டுக்கள் மடித்துக் கிடந்தன. நாராயணனுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஃபைல் முழுவதும் வரிசையாகப் பிரித்துப் பார்த்தான். நன்கு தேடியும் அவற்றில் வேறு நோட்டுக்கள் இல்லை.

அறுநூறு ரூபாய்! எவனோ கட்சிக்காரன் கொண்டு வந்து கொடுத்ததை இரும்புப் பெட்டியில் வைப்பதற்குப் பதிலாக மறந்து போய்ப் ஃபைலுக்குள் வைத்திருக்கிறார் வக்கீல்.

நாராயணன் மனத்தில் சபலம் தட்டியது. ஃபைலை மூடி வைத்துவிட்டுத் திரும்பத் திரும்ப நோட்டுக்களை எண்ணினான். ஆறு நூறு ரூபாய் நோட்டுகளை ஒரே சமயத்தில் கையில் வைத்துப் பார்த்தபோது திடீரென்று குபேரசம்பத்துக் கிட்டியது போலிருந்தது.

குழந்தை சுசி பின்புறமாக வந்து நாற்காலியைக் கட்டிக் கொண்டு நின்றாள்.

"அப்பா! திருடினால் பாவம்தானே?" - அவன் நெஞ்சில் சவுக்கடி விழுந்த மாதிரி இருந்தது.

"ஏன் கண்ணு! யார் சொன்னா அப்படி உனக்கு!"

"இன்றைக்குப் பள்ளிக்கூடத்திலே பக்கத்துப் பையன் என் பென்சிலை எடுத்துக் கொண்டுவிட்டான் அப்பா!"

"ஊம்! அப்புறம்...?"

"வாத்தியாரிடம் போய்ச் சொன்னேன்! அவர் அவனைக் கூப்பிட்டுப் பிரம்பாலே அடிச்சார் அப்பா!"

"........."

"ஏம்ப்பா! ஒண்ணு கேக்கறேன், பதில் சொல்லுவியோ?"

"என்ன, கேளேன்?"

"திருடறதுன்னா என்னப்பா?"

"திருடறதுன்னா இன்னொருத்தர் பொருளை அவருக்குத் தெரியாமல் எடுத்துக் கொள்கிறதுதான், அம்மா!"

"அப்படிச் செய்தால் சுவாமி கண்ணை அவிச்சிடுமா?"

".........."

"திருடினா சுவாமி அவிச்சிடும்னு வாத்தியார் சொன்னாரே, அப்பா!"

"சுசி! நீ சமர்த்துக் குழந்தை இல்லையா? போ... நாழியாகிறது. போய்த் தூங்கு. எனக்கு இதெல்லாம் பார்த்து எழுதணும்!"

"அப்பா அன்றைக்கு ஒரு குருட்டுப் பிச்சைக்காரன் வந்தானே, அவன் பொய் சொன்னானா அப்பா?"

"ஏன்?"

"இல்லேப்பா! அதனாலேதான் அவனுக்குக் கண் போச்சு!"

"சுசி! உனக்கு உதை கேட்கிறதா? நீ போய்த் தூங்கமாட்டே?"

"இதோ போய்விட்டேன், அப்பா!"

குழந்தை படுக்கையில் போய்ப் படுத்துக் கொண்டாள். வெளியே மழை வேறு அப்போதுதான் ஆரம்பித்திருந்தது.

'முழுசாக ஆறு பச்சை நோட்டுக்கள். எல்லாக் கடனையும் அடைத்துவிடலாம். தெய்வமே அவன் கஷ்டத்தைச் சகிக்காமல் வக்கீல் கை தவறி வைக்கும்படி செய்திருக்கிறது. இல்லையானால் மகா கருமியான அந்த வக்கீல் அன்று மட்டும் கைதவறுவானேன்?'

'சே! என்ன இருந்தாலும் திருட்டுத்தானே? திருடிய கை உருப்படுமா? இன்றைக்கு சிறு திருட்டு, நாளைக்குப் பெரிய திருட்டு. அப்புறம் கொள்ளை கொலை, சிறைவாசம் தூக்குத் தண்டனை!' - ஒரு மனம் இடித்துக் காட்டியது.

'எவன்தான் திருடவில்லை? சமூகத்தில் ஒவ்வொருவனும் தான் திருடுகிறான். மனித சமூகத்தில் உடல் பலவீனத்தைக் காரணமாக வைத்து டாக்டர்கள் திருடுகிறார்கள். மனம் பலவீனத்தால் வக்கீல்கள் திருடுகிறார்கள். என்னைப் போல் ஒரு ஏழை உடம்பைச் செருப்பாக்கி உழைக்கிறவன் இதைத் திருடினால் என்ன?' என்று மற்றோர் மனம் அவனுக்குத் துணிவு ஊட்டியது.

'வயிற்றை நிரப்பும் நாணயம் எப்போது வேண்டுமானாலும் கிடைக்கும். பரம்பரை பரம்பரையாக ரத்தத்தில் ஊறி வந்த பண்பாடு தந்த இந்த நாணயம் இழந்தால் கிட்டுமா? ஆத்மாவையே ஈடாக வைத்தாலும் கிடைக்குமா? சேசே! இந்த வெறும் நாணயத்துக்காக அந்த நாணயத்தை இழக்கலாமா?' அவன் குழம்பினான். அவன் மனத்தைப் போலவே வெளியே இடியும் மழையும் பிரளயமாடிக் கொண்டிருந்தது இயற்கை. குழந்தைகள் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தன. நோயாளியான மனைவி 'லொக்கு லொக்'கென்று இருமிக் கொண்டிருந்தாள். விளக்கின் மங்கலான ஒளியில் குழந்தை சுசியின் முகத்தைப் பார்த்தான் நாராயணன்.

தூக்கத்தில் சிரித்துக் கொண்டிருந்தாள் குழந்தை. 'உலகத்திலுள்ள சத்தியத்தின் ஒளி எல்லாம் இங்கே இருக்கிறது' என்று அந்த முகத்தில் எழுதி ஒட்டியிருப்பது போல் தோன்றியது.

"அப்பா! திருடறதுன்னா என்னப்பா?"

"திருடினால் கண் அவிஞ்சிடுமா?" - மழலை மாறாத குரல் இன்னும் நாராயணன் காதுகளை விட்டு நீங்கவில்லை. அவன் யோசித்தான் - யோசனைக்குப் பின் வேகமாக எழுந்து வாயிற்கதவைத் திறந்தான்.

"இந்த இருட்டிலும் மழையிலும் நீங்கள் எங்கே கிளம்பிவிட்டீர்கள்?" என்று அவன் மனைவி வியப்புடன் கேட்டாள்.

"ஒன்றுமில்லை! இதோ வந்துவிடுகிறேன்? நீ தூங்கு!" என்று நாராயணன் தெருவில் இறங்கி மழையில் நனைந்து கொண்டே ஓடினான். மணிக்கூண்டில் பதினொன்று அடித்தது. மழை ஓசையில் அதன் ஓசை அடங்கி அமுங்கிப் போய்விட்டது.

"சார், சார்! கதவைத் திறவுங்கள்!"

வக்கீல் வீட்டில் எல்லோரும் விளக்கை அணைத்துப் படுக்கைக்குச் சென்றுவிட்டனர்.

நாராயணன் கதவை மறுபடியும் தட்டினான். "சார்! அவசரம்!"

கதவைத் தட்டும் ஓசை வீடு முழுவதும் எதிரொலித்தது. இப்படிப் பல முறை தட்டிய பிறகு வக்கீல் முணுமுணுத்துக் கொண்டே எழுந்து வந்தார்.

"யாரையா இது? நடு ராத்திரியில் வந்து உயிரை வாங்குகிறது? தூங்கவிடமாட்டீர்களா?" என்று வக்கீல் கதவைத் திறந்தார்.

"நான்தான் குமாஸ்தா நாராயணன், சார்!" என்று இழுத்தான்.

"என்ன ஐயா தலை போகிற காரியம்? இந்த அர்த்த ராத்திரியில்?"

"நீங்கள் கொடுத்த ஃபைல் கட்டில் இந்த அறுநூறு ரூபாய் இருந்தது. கைதவறி அதில் வைத்துவிட்டீர்கள் போலிருக்கிறது. அதை உங்களிடம் கொடுத்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்."

வக்கீல் நனைந்து போயிருந்த நோட்டுகளை கையில் வாங்கிக் கொண்டார். நன்றிகூடச் சொல்லவில்லை. வந்தவன் சொட்டச் சொட்ட நனைந்து போயிருப்பதையும் கவனிக்கவில்லை.

"என்ன ஓய், சுத்த அசட்டு மனிதராக இருக்கிறீரே! காலையில் கொண்டு வந்து கொடுத்தால் குடி முழுகியா போய்விடும்! தூக்கத்தைக் கெடுத்துவிட்டீரே!" என்று அலுத்துக் கொண்டே கதவைச் சாத்தினார் அவனுடைய எஜமானர்.

'என் மாதிரி அசடர்களுக்காகத்தான் இந்த உலகத்தில் மழை பெய்கிறது; வெய்யில் அடிக்கிறது; பயிர் விளைகிறது; காற்று வீசுகிறது' என்று நினைத்துக் கர்வப்பட்டுக் கொண்டே நடந்தான் அந்தக் குமஸ்தா.

இந்த வறட்டுக் கர்வத்தைத் தவிர அவனுக்கு வேறென்ன மிச்சமிருக்கப் போகிறது? அங்கே அந்தக் கர்வக்காரனின் வீடு மழைக்கு ஒழுகித் தெப்பமாகிக் கொண்டிருந்தது. நாணயத்தைக் காப்பாற்றிவிட்ட பெருமையில் சத்தியத்தின் பிரதிநிதியாய் இறுமாந்து நடந்து கொண்டிருந்தான் அவன்!

**(கல்கி, 8.9.1957)**

## 22. நினைவில் நின்றவள்

நினைத்துப் பார்த்தால் அது ஒரு கனவு போல் எனக்குத் தோன்றுகிறது. 'நினைக்க வேண்டிய அவசியம்? நினைக்காமலே இருந்துவிட்டால் என்ன?'

இருக்க முடியவில்லையே! நான் என்ன செய்வேன்? உள்ள நிறைவிலோர் கள்ளம் புகுந்திடில் உள்ள நிறைவாகுமோ? உள்ளம் நினைவுகளில் பொங்கும்போதெல்லாம் அந்த அழகிய முகம் திரைச்சீலையில் எழுதித் தொங்கவிட்ட ஓவியம் போல் தென்படுகிறதே? அந்த ஓவியத்தை நான் எப்படி அழிப்பேன்? நினைவில் அரும்பு கட்டி மலரும் அந்த மலரை எப்படிக் கசக்குவேன்? நெஞ்சே பொறு! உனக்கு மறுபடியும் அவள் கதையை நினைவூட்டுகிறேன். எண்ணங்களால் என்னைக் கொல்லாதே! நான் நிரபராதி. எளியவன், பலவீனன், தனியன். என்னை விட்டுவிடு. நீ கேட்பதை நான் ஒளிக்காமல் சொல்லிவிடுகிறேன். நான் ஏன் எதிலும் பற்றில்லாமல் எதுவும் என்னைப் பற்றவிடாமல், சுவையற்று, சுகமற்று ஏகாங்கியாகத் திரிந்து கொண்டிருக்கிறேனென்று நீ கேட்கிறாய்! கடந்த பதினைந்து ஆண்டுகளாக இதயத்தை அழுத்திக் கொண்டிருக்கும் அந்த நினைவுச் சுமையைச் சற்றே கீழே இறக்கி வைக்கிறேன், சரிதானே? கேள்!

அவளைச் சந்திக்க நேர்ந்தது ஒரு விநோதமான கதை போல் நினைவில் தங்கியிருக்கிறது. நீலாம்பூர் மலைப்பகுதியில் யானைகளைப் பிடித்துப் பழக்கும் ஒரு கம்பெனியில் வேலை பார்த்து வந்தேன். அப்போது எனக்கு இருபத்து மூன்று வயது. மலை வாழ்வும் விறுவிறுப்பு நிறைந்த யானை பிடிக்கும் தொழிலும் மனத்துக்குப் பிடித்தவையாய் அமைந்திருந்தன. உடன் வேலை பார்த்தவர்கள் எல்லோரும் மலையாளிகள். அளவற்ற அன்புடன் என்னிடம் பழகினார்கள். கம்பெனிக் கட்டடங்களுக்கு அருகில் உள்ள அறையொன்று நான் இருப்பதற்காகக் கொடுக்கப்பட்டிருந்தது. தனி ஆளாக இருந்தாலும், குடும்பங்களோடு வசித்து வந்த மலைநாட்டு நண்பர்களின் உதவி வேண்டிய போதெல்லாம் குறைவின்றிக் கிடைத்து வந்தது. பல நூறு மைல்களுக்கு அப்பால் பொற்றோர்களையும் வீட்டையும், பிறந்த மண்ணையும் விட்டு விட்டுப் பிழைப்பதற்காக இங்கே வந்து இப்படிக் காட்டிலும் மலையிலும் அலைகிறோம் என்ற உணர்ச்சி ஏற்படவே இல்லை. சொந்த ஊரில் சொந்த மனிதர்களுக்கு இடையே வசிப்பதைப் போலவே இருந்தது.

அப்போது கோயம்புத்தூருக்கு அருகிலுள்ள பேரூர் சிவன் கோவிலுக்கு ஒரு யானை பிடித்துக்கொடுக்க ஒப்புக்கொண்டிருந்தோம். கோவிலுக்கு யானை வாங்கிவிடுவதாகப் பிரார்த்தித்துக் கொண்டிருந்த செல்வச்சீமான் முன்தொகை மூவாயிரம் ரூபாய் கொடுத்து, பிடிக்க வேண்டிய யானையின் வயது, உயரம் முதலிய

விவரங்களைச் சொல்லி அனுப்பியிருந்தார். கோவிலுக்காக யானை பிடித்துக் கொள்வதற்குக் காட்டிலாகா அனுமதியும் கிடைத்துவிட்டது. குஞ்சுக்குட்டன், நாராயணன் நம்பியார், முரளீதர குரூப், நான் ஆகிய நால்வரும் வேறு சில ஆட்களும் யானையை ஒரு வாரத்துக்குள் பிடித்துக் கொடுத்து விடுவதென்ற ஏற்பாடுகளைத் தொடங்கினோம். மலையில் யானைகள் அதிகமாகப் பழகும் அடர்ந்த பகுதி ஒன்றில் எப்போதும் வழக்கம்போல் ஒரு பெரிய குழி வெட்டப்பட்டது. ஆழம், அகலம், உயரம் எல்லாம் யானை விழுவதற்கேற்பப் பொருத்தமாக அமைக்கப்பட்ட அந்தக் குழியின் மேல் மெல்லிய மூங்கில் தட்டியால் மூடினோம். மண்ணைப் பரப்பிப் பார்ப்பதற்குத் தரைபோல் தோன்றும்படி செய்தபின் கரும்புக் கழிகளும் உடைந்த தேங்காய்களும், தழைகளும் அதன்மேல் பரப்பப்பட்டன. நாங்கள் குறிப்பிட்டிருந்த ஒரு வார அவகாசத்தில் இந்தப் பூர்வாங்க வேலைகள் முடிவதற்கே இரண்டு நாட்கள் கழிந்துவிட்டன. பொய்க் குழியின் வடக்கே மேட்டில் உயர்ந்த மரக்கிளைகளின் நடுவே ஒரு பரண் கட்டியிருந்தோம். எஞ்சியிருக்கும் ஐந்து நாட்கள் தாம் பயங்கரமும், கடுமையும் கவனமும் நிறைந்தவை. நாங்கள் நான்கு பேரும் ஒருவர் மாற்றி ஒருவர் இரவு பகல் பாராமல் பரணில் இருந்தாக வேண்டும். கரணம் தப்பினால், மரணம் என்கிற மாதிரி நிலை அது. பகலில் இரண்டு பேர்கள், இரவில் இரண்டு பேர்கள் என்று முறை வைத்துக் கொண்டு நாட்களைக் கழித்தோம். பேரூர்ச் சிவபெருமானுக்கு யானையைச் சீக்கிரமாகத் தருவித்துக் கொள்ள வேண்டுமென்று திருவுள்ளமில்லையோ, அல்லது நாங்கள் பறித்து வைத்திருந்த பொய்க்குழி வழியே யானைகள் வரவில்லை என்பதனாலோ, நான்கு நாட்கள் வரை எதிர்பார்த்தபடி எதுவும் நிகழவில்லை. கரும்புக்குழிகளும் குழிமேல் பரப்பியிருந்த பிற தழைகளும் வாடிக் கொண்டு வந்தன. ஐந்தாம் நாள் பகலிலும் யானை வரவில்லை. 'நாங்கள் திட்டமிட்டிருந்தபடி ஏழு நாட்களில் காரியத்தை முடிக்க இயலாமல் போய்விடுமோ?' என்று திகைத்தோம். எதற்கும் அன்று ஐந்தாம் நாள் இரவையும் பார்த்துவிடுவதென்று முடிவாயிற்று. அன்றிரவு பரணிலிருந்து குழியைக் கண்காணிக்கும் பொறுப்பை நானும் முரளீதர குரூப்பும் மேற்கொள்ள வேண்டியிருந்தது. ஏழு மணிக்கே இராச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு கம்பளி, டார்ச் லைட், தண்ணீர்க்கூஜா சகிதம் பரணுக்குச் சென்று எங்கள் முறையை ஒப்புக் கொண்டோம். ஏற்கனவே காலையிலிருந்து அங்கே காத்துக் கொண்டிருந்த குஞ்சுக்குட்டனும் நாராயணன் நம்பியாரும் எங்களைக் கண்டதும் பொறுப்பை ஒப்புவித்துவிட்டு வீடு திரும்பிச் சென்றனர். முரளீதர குரூப்புக்குச் சமீபத்தில்தான் திருமணமாகியிருந்தது. இளம் மனைவியை வீட்டில் தனியாக விட்டுவிட்டு என்னோடு விடிய விடியப் பரணில் இருக்கப் பைத்தியமா என்ன? எட்டரை மணிச் சுமாருக்கு, "சாரோ! நீங்கள் இவ்விடே இருக்கட்டே. ஞான் வீட்டுக்குப் போய் வருன்னு" என்று சொல்லிக் கம்பளியைப் போர்த்திக் கொண்டு கிளம்பிவிட்டான் அவன். நான் பரணில் ஏறிப் படுத்துக் கொள்ளச் சென்றேன்.

தீடீரென்று அந்த ஓசையும் அலறலும் கேட்டன. குழி மேல் மூடியிருந்த மூங்கில் தட்டி முறியும் ஓசை! யானைதான் விழுந்துவிட்டதோ என்று நான் பரபரப்பாக எழுந்திருந்தேன். ஆனால் தட்டி முறிந்ததை அடுத்து ஒரு பெண்ணின் பரிதாபகரமான

ஓலக்குரல் எழுந்தது. யானை விழவில்லை. இருட்டில் யாரோ ஒரு பெண் வழி தெரியாமல் போய்க் குழி மேல் நடந்திருக்கிறாள். தட்டி முறிந்து உள்ளே குழிக்குள் விழுந்துவிட்டாள் போலிருக்கிறது. "யாரது?" மரத்தின் மேலிருந்து நான் இரைந்து கத்திய வினா ஆயிரம், பதினாயிரம் வினாக்களாக மாறி எதிரொலித்தது. பதில் இல்லை. குழிக்குள் இருந்து ஒரு பெண் அலறும் சப்தம் மட்டும் பரண் மேலிருந்து எனக்குத் தெளிவாகக் கேட்டது. எனக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. திகிலும் பரபரப்பும் ஏற்பட்டன. நான் கீழே இறங்கிப் பார்க்காவிட்டால் குழிக்குள் அக்கப்பட்டுக் கொண்டவள் அங்கேயே கதறிப் பயந்து உயிரை விட்டுவிடுவாளோ என்று திகைத்தேன். ஒரு கையில் டார்ச்லைட்டையும் இன்னொரு கையில் கயிற்றுச் சுருளையும் எடுத்துக் கொண்டு பரணிலிருந்து கீழ் நோக்கித் தொங்கும் கயிற்று ஏணி வழியே இறங்கினேன். மனத்தில் என்னென்னவோ எண்ணங்கள் குழம்பின. உடலில் சிறிது நடுக்கம் ஏற்பட்டது. அந்த இருளில் அம்மாதிரி மலைப்பகுதியில் கீழே நிற்பதனால் எந்த வினாடியிலும் அபாயம் ஏற்படலாம். மிருகங்கள் பழகுகிற இடம். ஆனால் அதற்காக ஒரு அப்பாவிப் பெண்ணைக் குழிக்குள்ளேயே தவிக்க விடுவதா? நான் வேகமாக நடந்து குழியருகே சென்றேன். வடக்கு ஓரமாகத் தட்டி முறிந்து இடைவெளி தெரிந்தது. கையிலிருந்த டார்ச்சை அமுக்கினேன். அப்பப்பா! அதை அமுக்குவதற்குள் கை நடுங்கிய நடுக்கம் சொல்லி முடியாது. விளக்கு ஒளி குழியின் இருண்ட பகுதியில் வட்டமாகப் படிந்தது.

நான் மங்கலான ஒளியில் அவளை ஓரிரு கணங்கள் உற்றுப் பார்த்தேன். கரிய நெடுங்கண்கள்; புருவங்கள்! அவை மன்மதன் வளைக்கின்ற வில்லோ எனத் தோன்றின. செம்பவள இதழ்! அழகிய நுனியுடன் கூடிய சிறிய நாசி! நெளி நெளியாகச் சுருளோடியிருந்த கருங்கூந்தலுக்கும் அந்த மதிமுகத்துக்கும்தான் எவ்வளவு பொருத்தம்? சந்திரனைக் கருநாகம் கவ்வினதுபோல், கொடியுடலுக்கு ஏற்ற ஒற்றை நாடியான தோற்றம். யானைக்காக வெட்டிய பள்ளத்தில் இப்படி ஒரு அழகியைப் பிடிக்கப்போகிறோம் என்று சொப்பனத்திலாவது எதிர்பார்க்க முடியுமா?

"ஐயோ! இந்தக் குழிக்குள் பயமாக இருக்கிறதே! என்னைக் காப்பாற்ற மாட்டீர்களா? நீங்கள் யாராயிருந்தாலும் சரி! உங்களுக்குப் புண்ணியமாய்ப் போகிறது!" - அவள் மறுபடியும் ஓலமிட ஆரம்பித்துவிட்டாள். "சத்தம் போடாதே! உன்னைக் காப்பாற்றத்தான் வந்திருக்கிறேன். இதோ இந்தக் கயிற்றை உள்ளே விடுகிறேன். இரண்டு கைகளாலும் கயிற்று நுனியை இறுக்கிப் பிடித்துக் கொள்" என்று மேலிருந்து உரத்த குரலில் பதில் கூறிக் கொண்டே, கயிற்றுச் சுருளை அவிழ்த்துவிட்டேன். அவள் கயிற்றை இறுகப் பிடித்துக் கொண்டாள். எப்படியோ அவளை மேலே தூக்கிவிட்டேன். அப்போது பக்கத்தில் மரங்கள் முறிபடுகிற ஓசை கேட்டது. நான் திடுக்கிட்டேன். "பெண்ணே! நீ யாராக இருந்தாலும் சரி, இனி ஒரு விநாடிகூடத் தரையில் நின்று கொண்டிருக்கக்கூடாது. யானைகள் மந்தை மந்தையாக வந்து போகிற இடம் இது. அதோ கேட்டாயா ஓசையை? உயிரின் மேல் ஆசையிருந்தால் வந்துதான் ஆக வேண்டும். வேறெங்கும் போக முடியாது" என்று

அவளை நோக்கிக் கூறிவிட்டுப் பரணில் ஏறுவதற்கு ஓடினேன். அவளும் என்னைப் பின்பற்றி ஓட்டமும் நடையுமாக வந்தாள். பழக்கத்தின் காரணமாகக் கயிற்று ஏணியில் வேகமாக ஏற முடிந்தது என்னால். அவள் எப்படி ஏறுவதென்று தெரியாமல் தயக்கமும் திகைப்பும் அடைவதைக் கண்டு, "ஆபத்துக்குப் பாபமில்லை! வேறு என்ன செய்வது? உன் வலது கையை இப்படிக் கொடு! நான் பிடித்து மேலே தூக்கி விடுகிறேன்" என்றேன். சொல்லும்போதே என் வார்த்தைகளை அவள் தவறாக எடுத்துக் கொள்ளக்கூடாதே என்ற பயத்துடன் நான் சொன்னேன். அவள் தயங்கி நின்றாள்.

"இப்படி நின்றால் நின்று கொண்டே இருக்க வேண்டியதுதான். என்னையும் மேலே போகவிடாமல் நீயும் வராமல் இப்படி ஊமையாக நின்றால் என்ன அர்த்தம்?" என்று கண்டிப்பான குரலில் அதட்டினேன். வெண்ணிறத் தந்தத்தில் கடைந்தெடுத்தது போன்ற அந்த வளைக்கை உயர்ந்தது.

அந்த இரவில் நான் ஒரு கனவைக் கண்டுகொண்டிருக்கிறேனோ என்று சந்தேகமாயிருந்தது. ஆனால் கனவல்ல, உண்மையில் ஒரு அழகிய பெண்ணின் கை; என் கையோடு பிணைந்த நிகழ்ச்சி மெய்யாகவே நடந்தது. பொய் இல்லை. கற்பனை இல்லை, புனைவும் இல்லை. அவள் குழியில் விழுந்த அதிர்ச்சியிலிருந்து விடுபடாத பயத்துடன் பரணில் என் முன் உட்கார்ந்திருந்தாள். கம்பளியைக் கொடுத்தேன். "இந்தா போர்த்திக்கொள், குளிர் அதிகமாக இருக்கும்" என்றேன். வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டாள். "யார் நீ? எதற்காக இங்கு வந்தாய்?" என்று கேட்டேன்.

அவளுக்குச் சரியாகத் தமிழ் பேசத் தெரியாததால் மலையாளத்தில் தன்னைப் பற்றிக் கூறினாள். கூறும்போதே துயரம் தாங்காமல் நடுநடுவே விம்மி அழத் தொடங்கிவிட்டாள். முழுவதையும் கேட்டு முடித்தபோது, அந்தப் பெண்ணின் சோகக் கதை என் உள்ளத்தை உருக்கியது. 'இப்படியும் ஒரு துயரக் கதை வாழ்வில் புதைந்திருக்குமா?' என்று ஏங்கினேன். உடல் முழுவதும் செழித்து நிற்கும் இளமையும், இளமையை எடுத்துக்காட்டும் அற்புத அழகும் பொருந்திய அந்தப் பெண், கேவலம் நாள் ஒன்றுக்கு ஆறணாக் கூலிக்கு மரம் அறுக்கும் கோவிந்த ஈழவனின் மகளாக இருப்பாள் என்று எதிர்பார்க்கவே இல்லை. கோவிந்த ஈழவன் எங்கள் கம்பெனியின் மற்றோர் பிரிவாகிய மரக்கடையில் வேலை பார்ப்பவன். ரம்பம் பிடித்து மரம் அறுப்பது அவன் தொழில். சமீபத்தில் சில மாதங்களாக நல்ல மரங்கள் கிடைக்காததனால் எங்கள் கம்பெனியின் மானேஜர் நாலைந்து மரக்கடையை மூடிவிட்டார். கடையில் வேலை பர்த்து வந்தவர்களுக்குத் திடீரென்று வேலை போய்விட்டது. வேலையை இழந்தவர்களில் கோவிந்த ஈழவனும் ஒருவன். மனைவி குழந்தைகளோடு முக்கால் டஜனுக்கு மேல் பாரமுள்ள அவன் குடும்பம் பரிதவிப்புக்கு ஆளாகியது. வறுமைப் பிணி வாட்டி எடுத்தது. ஆணும் பெண்ணுமாக உழைத்தும் வீட்டில் அரை வயிற்றுப் பட்டினி. இப்போதோ ஈழவனுக்கு வேலையே போய்விட்டது. வேலையற்ற நிலையில் குடும்பம் தத்தளித்தது. மலேரியாக் காய்ச்சல் ஈழவனைப் படுத்த படுக்கையாக்கிவிட்டது. அவன் மனைவி ஏற்கனவே நோயாளி. பெண் மாதவி குழந்தைகளில் மூத்தவள். அவள் ஏதாவது செய்தால்தான்

வீட்டிலுள்ளவர்களின் வயிறு நிறையும். விவரம் தெரிந்த வயதுடைய மாதவி வீட்டுக் கொல்லையில் நேந்திர வாழை, மிளகு என்று ஏதோ பயிரிட்டிருந்தாள். அது ஒரு உப வருமானம்தான். தகப்பனாரே வேலையிழந்து வந்துவிட்ட போது, குடும்பத்தைத் தாங்கும் சக்தி முழுதும் அதற்கில்லை. ஒருநாள் இருநாள், கால் வயிறு நிறைந்தது. மூன்றாம் நாள் முழுப் பட்டினி. மாதவி என்ன செய்வதென்றே புரியாமல் திகைத்தாள்.

கூலிகளின் குடிசைகள் யானைகளைப் பிடிப்பதற்காகப் பரண் அமைந்திருந்த இடத்துக்கு அருகே ஒரு பெரிய மேட்டில் இருந்தது. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் யானை பிடிப்பதற்காகப் பொய்க் குழி வெட்டி, அதன்மேல் கரும்புக் கழிகள், பெரிய கொப்பரைத் தேங்காய் மூடிகள் - இவற்றையெல்லாம் பரப்புவதை மாதவி பார்த்திருந்தாள். 'அந்தத் தடித்த கரும்புக் கழிகளில் ஒன்றாவது சாப்பிடுவதற்குக் கிடைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?' என்ற ஏக்கம்கூட அவளுக்கு ஏற்பட்டது. குடிசை வாசலில் நின்றபடியே பரப்பியிருந்த கரும்பு, தேங்காய் மூடிகள் ஆகியவற்றையெல்லாம் வெகுநேரம் நாவில் நீர் ஊறப் பார்த்துக் கொண்டிருப்பது இரண்டொரு நாட்களாக அவள் வழக்கமாகிவிட்டது.

இரவு எட்டு மணிக்குமேல் பரணில் யானைக்காகக் காத்துக் கொண்டிருப்பவர்களும் உறங்கிவிடுவார்களென்பது அவளுக்கு நன்றாகத் தெரியும். அன்றிரவு எப்படியும் அந்தக் கழிகளில் ஓரிரு கழிகளையும், தேங்காய்களில் சிலவற்றையும் எடுத்து, ருசி பார்த்துவிடுவதென்று தீர்மானித்துவிட்டாள் அவள். தாய், தகப்பன் குழந்தைகள் யாவரும் தூங்குகிற வரை அவள் தூங்காமல் காத்திருந்தாள். பசிக்கும், ஆசைக்கும் தூக்கம் ஏது? எட்டரை மணி சுமாருக்கு நெஞ்சில் துணிவை வரவழைத்துக் கொண்டு அடிமேல் அடி வைத்து நடந்தாள். பொய்ப் பள்ளம் இருந்த இடத்துக்கு அவசரமாக வந்தாள். வயிற்றில் பசியும், நாவில் நீருமாக, நடந்து வந்த அவளின் மிகுந்த ஆத்திரத்தினாலும், இருளில் தடம் தெரியாததனாலும் ஒரு பெருந் துன்பத்தில் தானாகவே அகப்பட்டுக் கொண்டுவிட்டாள்.

'இவ்வளவு அழகான பெண்ணா வயிற்றின் பசிக்கும் நாவின் துறுதுறுப்புக்கும் அடிமைப்பட்டு இந்த வெட்கக் கேடான காரியத்தைச் செய்ய முன்வந்தாள்?' என்று நினைத்து வியந்தேன். வானுலகிலிருந்து வழிதவறி வந்த மோகினிபோல் இருட்டில் என்னெதிரே பரண்மேல் உட்கார்ந்திருந்தாள் மாதவி.

"மாதவி! வெறும் கரும்புக்கும் தேங்காய்க்கும் ஆசைப்பட்டா இதைச் செய்தாய்? என்ன அசட்டுத்தனம்? உயிருக்கு உலை வைக்கும் பிரதேசத்தில் இருட்டில் தனியே வரலாமா?" என்று கேட்டேன். என் கேள்விக்குப் பதில் இல்லை. விம்மி விம்மி அழும் ஒலி கேட்டது.

"அழாதே மாதவி! பரணில் நிறைய இடம் இருக்கிறது. அந்த மூலையில் நீ படுத்துக்கொள். விடிந்ததும் உன்னை வீட்டில் கொண்டுபோய் விடுகிறேன்" என்று கூறி அவளைத் தேற்றினேன். அவள் அப்போதே போக வேண்டும் என்றாள். நான் கண்டிப்பாக மறுத்துவிட்டேன். என் வார்த்தையை அவள் மீற முடியவில்லை. பரணின்

ஒரு மூலையில் அவளும் இன்னொரு மூலையில் நானுமாகப் படுத்துக் கொண்டோம். அந்த இரவு தூங்குவதுபோல் பாவித்து உண்மையில் தூங்க முடியாமலே இருவரையும் ஏமாற்றிவிட்டது. அது இரவின் குற்றமா? நெஞ்சின் குற்றம்தான்!

மறுநாள் பொழுது விடிந்ததும் மாதவியை அழைத்துக் கொண்டு கோவிந்த ஈழவனின் குடிசைக்குப் போனேன். குழியில் தடுமாறி விழுந்தபோது மாதவிக்கு ஏற்பட்டிருந்த காயங்களுக்கு மருந்து போடச் செய்தேன்.

வேலை கிடைக்கிறவரை செலவுக்கு வைத்துக்கொள்ளுமாறு கொஞ்சம் பணம் கொடுத்தேன். ஈழவனைத் தனியே அழைத்து, "கோவிந்தா! உன் மகளை நான் கலியாணம் செய்துகொள்ளப் போகிறேன், அதற்கு நீ சம்மதித்துத்தானாக வேண்டும்" என்றபோது அவனுக்கு நம்பிக்கையே இல்லை. நான் விளையாட்டுக்காகக் கேலி செய்கிறேனென்று நினைத்துக் கொண்டுவிட்டான். நான் மறுபடியும் வற்புறுத்திச் சொன்னபோதுதான் என்னை அவனால் நம்ப முடிந்தது. "அப்படியானால் அது என் பாக்கியம்தான்" என்று நாக்குழறி நடுங்கும் குரலில் கூறினான் அவன். என் மனம் குளிர்ந்தது.

அந்த அழகி இதழ் விளிம்பு அசைய ஒரு நாணப் புன்னகை புரிந்தாள். 'அடுத்த வாரம் வைக்கத்தப்பன் கோவிலில் எங்கள் திருமணம் நடக்கும். அதன்பின் இந்தப் புன்னகைக்கும், இதன் பிறப்பிடமான சௌந்தரிய உடலுக்கும் நான்தான் சொந்தக்காரன்' என்று மகிழ்ச்சியால் துள்ளியது என் மனம். "ஐயா! உங்களாலே மூழ்கிக் கொண்டிருந்த என் குடும்பப் படகு சுகமாகக் கரையேறுகிறது" என்று நன்றிப் பெருக்கோடு எனக்கு வந்தனம் செலுத்தினான் கோவிந்த ஈழவன்.

"ஈழவா! உன் மாதவிக்கு இருக்கிற அழகுக்கு அது மட்டுமா நடக்கும்? இதைவிடப் பெரிதாக நடந்தாலும் வியப்பில்லை" என்றேன். பிரம்மச்சாரிக் கட்டைக்கு அதிகம் செலவு ஏது? வாங்கின சம்பளத்தில் நானூறு, ஐநூறு மிச்சப்படுத்தி வைத்திருந்தேன். கோவிந்தனின் ஏழமையை உத்தேசித்துக் கல்யாணத்துக்கு முன் கொடுக்கும் பரிசப் பணம்போல் இருநூறு ரூபாயை அவனுக்குக் கொடுப்பது என்று தீர்மானித்திருந்தேன். அவன் அப்படி எதுவும் வேண்டுமென்று வாய் திறந்து கேட்கவில்லை. ஆனால் நானாகவே கொடுப்பதென்று முடிவு செய்துவிட்டேன். அதனால், "நாளை சாயங்காலம் கொஞ்சம் பணம் கொண்டு வந்து தருகிறேன். வாங்கி வைத்துக் கொள்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து புறப்பட்டேன்.

நான் தங்கியிருந்த அறை பாதுகாப்புக் குறைவான இடம். ஆகையால் சம்பளத்தில் மிச்சப்படுத்தியிருந்த பணத்தை எங்கள் கம்பெனி மானேஜரிடம் கொடுத்து வைத்திருந்தேன். பணம் வேண்டுமானால் இப்போது அவரிடம் போய்த்தான் கேட்க வேண்டும். ஆனால் சந்தர்ப்பம் அவரிடம் போக முடியாதபடி இருந்தது. பத்துப் பன்னிரண்டு நாட்களுக்கு முன் மலேரியாக் காய்ச்சலில் அவருடைய மனைவி காலமாகிவிட்டாள். ஐம்பத்தேழு வயதில் நாலைந்து குழந்தைகளோடு தனியாக விடப்பட்ட அவர் ஒரே கவலையில் தத்தளித்துக் கொண்டிருந்தார். வீட்டிலிருந்து

வெளிவருவதே இல்லை. துக்கமிகுதியினால் வேளா வேளைக்குச் சாப்பிடாமலும் தூங்காமலும் வீட்டிலே கிடக்கும் அவரிடம் இப்பொழுது போய்ப் பணம் கேட்பது பொருத்தமான காரியமில்லை என்று தயங்கினேன். கடைசியில் சக தொழிலாளி நாராயணன் நம்பியார் இருநூறு ரூபாய் கொடுத்தான். என் கவலையும் பிரச்னையும் தீர்ந்தன. மறுநாள் மாலை பணத்தோடு ஈழவனைப் பார்க்கச் சென்றேன்.

"இந்தா பணம்! ஈழவா... வருகிற ஞாயிற்றுக்கிழமை வைக்கத்தப்பன் கோவிலில் கல்யாணம். வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் நானே செய்துவிடுகிறேன். வாங்கிக்கொள் இதை..."

என் பணத்தை ஈழவன் வாங்கிக் கொள்ளவில்லை. அவன் முகத்தில் மலர்ச்சியைக் காணோம். நான் திகைத்தேன். "ஏன், பணம் வேண்டாமா உனக்கு?"

"அது இல்லை! வந்து..."

"இல்லாவிட்டால், பின் என்ன?"

"மத்தியானம் நம்ம மானேஜர் சார் இங்கே வந்திருந்தார்."

"மானேஜரா? அவர் எதற்காக இங்கே வர வேண்டும்? என்ன காரியமாக அவர் வந்திருந்தார்?"

"அவர் வந்திருந்தபோது இங்கே குடிசை வாசலில் மாதவி புடவை தோய்த்துக் கொண்டிருந்தது?"

"ஊம்ம்! அப்புறம்?"

"'இது யார்?' என்று கேட்டார். 'என் மூத்த பெண் மாதவி' என்றேன். கலியாணம் கட்டிக் கொடுத்திட்டியா, இல்லையா என்று கேட்டார்..."

"ஊம்ம்!"

"'இல்லை! இனிமேல்தான் கட்டிக் கொடுக்கணும்' என்றேன். அவர் கொஞ்ச நேரம் யோசித்துக் கொண்டிருந்தார். திடீரென்று, 'நானே கட்டிக்கிறேன், கொடுப்பியா?' என்றார். நான் அவருக்கு என்ன பதில் சொல்வதென்று தயங்கிக் கொண்டிருந்தபோது, 'கோவிந்தா! எனக்கு இவளை மிகவும் பிடித்திருக்கிறது. இந்தா! இந்தப் பணத்தை வைத்துக் கொள்' என்று ஐநூறு ரூபாயை என் கையில் திணித்துவிட்டார். நான் பதில் பேசவே முடியலீங்க. 'சும்மா தயங்காதே! கலியாணமானதும் நீதான் மரக்கடையில் மேஸ்திரி. வர வெள்ளிக்கிழமை குருவாயூரில் கல்யாணம்! எல்லா ஏற்பாடும் நான் செய்துவிடுகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்."

பூமி, வானம், திசை, திருக்கோணம் எல்லாம் இடிந்து என் தலைமேல் விழுந்து அமுக்குவது போலிருந்தது எனக்கு. ஈழவன் என் முன்தான் நின்றுகொண்டிருந்தான். அவனை நான் என்ன செய்ய முடியும்? அவன் என்னைவிட ஏழை. நானோ மானேஜரைவிட ஏழை! ஈழவனின் குடிசை வாசலில், நான் முதல்நாள்

கொடுத்துவிட்டுப் போயிருந்த கரும்பின் சுவைத்துத் துப்பிய சக்கைகள் சிதறிக் கிடந்தன. அவை என்னைப் பார்த்துச் சிரித்தனவா? அல்லது விதி உன் ஆசையையும் இப்படித்தான் கடித்துத் துப்பிவிட்டது என்று கூறாமல் கூறினவா?

பணமுள்ளவர்களுக்கு ஆசையையும், ஏழைகளுக்கு அழகையும் படைத்த பிரம்மாவின் முகத்தில் கரியைப் பூசத் துடித்தன என் கைகள். ஆனால் முடிகிற காரியமா அது? அன்று குழியிலிருந்து ஒருத்தியைக் காப்பாற்றினேன். இன்று நானே குழியில் விழுந்துவிட்டேன்.

என் அருமை உள்ளமே! இதுதான் அந்தக் கதை. எண்ணமும் நானும் ஓயாமல் எவளைப் பற்றி எண்ணுகிறோமோ, அவள் இப்போது ஒரு கம்பெனியின் மானேஜருக்கு மனைவி! ஆனால் நினைவளவில் பார்க்கும்போது அவள், அந்த மகாசௌந்தர்யவதி இன்னும், இப்போதும், இந்த விநாடி வரை எனது நினைவில் நிலையாக இடம் பெற்றுவிட்டாள். காலம் பதினைந்து வருஷ மலர்களை உதிர்த்துவிட்டது.

என் நினைவை மட்டும் யாராலும் உதிர்க்க முடியவில்லை. காலம் மட்டும் என்ன? காலத்தை ஆட்டி வைக்கும் மூலத்துக்கு மூலமான விதி நினைத்தாலும் என் நினைவை அழிக்க முடியாது! என் நினைவு? அது என்னுடன்தான் அழிய வேண்டும்!

**(கல்கி, 13.10.1957)**

## 23. நாமொன்று நினைக்க...!
## (உள்ளொன்று வைத்து)

"**சா**ர்! உங்களை இன்று டிஸ்சார்ஜ் செய்துவிட்டோம். நீங்கள் போகலாம். அழைத்துக் கொண்டு போக யாரும் வரவில்லை போலிருக்கிறதே?...."

அன்று காலையில் முதன் முதலாக வார்டினுள் நுழைந்ததும் இராமநாதனிடம் வந்து டாக்டர் இப்படிக் கூறினார். டாக்டருக்கு மரியாதை செய்கிற பாவனையில் எழுந்து நின்ற இராமநாதன், "பரவாயில்லை சார்! பஸ் ஸ்டாப் ஆஸ்பத்திரி வாசலில்தானே இருக்கிறது. நானாகவே பஸ் ஏறி வீட்டுக்குப் போய்விடுவேன்..." என்று அவருக்குப் பதில் கூறினான்.

"சரி! அப்படியே செய்யுங்கள். வீட்டுக்குப் போன பின்பும் நான்கு நாள் உடம்பை அலட்டிக் கொள்ளாமல் ஓய்வாகவே இருங்கள்..." என்று கூறிவிட்டு டாக்டர் போய்விட்டார்.

குடலில் 'அல்ஸர்' (ஒருவகைப் புண்) ஏற்பட்டு ஒரு மாத காலம் ஆஸ்பத்திரி வார்டில் நோயாளியாகப் படுத்துக்கிடந்த இராமநாதன் அன்றுதான் சூரிய வெளிச்சத்தைக் கண்ணால் பார்க்கப் போகிறான். ஆஸ்பத்திரி வார்டிலிருந்து வெளியேறி ஒளியும் ஆரவாரமும் நிறைந்த வெளியுலகத்து மண்ணை மிதிக்கப் போகிறான்.

"என்ன சார் வீட்டுக்குக் கிளம்பியாயிற்றா?" வாட்டின் நர்ஸ் இனிய குரலில் புன்முறுவலோடு அவனை விசாரித்தாள்.

"ஆமாம் நர்ஸ்! போய் வரட்டுமா? மறந்துவிடாதீர்கள்...." சம்பிரதாயமாக அவளிடம் விடைபெற்றுக்கொண்டான் அவன்.

"உங்கள் மனைவி வரவில்லையா, அழைத்துக் கொண்டு போவதற்கு?"

"அவளால் எங்கே வர முடியப்போகிறது நர்ஸ்? நானாகத்தான் பஸ் ஏறிப் போக வேண்டும்."

... உடனிருந்த மற்ற நோயாளிகளிடமும் விடைபெற்றுக் கொண்டு இராமநாதன் அங்கிருந்து வெளியேறினான். ஆஸ்பத்திரி வாயிலை ஒட்டினாற் போன்றிருந்த பஸ் நிறுத்தத்தில் வந்து நின்று கொண்டான். பஸ்ஸிற்குக் கூட்டம் அதிகமாக இருந்தது. காலை நேரம். நகரத்திற்கே பொதுவான பெரிய சர்க்கார் ஆஸ்பத்திரி வாசல். நோயாளிகளைப் பார்க்க வருகிறவர்களும், போகிறவர்களுமாகக் கூட்டத்திற்குக் கேட்கவா வேண்டும்?

நோயால் பலவீனமுற்றிருந்த இராமநாதனின் உடல் காலை வெயிலைத் தாங்கிக் கொண்டு நிற்கமுடியாமல் சிறிது தள்ளாடியது. கார்களின் ஹரான் ஓசை, ரிக்ஷாக்களின் குரல், தெரு நடமாட்டம், எல்லாவற்றையும் ஒரு மாதத்துக்குப் பின் மீண்டும் கேட்டபோது, திடீரென்று கலகலப்பு நிறைந்து வேகமாக இயங்கும் புதிய உலகம் ஒன்றிற்கு வந்துவிட்டாற்போல் தோன்றியது.

"என்ன சார் உடம்புக்குத் தேவலையா?" குரலைக் கேட்டு இராமநாதன் திரும்பிப் பார்த்தான். அவனுடைய ஆபீஸ் ஹெட்கிளார்க் ஒரு சைக்கிள் ரிக்ஷாவிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தார். கேட்டவருக்குப் பதில் சொல்லாமல் இருக்க முடியுமா?

"தேவலை சார்! இன்றைக்குத்தான் 'டிஸ்சார்ஜ்' ஆகி, வீட்டுக்குப் போகிறேன்..."

"நல்லது! உங்களை ஆஸ்பத்திரியில் வந்து பார்க்க வேண்டுமென்று எண்ணம். ஒருநாள்கூட வரமுடியவில்லை. தற்செயலாக இன்றைக்கு வேறொரு காரியமாக இங்கே வந்தேன். உங்களையும் சந்தித்துவிட்டேன்... வரட்டுமா?"

"சரி... போய் வாருங்கள்..." ஹெட்கிளார்க் ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தார். இராமநாதன் மனம் சிந்தனைகளால் குழம்பியது.

'நோயாகக் கிடக்கும்போதுதான் ஒரு மனிதனுக்கு அனுதாபமும் ஆறுதலும் தேவை. அப்போது அவற்றை அளிக்காமல் உடல் தேறி எழுந்து வந்தபின் அனுதாபப்படுவது போல் நடிப்பதும், 'உங்களைப் பார்க்க வரவேண்டுமென்று நினைத்தேன்; முடியவில்லை' என்று சொல்வதும் யாருக்கு வேண்டும்? சே! சே! ஒவ்வொரு மனிதனும் நெஞ்சில் ஒன்றை நினைக்கிறான். வாயில் ஒன்றைப் பேசுகிறான். நெஞ்சார அனுதாபம் இல்லாதவன்கூட அனுதாபப்படுவது போல நடிப்பதைத்தான் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை..."

பஸ் ஒவ்வொன்றாகப் போய்க் கொண்டே இருந்தது. உடலின் தளர்ச்சி காரணமாகக் கூட்டத்துடன் சேர்ந்து முண்டியடித்துக் கொண்டு ஏறத் தயங்கினான் இராமநாதன். கூட்டம் குறைந்ததும் ஒரு பஸ்ஸிலாவது வசதியாக இடம் கிடைக்குமென்பது அவன் நம்பிக்கை.

வீட்டைப் பற்றிய நினைவு வந்தது, அவனுக்கு. 'இன்றைக்கு 'டிஸ்சார்ஜ்' ஆவது தன் மனைவிக்குத் தெரியுமோ, தெரியாதோ? தெரிந்தால்தான் என்ன? அவளால் வந்து கூட்டிக் கொண்டு போக முடியாதே! வயிறும் பிள்ளையுமாக நிறை மாதத்தில் இருப்பவள் எப்படி வரமுடியும்?' என்று நினைத்து மனதைச் சமாதானப்படுத்திக் கொண்டான். ரொட்டி, பால், தக்காளி என்று ஆஸ்பத்திரி உணவுகளைச் சாப்பிட்ட உடல் தளர்ந்திருந்ததில் வியப்பில்லை. வயிற்றில் பசி, மனத்தில் வெளி உலகத்தின் போலி அனுதாபத்தைப் பற்றிய வெறுப்பு, உடலில் தளர்ச்சி... இவற்றோடு பஸ் நிறுத்தத்தில் கழிந்து கொண்டிருந்தது அந்த மாஜி நோயாளியின் நேரம்.

"ஹல்லோ மிஸ்டர் இராமநாதன்! சௌக்கியமா? பஸ்ஸிற்காக நின்று கொண்டிருக்கிறீர்களோ?..."

*இராமநாதன் மறுபடியும் திரும்பிப் பார்த்தான். அவனுடைய பழைய நண்பர் ஒருவர் நின்றார்.*

*"சௌக்கியந்தான்! வாருங்கள். எங்கே இப்படி? இந்தப் பக்கமாக..." இராமநாதன் அவரை வரவேற்றான்.*

*"சும்மாத்தான் இப்படி வந்தேன். அது சரி... உங்களுக்கு ஏதோ 'அல்ஸர்' வந்து ஒரு மாதமாக ஆஸ்பத்திரியில் படுத்த படுக்கையாக இருந்தீர்களாமே?"*

*"ஆமாம்! என்ன செய்வது? போதாத வேளை."*

*"அடாடா! பாருங்கள்... உங்களுக்கு உடம்பு சுகமில்லை என்ற விஷயமே எனக்கு இரண்டு நாட்களுக்கு முன்புதான் தெரியும் சார்... வந்து பார்க்க வேண்டும் என்றிருந்தேன், முடியவில்லை... இப்போது தேவலைதானே?"*

*"ஊம்! தேவலைதான்..." இராமநாதனுக்கு ஒரே எரிச்சலாக வந்தது. இந்த மாதிரி விசாரணையை இன்னும் நான்கு பேர் செய்தால் போன நோய் திரும்பி வந்துவிடும் போல் தோன்றியது. செத்துப் போனவனிடம் போய், 'நீங்கள் செத்துப் போய்விட்டீர்களாமே!...' என்று கேட்பதுபோல் பொருத்தமில்லாமல் இருந்தது இந்த விசாரணை.*

*"நான் வரட்டுமா? உடம்பைக் கவனமாகப் பார்த்துக்கொள்ளுங்கள் சார்!..." அவர் கிளம்பினார்.*

*இராமநாதன் பொம்மையைப் போல் தலையை அசைத்தான். அவன் மனத்தில் ஒரு குமுறல்!*

*'முப்பது நாட்களாக ஏங்கினேன், எதற்கு? யாராவது நண்பர்கள், தெரிந்தவர்கள், உடன் வேலை பார்ப்பவர்கள், பார்க்க வருவார்கள்; அனுதாபமாக நாலு வார்த்தைகள் சொல்லிவிட்டுப் போவார்கள்' என்று நாள் நாளாக நிமிஷத்திற்கு நிமிஷம், மணிக்கு மணி ஏங்கினேன். ஒரு பயல் எட்டிப் பார்க்கவில்லை. 'சார்! இருக்கிறீர்களா? செத்துவிட்டீர்களா?' என்று ஒரு வார்த்தை கேட்கவில்லை. பார்க்கப் போனால் மனிதனுக்கு மனிதன் என்ன இருக்கிறது? பரஸ்பர அனுதாபத்தை உண்மையாகச் செலுத்தும் உரிமைகூட இல்லாவிட்டால் நெஞ்சில் சுயநலம்; உதட்டில் எல்லோருக்காகவும் அனுதாபப்படுவதுபோல் விசாரணைகள்.*

*"சீ! மானங்கெட்ட பயல்கள். இவர்கள் விசாரிக்கவில்லையென்று எவன் அழுதான்? வரவேண்டுமென்று நினைத்தார்களாம். வரமுடியவில்லையாம்... பொய்! அவ்வளவும் பொய்! நினைத்திருந்தால் செய்வதற்கா அதிக நேரமாகி விடும்? பசித்தவனுக்குத்தானே சோறு வேண்டும்? நோயாயிருக்கும்போது தரவேண்டிய அனுதாபத்தை இப்போது காட்டி உயிரை வாங்குகிறார்களே!..." இராமநாதன் கீழே காறித் துப்பினான். அவன் மனப்புகைச்சல் இன்னும் அடங்கவில்லை. நோயாய் கிடந்து எழுந்தவனுக்கு இப்படி ஒரு மன உளைச்சல் பிறரை வெறுக்கும் அளவு இருப்பது இயற்கை. இராமநாதனும் அத்தகைய மனநிலையில்தான் இப்போது இருந்தான்.*

கால் கடுக்க நின்று கொண்டிருந்ததுதான் மிச்சம். 'பஸ்' இன்னும் கிடைக்கவில்லை. அவனுடைய கவலை 'பஸ்' கிடைக்கவில்லையே என்பதற்காக அல்ல. இந்த இடத்தில் நின்று கொண்டிருந்தால் இன்னும் யாராவது தெரிந்தவர்கள் வந்து அனுதாப விசாரணையைத் தொடங்கிவிடுவார்களோ என்று அஞ்சினான். பேசாமல் வீட்டுக்கு ஓடிச் சென்று கதவை அடைத்துக் கொண்டு யாரையும் பார்க்காமல் ஆத்திரம் தீர அழ வேண்டும் போலிருந்தது அவனுக்கு. 'அல்ஸருக்கு' சிகிச்சை செய்து கொள்ள வேண்டுமென்று ஒரு மாத லீவுக்கு விண்ணப்பம் அனுப்பியபோது லீவு சாங்ஷன் செய்ய மறுத்த அதே ஆபீஸ் ஹெட் கிளார்க் இப்போது அனுதாபம் விசாரிக்கிறான். இந்த அனுதாபத்துக்கு என்ன விவஸ்தை இருக்கிறது? செயலில் காட்ட முடியாமல் வாயளவில் காட்டும் அனுதாபம் யாருக்கு வேண்டும்?

'ஆஸ்பத்தியில் ஒரு மாதமாகப் படுக்கையில் கிடக்கிறேன். கையில் செலவுக்கு வறட்சி. ஒரு ஐம்பது ரூபாய் கைம்மாறாகக் கொடுத்து அப்புறம் வாங்கிக் கொள்' என்று எழுதிக் கொடுத்துவிட்ட கடிதத்துக்குப் பதில் சொல்லாமலே திருப்பி அனுப்பிய நண்பர், "உடம்பைக் கவனித்துக் கொள்ளும்படி..." இப்போது எனக்கு அறிவுரை கூறுகிறார்.

'ஐயோ! பாழாய்ப் போன பஸ் கிடைக்கமாட்டேனென்கிறதே. இவர்கள் முகத்திலெல்லாம் முழிக்காமல் வீட்டுக்கு எப்போது போய்ச்சேருவோம்?' என்று எண்ணி மனம் புழுங்கியவாறு நின்று கொண்டிருந்தான் இராமநாதன். கடந்து போன அந்த ஒரு மாதமாக அவன் கடுமையான நோயுடன் ஆஸ்பத்திரியின் வார்டே கதி என்று கிடந்திருக்கிறான். ஆனால் அதற்காக உலகத்தின் எந்த மூலையிலும் எவரும் உண்மையாக அனுதாபப்பட்டதாக அவனுக்குத் தெரியவில்லை. உலகம் முழுவதுமே இப்படித்தான் போலிருக்கிறது! அடுத்தவன் செத்துக் கொண்டிருந்தாலும் திரும்பிப் பாராமல் தன் வழியில் நடக்கத் தயங்காத மிருகக் குணம் ஒவ்வொரு மனிதனுக்குள்ளேயும் மறைந்திருக்கிறது. நாகரிகப் போர்வையால் வெளியே அனுதாபப்படுவதுபோல் அதை மறைத்துக் கொண்டு வாழ ஒவ்வொருவனும் நடிக்கிறான். உள்ளொன்றும் புறமொன்றுமாக வாழ்கிறான். நெஞ்சில் நஞ்சு குமுற நினைத்துக் கொண்டே வாயில் தேன் சுரக்கப் பேசுகிறான்.

"ஐயா! சௌக்கியங்களா? பஸ்ஸுக்கு நிற்கிறீங்க போலிருக்கு?" இராமநாதனின் ஆபீஸ் பியூன் முனியப்பன் கையில் ஒரு பிளாஸ்குடன் வந்தான். இன்னொரு கையில் பழக்கூடை இருந்தது.

"எல்லாம் சௌக்கியந்தான்! எங்கே இப்படி வந்தே?"

"மானேஜர் வீட்டு அம்மா உடம்புக்குச் சுகமில்லாமே இந்த ஆஸ்பத்திரியிலே இருக்காங்க. இந்தப் பிளாஸ்கையும் பழங்களையும் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வரச்சொல்லி ஐயா உத்தரவு..."

"அப்படியா? சரி. போய்க் கொடுத்துவிட்டு வா... பார்வை நேரம் முடிந்துவிடப் போகிறது..."

"ஒரு மாதமாச் சுகமில்லாமல் இருந்தீங்களாம். வந்து ஒரு வாட்டி பார்க்கக்கூட முடியவில்லை. என்னங்க செய்யிறது? அடிமைப் பய வேலை."

'சரிதான் போய்ச் சேர்! நீ வந்து பார்க்கவில்லை என்று ஏங்கி நான் செத்துப் போய்விடவில்லை...' என்று சொல்லத் துடித்தது இராமநாதன் நாக்கு. ஆனால் சொல்லவில்லை. முகத்தைச் சுளித்தான். உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"அப்போ நான் வருகிறேனுங்க..."

"ஆகா! பேஷாகப் போய்விட்டு வா! மானேஜர் வீட்டு அம்மாள் காத்துக்கொண்டிருப்பாள்..."

அவன் போய்விட்டான். 'பாவம்! இவனைச் சொல்லி என்ன குற்றம்? இவனை அதிகாரம் செய்கிறவர்கள் யாரோ அவர்கள்மேல் தான் இவன் அனுதாபத்தைக் காட்ட முடியும்.' இராமநாதன் தனக்குள் நினைத்துக் கொண்டான். ஏனோ தெரியவில்லை! இந்த உலகத்தின் சபிஸ்தமான சகல உயிர்களும் எதை நோக்கியோ, எதற்காகவோ, மனத்தை மறைத்து வேஷம் போடுவதாக எனக்குத் தோன்றியது. உணர்வுக்கு மட்டுமே புலனாகக்கூடிய ஓர் சலனம் அவனிடத்தில் ஏற்பட்டுவிட்டது.

'இந்த மாலையை ஒரு பெரிய தலைவருக்குப் போடுவதற்காகக் கொண்டு வந்தோம். அவர் இன்றைய ரயிலில் வரவில்லை. அதனால் உங்களுக்குப் போடுகிறோம்' - என்று சொல்லிக் கொண்டே மற்றோர் சிறிய தலைவருக்கு அந்த மாலையைப் போட்டால் அவர் மனத்தில் எவ்வளவு அருவருப்பு உண்டாகுமோ, அவ்வளவு அருவருப்பு இராமநாதன் மனத்தில் உண்டாயிற்று. அவன் சாவுக்கும் வாழ்வுக்குமிடையே நோய்ப் படுக்கையில் போராடிக் கொண்டிருந்தபோது ஒருவராவது அவனைப் பார்க்க வரவில்லை. இப்போது வந்து அனுதாபம் விசாரிக்கிறவர்களும் ஏதோ தற்செயலாக அவனை வழியில் சந்தித்துவிட்ட குற்றத்திற்காக 'கேட்டு' வைப்போமே - என்று கேட்டுவிட்டுப் போகிறார்கள். அவன் ஆண்மகன்! தன்மானமுள்ளவன். உள்ளத்திலிருந்து பிறக்கின்ற உண்மையான இரக்கம்தான் அவனுக்கு வேண்டும்.

'போனால் போகிறது' என்பதுபோல் கேட்கும் வாய் அனுதாபம் அவனுக்குத் தேவையில்லை. அந்த அனுதாபத்தைப் பொறுத்துக் கொள்வதைவிட முதுகில் நாலு விழுந்தால்கூடப் பொறுத்துக் கொள்ளலாம்.

"என்னா சாமீ? பஸ் இப்போதைக்குக் கிடைக்காது. நம்ம வண்டியிலே போகலாம். எட்டணா கொடு போதும்." ஒரு ரிக்‌ஷாக்காரன்.

"வேண்டாமப்பா!"

மேலும் பத்து நிமிஷம் கழிந்தது. "இந்தாருங்கள்! இதென்ன நோயாய்க் கிடந்த உடம்போடு வெயிலில் நின்று கொண்டு?..." இராமநாதன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். மேலும் திடுக்கிட்டான்.

அவன் மனைவி ராஜம் காபிக் கூஜாவுடன் மெல்ல அசைந்து நடந்து அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள்.

"இதென்ன அசட்டுக் காரியம் செய்தாய் ராஜம்? நிறை மாதத்தில் வயிறும் பிள்ளையுமாக இப்படி வரலாமா? எனக்கு வர வழியா தெரியாது?" அவன் அவளைக் கடிந்து கொண்டான்.

"எல்லாம் வரலாம்! வந்தால் ஒன்றும் குடி முழுகி விடாது. இந்தாருங்கள் இந்தக் காபியைக் குடியுங்கள் முதலில்..." அவன் வாங்கிக் குடித்தான்.

"பஸ்ஸில்தானே வந்தாய்?"

"இல்லை. பஸ்ஸே கிடைக்கவில்லை, நடந்துதான் வந்தேன்."

"அடி பாவி!" - அவன் இரைந்து கத்திவிட்டான்.

"உஷ்! இங்கே இரைச்சல் போடாதீர்கள். நான் வராவிட்டால் நீங்கள் பசியோடு பஸ்ஸிற்கு எவ்வளவு நாழி காக்க வேண்டியிருக்கும்?"

அவன், வயிற்றின் தாய்மை முகத்தில் பொலியும் தன் மனைவியின் முகத்தை நிமிர்ந்து பார்த்தான். "இந்த அன்பும் அனுதாபமும் பொய்யில்லை. உரிமை இருந்தால் உண்மையான அனுதாபம் பிறக்க முடியும்" - என்று தனக்குள் கூறிக் கொண்டான்.

**(சமூக ஊழியன், 15.11.1957)**

## 24. உறியடி

**வ**ன்னிய நத்தம் ஆதிநாராயணப் பெருமாள் கோவில் வாசலில் எள் போட்டால் எள் விழ இடமில்லை. அவ்வளவு கூட்டம். வாணவேடிக்கைகள் என்ன, பொய்க்கால் குதிரை விளையாட்டென்ன, சதிர்க் கச்சேரிகளென்ன, சங்கீதக் கச்சேரிகளென்ன - ஊர் திருவிழாப் பட்ட பாடு பட்டுக் கொண்டிருந்தது. ஆதி நாராயணப் பெருமாளின் உறியடித் திருவிழா என்றால் அக்கம் பக்கம் இருபது கல் சுற்றளவிலுள்ள எல்லாச் சிற்றூர்களுக்கும் பிரசித்தமான விஷயம் அது.

ஆவணி மாதம் கண்ணன் பிறப்புக்கு மறுநாள் ஆண்டுதோறும் உறியடித் திருநாள் நடப்பது வழக்கம். அன்று இரவு எட்டு எட்டரை மணிக்குப் பெருமாள் குதிரை வாகனத்தில் எழுந்தருளுவார். பெருமாள் கோயிலைச் சுற்றி பிரகார வழியே புறப்பட்டு உறியடிக்காகத் தயிர்ச்சட்டிகளைக் கட்டித் தொங்க விட்டிருக்கும் மரத்துக்கு எதிரே வந்ததும் உறியடி நடைபெறும். உறியடிக்காகவே பரம்பரையாகக் கோயில் மானியம் பெற்றுவரும் கரையாளர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் சுவாமியை வணங்கிவிட்டு அர்ச்சகர்கள் செய்யும் வழக்கமான மாலை, பரிவட்ட மரியாதைகளுக்குப் பின் உறிச் சட்டிகளை அடிக்க ஆரம்பிப்பார்கள். சட்டிகளை அடிப்பதற்காக எட்டு ஒன்பதடி உயரமுள்ள கருங்காலி மரக்கழிகளை வைத்துக் கொள்வதுண்டு.

உறியடி நிகழ்ச்சி பார்ப்பதற்கு மிகவும் ரஸமான காட்சியாக விளங்கும். ஒன்பது சிறு மண் கலயங்களில் பசுவின் தயிரை நிரப்பி ஒரு மூங்கில் சட்டத்தில் வரிசையாகக் கட்டித் தரையில் ஊன்றிய இரண்டு மரங்களுக்கு நடுவே தொங்க விட்டு விடுவார்கள். உறிக் கலயங்கள் தொங்கும் சட்டத்தின் நடுவே ஒரு கயிற்றைக் கட்டி அதன் நுனியைப் பிடித்துக் கொண்டு பின்புறம் ஒருவன் நிற்பான். அருகே, மஞ்சளும் சுண்ணாம்பும் கரைத்த தண்ணீரைப் பீச்சாங்குழலில் அடைத்துக் கொண்டு மற்றோர் ஆள் நிற்பான். உறியை அடிக்கும் கரையாளன் பத்து கெஜ தூரத்துக்கு முன்னாலிருந்தே ஓடிவந்து தரையிலிருந்து எழும்பிக் குதித்துக் கம்பை ஓங்கி அடிப்பதற்கு முயல்வான். சரியாக அதே நேரத்தில் பின்புறம் கயிற்றைப் பிடித்துக் கொண்டிருப்பவன் உறிச் சட்டத்தை விறுவிறுவென்று மேலே தூக்கிவிடுவான். பீச்சாங்குழல்காரன் சுண்ணாம்பு நீரைச் 'சர்ர்'ரென்று கரையாளனின் முகத்தைக் குறி வைத்துப் பீய்ச்சுவான். கயிறு இழுக்கப்பட்டதால், உறிச் சட்டம் ஓங்கிய கம்பின் குறியை மீறிக் கொண்டு மேலே உயர்ந்துவிடும். அதே சமயம் பாய்ச்சப்பட்ட சுண்ணாம்பு நீர் முகத்திலும் கண்களிலும் வழிந்து கண் பார்வையை மறைக்கும். கரையாளன் ஏமாறுவான். அப்போதெல்லாம் கூட்டத்தில் அலையலையாகச் சிரிப்பொலிகள் கிளம்பும். இவ்வளவு இடையூறு களையும் பொறுத்துக் கொண்டு எந்தக் கரையாளன் சீக்கிரமாக ஒன்பது மண்

கலயங்களையும் அடித்துக் கீழே நொறுக்கித் தள்ளுகிறானோ, அவனைக் கூட்டம் முழுவதும் கொண்டாடிப் போற்றும். இதுதான் உறியடித் திருவிழா என்பது.

கரையாளன் கம்பை ஓங்கி வேகமாக ஓடிவரும்போது திடீரென்று உறி எட்டாத உயரம் போவதும், அவன் அடிக்க முடியாமல் சுண்ணாம்பு நீர் கண்ணைக் கரிக்கத் திணறிக்கொண்டிருக்கும்போது, உறி எட்டுகின்ற உயரத்திற்கு வருவதும், வேடிக்கையாக இருக்கும்.

'நாயைக் கண்டால் கல்லைக் காணோம், கல்லைக் கண்டால் நாயைக் காணோம்' என்று பழமொழி சொல்வார்களே - அந்த மாதிரி எட்டும்போது அடிக்க முடிவதில்லை. அடிக்க முடிகிறபோது எட்டுவதில்லை. இதில் ஒரு பெரிய வாழ்க்கைத் தத்துவமே பொதிந்து கிடப்பதுபோல் எனக்குத் தோன்றியது. வருஷா வருஷம் உறியடித் திருவிழாவின்போது அந்தத் தத்துவம் என் சிந்தனையில் வியாபித்துவிடும்.

'வாழ்வில் எட்டுவது போலத் தோன்றும் எதுவும் உண்மையில் எட்டுவது இல்லை. எட்டாதது போலத் தோன்றுவது எதுவும் உண்மையில் எட்டாதது இல்லை. இப்படி நடந்துவிடும் என்று உறுதியாக நினைத்துக்கொண்டிருப்பது அப்படி நடக்காமல் போய்விடுகிறது. இப்படி நடக்காது என்று கணக்கிட்டு முடிவு கட்டிவைத்திருப்பது அப்படியே நடந்துவிடுகிறது!'

இந்த உண்மையை உலகத்திற்கு விளக்குவதற்காகத்தான் ஆதிநாராயணப் பெருமாள் வருஷந் தவறாமல் உறியடித் திருநாள் கொண்டாடுகிறாரோ, என்னவோ? அன்றும் உறியடியாகையினால் மனத்தில் மேற்கண்ட சிந்தனைகள் நிழலாட வேறு பொழுது போகாமல் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். ஆறாவது ஆவர்த்தனமான வெற்றிலைப் பெட்டியைத் திறந்து வெற்றிலைபோடத் தொடங்கிய சமயத்தில் திருவடியாப்பிள்ளை வந்து சேர்ந்தார்.

"வாருங்கள், வாருங்கள்! உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்... உறியடி அமர்க்களப்படுகிறதே!..."

"ஆமாம்! அமர்க்களத்துக்குக் கேட்பானேன்? அதுவும் இந்த வருஷம் பீஷ்மக் கரையாளன் உறியடி. வெளுத்துக் கட்டிவிடுவான். பயல் குறி வைப்பதில் எம்டன்!"

"என்ன, பீஷ்மக்கரையாளனா? கேள்விப்படாத பெயராயிருக்கிறதே? அப்படிக் கூடவா அந்தச் சாதியில் பெயர் வைக்கிறார்கள்?"

"அது அவன் சொந்தப் பெயர் இல்லை. சேது ராமலிங்கக் கரையாளன் என்பது இயற் பெயர். இப்போது அவனுக்கு ஐம்பத்திரண்டு வயது. இன்னும் கலியாணமாகவில்லை. ஆள் ஒற்றைக் கட்டைதான். பிடிவாதமாக ஏகாங்கியாயிருக்கிறான். அதனால்தான் 'பீஷ்மக் கரையாளன்' என்று அவனுக்குப் பேர் ஏற்பட்டுவிட்டது."

"என்ன காரணம்? அவன் இத்தனை வயது வரை கலியாணம் செய்து கொள்ளாதது ஏன்? உங்களுக்குத் தெரிந்திருக்குமே...?"

"எல்லாம் இந்த உறியடியாலே வந்த வினைதான். அன்றைக்குச் செய்த சத்தியம்தான் ஆள் இதுவரை வேறு பெண் முகத்தைக்கூட ஏறிட்டுப் பார்த்ததில்லை!" - திருவடியாபிள்ளை பெருமூச்சுவிட்டார்.

மழைக்காற்று அடித்தால் அருகே எங்கோ மழை பெய்து கொண்டிருக்கிறதென்று அனுமானிக்க முடிவதுபோல் திருவடியாபிள்ளை ஒரு விஷயத்தைப் பெருமூச்சு விட்டுக் கொண்டே கூறினார் என்றால் அதற்குள் ஒரு கதை பதுங்கிக் கிடக்கிறதென்று நான் கண்டு கொள்வேன்.

"விவரமாக எல்லாவற்றையும் சொல்லுங்கள்?" நான் பிள்ளையவர்களைத் தூண்டித் துருவிக் கேட்டேன். இடது கன்னத்தைப் பந்துபோல உப்பச் செய்திருந்த புகையிலைச் சாற்றைக் கீழே இறங்கித் துப்பிவிட்டுத் திரும்பவும் பிள்ளை சொல்லத் தொடங்கினார்.

அந்தக் கதை :

சேது ராமலிங்கத்திற்கு அப்பொழுது இருபத்தைந்து வயது. வாலிபப் பருவத்திற்கேற்றாற் போல் 'நிகுநிகு' வென்று வளர்ந்திருந்தான். கருகருவென்று வளர்ந்திருந்த கட்டுக் குடுமியை அள்ளி முடிந்து கொண்டு சிவந்த நெற்றியில் கால் துட்டு அகலத்துக்கு விளங்கும் குங்குமப் பொட்டோடு தெருவில் இறங்கி நடந்து வந்தானானால் காமன் பண்டிகையில் மன்மத வேடம் போடும் இளம்பருவத்து ராஜபார்ட்காரனைப் போல இருக்கும். பூசணிக் கொடியில் நுனிப்பகுதி சுருண்டு மினுமினுப்பதுபோல் காதோரங்களில் குடுமியிலிருந்து பிரிந்த கேசச் சுருள் வளைந்து வளைந்து காட்சியளிப்பது, அவனுடைய முகத்தின் அழகிற்குத் தனிக் களையைக் கொடுக்கும்.

அவன் நிறம் குங்குமச் சிவப்பு. அவனுடைய அழகிய புஜங்களைப் பற்றி ஏதாவது சொல்ல வேண்டுமானால் 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்று கம்பர் சொல்லுவதைத்தான் சொல்ல வேண்டும். அவ்வளவு கவர்ச்சிகரமான புஜங்கள் அவை. அளந்து அளந்து படைத்ததுபோல் வனப்பு நிறைந்த அங்கங்களைக் கொண்ட கட்டுமஸ்தான சரீரம் அவனுக்கு. சதா சிரிப்பு கொஞ்சும் அவனுடைய மலர்முகத்தை இன்று முழுவதும் பார்த்துக் கொண்டிருக்கலாம். தாமரை இதழ்களைப்போல அகன்ற பிரகாசமான அவன் விழிகளில் தனிப்பட்ட ஒரு கவர்ச்சி தளும்பும்.

இப்படிப்பட்ட அழகான பிள்ளை தன்னுடைய கலியாண விஷயமாகத் தகப்பனுடன் முரட்டுத்தனமாகச் சண்டை போட்டுக் கொண்டான் என்று சொன்னால் யாராவது நம்புவார்களா?

சேதுராமலிங்கம் சிறுவயதிலேயே தாயை இழந்தவன். அவனுடைய தகப்பனார் சண்முகவடிவேலுக் கரையாளர் தான் அவனை வளர்த்துப் பெரியவனாக்கி விட்டிருந்தார். தகப்பனாரிடம் அளவற்ற மரியாதையும் விசுவாசமும் உள்ளவனா யிருந்தும் கலியாண விஷயமாக அவர் பார்த்திருந்த பெண் அவனுக்குப் பிடிக்கவில்லை. அவனுக்கு எந்தப் பெண்ணை மிகவும் பிடித்திருந்ததோ அந்தப்

பெண்ணின் குடும்பத்திற்கும் சண்முகவடிவேலுக் கரையாளர் குடும்பத்திற்கும் ஜன்மப்பகை. இதனால் இருவருக்கும் பெருத்த மனஸ்தாபம் ஏற்பட்டது.

"அடே சேது, நீ என்னிடம் முரண்டு பிடிக்கிறது நியாயமில்லே. உன்னைப் பெற்ற அப்பனை உனக்கு மதிக்கத் தெரியணும். உனக்குப் பார்த்திருக்கிற பொண்ணு கருப்பு,. அழகில்லை என்கிறதற்காக நீ மறுக்கிறது சரியாகாது. வருகிற ஆவணி மாதம் உறியடித் திருநாளைக்கு மறுநாள் முகூர்த்தம்கூடப் பார்த்துட்டு வந்தாச்சு!"

"நல்லாப் பாருங்க! எனக்கென்ன? தாலி கட்டப்போறவன் நானா இருந்தாத்தானே?"

"அது முறைப்பொண்ணு. கண்டிப்பாக நீதான் தாலி கட்டணும். உனக்கு என்றே பிறந்த பொண்ணை அல்லாட விடக்கூடாது."

"சூர்ப்பனகை மாதிரி ஒரு அவலட்சணத்தைக் கொண்டாந்து என் தலையிலே கட்டணும்னு சதி செய்றீங்க நீங்க... எனக்கும் வீம்பு, முரண்டு எல்லாம் தெரியும்..."

"சீ! நிதானிச்சுப் பேசுடா கழுதை. உன்னை அந்தப் பொண்ணு கழுத்திலே தாலிகட்ட வைக்கலேன்னா நான் சண்முகவடிவேலுக் கரையாளன் இல்லை. பார்த்துக்கிட்டே இரு..."

சேது ராமலிங்கம் பதில் சொல்லவில்லை. தகப்பனாரோடு மேலும் எதிர்த்துப் பேசிக் கொண்டிருந்தால், அவருடைய கோபம் எல்லை மீறிக் கையிலகப்பட்டதைத் தூக்கிவிடுவார் என்பது அவனுக்குத் தெரியும். பேசாமல் அவர் முன்னால் நிற்காமல், வேறெங்கோ சென்றுவிட்டான். ஆனால் தான் அவ்வாறு வெளியே சென்றதைத் தன்னுடைய சம்மதமாக அவர் எடுத்துக் கொள்வார் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

பையனை எப்படியாவது வற்புறுத்தியோ, அரட்டி மிரட்டியோ தாம் பார்த்திருந்த சம்பந்தத்தை முடித்துவிடுவது என்று பிடிவாதமாக இருந்தார் சண்முக வடிவேலுக் கரையாளர். கலியாணத்தை நிச்சயம் செய்து உறவின் முறையார்களைக் கூட்டி வெற்றிலை பாக்குக்கூடக் கொடுத்துவிட்டார். "என்னய்யா பெரிய கரையாளரே! உம்ம பையன் இந்தப் பெண் வேண்டாம்னு முரண்டு செய்யறானாம், நீர் என்னடா வென்றால் உம் பாட்டுக்கு வெற்றிலை பாக்கு மாற்றி முகூர்த்த நாளும் பார்த்துவிட்டீரே?" என்று சிலர் தம்முடைய சந்தேகத்தை அவரிடம் கேட்டனர்.

"விடலைப் பயல்தானே? இப்ப அப்படித்தான் சொல்லிக்கிட்டிருப்பான். நான் சரிப்படுத்தி விடுவேன். எப்படியும் நம்ம ஆதிநாராயணப் பெருமாள் உறியடித் திருநாளுக்கு மறுநாள் இந்தக் கலியாணம் நடந்தாகணும்..." என்றார் அவர்.

"என்னமோய்யா! உம்ம மகன் இணங்கமாட்டான் என்று ஊரெல்லாம் ஒரே 'கசமுசலா' இருக்கு. பார்த்துச் செய்யும். சின்னத்தனமாச் சமயத்திலே காலை வாரி விட்டுடப் போறான்" என்று எச்சரித்துவிட்டுப் போனார்கள் அவர்கள்.

எப்படியானால் என்ன? பெரிய கரையாளருக்கும் அவர் மகன் சேது ராமலிங்கத்திற்கும் கலியாண விஷயமாக மனஸ்தாபம் ஏற்பட்டுப் பெரிய வாய்ச் சத்தம்

வரை முற்றிவிட்டதென்று ஊராருக்குப் பராபரியாகத் தெரிந்திருந்தது. பெரிய கரையாளர் பார்த்திருந்த பெண் 'அழகில்லை' என்பதற்காகச் சேதுராமலிங்கம் அந்தப் பெண்ணை வெறுத்துக் கொண்டிருக்கும் விஷயமும் பரவியிருந்தது.

சேதுராமலிங்கத்தின் ஆசையை எல்லாம் கொள்ளை கொண்டிருந்தவள் நாராயணக் கரையாளர் மகள் பூங்காவனம். ஆனால் நாராயணக் கரையாளருக்கும் சண்முக வடிவேலுக் கரையாளருக்கும் குடும்பப் பகை முற்றியிருந்தது. பூங்காவனமும் சேது ராமலிங்கமும் தனிமையில் குளக்கரை மாந்தோப்பில் அடிக்கடி சந்தித்துக் கொண்டிருக்கும் விவரம்கூட இரண்டு கரையாளர்களுக்கும் தெரியாது. தெரிந்திருந்தால் நாராயணக் கரையாளர் தம் மகளை மென்னியைத் திருகிப் போடக்கூடத் தயங்கமாட்டார். அதேபோல் பகையாளி மகளோடு உறவாடும் குற்றத்துக்காகச் சண்முக வடிவேலுக் கரையாளரும் தம் மகனை அடித்து நொறுக்கியிருப்பார். ஆனால் இந்தப் பரம்பரை வைரிகளுக்கு கொஞ்சமும் தெரியாமல் இவர்களுடைய காதல் வளர்ந்து அருகே நெருங்கிப் பழக ஆரம்பித்திருந்தனர். அன்பு செய்கின்ற விந்தையை மனிதன் எப்படி அளவிடமுடியும்? பூங்காவனமும், சேதுராமலிங்கமும் பிரிக்க முடியாதபடி மனமொருமித்து நெருங்கிப் பழகிவிட்டார்கள். அதனால்தான் தகப்பனார் பார்த்த முறைப்பெண்ணை மணந்து கொள்ள முடியாதென்று மறுத்து முரண்டு பிடித்துக்கொண்டிருந்தான் சேதுராமலிங்கம். இதைப் புரிந்து கொள்ளாமல் தாம் பார்த்து வைத்திருக்கும் பெண் கறுப்பாக இருப்பதனால்தான் அவன் மறுக்கிறான் என்றும் கடைசியில் எப்படியும் அவனைச் சரிக்கட்டி விடலாமென்றும் பகற் கனவு கண்டவாறே கலியாண ஏற்பாடுகளை மும்முரமாகச் செய்து கொண்டிருந்தார் சண்முக வடிவேலுக் கரையாளர்.

ஆனால் சேது ராமலிங்கமோ வேறு விதமாகத் திட்டம் போட்டிருந்தான். கடைசி வரை தகப்பனாருடைய ஏற்பாட்டிற்கு சம்மதிப்பவன் போல் பேசாமல் இருக்க வேண்டியது. முகூர்த்தத்துக்கு முதல்நாள் உறியடி விழா முடிந்ததும் இரவோடு இரவாகப் பூங்காவனத்தையும் அழைத்துக் கொண்டு எங்காவது அக்கரைச் சீமைக்கு ஓடி விடுவதென்று தீர்மானித்திருந்தான். அவனைத் தன் உயிரினுமினியவனாகக் கருதியிருந்த பூங்காவனமும் அதற்கு இணங்கியிருந்தாள். நாட்கள் கழிந்து கொண்டிருந்தன.

வன்னிய நத்தத்தில் நாளை விடிந்தால் உறியடித் திருநாள். அதற்கு மறுநாள்தான் தம் மகனுக்கும் வளர்த்து வைத்திருந்த பெண்ணுக்கும் கலியாணம். ஆகையால் அதில் முழு நேரத்தையும் ஈடுபடுத்தியிருந்தார் பெரிய கரையாளர்.

போதாத குறைக்கு அந்த வருடம் உறியடி முறையும் அவருடையதாக இருந்தது. ஆனால் அதற்காக அவர் ஒன்றும் கஷ்டப்படவில்லை.

"இந்தா சேது! இந்த வருஷ உறியடி முறை நமக்குத்தான். நாளைக்குக் கலியாண காரியமா எனக்கு அங்கே இங்கே நாலு இடத்துக்கு அலையணும். நீயே உறியை

அடிச்சுட்டுக் கோவில் மரியாதையை வாங்கிட்டு வந்துடு. கலியாணத்துக்கு முதல்நாள் பெருமாளுக்குப் பணி செய்து ஆசி பெற்றது போலவும் ஆகும்" என்று மகனிடம் கூறியிருந்தார்.

"சரி அப்பா! நானே உறியடிக்குப் போய்விட்டு வருகிறேன்" என்று அவனும் சம்மதித்திருந்தான். 'கடைசி நாள், ஊரை விட்டே கண்காணாத சீமைக்கு ஓடப் போகின்றோம். போவதற்கு முன் பெற்ற தகப்பனை ஏமாற்றினாலும் பெருமாளையாவது திருப்திப்படுத்திவிட்டுப் போவோம்' என்றுதான் அவன் அதற்குச் சம்மதித்திருந்தான். உறியடித்து முடிந்ததும் நேரே குளக்கரை மாந்தோப்புக்குப் போனால், அங்கே பூங்காவனம் ஓடுவதற்குத் தயாராகக் காத்திருப்பாள்;அவளோடு இரவோடு இரவாகவே போய்விட்டால் நாளைக் காலை தூத்துக்குடி சென்று கொழும்புக்குக் கப்பலேறிவிடலாம்.

எல்லாவற்றையும் ஒழுங்காகத் திட்டமாக நடைபெறத்தக்க விதத்தில்தான் நினைத்திருந்தான் அவன். 'எண்ணங்களை எண்ணுவதுதான் மனிதர்களால் ஆகமுடிவது. எண்ணங்கள் நிறைவேறுவது தெய்வசித்தத்தால் ஆவது' என்று அவன் கண்டானா என்ன?

உறியடி விழாவின் கோலாகலம் ஊரில் உற்சாகமாகப் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. அந்தி நேரம் ஆயிற்று. சண்முக வடிவேலுக் கரையாளர் மகனை அழைத்து உறியடிக் கழியைக் கையில் கொடுத்துக் கோவிலுக்கு அனுப்பினார்.

"ஏ அப்பா! விடிஞ்சாக் கலியாணம். உறியடியை முடிச்சிட்டுப் பெருமாளை நல்லபடியா வேண்டிக்கிட்டு வா. பாய்ஞ்சு பாய்ஞ்சு அடிக்கிறேன் என்று வீணா உடம்பை அலட்டிக்கிடாதே. நான் போய் மேளகாரனுக்குச் சொல்லிவிட்டு ரங்காநாத உடையாரு கடையிலே நாலு கட்டு வெத்திலை எடுத்தாரணும். அப்புறம் பந்தலுக்கு வாழைமரம் தோரணம் கட்டணும்" என்று அவனுக்கு விடைகொடுக்கிற சாக்கில் கலியாண ஏற்பாடுகளின் பெருமையை அளந்தார்.

'செய்யுங்கள்; செய்யுங்கள்! நாளைக் காலைவரை என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். நாளை இந்நேரம் உங்கள் மகனும் நாராயணக் கரையாளர் மகளும் கொழும்புக் கப்பலிலே போய்க் கொண்டிருப்பார்கள்' என்று மனத்தில் கறுவிக் கொண்டே கிளம்பினான் அவன்.

"அடே அப்பா சேது! வாசல்லே நல்ல சகுனம் ஆகுதான்னு பார்த்துக்கிட்டுப் புறப்படு!"

"ஊம்! ஊம்! எல்லாம் நல்ல சகுனந்தான் ஆகுது. நான் வரேன்!" வேண்டாவெறுப்பாகக் கூறிவிட்டுச் சென்றான் சேதுராமலிங்கம். கிழவர் உட்புறம் சென்றார். இன்று போலவே அன்றும் கோவில் வாசலில் உறியடியைக் காண்பதற்காக ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தார்கள். மரங்களுக்கு இடையே மூங்கில் சட்டத்தில் உறிக் கலயங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. உறிக் கலயங்களுக்குக் கீழே ஒருபுறம் பெண்களும் மற்றொருபுறம் ஆண்களுமாகப் பார்ப்பதற்குக் காத்திருந்தார்கள்.

ஆதிநாராயணப் பெருமாள் குதிரை வாகனத்தில் எழுந்தருளினார். வீதிப் புறப்பாடு முடிந்தபின் உறிமரத்துக்கு முன்னால் குதிரை வாகனம் வந்து நின்றது. சேதுராமலிங்கம் கம்பும் கையுமாகப் பயபக்தியுடன் வாகனத்தடியில் போய் அடக்க ஒடுக்கமாக நின்றான். அர்ச்சகர் அவன் கழுத்தில் மாலை போட்டு விட்டுத் தலையில் பரிவட்டம் கட்டினார். அவன் மரியாதைகளை ஏற்றுக் கொண்டு சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து பெருமாளை வணங்கினான். பின் அடிக்கும் கழியை வலது கையில் மாற்றிப் பிடித்துக் கொண்டு உறிமரத்தை நெருங்கினான். கூட்டம் இருபுறமும் ஒதுங்கி அவனுக்கு வழிவிட்டது. உறியடிக்கப் போகிறான் என்ற ஆவலால் கூட்டத்தில் சப்தம் குறைந்து அமைதி நிலவியது.

மஞ்சளையும் சுண்ணாம்பையும் கரைத்துப் பீச்சாங் குழாயில் அடைத்துக் கொண்டு ஒருவன் வந்து நின்றான். இன்னோர் பக்கம் உறிச் சட்டத்தை இழுத்து உயரே தூக்கும் கயிற்று நுனியைப் பிடித்துக் கொண்டு இன்னொருவன் நின்றான். பெண்கள் கூட்டத்தில் முண்டியடித்துக்கொண்டு முன்புறம் நின்றவளைப் பார்த்தபோது சேதுராமலிங்கம் முகத்தைச் சுளித்தான்.

மறுநாள் எந்த 'அவலட்சணத்திற்கு' அவன் மாலையிட வேண்டுமென்று ஏற்பாடாகியிருந்ததோ அந்த 'அவலட்சணம்' கையில் ஒரு சிறுமியைப் பிடித்துக் கொண்டு முன்புறம் நின்று கொண்டிருந்தது. தன் கணவனாக வரப் போகிறவனின் தீரத்தைக் கண்டு மகிழ்வதற்காக வெட்கத்தையும் மறந்து வந்திருந்தாள் அவள். தீவட்டிகளின் வெளிச்சத்தில் அவளுடைய அட்டைக்கரி நிறத்தைப் பார்த்தபோது அருவருப்பாக இருந்தது. அந்த வெறுப்பில்தான் முகத்தைச் சுளித்தான் அவன்.

'உன் லட்சணத்துக்கு இதைப் பார்க்க வேறு வந்திட்டியா பெண்ணே?' என்று எண்ணிக் கொண்டே உறியை எப்படிப் பாய்ந்து அடிக்கலாமென்று குறி பார்த்தான் சேதுராமலிங்கம்.

கம்பை இரண்டு கைகளிலுமாகத் தாங்கிக் கொண்டு துள்ளி ஓடிவந்து மேலெழும்பி அடித்தான். முதல் தடவை அடிபடவில்லை. கயிற்றுக்காரன் உறிச்சட்டத்தை மேலே இழுத்துவிட்டான். பீச்சாங்குழல்காரன் முகம் நிறையச் சுண்ணாம்புத் தண்ணீரைப் பீச்சி விட்டான். சுண்ணாம்பு கண்ணைக் கரித்தது. எரிச்சலாக இருந்தது. கண்களைத் துடைத்துக் கொண்டான். கூட்டம் உறிக்காரன் அடிக்க முடியாமல் ஏமாந்துவிட்ட காட்சியை ரஸித்துக் குலுங்கக் குலுங்கச் சிரித்துக்கொண்டிருந்தது.

இரண்டாம் முறையாக அவன் குறி வைத்துப் பாய்ந்து கம்பை ஓங்கிக் கொண்டு ஓடிவந்தான். இந்தத் தடவை சேதுராமலிங்கத்திற்குத்தான் வெற்றி. கயிற்றைப் பிடித்தவனும், பீச்சாங்குழல்காரனும் ஏமாந்துவிட்டனர். ஒன்பது கலயங்களில் மூன்று கலயங்களை அடித்துக் கீழே தள்ளிவிட்டான் சேதுராமலிங்கம். கூட்டத்தில் 'சபாஷ்', 'பிரமாதம்' 'அப்படியடிடா ஆம்பிளைச் சிங்கம்' என்று பல்வேறு தினுசான பாராட்டுக் குரல்கள் எழுந்தன.

மூன்றாம் தடவை அவன் அடிக்க ஓடிவரும்போதுதான் அந்த விபரீதமான சம்பவம் நடந்துவிட்டது. 'சற்றுமுன் அவனுக்கு ஏமாந்து போய்விட்டோமே' என்ற ரோஷத்தினால் கயிறு, பீச்சாங்குழலை வைத்துக் கொண்டிருந்த ஆட்கள் உஷாராக இருந்தனர். அவன் தூரத்திலிருந்து ஓங்கிய கம்புடன் துள்ளிப் பாய்ந்து ஓடிவந்தான்.

அப்போது அவனுக்காக அவன் தகப்பன் பார்த்து வைத்திருந்த அந்தப் பெண்ணின் கைப்பிடியிலிருந்த சிறுமி மெல்ல நடந்து உறிக்கு நேரே குறுக்கே ஓடி நின்றுவிட்டாள். சேது ராமலிங்கம் புலிப் பாய்ச்சலில் கனவேகமாக ஓடி வந்து கொண்டிருந்தான். குழந்தை அவன் வழியின் குறுக்கே நின்றது.

"ஐயோ! குழந்தை... நடுவிலே ஓடிப்போய் நிக்கிதே!" அந்தப் பெண் - அவனுடைய எதிர்கால மனைவி - அலறிக் கொண்டே குழந்தையை எடுப்பதற்காகக் குறுக்கே பாய்ந்தாள். கூட்டத்தில் பலவிதமான குரல்களும், பரபரப்பும், குழப்பமும் உண்டாயிற்று. அப்போது அந்தப் பாழாய்ப் போன பீச்சாங்குழற்காரன் சும்மா இருந்து தொலைக்கக்கூடாதா?... ஓடி வந்து கொண்டிருந்த சேதுராமலிங்கத்தின் கண்களில் சுண்ணாம்புநீரைப் பீச்சிவிட்டான். கண் பார்வை மறையவே எதிரே இருப்பது தெரியாமல் உறியைத்தான் அடிக்கிறோம் என்று நினைத்துக்கொண்டு பலங்கொண்ட மட்டும் கம்பை ஓங்கி ஒரு போடு போட்டான் அவன்.

அடுத்த விநாடி "ஐயோ!" என்று வீரிட்டு அலறிக் கொண்டு கீழே சாய்ந்தாள் அந்தப் பெண். உறியின் மேலே விழ வேண்டிய அடி குழந்தையின் உயிரைக் காப்பாற்ற ஓடிவந்த பெண்ணின் மண்டையில் விழுந்துவிட்டது. குழந்தை எப்படியோ தப்பிவிட்டது. அதற்கு ஒரு விபத்தும் இல்லை. ஆனால் அந்தப் பெண்...?

அலறலைக் கேட்டுச் சுண்ணாம்பு நீரின் எரிச்சலையும் பொறுத்துக் கொண்டு திடுக்கிட்டுப் போய்க் கண்களைத் திறந்தான் அவன். அவன் மணக்க இருந்த 'அவலட்சணம்' மண்டை நட்ட நடுவில் இரண்டாகப் பிளந்து இரத்தம் ஒழுகக் கீழே விழுந்து கிடந்தாள். கூட்டத்திலிருந்தவர்களுக்கு விஷயம் புரிய கொஞ்ச நேரம் பிடித்தது.

ஒரே கலவரம். உறியடித் திருநாள் அலங்கோலமாக அரைகுறையாக முடிந்தது. சேதுராமலிங்கத்தின் கண்முன் உலகமே சுழல்வது போலிருந்தது. யாரோ ஓடிப்போய் வண்டி கொண்டு வந்தார்கள். அந்தப் பெண்ணைத் தூக்கி வண்டியில் போட்டுக் கொண்டு வைத்தியர் வீட்டுக்குப் போனார்கள். வைத்தியர் பார்த்தார். தேங்காயை உடைக்கிற மாதிரி நட்டநடு மண்டையை இரண்டாக உடைத்துப் பிளந்திருந்தது. அந்தப் பெண் அதற்குமேல் எந்த சிகிச்சையாலும் பிழைக்கும் என்று அவரால் நம்ப முடியவில்லை. ஆனாலும் வந்தவர்களைத் திருப்திப்படுத்துவதற்காக மண்டையில் ஏதோ மருந்து வைத்துக் கட்டினார். விதி பெரியதாக இருந்தால் மருந்தும் மாயமும் என்ன செய்யும்? நோய்க்குத்தான் மருந்துண்டு. விதிக்குக்கூடவா மருந்து உண்டு? அந்தப் பெண் அன்றிரவே இறந்துவிட்டாள்.

அவளுடைய தகப்பனை யாரோ கிளப்பிவிட்டு விட்டார்கள்.

"உன் மகளைக் கட்டிக் கொள்ள அந்தப் பயல் சேது ராமலிங்கத்திற்கு இஷ்டமே இல்லை. 'அவலட்சணம்' 'அவலட்சணம்'னு கரித்துக் கொட்டிக் கொண்டிருந்தான். அதுனாலே இது தற்செயலா நடந்தது இல்லை. அந்த அயோக்கிய ராஸ்கல் வேணும்னே மண்டையைப் பிளந்திருக்கிறான். தற்செயலா விழுந்த அடியானால் இப்படி உயிர் போகிறவரை ஆகுமா?"

காய்ந்த வைக்கோற் போரில் எங்காவது ஒரு மூலையில் நெருப்பை அள்ளிவைத்தால் பற்றாமலா போகும்? தன் மகளைக் கட்டிக் கொள்ளப் பிடிக்காததனால் அவன் வேண்டுமென்றே உறியடிக்கிற பாவனையில் மண்டையைப் பிளந்து கொன்றுவிட்டான் என்றே அவர் நம்பினார்.

"எங்கே அந்த நாய்ப் பயல்? பிடி சொல்றேன். கழுத்தைச் சீவிக் கையிலே கொடுத்திடலாம். பெண்ணைப் பிடிக்கலேன்னாக் கட்டிக்க இஷ்டமில்லைன்னிட்டுப் போகட்டுமே? அதுக்காகப் படுகொலை செஞ்சிருக்கானே?" - பெண்ணின் தகப்பனும் அவனைச் சேர்ந்தவர்களும் அரிவாளும் கம்புமாகக் கைக்கு வந்ததை எடுத்துக் கொண்டு சண்முகவடிவேலுக் கரையாளர் வீட்டின் மேல் படையெடுத்துவிட்டார்கள்.

பாவம்! பெரிய கரையாளருக்கு அதுவரை சமாசாரம் எட்டவில்லை. அவர் மறுநாள் நடக்க இருந்த கலியாணத்துக்காகப் பந்தற்கால்களில் வாழைமரம் கட்டிக் கொண்டிருந்தார். சம்பந்தியாகப் போகிற மனிதன் கத்தியும் கம்புமாக யுத்தத்துக்கு வருகிறமாதிரி வந்தபோது அவருக்கு ஒன்றுமே புரியவில்லை.

"வாங்க அண்ணாச்சி! வாழை மரம் நானே வெட்டியாந்து கட்டிட்டேனே? நீங்க வேறே அரிவாளை எடுத்துக்கிட்டுக் கிளம்பிட்டிங்களே? அப்படித் திண்ணையிலே குந்துங்க!" என்று சம்பந்தியைச் சிரித்துக் கொண்டே வரவேற்றார்.

"வே! பெரிய கரையாளரே! வாழைமரத்தை வெட்ட அரிவாள் கொண்டாரல்லே. உம் மவன் வம்சத்தையே வெட்டக் கொண்டு வந்திருக்கேன்! எங்கே உம்ம மகன்?"

"ஏன்? என்ன நடந்திச்சு? அவன் இன்னும் உறியடியிலேருந்து திரும்பியே வரலியே!"

"ஓகோ, அப்படியா சேதி? கொலை பண்ணிட்டு ஓடித் தப்பிச்சுடலாம்னு நினைச்சானா?" - மீசை துடிதுடிக்க நெருப்புப் பழமெனச் சிவந்த கண்களை உருட்டி விழித்துக் கொண்டே கத்தினார் பெண்ணைப் பறி கொடுத்தவர்.

அதற்குள் ஒருவன் நடந்ததைச் சுருக்கமாகக் கிழவருக்குக் கூறினான்.

"அண்ணே! சேது குளத்தங்கரை பக்கமா ஓடிக் கொணடிருந்தது. கொஞ்ச நேரத்துக்கு முன்னே நான் பார்த்தேன்!" என்றான் ஒருவன். உடனே அத்தனை பேரும் திமுதிமுவென்று குளத்தங்கரைப் பக்கம் விழுந்தடித்துக் கொண்டு ஓடினார்கள்.

அங்கே குளக்கரை மாந்தோப்பில் ஓடுவதற்குத் தயாராயிருந்த பூங்காவனமும், சேதுவும் அவர்கள் கையில் சிக்கிக் கொண்டனர்.

"ஏண்டாலே! இந்தப் பூங்காவனத்து மேலே இருக்கிற ஆசையாலே என் மகளை அடிச்சுக் கொன்னிட்டு இவளோடே ஓடலாமின்னு பாத்தியா?" - அவர் இரைந்து கூப்பாடு போட்டார்.

"நான் வேணுமின்னு ஒண்ணுஞ் செய்யலை. அவ குறுக்கே வந்திருக்கா. அது எனக்குத் தெரியாது. அந்த நேரம் பார்த்து மஞ்சள் தண்ணிக்காரன் கண்ணிலே பீச்சிப்பிட்டான். உறி மேலே அடிக்கிறதாக நினைச்சுக்கிட்டு அடிச்சிட்டேன். அது இப்படி ஆகும்னு எனக்குத் தெரியுமா? சத்தியமா சாமி சாட்சியா நான் வேணுமின்னு செய்யலிங்க..." அவன் கெஞ்சினான்.

"கொலைக்காரப் பயலே நாடகமா ஆடுறே!" - அரிவாளை ஓங்கி வெட்டப் போனார் அவர்.

"வேண்டாங்க அண்ணாச்சி! இவனைக் கொன்னிட்டு நீங்க செயிலுக்குப் போகணுமா? இப்படியே இவனைப் போலீசுலே பிடிச்சுக் கொடுத்திடுவோம்?" என்று சொல்லி அவர் கையைப் பிடித்துத் தடுத்தார் விவரம் தெரிந்த ஒருவர். இதற்குள் நாராயணக் கரையாளர் வீட்டில் தம் மகளைக் காணாமல் தேடிக் கொண்டு அங்கே வந்து சேர்ந்தார்.

பெண்ணைப் பறி கொடுத்தவரும், பெண்ணைப் பறி கொடுக்க இருந்தவருமாகச் சேர்ந்து சேதுராமலிங்கத்தைப் போலீஸில் பிடித்து ஒப்படைத்தார்கள். தம் மகளை ஏமாற்றி அக்கரைச் சீமைக்குக் கடத்திக் கொண்டு போக முயன்றதாக நாராயணக் கரையாளரும், உறியடித்திருநாளின்போது தம் பெண்ணை வேண்டுமென்றே மண்டையைப் பிளந்து கொன்றதாக மற்றவரும், சேதுராமலிங்கத்தின் மேல் 'கிரிமினல்' வழக்குத் தொடர்ந்தார்கள்.

வழக்கு முடிவில் சேதுவுக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது. அந்தமான் தீவுக்குக் கொண்டு போகப்பட்டான் அவன். மகனால் ஏற்பட்ட அவமானம் தாங்காது சில நாட்களில் சண்முகவடிவேலுக் கரையாளர் உயிர் துறந்தார். நாராயணக் கரையாளர் பூங்காவனத்தை யார் யாருக்கோ கட்டிக் கொடுத்துவிட முயன்றார். சேதுவுக்கும் அவளுக்கும் முன்பிருந்த தொடர்பைப் பற்றி ஊரில் செய்தி தெரிந்திருந்ததனால் கௌரவமானவர்கள் யாரும் அவளைக் கட்டிக் கொள்ள முன்வரவில்லை. கடைசியில் பணத்தின் மேலும் சொத்துச் சுகங்களின் மேலும் ஆசை காட்டி ஒரு ஏழைப் பையனை அவளுக்குக் கணவனாக்க ஏற்பாடு செய்தார். மணந்தால் சேதுராமலிங்கத்தைத் தவிர இந்த ஜன்மத்தில் வேறெவரையும் மணப்பதில்லை என்ற திடமனத்தோடு இருந்த பூங்காவனம் கலியாணத்திற்கு முதல் நாளிரவு மயில்துத்தத்தைச் சாப்பிட்டு இறந்தாள்.

காலப் பெருந்தருவிலிருந்து வருஷ இலைகள் பழுப்பேறி பழுப்பேறி உதிர்ந்து கொண்டிருந்தன. பல வருஷ காலத்துக்குப் பின் இந்தியக் குடியரசு தினத்தன்று பாரத சுதந்திர சர்க்கார் கைதிகளுக்கெல்லாம் பரிபூரண விடுதலை அளித்தனர். அப்போது சேதுராமலிங்கமும் விடுதலையாகி வந்தான்.

ஊருக்கு வந்ததும் தகப்பனார் காலமானதும், பூங்காவனம் தற்கொலை செய்து கொண்டதும் அவனுக்குத் தெரியவந்தன. கோவிலில் அவனுக்கு உறியடி பாத்தியதை கிடையாது என்றார்கள். நாலைந்து வருஷமாகக் கோவிலாரோடு கோர்ட்டில் வழக்குத் தொடுத்துப் போராடி இறுதியில் மீண்டும் உறியடிப் பாத்தியதை உண்டு என்று செய்து கொண்டான்.

பழையவற்றை மறந்து ஊரில் வேறு சிலர் அவனுக்கு அத்தனை வயதிற்கு மேலும் தங்கள் பெண்ணைக் கொடுக்க முன் வந்தனர். அவனோ, "பூங்காவனத்திற்கு பின் நான் வேறு யாரையும் மணக்க விரும்பவில்லை" என்று சத்தியம் செய்திருப்பதைக் கூறி மறுத்துவிட்டான்.

கோர்ட்டில் தீர்ப்பான பின்பு இதுதான் அவன் அடிக்கிற மூன்றாவது உறியடி முறை. இன்னும் கலியாணமே செய்து கொள்ளாமல் 'பீஷ்மக் கரையாளன்' என்ற பெயருக்கு இலக்கியமாகவே இருக்கிறான். காலம்கூட அவனை மாற்ற முடியவில்லை.

* * *

திருவடியா பிள்ளை கூறி முடித்தார். ஒரு நீண்டபெருமூச்சோடு கதைக்கு முத்தாய்ப்பு வைத்தார்.

பல நாட்களாக நான் சிந்தித்துக் கொண்டிருந்த தத்துவம் அன்றைய தினம் எனக்கு நன்றாக விளங்கிவிட்டது.

எட்டுவதுபோல தோன்றி எட்டாமல் போவதும், எட்டாதது போல் தோன்றி எட்டுவதும், நடப்பதுபோல், தோன்றி நடக்காமல் போவதும், நடக்காதது போல் தோன்றி நிச்சயமாக நடப்பதும் உறியடி விழாவில் மட்டும் அல்ல; வாழ்க்கையிலும் அப்படி உண்டு போலிருக்கிறது!

**(உமா, டிசம்பர், 1957)**

## 25. பிரளய தாண்டவம்

**வா**னப் பரப்பில் வெண் பஞ்சுப் பொதிகளென மினுக்கும் மேகங்களைத் தழுவி நிற்கும் பனிமலை. படரும் ஆசைகளைப் போல எழுச்சி பெற்று நிற்கும் சிகரங்களுக்கெல்லாம் நடுநாயகமாக விளங்கும் கைலாச சிகரம். நன்றாக வார்த்தெடுத்த வெண்கல மணியின் பேதமற்ற நாதஅலைகளைப்போல 'ஓம் ஓம்' என்ற ஒலி அலைகள் காற்றைச் சாடி மோதுகின்றன. சங்கு முழங்குகிறது. மணிகள் ஒலிக்கின்றன. 'ஜண் ஜண், ஜண, ஜண ஜண்' - எட்டுத் திசைகளிலும் இனிமையை வாரி வழங்கும் ஓர் ஒலிக் காவியம். எழுத்தில் எழுத முடியாத ஓர் ஓசை ஓவியம்.

பாடகமும், சிலம்பும், தண்டையும் சலங்கையும், வளைகளும், மணிகளும் ஒலிக்கலவையாக ஒன்றுகூடின. ஒலிக் கலவையின் நடுமையமாக மிருதங்கத்தின் மேல் மிதித்தால் உண்டாகின்றாற்போன்ற சத்தம். அது பாதங்கள் தரையை மிதிக்கும் நாதம். நாதத்தைக் குழைய வைக்கும் படியான பறை. அடிமை கொள்ளும் மென்மை. நிருத்தியம், அது சாதாரண நிருத்தியமில்லை - நிருத்தியத்தின் நிருத்தியம். பரதத்தின் பரதம்; ஊழியின் ஊழி; சலனத்தின் சலனம்; கூத்தின் கூத்து; அவிநயத்தின் அவிநயம்; ஆடுகிறவனும் ஆடுகிறவளும் ஆடவில்லை அங்கே! ஆட்டுகிறவனுடன் - ஆட்டிவைப்பவன் ஆடிக் கொண்டிருக்கிறான்!

பிரம்மசிருஷ்டியின் திகிரி வேகத்தின் எல்லையை மீறி தாகத்தின் எல்லையைத்தொட்டுத் துழாவி எட்டி இறுகிக் கொண்டிருந்தது. உலகத்தின் ஆட்டத்தில் பூதங்கள் ஐந்தும் ஆடின. பூதங்களை உண்டாக்கிய பரம்பொருள், பரம்பொருளை உண்டாக்கிய மாயை, மாயையை உண்டாக்கிய சூன்யவஸ்து எல்லாம் கிடுகிடாய்த்துக் கொண்டிருந்தன. சலசலத்து வெலவெலத்துக் கொண்டிருந்தன.

"என்ன நடக்கிறது? ஏன் நடக்கிறது? எங்கு நடக்கிறது? ஐயோ!" தேவர்களை எண்ணி மானிடர்கள் கலங்கினார்கள். அசுரர்களை எண்ணித் தேவர்கள் கலங்கினார்கள். தருமத்தை எண்ணி அசுரர்கள் கலங்கினார்கள். மண், விண், பாதலம், கடல் எல்லாம் கலங்கின. எண்ண முடியாததை எண்ணிக் கலங்கின. காண முடியாததைக் கண்டு கலங்கின. உணர முடியாததை உணர்ந்து கலங்கின. கதித்தன, அதிர்ந்தன, பிதிர்ந்தன. எல்லாம் ஆயின!

நயனங்கள் மூன்றும் கீறி வைத்த நெருப்புத் துண்டங்களெனக் கனன்றன. சடா முடியில் நாகம் முசுமுசு என்று மூச்சை விஷமாக்கி விஷத்தைக் காற்றாக்கி வெளித்தள்ளியது. விழிகளின் கனற்சியும் விஷமூச்சின் வெப்புமாகத் தேங்காய்த் துண்டமெனத் தோன்றிய சீதப் பனிமதியின் பாதிப் பிறை வடிவை வெதுப்பு வெதும்பென்று வெதுப்பின. கங்கை சுட்டாள், சடையிடையே செருகிக் கிடந்த

கொன்றை மலர்க் கொத்துக்களும் தாழைமடல்களும் வாடிக் கருகின. அக்னியைச் சிருஷ்டிக்கும் பிரளய வாயில்களா அந்த விழிகள்? பிருதிவியை மிதித்து மிதித்துச் சிதைத்து அழித்தொழித்து இல்லையாகும்படி செய்து விடவா அந்தப் பாதங்கள் இப்படி வெறிக் கொண்டு விட்டன! கரங்கள்! அவை - கரங்களா, அல்லது மின்னல்களா? கரங்கள் ஆடிக் களிக்கின்றனவா? கரங்களில் பிடித்திருக்கின்ற திரிசூலம் ஆடிக் களிக்கின்றனவா? ஐயோ! ஒன்றும் புரியவில்லையே? ஆட்டுவது யார்? ஆடுவது யார்? ஆட்டப்படுவது எது? எது? எது? ஏன்? ஏன்? ஏன்...?

ஊழி வந்துவிட்டதா? எம்பெருமான் பித்தனாகி விட்டானா? சடையாடச் சடை பெற்ற பிளையாட, பிறை கொண்ட சிரம் ஆட, சிரம் கொண்ட உடல் ஆட, உடல் கொண்ட தராதலம் ஆட, ஆட்டம்! ஒரே ஆட்டம். ஓய்வு ஒழிவில்லாத ஆட்டம். முக்கண்ணன் ஆடுகின்றான்; பூத கணங்கள் ஆடுகின்றன. எட்டுத் திசைகளும் ஆடுகின்றன. எட்டுத் திசைப் பாலகர்களும் ஆடுகிறார்கள். மால் ஆடுகின்றான், மறைகள் ஆடுகின்றன. மறைகளைப் படைத்த பிரமன் ஆடுகின்றான். இந்திரன் ஆடுகின்றான். தேவர்கள் ஆடுகின்றனர். விநாயகன் ஒரு மூலையில் தன் யானைப் பாதங்களை மிதித்து ஆடுகிறான். குழந்தை முருகனும் தாறு மாறாக மிதித்து ஆடுகிறான். நந்தி சாட்டையை வீசி எறிந்து விட்டு ஆடுகிறான். நாட்டியப் பெண்களாகிய கந்தர்வ சுந்தரிகளெல்லாம் ஆடுகின்றனர்.

எம்பெருமானின் சரீரத்தைச் சேர்ந்த ஜட, ஜீவ, சேதனாசேதன வஸ்துக்களெல்லாம் ஆடுகின்றன. மான் ஆடுகிறது, மழு ஆடுகிறது, கங்கை ஆடுகிறாள், பிறை ஆடுகிறது. ஆனால்...?

அச்சரீரத்தின் உபாங்கமாகிய உமை ஆடவில்லை. உமையின் கருவிழி ஆடவில்லை. அந்தக் கருவிழிகளின் இமைகள்கூட அசையவில்லை. அர்த்தத்தின் அர்த்தம்போல, விளக்கத்தின் விளக்கம் போல, புரிந்தும் புரியாத அமைதியோடு அவள் வீற்றிருந்தாள். அது கையாலாகாத அமைதியா? சினத்தின் அமைதியா? பொறுமையின் அமைதியா? பொறாமையின் அமைதியா? யார் கண்டார்? யார் காண முடியும்? யாருக்குத் தெரியும்?

கைலாசபதியின் மான் தோல் விரித்த ஆசனம் வெறுமையாக இருந்தது. அதனருகே இருந்த ஆசனம்! ஏற்றி வைத்த குத்து விளக்கா? எழுதி வைத்த சித்திரமா? செதுக்கி வைத்த சிலையா? இல்லையானால், உருக்கி வைத்த பொற் பிழம்பா? அமைதியின் வடிவாக வீற்றிருந்தாள் எம் அன்னை. அவளைச் சுற்றி ஒரே ஆட்டம், ஒரே ஓசை. ஒரே பிரளயம்! அவளுக்கு உள்ளேயோ ஒரே அமைதி. ஒரே தனிமை, ஒரே சிந்தனை. அவள் தாய் அல்லவா? எனவே, தாயாகவே வீற்றிருந்தாள்.

கடல் வானை முத்தமிடுகிறது. திசைகள் நேர் எதிரெதிரே முட்டிக் கொள்கின்றன. எல்லை ஊரை விழுங்குவதைப்போலப் பஞ்சபூதங்கள் உலகை விழுங்கத் தயாராகின்றன. தரை, வானம், கடல், பாதாளம், திக்கு, திகந்தம் என்ற பேதங்கள் குன்றுகின்றன. 'எல்லாம் சமாப்தி' என்ற அபேதம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. சிவம்

உலகைச் சவமாக்கும் முயற்சியில் முனைந்துவிட்டது. உயிர்களைக் காக்க வேண்டிய பேருயிர் உயிர்களை விளையாடி வேதனைக்குள்ளாக்கத் தொடங்கிவிட்டது. கண்ணைத் திறந்து பார்க்க வேண்டிய நேரத்தில் கண்ணிருந்தும் காண விரும்பாதவள் போல உட்கார்ந்திருக்கிறாள். பொறுப்பை உணர்த்த வேண்டியவள் பொறுப்பில்லாதவளாகிவிட்டாளோ?

ஓலம்! ஓலம்! ஓலம்! ஈரேழு பதினான்கு புவனங்களிலும் வாழ்கின்ற உயிர்க்குலங்களின் வேதனை ஓலம். அழிகின்ற நேரத்திலும் அழியாத ஆசையின் ஓலம். தான் அழிந்தாலும் அழியாது நிற்கும் 'தனது' இடுகின்ற ஓலம். நம்பிக்கையின் இறுதி மூச்சு. உயிரின் அந்திமக் குரல். பாவத்தின் பரிதாபத்தை எடுத்துரைக்கும் இரைச்சல். அழிக்கின்றவனும் அவன் இடமும் எஞ்சி நின்றன. மற்றவை அழிந்து கொண்டிருந்தன.

தாயின் கண் திறந்தது. உமைக்கு உடலெல்லாம் செவிகளாயின. உயிர்களின் ஓலத்தைக் கேட்டாள். உடலெல்லாம் கண்களாயின. அந்திம காலவேதனையைப் பார்த்தாள். உடலெல்லாம் மனங்களாயின. பிரளயத்தின் வேதனையை உணர்ந்தாள்.

கேட்டாள், பார்த்தாள், உணர்ந்தாள். உணர்ந்தவள் கிளர்ந்தாள். எழுந்தாள், ஆடாத கருவிழிகள் ஆடிச் சிவந்தன. அசையாத இமைவில்கள் அசைந்து வளைந்தன. புருவம் சுளித்தது. பவழச் செவ்விதழ்கள் கோணின.

சிலம்பும் மெட்டியும் ஒலிக்கத் தரை மேல் ஓங்கி மிதித்தாள். இலட்சோபலட்சம் கண்டா மணிகளோடு கூடிய மாபெருங் கதவொன்றைக் காலால் உதைத்தது போன்ற ஓசை உண்டாயிற்று. அந்தப் பேராசையில் அடங்கி நின்றது எம்பொருமானின் பிரளய ஓசை. எம்பெருமான் திகைத்தான்! ஓசையை அடக்கிய பேரோசை என்ன வென்று பார்த்தான். பார்த்தவன் பதைத்தான், பதறினான்.

உமை வலது பாதத்தை ஓங்கிக் கொண்டிருந்தாள். எம்பெருமான் அவளை நோக்கி ஓடினான். எரித்த விழிகள் மூன்றும் சிரித்தன. பாய்ந்த திரிசூலம் பதுங்கியது. மிதித்துத் துள்ளிய கால்கள் பதித்து நடந்தன. கங்கை குளிர்ந்தது. தாழையும் கொன்றையும் மணம் வீசின. பிறை நிலவு பொழிந்தது. நாகம் படம் விரித்து மகிழ்ச்சியாட்டம் போட்டது.

"தேவீ! என்ன இது? உனக்கு ஏன் இந்தக் கோபம்?"

உதைப்பதற்காகத் தூக்கி ஓங்கிய பாதம் அவன் மார்புக்கு நேரே அப்படியே நின்றது. ஒற்றைக் காலால் நின்று கொண்டே அவனை ஏறிட்டுப் பார்த்தாள் உமை.

'ஐயோ! பார்வையா அது? விழிகளின் சவுக்கடி. கண்களின் போர்'.

"ஓகோ! நான் மன்மதனை எரித்து நீறாக்கியபோது என்னைப் பார்த்துப் பழகிக்கொண்ட பார்வையோ இது?" - எம்பெருமான் குறும்புச் சிரிப்புச் சிரித்தான். எம்பெருமாட்டி நெருப்பாய் எரிந்தாள்!

"தேவிக்குத் தரையின் பலத்தைக் கால்களால் பரீட்சிக்க வேண்டிய அவசியம் என்னவோ?"

"எல்லாம் தேவனுக்கு நேர்ந்த அவசியம்தான்!"

"ஓ! நான் ஆடியதைக் குறிப்பிடுகின்றாயா? எனக்கு இது விளையாட்டு. இப்படியே செய்து வழக்கமாகிவிட்டது. இந்த யுகாந்த நாடகத்தை என்னால் நிறுத்த முடியவில்லை."

"உயிர்களை அழிப்பது உங்களுக்கு நாடகமாக இருக்கலாம். வழக்கமான விளையாட்டாக இருக்கலாம். ஆனால் நான் பெற்றவள், தாய்! பாசத்துக்காகவும் அன்புக்காகவும் சரீரத்தைச் சுமந்து வாழ்கிறவள்."

"இருக்கட்டுமே, தேவீ! அப்படியே இருந்தாலும் பிறப்பிடமாயிருந்தவளைவிடப் பிறப்பித்தவனுக்கு உரிமை அதிகம்தானே?"

"ஆள்வதுதான் உரிமைக்கு அடையாளம், அழிப்பது அல்ல."

"நான் என்ன செய்யலாம், பார்வதி? இந்த உலகத்தை வசதியோடு வாழ்விக்கிறபோதெல்லாம் அங்கிருப்பவர்கள் என்னைப் பற்றி நம்புவதோ, உணர்வதோ இல்லை! நான் ஏதாவது கஷ்டங்களை உண்டாக்கிக் கொண்டிருந்தால்தான் என்னை நினைக்கிறார்கள்; என்னை நம்புகிறார்கள்."

"குழந்தைகள் முருகனும், கணபதியும் நம்மை மறந்துவிட்டால் அவர்களுக்குக் கஷ்டத்தை உண்டாக்கியா நாம் அவர்களது பெற்றோர் என்பதை உணர்த்துகிறோம்?"

"நீ சொல்வது சரிதான்! ஆனால் இங்கிருந்து நான் எதை ஆடினாலும் அதன் சுழற்சி வேகத்தை உயிர்கள் சமாளித்துத்தான் ஆக வேண்டும். காரணம்; இது ருத்திர பூமி. ரௌத்திரத்தை உண்டாக்கும் இடம். சம்ஹாரத் தொழில் நிகழும் களம். நீ ரஸிக்கும்படியான கலைத்தாண்டவத்தை நான் இங்கு ஆட முடியாதே பார்வதீ...! என்ன செய்வது? கொடுத்து வைத்தது அவ்வளவுதான்."

"ஏன் முடியாது? எல்லாம் முடியும். வெறியாட்டம் ஆடாமல் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு ஆடினால் அது மனோரம்மியான நிருத்தியமாக இருக்கும். நீங்கள் திரிசூலதாரியாகத் தாண்டவம் ஆடத்தான் துறுதுறுத்துப் போய்த் திரிகிறீர்கள். அதனால்தான் உங்களால் முடியவில்லை."

"உண்மைதான்! இந்த அபூர்வமான கலை மனத்தை உயர்த்தப் பயன்பட வேண்டும். வெறும் ஆசை ஆபாசங்களைக் கிளறி மனத்தை அழிக்கும் வெறியாட்டமாகப் பயன்பட்டுச் சீரழிந்துவிடக்கூடாது!"

"நல்ல வேளை! உலகத்தவர்களும் இதை வெறியாட்டமாகப் பயன்படுத்திவிடாமல் பரத முனிவர் காப்பாற்றிவிட்டார். அவர் செய்த பெருந்தொண்டினால்தான் உலகத்தில் இது ஒரு புனிதமான கலையாக மட்டும் இருக்கிறது."

"என்னவோ, போ தேவீ...! உலகத்தார் வாழப் பயன்படுத்தும் கலையை நான் அழிக்கப் பயன்படுத்துகின்றேன். என் தொழிலும் நானும் செய்த பாவம் இது!"

"ஒன்று செய்தால் என்ன?"

"என்ன செய்ய வேண்டும், தேவீ!"

"இந்த மகோன்னதக் கலையை இதுவரைதான் அழிப்பதற்கென்றே பயன்படுத்திவிட்டீர்கள். உலகின் சம்ஹாரத் தொழிலைச் சில யுகங்களுக்குப் பஞ்ச பூதங்களே தாமாகச் செய்து கொள்ளட்டும். நாம் இருவரும் உலகத்துக்குப் போய் வாழ்வு கொழித்து உயர்வதற்கு இந்தக் கலையைப் பயன்படுத்திப் பார்ப்போமே?"

"அது அவ்வளவு சுலபமாகச் சாத்தியமாகிவிடுமா, பார்வதீ!"

"ஏன் ஆகாது? நான் சொன்னபடி கேட்டால் ஆகிவிடும். நீங்கள் கேட்கத்தான் வேண்டும்!"

"அவசியம் கேட்கிறேன், சொல் தேவி."

"நாளையிலிருந்து உங்கள் பெயர் நடராஜன். என் பெயர் சிவகாமி."

"எதற்காக இந்தப் பெயர் மாற்றம்?"

"கலைத் தொழிலை உயர்த்த உலகம் செல்கிறோம் அல்லவா? அதனால்தான் அந்தத் தொழிலுக்கும் உலகத்துக்கும் ஏற்ற இந்தப் பெயர்கள்..."

"சரி! அப்படியே செய்வோம். ஆனால் பூவுலகில் எந்த ஊரில் எந்த இடத்தில் போய் நம்முடைய இந்தப் புதிய கலைத் தொழிலைத் தொடங்குவது...?"

"அதற்கும் இடம் தேர்ந்தெடுத்துவிட்டேன் சுவாமீ! சோழநாட்டில் 'தில்லையம்பலம்' என்ற ஓர் இடம் இருக்கிறது. அங்கே நாட்டியமாடுவதற்கு ஏற்ற பொன் வேய்ந்த அரங்கங்களெல்லாம் இருக்கின்றன. தெய்வீகத் தொடர்புடைய புனிதமான ஊர். திருச்சிற்றம்பலம், சிதம்பரம் என்றெல்லாம் அதற்கு வேறு பெயர்கள் உண்டு. உங்களுக்கும் எனக்கும், என் தமையனார் திருமாலுக்கும்கூட அங்கே கோவில்கள் இருக்கின்றன."

"நல்லது, நாளைக்கே புறப்படுவோம். உலகப் பிரளயத்துக்காகப் பயன்பட்டு வீணாகும் நிருத்திய கலையை உலக நலத்துக்காகச் செலவிடப் பயில்வோம். சுடலை மேட்டில் சாம்பல் பூசி, எலும்பு அணிந்து மண்டையோடு ஏந்திச் சூலமுகம் பிடித்து ஆடிய ஆட்டத்தை, பொன்னம்பலத்தில் சந்தனம் பன்னீர் பூசிச் சர்வாபரணங்களும் அணிந்து மானும் மழுவும் ஏந்தி அழகுக் கலையாக ஆடுகிறேன். நீ 'சிவகாமியாக' இருந்து இரசிக்கலாம். முடியுமானால் சேர்ந்து ஆடிக் கற்றுக் கொள்ளலாம்."

குழப்பம் அடங்கியது. ஓலம் நின்றது. ஓசைகள் நின்றன. பிரளயத்துக்குப் பின் தோன்றிய புதிய உலகம் மழைக்குப்பின் மலர்ந்த மல்லிகைப் பூவைப் போல அமைதியாகக் குளிர்ந்த நிலையில் இருந்தது.

கைலாச சிகரம்! - அங்கே சூனிய அமைதி நிலவியது. நந்திதேவரின் கம்பீரமான அதட்டல் குரல் கேட்கக் காணோம். முனிகணங்களின் ஓங்கார சப்தம் ஒலிக்கவில்லை. சங்கங்கள் முழங்கவில்லை. மணிகள் நாதத்தால் கீதம் பாடவில்லை. எம்பெருமான் இல்லை, எம்பெருமாட்டி இல்லை. யாருமே இல்லை. சாவு நிகழ்ந்த வீடாக,

பாழ்பட்டுப் போன வெறுமனையாக, திலகமிழந்த நெற்றி போல, எல்லோரையும் இழந்தும் - தன்னை இழக்காமல் வெறும் கல்லாய், மலையாய், வீண் நிலமாய், வீற்றிருந்தது கைலாச சிகரம்.

அதற்குப் பெருமை நல்கி வந்த அம்மையும் அப்பனும், அம்மையப்பனைச் சேர்ந்தவர்களும், சேர்ந்தவைகளும், அங்கில்லாமற் போனால் வீண் நிலமாகத்தானே இருக்க முடியும்?

கைலாசம் சூனியமாய்ப் போன அதே நாளில், சூன்யமாக இருந்த சிதம்பரம் கைலாசமாக மாறியது. சிதம்பரத்தில் அன்றைக்கு மழை பெய்தது. அது அதற்கு முன்பு பெய்திருக்க முடியாத புனிதமான மழை. பூக்கள் மலர்ந்தன. அது அதற்கு முன்பு மலர்ந்திருக்க முடியாத புனிதமான மலர்ச்சி. காற்று வீசியது. அது அதற்கு முன்பு வீசியிருக்க முடியாத புனிதமான காற்று. வெயில் எரித்தது. அது அதற்கு முன்பு கொடுத்திருக்க முடியாத புனிதமான ஒளியைக் கொடுத்தது.

ஏன் இந்தப் புதுமை? கைலாசத்தைச் சூனியமாக்கிய தெய்வத் தம்பதிகள் அன்று சிதம்பரத்தைக் கைலாசமாக்கிவிட்டார்கள். எம்பெருமான் நடராஜனாகவும், எம்பெருமாட்டி சிவகாமியாகவும் அங்கே பொன்னம்பலத்தில் குடி புகுந்துவிட்டனர். கலையை அருளாக வழங்கும் புனிதத் தொழிலைத் தொடங்குவதற்கு வந்துவிட்டார்கள். பிரளயத்தை உண்டாக்கிய கலையைப் பெருமையை உண்டாக்கும் வரப்பிரசாதமாகப் பயன்படுத்துவதற்குத் துணிந்துவிட்டார்கள்.

எம்பெருமான் நடராஜனாகக் கால் மாறி ஆடினான். முன்பு அண்டங்கள் குலுங்க மிதித்த பரதம் இப்போது அரங்கம் மகிழ மதித்து ஆடியது. கனன்ற விழிகள் ஆர்வம் ததும்பும் மனோபாவங்களைப் படம் பிடித்தன. திரிசூலம் வீசிய கரம் விரல்களை வளைத்து அபிநயம் பிடித்தது. அழிவு அழகாகியது!

மனைவி எப்போதும் கணவனின் ரசிகைதானே? சிவகாமி கண்களில் ஆனந்தக் கண்ணீர் மல்க, உடலும் உள்ளமும் புளகிக்கக் கரங்கூப்பி நின்று கொண்டு அந்த நிருத்தியமூர்த்தியின் நிர்மலமான அழகைப் பருகிக் கொண்டிருந்தாள்.

உயிர்கள் எல்லாம் வணங்கிக் களித்தன. உயிர் குலத்தின் பிரதிநிதியாகிய தாயே அவனருகில் நின்று வணங்கிக் களிக்கும்போது உயிர்கள் வணங்காமலிருக்க முடியுமா? ‘நான் அழிக்க முடியும்’ என்ற அகந்தையை நீக்கி, ‘நான் வளர்க்க முடியுமானால் நல்லது’ என்ற அறிவை உண்டு பண்ணிய சக்தியை ஆடிக் கொண்டிருந்த சிவன் பெருமிதத்தோடு நன்றி சுரக்கும் கண்களால் கண்டான். சக்தியின் பவழக் கனியிதழ்களில் நாணம் கோலமிட்டது. சிரம் தாழ்ந்தது. நடராஜன் ஆடினான். சிவகாமி சிரித்துக் கொண்டே அவனை ஆட்டி வைத்தாள். யுக யுகாந்திரங்களாக இந்த நிருத்தியம் நடந்து கொண்டிருந்தது.

* * *

**க**லி பிறந்தது! - இருபதாம் நூற்றாண்டு என்று சொல்லப்படுகிற இயந்திர நூற்றாண்டு வந்தது. மனிதர்களின் எண்ணங்களும் செயல்களும் அனுபவங்களும் மாறின. உலகமும் மாறியது. கலைகளின் இலட்சியங்களும் மாறின.

சிதம்பரத்தில் ஒருநாள் நள்ளிரவு. பொன்னம்பலத்திற்குள் உமை, வெளியே சென்றிருந்த எம்பெருமானை எதிர்பார்த்து உறங்காமல் வீற்றிருந்தாள். அடிக்கடி வலக்கண் துடித்தது. அவள் அஞ்சினாள். உலகையெல்லாம் அழித்துப் பழகிய கடவுளுக்கு யாரால் என்ன அழிவு வந்துவிட முடியும்? ஆனாலும் உமையால் பயப்படாமல் இருக்க முடியவில்லை. 'என்னவோ ஏதோ, தீமைக்கு அறிகுறியாக வலக்கண் துடிக்கிறதே?' என்று நினைந்து மனம் குழம்பினாள். நடு யாமத்திற்கு மேல் ஆகிவிட்டது.

திடீரென்று எம்பெருமான் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க அம்பலத்திற்குள் பரபரப்போடு ஓடி வந்தார். அவர் கையில் ஏதோ ஒரு சிறு புத்தகம் இருந்தது.

"பார்வதி! புறப்படு. புறப்படு! இனிமேலும் இங்கே தாமதிக்கக்கூடாது... நம்முடைய தொழிலை மற்றொருவர் செய்ய விடுகிறதாவது...?" அவன் குரலிலே ஆத்திரமும் படபடப்பும் நிறைந்திருந்தன.

"என்ன நடந்தது? ஏன் பதறுகிறீர்கள்? எங்கே புறப்பட வேண்டும்? கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லுங்களேன்!"

"எல்லாம் பின்பு சொல்கிறேன். நீ இப்போது உடனே இங்கிருந்து கிளம்பப்போகிறாயா? இல்லையா? வா கைலாசத்துக்கு, மூட்டையைக் கட்டிக் கொள்."

"ஏன் இப்படிப் பழைய பிரளயதாண்டவம் மாதிரி குதிக்கிறீர்கள்? விஷயத்தைச் சொன்னால்தான் நான் புறப்படுவேன்!"

"எல்லாம் உன் யோசனையால் வந்த வினைதான்! நிருத்திய கலையைக் கருவியாக வைத்துக் கொண்டு உலகைப் பிரளயம் செய்யக்கூடாது என்றாய். உன் கருத்துப்படியே அதைக் கைவிட்டு இங்கே உன்னோடு வந்தேன்!..."

"ஆமாம். அதனால் இப்போது என்ன கேடு வந்துவிட்டதாம்?"

"ஒருவகையிலா கேடுகள் வந்திருக்கின்றன? நான் பிரளயதாண்டவத்தால் அழிக்காமல் விட்ட உலகத்தை இச்சீரழிந்த அலங்கோல தாண்டவத்தால் அழித்துவிடுவார்கள் போலிருக்கிறது!" தம் கையிலிருந்த புத்தகத்தைப் பார்த்தவாறே கூறினார் அவர்.

"யார் அவர்கள்? என்ன அலங்கோலம் செய்கிறார்கள் அப்படி?"

"என்ன அலங்கோலமா? இதோ நீயே பார்!" - எம்பெருமான் தம் கையிலிருந்த புத்தகத்தைக் கோபவேசமாய்ப் பார்வதி தேவியின் பக்கமாக வீசி எறிந்தார்.

பார்வதி அதை எடுத்துப் பார்த்தாள். மறுகணம் முகத்தில் அருவருப்புச் சூழக் கண்களை இறுக்கி மூடிக் கொண்டாள். அவள் உடல் நடுங்கிக் குலுங்கி ஓய்ந்தது.

அது ஓர் ஒன்றே காலணாச் சினிமாப் பாட்டுப் புஸ்தகம். அதன் அட்டையிலே வெகு ஆபாசமான முறையிலே ஒரு பெண்ணின் உருவம் அச்சிடப்பட்டிருந்தது.

"சீ! மானங்கெட்டவள்! தாய்க்குலத்தின் அதி தேவதையான என்னில் ஒரு சிற்றணு இப்படியுமா இருக்கிறது? உலகமும் ஆண்குலமும் உருப்பட்டாற்போலத்தான்!"

தேவி காறியுமிழ்ந்தாள்.

"மன்மதனைப் போய் எரித்தீர்களே? இந்தப் புஸ்தகத்தையும் இவளையும் இப்போது எரியுங்களேன்!"

"இதை எரித்து என் நெற்றிக் கண்ணைக் கறைப்படுத்திக் கொள்ளச் சொல்கிறாயா தேவீ? என்னால் முடியாது."

"சரி, சரி! உடனே புறப்படுங்கள். ஒழுக்கத்தையும் நல்ல மனத்தையும் அழிக்கும் இவர்கள் ஆடிக் கெடுக்கப் போகிற உலகத்தை நீங்களே ஊழிக்கூத்தால் அழித்துவிடுங்கள்."

"ஐயோ! நானாவது உரிய காலத்தில் காரணமில்லாமல் அழிக்கமாட்டேன்! இவர்களோ இளைஞர்களாக இருக்கும்போதே மனிதர்களை அழித்து ஒழுக்கத்தைக் குலைத்துவிடுகிறார்களே?"

"எக்கேடாவது கெட்டுப் போகட்டும், நீங்கள் வாருங்கள். நாம் நம்முடைய இடத்துக்குப் போகலாம்!"

எம் பெருமானும் தேவியும் கைலையங்கிரிக்குப் புறப்பட்டுச் சென்றனர்.

கையலைங்கிரியிலிருந்த சூனியம் சிதம்பரத்துக்குப் புறப்பட்டுச் சென்றது.

**(உமா, பொங்கல் மலர், 1958)**

## 26. கோலாட்டம்

ஐப்பசி மாதக் கடைசிப் பருவம். மழை தூறிக் கொண்டிருந்தது. அறையினுள் அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தேன். எழுதுவதற்கு இதமான சூழ்நிலை. எழுதிக் குவித்த தாள்கள் மேஜையின்மேல் குவிந்து கிடந்தன. தடங்கலில்லாமல் எழுத்து வளர்ந்து கொண்டிருந்தது. இந்த மழைக் காலத்தைப் போல், எழுத்தாளனுக்கு வசதியான காலம் வேறு இருக்க முடியாது. வெளியிலிருந்து தேடி வருகிறவர்கள் இருக்கமாட்டார்கள். வெளியில் புறப்பட்டுச் செல்லவும் தோன்றாது.

இவ்வளவு அருமையான வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த மழையை வாழ்த்திக் கொண்டே இலக்கியப் படைப்பை நடத்திக் கொண்டிருந்தேன். பத்திரிகை ஆசிரியர் 'கெடு' வைத்துவிட்டார். இன்னும் பதினைந்து நாட்களில் அந்த நாவலை முழுமையாக முடித்துக் கொடுக்க வேண்டும். இதோ அவருடைய அவசரக் கடிதம்கூட மேஜைமேல் கிடக்கிறது. எந்தக் காரியத்தையுமே சொந்தமாக நன்கு உணர்ந்து செய்வதைக் காட்டிலும் இன்னொருவர் பின்னாலிருந்து தூண்டிக் கொண்டிருந்தால் வேகம் ஏற்படத்தான் செய்யும்! அந்த வேகத்தில் எதையும் மறந்து, எதற்கும் துணிந்து செயல்படும் ஒருவித முனைப்பு உண்டு. அத்தகைய முனைப்போடு குனிந்த தலை நிமிராமல் வெள்ளைக் காகிதத்தில் கற்பனையை வளர்த்து, உருவாக்கிக் கொண்டிருந்தேன். ஆற்று வெள்ளம் போல் கதை போய்க் கொண்டிருந்தது. மழையோடு மழையாக நனைந்து கொண்டே தெருவில் என் வீட்டு வாசலில் பத்துப் பன்னிரண்டு பெண்கள் கோலாட்டம் போட வந்து சேர்ந்தார்கள். நான் உட்கார்ந்து எழுதிக் கொண்டிருந்த அறையின் ஜன்னல், தெருவை ஒட்டி அமைந்திருந்தது.

குனிந்து எழுதிக் கொண்டிருந்தவன், பட்டுப் பாவாடைகளின் சலசலப்பு, வளையல்களின் ஒலி, மல்லிகைப் பூவின் நறுமணம் இவற்றால் கவரப்பட்டுத் தலை நிமிர்ந்தேன். ஜன்னலுக்கு வெளியே தெருவோரமாக அப்பெண்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஏறக்குறைய அத்தனை பேருமே பெதும்மைப் பருவத்துப் பெண்கள்தாம். அவர்களுடைய வளை குலுங்கும் இளங்கரங்களில், பச்சை, சிவப்பு, மஞ்சள் என்று பல நிறக் கோலாட்டக் குச்சிகள் காட்சியளித்தன. வட்டமாக ஒரு ஒழுங்கில் நின்று கோலாட்டம் போடத் தயாராகிவிட்டார்கள். மழை அவ்வளவாக வலுத்துப் பெய்யவில்லை. தெருவில் அது ஒரு மையமான இடம். கழைக்கூத்தாடி முதல், புடவை ஏலம் போட வருகிற துணி வியாபாரி வரையில் தொழிலைத் தொடங்குவது அந்த இடம்தான். கோலாட்டம் போட வந்த பெண்களும் தெருவுக்கு மையமான அந்த இடத்தைத் தேடிக் கொண்டு வந்துவிட்டார்கள். இனி நான் எழுதி உருப்பட்டாற்போலத்தான். இதோ அவர்களுடைய கோலாட்டமும்

தொடங்கிவிட்டது. குச்சிகள் அடிபடும் ஓசை! கும்பலாகச் சேர்ந்து பாடும் பாட்டின் ஒலி; இரண்டும் செவிகளில் புகுந்து கவனத்தைக் கவர்ந்தன.

கால் மணியாயிற்று, அரை மணியாயிற்று; கோலாட்டம் நிற்கிற வழியாகக் காணோம். மழையும் நின்றுவிட்டதால் அந்தப் பெண்கள் உற்சாகம் அடைந்து விட்டனர். ஆளுக்கு ஒரு பாட்டுப் பாடிக் கொண்டு சிரிப்பும், கேலிப் பேச்சுமாகக் கும்மாளமிடத் தொடங்கிவிட்டனர். எழுத்து துப்புரவாக ஓடவில்லை. பேனாவை மூடி மேஜைமேல் வைத்தேன். எழுதியும் எழுதாமலும் தாறுமாறாகக் கிடந்த காகிதங்களை அடுக்கி வைத்துவிட்டு மறுபடியும் ஜன்னலுக்கு வெளியே பார்த்தேன். ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. முன்பு பத்துப் பன்னிரண்டு பெண்கள் நின்ற இடத்தில் இப்போது ஏறக்குறைய இருபது பெண்களுக்கும் மேலாக நின்று கொண்டிருந்தனர். கோலாட்ட ஒலியும், பாட்டொலியும் அவர்களின் தொகைக்கேற்ப அதிகரித்திருந்தன.

பலத்த ஓசை உண்டாகும்படியாக, உட்கார்ந்திருந்த நாற்காலியைப் பின்னுக்கு நகர்த்திவிட்டு எழுந்திருந்தேன். வேகமாக நடந்து தெருவில் இறங்கினேன். "இந்த இடம்தான் உங்களுக்கு அகப்பட்டதோ? எதற்காக என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளுகிறீர்கள்? நீங்கள் கோலாட்டம் போடவில்லை என்று இங்கே யார் ஏங்கி அழுதார்கள்? பேசாமல் இப்போதே இங்கிருந்து போகிறீர்களா? தண்ணீரைக் கொண்டு வந்து கொட்டட்டுமா?"

தெருவில் போய் நின்று கொண்டு அதட்டிக் கூப்பாடு போட்டேன். என் சத்தம் அவர்களிடையே அசாதாரணமானதொரு அமைதியை உண்டாக்கியது. கோலாட்டக்குச்சி ஒன்றோடொன்று அடிபடும் ஓசை நின்றது. பாடிக் கொண்டிருந்த வாய்கள் அடைத்துப் போயின. அந்தப் பெண்கள் மிரண்டு போய் என்ன செய்வதென்று தெரியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"நீங்கள் போடுகிற சத்தத்தில் உள்ளே உட்கார்ந்து ஒரு வரிகூட எழுத முடியவில்லை. இந்த இடம்தான் உங்களுக்கு அகப்பட்டதா? வேறெங்கேயாவது போகக்கூடாதோ?"

தங்களுக்குள் கசுமுசுவென்று மெல்லிய குரலில் ஏதோ பேசிக் கொண்டார்கள் அந்தப் பெண்கள். இரண்டொரு சொற்கள் என் செவிகளிலும் அரைகுறையாக விழுந்தன.

"அடியே! மாமா கதை எழுதுகிறார் போல் இருக்கிறதடி."

"நாம் இங்கிருந்து வேறே எங்கேயாவது போய்விடலாமடி."

"வழக்கமாகக் கோலாட்டம் போடுகிற இடத்தை விட்டுவிட்டால் கூட்டம் கூடாதே?" - இப்படி இன்னும் பல குரல்கள் என்னென்னவோ தங்களுக்குள் பேசிக் கொண்டன.

அந்தக் கூட்டத்தில் உயரமாக, நீலச் சிற்றாடை அணிந்து கொண்டிருந்த ஒரு பெண் தயங்கித் தயங்கி நடந்து கெஞ்சும் பார்வையோடு முன்னால் வந்து நின்றாள்.

அவள்தான் அங்கிருந்த சிறுமிகளுக்குள் பெரியவள். கோலாட்டத்துக்கு வந்திருந்த பெண்களுக்கெல்லாம் தலைவியைப் போலத் தோன்றினாள்.

"மாமா! கோபித்துக் கொள்ளமாட்டீர்களே? இன்றைக்குத்தான் நல்ல நாள் பார்த்து முதல் முதலாகக் கோலாட்டம் தொடங்குகிறோம். காலையிலே பசுவனுக்கு மண் எடுத்தாயிற்று... வந்து... வந்து... வருஷா வருஷம் வழக்கமாக இந்த இடம்தான்..."

"இதோ பார்! நீங்கள் மண் எடுத்தால் என்ன? கல்லெடுத்தால் என்ன? அதனால் எனக்கொன்றும் ஆகப் போவதில்லை. இந்தக் கெஞ்சுதலுக்கெல்லாம் மசிகிற பேர்வழி நான் இல்லை. மூச்சுவிடாமல் இங்கிருந்து போய்விட வேண்டும்! இல்லாவிட்டால்...?"

அந்தப் பெண் தலையை நிமிர்த்தி, இமைக்காமல் என் முகத்தை உற்றுப் பார்த்தாள். பளிங்கு வட்டத்தில் பதித்த கருநாவற்கனிகளைப்போன்ற அவள் விழிகள் என்னை உடுருவின.

"என்ன முறைத்துப் பார்க்கிறாய்? தலையைக் கிள்ளி விடுவாயோ?"

"இங்கிருந்து நாங்கள் போகாவிட்டால் என்ன செய்வீர்களோ?" அந்தப் பெண் திடமான குரலில் என்னைக் கேட்டாள். பின்னாலிருந்து வேறு சில குரல்களும் அவளுடன் ஒத்துப் பாடின; "அப்படிக் கேளடி, சொல்கிறேன், இந்த மாமா என்னவோ நம்மை ரொம்பத்தான் மிரட்டுகிறார்!"

"நாம் இங்கேயே கோலாட்டம் போடுவோம். இவர் என்னதான் செய்ய முடியுமென்று பார்த்து விடுவோமே!"

"வருஷத்துக்கு ஒரு தடவை வருகிற நல்ல காரியம். இதற்குக்கூட இப்படியெல்லாம் வம்பு செய்கிறாரே!"

இடையில் அந்தக் கூட்டத்திலேயே வயதில் சிறியவளும் மழலை மாறாத பேச்சையுடையவளுமான ஒரு சிறுமி முகத்தை அழகு காட்டும் பாவனையில் வைத்துக் கொண்டு எனக்கு எதிரே வந்தாள். "ஐயே! நாங்க கோலாட்டம் போடுகிற தனாலேதானே மழை பெய்யறதாம்! இல்லாவிட்டால் பெய்யுமோ? மழை பெய்யாட்டா வயலெல்லாம் விளையாதே..." என்று மழலைச் சொற்களைக் குவிந்த சிறு உதடுகளிலிருந்து குத்திக் காட்டும் தோரணையில் வெளியிட்டாள்.

உடனே கொல்லென்ற சிரிப்பொலி எழுந்தது. அத்தனை பெண்களும் ஏதோ பெரிய வேடிக்கையைக் கண்டுவிட்டவர்கள் போலச் சிரித்தனர். அந்தச் சிரிப்பொலி என் உடலின் ஒவ்வோர் அணுவிலும் நெருப்பைப் பாய்ச்சினாற் போலிருந்தது.

வீட்டுக்குள் வருவோர் கால் கழுவிக் கொண்டு தூய்மையாக வருவதற்காக என் மனைவி வழக்கமாக வாசற்படிக்கு அருகில் ஒரு பெரிய வாளி நிறையத் தண்ணீர் கொட்டி வைத்திருப்பாள். தெருவில் இறங்கி நின்று கொண்டிருந்தவன் ஆத்திரத்தோடு வாசற்படிக்குப் பக்கத்தில் திரும்பிப் பார்த்தேன். கொஞ்சங்கூடக் குறையாமல் வழிய வழியத் தண்ணீரோடு வாளி அங்கே வைக்கப்பட்டிருந்தது. குபீரென்று பாய்ந்து அந்த வாளியைக் கையில் எடுத்தேன். அவர்கள் சிரித்த ஒலி இன்னும் அடங்கக்கூட இல்லை.

"என்ன செய்வேனா? இதோ தெரிந்து கொள்ளுங்கள்" என்றுசொல்லிக் கொண்டே ஒரு வாளித் தண்ணீரையும் எதிரே நின்று கொண்டிருந்த அந்தப் பெண்ணின் தலையில் வீசிக் கவிழ்த்தேன்.

"ஓடுங்கள்! இன்னும் ஒரு விநாடி இங்கு நின்றீர்களோ! உங்கள் எல்லோர் தலைக்கும் இந்த மாதிரி அபிஷேகம்தான் கிடைக்கும்..."

என் எச்சரிக்கையைக் கேட்டும் ஒரு பெண்ணாவது நகரவில்லை. அப்படியேதான் நின்று கொண்டிருந்தார்கள். அந்தத் துணிச்சல்காரி சொட்டச் சொட்ட நனைந்து போய் அப்போதுதான் குளத்தில் முழுகி எழுந்திருந்தவள் மாதிரி நின்றாள். அதே வெட்டுப் பார்வை! அதே அழுத்தம்! குளிர்ந்த தண்ணீர் பட்ட உடல் வெடவெடவென்று நடுங்கியது. கையில் பிடித்துக் கொண்டிருந்த சிவப்பு நிறக் கோலாட்டக் குச்சிகள் நடுக்கத்தினால் தாமாகவே ஒன்றோடொன்று மெதுவாக அடித்துக் கொண்டன. அவள் பார்வை என் முகத்தை விட்டு விலகவே இல்லை. விருட்டென்று பின்னால் திரும்பினாள். "அடியே! ஒருத்தியாவது நகராதீர்கள். எல்லோரும் இப்படி வரிசையாக வந்து முன்னால் நின்று கொள்ளுங்கள். இந்த மாமாவால் எத்தனை வாளி தண்ணீர் தூக்கிக் கொண்டு வந்து கொட்ட முடியுமோ கொட்டட்டும். பார்த்து விடலாம். நமக்கும் பிடிவாதம் பிடிக்கத் தெரியும்!" ரோஷம் நிறைந்த குரலில் அவள் இப்படிக் கட்டளையிட்ட போது மளமளவென்று அத்தனை பெண்களும் முன்னால் வந்து நின்றனர்.

எனக்கு ஏற்பட்ட வியப்புக்கு ஓர் அளவேயில்லை! இந்த ஒரு பெண்ணின் வார்த்தைக்கு இவர்களிடையே இவ்வளவு சக்தியா? என்ன பிடிவாதம்! எவ்வளவு நெஞ்சழுத்தம்? கேவலம், பேதைப் பருவத்து அறியாமை மாறாத இந்தப் பிஞ்சு மனங்களில்கூட இப்படி ஒரு வைராக்கியமா?

அந்தப் பெண்களிடம் சமாதானமாகப் பணிந்து போகவும் ஆண்மையும் கௌரவமும் இடம் அளிக்கவில்லை. "இதோ பார்! இந்தச் சண்டித்தனத்துக்கெல்லாம் நான் பயப்படமாட்டேன். பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாது. மறு பேச்சுப் பேசாமல் இங்கிருந்து போகிறீர்களா? அல்லது உங்களுக்கு அடி உதை வேண்டுமா?" என்று அதட்டினேன்.

"முடிந்தால் அடியுங்கள்; உதையுங்கள்; இன்றைக்கு மட்டுமில்லை; இனிமேலும் பத்தாவது நாள் பசுவனைக் குளத்தில் போட்டு ஜோத்திரை முடிகிற வரையில் இந்த இடத்தில் தான் நாங்கள் கோலாட்டம் போடப் போகிறோம்!" அந்தப் பெண்தான் திமிராகப் பேசினாள். பேசினதோடு நிற்கவில்லை. உடன் நின்றவர்களை மறுபடியும் முன்போலவே வட்ட வியூகத்தில் நிறுத்திக் கொண்டு பிழியப் பிழிய நனைந்த உடம்புடனே கோலாட்டம் போடத் தொடங்கி விட்டாள். அந்தப் பெண் கோலாட்டக் குச்சிகளை அடிப்பதாகத் தோன்றவில்லை. என் நெஞ்சையே அடித்து நொறுக்குவது போல் தோன்றியது.

"யாரோடு இவ்வளவு கூப்பாடு போட்டுக் கொண்டிருக்கிறீர்கள், வாசலில்? - எழுதுவதையும் விட்டு விட்டுச் சண்டை போடுகிறீர்களே?" என்று கேட்டுக் கொண்டே என் மனைவி உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்தாள்.

"நீயே வந்து பார் இந்த அநியாயத்தை! உள்ளே உட்கார்ந்து நிம்மதியாக ஒரு வரிகூட எழுத முடியவில்லை. இந்த நாவலை இன்னும் நாலு நாட்களில் அனுப்பியாக வேண்டும். கோலாட்டம் போடுகிறோம் என்று இந்தப் பெண்கள் அப்போதிருந்து கூச்சல் போட்டு எழுத முடியாமல் சதி செய்கிறார்கள். இங்கேதான் வழக்கமாம். அதனால் இங்கே தான் போடுவார்களாம். நீயாவது கொஞ்சம் வந்து சொல்லேன். உன் வார்த்தையையாவது கேட்கிறார்களா, பார்ப்போம்!" நான் அவளைச் சமாதானத்துக்கு அழைத்தேன்.

பெண்ணுக்குப் பெண் சொன்னால் சமாதானமாகக் கேட்டுக் கொண்டு வேறு இடத்துக்குப் போய்விடுவார்கள் என்பது என் நினைப்பு. ஆனால் அவள் வாசலுக்கு வந்ததும் வராததுமாக அந்தப் பெண்கள் ஓடிவந்து அவளைச் சூழ்ந்து கொண்டு என்னைப் பற்றி முறையிடத் தொடங்கிவிட்டார்கள்.

"மாமீ! மாமீ! உங்கள் வீட்டு மாமா என் மேலே ஒரு வாளி நிறையத் தண்ணீரை அப்படியே கொட்டிவிட்டார்" என்று நனைந்து போயிருந்த தன் உடம்பையும் காலியாயிருந்த வாளியையும் சுட்டிக் காட்டினாள் அந்தத் துடுக்குக்காரப் பெண்.

"மாமீ! மாமீ! நீங்க சொல்லுங்க... நாங்கள் கோலாட்டம் போடுகிறதுனாலேதானே மழை பெய்கிறது?" என்று விரியாத மாதுளை மொட்டுக்களைப் போன்ற உதடுகள் குவிய மழலை மிழற்றியது அந்தக் குழந்தை.

"வழக்கமாக இங்கேதானே கோலாட்டம் போடுவோம்? உங்களுக்குத் தெரியாதா, மாமீ?" என்று அனுபவ பாத்தியதை கொண்டாடினாள் மற்றொரு சிறுமி. அவ்வளவையும் கேட்டுவிட்டு என் மனைவி என்னையே திருப்பிக் கொண்டாள்.

"இதென்ன கூத்து? உங்களுக்கே நன்றாயிருக்கிறதா இது? இந்தப் பெண் தலையிலே ஒரு வாளி பச்சைத் தண்ணீரைக் கவிழ்த்திருக்கிறீர்களே? கோபம் வந்தாலும் மனிதனுக்கு இப்படியும் நிதானம் தெரியாமல் வருமா?"

"என் எழுத்து வேலையைக் குட்டிச்சுவராக்கிவிட்டார்களே! அதில் இந்தப் பெண்தான் ரொம்பப் பொல்லாதவள். மற்றவர்களையெல்லாம் தூண்டி விடுகிறவளும் இவள்தான். எனக்கு என்ன கோபம் வருகிறது தெரியுமா?" என்றேன்.

"போதுமே சமர்த்து! இவளுடைய அப்பா அம்மா தேடிக் கொண்டு வந்து, 'ஏனய்யா நீ ஒரு மனுஷன்தானா? இப்படிச் செய்திருக்கிறாயே?' என்று கேட்டால் தெரியும். வழியை விடுங்கள்; உள்ளே போய் அவளுடைய தலையைத் துவட்டி வருகிறேன்!" என்றாள்.

அவளைத் தொடர்ந்து தெருவில் நின்று கொண்டிருந்த அத்தனை சிறுமிகளும் உள்ளே நுழைந்துவிட்டனர்.

'சரி! இனிமேல் அவள் பாடு! எப்படியாவது சமாதானமாகச் சொல்லி அந்தப் பெண்களை வேறு இடத்தில் போய்க் கோலாட்டம் போடச் செய்துவிடுவாள்' என்றெண்ணிக் கொண்டு அறைக்குள் நுழைந்தேன். எழுதுவதற்காகப் பேனாவைக் கையில் எடுத்தேன்.

ஆனால், அதற்குள் வீட்டின் கூடத்திலிருந்தே கோலாட்டச் சத்தம் கிளம்பியது. "கோலே நல்ல கோலே" என்று பாட்டொலியும் எழுந்தது. கணீர் கணீர் என்று குச்சிகள் அடிபடும் ஓசையோடு என் மனைவியின் குரல் பாடியது காதில் விழுந்தது.

எனக்கு இப்போது வந்த ஆத்திரம் சொல்லி மாளாது. பேனாவை மூடி மேஜைமேல் எறிந்து விட்டு உள்ளே போனேன். உள்ளே கூடத்தில் கண்ட காட்சி என் கோபத்தைப் பன்மடங்கு வளர்த்தது. தெருவில் எந்த வியூகத்தில் நின்றார்களோ, அதே வியூகத்தில் நின்று அந்தப் பெண்கள் கூடத்தில் கோலாட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆட்டத்துக்குப் பதம் பாடுகிறவள்போல் என் மனைவி தனியே நாற்காலியில் உட்கார்ந்து பாடிக் கொண்டிருந்தாள்.

"இதென்ன? வீடா? சத்திரமா? நான் இந்த நாவலை எழுதவிடக்கூடாதென்ற எண்ணமா? இவர்கள் வீதியில் கோலாட்டம் போட்டாலே எழுதுவதற்கு இடையூறாக இருக்கிறது. நீ என்னடாவென்றால் வீட்டுக்குள்ளேயே...?"

"நிறுத்துங்கள்! உங்களுக்கு வருஷம் முந்நூற்றறுபது நாளும்தான் ஏதாவது எழுதிக் கொண்டேயிருக்க வேண்டும்.. அதற்காக ஊர், உலகத்தில் ஒரு நல்லது நடக்காமல் போய்விடுமா! இன்னும் பத்து நாட்களுக்கு இவர்கள் தெருவில், நம் வீட்டுக்கு அருகேதான் கோலாட்டம் போடப் போகிறார்கள். உங்களுக்காக ஊர் வழக்கம் நின்றுவிடாது. நீங்கள் வேண்டுமானால் எங்காவது கண்காணாமல் தோப்பு, துரவு என்று ஊருக்கு வெளியே போய் எழுதிக் கொண்டிருங்கள்."

"ஓகோ! உரிமையைவிட வழக்கத்துக்கு அவ்வளவு உறவா?"

"உங்கள் தத்துவப்பேச்செல்லாம் எனக்குப் புரியாது. இந்த இடத்தில் நீங்கள் விட்டுக் கொடுத்துதான் ஆக வேண்டும்!"

பேசாமல் அறைக்குத் திரும்பி வந்தேன். உள்ளே மறுபடியும் கோலாட்டம் ஓசை கிளம்பியது. ஒரு தபால் கார்டை எடுத்தேன். "அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம். கடுமையான நிமோனியாக் காய்ச்சலால் வேதனைப்பட்டுக் கொண்டிருப்பதால் உங்களிடம் ஒப்புக் கொண்டபடி நாவலை முடித்து அனுப்ப இயலாமற் போய்விட்டது. இன்னும் பதினைந்து நாட்கள் அவகாசமளித்தால் ஒருவேளை முடித்து அனுப்பிவிடலாமென்று எண்ணுகிறேன். சிரமத்துக்கு மன்னிக்கவும்."

முகவரி எழுதிய பின்பு கடிதத்தை நாலு வீடு தள்ளித் தெருவில் ஒரு வேப்ப மரத்தடியில் இருந்த தபால் பெட்டியில் கொண்டு போய்ப் போட்டு விட்டு வந்தேன். மனைவி உள்ளேயிருந்து வந்தாள்.

"உங்களைத்தானே?..."

"என்ன?"

"ஒரு ஐந்து ரூபாய் பணம் வேண்டும்!"

"எதற்காக?"

"பத்துநாட்களும் இந்தப் பெண்கள் நம் வீட்டு வாசலில்தானே கோலாட்டம் போடப் போகிறார்கள். கன்னிப் பெண்களை வெறுங்கையோடு அனுப்பலாகாது. தினம் கொஞ்சம் கல்கண்டும் வெற்றிலை, பாக்கு, மஞ்சளும் வைத்துக் கொடுக்கலாமென்றிருந்தேன்..."

"செய்! இந்தா ரூபாய்..." மறு பேச்சுப் பேசாமல் டிராயரைத் திறந்து ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினேன். அவள் வாங்கிக்கொண்டாள்.

"கோபமா உங்களுக்கு?"

"இல்லை!" என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி முடித்தேன். அவள் உள்ளே சென்றுவிட்டாள்.

காரியத்தைச் சாதிக்கும் திறன், முரண்டு, பிடிவாதம், இதெல்லாம் வயதும், அனுபவமுமுள்ள பெரியவர்களால்தான் முடியுமென்று நீண்ட நாட்களாக ஒரு எண்ணம் எனக்கு இருந்தது. இப்போது அந்த எண்ணம் உள்ளே பன்னிரண்டு பெண்கள் இருபத்து நான்கு கோலாட்டக் குச்சிகளில் எழுப்பிய ஒலியில் சிறிது சிறிதாக உடைந்து கொண்டிருந்தது!

**(கல்கி, 12.1.1958)**



## 27. மல்லன் திருவேங்கடம்

தமிழ்நாட்டின் பழமையான வீரக்குடிமக்கள் அதிகமாக வசிக்கும் சிற்றூர்களில் அதுவும் ஒன்று. கிழக்கு மேற்காக ஒரே தெரு. நூறு வீடுகளுக்குக் குறையாமல் இருக்கலாம். பெரும்பாலும் குடிசைகள்தாம். இரண்டொரு காரை வீடுகளும் இருந்தன. தோப்பு, துரவு, வயல் வெளிகளோடு ஊர் அழகாகத்தான் இருந்தது.

மேலைக் கோடியில் ஆற்றோரத்தில் விசாலமான தோப்பும் அதன் நடுவே தென்னங்கீற்றுச் சார்ப்பு வேய்ந்து ஆசிரமம் போன்ற கட்டிடமுமாகத் தெரிகிறதே, அதுதான் பயில்வான் திருவேங்கடத்தின் வீடு. வீடு மட்டும் அல்ல; கோதா குஸ்திப் பள்ளிக்கூடம் எல்லாமே அதுதான். தோட்டத்து முகப்பில் தஞ்சாவூர் நந்தியைப் போலக் கொழுகொழுவென்று வளர்ந்த தோற்றத்துடன் தென்னமரத்தில் கட்டிப் போட்டிருக்கும் காளை திருவேங்கடத்தின் வளர்ப்புக் காளை. அந்தக் காளைக்கும் அவனுக்கும் அதிகமான வேறுபாடுகள் இருந்ததாகத் தெரியவில்லை. அது நாலு காலால் நடந்து ஊரில் அட்டூழியம் பண்ணிக்கொண்டிருந்தது. அவன் இரண்டு காலால் நடந்து அதைச் செய்து கொண்டிருந்தான். குடும்பம், குழந்தை, குட்டி இந்த மாதிரிப் பிடுங்கல் எதுவும் இல்லாத தனிக்கட்டை அவன். வயது என்னவோ நாற்பதுக்குமேல் ஆகியிருந்தது. தலைமுறை தலைமுறையாக மல்லர்களை உண்டாக்கிக் கொடுத்த பயில்வான் குடும்பத்துக் கடைசி வாரிசு அவன்.

ஆனால், தட்டிக்கேட்க ஆளின்றித் தனியாக வளர்ந்த விடலைத்தனம் அவனைத் தனிமரமாக வளர்த்துவிட்டிருந்தது. ஊரில் அவனை 'வாத்தியாரா'க எண்ணுவதற்குப் பத்து, இருபது முரட்டு வாலிபப் பிள்ளைகள் இருந்தனர். குஸ்தி சொல்லிக் கொடுக்கிறேன் பேர்வழி என்று காலையில் இரண்டு மணிநேரம், மாலையில் இரண்டு மணி நேரம் கோதாவின் புழுதி மண்ணில் அவர்களைப் புரளவிட்டான் அவன். சில சமயங்களில் அவனுக்கும் அவனுடைய விடலைப் பருவத்துச் சீடர் கூட்டத்திற்கும் உற்சாகம் கிளம்பிவிட்டால் பக்கத்து மலைத் தொடரில் வேட்டைக்குப் புறப்பட்டு விடுவதும் உண்டு.

மத்தளம்போல் பருத்த தோள்களும், முன் தள்ளிய பீப்பாய் வயிறும், கரளை கரளையாகச் சதை வைத்த துடைகளுமாகப் பார்த்த மாத்திரத்திலேயே பயில்வான் என்று சொல்லிவிடக்கூடிய தோற்றம் அது. எப்போதும் சிவப்பு மிளிரும் குரூரமான கண்கள். சப்பை மூக்கு, நறுக்கு மீசை, முகம் காண்பதற்கு அவ்வளவு அழகு என்று சொல்லத் தகுதியற்றது. அவசலட்சணம் என்றும் சொல்லிவிடுவதற்கில்லை. ஏதோ ஒருவிதமான முகம் அது. உடல் பலத்தின் திமிரையும் தோற்றத்தின் அச்சுறுத்தும் நிலையையும், முரட்டுச் சீடர் கூட்டம் அளித்து வந்த 'வாத்தியார்' வீறாப்பையும்

வைத்துக்கொண்டு கரையை அழித்து ஓடிச் சுற்றுப்புறத்தையும் பாழாக்கும் பொறுப்பற்ற காட்டாற்று வாழ்க்கை வாழ்ந்து வந்தான் திருவேங்கடம்.

குஸ்திப் பள்ளிக்கூட சீடர் புடைசூழத் தன் கணங்களோடு படையெடுத்து வரும் அரக்கன்போல் அவன் தெருவின் மேலைக் கோடியிலிருந்து புறப்பட்டுவிட்டான் என்றால் அன்றைக்கு கீழைக்கோடியில் யாருடைய கடை வாய்ப் பற்களோ உதிரப் போகின்றன என்றுதான் அர்த்தம். அதே மாதிரி அவனுடைய வளர்ப்புக் காளை அவிழ்த்துக் கொண்டு புறப்பட்டுவிட்டால் யாருடைய வயலில் பயிர் அழியுமோ; தெருவில் எவருடைய குழந்தை முட்டப்படுமோ; ஒன்றும் உறுதியாகச் சொல்வதற்கு இல்லை. இரண்டு 'காளைகளு'மாகக் கேட்பாரற்று ஊரை மேய்ந்துகொண்டிருந்தன. அவனுடைய காளையையாவது அவனே பார்த்து எப்போதாவது போனால் போகிறதென்று குஸ்திப் பள்ளிக்கூடத்து வாசலிலுள்ள தென்னைமரத்தில் கட்டிப் போட்டு வைப்பான். ஆனால், அவனை அந்த மாதிரிக் கட்டிப் போட அந்த ஊரில் அதுவரை ஆண்பிள்ளை பிறக்கவில்லை.

ஆண்பிள்ளைகள் இருந்தார்கள். அவர்கள் நியாய அநியாயம் தெரிந்தவர்களாக; நீதி நேர்மை உணர்ந்தவர்களாக; உள்ளத்தால் வாழ்ந்தார்கள். திருவேங்கடத்தைப் போலவே பயில்வான் குடும்பத்துப் பிள்ளைகளும் வேறு சிலர் அந்த ஊரில் இருந்தார்கள். உடலால் வாழும் வலு அவர்களுக்கு இருந்தும் முயன்று பார்த்து அவனை வெல்லமுடியாதென்று அவநம்பிக்கையடைந்து விட்டுவிட்டார்கள். அதன்பின் எல்லோரையும் போல அவர்களும் உள்ளத்தால் மட்டும் வாழத் தொடங்கிவிட்டார்கள்.

முத்துக் கொத்தனார் மகள் ஆற்றோரமாக மணல் அள்ளுவதற்குப் போனாள். திருவேங்கடத்தின் குஸ்திப் பள்ளிக்கூடத்து வேலி ஓரமாக ஒரு கூடை மணலை அள்ளிவிட்டாள். "இங்கே வந்து மணல் அள்ள உனக்கு என்ன தெம்பு?" என்று இரைந்து கொண்டே வயது வந்த பெண்ணாயிற்றே என்றும் பாராமல் தொட்டுக் கன்னத்தில் அறைந்து கூடையைப் பறித்துக் கொண்டு அவளைத் துரத்திவிட்டானாம் திருவேங்கடம்.

கோதாவில் குஸ்தி பழகும் சீடர் கும்பலுடன் நம்பியார் தோப்பில் நுழைந்து திருவேங்கடம் நாற்பது ஐம்பது இளநீரைக் காலி செய்துவிட்டான். தோப்புக்காரர் நியாயம் பேச வந்தபோது, "இந்த இளநீரைச் சீவியது பொய், உன் தலையைச் சீவப் போவது நிஜம். ஜாக்கிரதையாகப் போய்ப் பிழை!" என்று திமிராகப் பதில் சொல்லி அனுப்பினானாம்.

கிராமம் கிராமமாக ஆடிப் பிழைத்துக் கொண்டிருந்த சர்க்கஸ் கம்பெனி ஒன்று அந்த ஊரில் முகாம் இட்டிருந்தது. மலபார்க்கார நாயர் ஒருவருடைய கம்பெனி அது. திருவேங்கடத்தின் கோதா குஸ்திப் பள்ளிக்கூடத்திற்குப் பக்கத்தில் ஆற்றங்கரை மணற்பரப்பில் சர்க்கஸ் கூடாரம் போட்டிருந்தார்கள். உள்ளூர்க் கூட்டமும், அக்கம் பக்கத்துக் கிராமங்களின் கூட்டமுமாகச் சர்க்கஸுக்கு நல்ல வசூல் ஆகிக்

கொண்டிருந்தது. சர்க்கஸ் வந்த இரண்டு மூன்று நாள் கழித்துக் குஸ்திப் பள்ளிக்கூடத்தில் சாயங்காலம் 'கோதா' நடந்து கொண்டிருந்தபோது அதைப் பற்றிப் பேச்சு அடிபட்டது.

"அண்ணே! சர்க்கஸில் ஒரு பயில்வான் வந்திருக்கிறான் பாருங்கள், உடம்பு சும்மா தகதகவென்று தங்கம்போல மின்னுகிறது. இருநூறு பவுண்டு எடையைப் பூமாலை போடுவதுபோலத் தலைக்குமேலே தூக்கி அலட்சியமாகக் கீழே போடுகிறான்."

திருவேங்கடம் அலட்சியமாகக் கேட்கிறவனைப்போலக் கேட்டுக் கொண்டான் இதை.

"அதெல்லாங்கூட வேடிக்கை இல்லை. தன்னுடைய இரண்டு உள்ளங் கைகளிலும் பாதங்களை வைத்துக்கொள்ளச் சொல்லி மோகினி போன்ற ஒரு பெண்பிள்ளையை அப்படியே அந்தரத்தில் தூக்குகிறான் அந்தப் பயில்வான். பிரமாதமான வேலை ஐயா!"

இன்னொருவன் அந்தப் பயில்வானின் பிரதாபத்தைத் தொடர்ந்தான். திருவேங்கடத்தின் கண்களில் பெறாமை மின்னியது. தன்னிடம் குஸ்தி பயிலும் சீடர்கள் தன்பெருமையைத் தவிர இன்னொருவன் பெருமையைப் பேசி அவன் கேட்டதில்லை. சீடர்கள் குஸ்தியையும் மறந்து எவன் பிரதாபத்தையோ அளப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் அதை வெளிக்காட்டிக் கொள்ளாதவனைப் போல், "ஏண்டா, கோதாவில் நின்று கொண்டு குஸ்தி பழகுவதையும் மறந்து ஒரேயடியாக அளக்கிறீர்களே! அது யாரடா அவன்; அப்படிப் பெரிய கொம்பன்!" என்றான்.

"கொம்பன்தானுங்க. நீங்கள் பார்த்தால் அப்படியே அசந்து போவீர்கள்."

"சீ! மூடு வாயை!" திருவேங்கடம் எரிந்து விழுந்தான். சீடர்கள் 'கப்சிப்'பென்று அடங்கிப் போய் நின்றார்கள். சர்க்கஸ் கம்பெனியின் பாண்டு வாத்திய முழக்கம் அப்போதுதான் ஒலிக்கத் தொடங்கியிருந்தது. இன்னும் சிறிது நேரத்தில் சர்க்கஸ் ஆரம்பமாகப் போகிறது என்பதற்கு முன்னறிவிப்பு அந்த ஒலி.

"டேய் புறப்படுங்களடா; அந்தக் கொம்பனையுந்தான் பார்த்துவிடலாமே!" - திருவேங்கடத்தின் குரல் மிடுக்கும் கடுப்பும் கலந்து ஒலித்தது. அடுத்த விநாடியில் அரைக்குச் சல்லடம் மட்டும் தரித்துக்கொண்டிருந்த குஸ்தி உடையை நாகரிகமாக மாற்றிக்கொண்டு அந்தக் கூட்டம் சர்க்கஸ் கொட்டகையை நோக்கிக் கிளம்பிவிட்டது.

அசைந்து அசைந்து நடக்கும் மதயானைப்போல் திருவேங்கடம் முன்னால் நடக்க, சீடர் கோஷ்டி பின்தொடர்ந்தது. தூரத்திலிருந்து அதைப் பார்த்த உள்ளூர் ஆட்கள் சர்க்கஸ் கம்பெனிக்காரனுக்காக மனத்தில் அனுதாபப்பட்டுக் கொண்டு ஒதுங்கிச் சென்றார்கள்.

கொட்டகை வாசலில் டிக்கட் சரி பார்த்து உள்ளே விடுகிறவன் அந்தக் கும்பலைத் தடுத்து நிறுத்தினான். கூட்டமாகப் படையெடுத்து வருவதுபோல் இருபது முப்பது பேர் டிக்கட் வாங்காமல் உள்ளே நுழைய முயன்றால் அவன் எப்படி விடுவான்?

திருவேங்கடம் வலக்கையை உயர்த்தி மீசை நுனியைத் தடவிக் கொடுத்தான். உதடுகளில் அலட்சியமான கேலிச் சிரிப்பு இழையோடியது. பார்வை முறைத்தது.

"தம்பிக்கு ஊர் வளமுறை ஒன்றும் தெரியாது போலிருக்கிறதே?"

குத்தல் நிறைந்த இந்தக் கேள்வியின் அர்த்தம் புரியாமல் டிக்கட் சரிபார்க்கிற ஆள் திகைத்தான். அவன் மலையாளி. தமிழ் கொஞ்சம் கொஞ்சம் தெரியும். திகைப்பும் பயமும் கொண்டு மிரண்ட நோக்கால் திருவேங்கடத்தை நிமிர்ந்து பார்த்தான் அவன்.

"என்ன தம்பி, முறைத்துப் பார்க்கிறாய்?" முழுக்கைச் சட்டையின் கையை மேல்நோக்கி மடக்கிவிட்டான் திருவேங்கடம். சத்தமும் கூப்பாடும் வலுத்தன. குழப்பம் ஏற்பட்டது. இன்னும் சிறிது நேரத்தில் கைகலப்பு ஏற்பட்டுவிடும் என்று சொல்லக்கூடிய நிலை.

அந்தச் சந்தர்ப்பத்தில் சர்க்கஸ் கம்பெனி பயில்வான் திரையை விலக்கிக்கொண்டு வாசல் பக்கமாக வந்தான். திருவேங்கடத்தைச் சிறிதுநேரம் உற்றுப் பார்த்ததும் கட்டுடலும் ஆண்மையின் அழகும் ஒருங்கு நிறைந்த சர்க்கஸ் கம்பெனிப் பயில்வானின் முகத்தில் மலர்ச்சி ஏற்பட்டது.

"அடேடே! வாருங்கள், வாருங்கள். நீங்கள்தானே திருவேங்கடம்? நான் உங்களைப்பற்றி இந்த ஊருக்கு வந்ததுமே கேள்விப்பட்டேன். நானாகவே வந்து உங்களைச் சந்திக்க நினைத்திருந்தேன். தற்செயலாக இருவருமே சந்தித்துவிட்டோம்."

வேகமாக முன்னால் நடந்து வந்த திருவேங்கடத்தின் கையைப் பிடித்துக் குலுக்கினான் அவன். திருவேங்கடம் அசடு வழியச் சிரித்தான். அவன் இதை எதிர்பார்க்கவே இல்லை. டிக்கெட் சரி பார்க்கிற ஆளிடம் மலையாளத்தில் ஏதோ சொல்லிவிட்டுத் திருவேங்கடத்தினிடம் நீண்டநாள் பழகிய நண்பனைப்போல் தோளில் கைப்போட்டு உள்ளே அழைத்துக்கொண்டு போய்விட்டான் சர்க்கஸ் கம்பெனிப் பயில்வான். திருவேங்கடத்தின் சீடர்கள் கூட்டத்தையும் டிக்கட் இல்லாமல் உள்ளே விட்டுவிட்டார்கள். கொட்டகைக்குள் போனதும் சீடர் கூட்டத்தைத் தரை மகா ஜனங்களோடு உட்காரச் செய்துவிட்டுத் திருவேங்கடத்தை மட்டும் தான் தங்கியிருந்த கூடாரத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றான் அந்தப் பயில்வான். வெல்வெட் மெத்தை தைத்த சோபாவில் அவனை உட்கார வைத்தான். ஒன்றும் சொல்ல, செய்ய, நினைக்க, அவகாசமின்றி அவனுடைய சிரிப்பிலும் முகமலர்ச்சியிலும் பேச்சிலும் மூழ்கிப் போனான் முரட்டுத் திருவேங்கடம்.

சர்க்கஸ் பயில்வான் உட்புறமாகத் திரும்பி யாரையோ கூப்பிட்டான். வெண்ணிற சர்க்கஸ் கவுனும், கால் அங்கியும் அணிந்த இளம்பெண் ஒருத்தி சிரித்த முகத்துடனே திரைமறைவிலிருந்து வெளிவந்து வணங்கினாள். யாரை வணங்குகிறாளோ என்று இரண்டொரு விநாடிகள் அயர்ந்து பேசாமல் இருந்த திருவேங்கடம் பின்பு தன்னைத்தான் வணங்குகிறாள் என்று தெரிந்ததும் சமாளித்துக்கொண்டு பதிலுக்கு வணங்கி வைத்தான்.

"நேற்றுக் கேள்விப்பட்டோமே; இந்த ஊர் பயில்வான் திருவேங்கடம்; அவர்தாம் இவர்."

"இவள் என்னுடைய தங்கை ஓமனே."

அப்போது அணிந்திருந்த சர்க்கஸ் உடையில் அவள் மின்னல் கொடி போன்றிருந்தாள். நினைவு தெரிந்த நாளிலிருந்து நாற்பது வயது வரை முரட்டுக் கல்லாகவே இறுகி வந்த திருவேங்கடத்தின் மனத்தில் அதுவரை ஏற்பட்டிராத ஒரு நளினமான நெகிழ்ச்சி பிறந்தது.

"உங்களைப் போன்ற திறமைமிக்க பயில்வான்கள் இப்படிக் கிராமத்து இருளில் மறைந்து வாழக்கூடாது. சரியான இடத்தில், சரியான பதவியில் இருந்தால் எவ்வளவோ பேரும் புகழும் பெற வேண்டியவர் நீங்கள்." சர்க்கஸ் பயில்வான் ஆர்வத்தோடு பேசினான்.

"எங்கே நமக்கு அதற்கெல்லாம் நேரம் இருக்கிறது? ஏதோ ஊரோடு இருந்து நாலு பிள்ளைகளுக்குக் குஸ்தி சொல்லிக் கொடுத்துக் கொண்டு காலத்தைக் கடத்துகிறேன்."

பயில்வானின் தங்கை இரண்டு பீங்கான் தட்டுகளில் பிஸ்கோத்தும் தேநீரும் கொண்டு வந்து வைத்தாள்.

"எடுத்துக் கொள்ளுங்கள்."

"எதுக்குங்க... இதெல்லாம்?"

"எங்கள் அன்பை மறுக்கக்கூடாது!" திருவேங்கடத்தைப் பார்த்து இப்படி வேண்டிக் கொண்டு முல்லை அரும்பைச் சரம் தொடுத்துக் கட்டினதுபோல் சிரித்தாள் அந்தப் பெண்.

திருவேங்கடம் களித்தான். கிளாஸ்கோ பிஸ்கோத்தும் தேநீரும் இனித்தன. பவளம் பூட்டவிழ்ந்து முத்துவரிசை வெளித்தோன்றியது போன்ற செவ்விதழ் விரித்து அந்தப் பெண் சிரித்த சிரிப்போ அவன் உள்ளத்தில் இனித்தது.

"அண்ணா! இன்றைக்கு இவரை மேடையிலேயே உட்காரச் செய்து நம்முடைய ஆட்டத்தைக் காணச் செய்ய வேண்டும். ஆளைப் போக விட்டு விடாதீர்கள்!" அவள் குறும்பு மிளிரும் சிரிப்போடு அண்ணனிடம் கூறினாள்.

"ஓமனே, மேடையில் உட்கார்த்துவதோடு இவரை விடப் போவதில்லை நான். இன்றைக்கு ஆட்டத்துக்கே இவரைத் தலைமை வகித்துத் தொடங்கி வைக்கும்படி செய்யப்போகிறேன். முடிவுரையில் இவர் நமக்கு வாழ்த்துக் கூறுவார்."

"சபாஷ்! சரியான யோசனை!" சிறு குழந்தை போலக் கை கொட்டிச் சிரித்தாள் அவள். தான் மேடையில் உட்கார முடியாதென்றும் கீழேயே உட்கார்ந்து ரசித்துவிட்டுப் போவதாகவும் அவர்களிடம் எவ்வளவோ மன்றாடிப் பார்த்தான் திருவேங்கடம். முடியவில்லை. பயில்வானும் அவன் தங்கை ஓமனேயும் பிடிவாதமாக அவனை மேடையில் கொண்டு போய் உட்கார்த்திவிட்டார்கள்.

சூட்டும் பூட்ஸும் பட்டுக் குல்லாயுமாக அணிவகுத்து வீற்றிருந்த பாண்டு வாத்தியக்காரர்களுக்கு அருகில் காஸ்லைட்டுகளின் கண்ணைக் கூச வைக்கும் ஒளி வெள்ளத்தின் இடையில்,. கீழே தரையில் உட்கார்ந்திருந்த கூட்டமெல்லாம் பார்க்கும்படி, சோபாவில் மேடைமேல் அமர்ந்திருப்பது என்னவோ போல் இருந்தது திருவேங்கடத்துக்கு. கூட்டத்தில் இருப்பவர்களெல்லாம் தன்னையே பார்ப்பது போல, தன்னைப்பற்றியே பேசிக் கொள்வதுபோல, அவன் மனத்தில் ஒரு பிரமை உண்டாயிற்று. அப்படி அங்கே வீற்றிருக்கத் தான் தகுதியில்லாதவன் போன்றதொரு தாழ்வு மனப்பான்மை அவனுள்ளேயே உண்டாயிற்று.

சர்க்கஸ் பயில்வான் ஆட்டம் ஆரம்பிப்பதற்கு முன்னால் திருவேங்கடத்துக்கு மாலை போட்டான். விழாவைத் தொடங்கி வைப்பதற்காக பேச எழுந்திருந்தபோது திருவேங்கடத்துக்கு வேர்த்துக் கொட்டியது. நடுங்கியது. ஏதோ உளறிக் குழறி ஒருவாறு பேசினான்.

ஆட்டம் ஆரம்பமாயிற்று. பயில்வானின் தங்கை 'பார்' விளையாடினாள். குறிவைத்து மரப்பலகையில் கத்தி எறிந்தாள். திருவேங்கடத்துக்கு எல்லாமே ஆச்சரியமாக இருந்தது. 'அவள் சாதாரணப் பெண்பிள்ளைதானா? அல்லது மந்திர சக்திகள் பெற்ற தேவதையா?' என்று பிரமித்தான் அவன்.

பயில்வான் எடை தூக்கும் கட்டம் வந்தது. அன்றைக்கு அதிகமாக ஐம்பது பவுண்டு தூக்கிக் காட்டினான் அவன். அதன்பின் கோயில் கருடவாகனம் போல இரண்டு உள்ளங்கைகளையும் முன்புறம் நீட்டிக் கொண்டு கீழே அமர்ந்தான். நீட்டிய கைகளின் மேல் அவனுடைய தங்கை பாதங்களைத் தூக்கி வைத்து ஏறினாள். அப்படியே உள்ளங்கைகளில் அவள் பாதத்தைத் தாங்கி அவளை மேலே தூக்கிக் கொண்டு எழுந்தான் பயில்வான். அந்தக் காட்சியோடு சர்க்கஸ் முடிந்தது. திருவேங்கடம் போன்ற திறமைசாலிகள் இருப்பது ஊருக்கே பெருமை என்றான் சர்க்கஸ் பயில்வான். திருவேங்கடம் தலைமை வகித்ததற்கு நன்றி கூறிப் புகழ்ந்தான். அப்போது கூட்டத்தில் இலேசாகக் கைதட்டல் எழுந்தது. திருவேங்கடத்தின் சீடர்களுடைய கைகள் அவை.

அன்றிரவு தன்னுடனேயே விருந்துண்ட பின்புதான் திருவேங்கடத்துக்கு விடை கொடுத்தான் சர்க்கஸ் பயில்வான். மறுநாள் காலையில் சர்க்கஸ் பயில்வானும், அவன் தங்கையும் திடீரென்று முன் தகவல் இல்லாமல் திருவேங்கடத்தின் குஸ்திப் பள்ளிக்கூட 'கோதா'வுக்கு விஜயம் செய்துவிட்டனர். சீடப்பிள்ளைகளுக்குப் பெருமை தலைகால் புரியவில்லை.

சர்க்கஸ் பயில்வானின் தங்கை குஸ்திப் பள்ளிக்கூடத்து வாசலில் கட்டியிருந்த காளையைப் பார்த்து ஆச்சரியப்பட்டு, "இது எங்கள் சர்க்கஸில் இருந்தால் இதை வைத்துக் கொண்டு நல்ல வித்தைகளைப் பழக்கிக்காட்டலாம்" என்று வேடிக்கை யாகச் சொன்னாள். அதையே வேத வாக்காக எடுத்துக்கொண்டு அன்று மாலையே காளையைக் கொண்டு போய்ச் சர்க்கஸ் கொட்டகையில் கட்டிவிட்டுத்தான் திரும்பினான் திருவேங்கடம்.

அதன்பின்பு குஸ்திப் பள்ளிக்கூடத்து வகுப்புகள் காலையிலும் மாலையிலும் ஒழுங்காக நடக்கவில்லை. 'கோதா'வில் குஸ்திப் பயிற்சி அளிக்க வேண்டிய வாத்தியார் எப்போதும் சர்க்கஸ் கூடாரத்தில் வம்பளந்து கொண்டிருந்தால் பள்ளிக்கூடம் எப்படி நடக்கும்?

"வாத்தியாருடைய காளையைச் சர்க்கஸ் கொட்டகைக்குக் கொடுத்துவிட்டார். அது அங்கே பழகவேணும், பாருங்கள். அதற்காக கொஞ்ச நாளைக்குப் பழக்கிக் கொடுத்துவிட்டு வருவதற்காகப் போய் வந்து கொண்டிருக்கிறார்" என்று கேட்டவர்களுக்குப் பதில் சொல்லி வாத்தியாரின் கௌரவத்தைக் கொஞ்ச நாளைக்குக் காப்பாற்றிக்கொண்டிருந்தார்கள் சீடப்பிள்ளைகள். பின்பு அவர்களும் அலுத்துப்போய் அந்த மாதிரி பதிலைச் சொல்வதை நிறுத்திக் கொண்டார்கள்.

"எனக்கு அன்றைக்கே தெரியுமே; எப்போது வாத்தியார் அந்தக் காளையை அவிழ்த்துக்கொண்டு போனாரோ, அப்போதே அந்தச் சர்க்கஸ்காரி அவரை அவிழ்த்துத் தலைப்பிலே முடிந்து கொண்டாள் என்று புரிந்துவிட்டதே!" என்று மிகவும் நயமாக மற்றவர்களுக்கு விஷயத்தை விளக்கினான் ஒரு சீடன்.

ஒன்றறை மாதத்துக்குப் பிறகு சர்க்கஸ் கம்பெனி ஒரு நாள் இரவு அந்தக் கிராமத்தைவிட்டுக் குடி பெயர்ந்தது. மறுநாள் காலை திருவேங்கடத்தை ஊரில் காணவில்லை. எங்கே போயிருப்பான்? தெரிந்த விஷயந்தானே?

**(கலைமகள், தீபாவளி மலர், 1958)**

## 28. வழுக்கு மரம்

அந்தப் பெண் சிரித்தாள்!

வெற்றிலை போட்டுக் கொண்ட வெளிர்ச் சிவப்புப் படிந்த அழகான, அளவான பல்வரிசையில் அவளுடைய நெஞ்சின் களிப்பெல்லாம் ஒருகணம் நிழலாடி மறைந்தன.

அவளுக்கும் எனக்கும் இடையே நாலரை அடி அகலமும் இரண்டு மூன்று அடி நீளமுமுள்ள ஒரு மேஜை கிடக்கிறது. மேஜைக்கு அப்பால் எதிரே மற்றொரு நாற்காலியில் அவள் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள்.

வெளியே காம்பவுண்டுச் சுவருக்கு அருகில் புழுதி நிறைந்து மேடும் பள்ளமுமாக தூய்மையற்று விளங்கும் கிராமத்துச்சாலையில் அவள் வந்து இறங்கிய அழகான கார் நிற்கிறது. பலாப்பழத்தை மொய்த்துக் கொள்ளும் ஈக்களைப் போல் காரை அதிகம் பார்த்திராத கிராமத்துச் சிறுவர்கள் அருகில் வர அஞ்சி, எட்டி நின்றே வேடிக்கைப் பார்க்கிறார்கள்.

அது ஒரு கிராமத்துப் பள்ளிக்கூடம்! சிறுவர் சிறுமிகளின் குரல்கள், ஆசிரியர்களின் அதட்டல், பிரம்படி ஓசை இவ்வளவும் நிறைந்த சூழ்நிலையின் நடுவே நாங்கள் எதிரும் புதிருமாக உட்கார்ந்து கொண்டிருந்தோம்.

அவள் அமைதியைக் கலைத்துப் பேசினாள்.

“இரயில் பாதைக்கு முப்பது மைலுக்கு இப்பாலும், கார்கள் செல்லும் சாலைக்கு எட்டுமைல் அப்பாலும் உள்ள இந்தப் பட்டிக்காட்டுக் குக்கிராமத்தில் இருந்து கொண்டு உங்களால் எப்படிப் பத்திரிகைகளுக்கு எழுத முடிகிறது?”

“அப்படி இருப்பதனால்தான் நிறைய எழுத முடிகிறது” என்று சிரித்துக்கொண்டே பதில் சொன்னேன்.

நாங்கள் அமர்ந்திருந்த அறையைச் சுற்றிலும் கசுமுசுவென்று பேச்சுக் குரல்கள் கேட்டன. பக்கத்தில் ஆசிரியர்கள் ஓய்வு நேரத்தில் தங்கும் அறை. அதற்கும் நாங்கள் உட்கார்ந்து கொண்டிருந்த இடத்துக்கும் நடுவே இடையிடையே கிழிந்த ஒரு மூங்கில் தட்டியை மறைப்பாக வைத்திருந்தார்கள். தட்டியின் இடுக்குகள் வழியே எத்தனையோ கண்கள் எங்களைப் பார்த்துக் கொண்டிருக்கின்றன! எத்தனை சிறுவர்கள் அந்தப் பெண் என்னோடு உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதை ஒரு அதிசயமாக எண்ணி நின்று வேடிக்கை பார்க்கிறார்கள்!

தரையில் புரளுவதுபோல் அணிந்த வாயில் புடவையும் குதிகால் உயர்ந்த, வெள்ளை நாகரிகத்தை வெளிக்காட்டும் பூட்சும், முழங்கைவரை இறுக்கிப் பிடித்த

சோளியுமாக ஒரு அழகிய இளம்பெண் தானே காரை ஓட்டிக் கொண்டு வந்து இறங்கினால் கிராமத்தில் அது ஆச்சரியம்தானே?

"யாரோ ஒரு அம்மா உங்களைத் தேடிக் கொண்டு காரில் வந்து காத்திருக்கிறார்கள்" என்று படிப்பு நடத்திக் கொண்டிருந்த என்னிடம் பள்ளிக்கூடத்துச் சேவகன் வந்து சொன்னதே எனக்கு வியப்புத் தாங்கவில்லை.

துள்ளி எழுந்து வரும் மான்குட்டிப் போல் காரின் முன்புறத்துக் கதவைத் திறந்து கொண்டு அவள் இறங்கினாள்; வணங்கினாள். பதிலுக்கு வணங்கி வைத்தேன். 'வாருங்கள்' என்று கூற நினைத்தேன். சொற்கள் வரவில்லை. 'யார்?' என்று கேட்க எண்ணியும் கேள்வி வரவில்லை. "சகுந்தலை! உங்கள் வாசகர்களில் ஒருத்தி. உங்களை நேரில் பார்த்துவிட வேண்டுமென்று ஆசை. காரை எடுத்துக் கொண்டு வந்தேன்." அவளே முந்திக்கொண்டு சொல்லிவிட்டாள்.

"ஓ! நீங்களா? அடிக்கடி கடிதங்கள் எழுதியிருக்கிறீர்களே?"

"கடிதங்கள் எழுதியது மட்டும் நினைவில் வைத்துக்கொண்டிருக்கிறீர்கள். ஒரு வரி பதிலைப் போடுவதற்கு மட்டும் உங்களுக்கு நினைவில்லை போலிருக்கிறது?" - குறும்பு கொப்பளிக்கும் குமிண் சிரிப்பு. அதோடு குத்தலாக ஒரு கேள்வி.

"எங்கே பதில் எழுத முடிகிறது?" இந்தப் பதிலில் மட்டுமன்று, இதைச் சொல்லிவிட்டு நான் சிரித்த சிரிப்பிலும் அசடு வழிந்திருக்க வேண்டும். இதற்குள்ளேயே காரைச் சுற்றிலும் பள்ளிக்கூடத்து வாசலிலும் கூட்டம் கூடிவிட்டது.

"சகுந்தலை! வாருங்கள்; உள்ளே உட்கார்ந்து பேசலாம்."

அங்கே அப்படிப் பல பேர்கள் கூடிய கூட்டத்துக்கு நடுவில் தெருவில் நின்று அவளோடு பேசுவது என்னவோ போலிருந்தது எனக்கு. ஆகவேதான் அவளை உள்ளே அழைத்துச் சென்றேன். இதுதான் சகுந்தலை என்ற அந்த அழகி என்னைத் தேடிவந்த விவரம்.

உள்ளே அழைத்துச் சென்று எதிரே உட்கார வைத்துப் பேசிக் கொண்டிருந்தேன். நான் எழுத்தாளன். அவள் ரசிகை. அது மற்றவர்களுக்குப் புரிந்தால்தானே? கூடிக் கூடிப் பேசுவதும், குறிப்பாக வந்து எட்டிப் பார்ப்பதும் அநாகரிகமாகப் பட்டது எனக்கு.

பள்ளியில் விடுமுறை பெற்றுக் கொண்டு "வாருங்கள், வீட்டுக்குப் போகலாம்" என்று அவளையும் அழைத்துக்கொண்டு அவள் காரிலேயே வீட்டுக்குப் புறப்பட்டேன். வழியில், வாசலில், தெருவில், எங்கும் ஏதோ நடக்கக்கூடாதது நடந்து அதைப் பார்ப்பதுபோல் ஒரு பார்வை. வீட்டு வாசலில் கார் வந்து நின்ற ஓசையைக் கேட்டு உள்ளே கை வேலையாக இருந்த என் தாய் கதவைத் திறந்தாள். அவளுக்கே ஆச்சரியம், பயம், பிரமிப்பு எல்லாம் ஏற்பட்டிருக்க வேண்டும். நானும், சகுந்தலையும் காரிலிருந்து இறங்கி வீட்டுக்குள் நுழைந்தபோது அம்மாவின் கண்களிலும் முகத்திலும் ஓடி மறைந்த உணர்வின் சாயல்களைக் கண்டு அதை நான் புரிந்து கொண்டேன்.

"ஏன் இப்படிக் காணாததைக் கண்டுவிட்டதுபோல் வெறித்துப் பார்க்கிறார்கள்? இந்த ஊர் மக்களின் கண்களுக்கு இலக்கான முதல் மோட்டார் கார் இதுதானா?" வீட்டுக்குள் நுழையும்போது சகுந்தலை சிரித்துக்கொண்டே என்னிடம் இப்படிக் கேட்டாள்.

"சகுந்தலை! இது கிராமம். இங்கே அறிவைவிட உணர்ச்சிக்குத்தான் அதிக மதிப்பு. நல்லதை நினைக்க எவ்வளவோ நேரமாகும். தீயதை உடனே நினைப்பார்கள்; செய்வார்கள்."

"கதைகளில் எழுதுவதுபோலவே அழகாகப் பேசுகிறீர்கள்! பேச்சுக்குச் சொல்லவில்லை. உண்மையாகவே சொல்கிறேன்."

அவள் சிரித்துக்கொண்டே என்னைத் தன் மலர்விழிகளால் பார்த்தாள்.

வரிசை வரிசையாகப் புத்தகங்கள் அடுக்கிய கண்ணாடி பீரோக்களும், மூலைக்கு மூலை குவிந்து கிடக்கும் பத்திரிகைகளும், மாத இதழ்களும், கடிதங்களும் நிறைந்த என் எழுத்தறைக்குள் அவளை அழைத்துச் சென்று உட்காரச் சொன்னேன். சந்தேகமும், பீதியும், பரபரப்பும் கொண்ட அம்மாவின் முகம் அறைக்குள் அப்போது எங்களை எட்டிப் பார்த்துவிட்டுச் சென்றதைக் கவனித்தேன். சகுந்தலையும் கவனித்தாள் போலும்.

"உங்கள் தாயாரா?"

"ஆமாம்! இங்கே உட்கார்ந்து ஏதாவது படித்துக்கொண்டிருங்கள், இதோ வந்துவிடுகிறேன்."

அவளை அங்கே உட்காரச் செய்துவிட்டு வீட்டின் உட்புறம் சென்றேன். தேன் நாடிப் பசித்துத் திரியும் அழகும் துறுதுறுப்பும் மிக்க வண்டு ஒன்றைத் தேன் துளும்பும் மலர்கள் ஏராளமாகப் பூத்துக் கிடக்கும் ஒரு சோலைக்குள் விட்டுவிட்டு வந்தது போன்ற உணர்ச்சி அப்போது என் மனத்தில் நிறைந்திருந்தது. எல்லைக்கு அடங்காத பெருமித உணர்ச்சி ஒன்று என் மனம் நிறையத் தளும்பி வழிந்துகொண்டிருந்தது என்றும் சொல்லலாம்.

"ஏண்டா! இதெல்லாம் உனக்கே நன்றாயிருக்கிறதா? யாரோ, ஊர் பேர் தெரியாத வயதுப் பெண்ணைக் கூப்பிட்டுக்கொண்டு வந்து இப்படி வீட்டுக்குள் உட்கார்த்திப் பேசுகிறாய்! இதெல்லாம் வீண் பழியாகப் பேச்சுக்களை உண்டாக்கும். நாலுவிதமாக நாக்கில் நரம்பின்றிப் பேசுவார்கள். ஊர் வாயில் விழுந்து கெட்ட பெயரைக் கட்டிக் கொள்ளாதே!"

என் நெஞ்சத்துப் பெருமிதங்கள் சுக்கு நூறாக உடைந்து சிதறின. முகத்தைச் சுளித்துச் சினம் பொங்கும் பார்வையால் அம்மாவைப் பார்த்தேன். படபடப்பாகப் பேசி முடித்த சாயலோடு அம்மா எதிரே நின்று கொண்டிருந்தாள்.

நல்லவேளை! அம்மா கூறிய இந்த வார்த்தைகள் சகுந்தலையின் செவிகளில் விழுந்திருக்க முடியாது. உள்வீட்டில் அடுக்களையின் ஒரு மூலையில் ஒடுங்கிய குரலில்

என்னை நோக்கிக் கூறப்பட்ட சொற்கள் முன்புற அறையில் வீற்றிருக்கும் அவளுக்குக் கேட்டிருக்க நியாயமில்லை.

"அம்மா! இரையாதே. அந்தப் பெண்ணின் காதில் விழுந்தால் ஏதாவது நினைத்துக் கொள்வாள். பாவம் என்னைப் பார்த்துப் பேசிவிட்டுப் போக வேண்டுமென்று வெகுதூரத்திலிருந்து தேடி வந்திருக்கிறாள். காப்பி பலகாரம் தயார் செய் அம்மா!"

என் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் மறுபடியும் ஆத்திரப்பட்டுப் பேசினாள் அம்மா. கோபம் குமுறிக் கொண்டு வந்தும் தாயாரிடம் அதை வெளிக் காட்டிக் கொள்ள முடியாமல் தவித்தேன். நீண்ட நேரத் தர்க்க விவாதத்துக்குப் பின் தாயாரிடம் நயந்து பேசி ஒரு வழியாகக் காப்பி பலகாரத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டு மீண்டும் முன்புறத்து அறைக்குத் திரும்பினேன்.

"சகுந்தலை... நீங்கள்..." அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்த நான், திகைத்துப் போய்ப் பேச்சைப் பாதியிலேயே நிறுத்திவிட்டேன். தாயாரிடம் சாப்பிடமாட்டேனென்று முரண்டு பிடிக்கும் சிறு குழந்தை போல் முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டிருந்தாள் அவள். அவள் கையில் தூசி படிந்து சுருண்டு மடிந்த காகிதம் ஒன்று இருந்தது.

எனக்குப் புரிந்துவிட்டது. சில வாரங்களுக்கு முன் வெளி வந்த என்னுடைய சிறுகதை ஒன்றை அவள் மனம் திறந்து பாராட்டி எழுதிய விரிவான கடிதம் அது. கடிதங்களைப் பத்திரப்படுத்தி அழகாக மடித்து 'ஃபைல்' செய்து வைக்கும் 'கெட்ட பழக்கம்' என்னிடம் கிடையாது. அறைக்குள் மூலைக்கு மூலை கவனிப்பாரற்றுச் சிதறித் தூசி படிந்து கிடக்கும் அவை எப்போதாவது இரண்டு மூன்று மாதங்கள் கழித்து அம்மா அறையைப் பெருக்கி மெழுக வரும்போது அவைகளுக்கு விமோசனம் பிறக்கும்.

குழந்தைத்தனமான அவள் இரசிகத்தன்மை; குழந்தைத்தனமான அவள் கோபம்; இரண்டையும் எப்படிச் சமாளிப்பதென்றே எனக்கு விளங்கவில்லை.

"சகுந்தலை!... வந்து நீங்கள் தப்பாக நினைத்துக் கொள்ளக்கூடாது." நான் சிரித்து மழுப்பிப் பேசி அவள் கோபத்தைத் தணிக்க முயன்றேன்.

"நீங்களெல்லாம் பெரியவர்கள். இலட்சிய எழுத்தாளர்கள். என்னைப்போல் ஒரு அசட்டுப் பெண் பாராட்டித்தான் உங்கள் எழுத்து வளர வேண்டுமா? ஏதோ தத்துப்பித்தென்று எழுதித் தொலைத்திருக்கிறாளே என்று கிழித்துக் குப்பைத் தொட்டியில் போடாத குறையாக வாங்கி மூலையில் போட்டு வைத்திருக்கிறீர்கள்!"

சரியான சவுக்கடி! சகுந்தலை என் உள்ளத்தில் மிக மிருதுவான பாகத்தில் அடித்துவிட்டாள். சற்றுமுன் அவள் தேடி வந்தபோது என் மனத்தில் எத்தனை ஆயிரம் பெருமிதக் கனவுகளை அவள் எழுப்பினாள். தற்செயலாக நேர்ந்த ஒரு சிறிய தவற்றினால் அவள் மனத்தை வருத்த நேர்ந்துவிட்டதே. எனக்கே நான் தவறு செய்துவிட்டேனென்று தோன்றியது.

*பலகாரம் வந்தது; காப்பி வந்தது. சகுந்தலையின் வயிறு நிறைந்திருக்கலாம்! ஆனால் மனம்? அவள் அந்தக் கடிதத்தைப் பார்ப்பதற்கு முன்பிருந்த மலர்ச்சி, சிரிப்பு, குறும்புப் பேச்சு எல்லாம் பார்த்தபின்பு எங்கோ போய் ஒளிந்து கொண்டன. சாயங்காலம் ஐந்து மணி வரை இருந்தாள். பின்பு விடைபெற்றுக் கொண்டு போய்விட்டாள். மனத்தில் குறைவோடு சடைவோடுதான் அவள் போனாள். எனக்கும் புழுதியில் நடந்து வந்த காலோடு பூவை மிதித்துவிட்டதுபோல் - தெரியாமல் மிதித்துவிட்டுத் தெரிந்தபின் அருவருப்பும் தன்னை நொந்து கொள்ளுதலும் அடைவது போல் அந்த நிகழ்ச்சி உள்ளத்தில் தைத்து நிலைத்துவிட்டது.*

*அன்றிரவு முழுவதும் தூக்கமில்லை. வட்ட முழுமதியும் அதில் கருவண்டுகளாய்ச் சுழலும் கண்களும், அழகும், அளவும் பொருந்திய அந்த செம்பவழமாய்ச் சிறு முறுவலும், நினைவில் வந்து வந்து என்னை நோகச் செய்தன.*

*அமைதியும், மந்தமும் உள்ள கிராமத்தில் நாட்கள் ஆமைகளாய் நகர்ந்தன. திரும்பத் திரும்பக் குசேலர் கதையையும், நளன் கதையையும் அறிவுக் கூர்மையற்ற கிராமத்துச் சிறுவர்களுக்குக் கற்பித்து அலுத்த பள்ளிக்கூட வேலையின் போக்கிலும், எழுத்தின் முனைப்பிலும் அதை மறந்துவிட முயன்றேன்.*

*இரண்டு மூன்று மாதங்களுக்குப் பின் கடுமையான டைபாய்டு ஜுரத்தினால் ஒரு மாதம் படுத்த படுக்கையாகக் கிடந்தேன். அந்தச் செய்தி எப்படியோ சகுந்தலையின் காது வரையில் நூற்றைம்பது மைல்களைக் கடந்து சென்று எட்டியது போலும்.*

*"செய்தி கேள்விப்பட்டேன்! தைரியமாக இருங்கள்! மனத்தை அலட்டிக் கொள்ளாதீர்கள். உங்களைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது. இரண்டு நாட்களில் புறப்பட்டு வருகிறேன்" என்று அவளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.*

*அந்தக் கடிதம் கைக்குக் கிடைத்தவுடன் முன் யோசனையாக மனோதத்துவ ரீதியில் சிந்தித்து ஒரு தந்திரமான காரியம் செய்து வைத்தேன் நான்.*

*முன்பு எப்போதோ அவள் எழுதியிருந்த பழைய கடிதம் ஒன்றை எடுத்துப் படக் கடையில் கொடுத்து கண்ணாடிச் சட்டம் போட்டுக் கொண்டு வரச் செய்தேன். முத்து முத்தான அவள் எழுத்துக்களுக்கு மேலே "என் எழுத்து ஏற்றுக் கொண்ட ஈடு இணையற்ற சன்மானம்" என்று தலைப்பு எழுதி அறையில் பார்வையில் படும்படியான இடத்தில் தொங்கவிட்டேன். மறுநாளைக்கு மறுநாள் சகுந்தலை வந்தாள். தொண்ணூறு நாட்களுக்குப்பின் மறுபடியும் அந்தக் கார் என் வீட்டில் வந்து நின்றது.*

*அந்த முறை சகுந்தலை நான்கு நாட்கள் என் வீட்டில் தங்கினாள். அப்போது அவளுக்குக் கல்லூரியும் விடுமுறையாக இருந்தது. பி.ஏ. இறுதியாண்டும் எழுதிவிட்டாள். அந்த நான்கு நாட்களும் அவள் ஓடியாடி எனக்குச் செய்த பணிவிடைகளைக் கண்டபோது என் தாய்கூட மனம் மாறிவிட்டாள். சகுந்தலையைப் பற்றிக் 'கள்ளங்கபடமில்லாத பெண், தங்கமான குணம், படித்ததற்குக் கொஞ்சமாவது கர்வம் இருக்காதோ?' என்று என்னிடமே புகழத் தொடங்கிவிட்டாள்.*

*நான் நினைத்தபடி சகுந்தலை என் அறையில் அவள் கடிதத்துக்குக் கிடைத்திருக்கும் மரியாதையையும் பார்த்துக் கொண்டாள். என்னிடம் அவள் அதைப் பற்றிக் கேட்கவில்லையானாலும் மழை பெய்த சில நாட்களுக்கெல்லாம் புல்வெளிகளில் தென்படும் பசுமையைப் போல் அவள் அதை என் அறையில் கண்டபின் அவளிடம் நிலவிய மகிழ்ச்சியை நானே பார்த்தும் சிந்தித்தும் அறிந்து கொண்டேன்.*

*ஐந்தாவது நாள் மாலை அந்தப் பச்சை நிறக் காருக்குள் ஏறிக் கொண்டு இந்தப் பச்சைக்கிளி பறந்து போய்விட்டது.*

*அதன்பின் 'சகுந்தலை' என்ற கந்தர்வ உலகத்துக் கனவை நான் ஏறக்குறைய மறந்தே போகவேண்டிய சூழ்நிலைகள் என் வாழ்வில் ஏற்பட்டுவிட்டன.*

*மறு வருடமே நான் நகரவாசியாக மாறிவிட்டேன்.*

*கிராமத்துப் பள்ளிக்கூட வேலையை உதறிவிட நேர்ந்தது. வேகமும், நின்று நினைக்க அவகாசமும் இல்லாத நகரத்தில் எத்தனையோ புதிய சிநேகிதர்கள், சிநேகிதிகள் எல்லோரும் கிடைத்தார்கள். தை மாதத்தில் எனக்குத் திருமணமும் முடிந்துவிட்டது.*

*குடும்ப வாழ்வில் இறங்கினேன். பத்திரிகைகளுக்கும், புத்தகங்களுக்கும் எழுதும் வழக்கம் மட்டும் என்றும்போல் அப்படியே இருந்தது. எப்போதாவது ஏதாவதொரு வாசகரிட (பெண் வாசகர்)மிருந்து கடிதம் வந்தால் அப்போது சில விநாடிகள் சகுந்தலை நினைவுக்கு வருவாள். அடுத்த கணமே அந்த நினைவும் மறைந்துவிடும். வயதும், குடும்பப் பொறுப்பும், குழந்தை குட்டிகளும் அதிகமாக அதிகமாக நளினமான நினைவுகளை உல்லாசமாக சிந்தனைகளை எழுதும் ஆற்றல் என்னிடமிருந்து குறைத்து வருவதாக எனக்குத் தோன்றியது. அது என்னுடைய தனிப்பட்ட தாழ்வு மனப்பான்மையோ என்று நினைக்கவும் முடியவில்லை. வரவரப் பெண் வாசகர்களின் பாராட்டே குன்றி வந்தது போல் எனக்கு ஒரு பிரமையும் உண்டாயிற்று.*

*ஐம்பத்தெட்டு ஆண்டுகள், அரை நூற்றாண்டுக்கும் அதிகம். வெளுத்து நரைத்த தலையும், வரி வரியாய்ச் சுருங்கிய நெற்றியும் எனக்கே என் பொறுப்பை நினைவுபடுத்தும் வயது.*

*பதினெட்டு வயதில் எனக்கு ஒரு பெண். அவளுக்கு வரன் தேடி ஊரூராய் அலைந்து கொண்டிருக்கிறேன். எழுத்தாளன் பெற்ற பெண் என்றால் மாப்பிள்ளைகள் போட்டி போட்டுக்கொண்டா வருகிறார்கள்? புகழ் வேறு! பணம் வேறு ஐயா! இரண்டும் இரு வேறு உலகத்து இயற்கை.*

*கும்பகோணத்தில் ஒரு வரன் குதிரும் போலிருந்தது. பார்த்துப் பேசிவிட்டு ஊர் திரும்பினேன். இரவு ரயிலில் கூட்டமில்லை. திருமணச் செலவுகள் பற்றி யோசித்துக் கொண்டே ரயிலில் அலுப்பு மிகுதியால் கண்ணயர்ந்துவிட்டேன். அந்தக்*

'கம்பார்ட்மெண்டு' முழுவதும் அநேகமாகக் காலியாகத்தான் இருந்தது. வண்டி புறப்பட்ட பின் அடுத்தடுத்து வரும் ஸ்டேஷன்களில் யார் யாரோ ஏறினார்கள் போலிருக்கிறது. எனக்குத் தூக்கக் கலக்கம். பேச்சுக்குரல்கள், குழந்தையின் அழுகை எல்லாம் எழவே தூக்கம் கலைந்து சும்மா கண்ணை மூடிக் கொண்டு படுத்திருந்தேன்.

"ஏண்டி தடிக்கழுதை! எப்போதிருந்து சொல்லிக் கொண்டு வருகிறேன் நான்? கண்டவன் எழுதின குப்பைப் புத்தகத்தையெல்லாம் படித்து ரயிலில் கண்ணைக் கெடுத்துக்கொள்ளாதே! தலையைச் சுற்றி வெளியில் எறிந்துவிட்டுத் தூங்கு!" வயதான, பெண் குரல் ஒன்று ரயில் ஓடும் 'கடக், கடக்' ஓசையையும் மீறிக் கூப்பாடு போட்டு இறைந்தது. மெல்லக் கண்களைத் திறந்து எதிர்வரிசைப் 'பெஞ்சை'ப் பார்த்தேன்.

என் நெஞ்சில் யாரோ ஓங்கி அடிக்கிற மாதிரி இருந்தது. காரணம் அந்த யுவதி கையில் வைத்துப் படித்துக்கொண்டிருந்தது நான் இளம் வயதில் எழுதிய நாவல். காதற்சுவையைச் சித்தரிப்பதில் இணையற்ற நவீனமென்று பத்திரிகைகளில் மதிப்புரை பெற்று ஆறேழு பதிப்பு விற்ற புத்தகம் அது! ஆ! இன்னொன்றும் நினைவுக்கு வருகிறது இப்போது. இந்தப் புத்தகத்தைப் படித்துவிட்டுத்தான் சகுந்தலை என்ற பெண் முதன்முதலாக எனக்குக் கடிதம் எழுதினாள். என்னைத் தேடி ஒரு நாகரிகமான பெண் வந்ததைப் பார்த்து அந்தக்காலத்தில் சினிமாவும் தினப்பத்திரிகையும் நுழைய முடியாத அந்தக் கிராமத்து மக்கள் ஆச்சரியப்பட்டுப் போனார்கள்.

ஏன்? நானே அவளையும் அவள் வந்திருக்கிற விஷயத்தையும் பார்த்து ஆச்சரியப்பட்டுப் போனேன். என்னைத் தேடி வந்திருக்கும் ரசிகைதான் எவ்வளவு அழகானவள்! எத்தகைய இலக்கியப் பண்பு நிறைந்த நளினமான உள்ளம் படைத்தவள்! புத்தம் புதிய காரிலே தானே சவாரி செய்து கொண்டல்லவா என்னைத் தேடி வந்திருக்கிறாள். இந்த வாலைப் பருவத்துக் குமரிக்குத்தான் எவ்வளவு துணிச்சல்! நான் பாக்கியசாலி! உலகத்திலேயே பெரியவன். 'காளிதாசனுக்கு சகுந்தலை என்ற பெயரில் ஒரு கதாபாத்திரம்தான் கிடைத்தாள், எனக்கோ ஒரு ரசிகையே கிடைத்திருக்கிறாள்!' என்றெல்லாம் எண்ணி எண்ணி வியந்து போனேன். அதன்பின் அவள் என்னிடம் எவ்வளவோ நெருங்கிப் பழகினாள்.

அவ்வளவு அருமையான நாவலை இழித்துப் பேசிய அந்த மூதாட்டியின் முகம் எப்படி இருக்கிறது என்று நன்றாக எழுந்து உட்கார்ந்து திரும்பிப் பார்த்தேன். பார்த்த கண்களை பார்த்துக்கொண்டே இருந்தன! அடுத்த கணம் என் நெஞ்சைக் கிழித்துக் கொண்டு, "சகுந்தலை!... நீயா? நீயா இப்படிச் சொன்னாய்!" என்ற அலறல் கிளம்ப இருந்தது. அதிகச் சிரமப்பட்டு என் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டேன். "கண்ட கண்ட புத்தகத்தைப் படித்துக் கெட்டுப் போகாதே" என்று தன் மகளை அக்கறையோடு கடிந்து கொண்ட அந்தத் தாய் யார் தெரியுமா?

வேறு யாருமில்லை! சகுந்தலையேதான்! ஒரு காலத்தில் படிப்பும், அழகும், முற்போக்கும் கொண்ட புதுமைப் பெண்ணாக விளங்கிய சகுந்தலை இன்று எல்லா விதத்திலும் உருமாறிப் போய்விட்டாள். பெற்றுப் பட்டு, வாழ்ந்து தாயாகிப்

*பாட்டியாவதற்கு இருந்த அவள் கோலம் என் நெஞ்சைக் குத்தியது. இத்தனை வருடங்களாக என் புகழ்க் கொடி எந்தக் கம்பத்தை ஆதாரமாகக் கொண்டு யாருடைய தூண்டுதலால் பறப்பதாக நான் கனவு கண்டு கொண்டிருந்தேனோ அந்தக் கம்பம் கொடிமரமாக இல்லை; வெறும் வழுக்குமரமாகிவிட்டது. தாபத்தோடு நான் மறுபடியும் கிழடுதட்டின அவள் முகத்தைப் பார்த்தேன்.*

*அந்த மூதாட்டி என்னைப் பார்த்துச் சிரிக்கவில்லை! என்னை யாரென்று அவளால் இனங்கண்டு கொள்ளவும் முடியவில்லை. ரயிலில் இப்படி மூன்றாவது மனிதன் அநாகரிகமாகப் பார்க்கிறானே என்று எண்ணி, முகத்தைச் சுளித்தாள்!*

(கல்கி, தீபாவளி மலர், 1958)



## 29. ஆத்மாவின் குரல்

அந்தச் சிறிய கிராமத்தின் குறுகலான தெருவில் அத்தனை பிளஷர் கார்கள் நிற்பதற்கு இடம் போதவில்லை. சிறிதும், பெரிதுமாக, பழைய மாதிரியும் புதிய மாதிரியுமாக எத்தனை நிறங்களில் எத்தனை விதங்களில் அவை தெருவை அடைத்துக்கொண்டு நிற்கின்றன?

"எவ்வளவு பெரிய வித்துவான் அவர்? சிஷ்யர்களெல்லாம் தேடிக் கொண்டு வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது! இன்றைக்கு அறுபதாண்டு நிறைவு நாளில்லையா? அதனால் குருவைத் தரிசித்துவிட்டு, அவரவர்கள் தங்களாலானதைச் செய்துவிட்டுப் போகலாமென்று வந்திருப்பார்கள்."

"யார்? அருள் நந்திக்குத்தானே? மனிதர் முரட்டுச் சுபாவமுள்ளவராயிற்றே? இதெல்லாம் அவருக்குப் பிடிக்காதே? பம்பாய், டில்லி, மதராஸ், பாலக்காடு, எங்கெங்கேயிருந்தெல்லாமோ சிஷ்யர்கள் பொன்னும் பணமுமாகக் குவிப்பதற்கு ஓடி வந்திருக்கிறார்கள். மனமிருந்தால் வீட்டுக்குள் விடுவார்; இல்லாவிட்டால், 'இதையெல்லாம் கொண்டு போய்க் குப்பையில் கொட்டுங்கள்' என்று கோபமாகக் கத்தித் துரத்தி விடுவாரே! இவ்வளவு பிடிவாதக்காரரை நான் எங்கேயுமே பார்த்த தில்லை. ஞானம் இருந்தால் மனிதனுக்கு இவ்வளவு கர்வமும் இருக்க வேண்டுமா?"

"அந்தக் கர்வம்தானே மனிதரை இத்தனை வருடங்களாகச் சோற்றுக்குத் திண்டாட வைத்திருக்கிறது? இவருக்கு இருக்கிற ஞானத்துக்குக் கூப்பிட்ட கச்சேரிகளுக்கு ஒழுங்காகப் போயிருந்தால் இதற்குள் லட்சம் இலட்சமாகக் குவித்திருக்கலாமே? சிஷ்யர்களுக்குத்தான் குறைவா என்ன? ஒவ்வொருவரும் மாதத்திற்கு ஆயிரம் இரண்டாயிரம் என்று சம்பாதிக்கிறார்கள். சினிமாவிலும், ரேடியோவிலுமாக, ஒவ்வொருத்தரும் பெரிய இடங்களில் அண்டியிருக்கிறார்கள்."

"சிஷ்யர்கள் யாராவது செலவுக்கு வைத்துக்கொள்ளச் சொல்லி இருநூறு முந்நூறு மணியார்டர் செய்தால், மணியார்டரை வாங்கிக் கொள்ள்மாட்டேனென்று மறுத்துத் திருப்பி அனுப்பிவிடுவாராமே?"

"அதையேன் கேட்கிறீர்கள்? போன வருஷம் இவரிடம் படித்த சிஷ்யன் ஒருத்தன் ஐயாயிரம் ரூபாய்க்கு ஒரு செக் எழுதி அனுப்பியிருந்தான். சினிமாவில் பின்னணி பாடி ஏராளமான புகழும் பணமும் சம்பாதிக்கிறான் அவன். இந்த மனிதர் என்ன செய்தார் தெரியுமா? அந்தச் செக்கை நாலு துண்டாகக் கிழித்து, இன்னொரு கவருக்குள் வைத்து, அவனுக்கே திருப்பியனுப்பிவிட்டார். எவ்வளவு திமிர் இருக்க வேண்டும் இவருக்கு?"

“ஊம்! ஏதாவதொரு கலையில் அபாரமான ஞானமிருந்து விட்டால், அவர்களெல்லாம் இப்படித்தான் விநோதமாகப் பைத்தியம் போல் நடந்து கொள்கிறார்கள்.”

“பைத்தியமென்றாலும் இந்த அருள் நந்தியைப்போலப் பைத்தியம் நான் பார்த்ததே இல்லை. இருபத்தைந்து வயதிலிருந்து இன்றைக்குத் தேதி வரை இந்த முப்பத்தைந்து வருடங்களில் ஐம்பது பேர்களாவது இந்த பஸ், இரயில் போக்குவரவில்லாத குக்கிராமத்தைத் தேடி வந்து இவரிடம் படித்துவிட்டுப் போயிருப்பார்கள். இவரிடம் ஆறு மாதம், மூன்று மாதம், வேட்டி துவைத்துப் போட்டுக் கொண்டிருந்தவன்கூட அரைகுறை சாரீரத்தை வைத்துக் கொண்டு, பத்து விரலிலும் வைர மோதிரம் மின்ன, பட்டு அங்கவஸ்திரத்தைப் போட்டுக் கொண்டு திரிகிறான். இவர் அந்தப் பழைய நீர்க்காவி வேஷ்டியும், காஞ்சீபுரம் பட்டைக் கரைத் துண்டுமாக ஒருவேளை சாப்பிட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்.”

“விட்டுத் தள்ளு பேச்சை! உலகம் தெரியாத மனிதரைப் பற்றிப் பேசி என்ன பிரயோசனம்?” இவ்வளவும் அந்தக் கிராமத்தில் தெருவோடு போய்க் கொண்டிருந்த யாரோ இரண்டு பேருக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல். தெருவோடு போய்க் கொண்டிருந்தவர்கள், கார்களையும், அருள்நந்தியின் வீட்டு வாசலில் கூட்டத்தையும் பார்த்துவிட்டுத் தங்களுக்குள் தற்செயலாக இப்படிப் பேசிக் கொண்டு போனார்கள்.

அருள்நந்தி பூஜையறைக்குள் தியானத்தில் அமர்ந்திருந்தார். தியாகராஜ சுவாமிகளின் பெரிய படம் பூமாலையால் அலங்கரிக்கப் பெற்றுச் சுவரில் காட்சியளிக்கிறது. தீட்சிதர் படமும் சியாமா சாஸ்திரி படமும் இன்னொரு புறம் காட்சியளிக்கிறது. நடராஜர் படம், கலைமகள் படம், இன்னும் எண்ணற்ற சங்கீத உலக மேதைகளின் படங்கள் அறை முழுவதும் காட்சியளிக்கின்றன.

தூபக்காலில் இருந்து சாம்பிராணிப் புகை சுருள் சுருளாக எழுந்து பரவிக் கொண்டிருக்கிறது. உடை கழித்த கன்னிப்பெண்ணின் உடல்போல், புனிதமான வீணை உறை கழித்து, அவருக்கு முன் வைக்கப்பட்டிருந்தது. இன்னொரு புறம் பழமையான சங்கீத ஏட்டுச் சுவடிகள். அந்த அறையின் காட்சிகளை சூழ்நிலையைப் பார்க்கும்போதே மனத்தில் ஒரு பயபக்தி தானாகவே ஏற்பட்டது. அந்த அறை அப்படி ஏற்படுத்தியது என்று சொன்னாலும் பிழையில்லை. எல்லாவற்றிற்கும் மேலாகத் தியாராஜ சுவாமிகளின் படத்திற்கு மேல் காவி நிற எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தன அந்த வாக்கியங்கள்! எப்படிப்பட்ட கல் நெஞ்சனுக்கும் அவற்றைப் படித்தவுடன் உடல் புல்லரிக்கும். நெஞ்சு சிலிர்க்கும்! ஆகா! சாதாரண வாக்கியங்களா அவை? அட்சர லட்சம் பெறும் பொன்மொழிகளல்லவா? முப்பத்தைந்து தை மாதப் பிறப்புக்கள் அந்த வாக்கியங்கள் அவருடைய பூஜையறையில் எழுதப்பட்டபின் வந்து போயிருக்கின்றன! ஒவ்வொரு தை மாதப் பிறப்பின்போதும் அறைக்குப் புதிதாக வெள்ளையடிப்பதுண்டு. அப்போதெல்லாம் அந்த வாக்கியங்களை அதே இடத்தில் அதே தியாகராஜர் படத்திற்குமேல் மீண்டும் எழுதச் செய்வது அவருடைய வழக்கம்!

*அந்த எழுத்துக்கள் சிறிது மங்கினால்கூட அவருக்குப் பொறுக்காது. அப்படி என்ன விந்தை அந்த வாக்கியங்களில் அடங்கியிருக்கிறது? பார்க்கலாமே!*

*'சங்கீதம் ஆத்மாவின் குரல்! ஆத்மாவைக் காட்டிலும் உயர்ந்ததை - ஆத்மாவினால் எட்டிப் பிடிக்க முடியாததை உரக்கக் கூவி அழைப்பதற்கு அதைப் பயன்படுத்த வேண்டும். காசுக்காக அல்ல!'*

*எங்கெங்கிருந்தெல்லாமே வந்திருந்த சிஷ்யர்கள், பயபக்தியோடு மேல் வேஷ்டியை அரையில் கட்டிக் கொண்டு பூஜை அறை வாசலில் நின்றார்கள். சிஷ்யைகளான பெண்மணிகளும் இரண்டொருவர் வந்திருந்தனர். அவர்களும் அடக்க ஒடுக்கமாக நின்று கொண்டிருந்தனர். ஒவ்வொருவரும் குருநாதரின் அறுபதாண்டு நிறைவு விழாவில் அவருக்குக் கொடுப்பதற்காக ஆயிரக்கணக்கில் செலவழித்து ஒவ்வொரு பொருளை வாங்கிக்கொண்டு வந்திருந்தார்கள். பணமாகக் கொடுத்தால், அவர் வாங்கமாட்டாரென்று அவர்களுக்குத் தெரியும். அதனால்தான் பொருள்களாக மாற்றிக் கொண்டு வந்திருந்தனர்.*

*அவர்களில் ஒருவர் பத்தாயிரம் ரூபாய்க்குப் பவுன்களாக வாங்கி, அந்தத் தங்கம் முழுவதையும் சிறு சிறு காசுகளாக அடித்து ஒரு சிறு பட்டுப்பை நிறைய அடைத்துக் கட்டிக் கொண்டு வந்திருந்தார்; குருவை உட்காரச் சொல்லி, அப்படியே கனகாபிஷேகம் செய்ய வேண்டுமென்பது அவருடைய ஆசை. இன்னொருவர் கல் மூவாயிர ரூபாய் பெறுமானமுள்ள இரண்டு புஷ்பராகக் கற்கள் வாங்கிக் குருவினுடைய காதுகளில் அணிவிப்பதற்காக இரண்டு வைரக் கடுக்கண்கள் செய்து கொண்டு வந்திருந்தார். வேறொருவர் தந்தத்தில் வெற்றிலைப் பெட்டியும், தங்கத்தில் சிறிய சுண்ணாம்புச் சிமிழும் வெள்ளியில் பாக்குவெட்டியும் செய்து கொண்டு வந்திருந்தார். ஒரு பெண் - சமீபத்தில் அவரிடம் வந்து முறையாகப் படித்து வெளியேறிய சிஷ்யை இரண்டாயிரம் ரூபாய்க்கு வெள்ளிப் பாத்திரங்களாக வாங்கிக் கொண்டு வந்திருந்தாள். இன்னொரு சிஷ்யை புது மாதிரி ஒரு வீணைசெய்து, அதன் குடத்தில் (பத்தரில்) அறுபது நல்முத்துக்களை, அவருக்கு அறுபது வயது ஆனதற்கு அடையாளமாகப் பதித்துக் கொண்டு வந்திருந்தாள். டில்லி ரேடியோவில் வேலை பார்க்கும் சிஷ்யர் தங்கத்தில் சிறிய தாஜ்மஹால் உருவமும் ஆயிர ரூபாய்க்கு மேல் விலையுள்ள ஒரு காஷ்மீர் சால்வையும் வாங்கி வந்திருந்தார்.*

*இன்னும் எத்தனை எத்தனையோ? கூடை கூடையாகப் பழங்கள்! கூடை கூடையாகக் காய்கறிகள்! கூடை கூடையாகச் சந்தனம் - மல்லிகை - ரோஜா மாலைகள்!*

*எல்லோரும் எல்லாவற்றோடும் காத்துக் கொண்டிருந்தனர். ஆவல் அலை மோதும் உள்ளங்களில் குரு பத்தியின் சுமையோடு நின்றனர். அவர்கள் வந்ததே அவருக்குத் தெரியாது. வரப்போவதும் முன்கூட்டித் தெரியாது. அவருடைய முரண்டும், பிடிவாதமும்தான் எல்லோருக்கும் தெரியுமே! அதனால் அவர் எதிர்பாராமலிருக்கும்போது திடீரென்று போய்த் தங்கள் அன்பைச் செலுத்திவிட வேண்டுமென்று ஓடோடி வந்திருந்தனர் அவர்கள். அவர் இன்னும் தியானம் கலைந்து*

கண்களைத் திறக்கவில்லை. மூடிய கண்கள் மூடினபடியே இருந்தன. கை, வீணையைத் தேடி எடுத்து, விரல்களால் வருடியது.

அடுத்த கணம் அந்த அறையிலிருந்து கல்லை, மரத்தை, மண்ணை, ஏன் காசினியை முழுதும் அடிமை கொள்ளும் நாதவெள்ளம் பெருகிப் பாய்ந்தது.

'ராம நன்னு ப்ரோவரா!' நின்று கொண்டிருந்தவர்கள் மூச்சு விடுகிற ஓசைகூடக் கேட்காமல் நாதப் பிரம்மத்தின் சுருதி வெள்ளத்தில் யான், எனதென்ற உணர்வற்றுக் கட்டுண்டு கிடந்தனர். பேச்சொடுங்கி மூச்சொடுங்கிப் புலன்களொடுங்கி நின்றனர் அவர்கள்.

நேரம் ஆகிக் கொண்டே இருந்தது. நாதத்தின் வெள்ளம் அலை அலையாக உயர்ந்து, அந்த அறையிலிருந்து பாய்ந்து கொண்டே இருந்தது.

பாட்டா அது? அறுபது வயது வாழ்ந்து மூப்படைந்த தொண்டையில் பிறக்கிற சாரீரமாகவா இருந்தது? ஓர் ஆத்மா தன் நாதத்தால் பல்லாயிரம் பேராத்மாக்களைக் கூவிக் கூவி அழைக்கிறதோ? அமுதம் மடை உடைந்து பாய்கிறதோ?

இரண்டு மணி நேரமாயிற்று அந்த ஒரு கீர்த்தனை முடிய. அருள்நந்தி மெல்லக் கண்களைத் திறந்தார். அவர் பார்வை தியாகராஜ சுவாமிகளின் படத்தில் நிலைத்து, அதற்குமேல் எழுதியிருந்த எழுத்துக்களில் பதிந்து, பின் வாயிற் பக்கமாகத் திரும்பியது.

"அடேடே! நீங்களெல்லாம் எப்போது வந்தீர்கள்?"

"அண்ணா பாடத் தொடங்குவதற்குச் சிறிது நேரத்துக்கு முன்னாலேயே வந்துவிட்டோம்!" சிஷ்யர்களில் ஒருவர் அவருக்குப் பதில் சொன்னார்.

"என்ன காரியமோ?"

"அண்ணாவுக்கு இன்றைக்கு அறுபதாண்டு நிறைகிறது இல்லையா? சிஷ்யர்கள் எல்லாம் வந்து தரிசித்து, ஆசீர்வாதமும் அனுக்கிரகமும் பெற்றுக் கொண்டு போகலாமென்று வந்தோம்."

"ஏண்டா! இந்த அறுபது வயது எனக்கா என் சாரீரத்துக்கா?" அருள்நந்தி வேடிக்கையாகச் சிரித்துக் கொண்டே, அவர்களைப் பார்த்துக் கேட்டார்.

"அபசாரம்! அபசாரம்! அண்ணாவின் சாரீரத்துக்கு வயது ஏது? இதோ இந்த ஒரு கீர்த்தனையை இவ்வளவு நேரம் கேட்பதற்கு ஜன்ம ஜன்மாந்திரங்களில் நாங்கள் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்க வேண்டும்!" ஒருவர் விநயமாகப் பவ்வியத்தோடு அடக்க ஒடுக்கமாகப் பதில் சொன்னார்.

அருள்நந்தி அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டார்.

"எல்லாரும் சௌக்கியமாக இருக்கிறீர்களோ இல்லையோ?" மொத்தமாக விசாரித்தார்.

"அண்ணாவின் கிருபையால் ஒரு குறைவுமில்லை. எல்லாம் இவ்விடத்து ஆசீர்வாதப் பலன்தான்."

ஒவ்வொருவராக அவருடைய பாதத்தைத் தொட்டு வணங்கினார்கள். பூஜை செய்த அட்சதையை எடுத்து, ஒவ்வொருவர் தலையிலும் தெளித்து, ஆசீர்வதித்தார்.

"புகழும் பொருளும் பெருகி நன்றாக வாழுங்கள்!"

அருள்நந்தி எல்லோரையும் வாழ்த்தினார். கற்பூர தீபாராதனை காட்டிப் பூஜையை முடித்தார்.

சிஷ்யர்கள் இந்த நல்ல சமயத்தை நழுவவிடக்கூடாதென்று ஒவ்வொருவராக அவரவர்கள் கொண்டு வந்திருந்த காணிக்கைப் பொருள்களைப் பிரித்து வெளியே எடுத்தனர்.

பட்டுப் பை நிறையப் பொற்காசுகளைக் கொண்டு வந்திருந்த சிஷ்யர் பையை அவிழ்த்துக்கொண்டு, அருள்நந்திக்கு அருகே சென்றார்.

அருள்நந்தி அப்போது தியாகராஜ சுவாமிகள் படத்தில் நழுவி விழுந்து மறைத்த பூமாலையைச் சரி செய்துவிட்டு ஆசனப் பலகையிலிருந்து எழுந்திருக்க இருந்தார்.

"அண்ணா! அப்படியே கொஞ்சம் உட்கார வேண்டும்."

"என்னடா அது?"

"ஒன்றுமில்லை! ஏதோ என் சக்திக்கு இயன்றது. அண்ணாவுக்குக் கனகாபிஷேகம் செய்துவிட வேண்டுமென்று எனக்கு ஆசை! அதுதான்..."

குத்து விளக்கொளியில் பட்டுப் பை நிறையச் சல்லி சல்லியாகப் பொற்காசுகள் ஜொலித்தன. அருள்நந்தியின் முகம் 'ஜிவ்'வென்று சிவந்தது. கண்களில் நெருப்புப் பொறி பறக்க, புருவங்கள் வளைந்து நிமிர, உதடுகள் துடிக்க, ஆவேசம் வந்தவர் போல ஆசனத்திலிருந்து துள்ளிக் குதித்து எழுந்திருந்தார் அவர்.

"அடே! பாவீ! இதென்ன காரியம் செய்கிறாய்? என் சங்கீதத்திற்கு விலையா? இந்த உலகம் முழுவதும் கொடுத்தாலும் ஈடில்லாத கலையடா அது! போ... போய் விடுங்கள். வெளியே போகிறீர்களா? அடித்துத் துரத்தட்டுமா? நீங்கள் கொண்டு வந்தவற்றில் ஒரு துரும்புகூட இங்கே வைத்துவிட்டுப் போகக்கூடாது. தெருவில் தூக்கி எறிந்துவிடுவேன்!" இடி இடிப்பது போன்ற குரலில் இரண்டு கைகளையும் மறித்து ஆட்டிக் கொண்டே, கூப்பாடு போட்டார். அப்போது அவரைப் பார்ப்பதற்கே பயமாக இருந்தது. கால சம்ஹார மூர்த்திபோல் நெற்றிக்கண் திறந்து, கனல் வீசி நிருத்தமிடும் கூத்தன்போல் குதித்தார் அவர்.

பட்டுப் பையில் தங்கக் காசுகளோடு கனகாபிஷேகம் செய்ய வந்த சிஷ்யர் பயந்து பின் வாங்கினார். மற்றவர்கள் திகைத்துத் தயங்கி நின்றார்கள்.

"அற்பப் பயல்களா! அதோ, தியாகராஜ சுவாமிகளின் படத்திற்குமேல் என்ன எழுதியிருக்கிறது பாருங்களடா!" அருள்நந்தி வெறி கொண்டவர்போல கத்தினார்.

"போகிறீர்களா இல்லையா? ஒரு நிமிஷம் தாமதித்தீர்களானால் கொலை விழுந்துவிடும் இங்கே?" கத்திக் கூச்சலிட்டுக் கொண்டே, பூஜையறைக்கு வெளியே

கூடத்திலிருந்த விறகு அடுக்கின்மேல் கிடந்த கோடாரியைக் கையில் தூக்கி விட்டார் அவர்.

ஒவ்வொருவராகத் தெரு வாசலை நோக்கி நகர்ந்தனர். அடுத்த ஐந்தாவது நிமிஷத்தில் அந்தக் குறுகலான தெருவில் ஒரு பிளஷர் கார் கூடத் தென்படவில்லை. கார்கள் புறப்பட்டபோது கிளம்பிய தெருப்புழுதிதான் மேலெழுந்து வட்டமிட்டுச் சுழன்று கொண்டிருந்தது.

இரண்டொருவர் மறந்து போய் வைத்துவிட்டுப் போய்விட்ட பழக்கூடைகள் வீட்டு வாசல் வழியே நடுத்தெருவில் வந்து விழுந்தன.

பத்து நிமிஷத்தில் அந்த வீட்டில் கலகலப்பு ஓய்ந்து, சூனிய அமைதி நிலவியது.

சாந்தமடைந்து மறுபடியும் பூஜையறைக்குள் போய் உட்கார்ந்தார் அருள்நந்தி. வீணையை மடியிலெடுத்து வைத்துக் கொண்டார், ஒரு செல்லக் குழந்தையை எடுத்து வைத்துக் கொள்வதுபோல.

அந்தச் சமயத்தில் சமையலறையிலிருந்து அவருடைய தர்மபத்தினி தலையை நீட்டினாள். கவலை தோய்ந்த அந்தப் பதிவிரதையின் முகத்திலிருந்து துயரம் பதிந்த விழிகளின் பார்வை அவரையும் அவர் கையிலிருந்த வீணையையும் மாறி மாறிப் பார்த்தது. அவரும் அவளைப் பார்த்துவிட்டார்.

"என்ன? உனக்கு என்ன வேண்டும்?"

"அடுப்பில் உலை கொதிக்கிறது!"

"கொதித்தால் கொதிக்கட்டுமே!"

"போடுவதற்கு ஒரு மணி அரிசிகூட வீட்டில் இல்லை!"

கேட்டுவிட்டு அவர் கலகலவென்று வாய்விட்டுச் சிரித்தார்.

"சபாஷ்! இப்போதுதான் உண்மைக் கலைஞனுடைய வீடு இது! வா நீயும் இப்படி வந்து எனக்கெதிரே உட்கார்! இருவருடைய பசிக்கும் போதுமான அமுதம் என்னிடம் இருக்கிறது."

அந்த அம்மாள் தயங்கினாள்.

"வந்து உட்காரப் போகிறாயா இல்லையா?" இரைந்து ஓர் அதட்டுப் போட்டார் அருள்நந்தி. அவர் மனைவி பயந்துபோய் அவரெதிரே உட்கார்ந்தாள். "இதோ கேள்! பசிக்கு அமுதம்."

"நாத தனு மனுஸம்..." வீணையின் இனிய ஒலியோடு அவருடைய கண்டத்தின் அமுத ஒலியும் இணைந்து தொடங்கியது. இனி அந்த ஒலிக்கு முடிவு ஏது? ஆத்மாவின் குரல் அல்லவா அது?

(கல்கி, 1958)

## 30. மூவரை வென்றான்

மதுரையிலிருந்து தென்காசி செல்லுகிற மங்கம்மாள் சாலையில் கல்லுபூபட்டி என்ற ஊருக்கும் ஸ்ரீவில்லிபுத்தூருக்கும் இடையில் ஒரு கிராமம் இருக்கிறது. சாலை தெற்கு வடக்காகச் செல்கிறது. சாலையின் மேல் மேற்கு நோக்கி நிறுத்தப்பட்டிருக்கும் ஒரு கைகாட்டி மரத்தில் 'மூவரை வென்றான் - 1 மைல் 4 பர்லாங்கு -' என்று கறுப்புத் தார் பூசிய மரச்சட்டத்தில் வெள்ளை வார்னீஷால் பளிச்சென்று எழுதப்பட்டிருக்கும்.

நான் அடிக்கடி இந்தச் சாலை வழியே பஸ்ஸில் பிரயாணம் செய்கிறவன். ஏதோ ஒரு கிராமம் மேற்கே ஒன்றரை மைலில் இருப்பதாகவும், அந்தக் கிராமத்தின் பெயர்தான் அது என்றும் முதல் முதலாக நான் விசாரித்தபோது அந்த ஊரைப் பற்றி ஒரு அன்பரிடம் அறிந்து கொண்டேன்.

பெயரைப் படித்தால் அந்தப் பெயர் அப்படிப்பட்ட ஒரு குக்கிராமத்திற்கு ஏற்பட்டிருப்பதில் ஏதாவதொரு காரணமோ, கதையோ அடங்கியிருக்க வேண்டுமென்று நம்பினேன் நான். 'மூவரை வென்றான்-' என்ற அந்தப் பெயர் அமைந்திருக்கிற விதத்திலிருந்து, பூர்வ சரித்திர நிகழ்ச்சியால் ஏற்பட்டதாகவும் இருக்கலாம் என்றுகூடத் தோன்றியது. மேற்படி சாலையில் பிரயாணம் செய்யும் ஒவ்வொரு முறையும் என் மனதைக் கவர்ந்து கற்பனையையும் சிந்தனையையும் கிளறச் செய்கிற அளவுக்கு 'மூவரை வென்றான்' முக்கியத்துவம் பெற்றுவிட்டான்.

'அதிர்ஷ்டம்' எப்படி வந்து வாய்க்கிறது பாருங்கள்! ஒருநாள், நான் பிரயாணம் செய்து கொண்டிருந்த பஸ் என் மனோபீஷ்டத்தை நிறைவேற்ற விரும்பியோ என்னவோ தெரியவில்லை, இந்தக் கைகாட்டி மரத்தருகிலேயே நிரந்தரமாக நின்றுவிட்டது.

பஸ் கிளம்பாது என்பது உறுதியாகிவிட்டது. அப்போது மாலை நான்கு மணி. அதே கம்பெனியைச் சேர்ந்த மற்றொரு பஸ் மதுரையிலிருந்து புறப்பட்டு அந்த 'ரூட்'டில் அந்த இடத்திற்கு வருவதற்கு இரவு எட்டரை மணி ஆகுமென்றும், அதுவரை நாங்கள் காத்திருந்துதான் ஆக வேண்டும் என்றும் கண்டக்டர் கூறினார்.

"அந்த ஊரில் ஹோட்டல் இருக்கிறதா?" என்று விசாரித்துக் கொண்டு நாங்கள் ஏழெட்டுப் பேர் காப்பி சாப்பிடுவதற்காக ஒன்றரை மைல் தூரம் நடக்கத் தீர்மானித்துவிட்டோம். காப்பியையும் சாப்பிட்டுவிட்டு அந்த ஊரின் பெயர் விசேஷத்தையும் அறிந்து கொள்ளாமல் பஸ்சுக்குத் திரும்புவதில்லை என்று நான் மட்டும் எனக்குள் தனிப்படத் தீர்மானம் ஒன்றும் செய்து கொண்டேன்.

வாய்க்கால், வரப்புகளின் மேல் குறுக்கிட்டுச் சென்ற, மேடு பள்ளம் மிகுந்த வண்டிப் பாதையில் நடந்தோம்.

அந்தச் சின்னஞ்சிறு கிராமத்தில் 'ஹோட்டல்' என்ற பெயருக்குரிய போர்டு மாட்டாத கூரைக் குடிசையைக் கண்டுபிடிப்பதுதான் கஷ்டமாக இருந்தது. அது மட்டுமா? அங்கே காப்பி என்ற பெயரில் கிடைத்த திரவத்தைச் சாப்பிடுவதும் கஷ்டமாகத்தான் இருந்தது.

காப்பி என்ற பெயரில் எதையோ குடித்துவிட்ட திருப்தியில் மற்றவர்கள் எல்லோரும் கார் நின்ற இடத்திற்குக் கிளம்பிவிட்டார்கள். 'நீங்கள் போங்கள். நான் கொஞ்சம் இருந்து வருகிறேன்' என்று அவர்களிடம் கூறிப் பின் தங்கிவிட்டேன் நான்.

ஹோட்டல் வாசலில் இருந்த வெற்றிலைப் பாக்குக் கடையில் உட்கார்ந்து கொண்டிருந்த வயதான பெரியவர் ஒருவரை அணுகினேன். மெல்லப் பேச்சைக் கிளப்பினேன். என்னுடைய வெளுத்த உடைக்கும் கைக்கடியாரத்திற்கும் நகரத்துப் பாணியில் வெளிவந்த பேச்சுக்கும் மரியாதை கொடுக்க எண்ணினார் போலும் அந்தப் பெரியவர். எனக்கு வேண்டிய விஷயமோ அவருடைய பதிலில் இருந்தது.

"சாமீ! அது ஒரு பழைய கதைங்க... பொழுதிருந்தா இங்ஙனே குந்திக் கேளுங்க, சொல்றேன்."

"சந்தோஷம் பெரியவரே. அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றுதானே நான் இங்கே வந்தேன், சொல்லுங்கள் கேட்கிறேன்."

ஆவலோடு கடை வாசலில் போட்டிருந்த நீளமான பெஞ்சை மேல் துண்டால் தட்டிவிட்டு உட்கார்ந்தேன் நான்.

"அதுக்கென்னங்க? தாராளமாய்ச் சொல்றேன்... வெத்திலை, பாக்கு, பொவையிலை, சோடா ஏதாச்சும் வேணுமுங்களா?"

பெரியவர் கதையை இனாமாகச் சொல்ல விரும்பவில்லை என்று குறிப்பாகத் தெரிந்து கொண்டேன். எனக்கிருந்த ஆத்திரத்தில் எப்படியாவது கதை வந்தால் போதுமென்றிருந்தது.

"எல்லாம் கொடுங்கள்! பெரியவரே!" என்று ஒரு முழு எட்டணாவை எடுத்து நீட்டினேன். பெரியவர் என்னை ஒரு தினுசாக வியப்புத் தோன்றப் பார்த்தார். வெற்றிலை, பாக்கு, புகையிலை, சோடா எல்லாம் பெஞ்சியில் எடுத்து வைத்தார். நான் சோடாவை மட்டும் குடித்தேன்.

கதை கேட்கத் தயாராகிற பாவனையாகப் பெஞ்சியில் சப்பணங்கட்டி நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டேன். "சகோதர சகோதரிகளே!" என்று கூறிப் பேச்சு ஆரம்பிப்பதற்கு முன்னால் மேடைப் பேச்சாளர் கனைத்துக் கொள்ளுவார் பாருங்கள், அந்த மாதிரி ஒரு கனைப்புக் கனைத்துவிட்டுப் பெரியவர் கூறத் தொடங்கினார்.

அவருடைய தமிழ் மிகவும் கிராமியமாக இருப்பதால் இலக்கண சுத்தமான நடையில் மாற்றி உங்களுக்கு அதை நான் சொல்லிவிடுகிறேன். அந்தக் கிழவர் கூறியது எட்டணா விலைக்குத் தயார் செய்த கற்பனைச் சரக்கோ, அல்லது உண்மையேதானோ, எனக்குத் தெரியாது. அதற்கு நான் உத்திரவாதமும் அளிக்க முடியாது. இவ்வளவு

கற்பனைத்திறன் இருக்குமானால் அவர் ஏன் வெற்றிலைக் கடை வைக்க வேண்டும், பாவம்!

* * *

இராணி மங்கம்மாள் காலத்தில் வீரமானியமாகக் கிடைத்த கிராமம் இது. 'வீரமல்லுத் தேவன்' என்ற மறவர் குல வீரனே இதை முதன்முதலில் வீரமானியமாகப் பெற்றவன். இப்போது இந்த ஊரில் குடியிருப்பவர்களில் பெரும்பாலோர் அவனுடைய வம்சாவளியைச் சேர்ந்த மறவர்கள்தாம்.

மதுரைச் சீமையிலே மங்கம்மாள் ஆட்சி சீரும் சிறப்புமாக நடந்தவரை தனக்குக் கிடைத்த இனாம் கிராமத்தை வீரமல்லனும் சுதந்திரமாக அனுபவிக்க முடிந்தது. மங்கம்மாள் ஆட்சி ஒடுங்கிப் போனபோதுதான், இனாம் சொத்தாகப் பெற்ற வீரமானியத்தைச் சுதந்திரமாக அனுபவபாத்தியத்தை கொண்டாடுவதற்குத் தடைகளும் விரோதங்களும் ஏற்பட்டன. தடைகளையும் விரோதங்களையும் ஏற்படுத்தியவர்களோ ஆள் பலம் உள்ள ஜமீன்தார்கள். வீரமல்லனோ, கேவலம் ஒரு சிறு கிராமத்தின் தலைக்கட்டு நாட்டாண்மைதான்.

இங்கே மேற்குத் திசையிலுள்ள மலைத் தொடரில் உற்பத்தியாகி வரும் கன்னிமாலை ஆறு என்று ஓர் நதி பாய்கிறது. மூவரை வென்றான் கிராமத்தையும் இதன் தெற்கே இரண்டரை மைல் தொலைவில் இருக்கும் நத்தம்பட்டி என்ற ஜமீனையும் நடுவே பிரித்துக் காட்டும் எல்லையாக ஓடியது இந்தக் கன்னிமாலையாறு. ஆற்றின் வடகரையிலிருந்து வீரமல்லனுக்குரிய இனாம் நிலம் தொடங்குகிறது; தென் எல்லையிலிருந்து நத்தம்பட்டி ஜமீன் நிலம்.

மூவரை வென்றான் கிராமம் வீரமல்லனுக்கு மானியமாகக் கிடைத்த நாளிலிருந்தே, நத்தம்பட்டி ஜமீனுக்கும் அவனுக்கும் எத்தனையோ சில்லறைத் தகராறுகள் ஆற்றுத்தண்ணீர் விஷயமாக ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் மதுரைச் சீமையிலிருக்கும் மங்கம்மாள் ஆட்சியின் அத்துக்குப் பயந்து நத்தம்பட்டி ஜமீன் அவனிடம் அதிகமாக வம்பு வைத்துக் கொள்ள அஞ்சியது. வீரமல்லனுடைய இனாம் நிலங்களுக்காக ஊரின் மேற்கே ஒரு பெரிய கண்மாய் அமைந்திருந்தது. அது பெரிய ஜமீன். அதனால் மூன்று கண்மாய்கள் தண்ணீர் வசதிக்குப் போதாது. மழை காலத்தில் கன்னிமாலை ஆற்றில் வருகின்ற அளவற்ற தண்ணீர்ப் பிரவாகத்தைக் கொண்டுதான் வீரமல்லனின் ஒரு கண்மாயும், நத்தம்பட்டி ஜமீனின் மூன்று கண்மாய்களும் நிரம்பியாக வேண்டும்.

இனாம் கிராமமாக விடப்படுவதற்கு முன் 'மூவரை வென்றான்' பகுதி தரிசு நிலமாகக் கிடந்ததனால், ஆற்று நீர் முழுவதையும் நத்தம்பட்டி ஜமீன் பூரணமாக உரிமை கொண்டாடி வளமுற்றுக் கொழுத்துக் கொண்டிருந்தது. ஜமீன் நிலங்களில் இரண்டு போகம் மூன்று போகம் விளைவுக்குத் தண்ணீர் கண்டது. இந்த ஏகபோக உரிமை நிலைக்கவில்லை.

துரதிர்ஷ்டவசமாகவோ அல்லது அதிர்ஷ்டவசமாகவோ தெரியவில்லை - வீரமல்லன் கண்மாய் வெட்டியபோது ஆற்று மட்டத்தைவிடப் பள்ளமாக அமைந்துவிட்டது அவன் கண்மாய்.

இதன் விளைவு? ஆற்றுத் தண்ணீரில் பெரும் பகுதி 'மூவரை வென்றான்' கண்மாயில் பாய்ந்து அதை நிரப்பி விட்டு வடிகால் வழியே கலிங்கல் மட்டத்தைக் கடந்து கிழக்கேயுள்ள வேறு ஊர்களைச் சேர்ந்த கண்மாய்களுக்குச் செல்ல ஆரம்பித்துவிட்டது.

காட்டாறுதானே? மேற்கே மலையில் மழை பெய்தால் தண்ணீர் கரை கொள்ளாமல் பொங்கி வரும். இல்லையென்றால் வறண்டு போகும். வீரமல்லனின் இனாம் கிராமத்தில் சாகுபடி நிலங்கள் மிகவும் குறைவுதான். ஒருமுறை கண்மாய் பூரணமாக நிரம்பினாலே இரண்டு மகசூலுக்குக் குறையாமல் வரும்.

நத்தம்பட்டி ஜமீன் நிலப் பரப்போ மிகப் பெரியது. கன்னிமாலையாற்றின் தண்ணீரால் ஜமீனின் மூன்று கண்மாய்களும் இரண்டுமுறை நிரம்பினாலும் ஜமீன் நிலங்களுக்குப் போதாது. இப்போதோ, வீரமல்லன் கண்மாய் வெட்டியதன் விளைவாக ஜமீன் கண்மாய்கள் ஒருமுறை நிரம்புவதே கஷ்டமாயிற்று.

அப்போது அந்தத் தலைமுறையில் நத்தம்பட்டி ஜமீன்தாராக இருந்தவர் வீரமருதுத் தேவர் என்பவர். முன்கோபமும், ஆத்திரமும், எதையும் யோசிக்காமல் பேசுவதும் செய்வதுமாக அமைந்த சுபாவமுடையவர். வீரமல்லனை நேரில் கூப்பிட்டனுப்பி அவர் தம் தேவையைக் கூறியிருந்தால் அவனே ஒப்புக் கொண்டிருப்பான். அப்படிச் செய்யாமல் வீம்பு பிடித்த ஜமீன்தார் நேரடி நடவடிக்கையில் இறங்கினார்.

ஆற்றில் மேற்கே வெகுதூரத்தில் அணைகட்டி, வீரமல்லனின் கண்மாய்க்குத் தண்ணீரே போகாதபடி செய்தார். கூலிக்குக் கொள்ளைக்காரர்களைப் பிடித்து 'மூவரை வென்றான்' கிராமத்து இனாம் நிலங்களில் விளைந்து கிடந்த பயிர்களை இரவோடிரவாக அறுத்துவரச் செய்தார். 'மூவரை வென்றான்' கண்மாயில் மடைவாய்களையும், வடிகால்களையும், வாய்க்கால்களையும் சிதைத்து அழித்தார். வீரமல்லன் சில நாளைக்குப் பொறுத்திருந்தான்.

* * *

இவைகள் எல்லாம் நடக்கும்போது மதுரைச் சீமையில் மங்கம்மாள் ஆட்சி ஓய இருந்த சமயம். சாது முரண்டினால் காடு கொள்ளாது என்பார்கள்; பொறுமையாக இருந்த வீரமல்லனுக்கும் ஒருநாள் ஆத்திரம் வந்தது. மதுரைச் சீமையில் வேறு வகையான தொல்லைகளுக்கு இலக்காகியிருந்த மங்கம்மாள் ஆட்சியின் துணையை அப்போது எதிர்பார்க்க விரும்பவில்லை அவன்.

. வீரமல்லன் ஒருநாள் துணிந்து தனி ஆளாக நத்தம்பட்டி ஜமீன் மாளிகைக்குச் சென்றான்; ஜமீன்தாரைச் சந்திக்க வந்திருப்பதாகச் சொல்லி அனுப்பினான்.

'வீரமல்லன் தன்னைப் பார்க்க வந்திருக்கிறான்' என்பதைக் கேள்விப்பட்ட உடனே குடல் நடுங்கியது மருதுத் தேவருக்கு. "ஜமீன்தார் கையாலாகாத வெறும் பயல்களை எல்லாம் பார்க்கிற வழக்கம் இல்லை" என்று பயத்தை மறைத்துக் கொண்டு பதில் சொல்லி அனுப்பினார்.

இந்தப் பதில் வீரமல்லனிடம் கூறப்பட்டது.

"ஓஹோ! பட்டப்பகலில் வாசல் வழியே அனுமதி கோரி வந்தால் உங்கள் ஜமீன்தார் சந்திக்கிற வழக்கம் கிடையாதா? சரி... வரவேண்டிய நேரத்தில், வரவேண்டிய வழியாக, அவர் விரும்பாவிட்டாலும் அவரை வந்து சந்திக்கிறேன் என்று சொல்."

வாயிற்காவலனிடம் வீரமல்லன் ஆத்திரமாகக் கூறி விட்டுச் சென்ற இந்த வார்த்தைகளை அவனே புரிந்து கொள்ளவில்லை.'ஏதோ ஆத்திரத்தில் உளறிவிட்டுப் போகிறான், இதைப் போய் ஜமீன்தாரிடம் சொல்லுவானேன்?' - என்று பேசாமல் இருந்துவிட்டான். வீரமல்லனை அவமானப்படுத்தி அனுப்பிவிட்டோம் என்று இறுமாந்திருந்தார் ஜமீன்தார்.

* * *

அதேநாள் இரவு; ஒன்பது நாழிகை, ஒன்பதரை நாழிகை சுமாருக்கு, ஜமீன்தார் மருதுத் தேவர் நிம்மதியான உறக்கத்தை நாடி மாளிகையின் மேல் மாடியில் இருந்த சயன அறைக்குச் சென்றார்.

கட்டிலில் போய்ப் படுத்துப் போர்வையை இழுத்து விட்டுக் கொண்டிருந்தவர் யாரோ அறைக் கதவை மூடித் தாழிடுகின்ற ஓசை கேட்டுத் துள்ளி எழுந்தார். அவர் கண்கள் அவரை ஏமாற்றுகின்றனவா? இல்லையானால் வெறும் பிரமையா? கனவா?

கதவுத் தாழ்ப்பாளைப் போட்டுப் பூட்டிவிட்டு வீரமல்லன் அவர் எதிரே நின்று கொண்டிருந்தான். அவன் இதழ்களில் குறும்புத்தனமும் அலட்சிய பாவமும் நிறைந்த புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது. ஜமீன்தாருக்குக் கைகால்கள் வெடவெடத்தன. புலியைக் கண்ட பூனையானார் அவர்.

"ஜமீன்தார்வாள்! நான்தான் வீரமல்லன்! உங்களைச் சந்திப்பதற்கு இந்த நேரம்தான் எனக்கு வாய்த்தது. உங்களுடைய உறக்க நேரத்தில் குறுக்கிட்டதற்கு அடியேனை மன்னிப்பீர்களோ?" என்று வீரமல்லன் அலட்சியமாகச் சிரித்தான். கம்பீரமான தோற்றத்தோடு பின்னால் கையைக் கட்டிக் கொண்டு அவன் நின்ற விதமே ஜமீன்தாரை மலைத்துப் போகும்படிச் செய்தது.

"நீ வீரமுள்ள மறவனாக இருந்தால் மாற்றான் மாளிகையில் திருடனைப் போல் நுழைந்திருப்பதற்காக வெட்கப்பட வேண்டும்" என்று தைரியத்தைக் கஷ்டப்பட்டு வரவழைத்துக் கொண்டு கூறினார் ஜமீன்தார்.

"வீரனைப்போல் நுழைய முயன்றேன். 'ஜமீன்தார் வாள்' மறுத்துவிட்டார். என்னால் பொறுக்க முடியவில்லை. இனியும், கொள்ளை கொடுப்பதற்கும் விளைந்த

பயிரைப் பறி கொடுப்பதற்கும் என்னுடைய இனாம் கிராமமும் நானும் தயாராக இல்லை. இரண்டிலொன்று தீர்த்துக் கட்டிக் கொண்டு போவதற்குத்தான் இப்போது இப்படித் திருடனைப் போல வந்திருக்கிறேன்.''

''உன்னுடைய இனாம் கிராமத்தில் திருடர்கள் பயிரைஅறுத்துக் கொண்டு போவதற்கும், கொள்ளையடிப்பதற்கும் நானா பொறுப்பு? என்னைத் தேடி வர வேண்டிய காரணம்?''

''ஒகோ! அப்படியா! ஜமீன்தார் வீரமருதுத் தேவரே! நின்று நிதானித்துப் பேசும். வீரமல்லனை நீர் அவ்வளவு சுலபமாக ஏமாற்றிவிட முடியாது. கன்னிமாலையாற்றில் அணை போட்டுத் தண்ணீரை அடைத்து வைத்திருப்பதும் கொள்ளைத்தொழிலுக்குக் கூலிப்படை தயார் செய்து என் கிராமத்தின் மேல் ஏவி விடுவதும் உம்முடைய திருவிளையாடல்தான் என்பதை நான் அறிவேன்.''

''நீ மட்டும் பெரிய யோக்கியனோ? புதிதாகக் கிடைத்த இனாம் கிராமத்துக்குக் கண்மாய் வெட்டுகிறேன் பேர்வழியே என்று ஒரே பள்ளமாக வெட்டி ஏற்கனவே இருக்கும் என் கண்மாய்களுக்குத் தண்ணீர் வரவிடாமல் பாழ் செய்வது உன் திருவிளையாடல்தானே?''

''வீரமருதுத் தேவரே! நீர் கூறுகிற குற்றத்தை வேண்டுமென்றே நான் செய்யவில்லை என்பதை நீர் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். ஏதோ கண்மாய் வெட்டினேன். அது ஆற்று மட்டத்தைவிடப் பள்ளமாக அமைந்துவிட்டது. நீங்கள் ஒரு வார்த்தை கண்ணியமான முறையில் என்னிடம் கூறியிருந்தால் நானாகவே பள்ளத்தைத் தூர்ப்பதற்கு ஏற்பாடு செய்திருப்பேன். அதை விட்டுவிட்டு நீங்கள் என்னிடமே 'ஆழம்' பார்க்கத் தொடங்கிவிட்டீர்கள். நீரும் மறவர்; நான் மறவன்தான்.''

''இந்த பயமுறுத்தல் எல்லாம் என்னிடம் பலிக்காது தம்பீ! என் ஜமீனுக்கு முன்னால் உன்னுடைய கிராமம் கடுகுக்குச் சமம். நீ என்னிடம் வாலாட்டினால் உனக்குத்தான் ஆபத்து!''

வீரமல்லன் இதைக் கேட்டுக் கலகலவென்று வாய் விட்டுச் சிரித்தான்.

''உம்முடைய நத்தப்பட்டி ஜமீன் என்னுடைய இனாம் கிராமத்தைவிடப் பெரியதாக வேண்டுமானால் இருக்கலாம்; ஆனால் ஒன்று மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். வீரமல்லனும் அவனுடைய இனாம் கிராமும் மனம் வைத்தால் உம்மை இருந்த இடம் தெரியாமல் ஆக்கிவிட முடியும். ஜாக்கிரதை! ஞாபகமிருக்கட்டும்!''

''யாரிடம் காட்டுகிறாய் இந்தப் பூச்சாண்டி? தேவதானம் ஜமீன் மேற்கேயும், சாப்டூர் ஜமீன் வடக்கேயும் எனக்கு உதவி செய்ய எந்த நேரமும் தயாராக இருக்கின்றன. நீ மட்டும் எங்கள் மூன்று பேரையும் வென்று காட்டு; உன்னால் முடிந்தால். இந்த நத்தம்பட்டி ஜமீனையே உனக்கு ஜாரி செய்துவிட்டுச் சந்நியாசியாகி விடுகிறேன் நான்.''

"நீங்கள் வணங்கும் குலதெய்வத்தின்மேல் ஆணையாக, உங்களைப் பெற்ற தாயின் பத்தினித்தன்மைமேல் ஆணையாக நீங்கள் இதைச் செய்வீர்களா?"

"எங்கள் மூன்று பேரையும் நீ வென்றுவிட்டால் கண்டிப்பாக இதை நான் செய்கிறேன். நாங்கள் வென்றுவிட்டாலோ நீ உன்னுடைய இனாம் கிராமத்தை எனக்கு ஜாரி செய்துவிட்டுச் சந்நியாசியாகப் போக வேண்டும்! சம்மதந்தானா?"

"ஆகா! கண்டிப்பாக."

"வீரமல்லா! யோசித்துப் பேசு. நாங்கள் மூன்று பெரிய ஜமீன்தார்கள். நீயோ ஒரு சிறு கிராமத்தின் இனாம்தார். எறும்பு, யானையோடு பந்தயம் போடலாமா?"

"வீண் பேச்சு எதற்கு மருதுத் தேவரே? நாளை மறுநாள் இராத்திரி ஏழரை நாழிகையிலிருந்து பத்தரை நாழிகை வரை உங்களுக்கு நேரம் தருகிறேன். அந்த மூன்று நாழிகை நேரத்தில் தெற்கேயிருந்து நீங்களும், வடக்கேயிருந்து சாப்டூர் ஜமீன்தாரும், மேற்கேயிருந்து தேவதானம் ஜமீன்தாரும், அவரவர் ஆட்களோடு என் இனாம் கிராமத்து எல்லைக்குள் நுழைய முயற்சி செய்ய வேண்டியது. முடிந்தால் உங்களுக்கு வெற்றி; முடியாவிட்டால் எனக்கு வெற்றி."

"அது சரிதான்! ஆனால் 'மூன்று நாழிகைக்குள்' என்று நீ நிபந்தனை போடுவதன் சூக்ஷமம் என்ன?"

"சூக்ஷமம் ஒன்றுமில்லை! நீங்கள் மூன்று பெரிய ஜமீன்தார்கள் மூன்று திசையிலிருந்து தாக்க முயலுகிறீர்கள். நான் ஒருத்தனாகச் சமாளிக்க வேண்டுமே! அதனால்தான் இந்த நிபந்தனை."

"சரி, அப்படியே வைத்துக்கொள்ளேன். மூன்று விநாடியில் உன் எல்லைக்குள் நுழைந்துவிட முடியுமே! மூன்று நாழிகைக்குள் முந்நூறு தடவை நுழையலாமே? எப்படி நிபந்தனை போட்டால் என்ன? தோற்றுச் சந்நியாசியாகப் போவதென்னவோ நீதான்..."

"முடிவு எப்படியோ? சந்நியாசியாக யார் போகிறோமோ! அதை இப்பொழுதே பேசுவானேன்? நிபந்தனைகளைப் பரஸ்பரம் நாம் எழுத்து மூலம் எழுதிக் கொள்ள வேண்டும்."

"அதற்கென்ன? என் பந்தயத்தையும் நிபந்தனையையும் நாளைக்கே நான் செப்புப் பட்டயத்தில் எழுதிக் கொடுக்கிறேன். நீ?..."

"நானும் நாளைக்கே செப்புப் பட்டயத்திலே எழுதிக் கொடுக்கிறேன்."

"இது சத்தியம்தானா, வீரமல்லா?"

"நாளைக் காலையில் செப்புப் பட்டயத்தோடு வருகிறேன்."

கூறிவிட்டு இருளில் கதவைத் திறந்துகொண்டு, தான் திருட்டுத்தனமாக எந்த வழியே வந்தானோ அதே வழியாக இறங்கிச் சென்றான் வீரமல்லன்.

* * *

மறுநாள் நத்தம்பட்டி ஜமீன்தார் ஜமீன் முத்திரையும் கையொப்பமும் அமைந்த செப்புப் பட்டயமொன்றைத் தயார் செய்தார். அது வீரமல்லனிடம் கொடுக்கப் பட்டது. அதேபோல் வீரமல்லனின் கையொப்பமிட்ட செப்புப் பட்டயம் ஒன்று ஜமீன்தார் வீரமருதுத் தேவரின் கைகளில் ஒப்படைக்கப் பட்டது. இரண்டு பட்டயங்களும் முறையே பின்வருமாறு அமைந்திருந்தன.

**ஜமீந்தார் வீரமல்லனுக்கு அளித்த பட்டயம்**

இந்த ஜமீனுக்கு அருகிலுள்ள வீரமல்லனின் இனாம் கிராமத்தின் எல்லைக்குள் நாளை இரவு ஏழரை நாழிகையிலிருந்து பத்தரை நாழிகைக்குள் நானும் என்னுடைய சக ஜமீன்தார்களும் திசைக்கொருவராக நுழைந்துவிட்டால், வீரமல்லன் தன் கிராமத்தை எனக்கு ஜாரி செய்து விட்டுச் சந்நியாசியாகப் போக வேண்டியது. மேலே குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட மூன்று நாழிகை நேரத்திற்குள், நாங்கள் மூவரும் வீரமல்லனின் கிராம எல்லைக்குள் நுழையாமற்போனால், நான் என்னுடைய நத்தம்பட்டி ஜமீனை வீரமல்லனுக்குக் கொடுத்துவிட்டுச் சந்நியாசியாகப் போவேனாகுக.

இப்படிக்கு,
வீரமருத்துதேவர்,
நத்தம்பட்டி ஜமீன்தார்

**ஜமீந்தாருக்கு வீரமல்லன் அளித்த பட்டயம்**

என்னுடைய இனாம் கிராமத்துக்கு அருகிலுள்ள நத்தம்பட்டி ஜமீந்தாரும் அவருக்கு வேண்டிய சக ஜமீன்தார்களும் நாளை இரவு ஏழரை நாழிகையிலிருந்து பத்தரை நாழிகைக்குள் எனது கிராம எல்லைக்குள் நுழைந்து விட்டால், என் கிராமத்தை நத்தம்பட்டி ஜமீன்தார் வீரமுத்துத் தேவருக்கு ஜாரி செய்துவிட்டு நான் சந்நியாசியாகப் போவேனாகுக. ஜமீன்தார்கள் என் கிராம எல்லைக்குள் குறிப்பிட்ட மூன்று நாழிகைக்குள் நுழையாவிட்டால், நத்தம்பட்டி ஜமீனை எனக்கு ஜாரி செய்துவிட்டு வீரமருதுத் தேவர் சந்நியாசியாகப் போக வேண்டும்.

இப்படிக்கு,
வீரமல்லன்

பட்டயம் தன் கைக்கு வந்த உடனேயே தேவதானம், சாப்டூர், ஆகிய இரு ஜமீன்தார்களுக்கும் தன் பக்கம் உதவினால் வீரமல்லனுடைய இனாம் கிராமத்தைக் கைப்பற்றிப் பங்கு தருவதாகச் செய்தி அனுப்பினார் நத்தம்பட்டி ஜமீன்தார் வீரமருதுத்தேவர். ஜமீன்தார்கள் இருவருமே உதவச் சம்மதித்தனர்.

குறிப்பிட்ட மூன்று நாழிகை நேரத்தில் தான் வடபுறமிருந்து எல்லைக்குள் நுழைய முயலுவதாகச் சாப்டூர் ஜமீன்தாரும், மேற்குப்புறமிருந்து நுழைவதாக தேவதானம் ஜமீன்தாரும், நத்தம்பட்டி ஜமீன்தாருக்கு உடன்பட்டிருந்தனர்.

'எப்படியும் வீரமல்லன் இனாம் கிராமத்தைப் பறி கொடுத்துவிட்டுத் தோற்றுச் சந்நியாசியாகப் போவதைத் தவிர வேறு வழியில்லை' என்றெண்ணி இறுமாந்து கிடந்தார் ஜமீன்தார் வீரமருதுத் தேவர். 'மூன்று பேரில் யாராவது ஒருவர் எல்லைக்குள் நுழைந்தாலும் வெற்றி நமக்குத்தானே?' என்பதே அவருடைய இறுமாப்புக்குக் காரணமாக இருந்தது. ஆனால் வீரமல்லன் தம்மைவிடச் சாமர்த்தியமாக நினைத்துச் சாமர்த்தியமாகச் செயலாற்றத் தெரிந்தவன் என்பதை அவர் மறந்துவிட்டார்.

அப்போது மழைக்காலமாகையினால் வீரமல்லனின் கண்மாய் நிறைந்திருந்தது.

முழுமையாக இல்லாவிட்டாலும், மேற்கே அடுக்கடுக்காக இருந்த நத்தம்பட்டி ஜமீன் கண்மாய்களும் முக்கால் பகுதி நிறைந்திருந்தன. கன்னிமாலை ஆற்றிலும் சுமாராகத் தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது.

கன்னிமாலையாற்றைக் கடந்து வீரமல்லனின் இனாம் கிராமத்தை அடைய ஒரு பாலம் இருந்தது. ஆற்றில் பிரவாகம் அதிகமாகிவிட்டால் மேற்கேயிருந்தும் தெற்கேயிருந்தும் போக்குவரத்துத் தூண்டிக்கப்பட்டுவிடும். வீரமல்லனின் கண்மாய்க்கு வடிகால் வடபக்கம் இருந்தது. வடிகாலை உடைத்து விட்டுவிட்டால் வடக்கேயும் போக்குவரத்துத் துண்டிக்கப்பட்டுவிடும். மூன்று திசையையும் விட்டால் கிழக்கே கூடி ஒசூர் ஒரு வழியாகத்தான் வர முடியும்.

என்ன நோக்கத்தோடு செய்தானோ தெரியவில்லை? கிழக்கே கிராமத்து எல்லையை வளைத்து இரண்டடி உயரத்திற்குக் காய்ந்த விறகுகள், சுள்ளிகள், இலை தழைகள், வைக்கோல் இவைகளைக் குவித்து வைத்திருந்தான் வீரமல்லன். அது ஒரு குட்டிச் சுவர்போலக் கிழக்கே கிராமத்தைச் சுற்றி அமைந்திருந்தது.

பந்தய நாளில் போட்டிக்குரிய இரவு நேரம் வந்தது. வீரமல்லனின் ஏற்பாடுகள் எல்லாம் கமுக்கமாகவும் இரகசியமாகவும் தந்திரமாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. அங்கங்கே காரியங்கள் நடக்க வேண்டிய இடங்களிலெல்லாம் அவனுடைய ஆட்கள் மறைந்து பதுங்கியிருந்தனர். இரவு ஏழு நாழிகையாயிற்று.

தெற்கே ஆற்றின் அக்கரையில் வீரமருதுத் தேவர் ஜமீன் ஆட்களை ஆயுதபாணிகளாக வைத்துக் கொண்டு காத்திருந்தார். மேற்கே, தேவதானம் ஜமீன்தாரும், வடக்கே சாப்டூர் ஜமீன்தாரும் சரியாக அதே நேரத்திற்குத் தயாராக இருந்தார்கள். வீரமல்லனின் இனாம் கிராமத்தின் எல்லைக்குள் பாய மூன்று திசைகளிலும் ஜமீன் புலிகள் தயாராக நின்று கொண்டிருந்தன! ஏழரை நாழிகை ஆகவேண்டியதுதான்! அதற்காகவே அவர்கள் காத்திருந்தனர்.

சரியாக ஏழேகால் நாழிகை ஆயிற்று. மூன்று திசைகளிலும் யாரும் எதிர்பாராத திடீர் மாறுதல் நிகழ்ந்தன. ஜமீன் புலிகளைத் திடுக்கிடச் செய்த மாறுதல்கள் அவை.

தெற்கே நந்தம்பட்டியையும் வீரமல்லனின் கிராமத்தையும் இணைத்த பாலம் நடுவே உடைக்கப்பட்டது. அதே சமயம் மேற்கே ஜமீனுக்குச் சொந்தமான மூன்று

கண்மாய்களையும் யாரோ உடைத்துவிட்டார்கள். ஆற்றில் ஆள் இறங்க முடியாதபடி பிரவாகம் சுழித்தோடத் தலைப்பட்டது. வடக்கே வீரமல்லனின் கண்மாய் வடிகால் உடைத்துக் கொண்டு வெள்ளக்காடாயிற்று மூன்று திசையிலும் நின்ற மூன்று ஜமீன்தார்களும் அண்டமுடியாதபடி, கிராமத்தைத் தீவாக ஆக்கிவிட்டுச் சுற்றி ஒரே பிரவாகமாகப் பெருகி ஓடியது உடைப்பு வெள்ளம். மேற்கே நின்ற தேவதானம் ஜமீன் ஆட்கள் ஒரு வகையிலும் மீள வழியின்றி வெள்ளக்காட்டின் இடையே திகைத்து நின்றனர்.

வடக்கே இருந்த சாப்டூர் ஜமீன் ஆட்களும், தெற்கே இருந்த நத்தம்பட்டி ஜமீன்ஆட்களும் கிழக்குத் திசையில் கிராம எல்லைக்குள் நுழைவதற்காக ஓடினார்கள்.

என்ன ஆச்சரியம்! கிழக்கே கிராம எல்லையைச் சுற்றி வளைத்துக் கொண்டு, நெருப்பு எரிந்து கொண்டிருந்தது. உள்ளே நுழைய இம்மியளவும் இடம் கிடையாது.

மூன்று திசையிலும் வெள்ளப் பிரவாகம் மறுநாள் காலை வரை ஓயவே இல்லை. நெருப்பு, முதல் நாள் இரவு பன்னிரண்டு நாழிகைக்குத்தான் அணைந்தது. தலைகீழாக நின்று பார்த்தும் ஜமீன்தார்களால் குறித்த மூன்று நாழிகைக்குள் வீரமல்லனின் கிராம எல்லையில் நுழைய முடியவில்லை.

உதவிக்கு வந்த ஜமீன்தார்கள் வருத்தத்தோடு திரும்பிப் போனார்கள். வீரமருதுத் தேவர் சந்நியாசியாகிப் போனார்.

செப்புப் பட்டய நிபந்தனைப்படி நத்தம்பட்டி, ஜமீன் வீரமல்லனுக்குச் சொந்தமாய்விட்டது. வீரமல்லன் அன்று சாமர்த்தியத்தால் தனியாக இருந்து மூன்று ஜமீன்தார்களை வென்று வாகை சூடியதால், அவன் பரம்பரையினர் வாழும் இந்தக் கிராமமும் பிற்காலத்தில் 'மூவரை வென்றான்' என்றே வழங்கப்படலாயிற்று. இன்றுகூட, இவ்வூரின் மேற்கு எல்லையில் வீரமல்லனுக்கு ஒரு கோவில் இருக்கிறது. இவ்வூராருக்கு அவன்தான் குலதெய்வம். அவன் கோவிலில் அந்தப் பழைய செப்புப் பட்டயங்களும் வைக்கப்பட்டுள்ளன.

இதுதான் ஐயா இந்த ஊருக்குப் பேர் வந்த கதை!

வெற்றிலை பாக்குக் கடைக் கிழவர் கதையை முடித்தார். பஸ்ஸுக்கு நேரமாகிவிட்டது. இன்னும் ஒன்றரை மைல் நடந்தாக வேண்டுமே? நான் அவரிடம் பாக்கிச் சில்லறையைக்கூட வாங்கிக் கொள்ளாமல் விடைபெற்றுக் கொண்டு நடந்தேன். கற்பனையோ, நிஜமோ, அல்லது பொய்யோ, எனக்குப் பிடித்தமான அந்த ஊரின் பெயருக்கு அந்தக் கிழவர் காரணம் சொல்லிவிட்டார். அவ்வளவு போதும் எனக்கு!

**(1959-க்கு முன்)**

## 31. அருமை அம்மாவுக்கு

**தா**மரைப் பூவின் இதழ்போல் கமலிக்குப் பெரிய கண்கள். அந்தக் கண்களின் வனப்பைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் அவளுக்கு ஆச்சரியம் வரும்போது அவற்றைப் பார்க்க வேண்டும். முகத்தில் ரோஜா மொட்டுக்கள் அரும்பியது போன்ற அவளுடைய சின்னஞ்சிறு உதடுகள் குவியக் கண்கள் காதோரங்களைத் தொட்டு மீள்கிறாற் போல அப்படி அகன்று நீளும் அந்தக் கண்கள்.

"கமலிக்குப் புறா முட்டை போலக் கண் பெரிசு, அப்பா!" என்று என் பையன் அடிக்கடி கேலி செய்வான்.

"உங்கள் வீட்டு ராமு என்னைக் கேலி செய்கிறான், மாமா! என் கண் புறா முட்டையாம். இவனுக்கு மட்டும் கிளி மூக்கு இல்லையோ?" என்று என்னிடம் கட்சி கட்டிக் கொண்டு நியாயத்துக்கு வந்து சேருவாள் கமலி.

"அவன் கிடக்கிறான் அசட்டுப் பயல். உன் கண்கள் பார்க்க எவ்வளவு அழகாக இருக்கின்றன தெரியுமா? கொள்ளை அழகு" என்று கமலிக்குச் சமாதானம் சொல்லி அனுப்புவேன் நான். என் சமாதானத்தைக் கேட்டுக் கொண்டு "வவ்வ-வே! உனக்குத் தாண்டா கிளி மூக்கு" என்று ராமுவுக்கு அழகு காட்டி விட்டுத் திரும்பிப் போய்விடுவாள் கமலி.

கமலி தாயில்லாக் குழந்தை. எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கும். அவள் தகப்பனாருக்கு ஏதோ ஒரு திரைப்பட விநியோகக் கம்பெனியில் ஊர் சுற்றும் பிரதிநிதி வேலை. முக்கால் வாசி நாட்கள் வெளியூரில் இருப்பார். கம்பெனியின் படம் ஓடுகிற ஊரெல்லாம் போய்ச் சுற்ற வேண்டும். நான் குடியிருந்த வீட்டிலேயே பின் கட்டில் அவரும் குடியிருந்தார். தூரத்து உறவுள்ள வய்தான பாட்டியம்மாள் ஒருத்தி வீட்டோடு இருந்து சமையல் செய்து போட்டுக் கொண்டிருந்தாள். தகப்பனார் ஊரில் இல்லாத நாட்களில் வீட்டில் பாட்டியும், கமலியும்தான் இருப்பார்கள். சின்ன வயதானாலும், குறும்புத்தனம், வேடிக்கைப் பேச்சு எல்லாம் கமலியிடம் நிறைய உண்டு.

"கமலீ! அப்பாவை எங்கே காணோம்? ஊரிலே இல்லையா?" என்று எப்போதாவது நான் கேட்பேன்.

"மாமா! அதை ஏன் கேட்கிறீர்கள்? வீரமார்த்தாண்டனின் சபதம் முடிந்ததும், பாட்டியின் பசிக்காகவும், புருஷன் போற்றிய பெண் திலகத்துக்காகவும் அப்பா கிளம்பி விட்டார்!" என்று சொல்லி விட்டு ரப்பர்ப் பந்து மாதிரித் துள்ளிக் குதித்துக்கொண்டே கை கொட்டிச் சிரிப்பாள் கமலி.

“நீ சொன்னதுக்கு என்ன அர்த்தம், கமலீ? எனக்குப் புரியலையே?” என்று தெரியாததுபோல் கேட்டேன்.

“ஐயோ, மாமாவே! நீங்கள் சுத்த அசடாயிருக்கிறீர்களே. அதெல்லாம் சினிமாப் பேரு மாமா! அந்தப் படங்கள் ஓடுகிற ஊருக்கெல்லாம் அப்பா போயிருக்கிறார் என்று அர்த்தம்!” என்பாள் கமலி.

கமலிக்கு அம்மா இறந்து போய் நாலைந்து மாதங்கள் கூட ஆகவில்லை. அம்மா இருந்தபோது கமலி நான்காம் வகுப்பிலோ என்னவோ, படித்துக் கொண்டிருந்தாள். தாய் போனதும் படிப்பு அரைகுறையாக நின்று விட்டது. படிப்பு நின்று விட்டாலும் அந்த வயதில் அம்மாதிரி ஒரு பெண் குழந்தைக்குச் சூடிகை, வக்கணைப் பேச்சு, விவாத முறை எல்லாம் இருப்பது ஆச்சரியம். வயதுக்கு மீறின பேச்செல்லாம் கமலியின் வாயிலிருந்து வரும் சில சமயங்களில். “மாமா! உங்கள் வீட்டு ராமுவைக் கொஞ்சம் வாயை அடக்கிப் பேசச் சொல்லுங்கள். எனக்குக் கோபம் வரும் அப்புறம். காலித்தனமாகப் பேசறான்.”

“அப்படி என்ன பேசினான், கமலீ?”

“நீ படிப்பை நிறுத்தினது நல்லதாகப் போச்சு, ‘பொம்பளைக்கெல்லாம் படிப்பு வராது’ என்று என்கிட்டேயே வந்து துணிச்சலாகச் சொல்கிறான், மாமா!”

“ஏ அப்பா!”

இந்த வார்த்தைகளை என்னிடம் சொல்லி என்ன பயன்? ராமுவைப் பற்றிப் புகார் செய்யும் போதுதான் கமலியின் முகத்தில் எவ்வளவு கோபம்? உதடு கோணிக் கொண்டு போக விம்மலும், விசும்பலுமாக அவள் இருந்த கோலத்தைப் பார்த்தால் நான் சமாதானப்படுத்தாவிட்டால் அழுது விடுவாள் போலிருந்தது.

“அவன் சொன்னதிலே எது காலித்தனம், கமலீ?”

“போ, மாமா! நீ வேண்டுமென்றே தூண்டித்தூண்டிக் கேட்கிறே. உனக்கு ஒண்ணும் தெரியாதோ? ‘பொம்பளை’ என்று சொல்றானே! அப்படி அவன் சொல்லலாமோ?”

“அடே! தேவலையே! வேறே எப்படிச் சொல்ல வேண்டும், கமலி?”

“பெண்கள், மாதர்கள் என்று சொல்லணும் மாமா!” முகத்தில் உறுதி ஒளிர உலகத்துப் பெண் குலத்தின் தன்மானமெல்லாம் தன் பொறுப்பில் பாதுகாக்கப்படுவது போல் ஆவேசத்தோடு சொன்னாள் அந்த மழலை திருந்தாத சிறுமி. மற்றச் சமயங்களில் நீங்கள், உங்களை என்று பேசும் சிறுமி கோபம் வந்துவிட்டால் என்னை, நீ, உன்னை என்று ஒருமையில் பேச ஆரம்பித்து விடுவாள்.

“கமலீ! ‘பொம்பளை’ என்று சொன்னால் குற்றமா?”

“அதென்னமோ! சொல்லப்படாது. சொன்னால் எனக்குக் கோவம் வரும்.”

“கோவம் வந்தால் என்ன செய்வாய்?”

"அழுவேன்."

அழகான கவிக்குப் பொருள் காண்பதைப் போலவே, குழந்தைகளின் மனத்தைப் புரிந்து கொள்ள முயல்வதிலும் ஒரு தெய்வீக இன்பம் கிடைக்கிறது.

"அடே! ராமு இங்கே வா... இனிமேல் கமலியைப் 'பொம்பளை'ன்னு சொன்னால் முதுகுத் தோலை உரித்து விடுவேன்" என்று என் பையனை உடனே கூப்பிட்டுக் கண்டித்தேன். கமலியின் முன்னிலையிலேயே ராமுவைக் கூப்பிட்டுக் கண்டித்ததில் அவளுக்குப் பரம திருப்தி. ஆனால், ராமு திரும்பவும் அவளை வம்புக்கு இழுத்து விட்டான்.

"மகாராணி கமலிதேவி அவர்களே! இனி அங்ஙனம் தங்களைப் பேசேன்" என்று நாடக பாணியில் அவன் வணங்கியபோது மறுபடியும் அவளுக்குக் கோபம் வந்துவிட்டது.

"பாருங்க மாமா...! உங்க முன்னேயே இப்படிச் சினிமாவிலே பேசற மாதிரிப் பேசறான்."

"தடிக்கழுதை! போடா உள்ளே. போய் ஏதாவது படி" என்று நான் பையனை அதட்டி உள்ளே துரத்தினேன்.

"மாமா! இந்தக் காலத்து 'ஆம்பிளைப் பையன்களுக்கு' எது வருதோ வரலையோ, இந்த மாதிரி வசனம் பேச மட்டும் வருகிறது..."

"அடி சக்கை! நூறு வயதுக் கிழவி மாதிரிப் பேசுகிறாயே? நீ எந்தக் காலத்துப் பெண்? நீயும் இந்தக் காலத்துப் பெண்தானே?"

கமலி பதில் சொல்லத் தெரியாமல் விழித்தாள்.

உள்ளே படிக்கப் போன என் பையன் அடிபட்ட புலிபோல் சீறிக் கொண்டு வெளியே ஓடிவந்தான்.

"அப்பா! அவளை விடாதே அப்பா. அவள் மட்டும் இப்போ 'ஆம்பிளை' என்று சொன்னாளே. சொல்லலாமோ? கேளப்பா அவளை."

ராமு சண்டைக்குப் பிள்ளையார் சுழி போட்டுக்கொண்டு வந்தான். எனக்கும் அவன் கேள்வி நியாயமாகவே பட்டது.

"அவன் கேட்பது நியாயந்தானே கமலீ. அவன் உன்னைப் 'பொம்பளை' என்று சொல்லக் கூடாதென்கிறாய். நீ மட்டும் பையன்களை 'ஆம்பிளை' என்று சொல்லலாமா?"

கமலியின் கன்னங்களில் ஆப்பிள் பழ ஒளி வழிந்தது. அவள் பதில் சொல்லாமல் வெட்கித் தலை குனிந்தாள்.

"என்ன கமலீ! பதிலைக் காணோம்!"

"தெரியாமற் சொல்லி விட்டேன் மாமா. ஏதோ வாயில் தவறி வந்து விட்டது. இனிமேல் 'ஆம்பளை' என்று சொல்லப்படாது."

இவ்வாறு கூறிக்கொண்டே குனிந்த தலை நிமிராமல் ஓடி விட்டாள் கமலி. தரையில் கால்கள் பாவாமல் துள்ளித் துள்ளிப் பாய்வது அவளுக்கென்றே அமைந்த ஒரு நடை. கமலி நடந்து வரும்போது பல நிறமும், பல மணமுமுள்ள பூக்களெல்லாம் ஒன்றுபட்டுக் குழந்தை என்ற ஒரு பெருமலராகி என்னை நோக்கி அசைந்தாடி வருவதுபோல் எனக்கு ஒரு பிரமை உண்டாகும்.

எனக்கு ஆர்.எம்.எஸ். அலுவலகத்தில் உத்தியோகம். இரயிலில் ஊர் ஊராகத் தபால் வண்டிக்குள் பயணம் செய்து கடிதங்களைப் பிரிக்கும் வேலை. தொடர்ந்தாற் போல் சில நாட்கள் வேலைக்குப் போனால் சில நாட்கள் ஓய்வு கிடைக்கும். அப்படிக் கிடைக்கும் ஓய்வு நாட்களில் என் வீட்டின் பின்கட்டில் குடியிருக்கும் கமலி என்ற பெண் குழந்தையோடு வம்பு பேசுவது எனக்குப் பிடித்தமான காரியம். ஆயிரம் புத்தகங்களைப் படித்தாலும் தெரிந்த கொள்ள முடியாத தூய எண்ணங்கள் குழந்தையின் கண்களிலும், சிரிப்பிலும், திருந்தாத பேச்சிலும் இருப்பதாக எனக்கு ஒரு நம்பிக்கை இருந்தது. கமலி எனது இந்த நம்பிக்கையின் உறைவிடமாக இருந்தாள்.

ஒரு நாள் அதுவரையில் கேட்காத புதுக் கேள்வி ஒன்றைக் கமலி என்னிடம் கேட்டாள்:

"மாமா! நீங்க தபால் கடிதாசுகளை ஒவ்வொரு ஊருக்கும் இரயில்லே கொண்டுபோகிற உத்தியோகமா பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"ஆமாம்! உனக்கு யார் சொன்னார்கள், என் உத்தியோகத்தைப் பற்றி?"

"'ராமு அப்பாவுக்கு என்ன வேலை' என்று எங்க அப்பாவிடம் கேட்டேன். அவர்தான் சொன்னார்."

"அப்படியா?"

"மாமா! யார் கடிதாசு போட்டாலும் நீங்க கொண்டு போய்க் கொடுப்பீங்களோ?"

"தாராளமாகக் கொடுப்பேன்."

"நான் போட்டால் கூடவா?"

"நீ யாருக்குக் கடுதாசு போடணும், கமலீ?"

"அதெல்லாம் உங்களுக்கு என்ன கேள்வி? நான் ஒருத்தருக்கு இரகசியமா ஒண்ணு எழுதிப் போடணும். போட்டால் போய்ச் சேருமா, இல்லையா? அதை மட்டும் நீங்க சொன்னால் போதும்."

எனக்குச் சிரிப்பு வந்தது. சிரிப்பை அடக்கிக் கொண்டு கமலிக்குச் சரியாக உட்கார்ந்து கொண்டு பேசினேன்.

"கமலீ! நீ சொல்லாவிட்டால் எனக்குத் தெரியாமலா போய் விடும்? கடிதத்தை எழுதி என் கையில்தானே கொடுப்பாய்? அப்போது நான் படித்து விடுவேனே!"

"ஆசையைப் பாரு! நான் 'கார்டி'லே எழுதிக் குடுத்தால்தானே நீங்க படிக்க முடியும்? கவரிலே எழுதி ஒட்டித்தானே குடுப்பேன்."

“கவரைப் பிரித்துப் படித்துவிட்டால் என்ன செய்வாய்?”

“ஐயோ! ஒருத்தர் ஒட்டிப் போட்ட கவரை இன்னொருத்தர் பிரிப்பாளோ? நீங்க அப்படிச் செய்வீங்களா, மாமா? உங்களை நான் நல்ல மாமா என்று நினைத்துக் கொண்டிருக்கிறேன்!”

“சே! சே! நான் அப்படியெல்லாம் செய்வேனா, கமலீ! சும்மா விளையாட்டுக்குச் சொன்னேன். நீ கடிதாசு எழுதிக் கொடு, நான் கொண்டு போறேன்.”

“அதானே கேட்டேன்! நீங்க ரொம்ப நல்ல மாமாவாயிற்றே!”

என் சிரிப்பு இதழ்களுக்கு உட்புறமே சிறைப்பட்டு நின்றது.

“மாமா! நீங்க நாலு மணிக்குத் தானே கிளம்புவீர்கள், அதற்குள் எழுதிக் கொண்டு வந்து உங்களிடம் கொடுத்துடறேன்”- இப்படி அவள் சொன்னபோது பகல் பன்னிரண்டு மணி.

“சரி! கொண்டு வா...”

கமலி வீட்டுக்கு ஓடினாள்.

என் மனத்தில் சிந்தனை சூழ்ந்து கொண்டது. ‘இந்தச் சிறுமி யாருக்குக் கடிதாசு எழுதப் போகிறாள்? அதில் என்ன இரகசியம் இருக்கும்? இவளாகத் தான் வந்து இவ்வளவும் விசாரித்தாளா? அல்லது பாட்டி ஏதாவது கடிதம் தபாலில் சேர்ப்பதற்காகக் கமலியை விட்டு விசாரித்துக் கொண்டு வரச் சொன்னாளா? எப்படியானால் என்ன? கடிதத்தைக் கொண்டு வந்து கொடுக்கும்போது, தானே தெரிந்து விடுகிறது’ என்று மன அமைதி பெற்றேன்.

அன்று எனக்கு மாலை நான்கு மணிக்குப் புறப்பட வேண்டும். மூன்றரை மணிக்கே நான் தயாராகி விட்டேன். கிளம்பும்போது கமலி மூச்சு இரைக்க ஓடி வந்து ஒரு கவரைக் கொடுத்தாள். அதைப் பார்க்காமல் அப்படியே வாங்கிப் பைக்குள் போட்டுக் கொண்டேன்.

ஆர்.எம்.எஸ். ஊழியர்கள் பயணம் செய்யும் மெயில் காரேஜில் ஜன்னல்களை யெல்லாம் அடைத்து விடுவதால் இரயில் ஓடிக் கொண்டிருந்தாலும் உள்ளே வேர்த்துக் கொட்டும். குவிந்து கிடக்கும் கடிதங்களைப் பகுதி பகுதியாகப் பிரித்துக் கொண்டிருந்தவன் வேர்வையைத் துடைத்துக் கொள்வதற்காகக் கைக்குட்டையைத் தேடிச் சட்டைப் பைக்குள் துழாவினேன.

கைக்குட்டையோடு கமலி கொடுத்தனுப்பியிருந்த கவரும் வந்தது. ‘அடேடே! மறந்தே போய்விட்டேனே! கமலியின் கவரைத் தபாலில் சேர்க்க வேண்டுமே. அவள் அப்பா எந்த ஊரில் டூரிங் சினிமாவில் சுற்றிக் கொண்டிருக்கிறாரோ! பாட்டி சொல்லச் சொல்லக் கேட்டுக் கமலி அப்பாவுக்கு எழுதியிருப்பாள், இந்தக் கடிதத்தை என்று எண்ணியவனாய்க் கடித உறையைத் திருப்பி மேலே இருந்த முகவரியைப் படித்ததும் ஒன்றும் புரியாமல் திகைத்தேன். ஊர், பேர், தெரு ஒன்றும் புரியாமல் கோணல்

மாணலான சிறு பிள்ளைக் கையெழுத்துக்களால், அருமை அம்மாவுக்கு என்று மட்டும் உறையின் மேல் எழுதியிருந்தது.

"அசடே!" என்று வாய்க்குள் என் நாக்கு மெல்ல அசைந்தது. கவரைப் பிரித்தேன். உள்ளேயும் அதே சிறு பிள்ளைக் கையெழுத்தில் தாறுமாறாக ஏதோ கிறுக்கி வைத்திருந்தாள் கமலி! நெஞ்சில் பொங்கும் சோகக் கிளர்ச்சியும், ஆவலும் என்னை அதைப் படிக்குமாறு தூண்டின. எழுத்துக் கூட்டிப் பிழைகளை நீக்கிப் படிப்பதே கஷ்டமாக இருந்தது. ஆனாலும் பொறுமையோடு படித்தேன்.

"அருமை அம்மாவுக்குக் கமலி எழுதிக் கொள்வது என்னவென்றால், நீ போய் ரொம்ப நாட்களாயிற்று. இன்று வரையில் உன்னிடமிருந்து ஒரு கடிதாசும் கிடையாது. உன்னைப் பற்றி அப்பாவைக் கேட்டாலும் பதில் பேசமாட்டேங்கறார். பாட்டியைக் கேட்டா ஒண்ணும் பதில் சொல்லாமே அழ ஆரம்பிச்சுடறா.

"அன்னிக்கிச் சாயங்காலம் நான் பள்ளிக்கூடம் விட்டு வரதுக்கு முன்னால் சிவப்பா ஒரு கார் - ஆம்புலன்ஸ்காராமே; உன்னை அது வந்து ஏத்திண்டு போனதைப் பார்த்ததாகத் தபால் மாமா வீட்டு ராமு சொல்றான். எனக்கு ஒண்ணும் புரியவேயில்லை. நீ எப்போ வருவே? எங்கே போயிருக்கிறே? யாரைக் கேட்டாலும் தெரியலே. மேல் வீட்டுப் பிச்சி இருக்காளே, கோண வாயி... அவ வந்து ஒரு நாள், 'உங்கம்மா செத்துப் போயிட்டாடி'ன்னு என்கிட்டச் சொன்னா. எனக்கானா ஒரே கோவமா வந்தது. 'பளீர்'னு ஒரு அறை அவள் கன்னத்திலே விட்டேன் பாரு; அப்புறம் மூணு நாளைக்கு என் கூட அவ பேசவேயில்லை.

"பாட்டிக்குக் கண்ணே சரியாகத் தெரியலே. அவ சமைச்சுப் போடற சோறு வாயிலே வைக்க விளங்கலே. அப்பா முக்கால்வாசி நாள் ஊர் சுத்தப் போயிடறார். எனக்குத்தான் பொழுதே போகலை. பள்ளிக்கூடமும் நிறுத்தியாச்சு. உனக்குப் புதுப் பாப்பா பொறக்கப் போறதுன்னுதானே நீ ஆஸ்பத்திரிக்குப் போனே? இன்னும் பொறக்கலியாம்மா? எப்ப வருவே? நீ வரும்போது புதுப் பாப்பாவோடதானே வருவே?

"ராமு இருக்கான் பாரு அம்மா; அவன் 'பொம்பளைக்கெல்லாம் படிப்பு வராது'ன்னான். எனக்குப் பொறுக்கல்லே.

"'பொம்பளை'ன்னு சொல்லப்படாது என்று அவன் அப்பாகிட்டப் போயிச் சண்டை பிடிச்சேன். அவர் தான்... அந்த மாமாவை நீ பார்த்திருக்கிறாயே. ரொம்ப நல்லவர். அவர் ராமுவைக் கூப்பிட்டுக் கண்டிச்சார்.

"இன்னொரு ரகசியம் உனக்குச் சொல்லிடணும் அம்மா! பாட்டி இல்லை, பாட்டி - அவ வந்து ஒரு நாள் ஒரு சங்கதி சொன்னாள்:

"'கமலீ! சீக்கிரம் உனக்கு ஒரு புது அம்மா வந்திடுவா, அப்புறம் முன்னைப் போல நீ தினம் பள்ளிக்கூடம் போகலாம். பூ வைத்துத் தலையைப் பின்னிக்கலாம். புது அம்மா கிட்டச் சமர்த்தா இருப்பியோ, மாட்டியோ?" அப்படீன்னு பாட்டி கேட்டாள்.

*"'ஏன்? பழைய அம்மா வரமாட்டாளா பாட்டி...' அப்படின்னு நான் பாட்டியைக் கேட்டேன். அதுக்கு அவ பதில் சொல்லாமல் அழுதாள்.*

*"நீயே சொல்லும்மா! எனக்குப் புது அம்மா எதுக்கு? நீதான் இன்னுங் கொஞ்ச நாளிலே புதுப் பாப்பாவோடே வீட்டுக்கு வந்திடுவியே... நீ வீட்டுக்கு வந்ததும், முதல் வேலையாப் பாட்டியை அவ ஊருக்குத் தொரத்திப்பிடணும். நீ சுருக்க வெரசா வந்திடு அம்மா.*

கமலி

*என் கண்களில் ஈரம் கசிந்து விட்டது. ஆயிரமாயிரம் கடிதங்களை விலாசம் பார்த்து ஊர் பிரித்து அனுப்பிப் பழகியவை என் கைகள். ஆனால், கமலியின் கடிதத்தை எங்கே அனுப்புவது? எந்த ஊர் முத்திரை குத்தி அனுப்புவதென்று எனக்கு விளங்கவே இல்லை. கைக் குட்டையால் ஈரம் கசிந்த என் கண்களைத் துடைத்துக் கொண்டேன்.*

(கல்கி, 25.1.1959)



## 32. ஒரு பழைய கனவு

"என்ன ரவி? இப்படியே பித்தன் மாதிரி உட்கார்ந்து கொண்டிருப்பது உனக்கு நன்றாய் இருக்கிறதா? குளிக்காமல், உடை மாற்றிக் கொள்ளாமல், சாப்பிடாமல் இதென்ன காரியம் நீ செய்கிறாய்?"

ரவி பதில் சொல்லவில்லை. சிங்கள நண்பன் குணசேனா ஒன்றும் புரியாமல் பலகணிக்கு வெளியே வெறித்துப் பார்த்தான். பஞ்சுப் பொதிபோன்ற வெண்மேகப் படலங்களுக்கிடையே சிவனொளி பாதத்துச் சிகரம் தொலைவில் தெரிந்து கொண்டிருந்தது. அழகிய பெரிய பச்சை நிற வெல்வெட் கம்பளம் ஒன்றை மேடுபள்ளமான மடிப்புக்களோடு யாரோ ஒரு சோம்பேறி கடனுக்கு விரித்துப் போட்டிருப்பது போல் தூரத்து மலைகள் தெரிந்தன. அணிவகுத்து நிற்கும் பட்டாளத்து வீரர்களைப் போல ரப்பர் மரங்கள். கரும் பசுமைத் தளிர் விளங்கக் காட்சியளிக்கும் பரந்த தேயிலைத் தோட்டங்கள். அந்தச் சிகரங்களிடையே இரையெடுத்த மலைப் பாம்பு நெளிவதுபோல் பாய்ந்து கொண்டிருக்கும் மாவலி கங்கை.

பலகணிக்கு வெளியே தெரிந்த இயற்கையின் பெரிய உலகத்தை ஒரே ஒரு கணத்தில் பார்த்து முடித்துவிட்டான் குணசேனா. ஆனால் கைக்கெட்டுகிற தொலைவில் உட்கார்ந்திருக்கும் நண்பன் ரவியின் உள்ளத்தை அறிய முடியவில்லை.

அன்று காலையில்தான் அவர்கள் இருவரும் கொழும்பிலிருந்து புறப்பட்டு இரத்தினபுரி மார்க்கமாகப் பெலிஹுலோயாவிலுள்ள விருந்தினர் விடுதி (ரெஸ்ட் ஹவுஸ்)யில் வந்து தங்கியிருந்தார்கள். குணசேனாவின் அழகிய கார் வாசலில் நின்றுகொண்டிருந்தது. அதில்தான் அவர்கள் இருவரும் பிரயாணம் செய்து வந்திருந்தனர். மறுநாள் காலை அவர்கள் இருவரும் நுவாரா-எலியா சென்று அங்கிருந்து கண்டிக்குப் போயாக வேண்டும். நீண்ட பிரயாணம் அலுப்பைத் தரும் என்பதற்காகப் பெலிஹுலோயாவில் அன்றிரவு தங்கி ஓய்வு கொண்டுவிட்டு மறுநாள் காலை மறுபடியும் பிரயாணத்தைத் தொடங்கக் கருதியிருந்தார்கள்.

"ரவி! இந்த மாதிரி இங்கே வந்து அடம் பிடிப்பதற்கு நீ வராமலே இருந்திருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும். பன்னிரண்டு வருடங்களுக்குப் பின் இலங்கைக்கு வந்திருக்கிறாய். பத்துப் பதினைந்து நாட்கள் உல்லாசமாக ஊர்சுற்றிப் பார்த்து விட்டுப் போயேன். உனக்கென்ன வந்து விட்டது? ஏன் இப்படி உன்மத்தம் பிடித்தவன் மாதிரி உட்கார்ந்திருக்கிறாய்?"

பதில் இல்லை! ரவி ஆடாமல் அசையாமல் அடித்து வைத்த சிலைபோல் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

"குளிக்கும் அறையில் வெந்நீச் சுடச்சுட இருக்கிறது. இன்னும் சிறிது நேரமானால் ஆறிப்போகும். சாப்பாடு எடுத்துக் கொண்டு வருவதற்காக டிரைவரை பலாங் கொடைக்கு அனுப்பவேண்டும். போ, எழுந்திருந்து போய்க் குளித்துவிட்டு வா."

நண்பன் குணசேனா சிறு குழந்தையைக் கெஞ்சுவது போல் கெஞ்சினான். ரவி பலகணிக்கு வெளியே எட்டிப் பிடிக்க முடியாத இயற்கை எழில் கொட்டிக் கிடக்கும் உலகத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டே இருந்தான்.

பனியும் இருளும் விழுங்கி ஏப்பமிடத் தொடங்கும் நேரம். செருப்பின் கனத்தையும் கடந்து பாதத்தில் உறைக்கும் ஊசிக்குளிர். சாலை வழியே ஓலமிட்டுச் செல்லும் லாரிகள், அந்த விடுதியின் பின் புறம் பாறையிடுக்கில் பாயும் காட்டாற்றின் ஒலி - எல்லாம் குணசேனாவுக்குத் தெரிந்தன; உறைத்தன; கேட்டன; அதே இடத்தில் அதே சூழலில் வீற்றிருந்த ரவிக்குத் தெரியவில்லை; உறைக்கவில்லை; கேட்கவில்லை. ரவியின் மனத்தில், மனத்துக்கு மையமான இடத்தில் ஒளியும் மனமும் கவர்ச்சியும் நிறைந்த மிகப் பெரிய பூ ஒன்று ஒவ்வோர் இதழாக விரிந்துகொண்டிருந்தது. விரிந்த வேகத்தில் மனத்தின் ஆழத்துக்கும் ஆழமான இடத்தில் ஒவ்வோர் இதழாக பூவின் இதழ்கள் - இதழ்களின் மணம் - அவற்றுக்கு என்ன பொருள்?

## முதல் இதழ்

இந்தப் பெலிஹுலோயா விருந்தினர் விடுதிக்கு இப்போதுதான் நான் முதல் முறையாக வந்திருக்கிறேனென்று நண்பன் குணசேனா நினைத்துக் கொண்டிருக் கிறான். பாவம்! அப்பாவி நண்பன். என்னைத் தெரிந்து கொண்ட அளவுக்கு என் அந்தரங்கங்களைத் தெரிந்து கொள்ளாதவன். என் தகப்பனார் கொழும்பில் பிரின்ஸ் தெருவில் ஜவுளிக்கடை வைத்திருந்தபோது பழக்கமானவன் குணசேனா. தமிழர்களோடு அதிகம் நெருங்கிப் பழகிப் பழகி நன்றாகத் தமிழ் பேசக் கற்றுக் கொண்டு விட்டான். பிரின்ஸ் தெருவில் எங்கள் கடைக்கு அடுத்த கடை குணசேனாவின் தகப்பனாருடையது. அவன் தந்தை 'சொய்சா'வுக்கும் என் தந்தைக்கும் நெருங்கிய நட்பு இருந்தது போலவே எங்களுக்கும் நட்பிருந்தது.

இதற்கு முன்பு இந்த விருந்தினர் விடுதிக்கு எப்போது வந்திருக்கின்றேன்? எதற்காக வந்திருக்கின்றேன்? ஏன் வந்திருக்கின்றேன்? அந்த ஒரு பழைய நினைவு அல்லது பழைய கனவு இப்போது எப்படி நினைவுக்கு வந்தது? அதோ இவ்வளவு நேரமாக நான் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறேனே - அந்தப் பலகணியின் வலதுபுறம் வெள்ளையடித்த சுவரில் மங்கலாகத் தெரிகிறதே ஒரு கறை - அந்தக் கறை இத்தனை வருடங்களுக்குப் பிறகும் எத்தனையோ வெள்ளைகள் அடித்த பிறகும் இப்படி மங்கலாகத் தெரிவானேன்? அதற்குக் கீழ்ப்புறம் காப்பிங் பென்சிலால் அன்றிரவு அந்தக் கோணல் மாணலான சிங்கள எழுத்துக்களின் கிறுக்கிய 'தாரா' - என்ற பெயர்கூட இலேசாகத் தெரிகிறதே! ஊம்! இந்தப் பெயரையும், இந்தக் கறையையும் பார்க்காவிட்டால் மட்டும் நினைவு வராமல் போய்விடப் போகிறதா என்ன?

என்னவோ ஒரு அஞ்ஞானம்! வேறொன்றும் இல்லை. மனிதனுடைய சம்மதத்தின்படியா இந்த உலகத்தில் எல்லாம் நடக்கின்றன? அப்படி நடப்பதா

யிருந்தால் அன்றைக்கு இந்த ரெஸ்ட் ஹவுஸில் அப்படி ஒரு சம்பவம் நடந்திருக்குமா? இப்போது நினைத்துப் பார்த்தால் என்றோ ஒரு நாள் தன்னை மறந்த உறக்கத்தில் முன்னிரவு நேரத்தில் கண்ட ஏதோ ஒரு பழைய கனவைப் போல அது தோன்றுகிறது! என்னைப் பொறுத்த வரையில்தான் கனவாகத் தோன்றுகிறது. நீங்களோ, அருமை நண்பன் குணசேனாவோ 'கனவு' என்றுகூட அதை நம்பமாட்டீர்கள். கனவில்கூட அப்படி நடப்பது சாத்தியமில்லை என்று உங்கள் வலிமை வாய்ந்த திடமான சிந்தனைக்குத் தெரியும்.

ஆனால் இந்த உலகத்தில் நம்ப முடிந்தவைகள் எங்கும், எப்போதும், எல்லோர் முன்னிலையிலும் நடந்து கொண்டிருக்கின்றன. நம்ப முடியாதவைகளோ, எங்கேயாவது, எப்போதாவது, எவர் முன்னிலையிலாவது நடக்கின்றன. வித்தியாசம் அவ்வளவே, வேறு ஒன்றும் இல்லை.

## இரண்டாவது இதழ்

நாங்கள் கொழும்பிலிருந்தபோது அப்பாவின் வியாபாரம் செழிப்பாக நடந்து வந்ததனால் மிக வசதியாக வாழ்ந்து வந்ததோம். வெள்ளவத்தையில் கடற்கரையோரத்தில் பெரிய பங்களா. வீட்டோடு இரண்டு பெரிய கார்கள். கடை, வியாபார உபயோகங்களுக்காக அப்பா ஒரு காரைப் பயன்படுத்திக் கொண்டார். மற்றொரு காரை நானும், வீட்டிலுள்ள எல்லோரும் பொதுவாக உபயோகித்துக் கொண்டோம்.

அப்போது எனக்கு இருபத்தி நான்கு வயது. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தேன். விடுமுறை நாட்களில் காரை எடுத்துக் கொண்டு இயற்கை எழில் கொஞ்சும் இலங்கையின் மலைப் பகுதிகளில் சுற்றுவது எனக்கு விருப்பமான பொழுது போக்கு. அவசியத்தை உத்தேசித்துப் பத்தொன்பதாவது வயதிலேயே நன்றாகக் கார் ஓட்டக் கற்றுக்கொண்டிருந்தேன்.

அந்த வருடம் டிசம்பர் மாதக் கடைசியிலேயே கிறிஸ்துமஸ் விடுமுறை ஆரம்பமாகி விட்டது. இரண்டு மூன்று நாட்கள் நிம்மதியாக மலைப்பகுதிகளில் சுற்றிவிட்டு வரலாமென்று காரில் புறப்பட்டேன். கொழும்பிலிருந்து புறப்படும் பொழுது காலை பதினொரு மணி. வழக்கத்தைவிட அன்று வெய்யில் அதிகமாக இருந்தது. ஏற்றமும் இறக்கமுமாக வளைந்து நெளிந்து செல்லும் மலை ரோடுகளில் கார் சென்று கொண்டிருந்தது. வெள்ளைக்காரர்களின் மூளையும், தமிழர்களின் உழைப்புமாகச் சேர்ந்து இந்த மலைகளைத் தேங்காய் துருவுகிறதுபோலத் துருவி ஒரே தார் ரோடுகளாக அமைத்திருக்கும்போது; மலைப் பிரயாணத்திலுள்ள சுகத்துக்கும் கேட்க வேண்டுமா?

அவிசாவெளியில் மலைமேல் படிப்படியாக ஏற்றப் பாதையை அடைந்த கார், உலப்பனை வருகிறவரை ஒரு தொல்லையில்லை. உலப்பனையைக் கடந்ததும் மழை சோனா மாரியாகப் பிடித்துக்கொண்டது. ரோட்டில் இரு புறமும் மேடுகளிலிருந்து காட்டாறு போல் நீர் பெருக்கெடுத்து ஓடியது. சாதாரணமாகவே வழவழவென்று

கண்ணாடி பதித்தது போலிருக்கும் அந்த ரோடுகளில் சற்று அதிகமான வேகத்தில் சென்றால் காரின் டயர் வழுக்கும். மழை வேறு பெய்யவே நான் அஞ்சினேன். போதாக் குறைக்கு மாலை நேரம் முடிந்து இருள் பரவத் தொடங்கியது. எத்தனை முறை வந்து பழகியவர்களாக இருந்தாலும் இலங்கை மலைகளில் ரோடுகளை நினைவாக அடையாளம் வைத்துக்கொள்வது என்பது மட்டும் முடியாத காரியம். திரும்பின இடமெல்லாம் ரோடுகளாக இருந்தால் எதைத்தான் நினைவு வைத்துக் கொள்வதற்கு முடியும்?

மழை நிற்கிறவரை கிளம்பவேண்டாம் என்று உலப்பனையைக் கடந்து சிறிது தூரம் வந்ததும் சாலையோரத்தில் காரை நிறுத்திவிட்டேன். மழை ஓசை, இருட்டு - காரைச் சுற்றிலும், எங்கே என்ன இருக்கிறதென்றே தெரியவில்லை. காருக்குள் மேலே இருக்கும் விளக்கு, முன் விளக்குள் - எல்லாம் அணைத்து இருளில் உட்கார்ந்திருந்தேன். சுற்றும் முற்றும் பார்த்தபோது பத்துப் பதினைந்து கெஜ தூரம் முன்னால் பாதையோரத்தில் விளக்கொளி தெரிந்தது. அங்கே ஏதாவது குடிசை இருக்க வேண்டும் என்று அனுமானித்தேன். மழை பெய்து கொண்டிருந்தால் என்ன? இருளில் காருக்குள் எவ்வளவு நேரம்தான் பொறுமையாக உட்கார்ந்திருக்கமுடியும். காரைப் பூட்டிச் சாவியைக் கையில் எடுத்துக் கொண்டேன். நனைந்தாலும் பரவாயில்லை என்று கீழே இறங்கி ஒளி வந்த இடத்தை நோக்கி நடந்தேன்.

'கஜ்ஜிக் கொட்டை' (முந்திரிப் பருப்பு)யும், செவ்விள நீரும் விற்கும் சிறிய கடை அது. குடிசை முகப்பில் தட்டு நிறையச் சுட்ட முந்திரிப்பருப்பு குவித்திருந்தது. இன்னொருபுறம் கொத்துக் கொத்தாகத் தங்கக் கட்டிகளே காய்த்துப் பழுத்ததுபோல் செம்பொன் நிறத்தில் செவ்விளநீர்க் குலைகள். பக்கத்தில் அவற்றைச் சீவிக் கொடுக்கப் பயன்படும் ஒரு அரிவாள். முந்திரிப் பருப்பைப் பொட்டலம் கட்டும் காகிதங்கள். அவற்றின் இடையே ஒரு சின்ன முக்காலியில் பதினேழு, பதினெட்டு வயது மதிக்கத் தக்க ஒரு சிங்கள யுவதி. கரும்புகையைக் கக்கிக்கொண்டு எரியும் ஒரு மண்ணெண்ணெய் விளக்கு.

காரை விட்டு இறங்கி நனைந்துகொண்டே சென்றவன், அந்த இடத்தில் அப்படி ஒரு அற்புதமான காட்சியை எதிர்பார்க்கவே இல்லை. 'இவள் முந்திரிக்கொட்டை விற்கும் சிங்களப் பெண்ணா? அல்லது எங்கிருந்தாவது வழி தவறி வந்துவிட்ட வானுலகத்து மோகினியா?' - என்று கரு கணம் மலைத்துப் போனேன். நனைந்துகொண்டே அந்தக் கீற்றுக் கொட்டகை வாசலில் நின்ற என்னைப் பார்த்து விட்டாள்.

"ஆ, முதலாளி! (இப்படி அழைப்பது ஒரு மரியாதை வழக்கம்) இப்படி உள்ளே வாருங்கள்." - இனிய குரலில் சிங்களத்தில் பேசினாள் அவள். சிவப்பு நிற வெல்வெட் பெட்டிக்குள் மறைந்திருக்கும் முத்துச்சரம்போல் அவள் செவ்விதழ்களுக்கிடையே நகை மலர்ந்தது. அதே குடிசைக் குள்ளிருந்து வேறு ஒரு வயதான கிழவி எட்டிப் பார்த்து விட்டு, "யார் வந்திருக்கிறார்கள்?" என்று அந்த யுவதியிடம் கேட்டாள். அவள் பதில் கூறினாள். நான் கொட்டகைக்குள் நுழைந்தேன். அவள் உள்ளே போய்

உட்காருவதற்கு இன்னொரு சிறிய முக்காலியைக் கொண்டு வந்து போட்டாள்; உட்கார்ந்தேன். அத்தனை ஆண்டுகளாக இலங்கையில் வசித்ததின் பயனாகச் சுமாராகச் சிங்களம் பேசவும், மற்றவர்கள் பேசினால் புரிந்து கொள்ளவும் தெரிந்திருந்தது. "உன் பெயர் என்ன?" - என்று சிங்களத்தில் அந்த யுவதியைக் கேட்டேன். "தாரா" - என்று சொல்லிவிட்டுக் கன்னத்தில் குழி விழச் சிரித்தாள். அப்பப்பா! ஆளைக் கொள்ளையடிக்கிற மோகனச் சிரிப்பு!

உலகத்தில் எந்தெந்தப் பெண்களிடமோ அழகு இருப்பதாகச் சொல்கிறார்கள். இங்கே இந்தக் கண்காணாத மலைப் பெண்ணுக்குக் கடவுள் இவ்வளவு அழகை வழங்கியிருக்கிறானே! கரந்தும், சரிந்தும், வளைந்தும், நெளிந்தும், குழைந்தும், குவிந்தும், உயர்ந்த ஊனுடல் ஒன்று என் முன் அந்தக் குடிசையில் நிற்கவில்லை. ஆண் பிள்ளைகளின் உள்ளங்களைச் சூறையாட ஆசை கொண்ட மாயச்சிற்பி ஒருவன் செம்பொற்சிலை ஒன்று செய்து கொல்லிப் பாவையாக உலாவ விட்டிருக்கிறான். அந்தச் சிலை உயிர் பெற்று உணர்வுபெற்றுத் 'தாரா' என்ற பெயரும் பெற்று இங்கே முந்திரிப் பருப்பு விற்றுக் கொண்டிருக்கிறது.

"இதோ! இதை எடுத்துக் கொள்ளுங்கள்!" - உட்கார்ந்தவன் நிமிர்ந்து பார்த்தேன். ஒரு காகிதத்தில் வறுத்த முந்திரிப் பருப்பும், மற்றொரு கையில் கிளாஸ் நிறைய ஆவி பறக்கும் தேநீருமாக அருகில் நின்றாள் அவள். அவளுடைய நாசிக்குக் கீழே, முகவாய்க்கு மேலே இரத்தச் சிவப்பில் இரண்டு மாதுளை மொட்டுக்கள் சிரித்தன. அவை? உதடுகள்! அவளுடைய அதரச் செம்மலர்கள் அப்படியே சிரித்தன.

"மழைக்கு ஒதுங்கியவனுக்காக வீண் சிரமத்தை எடுத்துக் கொள்கிறீர்கள். பக்கத்தில் காரை நிறுத்தி விட்டு வந்திருக்கிறேன். இதோ மழை நின்றதும் புறப்பட்டு விடுவேன்" என்று அவளிடம் எனக்குத் தெரிந்த அறைகுறைச் சிங்களத்தில் சிரித்துக் கொண்டே கூறினேன்.

"பரவாயில்லை! இவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்!" கதவோரத்தில் மறைந்து நின்று கொண்டிருந்த கிழவியும் வெளியே வந்து என்னை வற்புறுத்தினாள். நான் தாராவின் கைகளிலிருந்து முந்திரிப் பருப்பையும் தேநீரையும் வாங்கிக் கொண்டேன். சற்றே நீண்ட செண்பக மொட்டுக்களைப் போன்ற அந்த விரல்கள்!... அவைதாம் எவ்வளவு நேர்த்தியாக அமைந்திருந்தன!

"ஒரு இளநீர் சீவித் தரட்டுமா?" கேள்வி - அதே மோகனச் சிரிப்பு! ஏன் இப்படிச் சிரிக்கிறாள்? சிரிக்காமல் பேசவே தெரியாதா இவளுக்கு?

"இந்த மழையில் இளநீர் சாப்பிடவா சொல்கிறாய்? என்னைக் கேலி செய்கிறாய் போலிருக்கிறது!"

மறுபடியும் அதே சிரிப்பு! ஐயோ அவளிடம் அந்தச் சிரிப்பையும் என்னிடம் இந்தக் கண்களையும் ஏன் வைத்தாய்? முந்திரிப் பருப்பு இருந்த காகிதமும், தேநீர்க் கிண்ணமும் காலியாயின. கிழவி வந்தாள். ஏதேதோ விசாரித்தாள். இரவில் அங்கேயே சாப்பிட வேண்டுமென்று வற்புறுத்திவிட்டுக் குடிசைக்குள் சென்று விட்டாள்.

"உங்களுக்குத் திருமணமாகிவிட்டதா? எத்தனை குழந்தைகள்?" - கேள்வி! சிரிப்பொலி! தூக்கி வாரிப் போட்டது எனக்கு. தாராதான் கேட்டாள்.

"இல்லை. இன்னும் எனக்குத் திருமணமே ஆகவில்லை!" பதில் கூறினேன் நான்.

"ஏன் செய்து கொள்ளவில்லை?" கேள்வி! அதே கிண்கிணிச் சிரிப்பு! என்ன பதில் கூறுவது என்று தெரியாமல் திணறிப் போய் மலங்க விழித்துக்கொண்டே உட்கார்ந்திருந்தேன்.

என் மனத்தில் ஒரே வியப்பு! இந்த மலைநாட்டுச் சிங்கள யுவதிக்குச் சூது, வாது எதுவுமே தெரியாதா? இவளைச் சரியானபடி மடக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டு, "அது சரி! உனக்குத் திருமணமாகிவிட்டதா?" என்று வேண்டுமென்றே தெரியாதது போலக் கேட்டேன்.

அப்போதாவது அவளுடைய முகத்தில், சிரிப்பில், பார்வையில் நாணம், தயக்கம், பயம், கூச்சம் ஏதாவது ஒன்றை எதிர்பார்த்தேன். ஆனால் ஏமாந்தேன். நாணமோ, பயமோ, கூச்சமோ, தயக்கமோ சிறிதும் இல்லாமல் அதே நிமிர்ந்த பார்வையோடு, அதே சிரிப்போடு "இன்னும் ஆகவில்லை" என்று தலையை ஆட்டினாள் . ஒய்யாரமாக அந்தத் தலை அசைந்த போது என் இதயமே அசைந்தது. பயங்கரமாகக் கொட்டிய அந்த மழை நிற்கும்போது இரவு பத்து மணிக்கு மேலாகிவிட்டது. கிழவியும் தாராவும் விடாப்பிடியாக வற்புறுத்தவே அந்தக் குடிசையில் அவர்கள் அன்போடு அளித்த ரொட்டி, பழங்களைச் சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக் கொண்டேன். அவர்கள் அன்பு என்னை பிரமிக்க வைத்தது.

"மழை நின்றுவிட்டது! போய் வரட்டுமா?" பையிலிருந்து கார்ச் சாவியை வெளியில் எடுத்துக்கொண்டு விடைபெறுவதற்காக அவர்களை நோக்கிக் கைகூப்பினேன். அவர்கள் திகைத்தனர். பயந்த குரலில் கண்களை அகல விரித்து, "என்ன? இந்த இருட்டிலேயா?" என்றாள் தாரா.

"கார் இருக்கிறது! வசதியான ரோடுகள் இருக்கின்றன! இருட்டு என்னை என்ன செய்யும்?" என்று பதில் சொன்னேன்.

"நீங்கள் எங்கே போக வேண்டும்?"

"ஏன்? இரவு 'பெலிஹூலோயா ரெஸ்ட் ஹவுஸில்' போய்த் தங்கிவிடலாமென்று நினைக்கிறேன்."

நான் கூறியதைக் கேட்டு இரண்டு கைகளையும் தட்டிக் கொண்டே இடி இடியென்று கேலி சிரிப்புச் சிரித்தாள் தாரா.

"என்ன? ஏன் சிரிக்கிறாய்?"

"ஒன்றும் இல்லை! இந்த வழிகளில் இதற்கு முன்பு வந்து பழகியிருக்கிறீர்களோ?"

"ஏன், பலமுறை வந்திருக்கிறேனே!"

"பலமுறை வந்த லட்சணம்தான் இவ்வளவு நன்றாக வழி கண்டுபிடித்து வந்திருக்கிறீர்களோ? பெலிஹூலோயா போவதற்கு யாராவது 'உலப்பனை' வரை

வீணாகக் காரை விட்டுக் கொண்டு வருவார்களா? நீங்கள் 'எட்டியாந்தொட்டை'யிலாவது, 'கித்துல்கலை'யிலாவது வழி பிரிந்து போயிருக்கலாமே? மூலைக்கு மூலை ஐந்தாறு ரோடுகளும் வழிகளும் பிரிகின்றன. இங்கெல்லாம் வழி விவரம் தெரியாவிட்டால் இப்படித்தான் இடர்ப்பட வேண்டும்" என்று கூறிச் சிரித்தாள்.

"ஐயையோ! அப்படியானால் இப்போது என்ன செய்வது? நான் எப்படியும் 'பெலிஹூலோயா'வுக்குப் போயாக வேண்டுமே!" நான் திடுக்கிட்டுப் போய்ப் பதறிய குரலில் அவளை வினவினேன்.

"கினிகத்தேனா வரை இதே ரோட்டில் திரும்பிப்போய் அங்கிருந்து 'நோர்ட்டன் பிரிட்ஜ்' மார்க்கமாகக் குறுக்கு வழியில் போனால் பெலிஹூலோயா சீக்கிரமாகப் போய்விடலாம்" என்று அவள் கூறினாள்.

"நீ சொல்கிற அந்த வழிகள் எனக்குத் தெரியாதே! பகலானால் யாரையாவது கேட்டுக் கொண்டே போகலாம். இந்த நேரத்தில் எப்படிப் போவது? யாரைக் கேட்டுக் கொண்டு போவது?" என்றேன்.

"நீங்கள் அவசியம் இப்போதே போய்த்தான் ஆகவேண்டுமா?"

"கண்டிப்பாகப் போயாகவேண்டும்! நாளைக் காலை அங்கே வந்து சந்திக்கச் சொல்லி இரண்டு நண்பர்களுக்கு முன் கடிதம் வேறு எழுதிவிட்டேன். இரவிலேயே போனால்தான் காலையில் அவர்களைச் சந்திக்க வசதியாயிருக்கும்."

"அப்படியானால் புறப்படுங்கள். நானும் உங்களுடன் கூட வருகிறேன். எனக்கு எல்லா வழிகளும் தெரியும்!"

"நீயா?..." நான் இரைந்து கத்துகின்றாற்போன்ற தொனியில் கேட்டு விட்டேன். எனக்குப் பகீரென்றது. நான் கேட்கும் குரலில் எனக்கு நம்பிக்கை விழவில்லை.

"ஏன் ஆச்சரியப்படுகிறீர்கள்? நான் உங்களோடு வரக்கூடாதா?" அவள் களங்கமில்லாத குரலில் மறுபடியும் கேட்டாள். நான் நம்பிக்கையில்லாத மனத்துடன் தாராவினுடைய தாயின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். அந்த வயதான, சுருக்கம் விழுந்த கிழட்டு முகத்தில் களங்கமோ, அவநம்பிக்கையோ, சந்தேகமோ இல்லை.

"தாராவை அழைத்துக்கொண்டு செல்லுங்கள். அவளுக்கு இங்குள்ள வழிகள் எல்லாம் கரதலப்பாடம். நாளைக்கோ, நாளன்றைக்கோ நீங்கள் திரும்பி வரும்போது உங்கள் காரிலேயே அவளை இங்கே கொண்டு வந்து விட்டால் போதும்." - கிழவியின் குரலில் தயக்கமே இல்லை. எனக்கு உடல் முழுதும் சிலிர்த்தது. மறுபடியும் அந்த வாக்கியத்தை நினைத்துக் கொண்டேன்.

அந்நியனை அந்நியனாக எண்ணவே இவளுக்குத் தெரியவில்லை. எதையும் விபரீதமாக எண்ணவே இவர்களுக்குத் தெரியாதா? அமுதத்தில் செய்து நிறுத்திய சிலைபோல் பதினெட்டு வயதுப் பெண்ணை இந்த இரவில் எனக்கு வழிகாட்டத் துணையாக அனுப்புகிறாளே இந்தத் தாய்! உலகில் நன்மைகளைத் தவிர,

சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட நிகழ்ச்சிகளைத் தவிர வேறெவையுமே நடக்க முடியாதென்ற நம்பிக்கையா இவளுக்கு? எல்லோருக்கும் இப்படி ஒரு நம்பிக்கை இருந்தால் உலகம் எப்படி இருக்கும்?

"வாருங்கள் போகலாம்!" அவள் என்னையும் முந்திக் கொண்டு கார் நின்ற இடத்தை நோக்கி நடந்தாள். மலைத்துப் போய் நின்று கொண்டிருந்த நானும் நடந்தேன்.

காரில் அவள் முன் ஸீட்டில் எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்தபோது இன்னும் தூக்கிவாரிப் போட்டது எனக்கு. "நீ பின் ஸீட்டில் உட்கார்ந்து கொண்டால் நல்லது!"-

"பரவாயில்லை! இங்கேயே இருக்கிறேன். இப்படி இருந்தால்தான் ரோடுகள் இடத்தில் உங்களுக்கு வழிகாட்ட முடியும்." என்று சொல்லிச் சிரித்தாள் அவள், வேற்றுமை, கூச்சம், நாணம் இவற்றில் எதையுமே மருந்துக்குக் கூடப் படைத்தவன் வைக்கவில்லை போலும். முன் ஸீட்டில் உட்கார்ந்து கொண்டதற்கு அவள் கூறிய காரணம் பொருத்தமாக இருந்தாலும் என் மனத்தில் வேறுவிதமான சந்தேகங்கள் உண்டாயின. அழகான, இளம்பெண்களைப் பயன்படுத்தி அங்கங்கே நடைபெறும் நூதனக்கொள்ளைகள், வழிப்பறிகளைப் பற்றிப் பத்திரிகைகளில் அவ்வப்போது செய்திகள் வந்த கொண்டிருந்தன. அந்த வகையில் ஏதாவது இருக்குமோ் என்றுகூட நினைத்துப் பயந்தேன். கார் குடிசைக்கு அருகிலிருந்து புறப்பட்டது. தாரா பாதைகளை விளக்கிக் கூறினாள்.

## இறுதி இதழ்

பெலிஹுஒலோயா ரெஸ்ட் ஹவுஸை அடையும் போது இரவு இரண்டரை மணி. ரெஸ்ட் ஹவுஸ் காவல்காரனை எழுப்பி இடம் கேட்டோம்.

"எனக்கு ஒரு அறையும், இந்தப் பெண்ணுக்கு ஒரு அறையும் தனித்தனியே வேண்டும்" - என்றேன் நான்.

"ரெஸ்ட்ஹவுஸில் அநேகமாக எல்லா அறைகளிலும் ஆட்கள் தங்கியிருக் கிறார்கள். ஒரே ஒரு அறை வேண்டுமானால் உங்களுக்காக ஒழித்துக் கொடுக்கலாம்." - காவல்காரன் பதில் கூறினான்.

நான் அவநம்பிக்கையோடு தாராவின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தேன். "பரவாயில்லை! ஒரு அறை போதும். இரண்டு பேரும் அங்கேயே தங்கிக் கொள்ளலாம்." - தாரா காவல்காரனிடம் கூறினாள். அவளுக்குத்தான் அந்நியனை அந்நியனாக நினைக்கத் தெரியாதே! காரைப் பூட்டி ரெஸ்ட் ஹவுஸின் ஷெட்டில் கொண்டு போய் நிறுத்தினேன்.

தாராவை அழைத்துக் கொண்டு ரெஸ்ட் ஹவுஸில் எங்களுக்காகக் கொடுத்த அறைக்குள் நுழைந்தேன். அறையில் ஒரே படுக்கைதான் இருந்தது. காவல்காரனைக் கூப்பிட்டு இன்னொரு படுக்கை போடச் சொல்வதற்காக வெளியே வந்தேன். இன்னொரு படுக்கைக்காகக் காவல்காரனிடம் தகராறு செய்து கொண்டிருந்தபோது உள்ளே தாராவின் கூச்சல் கேட்டது. என்னவோ ஏதோ என்று பதறிப்போய் ஓடினேன்.

கூச்சலிட்டு அலறியவாறே ஜன்னலோரமாகச் சுவரில் முழங்கையின் பின்புறத்தைத் தேய்த்துக் கொண்டிருந்தாள் தாரா.

"என்ன? என்ன?"

"பாழாய்போன அட்டை! எப்போது பிடித்துக்கொண்டதென்றே தெரியவில்லை. திடீரென்று முழங்கையில் இரத்தம் வடிகிறது" என்றாள். "அதற்காகப் பூப்போன்ற கையை இப்படியா சுவரில் தேய்ப்பார்கள்! இதோ அட்டையை நான் எடுத்து விடுகிறேன்" என்று சொல்லி அந்தக் கையைப் பற்றிக் காவல்காரனிடம் சிறிது மூக்குப்பொடி வாங்கி அட்டை பற்றியிருந்த இடத்தில் தூவினேன். பொடி வாடையில் பிடி தளர்ந்து அட்டை கீழே சுருண்டு விழுந்தது.

தாரா கையைத் தேய்த்த இடத்தில் சுவரில் இரத்தக் கறையாகிவிட்டது. "இதென்ன இப்படிச் சுவரைப் பாழாக்கி விட்டாயே?" என்று சிரித்துக் கொண்டே கேட்டேன்.

"பாழாக்கவில்லையே! சுவருக்கு இரத்ததானம் செய்திருக்கிறேனாக்கும்" என்று சொல்லிக் கொண்டே, என் சட்டைப் பையிலிருந்த காப்பிங் பென்ஸிலை உருவி எடுத்தாள்.

"பென்சிலை என்ன செய்யப் போகிறாய்?"

"இந்தக் கறைக்கு மேல் 'தாராவின் இரத்தம்! அட்டைகள் ஜாக்கிரதை' என்று எழுதப் போகிறேன்" என்று பதில் கூறிக்கொண்டே, சுவரில் 'தாரா' என்று ஆரம்பித்து எழுதத் தொடங்கி விட்டாள். "இதோ பார்! இது ரெஸ்ட் ஹவுஸ். கண்டதையெல்லாம் சுவரில் கிறுக்கக் கூடாது!" என்று அவள் கையைப் பிடித்து மேலே எழுதவிடாமல் தடுத்தேன்.

கண்ணாமூச்சி விளையாடும் சிறு குழந்தையை விளையாடும் போது ஒளிந்திருக்கும் இடத்திலிருந்து கண்டு பிடித்து விட்டால் அது கலகலவென்று கைகொட்டிச் சிரிக்குமே அந்த மாதிரி சிரித்தாள் தாரா.

"பலபேர்கள் தங்கியிருக்கும் ரெஸ்ட்ஹவுஸில் இரண்டு மணிக்குமேல் ஒரு பெண் இப்படிச் சிரித்தால் என்ன நினைத்துக் கொள்வார்கள்?"

"ஏன் இரவு இரண்டு மணிக்குச் சிரிக்கக்கூடாதென்று பெலிஹுஸ்ஓயலோயே ரெஸ்ட்ஹவுஸில் ஏதாவது சட்டம் போட்டிருக்கிறார்களா என்ன?" துடுக்குத்தனமாக எதிர்த்துக் கேட்டாள் அவள். அப்போது எங்கள் அறைக்கு வெளியே யாரோ சிரித்துக்கொண்டே மெல்லப் பேசும் குரல் கேட்டது. அந்தச் சிரிப்பும், பேச்சும், அதை அவர்கள் பேசிய விதமும், சிரித்த விதமுமே கேட்கத் தூண்டக்கூடிய முறையில் இருந்தன.

தாரா அதை உற்றுக் கேட்டாள். எங்கள் பேச்சு நின்றது. நானும் கேட்டேன்.

"என்ன வாட்ச்மேன்? யார் இந்த அறைக்கு வந்திருக்கிறார்கள்? இந்த நேரத்தில் ஒரே சிரிப்பும் கும்மாளமுமாக இருக்கிறது?" கேட்டவர் சிங்களத்திலேயே பேசினார்.

காவல்காரன் அவருக்குப் பதில் சொல்லாமல் 'ஒரு தினுசாக' சிரிக்கும் ஒலி கேட்டது.

"என்னப்பா சிரிக்கிறாய்? என்ன விசேஷம்?"

"சரியான ஜோடிதான்! யாரோ ஒரு பணக்காரத் தமிழ்ப் பையன் ஒரு சிங்களக் குட்டியை இழுத்துகொண்டு..."

அவன் சொல்ல வந்ததைச் சொல்லி முடிக்கவில்லை. பேயறை பட்டவள் போல 'வீல்' என்று அலறினாள் தாரா. ஓடினாள். "தாரா! தாரா! போகாதே. இருட்டு - உலகமென்றால் நாலுவிதமாகத்தான் பேசுவார்கள்" என்று கத்திக்கொண்டே பின்னால் ஓடினேன் நான். வெறி பிடித்தவள் போலத் தட்டுத் தடுமாறி விழுந்து ஓடினாள் அவள். கூண்டிலிருந்து விடுதலை அடைந்த பறவையைப் போலப் பறந்தோடிவிட்டாள் அவள்.

இருளில் அவளும் தெரியவில்லை. அவளுடைய பதில் குரலும் கேட்கவில்லை.

"ஆம்! அவள் அந்நியனை அந்நியனாகக் கருதுவதற்குத் தெரிந்து கொண்டு விட்டாள். ஒரே காரில் சேர்ந்து பிரயாணம் செய்த போதும், ஒரே அறையில் உடன் தங்கச் சம்மதித்தபோதும், கையைப் பிடித்துத் தீண்டி அட்டைக் கடியிலிருந்து விடுவித்த போதும், எந்த ஒரு களங்கம் அவள் மனத்தில் ஏற்படவில்லையோ அந்தக் களங்கத்தை இரண்டு முட்டாள்கள் தங்கள் பேச்சின் மூலம் உண்டாக்கி விட்டார்கள், அந்த முட்டாள்கள்! அவர்கள் உலகில் எதையுமே பாவம் நிறைந்த கெட்ட கண்களோடு மட்டுமே பார்க்கத் தெரிந்தவர்கள். தீமைத் தழும்பேறிய அந்தப் பார்வையின் விளைவு என்ன? தாராவின் புனிதமான மனம் அந்நியனை அந்நியனாக எண்ணிவிட்டது. தீயவை எதையுமே பேச, நினைக்க, செய்யத் தெரியாத அந்தப் பதினெட்டு வயதுப் பெண் குழந்தையின் மென்மையான இதயத்தில் சமூகத்தின் கூரிய முள் ஒன்று தைத்துவிட்டது. அவளுக்கு அன்று வரையில் தெரியாத புதிய பயத்தை உண்டாக்கி விட்டது.

ரவியின் மனத்தில் மலர்ந்த நினைவுப் பூவின் இதழ்கள் ஒவ்வொன்றாக உதிர்ந்து விட்டன. "நீ குளிக்க வேண்டாம். உடை மாற்றிக் கொள்ள வேண்டாம். சாப்பிட மட்டுமாவது வா" என்று கையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான் குணசேனா. ரவி அவனுக்குப் பதில் சொல்லாமல் மறுபடியும் பலகணியைப் பார்த்தான். அதே அறை! அதே கறை! அதே எழுத்து.

* * *

"**உ**னக்கு என்ன பைத்தியம் பிடித்து விட்டதா? எதைச் சிந்திக்கிறாய்?" குணசேனா உரத்த குரலில் வினவினான். ரவி சாவதானமாக நிறுத்தி நிதானமாக ஒவ்வொரு வார்த்தையாக மறுமொழி கூறினான்.

"ஒன்றுமில்லை! அது ஒரு பழைய கனவு."

**(கல்கி, 23.2.1959)**

## 33. கடல் கறுப்பா? நீலமா?

கிழவன் சூசை நடந்து கொண்டிருந்தான். 'சரக், சரக்' என்று நீண்ட காலமாக உழைத்துவிட்ட அலுப்பை ஓலமிடுவது போல் அவனுடைய கால்களின் பழைய செருப்புக்கள் செம்மண் சாலையின் புழுதியைக் கிளப்பிவிட்டன. அத்தனை வயதான பின்பும், வேகம் குறையாமல் துள்ளிப் பாய்கிறாற் போல் அவனுக்கென்று ஒரு நடை வாய்த்திருந்தது.

முழக்காலுக்கு மேல் வரித்து கட்டிய செம்புழுதி படிந்த வேட்டி, அது இடுப்பிலிருந்து நழுவி விடாமல் பழைய காலத்துப் பாணியில் ஒரு தடிமனான பெல்ட்டு, மார்பில் அழுக்கடைந்த பனியன், கழுத்தில் ஒரு கருப்புக் கயிற்றில் முடிந்த சிலுவை.

வலது கையில் மார்பளவு உயரத்தில் பூண்பிடித்த கிளுவைக் கம்பு. இடது கையில் ஒரு பெரிய மட்டிப் பழத் தாறு. (மட்டி-நாஞ்சில் நாட்டில் பிரசித்தமான ஒருவகை வாழைப் பழம்.) தலைமேல் துணியில் கட்டிய மூட்டை. ஆசாரிப்பள்ளம் சந்தைக்குப் போய்ச் சாமான் வாங்கிக் கொண்டு ஊர் திரும்பிக் கொண்டிருக்கிறான்.

குளச்சல் உப்பளத்திலிருந்து உப்பு மூட்டைகளை ஏற்றி வரும் லாரி ஒன்று பிசாசுபோல் பாய்ந்து புழுதியைக் கிளப்பிக் கொண்டு வந்தது. குறுகலான சாலையிலிருந்து கீழே இறங்கி ஒதுங்கிக் கொண்டான் சூசை. லாரி போனதும் அவன் நடை தொடர்ந்தது. நாகர் கோவிலையும் அதன் தென் மேற்குக் கோடியிலுள்ள துறைமுகப் பட்டினமான குளச்சலையும் இணைக்கும் சாலை அது. தென்மேற்கு மூலை தொடங்கி கிழக்கு முகமாக நாஞ்சில் நாட்டை வளைத்துக் கொண்டு கிடக்கும் கடற்கரையோரத்து ஊர்களில் எண்ணற்ற மீனவர்கள் வாழ்ந்துவருகின்றனர். சூசையும் அவர்களில் ஒருவன். அவனுக்கு ஊர் மணவாளக் குறிஞ்சிக்கு அருகில் கடிய பட்டினம்.

கிழவன் சூசை தனிக்கட்டை. பட்ட காலிலேயே படும் கெட்ட குடியே கெடும் என்பது போல், அந்த ஐம்பத்தாறு வயதுக்குள் எத்தனையோ துன்பங்களுக்கு ஈடு கொடுத்துவிட்டது அவன் வாழ்க்கை.

சகரியாஸ் பாதிரியாரின் ஆறுதலான அறிவுரைகளும், ஆதரவும் பேரப்பிள்ளை யாண்டான் என்ற அந்த ஒரு கடைசிக் குலக்கொழுந்தும் இல்லையானால் சூசை இதற்குள் என்றைக்கோ உயிரை விட்டிருப்பான்.

சூசைக்கும் மரியாளுக்கும் திருமணம் நடந்தபோது அவனுக்கு இருபத்தெட்டு வயது. மூன்று வருடங்களில் மரியாள் ஒரு பெண் குழந்தையைப் பெற்றுவிட்டுப் போய்ச் சேர்ந்தாள். அந்தப் பேரிடியைத் தாங்கிக்கொண்டும் வாழமுடிந்தது அவனால்.

எத்தனையோ பேர் பெண் கொடுக்க முன்வந்தார்கள். சகரியாஸ் பாதிரியார் கூட அவனை வற்புறுத்தினார். அவன் மீண்டும் மணம் செய்து கொள்ளக் கண்டிப்பாக மறுத்துவிட்டான். பெண் குழந்தையைக் கொஞ்ச நாள்தான் வைத்துக் கொண்டிருந்தான். பச்சைக் குழந்தையை வைத்துக் கொண்டு தனி ஆண் பிள்ளையால் பேணிக் காக்க முடியவில்லை. வீட்டிலேயே அடைந்து கிடந்தால் வயிற்றுப் பாட்டுக்குத் தொழிலைக் கவனிக்கவேண்டாமா? காலையில் கிழக்கு வெளுக்கும் போது கட்டுமரத்தில் கிளம்பினால் அந்தி மயங்கும் நேரத்துக்குத் திரும்புகிறவன் குழந்தைக்காக வீட்டிலேயே இருக்க முடியவில்லை.

சூசை அழுது கொண்டே சகரியாஸ் பாதிரியாரிடம் முறையிட்டான். அவர் மதச் சலுகையை வைத்துக் குழந்தையைப் பாளையங்கோட்டையிலுள்ள அருள் மரியன்னை சிறுவர் விடுதியில் சேர்க்க ஏற்பாடு செய்தார். சூசைக்குக் குழந்தையைப் பற்றிய கவலை விட்டது. அதன் பின் பதினான்கு வருடங்கள் குழந்தை பாளையங்கோட்டையிலே வளர்ந்து படித்து பெரியவளானாள். சூசை இரண்டு மாதத்துக்கொருதரம் மூன்று மாதத்துக் கொருதரம் பாளையங்கோட்டை போய் பெண்ணைப் பார்த்து விட்டுக் கடியபட்டினம் திரும்புவான்.

எல்லாம் சகரியாஸ் பாதிரியாரின் கருணை. அவர் இல்லாவிட்டால் அவனால் தன் பெண் குழந்தையை இப்படி வளர்த்திருக்க முடியாது. சீவரட்சகரான கர்த்தர் எத்தனையோ பேர்களுடைய துன்பங்களைத் தாங்கிக்கொண்டு சிலுவையில் அறைபட்டது போல், பலருடைய துன்பங்களைத் தாங்கி அவற்றில் தம்மைத் தாமாகவே அறைந்து கொண்டு வாழ்ந்து வரும் உபகாரி அவர்.

ரோஸி - அதுதான் சூசை தன் பெண்ணுக்கு இட்டிருந்த பெயர்-அவளுக்குப் பதினான்கு வயதாகியபோது எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் செய்திருந்தாள். அதற்கு மேலும் அவளைப் படிக்க விட விருப்பமில்லை சூசைக்கு.

உள்ளூரில் உறவு முறைக்குள் யாராவது ஒரு மீனவப் பையனுக்குக் கட்டிக் கொடுத்துப் பெண்ணை வீட்டோடு வைத்துக் கொண்டால் வயதான காலத்தில் நிம்மதியாக இருக்குமென்று தோன்றியது.

சகரியாஸ் பாதிரியாரிடம் போய்த் தன் விருப்பத்தைக் கூறிக் கலந்தாலோசித்தான்.

பாதிரியார் சிரித்தார். "சூசை! படித்த பெண்ணை இங்கே கூட்டிக் கொண்டு வந்து இந்தப் பட்டிக்காட்டுக்குள் எவனாவது ஒரு கையெழுத்துப் போடத் தெரியாத பையனுக்குக் கட்டிக் கொடுத்துக் கொடுக்க வேண்டாம். நீ கவலைப் படாமல் இரு. பாளையங்கோட்டையிலேயே அவளுக்குத் தகுதியான கணவனை நான் தேர்ந்தெடுக்கிறேன்" என்று கூறினார். அவருடைய வார்த்தையைச் சூசையால் மீறமுடியவில்லை. மறு மாதமே பாளையங் கோட்டையில் ஆசிரியர் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒரு அழகிய வாலிபனை ரோசிக்கு மணமகனாகப் பேசி முடிவு செய்தார் பாதிரியார். சூசையும் சம்மதித்தான். திருமணம் கூடப் பாளையங்கோட்டைச் சர்ச்சிலேதான் நடைபெற்றது. சூசை, யாரோ மூன்றாவது மனிதன் போய்விட்டு வருவதுபோல் பாதிரியாரோடு பாளையங்கோட்டைக்குப் போய்விட்டு வந்தான்.

தன் பெண் நினைவு தெரிந்த பின் ஒரு தடவையாவது ஊருக்கு வந்து போகவில்லையே என்று நெடுநாளாக ஒரு ஏக்கம் சூசைக்கு இருந்தது. திருமணம் ஆனபின்பாவது பெண்ணையும், மாப்பிள்ளையையும் சேர்த்து ஒரு தடவை மறு வீடு அழைத்துவிட வேண்டுமென்று அவன் தீர்மானித்திருந்தான். ஆனால் மாப்பிள்ளை அவனுடைய அந்தக் குக்கிராமத்துக்கு வர இணங்கவில்லை. தன் பெண் தனக்கு எட்டாத ஊரில் குடித்தனம் நடத்துகிறாள் என்று நினைக்கும்போது அவனுக்கு வேதனையாக இருந்தது. முன்பு சோற்றுக்கும், துணிக்கும், படிப்புக்கும், பேணுதலுக்குமாகப் பாளையங்கோட்டையில் இருந்தாள். இப்போது கணவனோடு கணவன் வீட்டில் இருக்கிறாள். சூசையைப் பொறுத்தமட்டில் இரண்டுக்கும் அதிக வித்தியாசம் இருப்பதாகத் தெரியவில்லை.

எப்படியானால் என்ன? எங்கே இருந்தால் என்ன? ரோஸி அவனுடைய பெண். அந்த ஒரே பெருமையோடு அந்தக் கடற்கரை யோரத்துப் பட்டிக் காட்டில் உயிரை வைத்துக் கொண்டிருந்தான் அவன்.

சூசை சகரியாஸ் பாதிரியாரிடம் அடிக்கொருதரம் தன் மகளை ஊருக்கு 'மறுவீடு' அழைக்க வேண்டுமென்று உருக்கமாக வேண்டிக்கொள்வான். சகரியாஸ் பாதிரியார் அந்தப் பட்டிக்காட்டு மீனவனின் பேதைமை மிக்க பாச உணர்வைக் கண்டு தமக்குள் சிரித்துக் கொள்வார்.

ஒருமுறை ரோஸி ஊர் போவது பற்றி தன் கணவனிடம் பிரஸ்தாபித்தாள். சூசையின்'மாப்பிள்ளைக்கோ கிழவனைக் கண்டாலே அருவருப்பு.

"இந்தச் செம்படவக் கிழவனுக்காக உன்னை நான் கலியாணம் செய்து கொள்ளவில்லை, ரோஸி! ஏதோ சகரியாஸ் பாதிரியார் எனக்கு வேண்டியவர் என்பதற்காக இது நடந்தது. அடிக்கடி அந்தக் கிழவனை இங்கே வந்து ஊருக்குக் கூப்பிட்டுத் தொந்தரவு செய்யச் சொல்லாதே. அவன் இங்கே வந்து போவதே எனக்கு அவமானமாக இருக்கிறது. பாளையங்கோட்டையில் தெரு பெருக்குகிற தோட்டிகூட அந்தக் கிழவனை விட நன்றாகச் சுத்தமாக உடை உடுத்திக் கொண்டிருப்பான்" என்று ரோஸிக்கு அந்த வார்த்தைகளைக் கேட்டபோது தாங்க முடியாத வருத்தந்தான் ஏற்பட்டது. வருந்தி என்ன செய்வது? அதற்காகக் கணவனைப் பகைத்துக் கொள்ள முடியுமா? ஊர் போவதைப் பற்றியும், தந்தையைப் பற்றியும், அன்றிலிருந்து தன் கணவனிடம் பேச்சு எடுப்பதையே விட்டுவிட்டாள் ரோஸி.

அவள் வயிறும், மாதமுமாகப் பேறு காலத்திற்குத் தயாரானாள். கடிதம் எழுத வேண்டிய முறைக்காகத் தந்தைக்கு ஒரு வரி எழுதிக் கணவனுக்குத் தெரியாமல் அதை தபாலில் சேர்த்தாள். சூசைக்கு வருகிற கடிதத்தையெல்லாம் சகரியாஸ் பாதிரியார்தான் அவனுக்குப் படித்துக் காண்பிப்பார். ரோஸியின் கடிதத்தையும் அவர்தான் படித்துக் காண்பித்தார். சூசைக்குத்தான் எழுதப் படிக்கத் தெரியாதே.

"ஐயா! இப்போதே புறப்படுங்கள். பாளையங்கோட்டைக்கு இரண்டு பேருமாகப் போவோம். நீங்களும் கூட வந்தால் மாப்பிள்ளை ரோஸியை அனுப்ப மறுக்க

மாட்டார். கட்டாயம் பேறு காலத்துக்கு அவளைப் பிறந்த வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு வந்து விடவேண்டும்." அவன் பாதிரியாரைக் கெஞ்சினான். ரோஸியின் கணவனுடைய இயல்பை நன்கு அறிந்திருந்தார் சகரியாஸ் பாதிரியார். ஆனால் அதைச் சூசையிடம் சொல்லிக் கள்ளங் கபடமற்ற அவன் மனத்தைப் புண்படுத்த விரும்பவில்லை அவர்.

"சூசை! நன்றாக யோசித்துப் பார். இந்தப் பட்டிக் காட்டில் உன் பெண்ணைப் பேறு காலத்துக்குக் கூட்டிக் கொண்டுவந்து வைத்துக் கொள்வதால் என்ன நன்மை? ஒரு மருந்தா? ஒரு டாக்டரா? உன் வீட்டில் உன்னைத் தவிர ஒத்தாசைக்கு வேறு பெண் பிள்ளைகூடக் கிடையாதே! பேசாமல் பாளையங்கோட்டையிலே இருந்து விட்டுப் போகட்டும். குழந்தை பிறந்து எல்லாம் நல்லபடியாக முடிந்தபின் இரண்டு மூன்று மாதங்கள் கழித்து ஒருதரம் எல்லாருமே குடும்பத்தோடு இங்கு வந்துவிட்டுப் போக ஏற்பாடு செய்கின்றேன்."

சகரியாஸ் பாதிரியார் சமாதானப் படுத்தினார். சூசை திருப்தியோடு அதை ஒப்புக் கொண்டான்.

மறுமுறை பாளையங்கோட்டைக்குப் போனபோது சகரியாஸ் பாதிரியார் ரோஸியின் கணவனைச் சந்தித்து "தம்பீ! விசுவாசம்... அந்தப் பக்கம் வா. நான் இருக்கிற பக்கமெல்லாம் நீ வந்து பார்க்க வேண்டாமா? அழகிய கடற்கரையோரத்துப் பிரதேசம். அது குளச்சல் துறைமுகம், உப்பளம் மணவாளக் குறிச்சியில் ஷேமணல் தோரியம் உலோகத் தொழிற்சாலை இதெல்லாம் நீ அவசியம் சுற்றிப் பார்க்க வேண்டிய இடங்கள் அப்பா. அந்தக் கிழவன் சூசைக்காக வராவிட்டாலும் எனக்காகவாவது ஒரு முறை குடும்பத்தோடு வா" என்று அழைத்தார். அவ்னும் ஒரு மாதிரி வர ஒப்புக் கொண்டான். குழந்தை பிறந்ததும் கடிதம் போடுமாறு சொல்லிவிட்டுத் திரும்பினார் பாதிரியார்.

பத்துப் பன்னிரண்டு நாட்கள் கழிந்தன. பாளையங்கோட்டையிலிருந்து கடிதம் வரவில்லை; தந்தி பறந்து கொண்டு வந்தது. சகரியாஸ் பாதிரியார் தந்தியை வாங்கிப் படித்தார். கண்களை மூடித் தியானித்துச் சிலுவையை நெற்றிவரை கொண்டு போனார். அந்தச் செய்தியைச் சூசையிடம் எப்படிச் சொல்வதென்று தயங்கினார். அவன் ஏற்கனவே நொந்து போய்க் கிடக்கிறான்.

"ரோஸி இறந்துவிட்டாள். ஆண் குழந்தை பிறந்து சுகமாக இருக்கிறது." இதுதான் தந்தியின் வாசகம். நீண்ட ஆறுதலுரைக்குப் பின் சர்ச்சுக்கு அழைத்துப் போய்ப் பிரார்த்தனையையும் முடித்துக் கொண்டு அவனிடம் தந்தியை விளக்கினார். கிழவன் தலையிலடித்துக் கொண்டு கதறியழுதான். அவனைத் தேற்றிப் பாளையங் கோட்டைக்கு அழைத்துக் கொண்டு வந்தார் பாதிரியார். அவர்கள் வருவதற்கும் முன்பே ரோஸியின் சவ அடக்கம் முடிந்துவிட்டது.

தான் மறுபடியும் வேறு திருமணம் செய்து கொள்ளப் போவதாகச் சகரியாஸ் பாதிரியாரிடம் வெளிப்படையாகவே கூறி விட்டான் மாப்பிள்ளைப் பையன்.

பாதிரியார் அவனிடமிருந்து குழந்தையை வாங்கிக் கொண்டார். குழந்தை சூசையின் பொறுப்பில் வந்தது.

பின்பென்ன? பழைய கதைதான். பாதிரியாருடைய தயவில் பாளையங்கோட்டை விடுதியில் பேரக்குழந்தையைச் சேர்த்தான் சூசை. பேரன் வளர்ந்து கொண்டு வந்தான். தன் பேரனை வளர்த்துப் பெரியவனாக்கித் தனது தொழிலின் வாரிசாகக் கொண்டு வந்து ஊரில் ஊன்றிவிட வேண்டும் என்று சூசையின் உள்ளத்தில் தணியாத ஆசை. பட்டுப் பட்டு நொந்து போன அவனுக்கு ஒரே நம்பிக்கை அந்தப் பேரன் உருவில் இருந்தது. தலைமுறை தலைமுறையாகக் கடலை ஆண்டு வாழும் தன் பரம்பரை தன்னோடு அற்றுப் போய்விடக் கூடாதே என்று அவனுக்குக் கவலை.

பத்துக் கட்டுமரங்கள், மூன்று பாய்மரத் தோணி, இரண்டு வள்ளம், ஏழு வலை, இவ்வளவும் சூசையின் சொத்து.

"பேரப் பிள்ளையை அதிகம் படிக்கவைக்கப் படாது. நிறையப் படித்துத் தெரிந்து கொண்டால் அப்புறம் பட்டிக்காட்டு ஊருக்கு வரமாட்டேன் என்று முரண்டு பிடிப்பான். நம் தொழிலுக்கும் மனம் இணங்காது. பத்துப் பன்னிரண்டு வயதுக்குள் படித்தது போதும் என்று பாதிரியாரிடம் சொல்லி ஊருக்குக் கூட்டிக் கொண்டு வந்துவிட வேண்டும். அப்புறம் இரண்டு மூன்று மாதம் கூடவே கூட்டிக்கொண்டு போய்த் தொழிலில் பழக்கிவிட வேண்டும்." ஒரு நாள் நடுக்கடலில் வலையைச் சரியாக வீசாமல் தவற விட்டு விட்டதற்காகச் சூசையைச் சிறு வயதில் அவன் தந்தை முதுகை உரித்து விட்டார்.

"சே! சே! பேரப்பிள்ளையை நான் அப்படியெல்லாம் அடிக்கக்கூடாது. தாயில்லாத பயல். அரட்டல் மிரட்டலிலேயே எல்லாம் சொல்லிக் கொடுத்துவிட வேண்டும். பயல் பிறந்ததிலிருந்து சமுத்திரத்தையே பார்க்கவில்லை. பயத்தைப் போக்கிக் கடலுக்குள் கூட்டிக்கொண்டு போவதே மிகவும் கஷ்டமாயிருக்கும்."

"தாத்தா! யோசனை பலமோ? பராக்குப் பார்த்துக் கொண்டே நடக்கிறீர்களே?"

நடந்து கொண்டிருந்த கிழவன் சூசை சிந்தனையிலிருந்து விடுபட்டுத் திரும்பிப் பார்த்தான். பின்னால் ஆரோக்கியம் வேகமாக வந்து கொண்டிருந்தான்.

"வா அப்பா, ஆரோக்கியம்! நீயும் ஊருக்குத்தானே வருகிறாய்?"

"வேறெங்கே போக்கிடம்?" என்று ஆரோக்கியம் அலுத்துக் கொள்வது போல் பதிலளித்தான்.

"ஏதேது? மட்டிப் பழமெல்லாம் வாங்கிக் கொண்டு போவதைப் பார்த்தால் பேரப் பிள்ளையைப் பார்க்கப் போறீங்க போலத் தோணுது."

"ஆமாம் அப்பா! இந்த டானியல் பயல் வலை இரவல் வாங்கிக் கொண்டு போனான். நாலு நாளச்சு, திரும்பித் தரலை. அதை வாங்கி வைத்துவிட்டுச் சாயங்காலம் பஸ்ஸில் புறப்படணும்" என்றான் சூசை.

"டானியல் அண்ணாச்சி இரவல் வாங்காத ஆளு இந்த வட்டாரத்திலேயே கிடையாது. தாத்தா! இரண்டு வாரங்களுக்கு முன்னாலே என்கிட்டக் கட்டு மரம்

கொடுன்னு இரவல் வாங்கிட்டுப் போனான். எங்கேயோ பாறையிலே மோதிச் சீரழிச்சுத் திருப்பிக் கொடுத்தான்.

"உதவாக்கரைப் பயல்! இவனுக்கு இரவல் கொடுத்துக் கெட்டுப்போக நமக்கென்ன பிள்ளையில்லாச் சொத்தா பாழ்போகுது? நாளைக்குப் பேரப் பிள்ளையாண்டான் வந்து சேர்ந்திட்டால் வலையும் கட்டு மரமும் எங்கே என்று கேட்பானே?"

"உங்க பேரனை ஊருக்குக் கூட்டிக் கொண்டு வரப்போகிறீர்களா தாத்தா?"

"அட இன்னிக்கில்லாவிட்டாலும் என்றாவது ஒரு நாள் என் தொழில் நசித்துப் போகாமல் அவன்தானே ஏற்றுக் கொள்ளணும்? ஊரை மறந்து வமிசத் தொழிலை மறந்து பயலை வெள்ளை வேட்டிக்காரனாகச் சுத்த விடற எண்ணம் எனக்கில்லை; கொஞ்சம் படிச்சதும் நிறுத்திப்பிட்டு ஊருக்குக் கூட்டியாந்திடணும்னு இருக்கேன்."

"சகரியாஸ் பாதிரியாரு அதுக்குச் சம்மதிப்பாரா தாத்தா?

"அவரு சம்மதிக்கிறாரு, சம்மதிக்கலை; அதைப் பார்த்தா முடியுமா. என் மனசிலே பட்டதைச் செய்யப் போறேன்."

ஆரோக்கியம் பேசாமல் நடந்தான். ஊர் அருகில் வந்து விட்டார்கள் இருவரும்.

கடற்கரையில் யாரோ வற்புறுத்திக் கட்டித் தொங்க விட்டிருப்பதுபோல் அமைந்திருந்தது கடியபட்டினம் ஊர். உயர்ந்தும் தாழ்ந்தும் கடலை ஒட்டினாற் போல் தென்பட்ட பாறைகளின் இடையே சிறுசிறு குடிசைகள், சில ஓட்டடுக்கு வீடுகள், ஒன்றிரண்டு காரைக் கட்டிடங்கள் தெரிந்தன. சாலைகளோ தெருவோ அமைக்க முடியாத ஊர். அரக்கனுக்குப் பல் முளைத்த மாதிரிப் பாறைகளில் எப்படிச் சாலை அமைப்பது?

போகிற வழியில் சகரியாஸ் பாதிரியாரைச் சர்ச்சில் சந்தித்தான் சூசை.

"சூசை! உன் பேரப்பிள்ளை என் பெய்ருக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கான் அப்பா!"

"என்ன எழுதியிருக்கிறான் ஐயா! படியுங்கள். கேட்கிறேன்."

"வேறொன்றுமில்லை. அவனுக்குச் சமுத்திரத்தைப் பார்க்க ஆசையாக இருக்கிறதாம். சமுத்திரம் எவ்வளவு பெரிசாயிருக்கும்; எவ்வளவு ஆழமாயிருக்கும்; என்ன நிறமாயிருக்கும் என்றெல்லாம் கேட்டு எழுதியிருக்கிறான்."

"நானே இன்று மாலை பாளையங்கோட்டை போகலாம் என்றிருக்கிறேன் ஐயா!"

"ஏது? திடீரென்று புப்பட்டு விட்டாய்?"

"ஒன்றுமில்லை! பயலைப் பார்த்து வெகு நாட்களாயிற்று."

"போய் வா, ஆனால் படிப்பைக் கெடுத்து விட்டு சமுத்திரம் பார்க்க ஆசைப்பட்டான் என்று கையோடு இங்கே கூட்டிக் கொண்டு வந்து விடாதே. விடுமுறையின் போது வந்தால் போதும்."

"இந்த வருட விடுமுறையின் போது பையனை இங்கே கூட்டி வந்தால் அப்படியே ஊரோடு வைத்துக் கொள்ளலாம் என்று நினைக்கிறேன் ஐயா! இனிமேல் அவனுக்குப் படிப்பு எதற்கு? தொழிலைப் பழக்கி விட்டால் எனக்குக் கவலை இல்லை."

சூசை பாதிரியாரிடம் தன் நோக்கத்தைக் கூறினான்.

"அதைப் பற்றிப் பின்னால் யோசித்துக் கொள்ளலாம். இப்போதைக்கு நீ போய்ப் பார்த்து விட்டு வா."

சகரியாஸ் பாதிரியார் சிரித்துக் கொண்டே கூறினார். சூசை பெருமூச்சு விட்டான்.

டானியலுக்கு இரவல் கொடுத்திருந்த வலையைத் திரும்ப வாங்கிப் பத்திரமாகக் குடிசைக்குள் வைத்துப் பூட்டி விட்டுச் சூசை புறப்படும் போது மாலை மூன்று மணிக்கு மேல் ஆகிவிட்டது. நாகர்கோவிலுக்கு வந்து வேறு பஸ் மாறிப் பாளையங்கோட்டையை அடைந்தபோது இரவு ஒன்பது மணி.

விடுதியில் பேரப் பிள்ளையாண்டான் தூங்கிப் போயிருந்தான். அவன் தூக்கத்தைக் கெடுத்து எழுப்பித் தன் வரவைப் புலப்படுத்தச் சூசைக்கு விருப்பமில்லை. மட்டிப்பழம் கொண்டு வந்திருக்கிறேனென்பது தெரிந்தால் பயல் இப்போதே எழுந்துவிடுவான். அந்த வாழைப் பழத்தின்மேல் பையனுக்கு அத்தனை ஆசை!

சூசையும் அங்கேயே விடுதியில் பையனுக்குத் தாத்தாவைப் பார்த்ததில் மகிழ்ச்சி பிடிபடவில்லை. மட்டிப் பழத்தை ஆவல் தீரச் சாப்பிட்டான்.

"தாத்தா! நான் எப்ப சமுத்திரம் பார்க்கிறது? நீ என்னைக் கூட்டிக்கொண்டு போய் காட்ட மாட்டியா?" என்று பையன் கேட்டபோது, அப்போதே அவனைக் கூட்டிக் கொண்டு போய்ச் சமுத்திரத்தைக் காட்டிவிட வேண்டும் போல் ஆசை துடித்தது சூசைக்கு. சகரியாஸ் பாதிரியார் என்ன சொல்வாரோ என்று பயந்து ஆசையை அடக்கிக் கொண்டான்.

"தாத்தா சமுத்திரம் எவ்வளவு பெரிசா இருக்கும்?"

"ரொம்பப் பெரிசா இருக்கும் கண்ணு!"

"தாமிரபருணி நதியைப் போலவா?"

"இல்லேடா, அதெல்லாம் விடப் பெரிசு!"

"நயினா குளம் போலவா?"

"ஊஹூம்! எல்லாத்தையும் விடப் பெரிசு?" சிறுவன் தான் காணாத சமுத்திரத்தைத் தான் கண்ட ஆறு குளங்களை வைத்து அனுமானிக்க முயன்றான்.

"நீ சமுத்திரத்திலே ரொம்ப தூரம் போய் மீன் பிடிப்பியாமே தாத்தா? உனக்குப் பயமாயிருக்காதா?"

"பழகினாப் பயமாயிருக்காது. உனக்குக்கூட வந்துவிடும். நீயும் நாளைக்கு அதெல்லாம் பழகிக்கணும்."

"ஐயையோ! நான் மாட்டேன் தாத்தா. சுறாமீன், முதலை, திமிங்கலம் எல்லாம் கடலில் இருக்கும்னு பாடப் புத்தகத்திலே போட்டிருக்கே?"

"இருந்தா என்ன? அவை நம்மை ஒன்னும் பண்ணாது."

கடலைப் பூமியாக வைத்துக் கொண்டு பிழைக்க வேண்டிய சிறுவன் பிறந்த நாளிலிருந்து கடலையே பார்க்காமல் வளர்ந்து விட்டானே என்று ஏங்கினான் சூசை.

"இந்த வருசம் லீவிலே உன்னைக் கட்டாயம் ஊருக்குக் கூட்டிக்கிட்டுப் போறேன். அப்ப கடலைப் பார்க்கலாம். என் கூடக் கட்டு மரத்திலே உட்கார்ந்து கடலுக்குள்ளேயே நீ வரலாம். எல்லாம் பழக்கிக் கொடுத்திடுவேன் உனக்கு."

"அப்புறம் இங்கே படிக்கவே வரவேண்டாமா தாத்தா?"

"எதுக்கு வரணும் ராசா? நான்தான் உனக்காக நிறைய கட்டுமரம், வலை எல்லாம் சேர்த்து வைத்திருக்கிறேனே?"

"படிப்பை நிறுத்திட்டால் சகரியாஸ் தாத்தா கோபிக்க மாட்டாங்களா?"

"மாட்டாங்க...!"

"அப்படியானால் சரி தாத்தா!"

"ஊருக்கு வரவரைக்கும் சமர்த்தாப் படிச்சிட்டிருக்கணும் கண்ணு!"

"அங்கே வந்தா தினந்தினம் சமுத்திரத்தைப் பார்க்கலாமில்லையா தாத்தா?"

"நிறையப் பார்க்கலாம்."

சூசை சிரித்துக் கொண்டான். "ஏண்டா! நீ பாதிரியாருக்குக் கடிதாசு எழுதினியா?"

பையன் தலையைக் குனிந்து கொண்டு பதில் சொன்னான்; "ஆமாம்! சமுத்திரம் பார்க்க ஆசையாயிருக்குதுன்னு கடிதாசு எழுதினேன்."

"எனக்கு எழுதப்படாதா நீ? அவருக்கு எதற்கு எழுதினாய்?"-

சிறுவன் மௌனம் சாதித்தான். அன்று மாலை சூசை ஊருக்குப் புறப்படும்போது பேரப்பிள்ளை தாத்தாவிடம் மறுபடியும் சமுத்திரத்தைப் பற்றிப் பேச்சை எடுத்தான்.

"தாத்தா! சமுத்திரம் நீல நெறம்னு பாடத்திலெல்லாம் சொல்லிக் கொடுக்கிறாங்க. ஆனா பூகோளப் புத்தகத்தில் சமுத்திரத்தின் படம் பார்த்தா ஒரே கறுப்பா இருக்குது?"

"போட்டோவில் கறுப்பாகத்தான் விழுந்திருக்கும். நேரிலே பார்த்தால் நீலமாக இருக்கும்."

"அது ஏன் தாத்தா நீலமா இருக்கிற சமுத்திரம் போட்டோவிலே மாத்திரம் கறுப்பா விழணும்?" சூசை பதில் கூறத் தெரியாமல் விழித்தான்.

"எனக்குத் தெரியாதுடா தங்கம்! நான் அதெல்லாம் படிக்கலை. உங்க வாத்தியாரையே கேட்டுத் தெரிஞ்சுக்க" என்று பதில் சொல்லித் தப்பித்துக் கொண்டான் சூசை.

"பயலுக்கு மூளைக்கூர் நிறைய இருக்குது. தொளைச்சுத் தொளைச்சில்ல கேள்வி கேட்கிறான்?" என்று மனதுக்குள் பேரப்பிள்ளையின் அறிவை மெச்சிக் கொண்டான் சூசை. அடுத்த முறை வரும்போது சமுத்திரம் பார்க்க அழைத்துப் போவதாகப் பையனுக்கு உறுதிமொழி கொடுத்துவிட்டுக் கிழவன் ஊர் திரும்பினான்.

திரும்பும்போதுதான் அந்தக் கிழவனின் மனத்தில் எத்தனை எதிர்காலக் கனவுகள்? அவனுடைய பேரன் கடலில் கட்டுமரம் செலுத்திச் செல்வதாகவும், வலை வீசுவதாகவும், திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்து மகிழ்ந்தது அவன் மனம்.

சில மாதங்கள் கழிந்தது. எந்த வருடமும் இல்லாத கோடை மழை அந்த வருடம் திருநெல்வேலியில் வெளுத்து வாங்கியது. இடியும், மின்னலும் தினம் ஒரு கட்டடத்தையோ மரத்தையோ பலி வாங்கிக் கொண்டிருந்தன.

பாளையங்கோட்டையில் சிறுவர் விடுதி இருந்த பகுதியில் மாமரங்கள் அதிகம். சாயங்கால வேளையில் சிறுவர்கள் மாமரத்தடியில் விளையாடிப் பொழுது போக்குவது வழக்கம். மரக்குரங்கு, பச்சைக் குதிரை என்று அவரவர்களுக்குப் பிடித்தமான விளையாட்டுக்களை விளையாடுவார்கள். மாமரங்கள் தணிவாகப் படர்ந்து வளர்ந்திருந்தன. அவை விளையாட ஏற்ற நிலையிலிருந்தன.

அன்றொரு நாள் மாலை சூசையின் பேரனும், இன்னும் நாலைந்து பையன்களுமாக ஒதுக்குப்புறத்தில் இருந்த ஒரு தணிவான மாமரத்தில் மரக்குரங்கு விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

விளையாட்டில் பிடிக்கவேண்டிய கட்சிப் பையன்கள் கீழே இருந்து பிடிக்கவேண்டும். பிடிபடவேண்டிய கட்சியார் மரக்கிளைகளில் ஒளிந்திருப்பார்கள். சூசையின் பேரன் பிடிபட வேண்டிய கட்சி. மரத்தின் உச்சிக்கிளையொன்றில் ஏறி ஒளிந்து கொண்டிருந்தான் அவன். விளையாட்டு, கெடுபிடியாக நடந்து கொண்டிருந்தது.

அண்டமுகடு தவிடு பொடியாகி விடுவதுபோல் ஒரு பேரிடி. அடுத்த கணம் கோபம் கொண்ட வாத்தியார் கரும் பலகையில் சாக்பீஸால் கோடு கிழப்பதுபோல் பளீரென்று வானில் ஒரு மின்னல் நெளிந்தது. மேலே பார்த்துக் கொண்டு மரக்கிளையில் உட்கார்ந்திருந்த சூசையின் பேரனுடைய கண்களுக்குள் நெருப்புப் பாய்ந்த மாதிரி ஒரு அதிர்ச்சி பரவியது. 'வீல்' என்று அலறிக்கொண்டே அரக்கிளையிலிருந்து சுருண்டு கீழே விழுந்தான் பையன். கையிலும் காலிலும், உடம்பிலும் மரத்தில் சிராய்த்துக் காயங்கள் பட்டிருந்தன.

மற்ற சிறுவர்கள் அரண்டு ஓடிப்போய் விடுதி வார்டனிடம் கூறினார்கள். வார்டனும், மற்றவர்களும் ஓடிவந்து சூசையின் பேரனைத் தூக்கிக் கொண்டு போனார்கள்.

மூர்ச்சை தெளிவித்ததும் விடுதி டாக்டர் வந்தார். பையனைப் பரிசோதித்தார். வார்டனைத் தனியாக அழைத்துப் போய், "பையனுக்கு மின்னலில் கண் பார்வை போய் விட்டது" என்று கூறினார் டாக்டர். சூசைக்கும், சகரியாஸ் பாதிரியாருக்கும் செய்தியை அனுப்பினார் வார்டன். அந்தச் சிறுவனுக்கு மட்டும் தனக்கு என்ன ஆயிற்று என்பதே விளங்கவில்லை. "மரத்திலிருந்து கீழே விழுந்துவிட்டோம்" என்பதை மட்டுமே அவன் உணர்ந்திருந்தான். சீக்கிரமே தனக்குக் கண் பார்வை வந்துவிடும் என்ற நம்பிக்கையும் அவனுக்கு இருந்தது.

"எனக்கு எப்போது சார் கண் பார்க்க வரும்?" என்று அவன் வார்டனிடம் கேட்ட போது கூட அவர், "உனக்குக் கூடிய சீக்கிரம் கண் வந்துவிடும் தம்பி! கவலைப் படாதே" என்று உறுதியாகப் பதில் சொல்லியிருந்தார். பையன் ஏமாற்ற மடைந்துவிடாமல் அவனைக் காக்கவே அவர் அப்படிப் பொய் சொல்லியிருந்தார். ஆனால் சிறு பையன்... பாவம்! அதை உண்மைதான் என்றே நம்பிக்கொண்டிருந்தான்.

சூசையும், சகரியாஸ் பாதியாரும் பாளையங்கோட்டைக்கு ஓடோடி வந்தார்கள். டாக்டரும், வார்டனும் முன்னெச்சரிக்கையாக அவர்கள் இருவரிடமும், "சிறு பையனாக இருப்பதால் கூடியவரையில் 'அவன் குருடனாகப் போய்விட்டானென்ற' உண்மையை அவனுக்குத் தெரியவிடாமல் கொஞ்ச நாளைக்கு மறைத்து வைத்துக் கொண்டே பழகுங்கள். அவனுக்கு முன்பே அழுதோ கதறியோ உண்மையைக் கூறி மனம் ஒடிந்து போகும்படி செய்துவிடக் கூடாது" - என்று சொல்லியிருந்தார்கள்.

சூசையும், பாதிரியாரும் அப்படியே நடந்துகொள்ள அவர்களிடம் ஒப்புக்கொண்டனர்.

பையனை விடுதியிலிருந்து சூசையோடு அனுப்பி விட்டார்கள்.

சூசை பையனை பாளையங்கோட்டையிலிருந்து ஊருக்கு அழைத்து வரும்போது பஸ்ஸில் அவன் தாத்தாவைக் கேட்டான்.

"தாத்தா! எனக்குக் கண் வந்ததும் சமுத்திரம் பார்க்கணும், பூகோள புத்தகக்காரன் கடலை கறுப்பாய்ப் போட்டிருக்கான். அசல் நீல நெறக் கடலை நான் பார்க்கணும்!"

கிழவன் சூசை சிறுவனுக்கு என்ன பதில் கூறுவான்? வெடித்துப் பொங்கி வந்த அழுகையை அடக்கிக்கொண்டான். பாதிரியார் அவன் அழுதுவிடாமல் அவனைச் சமாதானப்படுத்தி ஆறுதல் கூறினார்.

மணவாளக் குறிச்சியில் வந்து இறங்கியபோது பஸ் நிற்குமிடத்தில் சூசை டானியலைச் சந்தித்தான்.

"டானியல்! என்னுடைய பத்து கட்டுமரங்களையும், மூன்று பாய்மரத் தோணிகளையும், இரண்டு வள்ளங்களையும், ஏழு வலைகளையும், பழைய விலைக்கு விற்கப்போகிறேன். நீ வேண்டுமானால் வாங்கிக்கொள்."

"ஏன்? உன் பேரப்பிள்ளை..." எதையோ கேட்க ஆரம்பித்தான் டானியல். அவனுடைய கேள்விக்குப் பதில் சொல்லிக் கொண்டு அங்கே நிற்காமல் கையில் பேரனைப் பிடித்துக் கொண்டு சகரியாஸ் பாதிரியருடன் சர்ச்சை நோக்கி நடந்தான் சூசை.

"தாத்தா! ஏதோ! ஓசை பெரிசாக் கேட்குதே! சமுத்திரமா?" என்று நடந்து கொண்டே காதிற் புலனாகிய ஓசையைப் பற்றி விசாரித்தான் பேரன். சூசை பதில் சொல்லவில்லை. எதிரே எல்லையற்று விரிந்திருந்த நீலக்கடலை மிகுந்த வெறுப்போடு பார்த்தான் அந்தக் கிழவன்.

**(கல்கி, 29.3.1959)**

## 34. தன்மானம்

**கா**ற்றில் மிதந்து வரும் மோகினிபோல் அழகாக அசைந்து திரும்பி வந்து நின்றது 'பிளிமத்' கார். அறைக்குள் கையொடிந்த நாற்காலியில் உட்கார்ந்து தெருவையும், அதற்கப்பால் ஆகாயவெளியையும், வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த ஏகாம்பரம் திகைப்போடு எழுந்திருந்து வாசலுக்கு வந்தான். அவனால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. பரமேசுவரா மில்லின் உரிமையாளர் திருச்சிற்றம்பலம் காரிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தார். திறந்த உடம்போடு அவர் முன் தோன்றக் கூசிய ஏகாம்பரம் விறுட்டென்று உள்ளே திரும்பிப் போய் அழுக்கா, கந்தலா என்று ஆராயாமல் கைக்குக் கிடைத்த ஒரு துண்டை எடுத்துப் போர்த்திக் கொண்டு திரும்பினான். அவன் திரும்புவதற்குள் திருச்சிற்றம்பலம் வாசலுக்கு வந்து படியேறிவிட்டார்.

"வாங்க... ஏது இப்படி...?"

"எல்லாம் உங்களைப் பார்த்திட்டுப் போகலாமென்றுதான்..."

"அடடே! ஒரு வார்த்தை சொல்லியனுப்பியிருந்தால் நானே வந்திருப்பேனே?..."

திருச்சிற்றம்பலத்தை மரியாதையாகத் தனது அறைக்குள் அழைத்துச் சென்றான் ஏகாம்பரம். உட்காருவதற்கு நாற்காலியை எடுத்துப் போட்டான். திருச்சிற்றம்பலம் உட்கார மறுத்துவிட்டார். "இல்லை! நீங்கள் உட்கார்ந்துகொள்ளுங்கள் ஏகாம்பரம்! நான் இப்படி இருந்துகொள்கிறேன்" என்று விநயமாகப் பணிவோடு கூறிய திருச்சிற்றம்பலம் சிரித்துக்கொண்டே ஜன்னல் விளிம்பில் சாய்ந்தாற்போல் உட்கார்ந்துகொண்டார்.

வாசலில் பெரிய கார் வந்து நிற்பதைக் கண்டு வீட்டுக்குள்ளிருந்து திருமதி ஏகாம்பரமும், குழந்தைகளும் மருண்டு வெளியே எட்டிப் பார்த்தனர். வெளியே காரைச் சுற்றி வீட்டு வாயிலில் அக்கம்பக்கத்துக் குழந்தைகள் வியப்போடு கூடிப் பார்த்துக் கொண்டிருந்தன. கிழிசல் ஜிப்பாவும் கந்தல் புத்தகங்களுமாக அப்பாவி போல் நடமாடிக் கொண்டிருக்கும் ஏகாம்பரத்தின் வீடு தேடி அவ்வளவு அழகான புதிய கார் வந்து நின்றால் அது அந்தப் பேட்டையே ஆச்சரியப்பட வேண்டிய காரியம்தானே? அந்தக் காரும் அதற்குரியவரும் அவன் வீட்டு வாயிலைத் தேடிக் கொண்டு வந்ததால் அவனுடைய கௌரவமே திடீரென்று உயர்ந்துவிட்டதாக அந்தப் பேட்டைவாசிகளுக்கு ஒரு பிரமை. அதுவும் தவிரத் தேடி வந்திருக்கிற திருச்சிற்றம்பலம் இலேசான பேர் வழியில்லையே? பெரிய மில்லுக்கு உரிமையாளர். நிறைப் படித்தவர். வருகிற நகரசபைத் தேர்தலில் 'கவுன்சிலராக' வெற்றி பெற்று, பின்பு அவரே 'சேர்மனாக' வரலாமென்றும் ஊரில் பேச்சு நிலவியது.

தங்கப்பிரேம் பிடித்த மூக்குக் கண்ணாடியும், தும்பைப் பூக் கதருமாக, எதிரே உட்கார்ந்திருக்கும் அந்தப் பெரிய மனிதரை நிமிர்ந்து பார்த்தான் ஏகாம்பரம். பணத்தின் கம்பீரமும் கௌவரத் தோற்றமும், இணைந்த அந்த மனிதரைப் பார்க்கும்போதே தாழ்வு மனப்பான்மையும் பயமும் தன்னையறியாமலே அவனுக்கு உண்டாயிற்று. தன்னுடைய அழுக்கடைந்த அறைக் கை நாற்காலி, கந்தலும், கூளமுமாக இறைப்பட்டுக் கிடக்கும் புத்தகங்கள் எல்லாம் இருந்தாற்போலிருந்து வெறுக்கத்தக்க, கீழ்த்தரமான பொருள்களாக மாறிவிட்டது போல் அவன் மனம் அப்போது நினைத்தது. திருச்சிற்றம்பலம் என்ற செல்வச் செழிப்புக்கு முன்னால் தன் ஏழ்மையைக் காட்டிக் கொடுக்கும் அவமானச் சின்னங்களாக அவை தோன்றித் தன்னைக் காட்டிக் கொடுத்துவிட்டதுபோல் ஒரு கசப்பு ஏற்பட்டது.

ஜன்னல் விளிம்பில் சாய்ந்தாற்போல் உட்கார்ந்திருந்த திருச்சிற்றம்பலம் ஏகாம்பரத்தின் முகத்தைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். "ஏகாம்பரம்! குழந்தைகள், மனைவி எல்லோரும் சுகமா?"

"சுகம்தான் ஐயா!" வெகு நாள் பழகிய குடும்ப நண்பர்போல் அவ்வளவு ஒட்டுறவுடன் அவர் விசாரித்த வியப்புத் தாங்கிக் கொள்ள முடியாமல் கனத்தது ஏகாம்பரத்திற்கு.

"சமீபத்தில் நீங்கள் எழுதி வெளிவந்த புத்தகத்துக்குப் பேர் என்ன?" இந்தக் கேள்வியை அவரிடமிருந்து எதிர்பார்க்கவே இல்லை. அவன்தான் எழுத்தாளன் என்பதுகூட இவ்வளவு பெரிய மனிதருக்குத் தெரிந்திருக்கிறதே!

"போன மாதம் வெளிவந்ததே; அந்த நாவலைக் கேட்கிறீர்களா?"

"ஆமாம், ஆமாம்! அதுதான்... என்னவோ 'ஊழிப்புயல்' என்று பேர் சொல்லிக் கேட்ட மாதிரி ஞாபகம். ஊரெல்லாம் அந்தப் புத்தகத்தைப் பற்றியே பேச்சாயிருக்கிறதே?"

"அவ்வளவு பெருமைப்படுத்திப் பேச அந்தப் புத்தகத்தில் ஒன்றுமே இல்லை. என்னவோ தோன்றியது - எழுதினேன்."

"அப்படிச் சொல்லாதீர்கள், ஏகாம்பரம். யானைக்குத் தன் பலம் தெரியாது என்பார்கள். நீங்கள் எழுதுகிற ஒவ்வொரு எழுத்தும் மக்களிடையே கிளர்ச்சி மூட்டுகிறதென்றால் அது சாதாரண எழுத்தாயிருக்க முடியாது! ஊரறிய உங்களைக் கௌரவப்படுத்துகிறதற்கு ஏற்பாடு செய்யப் போகிறேன் நான்."

"நான் அத்தனை தகுதியுடையவனில்லை. ஏதோ என் எழுத்தை நாலு பேர் மனமாரப் படித்து மகிழ்ந்து கொண்டிருப்பதே எனக்குக் கௌரவம்தான்" என்று கூறிக் கொண்டே எழுந்து அலமாரியருகே போய் 'ஊழிப்புயல்' நாவலின் ஒரு பிரதியை எடுத்துக்கொண்டு வந்து, பயபக்தியோடு அவரிடம் கொடுத்தான் ஏகாம்பரம். எழுந்து நின்று இரண்டு கைகளையும் நீட்டி மரியாதையாக அந்தப் புத்தகத்தை வாங்கிக் கொண்டார் திருச்சிற்றம்பலம். அது மட்டுமா? கோவிலில் கிடைத்த தெய்வப் பிரசாதம்

போல் மதித்து இரண்டு கைகளாலும் புத்தகத்தை மேலே உயர்த்திக் கண்களில் ஒத்திக்கொண்டார்.

அவருடைய செயல்களைப் பார்த்து ஏகாம்பரம் மலைத்தான். 'இவ்வளவு பெரிய செல்வச் சீமானுக்குத் திடீரென்று வீடு தேடி வந்து என்னைப் பாராட்டத் தோன்றியதன் காரணமென்ன? இத்தனை நாளாக என்னைப் புறக்கணித்து வந்த அதிர்ஷ்டதேவதை கண் திறந்து என் பக்கமாகப் பார்க்கத் தொடங்கிவிட்டாளா?' என்று பலவிதமான நினைவுகள் அவனுக்கு உண்டாயின. வறுமை வெப்பத்தால் நம்பிக்கை வறண்டு போய்க் கிடந்த தனது நெஞ்சத் தடத்தில் யாரோ பன்னீரைத் தெளிக்கிற மாதிரி அந்தச் சமயத்தில் அவன் உணர்வுகளில் ஒருவகைக் குளிர்ச்சி பரவியது. கட்டுக்கடங்காத பெருமைக்குத் தான் ஆளாகிவிட்டதுபோல் ஒரு பூரிப்பை அவன் அவருக்கு முன் தனக்குத்தானே உணர்ந்தான்.

"ஏகாம்பரம்! வருகிற ஞாயிற்றுக்கிழமை இந்த மாபெரும் நாவலை எழுதிய உங்களுக்கு ஒரு பாராட்டு விழா நடத்தப்போகிறேன். விழா இந்தப் பேட்டையிலுள்ள பள்ளிக்கூடத்து மைதானத்தில் நடக்கும். மறுக்காமல் நான்அளிக்கும் இந்த மரியாதையை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்."

ஏகாம்பரம் தன் செவிகளில் கேட்கிற மேற்படி வார்த்தைகள் உண்மைதானா என்று ஐயமடைந்தான். திருச்சிற்றம்பலத்தின் திருவாயிலிருந்தா இந்த வார்த்தைகள் வெளிவருகின்றன? திடீரென்று அத்தி பூத்தாற்போல் வந்தார், பார்த்தார். புத்தகத்தை வாங்கிக் கண்களில் ஒத்திக் கொண்டார். இப்போது என்னடாவென்றால், "வருகிற ஞாயிற்றுக்கிழமை உனக்குப் பாராட்டு விழா" என்று சொல்லி என்னைத் திணற அடிக்கிறார்! எல்லாம் சொப்பனத்தில் நிகழ்கிற மாதிரியல்லவா வேகமாக நடக்கிறது!

"கட்டாயம் நீங்கள் இதற்கு இணங்கித்தான் ஆக வேண்டும். யோசிக்காதீர்கள். வீட்டுக்குப் போனதும் முதல் வேலையாக இந்த நாவலைப் படித்து விட்டுத்தான் மறு வேலை பார்க்கப் போகிறேன். ஊரெல்லாம் இதைப் பற்றியே பேச்சாக இருக்கிறது."

ஏகாம்பரம் அவருடைய வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொண்டே தலையைக் குனிந்து கீழே பார்த்தான். தரை அவனைப் பார்த்து நகைத்தது. வலுவில் தேடி வருகிற சீதேவியைக் காலால் உதைக்க முடியாது. சபலம் யாரை விட்டது? நீண்டநேர வற்புறுத்தலுக்குப் பின் விழாவை ஏற்றுக் கொள்வதாக ஒப்புக் கொண்டுவிட்டான் ஏகாம்பரம். அவர் விடை பெற்றுக் கொள்ளும்போது, "ஏகாம்பரம்! ஞாயிற்றுக்கிழமை மாலையில் விழா, உங்களை அழைத்துக்கொண்டு வர கார் அனுப்புகிறேன், வந்துவிடுங்கள்" என்று சொல்லிவிட்டுப் போனார்.

அவ்வளவுதான்! மறுநாள் காலையிலிருந்து அந்தப் பேட்டையே அமர்க்களப்பட்டது. 'பிரபல எழுத்தாளர் ஏகாம்பரத்துக்குப் பாராட்டுவிழா' என்று மூவர்ண நோட்டீஸ் சுவர்களிலெல்லாம் பெரிது பெரிதாக ஒட்டப்பட்டிருந்தன. தினப்பத்திரிகைகளெல்லாம் ஏகாம்பரத்துக்கு விழா நடத்தும் திருச்சிற்றம்பலத்தைப் பாராட்டி உபதலையங்கம் எழுதியிருந்தன. எங்கே திரும்பினாலும் ஏகாம்பரத்திற்கு

விழா நடத்தப்போகும் திருச்சிற்றம்பலத்தின் பெருந்தன்மை முழங்கிற்று. திருச்சிற்றம்பலத்தின் புகைப்படத்தை எல்லாப் பத்திரிகைகளும் பிரசுரித்தன. புகழ்ந்து எழுதின. இதில் வேடிக்கை என்னவென்றால் ஒரு பத்திரிகையாவது ஏகாம்பரத்தின் படத்தைப் பிரசுரிக்கவில்லை. அவனுடைய எழுத்துத்திறமையைப் பற்றியும் அதிகம் எழுதவில்லை. எல்லா இடத்திலும் திருச்சிற்றம்பலத்தின் புகழ்தான் பரவியது. மூவர்ணச் சுவரொட்டிகளில் கூட, "திருச்சிற்றம்பலம் நடத்தும் ஏகாம்பரத்தின் பாராட்டு விழா" என்று அவருடைய பெயருக்குத்தான் முதன்மை கொடுக்கப் பட்டிருந்தது. ஆனால் ஏகாம்பரம் உள்பட எவருக்கும் இதெல்லாம் ஒன்றும் வித்தியாசமாகப் படவில்லை. 'இவ்வளவு சிரமப்பட்டு இத்தனை பெரிய விழா நடத்துகிறவர் பேரைக்கூடப் போட்டுக் கொள்ளாமலா இருப்பார்?' என்று எண்ணிக் கொண்டு மன அமைதி பெற்றார்கள்.

ஞாயிற்றுக்கிழமையும் வந்தது. விழா நிகழ இருந்த பள்ளிக்கூட மைதானத்தில் நிறையப் பணம் செலவழித்துப் பிரமாதமான பந்தல் போடப்பட்டிருந்தது. ஒலிபெருக்கி இசை முழங்கிற்று. ஜே!ஜே! என்று பெருங்கூட்டம். மேடையில் பிரமுகர்கள் புடைசூழத் திருச்சிற்றம்பலம் உட்கார்ந்திருந்தார். ஏகாம்பரத்தை அழைத்து வரத் திருச்சிற்றம்பலத்தின் கார் போயிருந்தது. எல்லோரும் ஏகாம்பரத்தின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள்.

மாலை மணி மூன்றரை. இருப்பதற்குள் கிழிசலில்லாததும், வெள்ளையானதுமான ஜிப்பா ஒன்றைப் போட்டுக் கொண்டு வீட்டு வாசலில் காத்திருந்தான் ஏகாம்பரம். அழகான அந்தப் பெரிய கார் ஒயிலாகத் திரும்பி அவன் வீட்டு வாசலில் வந்து நின்றது. டிரைவர் கீழே இறங்கினான். அவன் முகமலர்ச்சியோடு ஏகாம்பரத்தினருகில் வந்து, "சார்! அது நீங்க எழுதின புத்தகமா? ரொம்ப நல்லாருக்குது சார். நான் ஆரம்பத்திலிருந்து கடைசிவரை ஒரே மூச்சிலே படிச்சு முடிச்சுட்டேன்," என்றான்.

"எந்தப் புத்தகத்தைச் சொல்றே?" என்று ஒன்றும் விளங்காமல் கேட்டான் ஏகாம்பரம். உடனே டிரைவர் காரின் கதவைத் திறந்து தன்னுடைய ஸீட்டின் கீழிருந்து ஒரு புத்தகத்தை எடுத்துக் காட்டினான். அந்தப் புத்தகத்தைப் பார்த்ததும் ஏகாம்பரம், "ஏனப்பா இது உன்னிடம் எப்படி வந்தது? உன் முதலாளிக்கல்லவா இதை நான் அன்பளிப்பாகக் கொடுத்தேன்? நீ அவரிடம் கேட்டு வாங்கிப் படித்தாயா?" என்று திகைப்புடன் டிரைவரிடம் கேட்டான். டிரைவர் ஒரு தினுசாகச் சிரித்தான்.

"அவருக்கு இதெல்லாம் படிக்க நேரம் ஏதுங்க?... உங்ககிட்ட இருந்து வாங்கிட்டு வந்தவரு இதைக் காரிலேயே மறந்து போட்டிட்டுப் போயிட்டாரு. நான் எடுத்துப் படிச்சதுலே நல்லதாப் பட்டது! வச்சுக்கிட்டேன். அதுக்கப்புறம் அவரும் கேட்கவே இல்லை."

சுளீரென்று நெஞ்சில் சவுக்கடி விழுந்தது போலிருந்தது ஏகாம்பரத்துக்கு. தன்மானம் கொதித்தது. நெஞ்சில் ஏதோ ஒரு உணர்வு மேலெழும்பித் துடித்தது.

"ஐயா! உலகந் தெரியாத ஆளா இருக்கீங்களே? முனிசிபல் 'எலெக்ஷன்' வருது. அந்தப் பேட்டையிலே முதலாளி நிக்கப் போறாரு. நாலுபேரு தன்னைப் பெரிசா

நினைக்கணும்னா இப்படி யாராவது ஒருத்தரைத் தூக்கிவிடணும்னு இந்த விழா, கிழா எல்லாம் தடபுடல் பண்றாரு..." டிரைவர் பேசிக்கொண்டே போனான்.

"உம் பேரரென்ன டிரைவர்?"

"ஏங்க? முனிரத்னம், பாங்க."

அந்தப் புத்தகத்தை வாங்கி, "உண்மை ரசிகன் முனிரத்தினத்துக்கு அன்பளிப்பு" என்று எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிட்டு, "இந்தா, இதை நீ வச்சுக்க, எனக்கு விழாவுக்கு வர ஒழியாதுன்னு உங்க முதலாளி கிட்டப் போய்ச் சொல்லிடு. எப்பவாவது நீ வந்தா இன்னும் படிக்க நிறையப் புத்தகம் தரேன். போயிட்டு வா" என்று சொல்லிவிட்டு உள்ளே போய்க் கதவைப் படீரென்று அடைத்துத் தாழிட்டுக் கொண்டான் ஏகாம்பரம். காற்றில் மிதந்து செல்லும் மோகினிப் போல் அழகாக அசைந்து திரும்பிச் சென்றது 'பிளிமத்' கார்.

(தாமரை, ஜூலை, 1959)



## 35. வாழ்க்கையின் கடிதம்

ஆருயிரே,

அன்றொரு நாள் அந்தி நேரத்திலே 'அத்தான்! என் பிரிவைத் தாங்குமோ உனது இதயம்?' என்று வாய்மொழியிலே கேட்டு விடை தந்த என் இன்னமுதே! இன்று எனது இதயத்தைக் கசக்கிப் பழிகிறதடி நமது பிரிவும் நமக்கிடையேயுள்ள ஒரு நூறு கல் தொலைவும். கடந்த காலத்தைச் சுற்றியலைந்து அந்த நினைப்பிலே ஆறுதலடைகிறதடி எனது நெட்டுயினைத்த நெஞ்சம்!

சிறு வயதிலிருந்தே சேர்ந்து வளர்ந்தோம். எனக்காக நீ, உனக்காக நான் என்ற எண்ணம். அந்த எண்ணத்திலே பிறந்த ஏக்கம் உனக்குத் தெரிந்தது தானே என் இன்பமே! யாரோ உன் தாய் மாமனாம் தறுதலை - பிழைப்பைத் தேடி சிங்களம் சென்றவன் பின்னர் ஏன் இங்கு திரும்ப வேண்டும்? திரும்பியவன் உன்னை ஏன் விரும்ப வேண்டும்? விரும்பியவன் நேரே உன் தாயை நெருங்கி நான் உன் மகளை மணக்க வேண்டும். மறுக்காது மகிழ்வுடன் இசைவு தா என்றல்லவா கேட்டிருக்க வேண்டும் அந்த எத்தன்? அதை விடுத்து, அழகுச் சோலையில் நீ ஆடி மகிழ்ந்திருந்த வேளையிலே உன் கண் பொத்தி, விளையாட அந்தக் கயவன் துணிந்ததும், நீ கதறக் கதற உன் கரம் பற்றி இழுத்ததும் என்னை காப்போர் இங்கு யாருமில்லையா? என்று நீ கூவியதும், ஏதோ சிந்தனையால் அடைக்கப்பட்டு நான் அச்சோலை வழியே வந்ததும், என்னால் அவன் இடர்ப்பட்டு ஓடியதையும் நினைத்தால், என் இன்பமே திரைப்படம் போல் தோன்றுகிறது.

கண்ணோடு கன் நோக்கப் பின் நீ நிலம் நோக்க வானத்துச் செம்மை உன் வட்ட முகத்துக்கேறியது எவ்வாறு? மேகத்துக் கருமை உன் கூந்தலுக்கும் முல்லையின் வெண்மை உன் முத்துப் பற்களுக்கும் தோற்று ஓடியது ஏன்? எனக்குப் பயந்து பள்ளிப் பருவத்தில் துள்ளித் துள்ளி நீ ஓடியதும், உனைத் துரத்தி நான் ஓடியதையும் நினைத்தால் என் அஞ்சுகமே! வாழ்க்கை முழுவதும் பிள்ளைப் பருவத்திலேயே கழியக் கூடாதா என்ற எண்ணம் எனக்கு ஏற்படுகிறது! பிள்ளைப் பருவத்திலே நமது விளையாட்டும், பின்னர் கல்லூரியிலே நாம் பயிலும் போது கண் பார்வையாலேயே என்னைக் கொல்லாமல் கொன்ற விந்தையையும் நினைக்க நினைக்க நான் வானத்தில் பறந்து வட்டமிடுவதைப் போன்ற உணர்ச்சியடைகிறேன்.

உனக்கு நினைவிருக்கிறதா என் இன்பமே, நாம் கல்லூரியிலே பயின்ற போது பாலாற்றிலே பெரு வெள்ளம் வந்தது? அந்நாளைய நிகழ்ச்சிகளை நம்மால் நம் வாழ் நாள் அளவும் மறக்க இயலாதே! கரையோரம் சென்ற நீ கால் வழுக்கி நீரில் மூழ்கியதும், சுற்றிச் சுழன்றோடும் அப் புதுப் புனலில் நீந்தத் தெரியாத நான் பாய்ந்து உன்னைக்

கைப் பற்றிக் கரை சேர்க்க முடியாமல் தவித்துப் பின்னர் நம்மிருவரையும் ஆங்கிருந்தோர் கரை சேர்த்ததும் கண்ணே! என் உயிர்ச் சுழலுக்கு உவமை காட்டியதே!

பின்னர் நீயின்றேல் நனில்லை என்ற முடிவுக்கு நான் வந்ததும், என் அன்னையிடம் அதனைக் கூறுவதற்குத் தவித்த தவிப்பும் என் தங்கமே! இன்னும் என்னை நகைக்க வைக்கிறது. பிறகுதானே கண்ணே! நமக்கு எதிர்ப்பு ஆரம்பமானது. என்னால் இடர்ப்பட்ட உன் தாய் மாமன், உன் தாயை அணுகி உன்னைத் தனக்குத் தருமாறு கேட்டதும், உன் தாயும் உறவு விட்டுப் போய்விடக் கூடாது என்ற ஒரே காரணத்திற்காக அதற்கு ஒப்புதல் தந்ததும் பிறகு நீ என்னைத் தவிர வேறு யாரையும் மணக்க முடியாது என்று உறுதியாகக் கூற, அந்த உறுதியை உனக்கு உற்ற துணையாக விட்டுவிட்டு நான் வேற்றூர்க்கு வேலையின் நிமித்தம் வந்ததும் என்னால் மறக்கவே முடியாத நிகழ்ச்சிகள்.

நான் வேலை பார்த்த அலுவலகத்தின் அதிகாரி உன் தாய் மாமனின் உற்ற தோழனாம். ஒரு நாள் தோழனைக் காண வந்தவன் உன்னைக் கண்டதும் திடுக்கிட்டான். திடுக்கிட்டவன் பின்னர் தீராப் பார்வையை என் மேல் வீசினான். கலங்கினேனில்லை கண்ணே! அன்று மறு நாள் என்னை வேலையை விட்டு நீக்கிய உத்தரவுக் கடிதத்தைச் சுமந்து கொண்டிருந்தேன். எதிர்பார்த்தேன் ஏந்திழையே இந்த நிகழ்ச்சியை! ஏசலும் எதிர்ப்பும் தான் கண்ணே நம் பிணைப்பை ஒன்றுபடுத்தியவை - உறுதிபடுத்தியவை.

எதிர்பார்த்த நிகழ்ச்சிதான் என்றாலும் எனது எதிர்காலத்தை எண்ணி வேலையில்லாமல் திண்டாடுவது, வேற்றூரிலே பசியும் பட்டினியும் அலைக் கழிக்க ஏங்கித் திரிவது என் எதிர்காலத்தை எண்ணி, மனத்திலே பெரும் புயல் வீசிக் கொண்டிருக்க மாலையிலே கடற்கரைக்குச் சென்றிருந்தேன். கொந்தளிக்கும் கடல் குமுறும் என் உள்ளத்தை நினைவூட்டியது. அசதியும் அலைச்சலும் என் கண்களைச் சுற்றியது. எவ்வளவு நேரம் கழிந்ததோ எனக்குத் தெரியாது.

ஐயா! என்ற பெருங்கூச்சல் என்னைத் திடுக்கிட்டு எழச் செய்தது. நிலவின் மங்கிய ஒளியிலே சிறிது தொலைவில் கண்ட காட்சி என்னைப் பதறியடித்தது. ஒரு வயதான மனிதனை இரு முரடர்கள் கத்தியைக் காட்டிப் பயமுறுத்திக் கொண்டிருந்தனர். மனிதனது உணர்ச்சிகள் அலையில்லாத கடல் போன்றது. அதில் இரக்கம் என்ற பெருங்காற்று வீசினால் வீரம் என்ற கொந்தளிப்பு ஏற்படுகிறது. என்னையும் அறியாமல் நான் அவர்களருகே ஓடினேன். நான் ஓடி வருவதைக் கண்ட முரடர்கள் கத்தியை என் மீது வீசி எறிந்தனர். நான் சிறிது ஒதுங்கிக் கொள்ளவே கத்தி கடலிலே விழுந்து மறைந்தது. உதவிக்கு ஆள் வந்ததைக் கண்டதும் அவர்களிடையே அகப்பட்ட மனிதனும் தன்னை விடுவித்துக் கொண்டான். கத்தியும் போய் களைப்பும் மேலிடவே அந்த முரடர்கள் ஓடிவிட்டனர்.

இதை மறந்துவிட்டேனே! அந்த வயோதிகர் மிகுந்த செல்வந்தர். நகரத்திலே பிரபல நகை வியாபாரி. தன் உயிரைக் காத்தவன் என்ற உணர்ச்சி மேலிட என்னைத்

தன் மாளிகைக்கு அழைத்துப் போனதும் எனக்கு நிழற்படம் போலத் தோன்றுகிறது. காலையிலே என் கதையைக் கேட்டவர், வாழ்க்கைச் சூழலிலே சிக்கிச் சீரழிந்தவன் நான் என்ற அனுதாபமும், தன் உயிரைக் காத்தவன் என்ற நன்றி உணர்வும் உந்த, என்னைத் தம் கடையிலேயே நல்ல ஊதியத்தில் மேற்பார்வையாளன் வேலையிலமர்த்தினார்.

பிறகுதான் கண்ணே! நான் விடுமுறை பெற்று ஊர் வந்ததும். உன் தாயைக் கண்டு உன்னை எனக்குத் திருமணம் செய்து வைக்குமாறு கேட்டதும், அவர்கள் பின்னர் யோசித்து முடிவு கூறுகின்றேன் என்றதும். அப்போது தான் ஏதோ ஏமாற்றுக் குற்றத்துக்காக உன் தாய்மாமன் என்று உன் தாய் ஏங்கித் தவித்ததும், பிறகு உன்னுடைய எண்ணம் இலகுவாக நிறைவேறியதும். நாமிருவரும் மணப்பந்தலிலே ஒன்று பட்டதும் என் அன்பே! ஆருயிரே! இன்பம்! மறக்க முடியாதவை!

வாழ்க்கைத் தோணியை நாமிருவரும் மனமுவந்து நடத்தினோம். உல்லாச ஊஞ்சலிலே ஆடினோம். இன்பக் கடலிலே மூழ்கினோம். திருமணமான சில திங்களுக்குள் நமக்குப் பிரிவா? திருமணம் நடந்த சில மாதங்கள் கழித்து தம்பதிகளிடையே பிரிவு ஏற்படுவது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சி. மேலும் எழுத வெட்கம் திரைபோடுகிறது. தெளிவாகவே சொல்லுகிறேன் - எனக்கு ஆண் குழந்தைதான் வேண்டும்; என்ன? சிரிக்கிறாயா? என் சிங்காரச் சிலையே! என் எண்ணத்தை நிறைவேற்றுவாயா?

என்றுமுன்...........

(செப்டம்பர், 1959)

## 36. நிறை காக்கும் காப்பு

கதவைத் திறந்துவிட்டு அலட்சியமாக இரண்டு கைகளாலும் நிலைப்படியைப் பிடித்துக்கொண்டு நின்றாள் அந்தக் கிராமத்து அழகி. சொருக்குக் கொண்டை, உயரமும் பருமனுமாகத் திணித்துத் திணித்துப் பஞ்சு அடைத்த பட்டுத் தலையணைப்போல் வாளிப்பான உடம்பு. திமிர் தெரியும் அழகுக் கண்களில் ஏனென்று கேட்கிற துடுக்குப் பார்வை. அலட்சியம் தவழும் சிரிப்பை மறைக்காத இதழ்கள். கருங்கல்லில் செதுக்கிய சிற்பம்போல் எடுப்பான மூக்கு, முழி, கொஞ்சம் அதிகமான அழகுதான்! தண்ணீரில் எண்ணெய் மாதிரி அந்தக் கிராமத்துத் திமிரோடு அழகு ஒட்டாமல் தெரிந்தது. செருக்கா? வீறாப்பா? கர்வமா? ஏதோ ஒன்று அழகுக்கு மீறி, அளவுக்கு மீறி அந்தப் பெண்ணின் முகத்தில் தெரிந்தது.

முத்தழகு இதை எதிர்பார்க்கவில்லை. கதவைத் தட்டினபோது இப்படி ஒரு ‘பெண்புலி’ வந்து திறந்துவிட்டு முறைத்துப் பார்க்கும் என்றும் அவன் நினைக்கவும் இல்லை.

“இதுதானே வீரப்ப மல்லுக்காரர் வீடு?” என்று கேட்டான் குறட்டில் ஏறித் திண்ணையில் உட்கார்ந்து கொண்டே. அவன் சிவந்த பாதங்களில் கருப்பு நிறத் தோல் செருப்பு எடுப்பாகப் பொருந்தி இருந்தது. அந்தப் பெண் அவன் காலைப் பார்த்துச் சீறினாள். “எந்திருச்சி வாசப் படிக்கிக் கீழே செருப்பைக் கழட்டிட்டு உட்காரு, ஐயா!”

“ஏனாம்? கழட்டாட்டி என்ன செய்வே?”

“ஐயாவுக்கு இந்த வீட்டு வளமுறை தெரியாது போலிருக்கு. ஐயா, பட்டணத்து இங்கிலீசுத் துரையோ! இது சிலம்ப வாத்தியாரு வீடு! வித்தை குடியிருக்கிற இடம். சரசுவதி பீடம்பாங்க. வாசற்படிக்கு அப்பாலே யாரையும் செருப்போடே விடறதில்லை இங்கே. இந்த ஊரிலே பச்சைப் பிள்ளையைக் கேட்டாக்கூடத் தெரியுமே இது?”

“அப்படியா? நான் பச்சைப் பிள்ளை இல்லே பாரு அதனாலேதான் எனக்குத் தெரியாமப் போச்சி. நீ போயி உங்க அப்பாவைக் கூப்பிடு. இப்படியே உட்கார்ந்து இரண்டு வார்த்தை பேசிட்டுப் போயிடறேன்.”

“கூப்பிடறது இருக்கட்டும்! முதல்லே குறட்டுக்குக் கீழே இறங்கி வாசல்லே செருப்பைக் கழட்டிப் போடு ஐயா...!”

“இது புதுச் செருப்பு. சோடி பன்னண்டரை ரூபா. அந்தச் சாக்கடைப் புழுதியிலே போடமாட்டேன். வேணும்னா இங்கேயே காலடியிலே கழட்டிப் போட்டுக்கறேன். நீ போய் அப்பாரைக் கூப்பிடு.”

“இங்கே போட்டாத் தூக்கித் தெருவாசல்லே எறிஞ்சிடுவேன். தெரியுமில்லே...” - அந்தப் பெண்ணின் கண்களில் சினத்தின் ஆணவம் பொங்கியது.

முத்தழகுக்கு ஆண் பிள்ளையின் தன்மானம் கொதித்தது. அவள் பெண் புலியாக இருக்கலாம். வீரப்பமல்லுக்காரரின் திமிர்பிடித்த மகளாயிருக்கலாம். ஆனால், அவன் ஆண் பூனையல்லவோ? அவனும் ஆண்பிள்ளைச் சிங்கம்தானே? பட்டணத்துக் கல்லூரியில் ‘ஆனர்ஸ்’ கடைசி வருடம் எழுதிவிட்டு - முதல் வகுப்புத் தேர்ச்சியை நம்பிக்கொண்டு வந்திருக்கிறவனாயிற்றே. அவனுடைய வெள்ளையுடைக்கும் நாகரிகத் தோற்றத்துக்கும் கொஞ்சமாவது மதிப்புக் கொடுத்துப் பேச வேண்டாமா அந்தப் பெண்!

“நான் இங்கேதான் கழற்றிப் போடுவேன்; உன்னால் முடிந்ததைச் செய்து கொள்...” - முத்தழகு திண்ணையிலேயே செருப்பைக் கழற்றிப் போட்டான்.

“செய்து கொள்ளலாந்தானே?”

“ஆகா முடிந்தால் - தாராளமாக...”

அவள் குபீரென்று கதவிடுக்கிலிருந்து ஒரு நீண்ட சிலம்பக் கழியை உருவினாள். நிலைப்படிக்கு அந்தப்புறமிருந்தே கழியில் இரண்டு செருப்புக்களையும் கோத்து தெருவை நோக்கி ஓங்கி வீசினாள். நடுத்தெருவில் மழை பெய்து சேறாகியிருந்த அளற்றுக் குழியில் போய்ச் ‘சொத்’தென்று விழுந்தன அந்தப் புது பாதரட்சைகள். “போய் எடுத்துக் க்ழுவிக்கிட்டுப் போங்க” என்று சொல்லி அலட்சியமாகச் சிரித்தாள் அவள்.

“என்ன திமிர் உனக்கு!” என்று அடிபட்ட புலிபோல் சீறிக் கொண்டு பாய்ந்தான் முத்தழகு.

“சும்மா நில்லுங்க அப்படியே... இது வீரப்ப மல்லுக்காரர் மகள். பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாது. கிட்ட வந்தால் ஆம்பிள்ளைங்கிற மானம் போயிடும். செருப்புக் கிடக்கிற இடத்திலே நீங்களும் கிடப்பீங்க. செருப்போட உடம்பையும் கழுவிட்டுப் போகணும்.” சிலம்பக் கழியை இரண்டு கைகளாலும் குறுக்கே பிடித்து மறித்துக் கொண்டு காளி மாதிரி நிமிர்ந்து நின்றாள் அந்த முரட்டுப் பெண். ஆண்பிள்ளை அடிக்கக் கையை ஓங்கிக் கொண்டு வருகிறானே என்ற பயம்கூடவா ஒரு பெண்ணுக்கு இராது!

“நீ என் அருகில்கூட நெருங்க முடியாது! ஊதித் தள்ளிவிடுவேன் ஊதி” என்கிற மாதிரி நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு சிலம்பக் கழியோடு நிற்கிற பெண்ணைப் பார்த்தால் யாருக்குத்தான் பயமாக இருக்காது?

சும்மா அரட்டிச் சீறிக் கொண்டு பாய்ந்ததுதான் மிச்சம்! முத்தழகு ஒன்றும் செய்யவில்லை. ஒன்றும் செய்ய முடியாது. பெண் பிள்ளையை அடித்தாலும் அவமானம். அடி வாங்கினாலோ அதைவிட படு அவமானம். பெண்ணின் உடம்பும் ஆணின் மதர்ப்புமாக வீறு கொண்டு நின்ற அந்தப் பெண் பிள்ளையைப் பார்த்தால்

அடித்து நொறுக்குகிறவளாகத் தென்பட்டாளே ஒழிய, அடி வாங்கிக் கொண்டு நிற்கிறவளாகத் தெரியவில்லை.

நல்ல வேளை; சீற்றத்தோடும் சீற்றத்தைக் காட்டுவதற்குத் தயக்கத்தோடும் அவன் இப்படித் திணறிக் கொண்டிருந்த சமயத்தில் வீரப்பமல்லுக்காரரே உள்ளேயிருந்து வந்துவிட்டார்.

"என்னம்மா அது கூப்பாடு? யாரோடே வம்பு பண்ணிகிட்டு நிற்கிறே?" என்று கேட்டுக் கொண்டே வந்தார் வீரப்பமல்லுக்காரர்.

"யாரா? பட்டணத்து இங்கிலீசுத் துரை. இப்பத்தான் 'ஏரோப்ளேன்'லே வந்து குதிச்சாரு. நீங்களே வந்து பார்த்துக்குங்க" என்று தந்தைக்கு உள்பக்கம் பதில் குரல் கொடுத்துக் கொண்டே அவனைப் பார்த்து முகத்தை ஒரு 'வெட்டு வெட்டி' அழகு காட்டிவிட்டு உள்ளே சென்று மறைந்தாள் அந்தப் பெண்புலி.

"போ, போ, இன்னிக்கில்லா விட்டாலும் ஒருநாள் வகையா மாட்டிக்குவே" என்று சொற்களைத் தனக்குள் முணுமுணுத்துக் கறுவிக் கொண்டான் முத்தழகு.

"அடேடே! பண்ணையார் வீட்டுத் தம்பியா? வாங்க; சுகந்தானே? இப்ப லீவாக்கும்; பட்டணத்திலிருந்து என்னிக்கு வந்தீங்க?" வீரப்பமல்லுக்காரர் விசாரித்துக் கொண்டே அவனுக்கு எதிர்த்தாற்போல் திண்ணையில் வந்து உட்கார்ந்தார். மல்லுக்காரருக்கு மதுரை வீரசாமி கோடாலி முடிச்சு. பன்னரிவாள் நுனிமாதிரி மீசை, காதுகளில் பெரிதாகச் சிவப்புக் கடுக்கன்கள். அந்த வயதிலும் கட்டுத் தளராமல் 'மல்லுக்காரர்' என்கிற வன்மையைக் காட்டும் உடம்பு.

"என்ன தம்பி? அதுகிட்ட ஏதாவது வாக்குடுத்திங்களா? கொஞ்சம் துடுக்கா எடுத்தெறிஞ்சு பேசியிருக்கும். அதுக்குச் சுபாவமே அப்படி. மனசிலே வச்சுக்கிடாதீங்க."

அவருடைய சமாதானம் இன்னும் வயிற்றெரிச்சலைக் கிளப்பியது அவனுக்கு. அந்த நிலையில் அவரிடம் அதிகம் பேசிக் கொண்டிருப்பதற்கு நாணமும், பயமும் அடைந்தான் அவன். நேரடியாக வந்த விஷயத்தைத் தொடங்கினான். "அப்பா உங்களைப் பார்த்திட்டு வரச் சொன்னாங்க. 'வட்டி' நிறையச் சுமந்து போச்சாம். அசலைத் தீர்க்காட்டாலும், வட்டியையாவது அப்பப்ப 'பைசல்' செய்திட்டா நல்லாருக்கும்னாங்க..."

"நான் மட்டும் வேண்டாமின்னா சும்மா இருக்கேன். ஏலாமைதான் காரணம். இந்த வருஷம் எனக்கு வெள்ளாமை ஒண்ணும் சுகமில்லை. சாவியும், பொக்குமா ஏமாத்திடிச்சு. எப்படியாச்சும் பார்த்துக் கொடுத்திடணும்னு தான் இருக்கேன்."

மல்லுக்காரர் குரலில் இரக்கம் கொடுத்துத் தணிந்து பேசினாலும் அந்தப் பணிவும், தாழ்வும், இரங்கிய குரலும் - செயற்கையாக இருந்தன. வம்சத்துக்கே பழக்கமில்லாதவை போல் தோன்றின. அவன் புறப்படுவதற்காக எழுந்துவிட்டான்.

"சொல்லிட்டுப் போகத்தான் வந்தேன்...வாரேன்..." எழுந்திருந்தவன், 'உங்க பொண்ணுக்குத் துணிச்சலும், துடுக்கும் ரொம்பத்தான் அதிகமாயிருக்கு. கொஞ்சம்

அடக்கியே வையுங்க' என்று சொல்ல நிமிர்ந்தான். நிலைப்படியில் கையூன்றி மறுபடியும் அவள் வந்து நிற்பதைக் கண்டதும் அவன் வாயில் வார்த்தைகள் வரவில்லை. தனியாக அவமானப்பட்டது போதாதென்று மறுபடியும் அவருக்கு முன்னால் அவமானப்பட விரும்பவில்லை அவன். தான்அவமானப்பட்ட விவரம் அவருக்குத் தெரியவிடுவதற்கும் அவன் தயாராயில்லை. சேற்றில் விழுந்திருந்த புதுச் செருப்புகளை எடுத்துக் கொள்ளாமலே வெறுங்காலோடு தெருவில் இறங்கி விறுவிறுவென நடந்தான். நிலைப்படியில் நின்றிருந்த அவள் கலீரென்று சிரித்த சிரிப்பு அவன் செவிகளை எட்டி ஆண்மையைக் கொதிக்கச் செய்தது. அந்தச் சிரிப்பை ஒட்டி, "என்னம்மா சிரிப்பு வேண்டிக் கிடக்கு? கடன் வாங்கின லட்சணந்தான் சிரிப்பாச் சிரிக்குதே! நீ வேறே சிரிக்கணுமா?" என்று மல்லுக்காரர் மகளைக் கடிந்து கொண்ட குரலும் அவனுக்குக் கேட்டது.

ஒரு பெண் பிள்ளைக்கு இத்தனை திமிரா? ஒரு விநாடி நேரமாவது இந்தத் திமிரை அடக்கிப் பார்த்தாலல்லவா ஆண் பிள்ளை என்ற வார்த்தைக்கு ஏதாவது அர்த்தம் இருக்க முடியும். 'நான் பொம்பளை; என்னை விட்டுடுங்க' என்று கண்ணில் நீர் மல்க அவள் கெஞ்சிக் கொண்டு மண்டியிடும்படி ஒரு நிமிஷமாவது ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திப் பார்த்துவிட வேண்டும் என்று கொதித்தது முத்தழகுவின் நெஞ்சம். பெரிய பஞ்சு மூட்டையில் ஒரு பொறி நெருப்பு விழுந்து சிதறின மாதிரி இந்த அவமானச் சம்பவம் அவன் மனத்துள்ளிருந்து விலகாமல் ஒரு மூலையில் கனிந்து கனன்று கொண்டேயிருந்தது.

அந்த முரட்டுப் பெண்ணின் தகப்பனார் தன் தந்தையிடம் பணத்துக்குக் கடன் பட்டிருந்ததுபோல் - தான் அவளிடம் துணிச்சலுக்குக் கடன்பட்டுக் கொண்டு வந்துவிட்டது போல் அவனுக்குத் தாழ்வு மனப்பான்மை உண்டாயிற்று. அதோடு அவளுக்குப் பட்ட துணிச்சல் கடனை வட்டியும், முதலுமாக, எவ்வாறாவது தீர்த்துக் கொண்டுவிட வேண்டும் என்று அவன் மனத்தில் ஒரு வைரம் ஏற்பட்டது.

## 2

விடுமுறையை நிம்மதியாகவும், இன்பமாகவும் கழிக்கலாமென்று கிராமத்துக்கு வந்த முத்தழகுவுக்குக் கிராமத்தில் கால் வைத்த முதல்நாளே இப்படிக் கடன் வசூலிக்கப் போன இடத்தில் ஒரு பெண் பிள்ளையிடம் மாட்டிக் கொண்டு அவமானப்பட நேரிடுமென்று தெரியாது.

மறக்க முடியாமல் அதே நினைவில் கொதித்துக் கொண்டிருந்த மனத்தை அமைதிப்படுத்த இயலாமல் சாயங்காலம் மாந்தோப்புப் பக்கம் உலாவப் போனான் அவன். ஊரிலேயே பெரிய மாந்தோப்பு அது. அவர்களுடைய பண்ணைக்குச் சொந்தமானது. மரங்களடர்ந்து இருண்டு பசுமை செறிந்தது. தோட்டத்தின் நடுவில் நான்கு கமலை கட்டி நீர் இறைப்பதற்கு வசதியான பெரிய கிணறு.

கிணற்றைச் சுற்றிலும் பச்சரிசி மாங்காய் என்ற வகையைச் சேர்ந்த மாமரங்கள். உயர்ந்தரக 'பிஸ்கட்'டைச் சுவைத்துச் சாப்பிடுகிற மாதிரி அந்த மாங்காய்க்கு ஒரு தனி

ருசி உண்டு. முத்தழகு பச்சரிசி மாமரத்தடியில் போய் உட்கார்ந்தான். உட்கார்ந்தபடியே கைக் கெட்டுகிறாற் போலிருந்த ஒரு மாங்காயைப் பறித்துச் சுவைக்க ஆரம்பித்தான். கிளிகளின் மிழற்றுதல், அணில்களின் கீச்சொலி, குயிலின் குரல், எல்லாமாகச் சேர்ந்து மாலை நேரத்தில் அந்தத் தோட்டத்துக்குத் தனி அழகு உண்டாக்கிக் கொண்டிருந்தன.

'சொத்'தென்று முத்தழகுவின் பிடரியில் ஒரு மாங்கொட்டை விழுந்தது. "சே! சே! கிளியும், அணிலும், இந்தத் தோப்பிலே முக்கால்வாசி மாங்காயை வேட்டு வச்சிடுது" என்று முணுமுணுத்தவாறே பிடறியைத் தடவி விட்டுக் கொண்டான் அவன்.

மறுபடியும் நன்றாகக் கடிக்கப்பட்ட கொட்டை ஒன்று 'ணங்'கென்று அவன் உச்சி மண்டையில் விழுந்தது. "இதென்ன வம்பு? இந்தத் தோப்பிலே கிளிகள் தொல்லை அதிகமாப் போச்சி" என்று எறிவதற்காகக் கீழே குனிந்து ஒரு கல்லை எடுத்துக் கொண்டு நிமிர்ந்தான் அவன்.

நிமிர்ந்தவன் அப்படியே திகைத்து நின்றான். மரக்கிளை மேல் கிளி இல்லை. வீரப்பமல்லுக்காரர் வீட்டுப் 'பெண் கிளி' படு அட்டகாசமாக உட்கார்ந்து கால் நீட்டி மாங்காயைக் கடித்துக் கொண்டிருந்தது. ஒரு விநாடி மரக்கிளையில் அவள் ஒயிலாகவும், அநாயாசமாகவும் உட்கார்ந்திருந்த தோற்றத்தில் மனத்தைப் பறி கொடுத்துவிட்டு நின்றான் முத்தழகு. பட்டை உரித்த வாழைத்தண்டு மாதிரி முழங்கால்வரை தெரிய அவள் அமர்ந்திருந்த கோலம் அவனை என்னவோ செய்தது. ஆனால், மனித இயற்கையான இந்தச் சிறிய பலவீனமெல்லாம் ஒரே ஒரு விநாடிதான். அடுத்த விநாடியே 'அவள் தன்னை அவமானப்படுத்திய முரட்டுப் பெண் - அவள் மேல் தன் கோபத்தை முழு அளவில் ஒன்று திரட்டிக் காட்ட வேண்டும்' என்ற உணர்ச்சிகளை மிக விரைவாக அடைந்தான் அவன். முகத்தில் கடுமை பரவிப் பதிந்தது.

"கீழே இறங்கி வா, சொல்கிறேன் - இப்படிச் சர்வ சுதந்திரமாக ஏறி உட்கார்ந்து மாங்காய் பறித்துத் தின்பதற்கு இது உங்கள் அப்பன் வீட்டுத் தோப்பு என்ற எண்ணமோ? உள்ளே நுழைகிறபோதே காலை முறிக்க ஆளில்லாததனால்தானே இப்படித் துணிந்து, மாங்காய் திருட முடிகிறது?" என்று தோப்பே அதிரும்படி கூப்பாடு போட்டான் முத்தழகு.

அவனையோ, அவன் கூப்பாட்டையோ, இலட்சியமே செய்யாதவள்போல் மெல்ல மரத்திலிருந்து இறங்கினாள் அவள். பதற்றமோ, பயமோ சிறிதுகூட இல்லை. உடைமைக்காரன் திருடும்போது பார்த்துவிட்டானே என்ற தடுமாற்றமாவது இருக்க வேண்டாமா? கிடையவே கிடையாது. அலட்சியப் புன்னகை. மறவர் குடிப் பெண்ணுக்கே இயல்பான வீறும் பீடும் கலந்த நடை. 'நாணமும் வெட்கமும் நான் அறியமாட்டேன்' என்பதுபோல் ஒரு திமிர். இரண்டு கைகளையும் இடுப்பில் ஊன்றிக் கொண்டு அவனுக்கு முன்னால் வந்து நிமிர்ந்து நின்றாள் அவள். அவனுக்கு அழகு காட்டிக் கேலி செய்வது போலிருந்தது அவள் நின்ற விதம். அவனைப் பதிலுக்கு விளாச ஆரம்பித்தாள்; "ஐயா! ஆண் பிள்ளைச் சிங்கமே! எங்கள் அப்பன் வீட்டில் இப்படி ஒரு தோப்பு இருந்தால் இரண்டு மாங்காய்க்காக இப்படி மட்டு மரியாதை

இல்லாமல் பேசமாட்டோம். உங்கள் தோப்புக்கு வருகிறவர்களின் கால் ஒன்றும் முருங்கைக் குச்சி இல்லை, முறித்து விடுவதற்கு."

"சீ! வாயைப் பாரு... திருடித் தின்னிட்டுப் பேச்சு வேறே... மரியாதை தெரிஞ்சவள் நீ ஒருத்திதான் என்கிறதைக் காலையிலே உங்க வீட்டுக்கு வந்திருந்தப்ப நல்லாக் காட்டினியே!"

"கொஞ்சம் நாக்கை அளந்து பேசுங்க. பணத்துக்குத்தான் உங்ககிட்டக் கடன் பட்டிருக்கோம். மட்டு மரியாதை, மானம் இதுக்கெல்லாம் கடன் படலை."

"அம்மா, பெண்புலியே! இந்தத் திமிர்ப் பேச்செல்லாம் உங்கள் வீட்டு வாசலில் நின்று கொண்டு பேசலாம். இங்கே பேசினால்..."

"பேசினால் என்ன செய்வீங்களாம்?"

அவன் கைகள் அவள் பிடரியை நோக்கிச் சினத்தோடு உயர்ந்தன.

"என்ன செய்வேனா? இதோ இப்படித்தான் செய்வேன்!" மனத்திலும் கைகளிலும் ஏற்பட்ட ஒரு வெறியில் தான் என்ன செய்கிறோம் என்பதையே சிந்திக்காமல் அவளைத் தள்ளிவிட்டான் முத்தழகு. பின்புறம் நீர் நிரம்பிக் கிடந்த கிணற்றில் விழுந்தாள் அவள். ஏதோ அசட்டுத் துணிச்சலில் அதைச் செய்துவிட்டாலும் அவன் உடம்பு பயத்தால் நடுங்கியது. நீரில் அவள் விழுந்ததால் எழுந்த ஓசையைக் கேட்டபோது அவனுக்குத் திகில் பிடித்தது. 'நீந்தத் தெரியுமோ, தெரியாதோ - தான் குருட்டுத்தனமாகப் பிடித்துத் தள்ளிவிட்டதன் விளைவு என்ன ஆகுமோ?' என்று நிதானமாக நினைத்துப் பார்த்தபோது தான் முரட்டுத்தனமாக ஏதோ பெரிய தப்புக் காரியம் செய்து விட்டதை உணர்ந்தான்.

எப்படியாவது தன்னைத் தப்பிக்கச் செய்து கொண்டு ஓடிவிட்டால் போதுமென்ற ஒரு கோழைத்தனமான முடிவு அப்போது அவன் மனத்தில் தோன்றியது. திரும்பிப் பாராமல், ஓட்டமும் நடையுமாக வீட்டுக்கு விரைந்தான் முத்தழகு. உள்ளங்காலில் முறிந்து நின்று வெளிவராத முள்ளைப்போல் அவளைக் கிணற்றில் தள்ளிவிட்டு வந்த குற்ற நினைவு மட்டும் மனத்தில் குறுகுறுத்துக் கொண்டே இருந்தது. அவன் மனமும் உடம்பும் ஒரு நிலை கொள்ளவில்லை. முகத்தில் வேர்த்துக் கொட்டியது. அதற்கேற்றாற்போல், "என்னடா முத்து? எங்கேயிருந்து இப்படி வேர்க்க விறுவிறுக்க ஓடி வருகிறாய்? முகத்தைப் பார்த்தால் என்னவோ கொலை பண்ணிவிட்டு ஓடி வருகிறவன் மாதிரி இருக்கிறதே?" என்று வீட்டுக்குறட்டில் உட்கார்ந்து வட்டிக் கணக்குப் பேரேட்டைப் பார்த்துக் கொண்டிருந்த தகப்பனார் வேறு அவனைக் கேட்டுவிட்டார். பதறிப் போனான் அவன்.

"ஒண்ணுமில்லேப்பா, தோப்பிலேயிருந்து வரேன்" என்று அப்பாவுக்குப் பதில் சொல்லிவிட்டு உள் வீட்டுக்குள் போய் ஒரு இருண்ட மூலையில் ஈஸிசேரைப் போட்டுக் கொண்டு சாய்ந்தான். அவனுடைய மனக்கண்களுக்கு முன்னால் பயங்கரமான கற்பனை நிழல்கள் ஆடின.

*வீரப்பமல்லுக்காரரும், அவரிடம் சிலம்பம் படித்த சீடப் பிள்ளைகளும் கத்தியும், வெட்டரிவாளும், பாலாக்கம்பும் தூக்கிக் கொண்டு, கலகக்காரர்களைப்போல் அவன் வீட்டை நோக்கித் 'திமுதிமு'வென்று ஓடி வருகிறார்கள். "ஒரு கன்னிப் பெண்ணைத் தொட்டுப் பிடித்துக் கிணற்றிலே தள்ளுவதாவது? வெளியே இழுத்துக்கொண்டு வா, அந்தப் படித்த நாய்ப் பயலை. பெண் பிள்ளையைத் தொட்ட கையை முறித்துப் போட்டு விடுகிறேன்" என்று வீரப்ப மல்லுக்காரர் உறுமுகிறார். ஊரே அவரோடு ஒன்று சேர்ந்து கொண்டு நியாயம் கேட்டு அவன் வீட்டுக்கு முன் வந்து கூடிக் கொதித்து நிற்கிறது.*

இருட்டில் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டு இப்படி நடக்குமோ என்று நினைக்கும்போதே கொலைக்களத்தில் கொண்டு போய் நிறுத்தினதுபோல் அவன் உடம்பு வெடவெடத்தது. எதையோ பெரிதாக இழக்கப் போகிற மாதிரி நெஞ்சு 'படக் படக்'கென்று அடித்துக் கொண்டது.

*பிடித்துத் தள்ளியதில் இசைவு பிசகாகக் கிணற்றுச் சுவரிலாவது பாறையிலாவது மோதி அடிபட்டிருக்குமோ? அல்லது தண்ணீரைக் குடித்து, முங்கி, முங்கி இறந்து மிதந்துவிட்டாளோ?*

அந்தப் பெண் நீரில் நிலைகுலைந்து வீழ்வதுபோலவும் முங்கியும், மேலெழுந்தும், தண்ணீரைக் குடித்து மரண அவஸ்தைப்படுவது போலவும் அவன் கண்கள் முன் காட்சிகள் விரிந்தன.

வெகுநேரம் அசையாமல் இருளில் கண்ணை மூடியவாறு ஈஸிசேரில் கிடந்தான் அவன். உடம்பு நெருப்பாய்ச் சுட்டது. கண்கள் கபகபவென்று எரிச்சல் எடுத்தன. தலையை வலித்தது. ஜன்னி கண்டமாதிரி ஒரு நடுக்கமும், குதுகுதுப்பும் ஏற்பட்டிருந்தன.

'நீ கொலை செய்துவிட்டாய்! அநியாயமாக ஒரு பெண்ணைக் கைகூசாமல் அத்தனை உயரத்திலிருந்து கிணற்றில் பிடித்துத் தள்ளலாமா? பாவி! பாதகா!' என்று அவன் மனமே அவனை இடித்துக் காட்டுவது போலிருந்தது. ஈஸிசேரில் உடம்பு தூக்கித் தூக்கிப் போட்டது.

"அட பாவி! உடம்பு ஏண்டா இந்தக் கொதி கொதிக்குது? ஏண்டா இப்படிப் பிசாசு அறைப்பட்டவன் மாதிரி முழிக்கிறே? என்னடா உனக்கு? தோப்புக்குப் போனேன்னீயே ஏதாவது பயந்துக்கிட்டியா?" என்று அவனுடைய அப்பா வந்து பார்த்துவிட்டுத் தடபுடல் படுத்தினார். கொளுமோர் காய்ச்சிக் கொடுக்கச் சொன்னார். உடம்பைத் தொட்டுப் பார்த்துவிட்டு, "ஜன்னி கண்டவன் மாதிரி உதறுதேடா?" என்றார்.

"தோப்புலே கமலைக் கிணற்றண்டே போனியா? அங்கே தான் பண்ணைக்காரச் செங்கான் நாந்துக்கிட்டுச் செத்தான்!" என்று தாமாகவே வேறு காரணம் கற்பித்துக்கொண்டு பதறினார் அவனுடைய தந்தை.

இரவு முழுவதும் முத்தழகுக்கு உறக்கம் வரவில்லை. 'நாளைக்கு விடிந்தால் ஊருக்கெல்லாம் தெரிந்துவிடும். அத்தனை பேரும் அந்தக் கிணற்றுக்குத்தானே குளிக்கப் போவார்கள்? காலையில் முதல் முதலாகக் குளிக்கப்போகிறவன் அவள் மிதப்பதைப் பார்ப்பான். அலறிப்புடைத்துக் கொண்டு ஓடி மல்லுக்காரரிடம் போய்ச் சொல்லுவான்.

அப்புறம்? அப்புறமென்ன? சந்தி சிரிக்க வேண்டியதுதான். விடிகிற நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. மணி நாலரை. இன்னும் சிறிது நேரத்தில் வீடு கலகலவென்று வழிப்புப் பெற்றுவிடும். தெருவில் வாசல் தெளிக்கிறவர்கள், குளிக்கப் போகிறவர்கள், வயல், வரப்பு என்று உழவு வேலையாகப் போகிறவர்கள் - எல்லோரும் நடமாடித் தெருவை கலகலப்பாக்கி விடுவார்கள். ஊர் விழிக்குமுன் எங்கேயாவது ஓடிப் போய்விட்டால் என்ன? ஐந்தே கால் மணிக்கு வடக்கே போகிற ரயில் ஒன்று இருக்கிறது.

முத்தழகு போர்வையை உதறித் தள்ளிவிட்டுப் படுக்கையிலிருந்து எழுந்தான். அவன் மனம் தீர்மானமாக ஒரு முடிவுக்கு வந்துவிட்டது. ஓசைப்படாமல் பெட்டியைத் திறந்து கைக்குத் தோன்றிய அளவு பணத்தை எடுத்துச் சட்டைப் பையில் திணித்துக் கொண்டான். கூடத்தில் அவன் தந்தை தூங்கிக் கொண்டிருந்தார். மெல்ல நடந்து அவரைக் கடந்து வாசற் கதவைத் திறந்து கொண்டு தெருவில் இறங்கினான். மேல் துண்டைத் தலையில் போட்டு மறைத்துக் கொண்டு நடந்தான்.

ரயில்வே ஸ்டேஷனுக்குப் போகிற போக்கில் இன்னொரு சந்தேகத்தையும் தீர்த்துக்கொண்டு போய்விட்டால் நல்லதென்று அவனுக்குத் தோன்றியது. அவனுடைய சந்தேகப்படி நடந்திருக்கும் பட்சத்தில் சமீபகாலத்தில் ஊர் திரும்ப வேண்டிய அவசியமே அவனுக்கு இருக்காது. எங்கேயாவது ஓடித் தலைமறைவாக இருந்துவிட வேண்டியதுதான்.

அவ்வளவு உயரத்திலிருந்து முரட்டுத்தனமாக அவன் கிணற்றுக்குள் அவளைத் தள்ளியதற்கு நீச்சுத் தெரியாதவளாயிருந்தால் இதற்குள் இறந்து போய்ப் பிணமாக மிதந்து கொண்டிருப்பாள். நீச்சுத் தெரிந்தவளாக இருந்தாலும் தானாக கிணற்றில் குதித்தால் அடிபடாது. விளிம்புச் சுவரோரத்திலிருந்து இன்னொருவர் பிடித்துத் தள்ளினதால் எங்கேயாவது அடிபடாமல் போகாது.

இரண்டில் எது நடந்திருந்தாலும் முத்தழகு குற்றவாளிதான். இறந்து போய் அந்தப் பெண் மிதந்து கொண்டிருந்தால் 'கொலைகாரன்' என்று சொல்லுகிற அளவுக்குப் பெரிய குற்றவாளி அவன். மறுபடியும் ஊருக்குத் திரும்பி யார் முகத்திலும் விழிக்கவே முடியாத அளவுக்குப் பெருங்குற்றம் அது. அடிபட்டுக் காயமடைந்திருந்தால் சிறிது காலத்தில் மறந்து மறைந்து போகிற சாதாரணக் குற்றம்தான்.

ஸ்டேஷனுக்குப் போகிற வழியில்தான் அந்த மாந்தோப்பு இருந்தது. போகிற போக்கில் ஒரு நடை உள்ளே நுழைந்து பார்த்துவிட்டுப் போய்விட்டால் இரண்டில் எது நடந்திருக்கிறதென்று சந்தேகமறத் தெரிந்துவிடும். கிணற்றில் ஒன்றும்

மிதப்பதாகத் தெரியாவிட்டால் கவலைக்கிடமாக எதுவும் நடக்கவில்லை என்று சற்றே திருப்தியோடு இரயில் ஏறலாம் என்று எண்ணினான் அவன்.

மாந்தோப்புக்குள் நுழைந்தான் முத்தழகு. இருள் பிரிந்து ஒளி புலர்ந்தும் புலராமலும் இருக்கிற மங்கல நேரம். தோப்பு முழுதும் 'காடு'போல் 'கீச்'சென்று தனிமையில் மூழ்கிக் கிடந்தது. நடந்து உள்ளே போவதற்கே பயமாக இருந்தது. கமலைக் கிணற்றடியில் பண்ணைக்காரன் செங்கான் நாந்துகொண்டு செத்த விஷயம் வேறு இந்தச் சமயம் பார்த்து நினைவுக்கு வரவா வேண்டும்? மருளும் மனமும், மிரண்ட கண்களும், தயங்கிய நடையுமாக அவன் கிணற்றடிக்குச் சென்று நின்றான். பயத்தினாலும், பதற்றத்தினாலும் வேகமாக அடித்துக்கொள்ளும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு மெல்லக் குனிந்து கிணற்றுக்குள் எட்டிப் பார்த்தான்.

"அப்பாடா! கிணற்றில் எதுவும் மிதக்கவில்லை. நிம்மதியாக மூச்சு வந்தது முத்தழகுக்கு. ஆனாலும் ரயிலேறி ஓடிப் போய்விட வேண்டுமென்ற அவசரமும், பரபரப்பும் மட்டும் தணியவே இல்லை.

"செத்து மிதந்தால்தான் குற்றமா? சுவரிலோ, பாறையிலோ மோதிக் காயம் பட்டால்தான் குற்றமா? திருமணமாகாத பெண்ணைத் தனியாக இருக்கும்போது ஒரு ஆண்பிள்ளை தொட்டுக் கிணற்றில் தள்ளினதே பெருங்குற்றந்தானே? அவள் ஆயிரம் குற்றங்கள் செய்து என்னை ஏளனமாகப் பேசியிருக்கலாம். அவமானப்படுத்தி இருக்கலாம்! ஆனால் அதை யாரும் குற்றமாக ஒப்பமாட்டார்களே! நான் செய்தது தானே குற்றமாகத் தோன்றும்? என்னுடைய அப்பா பெரிய பண்ணையார்! ஊரிலேயே அதிகமாகச் செல்வமுள்ளவர். ஆனாலும் இந்தப் பாழாய்ப் போன கிராமத்தில் பணத்தைவிட நியாயத்துக்குத்தானே அதிக மதிப்பு?"

கைக்கடிகாரத்தைப் பார்த்தான். ரேடியம் டயல் நீல ஒளியை உமிழ்ந்தது. மணி ஐந்து அடித்து ஐந்து நிமிஷம் ஆகியிருந்தது. 'ரயிலுக்கு இன்னும் பத்தே நிமிஷம்தான் இருக்கிறது. புறப்பட்டுவிட வேண்டியதுதான்' என்று கிணற்றடியிலிருந்து திரும்பினவன் தனக்குப் பின்னால் கிணற்று மேட்டில் நின்று கொண்டிருந்த உருவத்தைப் பார்த்தவுடன் பேயறை வாங்கினவன் போல் திகைத்துத் திடுக்கிட்டு நின்றான். அவன் உடம்பு பதறிப் பயந்து நடுங்கியது.

கைகளை இடுப்பில் ஊன்றிய வீறாப்புடன் அன்று மாலை அவன் கிணற்றில் தள்ளுமுன் நின்றாளே; - அதே கம்பீரத் தோற்றத்தில் வீரப்பமல்லுக்காரர் மகள் அங்கு நின்று கொண்டிருந்தாள்.

இப்போது அவளுடைய வலது கையில் பளபளவென்று மின்னும் வெட்டரிவாள் ஒன்றும் இருந்தது. கோபம் உள்ளடங்கிய கள்ளச் சிரிப்பு அவள் முகத்திலும், இதழ்களிலும் தெரிந்தது. வெறியுடன் பழிவாங்க வந்து நிற்பவள்போல் நின்றாள் அவள். வந்து நிற்பது, அவளா அவளுடைய ஆவியா என்றுகூடச் சந்தேகம் ஏற்பட்டது அவனுக்கு.

"பண்ணையார் வீட்டுப் பிள்ளைகளெல்லாம் இவ்வளவு சீக்கிரமாக எழுந்திரிச்சிக் குளிக்க வரலாமா? பன்னிரண்டு நாழிகை வரை தூங்கிட்டுக் கிடக்க வேண்டாமா?"

அவள்தான் குத்தலாகக் கேட்டுக் கொண்டே அவனை நோக்கி நடந்து வந்தாள். விளையாட்டாகச் சுழற்றுவதுபோல் வெட்டரிவாளை வலது கையில் சுழற்றிக் கொண்டே வந்தாள்.

ஒடிந்து விழுகிறாற்போல் சோனிப் பயலாக உடல் வன்மையும், மனத்திடமும் குறைந்து கோழையாய் நிற்கும் தன்னை அவளோடு ஒப்பிட முயன்றான் முத்தழகு. முடியவில்லை. எட்டு வாலிபர்களைச் சிலம்பக் கழியால் அடித்துப் போடுகிற உடல் பலமும் மனப்பலமும் இருக்க முடியும் அவளுக்கு. அவளெங்கே? தான் எங்கே? சூறைக் காற்றில் ஆடுகிற சோளத்தட்டைக் குச்சி மாதிரி அவன் உடம்பு வெடவெடத்தது. தன்னால் கிணற்றில் பிடித்துத் தள்ளப்படும்போது நேற்று அவள் எந்த இடத்தில் நின்று கொண்டிருந்தாளோ, அதே இடத்தில் இன்று தான் நின்று கொண்டிருப்பதை அவன் உணர்ந்தான்.

அவள் தன்னைப் பதிலுக்குப் பதில் கிணற்றில் பிடித்துத் தள்ளிவிட்டால் தனக்கு நீந்தக்கூடத் தெரியாதென்பதை நினைத்துக் கொண்டான். அவள் கையில் இருக்கிற வெட்டரிவாளைக் கண்டு குலைநடுங்கினான் அவன்.

'குதிகால் பிடரியில்பட ஒரே ஓட்டமாக ஓடிவிடலாமா?' என்று தோன்றியது. அப்படி ஓடுவதற்கும் வழி இல்லை. பின்னால் கிணறு; முன்னால் அரிவாளோடு அந்தப் பெண் புலி. நாக் குழறித் தடுமாற்றத்தோடு அவளிடம் பேச ஆரம்பித்தான்.

"நேற்று நான் வேணுமின்னு அப்படிச் செய்யலை. ஏதோ கை தவறி... தெரியாமே... உங்க அப்பா கிட்டச் சொல்லிடாதே... என்னை மன்னிச்சிடு..."

அவன் உளறியதைக் கேட்டு அவள் கலீரென்று சிரித்தாள். "ஏன் இப்படி நடுங்கி உதறுது உங்க உடம்பு? ஏதோ பிசாசைக் கண்ட மாதிரி கண் வெள்ளை விழி தெரியுதே! நீங்க என்னா சொல்லுறீங்க? உங்களை எதுக்கு நான் மன்னிக்கணும்?" என்றாள் பாதாதிகேச பரியந்தம் அவனை உற்றுப் பார்த்துக் கொண்டே.

அவள் வஞ்சகமாக ஒன்றும் தெரியாததுபோல் நடிக்கிறாளோ என்று தோன்றியது அவனுக்கு. சிறிது துணிவை வரவழைத்துக்கொண்டு அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்தான். இப்போதும் அந்த முகத்தில் அலட்சிய பாவமும் சிரிப்பும்தான் தெரிந்தன. வஞ்சகத்தின் சாயல் சிறிதுகூட இருப்பதாகத் தெரியவில்லை. அவன் மறுபடியும் மன்னிப்புக் குழைகிற தொனியில், "நேற்று நீ என்னிடம் அதிகமாக வரப்பு மீறிப் பேசிட்டே; கோபத்திலே என்ன செய்கிறோம்னு தெரியாமே உன்னை நான் கிணற்றிலே பிடிச்சுத் தள்ளிட்டேன்; உனக்கு எங்கேயாவது அடிகிடி பட்டிருக்குமோன்னு இராத்திரி முழுவதும் உறங்கலை நான்..." என்று ஆரம்பித்தான்.

இதைக் கேட்டு அந்தத் தோப்பே அதிரும்படி இரைந்து சிரித்தாள் அவள். ஏதோ மாபெரும் வேடிக்கையைக் கேட்டுவிட்டவள்போல் குலுங்கக் குலுங்கச் சிரித்தாள். அவனுடைய பயந்த முகத்தைப் பார்க்கப் பார்க்க மறுபடியும் சிரிப்புப் பொங்கிக் கொண்டு வந்தது அவளுக்கு.

'அவள் ஏன் இப்படிச் சிரிக்கிறாள்? என்னுடைய மன்னிப்பை ஏற்றுக் கொள்ளாமல் எப்படியும் பழி வாங்கியே தீருவதென்று உறுதி செய்து கொண்டுதான் இப்படிச் சிரிக்கிறாளோ?' என்றெண்ணி அவன் மேலும் நடுங்கினான். கேட்பதற்குப் பயந்து கொண்டே, "நீ ஏன் இப்படிச் சிரிக்கிறாய்?" என்று கேட்டும் வைத்தான்.

"நீங்க என்னை எப்போது கிணற்றில் தள்ளினீங்க? ஏதாவது சொப்பனம் கண்டீர்களா? நான் குளிச்சிட்டுப் போகத்தான் நேற்று இங்கே வந்திருந்தேன். எனக்கு நல்லா நீச்சுத் தெரியும்! கிணற்றங்கரை மேலே இந்தப் பச்சரிசி மாமரத்திலே ஏறி அங்கிருந்து தண்ணிலே குதிச்சு நீந்துவேன். அதுக்காகத்தான் மரத்துமேலே ஏறினேன். குதிக்கறத்துக்கு முன்னாலே ஒண்ணு ரெண்டு மாங்காயை ருசி பார்த்தேன். நீங்க வந்தீங்க. ஏதோ சத்தம் போட்டீங்க. கீழே இறங்கி வந்து நானும் பதிலுக்குச் சத்தம் போட்டேன்! உடனே 'இந்தத் திமிர்ப் பேச்செல்லாம் பேசினால் உன்னைச் சும்மா விடமாட்டேன்' அப்படீன்னீங்க. 'என்ன செய்வீங்களாம்?' என்று பதிலுக்குக் கேட்டேன். 'இதோ என்ன செய்கிறேன் பாரு!' என்று கையை ஓங்கிட்டுத் தொட வந்தீங்க; நீங்க எங்கே தொட்டிடுவீங்களோ என்கிற கூச்சத்திலே நானே தண்ணீரிலே குதிச்சுட்டேன். கிணத்திலே நல்லாத் துளைஞ்சு நீச்சலடிச்சுக் குளிச்சிட்டுக் கரையேறி வந்து பார்த்தேன். உங்களைக் காணலே. இதோ இந்தக் கைக்குட்டையை இங்கே போட்டுட்டுப் போயிட்டீங்க..." அவனிடம் நீட்டினாள்.

அவள் சொன்ன பதிலைக் கேட்டு அவன் மலைத்துப் போய் நின்றான். அவள் கிணற்றில் குதித்த அதிர்ச்சியில் தானே பிடரியைப் பிடித்துத் தள்ளிவிட்டதாகப் பரபரப்படைந்து பதறி ஓடியிருக்க வேண்டுமென்று அப்போதுதான் அவனுக்குத் தோன்றியது. தன்னுடைய வடிகட்டின கோழைத்தனத்தை எண்ணித் தானே வெட்கப்பட்டுக் கொண்டான் முத்தழகு. அவள் கூறியவற்றைக் கேட்டபின் அவனுக்கு அவளிடமிருந்த பயமெல்லாம் போய்விட்டது. முதல் நாள் அவளுடைய வீட்டில் பட்ட சிறு அவமானம் கூட மறந்துவிட்டது.

அவளைக் கிணற்றில் தள்ளிவிட்டோமென்று வீண் பிரமையினால் விடிய விடியத் தான் பட்ட பயத்தையும் ஊரைவிட்டே ஓடிவிடலாமென்று இருளோடு ரயிலுக்குப் புறப்பட்டதையும் சிரித்துக்கொண்டு அவளிடம் சொல்லிவிட்டான் முத்தழகு. எல்லாவற்றையும் கேட்டு விட்டு அவளும் சிரித்தாள். "நீங்க சொல்கிறதைக் கேட்டா என்னைப் புலி, சிங்கம்னு நினைச்சு அரண்ட மாதிரியில்லே தோணுது?"

"சும்மாவா பின்னே? செருப்பைத் தூக்கி எறிஞ்சிட்டு முறைச்சே பாரு - அதிலிருந்து எனக்குப் பயந்தான் உங்கிட்டே."

"வேணும்முன்னா தூக்கி எறிஞ்சேன்? 'வாசல்லே கழட்டிட்டு வாங்க'ன்னு எங்க வீட்டு வளமொறையைச் சொன்னேன். நீங்க கேக்க மாட்டேன்னீங்க. தூக்கி எறிஞ்சேன். வாயைக் கொடுத்தால் நானும் பதிலுக்குப் பதில் பேசிடுவேன். மத்தபடி நான் ஒண்ணும் நீங்க நினைக்கிற மாதிரி முரட்டுப் பொண்ணு இல்லை!" - இதைச் சொல்லும்போது நாணத்தினால் சற்றே முகம் சிவக்கத் தலை குனிந்தாள் வீரப்பமல்லுக்காரர் மகள்.

"முதல்லே அந்த வெட்டரிவாளைக் கீழே போடு. உன்னை அதோட சேர்த்துப் பார்க்கறப்பப் பயமாயிருக்குது. நேற்று இரவு பூராவும் பயந்தது போதும்" என்றான் முத்தழகு.

"இராத்திரி பூரா ஏன் நீங்க பயந்தீங்களாம்?"

"ஏனா? கலியாணமாகாத உன்னை நான் தொட்டுப் பிடித்துக் கிணற்றிலே தள்ளிவிட்டேன்னு நீ உங்கப்பாகிட்டேச் சொல்லிட்டா, அவர் ஊரெல்லாம் திரட்டிக்கிட்டு அரிவாளும், கம்புமா எங்க வீட்டு வாசல்லே வந்து நிக்கப் போகிறாரேன்னுதான்."

"அப்படி நினைச்சுப் பயந்தது நிசந்தானே?"

"நிசந்தான். ஏன் இப்படிக் கேட்கிறே?"

"இல்லே; எங்கப்பா அடிக்கடி சொல்லுவாரு; 'எப்பவும் பெண்ணுங்கிறவள் நெருப்பு மாதிரி. சூடுதான் நெருப்பை நெருங்கவிடாத குணம். பெண்ணுக்கு நிறைன்னு ஒன்று இருக்கு. அந்த நெறை அவளுக்குக் காப்பு. அந்த நிறைதான் ஆம்பளையை அவளிடம் நெருங்கவிடாமக் காக்குது. ஆம்பளை இந்த நிறைக்கு அருகில் வரத்தான் பயப்படுகிறான். ஒரே ஒருத்தன்தான் நிறையை மீறணும். அவன்தான் புருஷன்' - அப்பிடிம்பாரு."

"அப்போ நீ உன்னை நெருப்புன்னு சொல்றே?" என்று சிரித்துக்கொண்டே அருகில் நெருங்கி அவள் தோளைத் தொட்டான் முத்தழகு. அவள் அசையவில்லை.

"நெருப்புச் சுடவில்லையே?"

"உங்களைச் சுடாது."

"ஏனோ?"

அவள் தலைகுனிந்தாள். அவன் முகம் மலர்ந்தது. "நான் வரேன். வேலிக்கு முள் வெட்டிட்டுப் போகணும். அதான்அதிகாலையிலே எழுந்திரிச்சிப் புறப்பட்டேன்.." என்று நகர்ந்தாள் அவள்.

"போயிட்டு வா! இனிமேல் தினம் உங்க வீட்டுப் பக்கம் வட்டி கேட்க வருவேன்..."

"வாருங்க... ஆனால் செருப்புப் பத்திரம்." சிலேடையாகப் பதில் சொன்னாள் அவள்.

இரண்டு பேருடைய சிரிப்பொலி அமர்க்களமாகக் காற்றில் மலர்ந்தது.

'இந்த முரட்டுப் பெண்ணுக்குள் இத்தனை மென்மையான இதயம் இருக்கிறதா?' என்று வியந்து கொண்டே அவள் கொடுத்த கைக்குட்டையைச் சட்டைப் பைக்குள் வைக்கும்போது அவன் மனம் முழுமையாக நிறைந்தது. விரைவில் அந்த நிறைவைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ள விரும்பினான் அவன்.

**(கல்கி, தீபாவளி மலர், 1959)**

## 37. நெருப்புக் கோழி

அப்போதுதான் முதல் முதலாக நான் காட்டிலாகாவில் 'பாரஸ்ட் ரேஞ்சர்' உத்தியோகத்தை அடைந்திருந்தேன். மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்கு நடுவே முன்பின் பழக்கமில்லாத ஏதோ ஒரு மலையாளப் பகுதியில் என்னை ரேஞ்சராக நியமித்திருந்தார்கள். தெரிந்த நண்பர் ஒருவர் நான் நியமனம் பெற்றிருந்த பகுதியிலுள்ள ஓர் ரப்பர் எஸ்டேட் மேஸ்திரிக்கு என்னை அறிமுகப்படுத்திக் கடிதம் கொடுத்திருந்தார். என்னுடைய ரேஞ்சில் போய் வேலையை ஏற்றுக் கொண்டதும் அந்த மேஸ்திரி குஞ்சுப் பணிக்கரிடம் கடிதத்தைக் கொடுத்து என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன். நான் இருந்து கொள்ள ஓர் அறை பார்த்துத் தரும் வேலையை அவனிடம் ஒப்படைத்தேன். இரண்டு மூன்று நாள் கழித்துப் பணிக்கர் எனக்கு 'ரூம்' பார்த்திருந்த வீட்டைக் காண்பிப்பதற்காக என்னை அழைத்துக் கொண்டு போனான்.

மலைச்சரிவிலுள்ள பயங்கரமான தனிமைக்குள் பிடிபட்டுக் கிடப்பது போல் வெறிச்சோடிப் போய்த் தோற்றமளித்தது அந்த வீடு. 'மூலங்கோட்டு மனைப் பட்டாத்திரி நம்பூதிரிகள்' என்று அந்த வீட்டுக்காரரின் பெயரைக் கூறினான் பணிக்கர். அவருக்குத் தொழில் மாந்திரிகமாம்.

வீட்டுக்கூடத்தில் நம்பூதிரி உட்கார்ந்திருந்தார். வைதிகக் கோலத்தில் பரிசுத்தமாக இருந்தார். ஒல்லியான தேகம். நல்ல உயரம். எலுமிச்சம் பழ நிறம். முன் நெற்றியில் உருண்டையாகச் சிறியதாக முடிந்து தொங்கும் முன் குடுமி. நெற்றியில் வரிவரியாகச் சந்தனக் கீற்றுகள். அதன் நடுவே குங்குமப் பொட்டு. அவரைச் சுற்றி ஐந்தாறு தாமிரத் தகடுகள் பெரிது பெரிதாக இறைந்து கிடந்தன. அவற்றில் சக்கரங்களும் எழுத்துக்களும் செதுக்கியிருக்கின்றன. இன்னொரு பக்கம் வெள்ளிப் பூண் பிடித்த பிரம்புகள் இரண்டு கிடந்தன. நானும் குஞ்சுப் பணிக்கரும் உள்ளே நுழைந்தபோதுகூட அவர் ஒரு தாமிரத் தகட்டில் இரும்பு ஆணியால் ஏதோ கிறுக்கிக் கொண்டிருந்தார்.

"தம்பிரான், இவர்தாம் புதிதாக வந்திருக்கிற பாரஸ்ட் ரேஞ்சர். உங்கள் வீட்டு முன் அறையை இவருக்கு வாடகைக்கு விடலாம் அல்லவா?" என்று அறிமுகம் செய்து விட்டுக் காரியத்தைச் சொன்னான் பணிக்கர். நம்பூதிரி எங்களை நிமிர்த்து ஏறிட்டுப் பார்த்தார்.

"வாடகைக்கு விடுவதைப் பற்றி ஆட்சேபம் இல்லை. அறையைத் திறந்து காண்பிக்கிறேன். அவருக்குப் பிடித்தால் இருந்து கொள்ளட்டும்" என்று சொல்லிவிட்டு, உள் பக்கமாகத் திருப்பி, "தினகரீ, அத்த வாயிற்புறத்து அறையின் சாவியை எடுத்துக் கொண்டு வா, அம்மா!" என்று குரல் கொடுத்தார்.

மலையாளத்துப் பெண்மை வனப்பெல்லாம் ஒன்று சேர்ந்து உருவாகி வந்ததுபோல் ஓர் இளம்பெண் சாவிக்கொத்துடனே வந்தாள். "நம்பூதிரியின் பெண்" என்று என் காதருகே மெல்ல சொன்னான் பணிக்கர். ஒரே ஒரு கணந்தான் பரிபூரணமான அந்த அழகைப் பார்க்க முடிந்தது. சாவிக் கொத்தை நம்பூதிரியிடம் கொடுத்துவிட்டு அவள் மறுபடியும் சமையற்கட்டுக்குள் மறைந்துவிட்டாள்.

நம்பூதிரி என்னையும் குஞ்சுப் பணிக்கரையும் அழைத்துக் கொண்டு போய் வாயிற் பக்கத்து அறையைத் திறந்து காட்டினார். ஆள் பழக்கமில்லாத அறை தூசி படிந்து ஒட்டடை மலிந்து சுத்தமின்றி இருந்தது.

"இந்த அறைக்கு இதுதான் ஒரே ஜன்னல்" என்று சொல்லிக் கொண்டே மேற்குப் பக்கமாக இருந்த ஜன்னலின் கதவுகளைத் திறந்துவிட்டார் நம்பூதிரி.

ஜன்னலைத் திறந்ததும் பேய்க் காற்றுப்போல் காற்று உள்ளே வீசியது. திறந்த ஜன்னல் கதவுகளின் வழியே மேகம் மூடிய நீலமலைச் சிகரங்கள் அழகாகத் தெரிந்தன.

"அலமாரியிலிருந்த புத்தகங்களும் சாமான்களும் அப்படியேதான் இருக்கும். நாளைக்கு அறையைச் சுத்தம் செய்து கொடுத்துவிடுகிறேன். மாதம் ஐந்து ரூபாய் வாடகை. உள்ளே விறகு அடுப்பு உபயோகித்துச் சமையல் செய்யக்கூடாது. அவசியமானால் கரியடுப்போ ஸ்டவ்வோ உபயோகித்துக் கொள்ளலாம்" என்று நிபந்தனைகளை அடுக்கினார் நம்பூதிரி.

அவருடைய விருப்பப்படியே இரண்டு மாத வாடகையை முன் பணமாகக் கொடுத்துவிட்டு மறுநாள் காலையில் சாமான்களோடு வந்துவிடுவதாகச் சொல்லிய பின் நானும் பணிக்கரும் விடைபெற்றோம்.

அப்போது இருள் சூழும் நேரம். கருநீலப் பசுமையாய் ஓங்கிக் ககனவெளியோடு உறவு கொண்டாடுவதுபோல் நிமிர்ந்த மேற்கு மலைத் தொடரின் அழகை அனுபவித்துக் கொண்டே பணிக்கரோடு நடந்தேன். இடைவெளியின்றி மிடைந்த பசுமையான மரக்கூட்டம், கலகலக்கும் சிற்றருவிகள், வானத்தினின்று நழுவி நீலச்சல்லாத் துணிகள் போல் மலைச் சிகரங்களில் மேகச்சாரல்கள் இறங்கும் அழகு! கூடு அடையும் பறவைகளின் குரல் பேதங்கள், எங்கோ தொலை தூரத்தில் மிளாமான்களும், யானைகளும் இருப்பதற்கு அடையாளமான ஓசைகள்; அடடா! அந்த மலைச்சிகரங்களில் பல அழகுகள் கொள்ளை கொள்ளையாக மலிந்து காட்சியளித்தன. மலைச் சரிவில் இறங்கித் தென்மேற்குப் பக்கமாகத் தேக்குமரக் கூட்டங்களில் புகுந்து சிறிது தொலைவு நடந்தால் பாரஸ்ட் ரேஞ்சு ஆபீஸ்; அதாவது என் அலுவலகம்.

"ஸார், உங்கள் ஆபீஸ் இருக்கிற இடம் அவ்வளவாகப் பாதுகாப்பு உள்ளதல்ல. இருட்டு முன்பு வீடு திரும்பிவிடுவதென்று வழக்கப்படுத்திக் கொள்ளுங்கள்" என்று நடந்து கொண்டே என்னை எச்சரித்தான் பணிக்கர்.

"அது சரி, பணிக்கர், இந்த நம்பூதிரி என்ன பேயா, பிசாசா? நாலு பேர் குடியிருக்கிற இடத்தை விட்டு எதற்கு இப்படி எட்டாத இடத்தில் வீடு கட்டிக்

கொண்டு இருக்கிறார்? பெண்டு பிள்ளைகளோடு வசிக்கிறவருக்கு இது என்ன சௌகரியமோ?" என்று பணிக்கரைக் கேட்டேன்.

"பெண்டுகளாவது, பிள்ளைகளாவது! அவர் ஒண்டிக்கட்டைதான். அந்தப் பெண் தினகரி இருக்கிறாள்; தாயில்லாப் பெண். நம்பூதிரி இளம் வயசிலேயே மனைவியை இழந்தவர். தினகரியின் புருஷன் எங்கேயோ வடக்கே மிலிடரியில் இருக்கிறானாம். நம்பூதிரிக்குச் சொந்த ஊர் குட்ட நாட்டுப் பக்கம். நாலைந்து வருஷங்களுக்கு முன் அவராக இங்கு வந்து வீடு கட்டிக் கொண்டு குடியேறியிருக்கிறார்" என்று அவன் சொன்னான்.

மறுநாள் காலையில் நான் நம்பூதிரி வீட்டு அறையில் குடியேறிவிட்டேன். நம்பூதிரி என்னோடு அளவாகப் பேசினார். நன்றாகப் பேசினார். தம் குடும்பத்தில் ஒருவன்போல் கருதி ஒட்டுறவு காட்டினார். நான் அவரிடம் மலையாளம் படிக்க ஆரம்பித்தேன். புதிய மொழியான மலையாளத்தை உச்சரிக்கத் தெரியாமல் அவருக்கு முன் நான் திணறுவதைச் சமையலறைத் தட்டி மறைவிலிருந்து கருவிழிகளின் வெண்பரப்பு அகல ஒரு நிலவு முகம் எட்டிப் பார்த்துச் சிரிக்கும். கபடமில்லாத சிரிப்பு அது. "தினகரி, இவர் உனக்குத் தமையன் மாதிரி, அம்மா" என்று நம்பூதிரி ஒருநாள் தம் பெண்ணிடம் என்னை வைத்துக் கொண்டு கூறியபோது எனக்குப் புனிதமானதொரு சிலிர்ப்பு உண்டாயிற்று. கந்தர்வ உலகத்துச் சிற்பி ஒருவனின் தனிக் கவனத்தில் உருவாகி வந்த தந்தச் சிலை போல் விளங்கும் தினகரிக்குத் தமையன் என்று ஒருவர் சொல்லிக் கேட்பதே இன்பமல்லவா?

'அண்ணன் அண்ணன்' என்று என்னிடம் தனி ஒட்டுதலோடு பழகினாள் நம்பூதிரியின் பெண் தினகரி. மிகச் சில நாட்களிலேயே அந்தக் குடும்பத்தில் ஒருவனைப்போல் நான் நெருக்கம் பெற்றுவிட்டேன்.

தலை நிறைய பூச்சூடிக் கொண்டு நெற்றி நிறைந்த திலகத்தோடும் இதழ் நிறைந்த சிரிப்போடும் அவள் எதிரே வந்துவிட்டால் வேறு வேலையே ஓடாது எனக்கு. நம்பூதிரியிடம் படித்தேன் என்று பேரே ஒழிய, அந்தப் பெண் தினகரியிடம் வேடிக்கையாகவும் பொழுதுபோக்காகவும் பேசியே முக்கால்வாசி மலையாளம் தெரிந்து கொண்டேன். "அண்ணன் இந்தக் கடிதத்தைப் படித்துச் சொல்ல வேண்டும்" என்று விகல்பமில்லாமல், கணவனிடமிருந்து வந்திருக்கும் தபாலைக் கொண்டு வந்து நீட்டுவாள். அவள் கணவன் கிருஷ்ணன் நம்பூதிரி எப்போதாவது இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒருமுறை அவளுக்குக் கடிதம் போடுவான். புனாவுக்கு அருகிலுள்ள கிரக்கியில் மிலிட்டரி முகாமில் இருக்கிறானாம் அவன். அவன் எழுதுகிற கடிதங்கள் பெரும்பாலும் ஆங்கிலத்தில் இருக்கும். மனைவிக்கு மலையாளத்தைத் தவிர வேறு எந்த மொழியும் படிக்கத் தெரியாதென்று அறிந்து கொண்டே ஆங்கிலத்தில் அவளுக்குக் கடிதம் எழுதும் அவன்மேல் எனக்குக் கோபம் உண்டாகும். நம்பூதிரிக்கும் ஆங்கிலம் தெரியுமாதலால் வழக்கமாக அவர்தாம் படித்து மலையாளத்தில் அதன் சுருக்கத்தை மகளுக்குச் சொல்வாராம். அவர் தொழில் சம்பந்தமாக வெளியூர்களுக்குப்

போகும்போது என்னிடம் கொண்டு வந்து கொடுத்துப் படிக்கச் சொல்லுவாள் தினகரி.

கணவனுடைய கடிதத்தைப் படித்துச் சொல்லும்போது அவள் முகத்தைப் பார்க்க வேண்டுமே! அப்போது அந்த முகத்தில் நாணத்தின் அழகும் நளினமும் கொஞ்சும், புதுமணப் பெண்ணின் பொலிவு தோன்றும். அவளுடைய கணவனின் கடிதத்தைப் படித்துச் சொல்லும்போது இதயமில்லாத அந்த முரட்டு மிலிடெரிக்காரன் மேல் எனக்குக் கோபம் கோபமாக வரும். காரணம்? வழக்கமாக ஒரே விதமான பல்லவியை மாற்றி மாற்றி எழுதியிருப்பான். நாலைந்து ஆண்டுகளாக மனைவியைப் பிரிந்து இருப்பவனின் ஏக்கமோ அன்போ அந்தக் கடிதங்களின் வாக்கியங்களில் பெருக்கெடுத்து ஓடாது.

"தினகரிக்குக் கிருஷ்ணன் எழுதிக் கொண்டது. நீயும் அப்பாவும் நலமென்று நினைக்கிறேன். எனக்கு லீவு கிடைப்பது அருமையாக இருக்கிறது. கல்யாணமான புதிதில் உன்னைப் பிரிந்து வந்தவன் இத்தனை வருடங்களாக ஒரு தடவைகூட வந்து பார்க்க முடியாமல் போயிற்று. நினைத்தால் எனக்கே வருத்தமாகத்தான் இருக்கிறது. கவலைப்படாதே. விரைவில் லீவு கிடைக்கும், வருகிறேன்!" வழக்கமாக நான் படித்துச் சொல்லிய இரண்டு மூன்று கடிதங்களில் இதே விஷயத்தைத்தான் எழுதியிருந்தான்.

கல்யாணமாகும்போது தினகரிக்குப் பத்து வயசாம். பேதமை கலையாத இளமையிலேயே நம்பூதிரி குட்ட நாட்டில் தம் சொந்த ஊரியிலேயே அந்தக் கல்யாணத்தை நடத்தினாராம். கல்யாணம் முடிந்த மூன்றாம் மாதம் வடக்கே போன அவள் கணவன் இன்றுவரை ஒருமுறைகூட வந்து செல்வதற்கு லீவு கிடைக்கவில்லையாம். பின்பு, சில மாதங்கள் கழித்துத்தான் நம்பூதிரி சொந்த ஊரை விட்டு இந்த மலைப் பகுதிக்கு வந்து வீடு கட்டிக் கொண்டு குடியேறினாராம்.

தினகரி பேதை. சூதுவாதில்லாதவள். மண்ணுலகத்துச் சிறுமைகள் என்னும் வெப்பக் காற்றுப் படாத பனிமலராய் மலைகளின் சூழலில் தனிமையில் வளர்ந்தவள் அவள். நினைவு மலராத பருவத்தில் பார்த்திருந்த கணவனிடமிருந்து கடிதம் வருகிறது என்பதே போதும். அவன் குரலையே காதில் கேட்பதுபோல் அவனது ஒவ்வொரு கடிதத்தையும் ஆர்வத்தோடு வரவேற்க அவளால் முடியும். ஒரே மாதிரி எழுதிய ஒவ்வொரு கடிதத்தையும் படிக்கச் சொல்லிக் கேட்கும்போது புதிது புதிதாக நாணமும் நளினமும் கொள்ளத் தெரியும் அவளுக்கு.

இரண்டு மூன்று நாட்களாக மலைப்பகுதியில் நல்ல மழை. நான் வீட்டை விட்டு வெளியேறவே இல்லை. "மழைக்காலம் முடிகிறவரை அண்ணன் வெளியே சாப்பாடு வைத்துக் கொள்ளக்கூடாது. இங்கேதான் சாப்பாடு" என்று தினகரி உத்தரவு போட்டுவிட்டாள். நம்பூதிரிகள் ஊரில் இல்லை. சாப்பாட்டை முடித்துக் கொண்டு அறைக்குள் வந்து உட்கார்ந்தவன் பொழுது போகாமல் அலமாரியிலிருந்து ஒரு தடிமனான புத்தகத்தை உருவினேன். தூசி படிந்து போயிருந்த அந்த மலையாளப்

புத்தகத்தின் நடுவிலிருந்து ஒரு கற்றைப் பழைய கடிதங்கள் விழுந்தன. ஏதோ ஓர் ஆவல். அந்தக் கடிதங்களைப் பிரித்துப் பார்க்க வேண்டுமென்று தூண்டியது. புத்தகத்தை வைத்துவிட்டு அந்தக் கடிதங்களை ஒவ்வொன்றாக எடுத்துப் பிரித்துப் பார்த்தேன். எல்லாம் தினகரிக்கு அவள் கணவனிடமிருந்து வந்திருந்த பழைய கடிதங்கள். யாவும் புனாவிலிருந்து எழுதப்பட்டிருந்தன. 'லீவு கிடைக்கவில்லை, கிடைத்ததும் வர முயலுகிறேன்' என்பதுதான் அவற்றின் சுருக்கம்.

தற்செயலாகப் பார்த்துக்கொண்டே வந்தவன். அந்தக் கடிதங்களுக்கும் அவை வந்திருந்த உறைகளுக்கும் முரண்பாடு இருப்பதைக் கண்டு திகைத்தேன். எல்லா கடிதத் தாள்களின் தலைப்பிலும், 'கிருஷ்ணன் நம்பூதிரி - மிலிடரி குவாட்டர்ஸ் - ரேஞ்சு ஹில்ஸ்-கிரிக்கி-புனா' என்ற விலாசம் இருந்தது. ஆனால் கடிதங்கள் வந்த உறைகளின் தபால் முத்திரையில் வெவ்வேறு ஊர்களில் போஸ்ட் செய்ததற்கு அடையாளமான ஊர்ப் பெயர்கள் காணப்பட்டன. ஓர் உறையில் பாலக்காட்டு முத்திரை, இன்னொன்றில் கோட்டயம், மற்றொன்றில் ஆலப்புழை என்று மலையாளத்துப் பக்கத்தைச் சேர்ந்த ஊர்களாகவே தபால் முத்திரைகள் விழுந்திருந்தன. வேறு கடிதங்கள் வந்த உறைகளில் இந்தக் கடிதங்களைத் தவறி வைத்திருப்பார்களோ என்று சந்தேகம் ஏற்பட்டது. என் சந்தேகம் தீர்வதற்கு நான் ஒரு வழி செய்தேன்.

தினகரியிடம் போய் சமீபத்தில் அவள் கணவனிடமிருந்து அவளுக்கு வந்த கடிதங்களைக் கேட்டேன்.

"அண்ணனுக்கு அந்தக் கடிதங்கள் எதற்கோ?" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள் அவள்.

"கொடுத்தால் எதற்கென்று அப்புறம் சொல்கிறேன்" என்றேன். மறுபேச்சுப் பேசாமல் எடுத்துக் கொண்டு வந்து கொடுத்துவிட்டாள். அவள் கொடுத்த கடிதங்களை என் அறைக்குக் கொண்டு போய் உறைகளையும் உள்ளே எழுதியிருந்த விலாசங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தேன். அந்த உறைகளிலும் அதேமாதிரி முரண்பாடு இருந்தது. 'புனாவில் எழுதிய கடிதத்தைத் திருவனந்தபுரத்திலிருந்தும், நீலாம்பூரிலிருந்தும் எப்படித் தபாலில் போட முடியும்?' என்று எண்ணித் திகைத்தேன்.

தினகரியின் கணவன் புனாவில் மிலிடரியில் வேலை பார்ப்பதாக ஏமாற்றிக் கொண்டு மலையாளப் பிரதேசத்திலேயே ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருக்கிறானோ என்றும் ஐயுற்றேன். 'அடடா! தினகரிதான் பேதைப் பெண்; ஏமாந்திருக்கிறாள். நம்பூதிரி கூடவா இதைத் தெரிந்து கொள்ளாமல் மாப்பிள்ளை புனாவில் மிலிடரியில் இருப்பதாக நம்பிக் கொண்டிருக்க வேண்டும்? கோட்டயத்திலும், ஆலப்புழையிலும் இருந்து கொண்டு இத்தனை ஆண்டுகளாகத் தினகரியைச் சந்திக்க வராததை நினைத்தால், அந்தப் பயல் வேறு எவளையாவது மணந்து கொண்டு விட்டானோ?' என்றுகூடச் சந்தேகம் ஏற்பட்டது எனக்கு. 'இதில் ஏதோ சூது இருக்கிறது. அதைக் கண்டுபிடித்து நம்பூதிரியும், தினகரியும் ஏமாந்துவிடாமல் காப்பாற்ற வேண்டும்' என்று முடிவு செய்து கொண்டேன். 'புனாவில் தினகரியின் கணவன் இல்லையானால்

இங்கிருந்து அவள் அவனுக்கு எழுதும் பதில் கடிதங்கள் எப்படிப் போய்ச் சேரமுடியும்?' என்று மறுபடியும் வேறொரு சந்தேகம் ஏற்பட்டது.

"தினகரி! நீ உன் கணவருக்குப் பதில் கடிதங்கள் எழுதுவதுண்டோ?" என்று அவளிடம் போய்க் கேட்டேன்;

"ஓ! நான் மலையாளத்தில் கடிதம் மட்டும் எழுதிக் கொடுப்பேன். அப்பா அதை வாங்கிக் கொண்டு போய்க் கவரில் புனா விலாசம் ஆங்கிலத்தில் எழுதி அனுப்பிவிடுவார்" என்ற அவள் உற்சாகமாகப் பதில் சொன்னாள். என் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள நான் ஒரு தந்திரம் செய்தேன். அப்போது கிறிஸ்துமஸ் சமயம். உறையின் மறுபுறம் என் ஆபீஸ் முகவரியைத் தெளிவாக எழுதித் தினகரியின் கணவன் பெயருக்குக் கிறிஸ்துமஸ் வாழ்த்துக் கடிதம் ஒன்றை புனா விலாசத்துக்கு அனுப்பினேன்.

நான் அனுப்பிய எட்டாவது நாள், 'விலாசதார் இல்லை' என்று சிவப்பு மையால் அடித்து எழுதப்பட்டு எனக்கே திரும்ப வந்துவிட்டது கிறிஸ்துமஸ் வாழ்த்து. ஆனால், அதைவிடப் பெரிய ஆச்சரியம் என்னவென்றால், அன்றைக்கு அதே தபால்காரன் தினகரிக்குப் புனாவிலிருந்து அவள் கணவன் எழுதிய வேறொரு கடிதத்தையும் கொண்டுவந்து கொடுத்துவிட்டுப் போயிருந்தான். அதை நான்தான் தினகரிக்குப் படித்துச் சொன்னேன்.

"லீவு கிடைக்கவில்லை. முடிந்தால் ஓணம் பண்டிகைக்கு வந்துவிடுகிறேன். கவலைப்பட வேண்டம்" என்று வழக்கம் போல் எழுதியிருந்தான். அந்தக் கடிதத்திலும் தலைப்பில் புனா முகவரி இருந்தது. உறையின் மேல் 'கோட்டயம்' தபாலாபீஸ் முத்திரை விழுந்திருந்தது. என் சந்தேகம் மேலும் உறுதிப்பட்டது.

அன்றைக்குப் பகலில் நம்பூதிரி ஊரிலிருந்து வந்துவிட்டார். நேரம் வாய்க்கும்போது என் சந்தேகத்தை அவரிடம் கூறி எச்சரிக்க வேண்டுமென்று எண்ணினேன். புனாவில் அவள் கணவன் இல்லையானால் தினகரி அவனுக்கு எழுதும் கடிதங்கள் மட்டும் திரும்பி வராமல் எப்படிக் கிடைத்துக் கொண்டிருக்க முடியும்? என்ற கேள்விக்கு மட்டும் தெளிவான விடை கிடைக்காமல் குழப்பம் ஏற்பட்டது எனக்கு.

அன்றைக்கு வந்திருந்த கணவனின் கடிதத்துக்குப் பதில் எழுதிப் போஸ்ட் செய்யுமாறு தினகரி தந்தையிடம் கொடுத்தாள். அப்போது நானும் அருகில் இருந்தேன்.

"ஐயா! மாப்பிள்ளையின் முகவரியை எழுதிக் கடிதத்தை என்னிடம் கொடுங்கள். நான் தபாலாபீஸ் பக்கந்தான் போகிறேன். நானே போட்டு விடுகிறேன். உங்களுக்குச் சிரமம் வேண்டாம்" என்று நம்பூதிரியிடம் போய் வலுவில் கேட்டேன். என்னை ஒரு மாதிரி கடுமையாக நிமிர்ந்து பார்த்தார் நம்பூதிரி. அதற்குமுன் அவர் அவ்வளவு கடுமையாகப் பார்த்து நான் கண்டதே இல்லை. எனக்கு ஏன் கேட்டோம் என்றாகிவிட்டது.

"அவசியமில்லை! நீங்கள் போகலாம். எனக்குப் போஸ்ட் செய்யத் தெரியும்" என்று வெடுக்கென மறுமொழி கூறிவிட்டார் அவர். நான் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு திரும்பினேன். என் மனத்தில் மேலும் மேலும் சந்தேகங்கள் குழம்பின.

சிறிதுநேரத்தில் நம்பூதிரி தபாலாபீசுக்குப் புறப்பட்டுப் போவதை என் அறை வாசலிலிருந்தே பார்த்தேன். தினகரி வந்தாள். "அப்பா ஏதோ முன்கோபத்தில் வெடுக்கென்று சொல்லிவிட்டார். அதை மனத்தில் வைத்துக் கொள்ளாதீர்கள்" என்று மன்னிப்புக் கேட்பதுபோல் சொன்னாள். அப்போது அவள் முகத்தைப் பார்த்தேன். 'பேதையே! இப்படி ஒன்றும் தெரியாத பெண்ணாக எத்தனை நாள் இருக்கப் போகிறாய்' என்று நினைத்துக் கொண்டேன். கூந்தல் நிறைய மல்லிகைப் பூவும், நெற்றி நிறையத் திலகமுமாய்ச் சிரித்துக் கொண்டு நின்றாள் தினகரி.

"கொஞ்சம் இரு, தினகரி. இதோ வந்துவிடுகிறேன்" என்று அவளிடம் சொல்லிவிட்டு நம்பூதிரியைப் பின்பற்றிப் போஸ்ட்டாபீசுக்குச் சென்றேன். தினகரியின் கடிதத்தை எந்த முகவரி எழுதி அவள் கணவனுக்குப் போஸ்ட் செய்கிறார் என்பதைப் பார்த்துவிடத் துடித்தது என் உள்ளம். போஸ்ட்டாபீசுக்குப் போகிற வழியில் தேக்கங்கன்றுகளின் புதருக்கருகில் ஏதோ வெள்ளையாகத் தெரிந்தது. சந்தேகத்தோடு அருகில் சென்று குனிந்து கையில் எடுத்தேன். உறையோடு அப்படியே இரண்டாகக் கிழிக்கப்பட்ட கடிதம் அது. மேலே தினகரியின் கணவனுடைய முகவரி ஆங்கிலத்தில் நம்பூதிரியின் கையெழுத்தால் தெளிவாக எழுதப்பட்டுக் கிழிந்திருந்தது.

என் கைகள் நடுங்கின. மனம் கொதித்தது. உள்ளே இரு துண்டாகக் கிழிந்திருந்த கடிதத்தை மெல்ல எடுத்துத் தினகரி என்ன எழுதியிருக்கிறாள் என்று ஒன்று சேர்த்துப் படிக்க முயன்றேன். அது தன் கணவனுக்கு அனுப்புவதற்காகத் தினகரி அன்று எழுதித் தந்தையிடம் தபாலில் சேர்க்கச் சொல்லிக் கொடுத்த கடிதந்தான். அவள் மலையாளத்தில் எழுதியிருந்ததை நான் புரிந்து கொண்ட வகையில் கீழே கண்டவாறு தமிழாக்கித் தருகிறேன்.

"அடியாள் தினகரி தங்கள் பாதாரவிந்தங்களுக்குக் கோடானுகோடி வணக்கங்கள். உங்கள் கடிதம் கிடைத்தது. அப்பா, நான் எல்லோரும் சௌக்கியம். இப்போது நம் வீட்டு முன் அறைக்கு ஒரு பாரஸ்ட் ரேஞ்சர் குடி வந்திருக்கிறார். மிகவும் நல்ல மனிதர். நான் அந்த அண்ணனிடம் உங்களைப் பற்றி நிறையச் சொல்லியிருக்கிறேன். உங்கள் கடிதங்களைக்கூட அப்பா ஊரில் இல்லாதபோது அண்ணன்தான் எனக்குப் படித்துச் சொல்லுகிறார். நீங்கள் எப்போது இங்கு வரப்போகிறீர்கள்? அண்ணனுக்கு உங்களைப் பார்க்க வேண்டுமென்று நிரம்ப ஆசை. 'உன் கணவர் ஒரே மாதிரி கடிதமாக உப்புச் சப்பில்லாமல் எழுதுகிறாரே! மனைவிக்குக் கணவன் எழுதுகிற கடிதத்தில் அன்பைக் கொட்டிக் கொட்டி எழுத வேண்டாமா?' என்று அண்ணன் உங்கள் கடிதத்தைப் படித்துச் சொல்லும்போது என்னைக் கேலி செய்கிறார். எனக்கு வெட்கமாக இருக்கிறது. அண்ணன் சொல்லுகிற மாதிரி இனிமேல் நீங்கள் எனக்கு அன்பைக்

கொட்டி எழுதாவிட்டால் அந்தக் கடிதத்தை நான் உங்களுக்கே திருப்பி அனுப்பிவிட வேண்டியதுதான்.

"இங்கே மழை விடாமல் பெய்கிறது. நம் வீட்டு முல்லைக்கொடி நன்றாகப் பூக்கிறது. அவ்வளவு பூவையும் நான் ஒருத்தியே வைத்துக் கொள்கிறேன். அப்பாவிடம் சொல்லி எஸ்டேட் தோட்டத்திலிருந்து குண்டுமல்லிகைச் செடியும் ரோஜாப் பதியனும் கொண்டுவர இன்று ஏற்பாடு செய்திருக்கிறேன். நம் வீட்டுத் தோட்டத்தில் வைக்க வேண்டும். நீங்கள் சீக்கிரம் இங்கு வர வேண்டும். இந்த வருட ஓணம் பண்டிகையையாவது நீங்கள் வீட்டில் கொண்டாட வேண்டுமென்பது அடியாளின் ஆசை.

இப்படிக்கு
உங்கள் பிரியமுள்ள தினகரி"

இந்தக் கடிதத்தைப் படித்தவுடன் என் உள்ளம் உருகியது. தான் எழுதுகிற கடிதங்கள் கணவனுக்கு அனுப்பப்படாமலே கிழிக்கப்படுகின்றன என்பதை அறிந்தால் அந்தப் பேதைப் பெண்ணின் மனம் என்ன பாடுபடும்! வேதனை மிக்க மனத்தோடு அந்தக் கிழிந்த கடிதத்தை அப்படியே சட்டைப் பையில் வைத்துக் கொண்டு வீடு திரும்பினேன்.

'தினகரி எழுதும் கடிதங்களை அவள் தந்தை போஸ்ட் செய்யாமலே கிழித்தெறிந்து விடுகிறார். அதேபோல் தினகரிக்கு வரும் கடிதங்களையும் எழுதுகிறவன், அவள் கணவன் அல்லன். நம்பூதிரியே எழுதிப் போஸ்ட் செய்கிறார்' என்று தெளிவாகத் தெரிந்தது எனக்கு. அவர் அடிக்கடி மாந்திரிகத் தொழிலுக்காகக் கோட்டயத்துக்கும், திருவனந்தபுரம் முதலிய பிற ஊர்களுக்கும் போக நேரும்போது அங்கிருந்தே கடிதங்களைப் போஸ்ட் செய்ய வசதி இருந்தது. தினகரிக்கு வந்த கடிதங்களையும், அவள் எழுதிய கடிதத்தின் உறையில் நம்பூதிரி எழுதிய விலாசத்தையும் ஒப்பிட்டு நோக்கியபோது கையெழுத்துக்களின் ஒற்றுமையை என்னால் அநுமானம் செய்து உணர முடிந்தது. தம்முடைய மலையாளக் கையெழுத்தைத் தினகரி அடையாளம் கண்டுகொள்வாளென்று எண்ணியே அவள் கணவன், எழுதுவதாகத் தாமே எழுதி அனுப்பும் கடிதங்களை எல்லாம் நம்பூதிரி ஆங்கிலத்தில் எழுதுவதாகத் தோன்றியது எனக்கு.

'பெற்ற தந்தையே இப்படி மகளை ஏமாற்றிக் கெடுதல் செய்ய முடியுமா?' என்று எண்ணியபோது என் மனம் அதை நம்புவதற்கே தயங்கியது; பயந்தது. நம்பூதிரி வந்ததும் அவரைப் பார்த்துக் கேட்க வேண்டுமென்று துடித்தேன்.

"உடம்புக்கென்ன? சோர்ந்து போய் உட்கார்ந்திருக்கிறீர்களே!" என்றாள் தினகரி.

"ஒன்றுமில்லை தினகரி. தலையை இலேசாக வலிக்கிற மாதிரி இருக்கிறது. அப்பா போஸ்டாபீசிலிருந்து திரும்பி வந்ததும் நான் அவரைப் பார்க்க வேண்டும்."

"போஸ்டாபீஸிலிருந்து திரும்பி வரும்போது அப்பாவை எஸ்டேட் தோட்டத்துக்குப் போய்க் குண்டுமல்லிகைச் செடியும் ரோஜாப் பதியனும்

எடுத்துக்கொண்டு வரச்சொல்லியிருக்கிறேன். நம் வீட்டுத் தோட்டத்தில் வைக்க வேண்டும்.'' இதைச் சொல்லும்போது தினகரி சிறு குழந்தை போல் கைகொட்டிச் சிரித்து ஆர்வத்தோடு சொன்னாள்.

''குண்டு மல்லிகையும் ரோஜாவும் எதற்கு தினகரி?''

''பூவுக்கு. பூ என்றால் எனக்குக் கொள்ளை ஆசை. அவ்வளவு பூவையும் நானே வைத்துக்கொள்ளுவேன்'' என்றாள் தினகரி. இதைக் கூறும்போதுதான் அந்த முகத்தில் எத்தனை மலர்ச்சி!

இருட்டுவதற்குச் சிறிது நேரத்துக்கு முன் குண்டு மல்லிகைச் செடியும் ரோஜாப் பதியனும் எடுத்துக் கொண்டு நம்பூதிரி வந்தார். தினகரி அவற்றை வாங்கிக் கொண்டு நடுவதற்காகத் தோட்டத்திற்குப் போய்விட்டாள்.

''உங்களிடம் ஒரு விஷயம் தனியாகக் கேட்க வேண்டும். இப்படிக் கொஞ்சம் வருகிறீர்களா?'' என்று நம்பூதிரியை என் அறைக்குள் அழைத்தேன். நம்பூதிரி வந்தார்; உட்காரச் சொன்னேன். உட்கார்ந்தார். அறைக் கதவைச் சாத்தி உட்புறமாகத் தாழிட்டேன். கிழிந்த கடிதத்தை எடுத்துக்காட்டி, ''இதற்கு என்ன அர்த்தம்?'' என்று கேட்டேன். அவர் முகம் பயந்து வெளிறியது. என்னைப் பார்க்க வெட்கப்படுவது போல் தலையைக் குனிந்து கொண்டு கீழே பார்த்தார்.

''உங்கள் குடும்ப விஷயத்தில் தலையிட்டுப் பேசுவதற்காக என்னை மன்னிக்க வேண்டும். தினகரியின் கணவன் பூனாவில் மிலிடரியில் இல்லை என்பதையும், அங்கிருந்து அவன் தினகரிக்கு எழுதுவதாக நீங்கள் ஆங்கிலத்தில் எழுதிக் கோட்டயத்திலும் நீலாம்பூரிலும் கடிதங்களைப் போஸ்ட் செய்கிறீர்கள் என்பதையும் நான் தெரிந்துகொண்டேன. எதற்காக இப்படியெல்லாம் செய்து உங்களையும் உங்கள் பெண்ணையும் ஏமாற்றிக் கொள்கிறீர்கள்?'' என்று ஜன்னல் பக்கம் முகத்தை திருப்பிக் கொண்டு அவர் காதில் படும்படி கேட்டேன். எனக்கு அப்போது அவர் முகத்தைப் பார்ததுக் கொண்டு பேசப் பிடிக்கவில்லை.

அவர் மறுமொழி கூறவில்லை. மெல்ல விசும்பிக் கொண்டே அழும் ஒலி என் செவிகளில் விழுந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். நம்பூதிரி அழுது கொண்டிருந்தார். பச்சைக் குழந்தைபோல விக்கலும் விசும்பலுமாகக் குலுங்கக் குலுங்க அழுது கொண்டிருந்தார். நான் திகைத்துப் போய் நின்றேன். நம்பூதிரி அழுது கொண்டே எழுந்திருந்து அந்த அறையில் இருந்த அலமாரியிலுள்ள பழைய புத்தகங்களைக் கலைத்து மேலும் கீழுமாக எதையோ தேடினார். சிறிது நேரத்தில் அழுக்குப் படிந்த பழைய கவர் ஒன்று அவர் கையில் கிடைத்தது. அதைப் பிரித்து என்னிடம் நீட்டினார். அதை என்னிடம் கொடுக்கும்போது அவருடைய கைவிரல்கள் நடுங்கின. அழுகை அதிகமாகியது. வாங்கிப் படித்தேன். நாலைந்து ஆண்டுகளுக்கு முன் மிலிடரியிலிருந்து அனுப்பப்பட்ட கடிதம் அது.

''நாகபுரிக்கு விமானப் பயிற்சிக்காக அனுப்பப்பட்ட உங்கள் கணவர் விமானத்திலிருந்து விபத்துக் காரணமாக கீழே விழுந்து இறந்து போனார்.''

என்ற தினகரியின் பெயருக்கு மிலிடரியிலிருந்து வந்திருந்தது அந்தச் செய்தி. அதைப் படித்து முடித்ததும் எனக்குத் தலையில் இடி விழுந்தாற் போலிருந்தது.

நம்பூதிரி அதே அலமாரியில் இருந்த ஒரு பழைய தோல் பெட்டியைத் திறந்தார். தூசி படிந்து பாச்சை அரித்துப் பழுப்பேறியிருந்த மிலிடரி உடைகளின் 'ஸெட்' ஒன்றைத் தூக்கி என் முன் எறிந்தார். இறந்து போனவர்களின் உடையை உரியவர்களுக்கு அவ்வாறு அனுப்பி வைப்பது மிலிடரி வழக்கம்.

நம்பூதிரிகளின் கண்களிலிருந்து மாலை மாலையாகக் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. அவருடைய அழுகை நிற்கவில்லை. அருகில் வந்து என் கைகளைப் பிடித்துக் கொண்டு கெஞ்சும் குரலில் கூறலானார் : "ஐயா, என் பெண் பேதை; கசப்புத் தெரியாமல் வளர்ந்தவள், தாயில்லாப் பெண், இன்றுவரை அந்த முகத்தில் வாட்டம் தெரியவிடாமல் வளர்த்துவிட்டேன். பூவும் திலகமுமாகச் சிரித்துக்கொண்டு திரியும் வானம்பாடியாக இருக்கிறாள். இந்த உண்மையை மறைப்பதற்குத்தான் நாலைந்து வருடங்களுக்கு முன் சொந்த ஊரைவிட்டு மனிதப் பழக்கம் அதிகமில்லாத இந்த மலைக்காட்டில் வீடு கட்டிக் கொண்டு குடியேறினேன். என்ன என்னவோ பொய்க் கடிதங்களை எழுதியும் ஏமாற்றியும் இந்த விநாடிவரை அந்தக் கசப்பான உண்மை அவளுக்குத் தெரியவிடாமல காப்பாற்றிவிட்டேன். இன்று உங்களால் அது தெரிந்துவிடும்போல் இருக்கிறது. தயவுசெய்து அவளிடம் உண்மையைச் சொல்லிவிடாதீர்கள். உங்களைக் காலில் விழுந்து கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். எனக்கு ஒரே பெண். அவளுக்கு விதவைக் கோலம் பூட்டிப் பார்க்க வேண்டாம். அவள் நித்திய கல்யாணியாய் உதட்டில் சிரிப்பும் நெற்றியில் திலகமும் தலையில் பூவுமாக என்முன் தெரிந்து கொண்டே இருக்க வேண்டும். நான் உயிர் வாழ்வதன் ஒரே லட்சியம் அதுதான்" என்று சோகம் கனிந்த குரலில் கதறி, பராசக்தி ஆணையாக அந்தச் செய்தியை தினகரியிடம் கூறுவதில்லை என்று என்னிடம் சத்தியமும் செய்து வாங்கிக் கொண்டார்.

அப்போது அறை வாசலில் காலடியோசை கேட்டது. "தினகரி தோட்டத்திலிருந்து வந்துவிட்டாள். நான் போகிறேன்" என்று கண்களைத் துடைத்துக் கொண்டு அறைக் கதவைத் திறந்து வெளியேறினார் அவர்.

"அப்பா, ரோஜாப் பதியனும் மல்லிகைச் செடியும் ஊன்றித் தண்ணீர் ஊற்றியாயிற்று. ஓணம் பண்டிகைக்குள் அரும்பு கட்டிப் பூத்துவிடும். ஓணத்துக்கு 'அவர்' வரும்போது என் தலைக்கு ரோஜா வைத்துக் கொள்ளலாம்" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறிக் கொண்டே தோட்டத்திலிருந்து ஓடி வந்தாள் தினகரி.

"ஆமாம், பெண்ணே! ஓணத்தின்போது நிச்சயமாக உன் கணவன் புனாவிலிருந்து வந்துவிடுவான். நான் நாளைக்கு இன்னொரு கடிதமும் அவனுக்கு வற்புறுத்தி எழுதுகிறேன். மிலிடரியில் லீவு கிடைப்பது அருமை" என்று அறை வாசலில் உற்சாகமாக அவர் தினகரியிடம் கூறிக் கொண்டிருந்த பொய் அறைக்குள் எனக்குக் கேட்டது. அந்த உண்மையை மனத்தில் வைத்துக் கொண்டு அதே வீட்டில் நடமாட

முடியுமா என்ற அச்சம் எனக்கு ஏற்பட்டது. அன்றிரவு நெடுநேரம் எனக்குத் தூக்கமே இல்லை. தினகரியின் பேதைமை மிளிரும் மதிமுகம் உருவெளியில் என் கண்முன் தோன்றி, "எனக்குப் பூ என்றால் ரொம்பப் பிடிக்கும்" என்று கள்ளமில்லாச் சிரிப்போடு கூறுவது போல ஒரு பிரமை.

பொழுது விடிந்தது. நான் குஞ்சுப் பணிக்கரைக் கூப்பிட்டனுப்பினேன். "பணிக்கர், நான் இரண்டு மாதம் லீவு போட்டுவிட்டு ஊருக்குப் போகிறேன். லீவு முடிந்ததும் அநேகமாக வேறு 'ரேஞ்சு'க்கு மாற்றல் வாங்கிக் கொள்ளலாமென்று பார்க்கிறேன்" என்றேன். அவன் ஒன்றும் புரியாமல் திகைப்போடு தலையை ஆட்டினான். அங்கிருந்து புறப்படுகிற முதல் பஸ்ஸில் கிளம்பிவிடத் தீர்மானித்தேன்.

நான் புறப்படுகிற சமயத்தில் நம்பூதிரி வீட்டில் இல்லை. அந்த மிலிடரி உடையையும் கடிதத்தையும் அங்கே தங்கவிடாமல் என்னோடு எடுத்துக் கொண்டு போய்விடுவது நல்லதென்று எனக்குத் தோன்றியது. அப்படியே அவற்றை 'ஓல்டா'வில் வைத்துக் கட்டி எடுத்துக் கொண்டுவிட்டேன். பணிக்கர் சாமான்களைத் தூக்கிக் கொண்டு முன்னால் நடந்தான். தினகரி வாசலில் முல்லைக்கொடியில் பூப்பறித்துக் கொண்டிருந்தாள். பணிக்கர் சாமான்களோடு முன்னே சென்றதைக்கூட அவள் கவனிக்கவில்லை. நான் அருகிற் சென்றேன். 'தினகரி' என்று அழைத்தேன்.

"இன்றைக்குக் கொள்ளை போகிறாற்போல் பறிக்கப் பறிக்க மாளாமல் பூத்துத் தள்ளியிருக்கிறது இந்த 'முல்லைக் கொடி' என்று சொல்லிக் கொண்டே திரும்பினாள் அவள். என் பயணக் கோலத்தைப் பார்த்துவிட்டு, "அண்ணன் எங்கோ வெளியூருக்குக் கிளம்புகிறாற் போலிருக்கிறதே" என்றாள்.

"ஆமாம்" என்றேன்.

"திரும்ப எத்தனை நாட்களாகுமோ?"

"ரொம்ப நாளாகும்."

"அப்படியானால் அண்ணன் திரும்பும்போது ரோஜாப்பூ பதியனில் அநேகமாக அரும்பு கட்டிவிடும்" என்று சொல்லிவிட்டுச் சிரித்தாள் தினகரி. அந்தச் சிரிப்பும் அறியாமையழகும் என்றும், அப்படியே அவளிடம் இருக்கட்டும் என்று மனத்தில் வாழ்த்திக் கொண்டே புறப்பட்டேன்.

பஸ் புறப்பட நேரமிருந்தது. ஒரு காகிதத்தை எடுத்து "நம்பூதிரிகளுக்குப் பாரஸ்ட் ரேஞ்சர்... அநேக வணக்கம். நீங்கள் வீட்டில் இல்லாத சமயத்தில் உங்களிடம் சொல்லிக் கொள்ளாமலே நான் ஊருக்குப் போகிறேன். நான் பலவீனமுள்ள மனிதன். என் மனத்துக்கும் நாவுக்கும் அவ்வளவு உறுதி போதாது. நெருப்புக் கோழியைப்போல எவ்வளவு கடுமையான உண்மையானாலும் அதன் வெம்மையைச் சீரணித்துக் கொண்டு திடமாக வாழ உங்களுக்கு முடிகிறது. உங்கள் பேதைப் பெண்ணை நீங்கள் என்றும் சுமங்கலியாகவே பார்த்துக் கொண்டிருப்பதற்கு என்னால் இடையூறு நேர்ந்துவிடக்கூடாது. பூவும் திலகமுமாக உங்கள் பெண் சிரித்துத் திரிய வேண்டும்

என்பதே எனக்கும் ஆசை. ஆனால் தினகரியின் கள்ளமற்ற முகத்தைப் பார்க்கும்போது என் நெஞ்சு இளகி விடுகிறது. நாக்கு உண்மையைச் சொல்லிவிடத் துடிக்கிறது. எப்போதாவது வாய் தவறிச் சொன்னாலும் சொல்லிவிடுவேன். அதனால் நான் இங்கிருந்தே போய்விடுகிறேன். போகும்போது உங்களுடைய அநுமதியில்லாமல் அந்த உண்மையின் சின்னங்களான மிலிடரி உடையையும் அந்தக் கடிதத்தையும் என்னோடு கொண்டு போகிறேன். தினகரியின் குதூகலம் என்றென்றைக்கும் இப்படியே பேதமை நிறைந்து வாழ இறைவனைப் பிராத்திக்கிறேன்" என்று எழுதி உறையிலிட்டு ஒட்டிக் குஞ்சுப் பணிக்கரிடம் கொடுத்து நம்பூதிரியிடம் சேர்க்கச் சொன்னேன்.

**(கலைமகள், தீபாவளி மலர், 1959)**



## 38. மண் புழுக்கள்

கொளுத்து கொளுத்தென்று காய்கின்ற உச்சி வெய்யிலில் மாடாக உழைத்துக் கொண்டிருந்தான் வேலையன். கரணை கரணையாகச் சதை வைத்த தோள்களிலும், மார்பிலும், வேர்வை வழிந்து வெய்யிலில் மின்னிற்று. இரண்டு கைகளாலும் மண்வெட்டியைத் தலைக்கு மேலே தூக்கி ஓங்கி மண்ணில் பாய்ச்சுகிறபோது அவனுடைய தோள்கள் புடைப்பதில் ஒரு தனி அழகு இருந்தது. ஹெர்குலீஸ் சிலை மாதிரி மேலே அகன்று இடையில் ஒடுங்கிய ஆண்மை லட்சணமுள்ள மார்பு அவனுடையது. தலையில் ஒரு அழுக்குத் துணி முண்டாசு. அதையும் துளைத்துக் கொண்டு உறைத்தது வெய்யில். இடுப்பில் முழங்காலுக்கு மேல் வரிந்து கட்டிய வேட்டியில் அழுக்கு மண்டிய மண் கறைகள்.

ஒவ்வொரு முறையும் மண்வெட்டி பாய்ந்து மண்ணைப் புரட்டிப் பிளந்து மேலே தள்ளும் போதும் கும்மென்று கிளம்பும் ஈர வாடையோடு மேலெழுந்து பரவிற்று மண்ணின் மணம்.

அந்த மண்ணின் மணம் தன் மூச்சுக் காற்றோடு இழைகிற போதெல்லாம் தன் உழைப்பே அப்படி மணப்பதுபோல் வேலையனுக்கு ஒரு பெருமிதம், ஒரு பூரிப்பு உண்டாயிற்று.

மண்ணைக் கிளறிக்கொண்டே மண்ணைப் பற்றிச் சிந்திப்பது உற்சாகமாக இருந்தது வேலையனுக்கு. அந்த ஐந்து செண்டு நிலத்தை வெட்டிக் கொத்திப் பாத்தி பிரிப்பது அவனுக்குச் சிரமமான காரியமேயில்லை. இன்றைக்கு 'வெட்டு வேலை' முடிந்துவிட்டால் எப்படியும் நாளை ஒரு நாளைக்குள் கட்டிகளை உடைத்துச் சமப்படுத்திப் பாத்தி பிரித்து விடலாம். வாய்க்காலும் வகுத்துக் கொள்ளலாம்.

ஈரம் கசிந்த களிச்சத்துள்ள நல்ல மண் அது! கீரையும், தக்காளியும், 'நான் நான்' என்று போட்டி போட்டுக் கொண்டு உண்டாகும்.

பெரிய நிலங்களுக்கு நடுவில் 'நத்தம் புறம்போக்கு'ப் போல் இருந்தது வேலையனின் ஐந்து செண்டு. சிறிது மேடு பள்ளமாகச் சமமின்றி நன்செய்ப் பயிருக்கும் தகுதியில்லாமல், புன்செய்ப் பயிருக்கும் தகுதியில்லாமல் இரண்டுங் கெட்டானாகக் கிடந்தது அவனுடைய துண்டு நிலம். நீண்ட நாள் சிந்தனைக்குப் பிறகு அதில் 'காய்கறி கீரை' பயிர் செய்து பார்க்கலாமென்ற முடிவுக்கு வந்தான் வேலையன்.

நான்குபுறமும் பெரிய பண்ணையார்களுக்கு நடுவே அந்தச் சிறிய ஐந்து செண்டு நிலம் தனித்து இருந்த காட்சி பச்சைப் பட்டுப் புடைவையும், பகட்டான நகைகளும் அணிந்த நான்கு பணக்காரப் பெண்களுக்கு நடுவே வெறும் கைத்தறிப் புடைவை

அணிந்து நகைகளில்லாத மூளி உடம்போடு ஏழைப் பெண்ணொருத்தியும் நிற்பது போலிருந்தது. வடபுறம் புலி வலம் வந்த நல்லூர்ப் பெரிய பண்ணையின் நிலம் ஐம்பது ஏக்கர் ஒரே தாக்காக இருந்தது. தெற்கே மாடிவீட்டு ரங்க நாராயண ஐயரின் பதினைந்து ஏக்கர் முதல் தரமான நன்செய்; பேயனாற்றுக்கால் தலைப்பாசன நிலம். கிழக்கே வீர பத்திர வாண்டையாரின் வாழைத் துரவு; கண் பார்க்க முடிந்த தொலைவு மட்டும் தூண் கொண்டெழுந்த பசுமைப் பரப்பாய் ஒரே வாழைமரக் காடு. மேற்கே முக்காணிமங்கலம் முகுந்தராஜ முதலியாரின் கரும்புத் தோட்டம். எழுபத்திரண்டு ஏக்கர் செங்கரும்புப் பயிர் காற்றில் தோகைகள் சுழல அற்புதமாய்க் காட்சியளிக்கிறது.

அத்தனையும் பணம்! நெல், வாழை, கரும்பு, மட்டுமல்ல! உடைமைக்காரர்களுக்குப் பணமாகவே விளைந்த நிலங்கள் அவை. புலிவலம் வந்த நல்லூர்ப் பெரிய பண்ணையாரும், மாடிவீட்டு ரங்க நாராயண ஐயரும், வீரபத்திர வாண்டையாரும், முகுந்த ராஜ முதலியாரும், வண்டி கட்டிக்கொண்டு வந்துதான் நிலத்தைப் பார்வையிடுவது வழக்கம். எவ்வளவு பெரிய நிலம்? நடந்து சுற்றிப் பார்த்தால் கட்டுபடியாகுமா? மண்ணில் இறங்கி நடந்து விட்டால் கௌரவம் 'ஸ்டேட்டஸ்' எல்லாம் என்ன ஆவது? நடத்தை கெட்டவளானாலும் தெருவில் உடம்பை மூடிக்கொண்டு தானே நடக்க வேண்டும்? பணக்காரர்களுக்கு 'அந்தஸ்து' என்கிற விவகாரமும் இப்படித்தான் இருக்கிறதோ இல்லையோ, வெளியில் 'அந்தஸ்தை' நடித்துக் காட்டினால்தான் பணக்காரர்களுக்குப் பெருமை; பணத்துக்கும் மதிப்பு!

அந்தப் பெரிய பெரிய மிராசுகளுக்கு நடுவே தன்னுடைய 'உள்ளங்கையகல நிலம்' ஓர் அவமானம் போல் தோன்றினாலும் அதை அப்படியே தரிசாக விட்டுவிட மனமில்லை வேலையனுக்கு. கீரையும், காய்கறியும், பயிர்செய்து விற்றால் நாள் ஒன்றுக்கு ஒன்றரை ரூபாய்க் காசு கூடவா சம்பாதிக்க முடியாது?' என்று நினைத்து ஒரு முடிவுக்கு வந்தபின்பே இப்போது அந்த நிலத்தை வெட்டிக் கொத்திக் கொண்டிருந்தான் அவன். மனிதன் சும்மா இருக்கிறவரை யாருமே அவன் பக்கமாகத் திரும்பிக் கவனிப்பதில்லை. நல்லதோ, கெட்டதோ, அவன் எதையாவது செய்ய ஆரம்பித்து விட்டால் எல்லோருடைய கவனமும் அவன் பக்கம் திரும்பிவிடுகிறது. வேலையனுடைய ஐந்து செண்டு நிலம் கரடுதட்டிப் போய்க் குண்டும், குழியுமாய்ச் சும்மா கிடந்தவரை 'முக்காணி மங்கலமும்,' 'புலிவலம் வந்தநல்லூரும்' அதைப் பற்றி நினைக்கவே இல்லை.

ஒரு நாளுமில்லாத திருநாளாய் அன்றைக்கு அந்தப் பள்ளத்துக் கரட்டில் மண்வெட்டி இறங்கும் ஓசையைக் கேட்டபோது புலிவலம் வந்த நல்லூர் வண்டியை நிறுத்தச் சொல்லி இறங்கிப் பார்த்தார்.

"ஏலே வேலு! என்னடாது; திடீரென்று இந்தக் காட்டு மேலே இத்தனை அக்கறை?" வைரக் கடுக்கன்களும், வலது கையில் சுழன்ற வெள்ளிப் பூண்பிடித்த பிரம்பும் வெய்யிலில் மின்ன மேட்டில் தம் நிலம் முடிகிற இடத்தில் நின்று கொண்டு

மிடுக்காக அவனைக் கேட்டார் புலிவலம்வந்த நல்லூர். நெற்றி வேர்வையை வழித்து உதறிவிட்டு நிமிர்ந்தான் வேலையன்.

"ஐயா, சும்மாக் கெடக்கறதைக் கொத்தி ஏதோ நாலு காய்கறி, கீரை போட்டுப் பார்க்கலாமின்னு எண்ணமுங்க..."

"அடி சக்கை! காய்கறித் தோட்டமா? பலே; ஜமாய்த்துத் தள்ளு..."

"தோட்டமாவது, ஒண்ணாவதுங்க... ஏதோ அஞ்சாறு பாத்திக்கு..." அவன் முடிப்பதற்குள் புலிவலம் வந்த நல்லூர் வண்டியில் ஏறிவிட்டார். அதிக நேரம் வேலையனிடம் நின்று பேசிக் கொண்டிருந்தால் அவருடைய அந்தஸ்து என்ன ஆவது?

மறுபடியும் வேலையனின் கைகள் மண்வெட்டியை இயக்கின. மேற்குப் புறத்து மேட்டில் தம் கரும்புக் கொல்லை முடியுமிடத்தில் 'முக்காணிமங்கலம்' வந்து நின்றார்.

"ஏண்டா வேலையா! உன் 'ஜமீன்லே' ஏதோ பெரிய 'ஸ்கீம்லே' சாகுபிடி ஆரம்பிச்சு நடக்கிறது போலிருக்கே? என்ன சமாசாரம்? வாழையா கரும்பா? நெல்லா?" என்று கிண்டலாகப் பேச்சை ஆரம்பித்தார் முக்காணி மங்கலம்.

"ஐயாவுக்குக் கேலியாத் தோணுது... நமக்கென்ன முப்பது ஏக்கரா நாற்பது ஏக்கரா? உள்ளங்கையிலே பாதி நிலம். ரெண்டு கீரைப்பாத்திக்குக் காணாது. வாழையையும், கரும்பையும், நினைக்கக்கூட முடியாதுங்களே?" என்று சொல்லி முறுவல் பூத்தான் வேலையன்.

இன்னும் சிறிதுநேரம் கழித்து வீரபத்திர வாண்டையார் வந்து, "நமக்கும் நிலமிருக்குங்கறதைக் காண்பிக்கிறதுக்காகக் கொத்துப் போட்டுக் கிட்டிருக்கியா?" என்று கேலி செய்துவிட்டுப் போனார். வாழைத்தார் வெட்டிச் சந்தைக்கு அனுப்பத் தினசரி வந்து போவார் வாண்டையார்.

"அடே வேலையா; இதிலே கீரையும், காய்கறியும் நன்னா வரும்டா. பசையுள்ள மண்; அதோ பாரு; சிக்கு விழுந்த நூல் மாதிரி எத்தனை மண்புழு நெளியறது? மண் புழுக்கள் துளைக்கிற மண் காய்கறிக்கு நன்னா வரும். நிலம் உரம் வாய்ந்ததுங்கிறதை மண்புழு இருக்கறதாலேயே தீர்மானிச்சிண்டுடலாம்!" என்று தெற்குப் பக்கத்து நிலக்காரர் தலைக்கால் பாசனம் ரங்கநாராயண அய்யர் அவனுக்கு 'சர்டிபிகேட்' கொடுத்துவிட்டுப் போனார்.

"சாமீ! எல்லாம் உங்க ஆசீர்வாதம்..." என்று விநயமாகப் பதில் சொல்லி அவரை அனுப்பி வைத்தான் வேலையன். தன் நிலத்தில் கீரையும், காய்கறியும் நன்றாக வரும் என்பது அவனே அறிந்ததுதான். 'புருபுரு' வென்று முறுக்கு மாவு பிசைந்த மாதிரிக் கரிசல் நிறத்துக் களிப்பாங்கான மண். அதில் ரப்பர் நூல்கள் போல ஏராளமான மண்புழுக்கள் நெளிகின்றன. 'மண்புழுவைத் தோட்டக் காரனின் நண்பன்' என்பார்கள். அது மண்ணை உரமுள்ளதாக்குகிறது. சத்துள்ளதாகவும் வளமுள்ளதாகவும் செய்து நல்ல விளைவைத் தருகிறது' என்று நாள் தவறாமல்

வீட்டில் தன் மகன் பள்ளிக்கூடத்து 'ஸயன்ஸ்' புத்தகத்தை நெட்டுருப் போடுவதை வேலையன் கேட்டிருக்கிறான். 'ஸயன்ஸ்' என்கிற இங்கிலீஷ் வார்த்தை இந்த நாட்டில் நுழைவதற்கு முன்பே அவனுடைய முப்பாட்டன் காலத்திலிருந்தும் கர்ண பரம்பரையாகவும் அந்த விஷயம் அவனுக்குத் தெரியும்.

"மண்புழு நிறைய இருந்தால் நெலத்துலே ஐசுவரியம் பொங்கும்டா" என்று அவனுடைய தாத்தா அடிக்கடி பெருமையாகச் சொல்லிக் கொண்டே இருப்பார். அதே செய்தியை இப்போது ரங்கநாராயண ஐயரும் கூறக்கேட்டபோது அவனுக்குப் பெருமையும், திருப்தியும் உண்டாயின. தன்னுடைய சொந்த முயற்சியில் உருவாக இருக்கும் காய்கறித் தோட்டத்தில் ஐசுவரியம் பொங்கப் போவதை நினைத்து அவன் மனம் பூரித்தது.

அன்று பொழுது சாய்வதற்குள் 'வெட்டு வேலை' முடிந்து விட்டது. மறுநாள் கட்டிகளை உடைத்துச் சமன் செய்து பாத்தியும், வாய்க்காலும் வகுத்துவிட்டான். மூன்றாம் நாள் விதைத்து நீர்பாய்ச்சி விட்டான். மூன்று பாத்தி அரைக்கீரை, இரண்டு பாத்தி தக்காளி, இரண்டு பாத்தி முளைக்கீரை, ஒரு பாத்தி கொத்துமல்லி, நாலு பாத்தி வெண்டைக்காய். இருக்கிற நிலத்தை நிரந்து பன்னிரண்டு பாத்தியாகப் பிரித்திருந்தான்.

அது நல்ல ஈரச்சத்துள்ள உரமண்! விதைத்த மூன்றாவது நாளில் கீரைப்பாத்திகளில் பொட்டுப் பொட்டாகப் பசுமை தெரிந்தது. ஏழாவது நாளில் வெண்டையும், தக்காளியும் முளை கிளம்பின. பின்பு கொத்துமல்லியும் வெந்தயமும் பொல்லென்று பூத்த பசுமையாய்ப் பாத்திகளை நிறைத்தன. வேலையனின் ஐந்து செண்டு நிலத்தில் ஒரு பசுமைக் கனவு உருவாகி மிளிர்ந்தது.

கீரைகள் அடர்ந்து பசுமை கொழித்து மேலெழும்பி வளர்ந்தன. வெண்டை பூத்தது. தக்காளியும் தன்னுடைய மஞ்சள் நிறப் பூக்களால் மென்னகை புரிந்தது. கொத்து மல்லி பச்சைப் பாசிமணி போல் காய்த்துக் கதிர் வாங்கி மணம் பரப்பியது.

"கொடுத்து வைத்த பயல்டா நீ" என்று அவனது காய் கறித் தோட்டம் வாய்த்த விதத்தை வியந்தார் 'புலிவலம் வந்த நல்லூர்.'

"பொட்டல் காட்டிலே என்னமோ செய்து அற்புதம் பண்ணிப்பிட்டியேடா!" என்றார் வாண்டையார்.

"இந்த மாதிரி வெண்டை விதை எங்கேடா கிடைச்சது உனக்கு? கொத்துக் கொத்தாய்க் காய்ச்சுத் தள்ளியிருக்கே; யோகக்காரண்டா நீ!" என்று கண் வைத்தார் முக்காணி மங்கலம்.

"நான் அன்னிக்கே சொன்னேனோல்லியோ? மண்புழு இருந்தாக் காய்கறித் தோட்டத்துக்குப் பேஷா வரும்னு பெரியவா தெரியாமேயா சொன்னா? படு ஜோரா வந்திருக்குடா உன் காய்கறித் தோட்டம்!" என்றார் ரங்க நாராயண அய்யர்.

நீலப் பசும் மலைச் சிகரங்களிலிருந்து தொலைவில் தெரியும் நெருப்புப் புள்ளிகளைப் போலத் தக்காளிச் செடிகள் நிறைந்த பாத்திகளுக்கு நடுவே சிவப்புக்கள் தெரிந்தன. தக்காளி பழுத்தது. அந்த முண்டும் முடிச்சுமான சிவப்பு நிறப் பழங்களுக்குத்தான் எத்தனை கவர்ச்சி?

அந்தச் சிறிய காய்கறித் தோட்டத்தில் பாத்திகள் அமைந்திருந்த விதத்தில் ஒரு ஒழுங்கு இருந்தது. தெற்கே தக்காளிச் செடிகள், வடக்கே வெண்டைச் செடிகள், கிழக்கே வெந்தயம், கொத்துமல்லி - மேற்கே கீரை வகைகள். இன்னும் இரண்டொரு நாளில் விற்பனைக்குப் பறித்துக்கொண்டு போகலாம் என்று தீர்மானித்திருந்தான் வேலையன்.

அப்படியிருக்கும்போது அன்று பொழுது விடிந்ததும், தோட்டத்தைச் சுற்றிப் பார்க்கப்போன அவனுக்கு அங்கே ஓர் அதிர்ச்சி காத்திருந்தது.

வெண்டைச் செடிகளில் வெண்டைக்காய் திருடு போயிருந்தது. தக்காளிப் பாத்தியில் தக்காளிப் பழங்கள் திருடு போயிருந்தன. கீரைப் பாத்தியில் கீரை குறைந்திருந்தது. வெந்தயக் கீரையும், கொத்துமல்லிக் கீரையும் யாரோ பாத்தியில் இறங்கிக் கொஞ்சம் பறித்துக் கொண்டு போயிருந்தார்கள். வேலையன் திகைத்தான். அத்தனை நாளுமில்லாமல் அன்று திருடுபோக ஆரம்பித்த காரணம் அவனுக்கு விளங்கவில்லை. இயற்கையாகவே அவன் நிலத்துக்குப் பாதுகாப்பும், காவலும், அதிகம். நான்கு புறமும் பெரிய பண்ணையார்களின் நிலங்கள். அவர்களுடைய நிலத்தைக் காவல் செய்ய ஏராளமான காவல் ஆட்கள் உண்டு. வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, எந்தப் பக்கத்திலிருந்து அவன் காய்கறித் தோட்டத்திற்குத் திருட வரவேண்டுமானாலும் காவலைக் கடந்துதான் வர முடியும்! பெரிய பண்ணையார்களின் வாழைத் தோட்டத்தையும், கரும்புக் கொல்லையையும், நெல் வயல்களையும் கடந்து வந்து அவனுடைய காய் கறித் தோட்டத்தில் சேகாரம் செய்து கொண்டு போவதென்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை. அவ்வாறிருக்கும்போது காய்கறிகளும், கீரையும், எப்படித் திருடு போயிருக்க முடியுமென்று அவனுக்கு விளங்கவில்லை.

அன்று இரவு முழுவதும் அங்கேயே காவல் இருந்து அந்தத் திருட்டைக் கண்டு பிடிக்க விரும்பினான் அவன். அவனது ஐந்து செண்டு நிலத்தில் ஒரு கோடியில் அடர்ந்து வளர்ந்த மஞ்சள்நாறி மரம் ஒன்று இருந்தது. இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு கையில் பூண்பிடித்த கிளுவைக் கம்புடன் வயலுக்குப் போய் அந்த மஞ்சள் நாறிமரத்துக் கிளையில் ஏறி மறைந்து உட்கார்ந்து கொண்டான். கிளைகளை அடர்ந்து தழுவியிருந்த பசுமை அவன் உட்கார்ந்திருப்பது கீழே தெரியாமலும், கீழே அவன் காணமுடிந்தபடியும் வகையாக அமைந்திருந்தது. நல்ல நிலாக் காலம். பாற்கடலில் நனைத்துப் பரப்பிய ஓவியம்போல் வயல் வெளிகளும், வாழைக்காடும், கரும்புக் கொல்லையும், மரங்களும், அழகாகத் தெரிந்தன.

வேலையன் மரத்திலேயே இருந்து விழிப்பாகக் கண்காணித்துக் கொண்டிருந்தான். நாழிகைகள் ஒவ்வொன்றாய் நழுவிக் கொண்டிருந்தன.

விடிவதற்குச் சிறிது நாழிகைக்கு முன் வாண்டையாரின் குரல் வாழைத் தோட்டத்தருகே கேட்டது. அவரும் அவருடைய வாழைத்தோப்புக் காவல்காரன் பக்கிரியும் பேசிக் கொண்டே நடந்து வருவதை மரத்திலிருந்தபடியே கவனித்தான் வேலையன். அவர்கள் இருவரும் அவன் ஏறியிருந்த மஞ்சள் நாறி மரத்தடியிலே வந்து நின்றனர். "டேய், பக்கிரி! இந்தப் பாத்தியிலே இறங்கி, ஒரு கட்டுக் கொத்து மல்லிக் கீரையும், வெந்தயக் கீரையும் பிடுங்கிக் கொண்டா... எப்படியிருக்குன்னு பார்க்க, நேற்றுக் கொஞ்சம் கொண்டு போனேன். நல்ல ருசி...." என்று தம் காவல்காரப் பக்கிரிக்கு ஆணையிட்டார் வாண்டையார்.

பக்கிரி பாத்தியில் இறங்கித் தாறுமாறாக உழப்பிக் கீரையும், கொத்துமல்லியும் பிடுங்கிக் கொண்டு வந்தான்.

"விலைக்கு வாங்கறதாயிருந்தா நாலும், நாலும், எட்டணாவாவது கேட்பான்! பயல் தோட்டம் போட்டாலும் போட்டான்; நமக்கு யோகம்" என்று கூறிச் சிரித்துக் கொண்டே வாண்டையார் கீரையும் கொத்துமல்லியும் வாங்கி மேல் துண்டில் மறைத்தவாறு நடந்தார். பக்கிரி பின் தொடர்ந்தான்.

சிறிது நேரம் கழித்து 'முக்காணிமங்கலமும்' அவருடைய கரும்புத் தோட்டத்துக் காவலாளும் அந்தப் பக்கமாகப் பேசிக் கொண்டு வந்தார்கள். வேலையன் இன்னும் மரத்தின் மேலிருந்து கவனித்துக் கொண்டுதான் இருந்தான்.

"டேய்? சாம்பான்; இந்தப் பக்கமாகக் கீரைப் பாத்தியிலே இறங்கி ஒரு கட்டு முளைக்கீரை பிடுங்கு பார்க்கலாம்" என்று தம் காவலாளை ஏவினார் முக்காணி மங்கலம். அவன் இறங்கிப் பிடுங்கிக் கொண்டு வந்தான். அவர்கள் இருவரும் போன சிறிது நேரத்தில் 'புலிவலம் வந்த நல்லூரர்' வந்தார். அவர் தனியாகவே வந்ததால் தாமே இறங்கி மேல் வேஷ்டி நிறைய வெண்டைக்காய் பறித்துக் கொண்டு திரும்பினார். அவர் தலை மறைந்ததும் ரங்க நாராயண ஐயர் வந்து ஒரு துணிப் பை நிறைய அவசர அவசரமாகத் தக்காளிப் பழங்கள் பறித்துக் கொண்டு புறப்பட்டார். பொழுது நன்றாக விடிந்துவிட்டது. வேலையன் மஞ்சள் நாறிமரத்திலிருந்து கிழே இறங்கிக் காய்கறித் தோட்டத்தைச் சுற்றிப் பார்த்தான். சோரம்போன தோற்றத்தில் அது தாறுமாறாகக் காட்சியளித்தது. அவன் நெஞ்சில் உணர்ச்சி கொதித்தது. கைகள் துடித்தன. தோள்கள் புடைத்தன. ஏழைமையை நினைத்து அடங்கினான். வாண்டையார் வீட்டு வாழைத் தோட்டத்தில் களவு போகாமல் காக்கக் காவலாள் இருக்கிறான். முதலியார் வீட்டுக் கரும்புக் கொல்லைக்கும் காவல். பண்ணையார் வீட்டு நிலத்துக்கும், ஐயர் வீட்டு நெல் வயலுக்கும், எல்லாவற்றுக்கும் கட்டு உண்டு. காவல் உண்டு!

அவன் சொத்து மட்டும் எடுப்பார் கைப் பிள்ளையா? 'செல்வமும், செல்வாக்கும் இல்லாவிட்டால் மனிதனாகவே பிறக்கக்கூடாது' என்று பிறவியின் மேலேயே அடக்கவும், தாங்கவும் முடியாததொரு வெறுப்பு அவனுக்கு உண்டாயிற்று.

வேலையன் கொதிப்பை வெளிக்காட்ட முடியாத ஏலாமையோடு உள்ளேயே கொதித்தான். ஏழையின் கொதிப்பு நீறு பூத்த நெருப்பு!

ரங்கநாராயண ஐயர் தம் நிலத்தைச் சுற்றிப் பார்த்து விட்டு வீட்டுக்குப் போவதற்காக அந்தப் பாதையாக வந்தார். அவர் கையில் 'அந்தப் பையும்' இருந்தது. "வேலையா! உன் காய்கறித் தோட்டம் நல்ல பலன் வச்சிருக்குடா; மண் புழு நிறைய இருந்தாக் காய்கறிப் பயிருக்கு யோகம்டாப்பா..." என்றார் தக்காளிப் பழப்பையை முதுகுக்குப் பின்னால் மறைக்க முயன்று கொண்டே.

"சாமி! மண்ணுக்கு மேலேயும் புழுக்கள் இருக்குங்க. மண்ணுக்குள்ளற இருக்கும் புழுவைத்தான் நீங்க சொல்றீங்க..." என்று சொல்லி அவரைப் பார்த்துச் சிரித்தான் வேலையா. அந்தச் சிரிப்புக்குத்தான் எத்தனை அர்த்தங்கள்?

(தாமரை, நவம்பர், 1959)



## 39. ஆலமரம்

"தம்பீ பொன்னம்பலம்; அதோ மேல் வரிசையில் அந்தக் கோடியில் பெரிய புராண ஏடு எப்படி இரண்டுங் கெட்டானாய் துருத்திக் கொண்டிருக்கிறது பார்! தப்பித் தவறிக் கீழே விழுந்தால் என்ன ஆவது?.. மடல்கள் முறிந்து ஏடு குட்டிச் சுவராய்ப் போய்விடும். அருமை தெரியாத பையனாயிருக்கிறாயே...? பாட்டன் முப்பாட்டன் காலத்திலிருந்து இந்தக் குடும்பத்தைக் காப்பாற்றி வருகிற ஐசுவரியமெல்லாம் இந்த ஏடுகள் தாம்...." கிழவரின் வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாதது போல் போய்விட்டான் பொன்னம்பலம்.

கிழவர் அம்பலவான தேசிகர் நோய்ப் படுக்கையில் கிடந்தவாறே அலுத்துக் கொண்டார். அவர் நோய்வாய்ப்பட்டுப் படுத்திருந்த அந்த விசாலமான அறையில் நாற்புறமும் மரச் சட்டங்கள் அடித்து ஏட்டுச் சுவடிகள் வரிசை வரிசையாய் மேலும் கீழுமாய்ச் சிறிதும், பெரிதுமாய் அடுக்கப்பட்டிருந்தன. ஓலைகள் அதிகமாகப் பழுப்படைந்து கறுத்துத் தெரியும் மிகப் பழைய சுவடிகள் ஒரு புறம். அருமையும், பெருமையுமாகக் கொண்டாடி விழிகளின் மங்கிய பார்வையால் அந்த ஏடுகளை ஏக்கத்தோடு பார்த்தார் அவர்.

"இப்போது எனக்கு மட்டும் எழுந்து நடமாடத் தெம்பிருந்தால் நானே அத்தனை ஏடுகளையும் தூசி தட்டிப் பிரித்து உதறி அடுக்கி வைத்து விடுவேன். வயதானவன் வார்த்தைக்கு யார் மதிப்பு வைக்கிறார்கள்?... கால் நாழிகையாய் இந்தப் பெரிய புராண ஏட்டை நேரே எடுத்து வைக்கச் சொல்லிக் கூப்பாடு போடுகிறேன். ஏனென்று கேட்பதற்கு ஆள் இல்லை. யாரைச் சொல்லி என்ன? இனிமேல் எல்லாம் 'அப்படி அப்படித்தான்! வயசும், மூப்பும் வந்துவிட்டால் மனிதனுடைய வார்த்தைக்கு மதிப்பு ஏது?' என்று படுக்கையில் புரண்டவாறே முணுமுணுத்துக் கொண்டார். அவருடைய முணுமுணுப்பை அரை குறையாகக் காதில் வாங்கிக்கொண்டே கிண்ணத்தில் கஞ்சியோடு உள்ளே நுழைந்தான் பொன்னம்பலம்.

"தள்ளாத வயதில் ஏன் இப்படி ஏடு ஏடு என்று உயிரை விடுகிறீர்கள்? தலையிலேயா கட்டிக் கொண்டு போகப் போகிறீர்கள்? எல்லாம் இருந்த இடத்திலேயே பத்திரமாக இருக்கும். பேசாமல் படுத்துக் கொண்டிருங்கள்" என முகத்தைச் சுளித்து அவரைக் கடிந்து கொண்டான், மகன். படுக்கையில் ஒருக்கொளித்தாற் போல எழுந்து அவன் ஆற்றிக் கொடுத்த கஞ்சியைக் குடித்துவிட்டு, "உனக்குத் தெரியுமா அப்பா இதன் அருமை? பாடுபட்டுச் சேர்த்துப் பாதுகாத்தவன் நான். ஒரு ஏடு அசைந்தாலும் எனக்கு மனம் பதறுகிறது" என்றார்.

"உங்கள் ஏட்டை யாரும் அள்ளி விழுங்கி விட மாட்டார்கள். உடம்பை அலட்டிக் கொள்ளாமல் படுத்துக் கொள்ளுங்கள்" என்று அலட்சியமாகச் சொல்லிவிட்டு காலியான கஞ்சிக் கிண்ணத்தோடு வெளியேறினான், மகன்.

"நீ பேசுகிறதை எல்லாம் கேட்டுக் கொண்டு கிடக்க வேண்டிய நிலைக்கு வந்துவிட்டேன் பார்..... பொறுத்துக் கொள்கிறேனப்பா... எனக்கு ஏலாமை... போதாக் குறைக்கு நோக்காடு வேறு. கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை? என் தலை மறைந்த அப்புறம் இந்த ஏடெல்லாம் என்ன கதியாகப் போகின்றனவோ?" என்று ஆற்றாமையோடு மெல்லக் கூறிக் கொண்டார் தேசிகர்.

இரண்டாண்டு காலமாக அவருடைய பழக்கமெல்லாம் அந்த அறையளவில் சுருங்கி ஒடுங்கிவிட்டது. எழுந்து நடமாட முடியாது. காலில் வாதம், நீரிழிவுத் தொல்லையும் அதிகம். கோதுமைக் கஞ்சி, கோதுமைச் சோறு, கேழ்வரகுக் கூழ், இவற்றைத் தவிர வேறெதையும் சாப்பிடக் கூடாதென்பது டாக்டருடைய உத்தரவு. எழுபத்தெட்டு வயதுக்குத் தள்ளாமை கொஞ்சமா? கண் பார்வை மங்கல் சாதாரணமாகவே கனத்த கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தவருக்குப் படுத்த படுக்கையான பின் கண்ணாடி இருந்தாலும் ஆள் அடையாளம் தெரியச் சிரமமாயிருந்தது. ஆனாலும் ஏடுகள் இருக்கிற இடங்களும் வரிசையும் பெயரும் அத்துபடி. கண்ணை மூடிக்கொண்டு இன்ன இடத்தில் இன்ன ஏடு இருக்கிறது என்று கை நீட்டி எடுத்துவிட முடியும். அறையின் மேலக் கோடியில் எடுத்துக் காட்டிய காரைச் சுவரோடு தெரிகிறதே, அது நெற்களஞ்சியம். வீட்டின் வருடாந்திரத் தேவைக்கு அறுவடைக் காலத்தில் நெல் நிரப்பவேண்டியது. நெற்களஞ்சியமும், ஏடுகள் நிறைந்த தமிழ்க் களஞ்சியமும் அருகருகே இருந்தன. நெற்களஞ்சியம் வற்றிய வருடங்களும் உண்டு. ஆனால், அந்தக் குடும்பத்தில் தமிழ்க் களஞ்சியம் வற்றியதில்லை. அவருடைய தலைமுறையில் அவர் காலமுள்ளவரை வற்றாது அது!

தலைமுறை தலைமுறையாகத் தமிழையும் புலமையையும் வளர்த்து வாழ்ந்த மரபு அவருடையது. தேசிகரின் தந்தை வீரபத்திர தேசிகர் சதாவதானி. தாத்தா தொல்காப்பியமும், சங்க நூல்களும் எழுத்தெண்ணிப் படித்தவர். ஒரு பெரிய சமஸ்தானத்தில் பேரும் புகழும் பெற்று அவைப் புலவராயிருந்தார் அவர். வீட்டிலுள்ள ஏடுகளெல்லாம் முப்பாட்டனார் காலத்திலிருந்து கைப்பழக்கத்திலிருந்து வருபவை. அந்தக் குடும்பத்தின் செல்வமும், நிலங்கரைகளும் எத்தனையோ வகைகளில் குறைந்தும், நலிந்தும் ஏழ்மையடைந்ததுண்டு. ஏடுகள் மட்டும் அன்று முதல் இன்று வரை அழியாச் சொத்து. ஏடுகளைப் பேணிப் போற்றிக் காப்பாற்றுவதற்குத் தான் எத்தனை பக்குவங்கள்? எழுத்து மங்கிவிடாமலிருக்கப் பூவரசம் பட்டையும், கரியும், மஞ்சளும் சேர்த்து அரைத்துப் பூச வேண்டும். ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு பூச்சி கரையான் அரித்து மொத்தமாகக் கட்டை போலாகி விடாமலிருக்க அடிக்கடி பிரித்து உதறி மண்ணெண்ணையில் அலசிக் கட்டிவைக்க வேண்டும். ஒவ்வொரு வருடமும் சரஸ்வதி பூஜையின்போது அந்த வீட்டில் ஏடுகளுக்கு இத்தனை மரியாதையும் உண்டு. ஏதோ பெரிய திருவிழாக்

கொண்டாட்டம்போல் அந்த வீட்டில் சரஸ்வதி பூஜை நடத்துவது வழக்கம். சங்க நூல்களிலிருந்து பிற்காலப் பிரபந்தங்கள் வரை எல்லா ஏட்டுச் சுவடிகளும் அங்கு இருந்தன. அச்சுப் புத்தகங்கள் வருமுன் தமிழை முறையாகப் படித்த எத்தனையோ பழம் புலவர்கள் அந்தச் சுவடிகளை வைத்துக் கொண்டுதான் படித்தார்கள்; மனனம் செய்தார்கள். அவற்றை மூலமாகக் கொண்டுதான் அச்சாகி வெளி வந்தன புத்தகங்கள். அம்பலவான தேசிகர் காலத்தில் தான் முடிந்த ஏடுகளை அவரே ஒப்புநோக்கிப் பதிப்பித்தார்.

தமக்குப் பிறகு ஒரே புதல்வன் பொன்னம்பலத்தைத் தான் நம்பியிருந்தார் தேசிகர். ஆனால் பொன்னம்பலத்தின் படிப்பு ஆரம்பத்திலிருந்தே வேறு வழியில் போய்விட்டது. ஆங்கிலப் பள்ளிக்கூடத்தில் மெட்ரிகுலேஷன் பாஸ் செய்து விட்டுத் தாலுக்காக் கச்சேரியில் குமாஸ்தாவாகப் போய் உட்கார்ந்து விட்டான். முழுதும் தமிழையே நம்பி வாழ்ந்த குடும்பத்தில் ஒரு புதிய தலைமுறைக்கு அடிகோலிவிட்டான், பொன்னம்பலம். அது என்ன காரணமோ; தெரியவில்லை. அவனுக்குத் தமிழில் ஒரு பிடித்தம் விழாமலே கழிந்துவிட்டது. சிறுவயதில் தகப்பனார் வற்புறுத்திக் கற்பித்த நிகண்டு, தூண்டிகை - போன்ற சிறிதளவு தமிழறிவையும் கூட ஒட்டுதலில்லாத காரணத்தால் மறந்துவிட்டான் அவன். பொன்னம்பலத்திற்கு ஒரே மகன். பத்துப் பன்னிரண்டு வயது இருக்கும். அவனையும் தாத்தாவின் வழியில் நெருங்க விடாமல் பட்டணத்தில் அவனுடைய மாமனோடு தங்கிப் படிக்க ஏற்பாடு செய்து விட்டான். பேரனுக்குத் தமிழ் சொல்லிக் கொடுத்து ஆளாக்கலாம் என்ற நம்பிக்கையும் தேசிகருக்கு இல்லை.

நடமாட்டம் ஓய்ந்து படுக்கையில் படுத்தவாறு அந்தப் பரம்பரை வளர்ந்து புகழ் பெற்றதையும் - இனி வாழப் போகிற விதத்தையும் நினைத்தபோது தேசிகருக்கு ஏதோ ஒரு உணர்வு நெஞ்சை அடைத்தது. இணையற்றதொரு ஞான ஒளி அந்தக் குடும்பத்திலிருந்து தம் காலத்தோடு அழிந்துவிடுமோ என்ற ஏக்கம் அவருக்கு மனச் சுமையாகவே இருந்தது. தமிழ்க் குடும்பம் என்ற வழக்குப் போய் உத்தியோகம் பார்த்துக் கை கட்டி வயிறு வளர்க்கும் சாதாரண மத்தியதரக் குடும்பங்களில் ஒன்று போல அது ஆகிக் கொண்டு வருகிறதே என்பதை நினைத்தபோது இழக்கக் கூடாத ஏதோ ஒரு பெருமையை வேகமாக இழப்பது போலிருந்தது அவருக்கு.

"நம்புவதற்கும் பெருமையாக நினைப்பதற்கும் என்ன இருக்கிறது இனிமேல்? எல்லாப் பெருமையும் ஒவ்வொன்றாக இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன. நான் படுத்த படுக்கையானதிலிருந்து சரஸ்வதி பூஜை கூடச் சரியாக நடக்கவில்லை. இந்த ஏடுகளில் கைபட்டு வருடம் இரண்டுக்கு மேல் இருக்கும்! பேணுவோர் இல்லாவிட்டால் எல்லாம் அவ்வளவுதான். காலம்தான் மாறிக் கொண்டே வருகிறதே. இதையெல்லாம் யார் கவனிக்கிறார்கள் இப்போது? எல்லாம் அச்சில் வந்துவிட்டது. மூல நூலை மனனம் செய்யாமல் நுனிப்புல் மேய்ந்து விட்டு அச்சு நாகரிகம் அளித்த படிப்புச் சோம்பலை வளர்க்க வேண்டியதுதான் இனிமேல். படிப்பு நூல்களெல்லாம் கிடைப்பதற்கு அருமையாக ஏடுகளாய் இருந்தபோது படிப்பில் பக்தி சிரத்தை

இருந்தது. எனக்குத் தெரிந்து இதே அறையில் தாத்தாவுக்கு முன்பு மேல்வேட்டியை அரையில் கட்டிக் கொண்டு எத்தனை ஜமீன்தார்கள் தமிழ்ப் படிக்க வந்து போயிருக்கிறார்கள். அப்பா எத்தனை பெரிய அவைகளில் சதாவதானம் செய்து வெற்றிக்கொடி நாட்டினார்! கால்மேல் கால் போட்டுக் கொண்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டிருந்தாரானால், தெருவில் நடந்து போகிறவன் காலில் செருப்போடு நடந்துபோக மாட்டான். அப்படி ஒரு பெருமை! அப்படி ஒரு செல்வாக்கு! அறிவின் கௌரவத்தால் ஊரையே பெருமைப்படுத்தி வந்த குடும்பம் இப்படி ஆகிவிட்டதே! எழுபத்தைந்து ரூபாய் காசுக்காகத் தாலுக்காக் கச்சேரிக்கு நடையாய் நடக்கிறான் இவன்.

என்ன பெருமையோ? என்ன கௌரவமோ? அப்பா வாசற்படிக்குக் கீழே தெருவிலிறங்கி நடந்தறிய மாட்டார். எங்கே போக வேண்டுமானாலும் ஜமீன்தார் அனுப்பிய பல்லக்கும், ஆட்களும், வாசலில் காத்துக் கொண்டிருப்பார்கள். ஒரு வார்த்தை சொல்லி அனுப்பினால் படேபடே ஜமீன்தார்கள் அவரைப் பார்த்துவிட்டுப் போக இங்கே தேடிக் கொண்டு வருவார்கள். இந்தக் காலத்தில் அங்கே தான் என்ன வாழ்கிறதாம்? ஜமீன் விருப்பு எல்லாம் ஒடுங்கி, இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. எல்லாம் சர்க்கார் பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். என் காலத்திலேயே ஜமீன் ஆதரவு குன்றிப் புத்தகம் அச்சுப் போட்டு விற்றுப் பிழைக்க வேண்டிய நிலை எனக்கு வந்து விட்டதே, இந்த நோக்காடுகளெல்லாம் வந்து ஆளைப் படுக்கையில் கிடத்தியிருக்காவிட்டால் இன்னும் கொஞ்ச நாளைக்கு ஏட்டைப் புரட்டி ஏதாவது முடிந்த மட்டில் செய்து கொண்டிருக்கலாம். பேரப் பிள்ளையாண்டானுக்கு எங்கே தமிழைச் சொல்லிக் கொடுத்துப் பழைய பஞ்சாங்கமாக்கிவிடப் போகிறேனோ என்று பட்டணத்து மாமன் வீட்டில் இங்கிலீஷ் படிப்புக்கு அனுப்பிவிட்டான். ஏனென்று கேட்க யார் இருக்கிறார் இங்கே? 'அந்த ஏட்டை நேரே எடுத்து வை' என்று மூன்று நாளாக முட்டிக் கொள்கிறேன். கவனிப்பாரில்லையே? கையாலாகாமையும், மூப்பும் வந்துவிட்டால் வாயைத் திறக்கக்கூடாது. திறந்தால் மரியாதை போய்விடும். இருக்கிறவரை கிடைக்கிறதைச் சாப்பிட்டுவிட்டு மானமாக இருந்துவிட்டுப் போய்விட வேண்டும்.

தேசிகர் மார்பு மேலெழும்பித் தணிய பெருமூச்சு விட்டார். கம்பளிப்பூச்சி பட்ட இடத்தில் அரிக்கிற மாதிரி மனத்தில் வேதனை அரித்தது. 'ஆலமரம்போல் வரி வழியாக விழுதூன்றி வளர்ந்த இந்த மரபு அழிய வேண்டியது தானா? எத்தனை இலக்கண நுணுக்கங்கள்? எல்லாவற்றையும் என்னோடு சாகவிட வேண்டியதுதானா? இந்த ஞான வித்துக்களை விதைத்துவிட்டுப் போக நிலமில்லையா?' என்று ஏங்கினார். கப்பும் கவடுமாகக் கிளைவிட்டு ஊன்றிப் படர்ந்த பெரிய ஆலமரமொன்று ஆணி வேரற்று முறிந்து விழுவது போல் மானசீகமாக ஒரு தோற்றம் தேசிகருக்கு உண்டாயிற்று. அதைக் கற்பனை செய்து பார்க்கும்போதே மனதுக்குக் கஷ்டமாக இருந்தது அவருக்கு. எங்கும் கிடைக்காத அரிய மருந்துச் செடியைப் பிடுங்கி எறிந்து அழிப்பதுபோல் வேதனை தந்தது. அவருடைய தந்தை

வீரபத்திர தேசிகர் மரணப் படுக்கையிலிருந்து கொண்டே அவரிடம் கடைசியாகக் கூறிவிட்டுப் போன வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. "அடே; அம்பலவாணா! இந்தக் குடும்பத்துக்கு நான் நிலமும், நீச்சும், ரொக்கப்பணமும் சேர்த்துவைத்து விட்டுப் போகவில்லை. இந்த ஏடுகளைச் சேர்த்து வைத்துவிட்டுப் போகிறேன். உன் தாத்தா எனக்குச் சேர்த்து வைத்தது இதுதான். இதையே உனக்கு நான் வைத்துப் போகிறேன். இந்தக் குடும்பத்தின் ஞானம் மணக்கும் பெரியவர்களின் கைகளெல்லாம் தொட்டுப் பழகிய ஏடுகள் அப்பா இவை! இந்த வீட்டின் அழியாத மங்கலப் பொருள்கள் இவை. இவற்றைக் காப்பாற்று. இவற்றால் உன்னைக் காப்பாற்றிக் கொள்..." என்று அம்பலவான தேசிகரின் தந்தை சிவபதமடையுமுன் அவரிடம் கூறிவிட்டுப் போனார். தாம் சிவபதமடையுமுன் 'இதே வார்த்தைகளை யாரிடம் கூறமுடியும்?' என்று எண்ணியபோது தேசிகருக்குக் கண்களில் நீர் கசிந்தது. தாலுக்காக் கச்சேரியில் அடிமை வேலை பார்க்கும் மகனிடம் கூறினால் அதைப் பொருட்படுத்திக் கேட்கவே மாட்டானே!

காலால் அறைக் கதவை உதைத்துச் சாத்திவிட்டுத் தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு ஓசைப்படாமல் மெல்ல குமுறியழுதார் தேசிகர். உடல் ஓய்ந்து, படுக்கையில் கிடந்து அழுவதுதான் ஆறுதலாக இருந்தது அப்போது. மனிதனுடைய ஆற்றாமைக்கு அழுகைதான் எல்லை. வேதனைகளை மன விளிம்பில் ஒன்று கட்டிக் கொண்டு மௌனமாக யாருக்கும் தெரியாமல் அழுது கரைவதில் ஒரு ஆத்மிகமான சுகம் இருந்தது. ஒவ்வொரு மனிதனும் எல்லையற்ற நாள் வெள்ளமான தன் வாழ்நாளில் ஒருநாள் ஒரு விநாடியாவது இப்படி அழ வேண்டிய அவசியம் உண்டு.

கதவு 'கீறீச்' சிட்டது. அறை வாசலில் நின்றுகொண்டு உட்புறமாகக் கதவை யாரோ மெல்லத் தள்ளினார்கள். தேசிகர் கண்ணைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து படுத்தார்.

"யாரது?"

"நான்தான் தாத்தா, சரவணன்... உள்ளே வரலாமா?"

"நீ எப்போதடா பட்டணத்திலிருந்து வந்தாய்? நீ வரப்போவதாக உங்கப்பா என்னிடம் சொல்லவேயில்லையே? வா.. இப்படி உள்ளே வந்து உட்கார்ந்து கொள்..." என்று வியப்புத் தொனிக்கக் கூறிவிட்டுப் பேரப்பிள்ளையைப் பார்க்கும் ஆவலோடு கண்ணாடியைத் தேடி எடுத்து அணிந்து கொண்டார்.

"கோடை விடுமுறைக்காக இரண்டு மாதம் லீவு தாத்தா.. பட்டணத்திலேயே இருந்து அலுத்துப் போயிற்று. மாமாவை ரயிலேற்றிவிடச் சொல்லிப் புறப்பட்டு வந்தேன். நான் வரப் போவதாக அப்பாவுக்கே முன் தகவல் தெரியாது..." ஒரு சீப்பு மலைவாழைப் பழத்தையும் இரண்டு சாத்துக்குடியையும் தாத்தாவுக்குப் பக்கத்தில் வைத்துவிட்டு அருகில் உட்கார்ந்தான் பேரக் குழந்தை. பையன் பார்க்க அழகாக இருந்தான். புறங்கிப் பூப்போல் சிவப்பு, களையான முகம், அந்தக் குடும்பத்து முத்திரையான கூர் மூக்கு. சுருள் சுருளான கிராப்புத் தலை. இடுப்பில் நிஜாரும், உடம்பில் அரைக்கைச் சட்டையும் இலங்க அந்தக் கோலத்தில் பையன் பார்க்க,

நன்றாக இருந்தான். நகர்ப் புறத்தில் வளர்ந்த மினுமினுப்பும் தெளிவும் முகத்தில் தெரிந்தன.

"இப்போது எந்த வகுப்புப் படிக்கிறாயடா குழந்தை?"

"ஃபோர்த் பாரம் படிக்கிறேன் தாத்தா.."

"நன்றாகப் படிக்கிறாயோ....?"

சிறுவன் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. வெட்கத்தோடு தலையைக் குனிந்து கொண்டான்.

"நீ படிக்கிறாயே இப்போது இந்தப் படிப்பிலே தமிழெல்லாங் கூட உண்டா குழந்தை?"

"நிறைய உண்டு தாத்தா.. கம்பராமயணத்திலே குகப் படலம்... இளையான்குடிமாற நாயனார் புராணம் - குறள், நாலடியார் எல்லாம் சொல்லிக் கொடுக்கிறார்... தாத்தா.

"அப்படியா? எங்கே? குகப் படலத்திலே ஒரு பாட்டுச் சொல்லு; பார்க்கலாம்..."

"அல்லையாண்டமைந்த மேனி அழகனும் அவளும்..." பையன் பாடி முடித்தான். அவனுடைய வாக்கு கணீரென்று சுத்தமாக ஒலிப் பிழையின்றி இருந்தது.

"ஏண்டா குழந்தை? இப்படியே இராகத்தோடு சொல்லிக் கொடுக்கிறார்களா, உனக்கு?"

"இல்லை தாத்தா; பள்ளிக் கூடத்தில் பாட்டு மட்டும் சும்மா பதம் பிரித்துச் சொல்லிக் கொடுப்பாங்க... பட்டணத்திலே மாமா குடியிருக்கிற தெருவிலே 'கவிஞர் நினைவு மன்றம்'னு ஒரு சங்கம் இருக்கு. அதிலே அடிக்கடி பெரிய பெரிய புலவர்களெல்லாம் வந்து பிரசங்கம் செய்வாங்க. அங்கே ஒருத்தர் தொடர்ந்து கம்பராமாயணம் பிரசங்கம் செய்தார். அவர் பாட்டெல்லாம் இப்படித்தான் ராகத்தோடு பாடுவார்...

"நீ அதற்கெல்லாம் போய்க் கேட்பாயாடா குழந்தை?..."

"கேட்பேனாவது? பள்ளிக்கூடம் விட்டால் என்னை அந்தச் சங்கத்திலே தான் பார்க்கலாம் தாத்தா. பட்டணத்திலே தமிழ்ப் பிரசங்கம் எங்கே நடந்தாலும் போய் கேட்டிட்டு வந்திடுவேன்."

"பள்ளிக் கூடத்திலே இங்கிலீஷ் படிக்கிற பிள்ளைக்கு இதெல்லாம் கேட்டு என்னடா பிரயோசனம்?"

"என்னன்னு சொல்லத் தெரியலை தாத்தா. இதெல்லாம் கேட்கணும், படிக்கணும், சிந்திக்கணும்னு எனக்கு ஒரே ஆசையாயிருக்கு. வெயிலிலே அலையறப்போ தாகமாயிருக்கிறாப் போல இதுலே ஒரே தாகமாயிருக்குத் தாத்தா. போன மாசம் மாமா 'சினிமாவுக்குப் போ'ன்னு கொடுத்த காசையெல்லாம் சேர்த்துக் கொண்டுபோய் மூர்மார்க்கெட்டுலே பழைய புத்தகக் கடையிலே ஒரு நன்னூல் புத்தகம்

வாங்கியிருக்கேன். இன்னும் மாமா அப்பப்போ கொடுக்கிற காசெல்லாம் சேர்த்திட்டு வரேன். அடுத்தாப்போல ஒரு திருக்குறள் பரிமேலழகருரைப் புத்தகம் வாங்கிடனும்னு ஆசை."

தேசிகருக்கு மெய் சிலிர்த்தது. நெஞ்சில் யாரோ கூடை கூடையாக ரோஜாப் பூவைக் கொட்டின மாதிரி இருந்தது. கண்களும், முகமும், மலர்ந்தன. உள்ளேயும் ஏதோ மலர்ந்து சிலிர்த்தது.

"குழந்தை! இப்படிப் பக்கத்திலே வாடாப்பா... உன் முகத்தைப் பார்க்கிறேன்... என்று நாத் தழுதழுக்க உணர்ச்சிவசப்பட்ட குரலில் கூவி அழைத்தார் தேசிகர். பையன் அருகில் வந்தான். அவன் முகத்தைப் பார்த்தார். அங்கே ஆர்வமும், துடிப்பும் ஒளிர்ந்தன. "ராசா! நீ தங்கம்டா..." என்று அப்படியே அவனைத் தழுவிக் கொண்டார். வெளியே அறை வாசலில் பொன்னம்பலத்தின் குரல் கேட்டது.

"என்னடா வந்ததும் வராததுமாகத் தாத்தாவிடம் போய் அரட்டை? லீவில் கழுதை மேய்க்கலாமென்று இந்தப் பட்டிக்காட்டுக் குட்டிச் சுவரைத் தேடி வந்தாயிற்று! 'உருப்படியாக ஏதாவது டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூடில் சேர்த்து லீவை அங்கேயே கழிக்க ஏற்பாடு செய்' - என்று இன்றைக்குக் காலையில் தான் மாமாவுக்குக் கடிதம் எழுதினேன். நீ என்னடா என்றால் சொல்லாமல், கொள்ளாமல் இங்கே வந்து குதித்திருக்கிறாய்! போ, போய் ஏதாவது இங்கிலீஷ் புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு படி... வீண் அரட்டையடிக்காதே..." என்று இரைந்தான் பொன்னம்பலம்.

"தாத்தா! அப்பா கூப்பாடு போடறார்.. போய்விட்டு அவர் வெளியே போனப்புறம் மறுபடியும் வரேன். நீங்க இந்தப் பழத்தை எடுத்துக்குங்க..." என்று மெல்லச் சொல்லிவிட்டு வெளியே நழுவினான் பேரப்பிள்ளையாண்டான்.

அன்றைக்கு மத்தியானம் தேசிகருக்கு நிம்மதியாகத் தூக்கம் வந்தது. தூக்கம் கலைந்து அவர் கண் விழித்தபோது அறைக்குள் ஏதோ ஓசை கேட்டது. கண்ணாடியைப் போட்டுக் கொண்டு நிமிர்ந்து உற்றுப் பார்த்தார்.

பேரப் பிள்ளையாண்டான் சரவணன், ஏடுகளைத் தூசிதட்டிப் பிரித்து உதறி அடுக்கிக் கொண்டிருந்தான்.

"ஏண்டா குழந்தை, இந்தக் காரியமெல்லாம் உன்னை யாருடா செய்யச் சொன்னது?"

"யாரு தாத்தா சொல்லனும்? அப்பா வெளியிலே போனப்புறம் இங்கே வந்தேன். நீங்க நல்லா அசந்து தூங்கிக்கிட்டிருந்தீங்க. இதெல்லாம் பக்கத்திலே வந்து பார்த்தேன். ஒரே தூசியும், கீசியுமாத் தாறுமாறாகக் கிடந்தது. எடுத்துச் சரிசெய்து அடுக்கலாம்னு ஆரம்பிச்சேன்..."

அந்தப் பதிலைக் கேட்டு அயர்ந்து போனார் தேசிகர். பேச நாவெழாத பேரானந்தத் திருப்தியில் சிக்குண்டு அப்படியே பேரனை வைத்த கண் வாங்காமல்

பார்த்தார் அவர். இத்தனை காலமாக மனத்தில் சுமந்து கொண்டிருந்த ஆற்றாமையும், ஏக்கமும் மறைந்து, புதிதாக ஏதோ ஒரு எழுச்சி மனத்தில் ஏற்படுவது போலிருந்தது.

அப்போது பேரன் அழைத்தான்.

"தாத்தாவ்..." அழைப்பில் எதையோ வேண்டும் குழைவு தயங்கியது. "என்னடா குழந்தை?"

"எனக்கு நீங்க ஒரு உதவி செய்யனும்..."

"என்ன உதவி?"

"அப்பாவுக்குப் பயந்து மாட்டேங்கப்படாது...?"

"இல்லைடா.. செய்யறேன்... என்னன்னு சொல்லு?"

"தினம் அப்பா வெளியிலே போனதும் நான் உங்க 'ரூமு'க்கு வந்திட்றேன். நீங்க எனக்கு நிறையத் தமிழ்ப் பாட்டெல்லாம் சொல்லித் தரணும்... அப்பாவுக்குத் தெரியப் படாது."

"தெரிஞ்சா என்னவாம்?"

"தெரியப்படாதுன்னாத் தெரியப்படாது. அவ்வளவு தான். தெரிஞ்சாக் கோவிச்சுக்குவாரு; அந்தப் 'பண்டாரப் பாட்டெல்லாம் வேண்டாம்டா'ம்பாரு..."

"எப்பவாவது சொன்னானா அப்படி?"

"எப்பவாவதென்ன? நேத்திக்கிக் கூடச் சொன்னாரு, "சும்மாச் சும்மாத் தாத்தா ரூம்லே என்னடா வேலை? அந்தப் பண்டாரப் பாட்டெல்லாம் படிக்கவா உன்னை இங்கிலீஷ் பள்ளிக் கூடத்துல சேர்த்திருக்கு? போய் 'ரென் அன் மார்ட்டின்' 'கிராமரை' எடுத்துப்படிடா கழுதை, அப்படின்னு நேத்துக் கூப்பாடு போட்டாரு."

தேசிகர் மெல்லச் சிரித்துக் கொண்டார். "ஏண்டா குழந்தை; அப்பா சொல்றபடி அதைத்தான் படியேன்! இந்தப் பாட்டெல்லாம் உனக்குத் தெரிஞ்சு என்ன ஆகணும்?"

"படிக்கணும்னு ஆசையாயிருக்கிறது தாத்தா..." அவனுக்கு அதற்குமேல் அந்த ஆசையை - அந்தத் துடிப்பை அந்தத் தாகத்தை எப்படி வெளியிடுவதென்று தெரியவில்லை. குடும்பத்தின் பரம்பரையான தமிழ்ச் செல்வம் அழிந்துவிடக் கூடாதென்று முன்னோர்களில் யாரோ ஒருவர் மறுபிறவி எடுத்து வந்து பேரப்பிள்ளையாண்டான் சரவணனாக முன்னால் நின்று கொண்டு கொஞ்சுவதுபோல தேசிகருக்கு ஒரு பிரமை ஏற்பட்டது. சிறுவன் சொல்லிலும், பார்வையிலும், முகத்திலும் ஏக்கம் திகழக் கிழவரைப் பார்த்தான். 'பருகுவனன்ன ஆர்வத்தனாகி' என்று நன்னூல் சொல்லியிருந்ததே, அந்த ஆர்வத்தை அந்த முகத்தில் கண்டார் தேசிகர். தலைமுறை தலைமுறையாக, பிறவி பிறவியாகக் காத்துக் கிடந்து கெஞ்சுவது போல் ஒரு தாகம் அந்தப் பன்னிரண்டு வயதுப் பிள்ளையின் கண்களில் நிலவிற்று.

*"தாத்தா... சொல்லித் தர மாட்டீங்களா?"*

*"கட்டாயம் சொல்லித் தருகிறேனடா குழந்தை! உனக்குச் சொல்லித் தராமல் வேறு யாருக்கடா சொல்லித் தரப் போகிறேன்? எழுபத்திரண்டு வருடங்களாக இப்படி ஒரு தாகத்தைத் தான் இந்தப் பரம்பரையில் தேடிக் கொண்டிருந்தேனடா குழந்தை! இப்படி என் அருகில் வா..." தேசிகருக்கு மெய் மயிர் சிலிர்த்து விழிகளில் ஆனந்தக் கண்ணீர் அரும்பியது.*

*பையன் அருகில் வந்தான். தாமரைப் பூப்போல் சிவந்த அந்தச் சிறுவனின் கைகளை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டார் அவர்.*

*"குழந்தை! முதலில் நிகண்டு மனப்பாடம் செய்யவேண்டும். கீழ்வரிசையில் எட்டாவது ஏடு சூடாமணி நிகண்டு - அதை எடு. இன்று புதன்கிழமை, பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது. இப்போதே ஆரம்பித்து விடலாம்." பையன் நிகண்டை எடுப்பதற்காக எழுந்தான்.*

*"ஆலமரம் அழியாது! அழியவில்லை. புதிது புதிதாக விழுதுகளை ஊன்றிப் பரம்பரையாக வளரும். இங்கேயும் இந்தப் பரம்பரை அழியாது. ஒரு புதிய விழுது ஊன்றிவிட்டது...." என்று வாய்க்குள் முணுமுணுத்தார் கிழவர்.*

**(நாடக விழா மலர், பம்பாய்த் தமிழ்ச் சங்கம், 1959)**

## 40. வேப்பம் பழம்

கிழக்கு வானத்தில் பகல் பூத்துக் கொண்டிருந்த நேரம். மண்ணுலகத்து இன்பமெல்லாம் ஒன்று சேர்ந்து காற்றாய் வீசுவதுபோல் வேப்பமரத்துக் காற்று வீசிக் கொண்டிருந்தது. காகம் கரையும் ஒலி, மேல் வீட்டுப் பாகவதர் பூபாளம் பாடும் அழகு, பக்கத்து வீட்டு மாட்டுக் கொட்டத்தில் பால் கறக்கும் ஒலி, தெரு வாசலில் சாணம் தெளிக்கும் ஓசை, இடையிடையே வாசலில் கோலம் போடும் பெண்கரங்களின் வளைக் குலுங்கல் -கோவில் விசுவரூப மணியோசை காற்றில் மிதந்துவரும் நாதம்.

அடாடா! அந்தச் சின்னஞ்சிறு கிராமத்தில் வைகறைப் போது எவ்வளவு அழகாயிருக்கிறது? உழவு மாடு ஓட்டிக் கொண்டு போகும் உழவன், காய்கறிக்காரன், தயிர்க்காரி, பால்காரன் என்று தெருவில் மனிதர்கள் நடமாடுகிற உயிர்த்துடிப்பில் எத்தனை எழில்! கிழக்கே தெரு முடியும் இடத்துக்கு அப்பால் தென்னைமரக் கூட்டத்தில் சூரியோதயத்தில் ஒளி பரவும் அழகைப் பார்த்துக் கொண்டே வேப்ப மரத்தடியில் நின்றிருந்தார் பேராசிரியர் சிற்சபேசன். கிராமத்தின் அழகிலும் தூய்மையும், அமைதியும் நிறைந்த அந்தக் காலை நேரத்துச் சூழ்நிலையிலும் தோய்ந்து நின்ற அவர் மனத்தில் வளமான சிந்தனைகள் உண்டாயின.

பின்னால் யாரோ நடந்து வருகிற ஓசை கேட்டுத் திரும்பினார் சிற்சபேசன். கையில் கூடையும் விளக்குமாறுமாக ஒரு சிறுமி வந்து கொண்டிருந்தாள். அவர் நின்று கொண்டிருந்த வேப்ப மரத்தடியை நோக்கித்தான் வருவதாகத் தோன்றியது.

"மாமா...! நீங்கள்தான் இந்த வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருப்பதாகச் சொன்னாங்க. நான் வீடெல்லாம் தெளித்துப் பெருக்கிச் சுத்தமா வைத்துக் கொள்வேன். வீட்டிலே சமையலுக்கு உதவியா எடுபிடிக் காரியமெல்லாம் செய்து கொடுப்பேன். சம்பளம்னு பெரிசா ஒண்ணும் கேட்கமாட்டேன். ஏதோ உங்களாலே முடிஞ்சதைக்கொடுத்தால் திருப்தியா வாங்கிக்குவேன். எனக்கு அப்பா அம்மா யாரும் இல்லை. ஒரு தம்பி இருக்கான். எலிமெண்டரி ஸ்கூல்லே அவன் மூணாங் கிளாஸ் படிக்கிறான். நான் உழைச்சுத்தான் காப்பாற்றியாகணும்."

சிற்பசேனுக்கு முன்னால் வந்து நின்று கொண்டு பணிவான குரலில் கூறினாள் அந்தச் சிறுமி. அழுக்குச் சிற்றாடையும் கிழிந்த தாவணியுமாக ஏழ்மைக் கோலத்தில் நின்ற அந்தச் சிறுமியை நன்றாய்ப் பார்த்தார் சிற்சபேசன்.

பதின்மூன்று அல்லது பதினாலு வயது மதிக்கலாம். வயதுக்கு மீறின வளர்த்தி. குச்சிபோல் வளர்ந்திருந்தாள். எதற்கோ ஏங்கிக்கொண்டே வளர்ந்தது போன்ற முகத்தோற்றம். ஆனாலும் பார்த்தவுடன் மனத்தில் பதிந்துவிடக்கூடிய ஒரு சோகக்

களை அந்த முகத்தில் இருந்தது. அந்த வயதுக்கு இருக்க வேண்டிய கூச்சமும், நாணமும் அற்றுப்போய், ஏதோ பெரிய பொறுப்பைச் சுமந்து கொண்டு வாழ்கிறாற்போல் கண்களில் ஓர் ஒளி அமைந்திருந்தது. பேச்சில் காரியத்தைச் சாதித்துக் கொள்கிற ஒட்டுறவு; சொற்களில் ஏழைமையின் குழைவு. நம்பிக்கையோடு சிற்சபேசனின் முகத்தைப் பார்த்துக் கொண்டு நின்றாள் அந்தச் சிறுமி. வானத்தில் மேகத்தைத் தேடும் வறண்ட நிலத்து உழவனின் முகம் போல் அந்த முகத்தில் ஓர் ஆசைத் துடிப்பு மிதந்தது. சிற்சபேசன் வாய் திறந்தார்.

"உன் பேர் என்ன குழந்தை?"

"பட்டூன்னு சொன்னாத் தெரியும், சார்! இந்த ஊர்லே நான் வேலை செய்யற வீடுகளிலே கேட்டுப் பாருங்கள் சார்! என்னைப் பற்றி நல்லபடியாச் சொல்லுவாங்க..."

"அதிருக்கட்டும்! நீ பள்ளிக்கூடத்தில் படிக்கலியா?"

"எப்படி சார் படிக்க முடியும்? நான் சின்னவளா இருக்கப்பவே அம்மா போயிட்டா. அப்பாவுக்குச் சமையல் வேலை. கல்யாணம் கார்த்திகைன்னு முக்கால்வாசி நாள் வெளியூருக்குச் சமையல் வேலைக்குப் போயிடுவார். தம்பி அப்போ சின்னக் குழந்தையா இருந்தான். நான்தான் வீட்டோடு இருந்து பார்த்துக்கணும். தம்பி பெரியவன் ஆகி நெனைவு தெரியற சமயத்திலே அப்பாவும் செத்துப்போயிட்டா. அப்போ எனக்குப் பதினோரு வயது. பொறுப்பெல்லாம் என் தலையிலே விழுந்துடுத்து..."

"அதிலேயிருந்து இப்படித்தான் காரியம் செய்து சம்பாதிச்சுக் குடும்பத்தைக் காப்பாத்தறாயாக்கும்?"

"ஆமாம், சார்! எங்களுக்கு வேறே யாரும் இல்லே. மாமான்னு ஒருத்தர் மெட்ராஸ்லே இருக்கார். பேருக்குத்தான் அவர் மாமா. அவராலே உபகாரம் ஒண்ணுமில்லே. அப்பா போனப்போ கடிதம் எழுதினேன். அவர் திரும்பிக்கூடப் பார்க்கலே."

"வேறு யாரும் உறவு இல்லையா?"

"இந்த ஊரிலே இல்லே. எங்கெங்கேயோ இருக்கா. யாருமே எட்டிப் பார்க்கலே. பணம் காசு, சொத்து சுகம்னா எட்டிப் பார்ப்பா. நாங்க ஏழைப்பட்டவான்னு இளப்பம். யாரும் இருக்கியா, செத்தியான்னுகூடக் கேட்க வரலை. இந்த ஊர்க் கிராம முன்சீப் இருக்காரே, ரத்னம் பிள்ளைன்னு ஒல்லியா சிவப்பா சந்தனப்பொட்டு வைச்சிண்டு சாவடி வாசல்லே உட்கார்ந்து கணக்கெழுதிண்டிருப்பாரே - அவர்தான் ஒரு வழியா என்னைத் தைரியப்படுத்தினார். என்னைக் கூப்பிட்டார். 'குழந்தை! நீ தைரியமா இருக்கணும். தம்பியைப் படிக்க வைச்சுப் பெரியவனாக்கிறவரை நான் சொல்ற படி செய்; ஊர்லே நாலு வீட்டிலே எடுபிடி காரியம், பெருக்கத் தெளிக்க ஏற்பாடு செய்யறேன். அதிலே கிடைக்கறதை வச்சிட்டு மானமாப் பிழைக்கலாம்' - அப்படின்னு ஒரு வழி பண்ணிவிட்டார். அப்பா சொத்து, சுகம்னு ஒண்ணும்

வைச்சிட்டுப் போகலேன்னாலும், ஒண்டிக்கிறதுக்கு ஒரு சின்ன ஓட்டு வீடு கையகலத்துக்கு வைச்சிட்டுப் போயிருக்கார். மேலக்கோடியிலே சின்னதா பீத்தல் நார்ப்பெட்டி மாதிரி ஓர் ஓட்டுக்குச்சு - நீங்ககூடப் பார்த்திருப்பீங்க. வாசல்லே எருக்கஞ்செடி மொளைச்சிருக்கும். தம்பியும், நானும் அதுலேதான் காலத்தைத் தள்ளிண்டு வரோம்..."

"சாப்பாடு?"

"நானே சமைச்சுக்குவேன். எனக்கு எல்லாம் தெரியும் சார்...!"

"அது சரி! நான் இந்த வீட்டுக்குக் குடி வந்திருக்கேன்னு உனக்கு யார் சொன்னாங்க?"

"அதுவா? நேத்துச் சாயங்காலம் கிராம முன்சீப் சொன்னார். 'பட்டு! அந்த வேப்பமரத்தடி வீட்டுக்குப் பட்டணத்திலிருந்து ஒரு புரொபஸர் ரிட்டையராகி வந்திருக்கார். நாளைக் காலையிலே போய்ப் பாரு' என்றார். அதான் வந்தேன் சார்."

"எல்லாம் சரி. எனக்கு உன்னை ரொம்பப் பிடிச்சிருக்கு. எங்க வீட்டிலேயும் நீயே வேலை செய்யலாம்... காலையிலே சுத்தமா வாசலைப் பெருக்கித் தெளிச்சிக் கோலம் போட்டுடணும். அப்புறம் உள்ளே மாமிக்கு ஒத்தாசையாச் சமையலுக்கு நாலு குடம் தண்ணீர் இரைத்துக் கொடுக்கணும். சாயங்காலமும் ஒரு தரம் வீடு பெருக்கணும். இவ்வளவுக்குமாக மாசத்துக்கு உனக்கு என்ன சம்பளம் வேணும்...?"

"அதுதான் நான் அப்பவே சொன்னேனே, சார்! சம்பளம்னு பெரிசா ஒண்ணும் கேட்கமாட்டேன். நீங்க கொடுத்ததைத் திருப்தியா வாங்கிப்பேன். சம்பளமா பெரிசு? மனுஷாள்தான் வேணும்!"

சிற்சபேசன் அதிசயித்தார். ஏழைமை அந்தப் பெண்ணுக்கு எவ்வளவு விநயமாகப் பேசும் பழக்கத்தை உண்டாக்கியிருக்கிறது என்று எண்ணியபோது, அவருக்கு வியப்பாயிருந்தது. உலகத்தைப் புரிந்து கொண்டு - சுற்றியிருப்பவர்களையும், சூழ்நிலையையும் நன்றாகத் தெரிந்து கொண்டு அந்தக் கசப்பை அங்கீகரித்துவிட்ட ஒரு தெம்பு அந்தச் சிறுமியிடம் தென்பட்டது. 'நமக்கு இதுதான் வாழ்வு - இதைக் கொண்டுதான் சமாளித்துக் கொள்ள வேண்டும்' என்கிற மாதிரி ஒரு நிறைவை அவளிடம் காணமுடிந்தது.

"சரி, குழந்தை! இன்னியிலிருந்து காரியத்தைப் பாரு, நான் பாத்துக் கொள்கிறேன்" என்றார் சிற்சபேசன். பட்டு நெடுநாட்கள் அந்த வீட்டில் பழகிய வேலைக்காரியைப் போல், சிற்றாடை நுனியை இழுத்துச் செருகிக்கொண்டு வாசலைப் பெருக்க ஆரம்பித்தாள்.

சிற்சபேசன் வீட்டுக்குள் போய்க் காப்பி குடித்துவிட்டு, மனைவியிடம் வேலைக்காரச் சிறுமி கிடைத்த பெருமையை அளந்தார். மறுபடியும் திரும்பி அவர் வாசற்பக்கம் வந்தபோது தரையில் விளக்குமாறு புரளும் பெருக்கல் ஓசை

கேட்கவில்லை. வேப்பமரத்தடியில் குனிந்து எதையோ பொறுக்கி எடுத்து ஒவ்வொன்றாக வாயில் போட்டுச் சுவைத்துத் துப்பிக் கொண்டிருந்தாள் பட்டு.

"எதையோ பொறுக்கிச் சாப்பிடுகிறாயே...? அதென்னது?"

"வேப்பம் பழம் சார்! எனக்கு ரொம்பப் பிடிக்கும்... இந்த மரத்தடியிலே நிறைய உதிர்ந்திருக்கு..."

"வேப்பம் பழமா?... ஐயையே... கசக்காதோ உனக்கு?"

"கசப்பு உடம்புக்கு நல்லதாம் சார்; எங்கப்பா அடிக்கடி சொல்லுவார். காயா இருக்கறப்போ இது விஷமாகக் கசக்கும். பழுத்திட்டால் தகதகன்னு தங்கம்போல் ஒரு நிறம் வரும். அப்போ சாப்பிட்டாக் கசப்பே தெரியாது. அசட்டுத் தித்திப்பா ஒரு இனிப்பு இருக்கும். மென்னு கடிச்சு முழுங்கிடப்படாது. இலேசாச் சப்பிச் சுவைத்து விட்டுத் துப்பிடணும்..."

"எங்கே, இப்படி ஒண்ணு கொடு; பார்க்கலாம்..." சிற்சபேசன் பட்டுவுக்கு முன்னால் வந்து கையை நீட்டினார்.

"வேண்டாம், ஸார்! பழக்கமில்லாட்டாக் கசப்பு ஒட்டாது... குடலைக் குமட்டிண்டு வாந்தியெடுக்க வரும்..."

"கொடேன்... பார்க்கலாம்..."

பட்டு சொன்னது மெய்யாகிவிட்டது. பழத்தை வாயில் போட்டுக் கொண்ட மறுகணமே, குமட்டலோடு காறித் துப்பினார் சிற்சபேசன். "நல்ல காப்பி சாப்பிட்ட மணத்தையெல்லாம் கெடுத்து வாயை நாற அடித்துவிட்டதே, இந்தப் பாழும் வேப்பம் பழம்!" என்றார்.

"நான்தான் மொதல்லேயே சொன்னேனே, சார்! பழகாட்டாக் கசப்பு ஒட்டாதுன்னு. எனக்கு ரொம்ப நாட்களாகவே இந்தப் பழத்தைச் சாப்பிட்டுப் பழக்கம். ஒரே சமயத்திலே பத்துப் பன்னண்டுகூடச் சாப்பிடுவேன்."

வேப்பம் பழத்தைச் 'சாக்லேட்'டாக விழுங்கும் அந்த அதிசயச் சிறுமியின் பழக்கத்தை வியந்து கொண்டே, வாயைக் கொப்பளிக்க உள்ளே சென்றார் சிற்சபேசன். வாயைக் கொப்பளித்துக் கழுவிய பின்னும் அந்தக் கசப்பும், கமறல் நாற்றமும் போகவில்லை. வெகு நேரம் காறித் துப்பிக் கொண்டே இருந்தார். வாசல் தெளித்துக் கோலம் போட்டு வீடு பெருக்கித் தண்ணீர் எடுத்துக் கொடுத்துவிட்டுப் பட்டு போய்விட்டாள். போகும் போது "வரேன் மாமி, வரேன் சார்" என்று உற்சாகமாகக் குரல் கொடுத்துச் சொல்லிக் கொண்டு போனாள். அந்தக் குரலில் ஓடியாடி வேலை செய்த களைப்பின் சலிப்போ, அலுப்போ இல்லை. யாரோ உறவுக்காரப் பெண், பார்க்க வந்துவிட்டுச் சொல்லிக்கொண்டு போகிற மாதிரி ஒரு தன்மையான சுபாவமான இனிமை இருந்தது.

சிற்சபேசனிடமும், ஸ்ரீமதி சிற்சபேசனிடமும் பட்டு நல்ல பேரெடுத்து விட்டாள். "இந்தப் பொண்ணைப் பற்றி ஊரில் யாரைக் கேட்டாலும் பெருமையாத்தான்

சொல்றா. சின்ன வயசிலேயே குடும்பக் கஷ்டம் தெரிஞ்ச பொண்ணாம். அப்பா, அம்மா, ஒருத்தர் இல்லாமே ஒண்டியாத் தானும் பிழைத்துக்கொண்டு, நாலு வீட்டிலே காரியஞ் செஞ்சு தம்பியையும் காப்பாத்தறதாம்'' என்று முதல்நாளே பட்டுவைப் பற்றி அக்கம்பக்கத்திலே கேள்விப்பட்ட பெருமையைக் கணவனிடம் கூறினாள் ஸ்ரீமதி சிற்சபேசன்.

பட்டுவுக்கு ஊர் முழுதும் நல்ல பேர்தான். யார் எந்தக் காரியம் சொன்னாலும் தட்டமாட்டாள். அவள் முகத்தில் கடுகடுப்பையே பார்க்க முடியாது. யாரிடமும் எதற்காகவும் அலுத்துக்கொள்ளமாட்டாள்.

நாலைந்து நாட்கள் கழித்து ஒருநாள் சாயங்காலம் வீடு பெருக்க வரும்போது ஒரு சிறு பையனையும் அழைத்துக் கொண்டு சிற்சபேசன் வீட்டுக்குள் நுழைந்தாள் பட்டு.

"இவன்தான் சார் என் தம்பி. விசுவநாதன்னு பேரு. செல்லமா 'விச்சு'ன்னு கூப்பிடுவேன். இவனை என்னாலே முடிஞ்ச மட்டும் ஒரு 'ஸ்கூல் பைனல்' வரையாவது படிக்க வைச்சி ஆளாக்கி விட்டுடணும்னு இருக்கேன். அதுக்காகத்தான் இத்தனை பாடு படறேன்'' என்று சிற்சபேசனிடம் அந்தச் சிறுவனைக் காட்டிச் சொன்னாள் பட்டு. சிற்சபேசன் சிரித்தார். "ஏன் சார் சிரிக்கிறீங்க? என்னாலே முடியுமான்னு தானே?''

"இல்லே! 'ஸ்கூல் பைனல்'னா இன்னும் ஆறேழு வருஷங்களாவது படிக்கணுமே. அதுவரை நீ இப்படியே சின்னப் பொண்ணா வீடு வீடா ஏறி இறங்கிக் காரியம் செய்ய முடியுமான்னு நினைச்சேன். சிரிப்பு வந்தது.''

"அப்படி நினைக்காதீங்க சார்... என்னாலே கண்டிப்பா முடியும்!... நான் நினைச்சா அதைச் செய்யாம விடமாட்டேன். எப்பாடு பட்டாவது தம்பியைக் கண்டிப்பாய்ப் படிக்க வைச்சுடுவேன் சார்...''

இதைச் சொல்லும்போது பட்டுவின் இடுங்கிய கண்களில் ஒளி மின்னியது.

"பட்டு! உனக்கு நம்பிக்கை ரொம்ப இருக்கு... நீ செய்தாலும் செய்வே...''

"செய்யத்தான் போறேன், சார்! நீங்க நெறையப் படிச்சுப் பெரிய காலேஜிலே எத்தனையோ வருஷம் புரொபஸரா இருந்துட்டு வந்திருக்கீங்க! உங்களோட எல்லாம் வாதாடிப் பேச எனக்குத் தெரியாது. ரத்னம் பிள்ளை அடிக்கடி 'முயற்சி திருவினையாக்கும்' என்று ஏதோ தமிழ் வசனம் சொல்வார். அதுலே எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை.'' - பதின்மூன்று வயதுப் பட்டு பேச ஆரம்பித்துவிட்டால் அந்தப் பேச்சில் நூறு வயது அனுபவம் தொனிக்கும். அப்படி ஒரு முதிர்ச்சி. அப்படி ஒரு தெளிவு.

ஒருநாள் சிற்சபேசன் தெரு வழியே போகும்போது மேலக்கோடியில் தன் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த பட்டு பார்த்துவிட்டாள்.

"சார்! சார்!...'' என்று கத்தி அழைத்தாள். சிற்சபேசன் திரும்பிப் பார்த்தார். பக்கத்தில் வந்தார். "இதுதான் நீ இருக்கிற இடமா, பட்டு?'' என்று கேட்டார்.

"ஆமாம், சார்! இதுதான் எனக்கு அரண்மனை. ஓட்டுக் கூரை வெயிலுக்குக் காயும்; மழைக்கு ஒழுகும். என்ன செய்வது? அப்பா வச்சிட்டுப் போன சொத்து! விடலாமோ!"

"கிழக்கேயும் மேற்கேயும் வீடில்லால் இடிமனைகளாகக் கிடக்கிறதே...? தனியாப் பயமில்லாமே இதிலே உன்னாலே எப்படியிருக்க முடியறது?"

"எப்படியோ இருக்கேன், சார்! எனக்கென்ன பயம்? விச்சு துணைக்கிருக்கான். பணமா? காசா; பயப்படறதுக்கு?"

"ஆமாம்! ஊர்க்காரங்க வீடெல்லாம் வாசல் தெளிச்சுக் கோலம் போடறியே, உன் வீட்டிலே மட்டும் வாசலெல்லாம் எருக்கஞ் செடியா முளைக்க விட்டிருக்கியே?"

"அதுக்கு நேரம் ஏது சார்? எனக்குத்தான் கோழி கூப்பிடறதுக்கு முன்னேயிருந்து இருட்டறவரை வாடிக்கைக்காரங்க வீட்டு வேலை சரியா இருக்கே! இங்கே தம்பிக்கும் எனக்கும் சாப்பாடு வேறே சமைக்கணுமே?" என்று சரியாகக் காரணம் சொல்வாள் பட்டு.

பேராசிரியர் சிற்சபேசன் அந்தக் கிராமத்தில் குடியேறி ஒரு வருடம் ஓடிவிட்டது. பட்டுவின் தம்பி இப்போது நாலாங்கிளாஸ் படிக்கிறான். வீடு பெருக்குகிற வேலைக்காரப் பெண்ணாக இருந்தாலும், அவள் மேல் தனி அனுதாபம் அவருக்கு உண்டு. ஒருநாள் காலை பட்டு வாசல் தெளித்து கோலம் போட வரவில்லை. விடிந்து வெகு நேரமாகிவிட்டது.

"இந்தப் பெண் பட்டு வரலியா இன்றைக்கு?" என்று தம் மனைவியிடம் கேட்டார் சிற்சபேசன்.

"அந்தப் பெண் இனிமேல் வராது!"

"ஏன் அப்படி?"

பதில் சொல்லாமல் அர்த்த புஷ்டியோடு சிரித்தாள் அவர் மனைவி.

"என்ன சிரிக்கிறே?"

"ஒண்ணுமில்லே" என்று சொல்லிக் கொண்டே, கணவன் பக்கத்தில் நெருங்கி வந்து தணிந்த குரலில், "பட்டு பெரிசாயிருக்கா!" என்றாள் அவள்.

சிற்சபேசனுக்குத் திகைப்பு ஒருபுறம்; மகிழ்ச்சி ஒருபுறம். இரண்டையுமே வெளிக்காட்டிக் கொள்ளாமல், "அந்தப் பெண்ணுக்கு இந்த ஊரில் ஏனென்று கேட்கக்கூடத் தன் மனிதர் என்று யாருமே இல்லையே! ஒண்டியா என்ன செய்யறதோ? பாவம்..." என்று தம் மனைவியை நோக்கிச் சொன்னார்.

"எனக்கே இது தெரியாது! நேற்று இராத்திரி பெருமாள் கோவிலுக்குப் போயிட்டுத் திரும்பி வரபோது, அந்தப் பெண்ணோட வீட்டு வாசல்லே ஒரே பெண்கள் கூட்டமாக இருந்தது. என்னன்னு போய் விசாரித்தேன். பட்டு பெரிசாயிருக்கான்னு தகவலைச் சொன்னா. உள்ளே போய்ப் பார்த்தேன். அது ஒரு மூலையில் தலையைக் குனிஞ்சிண்டு உக்கார்ந்திருந்தது. 'என்னடீ பட்டு'ன்னேன். பதில்

சொல்லாமே என்னைப் பார்த்து சிரிச்சுது. அதைப் பார்க்கறபோது எனக்கு மனசு கஷ்டமா இருந்தது. பெத்தவ இருந்தா இப்படி ஒரு மங்களமான காரியம் நடந்ததைப் பெருமையான நாலு பேருக்குச் சொல்லுவா. வாசல்லே கோலம் போட்டுக் கொண்டாடித் தலைவாரிப் பூ வைச்சுப் பிட்டும், உருண்டையும் பண்ணி நாலு பெண்களைக் கூப்பிட்டுக் கொடுப்பா. யார் இருக்கா இதுக்கு அதெல்லாம் செய்ய? அனாதையா அழுக்குச் சித்தாடையைக் கட்டிண்டு மூலையிலே உட்கார்ந் திண்டிருக்கு..."

"ஐயோ பாவம்! நீயும் இந்த ஊர் அசல் மனிதர்களைப் போலப் பேசாமல் இருந்துவிடாதே. சாயங்காலமா யூசுப் ராவுத்தர் ஜவுளிக் கடையிலேயிருந்து ஒரு சீட்டிச்சிற்றாடை வாங்கிட்டு வந்து தரேன். வாசல்லே பூக்காரன் வந்தால் கொஞ்சம் பூவும் வாங்கி வைச்சுக்கோ. போய் ஏதோ முறையாய்ச் செய்வதை செஞ்சிட்டு வா. அது குளித்து வருகிற வரையில் அந்தச் சின்னப் பையனை இங்கே வந்து சாப்பிடச் சொல்லிவிட்டு வா. பட்டுவுக்கும் கொண்டு போய் போட்டுடு" என்று பரிவோடு சொன்னார் சிற்சபேசன்.

அவர் கூறியபடியே நடந்தது. சாயங்காலம் அவர் மனைவி ஒரு பழுக்காத் தாம்பாளத்தில் புதுச்சிற்றாடையும், பூவும் மஞ்சள் குங்குமமும் ஒரு டஜன் கண்ணாடி வளையலும் எடுத்து வைத்துப் புடவைத் தலைப்பால் மூடிக் கொண்டு பட்டுவின் வீட்டிற்குச் சென்றாள்.

போனவள் வீட்டுக்குத் திரும்பி வரும்போது இரவு ஏழு மணிக்கு மேலாகிவிட்டது.

"என்ன? பட்டு என்ன சொல்றாள்?" என்று விசாரித்தார் சிற்சபேசன்.

"அதை ஏன் கேக்கறேள்? நான் புதுச்சித்தாடையும் பூவுமாய் போய் நின்னதும் அந்தப் பெண் ஒரே பிடிவாதமா 'இதெல்லாம் வேண்டாம் மாமி'ன்னு அடம் பிடித்தது. 'நான் பிறந்து வளர்ந்த சீருக்கு இதெல்லாம் இல்லைன்னு ஒரு குறையா? நீங்க ஏன் வீணா சிரமப்படணும்?' என்று சிரிச்சுண்டே சொல்லிற்று. 'அதுக்கில்லையடி பெண்ணே! இதெல்லாம் வழக்கம்டீ! ஆயிரம் கஷ்டமானாலும் முறையை விடப்படாது. நல்லது நாளைக்கு வருமா?' என்று நானாக வற்புறுத்திச் சொல்லி, எல்லாம் செய்துவிட்டு வந்தேன்" என்றாள் அவர் மனைவி.

"என்னவோ, இதிலே நமக்கு ஒரு திருப்தி! அவ்வளவுதான்" என்று மனநிறைவோடு சொன்னார் சிற்சபேசன்.

"இத்தனை நாட்கள் முகத்தைச் சுளிக்காமல் உழைச்சுது, சம்பளம்னு ஏதோ கொடுத்தோம். ஆனால் அது உழைச்சதுக்கு நீங்க கொடுத்த நாலைந்து ரூபாய் காசு காணவே காணாது... பெரிசாப் போனப்புறம் இன்னமே எங்கே வீடு வீடா வாசல் பெருக்க வரப்போறது?" என்று சொல்லிப் பெருமூச்சுவிட்டாள் சிற்சபேசனின் மனைவி.

"அப்படியானால் இனிமேல் பட்டு வேலைக்கு வரமாட்டாள் என்கிறாயா?"

"அப்படி அவள் சொல்லலையானாலும் எனக்குத் தோணறது" என்றாள் அவர் மனைவி. சாயங்காலம் சாவடியில் தற்செயலாகக் கிராம முன்சீப் ரத்னம் பிள்ளையைச் சந்தித்தார் சிற்சபேசன். பட்டுவைப் பற்றி ஏதோ பேச்சு வந்தது.

"எனக்கு அந்தப் பெண் பேரிலே தனி அனுதாபம் சார்! இதுவரை எப்படியோ நாலு வீட்டில் காரியம் செய்து தன்னையும் தன் தம்பிப் பயலையும் காப்பாத்திக் கிட்டுது. இனிமே அது முடியற காரியமில்லையே? துக்கிரிப்பய கிராமம், ஏழைப்பட்ட பெண்ணைப் பற்றி என்ன வேணாலும் பேசும். பெரிசான பொண்ணு வீடு வீடா நுழைஞ்சு வேலை செய்யறது நல்லா இருக்காது. இனிமே எப்படிக் காலம் தள்ளப் போகுதோ?" என்று ரத்னம்பிள்ளை ஏக்கம் நிறைந்த குரலில் சிற்சபேசனிடம் சொன்னார். "எனக்கும் அதுதான் யோசனை" என்றார் சிற்சபேசன்.

ஆனால் பட்டு இந்த மாதிரி எதையுமே யோசிக்கவில்லை என்பது நாலாவது நாள் விடிந்ததும் தெரிந்தது.

இருள் பிரியும் நேரம். காலைக் குளிர் நீங்கவில்லை. மப்ளரை இழுத்துக் கட்டிக் கொண்டு வாசல் பக்கம் வந்த சிற்சபேசன், வேப்ப மரத்தடியில் விளக்குமாறும் கையுமாக நின்று கொண்டிருந்த பட்டுவைப் பார்த்துத் திகைத்துப்போனார்.

நீராடிய கூந்தலை அவள் அள்ளிச் செருகிக் கொஞ்சம் செவந்திப்பூ வைத்திருந்தாள். கைகளில் அவர் மனைவி கொடுத்த புதிய கண்ணாடி வளையல்கள் குலுங்கின. புதிய சீட்டிச் சிற்றாடையும் கட்டிக் கொண்டிருந்தாள்.

'ரத்னம்பிள்ளைகூட அப்படிச் சொன்னாரே! ஒருவரையும் கலந்து யோசனை கேட்டுக் கொள்ளாமல் இந்தப் பெண் இன்னும் இப்படி விளக்குமாறும் கையுமாக வந்து நிற்கிறதே?' என்ற சிந்தனையோடு வேப்பமரத்தடிக்குப் போனார் சிற்சபேசன்.

"சார்! உங்க வீட்டிலேயிருந்து மாமி வந்து என்னை ரொம்பப் பெருமைப்படுத்தினாங்க. என்னாலே வீண் கஷ்டம். நாலு நாளா நான் வராமல் வாசல் பெருக்க முடியாமல் சிரமமாயிருந்திருக்கும். குப்பை சுமந்து போச்சு" என்று வழக்கமாகப் பேசுவதுபோல் ஆரம்பித்தாள் பட்டு.

"அது சரி, பட்டு! நான் ஒண்ணு கேக்கணும் உன்னை. தப்பா நினைச்சுக்க மாட்டியே?"

"என்ன சார்?"

"இனிமே நீ இப்படி வீடு வீடா வாசற் பெருக்க வர முடியுமா? பெரிய பெண்ணாயிருக்கே... ரத்தனம்பிள்ளைகூட எங்கிட்டச் சொன்னார்... ஊரார் நாலு தினுசாப் பேசறவங்கன்னு..."

பட்டு பெருக்குவதை நிறுத்திவிட்டு அவர் முகத்தைப் பார்த்துச் சிரித்தாள். அந்தச் சிரிப்புக்குத்தான் எத்தனை அர்த்தம்?

"சார்! எனக்கெல்லாம் இப்படிப் பெருமை கொண்டாடட முடியுமா? உழைச்சு வயிறு நிரப்பியாகணும். தம்பியைப் படிக்க வைக்கணும்னு நான் வைராக்கியம்

எடுத்திண்டிருக்கேன். ஊரார் எப்பவுமே நாலு விதமாய்ப் பேசறவங்கதான். பட்டினி கிடந்தா ஏன்னு கேட்க இந்த ஊராருக்குத் துப்பு இருக்கா? அவங்க என்ன பேசினாலும் கேட்க நான் தயாரில்லை."

"சரி! நான் எனக்குப் பட்டதைச் சொல்லிவிட்டேன். அப்புறம் உன் இஷ்டம்" என்று சொல்லிவிட்டு வேப்பமரத்தடியிலிருந்த சிமண்டு மேடையில் உட்கார்ந்தார் சிற்சபேசன். வழக்கம்போல் கிழக்கே சூரியோதயக் காட்சி கிராமத்துக்கே உரிய அசல் அழகோடு தெரிந்துகொண்டிருந்தது. பட்டு வேகமாகப் பெருக்கத் தொடங்கியிருந்தாள். சிறிதுநேரம் கழித்து வீட்டுக்குள்ளே போவதற்காக அவர் எழுந்திருந்தபோது பட்டு பெருக்கி முடித்துவிட்டு மரத்தடியில் வேப்பம் பழம் பொறுக்கிக் கொண்டிருந்தாள்.

"இந்த வேப்பம்பழம் தின்கிற கெட்ட பழக்கம் இன்னும் உன்னிடமிருந்து போகவில்லையே? உன் பழக்கமே உலகத்தோட ஒட்டாமே தனியா இருக்கு! எல்லாருக்கும் வாய்க்கு ருசியா ஏதாவது பழம் பிடிக்கும்னா உனக்கு மட்டும் வாயை நாற அடிக்கிறதுலேயே பிரியம்?" என்று கேலியாகச் சிரித்துக்கொண்டே கேட்டார் சிற்சபேசன்.

"என்ன சார் செய்யறது? சின்ன வயசிலேயிருந்தே எனக்கு இந்தக் கசப்பிலே ஒரு பிரியம். இந்தப் பழத்தைச் சாப்பிட்டுப் பழகிட்டேன். இந்தப் பழத்தினோட கசப்பிலே ஓர் அசட்டு இனிப்பும் இருக்கு சார்?" என்றாள் நிஷ்களங்கமாகச் சிரித்துக் கொண்டே.

பட்டு சொன்ன வார்த்தைகளை அவள் ஒரே அர்த்தத்தை நினைத்துக் கொண்டுதான் சொல்லியிருக்க முடியும்! ஆனால், சிற்சபேசனுக்கு எத்தனையோ அர்த்தங்கள் அந்த வார்த்தைகளிலிருந்து கிடைத்தன.

"பட்டுவுக்கென்ன? கசப்பாயிருக்கிற எதுவுமே அவளுக்குச் சின்ன வயசிலிருந்தே பழக்கம்! பழகினால் கசப்பைப் போல் சுவை வேறே இல்லை" என்று தமக்குள் மெல்ல முணுமுணுத்துக்கொண்டார் சிற்சபேசன்.

**(கல்கி, 15.11.1959)**

## 41. புதிய விளம்பரம்

**வா**ராகமூர்த்தி தம் அருமைப் பெண் பத்மாவைக் கடிந்து கொண்டார்.

“ஏனம்மா, நீ என்னிடம் ஒரு வார்த்தை சொல்லியிருக்கப்படாதா? நான் நாலு ‘செட்’ தைத்து அனுப்பியிருப்பேனே...? ‘கம்பெனி கீப்’ பண்ண வேணுமோல்லியோ? உன் தோழிகளெல்லாம். ‘பாட்மிட்டன் கோர்ட்டு’க்குப் போறபோது ‘யூனிபாரமா’ இந்த ‘டிரஸ்’ தான் உபயோகிக்கிறேன்னா, நீயும் ஏன் போட்டுக்கப்படாது?...”

வராகமூர்த்தியின் பெண் கையில் பூப்பந்து மட்டையோடு தன் தோழிகளுடன் விளையாடப் புறப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில்தான் மேற்படி பிரச்னை எழுந்தது. பூப்பந்து விளையாடப் பெண்களுக்கென்று அந்தக் ‘கண்டோன் மெண்ட்’ பகுதியில் இருந்த அழகிய புல் தரையோடு கூடிய விளையாட்டுக் கூடத்துக்குத்தான் அவர்கள் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். அவ்வளவு பேரிலும் கர்நாடகமாகக் காட்சியளித்தவள் வராகமூர்த்தியின் பெண் பத்மாதான்.

மற்றப் பெண்கள், உடம்பை இறுக்கப் பிடித்துக்கொண்டிருக்கும் ஆணுடையில் காட்சியளித்தனர். மார்புக்கு மேலே சிவப்பும் கீழே வெண்மையுமாக இரு வண்ணத்தில் விளையாட்டு உடை பாணியில் அது இறுக்கமாகவும் பிடித்தமாகவும் இருந்தது. அரையில் முழுக்கால் சட்டை; ‘பாப்’ செய்த தலையேயானாலும், ஆறு கஜம் ஜார்ஜெட் சேலையும், முழங்கை தொடும் சோளியுமாக அவள் அந்தப் பெண்கள் கூட்டத்தில் தனிப்பட்டவளாகக் காட்சியளித்தாள். ரோஜாப் பூக்களின் குவியலுக்கு நடுவே எப்படியோ தப்பித் தவறி ஓர் அரளிப் பூவும் விழுந்து கிடப்பது போல் அவளுடைய கோலம் அங்கே மாற்றுக் குறைந்து, பொருத்தமின்றி விளங்கியது.

அதைத்தான் வராகமூர்த்தி மகளிடம் குறிப்பிட்டுச் சொல்லிக் கடிந்து கொண்டிருந்தார். “எனக்கெதுக்கு அப்பா இதெல்லாம்?” என்று சொல்லி விட்டுப் புள்ளி மான் குதித்தோடுவது போல் பந்தாடும் மெல்லிய மட்டையைச் சுழற்றிக் கொண்டே தோழிகளோடு குதித்து ஓடி விட்டாள் பப்பி.

‘அவள் வேண்டாம்’ என்று சொன்னதற்காக வராக மூர்த்தி சும்மா இருந்துவிடுவதா, என்ன? அப்புறம் அவருடைய கௌரவம் என்ன ஆவது? எந்தப் பரதைப் பயல் வீட்டுப் பெண்களெல்லாமோ நாகரிகம் கொண்டாடுகிற போது ஊரிலேயே பெரிய ஜவுளிக்கடைக்குச் சொந்தக்காரரான என் பெண்ணுக்கு ஏன் குறை வைக்க வேண்டும்?’ லட்சாதிபதிகள், இரண்டு மூன்று கோடீசுவரர்கள் உள்பட அந்தஸ்தை வெளிக்காட்ட முயலும் தகுதி உள்ளவர்கள் வசிக்கின்ற இடமாயிற்றே அது? ‘பாரீஸ் நாகரிகத்’தைப் பச்சையாகக் கடைப்பிடிக்கின்ற இடம் இல்லையா அது?

'பணத்தின் அடித்தளத்தின் மீதிருந்த பாவனை' என்கின்ற பீடு ஒரு காலத்தில் பணக்கார ஆண் பிள்ளைகளின் பெருந்தன்மையில் நிலவியிருந்திருக்கலாம். அதெல்லாம் பழைய விவகாரம். இப்போதெல்லாம் அது பணக்கார வீட்டுப் பெண் பிள்ளைகளின் ஆடையிலும், உயர் குதிச் செருப்பிலும் அடங்கிப் போய்விட்டது. நட்புக்கு உரியவர்களுடன் இருக்கும்போது ஒரே வகைத் தோற்றம் கொண்டு அமைய வேண்டியது பட்டணக் கரைக்கு மிக இன்றியமையாத ஒரு விவகாரம்!

எத்தனையோ விலையுயர்ந்த ரகத் துணிகள் குவிந்து கிடக்கும் பிரம்மாண்டமான ஜவுளிக் கடையின் சொந்தக்காரரானவராக மூர்த்தியிடம் தையல் தொழிலில் பட்டம் வாங்கின ஆறு தையற்காரர்கள் அவர் கடையில் வேலை பார்க்கிறார்களே! மறுநாள் சாயங்காலம் பப்பி விளயாடக் கிளம்புவதற்கு முன்பே நாலு இணை காற் சட்டையும் விளையாட்டு மேலங்கியும் தயாராகி விட்டன!

அவள் அதை அணிந்துகொண்டு 'கம்பெனி கீப்' பண்ணுகிற அழகைப் பார்ப்பதற்காக வராகமூர்த்தி ஜவுளிக் கடையிலிருந்து வீட்டுக்குக் கிளம்பினார்.

"பப்பீ, ரொம்பவும் பிரமாதம்மா! கிளப்பிலிருந்து திரும்பறபோது நினைவாக ஸ்டுடியோவுக்குப் போய் ஒரு போட்டோ எடுத்துக்கோ. 'காபினட்' அளவில் உடனே ஒரு காப்பி போட்டுத் தரச் சொல்லு. வீட்டுக்கு அழகாகக் கண்ணாடி போட்டு மாட்டிக்கிடுவோம்!" என்று கூறி வியந்தார் வராக மூர்த்தி.

மூன்று நாட்கள் கழித்து, வராகமூர்த்தியின் வீட்டு முன்புற ஹாலில் பப்பியின் அந்தக் கோலம் கண்ணாடிக்குள் சட்டமிடப்பட்டு அழகு பூத்துக் கொண்டிருந்தது. கையில் ஒயிலாக ஓங்கிய பூப்பந்து மட்டையோடு அந்த விளையாட்டு உடைகளில், அவளைக் கவர்ச்சிகரமாகப் பிடித்திருந்தான் புகைப்பட நிபுணன்.

பப்பி அன்றிலிருந்து தொடர்ந்து தோழிகளுடன் இணைந்திருந்து ஓர் ஒருமைப்பாட்டை உண்டு பண்ணிக்கொண்டு வந்தாள். வராகமூர்த்தி மனம் பூரித்துக்கொண்டு வந்தார்.

பப்பி பல விளையாட்டுப் போட்டிகளில் கலந்து வெற்றி பெற்றாள். உள்ளூரிலும் வெளியூரிலும் 'விளையாட்டுப் பத்திரிகை'கள் அவளைப் பிரமாதப்படுத்திப் புகழ்கிற அளவுக்கு விளையாட்டிலே முன்னேற்றம் அடைந்துவிட்டாள். முன்னேற்றத்திற்குத் தக்கபடி ஒரு வெளித் தோற்றமும் முன்னேறிக் கொண்டு வந்ததில் வியப் பில்லையல்லவா?

ஒவ்வொரு வருஷமும் தீபாவளிக்கு இரண்டு மாதம் இருக்கும்போது, தம் ஜவுளிக் கடையின் முகப்பில் இருக்கும் அலங்கார விளம்பரக் கண்ணாடிக் கூண்டில் ஏதாவது புதுக்கவர்ச்சியான விளம்பர முறையைக் கையாண்டு கூட்டத்தைக் கவர்வது வராகமூர்த்தியின் வழக்கம். திரைச் சந்தையில் பேருள்ள 'நட்சத்திரம்' மாதிரி 'பிளைவுட்' பலகையில் சித்திரம் எழுதிப் பெரிதாக அலங்கரித்துக் கண்ணாடியில் வைப்பார். பக்தி பூர்வமாக, கிரஷ்ண பரமாத்மா கோபிகா ஸ்திரீகளின் வஸ்திரத்தைக்

கவருவதுபோல் அரங்கமைப்பு செய்து புன்னைமரக் கிளையில் தம் கடைப் புடைவைகளைத் தொங்கவிட்டிருப்பார். இப்படி எத்தனை எத்தனையோ புதுக் கவர்ச்சி முறைகளைக் கொண்டு தீபாவளி வியாபாரத்தை அபிவிருத்தி செய்வார். ஆனால் கவர்ச்சி என்கிற அம்சம் காய்ச்சின பாலைப் போல் என்பது வராகமூர்த்திக்கு நன்றாகத் தெரியும். சீக்கிரம் திரிந்துவிடும்; அல்லது புளித்துப் போகும். பின் மறுபடியும் புதுப் பால் கறந்து காய்ச்சினால்தான் உண்டு. நேற்று எது ஜனங்களைக் கவர்ந்ததோ அதனுடைய கவரும் ஆற்றல் நேற்றோடு தீர்ந்தது. இன்றைக்குப் புதிதாகவும் அதிக வேகமாகவும் கவர வேறு ஒன்று வர வேண்டும். நாளைக்கு அதைவிட ஆற்றலுள்ள வேகமுள்ள புதிய அம்சம் வரவேணும். 'விளம்பரம்' என்கிற தத்துவம் இதுதான். 'அலங்காரக் கண்ணாடிப் பெட்டி' விளம்பரத்திற்கு இந்த ஆண்டு அதிகக் கவர்ச்சியுள்ள அம்சம் வேண்டுமென்று நினைத்தார் வராக மூர்த்தி. கல்கத்தாவிலிருந்து விளம்பரக் கம்பெனிகள் பலவற்றுக்கு ஆலோசகரான பிரெஞ்சு நாட்டுச் சித்திரக்காரனை வரவழைத்தார்.

அவன் தன்னோடு கல்கத்தாவில் இருந்து ஏராளமாகப் படங்கள், பத்திரிகைக் கத்தரிப்புகள், மாதிரி விளம்பரச் சித்திரங்கள் எல்லாம் வாரிக் கொண்டு வந்திருந்தான். பெரிய பெரிய விலையுயர்ந்த பலகைகளை அளவாகக் கத்தரித்து பின்புறம் சட்டமடித்து இணைத்துக்கொண்டு சித்திர வேலையைத் தொடங்கினான். தன்னைத் தவிர வேறு யாரையும் மேற்படிப் பெட்டிப் பக்கம் நெருங்கவிடவில்லை. அவன் தனிமையில் இல்லாவிட்டால் அவனுக்கு வேலை ஓடாதாம்; அவன் புதுப்பித்துக் காட்டப் போகும் கவர்ச்சிகரமான புதுமையை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் வராகமூர்த்தி.

"வெகு நாட்களாக என் மனத்திலிருந்த ஒரு அதியற்புத அழகை உங்கள் 'ஷோ கேஸி'ல் உருவாக்கிக் காட்டப் போகிறேன்!" என்று புதிர் வேறு போட்டிருந்தான் அந்த அபூர்வ ஓவியன். பதினைந்து நாட்களை முழுமையாக எடுத்துக் கொண்டான் அவன்.

"வேலை முடிந்து விட்டது. நாளைக்கு ஷோ கேஸைத் திறந்து விடலாம்" என்று முக மலர்ச்சியோடு வந்து சொன்னான் ஓவியன். "நீயும் வா பப்பீ; ரொம்பத் திறமையான ஓவியர். பிரமாதமான ஏதோ செய்திருக்கிறார்; பார்க்கலாம்" என்று தம் பெண்ணையும் அழைத்துக் கொண்டு வந்தார் வராக மூர்த்தி.

வராக மூர்த்தியையும், அவர் பெண்ணையும் அலங்காரக் கண்ணாடிப் பெட்டிக்குள் கூட்டிச் சென்றார் ஜவுளிக்கடை மானேஜர்.

உள்ளே போய், பலகையில் சட்டமடித்து நிறுத்தியிருந்த படத்தைப் பார்த்தவுடன், மூன்று பேரும் திகைத்து விட்டனர்.

வராகமூர்த்தி ஒன்றும் புரியாமல் விழித்தார்.

பப்பி விளையாட்டுடையில் பூப்பந்து மட்டையை ஓங்கிக் கொண்டு ஒயிலாக நிறுத்திய கோலத்தில் எடுத்த படம் பெரியதாக்கப்பட்டு அந்தப் 'பிளைவுட்'

பலகையில் இருந்தது. மூக்கு முழி முகம் எல்லாம் அச்சாக அவளேதான்...! விளம்பரக் கவர்ச்சிக்காகத் திருத்தம் செய்திருந்தான் ஓவியன்.

"அப்பா! என்ன காரியம் இது? ஏன் இப்படிச் செய்தீர்கள்?"

"ஐயோ!.... எனக்கு ஒரு மண்ணும் தெரியதம்மா!... நான் செய்வேனா இப்படி?" என்று மகளைச் சமாதானப்படுத்தி விட்டு "எங்கே அந்த அக்கிரமக்கார ஓவியன்?" என்று கூச்சலிட்டார் வராக மூர்த்தி.

"நீங்கள்தான் செய்திருக்கிறீர்கள் அப்பா! உங்களுடைய முகத்தில் விழிக்கவே சங்கடமா இருக்கிறது எனக்கு!" என்று அழுகையும் விசும்பலுமாகக் கூறி, அவரை நம்ப மறுத்து, வீட்டுக்கு ஓடி விட்டாள் பப்பி.

மகளே நம்ப மறுத்துத் தம்மேல் குற்றம் சாட்டி விட்டு ஓடியதைப் பார்த்தபோது, வராக மூர்த்தியின் கொதிப்பு அதிகமாயிற்று.

ஓவியனை அழைத்தார். ஆத்திரம் வளர்ந்தது!

ஓவியன் வந்து நின்றான். பளீரென்று கன்னத்தில் ஓர் அறை வைத்து விட்டுக் கேட்டார்: "எதைப் பார்த்து இதை வரைந்தாயடா ராஸ்கல்? உள்ளதைச் செல்லி விடு!"

அவன் பேசாமல் 'விளையாட்டுப் பத்திரிகை'யை எடுத்துக் காண்பித்தான். இரண்டு வருஷத்துக்கு முந்திய இதழ் அது. அதில் அவர் பெண்ணின் அந்தப் படம் அதே கோலத்தில் வெளியாகியிருந்தது.

"முட்டாள்! இது என் மகள் படமடா! பிழைத்துப் போ!" அந்தப் பலகைப் படத்தைச் சுக்கு நூறாக உடைத்து விட்டு வெந்நீர் அடுப்புக்கு அனுப்பி வைத்தார் வராக மூர்த்தி.

"அந்த ஏற்பாடு தானாகச் செய்ததில்லை. ஸ்போர்ட்ஸ் இதழொன்றில் வந்திருந்த அவள் படம் நல்ல கவர்ச்சிகரமான அமைப்பில் இருந்ததினால், விளைந்த வம்பு!" என்று பப்பியை நம்பச் செய்து, தாம் நல்லபிள்ளையாவதற்கு மிகவும் சிரமப் பட்டார் வராக மூர்த்தி.

"என்ன ஐயா வராக மூர்த்தி! இந்த வருஷம் உம் ஷோகேஸில் ஒண்ணுமே இல்லையே?... இருண்டு வழிகிறது! கம்பெனி கீப் பண்ணவாவது ஏதாவது வைக்கப் படாதோ...?" என்று பக்கத்து ஜவுளிக் கடைக்காரர் ஒரு நாள் கேட்டார்.

"கம்பெனி கீப் பண்ணற விவகாரத்தையே விட்டுட்டேன். நாம இருக்கிறபடி இருந்தாப் போதும்!" என்று வராக மூர்த்தியிடமிருந்து அழுத்தமாகப் பதில் வந்தது!

(1959)

## 42. வலம்புரிச் சங்கு*

**பூ**மாலை யோசித்துப் பார்த்தான். 'அன்றைக்குச் சங்கு குளிக்கப் போவதா? வேண்டாமா?' என்று எண்ணினான். குடிசைக்குள் அவன் மனைவி கோமதி வலி பொறுக்க முடியாமல் முனகிக் கொண்டிருந்தாள். எப்படியும் அன்றைக்கு உச்சிப் போதுக்குள் குழந்தை பிறந்துவிடும் என்று மருத்துவச்சி சொல்லி விட்டுப் போயிருந்தாள்.

"ஏலே, பூமாலே! இன்னிக்கு ஒரு நாளைக்குப் போவாட்டி என்னடா குடிமுழுகிப் போச்சு? குழந்தை முகத்தைப் பார்த்திட்டுப் பிறகு போகலாம்டா!" வயதானவளாகிய அவன் தாய் கூறினாள்.

"அதுக்கில்லே அம்மா! வருஷம் முழுதுமா சங்கு குளிக்க முடியுது? ஏதோ இந்த இரண்டு மூணு மாசத்திலே நாலு காசு பாத்தால்தானே உண்டு...."

"காசு கிடக்குதடா... விடு! தாயும் குழந்தையுமா இவங்களைப் பார்க்கிறதை விடவா காசு பெரிசு?"

"சரி, உன் இஷ்டம்! இருக்கேன்... கண்டிராக்டர் எசமான் கூப்பிட்டு விடாமல் இருக்கணும்!" - பூமாலை குடிசையிலேயே தங்கிவிட்டான். அன்று அவன் சங்கு குளிக்கப் போகவில்லை.

சங்கு குளிக்க மற்ற ஆட்கள் வந்திருந்தார்கள். ஆனால் கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளையைப் போல வேகமாகச் சங்கு குளிக்கக் கூடிய ஆட்கள் அந்தப் பிரதேசத்திலேயே வேறொருவரும் இல்லை. சல்லடத்தைக் கட்டிக் கொண்டு கடலில் குதித்தால் பொழுது சாய்வதற்குள் சங்குகளை வாரிக் குவித்து விடுவான். மற்றக் கூலிக்காரர்களோ, பத்து இருபது சங்குகளைக் குளிப்பதற்குள்ளேயே மூச்சுத் திணறிக் கூலியை வாங்கிக்கொண்டு ஓடிவிடுவார்கள். நான்கு மாதங்கள்தான் அவரது கண்டிராக்டின் ஆயுள். ஆயிரக்கணக்கான பணத்தைக் கொட்டிக் 'கண்டிராக்டு' எடுத்திருந்தார். இந்த நான்கு மாதங்களுக்குள் லாபம் பார்த்தால்தான் உண்டு. இல்லையானால் நஷ்டமடைந்து கையைச் சுட்டுக் கொண்டு போக வேண்டியதுதான்.

"இன்றைக்கு ஏண்டா பூமாலையை இன்னும் காணோம்?" என்று கேட்டார் பரமசிவம்.

"அவன் பொஞ்சாதி பிள்ளைத்தாச்சியா இருக்காங்க... அதுக்கு இன்றைக்கு நாளுங்க... அதனாலே அவன் வரமாட்டானுங்க...."

---

* கல்கி சிறுகதைப் போட்டிப் பரிசு பெற்றது

"நான் கையோட கூட்டிக்கிட்டு வரச்சொன்னேன்னு போய்க் கூட்டிக்கிட்டு வாடா!..... உடனே திரும்பிடலாம்னு சொல்லு. அப்பொழுதுதான் பயல் வருவான்..."

கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளையின் கட்டளையைச் சிரமேல் தாங்கிக் கொண்டு பூமாலையைக் கூட்டி வருவதற்குப் புறப்பட்டான் ஒரு கூலியாள்.

காலை எட்டு மணிக்கு மேல் ஆகிவிட்டது. தூத்துக்குடி துறைமுகத்திலிருந்து கொழும்புக்குச் செல்லும் முதல் கப்பல் புறப்படுவதற்குத் தயாராக ஒலியை முழக்கிக் கொண்டிருந்தது. துறைமுகத்தில் போவோரும் வருவோருமாக ஒரே கூட்டம். கடல் நீரின் முடை நாற்றத்தை ஏற்றுமதி இறக்குமதிக்காகக் குவிக்கப்பட்டிருந்த சாமான்களின் வாடை அமுக்கிக் கொண்டிருந்தது. பரமசிவம் பிள்ளையும், அவருடைய கூலியாட்களும் பூமாலையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்கள் சங்கு குளிக்கச் செல்ல வேண்டிய பகுதி கடலில் சிறிது தொலைவு தள்ளி இருந்தது. அங்கே போவதற்குப் பெரிதும் சிறிதுமாகப் படகுகள் துறைமுகத்தில் தயாராக இருந்தன.

போனவன் அரை நாழிகையில் பூமாலையோடு திரும்பி வந்து சேர்ந்தான்.

"ஏண்டா பூமாலே! குழந்தை பிறந்தால் வீட்டிலேயிருந்து ஆள் அனுப்ப மாட்டாங்களா? அதற்காக நீ வீட்டிலேயே இருக்கணுமோ?" என்று கேட்டார் பரமசிவம்.

"இல்லீங்க... அம்மா சொல்லிச்சுங்க... இன்றைக்கு ஒரு நாளைக்கு மட்டும் போகவேண்டாம்னு..."

"போடா போ! ஒரு நாள் சம்பாத்தியத்தை வீணாக்கணும்கிறாயே. சல்லடத்தைக் கட்டிக்கிட்டு வேலையைப் பாருடா! குழந்தை பிறந்த தகவல் வந்த உடனே உன்னை வீட்டுக்கு அனுப்பிச்சுடறேன்...."

"இல்லை எசமான்! இன்றைக்கு வேண்டாமுங்க... என் மனசு சரியாயில்லீங்க... ஞாபகத்தை எல்லாம் வீட்டிலே வைச்சுகிட்டு இங்கே வேலை செய்யறதுன்னா....?"

"அட சரிதான்! பெரிய மனசைக் கண்டவன் கணக்காகப் பேசுகிறாயே? நான் சொல்கிறேன் கேளு பூமாலை!" பரமசிவம் பிள்ளை வற்புறுத்தினார்.

பூமாலை துணிந்து மறுக்கும் சக்தியை இழந்தான். வேறு வழியில்லை. சல்லடைத்தைக் கட்டிக் கொண்டு மற்றக் கூலியாட்களோடு படகில் ஏறி உட்கார்ந்து கொண்டான். கண்டிராக்டர் பிள்ளை பூமாலையைச் சம்மதிக்க வைத்த மகிழ்ச்சியோடு தாமும் ஒரு தனிப் படகில் ஏறி உட்கார்ந்து கொண்டார். படகுகள் முத்துக் குளித்தல், சங்கு குளித்தல் முதலியவற்றுக்காக ஒதுக்கப்பட்டிருந்த கடல்பகுதியை நோக்கிச் சென்றன.

விநாடிக்கு விநாடி பின்னுக்கு நகர்ந்து மங்கிக் கொண்டிருக்கும் துறைமுகத்தையும், ஊரையும், கரையையும் வெறித்துப் பார்த்தவாறே படகில் போய்க் கொண்டிருந்தான் பூமாலை. அவன் மனதில் நிம்மதி இல்லை. வழக்கம் போல் நிறையச் சங்குகளை வாரிக் குவிக்க வேண்டும் என்ற ஆசையும் இல்லை. வேண்டா வெறுப்பான ஒரு மனநிலை.

“டேய்! பூமாலைக்கு என்ன குழந்தை பிறக்கும்டா?”

“ஆம்பளைக் கொழந்தைதாண்டா....”

“இல்லேடா! பொம்பளைக் குழந்தைதான்!”

“என்ன பந்தயம்டா கட்டறே?”

“இன்றைக்குச் சங்கு குளிக்கிற கூலி முழுதும்டா...!”

“அட! என்ன குழந்தையானால் என்ன? நல்லதாகப் பிறக்கட்டும். அதுதான் வேணும். நீங்க ஏண்டா பந்தயம் போட்டு மடியறீங்க?” கூட இருந்த கூலிக்காரர்கள் வேடிக்கையும், விளையாட்டுமாக ஏதேதோ பேசிக்கொண்டே வந்தனர். பூமாலை அதில் கலந்து கொள்கிறவனைப் போலச் சிரித்துத் தலையைக் குனிந்துகொண்டானே ஒழிய மனமார அவனால் அந்தக் குதூகலத்தில ஈடுபட முடியவில்லை.

படகுகள் குறிப்பிட்ட இடத்தை அடைந்தன. உடலின் சூடு குறையாமல் இருப்பதற்காகக் கொழுப்புக் கலந்த ஒரு வகை எண்ணெயைச் சங்கு குளிப்பவர்கள் எல்லோரும் தடவிக் கொண்டிருந்தார்கள். பூமாலை சும்மா உட்கார்ந்திருந்தான்.

“ஏய் பூமாலை! நீ என்ன சும்மாக் குந்திகிட்டிருக்கே? எண்ணெய் பூசிக்கிட்டு இறங்கு, சொல்கிறேன்.... வீட்டை நினைச்சுக் கவலைப் படாதே. எல்லாம் நல்லபடியாக முடியும்....!” பரமசிவம் பிள்ளை இரைந்தார்.

பூமாலை கொழுப்பு எண்ணெயைச் சூடு பறக்கத் தேய்த்துத் தடவிக் கொண்டான்.

சங்கு குளிப்பவர்கள் நாலா திசைகளிலும் முங்கி எடுத்துக்கொண்டு வருவதற்கு வசதியாகப் படகோட்டிகள் படகுகளை ஒருவிதமான வியூகத்தில் வளைத்து நிறுத்தினார்கள்.

ஆட்கள் ஒவ்வொருவராகக் கடலில் குதித்தனர். கடைசியாகப் பூமாலை குதித்தான். ஆவலோடு கடற் பரப்பைப் பார்த்துக்கொண்டு படகில் உட்கார்ந்திருந்தார் கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளை.

நேரம் ஆக ஆகப் படகுகள் சங்குகளால் நிறைந்து கொண்டிருந்தன. பூமாலை ஒருவன் மட்டும் மற்றவர்கள் எல்லோரும் சேர்ந்து எடுத்த அவ்வளவு சங்குகளையும் போல இரண்டு மடங்கு எடுத்துக் குவித்திருந்தான். பரமசிவம் பிள்ளைக்குப் பரம சந்தோஷம். உச்சிப்போது ஆகிவிட்டது. எல்லாக் கூலியாட்களும் அலுத்துப்போய்ப் படகுகளில் ஏறி உட்கார்ந்து கொண்டு சோற்று மூட்டைகளை அவிழ்க்க ஆரம்பித்துவிட்டனர்.

பூமாலை இன்னும் சங்கு குளித்துக்கொண்டுதான் இருந்தான்.

“போதும்டா பூமாலை! வா! படகில் ஏறு. சாப்பாட்டுக்கு மேலே மறுபடியும் பார்க்கலாம்!” பிள்ளை அவனைக் கூப்பிட்டார்.

“இருங்க எசமான்! கடைசித் தடவையாக ஒரே ஒரு முங்கு போட்டு வந்துடறேன்.”

"சரி, செய்து பார்!...." பூமாலை முங்கினான். அவன் தலை தண்ணீருக்குள் மறைந்ததும் கரைப் பக்கமிருந்து படகு ஒன்று வருவதைக் கவனித்தார் பரமசிவம் பிள்ளை. படகு அருகில் வந்தது. பூமாலையின் தம்பி அதைச் செலுத்திக் கொண்டு வருவதைக் கவனித்தார் அவர்.

அவனுடைய தோற்றத்தையும் முகபாவத்தையும் கவனித்ததுமே அவருக்குத் தெரிந்து விட்டது விஷயம்.

"என்னடா! இவ்வளவு அவசரமாய்ப் படகிலே வந்திருக்கே?"

"கோமதி மதினி காலமாயிடிச்சுங்க. அண்ணனைக் கூட்டிட்டுப் போக வந்தேன்."

"ஐயையோ!.... குழந்தை பிறக்கலையாடா?"

"அது பொறக்கும்போதே செத்துப் போய்த்தான் பிறந்திச்சிங்க... மதினி அதுக்கப்புறம் வலி எடுத்து வேதனை தாங்க முடியாமே...."

"அட கண்றாவியே.....!" அவர் பூமாலையின் தம்பியை விசாரித்துக் கொண்டிருந்தபோது, கடல் நீர் அலம்பி வடிந்தது. பூமாலை குபுக்கென்று வெளியே வந்தான்.

"எசமான், எசமான்! இதோ பாருங்க, என் கையிலே 'வலம்புரிச் சங்கு!' அதிர்ஷ்டம்னா இதுல்லே அதிர்ஷ்டம்!" - பூமாலை மூச்சுத் திணறி நீரின் மேல் தத்தளித்துக் கொண்டே வலது கையை அலைக்கு மேல் உயர்த்திக் காட்டினான். எல்லோரும் வியப்புத் தாங்காமல் திரும்பிப் பார்த்தனர்.

'வலம்புரி சங்கு' என்றால் சாதாரணமானதா அது? ஒரு சங்கே லக்ஷக்கணக்கில் விலை போகக்கூடியது. நூறு இருநூறு வருஷங்களுக்கு ஒரு முறை எப்போதாவது அபூர்வமாகக் கடலில் கிடைக்கக்கூடியது. அதை வைத்திருப்பவர்களுக்குச் சகல சித்திகளும் கூடிவரும் என்பதனால் சமஸ்தானாதிபதிகளும் கோடீசுவரர்களும் போட்டி போட்டுக் கொண்டு வாங்குவதற்கு ஓடி வருவார்கள்.

பரமசிவம் பிள்ளை கண்களை அகல விரித்துப் பார்த்தார். பூமாலையின் கையில் ஒரு நல்ல செவ்விள நீர் அளவுக்கு வலப்புறம் வளைந்து திருகிய அற்புதமான வலம்புரிச் சங்கு ஒன்று இருந்தது. ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். பூமாலை அதைப் படகில் வைக்கக் கையைத் தூக்கினான்.

"அண்ணாச்சி! கோமதி மதினி காலமாயிடிச்சு".... விக்கி அழுதுகொண்டே பூமாலையின் தம்பி அவன் அருகில் படகைக் கொண்டு வந்தான்.

விலை மதிக்க முடியாத அந்த வலம்புரிச் சங்கு பரமசிவம் பிள்ளையின் படகில் விழுவதற்குள் பூமாலையின் கையிலிருந்து நழுவிக் கடலில் விழுந்தது.

"ஐயோ! பூமாலை.... அது ஆழத்திலே போகுதுடா... எடு! எடு! எடுடா.... லக்ஷக்கணக்கில் பெறுண்டா...." - அவர் இரைந்து கத்தினார்.

பூமாலை எடுக்கவில்லை. தம்பியின் படகைப் பிடித்துக் கொண்டு உணர்வுகளைச் சோகத்தில் புதைத்துக் கொண்டிருந்தான் அவன்.

பரமசிவம் பிள்ளை துடித்தார். பூமாலை அசையவில்லை. "டேய்! அப்புறம் சோறு தின்னலாம்; நீங்க குதிச்சு எடுங்கடா!" சாப்பிட்டுக் கொண்டிருந்த மற்றவர்களைத் தூண்டினார். அத்தனை கூலியாட்களும் உடனே சாப்பிடுவதை நிறுத்திவிட்டுத் தண்ணீரில் குதித்தனர். தமக்குத் திடீரென்று கிடைத்த வலம்புரிச் சங்கை இழந்த சோகத்தில் அவன் மனைவியையும் குழந்தையையும் இழந்து நிற்கிறான் என்பதுகூட அவருக்கு மறந்து போய்விட்டது.

"அட! நாசமாய்ப் போகிற பயலே! அவன் சங்கைப் படகில் வைத்துவிட்டுக் கரையேறினபின் உன் சமாசாரத்தைச் சொல்லித் தொலைச்சா என்ன! நல்ல சமயத்தில் கெடுத்து விட்டாயேடா!" அவர் பூமாலையின் தம்பியைத் திட்டினார். அந்தச் 'சின்னப் பயல்' அவரை முறைத்துப் பார்த்தான். பூமாலை கேவிக் கேவி அழுது கொண்டிருந்தான். அவன் தம்பி கைகொடுத்துத் தூக்கி அவனைப் படகுக்குள் ஏற்றிக்கொண்டு கரையை நோக்கிச் செலுத்தினான்.

பரமசிவம் பிள்ளை உள்ளே முங்கிய மற்றக் கூலிகளை எதிர் பார்த்து ஆவலோடு காத்திருந்தார். ஒவ்வொருவனாக வெளிவந்தான்.

"எசமான்! அது அகப்படலீங்க." அத்தனை கூலிகளும் இதே பதிலைத்தான் கூறினார்கள். திடீரென்ற கண் பெற்றுப் பிறகு உடனேயே பழைய குருடனாக ஆனாற்போல இருந்தது அவர் நிலை. இன்னும் பத்து வருஷங்கள் இதே கண்டிராக்டு எடுத்தாலும் பெறமுடியாத லட்சாதிபதிப் பதவியை இந்த ஒரே ஒரு வலம்புரிச் சங்கின் மூலம் அவர் பெற்றிருக்க முடியும். அதைப் பூமாலை கெடுத்துவிட்டான்! பூமாலையின் தம்பியையும் அவன் கொண்டுவந்த இழவுச் செய்தியையும் அவர் வாய் ஓயத் தூற்றினார்.

'எப்படியும் அந்த வலம்புரிச் சங்கை எடுக்காமல் விடுவதில்லை' என்று உறுதி பூண்டுவிட்டார் அவர். கூலிகளைத் திரும்பத் திரும்ப அதே இடத்தில் மூழ்கச் செய்தார். சங்கு குளிப்பதில் பூமாலைக்கு அடுத்தபடி திறமைசாலிகளான வேறு சிலரை வருவித்துக் குளிக்கும்படி ஏவினார். எல்லோரும் சேர்ந்து ஏமாற்றம் ஒன்றையே அவருக்கு அளித்தார்கள். வலம்புரிச் சங்கு கிடைக்கவே இல்லை. ஏமாற்றத்தின் நடுவே விளைகின்ற ஆத்திரம் பஞ்சுப் பொதியின் இடையே விழுகின்ற நெருப்புத் துண்டு போலப் பயங்கரமானது.

நீண்ட நேர ஆலோசனைக்குப் பிறகு 'போலீஸ் ரிப்போர்ட்' செய்வது என்ற முடிவுக்கு வந்தார் பரமசிவம் பிள்ளை.

"என்னிடம் வெகு நாட்களாகச் சங்கு குளிக்கும் கூலியாக வேலை பார்த்துவரும் பூமாலை என்பவன் நேற்றுக் காலை லக்ஷக்கணக்கான ரூபாய்கள் விலையுள்ளதும் எனக்குச் சேர வேண்டியதுமான ஒரு வலம்புரிச் சங்கைக் கடலில் எறிந்துவிட்டான். அவன் எறிந்த இடத்தில் அவனையே மூழ்கச் செய்து அந்தச் சங்கை எடுத்துக் கொடுத்து உதவவேண்டும். அல்லது அவனைத் தகுந்த நடவடிக்கையின்பேரில் சரியானபடி தண்டிக்க வேண்டும்."

*பெரும்பான்மை பொய்யும் சிறுபான்மை மெய்யும் கலந்த இந்த ரிப்போர்ட்டைப் போலீஸுக்கு மறுநாள் காலையில் பரமசிவம் பிள்ளை அனுப்பி வைத்தார். அதோடு நேரில் போய்ப் போலீஸ் இன்ஸ்பெக்டரைச் சந்தித்து "சார், நீங்கள் அந்தப் பயலை மிரட்டி அழைத்துக்கொண்டு வந்தால் எப்படியும் சங்கைப் போட்ட இடத்திலிருந்து எடுத்துக் கொடுத்துவிடுவான்" என்று அவர் கூறியிருந்தார்.*

*"நீங்கள் சங்கு குளிக்கும் துறையில் தயாராக இருங்கள்! நான் அந்தப் பயலுடைய குடிசைக்குப் போய் ஆளை அதட்டி அங்கே இழுத்துக்கொண்டு வருகிறேன். எப்படியும் அந்த வலம்புரிச் சங்கை எடுத்துவிடச் செய்வோம்" என்று இன்ஸ்பெக்டரும் வாக்களித்தார்.*

*வலம்புரிச் சங்கு என்றால் அது இலேசான விஷயமா? பரமசிவம் பிள்ளை தலைகீழாக நின்றாவது அதை எடுத்தாக வேண்டும் என்று உறுதியான மனத்தோடு இருந்தார்.*

*குழந்தையையும், தாயையும் கொண்டுபோய்ப் பொசுக்கி விட்டு வந்த வேதனையோடு குடிசைத் திண்ணையில் சுருண்டு விழுந்துகிடந்தான் பூமாலை. நேற்றும் சரி, இன்றும் சரி, அவன் சாப்பிடவில்லை. எதுவும் தோன்றாமல் அழுது கொண்டேயிருந்தான். உள்ளே பூமாலையின் தாய் இரைந்த குரலில் ஒப்பாரி வைத்துக்கொண்டிருந்தாள்.*

*"வலம்புரிச்சங்கு கைநழுவிட்டுதேயின்னு துடிச்சானே தவிர அண்ணாச்சி சம்சாரத்தையும் குழந்தையையும் பறிகொடுத்திட்டு நிற்கிறாரேன்னு அந்தக் கண்டிராக்டர் கொஞ்சமாவது வருத்தப்படவில்லையே? அவனுக்கு என்ன திமிரு?" என்று தமக்குள் பரமசிவம் பிள்ளையைக் கறுவிக் கொண்டிருந்தான் பூமாலையின் தம்பி.*

*போலீஸ் இன்ஸ்பெக்டரும் இரண்டு மூன்று கான்ஸ்டபிள்களும் அமைதியாகக் குடிசை வாயிலுக்கு வந்தனர். திண்ணையில் சுருண்டு கிடந்த பூமாலையை அவன் தூங்குவதாக எண்ணிக் கொண்டு கைத்தடியினால் தட்டினான் ஒரு கான்ஸ்டபிள். முழித்துக்கொண்டிருந்த பூமாலை துள்ளி எழுந்தான். இன்ஸ்பெக்டர் அவனை அருகில் வருமாறு சைகை காட்டி அழைத்துக்கொண்டு போனார். அவனிடம் விஷயத்தைக் கூறினால் அவன் ஏதாவது குழப்பம் விளைவிப்பான் என்று எண்ணியே அவர் இப்படிச் செய்தார்.*

*"என்னை எங்கே கூட்டிக்கிட்டுப் போறீங்க? நான் ஒண்ணும் தப்புத் தண்டாச் செய்யலீங்களே? குழந்தையையும் மனைவியையும் பறிகொடுத்திட்டுச் சாக மாட்டாமல் இருக்கிறவனை நீங்க வேறே...."*

*"ஏய் பூமாலை! பேசாமல் வரமாட்டே? இப்போ நீ ஜெயிலுக்குப் போகும்படியான நிலை உனக்கு வந்திருக்கு. அதிலிருந்து நீ தப்ப வேண்டுமானால் நான் சொல்கிறபடி ஒழுங்காகச் செய்து விடு."*

“ஐயையோ! அப்படி நான் என்னங்க செய்தேன்? ஒரு பாவமும் தெரியாதுங்களே!” என்று அழுதான் அவன்.

“புளுகாதே, அப்பனே! நேற்று சங்கு குளிக்கிறபோது ஒரு வலம்புரிச் சங்கைக் கடலிலே போட்டுட்டே இல்லே? அதை இன்றைக்கு எடுத்துக் கொடுக்கலேன்னா ஜெயில்தான், அடிதான், உதைதான். ஆமாம், பார்த்துக்க...”

“நான் அதை வேணும்னு போடலீங்களே? அதை எடுத்துக்கிட்டு வெளியிலே வந்தப்போ ‘என் சம்சராம் பிரசவிச்சக் குழந்தையோடு செத்துப்போயிட்டாளுன்னு’ தம்பி வந்து சொன்னாங்க. அந்த அதிர்ச்சியிலே அது தவறி விழுந்திடிச்சுங்க....”

“அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது! கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளை ‘ரிப்போர்ட்’ பண்ணியிருக்காரு. நீ திரும்பக் குளிச்சு அதை எடுத்தாலொழிய உன்னை இலேசில் விட மாட்டோம்.”

இன்ஸ்பெக்டர் மிரட்டினார். கான்ஸ்டபிள்கள் பூமாலையைப் பிடித்து இழுத்தபடியே, அவன் ஓடிவிடாமல் ஜாக்கிரதையாகக் கொண்டு போனார்கள்.

துறையில் பரமசிவம் பிள்ளை ஆட்களோடும் படகுகளோடும் காத்துக் கொண்டிருந்தார். இன்ஸ்பெக்டர், கான்ஸ்டபிள்கள் பூமாலையோடு வந்து சேர்ந்ததும் படகுகள் சங்கு குளிக்கும் இடத்துப் புறப்பட்டன.

முதல் நாள் வலம்புரிச் சங்கு விழுந்த இடத்துக்கு வந்ததும் படகுகள் அன்று போலவே வியூகமாக நிறுத்தப்பட்டன. இன்ஸ்பெக்டரும் பரமசிவம் பிள்ளையும் பூமாலையைத் தூண்டினர்.

“எசமான்! இப்பொழுது என் மனசு படுகிற சங்கடத்திலே என்னாலே தண்ணீருக்குள்ளே மூச்சு அடக்க முடியாதுங்க. இரண்டு நாளாகப் பட்டினி வேறே. இன்னைக்கு வேண்டாம். இன்னொரு நாள் பார்க்கலாமுங்க.”

பூமாலை காலில் விழாத குறையாக அவர்களைக் கெஞ்சினான். ஆனால் அவர்கள் அவனை இறங்கித்தான் ஆகவேண்டுமென்று பிடிவாதம் பிடித்தனர். சல்லடமில்லை. பூமாலை அரை வேஷ்டியையே சல்லடம் மாதிரி வரிந்து கட்டிக்கொண்டான். எண்ணெய் படகில் இருந்தது. அதைத் தடவிக் கொண்டான். இன்னும் சிறிது நேரம் அவன் தாமதித்தால் அவர்களே பிடித்துத் தள்ளி விடுவார்கள் போல இருந்தது. மூச்சை அடக்கித் ‘தம்’ பிடித்துக் கொண்டு கடலில் குதித்தான்.

‘வலம்புரிச் சங்கு கிடைத்து விடும்’ என்று ஆவலோடு அவன் குதித்து மூழ்கிய இடத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் பரமசிவம் பிள்ளை.

கால் நாழிகை ஆயிற்று! அரை நாழிகை ஆயிற்று! அதற்கு மேலும் ஆயிற்று! பொறுமை இழந்த பிள்ளை வேறொரு ஆளையும் பூமாலையைப் பின்பற்றி அதே இடத்தில் குதிக்கச் சொன்னார். ஆள் குதித்தான். குதித்தவன் சீக்கிரமே எதையோ பற்றி இழுத்துக்கொண்டு மேலே வந்துவிட்டான்.

*எல்லோருடைய கண்களும் ஆவலோடு கடலிலிருந்து எடுக்கப்பட்ட பொருள் என்னவென்று தேடின.*

*அவன் பிடித்து இழுத்துக்கொண்டு வந்தது வேறொன்றுமில்லை. பூமாலையின் பிணம்! கான்ஸ்டபிள்கள் தண்ணீரில் இருந்தவனுக்கு உதவியாகக் கைகொடுத்துத் தூக்கினார்கள். பூமாலையின் சவம் படகுக்கு வந்தது.*

*என்ன ஆச்சரியம்! சவத்தின் வலது கையில் அந்த வலம்புரிச் சங்கு இறுகப் பிடித்துக் கொள்ளப்பட்டிருந்தது!*

*போலீஸ் இன்ஸ்பெக்டரும் பரமசிவம் பிள்ளையும் தங்களையும் மறந்து 'ஆ' வென்று அதிசயத்தால் கூவினர்!*

*"சங்கை எடுத்துக் கொண்டு வருகிறபோது மூச்சுத் தாங்காமல் இறந்திருக்கணுமுங்க!" மற்றவன் முணுமுணுத்தான். பரமசிவம் பிள்ளை பிணத்தின் வலது கையிலிருந்து சிரமப் பட்டு அதைப் பிரித்து எடுத்தார்.*

*பூமாலை இறந்ததைப் பற்றிய நினைப்பே பரமசிவம் பிள்ளையின் மனத்தை விட்டு மறைந்தது. சரித்திரப் புகழ் பெற்றதும் பல நூறு ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றக்கூடிய அபூர்வப் பொருளுமான வலம்புரிச் சங்கைப் பார்த்ததும் அவர் மெய்மறந்து போனார். இத்தகைய தெய்வீக மதிப்பு வாய்ந்த வலம்புரிச் சங்கு யாருக்கேனும் எளிதில் கிடைத்துவிடுமா? ஜன்ம ஜன்மாந்திரங்களில் செய்த நல்வினையின் பயனால் கண்டிராக்டர் பரமசிவம் பிள்ளைக்கு அது கிட்டியது. அதுவும் அந்த வலம்புரிச்சங்கு கிடைத்ததில் இரட்டிப்பு மகிழ்ச்சி இருந்தது. அவருக்கு எதிர்பாராமல் கிடைத்தது ஒன்று; ஒருமுறை கிடைத்துக் கை நழுவிப்போன பொருள் மாண்டவன் மீண்டது போல மீண்டும் அவரது சாகசத்தினால் கிடைத்தது. ஆக இரண்டு. இந்த மகிழ்ச்சி மிகுதியில் அவர் திணறியதில் வியப்பு என்ன இருக்கிறது?*

*வலம்புரிச் சங்கு அற்புதமாகத்தான் இருந்தது. "லக்ஷக்கணக்கிலென்ன? கோடி ரூபாய் கூடப் பெறும் இது!" என்றார் இன்ஸ்பெக்டர். வலம்புரிச் சங்கை வைத்திருப்பவர்களுக்கு அஷ்டஐசுவரியமும் பெருகுமென்கிறார்களே? அது நிஜம் தானா? நிஜமானால் அந்தப் 'பாவி' பூமாலை ஏன் மூச்சுத் திணறிப் போய் இறந்தான்? அதைப்பற்றிச் சிந்தித்துப் பார்க்க யாருக்கும் அவகாசம் இருக்கவில்லை!*

**(1960-க்கு முன்)**

# 43. தகுதியும் தனி மனிதனும்

அகல் விளக்கின் எண்ணெய் வறண்டு போனது. ஏட்டுச் சுவடிகளை மடித்துக் குடலையில் போட்டுவிட்டுப் படுக்கையை விரித்தார் முத்துமாரிக் கவிராயர். குறிஞ்சிப்பாடி ஊர் முழுவதும் அடங்கிப் போயிருந்தது. நடுச்சாமம் வரை கண் விழித்து எழுதியும் அந்தப் பிள்ளைத் தமிழில் இருபத்தேழு பாடல்களே முடிந்திருந்தன. கையில் நரம்புகள் யாவும் ரத்தம் கட்டிப்போய் ஒரே வலி. விளக்கு கரண்டுபோய்த் திரியும் எரிந்த பின் அணைந்து விட்டது. எரிந்து போன திரியிலிருந்து கிளம்பிய சுடர் நாற்றம் புகையாகப் பரவி மூக்கை வதைத்தது. கிழித்து அழுக்கேறிப் போயிருந்த அந்தக் கோரைப் பாய்தான் அவருக்குச் சங்கப் பலகையைப் போல உபயோகப்பட்டு வந்தது. தலைக்கு எண்ணெயேறிப் பிதிர்த்துப் போயிருந்த ஒரு தலையணை. இவைதாம் முத்துமாரிக் கவிராயரின் படுக்கை.

நாகரிகம் முற்றிக் காகிதம், போனா வந்த காலமாக இருந்தும், ஏட்டிலேயே எழுதி எழுதிப் பழகியிருந்த கவிராயர், அந்தப் பழக்கத்தை விட்டு விடாமல் கைக் கொண்டிருந்தார். குறிஞ்சிப்பாடி வட்டாரத்தில் கவிராயர் குடும்பம் என்றால் அறியாதவர்கள் இருக்கமாட்டார்கள். முத்துமாரிக் கவிராயர் காலத்தில்தான் முதல் முதலாக வறுமையின் பிடியில் அவர் குடும்பம் சிக்கியது. ஜமீன்தார்களையும் குறுநில மன்னர்களையும் அணுகி வாழ்ந்த அவருடைய முன்னோர் வாழ்க்கைத் தேவைகளுக்காக ஏங்கி வறுமையுற்றதாகச் சொப்பனத்தில் கூடக் கண்டது இல்லை. செல்வக் கொழிப்புடன் வாழ்ந்தார்கள். புலமைச் செருக்கோடு பாடித் திரிந்து புகழ் பரப்பினார்கள். அவர்கள் காலம் இன்றைக்குக் கனவாகிவிட்டது! குடும்பக் கௌரவத்தை எடுத்துச் சொல்லி நான்கு பேர் சிபாரிசு செய்ததன் பேரில் ஐம்பத்தைந்தாவது வயது வரை ஜில்லா போர்டு பள்ளிக்கூடமொன்று முப்பது ரூபாய் சம்பளத்தில் அவருடைய தமிழ்ப் பணியை ஏற்றுக் கொண்டிருந்தது. அதிலிருந்து ரிட்டையராகி மூன்றரை வருடங்கள் ஆகிவிட்டன. பரம்பரைப் புலமையும் நல்ல கவி சாதுர்யமும் உள்ள அவரை அதன் பிறகு எவரும் நாடுவாரில்லை. மூன்று குழி மான்னிய நிலம் இருந்தது. இந்த வருவாயைக் கொண்டு காலம் தள்ளிவந்தார். அங்கும் இங்குமாக எப்போதாவது சிலர் பாட அழைப்பார்கள். அதில் ஏதாவது சன்மானம் கிடைக்கும். மற்ற நாட்களில் அவர் உண்டு அவருடைய ஏடுகளும் எழுத்தாணியும் உண்டு என்று இருப்பார். அரை நொடியையும் வீணாகக் கழிக்கமாட்டார். புதிது புதிதாகப் பிரபந்தங்களை இயற்றுவார். தாமே படித்து மகிழ்வார். எப்போதாவது உணர்வு கட்டுக்கடங்காதபோது தம் மனைவிக்கும் படித்துக் காட்டுவார். அந்த அம்மாளுக்கு ரசிக்கத் தெரியுமோ தெரியாதோ மண்டையை ஆட்டிக்

கொண்டிருப்பாள். குழந்தை குட்டிகள் இல்லாத மலட்டு ஜன்மமாக வாழ்வைக் கழித்து விட்டோமே என்பது அவர் மனைவிக்கு நீங்காத மனக்குறையாக இருந்தது. கவிராயர் இதைப்பற்றி கவலைப்படுவதே கிடையாது. சில சமயங்களில், 'இன்றைய நாகரிக உலகில் ஆதரிப்பாரற்றுப் போய் விட்டபோது வீணாக இந்தக் குறிஞ்சிப் பாடிக் கவிராயர் பரம்பரை தழைத்துத் தான் என்ன செய்யப்போகிறது?' என்று கூட அவருக்குத் தோன்றும். மான அவமானங்களுக்கு ஆளாகி, அல்லாடாமல் நம்முடைய காலம் பரம்பரைக் கௌரவத்திற்கு இழுக்கின்றி ஒருவாறு ஓடிவிட்டது. இனியும் இந்தப் பரம்பரை வளர்ந்து தான் என்ன செய்யப்போகிறது? ஒரு வேளை முடித் துணிக்கும் நாழி யரிசிக்கும் பிச்சை யெடுக்கும் பரம்பரையாக ஆனாலும் ஆகலாம்! நல்லவேளை! இந்தப் பரம்பரை இதோடு ஒழிந்து போகட்டும் என்று தம்மை மீறிய துக்கத்தோடு சிலபோது மனதிற்குள் அலுத்துக் கொள்வார். தனி மனிதன், தகுதி, திறமை, பரம்பரை, இவைகளைக் கொண்டு வாழக்கூடியதாக எதிர்காலம் இருக்காது என்பது அவருக்குத் தெரிந்தது. ஏன்? அவர் காலத்தில் அவரே அந்த அனுபவத்தை அடைந்து விட்டாரே? எதிர்காலம் அதற்கு அப்பனாகத்தானே இருக்க வேண்டும்?

வாசலில் பன்னீர்மரம், ஆடி மாதத்துக் காற்றில் சாய்ந்து விடும்போல் ஆடிக்கொண்டிருந்தது. மணி இரவு இரண்டரை ஆகியிருக்கும். முத்துமாரிக் கவிராயர் படுத்தவர் உறக்கம் வராமல் தவித்துக் கொண்டிருந்தார். பாழும் இருமல் அவரை 'உலுக்கு உலுக்'கென்று உலுக்கியது. படுத்துக் கொண்டே இருமுவது அவருக்குப் பெரிய வேதனையாக இருந்தது. எழுந்து உட்கார்ந்து கொண்டார். உள்ளே கூடத்தில் அவர் மனைவி நன்றாகக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள். இந்த உயிர் வாதனைக்கு ஏதாவது வைத்தியம் செய்துகொள்ளலாம் என்றால் காலத்தை ஓட்டுவதே பிரம்மப் பிரயத்தனமாக இருக்கும் போது வைத்தியம் செய்து கொள்ள அவரிடம் ஏது பணம்...? இப்போது அவருக்குச் சோமசுந்தரத்தின் நினைவு வந்தது. காலையில் அவன் தம்மைச் சந்தித்துப் பேசியபோது கூறியதெல்லாம் நினைவிற்கு வந்தன. 'அவன் சொன்னபடி நடந்தால் ஒரு வேளை இந்த நோய்க்கு ஏதாவது மருந்து சாப்பிடலாம்' என்று ஆசைப்பட்டது அவர் மனம். சோமசுந்தரம் குறிஞ்சிப்பாடிக் கிராமக் கணக்கர் மகன். பட்டணத்தில் ஏதோ நல்ல வேலையில் இருந்தான். கவிராயரிடம் அவனுக்குப் பயபக்தி உண்டு. ஊருக்கு வந்தால் அவரைப் பார்த்து அளவளாவாமல் போகமாட்டான். கவிராயருக்கும் அந்தப் பையன்மேல் அலாதியான பற்று உண்டு. ஊருக்கு அப்போது வந்திருந்த அவன், அன்று காலை அவரைப் பார்க்க வந்திருந்தபொழுது ஓர் நல்ல செய்தியை அவருக்குச் சொன்னான். சென்னையில் பழைய ஏட்டுப் பிரதிகளைச் சேகரித்து வெளியிடும் ஸ்தாபனம் ஒன்றிருப்பதாகவும் கவிராயர், ஏற்கெனவே இயற்றி வைத்திருக்கும் சுவடிகளும் கைவசமுள்ள வேறு சுவடிகளும் அந்த ஸ்தாபனத்தில் நன்றாக விலை போகும் என்றும் சோமசுந்தரம் கூறியிருந்தான். கவிராயருக்கு ஆசை தட்டியது. ஒரு புறம் தாங்க முடியாத மனத் துயரமும் கலந்திருந்தது. அந்த ஆசையில், "கருத்தையும் கற்பனையையும் உருக்கிப் படைத்திருந்த விலையில்லாத கவிதை மாணிக்கங்களைப் பத்திர அடமானம் போல விலைக்கு விற்பதா? குடும்பப் பெருமைக்கே மாசு அல்லவா அது? ஆனால்... ஊர் பேர்

எழுதாமல் ஏடுகளில் வெறும் பிரபந்தங்களைத்தானே எழுதியிருக்கிறோம்... அதனால் மரபுக்குக் கேவலம் ஏற்படாது. மனதிற்குத்தான் இது பெரிய வஞ்சகம். "சிராப்பள்ளிக் குறவஞ்சியும்", "தெய்வநாயகியம்மை பிள்ளைத் தமிழும்" போலக் கல்பகோடி காலம் தவமிருந்தாலும் எனக்குப் பின் எவனும் எழுத முடியுமா? ஆகா? எவ்வளவு அற்புதமான சந்தங்கள்...? பாடி முடித்ததும் "எனக்கா இவ்வளவு கவித்திறன்...?" என்று என்மேலேயே நான் சந்தேகப்படும்படி இருந்தனவே அவைகள்? என் வாயால் நானே அவைகளைப் பாடிப் பலர் புகழ அரங்கேற்றம் செய்து பெருமை அடையாமல் பேவதற்குச் சென்ற பிறவியில் என்ன பெரும் பாவம் செய்தேனோ? "ஏடும் எழுத்தாணியும் எவருக்குமே இல்லாத திறமையுமிருந்தால் மட்டும் போதாது போலும்! அந்தத் தகுதிகளைப் பெற்ற தனி மனிதனைக் கைதூக்கி மேலே கொண்டு வந்து காலத்துக்கும் அது தொடர்ந்து வர வாழும் சமூகத்திற்கும் அறிமுகம் செய்ய ஒரு பாக்கியமும் வேண்டுமே?..." அந்தப் பாக்கியம் நமக்குக் கொடுத்து வைக்கவில்லை போலும்!... எழுத்தைப் பெயர் சொல்லாமல் "யாரோ முன்னர் எழுதியது போல நினைக்குமாறு" விலைபேசி வாழவேண்டியிருக்கின்ற அந்தப் பாக்கியம் நம் தலையில் எழுதியிருக்கிறதானால் அது தானே நமக்குக் கிடைக்கும்?... ம்ம்ம்..." பலவிதமாக எண்ணி மனங்குமைந்து கொண்டிருந்தது அந்தக் கிழ ஜீவன். தூரத்தில் அவரைப் போலவே உறக்கம் வராததனாலோ என்னவோ, ஏதோ ஒரு சாமக்கோழி இரண்டு மூன்று முறை கூவிக்கொண்டிருந்தது. குளிர்ந்த காற்றும் பன்னீர்ப் பூக்களின் கமகம வென்ற மணமும் பொழுது விடிய இன்னும் நான்கைந்து நாழிகைகளுக்கு மேல் இல்லை என்பதை அறிவுறுத்தின. இப்போதுதான் அவருக்குச் சற்று உறக்கம் வருவது போலிருந்தது.

மறு நாள் பொழுது விடிந்தது. கவிராயர் வழக்கமாக எழுந்திருக்கும் நேரத்திற்கு எழுந்திருக்கவில்லை. விடிந்து வெகு நேரமானபின் எழுந்ததனால் குளித்து உண்ண நாழிகையாயிற்று. வெற்றிலைச் செல்லத்துடன் சாப்பாட்டை முடித்துக்கொண்டு திண்ணைக்கு வந்த அவரை அங்கே அமர்ந்துகொண்டிருந்த சோமசுந்தரம் புன்முறுவலுடன் எழுந்து வணங்கி வரவேற்றான். "அடேடே! சோமுவா? வா! வா! நீ எப்பொழுது வந்தாய்? நான் உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். வந்தவன் உள்ளே வரக்கூடாது?..." என்று கூறிக்கொண்டே திண்ணையில் உட்கார்ந்தார் கவிராயர். சோமுவும் உட்கார்ந்து கொண்டான்.

"ஐயா! இன்று மாலை ஊருக்குப் புறப்படலாம் என்று இருக்கிறேன்" என்று அவரிடம் தான் வழக்கமாகப் பேசும் தமிழில் சோமு கூறினான்.

"அப்படியா? அப்புறம்... இந்த ஏடுகளைப் பற்றி என்னவோ சொன்னாயே!?... இப்போ எதாவது சௌகரியப்படுமா?"

"ஆமாம்! நானே கேட்கவேண்டுமென்று இருந்தேன் ஐயா! ஏதோ இருப்பதைக் கொடுங்கள்... நான் அங்கே முயற்சி செய்து விரைவில் அச்சாகச் செய்கிறேன்...! நல்ல தொகை கிடைக்கவும் ஏற்பாடு செய்யலாம் ஐயா!-" சோமு பேசி நிறுத்தினான்.

முத்துமாரிக் கவிராயர் துணிந்துவிட்டார். உள்ளே எழுந்து சென்ற அவர் காழ்நாழிகைக்குப் பின் தெரிந்தெடுத்த சில சுவடிகளடங்கிய ஒரு சிறு மூட்டையுடன் வெளிப்பட்டார். சோமு அதைப் பெற்றுக்கொண்டான்.

"சோமு!" கவிராயரின் இந்தக் குரலில் அளவு கடந்த உருக்கம் தோய்ந்து வெளிப்பட்டது. "உப்பு புளி வியாபாரம் போல இந்த அமர காவியங்களைக் காசுக்காகக் கொடுக்க விரும்புகிறேன். இது 'என் பூர்வ ஜன்ம பாவம்!' ஏதோ இந்தக் குத்திருமல் நோக்காடு தீர ஏதாவது வைத்தியம் செய்து கொள்ள வேண்டும். அதற்காக இவைகளைப் பணயம் வைக்கிறேன் - அவ்வளவுதான் இதற்கு மேல் நான் உன்னிடம் சொல்ல என்ன இருக்கிறது?" கண் விளிம்பில் நீர் திரள இவ்வாறு கூறினார் முத்துமாரிக் கவிராயர். சோமுவுக்கு அவர் வார்த்தைகள் என்னவோ செய்தன. அமைதியாக, 'ஆகட்டும் ஐயா! வேண்டியதை எவ்வளவு துரிதமாக முடியுமோ அவ்வளவு துரிதமாகச் செய்கிறேன். வருகிறேன் ஐயா! வணக்கம்' என்று கூறி விடைபெற்றுக்கொண்டான். அவன் போன பின்பு உள்ளே திரும்பிய முத்துமாரிக் கவிராயருக்கு ஏதோ இழக்க முடியாத ஏன் இழக்கத்தகாத பொருள் கை நழுவிப் போவது போன்ற ஒருணர்ச்சி ஏற்பட்டது; ஆண்டாண்டுகளாக அகல் விளக்கு வெளிச்சத்தில் குளிரென்றும் பனியென்றும் பாராமல் கை ஒடிய அவர் எழுதிய கவிதா சிருஷ்டிகள் எங்கோ முன் பின் அறியாத இடத்திற்கு, விலைச் சரக்கைப் போலப் போகின்றன. பொள்ளுக்கொள்ளென்று இருமியவாறே கைவலிக்க அவர் பட்ட கஷ்டங்களை வீட்டு வாயில் திண்ணையும் எதிரே இருக்கும் பன்னீர்மரமும் வாயிருந்தால் சொல்லும். திண்ணையும் மரமும் அவை போன்ற இன்னும் எண்ணற்ற எத்தனையோ ஜடப்பொருள்களும் மற்றவர் துன்பங் கண்டு ஆறுதல் கூறும் சக்தியைப் பெற்றிருந்தால் பலர் தேறியிருப்பாரோ என்னவோ? ஆனால் தேறுதலும் ஆறுதலும் கூறிப் பிறரை நம்பிக்கை கொள்ளச் செய்யும் அந்த ஆற்றல் அதைச் செய்ய விரும்பாத அல்லது செய்ய முடியாத மனித சமூகத்தினிடம் அல்லவா இருக்கிறது? அப்படி இருக்கும்போது கவிராயரைப் போன்ற தகுதி பெற்ற தனிமனிதர்கள் எங்கே ஆறுதல் பெற்றுவிடமுடியும்?... ஆறுதலே, வெறும் கானல்நீர்தான் அவரைப் பொறுத்தவரையில்.

ஒன்றரை வருடம் கழிந்தது. சென்னையிலிருந்து ஏதாவது தகவல் தெரியும் என்று காத்திருந்து காத்திருந்து அலுத்து விட்டது கவிராயருக்கு. சுவடிகளை ஸ்தாபனத்தில் கொடுத்து அவருடைய விலாசத்தையும் சொல்லியிருப்பதாகப் போன ஆறு மாதம் கழித்துச் சோமசுந்தரம் கடிதம் போட்டிருந்தான். அவ்வப்போது ஸ்தாபனத் தலைவரைச் சந்தித்துத் துரிதப்படுத்துவதாகவும் கடிதம் எழுதி வந்தான். இங்கே நாளுக்கு நாள் துரும்பாக இளைத்து வந்தார் முத்துமாரிக் கவிராயர். இருமல் நோய் அவரைக் கொல்லாமல் கொன்று கொண்டிருந்தது. அவர் படும் அவஸ்தையைக் காணக் சகிக்காமலோ என்னவோ சுமங்கலியாகவே போய்ச் சேர்ந்தாள் அவருடைய மனைவி. ஒண்டிக் கட்டையாகக் குறிஞ்சிப்பாடியில் இருக்கவே பிடிக்கவில்லை அவருக்கு. அந்த நிலையில்தான் அன்று அவருக்கு ஒரு கடிதமும் புத்தகமும் தபாலில்

வந்து சேர்ந்தன. ஆமாம்! பழஞ்சுவடி சேகரித்து வெளியிடும் ஸ்தாபனத் தலைவர்தான் எழுதியிருந்தார்.

................

"அன்புடையீர்! நீங்கள் சேகரித்து அனுப்பிய பிரபந்தச் சுவடிகளை அச்சிட்டு வெளியிட்டுள்ளோம். அவ்வளவும் நல்ல கவிதா சிருஷ்டிகள். மாதிரிப் புத்தகம் ஒன்று இதனுடன் அனுப்பியிருக்கிறோம். விரைவில் தங்களுக்குச் சேரவேண்டிய தொகையை நிர்ணயித்துச் 'செக்' மூலம் அனுப்புகிறோம்.

வணக்கம்."

கடிதத்திலிருந்த 'நீங்கள் சேகரித்து அனுப்பிய' என்ற வார்த்தைகள் அவருடைய நெஞ்சின் ஆழத்தில் அம்புகள் போலப் பாய்ந்தன. அந்தக் கடிதத்தையும் அதை எழுதியவரையும் கோபித்துக் கொண்டு என்ன பயன்? அவர் எந்த ஏட்டுச் சுவடியிலும் ஊர் பேர் எதுவுமே எழுதாமல், செய்யுளையும் பிரபந்தத்தின் பெயரையும் தானே எழுதியிருந்தார்.

சுற்றியிருந்த புத்தகத்தைப் பிரித்தார். சிராப் பள்ளிக் குறவஞ்சி முதல் அவர் அனுப்பியிருந்த அத்தனை பிரபந்தங்களும் நல்ல முறையில் அச்சிடப்பட்டிருந்தன. கொட்டையெழுத்துக்களில் முதல் இரண்டு மூன்று பக்கங்களில் காணப்பட்ட 'நூலாராய்ச்சி' என்ற பகுதி அவர் கவனத்தை இழுத்தது. யாரோ ஒரு சர்வகலாசாலையில் முதன்மை வகிக்கும் நபராம். 'கேசவேசுவரனார் எம்.எ., எம்.லிட், பி-எச்டி.' 'அவர்கள் கருணை கூர்ந்து எழுதியுதவிய ஆராய்ச்சியுரை' என்று கீழே போட்டிருந்தது. என்ன எழுதியிருக்கிறார் என்று பார்த்த அவர் திடுக்கிட்டார் அடுத்த கணம்.

"இந்நூல் தொகுதியில் அடங்கியுள்ள நிகரற்ற பிரபந்தங்களை இயற்றிய கவிஞர் திலகம் ஏறக்குறை மூன்றரை நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்தவராக இருக்கவேண்டும். இதில் பயின்றுள்ள சில சொல் வழக்குகளையும் பிரயோகங்களையும் நோக்குமிடத்து இன்னும் முற்பட்ட காலத்தவராகக்கூட இவரைக் கருதலாம். சில கற்பனைகளையும் வருணனைகளையும் நுணுகிப் பார்க்குங்கால் 'கோலாகலக் கோவை' முதலிய பிரபந்தங்களை இயற்றிய குமரசேனக் கவிராயரும் இவரும் ஒருவரோ? என்று ஐயுற நேரிடுகிறது. நாட்டு வருணனை நகர வருணனைப் பகுதிகளில் செல்வத்தைப் பற்றி அபரிமிதமான கருத்துக்களைச் சொல்லுதல் கொண்டு சொந்த வாழ்க்கையில் இவரே ஒரு பெரிய செல்வந்தராக இருந்திருக்கலாம் என்று எண்ண முடிகிறது." படித்துக் கொண்டே வந்தவர் மன வேதனையும் மறந்து கடகடவென்று வாய் விட்டுச் சிரித்தார், இந்த வாக்கியத்தைப் படித்தும். இன்னும் என்னென்னவோ வளைத்து எழுதியிருந்தார். ஆராய்ச்சியை படித்துப் பார்க்கப் போகிறேன் என்று அந்த அப்பாவி ஆராய்ச்சியாளர் எங்கே நினைத்திருக்கப் போகிறார்? கவிராயர் புத்தகத்தை அப்படியே ஒரு மூலையில் வீசி எறிந்தார். அவருக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.

"நான் தான் ஐயா இவற்றை எழுதியவன்" என்று ஏட்டுச் சுவடிகளோடு அவரே பட்டினத்துக்குப் போயிருந்தால் ஒரு பயல் திரும்பிப் பார்த்திருக்க மாட்டான்.

'தகுதியோடு கூடிய தனிமனிதன் உயிரைக் கொடுத்துத்தான் தன் சிருஷ்டிகளுக்குப் பெருமை தேடிக் கொடுக்கவேண்டும்' என்ற உண்மை அவருக்கு இப்போது நன்றாகப் புரிந்துவிட்டது. கலையும் திறமையும் கற்பனையும் அபாரமாக இருக்கும் தனிப்பட்ட நிகழ்காலக் கலைஞர்களைக் காட்டிலும் மண்ணோடு மண்ணாக மறைந்துபோன இறந்த காலக் கலைஞர்கள் எது செய்து வைத்திருந்தாலும் அதுதான் சமூகத்தின் பாராட்டிற்குரிய அந்தஸ்தைப் பெறத் தகுதி வாய்ந்தது போலும்.

இந்த நூலாராய்ச்சியை எழுதியுள்ள கேசவேசுவரனாரும் என்னைப் போல ஒரு தனிமனிதன்தான். தகுதி எப்படியோ? அறியமாட்டேன். பட்டமும் பதவியும் சூழ்நிலையும் தகுதியை உண்டாக்கியிருக்கின்றன. அவர் எது பேசினாலும் என்ன எழுதினாலும் இந்தச் சமூகத்திற்கு அமுதம்போல இருக்குமெனத் தெரிகிறது. 'தகுதியை மிகுதி செய்யும் சூழ்நிலையும் பிறவும் இல்லாதபோது என் போன்ற தனி மனிதனிடம் அது பிரகாசிக்க முடியாது? இது தெரிந்து ஆசை கேட்டுத் தொலைக்கிறதா என்ன? கொள்ளுக் கொள்ளென்று இருமியவாறே திண்ணைக்கு வருகிறார். அந்தப் பழம்பாயும் தலைக்கட்டையுமே தகுதியைக் கேட்காது அவரை ஆதரிக்கும் பொருள்கள். தலையை முழங்கையால் முட்டுக்கொடுத்துக் கொண்டே படுத்தார். குத்திக் குத்தி வெளிவந்த இருமல் அவரைப் படுக்கவிடவில்லை. எழுந்து உட்கார்ந்து கொண்டே இருமினார். காலையில் அலர்ந்த பன்னீர் மலர்களெல்லாம் தரையில் உதிர்ந்தன. அரை நாழிகையாக மூச்சைப் பிடித்துக் கொண்டு இருமினார். இடைவிடாமல் இருமினார். அதற்குப் பிறகு இருமல் ஒலி அங்கிருந்து எழவில்லை. பொட்டென்று அவர் தலை கீழே சாய்ந்து தலைகட்டையில் மோதியது. முத்து மாரிக் கவிராயர் தகுதியை உணரமுடியாத உலகிலிருந்து விடுதலை பெற்றுவிட்டார். சாயங்காலம் யாரோ கவிராயர் வீட்டுப் பக்கம் தற்செயலாக வந்தவன் ஊருக்கு அறிவித்து நாலு பேரைக் கூட்டினான். உற்றார் உறவினரற்றவர்களுக்கு ஊரார் கூடி இடுகின்ற கோவிந்தாக் கொள்ளிதான் அவருக்கும் கிடைத்தது. நெஞ்சு வேகுமா? புண்பட்ட அந்த நெஞ்சு வேகும்படி செய்தது அள்ளி வைத்த நெருப்பு. அதற்குத் தகுதி வேண்டியதில்லையே.

"என்ன துரதிஷ்டம் பாருங்கள்; உயிரோடிருக்கும்போது நாலு சருகு வெற்றிலைக்குத் திண்டாடினார் இந்த முத்து மாரிக் கவிராயர். நேற்று அவர் பிணமும் சுடுகாட்டில் வெந்து போயிற்று; இன்று எவனோ சென்னையிலிருந்து அவருக்கு ஐநூறு ரூபாய்க்குச் செக் அனுப்பியிருக்கிறான்! ஏதோ ஏட்டுச் சுவடிகள் அனுப்பிவைத்திருந்தார் போலிருக்கிறது." குறிஞ்சிப்பாடி போஸ்ட்மாஸ்டர் யாரிடமோ விசனப்பட்டுக்கொண்டே ரிஜிஸ்டர் கவரின் மேலிருந்த முத்துமாரிக் கவிராயரின் விலாசத்தைச் சிவப்பு மையினால் அடித்து ஆங்கிலத்தில் சில குறிப்புகள் எழுதி 'சுவடி சேகரிப்பு ஸ்தாபனத்துக்கே' திருப்பி அனுப்பினார். வாழ்ந்தபோதும் அவருடைய தகுதி சிவப்பு மை அடி போலத்தான் அந்தக் கிராமத்து இருட்டடிப்பில் அமுங்கிக் கிடந்தது. இன்றும் அதே கதிதானே?

(1960-க்கு முன்)

## 44. தனி ஒருவனுக்கு

**ந**ண்பர் பரபரப்பாக ஓடி வந்தார். 'கேட்டீர்களா செய்தியை? அந்தப் பயல் முத்துக்காளைக்காக அன்று அவ்வளவு பரிந்துகொண்டு வந்தீர்களே? கடைசியில் அவன் பண்ணையார் வீட்டு வைக்கோல் படைப்பில் நெருப்பை வைத்து விட்டு ஓடியிருக்கிறான்.'

திருவடியா பிள்ளை வியர்க்க விறுவிறுக்க இந்தச் செய்தியை ஓடி வந்து சொன்னபோது, இரவு எட்டரை மணி. அப்போதுதான் இராச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு, வாசல் குறட்டில் வந்து உட்கார்ந்திருந்தேன். பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த வெற்றிலைப் பெட்டியை இன்னும் திறக்கக்கூட இல்லை. அதற்குள் அவர் கொண்டுவந்த செய்தி, ஆளைத் தூக்கிவாரிப் போட்டது. திடுக்கிட்டேன்; அதிர்ச்சியடைந்தேன்.

'யார்? நம்முடைய முத்துக்காளையா? எப்போது செய்தான்?' நம்ப முடியாமல் சந்தேகத்தோடு, மறுபடியும் அவரைத் தூண்டிக் கேட்டேன்.

"உம்முடைய முத்துக்காளையேதான். பொழுது மயங்கி இருட்டியதோ இல்லையோ, சொக்கப்பனை கொளுத்துகிற மாதிரிக் கொளுத்திவிட்டுப் போய்விட்டான். இதோ பாரும் கிழக்கே நாற்பது வண்டி வைக்கோல் எரிகிற அநியாயத்தை!"

நான் குறட்டிலிருந்து இறங்கித் தெருவில் நின்று கொண்டு, கிழக்கே திரும்பிப் பார்த்தேன். கிருஷ்ண பட்சத்து அமாவாசை இருளில் கிழக்கே பண்ணையார் வீட்டுக் கொல்லையில் செக்கச் செவேலென்று சோதிப் பெரு வெள்ளமாய் வானம் வெளிவாங்கியிருந்தது. படைப்பு எரிவது நன்றாகத் தெரிந்தது. தீ நாக்குகள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தன.

'இப்போது என்ன சொல்கிறீர்? உம்முடைய கருணைக்குப் பாத்திரமான அந்த மகானுபாவன் முத்துக்காளையின் கைங்கரியம்தான் இது!' என்றார் திருவடியா பிள்ளையும், தெருவில் என்னருகே வந்து நின்று கொண்டு. எனக்குத் தர்ம சங்கடமாகி விட்டது. ஏழையாயிற்றே என்று இரக்கப்பட்டதற்குக் கைமேல் பலனா? நாளைக்குப் பண்ணையார் முகத்தில் எப்படி விழிக்கப் போறேன்? ஐயோ! இந்த வம்பில் நான் எதற்காக மாட்டிக் கொண்டேன்? முத்துக்காளையின் குடும்பம் எக்கேடு கெட்டுப் போனால் எனக்கென்ன? இந்தத் தெருவிலுள்ள ஐம்பது வீட்டுக்காரர்களும் பேசாமல் இருந்தார்களே; அதைப்போல் நானும் பேசாமல் இருந்து தொலைந்திருக்கக் கூடாதா? முரட்டுப் பயல் என் பெயரைக் கெடுத்துவிட்டுப் போய்விட்டானே?

திருவடியா பிள்ளை வந்து கூறிய செய்தியைக் கேட்டுத் தவியாய்த் தவித்தது என் உள்ளம். முத்துக்காளை அப்படிச் செய்திருப்பான் என்பதை என்னால் நம்ப முடியவில்லை. ஆம்! இன்னும் - அதாவது இந்த விநாடி வரை நம்ப முடியவில்லை.

'என்ன ஐயா; மலைத்துப் போய்த் தெருவிலேயே நின்று விட்டீர்? பண்ணையாரிடம் போய் ஆறுதலாக நாலைந்து வார்த்தைகள் சொல்லிவிட்டு வரவேண்டாமா? சமாசாரத்தைக் கேள்விப்பட்ட பிறகும், நீர் போகாமல் இருப்பது நன்றாயில்லை.'

'ஆமாம் முத்துக்காளை எங்கோ ஓடிப் போய்விட்டானென்கிறீர்களே. அவன் தீ வைத்துவிட்டு ஓடினதைக் கண்ணால் நேரில் பார்த்தவர்கள் யாராவது உண்டா?'

'யானை பார்க்க வெள்ளெளுத்தா? அந்தப் பயலைத் தவிர வேறு யாராவது இதைச் செய்திருக்க முடியுமா?'

'ஆள் அகப்பட்டு விட்டானா?'

'பயல் அகப்படாமல் எங்கே போகிறான்? தேடிக் கொண்டு போயிருக்கிறார்கள்.'

'சரி; அது போகிறது. படைப்பு எரிவதைப் பார்த்தவுடன் தண்ணீரைத் தூக்கி அணைப்பதற்கு ஏதாவது முயற்சி செய்தார்களோ, இல்லையோ?'

'முழுவதும் எரிந்து சாம்பலாகப் போனாலும் சரி; போலீசார் வந்து பார்க்கிறவரை படைப்பில் ஒரு பொட்டுத் தண்ணீர் சிந்தக் கூடாதென்று பண்ணையார் கண்டிப்பாகச் சொல்லிவிட்டாராம். அதனால் யாரும் எதுவும் செய்யவில்லை. நன்றாக அடியிலிருந்து நுனிவரை பற்றி எரிகிற படைப்பை வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றார்கள்.'

'அட பாவி மனிதா! அவ்வளவு வைக்கோலும் வீணாக எரிந்து சாம்பலானால், அதனால் யாருக்கு என்ன ஆயிற்று?'

'அதென்னமோ? சும்மா எரியட்டும்! இந்த நாற்பது வண்டி வைக்கோல் மீந்ததனால் நான் குபேரனாகிவிடப் போவதில்லை' என்று பண்ணையார் ஜம்பமாகச் சொல்லிவிட்டார். 'யாருக்கென்ன வந்தது; அவரே அப்படிச் சொல்லும் போது?' என்று வாளியும் கயிறுமாகத் தீயை அணைக்க வந்த அக்கம்பக்கத்து ஆட்களும் திரும்பி விட்டார்கள்.

'இதோ வந்துவிட்டேன். வெற்றிலைப் பெட்டி திண்ணையில் கிடக்கிறது. உள்ளே எடுத்து வைத்துவிட்டுக் கதவைத் தாழிட்டுக் கொள்ளும்படி மனைவியிடம் ஒரு வார்த்தை சொல்லிக்கொண்டு வந்து விடுகிறேன். நாம் கேட்க வேண்டிய முறைக்கு, போய் கேட்டுவிட்டு வந்துவிடுவோம்' என்று சொல்லிவிட்டு, உள்ளே சென்றேன்.

'சுருக்க வாருங்கள்! உங்கள் தலையைப் பார்த்தால், பண்ணையார் திட்டித் தீர்த்துவிடப் போகிறார்' என்றாள் அவள்.

கையில் டார்ச் லைட்டுடன் வெளியே வந்தேன். 'வாருங்கள்! போகலாம்' என்று நண்பர் பிள்ளையையும் அழைத்துக் கொண்டு, கிழக்கே பண்ணையார் வீட்டுக் கொல்லையை நோக்கி நடந்தேன்.

நாலைந்து நாட்களுக்கு முன் நான் முத்துக்காளைக்காகப் பண்ணையாரிடம் பரிந்துகொண்டு போக நேர்ந்த அந்தச் சம்பவம், மீண்டும் என் நினைவிற் படர்ந்தது.

முத்துக்காளை, அடிநாளில் நிலங்கரைகளோடு எங்கள் குடும்பம் செல்வம் கொழித்தபோது, வீட்டோடு இருந்த பண்ணை ஆள். அந்தக் காலத்தில் நான் சிறு பிள்ளையாக இருந்தபோது என்னை எத்தனை முறை உப்பு மூட்டை சுமந்து வேடிக்கை காட்டியிருக்கிறான் அவன்? 'சின்ன ஐயா! சின்ன ஐயா!' என்று என் மேல் உயிராக இருந்திருக்கிறான். பிற்காலத்தில் கடனும் உடனும் பட்டு எங்கள் குடும்பம் சீரழிந்தபோது, அப்பா நிலங்கரைகளை ஒவ்வொன்றாக விற்றதும், குடும்பத்தில் நொடிப்பு ஏற்பட்டதும் பெரிய கதை. அந்தச் சமயத்தில்தான் முத்துக்காளை எங்கள் வீட்டில் பார்த்து வந்த பண்ணையாள் உத்தியோகத்தை இழந்து வெளியேற வேண்டி நேர்ந்தது. ஊரில் எங்கோ ஒரு மூலையில் அவனுக்குக் கால் வேலி நிலமிருந்தது. அதில் பாடுபட்டுக் காலத்தைத் தள்ளிக் கொண்டிருந்தான். அதன் பின் நான் தலையெடுத்ததும், படித்ததும், சொந்த ஊரிலேயே பஞ்சாயத்து போர்டு நிர்வாக ஆபீஸர் என்று ஒரு உத்தியோகத்தைத் தேடிக் கொண்டதும் இங்கே விவரிக்க வேண்டாதவை.

நான் உள்ளூரிலேயே வீட்டோடு இருந்து வேலை பார்த்துக் கொண்டிருந்தாலும், முத்துக்காளை எப்போதாவதுதான் அபூர்வமாகக் கண்ணில் தட்டுப்படுவான்.

'சின்ன ஐயா! சௌக்கிமா இருக்கீங்களா? அப்பாரு காலத்தோடு ஊரு விட்டது என்று எங்கேயாச்சும் போயிடாமல், நம் ஊருக்கே வந்தீங்களே; சந்தோசம்' என்பான்.

நாலைந்து நாட்களுக்கு முன்னால் ஒருநாள் காலை முத்துக்காளை வீடு தேடிக்கொண்டு என்னைப் பார்க்க வந்து சேர்ந்தான். 'வா முத்துக்காளை! என்ன சங்கதி? இவ்வளவு அதிகாலையிலே வந்தாய்' என்றேன். அவன் கூறிய செய்தியிலிருந்து அவனுடைய இக்கட்டான நிலை எனக்குப் புரிந்தது.

போனவருஷம் கோடையில் பண்ணையாரிடம் புரோ நோட்டு எழுதிக் கொடுத்து முன்னூறு ரூபாய் கடன் வாங்கினானாம். அது இந்த வருஷம் ஆரம்பத்தில் வட்டியும் முதலுமாக முந்நூற்றெழுபத்தைந்து ஆகிவிட்டதாம். மகளைக் கலியாணங் கட்டிக் கொடுப்பதற்காக இன்னும் இருநூறு ரூபாய் வாங்கினானாம். ஆகக்கூடி இன்றையத் தேதியில் அறுநூறு ரூபாய் வரை முத்துக்காளை பண்ணையாரிடம் கடன் பட்டிருந்தான். ஒரு வாரத்துக்கு முன்னால் பண்ணையார் கூப்பிட்டு விட்டாராம். போய் என்னவென்று கேட்டானாம். 'உன்னாலே எப்ப ரொக்கம் கொடுத்து, என் கடனை அடைக்க முடியப் போகிறது? பேசாமல் இன்னம் நூறோ, இருநூறோ கையில் தருகிறேன். வாங்கிக்கொண்டு, உன்னுடைய நிலத்தைக் கிரய சாசனம் செய்து கொடுத்துவிடு. நீயாகச் செய்து கொடுக்க மறுத்துவிட்டால், அதை நான் கோர்ட்டு

மூலமாகச் செய்துகொள்ள முடியும்!' என்று பயமுறுத்தினாராம். முத்துக்காளை அரண்டு போய்விட்டான். ஒரு வாரமாகப் பணத்துக்கு அலைந்திருக்கிறான். வேறு எங்கேயாவது கைமாற்றாக வாங்கியாவது பண்ணையார் கடனை அடைத்துத் தப்பித்தால் போதுமென்று ஆகிவிட்டது அவனுக்கு. வயிற்றுக்குக் கஞ்சி வார்த்துக் கொண்டிருக்கும் கால் வேலி நிலத்தையும் கபளீகரம் செய்யப் பார்த்தால், யாருக்குத்தான் ஏற்படாது பயம்?

கடைசியில் என்னிடம் ஓடி வந்திருக்கிறான். 'நீங்கள் தான் ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டும்' என்று காலைப் பிடிக்காத வண்ணம் கெஞ்சினான்.

'முத்துக்காளை! என்னிடம் பணம் இல்லை. வேறு எங்கேயும் சொல்லி வாங்கித் தரவும் வழியில்லை. எனக்குத் தெரிந்தவர்கள், வேண்டியவர்கள் எல்லோரும் பண நிலைமையில் அநேகமாக என்னைப் போன்றவர்கள்தான். ஆனால் ஒரு உதவி உனக்கு நான் செய்ய முடியும். ஊர்ப் பஞ்சாயத்து ஆபீஸர் என்ற வகையில், நாலு பேரிடம் செல்வாக்கு இருக்கிறது. நாளைக் காலையில் நீ இங்கே வா. நானும் இன்னும் இரண்டு மூன்று முக்கியமான புள்ளிகளும் உன்னைப் பண்ணையாரிடம் அழைத்துக் கொண்டு போய்ச் சுமுகமாக ஒரு நல்ல முடிவு ஏற்பட வழி செய்கிறோம். உன் நிலம் பறிபோகாதபடி ஒரு மத்தியஸ்தம் பேசிக்கொள்ளலாம்' என்று சொல்லி அனுப்பினேன். அவன் நம்பிக்கையோடு போனான். பஞ்சாயத்து ஆபீஸ் மூலம் எத்தனையோ பெரிய காரியங்களுக்கெல்லாம் பண்ணையார் என் தயவை எதிர்பார்க்கிறார். ஆகவே முத்துக்காளை விஷயத்தில் என் வார்த்தையை அவர் தட்டமாட்டாரென்ற நம்பிக்கை எனக்கு இருந்தது.

உண்மையில் மறுநாள் நான் நினைத்தபடியே நடந்தது. முத்துக்காளையும், நண்பர் திருவடியா பிள்ளை போன்ற இரண்டொரு ஆட்களையும் கூட்டிக் கொண்டு போய்ப் பண்ணையாரிடம் மத்தியஸ்தம் பேசினேன். என்னைத் தவிர மற்ற யாரும் முத்துக்காளையைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை.

'சார்! இந்தப் பயல்கள் சொன்னால் சொன்னபடி நாணயமாக நடந்துகொள்ள மாட்டார்கள். முரட்டுத்தனமாக ஏதாவது பேசுவார்கள். அடாபிடிக் காரியங்களில் இறங்குவார்கள். இவர்களுக்காகப் பரிந்துகொண்டு வந்து, உங்கள் கௌரவத்தைக் கெடுத்துக் கொள்ளாதீர்கள்' என்று நெருங்கிய நண்பரான திருவடியா பிள்ளையே தடுத்துப் பார்த்தார்.

'இல்லை சார்! எங்கள் முத்துக்காளையை எனக்குத் தெரியாதா? அவன் தங்கமான மனிதன்' என்று சொல்லி அவரை மறுத்தேன் நான்.

கடைசியில் மாதத்திற்கு இவ்வளவென்று முத்துக்காளை தவணை தவணையாகப் பண்ணையாரின் கடனை அடைத்து விடுவதென்றும், பண்ணையார்வாள் நிலத்தைக் கைப்பற்றுவதில்லை என்றும் சமாதானமாக ஏற்பாடு செய்து விட்டு வந்தேன். நான், நண்பர் பிள்ளை, இன்னொரு உள்ளூர் பிரமுகர் ஆகிய மூன்று பேரும் பக்கத்திலிருந்துதான் பண்ணையாரை இதற்கு இணங்கச் செய்தோம்.

இந்த ஏற்பாட்டைச் செய்து உருப்படியாக நான்கு நாட்கள் கூட ஆகவில்லை. அதற்குள் இப்படி நடந்துவிட்டதென்றால், நம்பக்கூடியதாகவா இருக்கிறது? 'அடக்க ஒடுக்கமாக என் வீட்டில் வந்து கெஞ்சிய முத்துக்காளையா இப்படிப் பண்ணையார் வீட்டு வைக்கோல் படைப்பில் தீயை வைத்து விட்டான்' என்று நம்பமுடியாத மனத்தோடு நடந்து கொண்டிருந்தேன்.

'ஏன் சார்? இந்த முரடன் ஏதாவது அர்த்தத்தோடு செய்திருக்கிறானா பாருங்கள்? அவருடைய வைக்கோல் படைப்பு எரிந்துவிட்டால், இவன் தரவேண்டிய கடனைக் கேட்காமலிருந்து விடுவாரா?'

'அதுதானே எனக்கும் சந்தேகமாக இருக்கிறது! எல்லாவற்றையும் சமாதானமாக முடித்து வைத்தபின் இவன் இப்படி எதற்காகச் செய்தான்?' - இருவரும் பேசிக் கொண்டே பண்ணையார் வீட்டை அடைந்தோம்.

அகலமும், நீளமும், உயரமுமாகக் கொல்லைப் பிரதேசம் முழுவதும் அடைத்துக் கொண்டிருந்த பிரம்மாண்டமான வைக்கோற் படைப்பு இன்னும் அணையாமல் எரிந்து கொண்டுதான் இருந்தது.

கொல்லைப் புளிய மரத்தைச் சுற்றிக் கூட்டமாக இருந்தது. போலீஸ் தலைகளும் தெரிந்தன. பண்ணையாரின் கூப்பாடும், சுளீர் சுளீரெனப் புளிய விளாரினால் அடிவிழும் ஓசையும் கேட்டன.

'முத்துக்காளை பிடிபட்டு விட்டான் போலிருக்கிறது' என்றார் நண்பர். இருவரும் பரபரப்போடு கூட்டத்தை விலக்கிக்கொண்டு உள்ளே சென்றோம்.

முத்துக்காளையைப் புளியமரத்தோடு சேர்த்துக் கட்டிப் போட்டிருந்தனர். போலீஸ் இன்ஸ்பெக்டர் ஏதோ அதட்டிக் கேட்டுக் கொண்டே புளிய விளாரினால் அடித்துக் கொண்டிருந்தார். பண்ணையார் பக்கத்தில் நின்று கூப்பாடு போட்டு அவனை வைதுகொண்டிருந்தார்.

என்னைப் பார்த்ததும் முத்துக்காளை ஓவென்று அலறினான். 'சின்ன ஐயா! இந்த அநியாயத்தைக் கேட்பாரில்லையா? வீட்டிலே உறங்கிக் கிட்டிருந்தவனை எழுப்பிக் கொண்டு வந்து நீதான் வைக்கோல் படைப்புக்குத் தீ வைத்தாய்' என்று சொல்லிக் கட்டி வைத்து அடிக்கிறாங்களே!'

'டேய்! சும்மா இருக்கிறாயா? உதை கேட்கிறதா?' இன்ஸ்பெக்டர் அதட்டிக்கொண்டே புளிய விளாரை ஓங்கவே, என்னைக் கண்டதும் பெருகிப் பாய்ந்த தன் உணர்ச்சியை அவன் அடக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று.

'பாரும் ஐயா இந்த அக்கிரமத்தை! அன்றைக்கு உம்முடைய வார்த்தைக்காகத்தான் இந்தப் பயல்மேல் அனுதாபம் காட்டினேன். கடனைத் தவணை தவணையாக வாங்கிக் கொள்ளச் சம்மதித்தேன். இன்றைக்கு இவன் என் வீட்டுப் படைப்பிலேயே தீ வைத்துவிட்டான். வண்டி பத்து ரூபாய் வீதம் விற்றிருந்தாலும் நானூறு ரூபாய்க்குப் போயிருக்கும்' என்று என்னிடம் வேதனையோடு குறைப்பட்டுக்கொண்டார்

பண்ணையார். எனக்கு அவருடைய வார்த்தைகள் என்னைக் குத்திக் காட்டுவதற்காகச் சொல்லப்பட்டவைபோல் தோன்றின.

முகத்திலும் கண்களிலும் சினமும் ஆத்திரமும் பொங்க, மரத்தில் கட்டிப் போட்டிருந்த முத்துக்காளையை ஏறிட்டுப் பார்த்தேன்.

'ஏண்டா எவ்வளவு நாளா என் பெயரைக் கெடுக்க வேண்டுமென்று இப்படிக் காத்துக் கொண்டிருந்தாய்?'

'ஐயோ! சாமீ! நீங்களுமா இதை நான் செய்திருப்பேன்னு நம்புறீங்க? சத்தியமா, தெய்வ சாட்சியா, இதை நான் செய்யலீங்க. வீட்டிலே கிடந்தவனை இழுத்துக்கொண்டு வந்து 'நீதான்' என்று கட்டிப் போட்டு அடிக்கிறாக. அந்த ஆகாசவாணி, பூமி தேவிக்குக் கண் இருந்தால், அவள் கேக்கணும்' என்று அலறினான் அவன்.

'செய்றதையும் செய்துவிட்டு ஏண்டா இந்த அரிச்சந்திர வேஷம் போடுகிறாய்' என்றார் பண்ணையார்.

'ஸ்டேஷனுக்கு இழுத்துக் கொண்டு போய் உதைக்கிற விதமாக உதைத்தால் 'நான்தான் தீ வைத்தேன்' என்று உண்மையைக் கக்கிவிடுவான் சார்!' என்றார் இன்ஸ்பெக்டர்.

எனக்கு அந்த இடத்தில் அதற்குமேல் நிற்பதற்கே வேதனையாக இருந்தது. 'பண்ணையார்வாள்! என்னை மன்னித்துவிடுங்கள். தெரியாத்தனமாய் இவனுக்காக உங்களிடம் பரிந்து கொண்டு வந்து விட்டேன். இவன் இவ்வளவு அக்கிரமமாக நடந்து கொள்வானென்று நான் எதிர்பார்க்கவில்லை' என்று மன்னிப்புக் கேட்டுக் கொண்டு திரும்பிவிட்டேன். திருவடியா பிள்ளை அங்கிருந்தே விடை பெற்றுக் கொண்டு, அவருடைய வீட்டுக்குப் போய்விட்டார். 'சே! இன்றைய சமூகச் சூழ்நிலையில் எவனும் இளகிய மனதுள்ளவனாக இருக்கக் கூடாது. அனுதாபத்துக்குக் கிடைக்கிற பலன் ஆபத்துத்தான். முத்துக்காளைக்குக் கருணை காட்டப் போக ஊரில் கௌரவமான பெரிய மனிதர் ஒருவரிடம் எனக்கிருந்த மதிப்பைக் கெடுத்துக் கொண்டேன். 'எவன் எக்கேடு கெட்டுப் போனால் எனக்கென்ன? என்று பேசாமல் இருந்திருந்தால், இந்த வம்பெல்லாம் வந்திருக்குமா?' பண்ணையார் வீட்டுக் கொல்லையிலிருந்து இருளில் வீடு திரும்பிக் கொண்டிருக்கும்போது என் மனத்தில் இத்தகைய விரக்தியான எண்ணங்கள் குழம்பின.

இரண்டு மூன்று நாட்களுக்குப் பின் திருவடியா பிள்ளை மறுபடியும் என்னைத் தேடிக்கொண்டு வந்தார்.

'போலீஸ் ஸ்டேஷனில் அடியும் உதையும் பொறுக்க முடியாமல் முத்துக்காளைப் பயல் உண்மையை ஒப்புக் கொண்டுவிட்டானாம், 'நான் தான் தீ வைத்தேன் என்று.'

'தொலைகிறான். விட்டுத் தள்ளுங்கள் அந்தக் காலிப் பயல் பேச்சை' என்று வெறுப்பாகக் கூறினேன் நான்.

'அத்தோடு இன்னொரு செய்தி தெரியுமா உங்களுக்கு? பழைய கடன் பாக்கி அறுநூறு ரூபாக்கும், வைக்கோல் படைப்பு எரிந்ததற்காக நஷ்ட ஈடாக நாநூறு ரூபாக்குமாகப் பண்ணையார் கோர்ட்டில் வழக்குப் பதிவு செய்துவிட்டாராம்.'

'ஊம்.. அப்புறம்?'

'அப்புறமென்ன? வழக்கு வெற்றியாவதில் தடையில்லை. கோர்ட்டில் 'டிகிரி' வாங்கினதும், அந்தக் கால் வேலி நிலத்தைச் சுவாதீனம் செய்து சுவீகரித்துக் கொள்வார்.'

'அதைத்தானே அவர் செய்ய முடியும்?'

'பின்னென்ன? பணத்தைக் கடன் கொடுத்தவன் தலையில் முட்டாக்குப் போட்டுக்கொண்டு சும்மா போவானா? கொடுத்த கடனுக்கு எதையாவது வாங்கித்தானே ஆகவேண்டும்?'

'ஆமாம் ஆமாம்! நன்றாகச் செய்து கொள்ளட்டும். நமக்கென்ன வந்தது?' என்று அசுவாரஸ்யமாகப் பதில் சொன்னேன் நான். நண்பர் கேட்டுக்கொண்டு போய்ச் சேர்ந்தார். இது நடந்த சில நாட்களுக்குப் பின்பு முத்துக்காளை ஆறுமாதக் கடுங்காவல் தண்டனை பெற்று ஜெயிலுக்குப் போனதாகவும், அவன் தரவேண்டிய கடன் பணத்துக்காகப் பண்ணையார் கோர்ட்டில் 'டிகிரி' வாங்கி, அவனுடைய கால் வேலி நிலத்தைச் சுவீகரித்துக் கொண்டதாகவும் அறிந்து கொண்டேன்.

என் மனதில் அப்போது சிறிதும் அனுதாபமோ இரக்கமோ ஏற்படவில்லை. 'அயோக்கியப் பயல்! ஒழுங்காக இருந்து தவணை தவறாமல் பண்ணையாருக்குக் கடன் பணத்தைக் கட்டியிருந்தானென்றால் இப்படிச் சீரழிய நேர்ந்திருக்குமா?' என்றுதான் நினைத்தேன்.

பண்ணையாரின் வைக்கோல் படைப்பு எரிந்த அமாவாசைக்கு அடுத்த அமாவாசையன்று, முன்னிரவு நேரத்தில் ஆபீஸ் காரியமாகப் பக்கத்துக் கிராமம் ஒன்றிற்குப் போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். பொழுதோடு ஊர் திரும்ப முடியாததால், அமாவாசை இருட்டில் கையில் டார்ச் லைட்கூட இல்லாமல் மேடும் பள்ளமுமான வாய்க்கால் வரப்புப் பாதைகளில் குறுக்கு வழியாகத் தட்டுத் தடுமாறி நடந்து வரவேண்டியிருந்தது.

மணி ஏழு, ஏழே காலுக்கு மேலிருக்காது என்றாலும், வானம் மழைக்கோப்பாக மப்பு மந்தாரத்தோடு இருந்ததாலும், அமாவாசையினாலும், இருள் அப்போதே கனத்திருந்தது.

எப்படியோ, ஊரை நெருங்கிவிட்டேன். பண்ணையார் வாழைத் தோட்டத்திற்குள் செல்லும் வரப்பின்மேல் சென்று கொண்டிருந்தேன். அதைக் கடந்து கிழக்கே கால் பர்லாங் தூரம் நடந்தால் ஊர்தான். வாழைத் தோட்டத்துக் கிணற்றடியில் பண்ணையார் எவருடனோ பேசிக் கொண்டிருக்கும் குரல் கேட்டது. வரப்புப் பாதையை ஒட்டினாற்போலக் கிணறு. இருட்டினாலும் வாழை மர

அடர்த்தியினாலும் பாதையில் நடக்கிற ஆளைக் கிணற்றடியிலிருந்து கண்டு கொள்ள முடியாது. அதேபோல் கிணற்றடியில் நிற்கிறவர்களையும் பாதையிலிருந்து பார்த்துவிட முடியாது. ஆனால் பேச்சுக் குரலைக் கேட்க முடியும்.

நான் தயங்கி நின்றேன். பண்ணையார் பேசிக்கொண்டிருந்தது வேறு யாரோடும் அல்ல. அவருடைய சொந்த மைத்துனர் பரமசிவத்தோடுதான் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்.

'என்னப்பா பரமசிவம்! மாடு கன்றுகளுக்குத் தீவனம் இல்லாமல் சங்கடமாக இருக்கிறது. எங்கேயாவது ஒரு பத்து வண்டி வைக்கோல் விலைக்கு வந்தால் பாரேன்!' - இது பண்ணையாரின் குரல்.

'அத்தான்! நீங்கள் அன்றைக்கே அந்தப் படைப்பைப் பாதியில் அணைத்திருந்தால் எரிந்தது போகப் பத்துப் பன்னிரண்டு வண்டி வைக்கோலாவது மீந்திருக்கும். நான் எவ்வளவோ சொன்னேன். நீங்கள் கேட்கவில்லை.' - இது அவர் மைத்துனரின் குரல்.

'அடே, பரமசிவம்! இன்றைக்குத் தெரிந்துகொள், அந்த இரகசியத்தை. அன்றைக்குப் படைப்பு எரிந்ததே, அது ஒரு நாடகம். உண்மையில் படைப்புக்குத் தீ வைத்தது யார் தெரியுமா?'

'யார்?'

'நானேதான்!'

'என்ன அத்தான், விளையாடுகிறீர்களா?'

'விளையாடவில்லை! நிஜமாகத்தான் சொல்கிறேன். இன்றைக்குத்தான் இந்த மர்மத்தை என் நெஞ்சிலிருந்து இரண்டாவது மனுஷனுக்குத் திறந்து சொல்கிறேன்!'

'அத்தான்! 'பகலில் பக்கம் பார்த்துப் பேசு. இரவிலே அதுவும் பேசாதே' என்பார்கள். கொஞ்சம் மெல்லவே பேசுங்க.'

இருவருடைய பேச்சுக் குரலும் தணிந்தது. ஆனாலும் பாதையில் வரப்பின் மேல் நின்றுகொண்டிருந்த எனக்குத் தெளிவாகக் கேட்டது.

'இந்தப் பஞ்சாயத்துப் போர்டு ஆபீஸர் இருக்கிறானே, இவனுக்காகத் தவணை வாரியாகக் கடனை வாங்கிக் கொள்வதாகச் சொல்லி வைத்தேன். இல்லையானால் எப்படியும் அந்தக் கால் வேலி நிலம் நம் கைக்கு வந்திருக்க வேண்டியது. கடைசியில் 'என்னடா வழி' என்று பார்த்தேன். இந்த வேலையைச் செய்தேன். நாற்பது வண்டி வைக்கோல் போனதனால் எனக்கு ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. தலைக்கால் பாசனத்தில் அயனான நிலம் கால் வேலி கைக்கு வந்துவிட்டது.'

'அப்படியானால் அந்தப் பயல் எப்படிப் போலீஸில் தானே தீ வைத்தாக ஒப்புக் கொண்டான்?'

'அவனாகவா ஒப்புக் கொண்டான்? கொடுத்த அடியும், உதையும், நகக் கண்களில் ஏறிய ஊசியும், சேர்ந்தல்லவா அவனை அப்படி ஒப்புக் கொள்ள வைத்தன!'

*'அத்தான்! என்ன இருந்தாலும் நீங்கள் எமகாதகப் பேர்வழிதான்!' - மைத்துனரின் பாராட்டுக் குரல் மெதுவாக ஒலித்தது.*

கேட்டுக்கொண்டு நின்ற என் நெஞ்சம் குமுறிக் கொதித்தது. எனக்குத் தெரிந்துவிட்டது! உண்மை தெரிந்துவிட்டது! ஆனால், நான் என்ன செய்ய முடியும்? 'சட்டமும், நியாயமும், நீதியும், போலீஸும், தனி மனிதனுக்குப் பயன்படாதவரை இந்தச் சமூகம் இப்படித்தான் குட்டிச் சுவராகப் போய்க் கொண்டிருக்கப் போகிறது' என்று நினைத்துக் கொண்டே, அதற்கு மேலும் அங்கு நிற்கத் திராணியின்றி ஊரை நோக்கி வேகமாக நடந்தேன். என்னைச் சுற்றிலும் நிறைந்திருந்த கனமான இருளைப் போலவே, அந்த உண்மையையும் ஒரு இருளாகத்தான் எண்ண வேண்டியிருந்தது. யாரிடம் சொல்ல முடியும்? சொன்னால் யார்தான் நம்புவார்கள்?

ஆறு மாதத்துக்குப் பின்பு ஒரு நாள் இரவு பதினொன்றரை மணிக்குமேல் இருக்கும். இன்ஸ்பெக்ஷனுக்காகக் கணக்குகளையும், லெட்ஜர்களையும், அரிக்கேன் லாந்தரின் மங்கிய ஒளியில் புரட்டிச் சரிபார்த்துக் கொண்டு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். திருவடியாபிள்ளை கிழக்கேயிருந்து அலறிப் புடைத்துக்கொண்டு ஓடி வந்தார்.

'அந்தப் பயல் முத்துக்காளை இன்று காலையில்தான் விடுதலையாகி வந்தான். வந்ததும் வராததுமாகப் பண்ணையார் வீட்டிலேயே நெருப்பு வைத்துவிட்டான். வீடு பற்றி எரிகிறது. வாருங்கள். அக்கம் பக்கத்திலும் நெருப்புப் பரவிவிடுமோ என்று பஞ்சாயத்து போர்டு தலைவர் அஞ்சுகிறார். உங்களை உடனே கூட்டிக்கொண்டு வரச் சொன்னார்.'

நான் பதில் பேசவில்லை. திருவடியா பிள்ளை பதறினார்.

'பிள்ளை அவர்களே! இந்த நெருப்பு பண்ணையார் வீட்டில் வைத்த நெருப்பு அல்ல. உங்கள் சமூக நீதியிருக்கிறதே, அதன் அழகான மூஞ்சியில் முத்துக்காளை என்ற ஒரு ஏழை வைத்த நெருப்பு! அந்த நெருப்பை இனி யாராலும் அணைக்க முடியாது. போய் வாருங்கள்! இப்போது நான் வர முடியாது' என்று நிர்த்தாட்சண்யமாகச் சொன்னேன்.

**(1960-க்கு முன்)**

## 45. மண் குதிரை

அண்ணன் சிரித்தார். பல் தேய்க்கிற 'பிரஷ்'ஷின் நுனியிலிருந்து பறித்து ஒட்டவைத்த மாதிரி நரைத்த நறுக்கு மீசை. அதற்குக் கீழே வெற்றிலைக் காவி ஏறிய உதடுகளின் நடுவே இரண்டு தங்கப் பற்கள் உட்பட எல்லாப் பற்களும் தெரிகிறாற் போல ஒரு வியாபாரச் சிரிப்பு. யார், யாரைச் சந்தித்தாலும் அந்த விநாடி வரை அவர்களுக்காகவே தாம் வாழ்ந்து கொண்டிருப்பதைப் போல் எண்ணச் செய்து விடுகிற முகத்தோற்றமும், பேச்சும், குழைவும், அண்ணனுக்கு உண்டு; அண்ணனுக்கு மட்டும்தான் உண்டு!

அண்ணன் வியாபாரி. தொழிலால் மட்டும் அன்று, பேச்சு, சிரிப்பு நட்பு, பழக்க வழக்கம் எல்லாவற்றிலும் அவர் வியாபாரி. வியாபாரம்தான் அண்ணனுக்கு வாழ்க்கை. அதாவது வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியும் வியாபாரத்துக்காக என்று நினைக்கிறவர் அண்ணன். கடை வாசலில் அந்த நாற்காலியில் உட்கார்ந்துகொண்டே பத்து மணியிலிருந்து ஏழரை மணிக்குள் உலகத்தை விற்றுக் கொள்முதல் பண்ணிவிடுகிற சாமர்த்தியமுள்ளவர் அண்ணன்.

"அடேய் பையா, ஐயா வந்திருக்காங்க பார், ஒரு நாற்காலி கொண்டு வந்து போடு..."

நாற்காலி வந்தது. உட்கார்ந்தேன்.

"வெற்றிலை போடுறீங்களா...? காப்பி வாங்கி வரச் சொல்லட்டுமா?" என்ற வார்த்தைகளும் அண்ணன் வாயிலிருந்து வந்தன. யார் வந்தாலும் வெற்றிலையும், காப்பியும் வாங்கி வரத் துடித்துக் கொண்டிருப்பதுபோல் அண்ணன் ஆர்வத்தோடு விசாரித்துவிடுவார். ஆனால் அண்ணனுடைய ஆர்வமெல்லாம் விசாரிப்பதோடு சரி. இந்த விநாடி வரை யாருக்கும் அண்ணன் எதுவும் வாங்கித் தந்தது இல்லை என்று நாற்பதாயிரம் கோயில்களில் சத்தியம் செய்து கூறத் தயார். அண்ணனுடைய குழைவெல்லாம் விசாரிப்பில் மட்டும் தான் உண்டு. கடை நிறையக் கூட்டம் பொங்கி வழியும். அண்ணனுக்குப் பட்டுப் புடவை வியாபாரம்; கடையைக் கவர்ச்சியாக வைத்துக் கொள்வதில் அண்ணன் கைதேர்ந்தவர். மூலைக்கு மூலை மின்விசிறிகள் சுழல, ஒளி விளக்குகள் மின்ன, அந்தக் கையகல இடத்தை மதன் மாளிகையாக்கி யிருந்தார். கடைக்குள் எந்த நேரமும் ஊதுவத்தி மணக்கும். ஆம்! அண்ணனுக்கு 'வத்தி வைப்பதில்' - எப்போதுமே ஆசை அதிகம்.

கடையிலுள்ள நயம் பட்டுப் புடவைகள் மட்டுமல்ல, அண்ணனுடைய பேச்சும் வழுவழுவென்றுதான் இருக்கும். கடையில் வேலை பார்க்கும் பையன்களைப் பம்பரமாக ஆட்டி வைத்துவிடுவார் அண்ணன். நிற்கவும் விடமாட்டார்; உட்காரவும் விடமாட்டார்.

"அடேய்! அந்தம்மாவுக்கு 'கொள்ளை காலத்தை' எடுத்துக் காட்டு. புதுசாக நேற்று வந்த தினுசுகளெல்லாம் காண்பி."

"சுப்பையா! நீ பத்துக் காஞ்சீவரம் பட்டுப் புடவையைக் கொண்டு போய் முதலியார் வீட்டிலே காட்டிவிட்டு வா... அவங்க வீட்டிலே நேத்தே சொல்லி யனுப்பிச்சிருந்தாங்க..."

"அடேய் அப்பா துரைசாமீ! அதா பாரு - எம்.எல்.ஏ. வீட்டு அம்மா காரிலே வாராங்க. போய்க் கார்க் கதவைத் திறந்து அழைச்சுக்கிட்டு வா... கடைக்கு வர்றதாக இப்பத்தான் அந்தம்மா 'போனி'லே சொன்னாங்க..."

எதிர் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருக்கும் என்னோடு உரையாடும் போதே நான்குபுறமும் சுழலும் வியாபாரக் கண்களால் இத்தனை காரியத்தையும் சமாளிப்பார் அண்ணன். அந்த சமாளிக்கும் திறமையைக் கண்டு வியந்து கொண்டிருப்பேன் நான். அண்ணன் டெலிபோனில் பேசுகிற அழகைச் சொல்லாமல் விட முடியாது. நேரில் பார்க்கிறபோது பேசுகிற அதே குழைவு நெளிவை டெலிபோனிலும் காட்டுவார். அண்ணனுக்கு ஆங்கிலம் தெரியாவிட்டாலும் முக்கியமான ஆங்கில வார்த்தைகள் தெரியும். நாற்காலியில் அட்டகாசமாகச் சாய்ந்து கொண்டே, 'டெலிபோனை' எடுப்பார். 'எஸ். ஸ்பீகிங்' இந்த இரண்டு வார்த்தைகளை மட்டும் ஆங்கிலத்தில் சொல்லிவிட்டுப் பின்பு தமிழில் பேசுவார். "அப்படீங்களா... பரவாயில்லே... அனுப்புங்க... தரேன்... நம்ம பணத்துக்கென்ன? வசதிபோலக் கொடுங்க... அதுக்கென்ன?... வணக்கம்." என்று பேசி போனை வைத்துவிடுவார்.

"தறுதலைப் பய; மாசம் எண்ணூறு ரூபாய் சம்பளம் வாங்கிறவன் புடவையைக் கடனாக் கொடுடாங்கிறான். எவன் வீட்டு முதலோ, தெரியலை" என்று போனை வைத்த சூட்டோடு எதிரே உட்கார்ந்திருக்கும் என்னிடம் சீறுவார் அண்ணன்.

"வியாயாரம் என்றால் நாலு விதமும்தான் இருக்கும்" என்று பொதுவாக மறுமொழி சொல்வேன் நான்.

"நாலாவது, விதமாவது! இந்த பெரிய மனுசங்க பழக்கத்தாலே கடனும், ஓசியும் கொடுத்திட்டு வருசத்துக்குப் பத்தாயிர ரூபாய் எங்கடையிலே நஷ்டக்கணக்கு எழுதறேன். யார் கிட்டப் போய்ச் சொல்றது? அத்தனை பேரும் நாணயமில்லாதவங்க. வெளியிலே பேரும் புகழும் வாங்கிடறாங்க. டாக்டர் பொன்னம்பலம் போன வருசம் 600 ரூபாய்க்கு மூணு பட்டுப்புடவை எடுத்தாரு. ஒரு வாரத்திலே 'செக்' அனுப்பறேன்னிட்டுப் போனாரு. இன்னும் அனுப்பப் போறாரு! பார்லிமெண்ட் மெம்பர் பா.சு.ப. மகள் கலியாணத்துக்கென்று மூவாயிர ரூபாய்க்கு ஜவுளி கொண்டு போனாரு. இன்னும் பாக்கி வந்தபாடில்லை. வீட்டுக்குப் போனா ஆள் அகப்படறதில்லை. 'டெல்லி போயிருக்காரு'ங்கிறாங்க. டெல்லியிலிருந்து திரும்பினா வேறெங்கியாவது திறப்பு விழா, மூடுவிழான்னு ஊர் மேலே போயிடறாரு. அட இவங்கதான் இப்படி இருக்காங்கன்னா இந்தச் சீர்திருத்தக் கழகச் செம்மல்னு ஊரெல்லாம் புகழ் பாடுறாங்களே 'செங்கமல வண்ணனார்' அவரும் இங்கே நம்ம

கடைக் கடன் பேரேட்டில் பல்லிளிச்சிட்டிருக்காரு" என்று அண்ணன் குறைபட்டுக் கொண்டதை நான் முழுவதும் நம்பத் தயாராயில்லை. உண்மையிலேயே பெருந்தன்மையும், நாணயமும் உள்ளவர்களை ஒரு மனிதன் குறைபடுத்திப் பேசுகிறானென்றால் அதற்கு ஒரே ஒரு காரணம்தான் இருக்க முடியும். குறைத்துப் பேசுகிறவன் தன்னைக் குறுக்கு வழியில் பெரிய மனிதனாக்கிக் கொள்ள விரும்புகிறான் என்பதுதான் அந்தக் காரணம். இந்த மாதிரி நாகரிகமாகப் பொய்கள், புரட்டுக்கள் அண்ணனிடம் சற்று அதிகமாகவே உண்டு.

அண்ணனுக்கு என்னிடம் அந்தரங்கமான நம்பிக்கை. சில சமயங்களில் என்னிடம் அவர் சொல்வார் :

"இதெல்லாம் எதுக்கு மனசுவிட்டு உங்ககிட்டச் சொல்றேன் தெரியுமா? நீங்க கதை, நாவல்னு நாலு விதமும் எழுதறவங்க. பெரிய மனுசனின்னு பேர் பண்ணிட்டிருக்கிறவங்க எப்படி எப்படியிருக்காங்கன்னு நீங்க தெரிஞ்சுக்கணும் பாருங்க..."

இதைக் கேட்டு மனத்துக்குள் சிரித்துக் கொள்வேன் நான். அண்ணனிடம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும் போது அவரைத் தேடி வேறு யாராவது முக்கியமான ஆட்கள் வந்தால் எனக்கு அவர்களை அறிமுகப்படுத்தி வைக்கிற விதமே தனியாக இருக்கும்.

"நீங்க விழுந்து விழுந்து படிக்கிறீங்களே அந்தக் கதை அதும் பேரென்ன?... எனக்கு நினைவில்லையே!... அதை எழுதறவரு இவருதான்... எப்ப வந்தாலும் இங்கே நம்ம கடையிலே தான் ஆளைப் பாாக்கலாம். நமக்கு ரொம்ப வேண்டியவரு."

அண்ணனுடைய அறிமுகம் முறையாக இருக்காது. ஒரு பக்கம் சொல்லி இன்னொரு பக்கத்தைப் பற்றிச் சொல்லாமலே இருந்திடுவார். இரண்டு பக்கமுமே எல்லாவற்றையும் சொல்லிவிட்டுப் பேர்களை மட்டும் சொல்ல மறந்துவிடுவார்.

நான் வேறு வேலையே இல்லாமல் அவருடைய கடையே கதியென்று பழி கிடப்பது போலவும் - என்னைப் போலவே வெளியில் பேர் பெற்ற ஆட்களெல்லாம் அவர் மட்டில் சுட்டு விரலை அசைத்தால் ஓடி வந்து கும்பிடும் கூலிக்காரர்கள் போல்தான் என்று தோன்றும்படியும் - அண்ணன் மற்றவர்கள் முன் சொல்லிக் கொள்ளவும் - நடந்து கொள்ளவும் - காட்டிக் கொள்ளவும் ஆசைப்படுவார். புதிது புதிதாகத் தீப்பெட்டிப் படங்களைச் சேர்த்து வைத்துக் கொண்டிருக்கும் சிறுவன், பிற சிறுவர்களிடம் ஆணவத்தோடு காட்டிக் கொள்ள ஆசைப்படுவது போலத்தான் அண்ணனின் பழக்கம்.

வெளியே பெரிய பெரிய ஆட்களெல்லாம் போட்டி போட்டுக் கொண்டு படிக்கும் என் நாவல்களின் பெயர்கள்கூடத் தமக்கு நினைவிருப்பதில்லை என்று காட்டிக் கொள்வதில் தம் பெருந்தன்மையை நிலைநாட்ட முயல்வார். உண்மையில் அண்ணனுக்கு அந்தப் பெயர்கள் நன்றாக நினைவிலிருக்கு மென்பது எனக்குத் தெரியும்.

'பெரிய மனிதன்' ஆவது என்றால் இலேசுப்பட்ட காரியமா அது? எத்தனையோ தெரிந்தவற்றைத் தெரியாதது போலவும், தெரியாதவற்றைத் தெரிந்தது போலவும் காட்டிக் கொண்டுதான் ஆகவேண்டியிருக்கும். யாராவது பெரிய மனிதர்கள் தேடி வந்துவிட்டால் அவர்களை 'ஆகா ஓகோ' என்று கொண்டாடுவார். அவர்கள் தலை கடை வாயிற்படியிலிருந்து மறைந்த அடுத்த கணத்தில், அதே ஆட்களைத் தூக்கி எறிந்து கேவலமாகப் பேசத் தொடங்கிவிடுவார். இந்த மாதிரிப் புறம் பேசுகிற குணம் அண்ணனுக்கு மிக அதிகம்.

"இந்த நாட்டிலே அத்தனை பேரும் அயாக்கியங்க. அத்தனை பேரும் நன்றி கெட்டவங்க; - இதோ இப்ப மந்திரியா இருக்காரே. கே.எஸ். ஆயிரத்துத் தொளாயிரத்து நாற்பத்திரண்டிலே காலிலே ஆபரேஷன் ஆகி ஆஸ்பத்திரியிலே கிடந்தாரு. ஒரு பயல் ஏனின்னு கேட்கவில்லை. நம்ம கடையிலேருந்து டிபன் செட்டிலே சோறு அனுப்பினேன். இன்றைக்கு என்னடான்னா அவரு நம்மைப் பார்த்தால் பேசவே மாட்டேங்கறாரு" என்று திடீரென்று ஆவேசத்தோடு சொல்வார் அண்ணன்.

அவர் சொல்கிற எதையும் நான் அப்படியே நம்பி விடுவதில்லை. தாம் சோறு போட்டதாகவும் புடவை கடன் கொடுத்ததாகவும், அண்ணன் வாய் கூசாமல் யார் யாரைக் கூறுகிறாரோ அவர்களெல்லாம் சொந்தத்தில் ஒன்றுக்கும் வக்கில்லாதவர்களல்லர். செல்வமும், செல்வாக்கும் செழிப்பாக உள்ளவர்கள். அண்ணன் பக்கத்தில்கூட நெருங்க முடியாது. 'உலகமே தம் ஒருவருடைய தயவில்லாமல் வாழ முடியாது' என்று பாமரர்களை நம்ப வைப்பதற்காக அண்ணன் இந்தப் பொய்மையை மேற்கொண்டிருந்தார். எப்படியோ ஏற்பட்டு நிலைத்துவிட்ட பழக்கத்தையும், நட்பையும் விட்டொழிக்க முடியாமல் அண்ணனுடைய பொய் புரட்டுக்களைப் பொறுத்துக்கொண்டு பேசாமலிருப்பது வேடிக்கையாகிவிட்டது எனக்கு. என்னைப் பற்றியோ, என்னுடைய செயல்களைப்பற்றியோ, அண்ணன் யாரிடமும் புறம் பேசவோ, கேவலமாகச் சொல்லவோ மாட்டார் என்பதில் மட்டும் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை. நான் அண்ணனிடம் அருவருப்போ, அச்சமோ கொள்ளாமல், பழகியதற்கு இந்த நம்பிக்கையும் ஒரு காரணம். வேறு அளவு கடந்த பற்று எதுவும் எனக்கு அண்ணனிடமில்லை. வியாபாரி என்னும் தத்துவமே தனிப்பட்டது. தான் செய்கிற அத்தனை தவறுகளும் அறமாகப்படும். அதே தவறுகளை மற்றொருவன் செய்வதற்கு மனம் பொறுக்கமாட்டான் வியாபாரி. தன்னைத் தவிர உலகத்திலுள்ள மற்ற அனைவரும் நாணயமாக வாழ வேண்டுமென்று ஆசைப் படுகிறவர் அண்ணன். ஆனால் உலகத்திலுள்ள ஒவ்வொருவரும் தம்மைப் போலவே எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்பது அண்ணனுக்குத் தெரியுமா?

திடீரென்று ஒருநாள் ஏதாவதொரு சங்க ஆண்டு விழாவுக்கு வசூல் என்று இன்னும் நாலு பேரையும் தூக்கிப் போட்டுக் கொண்டு 'வசூல் நோட்டோடு' கிளம்பிவிடுவார் அண்ணன். அவருக்கு எந்தச் சமயத்தில் எந்த வேலை வந்து சேருமென்று சொல்ல முடியாது.

அண்ணனிடம் எவ்வளவோ மாபெரும் குறைகள் இருந்தன. அவையெல்லாம் உலகத்துக்குத் தெரியாமலில்லை. தெரிந்த பின்னும் அண்ணனை மன்னித்துக் கொண்டிருந்தது. அத்தனை குறைகளையும் மூடி மறைக்கும் ஆற்றலுள்ள ஏதோ ஒரு கவர்ச்சியும் அண்ணனிடம் இருந்தது.

“இதோ பாருங்க... இந்த ஆண்டுவிழாவை அமோகமாக நடத்திப்பிடறதுன்னு நான் பொறுப்பு எடுத்துக்கிட்டேன். எனக்காக விட்டுக் கொடுக்காமல் நீங்க கூட இருந்து பரிமளிச்சிடணும்” என்று தன்னை முதலாக வைத்து வேண்டிக் கொள்வார் அண்ணன். அவருக்கு எப்போதுமே தன்னம்பிக்கை அதிகம்.

அண்ணன் பேச்சிலும், நடையிலும், முகத்திலும், வேகமாக அமுக்கி அடித்த பந்துபோல் ஏதோ ஒரு துள்ளல் இருக்கும். ஏதோ ஓர் அநியாயமான அவசரம் - வேண்டாத அவசரம் - அந்த முகத்தில், அந்தப் பேச்சில் அந்த நடையில் தெரியும்.

“அத்தனை ரயில் ஸ்டேசன்லேயும் சாப்பாட்டுக் கிளப்பை மூடிட்டானா என்னன்னு தெரியலை. இந்தப் பாதையா ரயில்லே போறவங்களுக்கு எல்லாம் சாப்பாடு கொண்டு போக நான்தானா ஆளு?” என்று என்னைப் பார்த்ததும் முன்பின் தொடர்பில்லாமல் புத்தகத்தை நடுப்பக்கத்தில் பிரித்துப் படித்த மாதிரியில் பேச்சைத் தொடங்குவார் அண்ணன்.

“என்ன சங்கதி? அண்ணன் கோபத்திலே இருக்கிறாப் போலிருக்கிறது” என்பேன் நான்.

“அதுக்கில்லே. இந்தச் செஞ்சொல் மாரியார் திருவரங்கனார் இந்தப் பாதையா ரயில்லே பட்டினம் போறாராம், டிபன் செட்டிலே சாப்பாடு கொண்டாந்து ரயில்லே கொடுக்கணுமாம். வேறே வேலை இல்லை” என்று சலித்துக்கொள்வார் அண்ணன்.

“லெட்டர் எழுதியிருக்கிறாரா?”

“லெட்டரா எழுதியிருக்காரு? சும்மா வரிஞ்சு தள்ளியிருக்காரு. போனதடவை இங்கே வந்தப்ப நம்ம வீட்டிலே சாப்பிட்ட சாப்பாட்டை வரிஞ்சு வரிஞ்சு வருணிச்சிருக்காரு...”

நான் மனத்துக்குள் சிரித்துக்கொண்டேன். முக்கியமான பெரிய மனிதர்கள் அந்தப் பாதையாக ரயிலில் போகிற விவரம் தெரிந்து கொண்டு அவர்கள் தயவையும் அவர்களைப் போற்றும் பொதுமக்கள் தயவையும் பெறுவதற்காக அண்ணனே வலுவில் போய் உபசாரம் செய்துவிட்டு வருவார். ஆனால் அதை மற்றவர்களிடம் சொல்லும்போது அந்தப் பெரிய மனிதர்களே கடிதம் எழுதியதாகச் சொல்லுவார். பெரிய மனிதர்கள் அண்ணன் வாயில் புகுந்து புறப்படுகிற தொல்லையைப் பார்த்த பின்பு, நான் பெரிய மனிதனாக வேண்டும் என்ற ஆசையையே விட்டுவிட்டேன். சிறியவர்களுக்கு நடுவில் பெரிய மனிதனாக இருப்பது துன்பமான காரியம்தான். அண்ணனுடைய கடைக்குப் போவதையும் அவரோடு போய் அரட்டை அடிப்பதையும் விட்டுவிட வேண்டுமென்று பலமுறை முயன்றும், நெடுங்காலம்

பழகிய பின்பு காப்பி குடிக்கும் பழக்கத்தை நிறுத்த முடியாததைப் போலவே அதுவும் வெற்றி பெறாத முயற்சியாகவே இருந்தது.

'என்னைப் பொறுத்தவரையில் அவர் புறம் பேசுவதில்லை, கடன் கொடுத்ததாக மற்றவர்களிடத்தில் பொய் சொல்லுவதில்லை'என்று எண்ணியே அந்தப் பழக்கத்தை நீடிக்க விட்டுக் கொண்டிருந்தேன். பழக்க மிகுதி காரணமாக எத்தனையோ கெட்ட வாடிக்கைகளை விட முடிவதில்லை. மற்றவர்களுக்கு யோசனை சொல்வதிலும் அண்ணன் கெட்டிக்காரர்.

"வாங்க; என்ன ஒரு மாதிரிச் சோர்வாத் தெரியிறீங்களே. உடம்புக்கு ஏதாவது..." என்று ஒருவரை வரவேற்பார் அண்ணன். உண்மையிலேயே வந்தவருக்கு உடம்பிற்கு ஒன்றும் இல்லையானாலும், அண்ணன் விசாரிக்கின்ற விதத்தில் நலக்குறைவு இருப்பதாகச் சொல்லிவிடுகிற அளவுக்குப் பந்தம் உண்டாகிவிடும்.

"அசீரணக் கோளாறா? நீங்க ஒண்ணும் செய்ய வேண்டாம். பேசாமல் நான் சொல்கிறபடி செய்யுங்க. குருசாமி மூப்பனார் கடையிலே சுத்தமான மலைத்தேன், பாட்டில் பாட்டிலா விக்கிறாங்க. ஒரு பாட்டில் வாங்குங்க. தினசரி இராத்திரிப் படுக்கிறதுக்கு முன்னாடி 'கால் அவுன்ஸ்' குடிச்சிட்டுப் படுத்தாப் போதும். பத்துநாளிலே உடம்பு சரியாகலேன்னா என்னைக் கேளுங்கள்..." என்று உத்தரவாதம் கொடுப்பார் அண்ணன். பார்க்கிறவர்களுடைய துன்பங்களை எல்லாம் இப்படி விசாரித்து அவர்களைத் தம் மனிதர்கள் போல் தழுவிக் கொண்டு அவர்கள் துன்பங்களுக்கு மருந்து சொல்கிற பழக்கம் அண்ணனிடம் அதிகம். வைத்தியருக்கு வைத்தியம் மட்டும்தான் தொழில். வக்கீலுக்குச் சட்டம் மட்டும்தான் தொழில். ஆனால் வியாபாரம் எல்லாம் கலந்த ஒரு தொழில்; எல்லாம் தெரிந்ததாக நடிக்க வேண்டிய தொழிலும்கூட. உதட்டுக்கு வெளியே பிறந்து உதட்டுக்கு வெளியே போய்விடக்கூடிய வெறும் அனுதாபத்தினாலேயே உலகத்தைத் தன் பக்கம் இழுக்கிறவன் வியாபாரி.

இவ்வளவு சாமர்த்தியமாக இருக்கக்கூடிய அண்ணன் தடுமாறிப் போய் அசடு வழிகிற சமயங்களும் எப்போதாவது ஏற்படும். ஆங்கில வார்த்தைகள் வரும்போது அண்ணன் குழறிவிடுவார். ஒருமுறை அண்ணனுக்கு நண்பர் ஒருவர் தம்முடைய மைத்துனரை அண்ணனிடம் அறிமுகப்படுத்தி வைத்தார். "இவர் என் 'ஒய்பி'னுடைய 'ஓன்' பிரதர்" என்று - தூய தமிழ் பேசிப் பழகாத குற்றத்தினால் ஆங்கிலமும் தமிழும் கலந்து அறிமுகப்படுத்தினார் நண்பர்.

அறிமுகம் முடிந்ததும் பதிலுக்கு ஏதாவது கேட்க வேண்டுமென்று வாய் குழறி ஒரு கேள்வி கேட்டார் அண்ணன். உங்கள் 'ஒய்ஃபின் ஓன் பிரதரா?' என்று கேட்பதற்குப் பதில் வாய் தடுமாறி, "உங்கள் 'ஓன் ஒய்ஃபா'?" என்று கேட்டுவிட்டார் அண்ணன். சுற்றியிருந்த அத்தனைபேரும் அடக்கிக் கொள்ள முடியாமல் சிரித்துவிட்டார்கள். அண்ணன் ஆங்கில அறியாமையால் விளைந்த மானக்கேடு என்னைப்போல் அப்போது அருகிலிருந்தவர்களுக்குச் சகித்துக் கொள்ள இயலாததாக இருந்தது. ஆனால் அதற்குப் பின்பும் அண்ணனோடு பழகுவதை

விட்டுவிடவில்லை. 'அண்ணன்' வழக்கம் போல் எனக்கு 'அண்ண'னாகத்தான் இருந்தார்.

அவர் ஆயிரம் புறம் பேசினாலும், குறளை சொன்னாலும் அவனுக்குச் சோறு போட்டேன். இவனுக்குப் புடவை கடன் கொடுத்தேன் என்று புளுகினாலும், என்னைப் பொறுத்தமட்டில் ஒரு வம்பும் வைத்துக் கொள்வதில்லையே! நான் ஏன் அவர் பழக்கத்தை விட வேண்டும்?

அண்ணன் இன்று தினசரி வழக்கம்போல் வாய் நிறைய 'வாங்க' என்று என்னை வரவேற்றார். உட்காருவதற்குப் பையனை நாற்காலி கொண்டு வந்து போடச் சொல்கிறார். 'வெற்றிலை பாக்கு காப்பி ஏதாவது வாங்கி வரச் சொல்லவா' என்று (வாங்கி வராவிட்டாலும்) கேட்கிறார். உலகத்தில் எத்தனை கெட்ட மனிதர்களும் யாராவது ஒருவருக்காவது நல்லவராக நாணயமானவராக நடந்து கொள்கிறார்களே! அப்படி அண்ணன் என்னை மட்டும் அந்தரங்கமாக வைத்துக் கொண்டு போற்றி வருவதாக எனக்குள் ஒரு திடமான நம்பிக்கை.

அன்று ஞாயிற்றுக்கிழமை. வழக்கமாக மாலைப் பொழுதைக் கழிக்க முற்றுகை போடுகிற இடமான 'அண்ணன் கடை' அன்றைக்கு விடுமுறை. பொழுதைக் கழிக்க என்ன வழி என்று தெரியாமல் ஆறுமணி மாலைக் காட்சிக்கு ஒரு திரைப்படத்துக்குப் போய்ச் சேர்ந்தேன். போகும்போது தாமதமாகி விட்டதால் படம் ஆரம்பித்து ஓடிக் கொண்டிருந்தது. படம் பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்குத் திரையை மறைக்காமல் ஓர் இடத்தில் போய் அமர்ந்தேன். நல்ல படம் அது. இடைவேளையின் போது விளக்கை அணைத்து விட்டு விளம்பரச் சிலைடுகள் காண்பித்தார்கள். அப்போது நான் உட்கார்ந்திருந்த வரிசைக்கு முன் வரிசையில் எனக்குப் பழக்கமான குரல்கள் பேசிக் கொள்கிற ஒலி கேட்டது. நான் அந்தப் பேச்சைக் காது கொடுத்துக் கேட்கத் தொடங்கினேன்.

"அவர் இந்த வாரம் ஒரு கதை எழுதியிருக்கிறாருங்க... பிரமாதமாக இருந்தது. நீங்க கட்டாயம் அதைப் படிக்கணும்."

"என்ன பிரமாதமா எழுதி என்ன பிரயோசனம்? வயிற்றுப் பாட்டுக்குத் தாளம் போடறாரு. தினசரி எப்படா பொழுது விடியப் போகுதுன்னு காத்திருந்தாப்போல நம்ம கடைக்கு வந்து பஞ்சப் பாட்டுப் பாடறாரு. நானும் என்னாலே முடிஞ்சதை ஒண்ணோ ரெண்டோ கையிலே கொடுத்து அனுப்பிகிட்டுத்தான் இருக்கேன்."

"அப்படியா? அவரு நல்ல வசதியோட இருக்குறாரின்னில்ல நான் கேள்விப்பட்டேன்?"

"ஏன் இருக்க மாட்டாரு? மகாலட்சுமி ஜவுளி ஸ்டோர்ஸ் கல்லாப் பெட்டியிலிருந்து ஐயா பணத்தைப் பணமின்னு பாராமல் தினம் கொடுத்துக் கிட்டிருக்கிறாருங்கிறதை வெளியிலே நாலு பேருக்கிட்டேச் சொன்னா ஊர் சிரிச்சுப்பிடும். நான் இதெல்லாம் வலது கை கொடுக்கிறது இடது கைக்குத்

தெரியப்படாதுங்கிற மாதிரி செய்துவிடுவேன். நானும் சொல்றதில்லே; வாங்கிக்கிறவனையும் சொல்ல விடறதில்லை."

சிலைடுகள் காண்பித்து முடிந்து விளக்குகள் எரிந்தன. அந்தத் தியேட்டரில் மட்டும் அப்படி ஒரு வழக்கம். சிலைடுகள் காண்பித்த பின்தான் இடைவேளை.

அண்ணன் எழுந்திருந்தவர் - நான் பின் வரிசையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்துவிட்டார். அவர் முகம் பேயறை வாங்கியதுபோல் சுருங்கிச் சிறுத்தது. அவருடனிருந்தவரும் என்னைப் பார்த்துவிட்டார். அண்ணன் தயங்கி நின்றதெல்லாம் சில வினாடிகள்தான். உடனே சமாளித்துக் கொண்டார். வியாபாரிக்கு எந்த நிலையிலும் சமாளிக்கத் தெரியும்.

"வாங்க; இப்பக்கூட இவரு உங்க கதையைப் பற்றித்தான் புகழ்ந்து சொல்லிக்கிட்டிருந்தாரு. நான் ரொம்பச் சந்தோஷப்பட்டேன்!" அண்ணன் நெகிழ்ந்தார்.

எனக்கோ உள்ளும், புறமும் ஒரே கொதிப்பு. நீண்ட நாட்களாக இருந்த நம்பிக்கை உடைந்த எரிச்சல் ஒருபுறம்; "நமக்கும் அண்ணன் அண்ணன்தான்" என்று அறிந்த குமுறல் மறுபுறம்.

"வாங்க இப்படி; இங்கே உட்காரலாம். இவருக்கு உங்க கதைன்னா கொள்ளை ஆசை..."

"என்ன எழுதிப்பிட்டேன் அப்பிடிப் பிரமாதமா? எல்லாம் மகாலட்சுமி ஜவுளி ஸ்டோர் முதலாளி கொடுத்த பிச்சைக் காசு! இல்லையா?" என்று சாட்டையை ஓங்கிச் சுழற்றிக் கொடுத்தேன். அண்ணன் அசந்துபோய் நின்று விட்டார். எனக்கு அத்தனை கோபமும் வரமுடியும் என்பது அண்ணனுக்கு அப்போதுதான் தெரிந்திருக்க முடியும். அண்ணன் தலையைக் குனிந்துவிட்டார். சுற்றிச் சிறு கூட்டம் வேறு கூடிவிட்டது.

"கவனமா இருங்க... இன்னொரு தடவை இப்படிப் பேசினதாக எங்கேயாவது கேட்டேனோ, கன்னத்தைப் பேர்த்திடுவேன். ஏதோ பழகின பழக்கத்தை விட முடியாமே உங்க கடைக்கு வந்து போயிட்டிருந்தா, என்ன வேணுமானாலும் பேசிடலாங்கிற நெனைப்பா...?"

அண்ணன் தலை இன்னும் குனிந்தது. என் தலை மேலும் நிமிர்ந்தது. துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு தியேட்டரிலிருந்து பாதிப் படத்தைப் பார்க்காமலே வெளியேறினேன். அதனாலென்ன? எத்தனையோ காரியத்தைப் பாதிக்கு மேல் செய்ய முடிவதில்லை.

அண்ணன் மண் குதிரை! என்னுடைய பயமுறுத்தல் அவரை ஒன்றும் செய்யப்போவதில்லை. மண் குதிரையை நம்பி ஆற்றைக் கடக்க முடியாது! நான் கடந்துவிட்டதாக நினைத்துக் கொண்டிருந்தது பிரமை! அல்லது என்னுடைய சொந்த முட்டாள்தனம் என்று வைத்துக் கொண்டாலும் எனக்கு மறுப்பில்லை!

**(கலைக்கதிர், ஜனவரி, 1960)**

## 46. மண்ணும் மாடியும்

**சி**லேட்டுப் பலகையில் அங்கங்கே சாக்பீசால் சுழித்த மாதிரி அந்த மாடியிலிருந்து பார்வைக்குத் தெரிந்த வானப் பரப்பில் வெண்மேகச் சுருள்கள் நெளிந்தன. அதன் கீழே பறவைகள் பறந்தன.

ஏற்காடு மலை பழத்தோட்டங்களும், மலைச்சிகரங்களுமாக அந்த உச்சிப் போதில் அழகாகத்தான் இருந்தது. ஆனால் அந்த மாடியில் நின்றுகொண்டு மலையையும், வானத்தையும் பார்த்துக் கொண்டிருந்த பரிபூரணத்தின் மனத்தில்தான் அழகு இல்லை.

சுருள் சுருளாகக் கலைந்து முன்நெற்றியில் விழும் தலைமுடியும் ஏறக்குறைய அதேபோல் கலைந்து அடங்காத மனமுமாக நின்றுகொண்டும், உலாவிக் கொண்டுமிருந்தான் பரிபூரணம். பரிபூரணத்தின் மனம் பரிபூரணமாக இல்லை அப்போது. அங்கே வந்து அந்தச் சூழ்நிலையில் எந்த எழுச்சியையும், தூண்டுதலையும், உண்டாக்கிக் கொள்ளவேண்டுமென்று அவன் நினைத்திருந்தானோ, அவை உண்டாகவே இல்லை.

இடம் மாறிவந்த பின்னும் மனம் மாறவில்லை. பரிபூரணம் திரைப்படங்களுக்குப் பாட்டு எழுதுகிற கவிஞன். எல்லோரையும் போல 'ஏதோ எழுதினோம்' என்று எழுதி விடாமல் சினிமாவுக்கு எழுதினாலும் அதைக் கருத்தோடும், கவிதையுணர்ச்சியோடும் எழுதவேண்டும் என்று தனக்குத்தானே ஓர் இலட்சியம் வகுத்துக்கொண்டிருந்தான். எந்தெந்த உணர்ச்சிகளை எந்தெந்த நேரத்தில் பாட்டாக எழுத வேண்டுமோ அவற்றைத் தானே அனுபவித்து உணர்ந்த மாதிரி அசல் தன்மையோடு எழுதவேண்டுமென்று பரிபூரணத்துக்கு ஆசை. அத்தகைய சிந்தனைக் கேற்ற தனிமையை நாடியே ஏற்காட்டுக்கு வந்திருந்தான் அவன்.

அப்போது அவன் பாட்டு எழுதிக்கொண்டிருந்த படம் ஒரு புது மாதிரியான சமூகக் கதை. கோடீசுவரனான செல்வக் குடும்பத்து இளைஞன் ஒருவன் குடிசையின் ஏழைப் பெண் ஒருத்திக்காகத் தன் செல்வங்களையும், செல்வாக்கையும், சுகபோகங்களையும் உதறிவிட்டு வருகிறான். அவளுடைய காதலுக்காகக் குடிசையில் வாழ்கிறான். குறைந்த வசதிகளைப் பழகிக் கொள்கிறான். உழைக்கிறான். பணத்திலும் வசதிகளிலும், ஏழையாகி அன்பினால் செல்வனாகிறான் அவன். கதையின் தொடக்கத்தில் ஒரு சம்பவம் :-

ஒரு நள்ளிரவு. புயலும் இடியுமாக மழை பேய்த்தனமாய்ப் பெய்து கொண்டிருக்கிறது. அந்த ஏழைப் பெண் அவனைச் சந்திப்பதற்காக அவனுடைய ஏழு

மாடி வீட்டின் முன்பு வந்து நிற்கிறாள். அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிடுகிறாள். ஏழாவது மாடி முகப்பில் நின்று அவன் கீழே பார்க்கிறான். வானைக் கீறி ஒளிக் கோடிழுக்கும் மின்னல் ஒளியில் அவள் உருவம் சிறியதாய்த் தெரிகிறது. கிழிந்த ஆடையும், நனைந்த உடலும், நெகிழ்ந்த உள்ளமுமாக அவள் கீழே நிற்பதைக் காண்கிறான். அதைக் காண அவன் உள்ளம் உருகுகிறது. கொதிக்கிறது. 'அந்த விநாடியே ஏழு மாடிகளும் இடிந்து தவிடுபொடியாகி ஏகபோக சுக செளகரியங்களெல்லாம் இல்லாமற் போய்விடக் கூடாதா' என்று ஒரு துடிப்பு வருகிறது இளைஞனுக்கு. ஏழையாகிவிட வேண்டுமென்ற தாகம் ஏற்படுகிறது அவனுக்கு. ஏழையிலும் பரம ஏழையாக மாறிக் கீழே ஓடிப் போய் அங்கே நனைந்துகொண்டு நிற்கும் தன் காதலியின் அருகில் தானும் நின்றுகொண்டு நனைய வேண்டும் என்ற ஆசை உண்டாகிறது அவனுக்கு. உடனே ஏழையாக ஏழையிலும் கீழான பஞ்சைப் பராரியாக மாறிவிட வேண்டும்போல ஓர் ஏழையாகத் துடிக்கும் பசி, ஏழையாகத் தவிக்கும் தாகம் அவனை வாட்டுகிறது. அவன் கீழே இறங்குவதற்காகத் திரும்புகிறான். ஒவ்வொரு மாடிப்படியிலும் உறங்காமல் நிற்கிறார்கள் கூர்க்காக்கள். ஒவ்வொரு இடத்திலும் தடையாக ஒரு கதவு.

'இத்தனை கூர்க்காக்களையும், இத்தனை கதவுகளையும், கடந்து நான் ஏழையாக முடியாது! ஏழைக்கும், பணக்காரனுக்கும் நடுவில் இத்தனை கதவுகளா? இத்தனை காவலா? இத்தனை உயரமா? தெய்வமே! என்னை இந்தக் கணமே ஏழையாக்கி விடு! என்னை மண்ணில் வாழ விடு! மழையில் நனைய விடு! இந்த மாடி வேண்டாம்' என்று மாடியில் நின்று கதறிக் கீழே நிற்கும் தன் காதலியை நோக்கிக் கதாநாயகன் ஒரு பாட்டுப் பாடுகிறான்.

இந்தப் பாட்டை அற்புதமாகவும், உணர்ச்சிகரமாகவும் எழுதி முடிப்பதற்குத்தான் பரிபூரணம் ஏற்காட்டின் தனிமையை நாடி வந்திருந்தான். படத்தின் உச்சநிலைச் சம்பவமே கதாநாயகனின் இந்த மனமாற்றம்தான். அவன் மாடியில் நின்று ஏழையாவதற்குத் தவித்துக் கதறிக் கீழே இறங்கவும் இயலாமல் பாடுகிற பாட்டுத்தான் முக்கியமான அம்சம்.

பரிபூரணத்தோடு அந்தப் படத்தின் முதலாளியும் வந்திருந்தார். அவர் ஒரு 'நடிகை'யோடு வந்திருந்ததால் வேறு பங்களாவில் வேறு விதமாகத் தங்கியிருந்தார். அடிக்கடி வந்து அவனைச் சந்தித்துப் 'பாட்டு விரைவில் உருவாக வேண்டும்' என்று அவசரப் படுத்திக்கொண்டிருந்தார். "நாளைக் காலையில் நாம் பாட்டுடன் சென்னை திரும்புகிறோம். நாளைக்கு மாலையே பாட்டை ஒலிப்பதிவு செய்தாக வேண்டும். நீங்கள் வெளியே எங்கும் அலையாமல் இதே வேலையாக உட்கார்ந்து பாட்டை முடித்து விடவேண்டும்" என்று அன்று காலை கண்டிப்பாகச் சொல்லிவிட்டுப் போயிருந்தார் அவர்.

பரிபூரணம் தங்கியிருந்த பங்களாவின் தோட்டத்தில் ஒரு வேலைக்காரனின் குடிசை இருந்தது. அந்த வேலைக்காரனுக்கு ஒரு மகள். ஆனால் அரசகுமாரியாகப் பிறக்கவேண்டிய அத்தனை அழகு அவளுக்கு. அந்த வேலைக்காரப் பெண் மட்டும்

அரச குமாரியாகப் பிறந்திருந்தால் தங்களுக்கு இவ்வளவு அழகு இல்லையே என்று அரசகுமாரிகளெல்லாம் தூக்குப் போட்டுக் கொண்டு செத்திருப்பார்கள். அப்படி ஒரு வனப்பு அந்தப் பெண்ணுக்கு.

பேதைப் பருவம். புள்ளி மான் போலத் துள்ளிக் குதித்துக் கொண்டுவரும் ஓர் அழகு நடை. வெள்ளைச் சிரிப்பு! அதில் கள்ளத்தனம் இருக்காது. வேலைக்காரன் உடல் நலம் இல்லாதிருந்ததனால் இந்தப் பெண்தான் பரிபூரணம் கூப்பிட்ட குரலுக்கு என்னவென்று கேட்டுக் கொண்டிருந்தாள். குளிக்க வெந்நீர் வைத்துக் கொடுப்பது, துணிமணிகளைத் தோய்த்து உலர்த்துவது, ஓட்டலிலிருந்து எடுப்புச் சாப்பாடு எடுத்துக் கொண்டு வந்து பரிமாறுவது எல்லாம் இந்தப் பெண்தான். பரிபூரணத்திடம் பயமோ, கூச்சமோ, இல்லாமல் குறும்புத் தனமாகச் சிரித்துச் சிரித்துப் பேசுவாள். நெளிநெளியாகச் சுருண்ட கருங்கூந்தலினிடையே தாமரை பூத்தது போல் முகம் அவளுக்கு. கருவண்டு போல் சுழலும் கண்கள். உதடுகளும், முகமும், கண்களும், கன்னங்களும் எங்குமே சிரிப்பின் சாயலைப் போல எப்போதும் மலர்ச்சி தெரிகிற ஓர் அழகு அவளுக்கு இருந்தது. முழங்கால் வரை ஏறிய அழுக்குப் பாவாடையும் கந்தல் சட்டையுமாக உற்சாகமே வடிவாக இந்தப் பெண் நடந்து துள்ளிவரும் போது பரிபூரணத்திற்குக் கவிதையே இந்த ஏழைமை அழகில் ஓடிவருவது போலத் தோன்றும். வாழைத் தண்டு பட்டை உரித்தமாதிரி வெண்சிவப்பு மின்னும் அந்த முழங்காலைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல் பரிபூரணத்திற்கு அவா உண்டாகும். கவிதைத் தேவியே கன்னிமைக் கோலம் பூண்டு அப்படி அவனைச் சுற்றிச் சுற்றி வருகிறாளா?

உலகத்துக்குத் தெரியுமா, இப்படி ஓர் அழகு இந்த ஏற்காட்டு மலையில் இந்தக் குடிசைக்குள் இருக்கிறதென்று? தனிக்காட்டு மல்லிகைச் செடியாய், மலைச்சாரல் புள்ளி மானாய் அவள் தோன்றினாள் கவிஞன் பரிபூரணத்துக்கு.

பரிபூரணம் சொற்களை இணைத்து இசையை உருவாக்கும் கவிதையைத் தேடி அந்த மலைக்கு வந்தான். கண்களையும், இதழ்களையும், புன்முறுவலையும், சிற்றிடையையும், சிற்றடிகளையும் இணைத்துக் கொண்டு நடமாடும் கவிதை யைத்தான் அவனால் அங்கே காணமுடிந்தது. அந்தக் கவிதை வேலைக்காரனுடைய குடிசைக்குள்ளிருந்து 'பொன்னி' என்ற பெயர் சூடி வந்து போய்க்கொண்டிருந்தது.

அன்று மாலை இருட்டத் தொடங்கிய சமயத்தில் மலையில் மழை பெரிதாகப் பிடித்துக் கொண்டுவிட்டது. பரிபூரணம் கவிதை என்கிற பிரசவ வேதனையில் நாற்காலியில் அமர்ந்து மேஜை மேலுள்ள வெள்ளைக் காகிதத்தைப் பார்த்துத் திணறிக் கொண்டிருந்தான். மழையும், இடியும், மின்னலும் பயங்கரமாகிக் கொண்டிருந்தன. கவிதை வரவில்லை. முதலாளியோ நாளைக் காலையில் கவிதையோடு சென்னைக்குப் புறப்படவேண்டும் என்று கூறியிருக்கிறார். நட்சத்திரேயன் மாதிரிக் காலையில் வாசலில் காரோடு வந்து நின்று விடுவார் அவர். அவன் இப்படி யோசித்துக் கொண்டிருக்கும் போது மழையைக் கிழித்துக் கொண்டு கீழேயிருந்து பொன்னியின் குரல் கேட்டது. பரிபூரணம் மாடியின் பால்கனிக்கு

ஓடிப்போய் அங்கிருந்து கீழே பார்த்தான்; கொட்டுகிற மழையில் நின்று கொண்டு பொன்னி அலறிக் கொண்டிருந்தாள்:

"ஐயா! கொஞ்சம் கீழே வந்து பாருங்க. அப்பாரு முகத்தைப் பார்த்தாப் பயமாயிருக்குது. மூச்சு இழைக்குது. உடம்பு தூக்கித் தூக்கிப் போடுது... பேச்சு வரலே... எனக்குப் பயமா..." பரிபூரணம் ஓடினான். மாடிப்படியிறங்கும் கதவு வெளிப்பக்கம் தள்ள வரவில்லை. அழுத்தித் தள்ளினான். திறக்கவில்லை. மழையில் சிக்கிப் பிடித்துக் கொண்டிருக்குமோ என்று இழுத்தும் ஆட்டி உலுக்கியும் பார்த்தான். கதவு திறக்கவே இல்லை. சாவி நுழைகிற கதவுத் துளையில் உள்ளே இருந்து எடுத்துக் கொள்கிற மாதிரி ஒரு காகிதச் சுருள் சொருகியிருந்தது. பரிபூரணம் அதை எடுத்துப் பிரித்தான்.

'நாளைக்குள் பாட்டு 'ரெடி'யாகி விட வேண்டும். நீங்கள் வெளியே எங்கும் அலைந்து நேரத்தை வீணாக்கி விடக் கூடாதே என்று மாடிக் கதவை வெளியே பூட்டிக்கொண்டு போயிருக்கிறேன். காலையில் சந்திக்கிறேன். பாட்டுத் தயாராயிருக்கட்டும்' என்று எழுதிக் கீழே படமுதலாளியின் கையெழுத்தும் இருந்தது. பரிபூரணம் தவித்தான். மறுபடி பால்கனிக்கு ஓடினான்.

பொன்னி கீழே மழையில் நின்று அலறிக் கொண்டிருந்தாள். "அப்பாரைச் சாகாமக் காப்பாத்துங்க ஐயா.... நான் அநாதை... உங்களுக்குப் புண்ணியமாப் போகும்.... மேலேயே நின்னு பார்த்துக்கிட்டிருக்கீங்களே ஐயா! கீழே இறங்கி வந்து பார்க்கப்படாதா?" பரிபூரணத்தின் மனம் துடித்தது. உணர்வுகள் பிறந்து உருகின. 'நான் மேலே இருக்கிறேன். அவள் கீழே வரச் சொல்லி அழைக்கிறாள். நடுவே கதவும் காவலும் இருக்கின்றன. நான் கீழே போகவேண்டும், முடியவில்லையே!' என்று எண்ணினான்; எண்ணிக் கொதித்தான்.

அவனே தான் பாட்டு எழுதவேண்டிய படத்துக்குக் கதாநாயகன் ஆகி ஏழாவது மாடியில் நின்று தவித்தானே அந்தத் தவிப்பை இப்போது பரிபூரணமே உணர்ந்தான்.

அந்த உணர்வு வந்ததும் கவிதை வேகமும் தானாகவே வந்துவிட்டது. பத்தே நிமிடங்களில் பாட்டு அற்புதமாக உருவாகிவிட்டது. 'என்னை மண்ணில் வாழவிடு! மழையில் நனைய விடு!' என்று அந்தப் படத்தின் பணக்காரக் கதாநாயகன் ஏழாவது மாடியிலிருந்து கதறினானே - அந்தக் கதறலின் உருக்கமெல்லாம் எழுதிய பாட்டில் அப்படியே வந்துவிட்டது.

பாட்டை முடித்து விட்டுப் பரிபூரணம் மறுபடி பால்கனியில் போய்க் கீழே பார்த்தபோது குடிசையிலிருந்து பொன்னியின் அழுகுரல் கேட்டது.

"அப்பா! என்னை இப்படித் தனியா விட்டுட்டுப் போயிட்டீங்களே..." என்று கதறியழும் குரலைக் கேட்டான் பரிபூரணம்.

ஆம்! அவனுடைய இதயத்தில் கவிதை பிறந்த அதே நேரத்தில் குடிசையில் பொன்னியின் தந்தை இறந்துபோயிருக்க வேண்டும்.

'பென்னீ!' என்று இரைந்து கூவினான் பரிபூரணம்.

பதிலும் வரவில்லை. அவளும் வரவில்லை. பரிபூரணம் தலையைப் பிய்த்துவிட்டுக் கொண்டான். அவனுக்கு வெறி பிடித்தது. பாடுபட்டு எழுதிய கவிதையைக் கிழித்தெறிந்தான். பேனாவை உடைத்தெறிந்தான். மாடியிலிருந்து கீழே இணைத்த தண்ணீர்க் குழாயைப் பிடித்துக் கொண்டு இறங்கிப் பொன்னியின் குடிசைக்கு ஓடினான். அவள் அவனை நோக்கிச் சீறினாள்:

"நீங்கள் மேலே இருக்கிறீர்கள்! உங்களுக்குக் கீழே இறங்கி வர மனமிருக்காது."

"இல்லை! நான் கீழேயே வந்து விட்டேன். இனி மேலே போகிற நோக்கம் இல்லை. மண்ணில்தான் வாழப் போகிறேன்; மழையில்தான் நனையப் போகிறேன்" என்று அந்தப் படத்தின் கதாநாயகன் பரிபூரணம் பேசினான்.

மறுபடியும் அவன் மேலே ஏறிப் போகவே இல்லை!

**(தாமரை, மார்ச், 1960)**



## 47. ஜன்னலை மூடிவிடு...

'விருந்தினர்களெல்லாம் ஊருக்குப் போய்விட்டார்கள். வாயிலில் மணப்பந்தல் பிரித்தாயிற்று. இரண்டு மூன்று நாட்களாக வெயில் தெரியாமல் இருந்த முன்புறத்தில் வெயில் தெரிகிறது. ஒரு பெரிய திருமணம் நடந்து முடிந்த சின்னங்கள் வீடு நிறையத் தோன்றுகின்றன. சந்தனமும், பூவும், பட்சணங்களும் நிறைந்திருக்கிறாற்போல வீடே மணக்கிறது. இன்னும் ஒரு மாதமானாலும் இந்த மணம் வீட்டிலிருந்து போகாது போல் இருக்கிறது. கலியாணத்துக்கு மணம் என்று பேர் வைத்திருக்கிறார்களே; அந்தப் பேர்தான் எத்துணைப் பொருத்தமாக இருக்கிறது! கலியாணம் நடக்கிற வீட்டில் அதன் முன்னும் பின்னும், மண நாளிலும், எதுவென்றும் எதிலிருந்தென்றும் தெரியாமல் எல்லாம் கலந்ததாய் எல்லாவற்றிலிருந்தும் மணப்பதாய் வீடு முழுவதும் மங்கலமாகப் பரவி நிற்கிற மணத்தை அநுபவிக்கிறபோதுதானே கலியாணத்தை மணம் என்று அழைப்பதன் பொருத்தம் புரிகிறது.

அவர் - மணமகளின் தந்தை - அந்தச் சில ஆண்டுகளாக அவரும் அவருடைய நோயும் வாசற்புறத்து அறையை விட்டு வெளியேறியதில்லை. அவருக்குப் பக்கவாதம். நடமாட முடியாமல் கிடக்கிறவர். தம் ஒரே பெண்ணுக்கு உறவினர்கள் உதவியுடன் திருமணம் முடித்து விட்டால் கேட்கவா வேண்டும் திருப்திக்கு! சுபகாரியம் நன்றாக நடந்துவிட்டது.

அந்த அறையின் ஜன்னல் வழியாகத்தான் கொட்டுமேளத்தின் ஓசையை அவர் கேட்டார். அந்த ஜன்னல் கம்பிகளின் இடைவெளி வழியேதான் தம்முடைய பெண் மணக்கோலத்தில் அழகுச் சிலையாய் மையிட்டு மலர்சூடிக் கூறையுடுத்திக் குனிந்த தலையோடு வீற்றிருந்ததை அவர் பார்த்தார். அந்த ஜன்னல் வழியாகத்தான் தமது தளர்ந்த கையால் அட்சதையை அள்ளிப் போட்டு மணமக்களை வாழ்த்தினார். நல்ல வேளையாக அவருடைய அறையிலிருந்து மணச் சடங்குகள் நடந்த வீட்டுக்கூடம் தெரியும்படி அந்த ஜன்னல் அமைந்திருந்தது. பெண்ணைத் தாரை வார்த்துக் கொடுக்கத் தம்பியையும், தம்பி மனைவியையும் கிராமத்திலிருந்து வரவழைத்திருந்தார். அன்னத்தைத் தம் கையாலேயே தாரை வார்த்துக் கொடுக்க வேண்டுமென்று அவருக்குக் கொள்ளை ஆசை. கால்களும், உடம்பும், நோய்க்குச் சொந்தமாகி, நோயைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்ட பின் அது எப்படி முடியும்? சபையிலும் அது நன்றாக இராது. அன்னத்தைப் பெண் வளர்ப்பது போலவா வளர்த்தார் அவர்? ஏதோ கிளிக்குஞ்சு வளர்க்கிற மாதிரிப் பொத்திப் பொதிந்து வளர்த்தார். தாயில்லாப் பெண்ணைத் தகப்பன் தனியாக இருந்து வளர்த்துப் பெரிதாக்குவதென்பது எத்தனை கடினமான காரியம்! பிடிவாதமாக இரண்டாங் கலியாணம் செய்து கொள்ள

மறுத்துவிட்டு வீட்டு வேலைகளுக்காகச் சமையற்காரனைப் போட்டுக் கொண்டார். அவருக்கு நெஞ்சு உரம் அதிகம்.

அப்போது அந்த வயதில் இளமையின் இலட்சிய ஆர்வம் அவர் மனத்தில் கணக்கற்று நிறைந்திருந்தது. அவர் நிறையச் சம்பாதித்தார். நிறையச் செலவழித்து வசதியாக வாழ்ந்தார். திரைப்படங்களுக்கும், நாடகங்களுக்கும் பாடல் எழுதிக் கொடுக்கும் பெயர் பெற்ற கவி அவர். ஆயிரம் ஆயிரமாகப் பணம் குவியும்; புகழ் குவியும். அன்னத்தைப் பெற்றவள் இந்தப் புகழில் மோகங்கொண்டுதான் அவரைக் காதலித்து மணந்து கொண்டாள். அன்னத்தின் தாயார் இறக்கும்போது அன்னத்துக்கு ஏழு வயது. அன்னம் என்பது அவர் அவளுக்குப் பிரியப்பட்டுச் சூட்டின பெயர். சின்ன வயதிலேயே அவளுடைய நடை தனி அழகுடன் இலங்கும். தான் நடந்து செல்கிற இடத்துக்கே தன்னுடைய நடையால் அழகு உண்டாக்கிக் கொண்டு நடக்கிறாற்போல நடப்பாள் அவள். 'கோமு' என்று ஏதோ பழைய கர்நாடகப் பேர் ஒன்றை அவளுக்குச் சூட்டியிருந்தாள் அவள் தாய்.

"உன்னை அழைக்கிற போதெல்லாம் உன்னுடைய அழகிய நடையைப் புகழ்கிற மாதிரி உனக்கு ஒரு பெயர் சூட்டப்போகிறேன், குழந்தாய்"- என்று சொல்லி விட்டு ஆசையோடு அன்னம் என்று பெயர் சூட்டினார் அவர். 'அன்னப் பறவை, தான் அழகாயிருக்கிறதோடு தான் நடந்து செல்கிற இடத்துக்கே தன் நடையால் அழகு உண்டாக்கும்' என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பார் அவர்.

'கோமு' என்ற பழைய பெயர் எல்லோருக்குமே மறந்துபோகும்படி செய்துவிட்டார் அவர். 'அன்னம்' - என்று வாய் நிறைய அழைத்தவுடன் துவளத் துவள அன்ன நடை நடந்து வந்து "என்னப்பா கூப்பிட்டீர்களா?" - என்று பாசத்தோடு கேட்கிற நிகழ்ச்சி இனி இந்த வீட்டில் நடக்காது. இதோ இன்று இன்னும் சிறிது நேரத்தில் அவள் கணவன் அவளை அழைத்துக் கொண்டு இரயிலேறி விடப் போகிறான்.

கிழவருக்குக் கண்களில் நீர் முட்டிற்று, தன்னை யாரும் பார்த்துவிடாமல் ஒருக்களித்துப் படுத்துக் கொண்டார். மண வீட்டில் அழலாகாதே!

'இனி இந்த வீட்டில் என்ன இருக்கிறது? நானும் சமையற்காரனும், தனிமையும், ஏக்கமும்தான் இருக்கின்ற பொருள்கள். இந்த வீட்டில், இதன் முன்புறமுள்ள பூந்தோட்டத்தில், என் அறையில், எங்கும் அன்னம் நடந்து நடந்து ஓர் அற்புத அழகைப் படிய வைத்திருந்தாள்.

'ஊதுவத்தி அணைந்த பின்னும் அந்த மணம் இருக்கிற மாதிரி அந்த அழகு இனி இந்த வீட்டில் இருக்குமா? இந்த வீட்டில் தங்குமா?'

'குழந்தாய்! உன்னைப் பெண் வளர்ப்பது போலவா வளர்த்தேன்? சக்தி உபாசனை செய்கிறவன்போல் அல்லவா உபாசனை செய்தேன். நீ இப்படி வளர்ந்து பெரியவளாய் வனப்பெல்லாம் பொலிய நின்றுகொண்டு யாரோ ஓர் ஆண் பிள்ளையுடன் போவாய் என்று நினைத்தேனா?'-

*"அப்பா! தூங்குகிறீர்களா?" -*

*குயிற்குரல் அவர் செவிகளை நிறைத்துக்கொண்டு கேட்கிறது. வளை ஒலி, மல்லிகை மணம், கூறைப்புடவை மொடமொடப்பு, மணப் பெண்ணின் வாசனை. பின்னால் படுக்கையருகில் அன்னம் வந்து நின்றுகொண்டு கூப்பிடுகிறாள்! அவள் நிற்பதால் அந்த அறையே அழகாயிருக்கும்! புக்ககம் புறப்படுகிறபோது அபசகுனம் மாதிரித் தன் கண்ணீரைக் காண வேண்டாமென ஒருக்களித்தபடியே கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பின்பு திரும்புகிறார்.*

*அவளைத் திரும்பிப் பார்த்தவருக்கு மெய் சிலிர்க்கிறது. இந்தப் பெண்ணுக்கு இன்றைக்கு மட்டும் இத்தனை அழகு எங்கிருந்து புதிதாக வந்தது? புக்ககம் புறப்படுகிற காலத்தில் பெண்ணுக்கு இந்த மலர்ச்சி வருவது இயல்பா? அல்லது பெண்ணைப் பிரிந்து வெகு தூரத்துக்கு அனுப்பப் போகிறோம் என்ற தாபத்தினால் என் கண்களுக்கு மட்டும் அதிகமான அழகுகள் தெரிகின்றனவா? இதென்ன மணம்? இந்த மணம் இன்றைக்கென்று இவளுக்கு எங்கிருந்து வந்தது? இவளுடைய சரீரமே இன்று எல்லாப் பூக்களின் மணமும் கலந்து பூத்திருக்கும் பூவாக மாறியிருக்கிறதா? என்னுடைய இரத்தத்தில் அரும்பி வளர்ந்த உடலிலிருந்து இந்த மணத்தை அநுபவிக்கிறபோது ஒரு தந்தை என்கிற உறவில் எனக்கு இத்தனை பெருமிதமா?*

*"என்ன அப்பா இப்படிப் பார்க்கிறீர்கள்?"*

*"கொஞ்சம் அப்படியே நின்று கொண்டிரு, அன்னம்! உன்னை நன்றாகப் பார்த்து எப்போது நினைத்தாலும் உன் முகம் உடனே நினைவில் வருகிறாற் போல் மனத்தில் பதிய வைத்துக்கொள்ள வேண்டும்."*

*இதைக் கேட்டு அன்னம் சிரிக்கிறாள்! இல்லை, யாரோ அவளுடைய இதழ்களின்மேல் ஜலதரங்கம் வாசிக்கிறார்கள். அன்னத்தின் கன்னத்தில் நாணம் பூக்கிறது! இல்லை. அவளுடைய கன்னங்களில் கனிகள் கனிகின்றன. வலது இடுப்பில் குடம் ஏந்தி இடை வளைய நெஞ்சும், கண்களும் வேறெங்கோ வளையச் சகுந்தலை நிற்கிற மாதிரி சித்திரச் சக்கரவர்த்தி இரவிவர்மா ஒரு படம் எழுதியிருக்கிறான். அந்தப் படத்தில் சகுந்தலை நிற்கின்ற அழகுதான் உலகத்துப் பெண் அழகின் சிகரநிலை.*

*அதே அழகோடு அன்னம் இப்போது மணக்கோலத்தில் சற்றே தயங்கி ஒரு பக்கம் சாய்ந்தாற்போல் நிற்கிறாள்! நிமிர்ந்து விறைப்பாக நிற்கிற பழக்கமே அவளுக்கு இல்லை. நடந்தாலும் அழகு! நின்றாலும் அழகு! அவளே ஓர் அழகு, அழகே அவளுக்கு ஓர் உருவம்.*

*மை தீட்டிய கண்கள், பூச்சூட்டிய கூந்தல், முதல் நாள் நலங்கிட்ட சிவப்பு அழியாத பொன் நிறப் பாதங்கள். அக்கினியே கொழுந்து கொழுந்தாய்ப் படர்ந்து புடைவையாய் மாறி உடம்பைத் தழுவிக் கொண்டிருக்கிற மாதிரி நல்ல சிவப்பில் பட்டுப் புடவை அணிந்து கொண்டிருக்கிறாள். கால்களின் விரல்களில் வெள்ளி மெட்டி நடக்கிறபோதெல்லாம் 'கிணுங் கிணுங்'கென்று பேசுகிற அழகு!-*

*"அன்னம்!"*

*கிழவருக்குக் குரல் தழுதழுத்தது. பேச வரவில்லை. அழக்கூடாதென்று தான் அவர் நினைத்துக்கொண்டிருந்தார். ஆனால் அழுகை பீறிட்டுக் கொண்டு வந்துவிட்டது. சிறு குழந்தை போல் பொங்கிப் பொங்கி அழலானார் அவர்.*

*"இதென்னப்பா பச்சைக் குழந்தை மாதிரி... யாராவது பார்த்தால் சிரிக்கப் போகிறார்கள்? நான் எங்கே ஓடிப்போய்விடப் போகிறேன்? உங்களைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியுமா, அப்பா? மாதத்துக்கொரு முறை 'அவரை' அழைத்துக்கொண்டு கண்டிப்பாக இங்கு வந்து இரண்டு நாட்கள் இருந்துவிட்டுப் போவேன். எனக்கு ஆறுதல் சொல்லி அனுப்ப வேண்டிய நீங்களே இப்படி அழுதால் நான் என்ன செய்வது?"*

*அவள் குரலும் கம்மிற்று. பாசம் எத்தனை பொல்லாதது? தன்னுடைய புடைவைத் தலைப்பால் அப்பாவின் கண்ணீரைத் துடைக்கிறாள் அன்னம்.*

*அப்படியே இரண்டு கைகளையும் பற்றிக் கண்களில் ஒத்திக் கொள்கிறார் அவர்.*

*'இந்தக் கைகள் என்னுடையவை. இன்று இவற்றை நான் இழக்கிறேன்.' -*

*இதயமே வீங்கி வெடித்து விடும்போல் துக்கமாக இருந்தது அவருக்கு. இத்தனை துக்கத்தை இதற்கு முன்பு அவர் அடைந்ததில்லை. கல்யாணத்துக்குப் பாணிக்கிரஹணம் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். பெண்ணின் கையைக் கணவனிடம் பிடித்துக் கொடுக்கும்போதே தகப்பனுடைய கை ஒடியத்தான் வேண்டுமா?*

*வாசலில் சாமான்களை வண்டியில் ஏற்றுகிற ஓசை கேட்கிறது. 'இரயிலுக்கு நாழியாயிற்று'- என்று மாப்பிள்ளையின் தாயார் கூச்சலிடுகிறாள். அந்த அறைக்கு வெளியே வீடே பிரயாணப் பரபரப்பில் இருக்கிறது. வீடு முழுக்கக் கட்டுச்சோறு மணக்கிறது.*

*'சாமான்களை வண்டியில் ஏற்றுகிறார்களா? அல்லது அவருடைய மனத்தில் பொங்கிக் கொண்டிருந்த பாசவுணர்வையே வாரி ஏற்றிக்கொண்டு போகிறார்களா?'*

*"உடம்பைப் பார்த்துக்கொள், அன்னம்! வெள்ளி, செவ்வாய் எண்ணெய்க்குளி தவறாதே. உனக்கு எப்போது எவ்வளவு பணம் வேண்டுமானாலும் எழுது. உன்னுடைய நினைப்பை முதலாக வைத்துக்கொண்டுதான் நான் இந்த வீட்டில் இருக்க வேண்டும். அடிக்கடி வந்து போய்க் கொண்டிரு." - குரல் அடைத்தது. மறுபடியும் அழலானார் அவர்.*

*அறை வாசலில் பூட்ஸ் ஒலி கேட்கிறது. அன்னத்தின் கணவன் வருகிறான் போலும். அவர் கண்களைத் துடைத்துக் கொண்டு படுக்கையில் சாய்ந்தாற் போல் உட்காருவதற்கு முயல்கிறார்.*

*"வாருங்கள் மாப்பிள்ளை!"*

*மாப்பிள்ளையும் அன்னமும் விழுந்து வணங்குகிறார்கள். 'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழுங்கள்' என்று வாழ்த்துகிறார்.*

சம்பந்திகள் வருகிறார்கள். விடை பெறுகிற சம்பிரதாயம் முடிகிறது.

"செல்லமாக வளர்ந்த பெண்! பார்த்து வைத்துக் கொள்ள வேணும்" - கண் கலங்கச் சொல்லி அனுப்புகிறார். அவர் மனம் கலங்கப் பார்க்கிறார்.

எல்லோரும் வண்டி ஏறி விட்டார்கள். அவர் ஜன்னல் வழியாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார். அன்னம் மறுபடியும் ஓடி வருகிறாள். தனியாக அப்பாவிடம் இன்னொரு முறை சொல்லிக் கொள்ள வேண்டுமென்ற ஆசை.

"நான் போய் வரட்டுமா, அப்பா?"

இப்போது அவள் கண்களில் நீர் நிறைகிறது.

"மகராஜியாய்ப் போய் வா, அம்மா!" குனிந்து வணங்கிய பெண்ணின் தலையைத் தொட்டு ஆசீர்வாதம் செய்கிறார். அன்னம் எழுந்து திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே நடந்துபோய் வண்டியில் ஏறிக் கொள்கிறாள். வண்டியிலிருந்து வலது கையைத் தாமரைப் பூப்போலத் தூக்கி ஆட்டுகிறாள்.

வண்டிகள் நகர்கின்றன. ஜன்னலின் வழியே தெரிந்தவை இப்போது சாலையில் திரும்பி விடுகின்றன. ஜன்னலில் காட்சிகள் மறைகின்றன.

ஜன்னல் கம்பிகளும் அவற்றினிடையே துண்டு துண்டாய் ஆகாயமும்தான் தெரிந்தன. அவருடைய இதயம் துடித்தது; தவித்தது. எல்லாமே போகிற மாதிரி அடித்துக் கொண்டது.

"மருந்து கொண்டு வரட்டுமா?" - என்று கேட்டுக் கொண்டே சமையற்காரன் அவருடைய அறைக்குள் வந்தான்.

"தவசிப்பிள்ளை! இந்த ஜன்னலை மூடி விடு" - என்றார் அவர்.

"இந்த ஒரே ஜன்னல்தானுங்களே, இந்த அறைக்கு! மூடினால் காற்று வராதே!"

"முட்டாள்! பேசாதே! உடனே மூடிவிடு. இல்லாவிட்டால் நான் செத்துப்போய் விடுவேன். என்னால் தாங்க முடியாது. மூடிவிடு." இரண்டு கைகளாலும் நெஞ்சை இறுக்கிப் பிடித்துக் கொண்டு கூச்சலிட்டார் அவர். சமையற்காரன் அரண்டு போனான்! உடனே ஜன்னலை இழுத்து மூடினான்.

"மருந்து கொண்டு வரட்டுங்களா?"

"எங்கிருந்து கொண்டு வருவாய்? மருந்துதான் வண்டியேறி இரயிலுக்குப் போய்விட்டதே?" - அழுது கொண்டே பதிலுக்கு அவனைக் கேட்டார் அவர். அவன் விழித்தான்.

அவர் கேட்டது அவனுக்குப் புரியவில்லை. பருப்பு வெந்துவிட்டதா என்று பதம் பார்க்க உள்ளே போய்விட்டான் அவன். இங்கே இதயம் வெந்து கொண்டிருந்தது அவனுக்குப் புரியவில்லை.

**(கல்கி, 19.6.1960)**

# 48. புதிய பாலம்

சமூகத் தொண்டன் பொன்னம்பலம் நாயாக அலைந்தான். அலையாவிட்டால் முடியுமா? எடுத்துக் கொண்டிருப்பது எத்தனை பெரிய காரியம்? எவ்வளவு பெரிய பொறுப்பு? தொண்டு செய்வதும், பொதுக் காரியங்களுக்காக அலைவதும்தான் அவனால் செய்ய முடிந்த சுலபமான காரியங்கள். இதை இப்படிச் சொல்வதைக் காட்டிலும் பொதுத் தொண்டுகளுக்காக அலையாமலும் பாடுபடாமலும் இருக்க முடியாத ஆட்களில் அவனும் ஒருவன் என்று சொன்னால் சரியாக இருக்கும். அவன் சர்வ சாதாரணமான ஏழை மனிதன்தான். பணத்தை வாரி வழங்க அவனால் முடியாது. ஆனால் உழைப்பை வழங்க முடியும். அந்த உழைப்பு என்னும் குறையாத நிதியைச் சமூகப் பணிக்கும், பொதுக் காரியங்களுக்கும் செலவழித்துக் கொண்டிருந்தான் பொன்னம்பலம்.

வடக்குக் கரையில் உள்ள ஊரையும், தெற்குக் கரையில் உள்ள ஊரையும் ஓர் ஆறு குறுக்கே பாய்ந்து பிரித்துக் கொண்டிருந்தது. சிறிய ஆறுதான். வருடத்தில் எட்டு மாதங்களுக்கு மணல்தான் ஓடும். எஞ்சிய நான்கு மாதங்களிலோ இரு கரையும் மீறிக் கடுமையாகத் தண்ணீர் பாயும். இந்த ஆற்றுக்குச் சரியான பாலம் இல்லாமல் அக்கரை ஊர்க்காரர்களும், இக்கரை ஊர்க்காரர்களும் துன்பப்பட்டுக் கொண்டிருந்தனர். எவனோ சோழ அரசன் காலத்தில் கட்டின பழைய கல்பாலம் ஒன்று ஊரிலிருந்து, வெகுதூரத்துக்கு விலகிப் பத்தாவது மைலிலோ, பதினைந்தாவது மைலிலோ இருந்தது. கரையோரமாகவே அந்தப் பாலம் வரை போய்ச் சுற்றி வளைத்து அக்கரை அடையலாமே என்றால் சுற்று வழி காரணமாக அநாவசியமான காலதாமதம் ஆயிற்று. அந்த இரண்டு ஊர்களுக்கும் வசதியாக ஊரை ஒட்டி ஒரு பாலம் இருந்தால் எவ்வளவோ நன்மையாக இருக்குமென்று எல்லோரும் விரும்பினார்கள். சமூகத் தொண்டன் பொன்னம்பலம் இந்த விருப்பத்தை வளர்த்தான்.

ஐந்தாண்டுத் திட்டம், சமூக வளர்ச்சித் திட்டம், கிராம நலத் திட்டம் என்று என்னென்னவோ திட்டங்கள் போட்டிருக்கிறார்களே, அதற்கெல்லாம் இரண்டு ஊர் மக்களிடமும் கையெழுத்து வாங்கி விண்ணப்பம் அனுப்பினான் பொன்னம்பலம். பாலத்துக்கு அஸ்திவாரக் கல் போடுவதற்கு ஒரு மந்திரி, பாலம் முடிந்தபின் அதைத் திறந்து வைப்பதற்கு வேறொரு மந்திரி என்று வருவதைச் செய்தித்தாள்களில் நிறையப் படித்திருக்கிறான் பொன்னம்பலம். தங்கள் ஊர்ப் பாலத்தையும் ஏதாவது ஒரு திட்டத்தின் கீழ் எடுத்துக் கொண்டு அரசாங்கத்தார் முடித்து வைப்பார்கள் என்று பொன்னம்பலம் கருதினான். ஆனால் அரசாங்கத்தாருக்குக் குருவிப்பட்டிக்குப் பாலம் போட முயல்வதைவிடப் பெரிய வேலைகள் எல்லாம் இருந்தன. 'குருவிப்பட்டிக்குப்

பாலம் போடாவிட்டால் இப்போது ஒன்றும் குடிமுழுகிப் போய்விடாது' என்று பேசாமல் இருந்துவிட்டார்கள். எத்தனையோ உள்நாட்டு, வெளிநாட்டுப் பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டிய தீவிரமான அரசியல் சூழ்நிலையில் குருவிப்பட்டியின் பாலத்தைப் பற்றி நினைவு வைத்துக்கொள்வதே கேவலமல்லவா? எனவே குருவிப்பட்டியிலும் அதன் எதிர்க்கரையிலும் உள்ள மக்களைத் தவிர, 'குருவிப்பட்டிப் பாலம்' பற்றி வேறெவரும் நினைவு வைத்துக் கொள்ள மறுத்துவிட்டார்கள்.

அதற்கென்ன செய்வது? அரசாங்கத்திலிருப்பவர்களுக்குக் கண்டதையெல்லாம் நினைவு வைத்துக் கொண்டு திரிய முடியுமா? தாங்கள் அரசாங்கத்தில் இருப்பதே சில சமயங்களில் மறந்து விடுகிறதே அவர்களுக்கு. 'ஆகவே குருவிப்பட்டியும் அதன் பாலமும் எக் கேடு கெட்டுப் போனால் என்ன?' என்று விட்டுவிட்டார்கள்.

ஆனால் குருவிப்பட்டி வாசிகள் அப்படி விடுவதற்குத் தயாராயில்லை. அந்தப் பட்டிக்காட்டு மனிதர்களிடம் உழைப்பு இருந்தது. தன்மானம் இருந்தது. தங்களையும், தங்கள் ஊர்ப் பாலத்தையும் பற்றித் தங்களிடம் ஓட்டு வாங்கிக் கொண்டு பதவிக்குப் போனவர்களே மறந்ததை அவர்கள் மன்னித்துத்தான் தொலைக்க வேண்டியிருந்தது. மன்னிப்பு என்கிற பரஸ்பர பலவீனம் இல்லாவிட்டால் இந்த உலகம்தான் என்றைக்கோ உருப்பட்டுத் தேறியிருக்குமே! எத்தனையோ அயோக்கியர்களை யெல்லாம் சுலபமாகப் புண்ணிய பாவங்களின் பேர் சொல்லி மன்னித்துவிட்டுக் குட்டிச்சுவராய்ப் போய் கொண்டிருக்கிற பெருமை இந்தப் பாரத நாட்டிற்குப் புதிதா என்ன?

குருவிப்பட்டிப் பெருமக்களும், அவர்களின் அன்புக்குரிய சமூகத் தொண்டனாகிய பொன்னம்பலமும் இறுதியாக ஒரு தீர்மானத்துக்கு வந்தார்கள். தங்கள் ஊர் ஆற்றின் குறுக்கே பாலம் போடுவதற்குத் தங்கள் ஊரைப் பற்றி அக்கறையும், நினைவும் இல்லாத அரசாங்கத்தை நம்பிப் பயன் இல்லை. ஒருவேளை அரசாங்கத்துக்குத் தங்களுடைய ஆட்சியின் கீழே குருவிப்பட்டி என்று ஒரு கிராமம் இருப்பதே மறந்து போயிருக்கலாம். எனவே தங்கள் ஊர்ப் பாலத்தைத் தாங்களே அமைத்துக் கொள்வது என்ற திடமான முடிவுக்கு வந்தார்கள். அந்த முடிவுக்கு வருமாறு அவர்களுக்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்தவன் பொன்னம்பலம்தான்!

ஊர்ப் பக்கத்திலிருந்த கருங்கல் குன்றிலிருந்து பாலத்துக்கான கற்கள் உடைக்கப்பட்டன. ஊர்ப் பொதுவில் ஒரு பெரிய சுண்ணாம்புக் காளவாய் போட்டுக் காரை நீற்றினார்கள். சில அவசியமான செலவுகளுக்காக இரண்டு ஊர்ப் பொதுமக்களிடமிருந்தும் பொன்னம்பலம் ஒரு நிதி வசூல் செய்திருந்தான். அதற்காகத்தான் அவன் நாயாக அலைந்து பாடுபட்டான் என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோம். இரண்டு கிராமத்து மக்களும் தங்கள் வேலை நேரம் போக எஞ்சிய நேரமெல்லாம் பாலத்துக்காக உழைத்தனர். ஆண், பெண், இளைஞர், முதியோர் வேறுபாடின்றி எல்லோரும் பாலத்துக்காகப் பாடுபட்டனர்.

ஏழெட்டு மாதங்களில் பாலம் முடிந்தது. மிகவும் நல்லவரான குருவிப்பட்டி பஞ்சாயத்துத் தலைவரைக் கொண்டு ஊரார் உழைப்பால் உருவான அந்தப் பாலத்தைத் திறந்து வைக்கச் செய்தான் தொண்டன் பொன்னம்பலம். எல்லோரும் பொன்னம்பலத்தின் உழைப்பைப் பாராட்டினார்கள், கொண்டாடினார்கள்.

விவசாயத்தையே தொழிலாகக் கொண்ட இரண்டு ஊர் மக்களும் அந்தப் பாலம் உண்டானதால் ஏற்பட்ட நன்மையை அனுபவித்தார்கள். ஏர் பூட்டிய உழவு மாடுகள், கட்டை வண்டிகள், வைக்கோல் வண்டிகள், எல்லாம் பாலத்தின் வழியாக வந்து போய்க் கொண்டிருந்தன. இரு ஊர்களின் உறவும், பழக்கமும் பாலத்தால் நெருங்கிற்று. இரண்டு ஊர் மக்களும், விவசாயிகள் ஆதலால் பாலம் வண்டிகளின் போக்கு வரவுக்கு மிகவும் பயனுள்ளதாகவும், இன்றியமையாததாகவும் இருந்தது.

குருவிப்பட்டிக்கு அப்பாலுள்ள பிரதேசம் வேறு மாகாணத்தைச் சேர்ந்தது. அங்கே மதுவிலக்கு இல்லை. குதிரைப்பந்தயம் உண்டு. எனவே குடிப்பதற்கும், குதிரைப் பந்தயத்துக்கும் பத்து மைல் சுற்றிச் சோழ அரசன் காலத்துக் கல் பாலம் வழியாகப் போய்க் கொண்டிருந்த பணக்காரர்கள் அது சுற்று வழி என்று கருதி இப்போ தெல்லாம் குருவிப்பட்டிப் பாலம் வழியாகப் போகத் தொடங்கினார்கள். சமூகத் தொண்டன் பொன்னம்பலமும், ஊர்ப் பொதுமக்களும் கட்டின பாலம் ஏதோ சுய தேவைக்காகச் சுருங்கிய அளவில் கட்டப்பட்டிருந்தது.

முக்கியமாகக் கிராம மக்களின் தேவையை உணர்ந்து உழவு மாடுகளும், கட்டை வண்டிகளும், வைக்கோல் பாரவண்டிகளும், போவதற்காகக் கட்டப்பட்ட அந்தப் பாலத்தில் இப்போது கார்களும், லாரிகளும் போகத் தொடங்கிவிட்டதால் கிராம மக்கள் இடையூறு அனுபவித்தனர். கட்டை வண்டிகளும், மாடுகளும், ஊடே நுழைய நேரமே இன்றி அந்தப் பக்கமிருந்தும், இந்தப் பக்கமிருந்தும் லாரிகளும், கார்களும் மொய்த்தன. காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனானாம் என்பது போல ஊர்க்காரர்கள் போட்ட பாலம் ஊர்க்காரர்களுக்குப் பயன்படாமல் கார்க்காரர்களுக்குப் பயன்படத் தொடங்கிவிட்டது. ஒருநாள் குதிரைப் பந்தயத்துக்குப் போய்விட்டுத் திரும்பிய பட்டினத்துப் பணக்காரர் ஒருவர் நிறையக் குடித்துவிட்டுப் போதையோடு மிகப் பெரிய ‘பியூக்’ காரில் வந்தார். கார் குருவிப்பட்டி பாலத்தில் வரும்போது ஒரு கட்டை வண்டியில் மோதி வண்டிக்காரன் கீழே கார்ச் சக்கரத்தின் அடியில் விழுந்து நசுங்கி இறந்து போனான். இந்தச் சம்பவம் குருவிப்பட்டிக்காரர்களின் கண்களைத் திறந்தது. மறுநாள் முதல் அந்தப் பாலத்தில் கார்களையும், லாரிகளையும் விடுவதில்லை என ஊர்க்காரர்கள் எல்லோரும் சேர்ந்து மறியல் செய்தார்கள்.

குதிரைப் பந்தயத்தையும், குடியையும் நினைத்துக் கொண்டு ஆவலோடு குருவிப்பட்டிப் பாலத்தை நோக்கிப் பறந்த கார்கள் மறியலின் காரணமாக ஏமாற்றத்தோடு திரும்பிப் போயின.

பாலத்துக்குள் நுழைகிற இடத்தில் சமூகத் தொண்டன் பொன்னம்பலம் இன்னும் நாலைந்து பேரைச் சேர்த்துக் கொண்டு நுழைய இடமின்றிக் கைகோர்த்து நின்றான்.

ஒரு பெரிய கார்க்காரர் அவர்களுடைய மறியலைப் பொருட்படுத்தாமல் இறங்கி வந்து கூப்பாடு போட்டார்.

"இது உன் அப்பன் வீட்டுப் பாலமில்லை. நீ யார் மறியல் செய்வதற்கு? அத்தனை 'மினிஸ்டரையும்' எனக்குத் தெரியும். ஒரு வரி எழுதிப் போட்டால் உங்களையெல்லாம் உள்ளே தள்ளிவிடுவார்கள்."

பொன்னம்பலம் அவருடைய பேச்சைக் கேட்டுக் கோபம் அடையவில்லை. அமைதியாகவே அவருக்குப் பதில் சொன்னான். "ஐயா! இது ஊர் மக்களின் உழைப்பால் உருவான பாலம். கட்டை வண்டிகளும், உழவு மாடுகளும் போவதற் காகத்தான் ஏழை விவசாயிகளாகிய நாங்கள் இந்தப் பாலத்தைக் கட்டினோம். இந்தப் பாலத்தைக் கட்டுவதற்காக அரசாங்கம் கால் பைசா எங்களுக்குத் தரவில்லை. இப்போதோ எந்நேரமும் கார்களும், லாரிகளும் இந்தப் பாலத்தை ஆக்கிரமித்துக் கொள்கின்றன. இரண்டு கிராமத்து வண்டிகளும் போக முடிவதில்லை. நாங்கள் உழைத்ததன் பயன் வீணாவதை எங்களால் மன்னிக்க முடியவில்லை. இரண்டு மூன்று நாட்களுக்கு முன் இந்தப் பாலத்தில் ஒரு கட்டை வண்டிக்காரன் காரில் நசுங்கி இறந்து போனான். இனியும் குடிகாரர்களுக்கும், குதிரைப் பந்தய வெறியர்களுக்கும் இந்தப் புனிதமான பாலம் பயன்படுவதை நாங்கள் அனுமதிக்கத் தயாராயில்லை."

"நான்சென்ஸ்! நான் யார் தெரியுமா? என்னிடம் இவ்வளவு திமிராகப் பேசுகிறாயே? நான் சுட்டு விரலை ஆட்டினால் இந்த நாட்டை ஆளும் அத்தனை மந்திரிகளும் ஓடிவந்து கைகட்டி நிற்பார்கள். தெரியுமா உனக்கு?"

"அது எனக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லை ஐயா! இப்போது நீங்கள் இந்தப் பாலத்தின் வழியாகப் போக முடியாது. வணக்கம். திரும்பிச் செல்லலாம் நீங்கள்" என்று பேச்சை முடித்தான் பொன்னம்பலம்.

அவனை முறைத்துவிட்டுக் காரில் போய் ஏறிக் கொண்டு திரும்பினார் அவர்.

மறியல் தொடர்ந்து நடந்தது. கட்டை வண்டிகளையும், உழவு மாடுகளையும் தான் பாலத்தில் போகவிட்டார்கள்! கார்களையும், லாரிகளையும் போகவிடவில்லை. அதற்காகக் கார்க்காரர்களையும் லாரிக்காரர்களையும் கொடுமைப்படுத்தவில்லை. "இந்தச் சிறு பாலம் கிராம மக்களின் நலனுக்காக நாங்கள் போட்டது. தயவுசெய்து இதை நாங்கள் உங்களுக்கு விடாமலிருப்பதற்காக மன்னியுங்கள். சிறிது தொலைவு போனால் கல் பாலம் ஒன்றிருக்கிறது. அது அரசாங்கத்துக்குச் சொந்தமான பொதுப்பாலம். அதை உபயோகப்படுத்துங்கள், இங்கே வராதீர்கள்" - என்று பணிவாகச் சொல்லித் திருப்பி அனுப்பினார்கள்.

கார் வைத்திருப்பவர்கள் எல்லாம் பணக்காரர்கள். பணம் வைத்திருப்பவர்கள் எல்லாம் அரசாங்கத்துக்கு வேண்டியவர்கள். கேவலம் ஒரு பட்டிக்காட்டுப் பாலத்தில் போக முடியாது என்றால் சும்மாவா இருப்பார்கள்? அவர்களால் ஆகாததும் உண்டோ? இருந்த இடத்திலிருந்தபடியே 'மினிஸ்டரோடும்' 'ஹைவேஸ் கமிஷனரோ'டும் டெலிபோனில் பேசினார்கள். அந்தப் பட்டிக்காட்டான்கள் செய்யும் 'அக்கிரமத்தை' எடுத்துக் கூறினார்கள்.

அதன் விளைவு...? மறுநாள் குருவிப்பட்டி பாலத்தில் 'ஹைவேஸ் அதாரிடி'யோடு கூடிய விளம்பரப் பலகை ஒன்று தொங்கியது.

**இந்தப் பாலத்தின் வழியாகக் கார்கள், லாரிகள் தவிரக் கட்டை வண்டிகள் போகக்கூடாது. இது அரசாங்க உத்தரவு. மீறுபவர்கள் தண்டிக்கப்படுவார்கள்.**

**இப்படிக்கு,**
**கமிஷனர் -**
**அரசாங்க ஹைவேஸ் இலாகா**

சமூகத் தொண்டன் பொன்னம்பலமும், ஊர்க்காரர்களும் மறியலை நிறுத்தவில்லை. அரசாங்க உத்தரவையும் எதிர்த்து மறியல் செய்தனர்.

சும்மா இருப்பார்களா அரசாங்கத்தார்? வண்டி வண்டியாக லாரி நிறைய ஸ்பெஷல் ரிசர்வ் போலீசார் வந்து இறங்கினார்கள். அடிதான், உதைதான். அடி உதைக்குப் பயந்து பெரும்பாலோர் மறியலைக் கைவிட்டு ஓடிவிட்டனர். பொன்னம்பலமும் இன்னும் இரண்டு மூன்று ஆட்களும் மறியலை நிறுத்தவே இல்லை.

"இந்தப் பாலம் எங்கள் பிறப்புரிமை. இதை விட்டுக் கொடுக்கமாட்டோம். எங்கள் உழைப்பு எங்களுக்கே சொந்தம்" என்று கோஷமிட்டான் பொன்னம்பலம்.

"போடுடா அவன் மண்டையிலே!" முரட்டுப் போலீஸ்காரன் ஒருவன் அவனை அடித்தான்.

மண்டையிலிருந்து குருதி ஒழுகக் கீழே வீழ்ந்தான் பொன்னம்பலம். பிரக்ஞை தவறியது.

மறுபடி அவன் தன் நினைவுற்றுக் கண்திறந்து பார்த்தபோது பாலத்தில் கார்களும், லாரிகளும் சுகமாகப் போய்க் கொண்டிருந்தன.

"இந்த உருப்படாத சமூகத்துக்கு இதுமாதிரிப் பாலங்கள் இன்று தேவை இல்லை. ஏழைகளுக்கும் நியாயத்துக்கும் நடுவிலிருக்கிற தூரத்தை இணைக்க முதலில் ஒரு புதிய பாலம் போட வேண்டும். அதைக் கல்லாலும், காரையாலும் போட முடியாதே!" என்று முணுமுணுத்துக்கொண்டே எழுந்து தள்ளாடி நடந்தான் அவன்.

**(தாமரை, ஜூலை, 1960)**

## 49. பச்சைக் குழந்தைகள்

"**வா**ங்கிக் கொண்டு வந்த விறகு அத்தனையும் ஈரம். கண் அவிகிறது. சோறு அவியமாட்டேன் என்கிறது. வேறு ஏதாவது வழி செய்யுங்கள். இல்லாவிட்டால் ஓட்டலில் சாப்பிட்டு விட்டுப் புறப்படுங்கள்."

"சந்திரமதி பச்சை வாழை மட்டையை வைத்து எரித்தாளாமே! கேவலம் ஈர விறகை எரிக்கக்கூட...."

என் வேடிக்கை அவளுக்குப் பிடிக்கவில்லை. முகத்தைச் சுளித்தாள். "நீங்கள் ஒன்றும் அரிச்சந்திரன் இல்லை. நானும் சந்திரமதியாக இருக்க வேண்டிய அவசியமில்லை. வாங்கிப் போடத் தெரியாவிட்டாலும் வாய் இருக்கிறது."

"பொறு, தாயே! போர் முரசு கொட்டாதே. இதோ உனக்கு வழி செய்கிறேன்" என்று மேலே பரணில் ஏணியைச் சாத்தினேன். நாற்காலியின் ஒடிந்த 'கைகள்', தட்டு முட்டு மரச்சாமான்கள், பார்சல் வந்த சாதிக்காய்ப் பெட்டி உடைசல்கள் - போன்றவை பரணில் குவிந்து கிடக்கின்றன. இந்த மாதிரி அவசர நேரத்துக்கு விறகாகப் பயன்படுவதைத் தவிர அவற்றுக்கு வேறு என்ன நல்ல உபயோகம் இருக்க முடியும்?

"எங்கள் வீட்டை என்னவென்று நினைத்தாய்? எந்த அவசரத் தேவைக்கும் இங்கே சாமான் அகப்படும். இந்தப் பரண் இருக்கிறதே இது ஒரு பெரிய பொக்கிஷம் மாதிரி. பல் தேய்ந்து போன தேங்காய்த் துருவியிலிருந்து நான் படித்துக் கிழித்த ஆக்ஸ்போர்ட்டு 'அட்லாஸ்' வரையில் எல்லாம் இதற்குள் அடக்கமாக்கும்" என்று பெருமிதத்துடன் கூறிக் கொண்டே அன்றைய அடுப்புக்குப் போதுமான விறகைக் கீழே தள்ளினேன்.

'இரண்டு மூன்று நாற்காலிக் கைகள், ஒரு சாதிக்காய்ப் பெட்டி உடைசல்' இவைதான் அன்றைய விறகுக்கு அகப்பட்டவை.

"இன்னும் கொஞ்ச நாட்கள் காரியம் பார்த்து இப்படி அடுப்பில் அவிந்தால் என்னையும் அந்தப் பரணில் தூக்கிப் போட வேண்டியதுதான்" என்று அலுத்தபடியே அந்த அவசர விறகை எடுத்துக் கொண்டு உள்ளே போனாள் துணைவி.

பரணிலிருந்து கீழே இறங்குமுன் காலில் ஏதோ இடறியது. ஒற்றைக் கை ஒடிந்த பழைய மரப்பாச்சி. மூக்கு முழி தேய்ந்த பழுக்காப் பொம்மை.

காலில் இடறி ஏணிக்குப் பக்கத்தில் கீழே விழுந்தது மரப்பாச்சி. அந்த மரப்பாச்சியோடு என் மனமும் கீழே போய் விழுந்தது. வீடு, அடுப்புப் புகை, அப்போதைய சூழ்நிலை எல்லாம் மறக்கத் தொடங்குகிறது. அப்படியே பரணில் ஒரு

காலும் ஏணியில் ஒரு காலுமாக உட்கார்ந்துவிடுகிறேன். அந்த மரப்பாச்சியைப் போலவே உருத் தெரியாமல் மனத்தினுள் ஒடிந்தும் தேய்ந்தும் மூளியாகிப் போயிருந்த மொட்டை நினைவுகள் தளிர்க்கின்றன. நான் என்னுடைய புலன்களோடு நத்தைபோல் என்னுள்ளேயே ஒடுங்குகிறேன். என்னுள் ஏதோ மணக்கிறது. என்னுள் ஏதோ தவிக்கிறது. என்னுள் எதையோ உணர்கிறேன். தண்ணீர்ப் பரப்பில் கோடு கோடாய்க் கோலம் கோலமாய் இழுத்து வரைந்து வரைந்த வேகத்தில் அழிக்கும் நீர்ப்பூச்சி போல் என் மனம் அழிவின் கோடுகளை, அழியும் கோடுகளை இழுக்கிறது. அழித்த கோடுகளை அதே இடத்தில் மறுபடியும் போட்டுப் பார்க்கும் ஆசை எனக்கு உண்டாகிறது. ஏன் உண்டாகிறதோ?

பொய்களை அடுக்கடுக்காகத் தொடுத்து வைத்த தொடுப்புக்குத்தான் வாழ்க்கை என்று பேரோ? நேற்றும், இதற்கு முன் தினமும், நடந்தனவெல்லாம் இன்று பொய்கள் தாமா? இல்லாவிட்டால் அந்தப் பழைய நாட்களை இத்தனை காலத்துக்கு இப்படி மறந்திருப்பேனா?

'மாயா' இன்று எங்கு எந்தக் கிருகத்துக்கு இலட்சுமியாக விளங்கிக் கொண்டிருக்கிறாளோ? அவள் எந்தக் கிருகத்திலிருந்தாலும் இலட்சுமியாக இருப்பாள். அவள் இருக்கிற கிருகத்தில் இலட்சுமிகரம் பொங்கி வழியும். செளந்தரியம் கதிர் பரப்பிக் கொண்டிருக்கும். 'மாயா' என்று என்ன காரணத்துக்காக, என்ன அர்த்தத்துக்காக அவளுடைய பெற்றோர்கள் அவளுக்குப் புதுவிதமாகப் பெயர் சூட்டினார்களோ?

என்னுடைய வாழ்வில் அவள் மாயையாய்த்தான் விளையாடி விட்டுப் போயிருக்கிறாள். அவளே ஒரு பெரிய மாயைதான். உலகத்திலேயே மாயைக்குத்தான் அதிக அழகும், அதிகக் கவர்ச்சியும் உண்டென்று வேதாந்திகள் சொல்லுகிறார்களே; அது பொய்யன்று.

மாயாவின் முகம், மாயாவின் கொள்ளையழகு, குலவி நிற்கும் கோல விழிகள், மாயாவின் சிரிப்பு, மாயாவின் எழில் எல்லாவற்றிலும் ஏதோ ஒரு மாயம் இருக்கத்தான் செய்தது. ஒரு பெரிய காவியத்தின் நாயகியாகத் துலங்க வேண்டிய அழகு அந்த ஏழைக் குடும்பத்துப் பெண்ணைத் தேடிக் கொண்டு வந்து குடியிருந்தது.

பொன் நிறமும், மஞ்சள் நிறமும் கலந்து இணைந்தாற் போலக் கண்ணில் பளீரென்று படுகிற மாதிரியில் சண்பகப் பூக்களுக்கு ஓர் அபூர்வ நிறம் வாய்த்திருக்குமே; அப்படி நிறம் மாயாவுக்கு. அவளுடைய சுட்டுவிரலை மட்டும் தனியே நீட்டச் சொல்லிப் பார்த்தால் சண்பகப் பூவைச் சுருக்கம் படாமல் சுருட்டின மாதிரி இருக்கும்.

வெண்சங்குக் கழுத்தில் கறுப்புப் பட்டுக் கயிற்றில் முடிச்சு முடிச்சாகப் போட்டு ஏதோ இரட்சைக் கயிறு என்று கட்டிக் கொண்டிருப்பாள். கோடி கோடிப் பொற் சங்கிலிகளும், காசு மாலைகளும், நெக்லெஸ்களும், போட்டாற்கூட என் 'மாயா'வின் கழுத்துக்கு அத்தனை அழகு கிட்டாது. முத்துமுத்தாக முடிச்சிட்ட அந்த ஒரே ஒரு

கறுப்புக்கயிறு வெண்சிவப்புக் கழுத்துக்கு இணையிலாப் பேரெழில் கூட்டிக் காட்டும் வண்ணம் பெண்ணாய்ப் பேரமுதாய்ப் பெருங்கனவாய் வந்து நிற்பாள் அவள்.

உலகத்தில் எல்லாப் பெண்களுக்கும் விதவிதமாக நிறம் நிறமாகக் கண்ணாடி வளையல்கள் கிடைக்குமென்றால் மாயாவின் கைகளுக்கென்று எங்கிருந்தோ அந்தக் கரிவளையல்கள் கிடைக்கும். ஒரு வேளை அந்த எளிய கரிவளையல்களினால்தான் அவளுடைய கைகளில் அரிய அழகு உண்டாகித் தோன்றிக் கொண்டிருந்ததோ? ஜோடி மூன்று ரூபாய்க்கு மலிவாகக் கிடைக்கக்கூடிய கல் வெள்ளிக் கொலுசுகளை அணிந்திருப்பாள் பாதங்களில். தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ளலாம் போல் அத்தனை ஒழுங்காக அத்தனை சுகமாக அவளுக்கென்று வாய்த்த பாதங்கள் போலும் அவை!

மலைச்சரிவுகளில் அருவி இறங்குகிறமாதிரி ஒரு பக்கமாக அசைந்தசைந்து தென்றல் கொஞ்சிக் கொண்டு வருகிறாற்போல் நடப்பாள் மாயா. அவள் அருகில் இருக்கிறபோது அவளைத் தவிர வேறெதன் மேலும் கவனம் செலுத்திப் பார்க்கவிடாமல் பண்ணிவிடுகிற எழிலைக் கொண்டிருந்தவள் மாயா.

இதோ இந்த வீட்டின் மேல் வீட்டு வாசலில் அந்த வேப்ப மரத்தின் அடியில் சொப்புகளும் கையுமாகப் பாவாடை கட்டின சிறுமியாக வந்து நின்றுகொண்டு ‘அப்பா அம்மா விளையாட்டு விளையாடலாம்’ என்று இந்த விநாடிகூட அழைத்துக் கொண்டிருப்பதுபோல் ஒரு பிரமை உண்டாகிறதே எனக்கு. தீப்பெட்டிப் படம், உடைந்த சாக்கட்டி, சிலேட்டுக்குச்சி இவைகளைச் சேர்த்துப் பெருமையடித்துக் கொள்வதில்தான்அந்த நாளில் எனக்கும், அவளுக்கும் எவ்வளவு போட்டி உண்டாகும்?

பொல்லென்று மல்லிகை அரும்புகள் ஒவ்வொன்றாக மலர்ந்து தாமே சரம் கோத்துக் கொண்ட மாதிரி இன்னதென்று சொல்ல முடியாத ஏதோ ஓர் அழகோடு சிரிப்பாள் மாயா. மின்சார விளக்கேற்றிக் கொள்கிற விரைவு அந்தச் சிரிப்பு உண்டாகி மறைகிற அவசரத்துக்குச் சரியான உதாரணமாக இருக்கலாம். சரிதானே?

மேலப்பக்கத்து வீட்டில் ஏழு குடித்தனங்களுக்கு நடுவில் ஓர் அறைக்கு வாடகை கொடுத்துக் கொண்டு கஷ்ட ஜீவனம் நடத்தி வந்தாள் மாயாவின் தாய். ஏதோ சுண்டல், முறுக்கு விற்று வருகிற காசில் வயிறு கழுவ முடிந்தது. அப்பளம் இட்டு விற்பதும் உண்டு. மாயாவுக்கு இரண்டு தங்கைகள், கிழட்டுத்தாய் மூன்று பெண்களையும் வைத்துக் கொண்டு நகர வாசம் செய்வதில் எத்தனை சிரமங்கள் இருக்க முடியும் என்பதை எடுத்துச் சொல்ல வேண்டியதேயில்லை. மாயா குடியிருந்த மேற்புறத்து ஸ்டோர் வாசலில் அந்த வேப்பமரத்தடியில்தான் எங்கள் உறவு தளிர்த்தது. வளர்ந்தது, தளர்ந்தது, வாடிற்று. ஆனால் அந்த வேப்பமரம் இன்னும் வாடாமல் தளிர்த்துக் கொண்டுதான் இருக்கிறது. அந்த மரத்தின் கீழே மண்பரப்பில் ‘அப்பா அம்மா விளையாட்டுக்காக’ மாயா தோண்டிய அடுப்பு, கிணறு எல்லாம் வடுக்களாகத் தங்கி இருக்கும். மண் எந்த வடுக்களையும் நினைவு வைத்துக் கொள்வதில்லை. ஆனால் மனத்தினால் அப்படி நினைவு வைத்துக் கொள்ளாமல் இருக்க முடிவதில்லையே!

குன்றிமணியின் கறுப்புப்போல் வலது கன்னத்தில் புள்ளியாய் வட்டமாய் ஒரு கருப்பு மச்சம் உண்டு மாயாவுக்கு. அவள் சிரிக்கிறபோது அந்த மச்சத்துக்கு எங்கிருந்தோ தனி அழகு வந்துவிடும்.

"ஏண்டா ராஜு! எதுக்குடா இப்பிடி முழுங்கிடறாப் போல என் முகத்தையே பார்க்கிறே? உனக்கு வெட்கமா இல்லையோடா? பெண்டு செட்டி மாதிரி என்னையே எப்பவும் சுத்திண்டிருக்கையே?" என்று கேலி செய்வாள் மாயா.

"பெண்டு செட்டின்னா என்னடி மாயா? சொல்லேன்" என்று மடக்குவேன் நான்.

"போடா நீ ஒத்தன்! எனக்கு அதெல்லாம் சொல்ல வராது. பெரியவங்க இப்பிடிப் பேசிப்பாங்க. கேட்டிருக்கிறேன். அதான் நானும் சொன்னேன்."

"நீதானடி சொன்னே; விளையாட்டிலே நீ அகத்துக்காரி, நான் அகத்துக்காரர்னு?"

"அதுக்காக..?"

"அகத்துக்காரர்னா அகத்துக்காரி முகத்தைத்தானே பார்க்கணும்.?"

"போடா விளையாட்டுக்காக ஒரு இதுக்கு அப்டி வச்சிண்டா, அதுக்காக இப்படித்தான் என்னையே சும்மா பார்த்திண்டிருக்கணுமாக்கும்?"

"நீ ரொம்ப அழகாயிருக்கேடி மாயா! அதனாலேதான் உன்னையே பார்த்திண்டிருக்கேன்."

"நீ கூடத்தான் ரொம்ப அழகாயிருக்கேடா. அதுக்காக நான் உன்னையேவா பார்த்திண்டிருக்கேன்?"

"நான் அப்படித்தான் உன்னைப் பார்த்துக் கொண்டேயிருப்பேன்."

"நன்னாப் பார்த்துக்கோ. எனக்கென்ன? வவ்வவ்வே..." என்று முகத்தைக் கோணிக் கொண்டு அழகு காட்டுவாள் மாயா.

"இப்படி அழகு காட்டினா நாளையிலேருந்து அப்பா அம்மா விளையாட்டில் நான் அப்பாவா இருக்கமாட்டேண்டி. பப்ளிமாஸ் மூஞ்சியும் சோழிப்பல்லுமா இருக்கானே அந்தக் குண்டு ராமு, அவனைத்தான் நீ அகத்துக்காரனா வைச்சுக்கணும். நான் உன்னோட விளையாடவே வரமாட்டேன்."

"வேண்டாண்டா, நீ என்ன வேணாச் சொல்லு. பொறுத்துக்கிறேண்டா ராஜு. நீதான் எனக்கு அகத்துக்காரனா இருக்கணும். எத்தனை நாள் விளையாடினாலும் நீதான். எவ்வளவு நாழி வேணுமானாலும் நீ என் மூஞ்சியைப் பார்த்திண்டிரு. நான் உன்னை ஒண்ணும் சொல்லலை" என்று கெஞ்சுவாள் மாயா. அப்படிக் கெஞ்சுகிறபோது அந்தக் கரிவளையல்கள் குலுங்கும் கைகளால் என் கைகளை இறுக்கிப் பிடித்துக் கொள்ளுவாள். பாதி விளையாட்டில் நான் கைவிட்டு ஓடிவிடுவேனோ என்று அவளுக்குப் பயம். ஆனால் இன்று நினைக்கும்போது தெரிகிறது; அவள்தான் இந்த விளையாட்டைப் பாதியில் விட்டு ஓடிவிட்டாள்.

அவள்தான் இந்தக் கனவைப் பாதியில் கலைத்துவிட்டு ஓடிப் போய்விட்டாள்! ஆம்! அவளேதான் கலைத்துவிட்டாள்.

குஞ்சும், குளுவானுமாக, விளையாட்டுக்கு வருகிற தெருக் குழந்தைகளை யெல்லாம் எங்களுக்குக் குழந்தைகளாக்கிக் கொண்டு அவள் மனைவியாகவும், நான் கணவனாகவும், அப்பா, அம்மா விளையாட்டு விளையாடிய நாட்கள்தான் கணக்கில் அடங்குமா? வேப்ப மரத்தடியில் விளையாட்டுக்காகக் கூடும் குழந்தைகளுள் பெண்ணில் பெரியவள் மாயா. ஆணில் பெரியவர்கள் நானும், பப்ளிமாஸ் மூஞ்சிக் குண்டு ராமுவும்.

விளையாட்டுக்கு 'மாயா' தான் சர்வாதிகாரி. அவள் அங்கே ஒரு நாளாவது விளையாட்டில் தன்னைக் கணவ்னாகத் தேர்ந்தெடுக்கவில்லையே என்று குண்டு ராமுவுக்கு ஒரே ஆத்திரம். குறுகுறுவென்று அலைபாயும் கண்களும், சிரிப்பும், நிறமும், அழகுமாக உலா வரும் மாயாவுக்குக் கணவனாக விளையாட்டிலாவது இருந்து பார்த்துவிட வேண்டுமென்று பப்ளிமாஸ் பயலுக்கு ஆசை.

"டேய் ராஜு! நீ மனசு வைச்சால் முடியும்டா. தினம் தினம் விளையாட்டிலே நீயே அப்பாவா வறியே, ஒரு நாளாவது நான் வரவிடப்படாதா?" என்று பப்ளிமாஸ் என்னிடம் வந்து கெஞ்சினான்.

"அதுக்கு நான் என்னடா பண்றது? மாயாவுக்கு உன் மூஞ்சியைக் கண்டாலே பிடிக்கலையேடா, நீ கொஞ்சம் அழகாகப் பிறந்து தொலைச்சிருக்கப்படாதோ?!" என்றேன்.

பப்ளிமாஸ் அழுதுவிட்டான். குண்டு மூஞ்சியின் கன்னங்களும், உதடும், ஏறி ஏறி இறங்கி விக்கி அழுதான். இந்த விஷயமாக அவன் மனத்தில் இத்தனை ஏக்கம் சேர்ந்து கனத்துப் போயிருக்குமென்று நான் நினைத்திருக்கவில்லை. எனக்கே அவன்மேல் இரக்கம் உண்டாகிவிட்டது.

"டேய்! லூஸ் மாதிரி அழாதே. அழுதால் எனக்குப் பிடிக்காது. உனக்காக நான் என்ன செய்யணும்கிறதை மட்டும் சொல்லிடு. செய்துடறேன்."

பப்ளிமாஸ் அழுவதை நிறுத்தினான். கண்களைத் துடைத்துக் கொண்டான். சோழிப் பல்லைக் காட்டினான். பயலுக்குச் சிரிப்பதாகத்தான் நினைப்பு. மகா கோரமாக இருந்தது. "நீ நாளைக்கு விளையாட்டுக்கு வரப்பிடாது. நீ வராமே இருந்துட்டால் எனக்குத்தான் 'சான்ஸ்' அடிக்கும்."

"அவ்வளவுதானேடா?"

"அவ்வளவுதாண்டா, ராஜு!"

"சரிடா! நான் நாளைக்கு வரலை. நீயே அப்பாவாக இருந்து தொலை."

"இந்த உபகாரத்தை என்னிக்குமே மறக்கமாட்டேண்டா" என்று பப்ளிமாஸ் நன்றி சொல்லிவிட்டுப் போனான்.

அவனுக்கு வாக்குக் கொடுத்தபடியே மறுநாள் நான் வேப்பமரத்தடி விளையாட்டுக்குப் போகவில்லை. பாப்பா மலர்ப் பத்திரிகை எடுத்து வைத்துக் கொண்டு ரொம்ப அக்கறையாகக் கதை படிக்கிறவனைப்போல் வீட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டுவிட்டேன். ஆனால் என்னுடைய மனம் என்னவோ வேப்ப மரத்தடியிலேயே இருந்தது. 'இன்று பப்ளிமாஸை அகத்துக்காரனாக வைத்துக்கொண்டு மாயா எப்படித் திணறப் போகிறாள்?' என்று கற்பனை செய்து கொண்டிருந்தேன். அதே சமயத்தில் என்னுடைய உரிமையை அந்தப் பயலுக்கு விட்டுக் கொடுத்ததற்காக வருத்தமும் என் மனத்தில் உண்டாகிக் கொண்டிருந்தது. 'மாயாவின் தங்க நிறக் கைகளைப் பிடித்துக் கொண்டு பெண்டாட்டி உரிமை கொண்டாடி விளையாடுவதற்கு இந்தக் கரித்தடியனுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? இவனை அவளுக்குப் பக்கத்தில் நிறுத்தினால் அவளுடைய அழகுக்குத் திருஷ்டிப் பொம்மை நிறுத்தி வைத்த மாதிரி அல்லவா இருக்கும்! என்னவோ, 'அழுது உபத்திரவம் செய்தானே' என்பதற்காகப் போனால் போகிறதென்று விட்டுக் கொடுத்தேன். இனிமேல் இந்தப் பயலுக்கு இப்படி இரக்கப்படக்கூடாது' என்று தவிப்போடு நான் உட்கார்ந்திருந்தபோது புயல்போலச் சீறிக் கொண்டு மாயாவே வந்து விட்டாள். அவள் எழில் நயனங்களில் நீர் கோத்திருந்தது. முகம் சிவந்திருந்தது. ரோஜாமொட்டுக்கள் காற்றில் படபடப்பதைப் போலச் சிவந்த உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. இரண்டு கைகளையும் இடுப்பில் ஊன்றிக் கொண்டு விறைப்பாக எனக்கு முன் நின்றாள். நான் செய்த தப்பிதம் என்னவென்று புரியாமலும், ஆனால் ஏதோ தப்புச் செய்துவிட்டதாகவும் உணர்ந்து மெல்லத் தலையைத் தாழ்த்திக் கொண்டேன். வெண்தாமரை இதழ்போல் நீண்டகன்ற வெள்ளை விழியில் கறுப்புத் திராட்சை உருள்வதுபோல் கருவிழி புரள அவள் இமையாமல் பார்த்த பார்வையில் நான் பயந்துவிட்டேன்.

"முழிக்கிறதைப் பார். ஆடு திருடின கள்ளன் மாதிரி. நான் இன்னிக்கோடே விளையாட்டை நிறுத்திடப் போறேன்."

"ஏனாம்?"

"ஏன்னா கேட்கிறே! கேட்பே, கேட்பே. ஏன் கேட்கமாட்டே? உன்னை என்னமோன்னு நினைச்சிண்டிருந்தேன். நீ பெரிய திருட்டுத் தடியன்..." சொற்கள் உடைந்து அழுகையாய்ப் பொங்கிற்று. நெஞ்சு விம்ம உள்ளம் பொரும நின்றாள் மாயா.

"மாயா! தெரியாத்தனமாக இப்படிச் செஞ்சிட்டேண்டி. என்னை மன்னிச்சிடுடி. அந்தப் பப்ளிமாஸ் வந்து அழுது ஆகாத்தியம் பண்ணித்து, பரிதாபமாக இருந்தது. அசட்டுத்தனமாச் சரின்னுட்டேன். இனிமே எப்பவும் இப்படிச் செய்யமாட்டேண்டி. கடவுள் சத்தியமாச் சொல்றேன். உன் கையை நீட்டுடி. அதுமேலே அடிச்சுச் சத்தியம் வேணுமானாலும் பண்ணிடறேன்."

விசுக்கென்று கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டாள் மாயா. அப்பப்பா! அந்தப் பேதை பருவத்துச் சிறுமிக்குக் கோபதாபங்கள் எத்தனை கவர்ச்சியாயிருந்தன!

"'இன்னிக்கு ராஜு விளையாட்டுக்கு வரமாட்டான். நான்தான்அப்பா. நீதான் அம்மா'ன்னு அந்தக் கரிமூஞ்சி அசத்து வந்த பல்லை இளிச்சிண்டு நின்னுது. 'நீதான் அப்பாவா? அப்படியானால் இந்தா, இதை வாங்கிக் கோ'ன்னு பளீர்னு ஒண்ணு விட்டேன் கன்னத்திலே. பப்ளிமாஸ் மூஞ்சி ஒரு பக்கத்திலே வீங்கிட்டுதுடா ராஜு!"

"நெஜமாவா? நீ எதுக்குடி அவனை அடிச்சே?" என்று கேட்டேன்.

"தப்புத்தாண்டா. அவனை விட்டுப்பிட்டு இப்படிச் செஞ்சதுக்காக இங்கே வந்து உன்னை அடிச்சிருக்கணும்."

"நீ பெரிய வாய்க் கொழுப்புக்காரிடீ மாயா!"

"நீ மட்டும் இலேசுப்பட்டவனோ? கல்லுளி மங்கனா இருக்கிறது. திடீர்னு இந்த மாதிரித் தத்துப்பித்தென்று ஏதாவது பண்ணி வைக்கிறது. நான் உன்னோட 'டு' விட்டுட்டுப் போகலாம்னுதான் இப்ப வந்திருக்கேன்."

"வேண்டாண்டி! இந்த ஒரு தடவை மன்னிச்சுப்பிடு, உன் காலைப் பிடிச்சுக் கேட்டுக்கிறேன்."

திண்ணையிலிருந்து கீழே குதித்து அவள் காலைப் பிடித்து விட்டேன்.

"சீ அசடு! எழுந்திருடா. யாராவது பார்த்தாச் சிரிக்கப் போறா. அகத்துக்காரி காலை யாராவது பிடிப்பாளோ? பைத்தியம்டா நீ. காலை விடுடா. பெரிய வம்பாப் போச்சு உன்னோடே. நான் டு விடலை. சேர்த்திதான். காலை விட்டுடு."

"பட்டுப்போல உன் கால் எப்பிடிடீ இத்தனை அழகாயிருக்கு?"

"பொம்மனாட்டி காலோ இல்லியோ, அப்பிடித்தான் இருக்கும்! உன்னை மாதிரியா அவுத்துவிட்ட கழுதையைப் போல ஊரெல்லாம் சுத்தறேன் நான்? வீட்டோட இருக்கேன். அலையறதில்லை. அதான் கால் இப்படி அழகா இருக்கு."

"வாயை அடக்குடீ! ரொம்பத்தான் அதிகமாகப் பேசிண்டு போகாதே!"

"இவர் பெரிய ராஜா இல்லியோ? இவரை ரொம்பப் பேசப்படாது."

"நீ சொன்னாலும் சொல்லாட்டாலும் நான் ராஜாதாண்டி."

"அப்படியானால் நான் ராணி தாண்டா."

"ஏ ராணியம்மா!"

"ஓய் ராஜா சாகப்!"

"வவ் வேவ்வே!"

"வவ் வவ்வே!"....

"நான் வரேண்டா! இன்னிக்கு விளையாட்டு இல்லே. 'சரியான அப்பா, இல்லை. அதனால் விளையாட்டுக் கிடையாது'ன்னு சொல்லி எல்லாக் குழந்தைகளையும் திருப்பி அனுப்பிச்சுட்டேன். நாளைக்காவது வந்துடு. நீ அப்பாவா வந்தால் தான் நான்

அம்மா. இல்லாட்டா இல்லை. நாளைக்கும் அந்தப் 'பப்ளிமாஸை' அனுப்பிச்சியோ நேரே இங்கே வந்து உன் கன்னத்தைத் திருகிப்பிடுவேன்."

"திருகினா என் கை ஒண்ணும் புளியங்காய் பறிக்கப் போயிருக்காதுடீ அம்மா!"

"நீயும் பதிலுக்கு என் கன்னத்தைத் திருகுவியோ?"

"ஆமாம்."

"திருகுவே! திருகுவே!"

"திருகுகிறேனா இல்லையான்னுதான் பாரேன்!"

"பார்க்கலாம்!"

மாயா வீட்டுக்குப் போய்விட்டாள். நான் மறுபடியும் பாப்பா மலரில் 'சுண்டெலிக் கதை' படிக்க ஆரம்பித்தேன்.

சைக்கிள் டயர் 'பஞ்சர்' ஆன மாதிரி 'மூஸ் மூஸ்' என்று விசும்பிக் கொண்டே பப்ளிமாஸ் வந்து சேர்ந்தான்.

"என்னடாது? அப்பம் மாதிரி ஒத்தக் கன்னம் மட்டும் வீங்கியிருக்கு? அப்பா அம்மா விளையாட்டிலே சமையல் பண்றபோது மாயா இன்னிக்கு அப்பம் பண்ணிக் கொடுத்தாளாக்கும்?" என்று சிரித்துக் கொண்டே ஒன்றும் தெரியாதவன்போல் கேட்டேன்.

"போடா உனக்கு எப்பவும் வேடிக்கைதான். மாயா அடிச்சுட்டா டா ராஜு! 'ராஜுதான் இன்னிக்கு என்னை அப்பாவா இருக்கச் சொல்லி அனுப்பினான்'னுகூடச் சொல்லிப் பார்த்தேண்டா. அவள் கேக்கலைடா. 'ஒரு அகத்துக்காரிக்கு ஒரு அகத்துக்காரர்தான் இருக்க முடியும்னு அந்த ராஜுகிட்டப் போய்ச் சொல்லுடா'ன்னு பலமா அறைஞ்சுட்டா."

"அப்புறம்?"

"போடா! நான் அடிபட்டு வந்து நிக்கறேன். உனக்குக் கதை கேட்கிற மாதிரி இருக்கு. வேணும்னு நீயே அடிக்கச் சொன்னாலும் சொல்லியிருப்பே!"

"சே! சே! அப்படியெல்லாம் இல்லைடா குண்டு! உன்னை நான் அப்படிச் செய்வேனா? கட்டாயம் இன்னொரு நாள் உன்னை அப்பாவாக்கிடறேன். இன்னிக்கு நீ போயிட்டு வா."

குண்டு பப்ளிமாஸ் விசும்பிக் கொண்டே நகர்ந்தான். இரண்டு கைகளாலும் வாயைப் பொத்திக் கொண்டு அடக்க முடியாமல் சிரித்தேன் நான்.

'விளக்குமாத்துக்குப் பட்டுக் குஞ்சலம் மாதிரி உனக்கு மாயா வேணுமாடா தடி ராஸ்கல்! வீட்டுக்குப் போய்க் கண்ணாடியிலே உன் முகத்தைப் பார்த்துக்கோடா, அப்போ தெரியும் உன் அழகு!'

மனத்துக்குள் சொல்லிக் கொண்டேன்.

ஒரு நாள் இராத்திரி ஏழு மணி இருக்கும். மழை தூறிக் கொண்டிருந்தது. அமாவாசை இருட்டு. நான் வாசல் திண்ணையில் உட்கார்ந்து சிலேட்டுப் பலகையில் பாடம் எழுதிக் கொண்டிருந்தேன். 'உஷ்' என்று திண்ணைக்குக் கீழே இருட்டிலிருந்து பழக்கமான குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். "உஷ்... உன்னைத்தாண்டா ராஜு! சத்தம் போடாமல் என் பின்னோட வா... சொல்றேன்" என்று மாயா தலையை நீட்டிக் கூப்பிட்டாள்.

"இந்த மழையிலே எங்கேடி கூப்பிடறே? பாடம் எழுதிக் காண்பிக்காட்டா அப்பா தோலை உரிச்சிடுவேன்னு சொல்லிவிட்டுப் போயிருக்காரேடி!"

"எல்லாம் பெரிய பாடம்தான், தெரியும்! அப்புறம் எழுதிக்கலாம்; முதல்லே எழுந்திருந்து வாடா!"

அவள் கெஞ்சிக் கொண்டு சொல்லும்போதே எதையும் மறுக்க முடிவதில்லை. என்னவோ வசியம் பண்ணி, ஏதோ சொக்குப்பொடி போட்டு என்னை அப்படித் தன் கைப்பாவையாகப் பழக்கி வைத்திருந்தாள் அந்த மாயாக் கடன்காரி. அவள் என்னை ரொம்பப் பிரியத்தோடு கடிந்து கொள்கிற வார்த்தை, 'அட, தடிக்கடன்காரா!' என்பதுதான். நான் அவளைப் பிரியமாக அழைத்துக் கடிந்து கொள்கிற வார்த்தை கடன்காரி என்பதுதான்! 'உண்மையில் யார் யாருக்கு எந்த விதத்திலும் எவ்வளவு 'கடன்பட்டிருந்தோம்' என்பது அந்த வாலை வயதில் எங்களுக்குத் தெரியாது.

எதற்காகக் கூப்பிட்டாளோ என்று அந்த இருட்டில் அவளோடு போய்ப் பார்த்தால் வேப்ப மரத்தடி வரை இழுத்துக் கொண்டு போய் நிறுத்திக் கொண்டு, "ராஜு! இன்னிக்கு விற்கிறதுக்காகப் போட்ட முறுக்கிலே நாலு மிஞ்சிடுத்துடா, அதுலே ஒண்ணை 'நீ சாப்பிடுடீ'ன்னு அம்மா எங்கிட்டே கொடுத்துட்டா. அதை நாம் ரெண்டு பேருமா சேர்ந்து சாப்பிட்டுடலாம்" என்றாள்.

"ஏண்டி! இதுக்காகவா இவ்வளவு தூரம் இந்த இருட்டிலே என்னை இழுத்தடிச்சே! முறுக்குத் தந்தால் அதை நீயே சாப்பிடப் படாதோ? அந்த இத்தனூண்டு முறுக்கிலே எனக்குப் பங்கு தராட்டா என்ன குடிமுழுகிப் போயிடும்? நீ அசடுடீ!"

"நீதான் அசடன்! இதைப் பாவாடையிலே மூடிக் 'காக்காக் கடி' கடிச்சி இரண்டாக்கித் தாரேன். நீ பாதி எடுத்துக்கோ?"

"ஐயய்யோ! எச்சில் இல்லியோ?"

"போடா முட்டாள்! காக்காக் கடிக்கு ஒண்ணும் எச்சில் கிடையாது. வேணும்னா நீயே கடிச்சு ரெண்டாக்கிக் கொடு. நான் சாப்பிடறேன்."

"வேண்டாம்டீ! நீயே கடிச்சுத் தந்துடு. நான் பாதி எடுத்துக்கறேன்."

"கடக்.. கடக்..."

"மெல்லடி! பல்லை உடைச்சிக்காதே!"

"முறுக்கு ரொம்ப நன்னாயிருக்குடி!"

* * *

இப்படி எத்தனை பசுமைச் சம்பவங்கள்! ஒன்றா இரண்டா எண்ணிச் சொல்வதற்கு?

கடைசியில் இந்தச் சம்பவங்களுக்கு ஒரு முடிவு காலமும் வந்தது. ஒருநாள் காலை மூஞ்சியை 'உம்'மென்று தூக்கி வைத்துக் கொண்டு வந்தாள் மாயா.

"என்னடீ மாயா, என்னவோ மாதிரி இருக்கே?"

"நாங்க ஒழிச்சுண்டு வேறே ஊருக்குப் போறோம்டா ராஜா!"

அவள் கண்களில் நீர் மல்கியது.

"ஏண்டீ? எதுக்காக வேறே ஊருக்குப் போகணுமாம்?"

"இந்த ஊர்லே இந்தச் சுண்டல் முறுக்கு வியாபாரத்திலே கிடைக்கிறது போறலையாம். கொஞ்சநாளாப் போட்ட சரக்கெல்லாம் விற்காமே அப்படி அப்படியே மிஞ்சுடறதுடா! தெருக்கோடியிலே 'ஸ்வீட் ஸ்டால்'னு ஒருத்தன் வைச்சுட்டான். ஜனங்கெல்லாம் அங்கேதான் குவியறா. எங்க வியாபாரம் படுத்துப்போச்சு. அம்மா பக்கத்து டவுண்லே ஒரு பெரிய மனுஷர் வீட்டிலே சமையலுக்கு வரதாக ஒப்புக் கொண்டிருக்கா. நானும் அவர் வீட்டிலே தெளிச்சிப் பெருக்கி எடுபிடி வேலையெல்லாம் செய்வேன். ரெண்டு பேருக்குமாச் சேர்ந்து மாசம் மாசம் ஏதோ கிடைக்குமாம். அதை வச்சுண்டு நாங்க பிழைச்சுப்போம்."

"ஏண்டி மாயா, இந்த ஊரிலேயே அந்த மாதிரி வேலை உங்கம்மாவுக்கும் உனக்கும் கிடைக்காதா?"

"இந்த ஊரிலே அப்படிச் சமையல்காராள் வச்சிக்கறாப்பலே யாருடா இருக்கா? வச்சிண்டா உங்கப்பாதான் வச்சுக்கலாம். பெரிய மிராசுதார், பணக்காரர்."

"நீ சொல்றது சரிதான். ஆனால் தொந்தியும் தொப்பையுமா எங்க வீட்டிலேயே யானை மாதிரி ஒரு சமையற்காரர் இருக்காரேடி? அப்பாவுக்கு அந்த ஆள் சமையலில் கொள்ளைப் பிரியமாச்சே!"

"வேறென்ன செய்யறது? அதான் அம்மா வெளியூரிலே வேலை ஒப்புக் கொண்டுட்டா. நாங்க போறதுன்னு உறுதி பண்ணிண்டாச்சு. இருக்கிற கடனலெல்லாம் அடைக்கிறதுக்காக அம்மாகூட நேத்துப் பழைய சிவப்புக்கல் தோட்டை வித்துட்டு வந்துட்டாள்."

"என்னிக்கு நீங்க புறப்படப் போறதாகத் தீர்மானம்?"

"வெள்ளிக்கிழமை போறோம்."

"போனா இங்கு வரவே மாட்டியா?" - எனக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டது. பேச்சு வரவில்லை. அழுகை பீறிக் கொண்டு வந்தது.

"நீ எதுக்குடா அசடு மாதிரி அழறே?"

"இனிமே உன்னைப் பார்க்க முடியாதேடி, மாயா?"

"அதுக்கென்ன செய்யறதுடா?"

"இன்னிக்கு விளையாட்டு உண்டோ இல்லையோடி?"

"உண்டு! கடைசியா இன்னிக்கு அப்பா அம்மா விளையாட்டு விளையாடிவிட்டுச் சொப்பெல்லாம் பிரிச்சுண்டுடலாம்னு நினைக்கிறேன். என்னோட சொப்பு உங்கிட்ட ஒண்ணும் கிடையாது. உன்னோடதுதான் எங்கிட்ட வண்டி வண்டியாகக் குமிஞ்சி கிடக்கு. அதையெல்லாம் பிரிச்சு உங்கிட்ட ஒப்படைச்சிடணும். என்னோடதுன்னு ஒண்ணுமே இல்லைடா. ரெண்டே ரெண்டு மரப்பாச்சிதாண்டா இருக்கு. ஒண்ணுதான் முழுசு, இன்னொன்னு கையொடிஞ்சது. மத்ததெல்லாம் உன்னோடதுதான்" என்று ஏக்கம் பொங்கச் சொன்னாள் மாயா.

அன்றைய விளையாட்டு ஆரம்பமாயிற்று. பொய்யாக அடுப்பு மூட்டிப் பொய்ச் சமையல் பண்ணிப் பொய் இலை போட்டுப் பொய்யாகப் பரிமாறிப் பொய்யாகச் சாப்பிடுவது போல் பாவனை பண்ணுவதுதான் வழக்கமான விளையாட்டு. அன்றும் அப்படி நினைத்துக் கொண்டுதான் இலையில் (இலை என்று மாயா காட்டின இடத்தில்) உட்கார்ந்து கொண்டேன்.

மடியிலிருந்து ஒரு லட்டு உருண்டையை எடுத்துக் 'காக்காய்க் கடி' கடித்துப் பாதியை என்னிடம் நீட்டினாள் மாயா.

"இதென்னடீ இன்னிக்கு விளையாட்டுப் புது மாதிரி இருக்கிறது. பொய்யாகச் சாப்பிடுவதுபோல் நாக்கைச் சப்புக் கொட்டச் சொல்லி என் உயிரை வாங்குவாய். இன்றைக்கென்னவோ நிஜமாகவே சாப்பிடச் சொல்றயே?"

"இன்னிக்கு இப்படித்தான்! சாப்பிடு!" அவள் கெஞ்சினாள்; நான் சாப்பிட்டேன்.

"இந்தாடா ராஜா, கணக்கெல்லாம் சரியா இருக்கான்னு பார்த்துக்கோ. அப்புறம் என்னைத் 'திருடீ'ங்காதே. எழுவது தீப்பெட்டிப் படம், முப்பது சாக்பீஸ், நூத்தி இருபது குச்சி, பத்துப் பழுக்காச் சொப்பு, உடைஞ்ச சொப்பு நாலு. எல்லாம் உன்னோடது, எடுத்துக்கோ. இந்த ரெண்டு மரப்பாச்சி மட்டும் என்னோடது. நான் எடுத்துக்கறேன்." நான் பதில் சொல்லாமல் அவள் முகத்தைப் பார்த்துச் சிரித்தேன்.

"ஏண்டா இப்படிச் சிரிக்கிறே?"

"ஒண்ணுமில்லேடீ மாயா. உன்னைப் பார்த்தேன், சிரிப்பு வந்தது. எனக்கு இதெல்லாம் வேண்டாம். உனக்கே எல்லாத்தையும் கொடுத்துடறேன். நீயே வைச்சுக்கோ. அந்தக் கை ஒடிஞ்ச மரப்பாச்சியை மட்டும் எங்கிட்டக் கொடுத்துடு."

"நான் அதைத் தரமாட்டேன் போ!"

"மாட்டாட்டா எனக்கு ஒண்ணுமே தர வேண்டாம். எல்லாத்தையும் நீயே எடுத்திண்டு போ. நான் போறேன்" என்று கோபித்துக் கொண்டு கிளம்பினேன்.

"இல்லேடா இல்லே! கோபிச்சுண்டு போகாதே. நான் பொய்க்காகச் சொன்னேன். இந்தா, இதை நீயே வைச்சுக்கோ" என்று பின்னால் ஓடி வந்து என் கையைப் பிடித்து இழுத்து அந்த மூளி மரப்பாச்சியைத் திணித்தாள் அவள்.

"ஏண்டீ! இதிருக்கட்டும். உன்னை ஒண்ணு கேக்கறேன், நீ பதில் சொல்லுவியோ?"

"கேளேண்டா? என்ன கேக்கப் போறே?"

"புது ஊருக்குப் போறியே, அங்கே அப்பா அம்மா விளையாட்டு விளையாடுவியோ, இல்லையோ?"

இந்தக் கேள்விக்கு மாயா உடனே மறுமொழி சொல்லவில்லை. தயங்கினாள். என் முகத்தைப் பார்த்தாள். கண்கலங்கி நின்றாள்.

"பதில் சொல்லேண்டீ மாயா! விளையாடுவியோ இல்லியோ?"

"எப்படிடா ராஜா விளையாடுவேன்? புதுசாப் போகிற ஊர்லே அப்பா இல்லியே?"

"நான் இல்லாட்டா என்னடீம்மா? அங்கே உனக்கு வேறொரு பையன் கிடைக்கமாட்டானா?"

தரையில் உட்கார்ந்து முகத்தை மூடிக் கொண்டு விம்மி விம்மி அழலானாள் மாயா. எனக்கு அவளை ஏன் அப்படிக் கேட்டோமென்று வருத்தமாகிவிட்டது.

"நான் கேட்டது தப்பானால் மன்னிச்சுடுடீ!"

"உன்னை மன்னிக்கப்படாதுடா, கடன்காரா! கன்னத்திலே பளீர்னு அறையணும்."

"அறையேண்டி கடன்காரி!"

மாயா சிரித்தாள். நானும் சிரித்தேன்.

* * *

"**எ**ன்ன இது? குளித்துச் சாப்பிட்டு ஆபீசுக்குப் போகப் போகிறீர்களா இல்லையா? இப்படியே பரணில் உட்கார்ந்து பச்சைக் குழந்தை மாதிரி மோட்டு வளையைப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கப் போகிறீர்களோ?" என்று கீழே இருந்து மனைவி கூச்சல் போட்டாள். நான் என் புலன்களை ஒடுக்க நிலையிலிருந்து வெளிப்படுத்திக் கொண்டு பழைய நினைவுகளிலிருந்து வெளிவருகிறேன். என்னுடைய சொந்த அப்பா அம்மா வியைாட்டு நினைவு வருகிறது. இப்படி அவள் எங்கே யாரிடம் விளையாடிக் கொண்டிருக்கிறாளோ? அந்த விளையாட்டுக்கு நாயகன் யாரோ?

பரணிலிருந்து கீழே இறங்குகிறேன். ஏணியடியில் விழுந்து கிடந்த அந்த மரப்பாச்சியைக் காணவில்லை.

"இந்தா, இங்கே ஒரு மரப்பாச்சி விழுந்து கிடந்ததே. பார்த்தாயோ?"

*"ஏன்? அதையும் அடுப்புக்குத்தான் போட்டீர்களோ என்று எடுத்துச் சொருவிட்டேன். நன்றாக எரிகிறது."*

*"அடி பாவீ! மரப்பாச்சியை யாராவது அடுப்பில் சொருகுவார்களோ?" என்று ஆத்திரத்தோடு கேட்டேன்.*

*"எல்லாம் காரணத்தோடுதான் சொருகினேன். வாழ்கிற வீட்டிலே மூளி மரப்பாச்சி இருக்கக்கூடாது. வீட்டுக்கு ஆகாது என்பார்கள்."*

*நான் அடுப்பங்கரையில் போய்ப் பார்த்தேன். உளுத்துப் புழுக்கூடு வைத்துப் போன அந்தச் செம்மரத்தில் தீ கொண்டாட்டத்தோடு எரிந்துகொண்டிருந்தது.*

*ஒருகணம் அந்தத் தீயின் ஜ்வாலைகள் ஒருமுகமாக மாறி மாயாவாகத் தோன்றி, 'நீ அப்பாவாக இல்லாவிட்டால் நான் அம்மா இல்லைடா ராஜா. நீ அகத்துக்காரன்; நான் அகத்துக்காரி' என்று சிரித்தவாறே என்னிடம் சொல்வதுபோல் எனக்கு ஒரு மயக்கம் உண்டாயிற்று.*

*சர்வேசுவரா! எங்களைப் பச்சைக் குழந்தையாகவே பிறவி முழுவதும் அந்த வேப்ப மரத்தடியில் விளையாட விட்டிருக்கக்கூடாதோ? எங்களை ஏன் பிரித்தாய்? ஏன் வளர்த்தாய்?*

**(கல்கி, 10.7.1960)**

## 50. வீதியில் ஒரு வினா!

அந்தக் கலகலப்பான வீதியின் ஒளிமயமான பகுதிகளில் வழக்கமாக நாள் தவறாமல் தென்படுகிற காட்சிதான் அது! கிழக்கே வீதி முடிகிற இடத்தில் உயரமான கோவில் கோபுரம். தெற்குப் பக்கம் இன்றைய சமூகத்தின் கோவிலான மாபெரும் சினிமாக்கொட்டகை. இருபுறமும் கலகலப்பான கடைகள். என்னுடைய புத்தகக் கடையும் அந்த வீதியில்தான் இருந்தது. 'கண்ணகி புத்தக நிலையம் - உயர்தரமான இலக்கிய நூல்கள் யாவும் கிடைக்கும்' என்று வெளியே எனாமல் போர்டு மாட்டிக் கொண்டு உள்ளே ஈ ஓட்டுகிறேனே! தெரியவில்லையா? தொலைகிறது; விடுங்கள்! அதோ என் கடைக்கு எதிர்த்தாற்போல் ஒரு மிலிடரி ஓட்டல். உள்ளேயும், வெளியேயும் கூட்டம் பொங்கி வழிகிறது. ஊரெல்லாம் கேட்கும்படி இந்தி இசைத் தட்டு முழங்குகிறது. நாள் ஒன்றுக்கு எப்படியும் எழுநூறு, எண்ணூறு ரூபாய் வியாபாரத்துக்குக் குறையாது. மிலிடரி ஓட்டல் ஐயா; மிலிடரி ஓட்டல்! ஈ ஓட்டுவதற்கு அதுவும் இலக்கியப் புத்தகக் கடையா என்ன? 'சுதந்தர பாரதத்தில் அறிவை வளர்த்துவிட்டோம், கல்வியைக் கரைகாணச் செய்துவிட்டோம். தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செய்துவிட்டோம். வீதிதோறும் கலைக்கோயில், வீடு தோறும் புத்தகசாலை' - என்றெல்லாம் மேடையிலே நாக்கு நீட்டிப் பேசுகிற மேதாவிகளை என்னுடைய கண்ணகி புத்தக நிலையத்துக்கு மட்டும் ஒரே ஒருநாள் வந்து உட்காரச் சொல்லுங்கள். நாலைந்து மணி நேரத்தில் சுதந்திர பாரதத்தில் என்ன வளர்ந்திருக் கிறதென்று பாடம் சொல்லிக் கொடுத்து அனுப்புகிறேன். என்ன முறைக்கிறீர்கள்? முறைக்காதீர் ஐயா! நான் உள்ளதைச் சொல்லுகிறவன்.

மிலிட்டரி ஓட்டலும், சலூனும், மூலைக்கு மூலை ஒலி பெருக்கிக் கடையும் தெருவுக்கு நாலு கட்சிகளும் தவிர ஒரு வெங்காயமும் வளர்ந்ததாகத் தெரியவில்லை. முன்னால் ஆண்கள் தாம் பிச்சைக்கு வந்து தெருவில் அலைந்து கொண்டிருந்தார்கள். இப்போது இளம் பெண்கள், குழந்தைகள் எல்லோரும் தெருவில் கந்தல் புடவையும், கிழிசல் துணியும், எண்ணெய் வறண்ட பரட்டைத் தலையுமாகப் பிச்சைக்கு வருகிற அளவு வளர்ந்திருக்கிறது. எந்தெந்தத் தொழிலையோ வளர்த்துவிட்டதாக மேடையிலே மார் தட்டுகிறீரே! பிச்சைக்காரத் தொழில் நீர் வளர்க்காமலே எத்தனை அமோகமாக வளர்ந்திருக்கிறது பார்த்தீரா? ஏன் ஐயா தலை குனிகிறீர்? குனியாதீர்! நிமிர்ந்து நின்று, 'பாரத தேசமென்று தோள் கொட்டிப் பூரித்துப் பெருமைப் படுங்கள்!'

'உமக்கு எதற்கு ஐயா இந்த வம்பெல்லாம்? கடையைக் கவனித்துக் கொண்டு பேசாமலிரும்!' என்கிறீரா?

செய்யலாம்! ஆனால் இந்தக் கடைப் பக்கமாக யாராவது திரும்பிக் கவனித்தால்தானே நான் வியாபாரத்தைக் கவனிக்கலாம். வருகிற பயல்களெல்லாம், முதலில் எதிரே இருக்கிற மிலிட்டரி ஓட்டலில்தான் நுழைகிறான். அப்புறம் பக்கத்தில் இருக்கிற 'சுகானந்தா பீடா' ஸ்டாலில் போய் ஸ்பெஷல் பீடா வாங்கி வாயில் அடக்கிக் கொண்டு திரும்பிப் பாராமலே நடையைக் கட்டி விடுகிறானே, ஐயா! பேரைப் பார் பேரை, சுகானந்தா பீடாவாம். இன்று இந்த தேசத்திலே சுகமும், ஆனந்தமும் இவன் பீடா ஸ்டாலிலேதான் மீதம் இருக்கிற மாதிரி நினைப்பு. பீடாக்கடை வீராசாமி என்ன இருந்தாலும் கெட்டிக்காரன். பயல் பீடாவுக்கு வெற்றிலை சுருட்டுகிறபோது ஆளையே சுருட்டிக் கைக்குள் போட்டுக் கொள்கிற சாமர்த்தியக்காரன். எப்படியோ இவனும், தினமும் பதினைந்து, இருபது ரூபாய்க்கு வியாபாரம் பண்ணிவிடுகிறான்.

தெருவுக்கே திருஷ்டி பரிகாரம்போல், என் இலக்கியப் புத்தகக்கடைதான் இருக்கிறதே ஈயோட்டுவதற்கு. இதோ மேல்வரிசையில் திரு.வி.க. எழுதிய பெண்ணின் பெருமை. நூறு பிரதிகளும் அப்படியே இக்கின்றனவே. இணையற்ற இலக்கிய நூல்தான்; யாராவது கேட்டு வாங்கிக் கொண்டு போகிறானா?

தப்பித் தவறி எவனாவது படியேறிக் கடைக்குள் வந்தால், "கொக்கோகம் மலிவுப் பதிப்பு இருக்குதுங்களா?" என்று வாய் கூசாமல் கேட்கிறான்.

"அதெல்லாம் இங்கே வைத்து விற்கிறது இல்லை" என்றால் முகத்தைச் சுளித்து ஒரு தினுசாகப் பார்த்துவிட்டுப் போகிறான். போகட்டுமே! கண்ணகி புத்தக நிலையத்தில் நுழைந்து நாக்குமேலே பல்லைப் போட்டு இவன் எப்படிக் கேட்கலாம் இந்தக் கேள்வியை?

ஏண்டா டேய் உன்னைப் போல் வெறும் பயல்களை நம்பியா திரு.வி.க. எழுதி வைத்துவிட்டுப் போய் இருக்கிறார்? நீ போ! உன் வியாபாரம் வேண்டாம்! தெய்வம்டா அவரு - மறுபடியும் சிறிது நேரம் ஈயோட்டுகிறேன்.

அதோ, கிழிசல் பாவாடையும் பலாச்சுளைகளைக் கந்தல் துணியால் மூடினாற்போல் நடுநடுவே கந்தலின் வழி முதுகும், தோளும், பொன்னிறந் தெரிய சட்டையுமாக ஏழெட்டு வயதுச் சிறுமி பீடா ஸ்டால் வாசலில் பிச்சைக்கு நிற்கிறாள். அந்தச் சிறுமிக்குப் பக்கத்திலே சிறிது தொலைவில் அதே கந்தல் கோலத்தில் அவளை அத்தொழிலுக்கு அனுப்பியிருக்கும் அவள் தாய் இன்னொரு கைக்குழந்தையோடு ஒதுங்கி நிற்கிறாள். அவளே முன்வந்து கை நீட்டலாம்! ஆனால் இப்போது அது 'ஃபேஷன்' இல்லை. சிறு வயதாக இருந்தால்தான் பார்க்கிறவர்கள் மனம் உடனே உருகும். பிஸினஸ் ஐயா! நேரடியாகக் கவனிப்பதைவிட 'சப் ஏஜண்ட்ஸ்' வைத்துக் கவனித்தால் இலாபம் அதிகம். இல்லையா? உமக்குத்தான் தெரியுமே. சுகானந்தா பீடா ஸ்டால் பக்கம் வருகிற ஒவ்வொரு ஆளிடமும் அந்தச் சிறுமி பின் தொடர்ந்து ஓடிப்போய்க் கை நீட்டுகிறாள். சிரிக்கிறாள்; கெஞ்சுகிறாள். சிறுமிக்கு எலுமிச்சம்பழ நிறம். களையான முகம்! மூக்கு முழி, பல் வரிசை, எல்லாமே அழகாக வாய்த்துத்

தொலைத்திருக்கிறது. சாதாரணமாக இப்படிப் பிச்சைக்கு வருகிற சிறுமிகளிடம் வழக்கமாக இல்லாத அழகாயிருந்தது அது!

அதிகம் வயதானவர்களை 'சார், சார்' என்றும், இளைஞர்களை, 'அண்ணா, அண்ணா' என்றும் உறவு கொண்டாடிப் பிச்சை கேட்கிறாள் சிறுமி. வழக்கமாகத் தினம் பார்க்கிற காட்சிதான். சிலர் காசு கொடுத்துவிட்டுப் போனார்கள். சிலர் பேசாமல் போனார்கள். சிறுமி பூப்பந்தாகத் துள்ளியும் ஓடியும், நடந்தும், காசு சேர்த்துக் கொண்டிருந்தாள். வீதியில் நல்ல கூட்ட நேரம். தண்ணகி புத்தக நிலையத்தில் எவ்வளவு நேரம்தான் ஈ ஓட்டும் தொழிலைப் பொறுமையாகச் செய்து கொண்டிருக்க முடியும்?

மிலிடரி ஓட்டலில் சுறுசுறுப்பாக வியாபாரம் நடக்கிறது! சுகானந்தா பீடா ஸ்டாலில் வெற்றியும், காசும், சுருட்டப்படுகிறது. பிச்சைக்காரச் சிறுமி தள்ளி நிற்கும் தாயின் முகம் மலரத் தன் சாமர்த்தியத்தைக் காட்டி 'அண்ணா, அண்ணா' என்று கெஞ்சிக் காசு சேர்த்துக்கொண்டிருக்கிறாள். 'பாரத நாட்டு மாதர் திலகங்கள்' என்று அன்றைக்குத்தான் ஒரு சிறந்த நூல் கடைக்கு வந்திருந்தது. அதை எடுத்துப் படிக்க ஆரம்பித்தேன்.

"என்னைப் பெற்றவள் மட்டும் தாய் அல்லள். இந்தப் புண்ணிய பூமியில் பிறந்த ஒவ்வொரு பெண்ணும் என் தாய்! என்னோடு பிறந்தவள் மட்டும் சகோதரி அல்லள். இந்தப் புண்ணிய பூமியில் பிறந்த ஒவ்வொரு பெண்ணும் என் சகோதரி. எந்தப் பெண்ணுக்கு இழிவு நேர்ந்தாலும் அந்த இழிவில் ஒரு பங்கு என் தாய்க்கும், என் சகோதரிக்கும் வருகிறது..." என்று நூலின் முன்னுரையில் உணர்ச்சிவசப்பட்டு எழுதியிருந்தார் துறவியாகிய அந் நூலாசிரியர்.

நான் மனம் தோய்ந்து உணர்வுகள் தோய்ந்து கோவிலில் தெய்வச் சிலைக்கு மிக அருகில் நிற்கிறாற் போன்ற மெய்சிலிர்ப்புடன் இந்தப் பகுதியைப் படித்துக் கொண்டிருந்தேன்.

"அண்ணா! அண்ணா! நான் அனாதை அண்ணா - உதவி செய்யுங்கள்!" - அட்டகாசமாகச் சிரிப்பும், கும்மாளமுமாய் பீடா ஸ்டாலுக்கு வந்த நாலைந்து வாலிபர்களிடம் கெஞ்சிக்கொண்டிருந்தாள் சிறுமி. என் கடை வாசலில் யாரோ வந்து ஏதோ கேட்கவே, நான் 'பாரத நாட்டு மாதர் திலகங்களை' மூடி வைத்துவிட்டு நிமிர்ந்தேன்.

"இல்லற இன்ப ரகசியங்கள் இருக்குதா சார்?"

"இல்லை! திரு.வி.க. எழுதிய பெண்ணின் பெருமை இருக்குது. வேணுமா? அருமையாயிருக்கும்."

"வேண்டாங்க! நமக்கு அதெல்லாம் புரியாது!" கேட்டு வந்தவர் போய்விட்டார்.

பீடா ஸ்டால் வாயிலில் காளையர் சிரிப்பு இன்னும் ஓய்ந்தபாடில்லை. சிறுமியின் 'அண்ணா'க் கூப்பாடும் நிற்கவில்லை; காளையர் குழுவில் மைனர்போல்

தோற்றமளித்த ஒரு இளைஞன் உலகத்திலுள்ள ஈனத்தனமெல்லாம் சேர்த்துச் சிரிப்பதுபோல் அசிங்கமாகச் சிரித்துக்கொண்டே அந்தப் பிச்சைக்காரச் சிறுமியைப் பார்த்துக் கேட்கிறான். இப்படியும் கேட்கத் தோன்றுமா ஒரு கேள்வி? தூ! மானங் கெட்ட பயல்கள்!

“இதோ பாரு பாப்பா! இப்போ உனக்கு வயது பத்தாதும்மா இன்னும் அஞ்சாறு வயது கழிச்சு வா நானே காசு கொடுத்து உன்னைக் கூப்பிடுகிறேன். ‘பெர்ஸானாலிட்டி’ இன்னும் ‘இம்ப்ரூவ்’ ஆகணும் பாரு! ஆனப்புறம் வர்ரியா தங்கம்?”

மனம் கூசாமல், வாய் கூசாமல் வீதி நிறைய ஒலிக்கும்படி இப்படிக் கேட்கிறான். சுற்றி நிற்கிறவர்கள் ஆர்ப்பாட்டமாக நகைக்கிறார்கள். பீடாக் கடைக்கார வீராசாமி இது கேட்டுச் ‘சுகானந்த’மாக இளநகை பூக்கிறான். சிறுமி விழிக்கிறாள். அவளுக்கு அவன் கேள்வி விளங்கவில்லை. தள்ளி நின்ற தாய்க்காரி வெட்கித் தலைகுனிகிறாள். அவளுக்கு விளங்குகிறது. ஆனால் பேச வாயில்லை. வக்கும் இல்லை. ஓடிவந்து இப்படிக் கேட்டவன் முகத்தில் ‘தூ’ என்று காறித்துப்பத் திராணியில்லை. தாயாக இருந்தும் கோழையாக நிற்கிறாள் அவள். வயிறு ஐயா! வயிறு இருக்கிறதே! சிறுமிக்கு இளைஞர்களை எல்லாம் அண்ணாவாக உறவாட முடிகிறது. ஆனால்....? வீதி நிறைய அசிங்கம் பெய்த மாதிரி இந்தக் கேள்வி ஒலித்தபோதே உலகம் சர்வநாசமாகியிருக்க வேண்டும்போல் எனக்கு மனம் கிடந்து துடிக்கிறது. சிறிது நேரத்துக்கு முன் பாரத நாட்டு மாதர் திலகங்களின் முன்னுரையில் என்ன படித்தேன்? என்ன உணர்ந்தேன்? எதற்காக மெய்சிலிர்த்தேன்?

என்னுடைய புத்தகக் கடையில் மட்டுமில்லை ஐயா! வாழ்க்கையிலேயே ‘பெண்ணின் பெருமை’ விலை போகவில்லை. இந்த அகன்ற வீதியில் இந்த ஆபாசக் கேள்வி ஒலித்தபோது ஆண்களும் பெண்களுமாக எத்தனை தமிழ்ச் சகோதர சகோதரிகள் நடமாடிக் கொண்டிருந்தார்கள்? அத்தனை பேர் உடம்பிலும் இரத்தம் ஓடியதா? ஐஸ்வாட்டர் ஓடியதா? யாரைக் கேட்டால் என்ன? கேள்வி எவ்வளவு ஆபாசமானது? வீதியில் வினாவ வேண்டிய வினாவா இது? நான் ஓடிப்போய் அந்தப் பயலை அறையலாம். அறைய விடுவார்களா?

என்ன வேய்? சிரிக்கிறீர்! சிரியும் ஐயா, நன்றாகச் சிரியும். ‘பாரத தேசமென்று தோள் கொட்டிச்’ சிரியும்! வெட்கங் கெட்ட நாட்டில் வேறென்ன செய்ய முடியும்?

**(தாமரை, செப். 1960)**

## 51. வழிகள் பிரிகின்றன

"நீ போ அம்மா! மணவறையில் காத்துக் கொண்டிருக்கிறார்கள். திருப்பூட்டு நேரம் நெருங்கி விட்டது. இவனைச் சமாதானப் படுத்த உன்னால் முடியாது. நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று மகளை அவசரப்படுத்தினார் நல்ல குற்றாலம் பிள்ளை.

புதுப் புடைவையும் பூச்சூட்டுமாக மணக் கோலத்தில் நின்று கொண்டிருந்த அவருடைய மகள் தயங்கினாள். கீழே விழுந்து கை கால்களை உதைத்துக் கொண்டு அழும் தம்பியைப் பார்த்துக் கலங்கி நின்றாள் மணப்பெண்.

"கண்ணா, அழாதே! நீ சமர்த்துப் பையனில்லையா? நான் இன்னும் கொஞ்ச நாழிகையிலே இங்கே வந்திடுவேன். அப்புறம் உன்னோடேயே இருப்பேன். உனக்கு எல்லாம் சொல்லுவேன். அக்காவுக்குக் கலியாணத் தன்னிக்கி நீ அழலாமா? அக்கா பாவமில்லையா?" - மணப்பெண் காந்திமதி கீழே பையனின் பக்கத்தில் உட்கார்ந்து அவனுடைய பிஞ்சுக் கைகளைப் பற்றியவாறு ஆறுதலாகச் சொல்லிப் பார்த்தாள்.

"வேண்டாம் போ; நானும் உன்கூட மணவறைக்கு வருவேன். நீ என்னை ஏமாத்திட்டுப் போகப் பார்க்கிறே... எனக்கு மட்டும் கண்ணு தெரிஞ்சா நீ இப்படி எல்லாம் செய்வியா அக்கா?" பையன் கதறிப் புரண்டான்.

"ஏலே! குருட்டு மூதி, உதை கேக்குதா இப்பம்? நேரம் காலம் தெரியாமே அழுது முரண்டு பிடிக்கிறே!" என்று சினத்தோடு கையை ஓங்கினார், நல்ல குற்றாலம்.

"அடிக்காதீங்கப்பா; கண்ணன் நான் சொன்னால் கேட்பான். கண்ணா! நீ சமர்த்துப் பையனில்லையா? அழாமல் இருக்கணும்" என்று மறுபடியும் பையனின் தலையைக் கோதிவிட்டுக் கொண்டே கெஞ்சினாள் காந்திமதி.

"வே அத்தான், நேரங் கழிஞ்சுக்கிட்டிருக்குது; மணவறையிலே கூப்பிடுதாக..." என்று அவசரப்படுத்திக்கொண்டு வந்தார் பலவேசம்.

"பலவேசம்! நீதான் இந்தப் பயலைக் கொஞ்சம் பார்த்துக்கவேன். தாலியைக் கட்டி முடிஞ்சிடட்டும்."

"காந்தீ! நீ அப்பா கூடப் போம்மா; நான் இவனைப் பார்த்துக்கிறேன்" என்று பலவேசம் எழுந்து, திமிறி ஓடாமல் பையனைப் பிடித்துக் கொண்டார். கண்ணன் வீறிட்டு அழுதான். பலவேசத்தின் இரும்புப் பிடிகளையும் தகர்த்துக் கொண்டு, "அக்கா! காந்தியக்கா; என்னை விட்டிட்டுப் போகாதே; நானும் மணவறைக்கு வருவேன்" என்று வீறிட்டான்.

"குருட்டுப் பயலே! நீ அங்கே போய் என்னத்தைப் பார்க்கப் போறே! அதான் பொறக்கும் போதே அவிச்சுக்கிட்டுப் பொறந்திருக்கியே? இன்னும் பார்க்க என்ன வச்சிருக்கு உனக்கு?" என்று முதுகில் இரண்டு சாத்துச் சாத்தினார் பலவேசம். பையனுடைய அழுகை நாதசுவர ஓசையிலும் மேளத்திலும் கலந்து கரைந்தது. மணவறையில் கெட்டிமேளம் முழங்கிற்று.

**வீ**டு முழுவதும் சந்தனம் மணத்தது. பன்னீர் கமகமத்தது. தலையில் பூச்சூடிக் கொண்டிருக்கிற பலர் கூடினால் நிறைகிற ஒரு மணம் - கல்யாண மணம் - வீடெங்கும் பரவி இருந்தது. காலையிலிருந்து கொட்டுமேளம் முழங்குகிறது. விடிந்ததும் ஈயப் பாத்திரத்தில் வெந்நீர்ப் பழையதும், ஆவக்காய் ஊறுகாயும் எடுத்துக்கொண்டு, 'கண்ணா! பல் விளக்கலாம், வா; பழையது எடுத்திட்டு வந்திருக்கேன்' என்று கையைப் பிடித்துக் கூட்டிக் கொண்டுபோக வரும் காந்திமதி அக்கா வரவில்லை. கண்ணன் மாடியறையிலேயே இருந்தான். வீடு நிறையக் கூட்டமும், கோலாகலமுமாக, ஏதோ புதிதாக நடப்பதை அவன் செவிகள் உணர்ந்தன. யார் யாரோ வருகிறார்கள், போகிறார்கள். வள்ளியூரிலிருந்து பலவேசம் மாமா வந்திருக்கிறார் போலிருக்கிறது. அவருடைய குரல் கேட்கிறது. ராதாவரத்துப் பெரிய அத்தை குரலும் கேட்கிறது. ஏதோ ஒரு குதூகலத்திற்காக வீடே மணக்கிறது, மகிழ்கிறது, நிறைந்து பொலிகிறது; அவன் செவிகள் உணர்கின்றன. கண்கள் பார்க்க முடியவில்லை.

"டேய் நீ இங்கேயே இரு; எங்கேயும் நீயா எந்திரிச்சி வந்து தடுமாறி விழுந்து வைக்காதே..." என்று அப்பா வந்து குரல் கொடுத்துவிட்டுப் போனார். சிறிது நேரத்தில் யாரோ ஓர் இலையில் இட்டிலி கொடுத்துச் சாப்பிடச் சொன்னார்கள்.

"இந்த இட்டிலி யாருக்கு வேணும்? காந்தி அக்கா வெந்நிப் பழையது கொண்டு வருவா... நான் பல் வெளக்கிட்டுச் சாப்பிடுவேன்" என்று இட்டிலியை ஒதுக்கித் தள்ளினான் கண்ணன்.

"காந்தியக்கா இன்னிக்கி வரமாட்டா. அவளுக்குக் கலியாணம். கீழே கிணத்தடியிலே ஒரே கூட்டம். நீ கண்ணு தெரியாத பையன் - வந்து பல் விளக்குறதுக்கு முடியாது. இன்னிக்குப் பல் விளக்காட்டிப் பரவாயில்லே; இட்டிலியைச் சாப்பிடு."

"நா ஒண்ணும் பல்லு வெளக்காமச் சாப்பிட மாட்டேன். அக்கா வந்து என்னையைக் கீழே விளுகாமல் கையைப் பிடிச்சுக் கூட்டிக்கிட்டுப் போகும்" என்று இட்டிலி கொண்டு வந்தவரை மறுத்து, அடம் பிடித்தான் சிறுவன். தன்னை வஞ்சித்து ஏமாற்றி விட்டு அந்த வீடு முழுவதும் ஏதோ ஒரு பெரிய கோலாகலத்தில் மூழ்கியிருப்பது போல் அவன் மனம் உணர்ந்து ஏங்கியது. ஏங்கி என்ன பயன்? மாடியறையில் காலையில் எந்தப் படுக்கையில் தூங்கி எழுந்திருந்தானோ அந்தப் படுக்கையிலிருந்து நகராமல் வீற்றிருந்தான் அந்தக் குருட்டுச் சிறுவன். அவன் உட்கார்ந்திருந்த இடத்திற்குப் பக்கமாகக் கல்யாணத்துக்கு வந்திருந்த சில சிறு பையன்கள் ஏதோ வேடிக்கையாகச் சிரித்துப் பேசிக்கொண்டே போனார்கள் போலிருக்கிறது. அந்த இளங் குரல்களையும், அவற்றிலிருந்த கும்மாளத்தையும் இருந்த இடத்தை விட்டு அசையாமல் அவன் கேட்டான்.

"டேய் இது யாருடா, இந்தத் தூங்கு மூஞ்சிப் பையன்? படுக்கையிலேயே கையைக் கட்டிக்கிட்டு உட்கார்ந்திருக்கான்!"

"கல்யாணப் பொண்ணோட தம்பிடா! பாவம், குருட்டுப் பையண்டா...!"

"குருட்டுப் பையனா? ஐயோ பாவம்!"

இந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டே உட்கார்ந்திருந்த கண்ணனுக்கு மனத்தில் ஏதோ தைத்தது. என்னவோ குமுறியது. நெருப்பில் விழுந்த பூ மாதிரி அவனுடைய பிஞ்சு நினைவு தாங்க முடியாத ஏதோ ஒரு முரட்டு வெம்மை அவன் மனத்தைக் கசக்கிப் பிழிந்தது. அந்த வீட்டில் அப்போது ஏதோ ஒரு மகிழ்ச்சி இயங்கிக்கொண்டிருக்கிறது. அந்த இயக்கத்தில் கலந்து கொள்ள விடாமல் - குடை ராட்டினத்திலிருந்து கீழே தள்ளப்பட்டது போல் தன்னைப் பிரித்து விட்டதாக அவன் இளம் உள்ளம் கொதித்தது. இரைந்து அழ வேண்டும் போலிருந்தது. காற்றில் அசைகிற ரோஜா மொட்டு மாதிரி அவன் உதடுகள் துடித்தன. வாய் கோணியது. கேவிக் கேவி அழுதான்.

"ஏண்டா அழுவறே? உனக்கு என்ன வேணும்? சொல்லு" என்று அந்தப் பையன்களில் ஒருவன் பக்கத்தில் வந்து கேட்டான்.

"காந்தி அக்காவை வரச் சொல்லணும். நான் மாடியிலே இருக்கேன். காலைலேருந்து பல் வெளக்கலே. பழையது சாப்பிடலே..."

"போடா, நீ சுத்த 'லூஸ்' பையனாயிருக்கியே. உங்க அக்காவுக்குத்தான் இன்னிக்குக் கலியாணமாச்சே! அவ எப்படி உனக்குப் பல் வெளக்கிவிட வருவா?" என்று கொஞ்சம் திமிரோடேயே பதில் சொன்னான், கேட்ட பையன்.

"நீ போய்ச் சொல்லு! எல்லாம் வருவா... அக்காவுக்கு என்மேலே ரொம்பப் பிரியம்..."

அந்தப் பையன்கள் அதை ஒப்புக்கொள்ளாமல் அவனைக் கேலி செய்துவிட்டுப் போய் விட்டார்கள். வீடெல்லாம் கேட்கும்படி ஓவென்று கையையும் காலையும் உதறிக் கொண்டு அழுதான் கண்ணன். வீடே இரண்டு பட்டது அந்த அழுகையில்.

மணவறைக் கூடத்துக்கு நேர் மேலே மாடி ஜன்னல். பையன் அழுத குரல் கீழே அக்காவுக்குக் கேட்டது. மை தீட்டிய கண்களும், மாலையிட்ட கழுத்தும், புதுவளைகள் பொங்கும் கரங்களுமாக மணமேடையிலிருந்து எழுந்து விடுவிடுவென்று மாடிப்படி ஏறினாள் காந்திமதி.

"ஏ காந்தீ! அவன் கத்தினாக் கத்தட்டும்; திருப்பூட்டு நேரம் போனால் வேளை தப்பிடும்..." என்று அவள் தந்தை நல்ல குற்றாலமும் பின் தொடர்ந்தார்.

"இதென்னடாது! பூனையை மடியிலே கட்டிக்கிட்டுச் சகுனம் பார்த்த கணக்கால்ல இருக்குது! முரண்டுக்காரப் பையன்னா முன்னேற்பாடா எங்கேயாச்சும் பிரிச்சு வைக்கப்படாதோ?" என்று மணவறையில் மாப்பிள்ளைக்கு உறவினர் ஒருவர் முணுமுணுத்தார்.

"அதில்லை ஐயா; 'ந'னாக் 'கு'னாவுக்குச் சம்சாரம் காலமான நாளிலேருந்து இந்தப் பொண்ணு காந்திதான் தம்பியைக் கவனிச்சு வளர்த்தது. இவ புருசன் வீடு போயிட்டால் அந்தக் குருட்டுப் பையனைக் கவனிக்க இங்கே யாரிருக்கா?" என்றார் ஒருவர். மாடியில் குருட்டுப் பையனைச் சமாதானப்படுத்தப் போன தந்தையையும் மணமகளையும் துரிதப்படுத்த அத்தான் பலவேசம் ஓடினார்.

பெண்ணும், பெண்ணைப் பெற்றவரும் மணவறைக்கு வந்தார்கள். பையனைப் பார்த்துக்கொள்ளும் பொறுப்பு பலவேசத்தின் கையிலே ஒப்படைக்கப்பட்டது. திருப்பூட்டு முடிகிற வரை பையனைப் பார்த்துக் கொண்டார் அவர்.

**கா**ந்திமதி மத்தியானம் ஒரு மணிக்கு மேல் மணவறைச் சடங்குகளெல்லாம் முடிந்து மாடிக்குப் போனாள். கீழே முதல் பந்தி, இரண்டாம் பந்தி என்று சாப்பாட்டுக் கலகலப்பு ஆரம்பமாகி விட்டது.

"கண்ணா! நீ தங்கமான பையன். மத்தியானம் அப்படி அழலாமா? அக்காவுக்குக் கலியாணம்னா தம்பி சந்தோஷமா இருக்க வேண்டாமா?"

"அக்கா! உனக்குக் கலியாணம்னு எங்கிட்ட நீ சொல்லவேயில்லியே? இப்பிடி நீ என்னையை ஏமாத்தலாமா?" கண்ணன் விசும்பினான்.

"உன்னை ஏமாத்துவேனாடா கண்ணு? எனக்குக் கலியாணம்னு நானே சொல்லிக்கலாமா?"

"ஏன் எங்கிட்டே சொன்னா என்னவாம்?"

"சொல்லாதது தப்புத்தாண்டா; மன்னிச்சிடு..."

"இனிமே நீ இந்த வீட்டிலே இருக்க மாட்டியா அக்கா?"

"ஏண்டா இப்படிக் கேட்கறே?"

"இல்லேக்கா; இங்கே யாரோ பேசிக்கிட்டாங்க; நான் கேட்டேன்."

காந்திமதிக்குக் கண்களில் ஈரம் கசிந்தது. புதுப் புடவையால் துடைத்துக் கொண்டாள். ஏதேதோ நினைவுக்கு வந்தது அவளுக்கு. தாயின் மறைவு, நினைவறியாப் பருவத்திலிருந்து அந்தக் குருட்டுத் தம்பியைத் தாங்கித் தாங்கிச் செல்லமாக வளர்த்த நாட்கள், வீட்டில் தங்கி வீட்டைக் கவனிக்க வசதியில்லாமல் ஊரூராக அலைய வேண்டிய தந்தையின் தொழில் - எல்லாவற்றையும் நினைத்துப் பார்த்தபோது அவளுக்கு வேதனையாக இருந்தது. அன்று வரை கண்களில்லாத அந்தக் கண்ணனுக்கு அவளே கண்களாக இருந்து வளர்த்து விட்டாள். பல்தேய்த்துவிட்டு வெந்நீர்ப் பழையது பிசைந்து போடுவதிலிருந்து, எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டுவது வரை எல்லாம் பொறுமையோடு பாசத்தோடு செய்து வளர்த்து விட்டாள்.

'இனிமேல் யார் செய்வார்கள்?' - நினைக்கவே இயலாத கேள்வியாக இருந்தது இது.

"அக்கா! நானும் உன்னோடேயே வந்திடுவேன். இப்பல்லாம் அப்பா ரொம்பக் கோபிக்கிறாங்க... காலைலே நீயுங் கேட்டுக்கிட்டிருந்தியே, 'ஏலே குருட்டு

மூதி'ன்னாங்களே..." சொல்லும்போதே பேச்சுத் தடைப்பட்டு விக்கிக் கொண்டு அழ ஆரம்பித்து விட்டான் கண்ணன்.

காந்திமதி கழுத்தில் பொன் வார்ந்து கயிறாய் வடிந்தது போல் நெளிந்த மங்கலச் சரட்டைத் தொட்டுப் பார்த்துக் கொண்டாள். மடியில் தலையைச் சாய்த்துக் கொண்டு 'உலகமே அக்காவின் மடி மேலிருக்கிறதென்ற' நம்பிக்கையுடன் அழும் குருட்டுத் தம்பியையும் பார்த்தாள். இரத்தத்தோடு வந்த ஒரு உறவை இழந்து இன்னொரு உறவில் கலந்துவிட இருப்பதை நினைக்கும்போது துக்கமாக இருந்தது அவளுக்கு.

'வாழ்க்கைப்பட்ட இடத்துக்குத் தம்பியையும் கூட்டிக் கொண்டு போய் வைத்துக் கொள்கிற அளவுக்கு மாமியாரும் நாத்திமார்களும் விடுவார்களா? அப்பாவாலும் இந்தக் குருட்டுப் பிள்ளையை வைத்துக் கட்டிக் காக்க முடியாது! நானும் கூட்டிக் கொண்டு போக முடியாது. இவனுக்கு என்ன வழி?' - காந்திமதிக்குப் புரியவில்லை ஒரு வழியும்.

"அக்கா! அப்பா என்னைக் கோபிக்காம வெச்சுக்க மாட்டாங்க. தனியா விட்டிட்டு ஊரூராப் போயிடுவாங்க. பலவேசம் மாமாவுக்கு என்னைக் கண்டாலே பிடிக்கலை. 'பொறக்கும்போதே அவிச்சிட்டுப் பொறந்தியேடா, மூதேவி'ன்னு அறைஞ்சிட்டாரு காலைலே. ராதாவரத்து அத்தையும் என்னை வச்சுக்கிட மாட்டாங்க... நீயும் கூட்டிட்டுப் போகாட்டி நான் எங்கே அக்கா போறது?..."

என்ன பதில் சொல்லித் தம்பியை ஆற்றுவதென்றே தெரியவில்லை அவளுக்கு. பையன் அழுதான்.

"அழாதேடா கண்ணு; அப்பா உனக்கு ஏதாவது வழி செய்வார்" என்றாள் காந்திமதி. கோவில்பட்டிக்கும், தூத்துக்குடிக்கும் கூப்பிடு தூரமில்லையே? நினைத்தால் வண்டி கட்டிக் கொண்டு புறப்படச் சொல்லி வந்து தம்பியைப் பார்த்துவிட்டுப் போகமுடியாதே? கோவில்பட்டியில் தான் குடியிருக்க வேண்டு மென்ற அவசியம் இனிமேல் அப்பாவுக்கு ஏது? மதுரை, திண்டுக்கல், பொள்ளாச்சி என்று சரக்குக் கொள்முதலுக்கு ஊரூராய் அலைகிறவருக்கு இந்தக் குருட்டுப் பையனை எப்படி வைத்துக் கட்டிக் காக்கிறது என்று மலைப்பாகத்தான் இருக்கும்.

காந்திமதி சாயங்காலம் அப்பாவைக் கேட்டாள்.

"காந்தீ! கலியாணம் கட்டிப் புருசன் வீட்டுக்குப் போறவ இனிமே அவனைப் பத்தி நெனைச்சுக்கிட்டிருந்தா முடியுமா? எனக்குத்தான் வீட்டுலே தங்கி வச்சுக் காப்பாத்த முடியுமா? பலவேசம் ஒரு வழி சொன்னான். அப்படிச் செஞ்சிடலாமின்னு இருக்கேன்...."

"என்ன வழியப்பா அது?"

"பாளையங்கோட்டையிலே ஏதோ குருடர் பள்ளிக்கூடமின்னு இருக்குதாம்மா. பலவேசமும் கூட வரேன்னிருக்கான். அங்கே கொண்டு போய்ச் சேர்த்திட்டு வந்திடலாம்னு இருக்கேன். வேறே வழி இல்லே."

"விவரந் தெரியாத பிள்ளையாச்சே!... அங்கே சரியாக் கவனிப்பாங்களா?"

"உன் தம்பி ஒருத்தன் மட்டுந்தானா? எத்தனையோ குருட்டுப் பையங்க படிக்கிறாங்களாமே அங்கே?"

**க**லியாணம் முடிந்த மூன்றாவது நாள் வீடே பிரயாணப் பரபரப்பில் மூழ்கியிருந்தது. காந்திமதியை அழைத்துக்கொண்டு அவள் புருஷன் வீட்டினர் புறப்படப் போகிறார்கள். அவள் புருஷன் வீட்டாருக்குத் தூத்துக்குடி. கண்ணனை அழைத்துக்கொண்டு பலவேசத்தோடு பாளையங்கோட்டைக்குப் புறப்பட இருந்தார் நல்ல குற்றாலம். அப்பா அவனைப் பாளையங்கோட்டைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப் போவது பற்றி அவனிடமே விவரமாக எல்லாம் சொல்லிச் சமாதானப்படுத்தி வைத்திருந்தாள் காந்திமதி.

காந்திமதி அன்றைக்கு அதிகாலையில் எழுந்து குருட்டுத் தம்பியைக் கிணற்றடிக்குக் கூட்டிக்கொண்டு போனாள். பல் விளக்கி நன்றாகக் குளிப்பாட்டி விட்டாள். பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு ஆசையோடு வெந்நீர்ப் பழையது பிசைந்து போட்டாள்.

"கண்ணா! இன்னிக்கி நாமெல்லாம் ரயில்லே ஏறி ஊருக்குப் போறோம். நான் எங்க வீட்டுக்காரரோடு தூத்துக்குடி போறேன். நீ அப்பாவோட பாளையங்கோட்டை போறே. சமர்த்தா இருக்கணும்; அழப்படாது. எங்கேயோ இருந்தாலும் அக்கா உன்னையே நினைச்சுக்கிட்டிருப்பேன். இந்தா, இதை உனக்கே உனக்கு வச்சுக்க..." என்று முழு ஒரு ரூபாயை அவன் கையில் வைத்து அழுத்தி விட்டுச் சட்டைப் பையில் போட்டாள். எதையோ உணர்ந்து, எதையோ இழந்து, எதற்கோ ஏங்கி நின்றான் பையன். சிறு குழந்தை போல் அவனை வாரித் தழுவிக் கொண்டாள் காந்திமதி. அந்த அணைப்பு ஆறுதலாக இருந்தது சிறுவனுக்கு. அவன் அறிந்த தாய்மை அரவணைப்பு அது ஒன்றுதான்.

"அக்கா, இனிமே நீ வரவே மாட்டியா?"

"வராமே என்னடா? நானும் எங்க வீட்டுக்காரரும் ஆடிக்கு வருவோம். அப்பாகிட்டச் சொல்லி அப்ப உன்னையும் பள்ளிக்கூடத்திலேருந்து ஊருக்குக் கூட்டியாற ஏற்பாடு செய்கிறேன்."

"நெசம்மாச் செய்வியா அக்கா?"

"கட்டாயம் செய்வேண்டா கண்ணா!"

பையன் நிம்மதியடைந்தது போல் தன் கண்களால் காணாத அந்த அக்காவுக்கு முன் தலையை ஆட்டினான். எல்லோரும் ஒரே வண்டியில் போவதென்றும் மணியாச்சியில் போய் வண்டி மாறிக்கொள்வதென்றும் ஏற்பாடாயிற்று.

**ர**யில் ஜன்னலோரமாகத் தம்பியைப் பக்கத்தில் உட்கார்த்திக் கொண்டு அமர்ந்தாள் காந்திமதி. அவளுக்கு மறுபக்கம் அவளைக் கைப்பிடித்த கணவன்

உட்கார்ந்திருந்தான். மாப்பிள்ளை வீட்டு மற்ற ஆட்கள், பலவேசம், நல்ல குற்றாலம் எல்லோரும் எதிரும் புதிருமாக உட்கார்ந்திருந்தார்கள்.

முதல் முதலாக இரயிலேறி உட்கார்ந்த குதூகலத்தில் இருந்தான் கண்ணன்.

"இந்த இரயிலுங்கற வண்டி எப்படியக்கா இருக்கு? என்னாலேதான் பார்க்க முடியல்லையே! நீ சொல்லேன்..."

காந்தி தன்னால் முடிந்த மட்டும் சொன்னாள். இரயில் புறப்பட்டது. ஒவ்வொரு ஸ்டேஷன் பேராகக் கேட்டுக் கொண்டு வந்தான் கண்ணன். குருமலை ஸ்டேஷனில் வெள்ளரிப் பிஞ்சு கூடை கூடையாக வந்தது. தம்பிக்கு வாங்கிக் கொடுத்தாள் காந்தி. கடம்பூர் வந்தது. 'போளி போளி' என்று ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் ஒலித்த குரல் கண்ணன் காதில் 'கோழி' என்று விழுந்தது போலிருந்தது.

"கோழியைக் கூட ரயில் டேசன்லே விக்கிறாங்களா அக்கா?"

"கோழியில்லேடா; போளின்னு ஒரு பணியாரம்" என்று சொல்லிச் சிரித்துக் கொண்டே, போளிக்காரரைக் கூப்பிட்டு இரண்டு போளி வாங்கித் தம்பியிடம் கொடுத்தாள் காந்திமதி. ரயில் கடம்பூரை விட்டு நகர்ந்தது. மணியாச்சி நெருங்க நெருங்க அவள் மனம் துக்கமாக எதையோ உணர்ந்தது. மாப்பிள்ளை வீட்டார் தங்கள் மூட்டை முடிச்சுக்களைத் தனியே பிரித்து இறக்குவதற்குத் தயாராக வைத்துக் கொண்டனர்.

"போய்ச் சொகமாகச் சேர்ந்ததுக்குக் கடிதாசு போடுங்க. இனிமே அவ உங்க வீட்டுப் பொண்ணு மாதிரி, பார்த்துப் பரிமளிச்சு வச்சுக்கணும். நான் வியாபாரக்கார மனுஷன். அடிக்கடி வரப்போக வாய்க்காது..." என்று விடைபெறுகிற சம்பிரதாயத்தை ஆரம்பித்தார் நல்ல குற்றாலம்.

"அம்மா, காந்தீ! நீ விவரம் தெரிஞ்ச பொண்ணு; தம்பியை நல்லாப் பாத்துக்குவோம். புகுந்த வீட்டுக்கு நல்லபடியா நடந்துக்க... நீ ஆடிக்கு வரப்போ தம்பியைப் பார்க்கலாம்" என்றார் பலவேசம்.

"அக்கா! தூத்துக்குடி வந்திரிச்சா" - காதில் விழுந்த பேச்சுக்களிலிருந்து ஏதோ அநுமானம் செய்துகொண்டு தானாகக் கேட்டான் தம்பி கண்ணன்.

"இல்லே; தூத்துக்குடி இந்த லயனிலே வராது. மணியாச்சி வருது. அங்கே இறங்கி வேறே ரயில் மாறித் தூத்துக்குடிக்குப் போகணும்."

"ஏன் மாறணும்? இந்த ரயில்லியே போனாத் தூத்துக்குடி போகாதா?"

"போகாது! மணியாச்சியிலே தூத்துக்குடிக்கு வழி பிரிகிறது..."

"பாளையங்கோட்டைக்கு?"

"அதுக்கு வேறே லயன், இதுக்கு வேறே லயன். இந்த வண்டி நேரே திருநெல்வேலி போகும். நீ இதுலேயே போய்ப் பாளையங்கோட்டை போவலாம். நாங்க மட்டும் தான் இங்கே இறங்கி ரயில் மாறணும்."

**வ**ண்டி மணியாச்சி ஜங்ஷனின் கலகலப்பில் கலந்து நின்றது. பார்சலுக்காக ஓலைப் பாயில் கட்டிக் கிடந்த மீன் பொதிகளின் நாற்றம் மூக்கைத் துளைத்தது. கூட்டம், பரபரப்பு, வரவேற்கும் குரல்கள், விடை கொடுக்கும் குரல்கள், 'அண்ணாச்சி சொகந்தானா?' என்றது போன்ற விசாரணைகள், ரயில் என்ஜின் கூவல்கள் எல்லாவற்றையும் கண்ணன் கேட்டான். உணர்ந்தான். காண முடியவில்லை.

மாப்பிள்ளை வீட்டார் மூட்டை முடிச்சுக்களை இறக்கிக் கொண்டு ஒவ்வொருவராக இறங்கினர். மரியாதைக்காகப் பலவேசமும், நல்ல குற்றாலமும் கூட இறங்கிப் பிளாட்பாரத்தில் நின்றார்கள்.

கண்களில் நீர் மல்கக் கண்ணனை ஏறிட்டு நோக்கினாள் காந்தி. அவள் இன்னும் வண்டியிலிருந்து இறங்கவில்லை. உதட்டோரம் வெள்ளரி விதையும் போளியும் பொறுக்குலர்ந்து, சாப்பிட்ட அடையாளம் தெரிய உலகத்திலுள்ள பேதைமை எல்லாம் முகம் காட்ட இரயிலில் உட்கார்ந்து கொண்டிருந்தான் அந்தக் குருட்டுத் தம்பி.

"அக்கா! இதான் மணியாச்சியா? இங்கேதான் நம்ம வழி பிரியுதா?"

காந்தியின் கண்களிலிருந்து நீர் முத்துக்கள் உதிர்ந்தன.

"ஆமாடா கண்ணு! இங்கே நம்ம வழி பிரியுது! நா வரேன்; அக்காவை மறந்திடாதே. எப்பவும் உன்னையே நினைச்சிக்கிட்டிருப்பேன்." ... அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு சொன்னாள் அவள்.

"நீ அழுவுறியா அக்கா?..."

"இல்லே! வரேண்டா கண்ணு!"

காந்தி இறங்கிக் கணவனுக்குப் பக்கத்தில் நின்று கொண்டாள். கார்டு விசில் ஊதினார். மணி அடித்தது. பலவேசமும், நல்ல குற்றாலமும் வண்டிக்குள் ஏறிவிட்டார்கள். இரயில் நகர்ந்தது. "தூத்துக்குடிக்கு வழி பிரிஞ்சிருக்கும்" என்று பையன் தனக்குள் மெல்லச் சொல்லிக் கொண்டான். ஆம்! மணியாச்சியிலிருந்துதானே தூத்துக்குடிக்கு வழிகள் பிரிகின்றன!

**(தென் மொழிகள் புத்தக டிரஸ்ட், செப்டம்பர் 1960)**

# 52. புதிய ஆயுதம்

**கை**யில் கடிகாரத்தையும் மடியில் பணத்தையும், மனத்தில் பேராசையையும் கட்டிக் கொண்டு நவநாகரிக ஆடவரும் பெண்டிரும் அந்த அகலமான வீதியில் கூட்டமாக நடமாடிக் கொண்டிருந்தனர்.

கண்ணைப் பறிக்கும் விதவிதமான மின்சார விளக்குகள், கருத்தைக் கவரும் கல்லூரிக் குமரிகளின் கூட்டம், பொருளையும் தர்மத்தையும் சேர்ந்தாற்போல் விற்றுக் காசைச் சேர்க்கும் கடைகள், டிராம், பஸ், ரிக்‌ஷா, ஜட்கா, டாக்ஸி - பட்டணத்து வீதிக்கு வேண்டிய எல்லாத் தகுதிகளும் அந்தத் தெருவுக்கு இருந்தன.

'இந்த மனிதப் பயல்களுக்கு வெளிச்சம் போடுகிறவன் நான்' என்று நிமிர்ந்து நின்று சொல்வதுபோல் வரிசை வரிசையாக மின்சாரக் கம்பங்கள். டெலிபோன் தூண்கள், உயரமான கட்டிடங்களின் உச்சந்தலையில் ஏறி மிதித்துக் கொண்டு நிற்கும் ரேடியோ 'ஏரியல்' கம்பங்கள்.

வீடுகளில்தான் எத்தனை வகை? இரண்டு மாடி, மூன்று மாடி, நான்கு மாடி - இன்னும் பல மாடிகள். எல்லாம் பிரமாதம்தான்! பட்டணமில்லையா; பிரமாதமில்லாத எதுவும்தான் பட்டணத்தில் இருக்க முடியாதே.

அதோ! அந்த ஆடம்பரமான வீதியில் கிழக்குக் கோடியிலிருந்து வரிசையாக ஏழு வீடுகள் இருக்கின்றனவே. அவற்றில் ஏழாவது வீட்டைத் தவிர மற்ற ஆறும் செல்வச் செழிப்பின் பிரதிபிம்பங்களாக நிற்கின்றன. ஏழாவது வீடு மட்டும்... பாவம்!... பெட்டிபோல் ஒரு சிறிய ஓட்டடுக்கு வீடு அது! ஓடு சரிந்து விழுந்துவிடுமோ என அஞ்சத்தக்கதாக இருந்தாலும் அஞ்சாமல் குடியிருப்பவனுடைய மனவலிமைக்குப் பயந்தோ என்னவோ வீடு விழாமல் நின்று கொண்டிருந்தது.

முதல் ஆறு வீடுகளில் யார் யார் குடியிருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா நீங்கள்? வரிசையாகச் சொல்கிறேன், கேளுங்கள்:

முதல் வீட்டில் ஒரு பிரபல சினிமா நடிகர் இருக்கிறார். வாசலில் நாலைந்து புத்தம் புதிய கார்களும், விடலைப் பிள்ளைகளும், பள்ளிச் சிறுவர்களும் கூடி நிற்பதிலிருந்தே இதை நீங்களே தெரிந்து கொண்டிருக்க வேண்டுமே? ஆமாம்! இப்போதே சொல்லிவிடுகிறேன். நல்லதோ, கெட்டதோ, எதையும் பிறர் கூறாமலே அனுமானித்துத் தெரிந்து கொள்ளுகிற ஞானம் பட்டணத்துக்கு மிகவும் அவசியமான தேவை.

அந்த நடிகர் ஏராளமான படங்களில் நடித்துப் புகழ் பெற்றவர். பழைய காலச் சரித்திரத்தில் இத்தனை போர்களில் காயம் பெற்றவர் என்பதைப் பெருமையாகச்

சொல்லிக் கொள்கிற மாதிரி இப்போது இத்தனை வருட அனுபவம் என்பதைப் பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள்.

இருபத்தைந்து வருடமானால் வெள்ளிவிழா. நூறு வருடமானால் நூற்றாண்டு விழாவாம். ஐந்து, பத்து, பதினைந்து, போன்ற குறைவான வருடங்களுக்கு என்ன விழா கொண்டாடுவதென்று எனது ஏழை நண்பர்கள் கேட்கலாம். முறையே இரும்பு விழா, பித்தளை விழா, செம்பு விழா என்று வைத்துக் கொண்டால் போகிறது. இந்தக் கணக்குப்படி செம்பு விழா எடுக்க வேண்டிய அவ்வளவு அனுபவமுள்ள நடிகர் அவர்: நாலு கார், பதினாறு வீடு, நிறையக் கையிருப்பு - இவ்வளவுமுள்ள செழிப்பான கலைஞர்.

இரண்டாவது வீட்டில் ஒரு பெரிய டாக்டர் வசித்து வருகிறார். வைத்திய சம்பந்தமாக உலகத்திலுள்ள எந்தெந்த சர்வகலாசாலைகளில் என்னென்ன பட்டங்கள் உண்டோ அவ்வளவும் வாங்கினவர். அவர் கைப்பட்டாலே நோய் பறந்துவிடும் என்கிற அளவுக்குத் திறமைசாலி.

நோயாளிகளைப் பார்த்து இன்ன நோய் என்று சொல்வதற்கே நிறையப் பணம் வாங்கிவிடுவார். டாக்டர்களுக்கும், வக்கீல்களுக்கும் இலவசத் தொண்டு செய்தால் புகழ் எங்கே வருகிறது? எவ்வளவு அதிகமாகப் 'பீஸ்' வாங்குகிறார் என்பதைக் கொண்டுதானே பெரிய டாக்டர், பெரிய வக்கீல் எல்லாம் உருவாக்கப்படுகிறார்கள்?

அந்த வகையில் இரண்டாவது வீட்டு டாக்டர் இணையற்றுத் திகழ்ந்தார். ஒரு தடவை கழுத்தில் 'ஸ்டெதஸ்கோப்பை' மாட்டிக் கழற்றினால் கோட்டுப் பைக்குள் நூறு ரூபாய் சேர்ந்துவிடும். டாக்டரிடம் ஒரு பெரிய காரும், இரண்டு சிறிய கார்களும் இருந்தன. பெரிய கார் அவருக்கு. சிறிய கார்களில் ஒன்று அவர் மகள் மெடிகல் காலேஜுக்குப் போகவர உபயோகப்பட்டது. மற்றொன்று திருமதி டாக்டர் லேடீஸ் கிளப்புக்கும் கடை, கண்ணி, கோயிலுக்கும் போகப் பயன்பட்டது. பெயரின் முதல் இரண்டு எழுத்துக்களைச் சொன்னாலே நகரிலுள்ள அத்தனை பேருக்கும் தெரிந்துவிடக்கூடிய டாக்டராக இருந்தார் அவர்.

மூன்றாவது வீடு யாருடையதென்று அதன் முன்புறமுள்ள பெயர்ப் பலகையைப் பார்த்தவுடனே உங்களுக்குத் தெரிந்துவிடும். பார்-அட்லா பெற்ற ஒரு வக்கீலுடைய வீடு அது. டாக்டருக்கு வீட்டைத் தவிர ஆஸ்பத்திரி என்று தனியாக வேறொரு கட்டிடம் இருந்ததனால் வீட்டில் போர்ட்டு மாட்டவில்லை.

வக்கீலுக்கு அப்படிக் கிடையாது. வருகிறவன் வீட்டைத் தேடித்தானே வர வேண்டும்? அதனால் பெரியதாகப் பெயர்ப்பலகை எழுதித் தொங்கவிட்டிருந்தார்.

வக்கீல் தொழிலே பலகையால் விளங்க வேண்டிய ஒன்று. அதாவது பல பேருடைய கைகளால் என்று சிலேடைப் பொருளாக வைத்துக் கொண்டாலும் சரிதான். டாக்டரைப் போலவே இவரும் பெரிய வக்கீல். இவருடைய வீட்டிலுள்ள அவ்வளவு சட்டப் புத்தங்களையும் வாரிக் கொண்டு போய்க் கொட்டினால் மெரினாவுக்குக் கிழக்கே இரண்டு மைல் தொலைவு கடலைத் தூர்த்துத்

தரையாக்கிவிடலாம். அத்தனை பெரிய வக்கீல். கொலை செய்தவன் நிரபராதியாகவும், நிரபராதியைக் கொலை செய்தவனாகவும் மாற்றிக் கேசை ஜெயிக்க வைப்பதில் நிபுணர்.

நான்காவது வீடு ஒரு வியாபாரியுடையது. ஒரு மில்லுக்கும், இரண்டு பாங்குகளுக்கும், ஆறு கம்பெனிகளுக்கும் டைரக்டரான அந்த வியாபாரி வருடந்தோறும் இலட்சக்கணக்கில் வருமானவரி கட்டுகிறார். ஊரிலுள்ள எல்லா இலக்கியச் சங்கங்களுக்கும், மன்றங்களுக்கும், கழகங்களுக்கும், தாராளமாக நிதியுதவி செய்து கௌரவப் பாதுகாவலராய் விளங்குகிறார். ஏதாவது ஒரு மகாநாடு நடத்தச் செலவுக்குப் பணமில்லையென்றால் அவரையே தலைவராகப் போட்டு அவரிடமே மகாநாட்டுச் செலவை நிதியாக வாங்கிவிடும் தந்திரம் சில மகாநாடுகளை நடத்துகிறவர்களுக்குத் தெரிந்திருந்தது.

அந்த வியாபாரியைச் சுற்றி எப்போதும் சமயம், மதம், புலமை சம்பந்தமான ஆட்கள் கூடியிருப்பார்கள். சமயத் தலைவர்களுக்குப் பாதகாணிக்கைகளும், பொன்னாடையும், சன்மானமுமாக வியாபாரி செல்வாக்கோடு வாழ்ந்து கொண்டிருந்தார். எதிலும் குறைவில்லாத போகத்தை அனுபவிக்கக் கொடுத்து வைத்தவர் அவர். எதெதிலோ தக்ஷிணப் பிரதேசம் வேண்டுமென்று தெரியாதவர்கள் சொல்லிக்கொண்டு கிடக்கிறார்கள். அந்த வியாபாரியினுடைய அந்தப்புரத்தில் இருக்கிறது ஐயா தக்ஷிணப் பிரதேசம்! புரியவில்லையா? ஒரு தெலுங்குப் பாட்டுக்காரி, ஒரு மலையாளத்து நாட்டியக்காரி, ஒரு கன்னட நடிகை இத்தனை பேரும் அவர் வீட்டில் இருந்தார்கள். 'வீட்டில் இருந்தார்கள்' என்று மொட்டையாகச் சொன்னால் என்ன அர்த்தம்? அர்த்தமாவது; மண்ணாங்கட்டியாவது? அர்த்தம் சொல்லியா இதெல்லாம் புரிய வேண்டும்? அடுத்த வீட்டைப் பார்க்கலாம்.

ஐந்தாவது வீடு ஒரு காலேஜ் புரொபஸருடையது. உயரமான தோற்றமும், மூக்குக் கண்ணாடி அணிந்து அறிவொளி திகழும் முகமுமாக இவர் நடப்பதே கல்வியின் பெருமிதத்தைக் காட்டும். டக் டக் என்று பூட்ஸ் கால்கள் ஒலிக்க நடந்து மோட்டார் சைக்கிளில் ஏறி இவர் காலேஜுக்குக் கிளம்பும் அழகே அழகு. நடிகரையும், டாக்டரையும், வக்கீலையும், வியாபாரியையும் போல இவர் கொழுப்பு நிறைந்த வாழ்க்கை வாழ முடியாவிட்டாலும், போதுமான வசதிகளுடன் சுகமான வாழ்க்கை வாழ்ந்தார். சுயநலமும், உலகத்தில் சராசரி மக்களின் துயரங்களைப் பற்றிக் கவலைப்படாத திமிரும் இவரிடம் நிறைய இருந்தன.

மணிபர்ஸில் பணமிருந்து மண்டையில் மூளையில்லாத ஆட்களைப் பிடித்துச் சங்கங்களை ஆரம்பிக்கச் செய்து பொன்னாடையும், பூமாலையும் போட்டுக் கொண்டு மேடைக்கு மேடை பழம் பெருமை பேசி இன்று உள்ள ஏழைகளின் தொல்லைகளைப் பற்றியே நினைவின்றிக் கோவில் காளைபோல் சுற்றி வந்தார் இவர். கூப்பிட்டாலும், கூப்பிடாவிட்டாலும் எல்லாக் கூட்டங்களிலும் போய்ப் பேசினார். அதிகம் 'பவர்' உள்ள லென்ஸோடு கூடிய இவரது மூக்குக் கண்ணாடியின் ஆராய்ச்சிப் பார்வையில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாறு எல்லாம் பளிங்கு போல் தெரிந்தன.

ஆனால் கண்முன் பசியால் செத்துக் கொண்டிருப்பவனும், குழந்தையை விலைக்கு விற்றுக் கொண்டிருக்கும் தாயும், வேலை கிடைக்காததால் தற்கொலை செய்து கொள்ளும் வாலிபனும், பசிக் கொடுமையால் காசு கொடுத்தவர்களுக்கெல்லாம் மனைவியாக மாறும் பெண்ணும் தெரியவேயில்லை. இவர் நன்றாக உண்டு, நன்றாக உடுத்தி, கல்லூரியில் எதிர்கால மனிதர்களை உருவாக்கிக் கொண்டிருந்தார்.

ஆறாவது வீடு அரசாங்கத்தில் பெரும் பதவி வகிக்கும் ஒரு 'கெஸட்டெட்' ஆபீசருடையது. இவர் ஆங்கிலம் மளமளவென்று பேசுவார். பேச்சில் எப்போதும் அதிகார மிடுக்கு இருக்கும். வீட்டு வாசலில் பித்தளை பில்லையை மார்பில் தாங்கிய டவாலி சேவகனும், அல்சேஷியன் நாய்க்குட்டியும் நிற்பார்கள். நாய்க்கும், டவாலிக்கும் ஒரு வித்தியாசம். நாய் சமயா சமயங்களில் வீட்டு எஜமானியம்மாளின் மடியில் ஏறி உட்கார்ந்து கிளாஸ்கோ பிஸ்கோத்தைச் சாப்பிட்டுக் கொண்டே காரில் சவாரி போகும். 'டவாலி'யால் அது முடியாது.

சிவப்பு நாடாவினால் இறுக்கிக் கட்டிய பைல்களின் ஆதிக்கம் இவர் கையில்தான். வெறும் காகிதங்களோடு பழகிப் பழகி இவருடைய மனம் மரத்துப் போய்விட்டது. இவர் ஆபீசுக்குப் போகும்போது பெரிய பைகள் தைத்த கோட்டை போட்டுக்கொண்டு போவார். திரும்பிவரும்போது இரண்டு பையும் நிறைந்து கலகலக்கும். புரிகிறதா? மேலதிகாரிகளை - மந்திரிகளை சட்டசபை உறுப்பினர்களை குளிப்பாட்டிக் குல்லாப் போடுவதில் மனிதர் மகா நிபுணர். இவருடைய மனைவி எல்லாப் பொது விழாவிலும் பரிசு வழங்குவதற்குப் போவாள். இவரும் சில கூட்டங்கள், திறப்பு விழாக்களுக்குத் தலைமை வகிக்கப் போவார். டென்னிஸ்கிளப், சங்கீத சமாஜம் எல்லாவற்றிலும் இவருக்கு ஓர் முக்கிய அங்கம் உண்டு.

ஏழாவது வீடு - அந்தத் தெருவிற்கே திருஷ்டிப் பரிகாரம் போலிருந்தது. வாயிற்புறத்து இருண்ட அறையிலிருந்து யாரோ காசநோக்காட்டுக்காரன் போல லொக்கு லொக்கென்று இருமிக் கொண்டிருந்தான். இதற்கு மேல் இப்போதைக்கு அந்த வீட்டைப் பற்றி வேறொன்றும் சொல்வதற்கில்லை. பாவம்! அந்த வீட்டிலிருப்பவன் அப்பாவிப் பயல். போனால் போகிறதென்று விட்டுவிடுவோம்.

கண்ணுக்கு எட்டாத இடத்தில் பரமண்டலங்களின் மேலான மண்டலத்திலிருந்து கொண்டு உலகைப் படைத்த கடவுள் ஒருநாள் தமது அந்தரங்கக் காரியதரிசியைக் கூப்பிட்டு,

"அப்பனே! பூவுலகத்திலுள்ள நகரங்களில் இப்போது வாழ்க்கை நிலை எப்படி இருக்கின்றது? யார் யார் பணக்கஷ்டமில்லாமல் வசதியாக வாழ்கிறார்கள்? உலகில் ஒழுக்கமும், அறமும் நலிந்து மக்களுக்குச் சத்தியத்தில் நம்பிக்கை குன்றி வருவதாக நான் அறிகிறேன். உலகத்தைச் சீர்திருத்தி நன்னிலைக்குக் கொண்டு வருவதற்கு ஒரு புதிய ஆயுதம் தேவை! அதை எங்கேயிருந்து, யாருடைய கையிலிருந்து நாம் தயாரிக்கலாம்?" - என்று பரபரப்போடு கேட்டார்.

"சுவாமி! இப்போது கிராமங்களெல்லாம் இடிந்த நலிந்து இருண்டு போய்விட்டன. நகர வாழ்க்கைதான் ஒளிபெற்று ஓங்கியிருக்கிறது. முற்காலத்தில்

கோவில் வாசலில் நின்ற கூட்டத்தைப்போல் நான்கு மடங்கு கூட்டம் இப்போது சினிமாக்கொட்டகைகளின் வாசலில் நிற்கிறது. கவிகள், ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள், விவசாயிகள், நெசவாளிகள் எல்லோரும் பட்டினி கிடந்து திண்டாடுகிறார்கள். விரல் விட்டு எண்ணிவிடக்கூடிய ஒரு சிலர்தான் வசதியாக வாழ்கிறார்கள்."

"மொத்தத்தில் சூழ்நிலை திருப்திகரமாக இல்லை; அப்படித்தானே?"

"திருப்திகரமாக இல்லாததோடு பணவளம் சில இடங்களிலேயே தொடர்ந்து தேங்கிப் போய் அழுகி நாற்றமெடுக்க ஆரம்பித்துவிட்டது. போட்டி, பொறாமை, வஞ்சகம், ஏமாற்று, சுயநலம், புகழ்வேட்டை, பதவிப்பித்து, எல்லாம் எல்லாருக்கும், எல்லா ஊர்களுக்குள்ளும் அதிகரித்துவிட்டன. உலகம் இதே நிலையில் போய்க் கொண்டிருந்தால் பட்டப் பகலில் நட்ட நடுத்தெருவில் காட்டு மிருகங்களைப்போல ஒரு மனிதன் இன்னொரு மனிதனை அடித்துத் தின்ன ஆரம்பித்துவிடுவான். ஒரு புதிய ஆயுதம் - உலகத்தைச் சீர்திருத்தும் ஆயுதம் வேண்டியதுதான்."

"புதிய ஆயுதம் வேண்டுமென்பதைத்தான் நானும் சொல்கிறேன். அதை எங்கே கண்டுபிடிப்பது?"

"தன்னைப் பற்றிக் கவலைப்படாமல், தன் வீட்டில் இல்லையே என்பதைப் பற்றிக் கவலைப்படாமல், உலகத்திலுள்ள ஏழைகளுக்காக நினைத்துப் பேசி, உழைக்க ஒரு மனமும், வாயும், இரண்டு கைகளும் தேவை! அந்தக் கைகள்தாம் உலகத்தைச் சீர்திருத்தும் புதிய ஆயுதம்."

"நல்லது! ஆனால் அந்தக் கைகளை நான் எங்கே போய்த் தேடுவேன்?"

கடவுளிடமிருந்து இந்தக் கேள்வி பிறந்தவுடனே அவருடைய அந்தரங்கக் காரியதரிசி பூவுலகத்தில் பட்டணத்தில் நாகரிகம் சுழித்தோடும் அந்த அகலமான வீதியிலிருந்த முதல் ஏழு வீடுகளையும் - தப்பு! தப்பு! ஆறு வீடுகளையும் ஏழாவது குடிசையையும் சுட்டிக் காட்டினார்.

"அங்கே என்ன இருக்கிறது?" கடவுள் ஏமாற்றத்தோடு கேட்டார்.

"இன்றைய சமுதாய அமைப்பின் தவிர்க்க முடியாத ஏழு உறுப்பினர்கள் அந்த ஏழு வீடுகளில் இருக்கிறார்கள். அவர்கள் ஏழு பேரில் யாராவது ஒருவரிடம் உங்களுக்குத் தேவையான சமதர்ம உலகைப் படைக்கும் புதிய ஆயுதம் கிடைத்தாலும் கிடைக்கலாம். போய்த் தேடிப் பாருங்கள்."

"ஐயோ! என்னைப் பட்டணத்துக்கா போகச் சொல்கிறாய்?" என்று பயந்து நடுங்கிக்கொண்டே கேட்டார் கடவுள்.

"ஏன் பயப்படுகிறீர்கள்? பட்டணத்திலும் நீங்கள் படைத்த மனிதர்கள்தானே வாழ்கிறார்கள்" என்று சிரித்துக் கொண்டே சொன்னார் அவருடைய அந்தரங்கக் காரியதரிசி.

கடவுள் வேறொருவர் காணாமல் உலகத்து உலாவும் மாய வடிவோடு புதிய உலகைப் படைக்கும் புதிய ஆயுதத்தைத் தேடிக் கொண்டு பட்டணத்துக்குப்

புறப்பட்டார். உயரமான ஆறு மாடி வீடுகளும் ஒரு குச்சு வீடும் இருந்த அந்த வீதிக்குள் ஆவலோடு நுழைந்தார்.

நடிகர் வீட்டுக்குள் அவர் நுழைந்தபோது, "கடவுளாம், கடவுள்! சுத்த மூடநம்பிக்கை" என்று ஏதோ ஒரு சினிமா படத்திற்கான வசனத்தை நெட்டுருச் செய்து கொண்டிருந்தார். கடவுள் பயந்து போய் 'இந்த இடத்தில் நமக்கு வேலை இல்லை' என்று ஓடி வந்துவிட்டார். நடிகருடைய வசனத்தைக் கேட்டு அவருக்கே பயம் உண்டாகிவிட்டது. அங்கே புதிய உலகைப் படைக்கும் ஆயுதம் கிடைக்காது என்று அவருக்குத் தோன்றிவிட்டது.

இரண்டாவதாக டாக்டரின் வீட்டுக்குப் போனார். டாக்டரின் கழுத்தில் தொங்கிய ஸ்டெதஸ்கோப்பைக் கண்டதும், "ஆ! கண்டுபிடித்துவிட்டேன். புதிய உலகைப் படைக்கும் புதிய கருவி கிடைத்துவிட்டது" என்று வியப்போடு கூவினார் கடவுள்.

ஆனால் அந்தோ பரிதாபம்! அருகில் நெருங்கிப் பார்த்தபோது, உயிர் அல்லாத அந்த இரப்பர்க் குழாயில் பல உயிர்களின் மரணச்சுவடுகள் பதிந்து கிடந்தன. "இதுவும் புதிய உலகைப் படைக்காது" - என்று ஏமாற்றத்தோடு வெளியேறினார் கடவுள்.

மூன்றாவதாக வக்கீல் வீட்டுக்குள் நுழைந்து அங்கிருந்த தடிமன் தடிமனான சட்டப்புத்தகங்களைப் பார்த்தபோது புதிய உலகத்தைப் படைக்கும் ஆயுதம் இந்தப் புத்தகங்களில் இருக்கலாம் என்று கடவுளுக்குத் தோன்றியது. ஒரு புத்தகத்தைப் பிரித்துப் படித்தார். 'உயிர்களைக் கொலை செய்வது இத்தனாவது பிரிவின்படி குற்றம்' என்று எழுதியிருந்த பக்கத்துக்குள்ளேயே மூன்று பாச்சை, நாலு ஈ, ஒரு பல்லிக்குட்டி எல்லாம் நசுக்கப்பட்டுக் காகிதத்தில் ஒட்டிக் கொண்டிருந்தன. கடவுள் அந்தப் புத்தகத்தை வீசி எறிந்துவிட்டுக் கோபமாக வெளியேறினார்.

வியாபாரியின் வீட்டுக்குப் போனார். அவருடைய தராசு முள் நிரந்தரமாக ஒரே பக்கம் வளைந்து கிடந்தது. அவர் ஏழைகளின் இரத்தத்தைப் பன்னீராக மாற்றித் தனது காதலிமார்களுக்குப் பூசிக் கொண்டிருந்தார்.

அங்கேயும் கடவுளுக்குப் புதிய உலகம் படைக்கும் ஆயுதம் கிடைக்கவில்லை.

புரொபஸரின் மூக்குக் கண்ணாடியைப் பார்த்ததுமே கடவுளுக்கு நம்பிக்கை போய்விட்டது. "இவர் சொந்தக் கண்களால் உலகத்தைப் பார்க்கத் தெரியாதவர். புத்தகங்களைத் தெரிந்த அளவு யதார்த்த வாழ்க்கை தெரியாது. இவரிடமும் புதிய ஆயுதம் இல்லை" என்று வெளியேறினார் கடவுள்.

சர்க்கார் உத்தியோகஸ்தர் யாரோ பெரிய வியாபாரியை இரகசியமாக வரச் சொல்லி வாசல் கதவைத் தாழிட்டுக் கொண்டு உள்ளே லஞ்சம் வாங்கிக் கொண்டிருந்ததனால் கடவுள் அந்த வீட்டுக்குள்ளேயே போகாமல் வாசலிலேயே காறித் துப்பிவிட்டுத் திரும்பினார்.

புதிய உலகைப் படைக்கும் புதிய ஆயுதம் முதல் ஆறு வீடுகளிலும் கிடைக்கவே யில்லை. நடிகரின் கலையில், டாக்டரின் ஸ்டெதஸ்கோப்பில், வக்கீலின் சட்டப் புத்தகத்தில், வியாபாரியின் தராசில், புரொபஸரின் மூக்குக் கண்ணாடியில், சர்க்கார் உத்தியோகஸ்தரின் பையில் - எங்கும் அந்த ஆயுதம் கிடைக்கவே இல்லை. ஏமாற்றம் என்ற 'உணர்ச்சியை' எந்தக் கடவுள் படைத்தாரோ அவருக்குப் பெரிய ஏமாற்றமாக இருந்தது. கடைசியாக அந்தக் குச்சு வீட்டின் வாசலுக்குப் போனார். இருமல் சத்தம் காதைத் துளைத்தது. உள்ளே ஒரு மெலிந்த உருவம் குனிந்து உட்கார்ந்து எதையோ எழுதிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். மறைந்து நின்று கவனித்தார். எழுதுகிறவனுக்கு முன்னால் அவரது மனைவி வந்து நின்று கூச்சல் போட்டாள்.

"பானையில் அரிசி இல்லை, டப்பாவில் காப்பிப் பொடி இல்லை, அஞ்சறைப் பெட்டியில் கடுகு இல்லை. மணி பர்ஸில் துட்டு இல்லை..."

"பேனாவில் மை இன்னும் கொஞ்சம் இருக்கிறது" என்று நறுக்கென அவளுக்குப் பதில் கூறிவிட்டு நிமிர்ந்து பாராமலே எழுதிக் கொண்டிருந்தான் அவன்.

"என்ன எழுதுகிறீர்களாம் அப்படி?"

"ஏழைகளின் துன்பத்தைப் பற்றிக் கவி எழுதுகிறேன்!"

மறைந்திருந்த கடவுள் சிறு குழந்தைபோல உணர்ச்சி வசப்பட்டுக் கை கொட்டினார்; சிரித்தார்; துள்ளிக் குதித்தார். "கண்டுபிடித்துவிட்டேன்! புதிய உலகைப் படைக்கும் புதிய ஆயுதத்தைக் கண்டுபிடித்துவிட்டேன்! அது இந்த நோஞ்சான் பயலுடைய கையில் அல்லவா இருக்கிறது!" - என்று வியப்பு மேலீட்டால் கூவிக் கொண்டே சிறிது சிறிதாகக் கரைந்து நீல நிற மையாக மாறி அந்த ஏழைக் கவிஞனுடைய பேனாவுக்குள் புகுந்து கொண்டார். கவி ஆவேசம் பிடித்தவனைப் போல் ஏழைகளின் துன்பத்தைப் பற்றி எழுதிக் கொண்டே இருந்தான். அவன் மனைவி அடுப்படியில் பசியோடு சுருண்டு விழுந்து கிடந்தாள். புதிய உலகைப் படைக்கும் புதிய ஆயுதம் வெள்ளைக் காகிதத்தைக் கறுப்பாக்கிக் கொண்டிருந்தது.

**(தாமரை, 1960)**

## 53. மினிஸ்டர் வருகிறார்

அவ்வளவு பெரிய பாக்கியத்தைத் தாங்கிக் கொள்ளுவதற்கு வாழவந்தான்புரம் ஒரு மேஜர் பஞ்சாயத்து ஊர்கூட அன்று; மிகச் சிறிய மைனர்ப் பஞ்சாயத்து கிராமம் அது! மினிஸ்டர் வருகிறார், ஐயா மினிஸ்டர்! எங்கே? எங்கேயாவது? வாழவந்தான் புரத்துக்குத்தான்.

'வரட்டுமே! மினிஸ்டர் என்ன பெரிய கொக்கா?' - என்று நீர் கேட்கலாம். பழைய காலத்து மனிதர் நீர்! தேர், திருவிழா, சாமி வருவதுதான் பெரிய பாக்கியம் என்று எண்ணுகிற தலைமுறையைச் சேர்ந்தவர் நீர். இந்தக் காலத்துக்கு அரசியல்தான் ஐயா பெரிய மதம். மினிஸ்டர் வருகிறாரென்றால் அதுவே ஒரு திருவிழா, தெரிந்து கொள்ளும்! என்ன, விழிக்கிறீர் இப்படி!

வாழவந்தான் புரத்துக்கு நாளைக்கு மினிஸ்டர் வருகிறார் ஐயா, மினிஸ்டர்! அதோ பஞ்சாயத்து போர்டுத் தலைவர் நாராயண பிள்ளை நெல்லுக்குதிர் உருள்கிற மாதிரித் தெருவில் அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருக்கிறாரே! அவருக்கு எத்தனையோ ஏற்பாடுகள். மினிஸ்டர் வருகிறார் என்றால் லேசுப்பட்ட காரியமா, என்ன? மேடு பள்ளமும் சேறும் சகதியும் நிறைந்த வாழவந்தான்புரத்துத் தெருக்களெல்லாம் அவசரம் அவசரமாகச் செப்பனிடப்பட்டன. வீதியில் ஏதோ திருமணம் நடக்கப் போவதுபோல் புது மணல் பரப்பினார்கள். தெருவெல்லாம் மாவிலைத் தோரணம், கொடிகளின் தோரணம் ஆகிய அலங்கார எற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. பத்தடித் தொலைவுக்கு ஒன்று வீதம் பிரம்மாண்டமான ஆர்ச் வளைவுகள் 'மினிஸ்டரை' வரவேற்க நின்றன. 'தன்னலங் கருதாத் தலைவரே வருக' 'சிந்தனைச் செல்வரே வருக' 'மக்கள் தொண்டரே வருக' என்று இவ்வாறு 'லோக்கல் பெயின்டர்' பரமசிவத்தின் இலக்கிய ஞானத்தில் உருவான நாலைந்து வரவேற்பு வாக்கியங்கள் நடுத்தெருவில் பல்லிளித்துக்கொண்டிருந்தன. ஆம்! நடுத்தெருவில் தான்.

கனம் மினிஸ்டர் வருகிறவரை அந்தப் பாதையில் நுழைந்து வருகிற கழுதைகூட அந்த வரவேற்பைத் தனக்கென்று எடுத்துக் கொள்ளலாம். வாழவந்தான் புரத்தில் இருந்த ஒரே ஒரு சிறிய பூக்கடையில் முதல் நாளிலிருந்தே பூவுக்குக் கிராக்கி எற்பட்டு விட்டது. பஞ்சாயத்து போர்டுத் தலைவரிலிருந்து பள்ளிக்கூடத் தலைமையாசிரியர் கள் வரை மினிஸ்டருக்குப் போட மாலைகள் வாங்கினார்கள். இன்னும் பிரமுகர்கள், ஏதோ ஒரு விதத்தில் மினிஸ்டருக்கு வேண்டியவர்கள், 'மினிஸ்டருக்கு மாலை போட்டுவிட்டு வந்தேன்' என்று பின்னால் பெருமையாகச் சொல்லிக் கொள்ள ஆசைப்பட்டவர்கள் - எல்லாருமே பூக்கடையில் முற்றுகையிட்டு விட்டால் பூ எப்படி மீதமிருக்கும்! பூக்கடை என்று பேர் சொல்லி மணக்க ஒரு பூக்கூட மீதமில்லை அங்கே.

தன் பேத்தி பெரிதாகிச் சடங்குக்கு ஏற்பாடு செய்திருந்த சன்னாசிப் படையாச்சியும், பெண்ணுக்குப் பூச்சூட்டு ஏற்பாடு செய்திருந்த சீமாவையரும், பூக்கடைக்குப் பூ வாங்க வந்துவிட்டு வெறுங்கையோடு வீடு திரும்பும்போது தங்களுக்குள் மினிஸ்டரை ஒரு பாட்டம் திட்டிக் கொண்டு போனார்கள்.

"ஐயரே! இந்த 'மினிஸ்டன்' இன்னிக்குப் பார்த்தா வந்து தொலைக்கணும்... ஊர்லே ஒரு நல்லது கெட்டதுக்குப் பூ இல்லாமலே எல்லாயிழவும் மாலை மாலைன்னு கொண்டு போயிடறாங்களே?"

படையாச்சிக்கு இருந்த கோபத்தில் 'மினிஸ்டர்' என்பதை அப்படியே சொன்னால் மரியாதை வந்துவிடும் என்று கருதி 'மினிஸ்டன்' என்று ஆக்கி மரியாதையைக் குறைத்து அச் சொல்லைப் பிரயோகம் செய்தார்.

"இறைந்து பேசாதீர் ஐயா! உம்மை எவனாவது திட்டப் போகிறான்! முதல் தடவையாக வாழவந்தான்புரத்துக்கு மினிஸ்டர் வருகிறார்..." என்ற சீமாவையரை இடைமறித்து,

"அதுதானே? மழைகூட இனிமே நின்னுப்பிடும்! மினிஸ்டர் வந்திடுறாரில்லே?" என்று கிண்டலில் இறங்கினார் படையாச்சி.

அப்புறமென்ன? பூ இல்லாமலே ஐயர் வீட்டில் பூச்சூட்டு நடந்தது. கண்ணுக்குக் கண்ணான அருமைப் பேத்திக்கு ஒருச்சாண் பூக்கூட வைக்க முடியாமல் பூப்புச் சடங்கு நடந்தது படையாச்சி வீட்டில்.

சும்மாவா? மினிஸ்டர் வருகிறார் ஐயா, மினிஸ்டர் வருகிறார். முதல்நாள் இரவு பஞ்சாயத்து போர்டு கட்டிடத்தில் மினிஸ்டரை எப்படி வரவேற்பது என்பது பற்றி ஓர் ஆலோசனைக் கூட்டம் நடந்தது. ஊர்ப் பிரமுகர்களும், முக்கியமான ஆட்களும், கூட்டத்துக்கு வந்தார்கள். ஊர் எல்லையில் மினிஸ்டரின் கார் நுழைகிறபோதே பூரண கும்பத்தோடு எதிர்கொண்டு வரவேற்க வேண்டும் என்றார் கோவில் குருக்கள். 'பூரணகும்பம்' என்கிற ஓர் அம்சத்தினால்தான் தாம் மினிஸ்டருக்கு மிக அருகிலே போய்ச் சில விநாடிகள் நிற்கலாம் என்பது குருக்களின் எண்ணம்.

மினிஸ்டர் பேசும் இடத்தில் கூட்டம் அதிகம் காணப்படவேண்டும் என்பதற்காகவும் மினிஸ்டருக்குப் பூக்கள் தூவி வரவேற்பதற்காகவும் பள்ளிச் சிறுவர் சிறுமியரை ஏற்பாடு செய்திருந்தார்கள். புது வாத்தியாரும், பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளும்தான் வெயிலில் திணறினார்கள். நேரம் வளர்ந்து கொண்டே இருந்தது.

மினிஸ்டர் அவர்களும் வரவில்லை. வெயிலும் குறையவில்லை. புது வாத்தியார் மிகவும் நல்லவர். அவர் துணிவாக ஒரு காரியம் செய்தார். ஹெட்மாஸ்டரிடம் போய், "சார்! வெயில் கொடுமை தாங்க முடியவில்லை. குழந்தைகளெல்லாம் கால் பொரிகிறதென்று நிற்கமாட்டாமல் தவிக்கிறார்கள்" என்றார். இதைக் கேட்டு முகத்தைச் சுளித்து, "நாம் என்ன செய்யலாம்? மினிஸ்டர் இன்னும் வரவில்லையே!" என்று பதில் சொன்னார் ஹெட்மாஸ்டர். புது வாத்தியார் மேல் ஹெட்மாஸ்டருக்கு

அவ்வளவாகப் பிரியம் கிடையாது. காரணம், புது வாத்தியார் இளைஞர். உயரமாகச் சிவப்பாகப் பார்க்க இலட்சணமாயிருப்பார். குழந்தைகளிடம் அன்பாக நடந்து கொள்வார். அதனால் அவருக்கு மாணவ மாணவிகளிடம் ஹெட்மாஸ்டருக்கு இருந்ததைவிட அதிக மதிப்பு இருந்தது. புது வாத்தியார் மேல் ஹெட்மாஸ்டருக்குப் பொறாமை இருந்ததற்கு இதுதான் காரணம். ஹெட்மாஸ்டர் கிழடு. 'சிடுசிடு' என்று முன் கோபத்தில் எரிந்து விழுவார். பார்க்கவும் இலட்சணமாக இருக்கமாட்டார்.

இதற்குள் ஒரு சிறு பெண் குழந்தை வெயில் பொறுக்க முடியாமல் மயக்கம் போட்டுக் கீழே விழுந்துவிட்டது. புது வாத்தியார் ஓடிப்போய் ஏதோ இறவைக் கிணற்றில் மேல் துண்டை நனைத்துக் கொண்டு வந்து தண்ணீரை முகத்தில் பிழிந்து மயக்கம் தெளிவித்தார். வெயில் என்றால் அப்படி இப்படி இல்லை. மினிஸ்டருக்காகவே காய்கிற மாதிரிக் கடுமையான வெயில் தகித்தது.

பகல் மணி பன்னிரண்டு. மினிஸ்டர் இன்னும் வரவில்லை. புது வாத்தியார் மறுபடியும் ஹெட்மாஸ்டரை அணுகிக் கேட்டார். "பள்ளிக்கூடத்தில் படிக்கத்தான் குழந்தைகள் வருகின்றன, மந்திரியைப் பார்க்க அல்ல" என்று கடுமையாகச் சொன்னார்.

"உம்மை யாரும் கேட்கவில்லை! மினிஸ்டர் வருவதற்கு முன் ஒரு அடிகூட நகர முடியாது. பேசாமல் போய்க் குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு நில்லும்" என்று ஹெட்மாஸ்டர் புது வாத்தியாரிடம் சீற்றத்தோடு எரிந்து விழுந்தார்.

புது வாத்தியார் துணிச்சல்காரர்! அவருக்கு மட்டும் ரோஷம் வராதா, என்ன?

"நீங்கள் வேண்டுமானால் நின்று கொண்டிருங்கள். என் வகுப்புக் குழந்தைகளை அழைத்துக்கொண்டு நான் பள்ளிக்கூடத்துக்குப் போகிறேன். என்னால் இந்தப் படுபாதகத்தைப் பார்த்துக்கொண்டு இருக்க முடியாது."

"நீர் அத்துமீறிப் பேசுகிறீர்! உம்மைத் தொலைத்துவிடுவேன் தொலைத்து!"

"தவறு சார்! நான் அத்துமீறிப் பேசவில்லை. நியாயத்தைச் சொல்கிறேன். பச்சைக் குழந்தைகள் தண்ணீர்த் தாகத்தோடு கால் பொரிந்து கொப்புளமாகும்படி வெயிலில் நிற்கின்றன. ஆசிரியன் மந்திரியின் வேலையாள் இல்லை, குழந்தைகளின் தந்தை."

"உம்முடைய தத்துவத்தை உடைப்பில் கொண்டு போய்ப் போடும்..."

"கோபித்துக் கொண்டு பயனில்லை சார்! நாம் படிப்புச் சொல்லிக் கொடுக்கத்தான் இந்தக் குழந்தைகளை வரவழைக்கிறோம். மந்திரிக்குக் கூட்டம் வரவில்லையே என்பதற்காக இழுத்துக் கொண்டு வந்து நிறுத்துவதற்கு அல்ல!"

ஹெட்மாஸ்டர் புது வாத்தியாரை எரித்துவிடுவது போல் முறைத்துப் பார்த்தார்.

புது வாத்தியார் பயப்படவில்லை. பையன்கள் நின்றுகொண்டிருந்த இடத்துக்குப் போய் விவரத்தைச் சொல்லிப் பள்ளிக்கூடத்துக்குத் திரும்புமாறு அழைத்தார். தன்னுடைய கிளாஸ் பிள்ளைகளை மட்டும்தான் அவர் கூப்பிட்டார். ஆனால்

ஏறக்குறைய எல்லாருமே வந்துவிட்டார்கள். "போகாதீர்கள்! போனீர்களோ தொலைத்துவிடுவேன்" என்று ஹெட்மாஸ்டர் மிரட்டினார். அவருடைய மிரட்டலைப் பையன்கள் பொருட்படுத்தவில்லை. புது வாத்தியார் பின்னால் பையன்களில் முக்கால் வாசிப் பேர் நடந்துவிட்டார்கள். பயந்த சுவாவமுள்ள சில பையன்களும், பெண்களும், மட்டும் நின்றுகொண்டிருந்தனர்.

"என்ன சார் இது? பையன்களெல்லாம் திரும்புகிறார்கள். கூட்டம் இல்லாவிட்டால் மினிஸ்டரை அவமானப்படுத்தின மாதிரி இருக்குமே?" என்று ஹெட்மாஸ்டரிடம் கேட்டார் பஞ்சாயத்துத் தலைவர்.

"இந்தப் புதுவாத்தியார் அயோக்கியன் சார்! என்னமோ சொல்லிப் பையன்களை அழைத்துக் கொண்டு போகிறான். இவனைத் தொலைத்தால்தான் ஸ்கூல் உருப்படும்!" ஹெட்மாஸ்டர் கொதிப்புற்ற குரலில் அங்கே கூடியிருந்த எல்லாப் பிரமுகர்களுக்கும் கேட்கும்படி இவ்வாறு பஞ்சாயத்துத் தலைவருக்குப் பதில் கூறினார். எல்லோரும் புதுவாத்தியார் மேல் தாங்க முடியாது கோபமுற்றனர். 'அவன்... ஸ்ட் கட்சிப் பயலாம் சார்' என்று மேலும் வெடி வைத்தார் ஹெட்மாஸ்டர். புது வாத்தியாரை அடித்து நொறுக்க வேண்டும் போல் எல்லோருக்கும் கோபம் குமுறிற்று.

ஒரு வழியாக மினிஸ்டர் வந்தார். பூரண கும்பத்தை வாங்கினார். அவர் அதற்கு முன் பூரண கும்பம் வாங்கிப் பழக்கமில்லையாதலால் குடத்துக்கு மேலிருந்த தேங்காயைத் தூக்கிப் பார்த்தார். அவருக்கு எதையும் உள்ளே திறந்து பார்த்துத்தான் வழக்கம். 'மினிஸ்டர்' என்றால் பின் வேறு என்ன அர்த்தமாம்?

எல்லாம் தடபுடலாக முடிந்தன. வாழவந்தான்புரத்தில் சூரியன் அஸ்தமிக்கிறபோது மினிஸ்டரைப் பார்த்துவிட்ட பெருமிதத்தோடு அஸ்தமித்தான்.

சாயங்காலம் வீட்டுக்குத் திரும்பின அம்பியை அம்மா கேட்டாள் : "என்னடா மந்திரி வந்தாராமே, என்ன விசேஷம்?"

"போம்மா! மினிஸ்டர் இனிமே இந்த ஊருக்கு வரவே வேணாம். மினிஸ்டர் வந்தார்; புது வாத்தியாரை டிஸ்மிஸ் செய்துவிட்டார்கள். புது வாத்தியார் ரொம்ப நல்லவர் அம்மா" என்று அழுது விடுகிறாற் போன்ற குரலில் சொன்னான் அம்பி. ஆம்! அன்று ஒவ்வொரு பையனும் புது வாத்தியாருக்காக வாழவந்தான்புரத்தில் அழுதிருப்பான்.

**(தாமரை, 1960)**

## 54. உண்மைக்கு ஒரு நிமிஷம்

'திடீரென்று காலமே முடமாகி இயக்கமற்றுப் போய் விட்டதா? சுற்றி இருக்கிற எல்லாரும், எல்லாமும், அலட்சியமாக, மந்தமாக மெல்லவும், சுறுசுறுப்பின்றியும் இயங்கிக் கொண்டிருப்பது போல் தோன்றுகிறதே. குளிர் சாதன வசதி செய்யப்பட்ட இந்த அறையில்கூட என் உடம்பிலும் நெஞ்சிலும், ஏன் இப்படி வெம்மை கனல்கிறது? சே! சே! இப்படி எதனாலும் சமாளிக்க முடியாத ஒரு வறட்சி இதற்கு முன் ஏற்பட்டதே இல்லை. இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் 'திருமகள் புரொடக்ஷன்ஸில்' இப்படி ஒரு பொருளாதார முட்டுப்பாடு வந்ததே கிடையாது. பொய்யோ, புரட்டோ, எதையாவது சொல்லி எதையாவது செய்து பணம், எவ்வளவு பெரிய தொகையானாலும் தயார் செய்த சாமர்த்தியம் இன்று பலிக்க வில்லையே!'

உள்ளத்தில் எள்ளத்தனை இடத்திலும் நிம்மதியில்லாமல் இந்தக் கழிவிரக்க நினைவுகள் புரள இன்னும் சிறிது நேரத்தில் டெலிபோனிலும் நேரிலும் வந்து விரட்டப் போகிறவர்களுக்கு என்னென்ன பொய் சொல்லிச் சமாளிப்பது? எப்படி எப்படிச் சாக்குப் போக்குக் கூறி அனுப்புவது? - என்று சிந்தித்துக் கொண்டே குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண்டிருந்தார் திருமகள் புரொடக்ஷன்ஸ் அதிபர் பொன்னுரங்கம். நெற்றியில் வரி வரியாய்ச் சுருக்கங்கள். கண்களில் தூக்கமும், அமைதியும் துறந்து சோர்ந்த கலக்கம். நெஞ்சின் ஏலாமையும், ஆற்றாமையும் நிழலாக வந்து படிந்தாற்போல் உணர்ச்சி செத்த முகம். அதில் களையும் இல்லை, 'கலை'யும் இல்லை.

இந்தப் பன்னிரண்டு வருடங்களாகக் கை நிறையப் பிரமாதமான முதலீடு எதுவும் வைத்துக்கொண்டு படத் தயாரிப்புத் தொழிலை வெற்றிகரமாக நடத்திவிடவில்லை அவர். எல்லோரும் வெளியில் பேசிக் கொள்கிற மாதிரி அவர் ஒரு 'சந்தர்ப்பவாதி' (ஆபர்சூனிஸ்ட்). சமயோசித புத்தியும், சந்தர்ப்பம் தெரிந்து நடந்து கொள்ளும் திறமையும் தான் அவரை ஆளாக்கி வளர்த்தவை. சொந்தப் பொருள்பலம் என்று தனியாக எதுவும் எப்போதும், அவரிடம் இருந்ததில்லை. அவரிடம் இருந்த ஒரே பலம் பிரபலம் தான். அதனால்தானோ என்னவோ பிரபல சினிமா டைரக்டர், பிரபல திரைப்பட அதிபர் என்று அவர் பேருக்கு முன்னால் பிரபலம் பலமாக ஒட்டிப் பிடித்துக் கொண்டிருந்தது. பிறபலம், பிறர்பலம் என்று அதற்குப் பாடபேதங்கள் உண்டாக்கினாலும் பொன்னுரங்கத்துக்குப் பொருத்தமாக இருக்கும்தான்.

அங்கே இங்கே பணம் புரட்டி நிரந்து கொண்டு படத்தை முடித்து விட்டுவிட்டால் வசூல் தொகையில் பழைய கடன்கள் அடையும்; புதிய கடன்கள் உண்டாகும். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' - என்று பெரியவர்கள் பாடி

இருந்ததைச் சற்றே மாற்றி 'என் பணி கடன் செய்து கிடப்பதே' - என்று கடைப்பிடித்துக் கொண்டிருந்தார் திருவாளர் பொன்னுரங்கம் அவர்கள். கொஞ்சம் வெளிப்படையாகச் சொல்லப்போனால் இந்தப் பன்னிரண்டு வருட காலமாகச் சினிமாத் தொழிலை வெற்றிகரமாக நடத்தியது அவரல்ல. அவரது பொய் சொல்லும் திறமைதான். இலட்சுமி கடாட்சமும், நல்வினையும் துணையாக இருந்த வரை அவர் சொல்லிய பொய் புரட்டுக்களெல்லாம் உண்மைகளாக நம்பப்பட்டு வெற்றியை அமோகமாகத் தேடித் தந்தன. இலட்சுமி கடாட்சமும், நல்வினையும் கழிந்த பிறகு அவர் சொல்லிய உண்மைகளைக் கூடப் பொய்களாக நம்பி இன்று ஒவ்வொருவராக அவரைக் கைவிடத் தொடங்குகிறார்கள். 'அதிர்ஷ்டம்' என்று சொல்கிறார்களே, அது இப்படிப்பட்டதுதான் போலிருக்கிறது.

உலவுவதில் சலிப்புற்று நாற்காலியில் உட்கார்ந்தார் பொன்னுரங்கம். கைகள் தாமாகவே கன்னத்தில் ஊன்றிக் கொள்கின்றன. பெருமூச்சு வருகிறது. எதிர்ச் சுவரில் தாமரைப்பூமேல் நிற்கிறாற்போல் வரைந்த பெரிய இலட்சுமி படம். திருமகள் புரடெக்ஷன்ஸின் சின்னம் அது. படத்திலிருக்கிற திருமகளே தன்னைப் பார்த்து வாய் கொள்ளாமல் கேலி பண்ணிச் சிரிக்கிறாளோ எனப் பிரமை உண்டாகிறது அவருக்கு. பூவை மிதித்துக் கொண்டு நிற்கிற தெய்வம் அவர் மனத்தையே மிதிக்கத் தொடங்கு கிறதா? என்ன? பூஜை போட்டுத் தொடங்கிய மூன்று படங்கள் அரைகுறையாக முடிக்கப் பொறாமல் பிலிம் சுருளாய் டப்பாக்களில் தூங்குகின்றன. முன்பணம் கொடுத்திருந்த டிஸ்டிரிபியூட்டர்கள் விரட்டிக் கொண்டிருக்கிறார்கள். நடிகர்களிடம் கால்ஷீட் கிடைக்கவில்லை. 'பைனான்ஷியர்' யாரும் கடன் பணத்துக்குச் சிக்கவில்லை. படங்களுக்கு விளம்பரம் செய்த 'பப்ளிசிடி' கம்பெனிக்காரர் 'பில்' அனுப்பியிருக்கிறார். வெளியில் சொன்னால் வெட்கக் கேடு! சர்வீஸுக்குக் கொடுத்திருந்த காரை பில் கட்டித் திருப்பி எடுத்துக் கொண்டு வரக்கூடப் பணமில்லை அவரிடம். ஆள் மட்டும் சுகமாய் ஏர்கண்டிஷன் அறையில் இருக்கிறார்.

"கார் ரெடி! சர்வீஸ் முடிந்து தயாராயிருக்கிறது. ஆள் அனுப்பி 'பில்' கட்டி எடுத்து கொண்டு போகலாம்" என்று மோட்டார்க் கம்பெனியிலிருந்து போனில் கூறிவிட்டார்கள். "எனக்குக் காரைப் பற்றியே நினைவில்லை சார்! படப்பிடிப்பில் மும்முரமா இருக்கிறேன். வெளிப்புறக் காட்சிகள் படமாக்க இன்று உதக மண்டலம் போகிறேன். அங்கிருந்து பெங்களூர் போக வேண்டும். நேரமே இல்லை. காருக்கு இப்போது என்ன அவசரம்? திரும்பியதும் பார்க்கலாம்" - என்று டெலிபோனில் பொய் சொல்லி மோட்டார் கம்பெனிக்காரனைச் சமாளிக்கிறார். படப்பிடிப்பாவது? வெளிப்புறக் காட்சியாவது? இங்கேதான் எல்லாம் வறண்டு போய்க் கிடக்கிறதே! பணத்தைப் பிடித்தால் அல்லவா படத்தைப் பிடிக்கலாம்?

'பொய் என்று ஒன்று இருக்கிறதே; என்னைப் போன்றவர்களுக்குப் பெரிய வரப்பிரசாதம் அது. இத்தனை காலமாக இந்தத் தொழிலுக்கு நான் போட்ட முதலீடு அது தானே?' - என்று மனத்தில் அற்ப மகிழ்ச்சி சுரக்கிறது. பொன்னுரங்கம் நிமிர்கிறார். இலட்சுமி படம் சிரிக்கிறது.

"பூவை மட்டும் மிதித்துக்கொண்டு நில்; போதும். என் மனத்தையும் மிதிக்காதே!"

குளிர் சாதன அறையின் கண்ணாடிக் கதவு திறக்கிறது. அவர் தலை மட்டும் நிமிர்கிறது. வேலைக்காரப் பையன் தலையை உள்ளே நீட்டுகிறான். சொல்கிறான் :

"சார் கலைச்சுடர் கந்தப்பன் உங்களைப் பார்க்க வந்திருக்கிறார். ஆள் ரொம்பக் கோபமாக வந்திருக்கிறார் போல் தெரியுது."

"இங்கே வரச் சொல்லு."

'தெரிந்ததுதானே? நான் நேற்றுக் கொடுத்த 'செக்' 'டிஸ்ஆனர்' ஆகிப் பாங்கிலிருந்து 'ரெபர் டு டிராயர்'னு திரும்பி இருக்கும். என்ன பொய் சொல்லிச் சமாளிக்கலாம்?' - ஒரு கணம் சிந்தனை. இரசிகர்களிடம் கலைச்சுடர் பட்டம் பெற்ற நடிகவேள் கந்தப்பன் கோபமாக அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வருகிறார். நடிகரின் அழகு முகத்தில் ஒரே சீற்றம் காணப்படுகிறது.

"திருமகள் புரொடக்ஷன்ஸாமில்லே, பேரைப் பாரு பேரை! வாசல்லே இருக்கிற போர்டைக் கழட்டி எறிஞ்சிட்டு 'மூதேவி புரொடக்ஷன்ஸ்'னு எழுதி மாட்டுங்க......" வில்லன் போல் கொதித்து இரைகிறார் கதாநாயக நடிகர்.

'செக்' கசக்கி எறியப் படுகிறது; பொன்னுரங்கத்தின் மூஞ்சியில் வந்து விழுகிறது.

"ஏது ஒரேயடியாகக் கோபப்படறீங்க கந்தப்பன்?.... அதுலே பாருங்க... பாங்கிலே பணத்தைக் கட்டிப்பிட்டு அப்புறம் உங்களுக்குச் 'செக்' போடச் சொல்லி இருந்தேன். இந்தப் பசங்க மெத்தனமா இருந்திட்டாங்க....." - பொன்னுரங்கம் சிரித்து மழுப்புகிறார். 'பொய்! பொய்! பன்னிரண்டு வருட அனுபவத்தில் பழுத்த பொய்!' - என்று அவருடைய மனச்சான்று உள்ளே இடிக்கிறது. வாய் சாமார்த்தியமாகப் பொய் சொல்லி வந்த ஆளைச் சமாளிக்கிறது.

"டேய் பையா! கந்தப்பன் சாருக்கு நல்ல ஆப்பிள் ஜூஸா......"

"எனக்கு ஆப்பிள் ஜூஸ் வேண்டாம்! செல்லுபடியாகிற மாதிரி என் பணத்துக்கு ஒரு 'செக்' தந்தால் போதும்."

"அதுலே பாருங்க.... கந்தப்பன்! நீங்க நம்ம தமிழ் நாட்டுக்கே புகழ் தேடித் தருகிற பெரிய நடிப்புச் செல்வர். அசந்தர்ப்பமா நம்ம புரொடக்ஷன்ஸ் ஆபீசிலே இருக்கிற பசங்க இப்படிப் பண்ணிட்டாங்களேன்னு எனக்கும் மன வருத்தம்தான்."

"வருத்தப்பட்டு என்ன செய்யறதுங்க. கலைஞனை மதிக்கணும்..... இது மாதிரி....."

"உண்மை! நீங்க சொல்கிறதைத்தான் நானும் இந்தப் பன்னிரண்டு வருஷமாச் சொல்லிக்கிட்டு வரேன். கலைஞனுக்குப் பணம் பெரிசில்லே.... மதிப்பளிக்கணும்."

'அட பாவி! பேச்சை என்ன அற்புதமாக மாற்றிக் கொண்டு போகிறாய்' என்று உள்ளே குமுறுகிறது மனச்சாட்சி - அவருடைய மனச்சாட்சியேதான்.

அரைமணி நேரம் என்ன என்னவோ பேசிச் சாக்குப் போக்குச் சொல்லி ஆப்பிள் ஜூஸையும் குடிக்கச் செய்த பின் நடிகர் கந்தப்பனை அனுப்பி வைக்கிறார்

தயாரிப்பாளர் பொன்னுரங்கம். சமாளித்து அனுப்புகிற சாமார்த்தியத்தில் தான் மன்னாதி மன்னனாயிற்றே அவர்.

டெலிபோன் மணியடிக்கிறது. எடுத்துப் பேசுகிறார். “ஹலோ.... வணக்கம் சார். பப்ளிசிடி பில்தானே? அதுலே பாருங்க... இன்னிக்கு வெள்ளிக்கிழமை. தம்பிடி காசானாலும் வெள்ளிக்கிழமையன்னிக்கி நான் செக் புஸ்தகத்தைத் தொடறதே இல்லை. வெள்ளிக்கிழமை வீட்டு லட்சுமி வெளியேறப் படாதுன்னு ஐதீகம். நாளைக்குச் சனிக்கிழமை; பாங்கு அரை நாள்தான். உங்களுக்குத் திங்கள் கிழமை ‘செக்’ அனுப்பிடறேன். ஒண்ணும் மனசுலே வச்சுக்காதீங்க... ரைட்டோ... திங்கள் கிழமை கண்டிப்பா...”

டெலிபோனை வைத்துவிட்டு நிமிர்கிறார். எதிரே இலட்சுமி படம். ‘சே! சே! ஒரு நிமிஷம்கூட உண்மை பேசவிட மாட்டாங்க போலிருக்குதே? நல்ல கழுத்தறுப்பு இது. எங்காவது ஓடிப் போயிடலாம் போலல்ல இருக்கு? கார் இருந்தாலாவது பெங்களூர் போய் இரண்டு நாட்கள் நிம்மதியா இருந்துட்டு வரலாம். அதுவும் ‘செர்வீசு’க்குப் போய் மாட்டிக்கிட்டிருக்குது; பெரும தொல்லையாப் போச்சு. இந்தத் தடவை கரையேற முடியாது போலிருக்கு’ - என்று மனம் தவிக்கிறது. கைவிரல்கள் தலைமயிரைக் கலைத்துவிட்டுக் கொள்கின்றன. மூக்குக்கண்ணாடியைக் கழற்றி மேஜை மேல் போடுகிறார். கண்ணாடி இருந்தபோதைவிட இப்போது இன்னும் அதிகமாகக் குரூரம் காட்டுகிறது முகம்.

எதிரே மேஜை மேலிருந்த பின் குஷனில் ஒவ்வொரு குண்டூசியாக இழுத்து இழுத்துச் சொருகுகிறார். அது அலுத்ததும் கட்டைவிரல் நகத்தைக் கடிப்பதில் சிறிது நேரம் கழிகிறது. சுவர்க்கடிகாரம் பதினொரு தடவை அடிக்கிறது. எத்தனை மணியானால் என்ன? ‘ஏர்கண்டிஷன்’ அறையில் வெயிலா உறைக்கப் போகிறது?

மறுபடியும் டெலிபோன் மணி. “ஹலோ.... யாரு.... ஓ! ஹரிணி ஸ்டூடியோவா? உங்க ‘பில்’தானே? ‘மண்டே’ அன்னிக்கிச் ‘செக்’ அனுப்பறேன்... என்னது? இன்னிக்கேயா... இல்லே...., இம்பாஸிபிள். முடியாது அர்ஜண்டா இன்னிக்கு நான் பெங்களூர் போகணும்... செக் எழுதச் சொல்லலாம்னாக்கூட இங்கே ஆபீசிலே யாரும் இல்லே. எனக்காக ரெண்டு நாள்.... ரெண்டே நாள் பொறுத்துக்குங்க. மண்டே அன்னிக்கி ஷ்யூரா அனுப்பிடறேன். தேங்யூ சார்...”

டெலிபோனை வைத்துவிட்டு மறுபடியும் குறுக்கும் நெடுக்கும் உலவுகிறார். ‘அவன் சொல்லிவிட்டுப் போனபடி தான் செய்யணும். திருமகள் புரொடக்ஷன்ஸாகவா இருக்கிறது இது? மூதேவி புரோடக்ஷன்ஸ் மாதிரிதான் ஆகிவிட்டது’ என்று எரிச்சலோடு முணுமுணுத்துக் கொள்கிறார். ஒரே தலைவலி. மண்டை வெடித்துவிடும்போல் குடைகிறது. காலையிலிருந்து ஒவ்வொன்றாகப் புளுகியிருக்கிற எல்லாப் பொய்களும் ஒன்று சேர்ந்து மண்டையில் போய்ச் சுமந்துகொண்டு கனக்கிற மாதிரி ஒரு வேதனை. ஒரே ஒரு நிமிஷம் யாராவது அந்தரங்கமான மனிதரிடம் உண்மையை எல்லாம் சொல்லி அழுதுவிட்டால்தான்

கனம் குறையும்போல ஒரு தவிப்பு உள்ளே உறுத்துகிறது. பன்னிரண்டு வருஷத் திரையுலக வாழ்வில் முதல் முறையாக ஏற்படுகிற பலவீனம் இது! இப்படி ஒரு தவிப்பு கடந்த பன்னிரண்டு ஆண்டில் ஒரு விநாடிகூட, கனவில்கூட அவருக்கு வந்தது இல்லை. எப்போதும் தைரியம்தான். எப்போதும் சமாளிக்கிற ஆற்றல் குன்றியதில்லை. கையில் பைசா இல்லாமல் வார்த்தைகளை அள்ளி வீசியே ஆட்களை வசப்படுத்தி இலட்சம் இலட்சமாகக் கறந்து படங்களை முடித்து வெற்றிவாகை சூடியிருக்கிறார். இன்று முதல் தடவையாக மயங்கி, மருண்டு, மலைக்கிறது அவர் உள்ளம்.

முதல் முதலாக இலட்சுமி படத்தை நோக்கிக் கதறுகிறது அவர் மனம்.

“பூவை மட்டும் மிதி! என் மனத்தை மிதிக்காதே, என்னால் பொறுக்க முடியாது.”

“சார்.....!” பையன் தலையை நீட்டுகிறான்.

“யாரோ ஒரு கிழவர் கொஞ்ச வயசுப் பெண் ஒருத்தியையும் இட்டுக்கினு வந்திருக்காரு. உங்களைப் பார்க்கணுமாம்.”

“யார்ராது?”

“தெரியலீங்க....”

பொன்னுரங்கமே ஏர்கண்டிஷன் அறைக்குள்ளிருந்து வெளியே வருகிறார். அழகான இளம் பெண் ஒருத்தி நன்றாக அலங்கரித்துக் கொண்டு நிற்கிறாள். பக்கத்தில் கிழிசல் சட்டையும் முதுமைக் கோலமுமாக ஒரு கிழவர் நிற்கிறான். அவரைக் கண்டதும் பயபக்தியோடு கைகூப்பி வணங்குகிறார்கள் இருவரும். பெண் நல்ல களை. தெய்வீக இலட்சணம். உள்ளறையிலிருக்கும் இலட்சுமி படமே பெரிதாகி உயிரும் வடிவும் பெற்று வந்து எதிரே நிற்கிறாற்போல் அவள் நின்றாள். பொன்னுரங்கம் அதட்டிக் கேட்கிறார் :

“என்ன வேணும்? எங்கிருந்து வர்ரீங்க?”

“சார் கொஞ்சம் தயவுபண்ணுங்க. நீங்க கண்திறந்தா எங்க குடும்பத்துக்கு விடியும். மதுரையிலிருந்து ரயில் சார்ஜுக்குக் கடன் வாங்கிட்டு நம்பிக்கையோடு வந்திருக்கோம். உங்க நண்பர் சிபாரிசுக் கடிதம் கொடுத்திருக்கார்.”

பொன்னுரங்கம் அலட்சியமாகக் கடிதத்தை வாங்கிப் பிரிக்கிறார். கடிதம் அவருக்குப் பல முறை பண உதவி செய்திருக்கும் ஒரு பெரிய மனிதரிடமிருந்து கொடுக்கப் பட்டிருந்தது.

‘இந்தக் கடிதம் கொண்டு வரும் கந்தசாமி என்பவர் மிகவும் ஏழை. பெரிய குடும்பஸ்தர். எட்டுப் பெண்களுக்குத் தகப்பன். சிரம ஜீவனம் நடத்துகிறார். இவருடைய மூத்த பெண்ணுக்கு டான்ஸ், பாட்டு, எல்லாம் நன்றாக வரும். பார்க்கவும் லட்சணமாயிருப்பாள். இங்கே சில நாடகங்களில் கூட நடித்து நல்ல பேர் வாங்கியிருக்கிறாள். எனக்காக இந்தப் பொண்ணுக்குச் சினிமாவில் நடிக்க ஒரு சான்ஸ் கொடுத்து முன்னுக்குக் கொணர்ந்தாயானால் பெரியதும் உபகாரமாயிருக்கும்’

என்று சிபாரிசுக் கடிதம் கொடுத்திருந்தார் பொன்னுரங்கத்தின் நண்பர். அவருக்கு அதைப் படித்தும் அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.

அந்தப் பெண்ணை மீண்டும் பார்க்கிறார். அவள் அழகாகச் சிரிக்கிறாள், இலட்சுமி படமே சிரிக்கிற மாதிரி.

காலையிலிருந்து பொய் பொய்யாகச் சொல்லி வறண்டு போயிருந்த அவர் உள்ளத்தில் சொல்ல முடியாத தவிப்புச் சேர்ந்து சுமந்து போய்க் கனத்ததே, அந்தக் கனத்தை எல்லாம் தன் சிரிப்பினால் கரைக்கிறாளா இந்தப் பெண்?

பொன்னுரங்கம் தமக்குள் சிரித்துக் கொள்கிறார். "பெரியவரே! ஒரு நிமிஷம் நீங்கள் மட்டும் இப்படி என்னோடு உள்ளே வாருங்கள்" என்று கிழவனை மட்டும் அழைத்துக் கொண்டு பொன்னுரங்கம் ஏர்கண்டிஷன் அறைக்குள் போகிறார். கிழவனுக்கு முகம் கொள்ளாமல் சிரிப்பும் குழைவும், நம்பிக்கையும் தோன்றி மலர்கிறது.

"அப்படி உட்காரும்...."

கிழவன் உட்காருகிறான். குளிர்சாதன அறைக்குள் நுழைவது கிழவனின் வாழ்வில் அதுவே முதல் தடவை.

"பெரியவரே! இந்த நிமிஷம் நான் சொல்கிற உண்மையை உயிருள்ள வரையில் மறக்க மாட்டேன் என்று சபதம் செய்வீரா?"

கிழவன் மருள்கிறான். அவனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"நீங்க எது சொன்னாலும் சரிங்க...."

"உம் பெண்ணைச் சினிமாவில் சேர்க்கிற எண்ணத்தை விட்டு விடும். ஊருக்குத் திரும்பிப் போய் நாலு வீட்டில் வேலை செய்து பிழைக்க விடுவதுகூடத் தப்பில்லை. இந்தத் தொழில் ஒரே பொய் மயமானது. என்னையே எடுத்துக் கொள்ளும். இன்று இந்த நிமிஷம் நான் வெறுங்கையன். சுற்றி ஒரே கடன். புதிதாகக் கடன் கொடுக்க ஆள் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் இந்த உண்மையை வெளியே சொன்னால் என் மானம் போய்விடும்." பொன்னுரங்கத்தின் கண்களில் அழுகை வருவதுபோல் நீர் முட்டுகிறது.

கிழவர் மெல்ல எழுந்திருக்கிறார். "ஊர் திரும்ப பஸ் சார்ஜுக்குப் பணம் இருக்கிறதா?"

கிழவர் பதிலுக்கு உதட்டைப் பிதுக்கிறார். பொன்னுரங்கம் மணிபர்ஸைத் திறந்து கொட்டிப் பார்க்கிறார். அப்போதைக்கு அவருடைய ஆஸ்தி 47 ரூபாய் எட்டணாத் தேறுகிறது. முப்பது ரூபாயைக் கிழவனிடம் நீட்டுகிறார்.

"ஊருக்குப் போயி மானமாகப் பிழையும். இந்த நிமிஷம் நான் சொன்ன உண்மையை யாரிடமும் சொல்ல வேண்டாம். போய் வாரும்." கிழவர் நோட்டுக்களை

வாங்கிக் கொண்டு கும்பிட்டுவிட்டுப் போகிறார். மனத்தின் உண்மையை விண்டு வைத்த அந்த ஒரு விநாடியில் ஆயிரங்காலத்து நிம்மதி கிடைத்தாற்போல் ஒரு சாந்தி நிலவுகிறது பொன்னுரங்கத்துக்குள்ளே.

டெலிபோன் மணி கிணுகிணுக்கிறது. எடுக்கிறார். "ஹலோ! யாரு? பொன்னுரங்கமா? ஒரு நல்ல பைனான்ஷியர் கிடைச்சிருக்கான். ஒரு லட்சம் வரை புரளும். உன் படம் இரண்டாயிரத்துச் சொச்சம் அடி முடிஞ்சிருக்குன்னு சொன்னா பணம் புரளாது. கொஞ்சம் பொய் சொல்லித்தான் ஆகணும். பதிமூணாயிரம் அடி முடிஞ்சதாகச் சொல்லிவிட்டால் பணம் புரளும். உன் நிலைமை எனக்குத் தெரியும். அதான் உடனே சொன்னேன். என்ன, பொய் சொல்லலாம் இல்லே?" - நண்பரின் குரலைக் கேட்டு அவர் முகம் மலருகிறது.

"ஓ! பேஷா, கொஞ்சம் என்ன? நிறையவே பொய் சொல்லலாம். வரட்டுமா?" என்று நண்பருக்குப் பதில் சொல்கிறார் பொன்னுரங்கம்.

"ஆல் ரைட்! வந்து சேர்... ஒரு மணிக்கு உட்லண்ட் ஸுக்கு வா... பேசிக்கலாம்."

"வரது சரி. ஆனால் எதுலே வரதுன்னுதான் தெரியலே. என் காரை ஒரு ஃபிரண்டுக்கு இரண்டு நாள் கொடுத்துவிட்டேன். கொஞ்சம் உன் 'பிளிமத்' காரை அனுப்பலாமே?" என்றார் பொன்னுரங்கம்.

"அனுப்பறேன்! இதுக்கு ஏன் பொய் சொல்றே? உன் கார்தான் செர்வீஸுக்குக் கொடுத்திருக்கியே! ஃபிரண்டுக்குன்னு ஏன் புளுகணும்....? பில் கட்டப் பணம் இராது....! பரவாயில்லை. என் வண்டியை அனுப்பறேன். வந்து சேரு."

"பொய்தான் சொன்னேன்! உனக்கு எப்படியோ நிஜம் தெரிஞ்சிருக்கு. ஆனால் இப்ப சொன்ன பொய்க்குப் பிராயச் சித்தமாகக் கொஞ்ச நேரத்துக்கு முன்னே ஒரு நிமிஷம் உண்மை பேசியிருக்கேன்; தெரியுமா?"

"ரைட்டோ! வண்டி அனுப்பறேன். வந்து சேரு, உன்னை முழுகிடாமக் கரையேத்திடறேன்."

டெலிபோனை வைக்கிறார் பொன்னுரங்கம். எதிரே லட்சுமி படம் சிரிக்கிறது. உண்மைக்கும் ஒரு நிமிஷம் கிடைத்ததே என்று உணர்ந்த சிரிப்பா அது?

**(கல்கி, நவம்பர், 1960)**

## 55. வேனில் மலர்கள்
## (மலர்க் காட்சி)

திருமணத்துக்குப் பின்பு உதவியாசிரியர் சந்திரசேகரனை அப்போதுதான் கவி கமலக்கண்ணன் முதல் தடவையாகச் சந்திக்கிறார்.

"உன் திருமணத்துக்கு வரமுடியவில்லை, அப்பா. என்னை மன்னித்துவிடு. வாழ்த்து அனுப்பியிருந்தேனே; வந்ததோ?" என்று விசாரித்தார் கமலக் கண்ணன்.

"அதனால் பரவாயில்லை, ஸார். உங்கள் அற்புதமான வாழ்த்துப் பாடல் கிடைத்தது. இப்போது நான் வந்த காரியம்..." என்று பேச்சை இழுத்து நிறுத்தினார் உதவியாசிரியர்.

கவி கமலக்கண்ணன் புன்னகை பூத்தார்.

"புரிகிறது சந்துரு. ஆண்டு மலருக்கு ஏதோ கவிதை வேண்டுமென்று எழுதியிருந்தாயே; அதைக் கேட்பதற்குத்தானே வந்திருக்கிறாய். நீ என்னப்பா இன்னும் பழைய மாதிரியே ஆண்டு மலர், சிறப்பு மலர் என்று ஊர் சுற்றிக் கொண்டிருக்கிறாய்? புதிதாக இப்போதுதான் கல்யாணமாகியிருக்கிறது. வீட்டில் தனியாக விட்டுவிட்டு இப்படி அலைகிறாயே அப்பனே! எங்கேயாவது ஒரு மாதம் 'ஹனிமூன்' போய் வரக்கூடாதோ?"

"எங்கே ஸார் நமக்கு அதெல்லாம் ஒழிகிறது? மலரை நன்றாகக் கொண்டுவந்தாலே பெரிய நிம்மதிதான். இந்தத் தடவை மலருக்கு எப்படியும் உங்கள் கவிதை கிடைத்தாக வேண்டும்."

கவிஞர் பெருமூச்சு விட்டார். சிறிதுநேரம் அமைதியாக மோட்டு வளையை வெறித்துப் பார்த்தபடி இருந்தார். உதவியாசிரியருக்கு ஒரு பதிலும் கிடைக்கவில்லை.

கவி கமலக்கண்ணனுக்கு வயசு ஐம்பத்திரண்டுக்கு மேலிருக்கும். அவர் நைட்டிகப் பிரம்மச்சாரி. நீல அங்கியும் தாடி வளர்த்த முகமுமாகத் தாகூர் மறுபிறவி எடுத்து வந்தது போல் காட்சி அளித்தார். நாற்பது வயசுக்குள் உலக நாடுகளெல்லாம் சுற்றிப் புகழ் பரப்பி வந்திருந்தார்.

கமலக்கண்ணன் கவிஞர் மட்டுமல்ல; தத்துவ ஞானி; நல்ல அழகர்; கம்பீரமான தோற்றம் உடையவர்.

"சந்துரு, இந்தக் கோடையில் உதகமண்டலம் போய்விட்டு வந்தபின் இரண்டு மூன்று மாதமாக நான் எழுது கோலையே தொடவில்லை. உதகமண்டலத்தில்

இருக்கும் போது கடைசியாக நான் எழுதிய கவிதையை உனக்குத் தரலாம். ஆனால், அது அறைகுறையாக இருக்கிறது. மீண்டும் அதை நிறைவாக்க என்னால் இயலாதே!"

"எப்படியாவது அதை நிறைவு செய்து முடித்துக் கொடுங்களேன்" என்று சந்துருவின் வேண்டுகோளுக்குக் கவியிடமிருந்து பதில் இல்லை.

கவி கமலக்கண்ணன் விழிகளிலும் முகத்திலும் ஏக்கம் தேங்கி நிற்க மோட்டு வளையை மீண்டும் பார்த்தார். அங்கில்லாததும், எங்கிருப்பதென்று தெரியாததும், ஆனால் எங்கோ நிச்சயமாக இருப்பதுமான ஏதோ ஒன்றைத் தேடித் துழாவுகிற பார்வையாக இருந்தது அது. அப்படிப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தொடர்ந்து அடுத்தடுத்து நெட்டுயிர்த்தார் கவிஞர். உதவியாசிரியர் மறுபடியும் தூண்டிக் கேட்கலானார்: "ஒரு வாரம், பத்து நாள் ஆனாலும் பரவாயில்லை. நீங்கள் அந்தக் கவிதையை முடித்துக் கொடுப்பதாக இருந்தால் நான் காத்திருந்து வாங்கிக் கொள்கிறேன்."

"அந்தக் கவிதையை முடிக்க இப்போது என்னால் முடியுமா என்று எனக்கே சந்தேகமாக இருக்கிறது சந்துரு. அந்தக் கவிதைக்கு முதல் அளித்த சக்தியை - தூண்டுதல் தந்த சூழ்நிலையை - நான் மறுபடியும் அடைந்தால் ஒருவேளை என்னால் அதை முடிக்க இயலும். சில அழகான கண்கள், சில எழில் வாய்ந்த முகங்கள், சில அற்புதமான புன்னகைகள், சில உள்ளம் உருக்கும் காட்சிகள் இவற்றைப் பார்த்துத் தூண்டுதல் பிறக்கும்போதுதான் என் மனத்தில் கவிதைக்குரிய சொற்கள் விளைகின்றன. அல்லாத நேரங்களில் என் மனநிலம் தரிசாக வறண்டுவிடுகிறது."

நாடெல்லாம் தெய்வமெனக் கொண்டாடும் கவி, சிறு குழந்தைபோல் வெள்ளைத்தனமாகத் தம் சொந்த ஆற்றாமையை வெளியிடுவதைக் கேட்டு மனம் உருகினார் உதவியாசிரியர். கவிஞரின் அழகிய கண்களில் எதையோ - கண், வாய், சிரிப்பு, மூக்கு, முகம் என்று ஒவ்வொன்றாக நினைத்து ஒன்று சேர்த்து யாரையோ - நினைவுபடுத்திக் கொள்ளத் தவிக்கும் துடிப்புத் தெரிந்தது. ஏக்கம் சுழன்றது. "என்னால் முடியாது சந்துரு. நினைப்புக்குள் அநுமானம் பண்ணிக் கொணர முடியாத அழகு அது. பார்க்கும் போதுதான் என் மனம் துள்ளியது. நினைக்கும்போது வரமாட்டேனென்கிறது."

கவிஞரின் கண்களில் நீர் மல்கிற்று. நாத் தழுதழுத்தது.

"சந்துரு!"

"உங்கள் மனம் ஏதோ கஷ்டப்படுகிறது."

"அப்படி ஒன்றும் இல்லை, சந்துரு. ஆனால், உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன். கூசாமல் பதில் செல்வாயா?"

"என்ன? கேளுங்களேன்."

"இந்த ஐம்பத்திரண்டு வயசுக் காலத்தில் எப்போதாவது ஒரு பெண்ணைப் பார்த்ததும் மனம் பித்தாகிக் கல்யாணம் பண்ணிக்கொண்டுவிட வேண்டுமென்ற துடிப்பு எனக்கு உண்டாகி யிருக்குமா? உண்டாயிற்று என்றால் நம்புவார்களா?"

"நீங்கள் கல்யாணம் பண்ணிக் கொள்ளக்கூடாது என்று யாரும் சட்டம் போடவில்லையே! நீங்களாகத் தானே ஏதோ கொள்கை வகுத்துக்கொண்டு துறவி மாதிரி வாழ்ந்து வருகிறீர்கள்?"

"தவறு, சந்துரு. அன்று உதகமண்டலத்தில் அந்தப் பெண்ணைப் பார்க்கிறவரைதான் என் மனமும் எண்ணங்களும் துறவிபோல் இருந்தன. இப்போது அப்படி இல்லையப்பா. நான் என் மனத்தில் அவளை நினைவுகளாகவும், கனவுகளாகவும் சுமந்து ஏங்கிக்கொண்டிருக்கிறேன். வெட்கத்தைவிட்டு இதை உன்னிடம் சொல்லத்தான் வேண்டியிருக்கிறது. இதோ இந்த டைரியில் மே மாதம் பதினைந்தாம் தேதியிலிருந்து இருபதாம் தேதிவரையில் உள்ளவற்றைப் படித்துப்பார். சொல்கிறேன்" என்று மேசை இழுப்பறையைத் திறந்து ஒரு டைரியைச் சந்திரசேகரனிடம் நீட்டினார் கவி கமலக்கண்ணன். சந்திரசேகரன் இரண்டு கைகளையும் நீட்டி மரியாதையாக அதை வாங்கி விரித்துப் படிக்கத் தொடங்கினார். அவருக்கு வியப்புத் தாங்கவில்லை.

கவி, அங்கில்லாததும், எங்கிருப்பதென்று தெரியாததும், ஆனால் எங்கோ நிச்சயமாக இருப்பதுமான ஏதோ ஒன்றை அங்கம் அங்கமாக நினைத்துக் கூட்டி இணைத்துக் காண முயலும் பார்வையால் மீண்டும் மோட்டு வளையை வெறித்துப் பார்க்கலானார்.

உதகமண்டலம் மே-மாதம் - 15-ஆம் தேதி - இரவு எழுதியது.

இன்று என் மனம் எல்லையற்ற உற்சாகத்தை அடைந்திருக்கிறது. மாலையில் இவ்வூர் 'பொடானிகல் கார்டனில்' நடைபெற்ற மலர்க் காட்சிக்குப் போயிருந்தேன். 'ஃபிளவர் ஷோ'வைப் பற்றி நண்பர்கள் வானளாவப் புகழ்ந்து பெருமை பேசிய அருமை இன்று இங்கு அதைப் பார்த்த பின்பல்லவா தெரிகிறது? அடடா! உலகத்தில் இத்தனை விதமான நிறமும், இத்தனை வகை உருவமுள்ள பூக்களும் இருக்கின்றன என்று இன்று மொத்தமாகத் தெரிந்து விட்டது! வர்ணக் களஞ்சியம் என்பதா? இயற்கையின் பல வேறு நிறப் புன்னகைகள் என்பதா? என்ன அழகு! என்ன அழகு! இன்றையப் பூக்காட்சியில் என் மனத்தைத் துள்ளச் செய்து பெருமித மூட்டும் வெறொரு நிகழ்ச்சியும் நடந்ததே!

வகை வகையான பூக்காட்சி முழுவதும் சுற்றிப் பார்த்த வியப்பில் மனம் லயித்து அந்தப் பூங்காவின் புல்வெளியில் உட்கார்ந்தேன். சுற்றிலும் நீலமலைகளின் முடிகளில் மேகம் நகரும் அழகு தெரிந்தது. 'பூக்கள், பசும்புல்வெளிகள், ஊசி இலைகளைச் சிலிர்த்து நிற்கும் தூண் தூணாக யூகலிப்டஸ் மரங்கள், உருளைக்கிழங்கு வயல்கள், இயற்கையின் சௌந்தரிய வெள்ளமாய் எழுதாக் கவிதைகளாய்ப் பரந்து கிடக்கும் இவைகளுக்கு முன் என் கவிதைகள் எம்மாத்திரம்?' என்பது போல் ஒரு தாழ்வு மனப்பான்மை எனக்கு உண்டாயிற்று. நிறங்களின் கொள்ளையாய், எழில்களின் வகைகளாய் அந்த மலர்க்காட்சிகளையும், மலைகளையும், மரங்களையும் காணும் போது என்னுடைய கவிதைகள் இவற்றை எல்லாம்விட அப்படி ஒன்றும் பெரியன

அல்ல என்பதுபோல் சிறுமைப் பட்டு ஏங்கினேன். மனத்தில் ஒரு வறட்சி. 'நாம் பெரிதாக எதையுமே செய்துவிடவில்லை' என்கிற மாதிரி மூளித்தன்மை குடைகிறது.

'இயற்கை, பொருள்களைப் படைத்து அவற்றுக்கு விதவிதமான அழகுகளைத் தந்தது. அந்தப் பொருள்களைக் கொண்டுதான் மொழிக்குச் சொற்கள் கிடைத்தன. அந்தப் பொருள்களின் அழகுகளைக் கொண்டுதான் சொற்களின் அர்த்தங்களுக்கு அழகு ஏற்பட்டது. சொற்களும் அர்த்தங்களும் அவற்றுக்கு அழகுகளும் ஏற்பட்டிருக்காவிட்டால் நீ பாடியிருக்க முடியுமா? நீ சொற்களின் தரகன். சொற்கள் இயற்கையின் நாமங்கள். உன்னால் முடிந்தது அவற்றை இணைத்ததுதான்' என்று உள்ளத்தில் ஏதோ குத்திக் காட்டுகிறது. தாங்கிக் கொள்ள முடியாத ஏக்கத்தினால் தவிக்கிறேன். தாழ்வு மனப்பான்மையினால் சுருங்கி சிறுத்து ஒடுங்குகிறேன்.

ஒவ்வொன்றாக நினைத்துப் பார்க்கும்போது அந்தத் தாழ்வு மனப்பான்மை அதிகமாகிறது. மேலும் நினைக்கிறேன். 'இந்த மலைகளின் சூழலில் இப்போது இங்கே யாரும் என்னுடைய கவிதைகளின் புகழில் ஏங்குவதாகத் தெரியவில்லையே? அவ்வளவு ஏன்? நினைப்பதாகவோ பேசுவதாகவேகூடத் தெரியவில்லையே?' கமலக்கண்ணன் உலகம் போற்றும் கவிதைகளைப் பாடி என்ன பயன்? அப்படி ஒரு கவி இந்தத் தமிழ்நாட்டில் இருப்பதையே மறந்து விட்டுப் பூக்காட்சியின் விந்தைகளைப் பார்த்து இந்த மலைநகரம் முழுவதும் புகழ்கிறது; மயங்குகிறது; போற்றுகிறது! இவ்வளவு பெரிய பூங்காவில், இவ்வளவு பெரிய மலர்க் காட்சியில் இத்தனை மனிதர்களுக்கு நடுவே இவ்வளவு நேரம் சுற்றினேனே! 'கவி கமலக்கண்ணன் தமது 'வேனில் மலர்கள்' என்ற பாடல் தொகுதியில் பாடியிருப்பதெல்லாம் இந்தப் பூக்காட்சியைப் பார்த்ததும் நினைவு வருகிறதே!' என்று எவனாவது ஒருவன்கூட இன்னொருவனிடம் வாய் தவறியும் பேசினதாகக் காதில் விழவில்லை! கடந்த ஒரு வாரமாக இந்த நீலகிரியின் எழில்வாய்ந்த பகுதிகளில் சுற்றித் திரிகிறேன்! தொட்டபெட்டா சிகரத்தில் நின்றபோது, குதிரைப் பந்தய மைதானத்தில் கும்பலினிடையே நின்று கொண்டிருந்தபோது, கடைவீதிகளில், பூங்காக்களில் எங்காவது எவனாவது ஒருவன்கூடக் கவி கமலக்கண்ணனைப் பற்றி ஒரு வார்த்தை பேசவில்லையே! கவிகளின் நினைவே வேண்டியிராத இடமா இது? மலைகளைப்பற்றி, மேகங்களைப் பற்றி, பூக்களையும், மரங்களையும் பற்றிக் கவி கமலக்கண்ணன் விதவிதமாகப் பாடியும், புகழ் பெற்றும் என்ன பயன்? மலைகளின் நடுவே, மேகங்களின் கீழே, பூக்காட்சிக்குள்ளே, கமலக்கண்ணன் பாடிய சௌந்தரியத்தைப் பார்த்துக்கொண்டே கமலக்கண்ணனைப்பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசிக்கொள்ளாமல் போகிறார்களே! இயற்கையின் அழகுகளுக்கும், வார்த்தைகளின் பொருளுக்கும் நடுவேயுள்ள சொற்களின் தரகன்தானா நான்? எனக்கென்று வேறு தனிப்பெருமையே இல்லையா? ஒரு வாரமாக இருந்த ஏக்கம் மேலும் இறுகுகிறது. இவ்வாறு எண்ணிப் புண்பட்டுப் போன மனத்துடன் பூக்காட்சி நடக்கிற பூங்காவின் புல்வெளியில் அயர்ந்து சாய்கிறேன். அந்த சோர்வான சமயத்தில் பின்புறம் புல்வெளியில் மூலையில் கும்பலாக அமர்ந்திருந்த பெண்களில் யாரோ ஒருத்தியிடமிருந்து என் பெயர் வளை

ஒலிக்கிடையே அமுத ஒலியாய்க் கேட்கிறது. பிள்ளைப் பருவத்துச் சிறு பிள்ளைபோல் மிழற்றுகிறாள் ஒரு பெண்.

"போடி, நீ என்னவோ கவிதை எழுதுவதாகப் பிரமாதமாகப் பீற்றிக் கொள்கிறயே! மலைகளையும், மேகங்களையும், பூக்களையும் பற்றிக் கமலக்கண்ணன் தம் 'வேனில் மலர்கள்' என்ற கவிதைத் தொகுதியில் பாடியிருப்பதைப் போல் இனி யாருமே பாட முடியாது."

ஆர்வத்தோடு இவ்வாறு கூறிய இனிய குரலுக்கு உரியவளை நான் திரும்பிப் பார்க்கிறேன். முகம் தாமரையாய்க் கண் கருவிளையாய் வாய் செங்குமுதமாய் நாசி எட்பூவாய்ப் பூக்காட்சியில் மற்றாரு பூக்காட்சியென அந்த இளம்பெண் மண்டியிட்டு உட்கார்ந்திருக்கிறாள். இவ்வளவு அழகுகளுக்கு இருப்பிடமாய் ஒரு பெண் இருக்க முடியும் என்ற உண்மையையே இன்றுதான் முதன்முதலாகப் புரிந்துகொண்டவன் போல் அவளைப் பார்க்கிறேன். பச்சைப் புல்தரையில் மஞ்சள் வாயில் புடவை அணிந்து சற்றே நளினமுறச் சாய்ந்து மண்டியிட்ட கோலத்தில் மண்ணில் விளையாட வந்த கந்தர்வப் பெண்போல் வீற்றிருக்கிறாள். நல்ல உயரம், நல்ல சிவப்பு, அவள் சிரிக்கும்போது முகம் முழுவதும் மூக்கிலுள்ள வைர பேஸரி, காதிலுள்ள வைரத்தோடுகள், எல்லாமே சேர்ந்து அழகாய்ச் சிரிப்பதுபோல் ஒரு பிரமை உண்டாகிறது. இதழ்களின் சிரிப்பை வாங்கிப் பிரதிபலித்துக் காட்டுவதுபோல் அந்த மூக்குத்தி மினுக்கும் அழகே அழகு.

'கவி கமலக்கண்ணனுக்கு இத்தனை அழகாக ஒரு ரசிகையா?' என் மனம் பொங்குகிறது; பூரிக்கிறது. இப்படி ஒரு பெண்ணை மணம் செய்துகொண்டால் என்ன? என் மனத்தில் கவிச் சொற்கள் கனிந்து துடிக்கின்றன. நான் ஐம்பத்திரண்டு வயசிலிருந்து இருபத்திரண்டு வயசு இளைஞனாகி விடுகிறேன்.

**கண்பூவாய்க் கைபூவாய்**
**கமலச்செவ் வாய்பூ வாய்ச்**
**செம்பவழ இதழ்நடுவிற்**
**சிரிக்கின்ற நகைபூவாய்ப்**
**பெண்பூத்துப் பொலிகின்றாள்**
**பிறழ்மின்போல் நெளிகின்றாள்!**

என்று அங்கேயே அறைகுறையாகத் - தப்போ, சரியோ தோன்றிய வரிகளைக் குறித்துக் கொள்கிறேன். தத்துவ ஞானியும், அப்பழுக்குச் சொல்ல முடியாத துறவியுமான கவி கமலக்கண்ணனுடைய மனம் ஒரு பெண்ணின் அழகில் நெகிழ்கிறது. அந்த அழகை வருணித்துப் பித்தன்போல் கவியும் பாடுகிறது. வேடிக்கைதான்!

உதகமண்டலம், மே மாதம், 16-ஆம் தேதி இரவு :-

இது என்ன ஆச்சர்யம்! நேற்று 'பொடானிகல் கார்டனில்' பார்த்த பெண் எங்கே இருக்கிறாளோ, யாரோ என்று நான் தவித்த தவிப்பைத் தீர்ப்பவள்போல் எதிர்த்த

அறையிலிருந்து வெளிவருகிறாளே! நான் தங்கியிருக்கும் இதே விடுதியில் எதிர் அறையில்தானா அந்தப் பெண்கள் கூட்டமும் தங்கியிருக்கிறது? ஏதோ கல்லூரி மாணவிகள் சேர்ந்து உல்லாசப் பயணம் வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது.

எதிர் அறையில் அவளுடைய குரல் ஒலிக்கும் போதெல்லாம் கவி கமலக்கண்ணனுடைய பெருமையைப் பேசுவதாகவே ஒலிக்கிறது. கமலக்கண்ணனுக்கு எத்தனை அழகான ரசிகை!

என் மனம் மலையத்தனை உற்சாக உயரத்தில் ஏறி நிற்கிறது. நேற்றும் இன்றும் உதகமண்டலம் மிக அழகாக மாறிவிட்டது. இங்கே இந்த இயற்கையழகுக்கு நடுவில் கவி கமலக்கண்ணனாகிய என்னைப் பற்றியும் நினைப்பவர்கள் இருக்கிறார்கள். நான் சொற்களின் தரகன் அல்ல; கவிகளின் நாயகன். இதோ இந்த இரவின் அமைதியில் எதிர்த்த அறையில் அந்தப் பெண் தன் தோழிகளுக்கு என் 'வேனில் மலர்களை' இசை வெள்ளமாய்ப் பாடிக் காட்டிக் கொண்டிருக்கிறாள். நான் எத்தனை பாக்கியசாலி! மாதுளை மொட்டுப் போன்ற அவள் உதடுகளில் எழும் இசையின் சொற்கள் என்னுடையவை அல்லவா? அந்தச் சொற்களை அப்படிக் கவிதையாய் இணைத்தவன் நான் அல்லவா? இப்படி ஒரு பெண்ணை மணந்து கொண்டு அவள் பாடிக் காட்ட வேண்டுமென்ற ஒரே நோக்கத்துக்காகவே லட்சோபலட்சம் கவிதைகளை நான் எழுதலாமே! உம்! இந்த வயசுக்குமேல் அது சாத்தியமாகுமா?

உதகமண்டலம். மே மாதம், 17-ஆம் தேதி இரவு:-

நான் மகா யோகக்காரனாகி விட்டேன். இன்று அந்தப் பெண் தயங்கித் தயங்கி என் அறைக்குள் நுழைந்து கமலப் பூக்கரங்களைக் கூப்பி வணங்கினாள். பேசினாள்: "முதலில் நேற்று உங்களைப் பார்த்தபோதே நீங்கள்தாம் கவி கமலக்கண்ணனாக இருக்க வேண்டுமென்று சந்தேகமுற்றேன். இன்று விடுதி மானேஜரிடம் விசாரித்தபோது என் சந்தேகம் தீர்ந்தது. எனக்கு உங்கள் கவிதை மிகவும் பிடிக்கும்."

"உட்கார் அம்மா. நீ நேற்றிரவு என் 'வேனில் மலைகளை' நன்றாகப் பாடினாய். நானும் கேட்டேன்."

நீண்டநேரம் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போனாள் அந்தப் பெண். என் மனத்தில் உல்லாசத்தை நிரப்பிவிட்டுப் போனாள் என்பதுதான் பொருத்தமான வாக்கியம். நாளைக்காவது அன்று மலர்க் காட்சியில் கிறுக்கின அவளைப் பற்றிய கவிதையை நிறைவேற்றி முடித்துவிட வேண்டும். தத்துவம், தெய்வீகம், இயற்கை இவற்றை நீக்கிப் பெண்ணழகைப் பற்றிக் கமலக்கண்ணன் பாடும் முதற் கவிதை இதுவாகத்தான் இருக்கும்.

உதகமண்டலம். மே மாதம், 18-ஆம் தேதி இரவு:-

இன்று பேசிக் கொண்டிருந்தபோது அந்தப் பெண் ஒரு கேள்வி கேட்டாள்: "உங்கள் கவிதைகளை எழுதும் அனுபவங்கள் உங்களுக்கு எப்படிக் கிடைக்கின்றன?"

நான் வழக்கமாக எல்லோருக்கும் கூறுகிற பதிலைச் சொன்னேன். அவள் குறும்புச் சிரிப்பும், குறும்புப் பார்வையுமாக என்னை நோக்கி, "என்னைப் பற்றி ஒரு பாட்டு எழுதிக் கொடுங்களேன், பார்க்கலாம்" என்று வெள்ளைத் தனமாகக் கேட்டுவிட்டாள்.

"உன்னைப்பற்றி நேற்றே பாடியிருக்கிறேன்" என்று பதிலுக்கு நான் சொன்னதும் அவளுக்கு வியப்பாகிவிட்டது. அவளைப் பற்றி நான் பாடிய சில வரிகளைச் சொல்லி அந்த வியப்பைப் பின்னும் அதிகமாக்கினேன். அப்போது அவள் முகம் இணையிலா நாண அழகு கரந்து நகைத்தது. என் மனம் பூரித்தது.

உதகமண்டலம். மே மாதம், 19-ஆம் தேதி இரவு:-

இன்று காலை அந்தப் பெண்கள் குழு ஊருக்குப் புறப்பட்டுவிட்டது.

புறப்படுமுன் அவள் என் அறைக்கு வந்தாள். அவளுடைய கைகளில் என் 'வேனில் மலர்கள்' என்ற கவிதைப் புத்தகம் இருந்தது.

"நாங்கள் இன்று ஊர் புறப்படுகிறோம். உங்கள் நினைவுக்கு அறிகுறியாக இந்தப் புத்தகத்தின் முதற் பக்கத்தில் நீங்கள் என்னைப் பற்றிப் பாடிய அந்தப் பாட்டை மட்டும் எழுதிக் கையெழுத்திட்டுத் தருவீர்களா?"

அவள் விருப்பப்படியே 'கண்பூவாய்' என்ற அந்தப் பாட்டை அப்படியே அரைகுறையாக எழுதிக் கையெழுத்திட்டுத் தந்தேன். வணங்கி நன்றி சொல்லிவிட்டுப் போனாள். இதுவரை எங்குமே கண்டிராத அந்த எழில் முகத்தைக் கூடியவரை மனத்தில் பதித்துக்கொள்ள முயன்றேன். மனம் எதற்கோ ஏங்குகிறது.

உதகமண்டலம். மே மாதம், 20-ஆம் தேதி இரவு:-

போயும் போயும் இது என்ன ஊர்? இங்கே குதிரைப் பந்தயத்தைப் பற்றிக் கவலைப்படுகிற மனிதர்கள் இருக்கிறார்கள். தொட்ட பெட்டா சிகரத்தையும், 'பொடானிகல் கார்டனின்' பூ வகைகளையும் பார்த்து வாய் அங்காந்து ரசிக்கிறவர்கள் இருக்கிறார்கள்.

ஆனால், கமலக்கண்ணன் என்கிற கவியைப்பற்றி நினைக்கிறவர்கள்கூட இந்த ஊரில் இருப்பதாகத் தெரியவில்லை. மனமே வறண்டுவிட்டது. நாளைக் காலையில் இங்கிருந்து ஊருக்குப் புறப்பட்டுவிட வேண்டியதுதான்.

உதவியாசிரியர் சந்திரசேகரன் டைரியின் பக்கங்களை மூடிவிட்டு நிமிர்ந்தார். கவிஞரை நோக்கிக் கூறினார்: "ஸார், உங்களிடம் பாட்டு எழுதிக் கையெழுத்து வாங்கிக்கொண்டு போன இந்தப் பெண்ணை எனக்கு நன்றாகத் தெரியும். அவள் இப்போது இந்த ஊரில்தான் இருக்கிறாள். அவளைப் பார்த்து நீங்கள் இந்த அறைகுறைப் பாடலை நிறைவு செய்ய முடியுமானால் இன்று மாலையே அவளிடம் உங்களை அழைத்துப் போகிறேன்."

இதைக் கேட்டுக் கவிஞரின் முகம் மலர்கிறது. கண்களில் ஒளி பாய்கிறது.

"நிஜமாகவா சந்துரு?"

"சத்தியமாக, நீங்கள் சாயங்காலம் பாருங்களேன்."

"அந்தக் கந்தர்வசுந்தரி எனக்குக் கவிதை தந்தவள். அவளை நான் மறுபடி காண முடிந்தால் ஒரு கவிதை என்ன? உன் ஆண்டு மலருக்கு ஒரு காவியமே எழுதித் தருகிறேன் அப்பா."

"மாலையில் தயாராக இருங்கள். வந்து அழைத்துப் போகிறேன்" என்று கூறி சந்திரசேகரன் போய்விட்டார்.

கவிஞர் மகிழ்ச்சி பொங்கும் மனநிலையோடு காத்திருந்தார். ஆறு மணிக்குச் சந்திரசேகரன் வந்து அழைத்துப் போனார். அந்த வீட்டுக் கூடத்தில் கவிஞரை உட்கார்த்தி விட்டு உள்ளே போய் அவளை அழைத்து வந்தார் உதவியாசிரியர். அதே மஞ்சள் வாயில் புடவை, வைர பேஸரியும் தோடுகளும் சேர்ந்து சிரிப்பதுபோல் இதழ்களில் கரந்த நகை, மெட்டியும் கொலுசும் தாளமிட அன்னநடை நடந்து கவிஞருக்கு முன் வந்து கைகூப்பி வணங்கினாள் அந்தப் பெண். வணங்குமுன் கையில் இருந்த 'வேனில் மலர்கள்' புத்தகத்தை கவிஞருக்கு முன்பிருந்த மேஜையில் வைத்தாள்.

வியப்போடு கவிஞர் அதன் முதல் பக்கத்தைப் பிரித்தார். அவருடைய கையெழுத்து அன்று எழுதிக் கொடுத்தபடியே முத்து முத்தாக இருந்தது. அவள் இனிய குரலில் அவரை நலம் விசாரித்தாள்.

"பேசிக்கொண்டிருங்கள். காபி கலந்துகொண்டு வருகிறேன்" என்று கூறி அவரையும், உதவியாசிரியரையும் விட்டுவிட்டு உள்ளே மறைந்தாள். கையில் 'வேனில் மலர்களை'ப் புரட்டிக்கொண்டே சந்துருவிடம் கேள்விகள் கேட்கலானார் கவிஞர். அவர் குரலில் உல்லாச வெள்ளம்.

"சந்துரு, இந்தப் பெண் கல்லூரியில் படிக்கிறாளா?"

"படித்து முடித்துவிட்டாள்."

"இவள் மாதிரி அழகியை நீ எங்காவது பார்த்திருக்கிறாயா சந்துரு?"

"இல்லை."

"இந்தப் பெண் உனக்கு உறவோ?"

"உறவுதான்."

"நெருங்கிய உறவோ?"

"மிகவும் நெருங்கிய உறவு."

சிறிது நேரம் இருவரிடையேயும் மௌனம் நிலவுகிறது. கவிஞர் கண்களில் ஒரே தாகம். அழகின் வெள்ளத்தையே கண்டுவிட்டதுபோல் முகம் மலர்ந்திருக்கிறது அவருக்கு.

சந்துரு அவரிடம் மீண்டும் கேட்கிறார். "பாட்டை நாளைக்கே முடித்துக் கொடுத்துவிடுவீர்களா ஸார்?"

"ஆகா! கட்டாயமாக, அதிருக்கட்டும். இந்தப் பெண் உனக்கு நெருங்கிய உறவு என்றாயே; என்ன உறவு?"

சந்துரு அவருடைய இந்தக் கேள்விக்குப் பதில் கூறாமல் அவர் முகத்தையே பார்த்தார்.

"என்ன அப்படிப் பார்க்கிறாய் சந்துரு? உறவைச் சொல்வது சாத்திய மில்லையானால் வேண்டாம்."

"சொல்வது சாத்தியந்தான், ஸார்."

"பின் ஏன் தயங்குகிறாய்?"

"இவள் என்னுடைய மனைவி!"

கவிஞரின் முகம் பேயறை வாங்கியதுபோல் வெளிறுகிறது. அவர் கையில் இருந்த 'வேனில் மலர்கள்' நழுவிக் கீழே விழுகிறது. உடம்பே கூசிக் குறுகி அணுவாய்த் தேய்ந்து விட்டதுபோல் சிறுத்துக் குன்றி விடுகிறது. நிமிர்ந்து சந்துருவைப் பார்க்கிறார். ஒரு புகழும் இல்லாத அந்தச் சாதாரண உதவியாசிரியர் நிஷ்களங்கமாகச் சிரிக்கிறார்!

(கலைமகள், தீபாவளி மலர், 1960)



## 56. விற்றுப் பிழைப்பதன்றி வேறில்லை!

சுப்பையா எங்கள் வீட்டிற்கு வழக்கமாகக் காய்கறிகள் விற்கும் வியாபாரி. காலையில் வீட்டு முன் புறத்தில் உட்கார்ந்து நான் எழுதிக் கொண்டிருப்பேன். சரியாக எட்டரை மணிக்குக் காய்கறிக் கூடையோடு சுப்பையா வந்துவிடுவான். ஆள் சுறுசுறுப்பானவன். யாரோடும் கலகலவென்று சிரித்துப் பேசும் சுபாவம் அவனுக்கு உண்டு. வயதுகூட அதிகமில்லை; இளைஞன் என்றே சொல்லலாம். இருபத்தெட்டுக்கு மேல் மதிக்க முடியாது. அவனுடைய தோற்றம் கவர்ச்சிகரமானதாக இருக்கும்.

இத்தோற்றமும் எதைப்பற்றியும் யாரிடமும் மனம் விட்டுப் பேசுகிற இயல்பும் தான் அவனுக்கு நல்ல பெயர் தேடிக் கொடுத்திருந்தன. அரசியலில் தொடங்கி, அன்றைய கத்தரிக்காய் விலை வரை என்னிடம் விவாதித்துப் பேசுவான் அவன். கல்லூரியில் எண்ணற்ற மாணவர்களுக்குப் பேசியே அறிவை வளர்த்துவரும் பேராசிரியனாகிய நான் சுப்பையாவின் பேச்சை அலுக்காமல் சலிக்காமல் கேட்கத் தொடங்கிவிடுவேன். ஒருவிதமாகச் சிரித்துக் கொண்டே அவன் கையை ஆட்டி ஆட்டிப் பேசுவதைக் காண விநோதமாக இருக்கும். ஒருநாள் நான், "இப்படி எல்லாம் பேசுகிறாயே? பள்ளிக்கூடத்தில் எதுவரை படித்திருக்கிறாய்?" என்று சுப்பையாவைப் பார்த்து ஒரு கேள்வி கேட்டேன்.

"என்ன பள்ளிக்கூடத்துப் படிப்பு வேண்டியிருக்குதுங்க? நானும் ஐந்தாம் பாரம் வரையிலே படிச்சேன். ஐந்தாவது பாரத்திலே ஒரு வருஷம் உட்கார்ந்திட்டேனுங்க. எங்க அப்பாரு படிப்பை அதோட நிறுத்திட்டாருங்க. அதிலேருந்து இந்த வியாபாரந்தான்!"

"பலே! ஐந்தாவது பாரம் வரை படித்திருக்கிறாயா? நீ பேசுகிற பேச்சின் விமரிசையைப் பார்ததால் எம்.ஏ. படித்தவன் உன்னிடத்தில் பிச்சைவாங்கவேணும், போ."

"ஐயா, என்னை ஒரேயடியாத் தூக்கிவிட்டுப் பேசுறீங்க, ஏதோ அனுபவத்திலே கண்டதைச் சொல்வேனுங்க."

"அப்படியில்லை, சுப்பையா. இயற்கையாகவே எந்த விஷயத்தை எடுத்துக் கொண்டாலும் உனக்கு நன்றாகப் பேச வருகிறதப்பா, இது ஒரு வரப்பிரசாதம் என்றுதான் சொல்ல வேண்டும்."

"சரியாப் போச்சுப் போங்க."

"எங்கள் காலேஜில் நான் நின்று பேசவேண்டிய அதே இடத்தில் 'டிப்டாப்'பாகக் கொண்டு போய் உன்னை நிறுத்தினால்கூட வெளுத்துக் கட்டிவிடுவாய் போலிருக்கிறதே, சுப்பையா!"

"என்னங்க நீங்க? என்னைக் கேலி பண்ணுறீங்களா!"

"அட, அதற்குச் சொல்ல வரவில்லை அப்பா!... சொன்னால் கோபித்துக் கொள்ளமாட்டாயே?"

"சொல்லுங்க... ஐயா!"

"தெருத் தெருவாய்க் காய்கறி சுமந்து விற்கிற வியாபாரத்தை நீ இன்றோடு விட்டுவிடு. இந்த மாதிரி சாதாரணமான காரியத்துக்கு உன்னைப்போல் ஒரு நல்ல விநயஸ்தன் வேண்டும் என்பது இல்லை!"

"அது சரிங்க; இந்த வியாபாரத்திலே உங்களுக்கு எதுங்க அப்படிக் கேவலமாப் படுது...?"

"இதிலே என்னென்ன கேவலம் இருக்கிறதென்று நான் வரிசையாக வருணிக்க வேறு வேண்டுமென்கிறாயா?"

"அது இல்லிங்க; வந்து... எனக்கு உங்க கருத்து விவரமாப் புரிய வேண்டாமுங்களா? அதுக்காகத்தான் கேக்கிறேன். வேறே ஒண்ணும் தப்பாக நினைச்சுக்கிட வேணாமுங்க."

"தெருத் தெருவா நடந்து தலைகனக்கக் கூடை சுமக்க வேணும். 'கத்தரிக்காய், வாழைக்காய், வெண்டைக்காய்'னு தொண்டை கிழியக் கத்த வேணும். இப்படி யெல்லாம் செய்தும் 'பேரம்' பேச வருகிறவர்கள் நாவில் ஈரமின்றி விலை கேட்பார்கள். இது என்ன வேலை? 'வேலையற்றவனுக்கு வியாபாரம்'னு சொல்வதுண்டு! அதுவும் இப்படித் தெரு வீதியிலே தினம் தினம் கூவி விற்கிற வியாபாரம் இன்னும் அதிக மோசம்!"

"அப்படின்னா என்னை என்ன செய்யச் சொல்றீங்க?"

சுப்பையாவின் இந்தக் கேள்வி கொஞ்சம் அழுத்தலாகவே இருந்தது. அவன் இப்படிக் கேட்ட தோரணையில் ஏதோ மறைந்து நிற்பது போலவும் தோன்றியது. ஆனாலும் சமாளித்துக் கொண்டு அவனுக்கு மறுமொழி கூறினேன்.

"செய்கிறது என்ன? நீ படித்த பழைய பள்ளிக்கூடத்து 'சர்டிபிகேட்டுக்களை' எல்லாம் கொண்டு போய்க் காட்டி உன் பேரை 'எம்பிளாய்மெண்ட் எக்சேஞ்'சில் பதிந்து கொள். ஏதாவது 'கிளார்க்', 'அட்டெண்டர்' வேலைகள் வந்தால் 'ஆர்டர்' அனுப்புவார்கள்... அப்புறம் உன் பாடு யோகம்தான்!..."

"நல்லதுங்க; ஆனா ஒரே ஒரு சந்தேகம் உண்டாகுதுங்க!"

"என்ன, சுப்பையா?"

"'கிளார்க்' வேலையும் 'அட்டெண்டர்' வேலையும்கூட ஒரு விதத்திலே பார்த்தா வியாபாரந்தானுங்களே?"

நான் திடுக்கிட்டேன். அம்பின் கூர்மை அவனுடைய இந்தக் கேள்வியில் நிறைந்திருந்தது. சற்றுமுன் அவன் அழுத்தலாகக் குழைந்து குழைந்து பேசியதன் தாத்பரியம் எனக்கு விளங்கியது. விவாத மேடையிலும் ஆட்டுக்கிடாய்ச் சண்டையிலும் எதிரி பின் வாங்கினால் நல்லதில்லை என்பார்கள். அதுமாதிரித்தான் சுப்பையாவின் குழைவு. அவன் சரமாரியாகப் பேசத் தொடங்கப் போகிறான் என்பதற்கு அறிகுறிதான் இந்தக் குழைவு.

"உன்னுடைய தத்துவ விளக்கம் எனக்குத் தேவையில்லை, சுப்பையா! நீ இந்தத் தெரு வியாபாரத்திலே இருக்கிற நிலைமையைவிடக் கொஞ்சம் அந்தஸ்துடனே கட்டின வேட்டி கசங்காமல் வாழலாம். அதற்காகத்தான் சொன்னேன். இல்லையென்றால் எனக்கு என்ன வந்ததப்பா... அவ்வளவு அக்கறை உனக்கே இல்லாதபோது?"

"அடடே! ஐயா இதுக்குள்ளாரக் கோபிச்சுக்கிடுறியளே?... நான் இதெல்லாம் வஞ்சகமாக் கரவடமாப் பேசறதில்லிங்க... ஏதோ ஒரு பேச்சுக்குச் சொல்ல வந்தேன். மனசு புண்படுமின்னா வேண்டாமே!"

"இல்லை சுப்பையா, உன் விளக்கத்தையும் சொல்லித்தான்ஆக வேண்டும். நான் கோபப்படவில்லை. நீ நிறுத்திப் பதறாமல் சொல்லேன்; கேட்கிறேன்...!"

அவன் மறுமொழியால் மனங்குளிர்ந்த நான் என் சினத்தை மாற்றிக் கொண்டு, அவனுடைய விளக்கத்தைக் கேட்கத் தயாரானேன்.

"ஐயா, கோபப்படாமக் கேளுங்க... தப்பிதமா நினைச்சிக்கிடாம என் கேள்விக்கும் கொஞ்சம் பதில் சொன்னீங்கன்னா நல்லாயிருக்கும்!"

"என்ன கேட்க வேண்டுமோ, கேள், சொல்கிறேன் சுப்பையா?"

"ஐயா, எதுவரைக்கும் படிச்சிருக்கிறீங்க?... கேள்வியை வித்தியாசமா எடுத்துக்கிடாதீங்க!"

"எம்.ஏ. பட்டம் பெற்றிருக்கிறேன், சுப்பையா!"

"அதுக்கு எத்தனை வருஷம் படிக்கணுமுங்க?"

"ஹைஸ்கூல் படிப்புக்குமேல் ஆறு வருஷம் படிக்க வேண்டும் அப்பா."

"உங்களுக்கு என்ன செலவு ஆயிருக்குமுங்க?"

"நீ எதற்காக வளைத்து வளைத்துக் கேட்கிறாய்?... பத்தாயிரம் ரூபாய்க்கு மேல் என் காலேஜ் படிப்புக்கு மட்டும் செலவாகியிருக்கும்!"

"நீங்க அவ்வளவு செலவழிச்சி ஏனுங்க அந்தப் பட்டப் படிப்பு வரை படிச்சீங்க? அதுக்கு இப்போ என்ன பிரயோசனமுங்க?"

"அதென்ன சுப்பையா அப்படிக் கேட்டுவிட்டாய்? அந்தப் பட்டப் படிப்பு படிக்கவில்லை என்றால் இப்போது நான் காலேஜில் புரொபஸராக எப்படி இருக்க

முடியும்? மாதம் ஐந்நூறு, அறுநூறு என்று சம்பளம் எப்படிக் கிடைக்கும்? உன் கேள்வியே அர்த்தமில்லாமல் இருக்கிறதே? ஏதோ வாய்க்கு வந்ததைக் கேட்கிறாயே...?"

"இல்லீங்க; அர்த்தத்தோடேதான் கேட்கிறேன். நான் காலேஜிப் படிப்புப் படிக்கலீங்க. ஆனா எதைப் பத்தியும் சிந்தித்து ஒரு முடிவுக்கு வருவேனுங்க. அதைக் கொண்டு பேசுவேனே தவிர, நானா வாயில் வந்ததைப் பேசமாட்டேனுங்க."

"சுப்பையா, உன் பேச்சு ஒரு தினுசாகப் போகிறதே...? என்னையே தாக்கத் தொடங்கிவிட்டாய்?... பரவாயில்லை அப்பா... பரவாயில்லை. தேர்ச்சிதான்...சொல்ல வேண்டிய விஷயத்தைத் தெளிவாகச் சொல்லிவிடு... உன்னிடம் என்னவெல்லாம் கேட்க வேண்டியிருக்கிறதோ? குறையையும் கேட்டு விடுகிறேன்!"

"பார்த்தீங்களா, பார்த்தீங்களா, ஆத்திரப்படுறியளே?... என் மேலே கோவம் ஏனுங்க? கருத்திலே பிழையில்லையானா என் மேலே சினந்துகிட்டு என்ன ஆவப்போவுதுங்க?"

"சரியப்பா சரி, சொல்லியழு... போயும் போயும் காலை நேரத்திலே உங்கிட்டே வாயைக் கொடுத்தேனே? நீ என்றைக்கும் போலப் 'பழைய சுப்பையாதான்'னு எண்ணியிருந்தேன். இன்றைக்கு என்னவோ நீ ஒரு மாதிரிப் பேசறே?," என்றைக்குமே அடைந்திராத வெறுப்பை அன்றைக்கு அடைந்தவனாகச் சலித்துக்கொண்டே அவனைக் கேட்டேன் நான்.

"தப்புங்க தப்பு. இந்தப் பேச்சை உங்க மேலே இருக்கிற ஆத்திரத்தினாலே நான் பேசலீங்க. உங்க கருத்து மேலே இருக்கிற ஆத்திரம்தானுங்க. 'கத்தரிக்காயும், வாழைக்காயும் சுமந்துக்கிட்டுத் தெருவிலே 'காய்கறீ, காய்கறீ'ன்னு கூவி விக்கிற வியாபாரம் இழிவு. கிளார்க்கோ, அட்டெண்டரோ ஆகி அறுபது ரூபாக்காசுக்கு முழு நேரத்தையும் கூவாமலே விற்கும் அடிமை வேலை உயர்வு' அப்படிங்கிற கருத்து உங்ககிட்டே இருக்குங்க. இந்தத் தவறான கருத்தை நினைச்சாத்தான் எனக்கு ஆத்திரம் பத்திக்கிட்டு வருதுங்க!"

"அது சரி சுப்பையா. நீ எப்படியிருந்தால் எனக்கென்ன? என்னைக் கேள்வி கேட்டாயே அந்தக் காரணம்தான் எனக்கு விளங்கவில்லை!" பெருமூச்சொன்று என்னிடமிருந்து வெளிப்பட்டது. அப்போது அந்த ஆவேச நிலையில் சுப்பையாவைப் பார்ப்பதற்கே எனக்குப் பயமாக இருந்தது.

அவன் மறுமொழி கூறலானான்.

"உங்களைப் பத்திக் கேட்டதுங்களா?... வேண்டாமுங்க... அதை விட்டுடுங்க... நீங்க இதுக்கே இப்பிடி ஆதூதிரப்படுறீங்க... நான்அதையும் கூறிட்டாப் பிறகு நீங்க, 'உன் வியாபாரமுமாச்சு, நீயுமாச்சு. நாளை முதல் இந்த வீட்டு வாசப்படி ஏறப்படாது. நட வெளியே!'ன்னுசொன்னாலும் சொல்லிடுவிங்க. அப்புறம்... அப்புறம் எனக்குத்தானுங்களே ஒரு வாடிக்கை வீடு நஷ்டமாப் போவும்?"

"அட, சரிதான் சொல்லித் தொலையப்பா! உன்னை விட்டா இங்கே வேறே காய்கறிக்காரன் எவன் வரப்போறான்?"

"சரிங்க. சொல்றேன், என் மேலே கோவப்படாதீங்க... என் கருத்து உங்களுக்குப் பிடிக்கலேன்னா அதுமேலே கோவப்படாதீங்க. படிச்சவங்ககிட்டே இதுதான் இன்னைக்கு இல்லாத குணமுங்க. கருத்து மேலே ஆத்திரப்படாம, அதைச் சொன்னவன் மேலேயே கோபப்படுறீகளே?"

"சரியாப் போச்சு! நீ எங்கேயோ வேறே பேச்சைத் தொடங்கிட்டியே? நான் கேட்டதற்குப் பதில் சொல்லப்பா!"

"ஹைஸ்கூலிலேயும் காலேஜிலேயுமாகப் பதினேழு வருஷம் ஆயிரக்கணக்கிலே செலவழிச்சு ஒரு வழியாப் படிப்பை முடிச்சுப் பட்டம் வாங்கினீங்க; இப்போ என்ன செய்யறீங்க? புரொபஸராயிருக்கீங்க; தற்சமயம் ஐந்நூத்துக்கு மேலே சம்பளம் வாங்குறீங்க; எண்ணூறு வரை உயரும்னு நம்பிக்கிட்டிருக்கீங்க; இல்லீங்களா? நீங்க சம்பளம் கட்டி ஒரு காலேஜிலே படித்துப் பட்டதை வாங்கின பிறகு, இப்போ சம்பளத்தை வாங்கிட்டுப் படிப்பைச் சொல்லிக் கொடுக்கிறீங்க. இதுவும் ஒரு வகை 'வியாபாரம்'தானுங்களே?"

"ம்....!"

"சரி; இதை விட்டுடுங்க. வக்கீல்களைத்தான் பாருங்களேன். நீதியை விற்றுப் பிழைக்க வேண்டியிருக்குது. டாக்டர்கள் படித்த கலையினாலே மருந்தையும் திறமையையும் விற்றுப் பிழைக்க வேண்டியிருக்குது. உலகத்திலே பார்க்கப் போனா மனுசன் வாழுகிறதே ஒரு வியாபாரம்தானுங்க. நீங்க படிக்காத தத்துவத்தை நான் எங்கேருந்து சொல்லப் போறேனுங்க? என்ன வித்தியாசம்னா, நாங்க தெருவிலே வந்து கூவி விற்க வேண்டியிருக்குது. வக்கீலும், டாக்டரும், புரொபஸரும் தெருவிலே வந்து கூவாமலே, அதை நாகரிகமா, கௌரவமா விற்கிறாங்க!"

"ம்!"

என்னிடம் ஒரு நீண்ட பெருமூச்சு வெளிவந்தது.

"அடேடே! ஏதேதோ பேசி உங்க மனசைப் புண்படுத்திட்டேனுங்க. இந்த எளவுப் பேச்சு வெறி வந்திருச்சின்னா எனக்குத் தலைகால் புரியறதில்லீங்க. இந்தப் பழக்கத்துலேருந்து விடுபடவும் முடியறது இல்லை. நான் வரட்டுமுங்களா? நாளைக்குக் காசு வாங்கிக்கிறேனுங்க; நான் எதினாச்சியும் எசகுபிசகா உளறியிருந்தா மன்னிச்சிருங்க. உங்க சுப்பையாதானே?" அவன் குரல் குழைந்து இருந்தது.

"சரி, சுப்பையா!"

அவன் கூடையை எடுத்துக்கொண்டு அடுத்த வீட்டு வாசலை நோக்கி நடந்தான். அவன் செல்லும் திசையையே நான் வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தேன். எம்.ஏ. படித்து புரொபஸராயிருக்கும் எனக்கு விளங்காத 'தத்துவத்தை' இந்தக் காய்கறிக்காரன் எவ்வளவு சுலபமாக விளக்கிவிட்டான்!

*'வாழ்க்கை அப்படியே ஒரு வியாபாரம்' என்பது உண்மைதான்! சுப்பையாவுக்கு விளங்கிய இந்த அற்புதமான தத்துவமெய், 'தத்துவம்' படித்த எனக்கு ஏன் விளங்கவில்லை?*

"இரு வேறு உலகத் தியற்கை திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு!"

*இந்தத் திருக்குறள்தான் அதற்கு விடை சொல்ல வேண்டும். நான் பேனாவை மூடி வைத்துவிட்டு எழுந்திருந்தேன். தொலைவில் எங்கிருந்தோ, "காய்கறீ! காய்கறீ! வாழைக்காய்! கத்தரிக்காய்!" என்று ஒலி சன்னமாக என் செவிகளில் விழுந்தது. சற்றுமுன் என்னிடம் பேசிவிட்டுச் சென்ற சுப்பையாவின் குரல்தான் அது.*

*காற்றில் மிதந்து வந்த அந்த மெல்லிய ஒலி, "நாங்கள் தலையிற் சுமந்த கால்கள் தேயத் தெருவில் நடந்து கூவி விற்கிறோம். ஆனால் சமூகத்தில் அந்தஸ்துடன் வாழும் டாக்டர்கள், வக்கீல்கள், புரொபஸர்கள் என்று வரிசையாக இருக்கும் நீங்களோ...?" என்று எதிரொலி பரப்பி என் செவிகளில் எதையோ கேட்பது போலிருந்தது.*

"விற்றுப் பிழைப்பதுதான் வாழ்க்கை - இங்கு
விற்றுப் பிழைப்பதன்றி வேறில்லை;
கற்றுப் படித்தது ஏன்? வாழ்க்கை - என்றும்
விற்றுப் பிழைப்பதன்றி வேறில்லை!"

*என் மனம் இப்படி நினைத்தது; வாய் முணுமுணுத்தது.*

(1960)

## 57. ஒரு மதிப்பீடு

**அ**ன்றைக்குக் காலையில் பத்து மணி சுமாருக்குத் திருவாளர் பொன்னம்பலம் அவர்களுடைய மனத்தில் என்ன இருந்ததென்று அனுமானம் செய்ய முன்றால் இரண்டே இரண்டு சந்தேகங்கள் மட்டுமே இருந்தன என்பது தெளிவாகப் புலப்படும்.

அநேகமாகச் சந்தேகங்களைத் தவிர அவருடைய மனத்தில் வேறொன்றும் இருப்பதில்லை என்பது சந்தேகத்துக்கு இடமில்லாத முடிவானாலும் அப்போது சத்தியமாக அந்த மனத்தில் இருந்த சந்தேகங்கள் இரண்டுதான் என்பதை வரையறை செய்வது ஒன்பதே முக்கால் மணி வரை முடியாமலிருந்தது. பத்து மணிக்கு அது உறுதியாகத் தெரிந்துவிட்டது.

முதலாவது சந்தேகம் : இந்த டியூஷன் வாத்தியார் நரசிம்மன் என்கிற எம்.ஏ.பி.டி. தன்னை ஏன் மதிப்பதில்லை என்பது.

இரண்டாவது சந்தேகம் : முழங்காலுக்கு மேல் மண் படிந்த வேட்டியும், வேர்வை நாறும் அழுக்கடைந்த பனியனுமாய் வெறும் பாமரனாய் நிற்கிற தோட்டக்கார முனியனை இந்த வாத்தியார் ஏன் மதித்துப் பேசுகிறான் என்பது!

இரண்டு சந்தேகங்களும் ஒரே காரணத்திலிருந்து பிறந்தவை என்றாலும், அவை ஒன்றில்லை என்பது எவ்வளவுக்கு நிச்சயமோ அவ்வளவுக்கு நிச்சயம் இரண்டுதான் என்பதும். பொன்னம்பலம் இலட்சாதிபதி. கூடிய விரைவில் கோடீஸ்வரராகிவிட முயன்று கொண்டிருப்பவர். ஆனால் இதில் ஒரே ஒரு துரதிர்ஷ்டம் செளகரியங்கள் எவ்வளவுக்கெவ்வளவு பெருகிக் கொண்டிருந்தனவோ அவ்வளவுக்கவ்வளவு அவநம்பிக்கைகளும் சந்தேகங்களும் அவர் மனத்தில் பெருகிக் கொண்டிருந்தன. சிறிய விஷயங்களுக்காகக்கூட அவர் மனத்தை அலட்டிக் கொள்வார். அவருடைய மனம் ரொம்ப ஏழை. அவருடைய இரும்புப் பெட்டியைப் போலத் திடமாகவோ, நிறைந்தோ இருந்ததில்லை அந்த மனம்.

உலகத்தில் தன் எதிரே வந்து நிற்கிற அத்தனைபேரும் நிச்சயமாகத் தன்னை மதிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறவர் அவர். இப்படி ஆசைப்படுகிற ஏழை மனம் உடையவர்கள் யாராயிருந்தாலும் பரிதாபத்துக்குரியவர்கள்தாம். தன் மதிப்பினாலும், தன்மானத்தினாலும், சந்தனக் கட்டைக்குள் செறிந்திருக்கும் மணத்தைப்போல் தனக்குள்ளேயே உள்முகமாக ஆழ்ந்து சுகம் காணும் வீரம் எல்லாருக்கும் வாய்க்காதுதான். அப்படி வாய்க்காவிட்டாலும் பொன்னம்பலத்தைப் போல சிறு அதிர்ச்சியைக்கூடத் தாங்கி நிற்க முடியாது பஞ்சை மனத்தைப் பெற்றிருக்கக்கூடாது. அப்படி மனம் அதை உடையவருக்கே வறுமை.

நரசிம்மன் எம்.ஏ.பி.டி. என்கிற இருபத்தேழு வயது இளைஞன் அவருடைய திருக்குமரன் முருகேசனுக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்க நியமிக்கப்பட்டு இன்னும் அதிக நாட்கள் ஆகிவிடவில்லை. ஆனால் பொன்னம்பலம் அவர்களுடைய மனத்தில் அந்த டியூஷன் வாத்தியாரைப் பற்றிய கோபதாபங்கள் அதிகமாகிவிட்டன. கோபதாபங்கள் ஏற்படும்படியாக நரசிம்மன் நடந்து கொள்ளவில்லை என்றாலும், சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரியாமலே பிறர் மனத்தில் அவர்களைப் பற்றி உருவாகி விடுகிற கோபதாபங்களும் உண்டு. பொன்னம்பலம் அவர்களைப் போல் பஞ்சை மனம் படைத்தவர்களுக்கும் இத்தகைய கோபதாபங்களுக்கும் நெருக்கம் அதிகம்.

நரசிம்மன்மேல் அவர் கோபித்துக் கொண்டதற்குத் தெளிவான காரணம் ஒன்றுமில்லையானாலும் தெளிவற்ற காரணங்கள் பல இருந்தன.

அந்த டியூஷன் வாத்தியார் போகிறபோது, வருகிறபோது தன்னிடம் நிறையச் சிரித்துப் பேசவேண்டுமென்று அவருக்கு ஆசையாயிருந்தது. நரசிம்மனுக்கு, அப்படி ஒரு முகராசி. 'இந்தப் பிள்ளை நம்மோடு கொஞ்சநேரம் சிரித்துப் பேசிவிட்டுப் போகமாட்டானா?' என்று மற்றவர்களை நினைத்து ஏங்க வைக்கும் ஏதோ ஒரு கவர்ச்சி அவனிடம் இருந்தது.

சந்தனக் குழம்புபோல் நிறம். எப்போதுமே மௌனமாகச் சிரித்துக் கொண்டிருப்பதைப் போன்ற முகம். அந்த முகத்தில் எப்போதாவது அபூர்வமாகத் திறந்து மெல்லப் பேசும் சிவந்த உதடுகள். கைவீசி நடந்து வருகிறபோது பரிசுத்தமே எதிரே வருவதுபோல் ஒரு தூய்மை. எந்த உபகாரத்துக்காகவும் எவரிடமும் கூசி நின்று தலையைத் தாழ்த்தாமல் நிமிர்ந்த நிலை, இவை எல்லாம் ஒன்று சேர்ந்த ஓர் அபூர்வ குணச் சித்திரம்தான் நரசிம்மன். யாரோ சிநேகிதர் சிபாரிசு செய்தார் என்பதற்காக இவனை டியூஷன் வாத்தியாராக எடுத்துக் கொண்டார் பொன்னம்பலம். யாருமே சிபாரிசு செய்ய வேண்டாத குணங்கள் பல இவனிடம் இருப்பது பின்னால் அவருக்கே தெரிய வந்தது.

"என்ன வாத்தியார் சார்? இங்கே வேலை செய்யிறது பிடிச்சிருக்கா... நம்ம பையன் எப்படியிருக்கான்?... உருப்படறத்துக்கு ஏதாவது வழி உண்டா?" என்று வாத்தியார் வந்த மூன்றாவது நாளோ, நான்காவது நாளோ, பொன்னம்பலம் அவரை விசாரித்தார்.

அவர் அப்படி விசாரித்தபோது இவ்வளவு கொச்சையான பேச்சை இதற்கு முன்னால் என்றுமே தான் கேட்டதில்லை என்று நாணி நின்றாற்போல இரண்டு கணங்கள் நின்றுவிட்டு, சிரித்துக் கொண்டே நடந்து மேலே போய்விட்டான் நரசிம்மன்.

இன்னொரு நாள் நரசிம்மன் டியூஷன் சொல்லிக் கொடுப்பதற்காக பங்களாவுக்குள் நுழைந்து வந்து கொண்டிருந்தபோது பொன்னம்பலம் முன் ஹாலில் அமர்ந்து காப்பி குடித்துக் கொண்டிருந்தார். நரசிம்மன் உள்ளே நுழைவதைப் பார்த்ததும் இன்றைக்காவது இந்த ஆளிடம் பத்து நிமிஷம் நேருக்கு நேர் கலகலப்பாய்ச் சிரித்துப் பேசிவிட வேண்டுமென்ற ஆவலோடு "இந்தா தவசிப்பிள்ளே!

சாருக்கும் ஒரு காபி கொண்டா" என்று உள்ளே திரும்பித் தவசிப்பிள்ளைக்கு உத்தரவு கொடுத்துவிட்டு, "உட்காருங்க சார்..." என்று டியூஷன் வாத்தியாரை உபசரித்தார் பொன்னம்பலம். ஆனால் நரசிம்மன் என்ற அந்தச் சுந்தர இளைஞனோ, இப்போதும் அவரை ஏமாற்றிவிட்டான்.

"மன்னிக்கணும்! எனக்குக் காப்பி குடிக்கிற பழக்கம் இல்லை" என்று கத்திரித்தாற் போலச் சொல்லிவிட்டு நேரே டியூஷனுக்குக் காத்துக் கொண்டிருந்த பையனை நோக்கிப் போய்விட்டான்.

பொன்னம்பலம் அவர்களுக்கு முகத்தில் அறைந்தாற்போலிருந்தது. இலட்சாதிபதி, பங்களாவாசி, பெரிதாக நாலைந்து கார் வைத்துக் கொண்டிருப்பவர் என்ற காரணங்களுக்காக எல்லாம் மதிக்காமல் தொலைந்தாலும் தொலையட்டும், மாதம் முதல் தேதி பிறந்தால் சுளையாக நூறு ரூபாய் சம்பளம் எண்ணிக் கொடுக்கப் போகிறவர் என்பதற்காகவாவது இவன் நம்மை மதிக்க வேண்டாமோ? உலகத்தின் சுகங்களையும், செல்வாக்கையும், முழுமையாக அநுபவித்தறியாத இந்த இருபத்தேழு வயது இளைஞன் மனிதர்களை எந்த அளவு கோலால் அளந்து பார்த்து மதிக்கிறான் என்பதை அவராலேயே புரிந்து கொள்ள முடியவில்லை. 'எப்படி வேண்டுமானாலும் மதித்துத் தொலைத்துவிட்டுப் போகட்டும். நமக்கென்ன வந்தது? மகனுக்கு ஒழுங்காக 'டியூஷன்' சொல்லிக் கொடுத்தால் சரிதான்!' என்று விட்டுவிடவும் அவரால் முடியவில்லை. தாழ்வு மனப்பான்மை என்று மட்டும் சொல்வதா? அல்லது நரசிம்மனிடம் இருந்த கவர்ச்சிதான் காரணம் என்று சொல்வதா? மொத்தத்தில் அந்த டியூஷன் வாத்தியார் தன்னை எதற்காகவோ அலட்சியம் செய்வதுபோல் உணர்ந்து உள்ளுக்குள்ளேயே வேதனைப்பட்டார் பொன்னம்பலம். இது ஓர் அந்தரங்கமான தாழ்வு மனப்பான்மை. இந்தவிதமான தாழ்வு மனப்பான்மையைப் பணத்தினாலும் செல்வாக்கினாலும்கூடப் போக்கிக் கொண்டுவிட முடியாது.

காபி டம்ளரை மேஜை மேலே அழுத்தி ஓசை எழும்படி வைத்துவிட்டு வேகமாக எழுந்து நடந்து போய்த் தோட்டத்தில் ஏதோ ஒரு வேலை செய்து கொண்டிருந்த தோட்டக்கார முனியனை மடக்கினார் பொன்னம்பலம்.

"ஏண்டா முனியா...! நீ தோட்டக்காரனா இலட்சணமா இருக்கமாட்டே போலிருக்கே?... போறபோதும், வரபோதும், டியூஷன் வாத்தியாரோடே உனக்கென்னடா பேச்சு?..."

"நா ஒண்ணும் பேசறதில்லீங்க... அவரா வந்து ஆசையோட விசாரிக்கிறாரு... பூவுங்க.. செடிங்க... இதுகளைப் பத்தித் தெரிஞ்சுக்கிறதிலே ரொம்ப ஆசையா இருக்காரு... முந்தாநாள்கூட ரெண்டு பிச்சிப்பூக் குடுன்னு கேட்டு வாங்கிச் சட்டைப் பையிலே போட்டுக்கிட்டாருங்க..."

அவருக்கு அந்தத் தோட்டக்காரன் மேலே பொறாமையாயிருந்தது. தன்னோடு பேசுவதற்கே விரும்பாததுபோல் முகத்தைக் குனிந்து கொண்டு போய்விடுகிற அந்த டியூஷன் வாத்தியார் தோட்டக்காரனிடம் போய்ச் சிரித்துப் பேசுவதும், பூக்களையும்,

செடிகளையும் பற்றி விசாரிப்பதும் தெரிந்தபோது, மிகவும் வேதனையாயிருந்தது. இந்த வாத்தியார் என்னிடமும் சிரித்துப் பேசினால் என்ன? ஒருவேளை என்னிடம் பேசுவதற்கே பயப்படுகிறானோ என்றும் தோன்றியது. ஆனால் அடுத்த கணம் நிதானமாக அவன் வந்ததிலிருந்து நடந்த ஒவ்வொரு நிகழ்ச்சியையும் இணைத்துச் சிந்தித்துப் பார்த்தபோது அவன் பயப்படுகிற ஆளாகவும் தெரியவில்லை. ஆள் நடந்து வருகிற தினுசையும், நிமிர்ந்து நின்று பதில் சொல்லுகிற விதத்தையும் பார்த்தால் ரொம்பப் பெரிய மானஸ்தனாகத் தோன்றியது. இப்படி மானம் உள்ள மனிதர்களைச் சந்திக்கும்போது கோழைகளுக்கும் பக்தி ஏற்பட்டுவிடுகிறது. ‘இப்படிப்பட்ட மானம் உள்ளவர்கள்தான் உலகத்தின் கெளரவத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறீர்கள்!’ என்று ஏதோ ஒரு வாரப் பத்திரிகையில் ஒரு பொன்மொழி படித்ததை நினைத்துக் கொண்டார் பொன்னம்பலம்.

இது நடந்து சில வாரத்துக்கு அப்புறம் அவர் ஒருநாள் இரவு வெள்ளைக்கார பாணியில் நடத்தப்படும் ஹோட்டல் ஒன்றில் ஏதோ விருந்தில் கலந்து கொண்டு விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தபோது சாலை ஓரமாக அந்த வாத்தியார் எங்கோ போய்விட்டு நடந்து வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தான்.

காரை நிறுத்தும்படி டிரைவரிடம் சொல்லிவிட்டு “மிஸ்டர் நரசிம்மன்!... உங்களைத்தானே? ஏறிக்குங்க.... வீட்டிலே கொண்டு போய் விட்டுடறேன்” என்று அவர் முகம் மலர்ந்து கூறியபோது,

“பரவாயில்லே!... இந்த வயசிலேயே எங்களையெல்லாம் சோம்பேறி ஆக்கிடாதீங்க... நடக்கறதிலே ஒரு சுகம் இருக்கே...” என்று ரொம்ப அசுவாரஸ்யமாக இந்த உலகத்தையே தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டவன் சிரிப்பதுபோல் சிரித்துக் கொண்டு பதில் சொன்னான் நரசிம்மன். இப்போதும் அவர் முகத்தில் ஓர் அறை விழுந்தது போலாயிற்று.

அடுத்த கணத்தில் அவருடைய மனத்தில், ‘இவன் ஏன் நம்மை இலட்சியம் செய்து மதிக்க மாட்டேனென்கிறான்?’ என்ற ஏக்கத்தை இன்னும் ஒரு படி பெருக்கிவிட்டு விட்டுச் சாலை முழுவதையுமே தனக்கென்று பட்டா எழுதி வாங்கிக் கொண்டவன் போல நரசிம்மன் வீசி நடக்கத் தொடங்கிவிட்டான். இப்போதும் பொன்னம்பலம் ஏழையாகித் தவித்தார். அதே கேள்வி, மிகவும் அந்தரங்கமான அந்தப் பழைய கேள்வி. அவர் மனத்தில் அந்த மனத்தின் பரப்பு முழுவதையும் ஆக்கிரமித்துக் கொண்டு விசுவரூபமெடுத்து நின்றது.

‘உலகத்தின் சுகங்களையும் செல்வாக்கையும் முழுமையாக அநுபவித்தறியாத இந்த இருபத்தேழு வயது இளைஞன் மனிதர்களை எந்த அளவுகோலால் அளந்து பார்த்து மதிக்கிறான்?’

இது அவர் படவேண்டிய கவலை இல்லையானாலும், இந்தக் கவலையைத் தவிர வேறு எதுவும் இப்போது அவருடைய மனத்தில் இல்லை. மறுநாள் காலையில்

எழுந்திருந்ததும் முதல் வேலையாகப் பையன் முருகேசனைக் கூப்பிட்டு டியூஷன் வாத்தியார் நரசிம்மனைப் பற்றித் துருவித் துருவி விசாரித்தார்.

"என்னடா... வாத்தியாரைப் பிடிச்சிருக்கா உனக்கு?"

பையன் தலையைச் சொறிந்து கொண்டு நாணி நின்றான்.

இந்தக் கேள்வியை வேறுவிதமாக மாற்றிப் "படிப்பைப் பிடிச்சிருக்காடா உனக்கு?" என்று கேட்டிருந்தால் பையன் ஒரே வார்த்தையில் பதில் சொல்லி யிருப்பான். கேள்வி வாத்தியாரைப் பற்றியதாக இருந்ததனால் கொஞ்சம் தயங்கினான்.

"என்னடா... தலையைச் சொறியறே? வாத்தியார் எப்படி இருக்காரு?"

"பிடிச்சிருக்குப்பா... சிரிக்கச் சிரிக்கப் பேசறாரு... ரொம்ப நல்லா... மனசிலே பதியறாப்பிலே பாடமெல்லாம் நடத்தறாரு..."

"சிரிக்கச் சிரிக்கப் பேசறார்னா சொல்றே? உங்க வாத்தியாருக்குச் சிரிக்கறதுக்கும், பேசறத்துக்கும்கூடத் தெரியுமா?" என்று கேட்கத் தொடங்கி நடுவிலேயே உதட்டைக் கடித்துக் கொண்டு இந்தக் கேள்வியைப் பையனிடம் கேட்டிருக்கக்கூடாதென்று உணர்ந்தவராய் அடக்கிக் கொண்டார்.

இந்த வாத்தியார் தன்னைத் தவிர மற்ற எல்லாரிடமும் சிரிக்கச் சிரிக்கப் பேசுவதாய்த் தோன்றியது அவருக்கு. ஏதோ கரணத்துக்காகத் தன்னை மட்டும் ஒதுக்கி வைத்து அலட்சியப்படுத்துவதாக எண்ணிக் கொண்டு வேதனைப்பட்டார் அவர்.

எப்படியாவது இந்த டியூஷன் வாத்தியாரைச் சரிப்படுத்திவிட வேண்டுமென்று தோன்றியது அவருக்கு. மறுநாள் டியூஷன் வாத்தியார் காம்பவுண்டுக்குள் நுழைந்தபோது கொஞ்சம் தைரியமாகவே அவன் எதிரே போய் நின்றுகொண்டு,

"வாத்தியார் சார்... இப்படி ஒரு நிமிஷம் நின்று நான் சொல்றதைக் காதிலே வாங்கிட்டுப் போங்க... இந்த ஊர்லே நா ஒரு பெரிய மனுஷன். எனக்கு ஒரு 'ஸ்டேட்டஸ்' இருக்கு. நீங்க என் பையனுக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்கிறதுக்காக வந்து போறீங்க. இப்பிடி வேர்க்க விறுவிறுக்க நடந்து வரவேண்டாம். கார் அனுப்பிடறேன். நாளையிலேர்ந்து கார்லே வந்து போய்க்கிட்டிருங்க... அதுலே ஒண்ணும் குறைஞ்சிடாது..."

டியூஷன் வாத்தியார் நரசிம்மன் பதில் சொல்லாமல் சிரித்தான். சிரிப்போடு அந்த முகத்தில் கொஞ்சம் யோசனையும் தெரிந்தது.

"இப்போதைக்கு நான் செய்து கொண்டிருக்கிற ஒரே 'எக்ஸர்சைஸ்' நடக்கிறதுதான். அதையும் விட்டு விடுகிறதற்கில்லை... பார்க்கலாம்" என்று சொல்லிக் கொண்டே நடந்து மேலே போய்விட்டான் நரசிம்மன்.

இதைச் சாக்கு வைத்தாவது சிறிதுநேரம் அவனோடு நின்று பேசலாம் என்று அவர் எதிர்பார்த்தது வீணாயிற்று. மறுபடியும் அதே கேள்வி அவர் மனத்தில் எதிரொலித்தது.

'உலகத்தின் சுகங்களையும், செல்வாக்கையும் முழுமையாக அனுபவித்தறியாத இந்த இருபத்தேழு வயது இளைஞன் மனிதர்களை எந்த அளவுகோலால் அளந்து பார்த்து மதிக்கிறான்?'

நரசிம்மன் ஒவ்வொரு முறை தன்னெதிரே நிற்கும்போதும் அவன் எதற்காகவோ தன்னைத் துச்சமாக மதிப்பதுபோல் எண்ணிக் கொண்டு கூசியது அவர் மனம். தம்முடைய பணம், பவிஷு, செல்வாக்கு, எதனாலும் தவிர்க்க முடியாத இந்தக் கூச்சத்தைப் பொறுத்துக் கொண்டு நிம்மதியாய் நிற்க முடியாமல் தவித்தார் அவர்.

இன்னொரு நாள் அவர் ரொம்பக் கலகலப்பாகச் சிரித்துக் கொண்டே டியூஷன் வாத்தியாருக்கு எதிரே போய், "பையனும் ரொம்ப ஆசைப்படறான். வாத்தியாரை ஒரு நாளைக்கு இங்கேயே சாப்பிடச் சொல்லணும்னு... இன்னிக்கு நீங்க இங்கேயே சாப்பிட்டுடுங்க..." என்றார் பொன்னம்பலம்.

"அதுக்கென்ன? இன்னொரு நாளைக்கிப் பார்க்கலாமே" என்று சுருக்கமாக முடித்துக்கொண்டு நடந்துவிட்டார் வாத்தியார். இப்போதும் அந்த இருபத்தேழு வயது இளைஞனால் அவர் ஏமாற்றப்பட்டார்...!

தன்னிடம் இப்படிச் சொல்லிவிட்டு நடந்து போன வாத்தியார், நேரே தோட்டக்கார முனியனிடம் போய்ப் பதினைந்து நிமிஷம் சிரித்துப் பேசிக் கொண்டிருந்து விட்டுக் கிளம்புவதையும் அவரே தம் கண்களால் பார்த்தார். அவர் மனம் மிகவும் வேதனைப்பட்டது.

'கேவலம் நூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற இந்த டியூஷன் வாத்தியாருக்கு இவ்வளவு திமிர் ஆகுமா?' என்று ஒரு கணம் பெரிதாகக் கோபம் மூண்டது அவர் மனத்தில். சற்று நிதானமாக யோசித்துப் பார்த்ததில் நரசிம்மனிடம் இதற்காக மட்டும் கோபப்படுவது நியாயமில்லை என்றும் தோன்றியது.

'ஒரு மனிதன் தன்மானத்தோடும் தன்னடக்கத்தோடும் நிமிர்ந்து நின்று சிரிப்பதைத் திமிர் என்று எப்படிச் சொல்ல முடியும்?'

இன்னொரு சமயம் சரியான கோடைவெயிலில் நடுரோட்டில் வேர்க்க விறுவிறுக்க நடந்து போய்க் கொண்டிருந்த நிலையில் நரசிம்மனைச் சந்தித்துக் காரில் ஏறிக் கொள்ளும்படி வேண்டினார் அவர்.

"நீங்க வழக்கமாகத் தட்டிக் கழிக்கிறாப்போல இப்பவும் தட்டிக் கழிக்க முடியாது. இந்த நேரத்துலே நடந்து போறது 'எக்ஸர்சைஸா' கவும் இருக்க முடியாது. யோசனை செய்யாமே ஏறிக்குங்க... சொல்றேன்... எங்கே போகணுமோ கொண்டு போய் விட்டுடறேன்..."

"வேறே எங்கேயும் ரொம்ப தூரத்துக்குப் போய்க் கொண்டிருக்கவில்லை. இதோ, பக்கத்திலே 'மெடிகல் ஸ்டோர்ஸ்' வரை போகணும். இங்கேயிருந்து இன்னும் பத்தடி தூரம். வீணாக உங்களுக்குச் சிரமம் எதுக்கு...? நடந்தே போயிடறேன்..."

இப்படிச் சொல்லிக் கொண்டே நடந்துவிட்டான் அவன். இப்போதும் அவன் அவரை ஏமாற்றிவிட்டான். தன்னை அந்த டியூஷன் வாத்தியார் மிகவும் கேவலமாகவோ, அலட்சியமாகவோ மதிக்கிறான் என்று உறுதியாக நம்பிக் கொண்டு அதற்காகக் குழம்பியது அவர் மனம்.

இந்த உலகத்தில் இதுவரை எத்தனையோ காரணங்களுக்காக எத்தனை பேர் அவரை மதிக்காமல் போயிருக்கிறார்கள். அதற்கெல்லாம் அவர் இவ்வளவு கவலைப்பட்டதில்லை. என்ன காரணமென்று சொல்லத் தெரியவில்லை. இவன் மட்டும் தன்னை மதிக்க வேண்டும்; தன்னோடு சிரித்துப் பேச வேண்டுமென்று அவருக்கே ஆசையாயிருந்தது. ஆனால் இந்த டியூஷன் வாத்தியாரோ அவர் நெருங்க நெருங்க அவரை விட்டு விலகி விலகிப் போகத் தொடங்கினான்.

இந்தப் புதிர் கடைசியில் ஒருநாள் அவிழ்ந்தது. ஏதோ ஒரு ஞாயிற்றுக்கிழமை. பொன்னம்பலம் அடையாறில் நாலைந்து பெரிய மனிதர்களைச் சந்தித்து விட்டுத் திரும்புகிறபோது கொஞ்சம் காற்றாடலாம் என்று 'பீச்' ரோட்டில் எலியட்ஸ் கடற்கரையை ஒட்டிக் காரை ஓரமாகப் 'பார்க்' செய்துவிட்டு இறங்கிப் போன சமயத்தில் நாலைந்து இளைஞர்கள் கும்பலாக உட்கார்ந்திருந்த ஓர் இடத்திலிருந்து அந்த வாத்தியாருடைய குரலும் ஒலித்தது. அந்த மங்கலான வெளிச்சத்தில் அவர்கள் பேச்சுக் காதில் விழுகிறாற்போலப் பத்துப் பன்னிரண்டு அடி தள்ளி முகத்தை வேறுபுறமாகத் திருப்பிக் கொண்டு உட்கார்ந்திருந்தார் அவர். ஆவேசம் வந்தவன் போல் அந்த வாத்தியார் கொதித்துக் கொதித்துப் பேசும் சொற்கள் அலை அலையாக வந்து அவர் காதில் விழுந்தன.

"இந்த மனுஷன் வீட்டுக்கு நான் டியூஷன் சொல்லிக் கொடுக்கப் போறதைப் பார்த்தே அக்கம் பக்கத்து நல்லவங்க பத்துப் பேர் என்னை வாயிலே வந்தபடி கன்னாப் பின்னான்னு பேசறாங்க... இந்த இலட்சணத்துலே... இவர் என்னடான்னா... என் கார்லே ஏறிக்கோன்னு வேறே குழையறாரு... இவரோட கார் வேளை கெட்ட வேளையிலே எங்கேயெங்கே எல்லாமே போகுது வருது... நாளைக்கொரு நட்சத்திரத்து வீட்டு வாசலே நிக்கிது. கூட ஏறிப் போறவனோ பொய்ச் சாட்சி சொல்றவன், கருப்பு மார்க்கெட் பணக்காரன், ஈவு இரக்கம் தெரியாதவன்னு... விதவிதமான அயோக்கியனுகளாயிருக்காங்க... நான்... ஏழை... பாமரன்... ஆனாலும் என்னைப் பத்தி நாலுபேர் என்னிக்கும் நல்லபடியாப் பேசணும்னு மட்டும் ஆசைப்படறவன். ஒருத்தனுக்குப் பணமும், வசதிகளும் இருக்கிறவரை மதிக்கிற மதிப்பை, அதெல்லாம் போயிட்ட அப்புறம் நாளைக்கு உலகம் மறந்து போயிடலாம். கருணை, இரக்கம், நேர்மை இப்படிக் குணங்களால்தான் மனிதர்கள் நிலையாகக் கணிக்கப்படுகிறார்கள்... ஏதோ வயிற்றைக் கழுவணும்னு எங்கே எங்கேயோ இருக்கோம்... சுயகௌரவத்தையும் காப்பாத்திக்க வேண்டியிருக்கு..."

... இதற்குமேல் கேட்டுக் கொண்டிருக்கப் பொறுக்காதவராய் பொன்னம்பலம் வேகமாக மணலிலிருந்து எழுந்து நடந்தார். அப்படி நடக்கும்போது அவர் மிகவும்

ஏழையாகிப் போயிருந்தார். அவருடைய நெடுநாள் சந்தேகத்துக்கு இன்று விடை கிடைத்துவிட்டது.

'உலகத்தின் சுகங்களையும், செல்வாக்கையும் முழுமையாக அனுபவித்தறியாத இந்த இருபத்தேழு வயது இளைஞன் மனிதர்களை எந்த அளவுகோலால் அளந்து பார்த்து மதிக்கிறான்?' என்று அவர் மனம் பல நாளாக அறிந்து கொள்ளத் தவித்த கேள்விக்கு அன்று விடை கிடைத்துவிட்டது. ஆனால் அந்த விடை அவரை இவ்வளவு பெரிய ஏழையாக்கியிருக்க வேண்டியதில்லை.

(1960)



## 58. அரை மணி நேரம்

**அ**லுவலகக் கட்டிடத்துக்கு எதிர்ப்புறத்து நடைபாதை மேடையில் கொடுக்காப்புளிப் பழம் கூறு வைத்து விற்றுக் கொண்டிருந்த சூசையம்மாக் கிழவியிடம் அவசரம் அவசரமாக அரையணாவுக்கு நல்ல பழமாக வாங்கிக் கால் சட்டைப் பையில் திணித்துக் கொண்டான் பழநி.

பைநிறையக் கொடுக்காப்புளிப் பழத்தையும், மனம்நிறைய ஆசையையும் திணித்துக் கொண்டு அவன் நிமிர்ந்தபோது அவலுவலகத்துக்கு உரிமையாளரான முதலாளியின் கார் மிக அருகில் வந்து கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டான். மனம் 'அவர் தன்னைப் பார்த்திருப்பாரோ' என்று பயந்தது. உடல் உதறியது. உள்ளும் புறமும் நடுக்கம். ஒரே ஓட்டமாக வீதியைக் கடந்து அலுவலகத்துக்குள் நுழைந்து முதலாளியின் அறை முன் தனக்காக இருந்த ஸ்டூலில் உட்கார்ந்துகொண்ட பின்னே நிம்மதியாக மூச்சு வந்தது பையனுக்கு.

'டக்டக்' என்று பூட்ஸ் ஒலிக்கக் கம்பீர நடை நடந்து உள்ளே நுழையப்போகும் முதலாளியை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அவன் 'சல்யூட்' அடித்து எழுந்து நின்று அவரை வர்வேற்க ஏற்றவாறு உடனே தன்னைத் தயாராக்கிக் கொண்டான்.

அவர் வருவதற்குத் தாமதமாயிற்று. அவன் அவருடைய காரை எந்த இடத்தில் பார்த்தானோ, அங்கிருந்து அலுவலக வாயிலுக்கு வர இரண்டு மூன்று விநாடிகள்கூட ஆகாதே! 'ஏன் தாமதம்' என்று விளங்காமல் வெளியே வந்து எட்டிப் பார்த்தான் பையன் பழநி. கார் எதிர்ப்புறத்து நடைபாதை ஓரம் நின்றது. பழநியின் உடல் வேர்த்தது; நடுங்கியது. 'தான் அங்கே நின்று பழம் வாங்கியதை' அவர் காரில் வரும்போதே பார்த்துவிட்டார் போலிருக்கிறது. அதுதான் அங்கே இறங்கிச் சூசையம்மாக் கிழவியிடம், "அந்தக் கழுதை பழநிப் பயல் இங்கே எதற்கு வந்தான்?" என்று மிரட்டிக் கேட்கப் போகிறார். அவள் உள்ளதைச் சொல்லிவிடப் போகிறாள். இங்கே வந்து என்னை உதைக்கப் போகிறார். 'ஏண்டா, தடிப்பயலே! உன்னை இங்கே வேலைக்கு வைத்துக் கொண்டிருக்கிறேனா, அல்லது கொடுக்காப்புளிப் பழம் இருக்கிற குப்பைக் கடைகளையெல்லாம் தேடிக் கொண்டு ஓடுவதற்கு வைத்திருக் கிறேனா?' என்று காய்ச்சி எடுக்கப் போகிறார்.

இவ்வாறு எண்ணி நடுங்கினான் பையன். சிறிது நேரத்தில் கார் அலுவலக வாசலில் வந்து நின்றது. அவர் இறங்கி வந்தார். பழநி எழுந்து விறைப்பாக நின்று 'சல்யூட்' அடித்தான். கால் சராயிலிருந்த கொடுக்காப்புளி நுனி அவன் தொடையில் குத்தியது.

அவர் அவனைக் கவனிக்காததுபோல் ஸ்பிரிங் கதவைத் திறந்த கொண்டு தமது அறைக்குள் நுழைந்தார். முகம்கூட வழக்கத்தைக் காட்டிலும் சற்றக் கடுகடுப்பாகவே அன்று இருந்ததைப் பழநி பார்த்தான். பழநியின் பயம் அதிகமாயிற்று. மனத்தில் பலவிதமான ஆசை அவலக் களங்கங்களை வைத்துக் கொண்டு தவம் செய்ய முடியாத துறவியைப் போல் பையில் கொடுக்காப் புளியை வைத்துக் கொண்டு பயமின்றிஅங்கே நிற்க முடியாது போலிருந்தது அவனுக்கு. 'அவர் கோபமாக உள்ளே போயிருக்கிறார்; அதற்குத் தானே காரணமாக இருக்கலாம். திடீரென்று கூப்பிட்டு 'கால்சராயில் என்னடா?' என்று சோதனை போட்டு மானத்தை வாங்கினாலும் வாங்கிவிடுவார். எதற்கும் முன்னெச்சரிக்கையாக இந்தப் பழத்தை வேறு எங்கேயாவது எடுத்து வைத்துவிட வேண்டும்' என்று விழிப்பாக நினைத்துக்கொண்டு ஒரு தீர்மானத்துக்கு வந்தான் பழநி.

'ஆபீஸ் பையன்' என்ற சிறிய பதவிக்குரிய அவனது ஆசனமாகயிருந்த ஸ்டூலின் அருகே குப்பைக் காகிதங்களைப் போடும் கூடை ஒன்று இருந்தது. அதில் அடியில் தன் பையிலிருந்த கொடுக்காப்புளிப் பழங்களை எடுத்துப் போட்டு மேலே குப்பைக் காகிதங்களை இட்டு மூடினான்.

ஒவ்வொரு நாளிலும், ஒவ்வொரு மணி நேரத்திலும் இலட்சக்கணக்கில் பணம் புரளும் பெரிய கம்பெனியின் அலுவலகம் அது. 'கோடீசுவரராகிய அந்த முதலாளிக்கு ஆபீஸ் பையனாக இருப்பதிலுள்ள பெருமையைக் கேவலம் கொடுக்காப்புளிப் பழம் தின்கின்ற ஆசையினால் கெடுத்துக் கொள்ளலாமா?' என்று நினைக்கும்போதே தான் செய்தது தப்பு என்று உணர்ந்தான் பழநி.

"பாய்...!"

உள்ளேயிருந்து முதலாளியின் கடுமையும், கண்டிப்பும் நிறைந்த குரல் அவனை அழைத்தது. அவன் பயந்து கொண்டே உள்ளே விரைந்தான். அவருடைய மேஜை மேல் 'செக்' புத்தகங்கள் விரிந்து கிடந்தன. பேனா, திறந்து வைத்திருந்தது. கடிதங்கள் அடுக்காக இருந்தன. இரண்டொரு பைல்கள் விரித்து வைக்கப்பட்டிருந்தன. அவர் பழநியிடம் கடுகடுப்போடு சொன்னார்.

"இன்னும் அரை மணி நேரத்துக்கு யாரையும் உள்ளே விடாதே. 'ஐயா பிஸி'யாயிருக்கிறார். இப்போது பார்க்க முடியாது என்று சொல்லி அனுப்பிவிடு. 'டெலிபோன் ஏதாவது வந்தாலும் அரைமணி நேரத்துக்கப்புறம் கூப்பிடச் சொல்லி விடு. முக்கியமான வேலையாயிருக்கிறேன் நான்."

"சரி, சார்!" என்று கூறிவிட்டு வெளியே வந்து தன் பதவியின் அடக்குமுறையை நிலைநாட்டச் சரியான சமயம் கிடைத்துவிட்டதுபோல் கர்வத்துடன் ஸ்டூலில் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"ஏண்டா பழநி! ஐயா உள்ளே இருக்காரா? இந்தக் கடிதங்களிலெல்லாம் கையெழுத்து வாங்கணும்" என்று உரிமையோடும் ஒரு கொத்து டைப்

காகிதங்களோடும் உள்ளே நுழைய முயன்ற ஹெட்கிளார்க் குருமூர்த்தியைப் பழநி தடுத்து நிறுத்தினான்.

"இப்போ ஐயாவைப் பார்க்க முடியாதுங்க. அரைமணி நேரங் கழிச்சு வாங்க..."

ஹெட்கிளார்க் திரும்பிப் போனார்.

வாயிலில் கார் வந்து நின்றது. கம்பெனி 'பார்ட்னர்' ஒருவர் வந்து இறங்கினார்.

"விஸிட்டர் ரூமிலே இருங்க. ஐயாவைப் பார்க்க அரைமணி ஆகும்" என்று சொல்லி அவரை விஸிட்டர் ரூமில் கொண்டு போய் உட்கார வைத்தான் பழநி.

வீட்டிலிருந்து முதலாளியின் மனைவி டெலிபோன் செய்து கூப்பிடுவதாக 'டெலிபோன் ஆபரேட்டர்' வந்து கூறினான். "அரைமணி நேரம் கழித்துக் கூப்பிடச் சொல்லி அப்புறம் ஐயா ரூமிலே இருக்கிற போனுக்குப் போடுங்க" என்று சொல்லி அவனை அனுப்பினான் பழநி. ஒரு பெரிய 'லெட்ஜரை'த் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வந்த 'காஷியரையும்' 'பைல்'களோடு வந்த 'அக்கௌண்டெண்டையும்' திருப்பி அனுப்பினான் பழநி.

அப்பாடா! ஆபீஸையே ஒரு கலக்குக் கலக்கிவிட்ட அந்த அரைமணி நேரம் ஒருவாறு கழிந்தது.

"பழநி!"

பழநி உள்ளே ஓடினான்.

"இந்தா! இதைக் கொண்டு போய் வெளியிலே போடு!" ஒரு காகிதத்தில் எதையோ சுருட்டிக் கசக்கி அவன் கையில் கொடுத்தார் முதலாளி.

பழநி அதை வாங்கிக் கொண்டு வெளியே வந்தான். தூக்கி எறியுமுன் என்னவோ ஒரு சந்தேகம் ஏற்பட்டது. பிரித்துப் பார்த்தான்.

கொடுக்காப்புளித் தோடுகளையும் விதைகளையும் வைத்துச் சுருட்டியிருந்தது காகிதம். பழநிக்கு மயக்கம் போட்டுவிடும் போலிருந்தது. அரைமணி நேரம் உள்ளே நடந்த வேலை இதுதானா? என்று மெல்லச் சிரித்துக்கொண்டான் அவன். பின்பு முதலாளியின் பேட்டிக்குக் காத்திருந்தவர்களை ஒவ்வொருவராக உள்ளே அனுப்பிவிட்டுக் குப்பைக் கூடையிலிருந்த கொடுக்காப்புளிப் பழங்களை வெளியே எடுத்துத் தைரியமாகத் தன் ஆசனத்திலிருந்தபடியே இரசித்துச் சாப்பிடலானான்.

(1960)

## 59. சொல்லாத ஒன்று!

**ந**கரத்தின் ஒதுக்குப்புறமாக இருந்தது அந்த மைதானம். நாற்புறமும் இரும்பு வேலி. நடுவில் திண்ணை போல் அகன்ற, உயரமான ஒரு சிமிண்டு மேடை. மைதானத்தின் பின்புறம் சேறும் சகதியுமாக இருந்த பள்ளத்தில் ஏழெட்டுக் குடிசைகள். அவைகளிலும் மனித உயிர்கள் குடியிருக்கின்ற விந்தையை உலகத்துக்குச் சொல்லுவது போலச் சமையல் செய்யும் அடுப்புப் புகைச் சுருள்கள் கூரைக்கு மேல் படர்ந்து வெட்டவெளியில் கலந்து கொண்டிருந்தன.

அது அந்த ஊர் நகரசபையாருக்குச் சொந்தமான மைதானமே! அந்தச் சிமிண்டு மேடைகூட நகர சபையார் கட்டியதுதான். பொதுக்கூட்டங்கள் போடுகிறவர்கள் அதற்கென்று நகரசபையார் நிர்ணயித்திருக்கும் பணத்தைக் கட்டி முன் அநுமதி வாங்கிக் கொண்டால் அந்த இடத்தில் கூட்டம் நடத்தலாம்.

அநேகமாக ஒவ்வொரு நாளும் அந்த மைதானத்தில் ஏதாவதொரு கூட்டம் நடந்து கொண்டுதான் இருக்கும். பல ஆயிரக்கணக்கான மக்கள் உட்கார வசதியுள்ள அந்த மைதானத்தில் எப்போது கூட்டமானாலும் ஜனக்கும்பல் நிரம்பி வழியும். மைதானத்துக்கும் குடிசைகளுக்கும் இடையே ஒரு பெரிய சாக்கடை. மைதானத்துக்கு மிக அருகே ஒட்டினாற்போல், பக்கத்தில் இருந்தது சுடலையாண்டியின் குடிசை.

சுடலையாண்டி மில் கூலி. வயதான கிழவன். ஒற்றைக் கட்டை. அவனுக்கு ஒரே பெண். அவளைப் பக்கத்து ஊரில் ஒரு பஸ் கண்டக்டருக்குக் கட்டிக் கொடுத்திருந்தான். ஒரு பேத்தி பிறந்து ஆறேழு வயதுச் சிறுமியாக வளர்ந்திருந்தாள். கிழவனைப் பார்ப்பதற்காக எப்போதாவது பேத்தியும் பெண்ணும் வந்து போவார்கள். அன்றைக்கும் கிழவனைப் பார்க்க இருவரும் வந்திருந்தார்கள்.

மாலை ஏழு மணி. கிழவன் சுடலையாண்டி பேத்தியை மடியில் தூக்கி வைத்துக் கொண்டு குடிசை முகப்பில் உட்கார்ந்தான். மைதானத்தில் ஏதோ பொதுக்கூட்டம் நடந்து கொண்டிருந்தது. பேத்திக்காக வாங்கி வந்திருந்த மிட்டாய்ப் பொட்டலத்தை அதன் கையில் பிரித்துக் கொடுத்துவிட்டுச் செவிகளைக் கூட்டத்து ஒலிபெருக்கியின் குரலில் செலுத்தினான் கிழவன்.

"தாத்தா! மிட்டாயி இனிச்சுக் கெடக்கு..."

"இனிக்குதா? அவ்வளவும் உனக்குத்தான் கண்ணு! நல்லாச் சாப்பிடு!"

சிறுமி எதையோ கவனித்து மோந்து வாசனை தெரிந்து கொண்டவள்போல் முகத்தைச் சுளித்தாள். திடீரென்று மிட்டாய்ப் பொட்டலத்தைக் கீழே போட்டுவிட்டு இரண்டு கைகளாலும் மூக்கை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள்.

"என்ன கண்ணு? ஏன்?"

"ஒரே நாத்தமா இருக்குது தாத்தா..."

"நாத்தமாவது, ஒண்ணாவது; எனக்குத் தெரியலியே, அம்மா?"

"இல்லே தாத்தா! நாறுது!" பிடிவாதமாகச் சொன்னாள்.

"ஒண்ணும் நாறாது... நீ மிட்டாயைத் தின்னு..."

கிழவன் மிட்டாய்ப் பொட்டலத்தைக் கீழே இருந்து சிறுமியின் கையில் எடுத்துக் கொடுத்துவிட்டுப் பேச்சைக் கேட்பதில் கவனம் செலுத்தினான். சொற்பொழிவாளர் ஆவேசமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

"தாத்தா! தாத்தா! அதோ பாரேன்!" சிறுமி அவருடைய கவனத்தை இழுத்தாள்.

"எங்கே கண்ணு பார்க்கச் சொல்றே?"

"அதோ அங்கே!... சாக்கடைக்கு அந்தப் பக்கமா மைதானத்து வேலியை ஒட்டினாற்போலப் பாரு."

"அங்கே என்னவாம்? கூட்டம் நடக்குது! பேசுறாங்க... உனக்குப் புரிஞ்சா நீயும் கேக்கலாம்..."

"அது இல்லே தாத்தா! இன்னும் நல்லாப் பாரு!" சிறுமி தன் கையை நீட்டிச் சுட்டிக் காட்டினாள். கிழவனுக்குக் கண்பார்வை கொஞ்சம் மங்கல். 'குழந்தை சொல்கிறாளே! ஒன்றுமில்லாமல் சொல்லமாட்டாள்!' என்று அவளை மடியிலிருந்து கீழே இறக்கிவிட்டு நான்கைந்து அடி முன்னால் நடந்து போய் உற்றுப் பார்த்தான். அந்த இடத்தில் ஒரு பெரிய நாய் செத்துக் கிடந்தது. கிழவன் நாற்றம் பொறுக்க முடியாமல் மூக்கைப் பிடித்தான். குழந்தைக்கு இருக்கும் அறிவுக்கூர்மையை வியந்து கொண்டான்.

குழந்தை இவ்வளவு சுலபமாக இந்த நாற்றத்தை உணர்ந்து கொண்டாளே? என் மூக்கில் மட்டும் இது ஏன் இவ்வளவு நாழிகை உறைக்கவில்லை? இப்படித் தனக்குத் தானே நினைத்துக் கொண்ட போது அவனுக்கு வெட்கமாக இருந்தது. வெட்கந்தானே தவிர ஆச்சரியப்படவில்லை! காரணம்? அங்கே அப்படிச் செத்துக்கிடப்பதெல்லாம் சர்வ சாதாரணம்! புதுமையும் அல்ல. நாய் என்ன பிரமாதம்? சில சமயங்களில் மனிதர்களே அந்த நிலையில் கிடப்பது உண்டு. போலீஸ் வரும்; விசாரணைகள் தடபுடல் படும். அப்படிப்பட்ட ஒரு வட்டாரம் அது. கிழவன் திரும்பி வந்து குழந்தையை முன்போல் மடியில் எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தான்.

"என்ன தாத்தா? பார்த்தியா அதை?"

"பார்த்தேன். நாய் செத்துக் கிடக்கு!"

"அதுதான் நாறுது, தாத்தா!"

"சரி, சரி, நீ மிட்டாயைத் தின்னு; அது கிடக்குது."

குழந்தையின் பேச்சை ஒரு வழியாக அடக்கிவிட்டு, நிலையாக மேடையில் நடந்து கொண்டிருந்த சொற்பொழிவில் கவனத்தைச் செலுத்தினான் அவன்.

அது ஒரு பாராட்டுக் கூட்டம். தேர்தலில் வெற்றி பெற்ற ஒருவரைப் பாராட்டிப் பலர் பேசிக் கொண்டிருந்தார்கள். எல்லாரும் ஒரே மாதிரித்தான் பேசினார்கள். அதாவது வெற்றி பெற்றவரைப் புகழ்ந்தார்கள்.

கிழவன் கூட்டம் முடிந்ததும் பேத்தியைத் தூக்கிக்கொண்டு இராச் சாப்பாட்டுக்காகக் குடிசைக்குள் போனான். சாப்பாடு முடிந்ததும் படுத்துக் கொண்டான்.

மறுநாள் மாலை. அதேபோல் கிழவன் பேத்தியோடு குடிசை முகப்பில் வந்து உட்கார்ந்தான். அன்றும் மைதானத்தில் வேறொரு பொதுக்கூட்டம் நடந்து கொண்டிருந்தது.

பேத்தி முகத்தைச் சுளித்தாள். மூக்கை இறுக்கிப் பிடித்தாள்.

"தாத்தோய்..."

"என்ன கண்ணு?"

"ரொம்ப நாறுது!"

"ஒண்ணும் நாறாது! சும்மா இரு!"

கிழவன் கூட்டத்துச் சொற்பொழிவில் கவனம் செலுத்தியிருந்தான். அன்று நடந்து கொண்டிருந்தது ஒரு பிரமுகரின் மரணத்துக்காக அநுதாபக் கூட்டம். அவருக்குப் பிறகு பூமியில் மனிதரே இல்லை; மனிதத்தன்மையே செத்துப்போய்விட்டது என்கிற தோரணையில் எல்லோரும் வருத்தத்துடன் பேசினார்கள். அன்றும் ஒரே புகழ்ச்சிதான்.

"தாத்தா! அந்த நாயி இன்னும் அங்கேயே கெடக்கு. நாத்தம் வீட்டுலே உட்கார விடமாட்டேங்குது!"

கிழவன் கவனம் கலைந்து குழந்தை கூறியது உண்மையா என்று அந்த இடத்தில் பார்த்தான். செத்த நாய் அங்கேயே கிடந்தது.

"பொறுக்க முடியலே தாத்தா! உள்ளே போயிறலாம்."

"சரி! வா... இல்லாட்டி உன் தெணதொணப்புச் சகிக்க முடியாது."

கிழவன் குழந்தையோடு குடிசைக்குள் போனான்.

மூன்றாம் நாள் மாலை. அன்று மைதானத்தில் ஒரு பிரம்மாண்டமான இலக்கியக்கூட்டம் நடைபெற்றது. சிலப்பதிகாரத்தைப் பற்றி ஒருவரும் திருக்குறளைப் பற்றி ஒருவரும் முழக்கமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

கிழவன் பேத்தியை எடுத்துக் கொண்டு வாயிற்புறம் வந்தான்.

"தாத்தா... நான் உள்ளே போறேன்... வாந்தி எடுக்க வருது!"

*உண்மையாகவே குழந்தைக்குக் குமட்டி ஒக்காளித்தது. இரண்டு கைகளாலும் அவள் மூக்கு இருந்த இடத்தையே மூடிக் கொண்டிருந்தாள். கிழவன் பார்த்தான். செத்த நாய் அங்கேயே கிடந்தது. அவனுக்கு மட்டும் நாறாதா? ஆனால் அவனுக்கு நாற்றத்தில் இருந்தே பழக்கம். அதனால் அது ஒரு கஷ்டம் அல்ல. ஒருவேளை பழக்கமில்லாத காரணத்தால் வாசனை அந்தக் கஷ்டத்தை உண்டாக்கினாலும் உண்டாக்கலாம். அன்றும் பாதிக் கூட்டம் நடந்து கொண்டிருந்தபோதே குழந்தையோடு உள்ளே போய்விட்டான் கிழவன்.*

*நான்காம் நாள் ஒரு தெருக்கூத்து நாடகம் அந்த மைதானத்தில் நடந்தது. கிழவன் ஆவலோடு வந்தான். பேத்தியும் வந்தாள். பாதியிலேயே வயிற்றைக் குமட்டிக் கொண்டு வந்தது சிறுமிக்கு. கிழவன் மடியிலேயே வாந்தி எடுத்துவிட்டாள். கிழவன் பார்த்தான். செத்த நாய் அங்கேயே கிடந்தது. முழுதும் பார்க்காமலே குழந்தையோடு குடிசைக்குள் போய்விட்டான் கிழவன்.*

*ஐந்தாம் நாள் மாலை சுகாதார வாரக் கொண்டாட்டம். மைதானத்தில் பிரம்மாண்டமான கூட்டம். 'சுத்தம் நமது பிறப்புரிமை' என்று முழங்கிக் கொண்டிருந்தார் ஒரு பேச்சாளர்.*

*"தாத்தா! இத்தினி பேச்சுப் பேசுறாங்களே... நாலு நாளா அந்தச் செத்த நாயி அங்கேயே கெடந்து நாறுதே? பேசுறவங்க, கேக்கறவங்க யாருக்குமே அது நாறலைன்னு அர்த்தமா?" பேத்தி கிழவனைக் கேட்டாள்.*

*கிழவன் சிரித்தான்!*

*"அவங்களுக்கு அந்த நாத்தம் உறைக்கலே கண்ணு! அதனாலேதான் ஒருத்தரும் அதைச் சொல்லலே. போறாங்க... போ... நீ வா... நாம் குடிசைக்குள்ளே போயிடலாம்!" கிழவன் குழந்தையோடு குடிசைக்குள் போய்விட்டான்.*

(1960)

## 60. நினைவில் இருந்து...

1

"இதோ பாருங்கள்! இன்றைக்கு நீங்கள் சினிமாவுக்குக் கூட்டிக்கொண்டு போகவில்லையானால்...?"

"என்ன செய்துவிடுவாயாம்...?"

"ஒரு பெரிய புரட்சி நடக்கத்தான் போகிறது..."

"நீ ஒரு புரட்சிக்காரன் தங்கைதானே? அந்த வாசனை போய்விடுமோ?"

ராஜம் பதில் சொல்லவில்லை. உடனே அவள் கண்கள் கலங்கிவிட்டன. நான் பேசியதென்னவோ விளையாட்டிற்காகத்தான். ஆனால், சந்தர்ப்பம் என் பேச்சைப் புண்ணில் கோல்விட்டுக் கிளறியதுபோல மாற்றி அமைத்துவிட்டது. என் எதிரே தூணைப் பிடித்துக்கொண்டு நின்றவள், கலங்கிய கண்களோடு மோட்டு வளையை வெறித்துப் பார்த்தாள். அப்படியே அசந்து போய் உட்கார்ந்து விட்டாள்.

காகிதத்தில் குத்துவதற்காகக் குண்டூசியை எடுத்துத் தவறுதலாகக் கையில் குத்திக்கொண்டது போலாயிற்று என் நிலை. அவள் என்னோடு இணைய நேர்ந்த அந்தப் பழைய சம்பவம் இப்போதும் அவள் நினைவுக்கு வந்திருக்க வேண்டும். விளையாட்டாகக் கூறுவதாக எண்ணிக்கொண்டு, அதை நினைவு மூட்டிவிட்டது என் தப்புத்தான்!

என்ன செய்யலாம்? வாய் போன போக்கில் விட்டு விட்டால் அப்படித்தான். குப்பையைக் கிளறியபோது பூரானோ, தேளோ கிளம்புகிற மாதிரிச் சில சமயங்களில் பேச்சிலும் நாம் விரும்பாத அபத்தங்கள் வந்துவிடுகின்றன.

"ராஜம்! இதென்ன அசட்டுத்தனம்? நான் ஏதோ விளையாட்டுக்குச் சொல்லிவிட்டேன் என்றால், அதற்காக இப்படியா அழுவார்கள்? அசடு... திரும்பத் திரும்ப அதை நினைக்காதே! நினைத்தால் துன்பந்தான்... மறந்துவிடு...."

"........"

"அழாதே பைத்தியம். பகல் ஆட்டத்துக்கே போகலாம், எழுந்திருந்து வா. கண்ணைத் துடைத்துக் கொள்."

என் சமாதானம் பலிக்கவில்லை. அவள் அந்தப் பழமையின் மோன மூட்டத்தில் சிக்கிச் சோக இருளில் ஒதுங்கி விட்டாள்.

வேறு வழியில்லை! அவளோடு அவளாக நானும் அந்த இருளில் ஒதுங்கினேன்! நினைவிலிருந்து அந்தக் கரையைப் புரட்டிப் பார்க்கத் தொடங்கினேன்.

## 2

ஒரு வகையில் அது அனுபவம்; இன்னொரு வகையில் அவஸ்தை. நான் மட்டும் ஸி.ஐ.டி.யாகப் பதவியேற்றுச் சரித்திரப் பிரசித்திபெற்ற அந்த ஆகஸ்டுப் பேராட்டத்தின் போது அரசாங்க சேவகம் புரிந்திராவிட்டால், இதோ இந்த அழகி ராஜம் எனக்கு மனைவியாக வாய்த்திருக்க மாட்டாள்.

எனக்கு அப்போது இருபத்தாறு வயது. 'இன்டர்' பாஸ் செய்துவிட்டுப் போலீஸில் ஸி.ஐ.டி.இலாகாவில் நுழைத்திருந்தேன். வயதான தாய், நான், இருவரும்தான் என் குடும்பம். கலியாணத்தைப்பற்றி அம்மா அடிக்கடி நச்சரித்துக் கொண்டிருந்தாள். நான்தான் பிடி கொடுக்காமல் கடத்திக் கொண்டே வந்தேன்.

மூலைக்கு மூலை தேசபக்தர்களின் சதிக் கூட்டங்கள், ரயிலுக்கு வெடி, பாலத்துக்கு வெடி, போலீஸ் ஸ்டேஷனுக்கு நெருப்பு என்று எங்கு பார்த்தாலும் ஒரே பயங்கரம். ஒரு விநாடி ஓய்வு கிடையாது எங்கள் இலாகாவுக்கு. ஓய்வு ஒழிவின்றி அலைச்சலும் சுற்றலும், உளவு வேட்டையுமாக வாயில் ஈ புகுந்தது தெரியாமல் ஓடிக்கொண்டிருந்தோம். போலீஸ் இலாகாவுக்கு அது ஒரு துரதிர்ஷ்டம் பிடித்த காலமாக வாய்த்திருந்தது என்று பயப்படுமளவிற்கு நிலைமை மோசமாக இருந்தது. உயிரைத் திரணமாக மதித்து வெள்ளைக்காரனுக்கு ஊழியம் புரிந்தோம். அந்தச் சமயத்தில் நான் மணியாச்சி போலீஸில் ஸி.ஐ.டி. இன்ஸ்பெக்டராக இருந்தேன்.

இன்று, இப்போது நினைத்துப் பார்த்தால், அந்தத் தேசீய இயக்கமும் புரட்சியும் புனிதமான சுதந்திர வேள்வியாகத் தோன்றுகிறது. அன்று வெள்ளைக்காரன் ஏவிய வேட்டை நாய்களாக இருந்தோம் என்பதை எண்ணிப் பார்க்கும்போது, வெட்கமாகக்கூட இருக்கிறது.

ஆகஸ்டு மாத நடுவில் ஒரு நாள். இப்பேது தாழையூற்றுக்கும் திருநெல்வேலிக்குமிடையே கம்பீரமாக சிமெண்ட் தொழிற்சாலைகள் நிமிர்ந்து நிற்கும் பிரதேசம் அந்தக் காலத்தில் ஒரே கரிசல் காடு. கருவேல மரங்களும் உடை மரங்களும் பகலிரவு வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாதபடி அடர்ந்து, காடு மண்டிக் கிடந்தன. அது கந்தக பூமி. ஒரே வெப்பும் வெடிப்புமாக இருக்கும். அது அசல் ஜாதி கருநாகங்கள் வசிப்பதற்கு இதமான பூமி.

மேற்படி கருவேலங்காட்டின் இடையே தேசபக்தர்களின் சதிகளுக்கு உபயோகப்படும் நாட்டு வெடிகுண்டுகளைச் செய்து வருவதாக ஒரு உளவு கிடைத்திருந்தது. கடம்பூரைச் சேர்ந்த இளைஞன் ஒருவன், இதில் முக்கியஸ்தனாகப் பொறுப்பேற்றுக்கொண்டு கருவேலங்காட்டிலேயே தங்கி, வசித்து வருவதாகவும் நம்பத் தகுந்த ஆள் மூலம் தகவல் எட்டியிருந்தது. இலாகா மேலதிகாரி, இதன் முழு விவரங்களையும் அறிந்து வரவேண்டிய பொறுப்பை என் தலையில் கட்டினார். நான் துணைக்கு ஒரு கான்ஸ்டபிளையும் அழைத்துக்கொண்டு போனேன். தாழையூற்றுக்கு

அருகிலுள்ள குமிழங்குளம் கிராமத்தில் ‘கங்கை கொண்டான்’ரூரல் ஸ்டேஷனைச் சேர்ந்த வேறு ஒரு கான்ஸ்டபிளும் ‘மஃப்டியில்’ காத்திருந்தான். அவன் அந்தப் பிராந்தியத்தில் போக வர வழி விவரங்கள் தெரிந்தவனாகையால், எங்களுக்கு உதவி செய்வதற்காக அனுப்பப்பட்டிருந்தான்.

காலை பதினொரு மணி சுமாருக்குக் குமிழங்குளத்திலிருந்து கருவேலங்காட்டிற்குப் புறப்பட்டோம்.

“ஏனப்பா! கருநாகம் அதிகமென்கிறார்களே? பத்திரமான வழியில் கூட்டிக்கொண்டு போ! புற்றும் பொந்துமாக இருக்கிற வழி வேண்டாம்” - என்று கங்கை கொண்டானிலிருந்து வந்தவனைப் பார்த்துக் கூறினேன், நான்.

“கருநாகத்துக்குக்கூட அவ்வளவாகப் பயப்படவேண்டியதில்லை சார்! அந்தக் கடம்பூர்ப் புரட்சிக்காரன் எமகாதகப் பேர்வழி! சர்க்கார் கண்ணில் மண்ணைத் தூவுவதில் பலே ஆள் சார்! அவனுக்குத்தான் இப்போது நாம் பயப்பட வேண்டும்” என்றான் அவன்.

“அது சரி; அந்தக் கடம்பூர் ஆசாமியைப் பற்றி உனக்கு வேறு விவரங்கள் தெரியுமா? தெரியுமானால், மறைக்காமல் என்னிடம் சொல்லு!”

“தெளிவாகத் தெரியாது சார்! ஆனாலும் இன்னாராகத் தான் இருக்க வேண்டும் என்று என் வரையில் ஒரு அனுமானம் இருக்கிறது...”

“அந்த அனுமானத்தைத்தான் எனக்கும் கொஞ்சம் சொல்லேன்.”

“கடம்பூரில் பழம் பெருமை வாய்ந்த ஒரு பெரிய மிராசுதார் குடும்பம் இருந்தது. நாராயணய்யர் என்று பேர் சொன்னால் தெரியும். மனுஷன் கடைசிக் காலத்தில் குடி, கூத்தி, சீக்கு என்று சொத்தையெல்லாம் பாழாக்கிவிட்டுப் போய்ச் சேர்ந்தார். அவர் மனைவியும் பன்னிரண்டு வயதுப் புதல்வன் வேங்கடகிருஷ்ணனும், ஏழு வயதுப் பெண் ராஜம்மாளும் நிராதரவாகப் போயினர். மிச்சம் மீதியை விற்றுக் கடம்பூர் ரயில்வே ஸ்டேஷனருகில் ஒரு பலகாரக் கடை வைத்தாள் அந்த அம்மாள். தாயும் பெண்ணுமாகச் சுடச் சுடப் போளி, வடை, சுண்டல் என்று கண்ணாடிப் பெட்டியை நிரப்பிக் கொடுப்பார்கள். வேங்கடகிருஷ்ணன் ரயில்வே ஸ்டேஷனுக்குள் போய் விற்றுவிட்டு வருவான். ஜீவனம் இந்த வழியில் நடந்துகொண்டிருந்தது. பெண்ணையும் பிள்ளையையும் எப்படியாவது ஆளாக்கி விட்டுவிட வேண்டுமென்பதற்காகப் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையைச் சோதிக்கும் பலகாரக் கடைத் தொழிலில் ஈடுபட்டிருந்தாள் விதவைத் தாய்...”

“என்னப்பா, வெடிகுண்டு செய்யும் பேர்வழியைப் பற்றிக் கேட்டால் நீ ஏதோ கதை அளக்கிறாய்?”

“கதை இல்லை சார், அவனைப் பற்றித்தான் சொல்கிறேன்... போகப் போகப் புரிந்து கொள்வீர்கள். கொஞ்சம் பொறுமையாகக் கேட்டுக் கொண்டு வாருங்கள்.”

“சரி! சொல்! பார்ப்போம்.”

"இந்த வேங்கடகிருஷ்ணனுக்கு வயது ஆக ஆகப் பழக்க தோஷத்தால் சுதேசிப் போராட்டத்தில் ஈடுபாடு ஏற்பட்டு விட்டது. கடைக்கு அடிக்கடி சாப்பிட வந்து போகும் சில தேசபக்தர்கள், அவன் ஆர்வத்தை இந்த வழியில் திருப்பி விட்டுவிட்டார்கள். நாளடைவில் பெரிய பெரிய தேசபக்தர்களுடன் கூட அவனுக்குப் பழக்கம் ஏற்பட்டுவிட்டது. 1932-இல் அவனைக் கைது செய்து, இரண்டு மாத காலம் ரிமாண்டில் வைத்திருந்து விட்டுவிட்டோம். கொஞ்ச நாளில் அவன் தாயார் காலமானபின் பலகாரக் கடை நின்று விட்டது. தங்கையை ஓர் உறவினர் வீட்டில் ஒப்படைத்துவிட்டு, ஆள் தலைமறைவாக இருக்க ஆரம்பித்தான். பெரிய பெரிய சதி வேலைகளிலெல்லாம் வேங்கட கிருஷ்ணன் முக்கியப் பொறுப்பு வகித்திருக்கிறான்."

"இந்த வெடிமருந்துச் சதியிலும் அவன்தான் முக்கிய ஆளாக இருந்து வேலை செய்கிறான் என்பது உன் அபிப்பிராயம்; அப்படித்தானே?"

"ஆமாம் சார்! இந்தச் சந்தேகத்துக்கு ஒன்றிரண்டு தடையங்களும் கிடைத்திருக்கின்றன. அந்தப் பையனின் தங்கை ராஜம் இப்போது இங்கே தாழையூத்து அக்கிரகாரத்தில்தான் ஒரு வீட்டில் வேலை செய்து கொண்டிருக்கிறாள். இன்னும் கலியாணமாகவில்லை. பதினெட்டு வயது. குதிரை மாதிரி மளமளவென்று வளர்ந்துவிட்டாள். அவன் அடிக்கடி இந்தக் கருவேலங் காட்டிற்குள் சாப்பாடு கொண்டு போய்விட்டு வருவதைக் காண்கிறேன். இதனால் இதெல்லாம் வேங்கடகிருஷ்ணன் வேலையாகத்தான் இருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது சார்."

கான்ஸ்டபிள் கூறிய விவரங்களைக் கேட்டதும், என் மனம் வேங்கடகிருஷ்ணனைப் பற்றி சிந்தனைகளில் ஈடுபட்டது. அப்போது மூவரும் கருவேலங்காட்டிற்குள் போகும் ஒற்றையடிப் பாதை மேல்தான் நடந்து கொண்டிருந்தோம்.

"சார்! சார்! எங்கே பராக்குப் பார்த்துக்கொண்டே நடக்கிறீர்கள்?... காலடியில் பாம்புப் புற்று சார். வழியைப் பார்த்து நடந்து வாருங்கள். யோசனையை அப்புறம் வைத்துக் கொள்ளலாம்."

நல்ல சமயத்தில் அவன் எச்சரித்தான். நான் ஒரு பாம்புப் புற்றை மிதிக்க இருந்தேன். அவன் குரல் என்னை எச்சரித்து வழிமேல் நடத்தியது.

ஒற்றையடிப் பாதையில் எதிரே ஒரு யுவதி டிபன் ஸெட்டும் கையுமாக வரவே, நான் வழி விலகினேன். நல்ல அழகிதான். அந்த மாதிரித் தோற்றமுள்ள ஒரு பெண் அந்த நேரத்தில் அந்தக் காட்டில் தனியாக வரக் கண்டது எனக்கு வியப்பளித்தது. ஆடம்பரமில்லாத தோற்றமானாலும் அதியற்புதமான சௌந்தரியக் கவர்ச்சி அவளிடம் இருந்தது. துவளத் துவள அவள் அந்த நடை நடந்து செல்லும் காட்சியைத் தணிக்க முடியாத ஆவலோடு மீண்டும் திரும்பிப் பார்த்தேன். அவளும், பயமும் மருட்சியும் தோன்றும் கண்களால், என்னைத் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றாள்.

அவள் எங்களைக் கடந்து பத்தடிதான் மேலே சென்றிருப்பாள். "பார்த்தீர்களா, சார்?... இவள்தான்..." கங்கை கொண்டான் கான்ஸ்டபிள் என் காதருகே மெல்ல முணு முணுத்தான்.

"வேங்கடகிருஷ்ணன் தங்கை ராஜமா?"

"அவளேதான் சார்! அந்தப் பயலுக்குச் சோறு கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வருகிறாள் போலிருக்கிறது."

"இருந்தாலும் இருக்கலாம்! இவளை இப்போது ஒன்றும் செய்ய வேண்டாம். பிறகு பார்த்துக்கொள்வோம்... மேலே போகலாம்" என்றேன் நான்.

மூவரும் மேலே நடந்து சென்றோம். அந்தப் பெண் ராஜத்தின் உருவமும் அழகும் என் மனத்தில் பதிந்து விட்டன.

கருவேலங்காட்டின் நடுவே ஒரு கீற்றுக் கொட்டகை. சட்டி பானைகள், களிமண், வெடிமருந்துச் சாமான்கள், பிற சாதனங்கள் எல்லாம் குடிசையின் உட்புறம் மறைத்து வைக்கப்பட்டிருந்தன. ஆனால், குடிசையில்தான் ஆள் ஒருவரும் இல்லை. குடிசை மகா சாமர்த்தியமாக அமைக்கப் பட்டிருந்தது. வெளிப் பார்வைக்கு ஒன்றுமில்லாத வெற்றுக் குடிசையைப் போலத்தான் தோன்றியது. வெளியே மேட்டுப் பாங்காகவும் குடிசையின் உட்புறக் கூடம் இருபதடி ஆழம் தரை மட்டத்திற்குக் கீழேயும் அமைந்திருந்தது. அங்கே தான் வெடி மருந்து தயார் செய்யும் சாமான்களும் சாதனங்களும் வைக்கப்பட்டிருந்தன. மிகக் கொஞ்ச நேரத்திற்கு முன்பு யாரோ ஒருவர் சாப்பிட்டுக் கை கழுவியதற்குரிய அடையாளங்கள் குடிசை வாயிலில் இருந்தன.

"என்னப்பா, விஷயத்தைக் கண்டு பிடித்தாகிவிட்டது; ஆள் சிக்கவில்லையே?"

"அவசரப்படாதீர்கள் சார்! ஆளும் சிக்கிவிடுவான்; கொஞ்சம் பொறுத்திருந்தால் பிடித்து விடலாம்."

பொறுத்திருந்தும் பயனில்லை; பகல் இரண்டு மணிவரை ஒருவரும் வரவில்லை.

"நீங்கள் இருவரும் இங்கேயே பதுங்கி இருங்கள். நான் ஊருக்குள் போய் உங்களுக்குச் சாப்பாடு அனுப்புகிறேன். வேங்கடகிருஷ்ணன் வந்தால், பிடித்துவிடுங்கள். ஊருக்குள் அவன் தங்கை ராஜம் வேலை செய்கிற வீட்டில் போய் மிரட்டிப் பார்க்கிறேன்-" என்று இரண்டு கான்ஸ்டபிள்களையும் அந்தக் குடிசையிலேயே இருக்கச் செய்துவிட்டு, நான் ஊருக்குள் திரும்பினேன்.

ராஜம் வேலை செய்து கொண்டிருந்த வீட்டுக்கு உரியவரிடம் நான் சி.ஐ.டி என்று கூறியதுமே, வெவெலத்துப் போய்விட்டார் அவர்.

"என்ன வேண்டும்? எது வேண்டும்? நீங்கள் இங்கே வந்த காரியம் என்ன?" என்று பதறினார் அவர்.

"உங்கள் வீட்டில் கடம்பூர் வேங்கடகிருஷ்ணனின் தங்கை - ராஜம் என்ற பெண் வேலை செய்து வருகிறாளா? இல்லையா?"

"ஆமாம்! அவளுக்கு என்ன?"

"அவள் அண்ணன் வேங்கடகிருஷ்ணன் தேசியப் புரட்சி இயக்கத்தில் சேர்ந்து, சர்க்காருக்கு எதிராக வேலை செய்கிறான். அதைப் பற்றிய சில செய்திகளை விசாரித்துப் போக வந்திருக்கிறேன் நான்" என்றேன்.

வீட்டுக்காரர் பதறிப் போய், ராஜத்தை என் முன் கொணர்ந்து நிறுத்தினார்.

வேட்டைக்காரனுக்கு முன்னால் மிரண்டு நிற்கின்ற பெண்மானைப் போலக் குனிந்த தலை நிமிராமல் கால் கட்டை விரலால் தரையைக் கீறிக்கொண்டே என் முன் வந்து நின்றாள் அவள். வீட்டுக்குரிய எஜமானர் அவளை எரித்து விடுவது போலப் பார்த்துக்கொண்டு அருகில் நின்றார். என் மனத்தில் கடமையை மீறி ஒரு குறுகுறுப்பு. அந்த வாளிப்பான கட்டழகு, சுழலும் விழிகள், எச்சில் விழுங்கினால் கழுத்திலே தெரியும் என்று சொல்லத்தக்க கண்ணாடிப்பொன் நிறம்! ராஜம் கன்னியாகுமாரி அம்மனின் தெய்வச் சிலைபோல் என் முன் நடுங்கிக்கொண்டு நின்றாள்.

"என்ன சார்? நீங்கள் விசாரிக்க வந்ததை விசாரியுங்கள். உங்களுக்காக நானும் காத்துக் கொண்டு நிற்கிறேன். 'கழுதையை' இன்றோடு தொலைத்துத் தலைமுழுக வேண்டியதுதான்... கௌரவமான வீட்டில் வேலைக்காரியைத் தேடிப் போலீஸ்காரன் வந்தால், வீடு உருப்பட்டாற் போலத்தான்!" வீட்டுக்காரர் இரைந்தார்.

நான் அந்த அழகைப் பருகும் பிரமையிலிருந்து விடுபட்டு, விசாரணையைத் தொடங்கினேன்.

"உங்கள் தமையன் வேங்கடகிருஷ்ணன் இப்போது எங்கே இருக்கிறார்?"

"எனக்குத் தெரியாது..."

"பொய் சொன்னால் போலீஸில் சும்மா விடமாட்டோம். தமையனின் இருப்பிடம் உங்களுக்குத் தெரியும். இன்று காலையில்கூட நீங்கள் உங்கள் அண்ணனைச் சந்தித்திருக்கிறீர்கள். வேண்டுமென்றே எங்களிடம் தெரிந்ததை மறைக்கக்கூடாது...."

"நிஜமாகவே எனக்கு ஒன்றும் தெரியாது." - அந்தப் பெண் கன்னங்கள் ஜிவ்வென்று சிவக்க விசித்து அழ ஆரம்பித்துவிட்டாள். அழுகை பீறிக்கொண்டு வந்தது. ஒரு பக்கம் கோபம், இன்னொரு பக்கம் அனுதாபம் - இரண்டுடிற்குமிடையில் தவித்தேன் நான். அவள் அழுதுகொண்டே முகத்தைக் கைகளால் பொத்திக்கொண்டு உள்ளே ஓடிவிட்டாள்.

"சார்! எதற்கும் இவளை இன்னும் சில நாட்கள் உங்கள் வீட்டிலேயே வேலைக்கு வைத்துக் கொண்டிருங்கள். கோபத்தின் பேரில் அவசரப்பட்டுத் துரத்திவிடாதீர்கள். அப்படிச் செய்து விட்டீர்களானால், ஒரு நல்ல உளவாளி தப்பிவிட நேரும். இன்னொரு நாள் சாவகாசமாக வந்து விசாரிக்கிறேன்" என்று வீட்டுக்காரைத் தனியே அழைத்து எச்சரித்துவிட்டுத் திரும்பினேன்.

3

அங்கிருந்து கங்கைகொண்டான் ரூரல் ஸ்டேஷனுக்குப் போய் வேறொரு கான்ஸ்டபிள் மூலம் கருவேலங்காட்டிலிருந்தவர்களுக்கு எடுப்புச் சாப்பாடு அனுப்பினேன். நானும் குளித்துவிட்டுச் சாப்பிட்டேன்.

குட்டி உறக்கம் ஒன்று போட்டுவிட்டு, நாலரை மணிக்கு எழுந்திருந்தேன். நான் எழுந்திருந்தபோது ஸ்டேஷன் வாசலில் ஒரே கூச்சலும் கூப்பாடுமாக இருந்தது.

"வந்தே மாதரம்!"

"தியாகி வேங்கடகிருஷ்ணன் வாழ்க!"

"அமரன் வேங்கடகிருஷ்ணனுக்கு ஜே!"

ஒன்றும் புரியாமல் கண்களைக் கசக்கிக்கொண்டே, தூக்கக் கலக்கத்தோடு ஸ்டேஷன் வாசலுக்குச் சென்றேன். வாசலில் கதர்க் குல்லாய்க்காரர், சாதாரண ஜனங்களுமாக 'ஜே ஜே' என்று இமைக்க முடியாமல் கூடியிருந்தது கூட்டம். நடுவில் ஒரு இரட்டை மாட்டு வண்டி நின்று கொண்டிருந்தது.

சாப்பாடு கொண்டு போனவனைச் சேர்த்து மூன்று கான்ஸ்டபிள்களுமாக வண்டியைச் சுற்றி நின்று கொண்டிருந்தார்கள்.

"என்னப்பா இது? என்ன சமாச்சாரம்? இதென்ன வண்டி? இவர்கள் ஏன் கூச்சல் போடுகிறார்கள்?"

ஒரு கான்ஸ்டபிள் என்னருகே வந்து, நடந்ததை எனக்குக் கூறினான். அவன் மணியாச்சியிலிருந்து என்னுடன் வந்தவன்.

"சார், நீங்கள் அங்கிருந்து வந்தபின், கொஞ்சநேரம் நாங்கள் இரண்டு பேரும் அந்தக் குடிசையிலே உட்கார்ந்திருந்தோம். ஒருவரும் வரவில்லை. எனக்குத் தண்ணீர்த் தாகம் பொறுக்க முடியவில்லை. என்னோடு 'மஃப்டி'யில் இருந்த கங்கைகொண்டான் ஆளிடம் 'ஏனப்பா பக்கத்திலே கிணறு ஏதாவது இருக்கா' என்று கேட்டேன். 'இதே ஒற்றையடிப் பாதையிலே தெற்கே கால்பர்லாங் போனால் ஒரு இறங்கு கிணறு இருக்கு. போய்க் குடிச்சிட்டு வா' என்றான் அவன். நான் போனேன். கிணற்றடியிலே ஒரு மனோரஞ்சிதச் செடி புதராகப் படர்ந்து கிடந்தது. அந்தப் புதரின் கீழே ஒரு ஆள் குப்புற விழுந்து கிடந்தான். நான் அருகில் போய் உடம்பைப் புரட்டி மூக்கருகில் கைவைத்துப் பார்த்தேன். மூச்சு இல்லை. உடம்பு நீலம் பாரித்திருந்தது. உடனே தண்ணீர்கூடக் குடிக்காமல் ஓடிவந்து கங்கை கொண்டான்காரனைக் கூட்டிச் சென்று காண்பித்தேன்.

"'அடேடே! இவன்தானப்பா நாம் தேடிக்கொண்டிருக்கும் வேங்கடகிருஷ்ணன்! இவனை நாம் தேடிக்கொண்டிருக்க, இவன் யமனைத் தேடிக்கொண்டு போய்விட்டானே? சாப்பிட்டுவிட்டுத் தண்ணீர் குடிக்க வந்திருக்கிறான். ஏதோ பாம்பு போட்டுத் தள்ளிவிட்டது. இதோ உடம்பில் விஷம் ஏறி, நீலம் பரவியிருப்பதைப் பார்' என்று ஆச்சரியப் பட்டுக் கூவினான். இந்தச் சமயத்தில் நீங்கள் எடுப்புச் சாப்பாடு

கொடுத்தனுப்பிய ஆளும் வந்து சேர்ந்தான். மூவருமாகச் சேர்ந்து குமிழங்குளத்தி லிருந்து ஒரு வாடகைவண்டி பேசிச் சவத்தை இங்கு கொண்டு வந்துவிட்டோம். வர வழியிலே சமாச்சாரம் பரவி, இந்தக் காந்திக் குல்லாய்க்காரர்களும் கூப்பாடு போட்டுக் கொண்டு வந்து சேர்ந்துவிட்டார்கள்."

"அந்தக் குடிசையிலிருந்த வெடிமருந்துச் சமான்களை என்ன செய்தீர்கள்?"

"அவற்றையும் வண்டியிலேயே கொண்டு வந்துவிட்டோம் சார்."

"ஆல் ரைட்! நீ போய் டாக்டரைக் கூட்டிக்கொண்டு வா. ஏய்! 'கங்கை கொண்டான்!' இந்தக் கூட்டத்தை எல்லாம் கலைத்து அனுப்பு. உனக்கு அந்தப் பெண் வேங்கட கிருஷ்ணனின் தங்கை ராஜம் வேலை செய்கிற வீடு தெரியுமில்லையா? நீ போய் அவளை இங்கே ஸ்டேஷனுக்குக் கூட்டிக் கொண்டு வா" என்று பரபரப்போடு உத்தரவிட்டேன்.

டாக்டர் வந்தார். பரிசோதித்துப் பார்த்தார். 'விஷப்பாம்பு கடித்து மரணம்' - என்று 'மெடிக்கல் ரிப்போர்ட்' எழுதிக் கொடுத்துவிட்டுப் போய்ச் சேர்ந்தார்.

ராஜத்தைத் தேடிப் போனவன் வெறுங்கையோடு திரும்பி வந்தான். "சார்! மத்தியானம் நீங்க வந்ததுமே அந்தப் பெண்ணை வீட்டை விட்டு அனுப்பிவிட்டார்களாம், அவள் ரயிலுக்குப் போய்விட்டாளாம். இனிமேல் இந்த ஊர் எல்லைக்குள் அகப்படமாட்டாள் என்று தெரிகிறது சார்" என்றான் வந்தவன்.

"ரயில்வே ஸ்டேஷனில் இருந்தாலும் இருப்பாள். அங்கேயும் பார்த்துவிட்டு வந்துவிடு!" - அவனை ஸ்டேஷனுக்குத் துரத்தினேன். பிரேதத்தை யாரிடம் ஒப்புவிப்பது? அவள் அகப்படவில்லை என்றால், இலாகா செலவில் அல்லவா தகனம் செய்ய வேண்டியிருக்கும்? என்ன செய்வதென்று புரியாமல் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போனவனை எதிர் பார்த்துக் காத்திருந்தேன்.

"சார்! அவள் நாலுமணி வண்டியிலேயே போய்விட்டாளாம். ஸ்டேஷன் மாஸ்டரிடம் அடையாளங்களைச் சொல்லி விசாரித்ததில், அவள் மணியாச்சிக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு போனதாகத் தெரிகிறது" என்றான் திரும்பி வந்த ஆள்.

என் கவனத்திலிருந்து அந்தப் பெண் தப்பிவிட்டதை அறிந்தபோது, இரண்டு விதமான கவலை எனக்கு ஏற்பட்டது. செத்துப்போன தமையனைப் பற்றித் தெரியாமல், அவன் முகம் காணவும் கொடுத்து வைக்காமல் போய் விட்டாளே என்பது ஒன்று. இன்னொன்று...? ஊஹூம்.... அது என் கவலை! அதை இப்போது சொல்ல மாட்டேன்!

வேறு ஒரு வழியும் தோன்றாமற் போகவே இலாகாவின் பொறுப்பிலேயே கங்கை கொண்டான் மயானத்தில் வேங்கடகிருஷ்ணனின் அந்திமக்கிரியை நடைபெற்றது. சுதேசிப் போராட்டத்தைச் சேர்ந்த இரண்டொருவர் மயானத்திற்கு வந்து மாலைகள் போட அனுமதி கோரினர். அதை நான் மறுத்து விட்டேன். கடமை வேறு; அனுதாபம் வேறு. நான் என்ன செய்வது?

இது நடந்த பின்பும் நாலைந்து நாட்கள் நானோ என்னோடு மணியாச்சியிலிருந்து வந்திருந்த கான்ஸ்டபிளோ, ஊர் திரும்பவில்லை. இறந்து போன வேங்கடகிருஷ்ணனைத் தவிர அந்த வெடிமருந்துத் தயாரிப்பு வேலையில் சம்பந்தப்பட்டிருந்த வேறு சில பயங்கரவாதிகளைத் தேடி அலைந்தோம். தலைமறைவாக இருந்த அவர்களைக் கண்டுபிடிக்கக் கோவில்பட்டி, கடம்பூர், ஏழாயிரம் பண்ணை என்று ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருந்தோம்.

அரிய முயற்சி செய்து ஒரு வழியாகப் பெரும்பான்மையான ஆட்களைக் கைது செய்துவிட்டோம். ஒரு வாரம் கழித்து மணியாச்சிக்கு வந்தேன். மேலதிகாரியைச் சந்தித்து எல்லா விவரங்களையும் கூறினேன். அவர் என் சாதனையைப் பாராட்டினார். கூடிய சீக்கிரமே பதவி உயர்வுக்குச் சிபார்சு செய்வதாகவும் கூறினார்.

அவரிடம் விடை பெற்றுக்கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டேன். இரவு பத்து மணிக்கு மேலாகியிருந்தது. என் வரவு அம்மாவுக்குத் தெரியாது. வீட்டில் சாப்பாடு வைத்திருக்கிறார்களோ இல்லையோ? ஏதாவது ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டுப் போய்விடலாம் என்றெண்ணினேன். சினிமாக் கொட்டகை வாசலிலிருந்த ஒரு ஹோட்டலில் சாப்பாடு முடிந்தது. வீட்டை நோக்கி நடந்தேன்.

கதவைத் தட்டினேன். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் அம்மா வந்து கதவைத் திறந்தாள்.

"எப்படா வந்தே? சாப்பிட்டாச்சா?"

"சாயங்காலம் வந்தேன். சாப்பாடு ஹோட்டலில் ஆயிற்று." பதில் சொல்லிக் கொண்டே உள்ளே நுழைந்தவன், எதிரே பார்த்ததும் அப்படியே திகைத்துப் போய் நின்று விட்டேன்.

கூடத்து விளக்கொளியின் மங்கலில், வஞ்சிக்கொடி துவண்டு கிடப்பதுபோல ஒரு இளம் பெண் படுத்து உறங்கிக் கொண்டிருந்தது தெரிந்தது. ஒருக்களித்துப் படுத்திருந்ததனால் முகம் தெரியவில்லை.

"அம்மா..."

"என்னடா?"

"இது யார்? இங்கே படுத்துக் கொண்டிருக்கிறது?"

"அதுவா? நீ உன் படுக்கையை எடுத்திண்டு வாசல் திண்ணைக்கு வா! எல்லா விவரமும் சொல்கிறேன்."

நான் மெதுவாக நடந்துபோய், என் படுக்கையை எடுத்துக்கொண்டு அம்மா பின்தொடர, வாசல் திண்ணைக்குப் போனேன்.

"யாரம்மா அது?"

"படுக்கையை விரிச்சுக்கோ. சொல்றேன்."

"யாரோ அனாதைப் பொண்ணு. பெரிய குடும்பத்திலே பிறந்து நொடிச்சுப் போனது. இன்னும் கன்னி கழியலே. அண்ணா ஒருத்தன் இருக்கானாம். ஏதோ காந்திக் கட்சியிலே சேர்ந்து ஜெயிலுக்கெல்லாம் போனவனாம்! இவளுக்கு அவனாலே ஒரு உதவியும் கிடையாதாம். நாலு வீட்டில் காரியம் செய்து வயிற்றை நிரப்பிக் கொள்கிறதாம் இந்தப் பெண். தாழையூற்றிலே ஒரு பணக்காரர் வீட்டிலே வேலை செஞ்சு சாப்பிட்டிண்டிருந்ததாம். அவா, திடீர்னு வேண்டாம்னு அனுப்பிட்டாளாம். ஒரு வாரத்துக்கு முன்னே ஒரு நாள் ராத்திரி இங்கே வந்து கேட்டுது. எனக்குப் பரிதாபமா இருந்தது. வீட்டுக்கு ஒத்தாசையாக இருக்கட்டும் என்று இருக்கச் சொல்லிட்டேன். தங்கமான குணம். சொன்ன காரியத்தை உடனே செய்யறது. வயசு காலம். எனக்கும் தள்ளலை. இருந்திட்டுப் போகட்டும். சம்பளமா, ஒண்ணா? சோறும் துணியும்தானே? ஒரு கன்னிப் பெண்ணைக் காப்பாத்தின புண்ணியமாக இருக்கட்டுமே...!"

அம்மா மூச்சு விடவில்லை. பேசிக்கொண்டே போனாள்.

"பேர் என்னம்மா?"

"ஏன்? 'ராஜம்'னு சொன்னா."

உள் மனம் குறுகுறுத்தது. வெளி மனம் பரபரத்தது. எண்ணங்கள் சிறகடித்துப் பறந்தன.

"என்னடா? பேசாமே உட்கார்ந்துட்டே? உனக்கு இஷ்டமில்லேன்னாப் போகச் சொல்லிடறேன்."

"இஷ்டமில்லாமே என்னம்மா? உனக்கும் ஒத்தாசைக்கு ஒரு ஆள் வேண்டியதுதானே?"

"சரி! அலைஞ்சிட்டு வந்திருக்கே; தூங்கு. நான் உள்ளே போறேன்."

அம்மா உள்ளே போனாள்! கதவு தாழிடும் ஓசை! கண்களை மூடினேன். உறக்கம் வரவில்லை. நினைவுகள்! நினைவுகள்! இனிய நினைவுகள். கண்களை மூடி நினைவு மயக்கத்தில் கள்ளத் தூக்கம் தூங்கிக் கொண்டிருந்தேன்.

மணி பன்னிரண்டுக்குமேல் இருக்கும். உள் கதவை யாரோ மெல்லத் திறக்கும் ஓசை அரைகுறை உறக்கத்தில் இருந்த என் காதுகளில் விழுந்தது. நான் விழித்துக்கொண்டேன். எழுந்திருக்காமலே கண்களை மூடியிருப்பவன்போல் சாய்ந்த நோக்கில் கவனித்தேன்.

கதவு ஓசையின்றி மெல்லத் திறக்கப்பட்டது. அந்தப் பெண் வெளியே வந்தாள். அவள் கையில் துணி மூட்டை போல ஏதோ ஒன்று இருந்தது. விஷயம் எனக்கு அரைகுறையாகப் புரிந்தது.

வாசற் கதவை மெல்லச் சாத்தினாள். படியிறங்கித் தெருவில் விறுவிறு என்று நடந்தாள். என் பக்கமாக நாலைந்து விநாடிகள் தயங்கியது அவள் பார்வை. நான்

உறங்குவதாக நடித்தேன். மீண்டும் நடந்தாள். நடையில் தப்பி ஓடுகிற கைதியின் வேகம். அவள் நோக்கம் இப்போது எனக்கு நன்றாகப் புரிந்துவிட்டது. "ஏய்! நில்." திண்ணையிலிருந்து ஒரே தாவாகத் தெருவில் தாவினேன். உள்ளே அம்மா நிம்மதியாகக் குறட்டைவிட்டுக் கொண்டிருந்தாள். நான் வருவதைக் கண்டதும் அவளுடைய நடை சாதாரண ஓட்டமாக மாறியது. நானா விடுவேன்? நாலே எட்டில் அவள் தலைச் சடையைப் பிடித்துவிட்டேன்.

"எங்கே போகிறாய்? இந்த நள்ளிரவில் சொல்லாமல் கொள்ளாமல்?"

"இது உங்கள் வீடு என்று எனக்குத் தெரியாது." எங்கோ பார்த்துக் கொண்டு பேசினாள். வார்த்தைகள் தயங்கித் தயங்கி வெளிவந்தன.

"எப்போது தெரிந்து கொண்டாய்?"

"நான் தூங்குவதாக நினைத்துக்கொண்டு, நீங்களும் அம்மாவும் வாசல் திண்ணையில் பேசிக் கொண்டிருந்த போது..."

"இது என் வீடு என்று தெரிந்தால் உனக்கென்ன? நீ ஏன் ஓடவேண்டும்?"

"நீங்கள் போலீஸ்காரர்... எனக்குப் பயமாயிருக்கிறது..."

"போலீஸ்காரர் என்றால் கடித்து விழுங்கிவிடுவேனா உன்னை?"

"................"

"அது சரி! தாழையூற்றிலிருந்து ஏன் ஓடி வந்தாய்?"

"நான் ஓடி வரவில்லை. 'நீ இனிமேல் இருக்கக் கூடாது; உடனே ஏதாவது வெளியூருக்குப் போய்விடு' என்று அந்த வீட்டுக்காரர் துரத்திவிட்டார்."

"இப்போதாவது சொல்! நீ வேங்கடகிருஷ்ணன் தங்கை தானே? அவன் எங்கே இருக்கிறான் சொல்?"

அதே பழைய பதில், "எனக்குத் தெரியாது..."

இந்தப் பதிலிலிருந்து வேங்கடகிருஷ்ணன் பாம்பு கடித்து இறந்தது அவளுக்கு இதுவரை தெரியாதென்பதை அறிந்து கொண்டேன்.

"ராஜம்! அதிர்ஷ்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறாய்; அசட்டுத்தனமாக இங்கிருந்து ஓடாதே. வா! என்னோடு வா. எங்கள் வீட்டில் அம்மாவுக்குப் பின் விளக்கேற்று."

நான் அவள் கையைப் பிடித்தேன். கண்களில் புத்தொளி பரவ அவள் என்னை ஏறிட்டுப் பார்த்தாள். அப்படியே அழைத்துக் கொண்டு போய் வீட்டுக்குள் அனுப்பிக் கதவை வெளிப்புறமும் தாழ்ப்பாள் இட்டுக் கொண்டேன். சில மாதங்கள் வரை வேங்கடகிருஷ்ணன் மறைவை அவளிடம் கூறுவதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டேன். அது நான் என் சுயநலத்துக்காகச் செய்து கொண்ட சங்கல்பம்.

மறு நாள் பொழுது விடிந்தது. அம்மாவிடம் என் கருத்தைக் கூறினேன்.

*"நன்றாயிருக்குடா இது? என்ன குலமோ, கோத்திரமோ? ஆள் பார்க்க லட்சணமாக இருந்தால் மட்டும் போதுமா?"-*

*"எல்லாம் நம்ம குலந்தான். இந்த ராஜம் இல்லாட்டா இந்தப் பிறவியிலே வேறே கல்யாணம் எனக்கு இல்லை. நான் சொன்னா சொன்னதுதான்..."*

*"சரி... செஞ்சுக்கோ!..."*

*தை மாதமே திருச்செந்தூர் முருகன் சன்னதியில் என் உள்ளங் கவர்ந்தவளை உரியவளாக்கிக் கொண்டேன். ஆடி மாதம் பூச்சூட்டலின் போது வேங்கடகிருஷ்ணன் இறந்து போன உண்மையைச் சொன்னேன். ராஜம் மூன்று நாள் சாப்பிடவில்லை. என்னுடன் பேசவில்லை. சதா மூலையில் உட்கார்ந்து மௌனமாகக் கண்ணீர் வடித்துக்கொண்டே இருந்தாள். கடைசியில் காலம்தான் அவள் துயரத்துக்கு மருந்தாயிற்று. அதை மறக்கத் தொடங்கினாள். எதையெல்லாம் மறக்கின்றோமோ, அதையெல்லாம் சீக்கிரமே மீண்டும் நினைக்க நேருவதுதான் மறதியிலுள்ள ஒரே ஒரு தொல்லை!*

**4**

*"ராஜம்! தெரியாமல் அந்த வார்த்தை வந்துவிட்டதடி. புறப்படு; சினிமாவுக்குப் போகலாம்..."*

*"இல்லை! இன்றைக்கு வேண்டாம். இன்னொரு நாள் பார்க்கலாம்."*

*"ஏன்! இன்றைக்கே போக வேண்டுமென்று நீதானே பிடிவாதம் செய்தாய்... இப்போது நீயே...?"*

*"வர முடியாதென்றால் வர முடியாது."*

*எனக்கு அவள் ஒரு புதிர். அவள் என்னுடையவளாகிய அந்தப் பழைய நிகழ்ச்சியை நினைவிலிருந்து புரட்டும்போதெல்லாம் ஆயிரமாயிரம் சினிமாப் பார்த்து முடிந்தது போலிருந்தது.*

**(1961-க்கு முன்)**

## 61. மடத்தில் நடந்தது

சுவாமி தர்மானந்த சரஸ்வதிக்கு முன், கை கட்டி வாய் பொத்தி மெய் குழைந்து பவ்யமாக நின்றான் வேலைக்காரன் பிரமநாயகம். 'சுவாமி என்ன கட்டளையிடப் போகிறதோ?' என்று அறியும் ஆவலில் அவனுடைய உடம்பே ஒரு கேள்விக் குறியாகக் குறுகி நின்றது.

செங்காவி உடையில் அந்த உடையின் நிறத்திலும் பன்மடங்கு சிவப்பாகவும் வளங் குன்றாத மேனிக் கட்டுடனும் காட்சியளித்தார் தர்மானந்த சரஸ்வதி. கீழே புலித்தோல் விரிப்பு, மேலே மின்சார விசிறி. மடத்தில் இடம் பெறுகிறதே என்பதற்காகச் சிவப்பு நிறம் பூசப் பெற்று அந்த மின் விசிறியும், 'சந்நியாசம்' வாங்கிக் கொண்டிருந்தது! அது மட்டுமா? அங்கே மின்சாரத்தை இணைத்த 'வயர்' எல்லாம் சிவப்பு நிறம்தான்! சிவப்பு நிற 'வயர்'தான் கிடைத்ததென்று அப்படி அமைக்கவில்லை. சுவாமிகளே சிவப்பு நிற 'வயர்'தான் வாங்க வேண்டுமென்று கண்டிப்பாகச் சொல்லிச் செய்த திட்டம் அது. அந்த மடத்தில் பிரமநாயகம் என்ற வேலைக்காரப் பயலின் உடம்பு ஒன்றைத் தவிர மற்ற எல்லாம் சிவப்புத்தான். தர்மானந்த சரஸ்வதியால் சிவப்பாக்க முடியாதது அது ஒன்றுதான். அதாவது அட்டைக் கரி நிறத்தில் உருகின தார் மாதிரிப் பளபளக்கும் பிரமநாயகத்தின் உடம்பு ஒன்றைத்தான் அவர் சிவப்பாக்க இயலவில்லை.

"அடேய்! பிரமநாயகம்..." கீழே குனிந்து விரித்திருந்த வேதாந்தப் புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்த சுவாமிகள் வேலைக்காரன் இன்னும் வரவில்லையோ என்று நினைத்துக் கொண்டு மறுபடியும் குரல் கொடுத்தார்.

"சாமி!" - என்று மேலும் கூனிக் குறுகிக் குழைந்து பவ்யமானான் பிரமநாயகம். நிமிர்ந்து பார்த்தார் சுவாமிகள்; நன்றாகப் பழுத்த பறங்கிப் பழத்தில் கீற்றுக்கள் இடையிடையே குழிந்து மடிந்தாற்போல் வயிற்றுச் சதை மடிப்புக்கள் சரிந்த விலாப்புறத்தில் கையைச் செலுத்தி இடுப்பிலிருந்து விபூதிப் பையை எடுத்தார் சுவாமிகள். விபூதிப் பைக்குள் விரல்விட்டுத் துழாவி ஒரு முழுக் கால் ரூபாய்க் காசையும் எடுத்தார். சுவாமிகளின் விபூதிப் பையேதான் அவருடைய மணிபர்ஸும். விபூதியால் கிடைக்கிறதை விபூதியோடு சேர்த்துத்தானே போட்டு வைக்க வேண்டும். அந்தப் பையில் காசு நிறைந்தால் விபூதி குறைந்திருக்கும். காசு குறைந்திருந்தால் மறுபடியும் விபூதி நிறையும். இந்தப் பிரசாத நிறைவு குறைவுக்குக் காரண காரியம் காசாக இருப்பதில் தப்பு ஒன்றும் இருக்க முடியாது. வெறுங்கையே முழம் போட்டுவிடுமா, என்ன?

"இந்தா! அரைச் சேர் பாதாம் பருப்பு வாங்கிக் கொண்டு வா."

பிரமநாயகத்துக்கு முன்னால் பருத்திச் சுளை தெறித்து விழுவதுபோல் வெள்ளிக் காசு வந்து விழுந்தது. வேதாந்தப் புத்தகத்தைப் படித்துக் கொண்டே ஐந்து நிமிஷத்துக்கு ஒரு தரம் பாதாம் பருப்பில் இரண்டும் சீனாக் கல்கண்டுத் துண்டு ஒன்றும் வாயில் போட்டு மென்று பழக்கம் அவருக்கு. பாதாம் பருப்பும், சீனாக் கல்கண்டும் சேர்ந்து கரையும்போது நாவுக்குக் கிடைக்கிற சுகமான ருசி இருக்கிறதே; அந்த ருசிக்கும், வேதாந்தத்துக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமோ என்று தோன்றுகிறதல்லவா? தோன்றுவது தவறில்லை! ஆனால் உண்மையில் அப்படி ஒரு சம்பந்தமும் இருப்பதற்கு நியாயமில்லை. ருசிகளை வெல்ல வேண்டுமென்றல்லவா வேதாந்தம் சொல்லித் தொலைக்கிறது!

பிரமநாயகம் காசை எடுத்துக் கொண்டு ஓடினான். மடத்துக்கு வெளியே எதிர்ப்புறத்து வீதியில் இருக்கும் மளிகைக் கடைக்குப் போய்ப் பாதாம் பருப்பு வாங்கி வருவதற்காகத்தான்!

பிரமநாயகம், பாவம்! பாதாம் பருப்பு என்ன ருசி என்று கூட அவனுக்குத் தெரியாது. 'அரைச் சேர் பாதாம் பருப்பு' - என்று கேட்டுக் காசு கொடுத்துக் கடையில் வாங்குவான். அப்படியே கொடுத்த பொட்டலத்தை மடத்தில் கொண்டு போய்க் கொடுத்துவிடுவான். நடுவழியில் பொட்டலத்தைப் பிரித்துப் பார்க்க வேண்டுமென்றோ, ஒன்றிரண்டை மென்று தின்னலாமென்றோ அற்ப நப்பாசை தப்பித் தவறியும் அவனுக்கு ஏற்பட்டதில்லை. ஆசைகளைக் கடந்துவிடும் வயதுக்கு வந்திருந்தான் அவன். அவன் வாழ்ந்து சலித்துப்போன கட்டை. பிரமநாயகம் பெரிய சம்சாரி. ஆணும் பெண்ணுமாக ஏழெட்டுக் குழந்தைகள். நோயாளிபோல் நைந்த மனைவி. கிழட்டுப் பெற்றோர். மடத்தில் அவனுக்குக் கொடுக்கிற சம்பளத்தை அப்படியே வீட்டில் கொண்டு போய்க் கொடுத்தால் எல்லோருக்கும் ஒருவேளைக் கஞ்சியாவது ஒழுங்காகத் தேறும். இப்படிப்பட்ட பஞ்சைப் பாமரனுக்கு நப்பாசைகள் வேறு வைத்துக் கொள்ள முடியுமா? இந்த ஏழ்மையே அவனைத் தர்மானந்த சரஸ்வதியைவிடப் பெரிய வேதாந்தியாக்கியிருந்தது. தர்மானந்த சரஸ்வதியின் சங்கதி வேறு. அவர் சௌகரியங்களால், சௌகரியங்களுக்காகவே வேதாந்தியானவர். எனவே அவருக்கு ருசிகளும், பசிகளும் இருக்கலாம். பிரமநாயகத்துக்குப் பாதாம் பருப்பின் ருசியை அறியும் ஆசை இருந்தால் ஏழெட்டுக் குழந்தைகளும், மனைவியும் கிழட்டுப் பெற்றோரும் பட்டினி கிடக்க வேண்டியதுதான்!

அதனால் அந்தப் பாமரனுக்கு நாக்குச் செத்துப் போய்ப் பல வருடங்களாயிற்று. சுசிருசிகளில் அவனுக்கு ஆசை விழுவதே கிடையாது. "இந்தா பெரியவரே! பொட்டலத்தை வாங்கிக்க - எங்ஙனே பராக்குப் பார்க்கிறே?" என்று பொட்டலத்தை நீட்டினான் கடைக்காரன். பிரமநாயகம் பாதாம் பருப்புப் பொட்டலத்தை வாங்கிக் கொண்டு மடத்தை நோக்கி நடந்தான்.

என்னவோ பாதாம் பருப்புச் சாப்பிட்டால் தகதகவென்று உடம்பு பொன் நிறத்துக்கு மின்னும் என்று சுவாமிகள் யாரிடமோ சொல்லிக் கொண்டிருந்ததை எப்போதோ பிரமநாயகம் கேட்டிருந்தான். ஆனாலும் அதிலெல்லாம் அவனுக்கு

அக்கரை உண்டாகவில்லை. ஒரு பருப்பும் சாப்பிடாமல்தான் கருமை மின்னுகிறதே அவன் உடம்பு! இத்தனை வயதுக்குமேல் பாதாம் பருப்பா அவன் உடம்பை வெளுத்துவிடப் போகிறது? அவன்தான் பெரிய வேதாந்தியாயிற்றே! பாதாம் பருப்புப் பொட்டலம் எப்படியிருக்கிறது என்றுகூடப் பாராமல் அப்படியே கொண்டுபோய்ச் சுவாமிகளுக்கு முன்னால் வைத்தான்.

சுவாமிகள் பொட்டலத்தைப் பிரித்து வலதுகை எட்டி எடுக்க முடிந்த மாதிரிப் பக்கத்தில் வைத்துக் கொண்டார். இன்னும் ஒரு சம்புடத்தைத் திறந்து வேறு ஒரு காகிதத்தில் கொஞ்சம் சீனாக் கல்கண்டும் எடுத்து வைத்துக்கொண்டார். பிரமநாயகம் ஒரு மூலையில் சுவரோரமாக நின்று கொண்டிருந்தான். சுவரில் சாய்ந்த மாதிரியும் சாயாததுபோலும் பொத்தின மாதிரி நின்றான் அவன். பட்டும் படாமலும் இருப்பதுதானே அவன் பழக்கம். அவன்தான் பெரிய வேதாந்தியாயிற்றே!

சுவாமிகள் கல்கண்டும், பாதாம் பருப்பும் எடுத்துச் சுவைத்துக்கொண்டே வேதாந்தப் புத்தகத்தில் மூழ்கினார். அந்தச் சமயத்தில்,

"நமஸ்காரம்!" என்று குரல் வந்தது. தர்மானந்த சரஸ்வதி நிமிர்ந்தார். அதே ஊரில் பக்கத்துத் தெருவிலிலுள்ள மற்றொரு மடமான அறுபத்து மூவர் மடத்தைச் சேர்ந்த குட்டித் தம்பிரான் ஒருவர் வந்து கொண்டிருந்தார். 'தனிமையின் சுகத்தில் ஐந்து நிமிஷத்துக்கொரு கையாகப் பாதாம் பருப்பும், கல்கண்டும் சாப்பிட்டுக் கொண்டே வேதாந்தத்தில் மூழ்க விடாதபடி, இவன் வந்துவிட்டானே!' என்று குட்டித் தம்பிரான்மேல் உள்ளூறக் கோபித்துக்கொண்டே, "நமஸ்காரம்! வரணும்! வரணும்! ஏது இவ்வளவு தூரம்?" என்று இனிக்க இனிக்க வரவேற்றார் தர்மானந்தர்.

"திருமேனி பாங்குதானே?" என்று நலம் விசாரித்துக் கொண்டே எதிரே உட்கார்ந்து கொண்டார் குட்டித் தம்பிரான். அவர் பார்வை தர்மானந்தருக்குப் பக்கத்தில் இருந்த பாதாம் பருப்பு, சீனாக் கல்கண்டு காகிதங்களின் மேல் சென்றது. சென்ற அளவில் நிற்கவில்லை.

"என்னது? பாதாம் பருப்பா? நல்ல பருப்பாத் தேடி வாங்கிருக்கேளே?" என்று வெட்கத்தைத் துறந்த வெளிப்படைக் கேள்வியாகவும் எழுந்தது. கேள்வியில் ஆசை தொக்கி நின்றது.

"நானென்ன கண்டேன்? இதோ நிற்கிறானே பிரமநாயகம், இவன்தான் வாங்கிக் கொண்டு வந்தான். நல்ல பருப்பு, கெட்ட பருப்பு - என்று கண்டோமா? வெளியே உலக நடமாட்டம் இருந்தால் அல்லவோ அதெல்லாம் தெரியும்" என்று சிரித்தபடி பதில் சொன்னார் தர்மானந்தர். பதில்தான் சொன்னாரே தவிர, 'இந்தாருங்கள்! சாப்பிட்டுப் பாருங்கள்!' என்று அந்தக் குட்டித் தம்பிரானிடம் ஒரு பருப்பும் எடுத்து நீட்டவில்லை. குட்டித் தம்பிரான் வெட்கத்தை விட்டுக் கேட்டது பெரிய அநாகரிகம் என்றால் தர்மானந்தர் ஒரு பருப்பாவது உபசாரத்துக்கும் தராமலிருந்தது அதைவிடப் பெரிய அநாகரிகமாகத் தோன்றியது. ஆனால் 'பிரமநாயகம் பயல்' இந்த அநாகரிகத்தை எல்லாம் கவனித்தும் கவனிக்காததுபோல் சுவரோரமாக அசையாமல் நின்று கொண்டிருந்தான்.

குட்டித் தம்பிரானின் கண்களும் பாதாம் பருப்பு - கல்கண்டு பிரதேசத்திலிருந்து மீளவில்லை. "நீங்களும் கொஞ்சம் எடுத்துச் சாப்பிடுங்களேன்" என்று தர்மானந்தரும் சொல்கிற வழியாயில்லை. விநாடிகள் ஆயின.

"சிவஞான போதத்திலே ஒரு சந்தேகம்; சுவாமிகளிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு போகலாம்னு வந்தேன்" என்று குட்டித் தம்பிரான் பேச்சை ஆரம்பித்தார்.

"ஆகா! பேஷாகக் கேளுங்கோ, சொல்றேன். என்ன சந்தேகம்?"

- பாதாம் பருப்பு - கல்கண்டைத் தவிர எதைக் கேட்டாலும் கொடுத்துவிட அவர் தயார்! குட்டித் தம்பிரான் கேட்டார் :

"ஐம்பொறியின் நீங்கான் நீர்ப்பாசி போல் நீங்குமலகன்மம் வரின் நீங்கானை நீங்கும் நினைந்து - இதுக்கு விளக்கும் தெரியணும்."

"அற்புதமான இடத்தைத்தான் கேட்கிறீர்கள். நீரிற்பாசி பரந்திருக்கிறது. ஒரு கல்லை விட்டெறிந்தால் பாசி நீங்கி அவ்விடத்தில் நீர் தெளிந்து தெரியும். அதுபோல் சிவனுடைய சார்பு பட்ட இடத்தில் பாசம் நீங்கித் தெளிவு பிறக்கும். இப்போது விளங்குகிறதோ, இல்லையா? மனிஷாளுக்குச் சிவ சம்பந்தம் கிடைச்சப்புறம் மனசிலே ஆசை பாசமெல்லாம் நீங்கிப் போயிடணும்."

"என்ன அழகாச் சொல்லியிருக்கார் பார்த்தேளா!"

"இது ஒண்ணு விளங்கிட்டால் லோகமே க்ஷேமமாயிருக்கும்!"

"எது?"

"ருசிகள் அடங்கிடணும். மனசு துல்லியமாகச் சின்ன நினைவுகளே இல்லாமே இருக்கணும்."

இரண்டு பேரும் நெடுநேரம் வேதாந்த விசாரத்திலே ஈடுபட்டிருந்தனர். இடையில், "இதோ வரேன். இருக்கோ" என்று கூறி விட்டுத் தர்மானந்தர் எதற்கோ உட்பக்கம் எழுந்து போனார். அந்தச் சமயத்தில் குட்டித் தம்பிரான் அவசர அவசரமாக ஒரு காரியம் பண்ணினார். காகிதத்திலிருந்து பத்துப் பன்னிரண்டு பாதாம் பருப்பை அள்ளி மடியில் கட்டிக் கொண்டார். பின்னால் சுவரோரமாகப் பிரமநாயகம் நிற்பதையே அவர் கவனிக்கவில்லை. பிரமநாயகம் இந்த அசிங்கத்தைப் பார்த்தான். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. பார்த்தும் பார்க்காததுபோல் இருந்துவிட்டான். அவன்தான், பெரிய வேதாந்தியாயிற்றே!

தர்மானந்தம் திரும்பி வந்தார். மீண்டும் இருவருக்குமிடையே வேதாந்த சர்ச்சை ஆரம்பமாகிச் சிறிது நேரம் நடந்தது. சிறிது நேரத்திற்குப் பின் தற்செயலாகப் பாதாம்பருப்பில் திரும்பிய தர்மானந்தரின் பார்வையில் சந்தேக நிழல் படிந்தது. காகிதத்தை எடுத்துப் பருப்புகளை எண்ணினார் அவர். அடுத்த கணம் பிரம நாயகத்தைப் பார்த்துச் சீறினார்.

"ஏண்டா நாயே! எத்தனை நாளா இப்படிப் பண்ணுகிறாய்? அரைச் சேர் வாங்கினால் முப்பது பருப்புக்குக் குறையாமே இருக்குமே? இன்னிக்குக் கால் 'சேரா' வாங்கிட்டு இரண்டணாக் கமிஷன் அடிச்சியா? என்னை ஏமாத்திடலாம்னு நினைச்சியா? எத்தனை நாள் எண்ணிப் பார்த்திருக்கிறேன் தெரியுமா? இவ்வளவு நிலுவைக்கு இத்தனை பருப்பு இருக்கும்னு எனக்கு அத்துப்படி."

பிரமநாயகம் குட்டித் தம்பிரான் பக்கம் பார்த்தான். அவர் பேச்சு மூச்சுக் காட்டவில்லை. குத்துக் கல்லாக உட்கார்ந்திருந்தார்..

"என்னடா திருட்டு முழி முழிக்கிறே?" தர்மானந்தர் பிரமநாயகத்தை மேலும் விரட்டினார்.

வெறும் பாமரனாகிய அந்த வேலைக்காரனின் கருப்பு உடம்பில் சிவப்பு இரத்தம் சூடேறி ஓடியது. முன்னால் பாய்ந்து கல்லடி மங்கனாக உட்கார்ந்திருக்கும் அந்த குட்டித் தம்பிரானின் மடியை அவிழ்த்துக் காட்டிவிடலாம் போல் அவன் கைகள் துடித்தன. செய்திருக்கலாம்; செய்தால் அவனுடைய நேர்மையை நிரூபித்திருக்க முடியும்.

"திருட்டு நாய்! என் முன் நிற்காதே! தொலைந்து போ" என்று தர்மானந்தர் மேலும் இரைந்தார். பிரமநாயகம் பார்த்தான். குட்டித் தம்பிரானின் விழிகள் அவனை நோக்கிப் பரிதாபமாகக் கெஞ்சின.

'என் மானத்தை வாங்கிவிடாதே' என்பதுபோல் இறைஞ்சின அந்தக் கண்கள். பார்க்கப் போனால் தர்மானந்த சரஸ்வதி, குட்டித் தம்பிரான், இரண்டு பேரையும்விடப் பிரமநாயகம் வயது மூத்தவன். பெரிய சம்சாரி. அவர்களை விட உலகில் அவன் வாழ்ந்து சலித்தவன். அவனுக்கு வேதாந்தம் தெரியாது. ஆனால் மனித நாகரிகம் தெரியும். அவனுக்குச் சிவஞான போதம் தெரியாது. ஆனால் விட்டுக் கொடுக்கத் தெரியும். காரணம்! அவன் நிஜமாகவே பெரிய வேதாந்தி. "இன்னும் ஏண்டா, நிற்கிறாய்? பெரிய வேதாந்தி." தர்மானந்தர் இரைகிறார். அந்தக் குற்றத்தைத் தான் செய்யவில்லை என்று சொல்லாமல், தானே செய்ததாக ஒப்புக் கொண்டதுபோல் தலை குனிந்தபடி வெளியேறினான் பிரமநாயகம். அவன்தான் பெரிய வேதாந்தியாயிற்றே! அவனுக்கு எதிலும் ருசி கிடையாது. பிறர் குற்றவாளி என்று நிரூபிக்க முனையும் நியாயமான முனைப்பில்கூடத்தான்! தான் குற்றவாளியில்லை என்று காட்ட முயலும் விருப்பில் கூடத்தான்.

அவன் சௌகரியங்களால், சௌகரியங்களுக்காக வேதாந்தியானவனில்லை. ஏழ்மையால் வேதாந்தியானவன். வீட்டுக்குப் போய்ப் பெரிய சம்சாரத்தைப் பற்றி இனி எப்படிப் பிழைப்பது? என்று கவலைப்பட வேண்டிய வேதாந்தி அவன், ஆம்! நிஜமான வேதாந்தி.

**(தாமரை, மார்ச் 1961)**

## 62. செருப்பு

கடைத்தெருவில் கலகலப்பு ஆரம்பமாகிவிட்டது. எல்லாக் கடைகளின் முன்பும் கூட்டம்தான். எல்லாருக்கும் எல்லாக் கடைகளிலும், எல்லா நாட்களிலும், வாங்குவதற்கு என்னதான் இருக்குமோ? வாங்கினவர்கள் வெளியேறவும் வாங்க வந்தவர்கள் உள்ளே நுழையவுமாக நெருக்கடி நிறைந்த கடைத்தெருவில் சுறுசுறுப்பு களை கட்டியிருந்தது. மறுநாள் ஏதோ ஒரு பண்டிகை. அதற்காக முதல் நாளும் அரசாங்க விடுமுறைபோல் இருக்கிறது. இல்லாவிட்டால் காலை வேளையிலேயே இப்படித் திருவிழாக் கூட்டம் கூடாது. குமரகுரு அவசரம் அவசரமாகக் கடையைத் திறக்க விரைந்தான்.

அந்தத் தெருவிலேயே குமரகுரு ஒருவன்தான் அன்று தாமதமாகக் கடையைத் திறந்து கொண்டிருந்தான். செருப்புக்கடைதானே? விடிந்ததும் விடியாததுமாக விற்காவிட்டால் வாடிப் போய்விடுமென்பதற்கு வாழைக்காயா, கொத்துமல்லி, கறிவேப்பிலையா? கடையைத் திறந்ததும் குப்பென்று தோல் நாற்றம் மூக்கைத் துளைத்தது. அந்த நாற்றத்தோடு கடைக்குள் அடைந்து கிடந்த நேரத்தில் சேர்ந்திருந்த வெக்கையும் வாட்டி எடுத்தது. வெக்கையும், நாற்றமும் குறையட்டும் என்று மின்விசிறியைச் சுழலச் செய்துவிட்டு, ஸ்டூலை எடுத்துக்கொண்டு கடையின் போர்டைத் துடைப்பதற்காக வாசலுக்கு வந்தான் குமரகுரு.

ஸ்டூலைக் கீழே போட்டுக் கொண்டு ஏறி நின்று ‘இப்ராஹிம் ஷூ மார்ட்’ என்ற போர்டைப் பளிச்சென்று துடைத்தான். அவனுடைய முதலாளிக்கு எல்லாமே பளிச்சென்று இருக்க வேண்டும். தெருவிலோ தூசி அதிகம். ஒவ்வொரு நாளும் துடைத்தாலும் போர்ட்டில் தூசி படியத்தான் செய்யும். துடைக்காவிட்டால் முதலாளிக்கு வருகிற கோபம் பிரமாதமாயிருக்கும். வியாபாரத்தில் லாபம் பிரமாதமாக வருகிறதோ இல்லையோ, கோபம் பிரமாதமாக வந்து கொண்டிருந்தது அவருக்கு. லாபம் எப்படி வரும்? பொழுது விடிந்தால் பொழுது போனால் அவருடைய ‘சிநேகிதிகளுக்கு’ மாட்டிவிடுகிற ஓசிச் செருப்புக்களே நாலைந்து ஜோடிக்குக் குறையாதே! பெரிய முதலாளி இப்ராஹிம் சாயபு இருந்தபோது இந்தக் கடையை எவ்வளவுக்கெவ்வளவு அவர் மகன் சலீம் பாழாக்கிக் கொண்டிருக்கிறார் என்பது வேலைக்காரன் குமரகுருவுக்குத் தெரிந்துதான் இருந்தது. அவர் காலத்திலும் அவன் இந்தக் கடையில் வேலை பார்த்தான். இப்போது அவர் மகன் காலத்திலும் வேலை பார்க்கிறான்.

அவன் இப்ராஹிம் ஷூ மார்ட்டில் என்ன வேலை பார்க்கிறான் என்று ஒரு பதவிப் பெயருக்குள் சுருக்கமாக வரம்பு கட்டிவிட முடியாது. வருகிறவர்களை உட்கார

வைத்துக் காலில் செருப்பு மாட்டிக் கழற்றுவதிலிருந்து, பில் போடுவது, பணம் வாங்குவது, கணக்கு எழுதுவது, எல்லாம் குமரகுருதான். சில சமயங்களில் கூட்டமில்லாதிருக்கும்போது, நாலைந்து ஜோடிக்குப் பாலிஷ் போட்டு 'ஷோ கேஸில்' அடுக்குவதும் உண்டு. செருப்புக் கடையில் வேலை பார்க்கிறவனுக்கு எது உயர்வு? எது தாழ்வு? எல்லாமே உயர்வுதான்!

பெரிய முதலாளி காலமான பின் சின்னவர் சலீம் கடைப்பக்கமே அதிகமாக வருவதில்லை. கடையைத் திறப்பதிலிருந்து இரவில் சாவிக்கொத்தும் விற்பனைப் பணமும் கொண்டு போய்க் கொடுப்பதுவரை எல்லாம் குமரகுருதான் பார்த்துக் கொண்டான். சின்னவர் உல்லாச புருஷர், ரோட்டரி கிளப், டென்னிஸ் கிளப், காஸ்மாபாலிடன் கிளப் என்று ஊரிலுள்ள நவநாகரிக கிளப்புகளில் எல்லாம் சலீமுக்குத் தொடர்பு உண்டு. சலீம் வியாபாரத்தைக் கவனிப்பதற்காகத் தினசரி கடைக்கு வராவிட்டாலும் அந்த வழியாகக் காரில் போகிறபோது வருகிறபோது 'போர்டு' பளிச் சென்று இருக்கிறதா என்பதை நோட்டம் பார்க்கத் தவறமாட்டார். போர்டு பளிச்சென்று இராவிட்டால் அவருக்குக் கோபம் வரும்.

சலீம் பத்து நாளைக்கொருதரம் திடுதிடுப்பென்று நாலைந்து ஆங்கிலோ இந்தியப் பெண்களுடன் காரில் வந்து இறங்குவார். சிரிப்பும், கும்மாளமுமாகக் கடையே அமளி துமளிப்படும். எல்லார் கால்களுக்கும் புதிய செருப்புக்கள் மாட்டப்படும். முதலாளி சலீம் கடைசியில் குமரகுருவைத் தனியே அழைத்து, "குமரகுரு! இதோ பாரு. இவங்கள்ளாம் நமக்கு ரொம்ப வேண்டியவங்க. இதுக்கெல்லாம் பில் போடாதே. பிரஸன்டேஷன் மாதிரி இருக்கட்டும்" என்று சொல்லிவிட்டு, வந்ததுபோலவே அவர்களைக் காரில் அடைத்துக் கொண்டு திரும்பவும் கிளம்பிவிடுவார்.

அப்புறம் குமரகுரு ஏன் வாய் திறக்கிறான்? தோலோடு பழகிப் பழகி ரொம்ப விஷயங்களில் மரத்துப் போயிருந்தான் அவன். இவ்வளவெல்லாம் தாராளமாக இருக்கிற அதே சலீமிடம் தன் கால்களுக்கு இனாமாக ஒரு ஜோடி செருப்புக் கேட்கப் பயந்து கூசினான் குமரகுரு. நவநாகரிகமான உயர்தரச் செருப்புக்களைப் பளபளவென்று மின்னுகிறார்போல வரிசையாக அடுக்கியிருக்கிற அந்தக் கடையில் வேலை பார்க்கும் அவன் அணிந்து கொண்டிருந்த செருப்போ மிகவும் சாதாரணமானது. கருங்கல்லைப் போல் கனத்தோடு கோணல் மாணலாக அறுத்துத் தைத்திருந்த பழைய டயர் செருப்புக்களை வீதியில் மாட்டிக் கொண்டிருந்தான் குமரகுரு. ஆனால் நாள் தங்கி உழைக்கும் சக்தி அவற்றுக்கு உண்டு.

அந்தச் செருப்புக்களை அவன் கால்களில் அணிந்து கொண்டிருக்கும்போது பார்த்தாலும் அழகாயிராது. கழற்றிய பின்பு தனியாகப் பார்த்தாலோ அழகாயிராததோடு அசிங்கமாகவும் இருக்கும்.

ஒருநாள் கடைக்குள் நுழைகிற இடத்தில் அதைக் கழற்றி வைத்துவிட்டுச் சலீமிடம் அவன் பட்டபாடு போதும் போதும் என்றாகிவிட்டது.

"ஏண்டா குமரு, இதென்ன செருப்பா, பாறைக் கல்லு உடைச்சு வச்சிருக்கியா? இதை இங்கே கழட்டி வச்சுக் கடைக்குத் திருஷ்டி கழிக்க வாணாம். மறைவா எங்காவது

தூக்கி எறி" என்று சலீம் கூறியதிலிருந்து அந்தச் செருப்புக்களைக் கழற்றி முன்புறம் வைப்பதை நிறுத்திவிட்டுக் கடையின் பின்புறம் பழைய சாமான்களைக் குப்பைப் போல அடைத்திருக்கும் ஓரிடத்தில் போட்டுவிட்டு, போகும்போது நினைவாகக் காலில் மாட்டிக் கொண்டு போகப் பழக்கப்படுத்திக் கொண்டிருந்தான் குமரகுரு.

சலீமுக்கு எல்லாம் 'பளிச்'சென்றிருக்க வேண்டும். 'பளிச்' சென்றிருக்க வேண்டுமென்றால் பணம் வேண்டும். குமரகுருவுக்கும் 'பளிச்'சென்றிருக்க ஆசைதான்! ஆனால் 'இப்ராஹிம் ஷூ மார்ட்'டில் கிடைக்கிற நாற்பத்தைந்து ரூபாய்க் காசில் பளிச்சென்றிருக்க முடியுமா? இப்ராஹிம் ஷூ மார்ட்டைப் பளிச்சென்று வைத்துக்கொள்ள அவனால் முடியும். அது வேறு விஷயம்; ஆனால் தன்னைப் பளிச்சென்று வைத்துக் கொள்ளப் போதுமான பொருளாதார வசதி அவனுக்கு இல்லை.

அந்தக் கடையிலிருக்கிற உயர்தரச் செருப்புக்களில் ஒரு ஜோடி ஓசியாகக் கிடைத்தால் குமரகுருவும் பளிச்சென்று இருக்கலாம். ஆனால் அப்படி ஓசிச் செருப்பு ஏற்கனவே 'பளிச்' சென்று இருக்கிறவர்களுக்குக் கிடைத்துக் கொண்டிருந்ததே தவிர, அவனைப்போல் இனிமேல் பளிச்சென்று இருக்க விரும்புகிறவனுக்குக் கிடைக்கிற வழியாயில்லை. தானாக வாய் திறந்து கேட்க அவனுக்கும் தெம்பில்லை. எனவே நவநாகரிக ஷூ மார்ட்டாகிய இப்ராஹீம் ஷூ மார்ட்டில் வேலை பார்த்துக் கொண்டு கரடு முரடான டயர்ச் செருப்பில் நடந்து கொண்டிருந்தான் அவன். அதுதான் சொன்னேனே; தோலோடு பழகிப் பழகி ரொம்ப விஷயங்களில் அவன் மரத்துப் போயிருந்தான்.

அந்தக் கிளப்பிலும் இந்தக் கிளப்பிலும் பழகிய யுவதிகளோடு சலீம் கடைக்கு வந்து அட்டகாசம் செய்யும்போது குமரகுருவுக்குச் சில சமயங்களில் அவமானமாக இருக்கும். ஆனால் அவன் அந்த அவமானங்களை மறந்துவிடப் பழகிக் கொண்டிருந்தான்.

சலீம் தான் உடனழைத்து வரும் பெண்களை உட்காரச் செய்துவிட்டுக் குமரகுருவை நோக்கி, "ஏண்டா அசடு மாதிரி நிற்கிறே? இவங்க காலுக்கு 'மாட்ச்' ஆகிய மாதிரி ஜோடியாகப் பார்த்து எடுத்து மாட்டு" என்று அதட்டுவான்.

இளம் பெண்களுக்கு முன்னால் கண்டபடி பேசினால் அவருக்கும் ரோஷமாகத்தானே இருக்கும்? அதுவும் குமரகுரு கலியாணமாகாத வாலிபன்; கலியாணத்தைப் பற்றிக் கற்பனைகள் செய்திருக்கும் மனநிலையுள்ள பருவத்தினன். சுரணையற்ற தோலுக்குத்தானே தோற்கடையில் மதிப்பு? குமரகுருவும் அப்படித்தான் ஆகியிருந்தான். ஆனால் சமயாசமயங்களில் 'தானும் மனிதன்; தனக்கும் மனம், மானம் எல்லாம் இருக்கிறது' என்பது அவனுக்கு நினைவு வந்து தொலைத்தது. அப்படி நினைவு வரும்போதெல்லாம் அந்த நினைவைக் கஷ்டப்பட்டு அடக்க முயன்று கொண்டிருந்தான் குமரகுரு. பளிச்சென்று வாழமுடியாவிட்டாலும் பசியைத் தீர்த்துக் கொண்டாவது வாழ வேண்டுமே! இந்த வேலையை விட்டுவிட்டால் வயிறும் அல்லவா காயும்? அழுக்கு வேஷ்டியும் காலர் கிழிந்த சட்டையும், பழைய டயர்ச்

செருப்பும், எந்த விதத்திலும் கேவலமில்லை. ஆனால் அதை யாராவது கேவலமென்று சொல்லிக் காட்ட முன்வருகிறபோது வேதனையை உணரவேண்டியிருக்கிறது. 'கேவலம்தானோ' - என்று சந்தேகமும் ஏற்படுகிறது.

தன்னோடு கடைக்கு வருகிற இளம் பெண்களிடமெல்லாம் ஏதோ வேடிக்கை யாகப் பேசுவதுபோல், "நம் குமரு ஒரு ஜோடி செருப்பு வைத்திருக்கிறான்! அதைப் பார்த்தீர்களோ? உங்களுக்குச் செருப்புப் போட்டுக் கொள்ள வேண்டுமென்ற ஆசையே போய்விடும்" என்று சலீம் தன்னைச் சுட்டிக்காட்டிச் சிரித்துக்கொண்டே கூறும்போது குமரகுரு குன்றிப்போவான். 'வேடிக்கையாகப் பேசுவதற்கு எவ்வளவோ விஷயங்கள் இருக்கும்போது சலீம் தன்னுடைய டயர்ச் செருப்பைப் பேச்சுக்கு விஷயமாக எடுத்துக் கொண்டு வம்புக்கு இழுப்பது ஏன்?' என்று புரியாமல் தவித்தான் குமரகுரு.

'விடாமல் இப்படிச் சொல்லிச் சொல்லிக் கேலி செய்கிறாரே? இவர்தான் கடையிலிருந்து ஒரு ஜோடி நல்ல செருப்பு எடுத்து 'பிரஸண்ட்' செய்யட்டுமே!' என்று நினைப்பான் குமரகுரு. ஆனால் கேட்கத் துணிவு வராது. ஆனாலும் என்றாவது ஒருநாள் சலீமிடம் அந்தக் கேள்வியைக் கேட்டு அதன் பயனையும் தான் அடைந்துவிடலாம் என்று நம்பிக்கை மட்டும் அவனுக்கு இருந்தது. எத்தனையோ பேருக்கு ஓசிச் செருப்பு வழங்கிய உல்லாசப் பேர்வழி தனக்கு ஒரு ஜோடி அன்பளிப்பாக நல்ல செருப்புத் தரத் தயங்கமாட்டார் என்று எண்ணினான் அவன்.

குமரகுரு எதிர்பார்த்த சந்தர்ப்பம் விரைவில் வாய்த்தது. அன்று சலீம் தன் ஜமாவோடு கடைக்குள் நுழைந்தபோது இரண்டாவது முறையாகக் குமரகுரு வாசற்புறம் தவறிப்போய்க் கழற்றி வைத்திருந்த டயர்ச் செருப்பு அவன் பார்வையில் தென்பட்டுவிட்டது; அவ்வளவுதான். வந்தது வினை!

"ஏண்டா இதை நீ இன்னும் இங்கேதான் கழற்றி வைக்கிறாயா? உனக்கு எத்தினி நாள் படித்துப் படித்துச் சொல்லுறது? சொல்லிப் பிரயோசனமில்லே. இதோ இப்படிச் செய்தாத்தான் உனக்குப் புத்தி வரும்." என்று சொல்லிக் கொண்டே டயர்ச் செருப்புக்களை நடுத்தெருவில் போய் விழும்படி தன் காலால் 'புட்பால்' உதைப்பதுபோல் எற்றிவிட்டான் சலீம். குமரகுருவுக்கு இது அவமானமாயிருந்தாலும் ஒருவிதத்தில் திருப்தியாயிருந்தது.

'இதுதான் சரியான சமயம்! இன்றைக்கு இவரிடம் கேட்டுவிட வேண்டியதுதான்' என்ற எண்ணத்துடன் "நான் இனிமேல் டயர்ச் செருப்புப் பக்கமே போகவில்லை. எனக்கு ஒரு ஜோடி நல்லதாச் செருப்புக் கடையிலிருந்தே கொடுத்துவிடுங்கள்" என்று கேட்டுவிடத் தயாரானான் குமரகுரு.

தான் வாய் திறந்து கேட்டால் உல்லாசப் பேர்வழியான முதலாளி மறுக்கமாட்டாரென்று நினைத்துக் கொண்டிருந்தான் அவன். வாய் திறந்து கேட்டும் அவர் மறுத்துவிட்டால் அவமானமாயிருக்குமே என்றும் தயங்கினான். அப்படி அவர் தரமறுத்துவிட்டால் மேலே என்ன செய்யலாம் என்றும் அவன் யோசித்தான். "நீயுமாச்சு, உன் கடையுமாச்சு, நீயே உன் கடையைக் கட்டிக் கொண்டு அழு" என்று

சொல்லிவிட்டு அப்படியே தெருவில் போய் அங்கே விழுந்து கிடக்கும் தன் டயர்ச் செருப்புக்களை மாட்டிக் கொண்டு நடந்துவிடலாமா என்று சிறுபிள்ளைத் துடிப்போடு ஒரு யோசனை குமரகுருவுக்கு உதயமாயிற்று.

அப்படிச் செய்தால்தான் என்ன?

வேறென்ன? வேலை போகும்; வயிறு காயும்? வயிறு காயட்டுமே! வேலை போகட்டுமே! ஒரு நிமிஷம் ரோஷத்தோடு, மானத்தோடு துணிவோடு வாழ்ந்திருக்கிறோம் என்ற திருப்தியாவது கிடைக்குமே?

கடைசியில் குமரகுரு துணிந்து கேட்டேவிட்டான்.

"நீங்கள்தான் ஒரு ஜோடி நல்ல செருப்பாக எனக்குப் 'பிரஸண்ட்' செய்யுங்களேன் முதலாளி."

"பிரஸண்ட் செய்கிற முகரையைப் பார் முகரையை; உனக்கு அது ஒரு கேடா" என்று அவன் எதிர்பார்த்ததற்கு நேர்மாறான பதில் சலீமிடமிருந்து வந்தது. சலீமுக்குத்தான் 'பிரஸண்ட்' செய்கிற ஆள் உள்பட எல்லாமே பளிச்சென்று இருக்கவேண்டுமே!

குமரகுரு அதிர்ந்து போனான். 'யோசனைப்படி இப்போதே இந்த வேலையை விட்டு வெளியேறிவிட வேண்டியதுதான் என்ற எண்ணம் அவன் மனத்தில் உறுதிப்பட்டது. ஒரு கணம் தயங்கினான். முதலில் செருப்பை எடுத்துக்கொண்டு வந்து அப்புறம் பேசிக் கொள்ளலாமென்று தோன்றியது. எப்படியானால் என்ன? குமரகுருவுக்குத் துணிச்சல் உண்டாகிவிட்டது. இத்தனை நாட்களாகத் தன்னை அவமானப்படுத்தி வாட்டி எடுத்திருக்கும் முதலாளி சலீமைச் சரியானபடி காய்ச்சி எடுக்க அவனுக்கும் ஒரு சந்தர்ப்பம் வாய்த்துவிட்டது! கடைக்குள்ளிருந்து வேகமாக நடந்து தெருவுக்கு வந்தான் குமரகுரு. அங்கொன்னும் இங்கொன்றுமாக, விழுந்திருந்த டயர்ச் செருப்புக்களைக் கால்களில் மாட்டிக் கொண்டு திரும்பினான். சலீமின் அதிகாரக் குரல் அவனை அழைத்தது.

"டேய் குமரு! அந்த 'ஐசுவரியம்' தெருவிலே கிடந்தா எவனும் கொண்டு போயிடமாட்டான். உள்ளே கொண்டு போய் எறிஞ்சிட்டு இங்கே வா. வந்து இவங்க காலுக்கு 'சப்பல்ஸ்' எடு."

குமரகுரு மறுபேச்சுப் பேசாமல் கடைக்குள் புகுந்து செருப்பை வழக்கம்போல் உட்புறம் குப்பைக் குவியலுக்கருகே கழற்றி எறிந்துவிட்டுத் திரும்பி வந்தான். வந்திருப்பவர்களின் காலுக்கு அளவான செருப்புக்களைத் தேடி எடுக்கலானான். அவனுடைய கொதிப்பு அந்த ஒரு கணத்தில் எப்படியோ அடங்கிவிட்டது. சலீமை எதிர்த்துக் கேட்க ஏனோ அவனுக்கு நாழ எழவில்லை. 'எதிர்த்துக் கேட்கலாம்' என்று நினைப்பது சுலபமாக இருந்தது. கேட்பதற்கு மட்டும் முடியவில்லை. ஏதோ நாவைத் தடுத்தது. ஏதோ தொண்டையைக் கட்டுப்படுத்தியது. சொல்ல வரவில்லை. சீற்றமும் வரவில்லை. சுரணையில்லாத தோலோடு பழகிப் பழகி அவன் ரொம்ப விஷயங்களில் மரத்துப் போயிருந்தான்.

**(தாமரை, ஜூன், 1961)**

## 63. கார்கால மயக்கம்

அறைக்கு உள்ளே எழுத்து, கற்பனை, படிப்பு எதுவுமே ஓடாத நேரத்தில் வெளிவாசல் வராந்தாவிற்கு வந்து ஒரு நோக்கமும் இல்லாமல் குறுக்கும் நெடுக்கும் நடக்கிற பல சந்தர்ப்பங்களில் எம்.எஸ்.எக்ஸ். 07423 என்ற எண்ணுள்ள இந்தச் சிறிய காரை அழகிய யுவதி ஒருத்தி தனியாக டிரைவ் செய்து கொண்டு போவதை நான் பார்த்திருக்கிறேன்.

'நம்பர் முதற்கொண்டு குறிப்பாகப் பார்த்திருக்கிறீர்களே?' என்று நீங்கள் பூடகமாக உள்ளர்த்தம் மறைத்துச் சிரிப்பது புரிகிறது. தற்செயலாகப் பார்த்தல் - என்பதையே தொடர்ந்து செய்கிறபோது நோக்கமில்லாமலே ஒரு நோக்கம் வந்துவிடுகிறது. 'நான் விடமாட்டேன், விடமாட்டேன்' என்று தானாகக் கண்ணிலும், மனத்திலும் வந்து பதிந்து தெலைக்கும் விஷயத்தை எப்படி உதற முடிகிறது? இந்த எம்.எஸ். எக்ஸ் 07423 விஷயமும் இப்படித் தற்செயலாக மனத்தில் இடம் பிடித்துப் பின்பு நாளாவட்டத்தில் தன்னைத்தானே ஸ்திரப்படுத்திக் கொண்டதுதான். இதை நினைவு வைத்துக் கொள்ள வேண்டுமென்று நான் எந்த முயற்சியும் செய்ததில்லை. நினைவு வைத்துக்கொள்ள எனக்கு வேறு எத்தனையோ விஷயங்கள்.

ஏதோ ஒரு தினத்தில் காலை ஒன்பதரை மணியிலிருந்து பத்துமணிக்குள்ளே சரியாக இன்ன நேரம் என்று சொல்ல முடியாத ஏதோ ஒரு நேரத்தில் சாலையின் தெற்குப் பக்கத்திலிருந்து வடக்குப் பக்கம் நோக்கி இந்த மோகினி எம்.எஸ்.எக்ஸ் 07423-ஐச் செலுத்திக் கொண்டு போனதை முதல் தடவையாக நான் பார்த்தேன். நடப்பதற்கு 'சான்ஸே' இல்லாமல் கூண்டில் வைத்து இழுத்துக் கொண்டு போகப்படுகிற சர்க்கஸ் மிருகம் போலக் காரில் போகிறவர்களைக் கண்டாலே எனக்கு அனுதாபம் உண்டாகும்.

இரட்டைப் பின்னலில் இரண்டு புறமும் நிரந்து தொங்கும் மல்லிகைச்சரம். இந்த முகத்தின் கவர்ச்சி எப்படிப்பட்டதென்று சொல்ல முடியாவிட்டாலும் கவர்ச்சி என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று திட்டமாகச் சொல்லிவிடத் தகுந்த முகம். நீல அலையில் கயல் போலப் புரளும் கண்கள். ரோஜா மொட்டு இதழ்கள். ஊதுபத்திப் புகைச் சுருளைப்போலக் காதோரத்தில் சுருண்ட கூந்தல் இழைகள். ஸ்டியரிங் பற்றியிருக்கும் கைகளில் ஒன்றில் சிறிய பொற்கடிகாரம். மற்றொன்றிலே இரண்டு பொன் வளைகள். ஏதோ ஒரு நிறத்தில் வாயில் புடவை. அது எந்த நிறத்தினதாயிருந்தாலும் இவளுக்கு அழகாகத்தான் இருக்கும். சுபத்திரை, கைகேசி போன்ற பெண்கள் தேரோட்டியதாக இதிகாசங்களில் வருகிறதே, அந்தச் சமயங்களில் அவர்கள் எவ்வளவு அழகாயிருந்திருப்பார்கள் என்பதை இந்த எம்.எஸ்.எக்ஸ்.07423-

ஐச் சாரத்யம் செய்து கொண்டு போகும் பெண்ணின் நினைவில் இருந்து கற்பனை செய்து கொள்வேன் நான். நோஞ்சானாகித் துவள்கிற மனத்துக்கு இந்தக் கற்பனை ஒரு 'டானிக்' மாதிரியில்லையா? கதைக்கும், நாவலுக்கும், தேவையான கற்பனைகள் ஓடாத காலத்தில் மனத்தின் வறட்சியைப் போக்கிக் கொள்ளவாவது இப்படி மோகன நினைவுகளில் மூழ்குவது உண்டு. அறைக்குள் உட்கார்ந்து எழுதிக் கொண்டே இருப்பேன். இருந்தாற்போலிருந்து எழுதுவதைச் சிறிது நேரத்துக்கு நிறுத்திவிட்டு வேறு ஏதாவது செய்தாலென்ன என்று மனம் இன்னொன்றிலே தாவிவிடும்.

எப்போதாவது சில சமயங்களில் எதுவும் செய்யாமலிருப்பதுகூட எல்லாம் செய்ததைவிடச் சுறுசுறுப்பான ஒரு செயலாகத் தோன்றும். அப்படித் தோன்றும் சமயங்களில்தான் மற்ற நேரங்களில் என்னைக் கவர முடியாத விஷயங்களால் நான் கவரப்படுவேன்.

எம்.எஸ்.எக்ஸ் 07423ம் இதன் ஸ்டியரிங்கைப் பற்றியிருக்கும் பொன்நிறக் கைகளும், அவற்றுக்குரிய இளமையின் மோகன விழிகளும், அந்த விழிகளிலேயே பிறந்து அவற்றின் எல்லையிலே தேங்கும் நளினமும் என்னைக் கவர்ந்ததும் இப்படிப்பட்டதொரு நேரத்தில்தான். பலவீனமான நேரமா அது?

மெடிகல் காலேஜில் டாக்டருக்குப் படிக்கிற பெண் என்று தெருவில் யாரோ பேசிக் கொண்டது காதில் விழுந்தது. அதற்குமேல் அதிகமாக ஒன்றும் தெரியவில்லை.

கார்காலம் ஆரம்பிக்கும் பருவம். ஒருநாள் மழை இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது. எங்கோ போவதற்காகப் பையும் கையுமாக வாசல்வரை வந்தவன், போகலாமா, வேண்டாமா என்று தயங்கி நின்றேன். தெற்கேயிருந்து வந்து கொண்டிருந்த எம்.எஸ்.எக்ஸ். 07423 மோகினி அங்கிருந்தே நான் நிற்கிற நிலையைப் பார்த்துக்கொண்டே வந்திருக்கிறாள் போலிருக்கிறது.

சர்ர்ரென்று எங்கள் வீட்டு வாசலில் வந்து நின்றது எம்.எஸ்.எக்ஸ் 07423. "ஏறிக்கொள்ளுங்கள் சார்! நான் கொண்டு போய் விட்டுவிடுகிறேன்" - என்று சிரித்துக் கொண்டே இவள் பின்புறம் திரும்பி உள் ஸீட்டுக்கான கதவைத் திறந்துவிட்டாள். நான் சில கணங்கள் தயங்கி நின்றேன். உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் என்னுடைய கொள்கைகள் நினைவுக்கு வந்தன. நான் ஒரு எழுத்தாளன் - முற்போக்கு இதயங்கொண்ட எழுத்தாளன். எவ்வளவு வசதிகள் பெருகினாலும் வாழ்க்கையின் பங்குதாரனாக இருக்க வேண்டுமே தவிர, விஸிட்டராகப் பார்வையாளனாக இருக்கக்கூடாதென்று நினைக்கிறவன். கொஞ்சம் மார்க்ஸீய சித்தாந்த வழிபாடும் உண்டு. தெருவின், இருபுறமும் தோன்றி மறையும் நலிவையும், பொலிவையும் சேர்த்தே பார்த்துச் சிந்தித்துக் கொண்டே நடந்து செல்ல ஆசைப்படுகிறவன். காரில் சென்று சென்று, நடப்பதற்கே பொறுமையற்றுப் போய்விட்ட என் நண்பர்களைப் பார்த்து அனுதாபப்பட்டுக் கொண்டிருக்கிறவன். சந்து பொந்துகளிலும் நாசுக்கான பேர்வழிகள் நடப்பதற்குக் கூசுகிற பாதைகளிலும்கூட வாழ்க்கை கூசாமல் நடந்து கொண்டுதான் இருக்கிறது. அதைப் பார்க்காமல் விலகிப் போவதுதான் அநாகரிகம்

என்று நினைத்து எழுதி, பேசி, ஸ்தாபித்துவிட ஆசைப்படுகிறவனைக் காரில் அழைக்கிறாளே இவள்? என்ன தைரியம் இவளுக்கு?

"ஏன் யோசிக்கிறீர்கள் சார்? மழை பலமாக வருகிறது. உதவி செய்வதுதான் மனிதாபிமானம் என்று பக்கம் பக்கமாக எழுதுகிறீர்கள். உதவி செய்ய வருகிறவர்களைக் கண்டால் பயந்து தயங்குகிறீர்களே?"

'அடடா! இந்தப் பெண் என்னைப் பற்றித் தெரிந்தவள் போலிருக்கிறது. இல்லாவிட்டால் என் எழுத்தைப் பற்றிப் பேசுவாளா?' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டேன்.

"ஏறிக் கொள்ளுங்கள் சார்!" - என்று மறுபடியும் இவள் குரல் கெஞ்சியது. இந்தக் குரல் என்னை எப்படி வசப்படுத்தியது என்று தெரியவில்லை. 'இந்த முகத்தில் ஏமாற்றத்தைப் படர விடுவது பாவம்' என்று நினைத்தோ என்னவோ காரில் ஏறிவிட்டேன். எந்த எம்.எஸ்.எக்ஸ் 07423-ஐப் பார்த்து நாள் தவறாமல் 'காரில் போகிறவர்கள் வாழ்க்கையில் எதை அனுபவிக்க முடியும்?' என்று கேலியாக நினைத்துக் கொண்டிருந்தேனோ அதில் நானே ஓசிச் சவாரி புறப்பட்டுவிட்டேன். எப்படி என் கொள்கைப் பிடியிலிருந்த நழுவினேனோ, எந்த விநாடியில் தடுமாறினேனோ அந்த விநாடி மிகவும் பொல்லாதது என்று நினைத்துக் கொண்டேன். முன் ஸீட்டிலிருந்து அவள் குரல் ஒலித்தது....

"போன மாதத்தில் புதுயுகம் இதழில் வெளிவந்த 'ஏழையின் குரல்' என்கிற உங்கள் கதை நன்றாயிருந்தது சார்."

"ஓ! நீங்கள் புதுயுகம்கூட வாங்குகிறீர்களா? ஆச்சரியமாயிருக்கிறதே?"

"இதில் ஆச்சரியமென்ன? புதுயுகம் நல்ல அம்சங்களோடு தரமாக வருகிறது சார்."

"தரமாயிருக்கிற எதுவும் பெண்களுக்குப் பிடிக்காதென்று நைலான் எழுத்தாளர்கள் சொல்கிறார்களே, அதனால்தான் அப்படிக் கேட்டேன்."

"அப்படி எனக்குத் தோன்றவில்லை சார். புதுயுகத்தில் வருகிற பகுதிகள் எல்லாம் மனத்தில் நிலையாகத் தங்குகின்றன. மற்றவர்கள் எப்படியோ, என்னைப் பொறுத்த மட்டில், புதுயுகத்தின் ஒவ்வொரு வெளியீடும் ஒரு கருவூலம்தான்."

'அடடா! இந்த எம்.எஸ்.எக்ஸ் 07423 நங்கையைப் பற்றி நான் நினைத்துக் கொண்டிருந்தது எவ்வளவு பெரிய தவறாக முடிந்துவிட்டது? இவள் முற்போக்கு எழுத்தை வணங்கும் இலட்சியப் பெண்ணாக அல்லவா இருக்கிறாள்? புதுயுகத்தில் நான் எழுப்பிய ஏழையின் குரல் இவள் செவிகளிலும் ஒலித்திருக்கிறதே!'

நான் இறங்க வேண்டிய இடம் வந்தது. நிறுத்தச் சொல்லி இறங்கிக் கொண்டேன்.

"உங்களுக்கு ஆட்சேபனை இல்லை என்றால் மழை காலம் முடிகிறவரை தினசரி கல்லூரிக்குப் போகும்போது என் காரிலேயே உங்களைக் கொண்டு வந்து விட்டுவிடுகிறேன் சார்..." இவள் குரலில் அந்தச் செயலைச் செய்வதில் உள்ள ஆர்வம் பொங்கியது.

நான் 'சரி' என்று சம்மதிக்கவும் இல்லை. 'முடியாது' என்று மறுக்கவும் இல்லை. சிரித்துக்கொண்டே விடைபெற்றேன். 'நன்றி' சொல்வது என்னும் 'தீர்த்துக்கட்டுகிற விவகாரம்' எனக்குக் கட்டோடு பிடிப்பதில்லை. பல முதலாளிமார்கள் தங்களிடம் கூலிக்கு உழைக்கிறவர்கள் நன்றி செலுத்துவதில்லை என்று குறைப்பட்டுக் கொள்வதையே ஒப்புக் கொள்ளாதவன் நான். நீர் கொடுக்கிற சம்பளத்துக்கு உழைப்பைத்தான் தரலாம். நன்றியையும் சேர்த்துத் தந்தால் உழைக்கிறவனுக்கு அதிக நஷ்டம். தவிரவும் நன்றியைச் சம்பளத்துக்கு வாங்கவும் முடியாது - என்று மேடைகளில் பேசுகிறவன் வாய்க்கு வாய் நன்றி சொல்லிக் கொண்டிருக்க முடியுமோ? 'நன்றி' என்பதே சுத்த ஹம்பக்.

எம்.எஸ்.எக்ஸ் 07423 என்னும் காரைக் கொண்டு வந்து நிறுத்தியவுடன், 'மன்னிக்கவும்; வருவதற்கில்லை, பழக்கமுமில்லை' என்று முகத்தில் அறைந்தாற்போல் மறுத்துச் சொல்லி இவள் மனத்தைப் புண்படுத்தாமல் கூட வந்ததற்கு இவள்தான் எனக்கு நன்றி சொல்ல வேண்டுமென்று நினைக்கிறவன் நான். நீங்கள் இதைத் 'திமிர்' என்றுதான் சொல்வீர்கள். பரவாயில்லை. இந்த உலகத்தில் திமிர் கொள்வதற்கு உரிமையும் தகுதியும் உள்ளவர்கள் அடக்கமாக இருந்துவிட்டால், தகுதியும் உரிமையும் இல்லாதவர்கள் திமிர் கொண்டாடத் தொடங்கிவிடுகிறார்கள். அந்த ஆபத்து ஏற்படாமலிருக்கவாவது நாம் திமிரோடு இருந்து தொலைக்க வேண்டியிருக்கிறது. தெருவில் நடக்கும்போதே 'நடக்கிற உரிமை' நம்முடையது என்ற திமிரோடு நடக்கிறவன் நான்.

இன்னும் சிலர் பிறரிடம் பணிவாய் நடந்து கொள்வதாக நினைத்துக்கொண்டே, தங்களைத் தவிர, வேறு யாராலும் அப்படி நடந்து கொள்ள முடியாதென்பதற்காகவே திமிர்கொள்வதுண்டு.

நல்ல மழை நாளான மறுநாளும் இப்படியே நடந்தது. சொல்லி வைத்தாற்போல் நான் புறப்படும் நேரத்துக்கு எம்.எஸ்.எக்ஸ் 07423ஐக் கொண்டு வந்து என் வீட்டு வாசலில் நிறுத்தினாள் இந்தப் பெண். கூந்தலிற் சூடியிருந்த பூவின் மணம் - பெட்ரோல் நாற்றத்தை இருக்கிற இடம் தெரியாமல் செய்துவிட்டது.

"பரவாயில்லை, நான் போய்க் கொள்வேன்" என்று சொல்லி மறுத்துவிட இருந்தேன். என்ன காரணமோ, நாவு அப்படிச் சொல்லாமல் என்னை ஏமாற்றி விட்டது. நேற்றைப்போலவே ஏதோ ஒரு வினாடியில் நான் தடுமாறிவிட்டேன். இந்த அழகிய முகத்தில் ஏமாற்றத்தைப் படரவிடுவதற்குத் தயங்கியவனாக, பழக்கி ஆளாக்கிய தலைவன் திறந்துவிடும் வாசல் வழியே கூண்டுக்குள் நுழைகிற சர்க்கஸ் மிருகத்தைப் போல் காருக்குள் ஏறிக் கொண்டுவிட்டேன்.

"சார்! என்னை ஏதோ பெரிய 'கேபிடலிஸ்ட்' வீட்டுப் பெண் என்று நினைத்துப் பயப்படத் தேவையில்லை. நானும் - ப்ரக்ரஸிவ்வா (முற்போக்காக) எண்ணு கிறவள்தான்."

இந்த வார்த்தைகளால் என் சந்தேகத்தைத் தீர்க்க முயல்கிறவள்போல் இவள் ஏதோ சொன்னாள். நானும் பதில் சொல்லலானேன் :

"அதைப் பற்றி என்ன வந்தது இப்போது? எல்லாருமே 'ப்ரக்ரஸிவ்வா' இருக்கணும்ங்கிற அவசியமென்ன?"

"அவசியமிருக்கிறதென்றுதானே எழுதிக் கொண்டு வருகிறீர்கள்?"

பதிலுக்கு நான் பேசவில்லை. மழை மேலும் பெரிதாகவே காரின் கண்ணாடிக் கதவை மேலே உயர்த்தினேன். நனைவதிலிருந்து தப்பினேன்.

பழைய தலைப்பை விட்டு இவள் பேச்சு என்னுடைய ஏதோ ஒரு கதையைப் புகழும் முயற்சியில் திரும்பியது. அந்தப் புகழ்ச்சியில்கூட என் மனம் இலயிக்கவில்லை. தங்களைப் புகழ்கிற காரியத்தையே ஏற்றுப் பதிலுக்குப் புகழும் ஆசாமிகளையும் நான் பார்த்திருக்கிறேன். என்னுடைய சிந்தனை எல்லாம், 'இந்த இரண்டு நாட்களாக எப்படி இவள் காரில் உட்கார்கிற அளவுக்கு நான் மலிந்து போனேன்? என் மனத்தின் எந்த மூலையில் ஆசைக்கு நழுவுகிற பலவீனம் இருந்தது?' என்பதிலேயே சுழன்றுகொண்டிருந்தது. சந்தோஷமாகக் காரில் சவாரி செய்ய என்னால் முடியவில்லை.

முன்தினம் போலவே அன்றைக்கும் என்னை நான் இறங்க வேண்டிய இடத்தில் இறக்கிவிட்டுப் போகிறபோது இவள் அதே பழைய சொற்களைச் சொன்னாள் : "சார்! மழைக்காலம் முடிகிறவரை என் காரிலேயே வந்துவிடுங்கள். எனக்குப் பெருமை. உங்களுக்கு உதவி."

ஒன்றும் சொல்லாமல் நான் சிரித்துக்கொண்டே இறங்கிப் போனேன். 'நம்முடைய மனத்தில் எங்கோ 'லீக்கேஜ்' கசிவு - அநாவசியமாக இருக்கிறது. அதைச் சரிப்படுத்த வேண்டும்' என்பதுதான் என்னுடைய தவிப்பாக இருந்தது. 'இதற்கு முன்னால் மழைக்காலமே வராமல் இருந்ததா? நான் வெளியே நடந்து போகாமலா இருந்தேன்? இப்பொழுது மட்டும் ஏன் இந்த மாதிரி சௌகரியப் பசையில் ஒட்டிக் கொண்டேன்' என்று உள்ளத்தில் ஒரே குமுறல். இதற்கேற்றாற்போல் அன்றைக்கு ஒரு நண்பர் வேறு கேட்டுவிட்டார். "என்ன சார்? யாரோ காரில் கொண்டு வந்து விடுகிறார்கள் போலிருக்கிறது. நனையாமல் வந்து விடுகிறீர்கள்."

மூன்றாம் நாள், நான்காம் நாள்... எண்ணிக்கையின் பன்மைக்கு ஒரு பெருமை உண்டானால் பத்து நாளைக்கு நான் இவளுடைய காரில் ஏறி வந்திருப்பது அதிகமானதுதான். மழைக்கு நனையாமல் வந்திருக்கிறேன் என்பது உபரி லாபக் கணக்கில் வரவு வைக்கப்பட வேண்டியது.

'கார்' காலத்தினுடைய பதினோராவது நாள் குறிப்பிட்ட நேரத்துக்கு மேலாகியும் தெற்குப் பக்கத்திலிருந்து எம்.எஸ்.எக்ஸ் 07423ன் ஓசை கேட்கவில்லை. மழை பெய்து கொண்டிருந்தது. எனக்கு அவசரமாகப் போக வேண்டும். போக வேண்டுமானால் குடையைப் பிடித்துக் கொண்டு நடக்க வேண்டியதுதானே? நடக்க முடியாதவனாக நான்?

ஆனால் அன்று அதுதான் என்னால் முடியவில்லை. 'இதோ வந்துவிடுவாள், இதோ வந்துவிடுவாள்' என்று தெற்கே நோக்கிக் காதைத் தீட்டிக் கொண்டு

எம்.எஸ்.எக்ஸ் 07423ன் வரவை எதிர்பார்க்கிறேன். 'நடந்து போக வேண்டும்' என்று எண்ணுவதற்கே சோம்பலாயிருக்கிறது. 'கார் வந்துவிடும்' என்று நினைக்க முடிகிறதே தவிர, 'நடந்து போய் விடலாமே' என்று நினைக்க வரவில்லை. எவ்வளவு பெரிய ஆபத்தான நிலை இது? நினைப்பதற்கே சோம்பல்.

அதோ! தெற்கேயிருந்து வேலைக்காரப் பையன் ஒருவன் மழையில் நனைந்துகொண்டு ஓடிவருகிறான். என் வீட்டுப் படியேறுகிறான். சொல்கிறான் :

"சுமதி அம்மா இன்னிக்குக் காலேஜுக்குப் போகலியாம். அவங்களுக்கு ஜுரம். உங்க கிட்டச் சொல்லிடணும்னாங்க..."

இவள் எதற்காகச் சொல்லி அனுப்பியிருக்கிறாள் என்பது புரிகிறது. இலேசாக என் மனத்தின் ஒரு மூலையிலிருந்து கோபம்கூட வருகிறது. யார்மேல் யார் கோபப்படுவது? எதற்காகக் கோபப்படுவது? எனக்கே புரியவில்லை. 'எம்.எஸ்.எக்ஸ். 07423ல் பத்து நாள் சவாரி செய்ததிலேயே நான் இவ்வளவு பெரிய சோம்பேறியாக மாறிவிட்டேனே' என்பதை நினைத்தபோதுதான் 'வீக்' ஆகிப் போன இடம் எனக்குப் புரிகிறது. செயலைச் செய்வதற்குச் சோம்பல் படுகிற நிலை உலகத்தில் பலருக்கு உள்ளதுதான். ஆனால், நினைப்பதற்கே, சோம்பல் படுகிற நிலை மிகவும் பயங்கரமானது.

மீண்டும் வீட்டுக்கு உள்ளே போகிறேன். குடையை எடுத்துக்கொண்டு வருகிறேன், நடக்கிறேன், நடப்பது என்பதே அகெளரவமான காரியம்போல ஒரு மயக்கம் உண்டாகிறது. சமாளித்துக் கொண்டு மேலே நடக்கிறேன். பழைய தைரியம், பழைய திமிர், பழைய சிங்கநடை எல்லாம் மெல்ல மெல்ல என்னை வந்தடைகின்றன. 'இந்தத் திமிர் பத்து நாட்களாகவே எங்க போயிருந்தது?' என்று நினைத்து மலைக்கிறேன். மறுபடியும் சமாளிக்கிறேன்.

என்னுடைய அந்தப் பழைய நடை - தெருவையே அம்பு துளைக்கிற மாதிரி துளைத்துக் கொண்டு பாய்கிற நடை - எழுத்திலுள்ள 'ப்ரொக்ரஸிவ் ஸ்டைல்' போன்ற நடை - இப்போது எனக்கு வருகிறது. திரும்ப வருகிறது.

பாய்ந்தடித்து அதிவேகமாகப் போகிற செளகயரிங்களில் ஒட்டிக் கொண்டு நினைவை மந்தமாக்கித் தவிப்பதைவிட மெதுவாகப் போகிற அசெளகரியத்துடன் விரைவாகச் சிந்திக்கிற சாதனை இருந்தால் போதும் என்று நினைக்கிறேன். கடந்த பத்து நாட்களாக எப்படி இந்த நினைவை மறந்திருந்தேன்?

கார்காலத்தின் பன்னிரண்டாம் நாள். எம்.எஸ்.எக்ஸ்.07423ன் ஓசை வாசலில் கேட்கிறது. "சார் ரொம்ப மன்னிக்கணும். நேற்று நீங்கள் கஷ்டப்பட்டிருப்பீங்க..." இவள் குரல் கெஞ்சுகிறது.

நான் இவள் முகத்தைப் பார்த்துச் சிரிக்கிறேன். பின்பு நிதானமான குரலில் சொல்கிறேன்: "சுமதீ! நான் உன்னை மன்னிக்க வேண்டிய குற்றத்தைத்தான் நீ செய்திருக்கிறாய். அதாவது என்னை நடப்பது பற்றி நினைக்கவும் சோம்பல்."

செய்த குற்றத்தைச் சொல்கிறேன். அதைப் பத்து நாள் செய்தது போதும், இன்னும் செய்ய வேண்டாம்..."

என்னோடு சிறிதுநேரம் வாதாடிவிட்டுச் சுமதி போய்விடுகிறாள். மழையில் நனைந்து கொண்டு உள்ளிருப்பவளை நனையாமல் காப்பாற்றியவாறு போகும் எம்.எஸ்.எக்ஸ். 07423ஐயும் பார்த்துவிட்டு எந்த மயக்கமும் இல்லாத கெட்டியான மனத்தோடு உள்ளே திரும்புகிறேன் நான்.

ஊரில் 'கார் கால மூட்டம்' - மூன்று மாதத்துக்கு இருந்ததாக எல்லாரும் சொல்கிறார்கள். என்னைப் பொறுத்தவரையில் 'கார்' கால மயக்கம் பத்தே நாட்களுக்கு மேல் இல்லை. இப்போது எனக்கு அந்த 'வீக்கேஜ்' மனத்தின் எந்த மூலையிலும் இல்லை.

(தாமரை, ஆகஸ்ட், 1961)



# 64. பிட்டுத் தோப்பு

**வை**யையாற்றுப் பாலத்தைக் கடந்து இரயில் மதுரைக்குள் நுழைகிறபோது நீங்கள் வண்டி போகிற திசையை நோக்கி உட்கார்ந்திருந்தால் - வலது கைப்பக்கம் ஆற்றின் தெற்குக் கரையில் பாலத்துக்குச் சிறிது தொலைவு மேற்கே அடர்த்தியாகத் தென்னை மரங்கள் தெரியும். கரையிலிருந்து ஆற்றுப் பரப்பை நோக்கி ஒட்டைச்சிவிங்கி போல் நீட்டி வளைத்துக் கொண்டு வையையில் புதைந்து கிடக்கிற எந்த இரகசியத்தையோ மேலேயிருந்து தேடுவது போல் தோன்றும். இந்தத் தென்னை மரங்களில் மனத்தைப் பறி கொடுக்கவில்லையானால் எதற்குமே மனத்தைக் கொடுத்து ஈடுபடத் தெரியாதவர் என்றுதான் உங்களைப் பற்றிச் சொல்ல வேண்டியிருக்கும்.

கண்ணுக்கினிய இந்தத் தென்னை மரக் கூட்டத்துக்குத்தான் மாதத்திற்கொரு திருவிழாவுடைய எங்கள் மதுரை மாநகரத்தில் பிட்டுத் தோப்பு என்று பெயர். இது என்ன பெயர்? பிட்டாவது தோப்பாவது? - என்று நீங்கள் முகத்தைச் சுளித்துக்கொண்டு முணுமுணுப்பது என் காதில் விழுகிறது. போனால் போகிறதென்று பழைய சங்கதிகளைக் கொஞ்சம் படித்து வைத்திருந்தால் இதெல்லாம் தெரியும்! புதியதைப் படிப்பதற்கே நேரமில்லாதபோது பழையதைப் படிக்க உமக்கு நேரமேது? சொல்கிறேன், கேளும்....

ஆலவாய் நகராகிய மதுரையில் சோமசுந்தரப் பெருமான் அறுபத்து நாலு திருவிளையாடல்கள் செய்து மகிழ்ந்தாரே, அவற்றில் பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல் என்பதும் ஒன்று. அந்தக் கதையை எப்போதாவது பள்ளிக்கூடத்துப் பாடப்புத்தகத்தில் படித்திருப்பீர்; அல்லது படிக்காமலும் விட்டிருப்பீர். அதைப் பற்றிய கவலையை ஏற்கெனவே உமக்குப் பள்ளிக்கூடத்தில் வாத்தியாராயிருந்த துர்ப்பாக்கியசாலி பட்டிருப்பாராதலால் நான் மேலே இந்தக் கதையைத் தொடர்கிறேன். 'வந்தி' என்னும் ஏழைக் கிழவிக்காகச் சிவபெருமானே பிட்டுக்கு மண் சுமக்கும் கூலியாய் வந்து வையை வெள்ளத்தை அடைக்கிற வேலையைச் சரியாய்ச் செய்யாமல் பாண்டியனிடம் பிரம்படி பட்ட இடம் ஐயா இது!

அந்தக் காலத்தைப்போல் இப்போதெல்லாம் வையையில் அவ்வளவு பெரிய வெள்ளம் வராத காரணத்தாலோ என்னவோ, நகரசபைக்காரர்கள் சாக்கடையைக் கலக்கவிட்டுத் திருப்திப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். சோமசுந்தரப் பெருமானுக்கு வாரிசாக இருந்து இந்தமட்டிலாவது திருவிளையாடல்களைப் புரிந்துகொண்டு வருகிறவர்களைப் பாராட்ட வேண்டாமா? பிரம்படி கொடுப்பதற்குப் பாண்டிய வமிசத்தில் யாரும் இப்போது இல்லாததால் வெறும் பாராட்டோடு விட்டுவிடுவோம்.

இங்கே நம்முடைய கதை நடக்கிற இந்தக் காலத்தில் திருவிளையாடற் புராணத்து மகிமைகள் ஒன்றும் பிட்டுத் தோப்பிலோ, அதன் கீழேயுள்ள வையை மணற்பரப்பிலோ இல்லை என்பது சர்வ நிச்சயம். தோப்பை ஒட்டினாற்போல அக்கம்பக்கத்தில் கிடுகு வைத்து மறைக்கப்பட்ட குஸ்திப் பள்ளிக்கூடங்கள் இரண்டு மூன்று உண்டு. அப்பால் மில் கூலிகளின் நெருக்கடி நிறைந்த வீதிகள். இந்தப் பக்கம் தோப்புக்குக் கீழே ஆற்றில் தேங்கி ஓடாத நீருடன் ஒடு கால்களும், பூர்வீகத்தில் தார் டிரம்மாக இருந்து இப்போது மணலில் உறையாக இறக்கப்பட்ட ஊற்றுப் பதிவுகளும், தோய்ப்பதற்காகப் போடப்பட்ட பட்டைக் கற்களுமாகத் தினசரி குளிக்க வருகிறவர்கள் கண்டு கண்டு அலுத்துப் போனதொரு காட்சி தெரிந்து கொண்டிருக்கிறது. நேர் எதிர்க்கரையில் வடக்கே மயானத்தைத் தவிர விசேஷமாக ஒன்றும் இல்லை. தத்தனேரி என்று சொன்னால் திருவிளையாடற் பட்டணத்து வாசிகளுக்குச் சாவைத் தவிர வேறு ஒன்றும் நினைவு வரப் போவதில்லை. இந்த இடத்தில் பிட்டுத் தோப்புக்கும் வடக்குக் கரைக்கும் நடுவே ஆற்றுக்குள் ஓடுகால்கள் அதிகமாக இருந்ததற்குத் தொழில் இரகசியம்தான் காரணம். 'வெள்ளம்' என்கிற அதிசய நிகழ்ச்சி வையையில் ஏற்படாத காலங்களில் மயானத்துக்குப் போகிற 'கார்டு லைன்' ஆக இருந்ததனால் செத்தவரைச் சூழ்ந்து சென்ற சாவார்கள் திரும்பி வந்து முழுக்குப் போட்டுவிட்டுப் போக ஏற்றதாக இருந்தது இந்தப் பகுதி. முழுகுகிறவர்களை நம்பி ஓடுகால்காரர்கள் முழுகாமல் தொழில் நடத்த ஏற்ற இடம் இது.

எனவேதான் சாகிறவர்களையும், அவர்களுக்குப் பின்னால் போய் விட்டுச் 'சாவுத் தீட்டோடு' திரும்புகிறவர்களையும் நம்பி நம்முடைய கதாநாயகனாகிய பரமசிவம் பிட்டுத் தோப்புக்கு அருகே ஓர் ஓடுகால் வெட்டிக் கொண்டு ஊற்றிலே நீரும், வயிற்றிலே பசியும் ஊற உட்கார்ந்தான்.

பரமசிவத்தின் ஓடுகாலைப் பற்றிக் கொஞ்சம் வர்ணிக்கலாமா? வர்ணிப்பதற்கு அதில் அற்புதங்கள் ஒன்றும் இல்லையென்றாலும் 'ஒன்று மில்லை' யென்பதையே வர்ணனைக்கு விஷயமாக்கிக் கொள்ள முடியும்தானே? 'வரம்பெலாம் முத்தம் மடையெலாம் சங்கம்' என்று கவிராயர்கள் உயர்வு நவிற்சி பண்ணுகிறமாதிரிப் பரமசிவத்தின் ஓடுகாலில் பெரிய அம்சங்கள் ஏதும் கிடையாது.

ஓடுகால் தோண்டிக் குவித்த மணல் மேட்டில் வெயிலுக்கு நிழல் தர ஒரு குடிசை. பரமசிவத்தின் கொலு மண்டபமும் அதுதான். குடிசையின் நான்கு புறமும் துருத்திக் கொண்டிருக்கும் மூங்கில் நுனியில் எப்போதும் யாருடைய ஈர வேஷ்டியாவது காய்ந்து கொண்டிருக்கும். பரமசிவத்தின் கொலு மண்டபத்துக்குள் கள்ளிப் பலகையினாலான ஒரு பெட்டியில் சவுக்காரம், சாம்பிள் சைஸ் வாசனைச் சோப்பு, சீயக்காய்த் தூள் பொட்டலம், எண்ணெய், பல்பொடி எல்லாம் விற்பனைக்காக உண்டு. வருகிறவர்களின் பொது உபயோகத்துக்காகத் தேசீய மயமாக்கப்பட்ட சீப்பு ஒன்றும், தண்ணீர் பட்டுப் பட்டு இரசமழிந்த கண்ணாடியும் இலவச விநியோகத்துக்குரிய விபூதி, குங்குமமும் அந்தக் கொலு மண்டபத்தில் உண்டு. தேமல் விழுந்த தோல் மாதிரி இடையிடையே இரசமழிந்த அந்தக் கண்ணாடியில்

பார்ப்பதால் முகத்துக்கு ஏற்படுகிற விகாரத்தைப் பழகினவர்கள் சமாளிக்க முடியும். இவ்வளவுக்கும் மேல் ஒரு மூலையில் குடிதண்ணீருக்காகப் பானை டம்ளரும் உண்டு. ஓடுகால் தண்ணீரைக் குடிக்க முடியாதா என்று நீங்கள் சந்தேகப்படலாம். டாக்டர்கள் சில மருந்துகளை உடலின் 'வெளிப்புற உபயோகத்துக்கு மட்டும்' என்று குறிப்பிட்டுக் கொடுப்பார்களல்லவா? பரமசிவத்தின் ஓடுகால் தண்ணீரும் இந்த ரகத்தைச் சேர்ந்ததுதான்.

குளிப்பதற்கும் துணி துவைப்பதற்கும் சேர்த்து அரை அணா. துணி துவைக்க மட்டும் காலணா. மாதாந்திர வாடிக்கையானால் ஒரு ரூபாய். இது பரமசிவத்தின் கட்டண விகிதம். நாலைந்து வாளிகளும் தோய்க்கிற கற்களும் பரமசிவத்தின் ஓடுகாலில் உண்டு. தோய்க்குமிடத்துக்கு நிழல்தர ஒரு கொடுக்காப்புளி மரமும் உண்டு.

பரமசிவத்தின் நாட்படி வருமானம் முக்கால் ரூபாயிலிருந்து ஒண்ணேகால் ரூபாய் வரை கிடைக்கும். மாதாந்திர வாடிக்கைக்காரர்களிடமிருந்து மாத முடிவில் வரவு மொத்தமாகப் பத்துப் பதினைந்து ரூபாய்க்குக் குறையாது. மயானத்திலிருந்து திரும்புகிற கூட்டம் ஏதாவது 'சான்ஸ்' ஆக அவனுடைய ஓடுகால் பக்கம் வந்துவிட்டால் திடீர்யோகமாய் ஒண்ணரையிலிருந்து இரண்டு ரூபாய் வரை உபரி வருமானம் கிடைக்கும். இந்த உபரி வருமானத்தை எதிர்பார்த்துத் தினம் யாராவது செத்துப் போய்க் கொண்டிருக்க வேண்டுமென்று அவன் காத்திருப்பதும் நியாயமில்லை. அப்படியே யாராவது செத்துப்போனாலும் அந்தப் பகுதியில் உள்ள ஏராளமான ஓடுகால்காரர்களில் எவருக்கு வேண்டுமானாலும் அந்த வருமான யோகம் அடிக்கலாம். மயானத்திலிருந்து திரும்புகிற கூட்டத்தைக் கவர்வதற்கு அங்கிருக்கும் ஓடுகால்காரர்களிடையே எப்போதும் அடிபிடிதான். எல்லாச் சாவுக்கும் அவ்வளவு கூட்டம் வருமென்று சொல்லவும் முடியாது. பிறந்ததும் பலருக்குத் தெரியாமல், சாவதும் பலருக்குத் தெரிய வேண்டிய அவசியமில்லாமல் சாகிறவர்கள் எத்தனை பேர்? அப்படிப்பட்ட வகையினரால் ஓடுகால்காரர்களுக்கு அதிக லாபம் இல்லையே! அந்த விதமான மனிதர்களால் உலகத்துக்கே என்ன லாபம் என்று தெரியாதபோது பரமசிவம் என்ன இலாபத்தை எதிர்பார்க்க முடியும்?

பரமசிவத்தின் ஓடுகாலில் இரண்டு 'காம்ப்ளிமெண்டரி' டிக்கெட்டுகளுக்கும் நிரந்தரமாக இடம் உண்டு. ஆரம்பாளையம் ரோட்டில் இருக்கும் பிரபலமடையாத ஏதோ ஒரு பிள்ளையார் கோவிலில் மணியடிக்கிற முத்துப் பண்டாரத்துக்கும், பரமசிவத்துக்கு குடிசை போட்டுக்கொள்ள இடம் (ஓடுகால் குடிசை அல்ல, கரைமேல் அவன் குடும்பம் வசிக்கிற குடிசை) கொடுத்திருக்கிற பங்காரு நாயக்கருக்கும், எப்போது வந்தாலும் ஓடுகாலில் குளிக்க ப்ரீபாஸ் உண்டு. அந்திசந்தி வேளைகளில் அவன் கண்களை ஏமாற்றிவிட்டு 'டிக்கட்' வாங்காமல் குளித்துப் போகிற 'வித் அவுட்' ஆட்களும் உண்டு.

பரமசிவத்துக்குப் பெரிய குடும்பம். வயதான தாய், தந்தை, நோயாளி மனைவி, வரிசையாக மூன்றும் பெண்மக்கள். இரண்டு பெண்களுக்குக் கட்டிக் கொடுக்கிற வயசு. நெசவுத்தொழிலில் பட்டுப்போய் ஓடுகாலில் இறங்கியவன் அவன். தெற்குக் கரையில்

பிட்டுத் தோப்புக்கும் சிறிது தொலைவு மேற்கே தள்ளிப் பங்காரு நாயக்கர் குடிசை போட்டுக்கொள்ள விட்டிருந்த இடத்துக்கு மாச வாடகை எட்டு ரூபாய்.

பரமசிவத்துக்கு ஒடுகாலில் தண்ணீர் ஊறுவதற்குப் பதில் அவ்வளவும் பணமாக ஊறினாலும் நல்லதுதான். வையையில் வெள்ளம் வருவது அதிசயமானாலும் மகசூல் காலத்தில் அணைத் தண்ணீரோ அபூர்வமாக முல்லைக்கால் தண்ணீரோ திறந்து விட்டுவிடுவார்கள். முழங்கால் அளவு தண்ணீர்தான் பாயும். ஆனாலும் ஒடுகால் மூழ்கிவிடும். மலையாளத்துக்காரன் பாண்டிக்காரனுக்குக் கொடுத்திருக்கிற சீதனமான முல்லைப் பெரியாற்றுத் தண்ணீர் நின்ற பின் மணலில் புதைந்து போயிருக்கும் தோய்க்கிற கற்களைத் தேடி எடுப்பது பெரிய காரியம். அப்படித் தேடி எடுக்கிறபோது ஒடுகால்காரர்களுக்குள் எல்லைப் பிரச்னைகளும் கல்லெடுப்புப் போர்களும் உண்டாவது இயல்பு.

இரவு நேரங்களில் ஒடுகாலுக்குக் காவலில்லாவிட்டாலும் காவலிருப்பது போல் ஓர் 'அத்து' உண்டாக்க வேண்டும். இல்லாவிட்டால் ஜட்காக் குதிரைகளைக் கொண்டு வந்து குளிப்பாட்டி ஒடுகாலை நாற அடித்துவிடுவான்கள். இப்படிச் சொல்வதனால் ஜட்காக் குதிரை குளிப்பாட்டாமல் இருக்கிற பட்சத்தில் தண்ணீர் நாறாமல் இருக்குமா என்று உத்தரவாதம் கேட்கப்படாது. ஏதோ குறிப்பிட்டுக் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு நாற்றம் இருக்கத்தான் செய்யும். பஞ்சாலையில் உழைத்து உழைத்துப் பஞ்சடைந்து போய்க் கொண்டிருக்கிற அந்தப் பிரதேசத்து மக்களுக்கு நாற்றமும் பழகிப் போன உணர்வுதான். எப்போதாவது அருமையாக நுகர்கிற காரணத்தால் வாசனைதான் நாற்றத்தைப் போல் அவர்களுக்கு வித்தியாசமாகத் தோன்றி உறுத்தும்.

பரமசிவம் பத்துத் தறிகாரர்களை வைத்து வேலை வாங்கிக் கொண்டிருந்த பெருமை பழங்கனவாகப் போய்விட்டது. பஞ்சம் பிழைக்கக் குடிபெயர்ந்து ஊர் பெயர்ந்து நட்டாற்றில் வந்து நின்றாயிற்று. ஒடுகாலுக்காக மட்டுமல்லாமல் வாழ்க்கையிலேயே நட்டாற்றுக்கு வந்து நாதியில்லாமல் நின்றாயிற்று. மனிதர்கள் பதிந்து வாழ்வதற்கு ஏற்ற வசதிகள் இருந்ததனால்தான் பழங்காலத்தில் ஊர்களுக்குப் 'பதி' என்று பெயர் வைத்தார்களாம். இந்தக் காலத்தில்தான் நடுத்தரமான மனிதன் எந்த ஊரிலும் பதிந்து வாழ முடிவதில்லையே. சவக்குழியைத் தவிர நிலையாகப் பதிகிற இடம் வாழும்போது இல்லைதான். அதற்காக வாழும்போதே சவக்குழியைத் தோண்டிக்கொண்டு விட முடியுமா, என்ன? அப்படித் தோண்டிக் கொள்வதற்குத் தெரியாததாலோ அல்லது அதற்குப் பதிலாகவோ ஊர் விட்டு ஊர் வந்து ஒடுகாலைத் தோண்டிக்கொண்டு உட்கார்ந்து விட்டான் பரமசிவம் என்கிற முன்னாள் நெசவாளி. அவன் நம்பிய தொழில் அவனை நட்டாற்றில் கைவிட்டு விட்டாலும் நட்டாறு அவனைக் கைவிடாமல் காப்பாற்றிக் கொண்டிருக்கிறது. 'ஆற்றுப் பெருக்கு அற்று அடி சுடுகிற நாளிலும் ஊற்றுப் பெருக்கால் உலகு ஊட்டும்' வையை அல்லவா?

பாவு போட்டிருக்கிற நூலுக்குக் கஞ்சி தெளிக்கு முன் பலபல வென்று விடிகிற நேரத்துக்கு எதிர்த்தாற் போலிருந்த உடுப்பி சங்கர பவனில் முறுகல் தோசையும், காப்பியும் சாப்பிட்டுவிட்டுத் திரும்பிய நாட்களை இப்போது நினைத்தாலும்

சுகமாகத்தான் இருக்கிறது. செவ்வாய்ப் பேட்டையையும் உடுப்பி சங்கர பவனையும், பத்துத் தறிகள் வைத்து ஆண்ட பவிஷையும் இனிமேல் நினைத்து என்ன பயன்? நினைவுக்குள்ளேயே துருப்பிடித்துப் போனவற்றை மேலும் துருப்பிடிக்கச் செய்வதைத் தவிர வேறு பயனில்லை.

அரக்கன் வாய் திறந்து அலறுவதுபோல் சங்கு ஊதும் மாபெரும் பஞ்சாலைகள் உண்டான பின்பு பரமசிவனைப் போல் சிறிய நெசவாளிகள் என்ன செய்ய முடியும்? அப்படிப்பட்ட பஞ்சாலைகள் ஏதாவதொன்றில் குடும்பத்தோடு சரணடையலாம் என்றுதான் மீனாட்சிபட்டணத்துக்கு வந்தான் பரமசிவம். நவீன எந்திரங்கள் வந்து சேர்ந்து மனித எந்திரங்களைவிடச் சுறுசுறுப்பாக வேலை செய்யத் தொடங்கியதனால் எங்கே பார்த்தாலும் ஆள் குறைப்பு ஏற்பாடு செய்துகொண்டிருந்தார்கள். பரமசிவம் நினைத்துக் கொண்டு வந்தது போல் மதுரையில் வேலை காய்த்துத் தொங்கவில்லை. குடும்பத்தோடு சில நாட்கள் தெருவில் நின்றான். அப்புறம்? அப்புறம் என்ன? தெரிந்ததுதானே? தெருவில் நிற்காமல் ஆற்றில் போய் நின்றான்.

பரமசிவம் வையையில் இறங்கிவிட்டான். இப்போது அவனை நம்பிப் பலபேர் வையையில் இறங்கிக் கொண்டிருக்கிறார்கள்; குளிப்பதற்காகத்தான். உள்ளூர் ஓடுகால்காரர்களுக்கு அவன் மேல் வயிற்றெரிச்சல் கிளம்பியது. தொழில் பொறாமை என்பது உலகத்தில் இல்லாத இடம் ஏது, அது வையை ஆற்று மணல்மேலும் இருந்தது. ஒரே உலகம், யுனிவர்ஸல் ஹியுமானிடி என்று வெண்டல் வில்கியும், உலகத்துத் தத்துவக்காரர்களும் அடித்துக் கொள்வதைப் பற்றிப் பிட்டுத் தோப்பின் கரையில் இருப்பவர்கள் அதிகமாகக் கவலைப்படுவது கிடையாது. அங்கே ஒரே தத்துவம்தான் உண்டு. அதுதான் வயிற்றுப்பசி. அதன் அடிப்படையில் வாழ்க்கைப் போட்டி. வடக்கு, தெற்கு, திருநெல்வேலிக்காரன், மதுரைக்காரன், சேலத்துக்காரன் என்கிற எல்லாவிதமான பிரதேச மனப்பான்மையும் இருந்து பரமசிவத்தைத் தொல்லைக்குள்ளாக்கியது.

பரமசிவம் தன்னைத் தவிர ஆறு பேர்கள் அடங்கின குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய கவலையுடன் அக்கம் பக்கத்து ஓடுகால்காரர்களின் பொறாமைக்கும் சேர்த்துக் கவலைப்பட நேர்ந்தது.

அப்போது ஆற்றில் கால்தண்ணீர் விடும் காலத்தின் கடைசிப் பருவம். கடந்த இரண்டு மூன்று வாரங்களாக ஆற்றில் தண்ணீர் ஓடியபின் மறுபடியும் ஓடுகால்களின் அவசியம் ஏற்பட்டிருந்தது.

எல்லாரையும் போலப் பரமசிவமும் தன்னுடைய வழக்கமான இடத்தைத் தேடிப் புதையுண்டு கிடந்த கற்களை எடுத்துப் போட்டு ஓடுகால் தோண்டினான். நீரோட்டத்தில் சாய்ந்து போயிருந்த கொடுக்காப்புளி மரத்துக்கு முட்டுக் கொடுத்து நேரே நிறுத்தினான். சர்வே எல்லைக்கல் போல் அவனுடைய ஓடுகாலுக்கு அந்த மரம் அடையாளம்.

பிட்டுத் தோப்பும், அதிலிருக்கிற மண்டபமும் ஆவணி மாதம் அந்தத் திருவிழா நடக்கிற நாளில்தான் பக்தர்களுடைய கூட்டத்துக்கு உரியது. மற்ற நாட்களில் போது

போகாமல் மூணு சீட்டு விளையாடுகிறவர்களும் குஸ்திப் பள்ளிக்கூட வீரர்களும் தனி அரசோச்சுகிற இடம்தான்; சில மாலை நேரங்களில் பொதுக்கூட்டமும் நடக்கும்.

பரமசிவத்தின் ஓடுகாலுக்கு எதிர்த்தாற்போல் பாண்டியன் குஸ்திப் பள்ளிக்கூடம் என்று ஒரு 'கோதா' இருந்தது. காலையிலும், மாலையிலும் அங்கே குஸ்திக்காகப் பத்துப் பன்னிரண்டு முரட்டு இளைஞர்கள் வருவார்கள். 'பாண்டியன்' என்பவன்தான் குஸ்தி சொல்லிக் கொடுக்கிற வஸ்தாது. பாண்டியனும், அவனைச் சேர்ந்த ஆட்களும் பெரிய வம்புக்காரர்கள் என்பது பரமசிவத்துக்குத் தெரியும். குஸ்திப் பள்ளிக்கூடத்து ஆட்களே கோதாவையொட்டி ஆற்றில் தங்கள் சொந்த உபயோகத்துக்கு ஓடுகால் ஒன்று தோண்டியிருந்தார்கள்.

கால் நீர் ஓடிய சில வாரங்களுக்குப் பின் எல்லா ஓடுகால்களும் தோண்டப்பட்டபோது குஸ்திப் பள்ளிக்கூட ஓடுகால் மட்டும் தோண்டப்படவில்லை. அதைத் தவிர்த்துப் பார்த்தால் அந்த இடத்தில் அருகே இருந்தது பரமசிவத்தின் ஓடுகால்தான்.

அன்று காலை குஸ்தி முடிந்ததும் பாண்டியனும், இன்னும் பத்துப் பன்னிரண்டு குட்டிப் பயில்வான்களும், பரமசிவத்தின் ஓடுகாலில் வந்து அவனிடம் ஒரு வார்த்தைகூடக் கேட்காமலே குளிக்க ஆரம்பித்தார்கள். போகும்போது ஏதாவது சொல்லிவிட்டுப் போவார்கள், அல்லது காசு கொடுத்துவிடுவார்கள் என்று எதிர்பார்த்துப் பேசாமல் இருந்துவிட்டான் பரமசிவம். ஆனால், அவன் எதிர்பார்த்தபடி அவர்கள் காசு கொடுத்துவிட்டுப் போகவுமில்லை. நன்றி கூறிவிட்டுப் போகவுமில்லை. அட்டகாசமாக வந்து குளித்துவிட்டுப் பேசாமல் போய்விட்டார்கள்.

அன்றைக்குச் சாயங்காலமும் அப்படியே நடந்தது. 'எத்தனை நாளைக்கு இப்படி நடக்கப் போகிறது? தங்களுடைய ஓடுகாலைத் தோண்டிக்கொள்கிற வரைதானே இங்கே வந்து இப்படிச் சீரழிக்கப் போகிறார்கள்? தொலையட்டும்' என்று இரண்டு நாளைக்குப் பொறுமையாக இருந்துவிட்டான் பரமசிவம். அவன் பொறுமையாக இருந்ததற்குக் காரணம் வீண் கலகத்தை உண்டாக்க வேண்டாம் என்பதுதான்.

'அத்தனை பேரும் உள்ளூர்க்காரர்கள். ஆள் கட்டும், உடற்கட்டும் உள்ளவர்கள். அவர்களைப் பகைத்துக் கொள்வது நல்லதல்ல' என்று பரமசிவம் விட்டுப் பிடித்துக் கொண்டு வந்தான். எவ்வளவு நாளைக்கு விட்டுப் பிடிக்க முடியும்? விட்டுப்பிடிக்க முடியாத காலவரையறைக்குத் தொடர்ந்தது இந்த வம்பு.

நாள் தவறாமல் காலையும், மாலையும், தடியன் தடியனாக இந்தக் குஸ்திப் பள்ளிக்கூடத்து ஆட்கள் வந்து குளிக்க ஆரம்பித்ததனால், பெண்டு பிள்ளைகளும் சற்றே நாகரிகமான ஆட்களும், பரமசிவத்தின் ஓடுகாலுக்கு வருவதை நிறுத்திக் கொண்டு விட்டார்கள். வாடிக்கைகள் குறைய ஆரம்பித்தன.

"என்ன ஐயா, முண்டன், முண்டனாக வந்து தண்ணீரைக் கலக்குகிறான். பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்கிறீரே. சின்னஞ் சிறிசுகள் குளிக்கிற இடத்துலே இப்படிச் செய்யலாமா? நாளைப் பின்னே இந்த ஓடுகால் பக்கம் யாராச்சும் வருவார்களா?"

என்று வயது மூத்த ஆச்சிக்கிழவி ஒருத்தி அன்று காலையில் பரமசிவத்திடம் அங்கலாய்த்துக் கொண்டு போனாள். ஆனால் பரமசிவம் யாரிடம் போய் அங்கலாய்த்துக் கொள்வான்?

பயில்வான்களுடைய குளிப்பு என்றால் காக்கை முழுக்குப்போல் அல்ல. குஸ்தி போட்டு விட்டு வியர்வை மினுமினுக்கும் உடம்போடு வந்தால் தண்ணீரில் அமுக்கிக் கிடக்கிற சுகத்தைக் குறைவாகவா அநுபவிக்க விரும்புவார்கள்?

வஸ்தாது (வாத்தியார்) பயில்வானாகிய பாண்டியனோ சரியான மதயானை. ஓடுகாலில் சரிபாதி இடத்தில் துளைந்து நீராட வேண்டும் அவனுக்கு. தன்னோடு போகாமல் சீடப் பிள்ளைகளையும் அவன் கூட்டிக்கொண்டு வந்தான்.

காலையிலும், மாலையிலும் இந்த குஸ்திப் பள்ளிக்கூட ஆட்கள் ஓடுகாலில் இறங்கிக் கொட்டமடிக்கிறபோது காசு கொடுத்துக் குளிக்க வருகிறவர்கள் பரமசிவத்தின் ஓடுகால் பக்கம் எட்டிப் பார்க்கத் தயங்கினர்.

குறிப்பாகச் சொல்லிப் பார்த்தான் பரமசிவம். பாண்டியன் கும்பல் புரிந்து கொண்டு விலகிப்போகிற வழியாயில்லை. பாண்டியனிடமே நேரில் சொல்லவும் முடியாமல், மெல்லவும் முடியாமல் திணறினான் பரமசிவம். தர்மசங்கடமான நிலை. இதில் தர்மம் பாண்டியனுக்கு, சங்கடம் பரமசிவத்துக்கு.

"நீங்கள்ளாம் ரொம்பப் பெரியவங்க. நான் ஏழை. இதை வச்சுத்தான் பொழைப்பு நடக்கணும். வாடிக்கைக்காரங்க எல்லாம் ஒதுங்கறாங்க. எனக்குக் கட்டுப்படியாகலே" என்று பாண்டியனிடம் நேரில் கூறியும் பார்த்தான் பரமசிவம்.

"நீ என்னமோ சேலத்துலேருந்து வர்ரப்பவே இந்த எடத்துக்குப் பட்டா எழுதி வாங்கிட்டு வந்த மாதிரியில்லே பேச்சுப் பேசுறே? வைகைத் தண்ணிலே குளிக்கிறதுக்கு நீ என்னா தானாவதி?" என்று துடுக்காக எதிர்த்துக் கேட்டான் பாண்டியன். நம்பிக்கையோடு மேலும் பேச்சைத் தொடர்ந்தான் பரமசிவம்.

"ஐயா! அதுக்குச் சொல்லல்லே. தண்ணி ஒண்ணும் நீங்க குளிச்சதாலே குறைஞ்சிடாது. ராவுலே எட்டு மணிக்கி மேலே நீங்க வந்து எத்தினிவாட்டிக் குளிச்சாலும் நான் ஏன்னு கேட்கப் போகிறதில்லே. ஆணும், பெண்ணும் சிறிசும் பெரிசுமா, நாலு தினுசு வாடிக்கைக்காரங்க குளிக்க வருகிறப்போ நீங்கள்ளாம் இருந்தா வரதுக்கே கூசுறாங்க... சங்கோஜப்படறாங்க. நானும் இதைக்கொண்டு தான் பொழைக்கணும்."

"அட சரிதான் போய்யா! மகா பிழைப்பாம், பிழைப்பு. நாங்க அப்பிடித்தான் வருவோம். நல்லா முங்கிக் குளிப்போம். யாரும் எங்களைத் தடுக்க முடியாது. முடியுமானால் நீ செய்யிறதைச் செஞ்சுக்கோ..."

குஸ்திக்குச் சவால் வருகிற மாதிரிப் பதில் வந்தது பாண்டியனிடமிருந்து. நியாயம் பிறக்குமென்று நம்ப இடமே இல்லை.

இதற்கப்புறம் பரமசிவம் மேலே பேசுவதை நிறுத்திக் கொண்டான். மறுநாள் அருகில் இருக்கிற வேறு ஓடுகால் காரர்கள் நான்கு ஐந்து பேரிடம் போய் இந்த விஷயத்தில் தனக்குத் துணையாயிருந்து ஒத்துழைத்து நியாயம் வாங்கித் தரவேண்டுமென்று கேட்டான். உள்ளூர் ஓடுகால்காரர்களாகிய அவர்களுக்கெல்லாம் ஏற்கெனவே பரமசிவத்தின் மேல் பொறாமை. அவனைப் போல் ஓர் அயலான் அங்கே ஓடுகால் போட்டிருப்பதே அவர்களுக்குப் பிடிக்காதபோது ஒத்துழைக்க எப்படி முன்வருவார்கள்? 'இது உன் சொந்த விவகாரம். எங்களிடம் வராதே' என்று மறுத்துவிட்டார்கள். பரமசிவத்துக்கு முகத்தில் அடித்தாற்போல் ஆயிற்று.

நாளுக்கு நாள் விவகாரம் முற்றியது. பாண்டியன் கும்பல் முன்னைக் காட்டிலும் அதிகமாகப் பரமசிவனுக்கு இடைஞ்சல் செய்ய ஆரம்பித்தது. ஓடுகாலில் உள்ள வாளிகளைச் சொல்லாமல் கொள்ளாமல் வேறு காரியங்களுக்குத் தூக்கிக்கொண்டு போவது, வேட்டி துவைப்பதற்கென்று தனியாக இருக்கிற உறையில் வேட்டி துவைக்காமல், குளிப்பதற்குத் தேக்கியிருக்கும் நீரில் வேட்டி துவைப்பது என்று வம்புகள் வளர்ந்தன. பாண்டியனுக்கு யாராவது 'ஸ்குரூ' ஏற்றி விட்டிருப்பார்களோ என்றுகூடப் பரமசிவத்துக்குச் சந்தேகமாக இருந்தது. எந்தத் தொழிலானாலும் அருகிலுள்ளவர்களின் அநுதாபம் இல்லாமல் போனால் ஒன்றும் நல்லபடி நிறைவேற்ற முடியாது. தன்மேல் அவர்களெல்லாம் பகைவைத்துக் கொள்ளும் விதத்தில் பரமசிவம் அவர்களுக்கு மனத்தாலும் கெடுதல் நினைத்ததில்லை. ஆனால், அவர்கள் அவனுக்குக் கெடுதல் நினைத்தனர்; செய்தனர்; செய்வித்தனர். அது இலை மறை காய் மறைவாக அவனுக்கே புரிந்தது.

ஆவணி மாதத்தில் ஒரு முன்னிரவு. பௌர்ணமிக்கு இன்னும் இரண்டு நாட்கள்தான் இருப்பதால் முழுமையை நெருங்கிக் கொண்டிருக்கும் நிலவு மேகச் சிதறல்களே இல்லாத வானத்தில் யாரும் எழுதாக் கவிதையாய் விளங்கியவாறு நகர்ந்து கொண்டிருந்தது. வைகை யாற்று மணல் வெளியும் கரை மேட்டில் தென்னை மரக் கனவுகளும் கோல வெறிமூட்டும் கொள்ளை எழில் சுமந்து நின்றன. பிட்டுத் தோப்புக்குள் மண்டபத்தின் முன்னால் பந்தல் போட்டுக் கொண்டிருந்தார்கள். நாளைக்குப் பிட்டுக்கு மண் சுமந்த திருநாளாயிற்றே. இதே வேளையில் நாளைக்கு இந்த இடம் இப்படியா இருக்கும்? 'ஜே ஜே' என்று கூட்டம் நெருக்கியடித்துக் கொண்டிராதா? குடை ராட்டினமும், கடைகளுமாக மணல் வெளி கலகலவென்று கலியாண வீடுபோல் இருக்குமே! நாளைக்கு எப்படி இருந்தால் என்ன? பரமசிவத்தைப் பொறுத்தவரை இன்றைக்கு நிலைமை பட்டினி. வீட்டில் எல்லோரும் அரைப்பட்டினி என்றால் அவன் முழுப்பட்டினி. ஓடுகாலில் வருமானமில்லை. மாலை நாலரை மணி வரையில் கிடைத்திருந்த சம்பாத்தியம் ஆறேமுக்கால் அணா. அதை வீட்டுப் பாட்டுக்காகக் கொடுத்தனுப்பியிருந்தான். மூத்த மகள் வந்து சிறிது நேரத்துக்கு முன்தான் வாங்கிக் கொண்டு போயிருந்தாள். இன்று அவன் இவ்வளவு நேரத்துக்கும் மேல் இருட்டில் காத்துக் கொண்டிருந்தது ஒரு பயனை எதிர் பார்த்துத்தான்.

எதிரே வடகரையில் மயானத்துக்கு இரண்டு மூன்று கூட்டம் அடுத்தடுத்துப் போயிருந்தது. சிறிது நேரத்தில் ஒன்றன்பின் ஒன்றாக அந்தக் கூட்டங்கள் திரும்பிக் குளிக்கவரலாம் என்ற நைப்பாசையில் பசியோடு காத்துக் கிடந்தான் பரமசிவம். மூன்றில் ஏதாவது ஒரு கூட்டம் தன் ஓடுகால் பக்கம் சாய்ந்தாலும் சுலபமாக இரண்டு ரூபாய் சம்பாதித்து விடலாமே என்ற நம்பிக்கையே அவனை இழுத்து உட்கார்த்தியிருந்தது. அப்போது குஸ்திப் பள்ளிக்கூடத்திலிருந்து சிரிப்பும் அரட்டையுமாக ஒரு ஜமா அட்டகாசத்தோடு வருவதைப் பார்த்துப் பரமசிவம் அதிர்ச்சியடைந்தான். நிலாக் காலமாகையால் அதிக நேரம் குஸ்தி நடத்தி விட்டுக் குளிக்க வந்து கொண்டிருந்தது பாண்டியன் குழு.

அந்தக் குழுவினர் வழக்கம்போல் ஓடுகால் உரிமையாளனாகிய பரமசிவத்தை இலட்சியம் செய்யாமல் குளிக்க இறங்கினார்கள். ஓடுகால் கரையில் குடிசைக்குள்ளே மண்ணெண்ணெய்க் காடா விளக்கின் கரிப் புகையோடு கூடிய சுடர் காற்றில் நடுங்கிக் கொண்டிருந்தது போலவே பரமசிவத்தின் உணர்ச்சியும் இந்த அநியாயத்துக்காகச் சில விநாடிகள் கொதித்து நடுங்கி எப்போதும் போலவே உள்ளுக்குள் ஒடுங்கி ஓய்ந்து விட்டது. பாண்டியன் ஆட்களில் சிலர் தண்ணீரில் இறங்கிக் குளித்தும் இன்னும் சிலர் வாளிகளை எடுத்துக்கொண்டு தோய்க்கும் கற்களை ஆக்கிரமித்தும், முழு ஓடுகாலையும் தங்கள் ஆதிபத்தியத்தில் வைத்திருந்த சமயத்தில் இருபது முப்பது மனிதர்கள் அடங்கிய கூட்டம் ஒன்று மயானத்திலிருந்து திரும்பியது.

"ஐயா வாங்க... தண்ணி சுத்தமா வச்சிருக்கேன். காலையிலே இறச்சப் பெறவு ஊறினது" என்று அந்தக் கூட்டத்தை வரவேற்றான் பரமசிவம்.

அவர்களும் அவன் ஓடுகாலை நாடியே வந்தார்கள். ஆனால் அருகில் வந்ததும் மனம் மாறி, "இதென்னப்பா, ஆட்கள் நிறையக் குளித்துக் கொண்டிருக்கிறார்கள். வாளி ஒன்றுகூடக் காலியாக இல்லை" என்று சொல்லிவிட்டுப் பக்கத்து ஓடுகாலுக்குப் போய்விட்டார்கள். பெரிய கிராக்கி கை நழுவிப்போன ஏமாற்றத்தில் பரமசிவத்துக்கு அசாத்தியக் கோபம் மூண்டது.

"ஏனய்யா... நீங்களெல்லாம் மனிசங்கதானா? உங்களுக்குச் சூடு, சொரணை, எதினாச்சும் கொஞ்சமாவது இருக்கா? இப்பிடி எம் பெழைப்பைக் கெடுக்கிறீங்களே, மானமுள்ளவங்களானா வாளியைக் கீழே போட்டிட்டு வெளியேறுங்க..."

"யாரைப் பாத்துடா நாக்கு மேலே பல்லைப் போட்டு இப்படிக் கேக்குறே? உங்கள் பாட்டன் வீட்டு ஆறா இது?" பாண்டியனும் அவன் ஆட்களும் பரமசிவத்தைப் பதிலுக்குக் கண்டபடி பேசிவிட்டார்கள். இரண்டு பக்கமும் வார்த்தை தடித்துவிட்டது.

வேடிக்கை பார்க்கக் கூட்டமும் கூடிவிட்டது. பக்கத்திலிருந்த மற்ற ஓடுகால்காரர்களுக்குக் குஷி பிறந்துவிட்டது. தங்களுக்குப் பிடிக்காதவன் வம்பில் மாட்டிக்கொண்டால் குஷி பிறக்காதா பின்னே? அவ்வளவு பேரும் பாண்டியன் பக்கம். பரமசிவம் தனி ஆள். எல்லாரும் சேர்ந்துகொண்டு பரமசிவத்தை அழ

அழப்படுத்தினார்கள். பரமசிவமும் மனிதன்தானே? அவனுக்கு மனம் குமுறியது. கண் பஞ்சடைகிற பசி வேறு. வயிறும் மனமும் பற்றி எரிந்தன.

"பிள்ளை குட்டிக்காரனை இந்தப் பாடு படுத்துறீங்களே... இது அடுக்குமா?... நீங்க எல்லாரும் இப்பிடிப் போயிடணும்" என்று கண் சிவக்க உதடு துடிக்கக் கீழே குனிந்து ஒரு கை மண்ணை வாரிப் பாண்டியன் முகத்துக்கெதிரே தூற்றினான் பரமசிவம்.

"கொழுப்பைப் பாருடா ராஸ்கலுக்கு! எந்தக் காட்டுலே இருந்தோ பஞ்சம் பிழைக்க வந்த பயல் மண்ணை வாரித் தூத்தறான். கட்டி வச்சு உதைங்கடா... சொல்றேன்" என்று சொல்லிக் கொண்டே பக்கத்திலிருந்த கொடுக்காபுளி விளார் ஒன்றை ஒடித்துக்கொண்டு பரமசிவத்தின் மேல் பாய்ந்தான் பாண்டியன். கோபம் கிளம்பிவிட்டால் அவனுக்குக் கண் மண் தெரியாது.

சுளீர், சுளீர் என்று எலும்பும் தோலுமான அந்தப் பரமசிவத்தின் உடம்பை விளார் உரிக்கிறது. பரமசிவத்தின் வாயிலிருந்து, "பாவி கொல்றானே... கேட்பாரில்லையா.... ஐயோ... அப்பா...." என்ற அலறல்... பாண்டியனுக்கோ கொலைவெறி. விளார் ஒடிகிற மட்டும் பிச்சு உதறிவிட்டான். பரமசிவத்தின் உடம்பில் குருதி கசியும் கோடுகள்.

"தெய்வமே! நீ இந்த இடத்திலே பிட்டுக்கு மண் சுமந்தது நிசமானா நீயே இவங்களைக் கேளு" என்று அலறிக் கொண்டே சுருண்டு விழுந்தான் பரமசிவம். பயங்கரப் பசி. உடம்பும் பூஞ்சை, மூர்ச்சை போட்டது.

ஒடிந்த விளாரை எறிந்தபின் எந்த இடத்தில் படுகிறதென்றும் பாராமல் வலது காலை ஓங்கித் தணியாத வெறியோடு பரமசிவத்தை ஒரு மிதி மிதித்து, "நாய்க்குப் புத்தி இனிமே வரும். வாங்கடா, போகலாம்" என்று தன் ஜமாவோடு போய்விட்டான் பாண்டியன்.

மறுநாள் காலை முத்துப் பண்டாரமும், பங்காரு நாயக்கரும் குளிக்க வந்தபோது பரமசிவத்தின் ஓடுகால் சுடுகாடு போலிருந்தது. அவனையும் காணவில்லை. பரமசிவத்தின் கிழத் தந்தையும், தாயும், மூன்று பெண்களும் அதே ஓடுகாலில் சேர்ந்து முழுகிக் கொண்டிருந்தார்கள்.

**'மடி மேலே வளர்த்தபிள்ளை**
**மண்ணாயிப் போயிட்டியே'**

என்று பரமசிவத்தின் தாய் பிலாக்கணத்தை இழுத்துக் கொண்டு அழுகை பொங்க ஈர உடையோடு நின்றாள். முத்துப் பண்டாரமும் பங்காரு நாயக்கரும் விக்கித்து நின்றார்கள்.

"ஐயா, உம்ம ஊர்லே எம் பையனைக் கொலை பண்ணிப்பிட்டான் ஐயா... போய்ப் பொசுக்கிட்டு வந்து முழுகிட்டிருக்கோம். இங்கே தெய்வம் உண்டுமா? இப்படியே இந்தப் பூமி இடிஞ்சி ஊரையே முழுங்கிடப்படாதா?" என்று ஆக்ரோஷத்தோடு முத்துப்பண்டாரத்தைப் பார்த்துக் கையைச் சொடுக்கி முறித்தாள் அந்தக் கிழத்தாய். அந்தச் சொடுக்கு முறிகிற ஒலியில் பூமியே முறிவது போலிருந்தது.

அங்கே பக்கத்திலிருந்த வேறு ஆள் ஒருவன் சிறிது தூரம் விலக்கி நடத்திக்கொண்டு போய் முதல் நாள் மாலை நடந்தவற்றை முத்துப் பண்டாரத்துக்கும், நாயக்கருக்கும் சொன்னான். பாண்டியன் மிதித்துவிட்டுப் போன மிதி எக்குத் தப்பாய்ப் பட்டுப் பரமசிவம் இறந்து போனதையும் இராத்திரி பன்னிரண்டு மணிக்கே குஸ்திப் பள்ளியிலே வைத்துப் பாண்டியனைப் போலீஸார் கைது செய்து கொண்டு போனதையும் முத்துப் பண்டாரமும், நாயக்கரும் அறிந்தார்கள்.

அங்கே அன்று மாலை பிட்டுத் திருவிழா. பிட்டுத் தோப்பு நிறைய ஜனவெள்ளம். மேலே வானத்தில் நீலப்பட்டுக் கம்பளத்திலே பாற்குடம் சரிந்தது போல நிலா. சிவபெருமான் பிட்டுக்கு மண் சுமக்கிறார், பாண்டியனிடம் பிரம்படி படுகிறார், எல்லாம் பாவனையிலேயே நடைபெறுகிறது. "பெருமானே! யுக யுகாந்திரங்களுக்கு முன்பு இங்கே அரிமர்த்தன பாண்டியன் உம்மேல் அடித்த பிரம்படி அகில உலகெங்கும் உள்ள ஜீவராசிகள்மேல் பட்டு உறைத்ததாமே! நேற்று இதே இடத்தில் எங்கள் ஏழைப் பரமசிவன் மேல் பட்ட முரட்டுப் பாண்டியனின் அடி ஏன் உமது இதயத்தில் கூட உறைக்காமல் போய்விட்டது?" என்று ஒரு மூலையில் நின்று தரிசனம் செய்து கொண்டிருந்த முத்துப்பண்டாரம் மனமுருக எண்ணிக் கண் கசிந்தார்.

**(கல்கி, 27.8.1961)**



## 65. 'ஸ்டேட்டஸ்'

இந்த உலகம் இருக்கிறதே - உ-ல-க-ம் இதைப் பற்றி எனக்குக் கொஞ்சம்கூடக் கவலை கிடையாது. அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, நானும் என் கவலைகளும் சேர்ந்தால் அதுவே ஒரு பெரிய உலகம். இரண்டு, நான் எதை எதைப் பற்றிக் கவலைப்படுகிறேனோ அதைப்பற்றி இந்த உலகத்தில் வேறு எவரும் அக்கரை காட்டுவதாகத் தெரியவில்லை. வேறு எவரும் கவலைப்படுவதாகவும் தெரியவில்லை.

ஆகவேதான் சொல்கிறேன் மறுபடியும் அடித்துச் சொல்கிறேன் உம்மையல்ல - நான் சொல்கிற விஷயத்தைத்தான்; நானும் என் கவலைகளுமே ஒரு தனி உலகம். அல்லது வேறு பலர் சொல்கிற மாதிரி ஒரு 'தனி ரகம்'.

'உலகம் தெரியாத பிள்ளை! இத்தனை லட்சங்களைக் கட்டிக்காத்து எனக்குப் பின்னால் எப்படித்தான் ஆளப் போகிறதோ?' என்று ரொம்ப ரொம்பப் பெரிய பணக்காரராகிய என் அப்பா என்னைப் பற்றி அடிக்கடி ரொம்ப ரொம்பக் குறைப்பட்டுக் கொள்கிறார்.

'உலகம் தெரியாத பிள்ளை' என்று இந்த அப்பா என்னைச் சொல்கிறாரே அது எந்த உலகத்தைப் பற்றி என்றுதான் நான் என் மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொள்கிறேன். ஏனென்றால் நான் தெரிந்து கொண்டிருக்கிற உலகத்தைப் பற்றி அப்பாவுக்குத் தெரியாது. அப்பா தெரிந்து கொண்டிருக்கிற உலகத்தை எனக்குப் பிடிக்காது. அப்பா தெரிந்து கொண்டிருக்கிற உலகத்தில் பணம்தான் பெரிசு. நான் தெரிந்து கொண்டிருக்கிற உலகத்தில் எதுவுமே பெரிசு இல்லை. அதிலே எல்லாவற்றையும் இனிமேல்தான் கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிசு பண்ணனும். இதுவரை எல்லாம் சின்னதாகத்தான் இருக்கு.

இதை நிஜமாக - ரொம்ப ரொம்ப நிஜமாகத்தான் சொல்கிறேன் நான். என் உலகத்தில் நான் யார் யாரைப் பற்றி எதை எதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேனோ அவைகளைப் பற்றி எனக்கு முன்னாலும் சிலர் கவலைப்பட்டிருக்கிறார்கள். அப்படிக் கவலைப்பட்டவர்களைப் பற்றித்தான் சரித்திரம் பக்கம் பக்கமாக எழுதி வைத்திருக்கிறதே. என்னைப் பற்றி அப்படி யாரும் பிற்காலத்தில் எழுதக்கூடாது என்பதுதான் என் ஆசை. சரித்திரப் புத்தகத்தில் எழுதப்படுவதால் பரீட்சைக்குப் படிக்கிற பையன்களுடைய கோபத்துக்கு ஆளாக நேரிடும். ஞானியாக இருக்கலாம். ஆனால் சரித்திரப் புத்தகத்தில் எழுதப்படுவதற்காக மட்டும் ஞானியாக இருப்பதில் நிறையக் கஷ்டங்கள் உண்டு.

நான் இருக்கிறேனே - நான், ஞானியுமில்லை, கத்தரிக்காயுமில்லை. உங்கள் பாஷையில் அதாவது இதயத்தை இதயம் உணர முடிந்த பாஷையில் - மக்கள் பாஷையில் சொல்லப் போனால் 'நான் ஒரு லூஸ்.' அதையே மற்றவர்கள் என்னைக்

குறிப்பிட்டுச் சொல்கிற மாதிரிச் சொன்னால், 'அவன் ஒரு சுத்த லூஸ் பயல் சார்' என்றுதான் சொல்ல வேண்டும். இதில் எனக்குத் திருப்தியளிக்கிற ஒரே அம்சம் வெறும் 'லூஸ்' என்று மட்டும் சொல்லிவிடாமல் 'சுத்த லூஸ்' என்று சேர்த்துச் சொல்கிறார்களே அதுதான்! லூஸாக இருப்பதிலும் சுத்தத்துடன் லூஸாக இருப்பது பெரிய காரியம்தானே? லூஸாயிருந்தால் எதிலும் சுத்தமாயிருக்க முடியாது. சுத்தமாயிருந்தால் எதிலும் லூஸாக இருக்க முடியாது. நான் லூஸா இருந்து கொண்டே சுத்தமாகவும், சுத்தமாயிருந்து கொண்டே லூஸாகவும் இருப்பது விசேஷம்தானே?

எங்கள் - என் அப்பா இருக்கிறாரே, அவர் இந்த மெட்ராஸில் ரொம்ப ரொம்பப் பெரிய, 'ஸ்டேட்டஸ்' உள்ளவர். இரண்டு பெரிய 'கேடிலாக்' கார் வைத்திருக்கிறார். 'சாந்தோம் பீச்' அருகே பெரிய பங்களா. கடற்காற்று ஜிலுஜிலு என்று எப்போதும் பால்கனியில் வீசிக் கொண்டிருக்கும். இந்தப் பட்டிணத்தில் சமுத்திரமும் அதன் காற்றும்கூட என் அப்பாவைப் போல பணக்காரர்களுக்குத்தான் - 'ஸ்டேட்டஸ்' உள்ளவர்களுக்குத்தான் சொந்தம். நான் 'ஸ்டேட்டஸ்' கொண்டாடத் தெரியாத லூஸாக இருக்கிறேனே என்பதில் என் அப்பாவுக்கு மிகவும் வருத்தம். 'பெண்களுக்குக் கற்பு மாதிரிப் பணக்காரனுக்கு 'ஸ்டேட்டஸ்' வேணும்டா! ஸ்டேட்டஸ்' - என்று அப்பா வாய்க்கு வாய் சொல்லிக் கொண்டிருக்கிறார். பணக்கார வீட்டுப் பெண்களைப் பொறுத்தமட்டில் 'கற்பு' எவ்வளவு நிச்சயமோ 'அவ்வளவு' நிச்சயம்தான் இந்த 'ஸ்டேட்டஸும்' என்று லூஸ் பயலாகிய எனக்குத் தோன்றுகிறது. இப்படி எனக்குத் தோணாதது சரியோ தப்போ, தெரியலை சார். நான் இருக்கேனே எனக்கு வயசு இருபத்திரண்டு. ஒரு காலேஜில் படிக்கிறேன். எந்தக் 'காலேஜ்' என்று கேட்காதீர்கள். குப்பையில் எந்தக் குப்பையானால் என்ன? எல்லாம் ஒன்றுதான். 'படிப்புத்தான் நிஜமான ஸ்டேட்டஸ்' என்று என்னுடைய புரொபஸர் சொல்கிறார். பணம்தான் நிஜமான ஸ்டேட்டஸ் என்று என் அப்பா சொல்கிறார். சிகரெட் பிடிக்கிறது, பாண்ட், டை, இதெல்லாம் அணிகிறது, சினிமா பார்க்கிறது போன்ற நாகரிக விவகாரங்கள் தான் 'ஸ்டேட்டஸ்' - என்று என் சினேகிதன் பெர்ணான்டோ சொல்கிறான். இதுலே யார் சொல்றது நிஜம்? யார் சொல்றது பொய்?

ஆக மொத்தத்தில் உண்மையாக எதுதான் 'ஸ்டேட்டஸ்' என்று எனக்கு இன்னும் புரியலே. ஒருவேளை ஸ்டேட்டஸைப் புரிஞ்சுகிற ஸ்டேட்டஸ் எனக்கு இல்லையோ என்னவோ? இந்த உலகத்திலே அதாவது நான் கவலைப்படற உலகத்திலே பல விவரங்களைப் பற்றி நான் யோசனை பண்ணிக்கொண்டே இருக்கிறேன். இன்னும் ஒரு முடிவுக்கு வரமுடியலை. அல்லது ஒரு முடிவும் தெரியலை. அல்லது வேறே விதமாகச் சொல்லப் போனால் ஒன்றுக்குப் பதில் பல முடிவு தெரியறது. யோசனையில் ஒரே ஒரு முடிவு தெரியாததுக்குக் குழப்பம் என்று பேரானால் பல முடிவு தெரியறதும் குழப்பம்தான் - இல்லையா சார்?

ஆக (1) நான் ஒரு லூஸ், (2) நான் ஒரு குழப்பம், (3) நான் ஒரு காலேஜ் மாணவன். இதுக்கு மேலே ஒண்ணுமே எழுத வேண்டாம்னு தோணறது. ஆனாலும் கைவிட வில்லை. மேலே மேலே எழுதிக் கொண்டே போகிறது என் கை.

*எனக்கு ரொம்ப ரொம்பப் பேராசை உண்டு. அது இந்த உலகத்தில் எல்லாருக்கும் இருக்கிற மாதிரிப் பேராசை இல்லே. அப்படி இருந்தால்தான் என் அப்பா சந்தோஷப்பட்டிருப்பாரே! நான் சொல்ற பேராசை - நான் கவலைப்படுகிற உலகத்துக்கு மட்டும்தான் லாயக்கு. என் அப்பா கவலைப்படற உலகத்திலே அது செல்லுபடியாகாது சார்.*

*காலம் கார்த்தாலே ஒன்பதரை மணிக்கு பீச் ரோடிலே ஜிலுஜிலுனு சமுத்திரக் காற்றை அனுபவித்துக்கொண்டு 'கேடிலாக்' கார்லே என்னைக் காலேஜுக்குக் கொண்டு போய்வி விடறான் டிரைவர். அத்தனாம் பெரிய கார்லே நான் ஒத்தனே ஒத்தன்தான் தனியாப் போறேன். அனலாக வாட்டிப் பிழியற சமுத்திரக் கரை வெய்யில்லே - எதிர் வெய்யில்லே பஸ்ஸுக்குக் காத்திண்டிருக்கிறவர்களை எல்லாம் ஏத்திக் கொண்டு போய் அவரவர்கள் போக வேண்டிய இடத்திலே விடச் சொல்லிவிட்டு நான் இறங்கி நடந்துடணும்போல எனக்குத் தவிப்பாயிருக்கு. இந்த டிரைவர் அப்படிச் செய்ய ஒப்புக்கமாட்டான். இவன் அப்பாவுக்குப் பதில் சொல்லணுமே, அப்புறம்?*

*இப்படி எனக்கு எத்தனையோ ஆசை! பேராசை! பீச்சிலே உடம்பிலே துணியில்லாமே மணல்மேலே புரள்கிற செம்பவடக் குழந்தைகளை எல்லாம் எங்க வீட்டுக்கு அழைச்சிண்டு போய் பிரிஜிடேரைத் துறந்து அதிலேருக்கிற ஐஸ்கிரீம், ஆப்பிள் பழம், வெண்ணெய் எல்லாத்தையும் கொஞ்சம் கொஞ்சமா எடுத்துக் கொடுத்துட்டு அந்தக் குழந்தைகள் பயந்து கொண்டே சாப்பிடறதைப் பார்த்து நான் மனசு குளிரணும். இப்பிடியும் எனக்கு ஒரு பேராசை உண்டு சார். என் உலகம் இருக்கிறதே அதில் இதுதான் நியாயமான பேராசை என்று எனக்குப் படறது. நீங்க ஒப்புக் கொள்ளாவிட்டால் உங்க உலகம் வேறேதான். அம்மைத் தழும்பு மூஞ்சியும், பீப்பாய் உடலுமாகப் பாக்கறதுக்கு விகாரமாகக் காரில் ஏறிக் கொண்டு போற பணக்கார மாமிகளை எல்லாம் காரை நிறுத்திக் காதைப் பிடிச்சுத் திருகிக் கீழே இறக்கிவிட்டுட்டு அதே ரோடுமேலே பஸ்ஸுக்குத் தவம் பண்ணிக் கொண்டும் அதே சமயத்தில் காலிகளின் 'கண்வெட்டில்' சித்திரவதைப் பட்டுக் கொண்டும் நிற்கிற அழகிய ஏழைப் பெண்களை எல்லாம் அந்தக் காரில் ஏறச் செய்து அவரவர்கள் வீட்டிலே கொண்டு போய் விட்டுடணும்னு எனக்கு ஒரு பேராசை உண்டு சார்!*

*ஏன் தெரியுமோ? அந்த அழுமூஞ்சி மாமி நடந்து போறதுனாலே எந்தக் காலிப் பயலும் அவளைப் பார்த்து இளித்துக் கொண்டு பின் தொடரப் போவது இல்லை. இந்தப் பெண்கள் நிற்பதனால் இவர்களுக்கு அத்தகைய ஆபத்துக்கள் நிறைய உண்டு சார்! காரணம் அதுதான்.*

*அசட்டுத்தனமா இப்படி எத்தனையோ பேராசை சார் எனக்கு. இதிலே ரெண்டு; ஒண்ணை மற்றவங்ககிட்டச் சொல்லிப் பார்த்ததிலே என்னை 'அசடன்'னு சொல்றாங்க சார். நான் என்ன பண்றது? இப்போ என்னோட புகழை எல்லாம் ஒவ்வொண்ணாகக் கூட்டி எண்ணுங்க சார்; (1) நான் ஒரு லூஸ், (2) நான் ஒரு குழப்பம் (3) நான் ஒரு காலேஜ் மாணவன் (4) நான் ஒரு அசடு - இப்போதைக்கு இவ்வளவுதான்.*

இந்த 'கேடிலாக்' கார்லே ஏறிப் போறதுக்கே ஒரு 'ஸ்டேட்டஸ்' காரியத்தின் அவசரம்னுதான் எனக்குத் தோண்றது. அந்த அவசரம் ஏழைக்கும் இருக்கு. பணக்காரனுக்கும் இருக்கு சார்! சொல்லப் போனா ஏழைக்குத்தான் பணக்காரனைவிட அதிகமான அவசரங்கள் இருக்கு. ஆனா இந்த 'அவசரம்'கிற, தேவையைத் தவிர வேறு எதையோதான் 'ஸ்டேட்டஸ்'ன்னு அப்பா சொல்றார் சார். அப்பிடி அவர் சொல்றப்போ நான் அவரை மறுத்துச் சொன்னா, "நீ உருப்படப் போறதில்லே! குட்டிச் சுவராத்தான் போகப் போறே! ருஷ்யாவிலே பிறந்திருக்கணும்டா நீ..." என்று குத்தலாகப் பதில் சொல்றார் சார் அப்பா. இதுவும் எனக்குப் புரியலே சார். நிஜத்தைச் சொல்றதுக்கு அதாவது நான் வாழற உலகத்து நிஜத்தை நான் சொல்றதுக்கு நீ அங்கே பிறந்திருக்கணும், இங்கே பிறந்திருக்கணும் அப்படீன்னு அப்பா எதிர்ப்புப் பேசறதும் எனக்குப் பிடிக்கலே சார். இதுக்கெல்லாம் அடிப்படையான தகராறு இந்த 'ஸ்டேட்டஸ்'தான். நான் வாழற உலகத்துலே இருக்கிற 'ஸ்டேட்டஸ்'ங்கிற வார்த்தைக்கு எது அர்த்தமோ அது அப்பா வாழற உலகத்திலே இருக்கிற அர்த்தத்துக்கு மாறுபடறது சார்! அதனால்தான் சார் வம்பு. ஒரு வார்த்தைக்கு ரெண்டு அர்த்தம் இருக்கலாம். ஒரு அர்த்தத்துக்கு ரெண்டு தொனி இருக்கப்படாது சார்!

மறுபடி இப்ப எண்ணுங்கோ சார்! (1) நான் ஒரு லூஸ் (2) நான் ஒரு குழப்பம் (3) நான் ஒரு காலேஜ் மாணவன் (4) நான் ஒரு அசடு (5) நான் ஒரு குட்டிச்சுவராகப் போய்க் கொண்டிருக்கிறேன் (6) நான் இங்கே இந்த நாட்டில் பிறந்திருக்கக்கூடாது. உலகத்திலே எல்லாரோட கஷ்டத்துக்கும் விடிவு வரணும்னு வெறுங்காலோட ராத்திரிலே நடந்து புறப்பட்டதுக்காக நாம் புத்தருக்குச் சரித்திரத்தில் பெருமை எழுதிப் படிக்கிறோம் சார்! சொல்லுங்கோ உண்டா, இல்லையா? அதே விஷயத்தை நான் இப்பச் சொன்னா, அப்பா 'நீ இந்த நாட்டிலே பிறந்திருக்கப்படாது'ங்கிறார் சார். ஒரு விஷயத்தைச் சொல்றதுக்குகூட ஸ்டேட்டஸ் வேண்டியிருக்கோ என்னவோ, தெரியலே! 'எல்லா உயிர்களிலேயும் நான் இருக்கேன்'னு கீதையிலே கண்ணன் சொன்னதையேதான் நான் இன்னிக்கு அதே அர்த்தத்திலே இன்னும் தெளிவாகவே சொல்றதாக எனக்குப் படறது சார். ஆனா என்னை 'உருப்படாமல் போகிற பயல்' என்று திட்டுகிறார்கள் சார். இது என்ன உலகமோ? எனக்கு வர வர ஒண்ணுமே புரியலை; ஒண்ணுமே பிடிக்கலை. ஒண்ணுமே தெரியலை. எங்க வீட்டிலே எங்கப்பாவே அவரோட அழுகிப்போன கொள்கைகளுக்கு என்னை அடிமையாக்கிடணும்னு பார்க்கிறார் சார். பிள்ளையை அடிமையாக்கி மகிழணும்னு ஆசைப்படற அப்பாக்கள்தான் சார் இந்த தேசத்துலே இன்னிக்கு ஆஸ்திகான்னு பேர் வாங்கறா. நீங்க என்ன நினைக்கிறீங்களோ, தெரியலை.

எனக்கு இன்னொரு பேரையும் இப்பக் கூட்டிச் சேர்த்துக் கொண்டு நீங்க எண்ணிக்கலாம் சார். (1) நான் ஒரு லூஸ், (2) நான் ஒரு குழப்பம், (3) நான் ஒரு காலேஜ் மாணவன், (4) நான் ஒரு அசடு, (5) நான் ஒரு குட்டிச் சுவர், (6) நான் இங்கே இந்த நாட்டில் பிறந்திருக்கக்கூடாது, (7) நான் ஒரு உருப்படாத பயல்... இப்படி என் உலகத்து விஷயங்களை நான் வாய்விட்டுப் பேசினதுக்காக எனக்கு நிறையப் பட்டங்கள் எல்லாம் கிடைச்சிருக்கு. இப்படி முட்டாள் பட்டங்கள் கிடைச்சதைப் பத்தி நான்

*கவலைப்படலே சார். ஏன்னா நான் நிஜமாகவே ஞானின்னு எனக்கு ஒரு நம்பிக்கை இருக்கு சார்.*

*அது சரி - நான்தான் இந்த உலகத்தைப் பத்தியே கவலைப்படலேன்னு முதல்லேயே சொல்லிவிட்டேனே. நான் கவலைப்படறதுக்கு வேற உலகம் இருக்கு சார்! ஆனால் நான் படற கவலையை என்னோடு சேர்ந்து படறதுக்கு வேறே மனிதர்கள் இருக்கிறதாகத்தான் தெரியவில்லை சார்! அதனாலும் பரவாயில்லை. பெரிய பெரிய விஷயங்களைப் பத்திக் கவலைப்படறவன் தன்னோடு துணைக்குக் கவலைப்படுகிறவர் களைத் தேடிக் கொண்டிருக்க முடியாது. சரித்திரத்திலே இப்படிக் கவலைப்பட்ட வாளைப் பத்தி எழுதியிருக்கிறதை எல்லாம் படிச்சபோது அவாளும் என்னை மாதிரி ஆரம்பத்திலே தனித்தனியாகத்தான் கவலைப்பட்டதாகத் தெரிறயது சார்! நான்தான் சரித்திரத்துக்காகக் கவலைப்படவில்லையே! இந்து தேச சரித்திரம் என்ற பெயரையே 'இந்து தேச தரித்திரம்'னு மாற்றினால் பொருத்தமாக இருக்குமென்று நினைக்கிறவன் சார் நான். இதை ஒரு நாள் என் புரொபஸரிடம் வேடிக்கையாகச் சொன்னேன் சார்! அவர் என்னோடு சண்டைக்கே வந்துவிட்டார். 'நீ ஒரு அயோக்கியன்' என்று என் மேல் எரிந்தும் விழுந்தார். அதையும் நான் மறுக்கவில்லை. நான் சொன்ன விஷயத்தைச் சொல்வதற்குத் தகுந்த 'ஸ்டேட்டஸ்' எனக்கு இல்லை என்று அவர் கோபப் பட்டிருக்கலாம் என்று எனக்குத் தோன்றியது சார்!*

*அவரிடம் இப்படிக் கேள்வி கேட்டதற்காகத் தாம் என்னை மன்னிக்க முடியாதென்றும் அவர் கூறினார்.*

*(1) நான் ஒரு லூஸ், (2) நான் ஒரு குழப்பம், (3) நான் ஒரு காலேஜ் மாணவன், (4) நான் ஒரு அசடு, (5) நான் ஒரு குட்டிச்சுவர், (6) நான் இங்கே பிறந்திருக்கக்கூடாது, (7) நான் ஒரு உருப்படாத பயல், (8) நான் ஒரு அயோக்கியன், (9) என்னை யாராலும் மன்னிக்கவே முடியாது. (10) பத்தாவது பேராகிய இதை இங்கே யாரும் சொல்லவில்லை - நானே எனக்குச் சொல்லிக் கொள்கிறேன். 'நான் ஒரு ஸ்டேட்டஸ் இல்லாதவன்'. அவ்வளவுதான் சார்! என்ன சார்! இவ்வளவும் சொன்னதற்கு அப்புறம் என்னை நீங்களே இப்படி ஒரு தினுசாகப் பார்க்கிறீர்கள்?*

"..............."

*புரிகிறது! சாந்தோமில் பங்களா உள்ளவருக்கு இரண்டு 'கேடிலாக்' கார்களின் சொந்தக்காரருக்கு மெட்ராஸிலேயே ஸ்டேட்டஸ் மிகுந்தவருக்கு - இப்படி சுத்த 'லூஸாக' ஒரு பிள்ளை வாய்த்ததே என்று எண்ணிக் கொண்டுதானே பார்க்கிறீர்கள்? நீங்கள் இப்படித் தான் நினைப்பீர்கள் என்று எனக்குத் தெரியும். தெரிந்துதான் இவ்வளவும் சொன்னேன் சார்! நீங்கள் என்னைச் 'சுத்த லூஸ்' என்று சொல்லாமல் புத்திசாலி என்று சொல்லியிருந்தால்தான் எனக்கு ஆச்சரியமாயிருக்கும். என்னை 'லூஸ்' என்பதில் எனக்கு ஆட்சேபணையில்லை சார்! ஆனால் சொல்லும்போது 'சுத்த லூஸ்' என்பதை மட்டும் நீங்கள் மறக்காமல் சொல்ல வேண்டும். நான் லூஸாயிருப்ப தோடு சுத்தமாகவும் இருக்கிறேன் என்பதை நீங்கள் மறந்துவிடக்கூடாது.*

**(தாமரை, நவம்பர், 1961)**

# 66. 15-வது ஆண்டு அறிக்கை

*இந்த முருகேசனைப் போல ஓர் அப்பாவி இருபதாம் நூற்றாண்டில் இருக்கக் கூடாதுதான். ஆனால் இருப்பது இவன் தவறில்லை. இவன் பிறந்து, வளர்ந்து, அழுது, சிரித்துப் படித்து வேலைக்கு வந்த சமயத்தில் இருபதாம் நூற்றாண்டு தான் நடந்து கொண்டிருந்தது. அது அந்த நூற்றாண்டின் தவறு என்றுதான் சொல்ல வேண்டும். ஏனென்றால் முருகேசனுடைய அப்பாவித்தனமும், அவனும், நூற்றாண்டுகளைக் கடந்தவர்கள். எங்கள் முருகேசனை அதாவது 'குபேரா கெமிகல்ஸ் பிரைவேட் லிமிட்டெட்' அலுவலகத்தின் டைப்பிஸ்ட் முருகேசனை, அப்பாவி என்று சொல்ல வேண்டுமானால் சாதாரணமான அப்பாவி என்று சொல்ல முடியாது. காலத்தை வென்ற அல்லது காலங்கடந்த என்று அடைமொழி கொடுத்துச் சிறப்பாகச் சொல்ல வேண்டிய வடிகட்டின அப்பாவித்தனம் அது!*

*சென்ற சனிக்கிழமை மாலை சரியாக நாலரை மணிக்கு அந்த அப்பாவித்தனம் பொங்கி வழிந்த காரியம் ஒன்று நடந்தது! நான் - அதாவது குபேரா கெமிகல்ஸ் பிரைவேட் லிமிடெட் நிர்வாக டைரக்டராகவும் அந்தக் கம்பெனியின் பெயரில் 'பிரைவேட் லிமிடெட்' என்பதற்கு அர்த்தம் கொடுத்துக் கொண்டிருப்பவனாகவும் இருக்கிற நான் (கம்பெனியின் முதலாளி என்று தொழிலாளியின் பாஷையில் சொல்லப்படுகிற நான்) இந்த அப்பாவியின் சேவையைப் பாராட்டுவதற்கு ஆசைப்பட்டு என்னவோ செய்யப் போய் அது எப்படியோ முடிந்து விட்டது.*

*அதையேன் கேட்கிறீர்கள்! சென்ற சனிக்கிழமை மாலை இவன் நடந்து கொண்ட விதத்தைச் சாதுத்தனம் என்பதா, கோழைத்தனம் என்பதா, தியாகம் என்பதா, அல்லது கம்பெனியில் எல்லாரும் சொல்கிற மாதிரி அப்பாவித்தனம் என்பதா? என்னால் இந்த முருகேசனைப் புரிந்து கொள்ள முடியவில்லையே? ஜெர்மனிக்கும், ஜப்பானுக்கும், சுவிசர்லாந்திற்கும் போய்த் தொழில் நுணுக்கங்களைப் புரிந்து கொண்டு வந்தவனுக்குத் தன் கீழ் வேலை பார்க்கும் தொண்ணூறு ரூபாய்ச் சம்பளக்காரனான டைப்பிஸ்ட் ஒருவனைப் புரிந்து கொள்ள முடியவில்லை என்பது ஆச்சரியந்தான். நான் தாய் நாடு திரும்பியதும் வியாபாரிகள், தொழிலதிபர்கள் எல்லாரும் கூடிச் சேம்பர் பில்டிங்ஸ் ஹாலில் எனக்குக் கொடுத்த வரவேற்பில் என்னென்ன வெல்லாம் சொல்லிப் புகழ்ந்தார்கள்!*

*"சிவஞான சுந்தரம் (நான்) தமது தமிழ் நாட்டுத் தொழிலதிபர்கள் எல்லாருக்கும் முன்னணியில் நிற்கிறார். எத்தனையோ பேர் மேல்நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டு வருகிறார்கள். ஆனால் அந்தப் பிரயாணங்களை திரும்பி வந்து முழு அளவில் இங்கே பயன்படுத்தி ஆச்சரியப்படத்தக்க விளைவுகளைச் செய்கிறவர்*

குபேரா கெமிகல்ஸ் அதிபராகிய நம் சிவஞான சுந்தரம் அவர்கள் தான். அண்மையில் அவர் சுவிசர்லாந்திலுள்ள பெரிய கடிகாரக் கம்பெனி ஒன்றோடு ஒப்பந்தம் முடித்திருக்கிறார். அதன் பயனாக 'இண்டியன் ரிஸ்ட்வாட்ச் மேக்கர்ஸ்' என்ற புதுக் கம்பெனி ஒன்றை இங்கே தொடங்கப் போகிறார்..."

இதுதான் போகட்டும்; ரோடரி கிளப்பில் கொடுத்த வரவேற்பில் கொஞ்சமாகவா புகழ்ந்தார்கள்? சக தொழிலதிபர்கள் புகழ்வதை எல்லாம் மெய்யாகவும் நம்புவதற்கில்லை. வியாபாரிக்கு வியாபாரி நாகரிகமாக வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வதைச் சொல்வதற்குக் கௌரமான பெயர்தான் புகழ்ச்சி என்பது. இந்தப் புகழ்ச்சியிலும் வஞ்சகம் உண்டு!

நான் சுவிசர்லாந்திலிருந்து திரும்பவும், கம்பெனியின் 15-வது ஆண்டு விழா எவ்வளவு பொருத்தமாக இருந்தது? சென்ற சனிக்கிழமை எனக்கு வரவேற்பையும் ஆண்டு விழாவையும் சேர்த்தே நடத்தினபோதுதான் முருகேசன் அப்படி நடந்துகொண்டான். கம்பெனி தொடங்கின நாளிலிருந்து சர்வீஸில் இருக்கிற ஒருவரை இந்தப் பதினைந்தாவது ஆண்டு விழாவின் போது பாராட்ட வேண்டுமென்றுதான் நான் அப்படிச் செய்தேன். மேலும் இந்தப் பதினைந்தாவது ஆண்டு விழா 'குபேரா கெமிகல்ஸ் பிரைவேட் லிமிடெட்'டின் வரலாற்றில் சிறப்பானது. என்னுடைய நீண்ட நாள் கனவான 'இண்டியன் ரிஸ்ட்வாட்ச் மேக்கர்ஸ்' என்ற புதிய தொழில் தொடங்குவதற்கு வேண்டிய அநுமதியும் இந்த ஆண்டுதான் கிடைத்திருக்கிறது. அத்தனை பேரும் விநயமாக நடந்து கொண்டபோது அந்தக் கூட்டத்தில் அவ்வளவு பெரிய மனிதர்களுக்கு நடுவே முருகேசன் மட்டும் ஏன் அப்படி நடந்து கொண்டான்? அவ்வளவு பெரிய கூட்டத்தில் எல்லாருக்கும் முன்னால் அவமானப்படுத்தினாற் போல நடந்து கொண்டானே? ஓர் எழுத்துக்கூடத் தப்பு விடாமல் இவன் டைப் செய்கிற கடிதங்களைப் பார்த்து எனக்கு இவன் மேல் எவ்வளவு அபிமானம் ஏற்பட்டிருந்தது? எல்லாவற்றையும் சில விநாடிகளில் பாழாக்கி விட்டானே!

இவனுக்காக சுவிசர்லாந்திலுள்ள சிறந்த கம்பெனியிலிருந்து வாங்கி வந்த கடிகாரத்தைப் பரிசளிப்பதற்காக நான் ஆவலுடன் மேடைமேல் எழுந்திருந்து, "இந்தக் கம்பெனி தொடங்கிய நாளிலிருந்து டைப்பிஸ்டாக இருந்து வரும்...." என்று நீட்டி முழக்கிக் கொண்டு தொடங்கியும்.... இவன் கூட்டத்தின் கோடியில் கடைசி நாற்காலியில் இருந்து எழுந்து மேடைக்கு வராமல் அடித்த முளை போல உட்கார்ந்திருந்து விட்டானே!

"ஏய் முருகேசு! உன்னைத்தானப்பா...." என்று கம்பெனி மானேஜர் இவனை அழைத்துக்கொண்டு வருவதற்காக எழுந்து சென்றபோது இவன் - இந்தப் பயல் என்ன செய்தான் தெரியுமோ? யாரோ தன்னைக் கொள்ளையடிக்க நினைத்துத் துரத்துகிறாற்போல் எண்ணிக் கொண்டவன்போலக் குபீரென்று எழுந்து பக்கத்து வாயில் வழியாக வெளியே ஓடிவிட்டான். கூட்டம் முழுதும் இதைப் பார்த்துச்

*சிரித்துவிட்டது. எனக்குத் தலை குனிவாகப் போய்விட்டது. ஒரு நிமிஷம் என் 'ஸ்டேட்டஸ்' ஆட்டங் கண்டது. 'ஸ்டேட்டஸ், ஸ்டேட்டஸ்' என்று நான் நினைத்துக் கொண்டிருப்பதை என் கீழ் வேலை பார்க்கும் ஸ்டேட்டஸ் இல்லாத சாதாரண ஊழியன் கூட ஆட்டங்காணச் செய்ய முடியும்' என்று புரிந்தாற் போல இருந்தது. உடனே ஒரு விநாடியில் எனக்கு வேறொரு தீர்மானமும் தோன்றியது.*

*அப்படி இந்தப் பயல் எங்கேதான் ஓடி விடுவான்? மேடைக்கு எழுந்து வருவதற்குக் கூச்சப்பட்டுக்கொண்டு வீட்டைப் பார்க்க நடையைக் கட்டியிருப்பான்.*

*'காரை எடுத்துக்கொண்டு போய்த் தூக்கிப் போட்டுக் கொண்டு வரச் சொன்னால் என்ன?' இப்படி நினைத்ததும் இந்த முருகேசன் பயலை அவ்வளவுக்குப் பெரிய மனிதனாக்குவதற்கு ஒன்றுமில்லை என்று அந்த யோசனையைக் கைவிட்டேன்.*

*"விடுங்கள் சார்! சுத்தத் திமிர் பிடித்த ராஸ்கல்! நாளைக்குக் கழித்துத் திங்கட் கிழமை ஆபீசுக்கு வருவான். 'எக்ஸ்பிளனேஷன்' எழுதிக் கேட்டு மானத்தை வாங்கிவிடுகிறேன்" என்று சீறினார் மானேஜர்.*

*"நோ, நோ! அதெல்லாம் செய்யப் படாது. திங்கட்கிழமை அந்த முருகேசன் வந்ததும் 'உன்னை எம்.டி. (மானேஜிங் டைரக்டர்) பார்க்கணும்னார். அவர் ரூமுக்குப் போய்ப் பார்' என்று சொல்லி என்னிடம் அனுப்புங்கள் போதும். நான் கேட்டுக் கொள்கிறேன்...." என்று மானேஜரை சாந்தப்படுத்தினேன் நான். இந்த ஞாயிற்றுக் கிழமை 'மானுபாக்சரர்ஸ் அசோஸியேஷ'னில் ஒரு விருந்துண்டும், தொழிலதிபர்கள் தனிக் கூட்டம் ஒன்றில் சொற்பொழிவு செய்தும் புகழில் மிதந்த போது கூட என் மனத்தின் ஒரு கோடியில் அந்த முருகேசன் என்ற டைப்பிஸ்ட் என்னை மதிக்காமல் போன அணுப்பிரமாண நிகழ்ச்சிதான் உறுத்திக்கொண்டிருந்தது. என்னுடைய கண் பார்வை தன்மேல் ஒரு 'செகண்ட்' திரும்பினாலே வரம் கிடைத்த மாதிரித் துள்ளுகிற குமாஸ்தாக்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள்? காற்றில் மிதந்து வருகிற கப்பல் மாதிரி இந்த 'கெடிலாக்' காரில் ('கெடிலாக்' காரே இந்த ஊரில் மூன்றுதான் இருக்கிறது. அந்த மூன்று காருக்கும் ஒரே உரிமையாளன் நான்தான்) நான் கம்பெனி வாசலில் போய் இறங்குகிறபோது எத்தனை கூழைக் கும்பிடுகள் என்னை வரவேற்கின்றன? அவற்றுக்கெல்லாம் மசியாமல் உண்மை உழைப்பாளி என்று நானே தீர்மானம், செய்து 'இவனைத்தான் கௌரவப் படுத்த வேண்டும். இவனைத் தவிர வேறு யாரையாவது கௌரவப்படுத்தினால் கௌரவத்துக்கே கௌரவமில்லை' என்று கூட்டம் தொடங்குகிற வரையில் பரம இரகசியமாக வைத்திருந்து மேடையில் திடீரென்று இந்த முருகேசனின் பெயரை நான் எழுந்திருந்து சொல்ல வந்த போது என்னையே 'இன்ஸல்ட்' செய்துவிட்டானே இவன்! நான் திட்டமிட்டுப் பாராட்ட முயன்றதை இவனும் திட்டமிட்டு அவமானப்படுத்தினாற்போல் அல்லவா ஆகிவிட்டது?*

'ஆண்டு விழா மேடையில் நின்று கொண்டு முதலாளி நம் பேரைச் சொல்லி உற்சாகமாகக் கூப்பிடுகிறபோது இப்படி நழுவி ஓடுகிறோமே. நாளைக்குக் கோபித்துக்கொண்டு நம் சீட்டைக் கிழித்தால் என்ன செய்வது?' என்ற பயம் கூடவா

இந்தப் பயலுக்கு இல்லாமற் போயிருக்கும்? தைரியசாலியா இருந்தால் மேடை வரை வந்து 'எனக்கு உங்கள் பாராட்டும் பரிசும் தேவையில்லை' என்று மறுத்திருக்க வேண்டும். அதையும் இவன் செய்யவில்லையே.

அதையும் தான் பார்க்கலாமே! திங்கட்கிழமை நாளைக்குத் தானே? நாளைக் காலை ஆபீஸ் தொடங்குமுன் 9-30 மணிக்கே நான் போய்விட வேண்டும். அப்படிப் போனால்தான் இந்த முருகேசனைத் தனியாக அழைத்து விசாரிக்க வசதியாக இருக்கும். இல்லாவிட்டால் இவனை அழைத்து விசாரித்தது ஆபீஸ் முழுவதும் பரவி விடும். முருகேசன் நான் போகிறபோது ஆபிசுக்கு வந்திருக்க வேண்டுமே என்ற கவலையே இல்லை. இந்தப் பதினைந்து வருடமாக அவன் சரியாக ஒன்பது மணிக்கே ஆபிஸுக்கு வந்துவிடுகிறான் என்று தெரிந்து அந்த ஒழுங்கையும் காலந் தவறாமையையும் பாராட்டுவதற்காகத் தானே ஆண்டு விழாவில் அவனுக்குப் பரிசளிக்கும் நினைவே எனக்கு வந்தது?

அப்பாடா! திங்கட்கிழமை விடிந்துவிட்டது. மணி 8-30. குளித்து உடை மாற்றிக் கொண்டு சிற்றுண்டியும் ஆகிவிட்டது. செய்தித்தாள் படித்துக்கொண்டிருக்கிறேன். 'குபேரா கெமிகல்ஸ்' ஆண்டு விழாவைப் பற்றிப் பிரமாதமாகச் செய்திகள் வெளியாகியிருக்கின்றன. எல்லாப் பத்திரிகைகளிலும் என் படத்தைப் போட்டு நான் தொடங்கப் போகும் புதிய கடிகாரக் கம்பெனி பற்றியும் எழுதியிருந்தார்கள். அவசரக் குடுக்கையான ஒரு நிருபர், 'குபேரா கெமிகல்ஸ் ஆண்டு விழாவில் ஊழியருக்குப் பரிசு வழங்கப்பட்டது' என்றும் எழுதியிருந்தார். 'பரிசு வழங்கல்' 'யாருக்கு யார்' என்று போடாமல் நிகழ்ச்சி நிரலில் நான் இரகசியமாகக் குறித்திருந்ததை வைத்துத் தானாக இந்தச் செய்தியைத் தயார் செய்திருக்க வேண்டும் அந்த நிருபர்!

"டிரைவர்! காரை எடு! கம்பெனிக்குப் புறப்படலாம்."

"நேரம் ஆகலிங்களே!"

"நேரம் ஆகாட்டிப் பரவாயில்லை. இன்னிக்கு நான் சீக்கிரமே அங்கே போகணும்..."

"இதோ.... சார்....."

'கெடிலாக்' ஓசைப்படாமல் பங்களா போர்டிகோவில் வந்து நின்றது. நான் ஏறிக்கொண்டேன். கார் புறப்பட்டது.

கார் கம்பெனிக்குள் நுழைவதற்கு ஒரு பர்லாங் முன்னால் முருகேசன் செருப்பும் இல்லாத காலோடு நடைபாதை மேல் மெல்ல நடந்து சென்றுகொண்டிருப்பதைக் காருக்குள் இருந்தே நான் பார்த்து விட்டேன்.

"டிரைவர்! காரை நிறுத்து...." கார் நின்றது. நான் முருகேசனைக் கை தட்டி அழைத்தேன். என் கை தட்டுதல் பல பேரைத் திரும்பிப் பார்க்கச் செய்து ஏமாற்றியபின் முருகேசனும் திரும்பிப் பார்த்தான். பதறிப்போய் பயபக்தியோடு ஓடி வந்தான்.

"ஆபீஸுக்குத்தானே போறே?.... முன்னாலே ஏறி உட்கார்ந்துக்கோ...."

"நீங்க போங்க சார்.... நான் நடந்தே வந்திடறேன்...."

"நீ கார்லே வரமாட்டியா?"

"அதுக்கில்லே சார்... உங்களோடே.... எனக்குக் கூச்சமா இருக்கு சார்...."

"ஆல் ரைட்.... ஆபீஸ் வந்ததும் நீ என்னை ரூம்லே வந்து பாரு.... டிரைவர்! போ...."

கார் முன்னேறியது. கார் ஆபீஸின் முன்புறம் வந்து நின்றதும் நான் இறங்கி ஏர்க்கண்டிஷன் ரூமுக்குள் போய் முருகேசனை எதிர்பார்த்துக் காத்திருந்தேன்.

கடிகாரத்தில் ஒன்பது அடிக்க மூன்று நிமிஷம் மீதமிருந்தது. கோவில் கர்ப்பக் கிருகத்தில் நுழைகிற மாதிரி ஸ்பிரிங் கதவை மெல்லத் தள்ளிக்கொண்டு முருகேசன் என் முன்னால் வருகிறான். நான் நிமிர்கிறேன்.

"அப்படி உட்கார்."

"பரவால்லே சார்...."

அவன் உட்காரவில்லை.

"ஆமாம்.... அதென்ன அன்னிக்கி ஆண்டு விழாவிலே திடீர்னு அப்படிச் செய்தே? எல்லார் நடுவிலேயும் என்னைத் தலை குனியும்படி பண்ணிட்டியே அப்பா? நீ நியாயமா நடந்துக்கிறே என்றுதான் நான் உன்னைக் கௌரவிக்க முன்வந்தேன்... பதிலுக்கு நீ என்னைக் கௌரவிக்காமே...."

"ஐயையோ! சார்... அப்படி எல்லாம் இல்லை.... இதோ இங்கே பாருங்க... இந்த நாலுமொழம் வேஷ்டி அண்ணைக்கிக் கரைக் கட்டுலே கிழிஞ்சு மேல் நோக்கிக் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து... அசிங்கமாப் போச்சு. இரண்டு கிழிசல் நுனியையும் முடிச்சுப் போட்டுக்கிட்டு மறைச்சு உட்கார்ந்தேன். நீங்க கூப்பிட்டதும் எனக்குக் கூச்சமாயிடிச்சு.... ஓடறதைத் தவிர.... வேறெண்ணும் தோணலை. வேஷ்டி கிழியாம இருந்தாலும்.... நான் இந்தப் பரிசு, புகழ் எல்லாம் வாங்கிக்கறதை வெறுப்பவன்...."

நான் பார்த்தேன். அவன் வேஷ்டி கிழிசல். சட்டையிலும் அங்கங்கே கிழிசல்கள்....

"இப்படி எல்லாம் சிரமமாயிருந்தா எங்கிட்டச் சொல்லப் படாதோ?..... நான் ஏதாவது செய்ய முடியுமோ....?"

"நமக்கு ஆயிரம் கஷ்டம் இருக்கும். அதை யெல்லாம் இன்னொருத்தரிடம் சொல்லி முடியுமோ? நாமேதான் சமாளிக்கணும். மற்றவர்களுடைய அநுதாபத்துக்கு ஏங்கறது கூட நாகரிகமான கோழைத்தனம்தான்.... எனக்கு வர கஷ்டத்தை நானே கொண்டாடணும்கிறதுதான் எங்க பெரியவங்க எனக்குச் சொன்ன பாடம்...."

நான் அயர்ந்து போனேன். இவனா கோழை? இவனா அப்பாவி? இவனா சாது?

"அது சரி! ஆனா நீ நியாயமா நடந்துக்கிறதை நான் பாராட்டறது...."

"உங்க பெருந்தன்மைன்னு நினைச்சுச் சந்தோஷப்படறேன் சார்! ஆனா நியாயமா நடந்துக்கணும்கிறதை முழு மூச்சா வைச்சு உழைக்கிறவன் அது பாராட்டப் படணும்னும் எதிர்பார்க்க வேணுமா? நான் எனக்காகத்தான் ஒழுங்காயிருக்கேனே தவிர நான் ஒழுங்காயிருந்தா யாராவது அதைப் புகழலாம் கிறதுக்காக ஒழுங்கா இருக்கிறதானால் புகழுக்கும் பரிசுக்கும் அப்புறம் ஒழுங்காயிருக்கணும்கிற அவசியமில்லீங்களே..."

மெல்ல நகர்ந்தன சில நிமிஷங்கள். மௌனம். என்னிடம் வருகிறேன் என்று கூடச் சொல்லிக் கொள்ளாமல்... மெல்ல நடந்து போய் விடுகிறான் முருகேசன். அவன் போன சில விநாடிகளுக்கு எல்லாம் 'குபேரா கெமிகல்'ஸின் விளம்பர ஆலோசகர் வந்து, இந்த ஆண்டு விழாவின் அறிக்கையையும் புதிய கம்பெனியின் தொடக்கத்தையும் பற்றிப் பத்திரிகைகளில் விளம்பரம் தருவது சம்பந்தமாக என்னை அணுகுகிறார். எனக்கு மனம் வேறு எங்கோ இருந்தது.

ஆண்டு அறிக்கைக்குக் கீழே வெளியிட என் படம் வேண்டுமென்கிறார். நான் சுவரில் மாட்டியிருந்த குரூப் போட்டோ ஒன்றை எடுத்து அதில் ஒரு முகத்தைச் சுட்டிக் காட்டி, "நம்முடைய பதினைந்தாவது ஆண்டு அறிக்கையின் கீழ் இந்தப் படத்தைத் தனியே பிரித்து 'என்லார்ஜ்' செய்து போட்டு விடுங்கள்...." என்கிறேன். விளம்பர ஆலோசகர் மலைத்துப் போய்க் கேட்கிறார்.

"இது யார் படம் சார்? அறிக்கையில் போடணும்னா ஒரு 'ஸ்டேட்டஸ்' வேணுமே?"

"நீங்கள் சொல்கிற 'ஸ்டேட்டஸ்' இவனைத் தவிர வேறு யாருக்கும் இங்கே இல்லை. எனக்குக்கூட...."

விளம்பர ஆலோசகர் மிரள்கிறார். அந்த 15-வது ஆண்டு 'குபேரா கெமிகல்ஸ்' ஆண்டு அறிக்கையில் முருகேசனுடைய படம் பத்திரிகைகளில் 'ஸ்தாபனத்தின் இலட்சிய ஊழியர்' என்ற பெயரோடு வந்த காரணம் ஒருவருக்கும் புரியவில்லை.

யாரோ முருகேசனிடமே கேட்டார்கள்.

"அப்படியா? எனக்குத் தெரியாதே" என்று சர்வ சாதாரணமாகப் பதில் வந்தது அவனிடமிருந்து.

(1961)

## 67. இவரும் ஒரு பிரமுகர்!

அவருக்குப் பெயர் நித்தியானந்தம். நாள் தவறாமல் நாழிகை தவறாமல் - இன்னும் தெளிவாகச் சொல்லத்தான் வேண்டுமென்றால் விநாடி தவறாமல் துக்கமும், வேதனையும், வறுமையும் படுகிற - படுத்துகிற மனிதருக்கு நித்தியானந்தம் என்று பெயர் வைத்திருக்கக்கூடாதுதான். நஞ்சுள்ளதற்கு நல்ல பாம்பு என்று வைத்துவிட்டதுபோல் இவருக்கு இப்படி வைத்தபின் என்ன செய்வது?

இவரைப் பெற்றவர்கள் அப்படி அன்றைக்கே இந்தத் தவறு செய்துவிட்டார்கள். பெற்றதனால் அல்ல; பேர் வைத்தனால்தான். பையன் நித்தியமும் ஆனந்தமாக வாழ வேண்டும் என்ற நல்ல எண்ணத்தினாலும் இதைச் செய்திருக்கலாம். ஆனால் அப்படி நடக்கவில்லை. இவருக்குப் பேர் வைத்ததனால் தங்கள் பேரை அநாவசியமாகக் கெடுத்துக் கொண்டுவிட்டார்கள் அந்தப் பெற்றோர்கள்.

நல்லவேளையாக அவர்கள் நீண்டகாலத்துக்கு முன்பே காலமாகிவிட்டதனால் நித்தியானந்தம் அவர்கள் பேரை ஏற்கனவே கெடுத்தது தவிர இனிமேல் புதிதாகக் கெடுப்பதற்கு ஒன்றுமில்லை.

உயர்திருவாளர் நித்தியானந்தத்தை ரொம்ப நல்லவர் என்றும் சொல்ல முடியாது. ரொம்பக் கெட்டவர் என்றும் சொல்ல முடியாது. ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு விதமாக நடந்து கொள்கிற மனிதரை ஒரு குறிப்பிட்ட குணத்துக்குள் எப்படி அடக்கிவிடமுடியும்? எப்படியெப்படியோ இருந்தாலும் மொத்தத்தில் அவர் ஒரு மனிதர் என்பதை யாரும் மறுத்துவிட முடியாது.

அப்படி மறுப்பது ஒரு தனி மனிதனின் சுதந்திரத்தைப் பறிப்பதாகும். தாம் ஒரு தனி மனிதன் என்பதை நித்தியானந்தம் எப்போதுமே ஒப்புக் கொண்டதில்லை. தாமே ஒரு ஸ்தாபனம் என்பது அவருடைய கருத்து. பலவிதமான இலட்சியங்களும் அலட்சியங்களும் நிறைந்த ஸ்தாபனம் அவர்.

இந்த ஸ்தாபனத்தின் மணிபர்ஸ் எப்போதும் நிறைந்திருக்கும். பணத்தினால் அல்ல, யார் யாரோ எழுதிக் கொடுத்த விலாசங்கள் நிறைந்த காகிதங்களாலும், கிழித்தெறியப்படாமல் மறந்துபோய் வைத்த பஸ் டிக்கெட்டுகளாலும், எதற்காக - எப்போது - யாரிடமிருந்து குறித்து வாங்கினோம் என்று தெரியாத சில்லறைக் காகிதங்களாலும்தான் நிரம்பியிருக்கும்.

இவற்றை எல்லாம் தவிர ரூபபேதம் தெரியாமல் மழு மட்டையாய்ப் போன செப்புக்காசு ஒன்றும் அந்த மணிபர்ஸின் ஒரு மூலையில் அநாதி காலந்தொட்டு

இருந்து வருகிறது. அவருடைய நாணயம் தேய்ந்து போயிருப்பதற்கு அந்தக் காசு ஓர் அடையாளம்.

திரு. நித்தியானந்தம் அவர்களுக்கு என்ன உத்தியோகம் என்று தெரிந்து கொள்ள ஆவலாயிருப்பீர்கள். ஆனால் அது ஒன்றும் நீங்கள் நினைப்பதுபோல் அவ்வளவு இலேசுப்பட்ட உத்தியோகமில்லை என்று துணிந்து சொல்லலாம்.

பலபேருக்கு உத்தியோகம் தேடித் தருகிற உத்தியோகம் அவருடையது. அவரே ஒரு ஸ்தாபனம் என்று கூறியபோதே இதை நீங்கள் புரிந்து கொண்டிருக்க வேண்டும். அந்த ஸ்தாபனத்துக்கு அவர்தான் ஒரே நிர்வாகி.

ஒவ்வொரு நாளும் காலையில் ஒன்பது மணி வரை எழும்பூரிலும், கிராண்ட்டிரங்க் எக்ஸ்பிரஸ் புறப்படுகிற நேரத்துக்கு சென்ட்ரல் ஸ்டேஷனிலும் நித்தியானத்தைப் பார்க்கலாம். நடுப்பகலில் கிராண்ட்டிரங்க் எக்ஸ்பிரஸ் புறப்படுகிற நேரத்துக்கு அவரை சென்ட்ரலில் சந்தித்தீர்களானால் அதே தினம் காலையில் எழும்பூரிலே வந்திறங்கி மதுரை மனிதர் ஒருவருக்கு டில்லியில் ஆகவேண்டிய காரியத்துக்காகச் சொல்லி அனுப்ப ஒப்புக்கொண்டிருக்கிறார் என்று அர்த்தம்.

கடைசியில் ஒரு நாள் யாரோ ஒரு மந்திரியைத் தனக்குத் தெரியுமென்று சொல்லி யாரோ ஒரு மனிதரிடம் இவர் கொஞ்சம் செலவுக்கு வாங்கப் புறப்பட்டு அது பெரிய வம்பாகி வெளிப்பட்டுப் பத்திரிகைகளில் நாறி ஓர் ஆறு மாதம் தாமும் தமது ஸ்தாபனமுமாகக் கம்பியெண்ணுவதற்குப் போயிருந்தார். அந்த ஸ்தாபனத்தின் பதிவு செய்யப்படாத பெயர் 'பித்தலாட்டம் அண்டு பொய் மோசடி லிமிடெட்' என்பது அப்போதுதான் பலருக்குத் தெரிந்தது.

நிம்மதியாக ஆறு மாதம் வரை நானும், உலகமும் நித்தியானந்தத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இருந்தோம். மறுபடி அவர் வெளியே வந்ததும் எழும்பூரிலும் சென்ட்ரலிலும் அவரைப் பார்க்கலாமென்று எண்ணினேன். ஆனால் அவர் விடுதலையான மூன்றாவது நாளோ, நாலாவது நாளோ ஒரு பிரபல தினப்பத்திரிகையில் கீழ்க்கண்டவாறு விளம்பரம் வந்ததைப் பார்த்தபோது எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"உங்கள் நிலையான எதிர்காலத்தை அறிந்து கொள்ள வேண்டுமானால் உடனே சுவாமி நித்தியானந்த யோகியை அணுகுங்கள். நேரில் பார்த்துப் பேச ரூ. 10. தபால் மூலம் 5. பலன்கள் அவசியம் பலிக்கும்" என்று விளம்பரம் போட்டுக் கீழே நித்தியானந்தத்தின் முகவரி இருந்தது. இதைப் பார்த்ததும் எனக்கு மனம் தாங்கிக்கொள்ள முடியாத ஆச்சரியம். நித்தியானந்தத்துக்குத் தன் எதிர்காலத்தைப் பற்றியே இன்னும் சரியாகத் தெரியாதே!

இந்த இலட்சணத்தில் மற்றவர்களுடைய எதிர்காலத்தைப் பற்றிச் சொல்லுவதற்குப் புறப்பட்ட தைரியம் எப்படிக் கிடைத்தது என்றுதான் நான் வியந்தேன். ஒரு நாள் நேரிலே போய்ப் பார்த்தே விடுவதென்று புறப்பட்டுப் போனேன். அதை ஏன் கேட்கிறீர்கள்? ஒரே அமர்க்களம்! அமர்க்களத்தின் இடையேதான் நித்தியானந்த யோகியைப் பார்க்க முடிந்தது.

வீட்டு முன் அறையில் படங்கள் - ஊதுவத்திகள் - புலித்தோல்கள் இவை புடைசூழத் தண்டு கமண்டல திரிசூலதாரியாய் நித்தியானந்தம் ஏதோ சிவபெருமான் மாதிரி உட்கார்ந்திருந்தார். சீடப்பிள்ளை வருகிறவர்களை வரிசைப்படுத்தி உட்கார வைத்திருந்தான். மற்றவர்கள் எல்லாரும் தங்கள் எதிர்காலத்தை விசாரித்துக் கொண்டு நகர்ந்தபின் நான் நித்தியானந்தத்தின் எதிர்காலத்தைப் பற்றி விசாரிக்க உள்ளே நுழைந்தேன்.

"எழும்பூர் பிளாட்பாரத்தில் வந்து இறங்குகிறவர்களின் தேவைகளை சென்ட்ரல் பிளாட்பாரத்துக்கு எட்ட விடும் பிரமுகராயிருந்தீர்களே? இப்போது ஏன் திடீரென்று இப்படி ஆகிவிட்டீர்கள் நீங்கள்?" என்று கேட்டேன்.

நித்தியானந்தம் தம்முடைய மோவாயில் வளர்ந்திருந்த இளந்தாடியை வருடிக் கொண்டே 'யோகி டிரேட் மார்க்' புன்முறுவல் ஒன்று பூத்தார். "லௌகீக வாழ்வு அலுத்துவிட்டது. இப்படி ஆத்மார்த்தமாக ஏதாவது பண்ணலாமென்று இறங்கினேன்!" என்றாரே பார்க்கலாம்.

'லௌகீகத்தின் பேரால் இதுவரை மோசடி செய்தேன். இனி வைதீகத்தின் பேரால் மோசடி செய்வேன்' என்று அவரோடு பழகிய எனக்குப் புரியவைத்தன அவர் வார்த்தைகள். எப்படிப் பிழைத்தால் என்ன? நித்தியானந்தம் தனி மனிதரல்ல. அவரும் அவருடைய ஏற்பாடுகளும் ஒரு தனி ஸ்தாபனம். அதை யாராலும் அசைக்க முடியாது. திருப்பெருந்திரு. நித்தியானந்தம் யோகியான பிறகு மணிபர்ஸிலிருந்த குப்பைக் காகிதங்களை எடுத்தெறிந்துவிட்டார். தேய்ந்த நாணயத்தோடு தேயாத காசுகளும் அந்த மணிபர்ஸில் இப்போது பெருகின. இவையெல்லாம் சேர்ந்து உரசி உரசி நிலையான அந்த நாணயத்தை இன்னும் தேய்த்தன. நித்தியானந்தத்தின் எதிர்காலம் சரியாயிருந்தவரை இந்த யோகம் குறைவின்றி நடந்தது.

ஆறு மாதத்துக்கு அப்புறம் நான் மறுபடி நித்தியானந்தைச் சந்தித்தபோது, "என்னிடம் சீடனாயிருந்த அயோக்கியப் பயலே, 'சலகவிதமான இராசி பலனும் கூறப்படும்' என்று எதிர்வரிசையில் போர்டு மாட்டிவிட்டான் ஐயா" என்று அலுத்துக் கொண்டார் அவர்.

"உங்கள் ஸ்தாபனத்திலிருந்து ஒரு பிரமுகர் உருவாகிப் புறப்பட்டுப் போனதாக நினைத்துத் திருப்திப்படுங்கள்" என்றேன்.

"அப்படியில்லை சார்! பிரமுகர் முக்கியமாகச் செய்ய வேண்டிய காரியம் தனக்குக் கீழே தொண்டராக இருக்கிற யாரும் பிரமுகராக உயர்ந்துவிடாமல் கவனித்துக் கொண்டிருப்பதுதான்; அதில் நான் தவறிவிட்டேன்" என்றார்.

"எங்காவது வாய் தவறி உங்கள் சீடனுக்கே அவனுடைய எதிர்காலத்தைப் பற்றி நினைவுபடுத்தியிருப்பீர்கள். அவன் அதைக் கவனிக்கக் கிளம்பிவிட்டான்."

மறுபடி ஆறுமாதம் கழித்து நான் நித்தியானந்தத்தின் வீட்டுக்குப் போனபோது வாசல்புறமிருந்த அறையில், 'எதிர்காலம் தெரிய வேண்டுமா?' - என்ற போர்டுக்குப்

பதில், 'அசல் மாயவரம் வெண்ணெய் விற்கப்படும்' என்ற புதுப் போர்டு மாட்டியிருந்தது. எப்படியானால் என்ன? அவர் ஒரு ஸ்தாபனம்.

இப்போது நித்தியானந்தம் தாடியை எடுத்துவிட்டு மீசையை மட்டும் வளர்த்திருந்தார். "எதிர்கால பிஸினஸ் என்ன ஆச்சு? கடைசியில் இப்படி வெண்ணையில் கை வைக்கும்படி ஆகிவிட்டதே?" என்று கேட்டேன் நான். அவர் மெல்லச் சிரித்தார்.

"இப்பொழுதெல்லாம் எதிர்காலத்தை யாரும் நாடுவதில்லை. ஏதோ தோன்றியது........ உடனே வெண்ணெய்க் கடை வைத்துவிட்டேன். தினம் பத்து ரூபாய்க்குக் குறையாமல் இலாபம் கிடைக்கிறது" என்றார் நித்தியானந்தம்.

மீண்டும் நாலைந்து வாரத்துக்குப் பின் நித்தியானந்தம் மறுபடி கைதாகிச் சிறை சென்றதாகப் பத்திரிகையில் செய்தி வந்தது. செய்தியைப் படித்தேன். வெண்ணெய் விற்பதாகப் போர்டு மாட்டிவிட்டுச் சாராயம் விற்றால் சும்மாவா விடுவார்கள்?

வெளியே போர்ட்டில் போட்டிருப்பதைத்தான் விற்க வேண்டுமென்ற குறுகிய நோக்கம் நித்தியானத்துக்கு இருந்ததில்லை. நித்தியானந்தத்தின் பரந்த நோக்கம் போலீஸாருக்குப் புரியவில்லை. இந்தத் தடவை அவருக்கு இரண்டு வருடம் சிறைவாசம் கிடைத்தது. சிறைக்குள் இருக்கும்போதும் அவர் ஒரு ஸ்தாபனமாக இருப்பார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. பின்பு இரண்டு வருடத்துக்கு நானும், உலகமும் நிம்மதியாக இருந்தோம்.

பொழுதும் காலமும் எந்த ஊரில் எப்படி வேகமாக ஓடுகிறதோ, இந்தப் பட்டினத்தில் அது சூப்பர் ஜெட் வேகத்தில் அடித்துப் பிடித்துக் கொண்டு ஓடுகிறது. இரண்டு வருடமும் கழிந்து ஆறுமாதமும் மேலே ஆகிவிட்டது. பாரத நாட்டில் அடுத்த பொதுத் தேர்தல் நெருங்கிக் கொண்டிருந்தது. ஒருநாள் மாலை நுங்கம்பாக்கம் ஏரிப் பகுதியில் போய்க் கொண்டிருந்தபோது அந்தப் பக்கத்தில் ஏதோ ஒரு பொதுக்கூட்டம் நடப்பதைப் பார்த்து யார் பேசுகிறார்கள் என்று கேட்கிற ஆவலோடு போனேன். கூட்டம் பிரமாதமாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. யாரோ ஒருவர் கூட்டத்தைத் தொடங்கி வைத்துப் பேசினார் : "இதோ இங்கு அமர்ந்திருக்கும் நமது பேச்சாளர் 'எப்போதும் மகிழ்வார்' நாட்டுக்காகப் பன்முறை சிறை சென்று துயருற்ற பெருமகனார். வாழ்வில் இப் பெருந்தகையாளர் அனுபவிக்காத துன்பங்கள் இல்லை..." என்று அறிமுகப் படலம் தொடர்ந்தது. அந்தப் பெருந்தகையாளர் யார் என்று அறிந்து கொள்ளும் ஆவலால் உந்தப் பெற்று மேடையருகே சென்றேன்! என்ன ஆச்சரியம்! திருவாளர்... நித்தியானந்தம் அவர்கள்தான் கழுத்து நிறைய மலர் மாலை சூடி நாற்காலியில் அமர்ந்திருந்தார். அடப்பாவமே! பேரைக்கூட அல்லவா 'எப்போதும் மகிழ்வார்' என்று மாற்றிக் கொண்டு விட்டார்? அன்று நித்தியானந்தனராகிய பெருமகனாரின் சொற்பொழிவு முழுவதையும் கேட்டேன். செத்துப்போன பத்தாம் பசலிக் கொள்கைகளைச் சீரிய கூரிய நடையில் முழங்கினார் 'எப்போதும் மகிழ்வார்'. அதைக் கேட்டு மகிழவில்லையானாலும் கூட்டம் கலைந்ததும் அன்னாரைத் தனியே

சந்திக்க ஆவல் கொண்டு மேடையருகே சென்றேன். பலர் நடுவே நான் அவரைப் பற்றி விசாரித்து மானத்தைக் கப்பலேற்றிவிடப் போகிறேனோ என்று பயந்த அன்னார் என்னோடு கீழே இறங்கித் தனியாக வந்துவிட்டார். "என்ன? புது 'பிஸினஸ்' ஆரம்பித்திருக்கிறீர்கள் போலிருக்கிறது?"

"ஆமாம்! முன்னால் பிரமுகர் வேலை ஸைடு பிஸினஸ் ஆக மட்டும் இருந்தது. இப்போது முழுநேரப் பிரமுகர் ஆகிவிட்டேன்" என்றார் அன்னார் அவர்கள்.

"செய்ய வேண்டியதுதானே? இப்போதெல்லாம் உங்களைப் போன்றவர்களுக்கு ரொம்ப லாபகரமான வியாபாரம் 'பாலிடிக்ஸ்'தான்."

"வாருங்கள்! நுங்கம்பாக்கம் நாயர் கடையில் டீ குடித்து நாளாச்சு..." என்று அழைத்தார் நித்தியானந்தம். எனக்கும் அவருடைய அழைப்பை மறுக்கத் தோன்றவில்லை. ஒரு பிரமுகருடைய அழைப்பை யாராவது மறுப்பார்களா? இருவருமாக நாயர் கடைக்குப் போனோம். டீ தயாராகிறவரை பல விஷயங்களைப் பேசினோம். ஒரு பிரமுகரோடு பேசுவதில் சுவாரஸ்யம் அதிகமாயிற்றே!

டீ வந்தது, குடித்தோம், நாயருக்குக் காசு கொடுக்க வேண்டிய சமயத்தில் பையைத் தொடப்போன தன் கையை அப்படியே அந்தரத்தில் திருப்பிக் கொண்டு, 'நீங்கள்தான்' என்று என் தலையில் சுமத்திவிட்டார் நித்தியானந்தம். நான்தான் நாயருக்குப் பணம் கொடுத்தேன். வெளியே வந்ததும், "என்ன சார் முழு நேரப் பிரமுகர் ஆன பின்பும் உங்கள் மணிபர்ஸ் நிலைமையில் மாறுதல் ஒன்றும் இல்லை போலிருக்கிறதே?" என்று கேட்டேன். அவர் வறட்சியாகச் சிரித்தார்.

"இதோ நீங்களே பாருங்களேன். இதில் அன்றிலிருந்து இன்றுவரை இருப்பது இதுதான்" என்று அவருடைய மணிப்பர்ஸை என் கைக்கு நேரே தலை குப்புறத் தூக்கிக் கவிழ்த்தார் நித்தியானந்தம்.

அந்தப் பழைய செப்புக் காசு என் கையில் விழுந்தது. அந்த நாணயம் இப்போது முன்னைவிடத் தேய்ந்திருந்தது. நான் குறும்பாகச் சிரித்துக்கொண்டே அவரைக் கேட்டேன்.

"உங்கள் 'நாணயம்' படிப்படியாகத் தேய்ந்து கொண்டே வருகிறது சார்!"

"வாஸ்தவம்தான். ஆனால் அதில் இன்னும் தேய்வதற்கு இடமிருக்கிறது என்பதுதான் நான் மகிழ்வதற்குக் காரணம்" என்று பதில் கூறினார் அவர்.

**(தாமரை, பொங்கல் மலர், 1962)**

## 68. அர்த்தம் பிறந்தது

அதோ தொலைவில் தெரிகிறதே அந்த நீலச் சிகரத்தின் அழகு நுனி, அதோடு இந்த மலையின் வாழ்க்கை முடிந்து விடுகிறது. அதற்கு அப்புறம் என்ன ஆரம்பமாகிறது என்று கேட்பதில் பயனில்லை. ஒன்று முடிந்தால் இன்னொன்று ஆரம்பமாகிக் கொண்டிருப்பதாகத்தான் அர்த்தம். இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டுமானால் ஒன்று முடிவதும் அந்த முடிவையே மறுபுறமாகக் கொண்டு மற்றொன்று தோன்றுவதும் உள்ளங் கையைத் திருப்பிக் காட்டினால் புறங்கையாகத் தெரிவது போலத்தான்.

ஆனால் எமரால்ட் காப்பி எஸ்டேட் உரிமையாளர் புஜங்கராவைப் பொறுத்த வரை இந்தத் தத்துவத்தில் ஒரு பகுதிதான் உண்மை. மங்களூரிலிருந்து உதகமண்டலத்துக்குக் குடியேறி வாழத் தொடங்கிவிட்ட இந்தப் பதினைந்து வருட வாழ்க்கையில் அவர் அநுபவித்தும் கண்டும் உணர்ந்த எத்தனையோ முடிவுகளிலிருந்து எந்த ஆரம்பமும் முளைக்கவில்லை, எந்தக் கிளையும் தோன்றிக் கிளைக்கவில்லை.

இங்கே இதோ இப்பொழுது இந்தப் பனிக்காலத்து மாலையில் உட்கார்ந்து கொண்டு கண் பார்வைக்கு எட்டுகிற கடைசிச் சிகரம் வரை பார்த்துக் கொண்டிருக்கிறாரே; இதே காரியத்தை எமரால்ட் எஸ்டேட்டின் பங்களா முகப்பிலிருந்து கடந்த நாலாயிரத் தெண்ணூறு நாட்களுக்கு மேலாகத் தவறாமல் செய்து கொண்டிருக்கிறார் அவர். நாலாயிரத்தெண்ணூறு நாட்களுக்கு மேலாக அல்லது பதினைந்து ஆண்டுகளாக - நடுவில் லீப் வருடங்களும் வந்திருக்கலாம் - ஆனால் அது அவருக்குத் தெரியாது. இந்த நீல மலைச்சிகரங்களுக்கு அப்பால் காலம் என்று ஒரு பொருள் நகர்ந்து ஓடியிருப்பதாகவே அவருக்குத் தெரியாது. இத்தனை ஆண்டுகளாக இந்த இடத்திலிருந்து அவர் பார்வைக்குத் தெரிந்த ஒரே முடிவு அந்தச் சிகரம்தான். அதற்கு அப்பால் அவருக்கு எதுவும் தெரிந்ததில்லை. அசோகமரத்தின் பச்சை இலை ஒன்றைப் பெரிதாக்கி நிறுத்தினாற்போல் செங்குத்தாக நிற்கிறதே அந்தச் சிகரத்தின் நுனியோடு அவருடைய பார்வையும் நினைவும் ஒருசேர ஒடுங்கி முடிந்துவிடும். முடிந்துவிடும் என்பது முக்கியமில்லையானாலும் அதற்கப்பால் படராதென்பது முக்கியம்.

'குறிக்கோள் குறிக்கோள்' என்று அடித்துக் கொள்கிறார்களே அதுதான் என்ன? 'இதைச் செய்தே தீருவது' என்று எதையாவது ஒன்றை உறுதியாகக் குறிக் கொள்வதுதானே குறிக்கோள்? பரம்பொருளோடு ஒன்றுவதைக் குறியாக வைத்துக் கொண்டு பத்மாசனத்தில் உட்கார்ந்து தவம் செய்யும் துறவி, இலாபத்தைக் குறியாக

வைத்துக் கொண்டு வியாபாரம் செய்யும் வியாபாரி இவர்கள் எல்லாரையும் போல எந்த ஒரு சித்தியையும் நினைக்காமல் எந்த ஓர் இலாபத்தையும் கருதாமலே அந்தச் சிகரத்தைக் குறிக்கோளாகக் கொண்டு ஒன்றேகால் டஜன் வருடங்களைக் கழித்திருக்கிறார் புஜங்கராவ். அந்தக் குறிக்கோளில் அவர் ஒரு நாள் கூடத் தவறியதில்லை. வெம்மையறியாத பசுமைப் பட்டாடையுடுத்தி எண்ணத் தொலையாத வண்ணப் புதுப்பூக்களினால் கண்ணைச் சிமிட்டிப் புன்னகை பூத்துக் கொண்டே உயரத்தில் வீற்றிருக்கும் கந்தர்வப் பெண்ணைப் போல் கொலுவிருக்கும் பேரரசியான நீல்கிரி நங்கையின் வாழ்க்கையில் இந்தப் பதினைந்து ஆண்டுகளில் எத்தனை எத்தனையோ புதுமைகள், எத்தனையோ மாறுதல்கள், எத்தனையோ வளர்ச்சிகள் ஏற்பட்டிருந்தன... நேற்று வரை உருளைக் கிழங்கு வயலாயிருந்த இடத்தில் இன்றைக்குப் பங்களாக் கட்டிடம் தெரிகிறது. மஞ்சக் கௌடர் புதிய கிழங்கு சாகுபடிக்கு முள்ளுப் போட்டுக் கொண்டிருக்கிறார். சென்ற மாதம் வரை ஸ்டேன்சுக்கும் நார்மன் துரைக்கும் சொந்தமாயிருந்த கிரீன்பீல்ட் எஸ்டேட்டை வயநாட்டு நாயர் ஒருத்தர் விலைக்கு வாங்கி விட்டார். யூகலிப்டஸ் எண்ணெயையும் தம்முடைய 'சாமர்த்தியத்தையும்' சேர்த்துக் கண்ணாடிப் புட்டியில் அடைத்துப் பணம் பண்ணிக் கொண்டிருந்த மேட்டுப் பாளையத்துச் செட்டியார் ஒருவர் ரேஸ்கோர்சுக்கு எதிர்த்தாற் போல் மேட்டில் 'பிளஷர் லாட்ஜ்' என்று ஓட்டல் வைத்து விட்டாராம். இனிமேல் இந்த உதகமண்டலத்தில் பிளஷர் (சந்தோஷம்) வேறு எங்கேயாவது மீதமிருக்க முடியுமா என்பதே சந்தேகம்தான்!

ஆனால், இந்த மாறுதல்கள் எல்லாம் புஜங்கராவின் குறிக்கோளைக் கலைத்துவிடவில்லை. அவருடைய மகிழ்ச்சியை யாராலும் பறிக்க முடியாது. காரணம்? மற்றவர்கள் மகிழ்ச்சியடைய முடியாத - அல்லது 'மகிழ்வதற்கு இதில் என்ன இருக்கிறது?' என்று மிக விரைவில் சலித்துப் போகக் கூடிய ஒன்றைப் பார்த்து அவர் மகிழ்ந்து கொண்டிருந்தார். அது அவர் மனத்துக்குப் பழகிப் போன அநுபவம். மற்றவர்கள் சொல்கிற மாதிரிச் சொன்னால் பழகிப் போன அசட்டுத்தனம்.

அந்தக் கருநீலச் சிகரத்துக்கு முன்னாலும் பல சிறிய சிகரங்கள் இருந்தன. பின்னாலும் சில இருக்கலாம். ஆனால் அவரைக் கவர்ந்தது அந்த ஒரே ஒரு சிகரம்தான். அது மட்டும் அவரைக் கவர்ந்ததற்கு எப்படிக் காரணம் கண்டு பிடித்துச் சொல்ல முடியாதோ அதேபோல மற்றவை ஏன் அவரைக் கவரவில்லை என்பதற்கும் காரணம் கண்டுபிடித்துச் சொல்ல முடியாது. அவருடைய எஸ்டேட் பங்களாவின் முகப்பில் அவர் வழக்கமாக உட்காரும் இடத்திலிருந்து பார்த்தால் அதுதான் பெரிதாக எதிரே தெரிந்தது. அதனால் அதுவே அவரைக் கவர்ந்திருக்கலாம் என்று நாமாக அநுமானம் செய்ய முடியும். ஆனால் புஜங்கராவ் அந்தக் காரணத்தை ஒப்புக்கொள்ள மாட்டார்.

அதற்குக் காரணம் என்று ஒன்றைக் கற்பிக்க முயல்வதையே ஒப்புக் கொள்ளாதவர் காரணத்தை எங்கே ஒப்புக் கொள்ளப் போகிறார்? எமரால்ட் எஸ்டேட்டின் சுற்றுப்புறத்தில் அவருக்கு எத்தனையோ நண்பர்கள் இருந்தனர். அவரைப் போலவே அவர்களும் காப்பி, தேயிலைத் தோட்டங்களின் முதலாளிகள். அவர்களில் சார்ல்வுட்

என்று ஓர் ஆங்கிலேயர் இருந்தார். அவர் புஜங்கராவின் எஸ்டேட்டுக்குப் பக்கத்து எஸ்டேட்காரர். அந்த ஆங்கிலேயர் சில மாலை வேளைகளில் புஜங்கராவைச் சந்திப்பதற்கு வருவார். சார்ல்வுட் எதைப் பற்றியாவது சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருக்கிற போதுகளில் கூடப் புஜங்கராவின் செவிகள்தாம் அவற்றைக் கேட்டுக் கொண்டிருக்கும். அவருடைய இடுங்கிய சிறிய கண்களோ அந்தச் சிகரம் முடிகிற நுனியில் இருக்கும். ஒரு நாள் சார்ல்வுட் பொறுமையிழந்து புஜங்கராவிடம் இதைப் பற்றிக் கேட்டே விட்டார்.

"வாட் ஆர் யூ லுக்கிங் தேர்?" என்று தொடங்கித் தாம் அவரைப் பார்க்கிற போதெல்லாம் அவர் அப்படியே இருந்து வருவதைக் குறிப்பிட்டுச் சொல்லிக் கேலி செய்தார் சார்ல்வுட். புஜங்கராவ் அந்தக் கேலிக்கும் பதில் சொல்லவில்லை. புன்முறுவல் பூத்தார். அப்படிப் புன்முறுவல் பூத்தபோதும் அவருடைய கண்கள் வழக்கமான இலக்கில்தான் இலயித்திருந்தன. இதனால் சற்றே கோபமடைந்துவிட்ட அந்த ஆங்கில நண்பர், 'அர்த்தமில்லாமல் எதையாவது பார்ப்பது சோம்பேறித் தனத்துக்கு அடையாளம்' என்ற கருத்தைக் கடுமையான ஆங்கில வார்த்தைகளில் தொடுத்துப் பொரிந்து தள்ளினார். நண்பரின் கோபத்தைக் கண்டு மேலும் சிரித்துக் கொண்டே தமது பார்வையைத் திருப்பாமலே ஒரு கேள்வி கேட்டார் புஜங்கராவ். அது மிகவும் ஆழமான கேள்வியாயிருந்தது.

"மிஸ்டர் சார்ல்வுட்! அர்த்தம் அர்த்தம் என்று சொல்கிறீர்களே, அதுதான் என்ன? அர்த்தத்தின் அர்த்தத்தை முதலில் சொல்லுங்கள்...."

"இதற்குப் பதில் குழந்தைக்குக் கூடத் தெரியுமே மிஸ்டர் ராவ்! ஒரு வார்த்தையினால் குறிக்கப்படும் பொருள் அல்லது பயன் எதுவோ அதுதான் அதற்கு அர்த்தம்."

"நல்லது! இந்த உலகம் தோன்றிய முதல் ஊழியின் முதல் விநாடியான யுகாரம்பத்தில் வார்த்தைகள் மட்டுமே பிறந்தன என்றும் அர்த்தங்கள் அதற்குப் பின்பே உண்டாயின என்றும் உங்கள் பைபிளில் சொல்லியிருக்கிறார்களே. அது உங்களுக்கு நினைவிருக்கிறதோ?" என்று கேட்டார் புஜங்கராவ்.

"தாராளமாக நினைவிருக்கிறது!"

"அதைப்போல்தான் இந்தச் சிகரத்தைப் பார்க்கத் தொடங்கிப் பதினைந்து வருடங்கள் ஆகியும் இந்த நோக்கு இன்னும் அர்த்தம் பிறவாத வெற்று வார்த்தையாகவே இருந்து வருகிறது. நமக்கு அர்த்தம் தெரியாத வார்த்தையை - உயர்ந்த வார்த்தையை (அதன் அர்த்தம் நமக்குத் தெளிவாகத் தெரியாத உயரத்தை உடையதென்று அறிந்திருந்தும்) நாம் காதலிப்பது உண்டா இல்லையா? இயற்கையின் அநுபவங்களைப் பற்றி அகராதியைப் போல் யாராவது இதற்கு இது அர்த்தம் என்று எழுதி வைத்திருக்கிறார்களோ? அர்த்தம் வார்த்தையைப் பொறுத்ததல்ல. அதனால் பின்பு எப்போதோ ஏற்படுவதற்கு இருக்கிற விளைவைப் பொறுத்ததுதான்...."

"இருக்கலாம்! ஆனால் மனிதர்கள்... உயிரும் சதையுமாய் இருப்பவர்கள் அர்த்தம் பிறவாத காரியத்தைத் தொடர்ந்து செய்து கொண்டிருப்பதை நான் வெறுக்கிறேன்..."

சார்ல்வுட்டின் ஆத்திரத்தைப் பார்த்துப் புஜங்கராவுக்குச் சிரிப்புப் பொங்கிக்கொண்டு வந்தது. ஆவல் அடங்குகிறவரை நன்றாகச் சிரித்துவிட்டு அந்த ஆங்கில நண்பருக்கு விடை கொடுத்து அனுப்பினார் அவர்.

புஜங்கராவின் வாழ்க்கையில் இதுவரை எந்த அநுபவத்துக்கும் அர்த்தம் பிறந்ததில்லை. தம்முடைய இருபத்தெட்டாவது வயதில் காப்பித் தொழில் நுணுக்கங்களைக் கற்று வருவதற்காகத் தகப்பனாரால் வெளிநாட்டுக்கு அனுப்பப்பட்ட போதும், ஆறடி உயரமும் நன்றாகப் பழுத்த ஆரஞ்சுப் பழத்தினும் சற்றே வெளுத்த சிவப்பு நிறமும் கொண்டு வெளிநாட்டுச் சூழ்நிலையில் வைத்துப் பார்த்தால் 'இவர் இந்தியர்தாமா?' என்று சந்தேகப்படக்கூடிய தம்முடைய தோற்றத்தினால் பிரேஸிலில் ஒரு வெள்ளைக்கார யுவதியைக் கவர்ந்து காதலித்து மணம் புரிந்துகொள்ள நேர்ந்தபோதும், மணம் புரிந்துகொண்ட சில மாதங்களிலேயே அந்தப் பெண் கார்விபத்தில் மாண்ட பெருந்துயரத்தின்போதும், அந்தத் துயரத்தோடும், ஒரு பெண்ணுக்குச் சிறிது காலம் கணவனாக இருந்தோம் என்ற நினைப்போடும் தாய்நாடு திரும்பி வந்தபோதும் எப்போதும் அவருடைய வாழ்க்கையின் அர்த்தம் அவரே புரிந்துகொள்ளும்படி விளைந்ததில்லை. அவர் பிரேஸிலில் தங்கிக் கற்று வந்திருந்த காப்பிப் பயிர்த் தொழிலினாலும், மற்ற நுணுக்கங்களினாலும் கடந்த பதினைந்து ஆண்டுகளுக்குள் எமரால்ட் எஸ்டேட்டின் வளம் பெருகி வளர்ந்திருக்கிறது என்பதுதான் ஒரே விளைவு. ஆனால் இந்த விளைவை மட்டுமே தம்முடைய வாழ்வின் அர்த்தமாகக் கொள்ள அவர் தயாராயில்லை. வேறு ஏதோ ஓர் அர்த்தம் இருக்கவேண்டும் என்றே அவருக்குத் தோன்றியது. அந்த அர்த்தம் எது என்பதுதான் அவருக்கு இன்று வரையில் புலப்படவில்லை.

காரியமாகிய விளைவுக்குப் பிறகுதான் சில காரணங்கள் அழகாகத் தோன்றும். அதேபோல் அர்த்தம் புரிந்தபின்புதான் அந்த அர்த்தத்தைப் பிறப்பித்த பதங்கள் முன்னைக்காட்டிலும் அழகாகத் தோன்றும். அவருக்கு அப்படித் தோன்றிய சமயங்களும் உண்டு.

புஜங்கராவ் தம்முடைய பதினான்காவது வயதில் மங்களூரில் ஹைஸ்கூல் படிப்புப் படித்தபோது முதன் முதலாக 'எமரால்ட்' என்கிற ஆங்கில வார்த்தையைக் கற்றுக்கொண்டார். அந்த 'வார்த்தைக்குப் பச்சை நிறமுள்ள மரகதம்' என்று அப்போது அர்த்தம் சொல்லிக் கொடுத்திருந்தார்கள். ஆனால் அந்தப் பதத்தின் அர்த்தம் எவ்வளவு அழகு நிறைந்தது என்பது பள்ளிக்கூடத்திலும், வகுப்பறையின் வேத புஸ்தகமான அகராதியிலும் அவருக்குப் புரியவில்லை. தன் தகப்பனார் உதகமண்டலத்தில் எஸ்டேட் வாங்கியபோதுதான் புஜங்கராவ் 'எமரால்ட்' என்ற வார்த்தைக்கு எவ்வளவு அழகான அர்த்தம் இருக்க முடியுமென்பதை விளங்கிக்கொண்டார்.

கவர்ச்சிகரமான கருநீலம் கலந்த அந்த மலைப் பிரதேசத்துப் பசுமையில் மனத்தைக் கொள்ளை கொடுத்த வெள்ளைக்காரன் ஒருவன் அகராதியிலுள்ள வார்த்தையையும் தன் மனத்தில் இருந்த கவித்துவத்தின் ஆசையையும் சேர்த்து அந்த இடத்தில் பெயராகச் சூட்டியிருந்தான். அந்த இடத்துக்குச் சூட்டியதால் அந்தப் பெயரின் பெருமையையே அதிகப்படுத்தியிருந்தான்.

'எமரால்ட் - மரகதப் பச்சை'.

'கண்ணுக்கெட்டிய தூரம் வரை மேடும் பள்ளமுமாகப் பச்சைப் பட்டுடுத்தித் தன்னிச்சையாய்க் கிடந்து தூங்கும் பெண்ணழகிபோல் தெரியும் இந்த மலைப் பகுதி எல்லாம் நிஜமாகவே மரகதமாயிருந்தால் எந்த இரத்தின வியாபாரியாவது இதற்கு விலை கணிக்கமுடியுமோ?' என்று முதல் முதலாக அந்த எஸ்டேட்டுக்கு அப்பா தன்னை அழைத்துக்கொண்டு சென்றபோது தன்னுடைய பதினேழாவது வயதில் இளைஞன் புஜங்கராவ் அந்த மலைப் பகுதியைப் பார்த்து நினைத்தான். பதினாலாவது வயதில் தான் படித்திருந்த, 'எமரால்ட்' என்னும் பதத்துக்கு அகராதியில் எழுத முடியாத பரந்த அர்த்தத்தை அப்போதுதான் கண்ணாரக் கண்டான். அகராதியில் ஒரு வார்த்தைக்கு இருக்கிற அர்த்தத்தைவிட அந்த வார்த்தை குறிப்பிடுவது எதுவோ அதையே அனுபவிக்கிறவன் உணர்கிற அர்த்தம் மிகவும் அதிகமானதென்று அவருக்குத் தோன்றியது.

இப்படியெல்லாம் நினைத்த மனம் கால் நூற்றாண்டுக்கு முற்பட்ட இளைஞன் புஜங்கராவினுடையதுதான். பங்களூரிலும் மைசூரிலும் பள்ளிப் படிப்பும், கல்லூரிப் படிப்பும் படித்த காலத்து புஜங்கராவ் வேறு; பிரேஸிலுக்குப் போய் இரண்டு மூன்று வருடங்கள் அங்கே தங்கிவிட்டுத் தாய் நாடு திரும்பிய புஜங்கராவ் வேறு. பிரேஸிலில் கற்ற தோட்டத்தொழில் நுணுக்கங்களால் அறிவும், முன்பின் தெரியாத வெள்ளைக்கார யுவதியின் மனத்தில் ஆசையைக் கற்பித்ததால் நேர்ந்த புதிய உறவும், இறுதியில் அந்த உறவு அழிந்த வெறும் நினைவும் கொண்டு தாய்நாடு திரும்பிய புஜங்கராவ் வேறு.

பதினேழு வயதில் பார்த்த அதே பசுமை இன்னும் இன்றும் 'எமரால்டில்' இருக்கத்தான் இருந்தது. ஆனால் புஜங்கராவின் மனத்தில் பசுமை குறைந்திருந்தது. இளமையில் தெரிந்தது போல அந்தப் பசுமைக்கும் அதைக் குறித்த பெயருக்கும் விசேஷமாக எந்த அர்த்தமும் அவருக்குத் தெரியவில்லை. இங்கே திரும்பிய நாளிலிருந்து அவருக்குத் தெரிகிற ஒரே காட்சி அந்தச் சிகரம்தான். அதற்கும் இன்றுவரை அர்த்தம் தெரியவில்லை. சாதாரணமாக அர்த்தமே தெரியாதபோது விசேஷமாக எப்படி அர்த்தம் தெரியப்போகிறது?

அர்த்தமில்லாமலே எதையாவது தொடர்ந்து பார்த்துக்கொண்டிருப்பது சோம்பேறித்தனத்துக்கு அடையாளம் என்கிறார் சார்ல்வுட். ஆனால் அதிலிருந்தும் ஏதாவது ஓர் அர்த்தம் என்றாவது ஒருநாள் பிறக்கும். பிறக்கிற வரை அதைப் பார்த்துக்கொண்டே இருப்பேன் என்கிறார் புஜங்கராவ். பத்து நிமிஷங்களுக்கு ஒரு டீயும் மூன்று நிமிஷங்களுக்கு ஒரு சிகரெட்டுமாகக் குடித்துத் தீர்த்துக் கொண்டே

*சாயங்காலம் மூன்று மணியிலிருந்து இருட்டுகிற வரை ஒரே திசையில் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிற மனிதரைச் சார்ல்வுட் சோம்பேறி என்று கூறியது கூட நியாயமாகவே இருக்கலாம். ஆனால் புஜங்கராவ் அதை ஒப்புக்கொள்ளமாட்டார். காலையில் பதினோரு மணியிலிருந்து மாலை மூன்று மணி வரை நானூறு ஏக்கர் விஸ்தீரணமுள்ள எமரால்டு காப்பி எஸ்டேட்டின் ஆபீஸ் நிர்வாகத்தைச் சுறுசுறுப்பாக அவர் கவனிப்பதாக மற்றவர்கள் சொல்கிறார்களே; அந்த வேளையில்தான் தமக்குப் பிடித்தமில்லாத எதையோ மந்தமாகவும், மெதுவாகவும் தாம் செய்து கொண்டிருப்பதாக அவர் உணர்ந்திருக்கிறார். உண்மையில் தாம் சுறுசுறுப்பாக இருப்பதாக அவர் உணர்கிற நேரம் எது தெரியுமோ?*

*ஒவ்வொரு நாளும் மாலை மூன்று மணியிலிருந்து இருட்டுகிற வரை ஒரு வேலையும் செய்யாமல் பங்களாவின் முகப்பில் உட்கார்ந்துகொண்டு கண் பார்வை விலகிவிடாதபடி அந்தக் கடைசிச் சிகரத்தை அர்த்தமில்லாமல் பார்த்து அனுபவிக்கிறாரே, அதுதான் அவர் சுறுசுறுப்பான காரியத்தைச் செய்வதாய்த் தமக்குத் தாமே உணர்கிற நேரம்.*

*சுருள் சுருளாய் வெண் மேகங்கள் சுருட்டிக்கொண்டு படர்கின்ற சில கார் காலத்துப் பிற்பகல் வேளைகளில் வில்லிவோட் ஹவுஸ் தன் சிவப்பு வெல்வெட் உதடுகளில் சிரிப்பு அரும்பப் பொன் நிறக் கூந்தல் தோள் பட்டைகளிலே சுருள் சுருளாய்ச் சரிய அவருடைய நிகழ்காலக் கற்பனை அவளுக்கு அணிவித்துப் பார்க்க ஆசைப்பட்ட இந்திய உடையில் அந்தச் சிகரத்தின் உச்சியில் அது முடியுமிடத்தின் மேல் கால்கள் பாவாமல் வந்து நிற்பதைப் போல் அவருக்குத் தோன்றும். ஆனால் அப்படித் தோன்றுவதிலும் அர்த்தம் ஏதும் இருப்பதாக அவர் உணரவில்லை. மேகக் கற்றைகள் முடிகிற இடத்தின் கோடுகளில் தங்கத்தை உருக்கிப் பூண் பிடித்தாற்போல் கதிரொளி படர அந்தச் சிகரம் பொன் மலையாய்ப் பிரகாசிக்கிற கார் காலத்து மாலைகளில் அதை விடப் பிரகாசமான நிறத்தோடு அவருடைய காதலி அங்கே வந்து அதன் உச்சியில் சிரித்தபடி நின்றுகொண்டிருப்பாள். அதற்கும் அர்த்தமில்லை. விஷயமே கற்பனையாக இருக்கும்போது சத்தியமான அர்த்தம் எப்படி அதிலிருந்து பிறக்க முடியும்? அந்தச் சிகரத்தின் உச்சியிலிருந்து தேவலோகம் மிகவும் சமீபமோ என்று இந்த நாற்பத்தேழாவது வயதில் பதின்மூன்று வயதுப் பையனின் நினைவு அவருக்கு வருவதுண்டு. அந்த நினைவுக்கும் அர்த்தமிருக்காது. 'எமரால்ட்' என்ற வார்த்தையின் அர்த்தத்தைக் கண்டு அநுபவித்தபோது பதினேழு வயதில் முதிர்ந்த பக்குவமான கற்பனை அவருக்கு ஒரு காலத்தில் வந்ததுபோல் இப்போது நாற்பத்தேழாவது வயதில் பதின்மூன்று வயதுப் பிள்ளைத்தனமான கற்பனை வருகிறது. பக்குவமும் முதிர்ச்சியும் இல்லாமல் குழந்தை நினைப்பாக வருகிறது. ஒன்றும் உடுத்துக்கொள்ளாமல் ஒன்றும் புனைந்து கொள்ளாமல் குழந்தை வருவதுபோல் தன் மேனியோடு வருகிறது. தன் மேனியோடு வருகிற கற்பனைக்கு அர்த்தம் இருக்க முடியாதுதான். பிரேஸிலில் இறந்துபோன வில்லி வோட் ஹவுஸ் நீலகிரியில் வந்து தோன்றுவதற்கு அர்த்தம் ஏது?*

யட்சன் தன் காதலிக்கு மேகத்திடம் தூது சொல்லியனுப்பியதாகக் காளிதாசன் பாடியிருப்பதுபோல் அந்தச் சிகரத்தின் நுனியில் வந்து கூடுகிற பரிசுத்தமான மேகங்களிடம் தேவலோகத்திலே போய்ச் சொல்லும்படி லில்லி வோட் ஹவுஸுக்கு ஏதாவது சொல்லி அனுப்பவேண்டும்போல் அவருக்குத் தோன்றும். ஆனால் மறு கணமே அப்படிச் செய்ய நினைப்பதில் அர்த்தமில்லை என்று புத்தி மேலெழுந்து அவரை அடக்கிவிடும்.

அந்தச் சிகரம் இருக்கிறதே; அது ஒவ்வொரு பருவ காலத்தில் ஒவ்வொரு விதமாக நிறம் மாறி அழகு காட்டும். கரு நீலக் கவர்ச்சி ஒரு சமயம், கரும் பசுமைக் கவர்ச்சி ஒரு சமயம். வயலட் மை - அதாவது காப்பிங் பென்சிலை நீரில் குழப்பினாற் போன்ற நிறத்தோடு கூடிய கவர்ச்சி ஒரு சமயம், சாம்பல் நிறங்கலந்த பசுமை ஒரு சமயம். இன்னும் வார்த்தைகளால் சொல்ல முடியாத எத்தனை எத்தனையோ நிறச் சேர்க்கைகள் அந்தச் சிகரத்தின் பருவகாலத் தோற்றங்களிலிருந்து தான் நிறங்களைப் பற்றிய நினைப்பே அவருக்கு இன்னும் மறந்துவிடாமல் இருந்தது.

பளீரென்று வயலெட் மை உருகி வழிவதுபோல் அந்தச் சிகரம் காட்சியில் தென்படுகிற சில நாட்களில் எப்போதோ ஏதோ ஆங்கிலப் புத்தகத்தில் படித்திருந்த ஒரு காதல் கவிதையிலிருந்து இரண்டே இரண்டு வார்த்தைகள் மட்டும் அவருக்கு நினைவு வரும். அதில் அந்தப் பெண்ணின் இதழ்களை வருணிக்க ‘ஸில்க்கன் லிப்ஸ்’ பட்டுமயமான உதடுகள் என்ற பதங்களை அதைப் பாடிய கவி பயன்படுத்தியிருந்தான். அந்தப் பதங்களின் அர்த்தம் அவருக்கு நினைவு வருகிற விநாடிகளில் அந்தச் சிகரத்தின் உச்சியில் மிக நளினமாய் மடிந்து பனி முத்துப் புரளும் இரண்டு செம்பட்டு ரோஜாப்பூவின் இதழ்கள் தோன்றிச் சிறிது சிறிதாக வளர்ந்து அந்த இடத்தில் லில்லிவோட் ஹவுஸ் எழுந்து உருவாகி நிற்பாள். அந்தத் தோற்றம் மறைந்தவுடன் அந்த வார்த்தைகள் அந்த நினைப்பு யாவும் அர்த்தமின்றி மறைந்துவிடும். கடைசியில் புஜங்கராவும் அவருடைய அந்தச் சிகரமும்தான் அர்த்தமில்லாத வார்த்தைகளாய் அங்கே மீதமிருப்பார்கள்.

இனிமேலும் லில்லிவோட் ஹவுஸைப் பற்றி நினைப்பதே அசட்டுத்தனமல்லவா? அவள்தான் இன்றைக்குப் பதினாறு வருடங்களுக்கு முன்பே கார் விபத்தில் மாண்டுபோய் விட்டாளே? பதினாறு வருடங்களாக ஒரே பெண்ணை நினைத்துக் கொண்டிருப்பது பெரிய காரியம்தான். அதுவும் அவள் இறந்துபோன பின்பும்? மனிதர்களிலும் இராமர்கள் இருக்கிறதைத்தானே காட்டுகிறது இது! வாழ்நாள் முழுதும் ‘பிற மாதரைச் சிந்தையாலும் தொடேன்’ என்று ஒரே பெண்ணைத் தவிர வேறு யாரையும் நினைக்காததனால்தான் இராமனுக்குக் காவியப்பெருமை..அப்படி நினைத்து விட்டதுதான் இராவணனுக்குச் சிறுமை. புஜங்கராவ் எந்தக் காவியத்துக்கும் நாயகனாவதற்கு விரும்பவில்லை... பிரேஸிலில் லில்லிவோட் ஹவுஸுக்கு நாயகனாக இருந்தபோதே தாம் ஒரு நடமாடும் காவியத்துக்கு நாயகனாக இருந்ததாகத்தான் அவர் எண்ணிக் கொண்டிருந்தார். தம்முடைய வாழ்க்கையில் அவர் ஒரே ஒரு முறைதான் மிகச்சிறந்த காவியத்தை அனுபவித்திருக்கிறார். பொன் அவிழ்ந்து கொட்டுகிறாற்

போன்ற நிறத்தில் கொடியுடலும், சுருண்ட கேசமும், பட்டுச் செவ்விதழ்களும், முத்துப் பல்வரிசையுமாக லில்லி வோட்ஹவுஸ் என்ற பெண் அவரைக் காதலித்த சமயம்தான் அது. அவள் இருந்தவரைதான் அந்தக் காவியானுபவத்துக்கு அர்த்தமும் இருந்தது. இப்போது நினைவுகள் மட்டுமே இருந்தன. அவற்றுக்கு எந்த அர்த்தமும் இருந்ததாகச் சொல்ல முடியாது. அதைப் போலவே ஒரு காலத்தில் எமரால்டு என்ற வார்த்தைக்குக் காவியமயமாக அவர் கண்ட அர்த்தமும் இப்போது அவருக்கு மறந்தே போய்விட்டது. ஆனால் அந்தக் கருநீலப் பச்சை மலைவெளி இன்றும் அப்படியே மறையாமல் இருக்கிறது. ஆம்! அந்த மலைகளைத் தூரத்திலிருந்து பார்க்கும் போது அவற்றில் நிச்சயமாக ஒரு நிறம் தெரியவில்லை.கருமை, நீலம், பசுமை மூன்றும் கலந்து மொத்தத்தில் ஏதோ ஒரு நிறமாகத் தெரிகின்றன. அது கவர்ச்சியாயிருக்கிறது. ஏதோ ஒரு வகையில் அழகாகவும் இருக்கிறது.

புஜங்கராவைப் பொறுத்தமட்டில் என்றோ ஒரு நாள் அது கவர்ச்சியாயிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். இப்போது அந்தக் கவர்ச்சியின் அர்த்தம் அவருக்குப் புரியவில்லை. வார்த்தைகளின் அர்த்தத்துக்கும் மனிதனுடைய வயதுக்கும் ஏதாவதொரு நெருங்கிய சம்பந்தமிருக்கிறதோ என்னவோ? பதினைந்து வயது வரை அகராதியில் சொல்லியிருக்கிற அர்த்தந்தான் தெரிகிறது. நாற்பது வயது வரை அனுபவங்களின் அர்த்தந்தான் தெரிகிறது. அதற்கப்புறம் எதிலுமே அர்த்தமிருப்ப தாகத் தெரிவதில்லை. பூக்களின் மணத்தைப்போல் மணத்தைச் சுமந்து கொண்டிருந்த பொருள் வாடிக் கசங்கிய பின் ஒன்றுமில்லாமற் போவதுதான் வார்த்தைகளின் அர்த்தமோ என்னவோ?

புஜங்கராவின் வாழ்க்கை எத்தனையோ காரணங்களால் அர்த்தமிழந்து அல்லது அர்த்தமழிந்து போயிருக்கிறது. கடைசியில் அது நிரந்தரமாகவே அர்த்தமற்றுப் போய்விட்டது. இனி அதிலிருந்து அர்த்தம் பிறவாது. லில்லி வோட்ஹவுஸின் சாவுக்குப் பிறகு அவருடைய வாழ்வில் அவள் எந்த இடத்தை நிரப்பி அர்த்தமளித்துக் கொண்டிருந்தாளோ, அந்த இடமே அர்த்தமற்றுப் போய்விட்டது. அவர் தாய்நாடு திரும்பிய நாலைந்து ஆண்டுகளில் தகப்பனார் மூப்பினால் மரணமடைந்துவிட்டார். தகப்பனாருடைய மரணத்துக்குப் பின்பு அவருடைய தாயும் அதிக நாட்கள் இருக்கவில்லை. புஜங்கராவின் சகோதரிகளில் மூத்தவள் தெற்குக் கனராப் பகுதியில் ஏதோ ஓர் ஊரில் கணவனோடு இருந்தாள். அவள் கணவன் ஒரு தாசில்தார். இளைய சகோதரி மைசூரில் கணவனோடு இருந்தாள். அவளுடைய கணவனுக்கும் ஏதோ பெரிய உத்தியோகம்.

புஜங்கராவ் மட்டும் அப்படியே இருந்துவிட்டார். அவரிடமிருந்து தீபாவளி தவறாமல் இரண்டு சகோதரிகளுக்கும் முழுசாக ஆயிரம் ரூபாய்க்குச் 'செக்' போகும். அவர்களும் எப்போதாவது கோடைக்காலங்களில் ஊட்டிக்கு வருகிற சாக்கில் தமையனுடன் எமரால்ட் எஸ்டேட்டில் இரண்டு மூன்று வாரங்கள் தங்கள் தங்கள் கணவரோடு வந்து தங்கிவிட்டுப் போவார்கள். தமக்கு இரண்டு சகோதரிகள் இருக்கிறார்கள் என்பதை நினைத்துக் கொள்ள ஒரு சந்தர்ப்பமாக அவர்களுடைய தங்குதலைப் புஜங்கராவ் எண்ணிக் கொள்வார். அதற்குமேல் அதிகமான அர்த்தம்

ஏதும் அவர்களுடைய வரவினால் அவருக்குப் புரிந்ததில்லை. புரிந்ததாக அவர் உணர்ந்ததும் இல்லை. அவர்கள் ஊர் திரும்பி விட்டால் வழக்கம்போல் அந்த நீலச் சிகரத்தின் நுனியோடு அவருடைய நாட்களும் நினைவுகளும் முடிந்துவிடும். எப்போதாவது மிஸ்டர் சார்ல்வுட் 'வாட் ஆர் யூ லுக்கிங் தேர்?' என்று கேட்டுக்கொண்டே புஜங்கராவின் பங்களாவுக்குள் நுழைந்து அவர் தருகிற தேநீரைக் குடித்துவிட்டு அவரையே சோம்பேறி என்று திட்டிய பின் விடை பெற்றுக்கொண்டு வாக்கிங் போய்விடுவது வழக்கம். வருடக் கணக்கில் ஒரே பங்களாக் காம்பவுண்டை விட்டு வெளியேறாமல் இருக்கிற மனிதனைப் பார்த்து யாருக்குத்தான் அருவருப்பு ஏற்படாது? எமரால்ட் எஸ்டேட்டின் புரொப்ரைட்டர் ஒரு பைத்தியம் என்ற தீர்மானத்தை மிஸ்டர் சார்ல்வுட் மார்டின் நீண்ட நாட்களுக்கு முன்பே செய்துகொண்டு விட்டாலும் அந்த மலைக் காட்டில் 'குட்மார்னிங் குட்மார்னிங்' சொல்லிக் கொள்வதற்கு அந்த ஒரு பைத்தியமாவது மீதமிருக்கிறதே என்று திருப்திப்படவும் இடமிருந்தது. மிஸ்டர் ராவ் இல்லாவிட்டால் காலையில் எழுந்தவுடன் நிலைக் கண்ணாடியில் தம்முடைய உருவத்தையே, திரும்பிப் பார்த்துத் தமக்குத் தாமே குட்மார்னிங் சொல்லிக்கொள்ளும்படி ஆகிவிடுமோ என்ற பயம் சார்ல்வுட்டுக்கு உண்டு. அதனால்தான் எப்போதாவது வாக்கிங் புறப்படுகிற சமயத்தில் 'புஜங்கராவ் நிச்சயமாக வாக்கிங் வர மாட்டார்' என்று தெரிந்திருந்தும் அவரை அழைக்க வருவதுபோல் ஒரு நடை தலையைக் காட்டி விட்டுப் போவார் மிஸ்டர் சார்ல்வுட். 'வாட் ஆர் யூ லுக்கிங் தேர்?' என்ற கேள்வியோடு உள்ளே நுழைந்த மூன்றாவது நிமிஷத்தில் தேநீர்க் கோப்பையைக் கீழே வைத்துவிட்டு, 'ஐ ஆம் டேக்கிங் லீவ் மிஸ்டர் ராவ்' என்று புறப்பட்டுவிடுவார் துரை. அதற்கு மேல் அங்கு நிற்கப் பொறுமை இருக்காது அவருக்கு.

'நான் ஒரே திசையை அலுக்காமல் பார்ப்பதைக் கேலி செய்கிற இந்த வெள்ளைக்காரன் என்னைப் பார்க்கும்போதெல்லாம் ஒரே கேள்வியையே அலுக்காமல் திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருக்கிறானே?' - என்று எண்ணிச் சில சமயங்களில் புஜங்கராவ் மனத்துக்குள் சிரித்துக் கொள்வதுமுண்டு. அதுவும் அர்த்தமில்லாத சிரிப்புதான். எப்போதாவது பங்களாவின் முன் கூடத்தில் மாட்டியிருக்கிற லில்லிவோட் ஹவுஸின் புகைப்படம் - அவள் கை நிறைய மலர்க் கொத்துக்களை ஏந்திக்கொண்டு தம்முடன் நிற்கிற மணக்கோலப் படம் அவரைப் பார்த்துச் சிரிப்பது போல் ஒரு பிரமை உண்டாகும். அப்போது எதிரே உயிரோடு நின்று சிரிக்கிற ஒருவருக்குப் பதில் சிரிப்புச் சிரிப்பது போல அவரும் பதிலுக்கு அர்த்தமில்லாமல் சிரிப்பார். அவருடைய உதடுகளில் அந்தச் சிரிப்பின் கடைசிச் சுவடு மறைவதற்குள் கண்கள் திரும்பி அந்தச் சிகரத்தை பார்க்கத் தொடங்கி விடுவது உண்டு.

இப்படியே நாட்களும் வாரங்களும், மாதங்களும், வருடங்களும் கழிந்தன. ஒரு விதமான அர்த்தமின்றிக் கழிந்தன.

* * *

நீலகிரியின் திருவிழாப் பருவமாகிய கோடைக்காலம். சித்திரை மாதத்துப் பௌர்ணமி. எமரால்ட் எஸ்டேட் நிலா ஒளியில் பனி படர்ந்த சாம்பல் நிற நீலத்தில் குளித்து மின்னுகிறது. புஜங்கராவ் அந்தச் சிகரத்தைப் பார்த்தபடி பங்களா முகப்பில் உட்கார்ந்திருந்தார். சூடாக டீ குடிக்க வேண்டும் போலிருக்கிறது அவருக்கு. வேலைக்காரன் லீவு வாங்கிக் கொண்டு ஊருக்குப் போயிருந்தான். அவனுக்குச் சமீபத்தில்தான் கல்யாணமாகி யிருந்தது. சிகரெட் பாக்கெட்டுகளை எல்லாம் தேடிச் சோதனை போட்டாயிற்று. எல்லாம் காலி. தேநீரோ, சிகரெட்டோ, எது வேண்டுமானாலும் ஐந்தாறு மைல் போகவேண்டும். அப்போது நிலா ஒளியில் அந்தச் சிகரத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதை விட்டு விடவும் அவருக்கு மனமில்லை. சிகரெட்டோ, தேநீரோ குடிக்கவும் ஆசையாயிருந்தது.

நீண்ட நாட்களுக்குப் பின் புஜங்கராவுக்கு விநோதமானதொரு விருப்பம் உண்டாயிற்று. பதினைந்து வருடங்களுக்குப் பின்பு முதல் முறையாகத் தாமே டிரைவ் செய்யக் காரை எடுத்தார் அவர். நிலா ஒளியில் சாம்பல் நீலம் பூத்துக் கிடந்த அந்த மலை வீதியில் காரைச் செலுத்தியபடி தம்முடைய இலட்சிய சிகரத்தைப் பார்த்துக் கொண்டே புறப்பட்டார் அவர். மின் விளக்குகள் புள்ளி புள்ளியாக மின்னுவதிலிருந்து அந்தச் சிகரத்தின் கீழேயும் ஓர் ஊர் இருப்பதை அவரால் அனுமானம் செய்ய முடிந்தது. அவ்வளவு மின்சார விளக்குகள் உள்ள இடத்தில் சிகரெட்டும் தேநீரும் கிடைக்கிற கடை ஒன்றாவது இருக்க வேண்டுமென்பது அவர் எண்ணம். எமரால்டு எஸ்டேட்டிலிருந்து வேறு திசையில் மிகவும் பக்கத்திலேயே ஊர்கள் இருந்தன. ஆனால் அங்கெல்லாம் போக அவருக்கு மனம் இல்லை. அவருடைய நோக்கம் இரண்டு பயன்களைக் கொண்ட ஒரே நோக்கம். கடைக்குப் போக வேண்டும். அந்தச் சிகரத்தையும் பார்த்துக்கொண்டே போக வேண்டும். நிலவைத் தன்னுடைய உச்சி நுனியில் பிடித்துச் சூட்டிக்கொண்டிருப்பதுபோலப் பரிபூரணமான அழகுடன் தெரிகிற அந்தச் சிகரத்தைப் பார்ப்பதிலிருந்து தமக்குச் சொந்தமான காலத்தில் விநாடி நேரம் கூட வீணாகாமல் இருக்க வேண்டும் என்பதுதான் அவருடைய ஆசை. சிவலிங்கத்தைச் சுற்றிக் கொண்டிருக்கிற பாம்பு மாதிரி மலை ரஸ்தா ஏறியும் இறங்கியும், வளைந்தும், நெளிந்தும் முடிவில்லாமல் போய்க்கொண்டே யிருந்தது. சிகரமும் அருகில் வருவதாயில்லை.

ஒவ்வொரு நாளும் தாம் வழக்கமாகப் பார்க்கிற இடத்திலிருந்து அந்தச் சிகரம் எவ்வளவு தொலைவிலிருக்கிறது என்று புஜங்கராவினால் புரிந்துகொள்ள முடிந்ததில்லை. ஆனாலும் அவர் போகிற வழியிலிருந்து பார்வையில் அது தெரிந்துகொண்டுதான் இருந்தது. அது பார்வையிலிருந்து மறைந்திருந்தால் அந்தக் கணமே அங்கே காரை நிறுத்தி மறுபடியும் அது பார்வைக்குத் தெரிகிற வழியாகக் காரை ஓட்டிக்கொண்டு போயிருப்பார் புஜங்கராவ்.

இரண்டு கைகளும் நிறையப் பல நிற மலர்க் கொத்துக்களை ஏந்திக் கொண்டும் அந்தச் சிகரத்தின் மேலுள்ள நிலாவையே குடையாகப் பிடித்துக்கொண்டும் லில்லிவோட் ஹவுஸ் வந்து அதன் நுனியில் நின்றுகொண்டு சிரிக்கிறாள். அதே

காட்சியை இன்னும் ஒரு கணம் பார்க்க வேண்டுமென்றும் அப்புறமும் முடிவற்ற பல கணங்கள் அதையே தொடர்ந்து பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்றும் புஜங்கராவ் எல்லையற்றுப் பொங்கும் ஆசையோடு தவிக்கத் தொடங்கிய விநாடியில் சாலை அந்தச் சிகரம் பார்வையிலிருந்தே மறையும்படியானதொரு திருப்பத்தில் திரும்பிவிட்டது.

'சீ! சீ! இதென்ன அர்த்தமில்லாத பாதை' என்று சொல்லிடங்காத வெறுப்போடு கூறிக்கொண்டே புஜங்கராவ் ஸ்டியரிங்கை ஒடித்தார். தாம் அதைச் செய்தது மட்டுமே அவருக்குத் தெரியும்.

* * *

**ப**னிக் கோயிலான நீலகிரியில் பொழுது புலர்ந்தது. சூரியன் அந்தச் சிகரத்துக்கு மேலேயும் வந்து 'எமரால்ட்' என்ற வார்த்தைக்கு நிதரிசனமான அர்த்தத்தை நிருபணம் செய்து மரகதப்பச்சையை மினுக்கிக் கொண்டிருந்த போது, 'குட் மார்னிங் மிஸ்டர் ராவ்!' என்று கூறியபடியே வழக்கமாகக் கேட்கிற அடுத்த கேள்வியின் முதற்படியாக 'வாட் ஆர் யூ....?' என்று தொடங்கிய சார்ல்வுட் எதிரே காலியாயிருந்த ஈஸிசேரைப் பார்த்துத் திகைத்தார். திகைப்போடு திரும்பி அந்தச் சிகரத்தைப் பார்த்தார். அது அங்கேதான் இருந்தது. எமரால்ட் எஸ்டேட் பங்களாவின் கூர்க்கா ஓடி வந்து தனக்குத் தெரிந்த அறைகுறை ஆங்கிலத்தில், முதலாளி முந்திய நாள் இரவு ஒரு மணிக்குக் காரைத் தாமே டிரைவ் செய்துகொண்டு புறப்பட்டுப் போனபோது தான் மெயின் கேட் கதவுகளைத் திறந்துவிட்டதாகச் சொல்லி, அவர் இதுவரை திரும்பவில்லை என்பதையும் கூறி அவர் சென்ற சாலையின் திசையையும் காண்பித்தான்.

சார்ல்வுட் உடனே அந்தக் கூர்க்காவையும் ஏற்றிக் கொண்டு தம்முடைய ஜீப்பில் அதே சாலையில் விரைந்தார். நீண்ட தொலைவு சென்ற பின்பு சாலை திரும்பி ஒரு பயங்கரமான பள்ளத்தாக்கை ஒட்டிக் கீழிறங்கிச் செல்கிற போது ஓர் இடத்தில் ஜீப்பை நிறுத்தி இறங்கி முகம் கோரமாகி ஆயிரம் கோணலாக வக்கரித்துக் கொள்ளும்படி போக 'வாட் எ பிட்டி லைப்...' என்று கீழே பார்த்து உச்சுக்கொட்டினார் சார்ல்வுட் மார்ட்டின். அதற்குமேல் அவருக்குச் சொல்ல வரவில்லை. வார்த்தைகளும் கிடைக்கவில்லை. சொல்லியிருந்தாலும் அர்த்தமுள்ள சொற்களாக அப்போது அவருக்குக் கிடைத்திருக்காது.

'இன்னதென்று அர்த்தம் தெரியாமலே சில உயர்ந்த வார்த்தைகளைக் காதலிப்பது போல் அந்தச் சிகரத்தையும் தாம் காதலிப்பதாக' எப்போதோ ஒரு சமயம் புஜங்கராவ் கூறியது சார்ல்வுட்டுக்கு நினைவு வந்தது. புஜங்க ராவ் காதலித்த அந்த அர்த்தமில்லாக் காதலுக்கு இன்று ஏதோ ஒரு வகையில் அர்த்தம் பிறந்துவிட்டதாகத் தோன்றியது.

ஆனால் அந்த அர்த்தம் பிறந்தபோது அதற்குரியவர் இறந்திருக்க வேண்டாம் என்று எண்ணி அநுதாபப் பட்டார் சார்ல்வுட்.

**(கல்கி, 11.1.1962)**

## 69. சத்தியத்தின் பிரதிநிதியாய்

கிளியோபாத்ராவின் மூக்கு இன்னும் சிறிது நீண்டோ குறைந்தோ அமைந்திருந்தால் ஒரு சாம்ராஜ்யத்தின் வரலாறே மாறிப் போயிருக்கும் என்று சொல்கிறார்கள் அல்லவா?

மல்லிகை நகர் டாக்டர் சிவசங்கரன் எப்.ஆர்.ஸி.எஸ். அவர்களின் மகள் வசந்தாவுக்கு இப்போது வாய்த்திருந்த கண்கள் இன்னும் சிறிது அகலமாகவோ, குறுகியோ அமைந்திருந்தால் ஒரு நகரத்தில் ஒரு பெரிய கல்லூரியின் ஆயிரத்து இருநூறு மாணவர்களுக்கு வாழ்க்கை சுவாரஸ்யமில்லாமல் போயிருக்கும். கிளியோபாத்ரா விவகாரத்தைப் போல இது ஒரு சாம்ராஜ்யத்தைப் பாதிக்கக் கூடிய விஷயமில்லையாயினும் பல பேருடைய ரசிகத் தன்மைக்கு நஷ்டத்தை உண்டாக்கக் கூடியதாயிருக்கும் இது. உடனே நீங்கள் இந்திய அரசாங்கத்தின் டூரிஸ்ட் - அலுவலக வெளியீட்டுப் பிரதாபங்களையோ, ரோடு 'மேப்'பையோ எடுத்து வைத்துக் கொண்டு மல்லிகை நகரத்தைத் தேடிக்கொண்டிருக்க வேண்டாம்!

மல்லிகை நகர் என்பது ஒரு பெரிய நகரத்தின் 'கண்டோன்மெண்ட்' பகுதிக்குப் பெயர். பின் என்ன? 'அரிஸ்டாக்ரடிக்குகள்' வாழ்கிற இடத்துக்கு அரளி நகர் என்றும் துளஸி நகர் என்றுமா பேர் வைத்துக் கொண்டிருப்பார்கள்? பேரே மணக்க மணக்க அமைய வேண்டும் என்று இப்படி வைத்திருந்தார்கள். இதைத் தவிர இந்தப் பேருக்கும் அந்தக் கண்டோன்மெண்டுக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது.

டாக்டர் சிவசங்கரன் மலையாளி. பாரதப் புழாவின் கரையில் திருச்சூருக்கும் பாலக்காட்டுக்கும் நடுவில் ஏதோ ஒரு சிறிய கிராமத்தைப் பூர்வீகமாக உடையவர் அவர். ஒலவக்கோட்டில் புறப்பட்டால் கொச்சி எக்ஸ்பிரஸில் இறங்கி அந்த ஊருக்குப் போகும்படி அருகில் இருக்கிற ஸ்டேஷன் எதுவோ அதில் கொச்சி எக்ஸ்பிரஸ் நிற்காது என்கிற அளவுக்குப் புகழில்லாத ஊர் அது. அதற்குப் புகழில்லை என்பதற்காகச் சிவசங்கரன் கவலைப்பட்ட காலம் மலையேறி விட்டது. சிவசங்கரனாக இருந்தவரை அவர் ஊரைப் பற்றிக் கவலைப்பட்டார். சிவசங்கரன் எப்.ஆர்.ஸி.எஸ். ஆன பிறகு தம்முடைய பேரைப் பற்றியே அவர் அதிகமாக்க் கவலைப்பட வேண்டியிருந்ததனால் ஊரைப் பற்றிக் கவலைப்படுவதை விட்டு விட்டார். ஒரே சமயத்தில் பல காரியங்களுக்குக் கவலைப்பட்டால் 'ஹிஸ்டீரியா' போன்ற வியாதிகள் எல்லாம் வரலாம் என்று அவருடைய எம்.பி.பி.எஸ் மூளைக்கு நன்றாகத் தெரியும்.

ஆனால் பாரதப் புழையாற்றின் கரையிலிருந்து நானூறு மைலுக்கு இப்பால் உள்ள தமிழ்நாட்டு நகரத்திலேயே பிறந்து தமிழ் நாட்டுச் சூழ்நிலையிலேயே வளர்ந்த

அவருடைய திருக்குமாரிக்குச் சதா காலமும் பாரதப் புழையாற்றின் கரையில்தான் மனம் இருந்தது. அவளுடைய தாயார் அவளை அப்படிப் பைத்தியமாய் ஆக்கியிருந்தாள். அந்த வீட்டில் தாயும் மகளுமாகப் போட்டி போட்டுக் கொண்டு செய்கிற காரியம் ஒன்று வாரா வாரம் உண்டு. தபாலில் கிழமை தவறாமல் வந்து சேர்கிற மலையாள வாரப் பத்திரிகை படிக்கிற காரியம்தான் அது.

கலைக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த வசந்தா ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையும் கல்லூரியில் கடைசிப் பாட வேளைக்கு 'டிமிக்கி' கொடுத்து விட்டு வீட்டுக்கு வந்துவிடுகிற அளவு வெள்ளியன்று மாலைத் தபாலில் வந்து சேர்கிற மலையாள வாரப் பத்திரிகை அவளைக் கிறுக்குப் பிடித்தவளாக ஆக்கியிருந்தது. தாயும், மகளும் படித்து முடித்த பிறகு மூன்றாவது பைத்தியமாகச் செல்வாக்கில்லாத கிறுக்கு ஒன்றும் அந்த வீட்டில் இருந்தது. கொச்சம்மணி என்று பதினாறு பதினேழு வயதில் வேலைக்காரக் குட்டி ஒருத்தி அந்த வீட்டில் இருந்தாள். வீட்டு வேலைக்கும் டாக்டருடைய ஆஸ்பத்திரி வேலைக்கும் சேர்ந்து பயன்படுவதற்காகப் பத்துப் பன்னிரண்டு வயதிலேயே மலையாளத்திலிருந்து வரவழைத்து வைத்துக் கொள்ளப்பட்ட வேலைக்காரி அவள். நானூறு மைல் தொலைவுக்கு அப்பால் வந்தும் மண் அபிமானத்தைவிட முடியாமல் சில அரிய ஆபரேஷன் கேசுகளாக அவரிடம் தேடிவந்து சேரும் நோயாளிகளுக்கு எடுபிடி வேலையாளாகப் பயன்படுகிற நாட்கள் தவிர மற்ற நாட்களில் கொச்சம்மணி வீட்டு வேலைக்காரிதான். கொச்சம்மணி என்கிற வேலைக்காரக் குட்டிக்கு இந்த உலகத்தில் ஆடம்பரமான ஆசைகளோ, அந்தரங்கமான அபிலாஷைகளோ எதுவும் கிடையாது. தன்னுடைய உயிருக்கு அடுத்தபடியாகச் 'சுதாகரன்' எழுதும் கவிதைகளும் மலையாளக் கதைகளும் அவளுக்குப் பிடிக்கும். வெள்ளிக்கிழமையைத் தவிர இருக்கிற வாரத்தின் மற்ற ஆறு நாட்களிலும் அவள் எதற்காக உயிர் வாழ்கிறாள் என்றால் வெள்ளிக்கிழமையை எதிர்பார்த்து உயிர் வாழ்கிறாள் என்று பகவதி சாட்சியாய்ச் சத்தியம் செய்யலாம். அந்தப் பத்திரிகை அவளுடைய கைக்குக் கிடைக்கும்போது வெள்ளிக்கிழமை இரவு ஒன்பதரை மணிக்கு மேலாகி விடும். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் அது தன் கைக்குக் கிடைக்கிற விநாடி எதுவோ அதை அவள் வாழ்த்தியிருக்கிறாள். மகள் கல்லூரியிலிருந்து திரும்புவதற்குள் பெரியம்மா அந்தப் பத்திரிகையைப் படித்துக் கொண்டிருப்பார்கள். மகள் திரும்பிய பின் அவளுடைய கைகளிலிருந்து அந்தப் பத்திரிகை விடுதலையடைந்து ஹாலில் உள்ள மேஜைக்கு வந்து சேர்வதற்கு இரவு ஒன்பது மணி ஆகும். அப்புறம் டாக்டர் அதை எடுத்து அலட்சியமாகவும் மேலோட்டமாகவும் ஒரு தரம் புரட்டிப் பார்த்து விட்டு எறிவதற்குக் கால் மணிக் கூறோ அரை மணிக் கூறோ ஆகும். அப்புறம்தான் அந்தப் பத்திரிகையின் உண்மையான இரசிகையின் கைகளுக்கு - அதாவது முதல் வரியிலிருந்து கடைசிப் பக்கத்தின் கடைசி வரி வரை படித்து முடிக்கப் போகிற இரசிகையின் கைகளுக்கு அது போய்ச் சேரும். பத்து வயதுப் பெண்ணாக விற்பனையாகி வந்த அடிமையைப் போல் அவள் அந்த டாக்டர் வீட்டு வேலைக்காரியாகச் சேர்ந்தபின் பாரதப் புழையாற்றின் கரைகளில் உலாவியதில்லை. சுதாகரனின் எழுத்துக்களைப் படிக்கும்போது பல முறை

மானசீகமாகப் பாரதப் புழையின் கரைகளில் கொச்சம்மணி உலாவியிருக்கிறாள். அதிகாலையில் எழுந்து குச்சு வீட்டின் ஓட்டுச் சார்ப்பில் படர்ந்திருக்கும் மரமல்லிகைப் பூக்களைத் தொடுத்துக் கூந்தல் முடிப்பில் வைத்துக் கொண்டு பெட்டியும் கையுமாக ஒலவக்கோட்டுக்கு வந்து மல்லிகை நகரத்துக்கு வருவதற்கு முதன் முதலாக இரயிலேறிய நாள் அவளுக்கு நினைவு வருகிற வேளைகளில் சுதாகரனின் கதைகளும் நினைவு வரும். சுதாகரனின் மலையாளக் கதையை அந்த வாரப் பத்திரிகையில் படிக்கிற நேரத்தில் பாரதப் புழை தான் ஓடிக் கொண்டிருக்கிற இடத்திலிருந்து நானூறு மைல்களைக் கடந்து வந்து அந்த நாழிகையில் அவள் மனத்தில் மட்டுமே ஓடும். அது ஒரு விசித்திரமான அனுபவம். அதை உணர்வதற்குத் தான் கொச்சம்மணியால் முடியும். சொல்வதற்கு வார்த்தைகளே இல்லை.

சுதாகரனுடைய கதைகளையும், கவிதைகளையும் படிப்பதைத் தவிர அவளுக்கு வேறு ஆசைகளே இல்லையென்று சொன்னேன் அல்லவா? அதற்கு அப்பாலும் அவளுக்கு ஒரே ஓர் ஆசை உண்டு. அதுதான் சுதாகரன் என்கிற அந்தக் கவியுள்ளம் படைத்த கதாசிரியனை நேரிலே எப்போதாவது பார்த்துவிட வேண்டும் என்ற ஆசை. அவனுடைய கதைகள் தாய்ப்பாலைப் போல் கொச்சம்மணியின் மனத்துக்கு அவள் பிறந்த நாட்டின் பண்புகளை நினைவூட்டிக் கொண்டேயிருந்தன.

அந்த வாரம் வெள்ளிக்கிழமை வந்த மலையாள வாரப் பத்திரிகையில் சுதாகரன் ஒரு கவிதை எழுதியிருந்தார். அந்த கவிதையின் தலைப்பே அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. 'பாரதப் புழையின் கரையிலே' என்ற தலைப்பில் வெளிவந்திருந்தது அந்தக் கவிதை.

"பாரதப் புழையின் கரையில் குவிந்திருக்கிற மண்ணே! என் கண் பார்வைக்குத் தெரிந்தமட்டில் உனக்கு நிறமில்லை. உனக்கு மணமில்லை. ஆனால் உனக்கு உள்ளே உன்னுடைய கர்ப்பத்தில் ஏதோ விந்தைகள் நிறைந்திருக்கின்றன. இல்லையென்றால் உன் மேல் முளைத்திருக்கும் எல்லையற்ற பூஞ்செடிகளில் இத்தனை நிறங்களில் இத்தனை விதமான மணங்களோடு பூத்திருக்கும் பூக்களுக்கு அவை எப்படிக் கிடைத்தன? ஓகோ! புரிந்தது. அவையெல்லாம் பாரதப் புழை நீரின் பெருமைதான். இந்த நீர்ப் பிரவாகத்தின் வழியே எங்கள் வாழ்க்கையை அழகு செய்யும் மலர்களும், எங்கள் வயிற்றை நிரப்பும் உணவும், எங்கள் பண்பாடுகளும் உருவாகின்றன. நீ பெருகுவதும், குறைவதும், வறண்டு போவதும் எங்களுடைய பருவ காலங்களை மாற்றி மாற்றிப் படைக்கின்றன. உன்னுடைய நீர்ப் பெருக்கில் என்னுடைய மனமும் நினைவுகளும் நித்யமாக நனைந்து கிடக்குமாக! ஒவ்வொரு இந்தியனுடைய உள்ளத்தையும், நினைவுகளையும் கங்கை மானசீகமாக நனைத்துக் கொண்டிருப்பது போல ஒவ்வொரு மலையாளியின் மனத்தையும் அவன் எங்கிருந்தாலும் நீ நனைத்துக் கொண்டிருக்கிறாய்...!" என்று இப்படிப் பொருளமைந்த அந்தக் கவிதையைப் படித்தபோது கொச்சம்மணியின் மனம் பாரதப் புழையிலும் விழிகள் கண்ணீரிலும் நனைந்தன.

'எப்போதாவது பெரிய ஆபரேஷனுக்காகத் தேடி வரும் நாட்டுப்புறத்து மலையாளிகளிடம் பேசிப் பழக மொழி தெரிவதன் காரணமாகவும், வீட்டு வேலை செய்வதற்காகவும் சாப்பாடு துணிமணி தவிர மாதம் முப்பது ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு இந்த உத்தியோகம் பார்க்க வேண்டும் என்று என் தலையில் எழுதியிராவிட்டால் நானும் பாரதப் புழையின் கரையில்தான் திரிந்து கொண்டிருப்பேன். என் உடம்பும் தினம் ஒரு முறையாவது பாரதப் புழையின் நீரில் நனைந்து கொண்டிருக்கும்' என்று இந்தக் கவிதையைப் படித்தபோது சுதந்திர உணர்ச்சி வசப்பட்டு நினைத்துக் கொண்டாள் கொச்சம்மணி. அப்படி நினைத்தபோது பெட்டியும் கையுமாக வந்து ஒலவக்கோட்டுக்கு இரயிலேறிய நாள் அவளுக்கு நினைவு வந்தது. 'பாரதப் புழையின் கரையிலே' என்ற அந்தக் கவிதையைப் பற்றி வீட்டு எஜமானியம்மாளும் அவளுடைய பெண்ணும் மறு நாள் தங்களுக்குள் பேசிக்கொண்டதையும் கொச்சம்மணி தன் இரு செவிகளும் நிறையக் கேட்டாள்.

வசந்தா கெண்டை மீன் புரள்வதுபோல் தன் அழகிய கண்கள் பிறழ முகத்தில் எல்லையற்றுப் பெருகும் உற்சாகம் தென்படத் தன் தாயிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்:

"அம்மா! சுதாகரனின் இந்தக் கவிதையைப் படித்தவுடன் ஆகாயத்தைவிட வேகமாகப் பறக்கக் கூடிய நவீன சாதனம் ஒன்றில் ஏறிப் போய் அப்படியே பாரதப் புழையின் கரையில் குதித்துவிட வேண்டும் போல் இருக்கிறது. 'ஒவ்வொரு இந்தியனுடைய மனத்தையும், நினைவுகளையும், கங்கை மானசீகமாக நனைத்துக் கொண்டிருப்பது போல் ஒவ்வொரு மலையாளியின் மனத்தையும் அவன் எங்கிருந்தாலும் நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய்' என்று பாடியிருக்கிற வரிகளுக்கு மட்டுமே அட்சர லட்சம் கொடுக்கலாம். எனக்கு மட்டும் நோபல் பரிசு கொடுக்கிற அதிகாரம் இருந்தால் அதை இந்தச் சுதாகரனுக்குக் கொடுத்து விடுவேன்" என்று கூறும் போது கிளியோபாத்ராவின் மூக்கைப் போல் அற்புதங்களைச் செய்யவல்ல வசந்தாவின் அழகிய கண்களில் ஆர்வம் ஒளி பெருக்கி நின்றது. ஒரு பெரிய கல்லூரியின் ஆயிரத்து இருநூறு மாணவர்களை ஏங்கச் செய்து கொண்டிருக்கும் அந்த அழகிய கண்கள் சுதாகரனுடைய கவிதைக்காகத் தானே ஏங்குவது கண்டு கொச்சம்மணி வியப்படைந்தாள். பிறந்த பூமியிலிருந்து வெளியேறி எங்கெங்கோ பிழைப்புக்காக வாழும் சராசரி மலையாளியின் நினைவில் இருப்த்து நாலு மணி நேரமும் தாய்த் திருநாட்டின் நினைவு இருக்குமா என்பது சந்தேகம்தான். எங்காவது டீக் கடையிலிருந்து தேங்காய் எண்ணெயில் பெரிய பெரிய பொற்காசுகள் புரளுவது போல நேந்திரங்காய் வறுபடுகிற மணத்தினாலும், ஓணம் பண்டிகையின் போதும் எப்போதாவது மைனாரிட்டியினருக்கும் இரசிகத் தன்மை இருக்கலாம் என்ற சலுகையில் ஏதாவது ஒரு தியேட்டரிலே காலை பத்து மணி ஆட்டமாகக் காட்டப்படும் மலையாள சினிமாவைப் பார்க்கும் போதும், ஜன்ம பூமியின் அரசியல், கலை, இலக்கியக் காற்றில் அழுந்தி வரும் ஏதேனும் ஒரு பத்திரிகையைப் படிக்கும்போதும் பிறந்த தேசத்து நினைவுகள் மனத்தைக் கவ்விக்கொண்டு குமையச்

செய்வது உண்டுதான். கொச்சம்மணி அப்படிப் பலமுறை மனம் குமைந்திருக்கிறாள். அதிகாலையில் எழுந்து நீராடிக் குச்சு வீட்டின் ஒட்டுச் சார்பில் படர்ந்து குண்டு குண்டாகப் பூத்திருந்த மல்லிகைப் பூக்களைத் தொடுத்து ஈரமும் தேங்காய் எண்ணெய் பூசிய பளபளப்புமாகக் கருப்பு 'வெல்வெட்'டைப் போல் வழுக்கிய நீண்ட கூந்தல் முடிப்பில் செருகிக்கொண்டு அவசரம் அவசரமாக ஒலவக்கோட்டுக்கு வந்து இரயிலேறிய வேளையை நினைக்கும் போது கொச்சம்மணி தன் மனத்துக்குள்ளேயே அழுதிருக்கிறாள். பல முறை அப்படி அழுதிருக்கிறாள். படித்த மலையாளியான டாக்டர் சிவசங்கரன் எப்.ஆர்.ஸி.எஸ். அவர்களை விடக் கொச்சம்மணியின் நாட்டுப் பற்று அதிகமாக இருந்தது. டாக்டர் சிவசங்கரன் மலையாளப் பத்திரிகையைப் புரட்டிப் பார்க்கிறார். டாக்டர் சிவசங்கரனுடைய மனைவி மலையாளப் பத்திரிகையில் வருகிற கதைகளையும், கவிதைகளையும் படிக்கிறாள். சிவசங்கரனுடைய மகள் பிறப்பிலிருந்தே தமிழ் நாட்டில் வளர்ந்தும், சுதாகரனுடைய கவிதைக்காக ஏங்குகிறாள்.

ஆனால், கொச்சம்மணியைப் போல் சதா காலமும் அந்த உணர்விலேயே நனைந்து கொண்டிருக்க அவர்களால் முடியவில்லை. டாக்டர், அவர் மனைவி, மகள் இவர்களைப் போலக் கொச்சம்மணிக்கு ஆங்கிலம் தெரியாது. அதே போலக் கொச்சம்மணிக்குத் தெரிந்த பல விஷயங்கள் அவர்களுக்குத் தெரியாது. கொச்சம்மணிக்கு மகாகவி வள்ளத்தோலின் 'சித்திர யோகமும்' 'பால சீதை'யும் நன்றாகத் தெரியும். அவருடைய சாகித்ய மஞ்சரியில் பல பாடல்களை அவள் மனப்பாடம் பண்ணியிருக்கிறாள். குஞ்சுக் குட்டன் தம்பிரானுடைய பாரதத்திலும், குமாரனாசானுடைய 'வீணபூவு'விலும்கூட அவளுக்குப் பரிச்சயம் உண்டு. டாக்டர் சிவசங்கரனுடைய மகள் வசந்தாவோ இவற்றின் பேர்களைக் கூடக் கேள்விப்பட்டிருக்க மாட்டாள்.

டாக்டரின் மகள் இணையில்லாத பேரழகியாக இருக்கலாம். ஆனால், நாட்டுப்பற்றிலும் மொழி அபிமானத்திலும் அவள் தன்னோடு போட்டிபோட முடியாது என்று எண்ணிக் கொச்சம்மணி பல முறை தனக்குள் அந்தரங்கமாகக் கர்வப்பட்டுக் கொண்டிருக்கிறாள். அந்த வீட்டில் அவள் மட்டும் படமுடிந்த கர்வமாக இது ஒன்றுதான் மீதம் இருந்தது.

முதன் முதலாக வசந்தா சுதாகரனுடைய கவிதையைத் தன் தாயிடம் புகழ்ந்ததைக் கேட்டபோதுதான் கொச்சம்மணி தன்னுடைய கர்வத்துக்கும் போட்டி இருப்பதாக ஓரளவு புரிந்துகொண்டாள்.

இதற்கடுத்த மறு வெள்ளிக்கிழமை ஓர் அதிசயம் நடந்தது. பங்களாவின் கீழ்ப்பகுதி முழுவதும் நோயாளிகளின் படுக்கையோடு கூடிய அறைகளாகத் தடுக்கப்பட்டு ஆசுபத்திரியாகவும், மாடி முழுதும் குடியிருப்புக்காகவும் அமைந்திருந்தது. இதனால் ஆசுபத்திரி வேலை உள்ள நாட்களில் கொச்சம்மணி கீழேயும் மற்ற நாட்களில் மாடியிலும் இருப்பாள். தமிழோ ஆங்கிலமோ சிறிதும் பேசத் தெரியாத அப்பட்டமான மலையாளி 'பேஷண்ட்ஸ்' யாராவது வந்தால்தான் அவளுடைய 'சர்வீஸ்' கீழே தேவைப்படும். அன்று அப்படிப்பட்ட 'சர்வீஸ்' எதுவும்

அவளிடமிருந்து தேவையில்லை. ஆனால் பிற்பகலில் தபால் வாங்குவதற்காகக் கொச்சம்மணி கீழே இறங்கி வந்தாள்.

தபாலில் வழக்கத்துக்கு மாறாக ஒரே மலையாள வாரப் பத்திரிகையின் இரண்டு வேறு பிரதிகள் இருக்கவே இன்னொன்று யாருக்காக வந்திருக்கும் என்று அறிவதற்காக முகவரியைப் பார்த்தாள். ஏதோ ஒரு பேரின் கீழே 'டாக்டர் சிவசங்கர மேனன் கிளினிக்' என்று எழுதி வார்டு எண்ணும் தெளிவாகப் போட்டிருந்தது.

அதை அந்த வார்டில் கொண்டுபோய்ச் சேர்த்துவிடுவதற்காகப் போன கொச்சம் மணி அங்கேதான் அந்த அதிசயத்தைச் சந்தித்தாள். வார்டுக்குள் நுழைந்தவுடன் நீங்கள்தான் இந்த விலாசத்துக்கு உரியவரா என்று கேட்பதற்காகப் பேரைப் படித்தவள், 'சுதாகரன் நாயர்' என்று படித்துவிட்டு மனத்தில் சந்தோஷமானதொரு சந்தேகத்தோடு எதிரே கட்டிலில் படுத்திருந்த இளைஞரின் முகத்தைப் பார்த்தாள்.

அந்த இளைஞர் புன்முறுவலோடு கை நீட்டி அவள் கொடுத்த பத்திரிகைப் பிரதியை வாங்கிக் கொண்டார். அதைக் கொடுத்த பின்பும் நகராமல் கொச்சம்மணி அங்கேயே நின்றாள். தன் மனத்திலிருப்பதை எப்படிக் கேட்பது என்று தெரியவில்லை அவளுக்கு. அந்த இளைஞரின் முகத்தைப் பார்ப்பதற்கும் அவளுக்கு நாணமாக இருந்தது.

"இந்தப் பத்திரிகையின் சென்ற இதழில் வந்த 'பாரதப் புழையின் கரையிலே' என்ற கவிதையைப் படித்தீர்களோ?" என்று வேறு விதமாகத் தன் கேள்வியை அவரிடம் கேட்டாள் கொச்சம்மணி.

அவளுடைய இந்தக் கேள்வியைச் செவியுற்றவுடன் சாய்ந்தாற் போல் படுத்திருந்த அந்த இளைஞர் நிமிர்ந்து உட்கார்ந்தார். பதில் ஒன்றும் கூறாமல் புன்முறுவல் பூத்தபின், "ஏன், அந்தக் கவிதையில் ஏதாவது விசேஷம் உண்டோ?" என்று அவளைக் கேட்டார். கொச்சம்மணிக்கு நெஞ்சு வேகமாக அடித்துக்கொண்டது. ஆனாலும் சமாளித்துக்கொண்டு பதில் கூறினாள். "அந்தக் கவிதையே ஒரு விசேஷம்தான்! அதைப் படித்த விநாடிகளை நான் வாழ்த்தினேன். அதைப் படைத்த கைகளில் மணம் நிறைந்த பூக்களை அள்ளிச் சொரிய வேண்டுமென்று ஆசைப்பட்டேன்" என்று கொச்சம்மணி கூறியவுடனே படுக்கையில் உட்கார்ந்திருந்த அந்த இளைஞர் கையிலிருந்த பத்திரிகையைக் கீழே வைத்துவிட்டு ரோஜாப் பூவின் உள்ளிதழ்போல் வெண் சிவப்பு நிறமான தன் உள்ளங்கைகள் இரண்டையும் திடீரென்று அவளுக்கு முன்னால் நீட்டி, "பூக்களைச் சொரியுங்கள்" என்று கூறிச் சிரித்தார்.

அந்தக் கணத்தில் கொச்சம்மணியின் கண்களிலே பக்தி மலர்ந்தது. நெஞ்சிலே பாரதப் புழையின் நீர் பெருகி நனைந்தது. அவரிடம் என்ன பேசுவதென்று தெரியவில்லை அவளுக்கு.

"எங்கள் டாக்டரின் மகள் அந்தக் கவிதையைப் படித்துவிட்டு உங்களுக்கு நோபெல் பரிசு தர வேண்டும் என்று கொண்டாடிக் கொண்டிருக்கிறாள்" என்று மீண்டும் புகழ்மாலையில் இறங்கினாள்.

"உங்கள் டாக்டரைப் பார்த்தால் கவிதைகளை இரசிக்கிறவராகத் தெரியவில்லையே? என்னுடைய நோக்கில் பார்த்தால் உலகத்தில் உள்ள டாக்டர்கள் எல்லாரும்தான் நிஜமான நோயாளிகள். சாதாரண மனிதர்களுக்கு இருக்கிற ஆர்வங்களையும் சுவையுணர்வுகளையும் டாக்டர்கள் இழந்து போயிருக்கிறார்கள். வாயினால் பேசி மற்றவர்களுடைய நாடித் துடிப்பை உணர்வதற்குப் பதில் ஸ்டெதாஸ் கோப்பினாலேயே உணர்கிறவர்களுக்குக் கவி இதயமும் கத்தரிக்காய் விற்கிறவனுடைய இதயமும் ஒன்றாகத்தான் துடிக்கும். நல்ல வேளையாக உங்கள் டாக்டரின் மகளுக்காவது கவிதையை இரசிக்கும் இதயம் இருப்பதாக நீங்கள் சொல்வதைக் கேட்டு மகிழ்கிறேன். நீங்கள் 'நான் இன்னார்தானா' என்று கேட்டுத் தெரிந்து கொள்வதற்கே ஆர்வமாக இருக்கிறீர்கள். ஆனால் உங்கள் டாக்டரோ நான்கு நாட்களுக்கு முன்பு நான் இங்கு வந்து 'அட்மிட்' ஆனபோது என்னைப் பற்றி நானாக இன்னாரென்று கூறியும் கூடப் பதிலுக்குப் புன் சிரிப்புக்கூடச் சிரிக்கவில்லை!" என்று கொதிப்போடு பேசினார் அவர்.

"அது அவர் சுபாவம்! அவருடைய மனைவிக்கும், மகளுக்கும் நீங்கள் இங்கே அட்மிட் ஆகியிருப்பது தெரிந்தாலோ ஒரு திருவிழாக் கொண்டாட்டமே கொண்டாடி விடுவார்கள்" என்று உற்சாகமாகப் பதில் கூறினாள் கொச்சம்மணி.

"நீங்கள் இங்கு நர்ஸாக இருக்கிறீர்களோ?"

சுதாகரனின் இந்தக் கேள்விக்கு மறுமொழியாகத் தன் சரித்திரத்தையே சுருக்கமாகச் சொல்லி முடித்தாள் கொச்சம்மணி.

"இன்றைய நிலையில் உங்களைப் போன்று கஷ்டப்படுகிறவர்கள்தான் தேசப் பற்றையும், மொழிப் பற்றையும், தேசீய உணர்ச்சிகளையும் இழந்துவிடாமல் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்" என்றார் சுதாகரன்.

"நீங்கள் இப்படி ஏங்கிப்போய்ப் பேசக்கூடாது. இங்கே தங்கியிருக்கிற வரை உங்களுக்கு வேண்டிய சௌகரியங்களை நான் செய்து கொடுப்பேன். ஒவ்வோர் இந்தியனுடைய உள்ளத்தையும் நினைவுகளையும் கங்கை மானசீகமாக நனைத்துக் கொண்டிருப்பதைப் போலத் தன் கரையில் பிறந்த ஒவ்வொரு மலையாளியின் மனத்தையும் பாரதப்புழை நனைத்துக் கொண்டிருப்பதாக நீங்கள் எழுதியிருக் கிறீர்களே! என் மனத்தை ஒவ்வொரு விநாடியும் நான் பிறந்த இடத்து நதிக்கரை நீர் அலை அலையாக நனைத்துக் கொண்டிருக்கிறது. உங்களுக்கு உதவி செய்வதன் மூலம் நான் பெருமைப்பட முடியும்" என்று கொச்சம்மணி கூறியபோது சுதாகரன் அவளைப் பார்த்து இரண்டு கைகளையும் கூப்பி வணங்கினார்.

அவள் உற்சாகம் தாங்க முடியாத மனத்தோடு தபால்களை எடுத்துக் கொண்டு மாடிக்குப் போனாள். வாரப் பத்திரிகைக்காகக் காத்துக் கொண்டிருந்த டாக்டரின் மனைவியிடம் பத்திரிகையையும் சுதாகரன் கீழே தங்கள் ஆசுபத்திரியில் வந்து 'அட்மிட்' ஆகியிருக்கும் மகிழ்ச்சிகரமான செய்தியையும் சேர்த்துத் தந்தாள் கொச்சம்மணி. ஆனால் அந்த முதிய அம்மாள் சுதாகரனின் எழுத்துக்களை விரும்பிப் படித்த அளவு இந்தச் செய்தியைக் கேட்டு அதிக ஆர்வம் காண்பிக்கவில்லை.

"அப்படியா? சாயங்காலம் வசந்தா கல்லூரியிலிருந்து வந்ததும் அவளிடம் சொல்லு. மிகவும் மகிழ்ச்சி அடைவாள்" என்று சொல்லிவிட்டுப் பத்திரிகை படிப்பதில் மூழ்கிவிட்டாள் சிவசங்கரனின் மனைவி. கொச்சம்மணியின் ஆர்வம் இந்த அலட்சியத்தில் பேர்பாதி அடங்கிப் போய்விட்டது. ஏதோ பெரிய திருவிழாக் கொண்டாட வேண்டிய நிகழ்ச்சி நடந்திருப்பது போலவும் அதைப் பொருட்படுத்தாமல் எல்லாரும் வேண்டுமென்றே திட்டமிட்டுக் கொண்டு அலட்சியம் செய்வது போலவும் கொச்சம்மணிக்கு அப்போது தோன்றியது. சாயங்காலம் வசந்தா வந்ததும் அவளிடம் ஓடிப்போய் இந்தச் செய்தியைச் சொன்னாள். அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. இந்தச் செய்தியைக் கேட்டதும் வசந்தா மகிழ்ச்சிக் கூத்தாடினாள்.

"இதோ வருகிறேன்! இரண்டு பேருமாகக் கீழே போய் அவரைப் பார்க்கலாமடீ" என்று கூறிவிட்டு அலங்காரம் செய்து கொள்ளப் புகுந்த வசந்தா முக்கால் மணி நேரத்துக்குப் பின்புதான் வெளியே வந்தாள். ஏதோ கிளியோ பாத்ரா ஸீஸரை வெற்றி கொள்ளப் புறப்பட்டாற்போல அழகுத் தேவதையாகப் புறப்பட்டிருந்தாள் வசந்தா. இதன் காரணமும் கொச்சம்மணிக்குப் புரியவில்லை. 'இந்தப் பெண் சுதாகரனைத் தான் பார்க்கவேண்டுமென்று வருகிறாளா; அல்லது சுதாகரன் தன்னைப் பார்க்க வேண்டுமென்று வருகிறாளா?' என்று புரியாமல் மருண்டாள் அவள். மனம் எதற்காகவோ கஷ்டப்பட்டது அவளுக்கு. வசந்தா சுதாகரனுடைய அறைக்குள் நுழைந்ததும் தான் யாரென்று அறிமுகம் செய்து கொள்ளாமலே அவரது கட்டிலின் விளிம்பை ஒட்டினாற்போல் ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டுவிட்டாள். கதவோரமாகப் பணிவோடு தயங்கி நின்ற கொச்சம்மணிக்கு இதுவும் பிடிக்கவில்லை. "எங்கள் டாக்டரின் மகள்" என்று கொச்சம்மணி அவருக்கு வசந்தாவை அறிமுகம் செய்து வைத்தாள். வசந்தா வணங்கியதற்குப் பதிலாகச் சுதாகரன் கைகூப்பினான். அடுத்த விநாடி பாதி ஆங்கிலமும் பாதி மலையாளமும் கலந்து வசந்தா சுதாகரனிடம் கேட்கத் தொடங்கிய கேள்விகளைக் கண்டு கொச்சம்மணி தன் மனத்தில் மிகவும் வேதனையடைந்தாள்.

"நீங்கள் 'கோல்ட்ஸ்மித்' ஏதாவது படித்திருக்கிறீர்களா?"

"இல்லை." சுதாகரனின் பதில் இது.

"பைரன்... ஷெல்லி...?"

"இல்லை."

"கலில்ஜிப்ரான்?"

"இல்லை."

"நீங்கள் விரும்பித் தோய்ந்து படித்த புத்தகம்?"

"வாழ்க்கை! பாரதப்புழையின் கரையில் சிறிதும் பெரிதுமாயுள்ள மலையாளத்து ஊர்களின் வறுமையும், வளமும், ஏக்கமும், இன்பமும் எனக்கு மனப்பாடம்."

"உங்கள் கவிதைகளுக்கு.... பத்திரிகையில் என்ன கொடுக்கிறார்கள்?"

"சில பேரிடமிருந்து இப்படிக் கேள்விகளை எதிர்பார்க்கும் துர்ப்பாக்கியத்தைத் தவிர வேறு ஒன்றும் கொடுப்பதில்லை" என்று சுதாகரனிடமிருந்து சுடச் சுடப் பதில் வந்தது.

"நீங்கள் எங்கள் கல்லூரியில் ஒரு நாள் வந்து பேசுங்களேன்."

"சௌகரியப்படாது! இதுமாதிரி அசட்டுக் கேள்விகளையெல்லாம் உங்களைப் போலவே இன்னும் ஆயிரம் பேர்கள் கேட்க ஒரு வாய்ப்புத் தர எனக்கு விருப்பமில்லை."

"நீங்கள் முன்கோபக்காரராக இருக்கிறீர்கள். இப்படி இருப்பீர்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்று கூறிக்கொண்டே விருட்டென்று எழுந்திருந்து வெளியேறிப் போய்விட்டாள் வசந்தா.

அவள் தலை மறைந்ததும், பயந்து நடுங்கிக் கொண்டே பேதைத் தன்மையின் பிரதிநிதியாய்க் கதவோரம் நின்று கொண்டிருந்த கொச்சம்மணியை நோக்கிச் சுதாகரன் சிரித்தான். பின்பு பேசினான்:

"டாக்டர் தன்னுடைய 'பேஷண்டு'களை விசாரிக்கிற மாதிரியே மகளும் விசாரித்ததைக் கவனித்தீர்களா?"

"பாவம்! வசந்தாவுக்கு நாகரிகம் தெரியாது. அசட்டுப் பிசட்டென்று ஏதோ கேட்டுவிட்டாள். அதற்காக நீங்கள் இவ்வளவு சூடாகப் பதில் சொல்லியிருக்கவேண்டாம்."

"இதைவிடச் சூடாகப் பதில் சொல்ல முடியாமற் போயிற்றே என்றுதான் எனக்கு வருத்தம். பிரம்மாவுக்கு முன்னால் போய்ப் படைப்புத் தொழிலைச் செய்வதற்கு நீ என்ன புத்தகம் படித்திருக்கிறாய் என்று கேட்பது உண்டோ? அல்லது அந்தத் தொழிலுக்கு நீ என்ன சம்பளம் பெறுகிறாய் என்று கேட்பதுண்டோ? சில பேர் இப்படி எல்லாம் கேட்கிறார்கள். இப்படிப்பட்ட அசட்டுக் கேள்விகளைச் சந்திக்கும் விநாடிகளில் எங்களுடைய கண்களுக்கு முன்னால் எல்லாமே இருண்டு போகிறது. எங்களுடைய எண்ணங்களின் உயரத்திலிருந்து நாங்கள் கீழே உருண்டு விடுகிறோம். இந்த வேதனை புரியாமல் சிலர் திரும்பத் திரும்பக் கேள்வி அம்புகளால் எங்களைப் புண்ணாக்கி விடுகிறார்கள். எந்தக் குரல் சத்தியத்தை ஒலிக்க விரும்புகிறதோ அது இப்படிப்பட்ட எதிரொலிகளை வெறுக்கிறது..."

"தப்புத்தான்! அவள் அசட்டுத்தனமாகக் கேட்டுவிட்டாள்."

பெண்ணே! எங்கள் பரம்பரை தன்னுடைய முதல் இரசிகனைச் சந்தித்த நாளிலிருந்து இந்த விநாடி வரை தெரிந்து கொள்ளத் தவிக்கிற விஷயம் இதுதான். எதிரே வந்து வாய் நிறையப் புகழ்ந்து கொண்டு நிற்கிறவர்களுடைய குரல்களிலிருந்து எந்தக் குரல் சத்தியமயமாகப் பிறந்து சத்தியத்தின் பிரதிநிதியாய் ஒலிக்கிற குரல் என்று

பிரித்துப் புரிந்து கொள்கிற வரை வேதனைதான்! உலகத்தில் முதல் காவியமும் முதல் கவிஞனும் பிறந்ததிலிருந்து இந்த வேதனை உண்டு.”

“நீங்கள் அப்படி எந்தப் புகழ்ச்சியிலாவது சத்தியத்தின் குரலைக் கேட்டிருக்கிறீர்களோ?”

“நேற்று வரை இல்லை! இன்று காலையில் இந்த வார்டு தேடி வந்து ஒரு வேலைக்காரப் பெண் நான் இன்னாரென விசாரித்துத் தெரிந்து கொண்டு கண்களில் பயபக்தி மலரப் புகழ்வதற்குச் சொற்களே கிடைக்காமல் என் எதிரே நின்றாள். அப்போது அவளுடைய கண்களில் மட்டும் சத்தியத்தைப் பார்த்தேன். இப்போதும் என் எதிரே அதே கண்களைப் பார்க்கிறேன்” என்று சுதாகரன் புன்னகையோடு கூறியபோது கொச்சம்மணி நாணித் தலை குனிந்தாள்.

அந்தக் கணத்தில் - ஒரே ஒரு கணத்தில் பாரதப்புழை தான் ஓடிக்கொண்டிருந்த இடத்திலிருந்து நானூறு மைல்களைக் கடந்து வந்து அவள் மனத்தில் மட்டுமே பிரவாகமாகப் பெருகி ஓடியது. அது ஒரு விசித்திரமான அநுபவம். அதைச் சொல்லுவதற்கு வார்த்தைகளே இல்லை. அவள் அந்தக் கவிஞனை நோக்கித் தன் கைகளைக் கூப்பி வணங்கினாள். அவருடைய எதிரே நின்று வணங்குவதற்குக் கூடப் பயமாகவும் நாணமாகவும் இருந்தது அவளுக்கு. கொச்சம்மணிக்கு மனத்தத்துவம் தெரியாது. அவ்வளவு பெரிய வார்த்தையை அவள் கேள்விப்பட்டது கூட இல்லை. ஆனால் அவளுடைய நாவுக்கு எப்படியோ ஒரு பொது நாகரிகம் தெரிந்திருந்தது. அதை அவள் எங்கும் யாரிடமும் தேடிப்போய்க் கற்றதில்லை. இரத்தத்தைப் போல் உடம்பிலேயே ஓடிக்கொண்டிருந்தது அந்த நாகரிகம். எது புத்திசாலித்தனம், எது அசட்டுத்தனம் என்று பிரித்துப் படிக்காமல் எது புத்திசாலித்தனமோ அப்படியே நடந்துகொண்டு விடுகிற பேதைகளையும்அப்பாவிகளையும் சுதாகரனுக்கு ரொம்பப் பிடிக்கும். அவர்கள் அவன் கவிக்கு விஷயங்கள்.

“ஒவ்வொரு இந்தியனுடைய உள்ளத்தையும் நினைவுகளையும் கங்கை மானசீகமாக நனைத்துக் கொண்டிருப்பதைப் போலத் தன் கரையில் பிறந்த ஒவ்வொரு மலையாளியின் மனத்தையும், நினைவுகளையும் அவன் எங்கிருந்தாலும் பாரதப்புழை நனைத்துக் கொண்டிருக்கிறது” என்ற வரிகளை அவள் மட்டும் கேட்க முடிந்த மெல்லிய குரலில் அவளுக்காகவே பாடிக் காட்டினான் சுதாகரன். அந்தக் குரல் நலிந்திருந்தாலும் சத்தியத்தின் பிரதிநிதியாய் ஒலித்தது.

**(கல்கி, 11.3.1962)**

## 70. இரவல் ஹீரோ

சன்னாசியின் வாழ்க்கையில் அப்படி என்னதான் நேர்ந்துவிட்டது? என்னவாவது? அது ரொம்பப் பெரிய விஷயம் சார்! ரொம்ப ரொம்பப் பெரிய விஷயம். மனிதனுடைய வாழ்க்கையில் துன்பங்கள் தொடர்ந்து இருக்கலாம். ஆனால் எல்லா நாட்களுமே அப்படி இருந்துவிடுவதில்லை. ஒரு நாள் - ஏதோ ஒரே ஒரு நாள் அவன் மகிழ்வதற்காகவே வந்து நேர்கிறது என்பதை நிச்சயமாய் நம்பித்தான் ஆக வேண்டியிருக்கிறது. இந்த விநாடியில் அப்படி நம்பினான் சன்னாசி. அவனைப் போன்றவனைத் தேடி வருகிற சாதாரண அதிர்ஷ்டமா அது?

காலையில் எழுந்திருந்து முதல் நாள் இரவு நினைவாகப் பாதியில் அணைத்துக் காதில் சொருகிக் கொண்டிருந்த அரைக் கட்டைப் பீடியை நாலு தம் உறிஞ்சிவிட்டுத் தெருச் சாக்கடைகளின் பிரவாகத்தில் நனைந்து நனைந்து நாற்றத்தைத் தவிர வேறு குணங்களைக் கண்டறியாத அந்தக் காக்கி டிராயரை எடுத்து மாட்டிக்கொண்டு, 'எதற்காகப் பொழுது விடிந்தது?' என்ற அலட்சியத்தோடு அவன் சேரியிலிருந்து 'உத்தியோகத்'துக்குப் புறப்பட்ட போதுகூட இப்படி ஓர் அதிர்ஷ்டத்தைத் தன் வழியில் எதிர்பார்க்கவில்லை. எதிர்பார்க்கவில்லையாவது? சொப்பனத்தில்கூட இப்படியும் ஒன்று நடக்கும் என்று அவன் கண்டதில்லை. கற்பித்துப் பார்த்துக் கொண்டதுமில்லை.

சன்னாசியின் 'உத்யோகம்' இருக்கிறதே; அது இசக்கிமுத்து மேஸ்திரியின் ஆதிக்கத்துக்கு உட்பட்டது. சாக்கடையைவிட அதிகமாக நாறக்கூடிய மனத்தை இசக்கி முத்து மேஸ்திரி என்கிற மனிதர் பெற்றிருந்தும் சன்னாசிப் பயல் அவருடைய டிவிஷனில் உள்ள இரண்டு மெயின் ரோடுகளைச் சுத்தம் செய்ய முடிந்ததுபோல அவர் மனத்தைச் சுத்தம் செய்ய முடிந்ததில்லை. என்ன செய்யலாம்? அதற்கென்று யாரும் கார்ப்பொரேஷன் வைத்து நடத்தவில்லையே? அப்படி நடத்தினாலும் அது முடிகிற காரியம் இல்லை என்பது அவனுக்குத் தெரியும். வட்டம் வட்டமாகத் தெருவில் இரும்புத் தகடுகள் இட்டு மூடியிருக்கும் பாதாளச் சாக்கடைக் குழிகளில் இறங்கி இந்த உலகத்தின் அழுக்குகள், ஓடாமல் தேங்கிவிடாதபடி ஒழுங்கு செய்வதுபோல் இசக்கிமுத்து மேஸ்திரியின் மனத்தில் உள்ள அழுக்குகளை அவனால் போக்கிவிட முடியாதுதான்.

"மேஸ்திரி ரொம்பத் தொந்தரவு புடிச்ச மனுஷனுங்க. எங்க சம்பளத்திலே லஞ்சம். தோட்டிப் பொம்பளைகளிடத்தில் எத்தினி எத்தினியோ வம்பு. அத்தெ என் வாயாலே சொல்லப் படாது ஸாமி... இந்தப் பட்டணத்திலே நெஜமா ஓடற சாக்கடை இந்த மேஸ்திரியோட மனசுதான்" என்று எப்பொழுதாவது சானிடரி இன்ஸ்பெக்டர்,

சூபர்வைஸர் போன்ற ஐயாமார்களிடம் 'ஸ்ட்ராங்'காகச் சொல்லிவிட வேண்டுமென்று சன்னாசி பல நாட்கள் தவித்திருக்கிறான். ஆனால் அது வெறும் தவிப்புத்தான். காரியத்தில் ஒன்றும் நடந்ததில்லை.

"ஏண்டாலே! உனக்கென்ன பெரிய சினிமா ஷ்டாரின்னு நினைப்பாங்கறேன்? தோட்டிப் பயலா லட்சணமாக வந்து நிக்கிறதில்லே. வா, வா, உன்னைக் கவனிக்கிறபடி கவனிக்கிறேன்" என்று வயசுப் பெண்பிள்ளைகளான இளம் தோட்டிப் பெண்களுக்கு முன்னால் மேஸ்திரி தன்னை இறக்கிப் பேசிச் சிரிக்கிறபோதெல்லாம் 'கடவுளே! இந்த மனிதருடைய வாயிலே பிறக்கிற சாக்கடையை எப்படி அடைப்பது?' என்று சன்னாசி பலமுறை மனம் கொதித்திருக்கிறான். அந்தக் கொதிப்புக்கு இன்று விடிவு பிறந்துவிட்டது.

சன்னாசி இனிமேல் அப்படிக் கொதிக்க வேண்டிய அவசியமில்லை. நாளைப் பொழுது விடிந்து 'அது நடந்ததும்' அவனுடைய ஸ்டேட்டஸ் சேரியில் மட்டுமில்லை - இசக்கிமுத்து மேஸ்திரியின் மனத்திலும்கூட உயர்ந்துதான் ஆக வேண்டும். சாதாரணமான விஷயமா என்ன அது?

சாக்கடை கழுவுகிற சன்னாசிக்கும் தன்மானம் உண்டு. இத்தனை பெரிய பட்டினத்தின் அழுக்கைக் கூசாமல் கழுவுகிறவனுக்குப் பெருமைப்பட உரிமை யில்லையா என்ன? இந்தர அழுக்கை உண்டாக்குகிற புண்ணியவான்கள் எல்லாம் பெருமையும் கௌரவமும் கொண்டாட முடியுமானால் இதை அருவருப்பில்லாமல் கழுவுகிற கர்மயோகி இன்னும் அதிகமான பெருமையும் கௌரவமும் படலாம்தானே?

"ஐயாவை என்னன்னு நினைச்சே? ஐயா பெருமை வீதியெல்லாம் கொடிகட்டிப் பறக்குமில்லே? நடு ரோட்டிலே குச்சியை நிறுத்திச் சிவப்புத் துணியிலே 'ரோடு குளோஸ்டு'னு போர்டு மாட்டிக்கிட்டு அண்டர்கிரவுண்டிலே ஹாஃப் டிராயரோட புகுந்துட்டா அப்பறம் நாமதான் ராஜா..." என்று யாருமில்லாத சமயத்தில் சேரிக் கிழவி குப்பச்சியிடம் சன்னாசி தற்சிறப்புப் பாயிரம் படிக்கிற வேளைகளில் அந்தத் தோட்டிக்கும் அசட்டுப் புகழாசை ஒன்று இருப்பது தெரிய வரும்.

இப்போது நிஜமாகவே அந்த அசட்டுப் புகழ் நிரூபணமாகப் போகிறது. தோட்டி சன்னாசிக்கு நல்ல உடம்பு. அகன்ற மார்பும் எடுப்பான தோள்களும் குண்டு முகமும் கருகருவென்ற தலை முடியுமாக ஆள் ராஜா மாதிரி ஜம்மென்றிருப்பான். இந்த மாதிரி விஷயங்களுக்கு அங்கீகாரம் தருவதில் சேரியின் அதாரிடியான குப்பச்சிக் கிழவியே சொல்லியிருக்கிறாளே!

"போன பெறவியிலே ராசாவாக இருந்திருப்பேடா என் தங்கம்" என்று சன்னாசியைப் பார்க்கும்போது எல்லாம் கைவிரல்களைச் சொடுக்கித் திருஷ்டி முறித்திருக்கிறாள் அந்தக் கிழவி. அப்படித் திருஷ்டி கழித்த அழகு வீண் போகுமா, என்ன?

அந்த அதிர்ஷ்டம் அவனைத் தேடிக்கொண்டு வந்த போது சென்டிரல் ஸ்டேஷன் கடிகாரத்தில் பத்து மணி; பதினைந்து நிமிஷம் ஆகியிருந்தது. அவனுடைய

அதிர்ஷ்டம் அவனைத் தேடிக்கொண்டு வருகிறபோது நடந்து வரவில்லை. காரில் வந்தது. கார் என்றால் அப்படி இப்படியா? கப்பலைப் போல் பெரிய கார் அது. அதில் வந்துதான் அந்த சினிமா டைரக்டர் அவனைப் பிடித்தார்.

சென்டிரல் ஸ்டேஷனுக்குப் பக்கத்தில் எங்கோ அண்டர் கிரவுண்டுச் சிக்கலைச் சரி செய்துவிட்டுச் சாக்கடை தோண்டுகிற நீண்ட இரும்புத் துடுப்புக் கரண்டியும் தள்ளுவண்டியுமாக அவன் தன்னுடைய அழுக்குத் தேடும் யாத்திரையை நடத்திக்கொண்டிருந்தபோது அதிர்ஷ்டம் அவனைத் தேடிக்கொண்டு காரில் வந்து சேர்ந்தது. சூட்டும் பூட்டுமாகக் காரில் இருந்து இறங்கிய நாலைந்து வாட்ட சாட்டமான ஆட்கள் அவனை மடக்கிக் கொண்டனர்.

"ஒம் பேரென்ன?"

"சன்னாசிங்கோ..."

"நீ தானே இந்த வார்டுலே அண்டர் கிரவுண்டு சாக்கடையெல்லாம் அள்ளுறே?"

"ஆமாங்கோ!"

"உன்னாலே ஒரு காரியம் ஆகணும். அது உனக்கும் பெருமையைத் தரப் போகிற காரியம்தான்."

"நா என்ன செய்யணும் ஸாமீ?"

"இப்ப நான் சொல்றதைக் கவனமாகக் கேளு. நாங்கள்ளாம் சினிமாப் படம் புடிக்கிறவங்க. இப்ப நாங்க எடுத்திட்டிருக்கிற படத்திலே யதார்த்தமான வாழ்க்கையைச் சித்திரிக்கிறதாகச் சில காட்சிகள் இருக்கு. கதாநாயகியோட கைவளையல் அண்டர்கிரவுண்டு சாக்கடைக்குள்ளே தவறி விழுந்திடறதாகவும் ஹீரோ அவளுக்காக அதுக்குள்ளார இறங்கி அதைத் தேடறதாகவும் ஒரு காட்சி இருக்கு. படத்திலே ஹீரோவா நடிக்கிற நடிகர் மணி நாவுக்கரசுக்குப் பதிலாக 'டம்மி' ஆளு ஒருத்தர் சாக்கடையிலே இறங்கறதாகத் தொலைவுக் காட்சியிலே படம் பிடிச்சிருக்கலாம். காட்சி இயற்கையாத் தத்ரூபமா அமையணும்னாத் தெருச் சாக்கடையிலேயே படம் பிடிக்கணும். ஆனால் நடிகர் மணியைப் போல உள்ளவங்களை அப்படியெல்லாம் கண்ட இடத்துக்கு அழைச்சிட்டு வந்து படம் பிடிக்க முடியாது. கூட்டம் கூடிடும்னு பயப்படுவார். அவரோட ஸ்டேட்டசுக்கு அது நல்லாவும் இருக்காது. ஹீரோயினோட சீனைப் பத்திக் கவலை இல்லே. ஹீரோ சாக்கடையிலே எறங்கறப்போ ஹீரோயின் நாலு அஞ்சடி தள்ளி நிற்கிறாப் போலப் படத்தைப் பிடிச்சிடலாம். அப்படி நிற்கிறதுக்கும் ஹீரோயினா நடிக்கிறவங்க சம்மதிச்சாச்சு. அவங்க புது நடிகை. சொன்னபடி ஒப்புத்துக்கிட்டாங்க. உனக்கு உயரம் முகத்தோற்றம் எல்லாம் ஏறக் குறைய நடிகர் மணியைப் போலவே இருக்கு. தலையை மட்டும் இன்னும் நல்லாக் கிராப் வெட்டி மேக்-அப் செய்துட்டாப் போதும். இதுக்கு நீ சம்மதிக்கணும். நாலைக் காலையிலே ஷூட்டிங் வைச்சுக்கலாம். ஒரு நிமிஷம் நீ காமிராவிலே தெரிஞ்சாப் போதும். மற்றதை எல்லாம் நாங்க கவனிச்சுக்குவோம்..."

என்று விவரமாகக் கூறவேண்டியவற்றையெல்லாம் கூறி விளக்கிவிட்டு அவன் கையில் பத்துப் புதிய பத்து ரூபாய் நோட்டுக்களை எண்ணி வைத்தார் அவர்.

'இந்தக் காரியத்தைச் செய்யிறத்துக்கு நூறு ரூபாயா?' என்று மனத்தில் வியப்புடனே அந்தப் பணத்தைத் தன் அழுக்கடைந்த கையினால் வாங்கி டிராயர் பையில் வைத்துக்கொண்டு சன்னாசி அந்த சினிமா டைரக்டரை ஒரு கேள்வி கேட்டான்:

"ஹீரோ ஹீரோயின் அப்படீன்னா என்னங்க ஸாமி?"

"அதுவா? ஹீரோன்னாக் கதாநாயகன். ஹீரோயின்னாக் கதாநாயகி. அதாவது அவம் பொஞ்சாதி..."

"அப்படீன்னா இதுலே நான்தான் ஹீரோ! இல்லீங்களா?"

"ஆமாம். கொஞ்சம் நாழிகைக்கு நீ தான் ஹீரோ!"

"கொஞ்ச நாழிகைன்னாலும் ஹீரோ ஹீரோதானுங்களே?"

"சந்தேகமில்லாமல் ஹீரோதான்" என்று சொல்லிச் சிரித்தார் டைரக்டர். அவனுடைய குழந்தைத்தனமான இந்தக் கேள்வி அவருக்குச் சிரிப்பு மூட்டிற்று.

"படத்துலே காத்தவராயன் மகன் சன்னாசின்னு எம் பேரைக் காமிப்பீங்களில்லே...?"

"பேர்லே என்னாருக்கு? வேணுமின்னாக் காமிச்சாப் போச்சு. நாளைக் காலையிலே ரெடியா இரு." மறு நாள் வருவதற்கு அவனுடைய சேரியின் இடத்தை அடையாளம் தெரிந்து கொண்டு டைரக்டர் முதலியவர்கள் புறப்பட்டார்கள்.

இதுதான் சன்னாசியின் வாழ்க்கையில் அன்று நடந்த பெரிய விஷயம். மறு நாள் விடிகிற வரை சேரியின் 'பிரமுகி'யான குப்பாச்சிக் கிழவியிடம், "ஆயா! உனக்குத் தெரியாது! கொஞ்ச நாழின்னாலும் ஹீரோ ஹீரோதான்" என்று வாய்க்கு வாய் பெருமை பேசிப் பூரித்துக் கொண்டிருந்தான் சன்னாசி.

மறு நாள் விடிந்ததும் காலை ஏழு ஏழரை மணிக்கு ஸ்டூடியோ வேன் வந்து சன்னாசியை அழைத்துக் கொண்டு போய்விட்டது. அவன் வேலை பார்த்த வார்டில் அவனுக்குப் பழக்கமான ஒரு பொது இடத்திலேயே அந்த ஷூட்டிங்குக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். "அண்டர் கிரவுண்டுக்குள் இறங்கிச் சாக்கடை நீரில் நனைந்த கோலத்தோடு மேலே எழுந்தபின் இதோ இந்த இடத்திலே இவங்க நிற்கிற பக்கமாகச் சிரித்தபடி ஒரு தடவை திரும்பிப் பார்க்கணும் நீ" என்று கதாநாயகியாக நடிக்கும் நடிகையை வட்டச் சாக்கடைக் குழிக்கருகே ஓரிடத்தில் நிறுத்தி விட்டுச் சன்னாசிக்குச் சொன்னார் டைரக்டர்.

"இவங்கதான் ஹீரோயினா?" என்று கொஞ்சம் அதிகப்பிரசங்கித்தனமாகவே டைரக்டரை ஒரு கேள்வி கேட்டான் சன்னாசி. அவனுடைய இந்தக் கேள்வியைச் செவியுற்று அந்த நடிகை அருவருப்படைந்து முகத்தைச் சுளித்தாள். டைரக்டருக்கும்

அந்தக் கேள்வி எரிச்சலைத் தான் மூட்டியது. ஆனாலும் காரியம் நடக்க வேண்டும் என்பதில் கண்ணாக இருந்த அவர் பொறுமையைக் கடைப்பிடித்தார். தரையில் சாக்கடையருகே நிற்கக் கூசிக் கொண்டே நிற்பதுபோல் செருப்பணிந்த கால்களோடு அருவருப்புடனே ஒதுங்கி ஒதுங்கி நின்றாள் ஹீரோயின்.

ஆனால் ஹீரோவோ தினம் தொழிலுக்காகத் தான் மூழ்குகிற வழக்கமான சாக்கடையை அன்றைக்குப் பன்னீர்க் குளமாக நினைத்துக் கொண்டு மிகுந்த உற்சாகத்தோடு மூழ்கி எழுந்தான்.

கண் மூடிக் கண் திறக்கிற நேரத்தில் அந்தப் படப் பிடிப்பு முடிந்து விட்டது. ஹீரோ சன்னாசி தோட்டி சன்னாசியாக மாறி விட்டான். அந்த ஒரு கணத்துக் கனவும் மெல்லக் கலைந்து போயிற்று. வந்திருந்தவர்கள் எல்லாரும் ஸ்டூடியோ வேனில் பறந்து கொண்டு போய்விட்டார்கள். சன்னாசி சாக்கடை நீரில் மூழ்கி யெழுந்த கோலத்தில் தெருவில் தனியாக நின்று கொண்டிருந்தான். புது நடிகையை வேடிக்கை பார்க்கக் கூடியிருந்த கூட்டமும் அவள் போனதும் கலைந்து விட்டது.

ஏதோ நினைவு வந்தவனாகச் சன்னாசி சென்டிரல் ஸ்டேஷன் கடிகாரத்தைப் பார்த்தான். மணி எட்டரைக்கு மேல் ஆகியிருந்தது. ஏழரை மணிக்கு இசக்கிமுத்து மேஸ்திரியிடம் ஆஜர் கொடுக்க வேண்டும்.

'இன்றைக்குக் கொஞ்சம் லேட்டாகத்தான் ஆஜர் கொடுப்போமே! இந்த இசக்கிமுத்து மேஸ்திரி என்ன பெரிய ஹீரோவோ?' என்று துணிச்சலாக நினைத்துக் கொண்டே போகிற போக்கில் டைரக்டர் அவன் பக்கமாக வீசி எறிந்துவிட்டுப் போயிருந்த உயர்தர சிகரெட் பெட்டியில் ஒன்றை உருவிப் புகைக்கத் தொடங்கினான். அந்தச் சுகத்தில் நேரம் போனதே தெரியவில்லை. அன்று வேலைக்கு மட்டம் போட்டாயிற்று. அந்தச் சினிமா டைரக்டரைப் போலச் சூட்டும், பூட்டும் போட்டுக் கொள்ள வேண்டும் என்று சன்னாசிக்கு ஆசையாயிருந்தது. கிடைத்திருந்த பணத்தில் எழுபது எண்பது ரூபாய் வரை செலவழித்து அப்படி இரண்டு ஜோடி உடுப்பு ரெடிமேடாக வாங்கிச் சேரியில் கொண்டுபோய்க் குடிசையின் பெட்டியில் இரகசியமாக வைத்துப் பூட்டினான். டாக்ஸியில் ஏறிச் சுற்ற வேண்டும் என்றும் அவனுக்கு ஓர் ஆசை வெகு நாட்களாக உண்டு. இரவில் அந்த 'டைரக்டர் உடுப்பை' அணிந்துகொண்டு டாக்ஸியிலே ஏறிப்போய் மாடியில் பெரிய கிளாஸ் டிக்கெட் வாங்கி இரண்டாம் ஆட்டம் சினிமாவும் பார்த்தான் சன்னாசி. அதற்குமுன் புகாரியில் போய் வயிறு புடைக்கச் சாப்பிட்டிருந்ததில் ஆன செலவும் அதிகம் தான். இரண்டு மூன்று நாட்கள் இப்படி ஒரே ஹீரோ மிதப்பில் எல்லாம் பரம சுகமாகக் கழிந்தது.

கையிலிருந்த பணமும், மனத்திலிருந்த ஹீரோ கனமும் கரைய இந்த மூன்று நாள் வேண்டியிருந்தது சன்னாசிக்கு. நான்காம் நாள் எட்டு மணிக்கு எழுந்து முதல் நாள் ஞாபகமாகப் பாதியில் அணைத்து வைத்திருந்த சிகரெட்டைப் புகைத்துக்கொண்டே 'எதற்காக இந்தப் பொழுது விடிந்தது?' என்ற அலட்சியத்தோடு இசக்கிமுத்து மேஸ்திரியிடம் ஆஜர் கொடுக்கப் போனான் சன்னாசி.

"ஏண்டாலே! உனக்கென்ன சினிமா ஷ்டாரின்னு நினைப்பாங்கறேன்? தோட்டிப் பயலா லட்சணமா....?" என்று வழக்கம் போல் மேஸ்திரி ஆரம்பித்தபோது எல்லா நாளும் போல இன்று அவனால் அதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

"சர்த்தான் நிறுத்து சார்.... நான் சினிமா ஷ்டாரில்லாட்டா நீயா ஷ்டாரு?" என்று பதிலுக்குப் பேசிவிட்டான் சன்னாசி. இசக்கிமுத்து மேஸ்திரி அந்த ஹீரோவுக்கு வில்லனானார். ஹீரோவின் கை வீழ்ந்துவிட்டது.

'ஸீரியஸ் மிஸ் காண்டக்ட்' என்று ஒரே வரி ரிப்போர்ட் எழுதிக்கொண்டு அவனை வீட்டுக்கு அனுப்பி வைத்துவிட்டார் இசக்கிமுத்து மேஸ்திரி. சன்னாசிக்கு வேலை போய்விட்டது. வேலை போனால் என்ன? இதென்ன பெரிய வேலை....?

சேரிக்குத் திரும்பி வந்து அவன் குப்பச்சிக் கிழவியிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

"ஆயா! இவனுக என்னமோன்னு நினைச்சுகிட்டிருக்காங்க... கொஞ்ச நாழீன்னாலும் ஹீரோ ஹீரோதான்... அந்தப் பயாஸ்கோப்பு ரிலீஸாகி வரப்போவுது பாரு. அதுலே காத்தவராயன் மகன் சன்னாசின்னு எம் பேரு காமிப்பாங்க. அப்ப தெரியும் எம் பெருமை..."

"நீ ராசாவாப் பொறந்திருக்கணும்டா என் தங்கமே" என்று குப்பச்சிக் கிழவி அந்த ஹீரோவைத் தன் வழக்கமான வார்த்தைகளில் வாழ்த்தினாள். இன்னும் அரைமணி நேரம் வரை அந்த ஹீரோவுக்கு ஒரு கவலையும் இல்லை. ஏனென்றால் காதில் அரைக் கட்டை பீடித் துண்டு ஒன்று 'ஸ்டாக்' இருந்தது.

'கொஞ்ச நாழீன்னாலும் ஹீரோ ஹீரோதானே?' இல்லையா, பின்னே?

**(கல்கி, 1.4.1962)**

## 71. ஊமைப் பேச்சு

அப்போதுதான் விடிந்திருந்தது. முதல்நாள் இரவெல்லாம் மழை பெய்து முடிந்த ஈரமும் குளுமையுமாக இந்த உலகம் மிகவும் அழகாயிருந்தது. பன்னீர் மரத்து இலைகளிலிருந்து முத்து உதிர்வதுபோல நீர்த்துளிகள் இவ்வளவு நேரத்துக் கொருமுறைதான் கீழே உதிர்வது என்று திட்டமிட்டுக் காலப்பிரமாணம் தவறாமல் வாசிக்கப்படும் தாளத்தைப்போல வீழ்ந்து கொண்டிருந்தன. எப்படி எப்படி அழகாயிருக்கிறது என்று பிரித்துப் பிரித்துச் சொல்ல முடியாதவாறு அப்படி அப்படி இருப்பதே அழகுகளாய் அந்தக் காலை வேளையில் இந்த உலகம் ரொம்பவும் அனுபவிக்கத்தக்கதாயிருந்தது. சுந்தரராஜன் 'அவுட்ஹவுஸி'ன் மாடியிலிருந்து பங்களாவின் தோட்டத்திற்குள் இறங்கியபோது சிறிதுநேரம் சிந்தனை செய்து ஏதாவது ஒருபுதிய கவிதை எழுத வேண்டுமென்ற ஆர்வத்தோடு வந்திருந்தான். ஆனால் அப்போது அவன் கண்விழித்துப் பார்த்த உலகமே தயாராக யாரோ எழுதி வைத்திருந்த கவிதையைப்போலக் காண்பவர்களை மயக்கிக் கொண்டிருந்தது. ஒரு கவிதையைப் பார்த்து இன்னொரு கவிஞன் அப்படி கவிதை இயற்றினால் 'ஈயடிச்சான் காப்பி' என்றல்லவா கேவலமாகச் சொல்ல வேண்டியிருக்கும்? இயற்கையில் மயக்கும் தன்மை வாய்ந்தவையாயிருக்கும் மழை, சூரியன், சந்திரன் எல்லாமே தயாராக எழுதி வைக்கப்பட்டிருக்கும் கவிதைகள்தாம். அவற்றைப் பார்த்துப் புனைய முடியாமல் நாம் தவிக்கும் தவிப்புத்தான் நமது ஆற்றாமை என்று நுணுக்கமான சிந்தனைகள் முந்தும் மனத்தோடு சுந்தரராஜன் தோட்டத்தில் பிரவேசிக்கவும், நீதிபதி தண்டபாணியின் மகள் எண்ணெய் நீராடி அவிழ்ந்து நெகிழ்ந்து தொங்கும் கூந்தலோடு பூக்களைப் பறிப்பதற்காக எதிரே வரவும் சரியாயிருந்தது. அந்தக் கோலத்தில் அவள் கவர்ச்சி நிறைந்து தோன்றினாள். சுந்தரராஜனுக்கு அவளைக் கண் நிறையப் பார்க்க வேண்டுமென்று ஆசையாயிருந்தது. அதேசமயத்தில் அப்படிப் பார்த்தால் யார் என்ன நினைத்துக் கொள்வார்களோ என்று வெட்கமாகவும், பயமாகவும் வேறு இருந்தது. மழை மணக்கும் அந்த ஈர வைகறையில் பூக்குடலையோடு ஒரு பெண் வளைகளும், மெட்டியும் ஒலிக்கும்படி துவள துவள நடந்து வந்தால் எத்தனை அழகாயிருக்கும்? கொஞ்சம் கற்பனை செய்துதான் பாருங்களேன்!

அழகாயிருப்பதைப் புரிந்து அங்கீகரித்துக்கொண்டு தைரியமாக நிமிர்ந்து பார்க்கவும் துணிச்சல் வேண்டும். சுந்தரராஜன் இளம்பருவத்துக் கவி. ஆனால் அப்படி ஒன்றும் பெரிய தைரியசாலி இல்லை.

அவன் அங்கு வந்து தங்கிய நாளிலிருந்து ஒவ்வொரு நாளும் அவனுடைய சூரியன் அந்தப் பெண்ணின் முகத்திலிருந்துதான் உதிக்கிறது. ஆனால் ஒரு நாளாவது அவன்

அந்த சௌந்தரியம் உதயமாகும் போது தைரியமாக நிமிர்ந்து பார்த்ததே இல்லை. தைரியமில்லாத ஆண்பிள்ளை கவியாயிருந்தாலும் அவனை மன்னிப்பதற்கில்லை நான்.

கவி எழுதுவதும், அதனால் தான் ஒரு கவியாயிருப்பதாக நினைத்துக் கொள்வதும் சுந்தரராஜனுக்குப் பொழுதுபோக்கு. நிஜமான உத்தியோகம் என்னவோ, நீதிபதி தண்டபாணிக்கு அந்தரங்கக் காரியதரிசி.

ஜஸ்டிஸ் தண்டபாணி அவர்களிடம் அடிக்கடி முன் கோபப்படுவதைத் தவிர வேறு எந்தவிதமான அந்தரங்கமும் இல்லையென்றாலும் அவருடைய கௌரவத்துக்கும் செல்வாக்கிற்கும் ஓர் அந்தரங்கக் காரியதரிசி தேவையாயிருந்தது மட்டும் உண்மைதான். 'இந்த உலகத்தில் கவியெழுதியே பிழைப்பு நடத்திவிட முடியாது' என்பது உறுதியாகவும், அனுபவ பூர்வமாகவும் தெரிந்துவிட்டபின் பத்திரிகையில் விளம்பரம் பார்த்து விண்ணப்பித்து நீதிபதியின் காரியதரிசியாக வந்து சேர்ந்தான் சுந்தரராஜன். நீதிபதியின் வறட்சியான காரியங்களை அவரிடம் சம்பளம் வாங்குவதற்குக் கவியெழுதுகிற சம்பளமில்லாத காரியத்தையும் சேர்த்துச் செய்து கொண்டிருந்தான் அவன்.

இப்பொழுதும் அவன் கவியெழுத வேண்டுமென்று தினசரி விடிந்ததும் தூண்டுகிற முதல் ஞாபகத்தைப் போல் நீதிபதி தண்டபாணியின் மகள் பூக்குடலையோடு அவன் கண்களில் தெரிந்து கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கும்போதெல்லாம் அவனுக்குத்தான் ஏதேனும் கவியெழுதினால் தேவலை என்பதுபோலத் தோன்றும். அவனுக்குக் கவியெழுதும் ஞாபகம் வரும்போதெல்லாம் அவளைப் பார்க்க வேண்டுமென்றும் தோன்றும். ஆனால் தேடிக் கொண்டு போய் அவளை நேருக்கு நேர் பார்ப்பதற்கு மட்டும் துணிச்சல் இருக்காது. விடிந்ததும் விடியாததுமாக அவளே பூக்குடலையோடு தேடிக் கொண்டு வரும்போது நேருக்கு நேர் ஏறெடுத்துப் பார்க்கத் துணிவின்றி ஓரக்கண்ணால் ஏனோதானோ என்று பார்த்துத் திருப்திப் பட்டுக் கொள்வான். இந்தக் குறைந்த திருப்தியில் ஏதோ ஒரு மகிழ்ச்சி இருந்தது. சில அனுபவங்கள் முற்றி நிறைந்துவிடாமல் அரைகுறையாகவே இருக்கிறவரை அழகாயிருக்கும். அந்த அரைகுறைத் தன்மையிலேயே அவை முழுத் திருப்தியை அளித்துக் கொண்டிருக்கும். சுந்தரராஜனுடைய அனுபவமும் அப்படித்தான் இருந்தது. குறைவுள்ளதாயிருந்து கொண்டே நிறைவுள்ளதாயுமிருந்தது அந்த அனுபவம். தர்க்கரீதியாக இரண்டு நேர்மாறான குணங்கள் ஒரு நிலையில் சேர்ந்து தங்குவது சாத்தியமில்லையே என்று யாராவது விபரம் தெரிந்தவர்கள் நினைக்கலாம். நன்றாக நிமிர்ந்து பார்க்க முடியாமல் குறைவாகப் பார்த்ததனால் தான் சுந்தரராஜனுக்கு நிறைவான மகிழ்ச்சி இருந்தது என்பதில் மட்டும் சந்தேகமில்லை. அந்தப் பார்வையில் அவன் கண்கள் நெருங்கி அடைய முடியாமல் ஏதோ விடுபட்டுப் போய் மீதமிருந்தது. அப்படி ஏதோ விடுபட்டுப்போய் மீதமிருந்ததனால்தான் அவன் மனத்தினுள் குறுகுறுப்பானதொரு மகிழ்ச்சி அந்த மீதத்தைத் தேடி நிறைந்து கொண்டிருந்தது.

மேற்கண்ட குழப்பமான வாக்கியங்களில் சுந்தரராஜனுடைய மனநிலையை நான் தெளிவாகச் சொல்லிவிட்டேன் என்று நம்புகிறேன். தெளிவாகச் சொல்லப் பட்டிராவிட்டால் அதற்கும் நான் பொறுப்பாளி இல்லை. ஏனென்றால் அது சுந்தரராஜனுடைய மனத்தைப் பொறுத்த விஷயம். அதற்கு நான் எப்படிப் பொறுப்பாளியாக முடியும்?

தண்டபாணியின் மகள் நீராடி நீலச் சேலையுடுத்தி மலர் கொய்ய வரும் மற்றோர் மலராக அலர்ந்த நிலையில் நாலைந்து முறை அவளைப் பார்த்தபின் அரைகுறையாய் மலர்ந்த பூவைப்போல் சுந்தரராஜனுக்குள் கவிதை மலர்ந்தது. முற்றிலும் மலராமல் ஏதோ ஒரு இதழ் அடி முடியின்றி அந்தரமாக மலர்ந்தது. இப்படி அரைகுறையாய் மலர்கிற மலர்ச்சிக்கு என்றுமே மணம் அதிகம்.

**“பெண்ணென்று பேர் சொல்லி முகிலினிடை**
**மின்னொன்று வந்ததென...”........**

இதற்குமேல் கவிதை வரவில்லை. ஆனால் வருவதற்கு மீதமிருந்தது என்பதென்னவோ நிச்சயம். சுந்தரராஜனுடைய இளமையும், அதைவிடவும் இளமையான அவன் நினைப்புகளும், அவனுடைய கண்களில் பார்வையில் தென்பட்டவை எவையோ, அவற்றை அவன் இளமை மயமாகக் கண்டதுவும், சேர்த்துதான் கவிதைகளாகப் பிறந்து கொண்டிருந்தன என்று சொல்ல வேண்டும். கவிதை என்கிற வார்த்தை மட்டுமன்று; அந்த வார்த்தைக்குப் பொருள் பிறக்கக் காரணமான அனுபவமுமே இளமை மயமானதுதான். அனுபவத்தில் இளமையும் உற்சாகமும் சிறிதுகூட இல்லாமல் கவிதையில் அவை வரவேண்டும் என்று எதிர்பார்ப்பதில் பயனில்லை. சுந்தரராஜனுக்கு அனுபவத்தில் இளமை, உற்சாகம் எல்லாம் இருந்தன. ஆனால் தைரியம் மட்டும் இல்லை. தைரியமில்லாதவர்கள் உலகத்தில் வாழக்கூடாதென்று யாரும் சட்டம் இயற்றி வைக்கவில்லை. அதே சமயத்தில் தைரியமில்லாதவர்கள் காதலிக்கக்கூட தகுதி இல்லை என்று பல பேருடைய அனுபவம் சொல்கிறது. இந்த உலகத்தில் ஒருவிதமான சாதனைக்கும் தைரியமில்லாதவர்கள் காதலையாவது சாதிக்கலாம் என்று இன்றைய இளைஞர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். பாவம்! காதலைச் சாதித்துக் கொள்வதற்குத்தான் நடைமுறையில் அதிகமாக தைரியம் வேண்டுமென்பதை அனுபவரீதியாகப் புரிந்து கொள்ளுகிற வரை அவர்கள் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கப் போகிறார்கள். அப்படி வெகுளித்தனமாக நினைத்துக் கொண்டிருக்கிற பல்லாயிரம் அப்பாவிகளில் சுந்தரராஜனும் ஒருவன் என்று அவனை அலட்சியாக விட்டு விடுவதற்கில்லை. அவன் இதில் அடங்காத தனி ரகத்தைச் சேர்ந்தவன். அவன் கவியாயிருந்தான், தைரியசாலியாயில்லை. பலரைக் கவர்கிற ஒரு குணமும், எவரையுமே கவரமுடியாத ஒரு பலவீனமும் சேர்ந்து வாழ்கிறவனைப் பாராட்டாமலும் இருக்க முடியாது; தூற்றாமலும் இருக்க முடியாது. சுந்தரராஜனைப் பாராட்டுவதற்கோ, தூற்றுவதற்கோ ஜஸ்டிஸ் தண்டபாணியின் மகளுக்குத் தைரியமில்லையானாலும் அவன் அவுட்ஹவுஸிலிருந்து படியிறங்கும் போது தன்னைப் பார்க்கிறான் - பார்க்க வேண்டும் - அப்படி அவன்

பார்ப்பதனால்தான் பெருமைப்படுவதற்கு ஏதோ இருக்கிறது - என்பதை ஜஸ்டிஸ் தண்டபாணியின் மகள் விரும்பினாள். அதற்றுக்காக இரகசியமாய்ப் பெருமைப் பட்டுக் கொள்ளவும் செய்தாள். ஒரு பெண் மனம் நெகிழ்கிறாள் என்பதை அறிவிக்க இதைவிட அதிகமான அடையாளங்கள் எவையும் தேவையில்லை. சுந்தரராஜன் ஜஸ்டிஸ் தண்டபாணியின் அந்தரங்கக் காரியதரிசியாக வேலை ஏற்றுக் கொண்டு அந்தப் பங்களாவின் அவுட்ஹவுசில் குடியேறிய பதினைந்தாவது நாளோ, பதினாறாவது நாளோ, அப்படி ஒரு நிகழ்ச்சி நடந்தது.

வழக்கம்போல் அவன் அவுட்ஹவுஸ் மாடியிலிருந்து படியிறங்கிக் கீழே வந்தபோது பூக்குடலையுடன் தோட்டத்திற்குள் நுழைந்து கொண்டிருந்த தண்டபாணியின் மகள் விறுவிறுவென்று நடந்து வந்து ஒரு கொத்துப் பிச்சிப் பூக்களையும் அவற்றினிடையே நாலாக மடிக்கப்பட்ட ஒரு கடிதத்தையும் அவன் கையில் திணித்துவிட்டு நடந்தாள். மகிழ்ச்சிகரமான இந்த அதிர்ச்சியிலிருந்து விடுபட்டு, அவள் எவற்றைத் தன்னிடம் தந்தாள்; அப்படித் தந்தவற்றைத் தான் என்ன செய்ய வேண்டும் என்றெல்லாம் உணர்ந்து சமாளித்துக் கொள்ள சுந்தரராஜனுக்குச் சிறிது நேரமாயிற்று.

ஈரமும் அதிகாலையின் புதுமையும் கூடி மயக்கும் நறுமணத்தோடு கூடிய பிச்சிப்பூக்களையும், அவற்றைக் காட்டிலும் அதிகமாக மணந்து மயக்கும் அந்தக் கடிதத்தையும் சுமந்து கொண்டு சுந்தரராஜன் திரும்பி மாடிப்படி ஏறியபோது மிகவும் வேகமாக ஏறினான். வேகம் என்றால் அந்தப் பதத்துக்கு இங்கே ஆவல் என்று அர்த்தம். அந்தக் கடிதத்தில் அவனைக் கொன்றிருந்தாள் அவள்.

“நானும்தான் பதினைந்து நாட்களாகப் பார்த்துக் கொண்டு வருகிறேன், உங்களுக்குப் பேசத் தெரியுமா? அல்லது நீங்கள் ஓர் ஊமையா?”

இந்த இரண்டே இரண்டு வாக்கியங்கள்தான் அந்தக் கடிதத்தில் இருந்தன. இவற்றைப் படித்ததும் அவனுக்கு ரோஷமாயிருந்தது, சந்தோஷமாகவும் இருந்தது. தன்னுடைய சுபாவமான கூச்சத்தையும், பயத்தையும், கேலி செய்வதுபோல் இப்படி எழுதிவிட்டாளே என்ற ரோஷம் ஒரு புறம். துணிந்து தனக்கு எழுதினாளே என்ற மகிழ்ச்சி ஒருபுறம். இந்த இரண்டு உணர்ச்சிகளுக்கு அப்பால் மொத்தமாக அவன் மனத்தில் நிறைந்திருந்தது என்னவோ பயம்தான். ஜஸ்டிஸ் தண்டபாணி அவர்களின் முன்கோபத்தைப்பற்றி அவன் நிறையக் கேள்விப்பட்டிருந்தான். இரண்டு காரணங்களுக்காக அவன் அவரை நினைத்துப் பயப்பட வேண்டியிருந்தது. முதல் காரணம் அவர் தன்னுடைய எஜமானராகவும் ஜஸ்டிஸ் ஆகவும் - முன்கோபக்காரராகவும் இருக்கிறாரே என்பது. இரண்டாவது காரணம் தன்னால் காதலிக்கப்படுகிற பெண் அன்னாருடைய மகளாயிருக்கிறாளே என்பது. தங்கள் மகள் எந்த ஆண்பிள்ளையைக் காதலிக்கிறாளோ அந்த ஆண் பிள்ளையைத் தாங்கள் கட்டாயம் கோபித்துக்கொண்டு விரட்டியடிக்க வேண்டுமென்பது தந்தையர்களின் பொதுநோக்கமாயிருப்பதைப் பல காதல் கதைகளிலும், திரைப்படங்களிலும்

பார்த்துப் பார்த்துப் புரிந்து கொண்டிருந்தான் சுந்தரராஜன். அது அவனைப் பயமுறுத்துவதாக இருந்தது.

அவள் அந்தக் கடிதத்தை அவனிடம் கொடுத்த விநாடியிலிருந்து அவனுக்கு நிம்மதி பறிபோய்விட்டது. பயமும், பதற்றமும் விநாடிக்கு விநாடி அவனைத் தவிக்கச் செய்தன. ஜஸ்டிஸ் தண்டபாணி தன்னை நிமிர்ந்து பார்க்கும் ஒவ்வொரு வேளையும், 'என்னடா பயலே! என் மகள் கைகளிலிருந்து காதல் கடிதமா வாங்குகிறாய்? இரு! இரு! உன்னைக் கவனிக்கிற விதமாகக் கவனித்துக் கொள்கிறேன்' என்று கடுங்கோபத்துடன் கர்ஜனை செய்து குமுறப் போவதுபோல் தனக்குத்தானே பயங்கரமாகக் கற்பனை செய்துகொண்டே அவர் முகத்தைப் பயத்தோடு பார்ப்பான் சுந்தரராஜன். இரண்டு விநாடி நடுநடுங்கிக் கொண்டே அவர் முகத்தைப் பார்த்த பின்பு தான் நினைத்துப் பயந்ததுபோல் ஒன்றுமில்லை என்பது உறுதியாகத் தெரிந்த பிற்பாடு நிம்மதியாக மூச்சு வரும் அவனுக்கு.

இப்படிப் பதற்றத்திலேயே ஒரு வாரத்துக்கும் மேலாக வீணே கழிந்துவிட்டது. இதற்கு நடுவில் அந்தப் பெண்ணரசி இன்னொரு கடிதத்தையும் அவன் கையில் சேர்த்துவிட்டாள். அதிலும் அவள் அவனைச் சாடியிருந்தாள்.

'சந்தேகமில்லாமல் நீங்கள் ஓர் ஊமைதான்! ஊமை மட்டுமில்லை. குருடாகவும் இருப்பீர்கள் போலிருக்கிறது. செவிடோ என்றுகூட எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. என்னுடைய முதல் கடிதத்துக்கு ஒருவாரமாகப் பதில் இல்லை. அதனால் நீங்கள் ஓர் ஊமை. நான் அவுட்ஹவுஸின் மாடிப்படிக்கு நேர் கீழே தோட்டத்தில் பூப்பறிக்க வரும்போது நீங்கள் படியிறங்கி வந்தாலும் என்னை ஏறிட்டு நிமிர்ந்து பார்க்கக் கூசுகிறீர்கள். அதனால் நீங்கள் ஒரு குருடர். பூப்பறிக்கும்போது என் கைகளின் வளையல்கள் கலீர் கலீரென ஒலித்தும் உங்கள் செவிகள் அவற்றைக் கேட்கத் தவிப்பதாகத் தோன்றவில்லை. அதனால் நீங்கள் ஒரு செவிடராகவும் இருக்கலாம். உங்களை என்ன சொல்லுவதென்று எனக்குத் தெரியவில்லை!'

இந்தக் கடிதம் கைக்குக் கிடைத்தபோது நிச்சயமாக உடனே அவளுக்கு ஒரு பதில் எழுதிவிட வேண்டும் என்று தன் மனத்தைத் திடப்படுத்தியிருந்தான் சுந்தரராஜன். ஆனால் நேரமாக நேரமாக - நேரமாகத் தைரியத்தையும் மீறிக் கொண்டு பயம் பெருகி அவளுக்குப் பதில் எழுதும் எண்ணத்தை அடியோடு அமுக்கிவிட்டது. 'கோழைகள் காதலிக்கக்கூடத் தகுதியற்றவர்கள்' 'பிளாட்டினம்' மொழியை (பொன்மொழியை விடத் தரத்தில் உயர்ந்தது) நாளுக்கு நாள் நிரூபித்துக் கொண்டிருந்தான் சுந்தரராஜன். கோழைகள் துணிந்து செய்கிற காரியத்திலும் முடிவாக விளைகிற விளைவு அவர்களுடைய கோழைத்தனத்தை நிரூபிப்பதாகவே வந்து சேரும். சுந்தரராஜனும் இதற்கு விதிவிலக்கு இல்லைதானே? சுந்தரராஜன் இப்படியே நாளொரு பயமும் பொழுதொரு நடுக்கமுமாகத் தயங்கித் தயங்கிக் கடைசியில் துணிந்து அவளுக்கு ஒரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்தில் அவளைப் பார்த்ததும் தான் இயற்றிய நளினமான காதல் கவிதையையும் எழுதியிருந்தான். எல்லாவற்றையும் அற்புதமாகவும்,

அழகாகவும், எழுதிவிட்டுக் கடைசியாக மிகமிகப் பைத்தியக்காரத்தனமான ஒரு வாக்கியத்தையும் சேர்த்து எழுதி வைத்தான்.

“எனக்கு என்னவோ ரொம்பவும் பயமாயிருக்கிறது. இந்தக் கடிதத்தைப் படித்தவுடன் ஞாபகமாகக் கிழித்து எறிந்துவிடு. கைத்தவறுதலாக எங்கேயாவது யார் கண்களிலேனும் தென்படும்படி வைத்துவிடாதே.”

அடுத்த நாள் காலையில் அவள் பூப்பறிக்க வரும்போது தைரியமாகக் கொண்டு போய் அதை அவளிடம் கொடுத்துவிட வேண்டுமென்று தீர்மானமும் செய்த பின்னர் முதல்நாள் இரவு படுத்துக் கொள்வதற்கு முன் அறைக் கதவுகளைப் பத்திரமாகத் தாழிட்டுக் கொண்டு இந்தக் கடிதத்தை எழுதியிருந்தான் சுந்தரராஜன். ஆனால் அவனுடைய தைரியம் என்னவோ அறைக்கதவைத் தாழிட்டுக் கொண்டிருந்த வரைதான் இருந்தது. மறுநாள் காலை விடிந்ததுமே முதல்நாள் செய்த தீர்மானத்தையும் எழுதிய கடிதத்தையும் எண்ணி உடம்பு நடுங்கியது. மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நடுங்கும் கால்களால் ஒவ்வொரு படியாக இறங்கிச் சென்று குனிந்த தலை நிமிராமல் அந்தக் கடிதத்தை அவள் கைகளில் போட்டுவிட்டு ஏதோ கொலைக் குற்றம் செய்தவன் ஓடி வருவதுபோல் திரும்பிப் படியேறி அறைக்குள் போய்க் கதவை உட்புறமாகத் தாழிட்டுக் கொண்டு விட்டான்.

அத்தனை பயத்திலும் அவன் மனம் மெல்லிய கற்பனைகளில் ஈடுபடத் தவறவில்லை. தன் கடிதத்தையும் அதில் தான் அவளைப் பற்றிய எழுதியிருக்கிற கவிதையையும் படித்துவிட்டு அவள் எத்தனை பூரிப்பு அடைவாள் என்று கற்பனை செய்து மகிழத் தொடங்கியிருந்தது.

> **“பெண்ணென்று பேர் சொல்லி முகிலினிடை**
> **மின்னொன்று வந்ததுபோல்”**

அடடா! எத்தனை அழகாகப் பாடியிருக்கிறேன்? இதைப் படித்தவுடன் அவனுடைய மனத்தில் என்னென்ன உணர்ச்சிகள் எழும்? என்னைப் பற்றி எவ்வளவு பெருமையாக நினைப்பாள்? என்றெல்லாம் சுகமான நினைப்புக்கள் சுந்தரராஜனுடைய மனத்தில் சுழன்று கொண்டிருந்தன.

அரைமணி நேரங்கழித்து அவனுடைய அறைக்கதவு தடதடவென்று இடிக்கப்பட்டது. பயந்து நடுங்கிக் கொண்டே கதவை திறந்தான் சுந்தரராஜன். அந்தப் பெண் முதல்தடவையாக - தைரியமாக மாடிப்படி ஏறி வந்து அவன் அறை வாயிலில் நின்றாள். அந்த அதிர்ச்சியை உடனடியாகச் சமாளிக்கத் தெரியாமல் ஹி...ஹி... என்று அசட்டுச் சிரிப்புடன் எதை எதையோ பேச நினைத்தும் ஒன்றும் பேச வராமல் மென்று விழுங்கினான் சுந்தரராஜன். அவள் அவன் முகத்தை நன்றாகவும் அலட்சியமாகவும் நிமிர்ந்து பார்த்தாள். அந்தப் பார்வை நிர்ப்பயமாகவும் துணிச்சலாகவும் இருந்தது.

“மிஸ்டர்! உங்களுக்கு அநேக நமஸ்காரம். கோழைகள்கூடக் கவிதை எழுதலாம். ஆனால் காதல் செய்வதற்குத் தைரியசாலியால்தான் முடியும். தைரியமே ஒரு பெரிய கவிதை. அது உங்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை. தைரியமில்லாத

ஆண்பிள்ளையை அவன் கவிதை எழுதுகிறான் என்பதற்காக மட்டும் காதலிப்பதற்கில்லை. நான் உங்களுக்கு இரண்டு கடிதம் எழுதினேன். பயந்து நடுங்கிக் கொண்டே அதைப் படித்தவுடன் கிழித்து எறிந்துவிடும்படி எந்தக் கடிதத்திலும் நான் எழுதவில்லை. நீங்களோ ரொம்ப நாளைக்குப் பிறகு பயந்து கொண்டே ஒரு கடிதம் எழுதிவிட்டுக் கடைசியில் அப்படி எழுதியது ஒரு கொலைக் குற்றம் போலப் பாவித்துக் கிழித்துவிடும்படி சொல்லுகிறீர்கள். உங்களுக்கு யார்மேல் பிரியமாயிருக்கிறதோ அவளை நிமிர்ந்து பார்க்கவே கூசுகிறீர்கள். நீங்கள் கவியெழுதுவதனால் உங்களை ஆண்பிள்ளை என்று நான் ஒப்புக்கொள்ள முடியாது. உங்களுடைய தைரியத்தையும் ஆண்மையையும் வைத்துத்தான் உங்களை ஆண்பிள்ளையாகக் கணிக்கமுடியும். உங்களுக்குத் தைரியமாயிருந்தால் என்னைப் பார்ப்பதற்கே பயப்படாதீர்கள். சிரிப்பதற்கு நடுங்காதீர்கள். நீங்கள் கவியாயிருக்க வேண்டாம்; ஆண்பிள்ளையாயிருங்கள்; தைரியசாலியாயிருங்கள். அப்படி இருக்க முடியாவிட்டால் எனக்குக் கடிதம் எழுதாதீர்கள்; என்னைப் பார்க்காதீர்கள்; பயந்து உதறாதீர்கள்."

மனத்திலிருந்ததைக் குமுறக் குமுறப் பேசிவிட்டுச் சற்றுமுன் அவன் கொடுத்திருந்த கடிதத்தை அவனுடைய முகத்தைப் பார்த்துக் கசக்கி எறிந்தாள் அவள். அடுத்த நிமிஷம் வந்தது போலவே தைரியமாகப் படியிறங்கிப் போய்விட்டாள் ஜஸ்டிஸ் தண்டபாணியின் மகள்.

சுந்தரராஜன் ஊமையானான். அவனுடைய கவிதைத்தன்மையும் ஊமையாய்ப் போயிற்று. மனிதனாயிருந்து காதலிக்க முடியவில்லையே என்பதற்காக அவன் ரொம்பவும் வருந்தினான்.

(தாமரை, ஆகஸ்ட், 1962)

## 72. வெறும் புகழ்

**ஆ**சிரியர் குறிப்பு : "எழுத்தாளருக்குப் பணம் எதற்கு? புகழ் இருந்தால் போதாதா? அதைத்தான் நாம் வாங்கித் தருகிறோமே!" என்று சில புத்தகக் கம்பெனிக்காரர்கள் எண்ணுகிறார்கள்.

பேராசிரியர் கள்ளப்பிரான் பிள்ளை பொருளாதார எம்.ஏ. பட்டதாரியான படியாலும் ஏறக்குறையக் கால் நூற்றாண்டுக் காலத்துக்கும் மேலாக அதைக் கல்லூரி வகுப்பறைகளில் கற்பித்துக் கற்பித்துத் தழும்பேறிப் போயிருந்ததாலும் ஏதோ ஒரு புத்தகக் கம்பெனிக்காரன் 'நோட்ஸ்' வெளியிடுவதற்காக அவரைத் தேடிக் கொண்டு வந்து சேர்ந்தான். இதை இப்படிச் சொல்வதைவிட வலை போட்டுத் தேடிப் பிடித்து விட்டான் என்று சொல்வது நன்றாகவும் பொருத்தமாகவும் இருக்குமென்றாலும், பேராசிரியருடைய கௌரவத்துக்கும், கால் நூற்றாண்டுக் கால ஸர்வீஸுக்கும் இழுக்காகுமே என்று கருதி அப்படிச் சொல்லக் கூடாதுதான். வாசகர்கள் மன்னிக்க வேண்டும்.

பேராசிரியரிடம் இரண்டு விதமான சாமர்த்தியங்கள் நிரந்தரமாக உண்டு. ஒன்று பொருளாதாரம்; மற்றொன்று அப்பாவித்தனம். பொருளாதாரத்துக்காக ஏதோ ஒரு சர்வ கலாசாலை அவருக்குக் கௌரவ டாக்டர் பட்டம் கொடுக்க முன்வரப் போவதாகக் கேள்வி. அப்பாவித் தனத்துக்காக டாக்டர் பட்டம் வழங்க உலகத்தில் எந்தச் சர்வகலா சாலையும் தயாராக இருக்க முடியாதாகையினால், அந்தச் சாமர்த்தியத்துக்காக என்று எவரிடமிருந்தும் எந்தப் பாராட்டையும் திருவாளர் கள்ளப்பிரான்பிள்ளை எதிர்பார்க்கக் கூடாது தான். 'அப்பாவியாக இருப்பதுகூட ஒரு சாமர்த்தியமா?' என்று நீங்கள் கேட்கலாம். நிச்சயமாக அதுவும் ஒரு சாமர்த்தியந்தான். ஏனென்றால் எல்லோராலும் அப்பாவியாக இருக்க முடியாது என்பது உறுதியானது.

மார்ச் - செப்டம்பர் பரீட்சைக்கு மாறி மாறிப் போகிற பி.ஏ. வகுப்பு மாணவர்களுக்குப் பொருளாதார நோட்ஸ் ஒன்று வெளியிட்டு கடைத்தேற்ற வேண்டுமென்று அந்தப் புத்தகக் கம்பெனிக்காரன் நினைத்ததற்குக் காரணம் பொருளாதார சாஸ்திரம் என்ற பணவித்தை - அல்லது காகிதத் தத்துவம் உலகத்தில் பரவ வேண்டும் என்பதற்காகவோ, திருவளார் கள்ளப்பிரான் பிள்ளையைப் பிராபல்யப்படுத்த வேண்டுமென்பதற்காகவோ அன்று, பொருளாதார சாஸ்திரத்தைப் படித்துவிட்டுக் கள்ளப்பிரான்பிள்ளை அவர்களைப் போலப் பொருளாதாரப் பற்றாக்குறையால் மாதக் கடைசி வாரம் கஷ்டப்படுவதைவிடப் பொருளாதார சாஸ்திரத்தை மலிந்த விலைக்கு அச்சுப் போட்டு விற்றுப் பயனடையலாம் என்றுதான்

அந்தப் புத்தகக் கம்பெனிக்காரன் அவரிடம் வந்திருந்தான். பொருளாதாரத்தைக் கற்பதையும், கற்பிப்பதையும்விட அச்சிடுவதும் விற்பதும் லாபகரமான காரியம் என்பது அவனுக்குப் புரிந்தது. நாலைந்து பரீட்சையாகக் கள்ளப்பிரான் பிள்ளை கோடி காட்டுகிற பகுதியிலேயே கேள்விகள் வருவதாக நம்பியதனால் மாணவர்களிடையே அவருக்கும் தெரியாமலே அவர் மேல் ஒரு 'ஸ்டார் வேல்யூ' ஏற்பட்டுத் தொலைந்திருந்தது. கள்ளப்பிரான் பிள்ளைக்கே தெரியாத இந்த இரகசியத்தை அந்தப் புத்தகக் கம்பெனிக்காரன் எப்படியோ தெரிந்து கொண்டிருந்தான். ஆக மொத்தம் இத்தனை காரணங்களாலும் அவன் வீடு தேடி வந்து கள்ளப்பிரான் பிள்ளையைச் சந்தித்த விவரம் பின் வருமாறு -

ஆகஸ்டு மாதம் முதல் வாரம் ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று காலை பத்து மணி சுமாருக்கு 'டிப்டாப்'பாகக் காரில் வந்து இறங்கிவிட்டு வாயிலில் ஒவ்வொரு படியாக ஊன்றி ஏறிய விதத்திலேயே 'நான் ஒரு கௌரவமான வியாபாரி' என்பதை நிரூபிக்க முயல்வது போல் நடந்து வந்து கள்ளப்பிரான் பிள்ளையை வணங்கினான் அந்தக் கம்பெனிக்காரன். அவன் காரிலிருந்து இறங்கிய விதமும், படியேறிய தினுசும், சரிகை அங்கவஸ்திரத்தைச் சுழற்றிக் கையிலெடுத்து, 'இது சரிகை அங்கவஸ்திரந்தான்' என்பதை எதிராளிக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறவனைப் போல் மறுபடி தோளில் போட்டுக் கொண்டு கைகூப்பிய பாணியும் எல்லாமாகச் சேர்ந்து கள்ளப்பிரான் பிள்ளையை அயர்ந்து போகச் செய்துவிட்டன. கள்ளப்பிரான் பிள்ளையும் அவனைப் பதிலுக்கு வணங்கினார்.

"பி.ஏ. எகனாமிக்ஸ் பாடத்துக்கு இதுவரை ஒரு நல்ல நோட்ஸ் யாருமே வெளியிடலை. பரீட்சைக்குப் போறவங்க ரொம்பச் சிரமப்படறாங்க. உங்களைப் போல தகுதியுள்ள பெரியவர்கள் மாணவருலகத்துக்கு ஏதாவது சேவை செய்யணும்" என்று அவன் பேச்சை ஆரம்பித்த விதமும் கௌரவமான முறையில்தான் இருந்தது; அதாவது திருவாளர் பிள்ளைக்குக் கொளரவமாக இருந்தது. உடனே பதில் சொல்ல முடியாதபடி திக்குமுக்காடிப் போகும் விஷயம் எதையாவது எதிராளியிடமிருந்து கேட்டுவிட்டால் கள்ளபிரான் மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜை மேல் வைத்துவிட்டுக் காதோரமாகத் தலையைச் சொறிந்துவிட்டுச் சில விநாடிகள் இடைவெளி கொடுத்த பின்பே பதில் சொல்வது வழக்கம். அன்றும் அப்படியே நடந்தது.

"புத்தி என்பது தானே சுயமாக வளர வேணும். தூக்கமருந்து சாப்பிட்டுத் தூங்குகிற மாதிரி 'நோட்ஸ்' படித்தப் பரீட்சை பாஸ் பண்ணுவது கெடுதலான காரியமாயிற்றே!" என்று தம்மைத் தேடி வந்த காரணமே ஆட்டம் காணும்படி பதில் சொன்னார் கள்ளப்பிரான்பிள்ளை. வந்தவனும் விடவில்லை. இரண்டாவது தடவையாகச் சரிகை அங்கவஸ்திரத்தைச் சுழற்றித் தோளில் போட்டுக் கொண்டு இந்த மனிதரை எந்தக் கோடியில் எந்தப் பேச்சால் பலவீனப்படுத்தி விழச் செய்யலாம் என்று தேர்ந்த வியாபாரியின் சிறந்த புத்திசாலித்தனத்தோடு பேச்சைத் தீர்மானம் செய்ய முயன்றான். தீர்மானமும் செய்துவிட்டான். "உங்களைப் போன்றவர்களே இப்படிப்

பற்றுதல் இல்லாமல் பேசிவிட்டால் அப்புறம் நாங்களெல்லாம் என்ன செய்வது? உங்களைப் போல் பொருளாதார சாஸ்திர வித்தகர்கள் இருப்பது தேசமே பெருமைப்படற விஷயம்."

"ஐயையோ! அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லே... நான் ரொம்ப சாதாரணம். ஏதோ நாலு பிள்ளைகளுக்குச் சொல்லிக் கொடுக்கிறதிலே ஒரு சந்தோஷம்..."

"நீங்க சொல்லிவிட்டாப்பிலே ஆச்சுங்களா? நீங்களே சாதாரணம்னு சொன்னா அப்புறம் விசேஷமாச் சொல்றத்துக்கு இந்த நாட்டிலே ஒருத்தனுமே இல்லைன்னுதான் அர்த்தம்."

"அதெல்லாம் இல்லை! ஏதோ உங்களுக்கு இருக்கிற அபிமானத்திலே என்னை ரொம்பப் புகழறீங்க."

"இல்லவே இல்லை! நீங்க 'நோட்ஸ்' எழுதினால்தான் பிரயோஜன மாயிருக்குமுன்னு மாணவர்களே அபிப்ராயப்படறாங்க. இந்த ஊரிலேயே ஆண்களுக்கும் பெண்களுக்குமாகப் பதினாலு கலைக் கல்லூரிகள் வேறு. எல்லா இடத்திலேயும் 'எகனாமிக்ஸ்'கு உடனே உங்க பேரைத்தான் சொல்றாங்க."

"அப்படியா? ஆச்சரியமாயிருக்கே?"

"இதுலே ஆச்சரியத்துக்கு என்ன இருக்குதுங்க?"

பேராசிரியர் கள்ளப்பிரான் பிள்ளை இரண்டாவது தடவையாக மூக்குக் கண்ணாடியைக் கழற்றி வைத்துவிட்டுக் காதோரமாகத் தலையைச் சொறிந்தார். சில விநாடிகளுக்குப் பின்பு பேராசிரியர் பேசத் தொடங்கிய பேச்சின் ஆரம்பம் வந்தவருக்கு நம்பிக்கை அளிப்பதாக இருந்தது.

"நோட்ஸ் போடறதாயிருந்தா எத்தனை ஆயிரம் பிரதிகள் அச்சிடலாம்னு நினைச்சிருக்கீங்க?"

"நீங்க எப்படிச் சொல்றீங்களோ, அப்படியே செய்யிறோம் ஸார்."

"செய்யிறதைப் பற்றி ஒண்ணும் இல்லே. 'நோட்ஸ்' படிச்சுப் பரீட்சை எழுதறதே கேவலம்னு நினைக்கிறவன் நான். என்னையே 'நோட்ஸ்' எழுதச் சொல்றீங்களேன்னு பார்த்தேன்." என்று மறுபடியும் தலையைச் சொறிந்தார் பேராசிரியர். 'இந்தக் கள்ளப்பிரான் பிள்ளை நிச்சயமாக ஓர் அப்பாவிதான்' என்பதை இதற்குள் தீர்மானம் செய்து கொண்டு விட்டான் வந்தவன்.

ஏறக்குறைய ஒரு மணி நேரம் வரை அப்படியும் இப்படியுமாகச் சுற்றி வளைத்துப் பேசிய பிறகு, வந்தவனுக்குத் தாம் விரும்புவதைத் தெரிவிக்கும் அறிகுறியாக வீட்டுக்குள்ளிருந்து ஒரு கப் காபியும் வரவழைத்து அவனுக்குக் கொடுத்துவிட்டார் கள்ளப்பிரான் பிள்ளை. ஆள் தன் பக்கம் சாய்ந்துவிட்டார் என்பது அவனுக்குப் புரிந்தது.

வந்திருந்த புத்தகக் கம்பெனிக்காரன் புத்திசாலியாக இருந்தான். கள்ளப்பிரான் பிள்ளை அரைகுறை மனத்தோடு இருக்கிறார் என்பதையோ, அவர் இன்னும் 'நான் உங்களுக்கு நோட்ஸ் எழுதிக் கொடுக்கிறேன்' என்று அதிகார பூர்வமாகச் சம்மதிக்காததையோ புரிந்து கொள்ள மறுத்தவனாக, அவர் சம்மதித்து ஒப்புக் கொண்டு விட்டதாகவே வைத்துக் கொண்டு, தொடர்ந்து பேச்சுக்களை நடத்தினான், அந்தக் கம்பெனிக்காரன். அப்பாவிகளிடம் எப்படிப் பழகுவது என்பது அந்தப் புத்திசாலிக்கு நன்றாகத் தெரிந்திருந்தது.

"நோட்ஸுக்கு, கள்ளப்பிரான்ஸ் கைடு எகனாமிக்ஸ்னு பேர் வச்சிடலாம்னு பார்க்கிறேன். உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபணை இருக்காதே?"

"ஆட்சேபணை ஒண்ணும் இல்லே. நம்ப பேரை நாமே டமாரம் தட்டிக்கிறது நல்லாயிருக்குமான்னு தயங்கறேன்" என்ற சொற்களை இழுத்துப் பேசித் தலையைச் சொறிந்தபோது, கள்ளப்பிரான் பிள்ளையின் முகத்தில் அசட்டுத்தனமான வெட்கம் தெரிந்தது. ஆள் தலைகுப்புறச் சரிந்து விழுந்து கொண்டிருக்கிறார் என்பதை வந்தவன் நன்றாகப் புரிந்து கொண்டுவிட்டான்.

"கண்டிப்பா அந்தப் பேர்லேதான் ஸார் நோட்ஸ் வெளி வரணும். உங்க பேருக்கு ஒரு மௌவுஸ் உண்டு. நோட்ஸ் விற்பனையாகிறதுக்கு அந்தப் பேர் துணை புரியும்" என்று அவருடைள சபலமும் நைப்பாசையும் தெரிந்து பேசினான் வந்தவன். கள்ளப்பிரான் பிள்ளைக்கு மேலும் அசடு வழிந்தது.

"அப்படி செய்யிறதுதான் சரி என்று நீங்க அபிபராயப்படறதாயிருந்தால் எனக்கு ஆட்சேபணை இல்லை. இந்த விஷயத்துலே நான் உங்களுக்கு என்ன யோசனை சொல்றதுக்கு இருக்கு?"

"ரொம்ப நல்லதுங்க. 'ஸ்கிரிப்ட்' என்னிக்கித் தருவீங்க? எப்போது அச்சுக்குக் கொடுக்கலாம்? இந்த வருஷம் பரீட்சைக்குப் போற பிள்ளைகள் நிறையப் புண்ணியம் பண்ணியிருக்கணும். நீங்க நோட்ஸ் எழுதறேன்னு ஒப்புக் கொண்டது அவங்க அதிர்ஷ்டம்."

"இதென்னது? நிறைய ஸ்தோத்ரம் பண்ணறீங்களே, எனக்குப் பிடிக்கவே பிடிக்காது. புகழ்ச்சிக்கு நான் கூசறவன்" என்று பேராசிரியர் சொல்லித் தலையைச் சொறிந்தபோது சொற்கள்தாம் புகழ்ச்சியை வெறுப்பதாகப் பேசினவே தவிர, முகம் அதற்கு மலர்ந்திருந்தது. இப்போதும் அவருடைய முழு அப்பாவித்தனமும் ஒன்று சேர்ந்து முகத்தில் தெரிந்துவிட்டது.

இதற்கு அப்புறம் அடுத்த ஞாயிற்றுக்கிழமையை புத்தகக் கம்பெனிக்காரன் அவரிடம் வந்து 'ஸ்கிரிப்ட்' வாங்கிக் கொண்டுபோனதும், நோட்ஸ் அச்சிடத் தொடங்கியதும், அச்சிட்டு முடிந்தவுடன் அழகிய மூவர்ண அட்டையோடு 'கள்ளபிரான்ஸ் கைட் டு எகனாமிக்ஸ்' என்ற பெயரோடு அது வெளிவந்து விற்பனையானதும் மிக விரைவாக நடைபெற்ற காரியங்கள்.

உள்ளூர்க் கல்லூரி மாணவர்களும், வெளியூர்க் கல்லூரி மாணவர்களும், சகல விதத்திலும் தங்கள் புத்தியைக் 'கள்ளப்பிரான் காட்டிய வழி'யில் செலுத்திப் பொருளாதாரத் தேர்வில் வெற்றி பெற முயன்று கொண்டிருந்தார்கள். பொருளாதாரப் பரீட்சையைப் பொறுத்த மட்டிலே கள்ளப்பிரானுடைய கருணையை எல்லாரும் வியந்தார்கள். 'நோட்ஸ்' முடிவில் ஐயாயிரம் பிரதிகள் விற்பனையாகிப் பிறகு போதாமற் போய் மீண்டும் ஐயாயிரம் அச்சிட்டு, அதுவும் பற்றாமல் மூன்றாவது முறையாக மேலும் ஐயாயிரம் அச்சிட்டு விற்பனையாகித் தீர்ந்து போய்விட்டது.

தாம் வாய் விட்டுக் கேட்காமல் கம்பெனிக்காரர்களாகவே ஏதேனும் பணம் கொண்டு வந்து கொடுப்பார்கள் என்று எதிர்பார்த்தார் கள்ளப்பிரான்பிள்ளை. நோட்ஸைப் புகழ்ந்து கிடைத்துக் கொண்டிருந்த கடிதங்கள் மட்டும் நாள் தவறாமல் புத்தகக் கம்பெனியிலிருந்து ஒழுங்காக ரீ டைரெக்ட் ஆகி வந்து கொண்டிருந்தன. அந்தத் 'தபால் புகழ்' ஏற்படுத்தியிருந்த பொய்க் கௌரவத்தில், 'பணத்தைப் பற்றிப் பேசுவதே அகௌரவம்' என்று எண்ணிக் கள்ளப்பிரான் பிள்ளை கொஞ்ச நாட்களுக்குப் பேசாமல் கௌரவமாகக் கல்லூரிக்குப் போய் வந்து கொண்டிருந்தார். எங்கே பார்த்தாலும் பேராசிரியர் கள்ளப்பிரான் பிள்ளையைப் பற்றியே பேச்சாக இருக்கும் போது, பணத்தைப் பற்றி யாராவது கவலைப்படுவார்களா? பொருளாதாரப் பேராசிரியர் பணத்தைப் பற்றிக் கவலைப்படாமல் பின் வேறு யார் கவலைப்படுவது என்று உங்களுக்குச் சந்தேகமாக இருக்கலாம். ஆனால் கள்ளப்பிரான் பிள்ளையின் தத்துவமே வேறு. அவர் எதைப் பற்றியுமே கவலைப்படுவதில்லை. அதை நினைத்துத் தான் அவர் குடும்பத்தார் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்களே, போதாதா அது?

"என்ன, நோட்ஸ் எழுதிக் கொடுத்தீர்களே! ஏதாவது பணத்துக்கு வழி உண்டோ, இல்லையோ?" என்று ஒரு நாள் சாயங்காலம் வீட்டுச் செலவுக்குக் கஷ்டமாக இருந்ததைப் பற்றிப் பிரஸ்தாபித்த சூட்டோடு விசாரித்தாள் ஸ்ரீமதி கள்ளப்பிரான் பிள்ளை. அப்போதுதான் முதல் தடவையாக, புத்தகக் கம்பெனிக்காரனிடம் பணம் கேட்டால் என்ன என்பதைப் பற்றி அவர் யோசிக்கத் தொடங்கினார். சட்டையை மாட்டிக் கொண்டு புத்தகக் கம்பெனிக்காரனைத் தேடிப் புறப்படுவதற்கு இறங்கினவர், நடந்துபோய் அந்தப் புத்தகக் கம்பெனிக்குள் நுழைவது கௌரவம் அல்ல என்று எண்ணியவராய்த் தெருவில் போய்க் கொண்டிருந்த சைக்கிள் ரிக்ஷா ஒன்றைக் கைதட்டிக் கூப்பிட்டார். அதில் ஏறிக் கொண்டு அவர் 'நோட்ஸ்' வெளியிட்டிருந்த புத்தகக் கம்பெனிக்குப் புறப்பட்டபோது மாலை ஆறு மணி இருக்கும். போய்க் கொண்டிருக்கும் போது எத்தனை எத்தனையோ இனிய கற்பனைகள்! 'நோட்ஸ்' வெளிவந்த பிறகு இப்போதுதான் முதல் முதலாக அந்தக் கடைக்குப் போகிறோம். கம்பெனிக்காரனுக்கு நம்மை அங்கே பார்த்ததும் தலைகால் புரியாது. ஓடியோடி விழுந்து விழுந்து உபசரிக்கப் போகிறான். கடையையும், அச்சிடும் இடத்தையும் சுற்றிக் காண்பித்து அங்கே வேலை செய்பவர்களை எல்லாம் கூப்பிட்டு அறிமுகப்படுத்தப்போகிறான். சும்மாவா பின்னே? கள்ளபிரான்ஸ் கைட் டு எகனாமிக்ஸின் ஆசிரியரே விஜயம் செய்கிறார் என்றால் கேட்கவா வேண்டும்?

பேராசிரியருக்கு வரவேற்பு மிகவும் தடபுடலாகத்தான் இருந்தது. யாரோ நாலைந்து இளம் பெண்கள் நாற்காலிகளில் உட்கார்ந்து சிரிப்பும் கும்மாளமுமாகப் புத்தகக் கம்பெனிக்காரரிடம் பேசிக் கொண்டிருந்தார்கள் "ஸார்! வரணும் வரணும் இவங்க எல்லாம் உங்க பக்தர்கள். உங்க எகனாமிக்ஸ் நோட்ஸைப் படிச்சுட்டு நம்ம கடையைத் தேடி வந்திருக்காங்க. ஸாரைக் கொண்டே இங்கிலீஷுக்கும் ஒரு நோட்ஸ் போட்டா என்னன்னு கேக்கறாங்க" என்று புத்தகக் கம்பெனிக்காரன் அவர்களை அறிமுகப்படுத்தியபோது பேராசிரியர் கள்ளப்பிரான் பிள்ளை மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜைமேல் வைத்துவிட்டுத் தலையைக் காதோரமாகச் சொறிந்தார். அந்தப் பெண்கள் குலுக்கலும் மினுக்கலுமாக எழுந்து நின்று, 'நமஸ்தே புரெபஸர் ஸார்' என்றபோது மறுபடியும் தலையைச் சொறிந்தார் பேராசிரியர். கடைப் பையன் காபி சிற்றுண்டி வாங்கி வந்தான். "இதெல்லாம் எதுக்கு? வீட்டிலேயே காபி, டிபன் எல்லாம் முடிச்சாச்சே!" என்று பிகு பண்ணிக் கொண்டார் கள்ளப்பிரான் பிள்ளை.

கடைக்காரன் விடுவானா? "நீங்க அப்பிடிச் சொல்லவே கூடாது. முதல் முதலா இப்பத்தான் நம்ம கடைப்படி ஏறி வந்திருக்கீங்க" என்று அவன் உபசாரம் செய்து குழைந்தான். "எடுத்துக்குங்க ஸார்" என்று தன் அழகான பல்வரிசை தெரியக் கிண்கிணிச் சிரிப்போடு வந்திருந்த பெண்களில் ஒருத்தியே உபசரித்தபோது பேராசிரியருக்கு உச்சி குளிர்ந்து போய்விட்டது. மூன்றாவது தடவையாக மூக்குக் கண்ணாடியைக் கழற்றிவிட்டுத் தலையைச் சொறிந்தார். பின்பு சிற்றுண்டி சாப்பிடத் தொடங்கினார். மானசீகமாக அவரையே சாப்பிட்டு ஏப்பம் விட்டுக் கொண்டிருந்தான் புத்தகக் கம்பெனிக்காரன். இந்த உலகத்தில் அப்பாவிகளுடைய பலவீனங்கள் என்ன என்ன என்பது அவனுக்கு அத்துப்படி.

கள்ளப்பிரான் பிள்ளையும் காத்துக் காத்துப் பார்த்தார். அந்தப் பெண்கள் எல்லாரும் எழுந்து போனபின் தனிமையில் கம்பெனிக்காரனிடம் பண விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்கலாம் என்று நாகரிகமாக இருந்தார். தம்மைப் புகழ்கிற நாலு பேருக்கு முன்னே தமக்குத் தற்சமயம் பணத் தேவை இருக்கிறது என்று சொல்வதற்குக் கூசினார். 'அவர் ஏதோ சொல்லிக் கேட்பதற்குக் கூசிக் கொண்டிருக்கிறார்' என்பது கம்பெனிக்காரனுக்கும் புரிந்துவிட்டது. அப்படிப் புரிந்ததனால்தான் அவர் புறப்படுகிற வரையில் தன்னைச் சுற்றி யாராவது இருக்கும்படி செய்து கொண்டிருந்தான். கடையே அமைதியாக மாறித் தாம் மட்டும் தனியாக இருப்பதை ஊர்ஜிதம் செய்து கொண்டாலன்றி அவர் வாய்விட்டுப் பணம் கேட்கக் கூசுவார் என்பது அவனுக்குத் தெளிவாய்த் தெரிந்து போய்விட்டது. அப்பாவிகள் என்ன பேச இருக்கிறார்கள் என்பதைக் கண்டு பிடிப்பது புத்திசாலிகளுக்குப் பெரிய காரியம் அல்லவே! ஏற்கனவே உட்கார்ந்து கொண்டிருந்த நாலு பெண்கள் போதாதென்று இளைஞர்களில் சிலர் வேறு கடைக்குள் நுழைந்து உட்கார்ந்துவிட்டார்கள். பேராசிரியர் கள்ளப்பிரான் பிள்ளை அதிகக் கூச்சம் அடைந்து பணத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்காமலே புறப்பட்டு விட்டார்.

கம்பெனிக்காரனுக்குப் பரம சந்தோஷம். பண விஷயமாக வந்தவர் அதைத் தன்னிடம் சொல்லிக் கேட்க முடியாத சூழ்நிலை கடையில் இயல்பாகவே உண்டாகியிருந்ததே என்று பெருமைப்பட்டுக் கொண்டான். கள்ளப்பிரான் பிள்ளை, "அப்ப நான் இப்படி... வரட்டுமா? அப்புறம் பார்க்கிறேன்" என்று புறப்பட்டபோது கூடவே எழுந்திருந்த கம்பெனிக்காரன் வாயிற்படி வரை சென்று வழியனுப்பிவிட்டு வந்தான். வரட்டுமா என்பதோடு போய்த் தொலையக் கூடாதோ? அப்புறம் பார்க்கிறேன் என்று வேறே சொல்லிவிட்டுப் போகிறாரே! ஒரு வேளை நாளைக்கும் பண விஷயமாகப் பிரஸ்தாபிக்க வரப்போகிறாரோ? என்று எண்ணி, நாளைக்கு இவரை எப்படிச் சமாளிப்பது? என்ற சிந்தனையை இன்றைக்கே ஏற்படுத்திக் கொண்டு கடைக்குள்ளே திரும்பிச் சென்றான், புத்தகக் கம்பெனிக்காரன். கள்ளப்பிரான்பிள்ளை அவர்கள் பொருளாதாரம் + அப்பாவித்தனம் + அசட்டுத்தனம் எல்லாம் நிறைந்தவர் என்பதை நன்றாகப் புரிந்து கொண்டிருந்ததனால், ஊம்! இவர் ஒரு சுண்டைக்காய், இவரைத் தண்ணீர் காட்டி அனுப்புவதா எனக்குப் பிரமாதம்? என்று நினைத்து, கள்ளப்பிரான்பிள்ளையின் மறுநாள் விஜயத்தைப் பற்றிய பிரச்னையை எண்ணி இவ்வளவு கவலைப்படுவதே தன் தகுதிக்குக் குறைவு என்று தீர்மானமாய் அதை மறந்து போக முயன்றான். மறுநாள் சைக்கிள் ரிக்ஷாவுக்குக் காசு இல்லையாதலால் கள்ளப்பிரான் பிள்ளை நடந்தே புத்தகக் கம்பெனிக்குப் புறப்பட்டார்.

ஒரே பாடாக ஆளே இல்லை. விசாரித்ததில், "முதலாளி வெளியிலே போயிருக்காக. அவுக வர்ரதுக்கு எந்நேரமாகும்னு தெரியல்லே" என்றான் கடைப் பையன். "கொஞ்சம் இருங்க ஐயா! காபி வாங்கியாரேன்" என்று பையன் தம்ளரை எடுத்துக்கொண்டு புறப்பட்டபோது, "இல்லை தம்பி! வேண்டாம்" எனக் கள்ளப்பிரான் பிள்ளையே மறுத்துவிட்டார். பையனும் போகவில்லை. தாம் சொன்னவுடனே, 'இல்லிங்க, கண்டிப்பாகக் காபி குடிக்கணும்' என்று வற்புறுத்தாமல் அந்தப் பையன் உடனேயே பேசாமல் இருந்துவிட்டதை அந்தரங்கமாக அவரே வெறுத்தார். அந்த வெறுப்புடன் அங்கு உட்காரப் பிடிக்காதவராய், "தம்பி, நான் வந்திருந்தேன்னு மட்டும் உங்க ஐயா கிட்டச் சொல்லு" என்று கூறிவிட்டுக் கிளம்பினார். பையன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டு கைகளைப் பெரிதாய்க் கூப்பிக் கும்பிடு போட்டான். ஒரு மணி நேரத்துக்குப்பின் கம்பெனிக்கார முதலாளி கடைக்கு வந்ததும் பையன் 'பேராசிரியருடைய விஜயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தான்.

"புறப்பட்டுப் போயிட்டாரில்ல? ரொம்ப நல்ல காரியம் பண்ணனே நீ!" என்று சொல்லிவிட்டு நாற்காலியில் கால்மேல் கால் போட்டு உட்கார்ந்து கொண்டு சுகமாக ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துப் புகைக்கலானான். அந்தப் புகையில் பேராசிரியர் கள்ளப்பிரான் பிள்ளையின் ஞாபகமும் சேர்ந்தே புகைந்து போய்விட்டது.

அடுத்து மூன்றாம் நாள் சாயங்காலம் கள்ளப்பிரான்பிள்ளை வந்த போது கடையிலே ஒரு சினிமா நட்சத்திரமும், அவருடைய கணவரென்று உலகத்தாரால் ஒப்புக் கொள்ளப்பட்ட புருஷ ஜன்மமும், மூன்று கல்லூரி மாணவிகளும் இருந்தார்கள். கடை வாசலில் சினிமா நட்சத்திரத்தின் காரைச் சுற்றி ஒரு விடலைக்

கும்பல் கூடியிருந்தது. இந்த நிலையில் கடைக்குள்ளே நுழைவதற்கே கூசிய கள்ளப்பிரான் பிள்ளை தயங்கித் தயங்கி உள்ளே நுழையவும், கம்பெனிக்காரன் தன்னிடம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தவர்களை எல்லாம் விட்டுவிட்டு எழுந்து ஓடிவந்து திருவாளர் பிள்ளையை ஆர்வத்துடன் வரவேற்று முதலில் சினிமா நட்சத்திரத்துக்கு அறிமுகப்படுத்திவிட்டு, அப்புறம் அவளுடைய 'இவருக்கு' அறிமுகப்படுத்தியபின் வந்து கூடியிருந்த மாணவிகளுக்கும் அறிமுகப்படுத்தி முறையே அந்த மூன்று அறிமுகங்களாலுமே அவரை வீழ்த்திவிட்டபின் காபி சிற்றுண்டியும் அருந்தச் செய்தாயிற்று. பாவம்! பேராசிரியரான திருவாளர் கள்ளப்பிரான்பிள்ளை மூக்குக் கண்ணாடியைக் கழற்றி மேஜையில் வைத்துவிட்டுக் காதோரமாகத் தலையைச் சொறிந்தார். அதைப் பார்த்து, நிலைமை அபாயகரம்! ஆள் வாய்விட்டுக் கேட்டுத் தொலைத்துவிடுவான் போலிருக்கே! என்ற பயத்தோடு, "புரொபஸர் ஸார்! நானே நாளைக்கு உங்களை வீட்டிலே வந்து பார்க்கலாமின்னு இருக்கேன். வீட்டிலே இருப்பீங்களில்ல?" என்று கேட்டான் கம்பெனிக்காரன்.

பேராசிரியர் மலர்ந்து போனார். 'இவனே நாளைக்குக் கொண்டு வந்து கொடுத்திடறதாக இருக்கான் போலிருக்கே! வாய்விட்டுக் கேட்டு நம்மைக் குறைச்சுப்பானேன்?' என்ற பிரமையான நம்பிக்கையோடு, "அப்ப நான் வர்றேன். நாளை வீட்டிலேயே இருக்கேன்" எனக் கூறி விடை பெற்றார் கள்ளப்பிரான்பிள்ளை. கம்பெனிக்காரன் நிம்மதியாகப் பெருமூச்சுவிட்டான். கள்ளப்பிரான் பிள்ளையும் நிம்மதியாகத்தான் வீடு போனார். அவர்தாம் இரண்டு சாமர்த்தியங்களுக்கு உரிமையாளராயிற்றே! அப்பாவியாக இருக்க எல்லாராலும் முடிந்துவிடுமா என்ன?

**(கலைமகள், தீபாவளிமலர், 1962)**

## 73. தர்மோபதேசம்

தர்மத்தைப் பற்றி உபதேசம் பண்ணுவதும், எழுதுவதும் ஒரு தொழில் என்று நீங்கள் நிச்சயமாக ஒப்புக் கொள்ளமாட்டீர்கள்; நானும் ஒப்புக் கொள்வதற்கில்லை. ஏன், இந்த உலகத்தில் எவருமே ஒப்புக் கொள்ள மாட்டார்கள். ஆனால் ஸ்ரீமான் பிரம்மஸ்ரீ முகுந்தராம தீட்சிதர் அவர்களுக்குத் தொழில் தர்மோபதேசம்தான். தர்மத்தைப் பற்றி நினைப்பதும், பேசுவதும், ஒரு தொழில் என்று நிரூபித்து அதன் மூலம் ஆயிரம் ஆயிரமாகப் பணம் புரட்டிக் கொண்டிருக்கிறவர் அவர். அதோ கிருஷ்ண நகர் கண்டோன்மென்ட் மைதானத்தில் பக்த சிரோன்மணிகள் பல்லாயிரம் பேருக்கு ஸ்ரீமத் பாகவதத்தை அவர் பிரவசனம் செய்து கொண்டிருக்கிற கம்பீரத்தைக் கேளுங்கள். மாதிரிக்குக் கொஞ்சமாவது கேளுங்கள். ஒரு சுவாரஸ்யமான கட்டம் வருகிறது... "கோபிகாஸ்திரீகள் அத்தனை பேரும் சுவர்ணவிக்ரகம் போலப் பிறந்த மேனியா நதி தீரத்திலே நிக்றா... அவளோட வஸ்த்ரங்களைக் காணலே... நதிக்கரையிலே எல்லா எடத்திலேயும் தேடிப் பார்த்தாச்சு. ஐயோ... மானமில்லாம வெச்சையில்லாம... இப்படி நிக்கறோமேன்னு... அவாளோட மனசெல்லாம் தவிக்கிறது. அப்போ கரைமேலே புன்னை மரத்துலேர்ந்து கலகலன்னு சிரிக்கறார் பகவான்... கோபிகாஸ்திரீகள்ளாம் ரொம்பக் கூச்சத்தோட தங்களோட பருத்த ஸ்தன்யபாரங்களை ரெண்டு கைகளாலேயும் மூடிக் கொண்டு மேலே நிமிர்ந்து பகவானைப் பார்க்கறா..." மாதிரிக்கு இத்தனை போதும். பிரம்மஸ்ரீ தீட்சிதருடைய கதையில் 'ஸெக்ஸ்' அம்சமும் உண்டு. 'செக்ஸ்' அம்சமும் விளம்பரங்களும் ரொம்ப விற்பனையாகிற பத்திரிகைக்கு எத்தனை அத்தியாவசியமோ அத்தனை அத்தியாவசியமாகத் தீட்சிதரின் கதைக்கும் தேவைப்பட்ட விஷயங்களாயிருந்தன. புராணமானால் என்ன? இதிகாசமானால் என்ன? எந்த இடத்தில் எதைக் கலந்து எப்படிப் பிரவசனம் செய்ய வேண்டுமென்பது தீட்சிதருக்கு நன்றாகத் தெரியும். பத்திரிகைகளில் கால் பக்கம், அரைப் பக்கம், ஒரு கலர், இரண்டு கலர், விளம்பரங்கள் எல்லாம் இருக்கிற மாதிரி தீட்சிதருடைய கதையில்கூட விளம்பரங்கள் உண்டு. தீட்சிதருடைய உபன்யாச உபதேசங்களில் நடுநடுவே பெரிய மனிதர்கள், வசதியுள்ளவர்கள், எல்லாரையும் பற்றிய புகழுரைகள் இருக்கும். நிறையவே இருக்கும்.

புனிதமான இராமாயணக் கதையில் ஸ்ரீமத் வால்மீகி பகவான் தசரத சக்ரவர்த்தியின் வள்ளன்மையைப் பற்றிச் சொல்லியிருக்கிற இடம் வரும்போது எதிரே உட்கார்ந்து உபன்யாசத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும் மைலாப்பூர்ப் பிரமுகரையோ, நீதிபதியையோ, மந்திரியையோ, தொழிலதிபரையோ தூக்கி வைத்துப் புகழ ஆரம்பித்துவிடுவார் அவர்.

“வால்மீகி பகவான் அந்த நாளிலே தசரத சக்ரவர்த்தியைப் பற்றிச் சொல்லி யிருக்கிற குணங்கள்ளாம் இன்னிக்கு இவாகிட்ட அப்படியே பொருந்தியிருக்கு. இவாள் மகாக்ஞாதாள்.ரொம்ப ச்ரேயஸ் உள்ளவா. பரம பக்தாள்... நல்ல சித்திரை மாசத்து வெயில்லே ஒருநாள் உச்சி வேளைக்கு இவாள் க்ருஹத்துக்குப் போயிருந்தேன்... அப்பப் பாருங்கோ... இவா தன் கையாலேயே நல்ல காபூல் மாதுளம் பழமாப் பார்த்து எடுத்து ஜுஸ் பிழிஞ்சு கொடுத்தா. எதுக்குச் சொல்ல வந்தேன்னா... இவா அப்படி ஒரு ஆஸ்திகப் பற்றுள்ளவா...” என்று நடுவிலேயே தசரதச் சக்ரவர்த்தியை நிராதரவாகவோ, நிர்க்கதியாகவோ, விட்டுவிட்டு எதிரே உள்ள பிரமுகருக்கு டபிள் கலர் விளம்பரம் இரண்டு பத்தி நாலு காலம் போட்டு வைப்பார். அவர் தர்மோபதேசம் - அதாவது இந்தக் கலியுகத்திலே தர்மத்தை இரட்சிப்பதற்காக உபதேசம் செய்கிறவர் என்பதைவிட, உபதேசம் செய்வதற்கு இதுதான் வழி என்று தாமாகவே ஒரு தர்மத்தைப் படைத்துக் கொண்டிருப்பவர் என்பதே பொருத்தமாயிருக்கும் என்பேன் நான்.

இங்கே இதுவரை சொன்னவற்றைக் கதாநாயகர் பற்றிய அறிமுகமாக நீங்கள் வைத்துக் கொண்டால் இனிமேல்தான் கதை ஆரம்பமாகிறது என்று சொல்ல வேண்டும்.

ஸ்ரீமத் தீட்சிதர் அவர்கள் தம்முடைய உபன்யாசங்களுக்கு நடுவே அடிக்கடி உத்தமமான மக்கள் அனுசரிக்க வேண்டிய குணங்களைப் பற்றியும் தர்மங்களைப் பற்றியும் நிறையச் சொல்லுவார். தர்மங்களை உபதேசம் செய்வதென்றால் அவருக்கு அபாரமான உற்சாகம் பிறந்துவிடும். நியாயமாகக் கடைப்பிடிக்க வேண்டியவை என்று வேதங்களும், சாஸ்திரங்களும் கடைப்பிடிக்கச் சொல்லி வற்புறுத்துகிறவற்றை எடுத்துக் கூறுவதைத் தமது மேலான கடமையாகக் கொண்டிருந்தார் அவர். யதார்த்த உலகத்தின் கஷ்ட நஷ்டங்களுக்கு ஒத்து வராத தர்மங்களை உபதேசம் பண்ணிக் கொண்டும், ஒத்து வருகிற தர்மங்களைச் செய்ய மறந்தும் எப்படி எப்படியோ வாழுகிற பாபாத்மாக்களை இரட்சிக்கும் பொறுப்பு தீட்சிதரிடமிருந்தது. அவர் அடிக்கடி உபதேசம் பண்ணுகிற தர்மங்களில் ஒன்றுதான் ஏழைச் சுமங்கலிப் பெண்களுக்குப் புடவை தானம் பண்ணுவது.

“வேத தர்மங்கள்ளாம் நசிச்சுப் போயிண்டே வரது... கலி காலத்துலே நாம ரொம்பக் கெட்டுக் குட்டிச் சுவராய்ப் போயிட்டோம். சின்னஞ்சிறுகள் எல்லாம் தலையெடுத்து என்னென்னவோ பேசறதுகள்... வெள்ளிக்கிழமையில் ரெண்டு மஞ்சள் கிழங்கும், வெற்றிலை, பாக்கும் வைத்து ஏழைச் சுமங்கலிக்கு ஒரு வஸ்த்ரம் தானம் பண்ணினால் சோமயாகம் செய்த பலன் இருக்கும். இந்த நாளிலே யார் இதெல்லாம் செய்யறா...? ரெண்டு ரூபாயும் மூன்று ரூபாயும்... கொடுத்து டிக்கட் வாங்கிச் சினிமாவுக்குப் போறதுகள். தர்மம் தானத்தைப் பற்றிக் கவலைப்படறவா குறைஞ்சு போயிட்டா. லோகத்திலே ஆஸ்திகாள் க்ஷீணிச்சுப் போயிருக்கா” என்று மனம் நொந்து போன துயரமான குரலில் ஸ்ரீமத் தீட்சிதர் அவர்கள் தமது உபன்யாசங்களுக்கு நடுவே தர்மத்தை ஞாபகப்படுத்துவார். அது அவர் கடமை.

பிரம்மஸ்ரீ தீட்சிதருடைய கதைகளில் இராமாயணம், பாகவதம், பாரதம், எல்லாம் நிறைவடைகிற பட்டாபிஷேக தினங்களில் நாற்பது ஐம்பது ஜோடி புது வேஷ்டிகளும், புதுப்புடவைகளும் குவியும். இந்த விதமாகக் கதாகாலட்சேபம் செய்கிறவர்களில் இவருக்குத்தான் 'ஸ்டார் வால்யூ' அதிகமாகையினால் வருமானமும் அதிகம். தர்மத்தை நினைப்பதற்கும் பேசுவதற்கும் எல்லா உபன்யாசகர்களாலும் முடியும் என்றாலும் தர்மத்தைச் சார்ந்து புகழும் பெருமையும் அடையச் சிலரால்தான் முடியும். 'தர்மத்தை உணர்ந்து கடைப் பிடிக்கிறவர்கள் ஒரு வருமானமும் அடைய முடியாது; தர்மத்தை உபதேசம் மட்டும்தான் செய்யணும். இந்த இரகசியம் ஸ்ரீமத் தீட்சிதர் அவர்களுக்குப் புரிந்திருந்ததைப் போல மற்ற உபன்யாசகர்களுக்குப் புரியவில்லை. அதனால் அவர்கள் எல்லாம் தங்கள் தொழிலில் 'ஸ்டார்' ஆகவும் முடியவில்லை. ஒளிபரப்பவும் முடியவில்லை. ஒரு தேங்காய் மூடிக்குப் புரந்தர தாஸரின் கதையைச் சொல்லிக் கொண்டும் ஐந்து ரூபாய்ப் பிரயோசனத்துக்காகத் துருவன் சரித்திரத்தை விவரித்துக்கொண்டும் அவர்கள் எல்லாம் 'ஸ்டார் வால்யூ' இல்லாமல் கஷ்டப்பட்டார்கள். அவர்களுக்கு எல்லாம் பிரம்மஸ்ரீ தீட்சிதருடைய புகழில் பொறாமையுண்டு. இருந்தும் என்ன? பொறாமைப்படத் தெரிந்தால் மட்டும் போதுமா? கெட்டிக்காரன் புகழை அடைவது எப்படி என்பதை யோசிக்க வேண்டுமே ஒழியப் பொறாமைப்படுவது எப்படி என்று யோசித்துக் கொண்டிருக்கக்கூடாது! புரிகிறதா?'

ஸ்ரீமத் தீட்சிதருடைய உபன்யாசங்களுக்கு நாள் தவறாமல் விஜயம் செய்து கொண்டிருந்த பெருமக்களில் இளைஞனாகிய முத்துசாமியும் ஒருவன். இன்றைய நாட்டிலுள்ள பிரச்சினைகளுக்கு முடிவு தேட இப்படி மந்தமான கதாகாலட்சேபங்களும், சாதி முறைகளை நினைவூட்டக்கூடிய மேற்கோள்களும் நிச்சயமாகப் பயன்படமாட்டா என்று தெரிந்திருந்தும் முத்துசாமி வேண்டுமென்றே ஒரு காரணத்துக்காக இந்தக் கூட்டங்களுக்குப் போய் வந்து கொண்டிருந்தான். ஒரு விஷயத்திலுள்ள குற்றங்குறைகளை அணுகித் தெரிந்து கொள்ளாமல் கேலி செய்யவோ, இகழவோ கூடாதென்று நினைக்கிற கொள்கையுடையவன் முத்துசாமி.

நடைமுறையில் யதார்த்த உலகத்திலுள்ள கஷ்டங்களுக்கு விடிவு தேடாமல் மேடைத் தர்மோபதேசம் செய்கிறவர்களைக் கண்டுபிடித்துக் களையெடுக்க வேண்டியது நாம் செய்கிற நற்பணிகளில் ஒன்று என்று நம்புகிறவன் முத்துசாமி. அப்படிக் கண்டுபிடிக்கிற வாய்ப்பும் விரைவில் அவனுக்கு ஏற்பட்டது.

அன்று தீட்சிதருடைய கதையில் பட்டாபிஷேக தினம். கதை நிகழ்ந்த மேடையில் பட்டுப் புடவைகளும், நூற்புடவைகளும் (சரிகைக் கரையிட்டவை) வேஷ்டிகளும், பழக்கூடைகளுமாக நிரம்பியிருந்தன. பிரமுகர்களும், பணக்காரர்களும், ஆஸ்திகப் பெருமக்களும், சூட்டிய மாலைகள் வேறு மலை மலையாகக் குவிந்து கிடந்தன. உபன்யாசகரான தீட்சிதர் புறப்படப் போகிறார். அவர் ஒரு காரிலும், அவருக்குக் கிடைத்திருந்த புடவைகள், புது வேஷ்டிகள், பழக்கூடைகள் வேறொரு காரிலுமாகச் செல்வதற்கு ஏற்பாடாகியிருந்தது. மேடைக்குப் பின் பக்கமாக அப்படியே நாலைந்து

கெஜ தூரம் நடந்து வந்து ஏறிக் கொள்கிற மாதிரி இரண்டு கார்களையும் கொண்டு வந்து நிறுத்தி விட்டார்கள். தீட்சிதரின் அருகில் வாய் புதைத்துப் பவ்யமாக உடன் வரும் பெரிய மனிதர்கள் புடைசூழக் காரை நோக்கி அவர் நடந்து வரும் வேளையில் எவரும் எதிர்பாராத விதமாய் முத்துசாமி அவருக்கு முன் பிரவேசித்து விநயமாக வணங்கினான். அவனுக்குப் பின்னால் பரட்டைத் தலையும் பஞ்சடைந்த கண்களோடு கூடிய முகமும், கிழிசல் புடவையுமாகப் பத்துப் பன்னிரண்டு சேரிப் பெண்களும், குழந்தைகளும் நின்று கொண்டிருந்தார்கள்.

"சுவாமி! ஒரு விண்ணப்பம். உங்களுடைய உபன்யாசங்களில் அடிக்கடி சுமங்கலிகளுக்கு வஸ்திரதானம் செய்வதைப் பற்றிச் சொல்லுகிறீர்கள். இதோ இவர்கள்தான் இன்று இந்த தேசத்தில் நிராதரவான சுமங்கலிகள். பத்து மணிக்கு ஒரு பட்டுப்புடவை. மூன்று மணிக்கு ஒரு பட்டுப்புடவை. இரவு ஒன்பது மணிக்கொரு பட்டுப்புடவை என்று கட்டும் பணக்கார சுமங்கலிகளைத்தான் நீங்கள் அதிகமாகச் சந்தித்திருப்பீர்கள். ஆனால் அவர்கள் தொகை இந்த நாட்டில் மிகவும் குறைவு. இதோ இப்போது என் பின்னால் நின்று கொண்டிருக்கிறார்களே இவர்களைப் போன்ற சுமங்கலிகள்தான் இந்தத் தேசத்திலே இருண்ட குடிசைகளில் ஆயிரம் ஆயிரமாக இருக்கிறார்கள். இவர்களுக்கு உபகாரம் செய்வதைவிட ஸ்ரீமந் நாராயணமூர்த்திக்குத் திருப்தி தருகிற செயல் வேறொன்றும் இருக்க முடியாது" என்று நிமிர்ந்து நின்று தைரியமாக வேண்டிக் கொண்டான் முத்துசாமி. தீட்சிதரைச் சூழ யக்ஞோபவீததாரிகளாய்ச் சட்டையில்லாமல் (எதையும் சட்டை செய்யாமல்) பக்தி செய்தபடி நின்று கொண்டிருந்த பெரிய மனிதர்கள் முத்துசாமியை முறைத்துப் பார்த்தார்கள்.

"நீங்க என்ன சொல்றேள்?... எனக்குப் புரியறாப்லே இன்னொரு தரம் சொல்லுங்கோ..." என்று முத்துசாமியைக் கேட்டார் தீட்சிதர்.

"சுமங்கலிக்கு வஸ்திரதானம் பண்ணினா சோமயாகம் செய்த பலன் சித்திக்கும்னு நீங்க தினம் சொல்லியதைக் கேட்டேன். இவர்களும் சுமங்கலிகள்தாம். மானத்தை மறைக்கக்கூடத் துணியில்லாமல் கிழிசலும் கந்தையுமாகக் கஷ்டப்படுகிறார்கள்..."

"நா சொன்னது உத்தம ஜாதி ஸ்திரீகளா உள்ளவாளைப் பத்தின்னா... அதம ஜாதி ஸ்திரீகளுக்குத் தானம் செய்தா சோமயாகப் பலன் கிடைக்காதோன்னோ?..."

முத்துசாமி சிரித்தான்! அவனுடைய சிரிப்பில் ஏளனம் ஒலித்தது.

"மன்னிக்கணும் சுவாமி! வறுமையாலும், வாழ்க்கை வேதனைகளாலும் கஷ்டப்படுகிறவர்களுடைய கஷ்டங்களைப் புரிந்து கொண்டு இரங்குவதுதான் மிகப் பெரிய ஆஸ்திகத்தன்மை. தர்மத்தைப் பற்றி மேடையில் பேசிவிட்டு வாழ்க்கையில் கடைப்பிடிக்கக் கூசுகிறவர்கள்தான் இன்றைய சமூகத்தில் நாஸ்திகர்கள்... நீங்கள் ஒரு நாஸ்திகர்... கண்டிப்பாக நீங்கள் ஓர் அப்பட்டமான நாஸ்திகர்..." என்று முத்துசாமி இரைந்து கூச்சலிட்டபோது தீட்சிதருக்கு பக்கத்திலிருந்தவர்கள் பயந்து போய்ப் 'போலீஸ்... போலீஸ்' என்று கூட்டத்தைக் கண்ட்ரோல் செய்ய வந்திருந்த

கான்ஸ்டபிளைக் கூப்பிடத் தொடங்கி விட்டார்கள். தீட்சிதருக்கு எதுவும் ஆகிவிடலாகாதே என்று அவர்களுக்குப் பயம்.

"போலீஸுக்கு அவசியம் ஒன்றுமில்லை! ஆஸ்திகத்தைக் காக்க ஆண்டவனை அழையுங்கள்! போலீஸை அழைக்காதீர்கள். நீங்கள் அழைத்தால் ஆண்டவன் வரமாட்டான். போலீஸ்காரன்தான் வருவான்" என்று சொல்லிவிட்டு அந்தக் கூட்டத்திலிருந்து வெளியேறிச் சென்றான் முத்துசாமி.

இரவு பதினொரு மணிக்குத் தீட்சிதர் பெல்லி பெத்தசாமி செட்டி பட்டுக்கடை வாசலில் பெரிய டாக்ஸி ஒன்றில் போய் இறங்கியதையும் பட்டாபிஷேகத்தில் கிடைத்த புது வேஷ்டி புடவைகளை அப்படியே மடிப்புக் கலையாமல் இரண்டு இரண்டு ரூபாய் குறைத்து அந்தக் கடையில் (ஒரு கதவை மட்டும் இரகசியமாய்த் திறந்து) கொடுத்துப் பேரம் முடித்துத் திரும்பியதையும், முத்துசாமி தன் கண்களாலேயே பார்த்தான். மனம் நொந்து பெருமூச்சு விட்டான். மனிதனுடைய கஷ்டநஷ்டங்களுக்கு நெகிழாமல், கோவிலுக்கும், சாஸ்திரங்களுக்கும் மட்டுமே நெகிழ்கிற ஆஸ்திகத்தினால் தெய்வமே திருப்தியடையாது என்பதை இந்த நாட்டிலுள்ள பாமரர்களுக்கு எப்படிப் புரிய வைப்பது? அப்படிப் புரிய வைக்கிறவரை தர்மத்தை உணரவும், கடைப் பிடிக்கவும் தவறி வெறும் உபதேசம் செய்கிறவர்கள் மட்டும்தான் ஆஸ்திகர்களாகப் புகழப்படுவார்கள். என்னைப்போல் தர்மோபதேசத்தைவிடத் தர்மகர்த்தாவாக இருப்பது மேல் என்று கருதி உணர்ந்து செயல்பட்டு அதற்காகப் போராடுகிறவர்கள் நாஸ்திகர்களாக இகழப்படுவார்கள். ஆனாலும் கவலை இல்லை! நான்தான் நிஜமான ஆஸ்திகன் என்ற பெருமிதம் என் மனச்சாட்சிக்கு உண்டு. 'அது போதுமே நான் பெருமைப்படுவதற்கு' என்று எண்ணினான் முத்துசாமி! மனிதனை மதிப்பதன் மூலமாகத் தெய்வத்தை மதிப்பவன் அவன். மனிதன்தான் நடமாடு கோவில் என்று நம்புகிறவன் அவன். மனித குலத்தைத் தவிக்க விட்டு வேறு எதையோ பக்தி செய்து கொண்டிருக்க அவனுக்குத் தெரியாது. மனிதனை இலட்சியமே செய்யாமல் வாழ அவனால் முடியாது. காரணம்? அவன் உபன்யாசம் செய்து சம்பாதிப்பதில்லை. உழைத்துச் சம்பாதிக்கிறான். தர்மோபதேசம் செய்ய அவனுக்குத் தெரியாது. தெரியவும் வேண்டாம். தெய்வத்தை மட்டும் மதிப்பதன் மூலம் மனித குலத்தை அலட்சியம் செய்ய அவனுக்குத் தெரியாது!

**(தாமரை, அக்டோபர் , 1962)**

## 74. செல்வாக்கு

**க**ண் நிறைய ஆவலும், இதழ் நிறையக் குறுநகையும், உடல் நிறைய நளினமுமாக அந்தப் பெண் கதவோரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள்.

மாதவன் தலையைக் குனிந்துகொண்டு தெருவில் நடந்தான். இப்படி எத்தனை கண்கள்? எத்தனை பெண்கள்? 'சாளரத்தில் பூத்த தாமரை மலர்கள்' என்ற கவியின் கற்பனை அவன் நினைவில் மெல்லப் படர்ந்து மறைந்தது. எதையோ நினைத்துக் கொண்டு அவன் பெருமூச்சு விட்டான்.

தெருத் திருப்பத்தில் இறங்கி வாசகசாலை இருக்கும் பக்கமாக அவன் கால்கள் நடந்தன. ஐயாயிரத்துக்குக் குறையாமல் மக்கள் தொகையும், பொய்யா வளமும் கொண்ட அந்த ஊரில் மாதவனுக்குப் பழக்கமானவர்கள் வாசக சாலையிலுள்ள புத்தகங்களும், மலையோரத்து ஓடைகளும், சோலைகளும், சாலைகளும், வயல்வெளிகளும் தவிர வேறில்லை.

மனிதர்களைப் பழக்கப்படுத்திக் கொள்ளாதவனுக்கு அனுதாபப்பட யார் கிடைப்பார்கள்? அது ஒரு இரண்டுங் கெட்டான் ஊர். நகரத்தோடும் சேர்க்க முடியாது; கிராமத்தோடும் சேர்க்க முடியாது. டாக்டர்கள், இரண்டொரு வக்கீல்கள், நிறையப் படித்துப் பட்டம் பெற்றவர்கள், எல்லோரும் இருந்து நகரத்தின் பெருமையை அதற்கு அளித்தார்கள். வறட்டுத் திமிரும், முரட்டுக் குணமும், எதையும் சிந்தித்து முடிவு செய்யாத அலட்சிய மனப்பான்மையும், அது ஒரு கிராமம்தான் என்பதையும் அடிக்கடி நினைவுபடுத்திக் கொண்டே இருந்தன.

"சார்!......உங்களைத்தான்...." கீழே பார்த்துக் கொண்டே வாசகசாலைக்குள் படியேறி நுழைவதற்கிருந்த மாதவன், குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். சிரித்த முகமும் கூப்பிய கைகளுமாக நீலகண்டன் நின்றார். மாதவன் பதிலுக்கு வணங்கிவிட்டு அவரருகில் போய் நின்றான்.

"சார்! நீங்கள் என்னிடம் சொல்லவே இல்லையே?..."

"எதைக் கேட்கிறீர்கள்?"

நீலகண்டன் சிரித்தார். மாதவன் முகத்தை ஓரிரு விநாடி உற்றுப் பார்த்தார். கிருஷ்ண விக்கிரகத்தின் முகம் போன்றிருந்த - சலனமற்ற - அழகிய மாதவனின் முகத்தில் உணர்ச்சியின் உயிரோட்டமில்லாத சிரிப்பு ஒன்று தோன்றி ஒடுங்கியது. சிரிக்காமலிருக்கக் கூடாதே என்பதற்காகச் சிரித்த சிரிப்பு அது.

"கலா நிலையத்தில் உங்களை வேலையிலிருந்து நீக்கி விட்டார்களாமே?"

“ஆமாம்! இரண்டு மூன்று நாட்களாயிற்று.”

“நேற்று இரவில் கூட வீட்டில் வந்து உங்களிடம் பேசிக் கொண்டிருந்தேனே; நீங்கள் ஏன் என்னிடம் சொல்லவில்லை?”

“நல்லது நடந்தால் நாலு பேரிடம் பெருமையாகச் சொல்லிக் கொள்ளலாம்! இதில் சொல்ல என்ன இருக்கிறது? சொல்லிவிடுவதால் ஆகப்போவதுதான் என்ன?”

“அப்படி இருக்கக் கூடாது சார்! நல்லதோ கெட்டதோ, ஊரில் நாலு பேருக்குத் தெரிந்தால் தான் ஆதரவோ, அனுதாபமோ பெறமுடியும்.”

நீலகண்டன் இரண்டு கைகளையும் ஆட்டி முகத்தில் உறுதி ஒளிர ஆவேசத்தோடு பேசினார்.

மாதவன் மறுபடியும் உணர்ச்சியில்லாமல் பேருக்குச் சிரித்தான்.

“நீங்கள் பெரிய தவறு செய்துவிட்டீர்கள் சார்! உங்களுடைய இந்த அமைதியும், அடக்கமும் தருமனுக்கு இருந்தது போல் மகாபாரதத் தலைமுறையில் இருக்க வேண்டும். இந்தத் தலைமுறைக்குக் காலில் விழுந்து வணங்குகின்றவர்கள் தேவை இல்லை. கன்னத்தில் அறைகிறவர்கள் தாம் தேவை!”

“விடுங்கள் சார் பேச்சை!” மாதவன் தட்டிக் கழித்து விட்டு நீலகண்டனிடமிருந்து தன்னை மீட்டுக் கொண்டு வாசகசாலைக்குள் நுழைய முயன்றான். நீலகண்டன் விடவில்லை. மாதவனின் கைகளை இறுக்கிப் பிடித்துக் கொண்டார்.

“வர வர ஊரில் அநியாயம் அதிகமாகிவிட்டது. நீங்கள் இதைச் சும்மா விட்டுவிடக் கூடாது. உங்கள் செல்வாக்கு உங்களுக்கே தெரியாது. நீங்கள் வாயசைத்தால் என்ன நடக்கும் தெரியுமா?”

“ஒன்றுமே நடக்காது.” - இதைக் கூறிவிட்டு மாதவன் சிரித்த சிரிப்பில் குறும்புத்தனம் இருந்தது.

“சரி! இருக்கட்டும்; நான் அப்புறம் வந்து உங்களிடம் பேசிக்கொள்கிறேன்” - என்று நீலகண்டன் ஒருமட்டில் அவனை விட்டுப் போய்ச் சேர்ந்தார்.

மாதவன் வாசகசாலைக்குள் நுழைந்தான். அங்கே உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்த அவனுடைய பழைய மாணவர்கள் மரியாதைக்காக எழுந்து நின்றனர். மாதவன் அவர்களை உட்கார்ந்து படிக்குமாறு கையமர்த்திவிட்டு அன்றைய செய்தித்தாள் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு படிப்பதற்காக ஒரு மூலையில் அமர்ந்தான்.

சுற்றிலும் ‘கசுமுசு’ வென்று எழுந்த பேச்சுக் குரல்கள் தன்னைப் பற்றியனவாகவே இருக்க வேண்டுமென்று அவனால் அனுமானித்துக் கொள்ள முடிந்தது. அந்த அனுமானத்திற்குச் செவிப்புலன் ஒன்றே போதுமே?

“ஆசிரியரை மறுபடியும் வேலையில் சேர்த்துக் கொள்ளக் கோரி மாணவர்கள் வேலை நிறுத்தம்!”

அந்தச் செய்தியைப் படிக்க வேண்டுமென்று ஆவல் உண்டாயிற்று மாதவனுக்கு.

படித்து முடிந்ததும் நீண்ட பெருமூச்சு ஒன்று அவனிடமிருந்து வெளியேறிக் காற்றில் கலந்தது. மாதவனுடைய மனத்தின் ஒரு கோடியில் சிறிய ஆசை ஒன்று கவிந்தது. ஆசை, பயம், அமைதி மூன்று உணர்ச்சிகளாலும் மாறி மாறி மனம் பேதலித்தது. அந்தப் பேதலிப்பினிடையே நீலகண்டன் சிதறிவிட்டுப் போன சிறு கனற்பொறி மினுமினுத்தது. அரைமணி நேரத்திற்குப் பின் மாதவன் வாசகசாலையிலிருந்து திரும்பியபோது, அந்தப் பெண்ணை மறுபடியும் கதவோரத்தில் பார்த்தான். அதே ஆவல்! அதே சிரிப்பு! அதே நளினம்!

மாதவன் அந்த வீட்டு வாசற்படியைக் கடந்து விட்டான்.

"சார்! அப்பா உங்களை உள்ளே கூப்பிடுகிறார்!"

இனிமை கொஞ்சும் இந்தச் சொற்கள் அவள் வாயிலிருந்துதான் பிறந்தன. மாதவன் நிமிர்ந்து பார்த்தான்.

"சார்! நான்தான் கூப்பிட்டேன். இப்படி உள்ளே வாருங்களேன்!" உள்ளிருந்து வயது முதிர்ந்த ஆண் குரல் ஒன்று ஒலித்தது. வாயில் சிற்றாடையின் தலைப்பு கதவுக்கு அப்பால் மறைந்தது. மாதவன் அந்த வீட்டிற்குள் நுழைந்தான்.

உள்ளே ஈஸிசேரில் சாய்ந்துகொண்டிருந்த அந்தப் பெரியவரை வணங்கிவிட்டு எதிரே உட்கார்ந்தான்.

"குழந்தை இப்போதுதான் சொன்னாள். நீங்கள் இப்போது கலா நிலையத்தில் இல்லையாமே?"

"இருக்க விடவில்லை! அதனால் இல்லை!"

"வீட்டை விட்டு வெளியேறாத மனிதர் நீங்கள். உங்கள்மேல் குறை சொல்ல என்ன இருக்கிறது?"

மாதவன் இதழ்களில் குறுநகை நெகிழ்ந்தது.

"இப்போது நீங்கள் சொன்ன குறைதான்."

அவரும் சிரித்தார். சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுத் திரும்பினான் மாதவன். வீட்டுத் திண்ணையில் ஒரு கூட்டம் தயாராகக் காத்திருந்தது. பலசரக்கு மளிகை சின்னச்சாமி சிட்டைப் புத்தகத்தோடு வந்திருந்தார்.

"என்ன சார்? வேலையை விட்டு விட்டீர்களாமே?"

"தப்பு! வேலை என்னை விட்டுவிட்டது."

மாதவனுக்குச் சிரிக்கவோ, பேசவோ, இன்னும் தெம்பு குறையவில்லை. "வீட்டைக் காலி செய்துவிட்டு வேறு ஊருக்குப் போகப்போகிறீர்களாமே?" இது இன்னும் ஒரு படி அதிகமான விசாரணை. மாதவனின் சிரித்த முகம் சுண்டிப்போயிற்று. சுருங்கிவிட்டது.

"யார் சொன்னார்கள் அப்படி?"

சின்னச்சாமி சொல்வதற்குத் தயங்கினார்.

"சும்மா..... இப்படிப் பேச்சு வந்தது.... கேள்விப் பட்டேன்."

"ஓகோ!......." - மாதவன் அதற்குமேல் அவரை வற்புறுத்தித் தெரிந்துகொள்ள விரும்பவில்லை.

"அது சரி! நீங்கள் வந்த காரியம்...?" மாதவன் சின்னச்சாமியிடம் பேச்சை மாற்றும் நோக்கத்துடன் இப்படிக் கேட்டான்.

சின்னச்சாமி சிட்டைப் புத்தகத்தைப் பிரித்தார். இடது கையால் தலையைச் சொரிந்தார். தயங்கினார். மாதவனை நேரே பார்க்கத் துணிவின்றி எங்கோ பார்த்துக் கொண்டு பேசினார். வார்த்தைகள் நின்று இடைவெளி விட்டு ஒவ்வொன்றாக வெளிவந்தன.

"நம்ம கடை பாக்கி கொஞ்சம்....."- வார்த்தைகள் மெதுவாக இழுபட்டன.

"ஓ! பாக்கி கொடுக்காமல் ஊரை விட்டுப் போய்விடுவேனென்ற பயமா?"

"சே! சே! அப்படியெல்லாமில்லை..... இருந்தாலும்..... வந்து...."

அந்த 'இருந்தாலும் வந்து'- எவ்வளவோ பொருளை உள்ளடக்கிக் கொண்ட சொற்கள்.

விறு விறுவென்று உள்ளே போய்ப் பெட்டியைத் திறந்து ஒரு புத்தம் புதிய நூறு ரூபாய் நோட்டைச் சின்னச்சாமியின் கையில் கொண்டு வந்து திணித்தான் மாதவன்.

"நமக்குச் சேரவேண்டிய தொகை இருபத்து மூன்றே சொச்சம் தானுங்க..."

"பரவாயில்லை! கொண்டுபோய் உங்களுக்குச் சேர வேண்டியதை எடுத்துக் கொண்டு பாக்கியை ஒழிந்தபோது கொண்டு வந்து கொடுத்தால் போதும். எனக்கு உம் மேல் நம்பிக்கை உண்டு."

சின்னச்சாமி முகத்தில் அசடு வழியச் சிரித்தார். "பாக்கி கொடுத்து அனுப்புகிறேன்" என்று சொல்லிக் கும்பிட்டு விட்டுப் போய்ச் சேர்ந்தார். அவர் தலை மறைந்ததும், திண்ணையில் ஒரு மூலையில் அதுவரை அடக்கமாக வீற்றிருந்த பால்காரர் எழுந்திருந்து தலையைச் சொரிந்தார். அடுத்த அரைமணி நேரத்தில் அங்கிருந்து பாக்கிக்காரர்களும், பெட்டிக்குள் கிடந்த புது நோட்டுக்களும் வரிசையாக வெளியேறியாயிற்று.

மாதவன் மூன்றாம் முறையாக நெஞ்சு விரிய, நடுமார்பில் ஏதோ கிளறுவதுபோல் வலிக்க, ஒரு பெருமூச்சு விட்டான். எதையாவது படிக்கலாம் என்று அறைக்குப் போய் ஒரு புத்தகத்தைப் பிரித்துக்கொண்டு உட்கார்ந்தான். மனம் புத்தகத்தில் சிறிது கூடப் பொருந்தவில்லை.

புத்தகத்தை மேஜைமேல் விரித்தது விரித்தபடியே போட்டு விட்டு வாசல் திண்ணைக்கு வந்து மறுபடியும் உட்கார்ந்தான். தெருவில் அவனுக்குப் பழக்கமான ஒருவர் - குடை பிடித்துக் கொண்டு நடந்தவர் - அவனைப் பார்த்து விட்டவுடன் தன் முகம் தெரியாமல் குடையைச் சாய்த்துத் தணித்துக் கொண்டு வேகமாக நடந்தார். மாதவனுடைய மனத்தில் அவர் தெருவில் மட்டும் மிதித்து நடப்பதாகப் படவில்லை. தன் நெஞ்சிலேயே மிதித்துக் கொண்டு நடப்பதாகப் பட்டது. வேலையை விடுவதற்கு முன் நாளுக்குப் பத்துத் தடவை தேடி வரும் அந்த மனிதர் இப்போது நடந்து கொண்ட விதம் அவனுக்கே விந்தையாக இருந்தது.

"எதற்காகப் பித்துப் பிடித்தது போல் திண்ணையில் உட்கார்ந்து தெருவைப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? இலையைப் போட்டாயிற்று! சாப்பிட வா!" மாதவனின் தாய் அவனை உள்ளே கூப்பிட்டாள். மாதவன் எழுந்து சென்றான்.

"ஊரில் பெண்டு, பிள்ளைகள், சின்னஞ்சிறிசுகள், எல்லார் வாயிலும் இதே பேச்சுத்தான் மாதவா!"

- இலையில் பரிமாறிக் கொண்டே பேச்சைத் தொடங்கினாள் அவன் தாய்.

"எதே பேச்சு அம்மா?"

"தெரியாதது மாதிரிக் கேட்கிறாயே? எல்லாம் உன்னை வேலையை விட்டு விலக்கியது பற்றித்தான்..."

"எப்படிப் பேசுகிறார்கள்? விலக்கியது நல்லதென்றா? அல்லது....?" ... சொல்ல வந்ததை நிறுத்தித் தாயின் முகத்தை நிமிர்ந்து பார்த்தான் அவன்.

"நல்ல மனிதன் இந்த ஊருக்கு ஆகாதாம். என்னிடம் சொல்லிச் சொல்லி மனம் புழுங்குகிறார்கள்."

"எல்லாம் வாய்ச் சொல்லோடு சரிதான் அம்மா! யாரால் என்ன ஆகப்போகிறது?"

"அப்படியில்லை! இத்தனை ஜனங்களின் வயிற்றெரிச்சலையும் கொட்டிக் கொண்டு துணிந்து உன்னைப் போகச் சொன்னான் பார்! அவனைச் சொல்லவேண்டும்."

அம்மாவுக்குப் பதில் சொல்லாமல் பேச்சை நிறுத்திக் கொண்டு சோற்றைப் பிசைந்தான் மாதவன். 'பெண்களும், குழந்தைகளும், விடலைப் பிள்ளைகளும், அனுதாபப்பட்டு ஆகப் போவதென்ன? அந்த அனுதாபத்துக்கு இந்த ஊரில் எவ்வளவு செல்வாக்கு என்பது தெரியாதா; என்ன?' என்று மனத்தில் நினைத்தான் மாதவன்.

சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது தெருவில் ஏதோ பெரிதாக இரைச்சல் கேட்டது.

"அதென்னடா தெருவில் கூப்பாடு?"

"நீதான் போய்ப் பார்த்துவிட்டு வாயேன் அம்மா."

அம்மா கரண்டியைக் கீழே வைத்துவிட்டு வாசற் பக்கம் போனாள். பத்து நிமிஷம் கழித்துக் கூப்பாடு ஒலி குறைந்து கிழக்குப்புறம் தெருவில் சென்று மங்கியது. அம்மா சிரித்துக் கொண்டே உள்ளே வந்தாள்.

"என்னம்மா விஷயம்?" என்று மாதவன் ஆவலோடு கேட்டான்.

"எல்லாம் உன் விஷயந்தான்! கலா நிலையத்துப் பையன்களும், பெண்களும், 'மாதவன் சாருக்கு மறுபடியும் வேலை கொடு!' என்று கூப்பாடு போட்டுக்கொண்டு தெருவில் ஊர்வலம் போகிறார்கள்.

"நிஜமாகவா?... என்னைக் கேலி செய்கிறாயா?"

"பின் என்ன பொய்யா சொல்கிறேன்? உனக்குச் சந்தேகமாக இருந்தால் சாப்பிட்டு விட்டு நீயே எழுந்து போய்ப் பாரேன்!"

திடீரென்று அந்தக் கணத்திலேயே பசி தீர்ந்துவிட்டது போலிருந்தது மாதவனுக்கு. இலையில் பரிமாறிய சோற்றில் அவன் ஒரு பருக்கை கூடத் தொடவில்லை. விறுட்டென்று எழுந்து கிணற்றடிக்குச் சென்று கையைக் கழுவிவிட்டு வந்தான், மாதவன்.

"என்னடா இது? இலையில் போட்ட சோற்றை வைத்துவிட்டு...?"

"இரு அம்மா! வந்து சாப்பிடுகிறேன்" என்று மாதவன் எழுந்து தெருவுக்கு விரைந்தான். தனக்காக நடக்கும் அந்த அனுதாப ஊர்வலத்தைத் தானே பார்க்க வெட்கமாக இருந்தது அவனுக்கு. ஜன்னல் கதவுகளைத் திறந்து மற்றவர்கள் தன்னைப் பார்த்துவிடாமல் தான் அந்த ஊர்வலத்தைப் பார்க்க முயன்றான் அவன்.

பெண்களும், ஆண்களுமாகக் கூடிச் சென்ற அந்த ஊர்வலத்தில் அங்கொன்றும், இங்கொன்றுமாகத் தெரிந்த முகங்களில் இரண்டு, மாதவனின் மனத்தில் பதிந்தன. கம்பீரம் தவழும் ஆண்மை நிறைந்த நீலகண்டனின் முகம். ஆவல், சிரிப்பு, நளினம், அத்தனையும் திகழ அவனை எப்போதும் பார்த்துக் கொண்டே இருக்க விரும்பும் அந்தப் பெண்ணின் முகம்! மாதவன் தெருவில் இறங்கி நடக்கும் போதெல்லாம் கதவோரத்தில் தெரியும் அந்தக் கண்கள் உண்மையாக அவன்மேல் அனுதாபம் கொண்டவைதாம்.

ஜன்னல் கதவுகளை அடைத்துவிட்டு உள்ளே திரும்பினான் மாதவன். அந்த நிமிடத்தில் உலகத்திலேயே தனக்கு இணையானவர்கள் எவரும், எங்கும் இல்லை என்பது போன்றதொரு பெருமிதம் அவனுக்கு உண்டாயிற்று.

"நன்றாயிருக்கிறதடா உன் காரியம்! இலையில் போட்ட சோற்றை ஆறவைத்துவிட்டுத் தெருவில் போய் உன் பெருமையை நீயே வேடிக்கை பார்க்கிறாயாக்கும்? இப்படிக் கூச்சல் போட்டுக் கொண்டு தெருவோடு இவர்கள் ஊர்வலம் போனதால் நாளைக்கே உன்னைக் கூப்பிட்டு வேலை பார்க்கச் சொல்லிவிடப் போகிறார்கள் பார்!" - தாயின் இந்தப் பேச்சில் குத்தல் இருந்தது.

"வேலை யாருக்கு வேண்டும்? இந்த அன்பும் அனுதாபமும் தருகின்ற பெருமையை வேலை தர முடியுமா?" என்று கேட்டான் மாதவன். மாதவனுடைய பேச்சு அவன் தாய்க்குப் பிடிக்கவில்லை.

"நீதான் பெருமைப் பட்டுக் கொள்ள வேண்டும் உன் காரியத்தை. நான்கு நாட்களாக வேலையையும் விட்டு விட்டு இந்த ஊரில் என்ன காரியம்? இப்படியே இருந்தால் வேறு வழி பார்க்க வேண்டாமா?"

"பார்க்கத்தான் வேண்டும். வீட்டை ஒழித்துச் சாமான்களைக் கட்டு. இரண்டு நாளில் புறப்படவேண்டியதுதான்."

தாய், மாதவனின் முகத்தை வியப்போடு பார்த்தாள். மாதவன் நிம்மதியாக அறைக்குள் வந்து மேஜைமேல் விரித்துக் கிடந்த புத்தகத்தில் ஆழ்ந்தான்.

"ஏன்டா, சாப்பிடவில்லையா?"

"இப்போது பசிக்கவில்லை. அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்." கூறிவிட்டுப் புத்தகத்தின் கருத்துக்களில் மனத்தைப் பதியவிட்டான் அவன்.

மறுநாளைக்கு மறு நாள் கையில் டிரங்குப்பெட்டியும், மூட்டை முடிச்சுக் களுமாக, மாதவன் அந்த ஊரையும், வேலையையும் விட்டு விட்டுப் புறப்பட்டு விட்டான். கையில் பெட்டியோடு அவன் தெருவில் நடந்து கொண்டிருந்தான். நான்கடி பின்னால் அவன் தாய் நடந்து வந்து கொண்டிருந்தாள்.

அப்போது கண் நிறைய ஆவலும், இதழ் நிறையக் குறு நகையும், உடல் நிறைய நளினமுமாக அந்தப் பெண் - அதே கதவோரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள்.

அந்தப் பெண்ணின் அனுதாபமும் நீலகண்டனின் ஆவேசமும், அவன் இழந்த வேலையை அவனுக்கு வாங்கிக் கொடுக்கும் அளவிற்குச் செல்வாக்கு உடையவை இல்லை!

செல்வாக்கெல்லாம் நரைத்த தலையும், முதிர்ந்த வயதும், முதிராத மனமுமுள்ள பெரியவர்கள் கையிலிருந்தது. அதைப்பற்றி மாதவன் கவலைப்படவில்லை.

அந்தக் கண்களின் ஆவலை இறுதியாகத் தன் மனம் நிறைய ஏந்திக்கொண்டு திரும்பிப் பாராமல் தெருவில் நடந்தான் மாதவன்!

**(1963-க்கு முன்)**

## 75. பேதைமை

ரங்கு அக்காவை ரேழியில் எடுத்து விட்டிருந்தார்கள். காலை ஏழரை மணி.

"அக்கா! அக்கா! சாதம் போடு அக்கா..."

"......"

"பசியாயிருக்கு அக்கா..."

"..."

"நீ இன்னும் தூங்கறியேஅக்கா? என்னிக்கும் நீ சீக்கிரமா எழுந்துவிடுவியே? இன்னிக்கு மட்டும் ஏன் அக்கா இன்னும் தூங்கறே?"

"..................."

"களைப்பா இருக்கா?"

"....................."

"இவாள்ளாம் ஏன் ஒன்னைச் சுத்தி உக்காந்து அழறா?"

"...................."

"சொல்லமாட்டியா அக்கா?"

"....................."

"இவாளுக்கும் பசிக்கிறதா?"

குழந்தை ராமுவின் கேள்விக்குத் தரையில் படுத்துக் கிடந்த ரங்கு அக்கா பதிலே சொல்லவில்லை.

ராமுவுக்கு அதற்குமேல் பொறுமை இல்லை. கேள்வி கேட்பதை நிறுத்தி விட்டு, அக்காவின் தலையைத் தன் பிஞ்சுக் கைகளால் பிடித்து ஆட்டத் தொடங்கினான்.

அக்காவைத் தூக்கத்திலிருந்து எழுப்பிச் சாதம் போடச் சொல்லவேண்டும் என்பது அவன் எண்ணம்.

அக்காவின் தலை, இரண்டு பக்கத்திலும் அவன் தள்ளியபடியெல்லாம் புரண்டு விழுந்தது.

சுற்றி அழுது கொண்டிருந்தவர்களில் வயதான ஒரு அம்மா, "ஏன்டா தொணதொணன்னு பேசிண்டு...? அக்கா இனிமேல் எழுந்திருக்கவே மாட்டாடா! அந்தண்டே போ" என்றாள்.

ராமு விடவில்லை!

"அக்கா ஏன் எழுந்திருக்க மாட்டா?"

"அவ செத்துப் போயிட்டாடா!"

"எதுக்காகச் செத்தாளாம்? அவ மட்டும் ஏன் சாகணும்?"

"அவளை சுவாமி அவர்கிட்ட அழச்சிண்டுட்டார். அதுனாலே அவ செத்துப் போயிட்டா!"

"சுவாமி ஏன் அக்காவை மட்டும் அழச்சுக்கணும்? என்னையும் கூட்டிக்கப் படாதோ?"

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல அந்த அம்மாளுக்குத் தெரியவில்லை. தூரத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த ராமுவின் அப்பா வேங்கடராம ஐயருக்குக் கண்களில் நீர் தேங்கிவிட்டது. மேல் வேஷ்டியால் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

ராமுவின் பிடிவாதம் அதிகமாயிற்று. கீழே கிடத்தப்பட்டிருந்த ரங்கு அக்காவை எழுப்புவதற்காக ஆட்டி அசைத்துத் தொந்தரவுகள் செய்யலானான். சுற்றி உட்கார்ந்து தலைவிரி கோலமாக அழுது கொண்டிருந்த பெண்களால் அவனை அடக்கவோ கண்டிக்கவோ முடியவில்லை.

வேங்கடராம ஐயர் எழுந்திருந்து வந்தார். அழுது கொண்டிருந்தவர்கள் அடக்க ஒடுக்கமாக ஒதுங்கி நின்று வழி விட்டார்கள்.

"அக்கா! எழுந்திரு அக்கா!"

"சாதம் போட நாழியாச்சு. எனக்குப் பள்ளிக்கூடம் போகணும்." ராமு அனத்திக் கொண்டிருந்தான். அங்கே வந்த வேங்கடராம ஐயர் அவனை வாரி எடுத்துத் தூக்கிக் கொண்டு போனார்.

பெண்கள் கசமுசவென்று அழுகைக்கிடையே பேசிக் கொண்டார்கள்.

"ரங்குதான் தினம் இந்தப் பிள்ளைக்குக் காலங்கார்த்தாலே எழுந்ததும் சாதம் பிசைஞ்சு போடுவாள். இந்த ரெண்டரை வருஷமா அவ கையாலே பழையது சாப்பிட்டுப் பழக்கம் இதுக்கு."

"ஐயோ பாவம், பசலைதானே? அவ தூங்கறான்னு நினைச்சிண்டிருக்கு!"

"குழந்தைதானே! ஏதோ அஞ்ஞானம்! பழக்கம் அப்படி; அவ போயிட்டான்னு தெரியலே அதுக்கு."

"பாவிப் பெண்! புருஷன் வீட்டிலேதான் பூவும் மஞ்சளுமா வாழக் கொடுத்து வைக்கலேன்னா, இங்கே வந்து இப்படியா அல்பாயுசா போகணும்?"

"வேங்கடராமன் ஏற்கெனவே ஆத்துக்காரியை எமன் கையில் விட்டுட்டுக் கஷ்டப்பட்டு நாளைக் கடத்திண்டிருந்தான். இந்தப் பிள்ளை ராமுவைப் பிரசவிச்சுட்டுச் செத்தா அவ! இப்போ வீட்டோட அடைஞ்சு கிடந்த பெண்ணும் இப்பிடிப் போயிட்டா."

"குழந்தைக்கு வயசு போறாது! ஒத்தனா இருந்துண்டு எப்படி வச்சுக் காப்பாத்தி ஆளாக்கி விடப் போறானோ?"

"எல்லாம் இந்தப் பிள்ளை பிறந்த வேளைதான்! இதைப் பெத்த மூணாம் நாள் பெண் அறுத்துட்டு வந்து நின்னா! அதே ஏக்கம்... ஏழாவது நாள் அவ விதவைப் பெண்ணையும் இந்தக் குழந்தையையும் அவனையும் விட்டுட்டுப் போய்ச் சேர்ந்தா."

பெண்களின் இந்த சம்பாஷணைகள் எல்லாம் கையில் ராமுவைப் பிடித்துக் கொண்டு சற்றுத் தொலைவில் நின்ற வேங்கடராம ஐயருக்கும் கேட்டன.

பெண் வாழாவெட்டியாக வந்து விட்டாளே என்ற கவலை ஒரு புறமிருந்தாலும் வீட்டைக் கட்டிக் காத்துக் கொண்டிருந்தாள். இப்போது அவளும் அவரைக் கைவிட்டுப் போய்விட்டாள்.

'நாள் தவறாமல் காலையில் அவள் கையால் சாதம் சாப்பிட்டுப் பழகிப்போன இந்தக் குழந்தை ராமுவுக்குக் கூட அவள் செத்துவிட்டாள் என்பதை நம்ப முடியவில்லை. நானும் அப்படி இருந்துவிட முடியுமா?'- என்று அவர் தமக்குள் சிந்தித்தார்.

மனிதர்கள் பெரியவர்களாவதன் பலன், துக்கத்தை உணர்கின்ற அறிவைப் பெறத்தானா? செத்தவளைத் தூங்குகிறாள் என்றெண்ணிக் கொண்டு, உரிமையோடு எழுப்பிச் சாதம்போடக் கூப்பிடுகிறது இந்தக் குழந்தை. பாசமும் உறவுமுள்ளவர் செத்துப் போனாலும், இவனைப் போல அந்தச் சாவை உணராத பேதைமை எல்லா மனிதர்களுக்கும் இருந்துவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

"அப்பா! ரங்கு அக்காவை நீயாவது எழுப்பு அப்பா! வயித்தைப் பசிக்கிறது. பழையது பிசிஞ்சு போடச் சொல்லணும்" என்று ராமுவின் அனத்தல் பழையபடி ஆரம்பித்து விட்டது. அவருடைய சிந்தனை கலைந்தது.

"ரங்கு அக்கா செத்துப் போயிட்டாடா ராமு! நீ சமர்த்தோ இல்லையோ? இப்படி அழுது மொரண்டு பண்ணப்படாது... உனக்கு வேறே யாரையாவது போடச் சொல்றேன்."

"வேண்டாம் போ... நீ பொய் சொல்றே... ரங்கு அக்கா ஒண்ணும் செத்துப் போகலை. அவ தூங்கறா - வேணும்னா நான் எழுப்பறேன்..."

ராமு மறுபடியும் ரங்கு அக்காவின் சடலத்தை நோக்கி ஓடினான்.

பரபரவென்று அவன் கையைப் பிடித்து இழுத்து வந்து உட்கார்த்தினார் அவர். தம் மனத்தையாவது சமாதானப்படுத்தி அடக்கிக் கொள்ளலாம் போலிருந்தது; ராமுவை எப்படிச் சமாதானப்படுத்துவது என்பது தான் அவருக்குப் புரியவில்லை.

யாரோ ஒருவர் பக்கத்திலிருந்த ஹோட்டலுக்குப் போய் இரண்டு இட்டிலி வாங்கிவந்தார். வேங்கடராம ஐயர் பாதி நயமாகவும் பாதி பயமுறுத்தியும் அவனைச் சாப்பிடச் செய்துவிடலாம் என்று எண்ணினார்.

"இது எனக்கு வேண்டாம் போ! ரங்கு அக்கா ஈயக் கச்சட்டியிலே பிசிஞ்சி போடுவாளே, அந்தப் பழய சாதந்தான் வேணும்... அக்காவை எழுப்பு."

குழந்தை இட்டிலிப் பொட்டலத்தைக் காலால் எத்தி உதைத்துவிட்டான். துக்கம் நிறைந்த மன நிலை, சகிப்புத் தன்மை, எல்லாவற்றையும் மறந்து ஒரே ஒரு கணம் கோபத்திற்கு ஆளாகிவிட்டார் அவர்.

பளீரென்று அடுத்தடுத்து அவனுடைய முதுகில் இரண்டு அறைகள் விழுந்தன. ராமு கீழே விழுந்து காலை உதைத்துக் கொண்டே வீறிட்டு அழுதான்.

"அக்கா! ரங்கு அக்கா! ... அப்பா அடிக்கிறா, அக்கா... நீ ஏந்திருந்து வந்து பார்க்கமாட்டியா?"

திடீரென்று எழுந்திருந்து ஓடியவன் அக்காவின் சடலத்தருகே சென்றுவிட்டான். தலை மயிரைப் பிடித்துப் பிய்த்து இழுத்து அவளை எழுப்ப முயன்றான்.

"அட ராமா! குழந்தையை இப்படிக் கிட்டே விடுவாளோ? ஆகாத காரியம்னா?" என்று அலுத்துக்கொண்டே வயதான பாட்டியம்மாள் ஒருத்தி மீண்டும் குழந்தை ராமுவை எடுத்து இழுத்து வந்து அவரருகில் விட்டாள்.

வேங்கடராம ஐயர் திமிறி ஓட முயல்கிற குழந்தையைக் கைகளால் இறுக்கிப் பிடித்துக்கொண்டார்.

"நீங்களே குழந்தையை வைத்துக் கொண்டிருந்தா மேலே காரியங்களைச் செய்ய வேண்டாமா? யாரிட்டவாவது சமாதானப் படுத்தி விட்டுட்டு வாங்கோ! காரியங்கள் நடக்கணுமில்லையா? நாழிகை ஆயிண்டே இருக்கு!"- புரோகிதர் அவசரப்படுத்தினார்.

இதற்குள் அங்கிருந்த ஒருவர் தந்திரமாக ஒரு காரியம் செய்து குழந்தை ராமுவை விலக்கிக் கூட்டிக்கொண்டு போக முன்வந்தார்.

"ராமு! கடைக்குப்போய் நிறையப் 'பப்பெர்மிட்' வாங்கிண்டு வரலாம். ரங்கு அக்காவுக்குக் கூடக் கொஞ்சம் கொடுக்கலாம்."

"கொடுத்தா ரங்கு அக்கா எழுந்திருந்து சாதம் போடுவாளா?"

"கட்டாயம் போடுவா! அவளுக்கு மிட்டாய் கொடுத்தியானா உன்மேலே ரொம்பப் பிரியம் உண்டாகும்."

"நிசம்மாவா?"

"ஆமாம் ராமு, நிசம்மாத்தான்."

"அப்ப வா, கடைக்குப் போகலாம்."

"நீங்க காரியத்தைப் பாருங்கோ. நான் இவனைக் கொண்டுபோய்க் கவனிச்சுக்கிறேன்" என்று ஜாடையாக வேங்கடராம ஐயரிடம் கூறிவிட்டுக் குழந்தை ராமுவைத் தூக்கிக்கொண்டு போனார் அந்த சாமர்த்தியக்காரர்.

அன்றைக்குக் காரியங்கள் ஒருவழியாக முடிந்து விட்டன. வேங்கடராம ஐயர் மயானத்திலிருந்து வீடு திரும்பும்போது மணி நாலுக்குமேல் ஆகிவிட்டது.

குழந்தை ராமுவைக் கொண்டுபோன மனிதர் ஏழு மணி சுமாருக்குத் திரும்பக் கொண்டுவந்து விட்டார். அப்போது அவன் தூங்க ஆரம்பித்திருந்த சமயம். அதனால் வேங்கடராம ஐயர் அதிகச் சிரமம் இன்றி அப்படியே படுக்கையில் வாங்கி விட்டுவிட்டார்.

ஓர் உயிரைப் பறிகொடுத்த துக்கம்! விடிய விடிய உறக்கம் அவரை அண்டவில்லை. குழந்தை ராமுவோ விடிகிற வரை நிம்மதியாகத் தூங்கினான்.

பொழுது விடிந்தது. விடிகிற சமயத்தில்தான் அவருக்கு இலேசாகக் கண்களைச் சொருகிற்று. அந்தச் சமயம் பார்த்துத்தான் குழந்தை ராமு விழித்துக் கொண்டான்.

"ரங்கு அக்கா எங்கேப்பா? எழுந்திருக்கிலீயா?"

"ரங்கு அக்கா இல்லேடா. நீ தூங்கு."

"அக்கா எங்கேப்பா?"

"தூங்கித்தொலைடா! என் பிராணனை வாங்கறே. அவ செத்துப் போயிட்டாடா."

"செத்துப் போறதுன்னா என்ன அப்பா?"

"சீ, கழுதை! தூங்கறியா, உதை வேணுமா?"

"ரங்கு அக்கா வேணும்... எனக்கு அக்காவைப் பார்க்கணும்... உம் ஊம் ஊம்." குழந்தை ராமு மறுபடியும் அழ ஆரம்பித்துவிட்டான்.

ராமுவை அந்த வருடம்தான் பள்ளிக்கூடத்தில் ஒண்ணாங் கிளாஸில் சேர்த்திருந்தது. வீட்டில் அவனைச் சமாதானப்படுத்துவது கஷ்டம் என்று மெல்ல எப்படியோ அக்காவைப் பற்றி மறக்கச் செய்து அவனைப் பள்ளிக் கூடத்துக்கு அனுப்பிவிட்டார் அன்று.

அவன் பள்ளிக்கூடத்துக்குப் போய் விட்டதனால் அன்று காலையில் செய்ய வேண்டிய இரண்டாம் நாள் சஞ்சயனக் கிரியைகளைத் தடங்கலில்லாமல் நேரத்தோடு அவரால் செய்ய முடிந்தது.

அதே தெருவிலிருந்து இரண்டாம் கிளாஸ் படிக்கிற பையன் ஒருவன் பள்ளிக்கூடத்துக்குப் போனான். அவன் ராமுவின் மேல் வீட்டுக்காரப் பையன். ராமுவை விட ஒரு வயது பெரியவன். அவனோடுதான் ராமுவைச் சமாதானப்படுத்திப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பியிருந்தார் அவனுடைய அப்பா.

அந்தப் பையன் பெயர் கோவிந்தன். ராமு அவனைக் 'கோந்து' என்று கொச்சையாகக் கூப்பிடுவது வழக்கம். அன்று பள்ளிக்கூடம் போகும்போது ராமு 'கோந்து'விடம் சில கேள்விகளைக் கேட்டான்.

"ஏன்டா கோந்து, ஒன்னை ஒண்ணு கேக்கறேன், பதில் சொல்லுவியோ?"

"என்னடா வேணும்? கேளு! சொல்றேன்."

"செத்துப் போறதுன்னா என்னடா? உனக்குத் தெரியுமாடா?"

கோவிந்தனுக்குச் செத்துப்போவதைப் பற்றிய ஒரே ஓர் அனுபவம்தான் இது வரை தெரியும். அவனுடைய அத்தை ஒருத்தி விளிம்புச் சுவர் இல்லாத கிணற்றில் தண்ணீர் தூக்கும்போது காலில் தாம்புக்கயிறு பின்னி உள்ளே விழுந்து செத்துப் போனாள். இதுதான் செத்துப் போவது பற்றிக் கோவிந்தனுக்குத் தெரிந்த ஒரே ஓர் அனுபவம்.

எனவே, இந்த அனுபவத்தை அனுசரித்தே ராமுவின் கேள்விக்கு அவன் பதில் கூறினான்.

"செத்துப்போறதுன்னா... கிணத்திலே விழுந்துடணும்டா. அதுதான் செத்துப் போறது... எங்க அத்தை அப்படித் தாண்டா செத்துப்போனா."

"அப்போ கிணத்திலே விழுந்தா நிச்சயமா செத்துப் போயிடலாமாடா?"

"ஆமாண்டா!"

"அப்படியானா எங்க ரங்கு அக்கா கிணத்துலே விழவே இல்லியே. அவ செத்துப்போயிட்டான்னு அப்பா சொல்றாரே! அது எப்பிடிடா கிணத்துலே விழாமே செத்துப் போக முடியும்?"

"அதென்னமோ எனக்குத் தெரியாதுடா."

"அப்பா பொய்தாண்டா சொல்றார்."

"பொய் இல்லேடா! உங்க ரங்கு அக்கா நெசமாகவே செத்துப் போயிட்டாடா. நேத்துச் சுடுகாட்டிலே கூடக் கொண்டு போய் நெருப்பை வச்சுட்டாளே."

"அய்யய்யோ, அக்காவுக்குச் சுடாதோ?"

"அதென்னமோ எங்க அத்தை செத்துப் போனபோது கூட இப்படித்தான் நெருப்பை வச்சா. செத்துப்போயிட்டா அவாளுக்கெல்லாம் சுடாது போலிருக்குடா!"

"ஏன்டா கோந்து! செத்துப்போனா அவாளை அப்பறம் பாக்க முடியாதோடா?"

"செத்துப் போனவாளைச் செத்துப் போனவாத்தாண்டா பாக்க முடியும்."

"அப்போ, நீ செத்துப்போனா இப்பவே உங்க அத்தையைப் பார்க்கலாம். நான் செத்துப்போனா உடனே ரங்கு அக்காவைப் பார்க்கலாம். இல்லியாடா கோந்து?"

"பாக்கலாண்டா."

"சத்தியமா?"

"பாக்கலாண்டான்னா..."

அன்று பள்ளிக்கூடம் நடந்து கொண்டிருந்த நேரம் முழுவதும் செத்துப் போவதைப் பற்றிய சிந்தனையிலேயே முழுக்க முழுக்க ஆழ்ந்து போயிருந்தான் குழந்தை ராமு.

கோவிந்தனோ ராமுவுடன் பேசி முடித்ததுமே அந்தப் பிரச்னையை மறந்துவிட்டான்.

குழந்தையுள்ளம் பேதைமை நிறைந்தது. நன்மையோ, தீமையோ, கேட்பன வெல்லாமே அங்கு நம்பிக்கைக்குரிய உண்மைகளாகப் பதிந்துவிடுகின்றன. செத்துப் போவதைப் பற்றிக் கோவிந்தன் கூறிய 'உண்மைகளும்' இப்படித்தான் குழந்தை ராமுவின் மனத்தில் பதிந்துவிட்டன.

பகல் பன்னிரண்டரை மணிக்குப் பள்ளிக்கூடம் விட்டார்கள். ராமு பையை எடுத்துக்கொண்டு கோவிந்தனின் துணையை எதிர்பார்க்காமலே வீட்டுக்கு ஓடினான்.

வீட்டு வாசல் திண்ணையில் இரண்டாம் நாள் காரியங்களை முடித்துவிட்டு யாரோ துக்கம் விசாரிக்க வந்தவர்களோடு பேசிக்கொண்டிருந்தார் வேங்கடராம ஐயர்.

ராமு பள்ளிக்கூடத்திலிருந்து வந்து உள்ளே சென்றதை அவர் கவனிக்கவில்லை.

பத்து நிமிஷங்கள் கழிந்தன. கொல்லைப்புறம் கிணற்றிலிருந்து தண்ணீரில் கல்லைத் தூக்கிப் போட்ட மாதிரி ஓர் ஓசை வந்தது. வேங்கடராம ஐயருகில் இருந்த இருவரும் திடுக்கிட்டனர். "அது என்ன சார்? கொல்லையில் சப்தம் கேட்கிறது?"- என்று வந்தவர்கள் திகைப்போடு கேட்டனர். சிறிது நேரத்தில் மூவரும் எழுந்திருந்து கொல்லைப்பக்கம் சென்று கிணற்றை எட்டிப் பார்த்தனர்.

ராமு தண்ணீரை விழுங்கி விழுங்கி, உடல் மேலும் கீழுமாகப் போய்வர, நீர்ப்பரப்பில் தத்தளித்துக் கொண்டிருந்தான். வேங்கடராம ஐயர் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு பதறியழுதார்.

பக்கத்தில் இருந்தவர்களில் ஒருவர் கயிற்றைக் கட்டிக் கொண்டு அவசர அவசரமாகக் கிணற்றுக்குள் இறங்கினார்.

குழந்தை ராமு கிணற்றில் நிறையத் தண்ணீரைக் குடித்திருந்தான். உடம்பு ஊதி வெளுத்திருந்தது. வயிற்றிலிருந்த தண்ணீரையெல்லாம் வெளியேற்றிப் பிரக்ஞை உண்டாக்குவதற்கே மாலை ஆறு மணி ஏழு மணிக்குமேல் ஆகிவிட்டது.

பிரக்ஞை வந்தும் அவன் தன்நினைவோடு பேசவில்லை. 'குழந்தை ஏன் இப்படிச் செய்தான்? தவறிப்போய்க் கிணற்றில் விழுந்தானா அல்லது வேண்டுமென்றே விழுந்து விட்டானா?' என்பது தெரியாமல் தவித்தார் வேங்கடராம ஐயர்.

மறுநாள் காலையில்தான் ராமு பிரக்ஞையுடன் தெளிவாகப் பேசவும் செய்தான். அவன் வாயிலாகவே விஷயத்தைத் தெரிந்து கொள்வதற்காக மெல்ல அவனைக் கேள்விகள் கேட்டார் அவர்.

"ஏன்டா கிணற்றில் விழுந்தாய்?"

"விழவில்லை! நானாகவே வேண்டுமென்றுதான் குதித்தேன்."

"ஏன் குதித்தாய்?"

"செத்துப் போகறதுக்காக."

"அதுக்கு இப்போ என்ன அவசரம்?"

"செத்துப்போனாத்தான் செத்துப் போனவாளைப் பார்க்கலாமாம். எனக்கு உடனே ரங்கு அக்காவைப் பார்க்கணும். அதுனாலேதான் செத்துப் போறத்துக்காகக் கிணத்துலே குதிச்சேன்."

"செத்துப்போறதுன்னாக் கிணத்திலேதான் குதிப்பாளோடா?"

"அப்படித்தானே அடுத்தாத்துக் 'கோந்து' சொன்னான்!"

வேங்கடராம ஐயர் அடுத்த வீட்டுக் கோவிந்தனைத் தனியே அழைத்து மிரட்டி விசாரித்தார். அவன் காலையில் பள்ளிக்கூடம் போகும்போது ராமு தன்னிடம் கேட்ட கேள்விகளையும் தான் அவற்றிற்குக் கூறிய பதில்களையும் ஒன்று விடாமல் அப்படியே சொல்லிவிட்டான். எல்லாவற்றையும் கேட்டபோது அவருக்குச் சிரிப்புத்தான் வந்தது.

பெண்ணைப் பறிகொடுத்த துயரையும் மறந்து, ஒரு விநாடி அவர் தமக்குள் சிரித்துக்கொண்டார்.

'இந்த உலகத்தில் அறிந்து உணர்ந்து அனுபவங்கள் பெறுவதில் உண்மையான இன்பமில்லை. ஒன்றையும் அறியாமல் இருக்கிறதே குழந்தை; அதனுடைய பேதைமையில்தான் இன்பம் இருக்கிறது!' என்று மனப்பூர்வமாகத் தோன்றியது அவருக்கு.

ராமு ஏதோ கேட்க ஆரம்பித்தான்.

"அப்பாவ்!"

"என்னடா?"

"ரங்கு அக்காவைச் சுடுகாட்லே கொண்டுபோய் நெருப்பெ வச்சு எரிச்சுட்டேளாமே அப்பா?"

"யார் சொன்னாடா?"

"கோந்து தாம்ப்பா சொன்னான்."

"இன்னும் என்ன சொன்னான்?"

"செத்துப்போனவாளுக்கு நெருப்புச் சுடாதுன்னு கூடச் சொன்னான் அப்பா."

"உம்ம்ம்...."

அவருக்குத் திரும்பவும் சிரிப்பு வந்தது. கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டார். குழந்தை தப்பாக நினைத்துவிடக் கூடாதே, அதற்காக!

**(1963-க்கு முன்)**

## 76. மங்கியதோர் நிலவினிலே

**ஒ**ரு ஞாயிற்றுக்கிழமை காலை சரியாகச் சொல்லி வைத்தாற்போல் 'டாண்' என்று ஒன்பதடித்து முப்பது நிமிஷத்திற்கெல்லாம் 'பரமசிவம்' என்னைத் தேடிக்கொண்டு வந்து சேர்ந்தார். காட்டிலாக்கா அதிகாரியும், எனது நண்பருமான பூவுலகத்துப் பரமசிவனைத்தான் இங்கே குறிப்பிடுகிறேன்.

"ஸார்! என்னைக் குமிழி - தேக்கடி - ஏரியாவுக்கு மாற்றி விட்டார்கள். இன்னும் இரண்டு நாட்களில் புறப்பட வேண்டும்." வந்ததும் வராததுமாகப் பரமசிவம் இப்படி ஒரு வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார்.

"அட பாவமே! நீரும் மாற்றிப் போகிறீரா? பேச்சுத் துணைக்கு ஒரே ஒரு நண்பராக இருந்தீர். இனி என் பாடுதான் திண்டாட்டம்!"

"மதுரை ஜில்லாவுக்குள்தானே இருக்கிறேன். ஐம்பது அறுபது மைல் ஒரு பெரிய தொலைவா? அடிக்கடி இங்கே வராமலா போய்விடுவேன்?"

"சரி! போய் வாருங்கள்!"

"உங்களுக்கும் இப்போதுதான் கோடை விடுமுறையாயிற்றே. இங்கே வெயில் உச்சி மண்டையைப் பிளக்கிறது. நான் போய் ஒரு வாரத்தில் கடிதம் எழுதுகிறேன். தேக்கடியில் வந்து என்னோடு பத்துப் பதினைந்து நாட்கள் தங்கியிருங்களேன். பெரியாறு ஏரியும் அணைக்கட்டும் அவசியம் பார்க்க வேண்டிய இடங்கள்" என்றார்.

"நீங்கள் போய் வேலையை ஒப்புக்கொண்ட பின் வசதியை அனுசரித்துக் கடிதம் எழுதுங்கள்" என்றேன் நான்.

நண்பர் பரமசிவம் விடை பெற்றுக்கொண்டு போய்ச் சேர்ந்தார்.

### 2

**ம**துரைப் பிரதேசத்தைப் பொன் கொழிக்கச் செய்யும் பெரியாறு நீர்ப்பாசனத் திட்டத்தை மேற்பார்க்கும் ஆபீஸ் ஒன்று, மதுரை நகரில் தல்லாகுளத்திற்கு அருகே சொக்கிக் குளத்தில் இருக்கிறது. நேற்றுவரை நண்பர் பரமசிவம் இங்கேதான் வேலை பார்த்து வந்தார். மிக விரைவிலேயே எப்படியோ இருவரும் நெருங்கிப் பழகிவிட்டோம். கலா சாலையில் தமிழ் கற்பிக்கும் ஆசிரியனுக்கும், காட்டிலாக்கா உத்தியோகஸ்தனுக்கும் இந்த மாதிரி ஒரு நெருக்கம் ஏற்பட்டது வியப்புக்குரிய விஷயம்தான்!

பரமசிவம் போனதும் அவர் குடியிருந்த வீடு காலியாக வெறிச்சோடிப் போய்க் கிடந்தது. தெரு வழியாகப் போகும்போதும் வரும்போதும் அந்த வீட்டைப் பார்த்து ஏங்குவேன். அந்த ஏக்கத்தோடு ஏக்கமாக 'இந்த உலகத்தில் மனம் விட்டுப் பழகுகிற நட்பு இருக்கிறதே; அதைவிடப் பெரிய விஷயம் ஒன்றுமே இல்லை. நட்புக்கு ஈடு நட்புதான்' என்றும் எண்ணிக்கொள்வேன். 'நிழலருமை வெயிலிலே' என்று சொல்வார்களே, அதுபோலப் பரமசிவத்தின் நட்பின் அருமை அவர் இல்லாத போதுதான் என் மனத்தில் பெரியதோர் தாபமாக உருவெடுத்து உறைத்தது.

3

**சொ**ல்லிவிட்டுப் போயிருந்ததுபோல் ஒரு வாரத்தில் பரமசிவம் கடிதம் எழுதியிருந்தார்.

"இந்த இடம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. இயற்கை வளம் மிகுந்த மலைத் தொடரின்மேல் நாலாயிரத்துக்கு மேற்பட்ட அடி உயரத்தில் சிறிய ஊர். குளிர்ச்சியும் பசுமையும் நிறைந்த இடம். கோடைக்கானலில் 'சீஸன்' காலத்தில் தங்கியிருப்பது போலத் தோன்றுகின்றது. பல மைல் விஸ்தீரணத்துக்குப் பரந்த பெரியாறு ஏரி, மலைச் சிகரங்களுக்கு நடுவே கண்ணாடி பதித்ததுபோலத் தோன்றுகிறது. மின் விசைப் படகை (லாஞ்ச்) எடுத்துக் கொண்டு, இந்த ஏரியில் மைல் கணக்காகச் சுற்றுவது ஒரு ரஸமான பொழுதுபோக்கு. இரண்டு கரையிலும் கூட்டம் கூட்டமாகக் காட்டு மிருகங்கள் திரிவதைப் படகிலிருந்து 'பைனாகுலர்' மூலம் பார்க்கலாம். கரையோரமாகப் படகைச் செலுத்தினால் 'பைனாகுலர்' இல்லாமலேயே பார்க்கலாம். சுகவாசத்துக்கு ஏற்ற இடம்தான்; சந்தேகமே இல்லை.

இருந்தாலும் என் மனத்தில் நிம்மதி இல்லை. திடீரென்று உங்கள் நட்பும் பழக்கமும் பல மைல் தொலைவுக்கு அப்பால் போய் விட்டதுபோல ஓர் ஏக்கம் என்னை வாட்டுகிறது. சதா உங்களைப் பற்றிய நினைவுதான். இப்படியே தொடர்ந்து இன்னும் சில நாட்களுக்கு உங்களைப் பார்க்காமலோ, பேசாமலோ இருந்தேனானால், எனக்குப் பைத்தியம் பிடித்தாலும் பிடித்துவிடும் போலிருக்கிறது. எனவே, தயவுசெய்து கண்டிப்பாக இரண்டு மூன்று நாளில் உங்களை இங்கே எதிர்பார்க்கிறேன்."

இக் கடிதம் பரமசிவத்தோடு எனக்கு இருக்கும் நட்பின் ஆழத்துக்குச் சாட்சி கூறிற்று. 'ஆகா! இது அல்லவா நட்பு? நான் பரமசிவத்தின் பிரிவால் என்ன ஏக்கத்தை அடைந்திருந்தேனோ, அதே ஏக்கத்தை என் பிரிவால் அவரும் அடைந்திருக்கிறார். இதுதானே உயிருக்குயிரான உண்மை நட்புக்கு அடையாளம்!' என்று எண்ணினேன். உடனே, மறுநாளே பரமசிவத்தின் அழைப்பை ஏற்றுக்கொண்டு, நான் புறப்பட்டு வருகிற தேதி குறித்து அவருக்கு ஒரு பதில் கடிதம் எழுதித் தபாலில் சேர்த்துவிட்டேன். சீக்கிரமே புறப்படவும் செய்தேன்.

உத்தமபாளையம், கம்பம், கூடலூர் இவைகள் மதுரை ஜில்லாவின் மேல்கோடிப் பிரதேசங்கள். கூடலூருக்கு மேற்கே குமிழி என்ற இடம் வரையில்தான் சென்னை

மாகாண எல்லை. அதற்கு அப்பால் திருவனந்தபுரம் 'ஸ்டேட்' எல்லை. இந்த மேல்கோடி ஊர்களுக்கு இருப்புப் பாதை மார்க்கம் கிடையாது. பஸ் பிரயாணம்தான். மதுரையிலிருந்து கம்பம் வரைக்கும் ஒரு பஸ். கம்பத்தில் குமிழி பார்டர் (எல்லை) வரை, மலைப் பிரயாணத்துக்கு வசதியாக அமைக்கப்பட்ட குறைவான பிரயாணிகளைக் கொண்ட வேறோர் பஸ். செங்குத்தாக 'S' 'Z' என்ற ஆங்கில எழுத்துக்கள்போல் வளைந்து வளைந்து செல்கிற மலை ரஸ்தா. பிரயாணம் இன்பகரமாகத்தான் இருந்தது. ஆனால் அபாயமும் பயமும் நிறைந்த ஒரு ரஸ்தா அது! பஸ் 'மக்கர்' செய்துவிட்டால் கூண்டோடு கைலாசம்தான்.

குமிழியில் 'பரமசிவம்' தயாராக என்னை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார். அவருக்கு ஒரே மகிழ்ச்சி. நான் வந்த சந்தோஷத்தில் அப்படியே சிறு குழந்தை மாதிரிக் கட்டித் தழுவிக்கொண்டு விட்டார். அங்கிருந்து தேக்கடிக்கு ஓர் ஒற்றை மாட்டு வண்டியில் போய்ச் சேர்ந்தோம். உண்மையிலேயே அந்த இடத்தின் மலை வளம் அபாரமானதுதான்.

தேக்கடி என்ற இடம்தான் பெரியாறு ஏரியின் நுனிப் பகுதி. அங்கிருந்து மலையை அடியில் குடைந்து தண்ணீரை அந்த குடைவின் வழியாக அடிவாரத்துக்குக் கொண்டு வருகிறார்கள். மலையின்மேல் குடைவில்தான், தண்ணீர் ஏரியிலிருந்து கிளம்பும் இடத்தில்தான், பிரதானக் கால்வாய் இருக்கின்றது. இதன் அருகே ஒரு மேட்டில் பரமசிவத்தின் வீடு இருந்தது. அருகே 'பி.டபிள்யூ. டி. குவார்டர்ஸை'ச் சேர்ந்த பல சிறுசிறு வீடுகள் இருந்தன. அது மலேரியாப் பிரதேசமாகையினால் சர்க்கார் ஊழியர்களின் சௌகரியத்திற்காக நிறுவப்பட்டிருந்த ஆஸ்பத்திரி ஒன்றும் அங்கே இருந்தது. இந்தக் கட்டிடங்களுக்கும் இதைச் சுற்றி இருந்த அடர்ந்த தேக்குமரக் காட்டிற்கும் சேர்ந்து மொத்தமாக ஏற்பட்டிருந்த பெயர்தான் 'தேக்கடி' என்பது.

பரமசிவத்திற்குப் பரம சந்தோஷம்! எனக்கு உபசாரங்களெல்லாம் தடபுடல்தான். நான் திணறிப்போகும்படி ஜமாய்த்துவிட்டார்.

"ஸார்! நீங்கள் வந்ததும், ஏதோ இழந்துபோன குபேர சம்பத்தைத் திரும்பப் பெற்றுவிட்டதுபோலத் தோன்றுகிறது. சென்ற ஒரு வாரமாக வலது கை ஒடிந்து போனவன் மாதிரி தவித்துப் போனேன். எனக்கு என்னவோ மாதிரி இருந்தது."

"உங்களுக்கு மட்டும்தானா அப்படி? நீங்கள் இங்கே மாற்றலாகி வந்தீர்களோ இல்லையோ; அங்கே மதுரையில் எனக்கு ஒரு காரியமும் ஓடவில்லை. அஞ்சாறு மாசம்தான் என்றாலும் கண்ணுக்குக் கண்ணாக, உயிருக்கு உயிராக, அவ்வளவு தூரம் இணக்கமாகப் பழகிவிட்டோமே."

"இப்படியே விடுமுறை பூராவும் இங்கேயே இருந்து விடுங்களேன்." பரமசிவத்தின் வேண்டுகோளுக்குப் பதில் சொல்லாமல் சிரித்தேன்.

"என்ன சிரிக்கிறீர்கள்?..."

"இந்த அன்பு எவ்வளவு தூரம் மனிதர்களைப் பைத்தியங்களாக்கி விடுகிறதென்று நினைத்துக் கொண்டேன். சிரிப்பு வந்துவிட்டது."

"எப்படியோ போகிறது! ஒரு மாசமாவது இருந்துவிட்டுப் போங்கள்."

"இருக்க முடிந்தால் பார்க்கிறேன்."

"அது சரி! இன்று பௌர்ணமி. நிலாவில் ஏரிப் பிரயாணம் மனோரம்யமாக இருக்கும். விசைப் படகுக்கு ஏற்பாடு செய்து விடுகிறேன். இரவுச் சாப்பாட்டுக்கு மேல் ஒன்பது மணிக்குப் புறப்படுவோம். கரையோரத்தில் யானை, மான், காட்டுமாடு, முயல்கள், கரடிகள் எல்லாம் மந்தை மந்தையாகத் திரிவதைப் படகில் இருந்தே பார்க்கலாம்."

"தாராளமாக! கரும்பு தின்னக் கூலியா? நான் தயார். புது இடத்தில் எனக்கும் உறக்கம் வராது."

**ப**ரமசிவம் நிலவில் ஏரிப்பிரயாணத்திற்கு ஏற்பாடு செய்துவிட்டு வந்தார். 'ஏறக்குறைய அறுபது மைல் விஸ்தீரணம் மூலை முடுக்குக்களாகப் பிரிந்து, பிரிந்து உப்பங்கழிகளைப்போல நீளமாகச் செல்கிறது' என்று பெரியாறு ஏரியைப் பற்றி எங்கோ படித்து அறிந்து கொண்டிருந்தேன்.

இரவு நிலாவில் பிரயாணம் செய்யும்போது நான் கேள்விப்பட்டிருந்த உண்மையை நிதரிசனமாகக் கண்டேன். தண்ணீரில் நனைந்த வெள்ளைத் துணிபோல் நிலா மங்கலாக அதிக ஒளியில்லாமல் தேவையான ஒளியுடன் காய்ந்து கொண்டிருந்தது. பாலில் தோய்த்து எடுத்த நீலநிற வைரக்கற்களைப் போல, நிலா ஒளியில் மலைச் சிகரங்கள் அழகாகக் காட்சி தந்தன. விசைப் படகு நீரைக் கிழித்துக்கொண்டு சென்றது. படகில் பரமசிவம், நான், அதை ஓட்டுகின்ற ஆள், ஆக மூவரே இருந்தோம். பெட்ரோலில் இயங்கும் மோட்டார் டைனமோவின் 'டபடபடபடப' வென்ற சப்தமும், நீர் கிழிபட்டுச் சிதறும் ஒலியுமாக, அந்த நேரத்தின் அமைதியைக் குலைத்தது. ஏரி தேக்கப்படுவதற்கு முன்பே இருந்த மரங்கள், ஏரியின் இடையே பட்டுப்போய் மொட்டை மொட்டையாக நின்றன. தண்ணீர் தேங்குமுன் அவற்றை வெட்டாமல் விட்டதின் விளைவு இது.

ஏரி சில இடங்களில் அகன்றும் சில இடங்களில் குறுகியும் அமைந்திருந்தது. கரைகளில் கும்மென்று மரங்கள் இருண்டு அடர்ந்து வளர்ந்திருந்தன. அந்த மனோரம்யமான பிரயாணம் ஏதோ 'பூலோகத்திலுள்ள சொர்க்கத்தின் வழி' என்று தோன்றியது எனக்கு. இந்த அருமையான காட்சியை என் நண்பர் பரமசிவத்தால் அல்லவா நான் காண முடிந்தது? அவருக்கு எவ்வளவு நன்றி செலுத்தினாலும் தகுமே?

படகு போய்க் கொண்டே இருந்தது. இரண்டு மூன்று மைல்களைக் கடந்து வந்து விட்டோம்.

"அதோ! பார்த்தீர்களா?" - பரமசிவம் தொலைவில் கரையோரத்தைச் சுட்டிக் காட்டினார்.

அந்த இடத்தில் நிலாவின் மங்கிய ஒளியில், ஐந்தாறு யானைகள் நீர் பருகிக் கொண்டிருந்தன. இன்னொரு இடத்தில் புல்வெளியில் மான்களும் காட்டெருமை களும் மேய்ந்து கொண்டிருந்தன. ஓரிடத்தில் ஈசல் புற்றைச் சுற்றி, இரண்டு மூன்று கரடிகள் காலால் துளைத்துக் கொண்டிருந்தன. ஏரியின் நடுவில் வேகமாக விசைப் படகில் போய்க்கொண்டே இவ்வளவையும் பார்ப்பது வேடிக்கையாகத்தான் இருந்தது.

திடுதிப்பென்று 'மோட்டார் டைனமோ'வின் டபடபவென்ற ஓசை நின்றது. படகு நிலை தடுமாறி வேகமாக அதிர்ந்து ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு நின்றது.

"என்னப்பா? என்ன? ஏன் 'டைனமோ' நின்றுவிட்டது?" பரமசிவம் பதறிப் போய்க் கேட்டார். டிரைவர் உதட்டைப் பிதுக்கினான். "மோட்டாரிலே ஏதோ சிறு கோளாறு போல் இருக்குது. அதனாலே 'பெட்ரோல்' எடுக்கமாட்டேன் என்கிறதுங்க"

"ஐயையோ! இந்த நட்ட நடு ஏரியிலே ஏழெட்டு மைல் வந்தப்புறம் இப்ப என்னப்பா செய்கிறது?"

"வேறென்ன செய்யலாம்? ஆபத்துக்கு ஆகட்டும் என்று படகுக்குள்ளே கைத் துடுப்புக்கள் கொண்டு வந்திருக்கோமே, அதை எடுத்துத் தள்ளவேண்டியதுதான்."

"இனிமேல் மோட்டார் 'ஒர்க்' பண்ணாதா?"

"'மைனர் ரிப்பேர்'தான்! அதை முடிச்சிட்டா ஓடும். இங்கேயே கரையோரத்தில், படகைத் தள்ளி மோட்டாரைக் கழற்றி ரிப்பேரை முடிச்சா நல்லதுதான். ஆனால் கரையோரத்திலே மிருகங்கள் பழகற நேரம்! இப்போது அங்கே படகை ஒதுக்கறதே தப்பாச்சுங்களே?"

"பரவாயில்லை! சீக்கிரமா முடித்துக்கொண்டு புறப்பட்டு விடுவோம். கையாலே துடுப்புத் தள்ளி எந்த ஜன்மத்தில் கரைக்குப் போகிறது. அது முடியாது. வா! வா! இப்படியே ஒதுக்கி மோட்டாரைக் கழற்று." - பரமசிவம் டிரைவரை நோக்கிக் கூறினார்.

"வேண்டாமுங்க! இந்த நேரத்திலே கரையோரத்திலே படகை ஒதுக்கறது ஆபத்து..."

"அட! சரிதான், சொன்னாக் கேளப்பா!" பரமசிவத்தின் பிடிவாதத்தினால் அந்தப் பயங்கரமான மிருகங்கள் பழகும் கரையோரத்தில், கைத் துடுப்புக்களால் படகை ஒதுக்கினான் அவன். படகிலிருந்து 'மோட்டார் டைனமோ' தனியே கழற்றப் பெற்றது.

படகு அலைந்து நீரில் நடுப் பகுதிக்குப் போய்விடக் கூடாதே என்பதற்காக, அதைத் துடுப்புக்களால் முட்டுக்கொடுத்து இழுத்து அணைவாகப் பிடித்துக் கொள்ளவேண்டியிருந்தது. எங்கள் மூவரில் அதிகக் கனமாக, வளமான உடல்பெற்றவர் பரமசிவம்தான். அவர் பிடித்துக் கொண்டால்தான் படகும் ஓடாமல் நிற்கும். நாங்கள் கொத்தவரங்காய் மாதிரி ஒல்லியானவர்கள். எனவே, பரமசிவம்

படகை இழுத்துக் கரையோரமாகப் பிடித்துக் கொண்டார். நானும் டிரைவருமாக டைனமோவை மோட்டாரோடு கழற்றிக் கரைக்குக் கொண்டு போனோம்.

கரையருகே அடர்ந்து செறிந்த புதர். புலி, கரடி எது வேண்டுமானாலும் அந்தப் புதருக்குள் இருக்கலாம். எனக்கு ஒரே நடுக்கம். டிரைவருக்கு என்னைவிட நடுக்கம். ஒருவருக்கொருவர் நடுக்கத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல், மகா தைரியசாலிகளைப்போல நடித்துக்கொண்டு, 'மோட்டார் டைனமோ'வைப் பிரித்தோம். மங்கிய நிலாவின் ஒளி கரையில் சரியாக விழவில்லை. டிரைவர் பையிலிருந்த தீப்பெட்டியை எடுத்து ஒவ்வொரு குச்சியாகக் கிழித்து ஒளி உண்டாக்கிக் கொண்டே, 'ரிப்பேரை'ச் செய்யலானான். நான் அவனுக்கு ஒத்தாசையாக அருகில் இருந்தேன். இப்படியாக 'மோட்டார் டைனமோ ரிப்பேர்' நடந்துகொண்டிருந்தது.

அநேகமாக வேலை முடிந்துவிட்டது. கிளம்ப வேண்டியதுதான். நாசமாய்ப் போகிற விதி. அந்தச் சமயம் பார்த்து எங்களைச் சோதித்துவிட்டது.

திடீரென்று நாங்கள் சற்றும் எதிர்பாராத விதமாகப் புதரில் சலசலப்பு உண்டாயிற்று. அடுத்த விநாடி அந்தச் சாதாரணமான சலசலப்பு, காடே அதிரும்படியான ஒரு கர்ஜனையாக மாறிற்று. எங்களுக்கு இரத்தம் உறைந்துவிட்டது. எனக்கும் சரி, டிரைவருக்கும் சரி, ஓடுவதற்குக் கால் எழும்பவில்லை! புதருக்குள் சலசலப்பு அதிகமாயிற்று.

"வாருங்கள்! வாருங்கள்; படகுக்கு ஓடிவிடுவோம். ஐயோ புலி! நரவாடையைக் கண்டுகொண்டு விட்டது. இனி விடாது..." டிரைவர் தன்னைச் சமாளித்துக் கொண்டு, என் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக்கொண்டு கரைக்கு ஓடினான்.

ஆனால், கரையில் படகுமில்லை! படகை இழுத்துப் பிடித்துக்கொண்டு நின்ற பரமசிவமும் இல்லை. நடுத் தண்ணீரிலே படகில் துடுப்பைப் போட்டுத் தள்ளிக்கொண்டிருந்தார். எங்கள் இருவர் உயிர் போனாலும் பரவாயில்லை; தம் ஒருவருடைய உயிர் பிழைத்தால் போதும் என்று கிளம்பி விட்டார் அவர்.

"அட் கொலைகாரப் பாவீ! உன் உயிர்தான் உனக்குப் பெரிசா?" - டிரைவர் இரைந்து அலறினான். பரமசிவம் திரும்பிப் பார்க்கவேயில்லை. துடுப்பை வேகமாக வலித்து, நடு ஏரிக்கு ஓடிக் கொண்டிருந்தார், புலியின் உறுமல் எங்களை மிக அருகில் நெருங்கி விட்டது;

"சாமீ! நீச்சுத் தெரியுமா உங்களுக்கு? குதியுங்க, தண்ணீரிலே! இல்லைன்னா இன்னிக்கு நம்ம ரெண்டு பேரும் புலிக்குப் பலியாக வேண்டியதுதான்!"

"ஐயையோ! எனக்கு நீச்சுத் தெரியாதே!"

"பரவாயில்லை! இதோ... என் இடது கையைப் பிடிச்சுக்குங்க..." - என்னையும் இழுத்துக்கொண்டு குபீரென்று தண்ணீரில் பாய்ந்துவிட்டான் டிரைவர். நீரில் குதித்து, என்னையும் இழுத்துக்கொண்டு நீந்திய அவன், வேகமாக நீர் நடுவிலிருந்த ஒரு மரத்தைப் போய்த் தொத்திக் கொண்டான். நானும் தொத்திக் கொண்டேன். இருவரும்

கரையைப் பார்த்தோம். அங்கே ஓர் அதிசயம் நிகழ்ந்து கொண்டிருந்தது. மோட்டாரிலிருந்த பெட்ரோல் குழாயில் டிரைவர் கிழித்துப் போட்ட நெருப்புக் குச்சி விழுந்து ஒரு பாக உயரத்துக்கு ஒரு தீ ஜ்வாலை எரிந்து கொண்டிருந்தது. அதைக் கண்டு தயங்கி, மிரண்டு ஒரு பூதாகாரமான வேங்கைப் புலி ஓடிக்கொண்டிருந்தது. உயிருக்குயிரான நண்பன் காப்பாற்ற மறுத்த எங்களை, அஜாக்கிரதையால் பெட்ரோலில் விழுந்த ஒரு சிறு நெருப்புக்குச்சி காப்பாற்றி விட்டது.

புலி போன சிறிது நேரத்திற்கெல்லாம் பரமசிவம் படகோடு வந்தார். டிரைவர் அவரை அடிக்கக் கையை ஓங்கிவிட்டான்; நான்தான் தடுத்தேன். பின்பு எப்படியோ நாங்கள் எல்லாரும் இரவு இரண்டு மணிக்குத் திரும்பிவந்து சேர்ந்தோம்.

## 4

மறுநாள் காலையிலேயே நான் சொல்லாமல் ஊர் கிளம்பி விட்டேன். இந்த உலகத்தில் நட்பைவிட, மானத்தைவிட - ஏன்? எல்லாவற்றையும்விட பெரிய விஷயம் ஒன்று இருக்கிறது. அதுதான் சொந்த உயிர்! இது எனக்குப் புரிந்து விட்டது! எப்போது தெரியுமா? அந்த மங்கிய நிலா இரவில்தான்! சந்தர்ப்பம் அளித்த பாடம் அது.

(1963-க்கு முன்)



## 77. கருநாக்கு

பங்குனி, சித்திரை மாதங்களில் மதுரையில் திருவிழாக்கள் அதிகம். திருவிழாக்களைவிட வெயில் கொடுமை இன்னும் அதிகம். இந்த வெயிலின் தீட்சண்யத்தைக் கோடைக்கானலுக்கு டிக்கெட் வாங்க 'கியூ'வில் நிற்பவர்கள் தான் அறிவார்கள்.

அன்று நான் அப்படித்தான் கோடைக்கானலுக்கு 'டிக்கெட்' கிடைக்காமல் 'புக்கிங் ரூம்' என்ற லட்சியத்தை நோக்கி, 'கியூ' என்னும் சாதனம் கொண்டு, வெயில் என்னும் புலனை அடக்கித் தவம் செய்துகொண்டிருந்தேன். தவம் என் சொந்த முயற்சியால் சித்திப்பதற்கு முன்னால், ஒரு நண்பரால் அதிசீக்கிரமாகச் சித்தித்து விட்டது.

என் நண்பர் பட்டாபி நாராயணன் கோடைக்கானல் 'ஹில்' போலீஸ் ஸ்டேஷனில் சப்-இன்ஸ்பெக்டராக இருந்து வருபவர். அன்று தற்செயலாக, ஆபீஸ் காரிய நிமித்தம் மதுரைக்கு வந்திருக்கிறார். நான் கோடைக்கானலுக்கு வருவதுபற்றி, நேற்றே அவருக்குக் கடிதம்கூட எழுதியிருந்தேன். ஆனால், அவர் இன்று இங்கே வந்திருப்பதால், கடிதத்தைப் பார்த்திருக்க நியாயமில்லை. ஆபீஸ் காரியம் முடிந்து ஊர் திரும்புவதற்காக அவர் ஸ்டாண்டை அடைந்தபோதுதான் 'கியூ'வில் நின்றுகொண்டிருந்த என்னை அவர் காண நேரிட்டது.

அவருடைய தயவினால் டிக்கெட்டும் சுலபமாகக் கிடைத்தது. பஸ்ஸில் டிரைவருக்கு அடுத்தபடி இருந்த முன் சீட்டில் இருவரும் ஏறி அமர்ந்து கொண்டோம். மலைப் பிரயாணத்திற்கு வாய்க்கும் பாக்கியங்களில் எல்லாம் சிறந்த பாக்கியம், இந்த முன் ஆசனத்தில் அமரும் பாக்கியம்தான். உடம்பு நோகாமல், பஸ்ஸின் அலுங்கல் குலுங்கல்களுக்கு ஆளாகாமல், இருபுறமுள்ள இயற்கை வனப்புகளையும் ரசித்துக்கொண்டு போகலாம்.

ஆனால், எங்கள் துரதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது? மதுரையிலிருந்து புறப்பட்ட பஸ், சோழவந்தானுக்கும் வத்தலக்குண்டுக்கும் நடுவில் ஒரு சிறு கிராமத்தின் அருகில் மெஷினில் கோளாறாகி நின்றுவிட்டது.

சோழவந்தானில் பஸ் நின்றபோது. மதுரையிலிருந்து வந்த சக பிரயாணி ஒருவர் காப்பி சாப்பிட இறங்கினார். பஸ் புறப்படவேண்டிய நேரமாகியும், அவர் ஹோட்டலிலிருந்து வந்து ஏறிக்கொள்கிற வழியாகக் காணோம். எல்லாப் பிரயாணிகளும் வந்தாகிவிட்டது. டிரைவர் ஆசனத்தில் வந்து அமர்ந்து கொண்டு 'ஹார்ன்' அடித்துப் பார்த்தார். என்ன செய்தும், ஹோட்டலில் நுழைந்த பேர்வழி

உடனே வரவில்லை. அன்று அவரால் சோழவந்தானிலிருந்து பஸ் ஐந்து நிமிஷம் 'லேட்'டாகப் புறப்பட வேண்டியதாயிற்று.

இதனால் கோபமடைந்த கண்டக்டர், அந்த ஆள் பஸ்ஸில் வந்து உட்கார்ந்ததும், ஆத்திரம் பொங்கும் குரலில், 'உங்களைப்போல ஆளுங்க எல்லாம் பஸ்ஸுலே ஏன் ஐயா வந்து உசிரை வாங்குறீங்க? சே! சே! டயத்துக்குப் போய்ச் சேரலைன்னா எங்களைக் கம்பெனிலே சும்மா விடுவானா? நீர் என்னையா மனுஷன்? அஞ்சு நிமிஷம் லேட்டாக்கிட்டீரே, ஐயா!" என்று பொரிந்து தள்ளினான்.

அந்த ஆள் முரட்டுத்தனம் மிக்கவர் என்பது, கண்டக்டருக்கு அவர் கூறிய கண்டிப்பான பதிலிலிருந்தே தெரிந்தது.

"அட, சரிதான்! நிறுத்து வேய்! எனக்குத் தெரியாதோ, உங்க பஸ்ஸு டயத்துக்குப் போற லட்சணம்? சும்மா எங்கிட்ட வச்சுக்கிடாதே, இந்த மிரட்டல் எல்லாம். எத்தனை நாள் நடுரோட்டிலே நின்னுக்கிட்டு சண்டித்தனம் பண்ணியிருக்கு உங்க பஸ்? என் கை வலிக்க நான் தள்ளியிருக்கேனே, தம்பீ! அது மாதிரி இன்னைக்கும் கொஞ்ச நேரம் சண்டித்தனம் பண்ணினதாக நினைச்சிட்டுப் போவையா...? எங்கிட்ட மோதுறே!"

"ஐயா! ஐயா! நீங்க லேட்டாக்கினதுனாலேகூடத் தோஷமில்லை. உங்க கருநாக்குப் பிடிச்ச வாயாலே பஸ்ஸைப் பத்தி எதுவும் சொல்லி வைக்காதீங்க! நடு வழிலே நின்னுடப் போவுது!" அந்த ஆளைச் சமாதானப்படுத்துவது போல டிரைவர் கூறினான். இதற்கு அப்புறம் இந்தப் பேச்சு வளரவில்லை.

இப்போது தற்செயலாகக் காக்கை உட்காரப் பனம் பழம் விழுந்தது என்கிற கதையாகப் பஸ் நின்று விடவே, எல்லோரும் அந்த முரட்டு மனிதரை வாய்க்கு வந்தபடி ஆக்ரோஷமாகத் திட்டத் தொடங்கி விட்டார்கள்.

பட்டாபியும் நானும் இறங்கி, பட்டாபியின் மாமனார் வீட்டில் இரவு தங்க முடிவு செய்து கிளம்பினோம். வழியில் என் மனத்தில் உறுத்திய சந்தேகத்தைக் கேட்டேன். 'கருநாக்கு' என்றால் என்ன?

பட்டாபி சொன்னார், "சிலருடைய வாக்குக்குத் துர்த்தேவதைகள் கட்டுப்படுவதுபோல, கருநாக்குக்காரர்களுக்கு ஏகதேசம் சொற்கள் கட்டுப்பட்டுத் தன் விளைவை உண்டாக்குகின்றன... இதற்கு உதாரணமாக, பிரத்தியட்சமாக நடந்த நிகழ்ச்சி ஒன்றை எடுத்து, உங்களுக்கு நான் சொல்ல முடியும்... அந்த நிகழ்ச்சியைக் கேட்டால், எப்படியும் நீங்கள் இந்த மாதிரி விஷயத்தில் கொஞ்சம் நம்பிக்கை கொள்ளத்தான் வேண்டியிருக்கும்..." என்று அழுத்தமான தொனியில் கூறினார்.

"என்ன அது?" என்றேன் ஆவலுடன்.

"கதை இல்லை; உண்மையாகவே என் கண் காண நடந்தது" என்ற பீடிகையோடு நண்பர் பட்டாபி கூறத் தொடங்கினார்.

* * *

**ஆ**யிரத்துத் தொளாயிரத்துப் பதினோறாம் வருடம். அப்போதுதான் என்னை முதன் முதலாக மதுரையிலிருந்து கோடைக்கானல் ரூரல் ஸ்டேஷனுக்கு மாற்றியிருந்தார்கள். சுதந்திரப் போராட்டம் மும்முரமாக நடந்துகொண்டிருந்த சந்தர்ப்பம் அது. திருநெல்வேலி கலெக்டர் ஆஷ் துரையை மணியாச்சி ஜங்ஷனில் செங்கோட்டை வாஞ்சி ஐயர் சுட்டுக்கொன்ற பயங்கர சம்பவம் நடந்து கொஞ்ச நாள்தான் ஆகியிருந்தது. இந்தச் சம்பவத்தால் பெரிய பெரிய உத்தியோகங்களில் இருந்த வெள்ளைக்காரத் துரைகள் எல்லாம் போலீஸ் பாதுகாப்பை அதிகமாக நாடினர். மதுரை ஜில்லா முழுவதும் சுதந்திரப் போராட்டம் உச்ச நிலைமை அடைந்திருந்த சமயத்தில், கோடைக்கானலுக்கு மாற்றல் கிடைத்ததை எண்ணி மகிழ்ந்திருந்தேன் நான். பொழுதை அமைதியாகக் கழிக்கலாம் அல்லவா?

ஆனால், கோடைக்கானலுக்கு வந்து பதவி ஏற்றுக்கொண்ட பிறகுதான், 'வேலை எனக்கு அங்கும் குறைவில்லை' என்று தெரிந்தது. அந்தச் சமயம் இந்தப் போராட்டத்துக்குப் பயந்தே ஜில்லாக் கலெக்டர், சப்-கலெக்டர் ஆகிய இரண்டு வெள்ளைக்காரத் துரைகளும் கோடைக்கானலுக்கு வந்து முகாம் போட்டிருந்தார்கள். அவர்களைக் கவனித்துக் கொள்ள வேண்டிய வேலை வேறு என் தலையில் சுமந்திருந்தது. கலெக்டர் துரைகளின் முகாமை அறிந்து புரட்சிக்காரர்களும் 'வேட்டைக்கு' வருவார்கள் என்ற ஹேஷ்ய பூர்வமான செய்தி கிடைத்திருந்ததனால், நான் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டி வந்தது. இப்படியிருக்கும்போதுதான், ஒரு நாள் முன்னிரவில் அந்தப் பயங்கர சம்பவம் நடந்தது.

மாலை சுமார் ஆறரை மணி இருக்கும். கோடைக்கானலில் சில சமயங்களில் மூன்று மணிக்கே இரவைப்போல ஆகிவிடும். அன்றோ, மழை இருட்டு.

அன்று ஓர் விசேஷச் செய்தி கிடைத்திருந்ததனால், நான் அந்தச் செய்தியை ஊர்ஜிதப் படுத்துவதற்குரிய தகவலை ஓர் ஆள் மூலம் எதிர்பார்த்து, ஸ்டேஷன் வராந்தாவில் நாற்காலியைப் போட்டுக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தேன். எதிரே அமைதியாகத் தென்பட்ட ஏரியில் அவ்வளவு இருட்டையும் பனியையும் பொருட்படுத்தாமல் யாரோ பாட்டரி விளக்குகளின் வெளிச்சத்தோடு படகுகளில் போய் வந்து கொண்டுதான் இருந்தார்கள்.

மணி ஏழேகால் ஆகிவிட்டது. ஏரியில் படகுகளின் ஒலியையும் குமுறும் இடியோசையையும் தவிர கோடைக்கானல் ஊர் அடங்கிவிட்டது. விநாடிக்கு விநாடி பனி கோரமாகிக் கொண்டிருந்தது. நான் எதிர்பார்த்த ஆள் இன்னும் வரவில்லை.

விஷயம் இதுதான்: 'கலெக்டர் துரை எதற்காகப் பயந்து கொண்டு கோடைக்-கானலில் 'ஸ்பெஷல் போலீஸ்' பாதுகாப்புடன் முகாம் போட்டிருந்தாரோ, அதுவே அங்கே அவரைத் துரத்திக் கொண்டு வந்திருக்கிறது என்று எனக்கு உளவு கிடைத்தது. கோடைக்கானல் மலைத்தொடரின் அடிவாரத்தில் பண்ணைக்காடு என்று ஒரு ஊர் இருக்கிறது பாருங்கள், அந்த ஊரில் 'பேயாண்டி அம்பலம்' என்ற ஒரு தீவிர தேச பக்தரும், மதுரையைச் சேர்ந்த வேறு சில தேசியப் புரட்சிக்காரர்களும் சேர்ந்து

'கலெக்டர் துரை' யைக் கொலை செய்துவிடுவதுபற்றிப் பேசுவதற்கு அன்று நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு ஒரு சதிக் கூட்டம் நடத்த ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அந்தக் கூட்டம் பண்ணைக்காடு ஊரில் மேல்புறம், சாலையோரமாக இருக்கும் பேயாண்டி அம்பலத்தின் கொடிக்காலுக்குள்ளே நடைபெறப் போகிறது. சதியில் சம்பந்தப்பட்டவர்களை அன்றிரவே கைது செய்யத்தவறினால், பின்னர் கலெக்டர் உயிர் பிழைப்பது துர்லபம். அவ்வளவு குரூரமான சதி.'

இந்தத் தகவல் அன்று மாலை நாலு மணிக்குத்தான் எனக்குத் தெரிந்தது. விஷயம் மெய்தானா என்று அறிந்து வர நம்பிக்கை வாய்ந்த ஒரு கான்ஸ்டபிளைச் சாதாரண உடையில் பண்ணைக் காட்டிற்கு உடனே அனுப்பியிருந்தேன். அவன்தான் இன்னும் திரும்பி வரவில்லை. முதலில் எனக்குத் தகவல் தெரிவித்தவரும் அதே பண்ணைக்காடு ஊரைச் சேர்ந்தவர்தாம். ஆனால், தகவல் கடித மூலமாக வந்திருந்தது. ஆகவே, எனக்குச் சிறிது சந்தேகமும் இருந்தது. இதனால் எனக்குக் கடிதம் அனுப்பிய 'நடராஜ அம்பலம்' என்பவரையும் கையோடு கோடைக்கானலுக்குக் கூட்டிக்கொண்டு வருமாறு கான்ஸ்டபிளிடம் வற்புறுத்திச் சொல்லி அனுப்பியிருந்தேன்.

**ச**ரியாக எட்டு மணிக்கு நான் அனுப்பியிருந்த கான்ஸ்டபிளும், எனக்குக் கடிதம் எழுதியிருந்தவரான பண்ணைக்காடு நடராஜ அம்பலமும் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தார்கள்.

இருவரையும் தனித்தனியே விசாரித்ததில், அன்றிரவு பேயாண்டி அம்பலத்தின் கொடிக்காலில் புரட்சியாளர்களின் பூர்வாங்கச் சதிக் கூட்டம் நடக்கப்போவது உண்மைதான் என்று உறுதியாகத் தெரிந்தது. நான் உடனே ஆயுதம் தாங்கிய போலீஸ் படையுடன் லாரியில் பண்ணைக் காட்டிற்குப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்யலானேன்.

அப்போது நடராஜ அம்பலம் சிறிது தயக்கமும் பயமும் நிறைந்த குரலில் என் அருகே வந்து, "இன்ஸ்பெக்டர் ஐயா! இந்தச் சதிக் கூட்டத்திலேயே நாம் அதிகமாகப் பயப்பட வேண்டிய ஆள் ஒருவர்தான். அந்த மனிதர் வாயிலே விழுந்தால் பெரிய தொல்லைதான். கருநாக்குக்கார மனிதர். இந்தச் சதிக் கூட்டத்திலே எங்களூர்ப் பேயாண்டி உள்பட மொத்தம் எட்டுப் பேருங்க. இந்த எட்டுப் பேரிலே வேம்பத்தூர் ஆசுகவி நம்பிராஜ ஐயரும் ஒருத்தர். பெரிய மாந்திரீக பரம்பரையிலே வந்தவருங்க... எடுத்தெறிந்து துக்கிரித்தனமா 'பட்னு' ஒரு வார்த்தை சொல்லிவிட்டார்னா, அதிசீக்கிரமாகப் பலித்துவிடுகிறது..."

"சட்! நிறுத்தும் ஐயா, பேச்சை. இன்றிரவு பன்னிரண்டு மணிக்குப் பேயாண்டி அம்பலம் வெற்றிலைக் கொடிக்காலில் கலெக்டர் துரையைக் கொல்வதற்குச் சதிக்கூட்டம் நடக்க போகிறதா, இல்லையா? அதுதான் எனக்குத் தெரியவேண்டும்... 'வேம்பத்தூர் நம்பிராஜ ஐயர் கருநாக்குக்காரர்', 'வாக்குச் சக்தி பொல்லாதது' என்று எல்லாம் சுத்த 'ஹம்பக்' பண்ணாதேயும்... போலீஸ் 'டிபார்ட்மெண்டு'க்குக் குற்றவாளியின் சாமர்த்தியத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள வேணுமென்கின்ற

அவசியம் கிடையாது." திரும்பவும் நான் அதிகாரத் தொனியில் இப்படி அதட்டவே, நடராஜ அம்பலம் வாயை மூடிக்கொண்டு 'கப்சிப்' என்று நின்று விட்டார்.

உடன் வந்து சதி நடக்கும் இடத்தைக் காட்டுவதாகவும் ஒப்புக்கொண்டார்.

**அ**ப்படியும் இப்படியுமாகக் கோடித்துக்கொண்டு நாங்கள் பண்ணைக் காட்டிற்குப் புறப்படும்போது, மணி ஒன்பதரைக்குமேல் ஆகிவிட்டது. வழித்துத் தடவி வைத்ததுபோல மையிருட்டு. மழைக் கோப்பாக இருந்ததனால், அண்ட முகட்டை அணுத் துண்டுகளாகப் பிளந்தெறிந்து விடுவதுபோல வானில் இடி முழக்கம் வேறு குமுறிக் கொண்டிருந்தது.

எங்கள் லாரி கோடைக்கானல் மலையின் அடிவாரத்திற்குப் போய்ச் சேர்ந்தபோது, சோனாமாரியாக மழை பிடித்துக் கொண்டுவிட்டது. இடியும் மின்னலும் மழையும் இருட்டுமாக ஒரு பெரும் பைசாசச் சூழ்நிலையில் லாரி பண்ணைக் காட்டை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. லாரிக்குள் பத்து ரிசர்வ் போலீஸ்காரர்களும், நானும், நடராஜ அம்பலமும், ஒரு டிரைவரும் இருந்தோம்.

அப்பப்பா! இப்போது நினைத்தால் குடல் நடுங்குகிறது. அன்றைக்கு இடித்த மாதிரி இடிகளை நான் வேறெந்த மழை நாளிலும் இன்றுவரை கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. சாலையில் லாரி சென்றுகொண்டே இருக்கும்போது 'படபட' வென்று இடிக்கு இலக்கான மரங்கள் முறிந்து விழும் ஓசைகள், பச்சை மரம் இடியால் தீயுண்டு எரியும் கோரத் தோற்றம், இவைகளைக் கேட்கவும் காணவும் சகிக்கவில்லை.

கோடைக்கானலிலிருந்து பண்ணைக் காட்டிற்கு மிகக் குறுகிய தொலைவுதான். ஆனால், காட்டு ஓடைகளில் தண்ணீர் வடியும்வரை பொறுத்திருந்தும், சாலையில் விழுந்து கிடந்த மரங்களை அகற்றி வழி உண்டாக்கிக் கொண்டும் போனதால், பதினொன்றரை மணி சுமாருக்குத்தான் பண்ணைக் காட்டை அடைய முடிந்தது. பண்ணைக் காட்டில் ஊர் அரவம் அடங்கிப் போயிருந்தது.

பேயாண்டி அம்பலத்தின் வெற்றிலைக் கொடிக்காலுக்கு இரண்டு பர்லாங் இப்பக்கம் தள்ளியே லாரியை நிறுத்தி, டிரைவரை அதற்குக் காவல் வைத்துவிட்டு, நாங்கள் பன்னிரண்டு பேர் மட்டும் மழையில் நனைந்து கொண்டே கொடிக்காலை அடைந்தோம்.

"இந்தக் கொடிக்கால்களிலே பச்சைப் பாம்பு அதிகமுங்க! ஜாக்கிரதையா இருக்கணும்" என்று எச்சரித்தார் நடராஜ அம்பலம்.

அம்பலம் முன் வழிகாட்டிச் செல்ல, நான் பின்பற்றி நடந்தேன்.

குளம் போலப் பரந்திருந்த ஒரு கிணற்றின் கரையில் நாற்புறமும் திறந்த ஒரு தகரக் கொட்டகை. கொடிக்காலின் நடுமையம் அந்த இடம். கொட்டகைக்குக் கதவு இல்லையாகையினால், இருளில் மறைந்து நடப்பதைக் கவனிக்க எங்களுக்கு அதிகச் சௌகரியமாக இருந்தது. அம்பலம் சுட்டிக் காட்டிய திசையில் பார்வையைச் செலுத்தினேன்.

தகரக் கொட்டகையின் நடுவே ஒரு பெரிய அரிக்கேன் லாந்தர் எரிந்து கொண்டிருந்தது. அந்த அரிக்கேன் லாந்தரைச் சுற்றி ஏழெட்டு மனிதர்கள் உட்கார்ந்திருந்தனர். அநேகமாக ஒரே ஒருவர் தவிர, மற்றவர்கள் எல்லாம் கதர்க் குல்லாய் வைத்திருந்தனர். அந்த ஒருவர் நெற்றியில் மட்டும், சந்தனமும் குங்குமமுமாகக் காலணா அகலத்துக்கு ஒரு பொட்டு. சோழியர்கள் மாதிரி முன் புறம் முடிந்த குடுமி. பஞ்சக்கச்சம் வைத்துக் கட்டிக் கொண்டிருந்தார். கம்பீரமான ஆகிருதி.

"அவர்தானுங்க நம்பிராஜ ஐயர்!" நடராஜ அம்பலம் பீதி தொனிக்கும் குரலில் என் காதருகே மெல்ல முணுமுணுத்தார்.

அரிக்கேன் லாந்தரின் மங்கிய ஒளியில், அவர்களுக்கு நடுவே தரையில் நாலைந்து கைத் துப்பாக்கிகள் கிடப்பதைப் பார்த்தேன். உட்கார்ந்து கொண்டிருந்த ஆட்களில் கிருதா மீசையும் முரட்டுத்தோற்றமும் உடைய ஒருவர் எழுந்திருந்து, கீழே கிடந்த துப்பாக்கிகளில் ஒன்றை எடுத்து, அதை எப்படி உபயோகப்படுத்துவது என்று விளக்கத் தொடங்கினார்.

"இவர்தானுங்க எங்க ஊர் பேயாண்டி அம்பலம். துப்பாக்கி சுடறதிலே நல்ல பழக்கமுள்ளவருங்க" மீண்டும் என் செவியில் நடராஜ அம்பலத்தின் நடுங்கிய குரல் மெல்ல விழுந்தது.

துப்பாக்கியைக் கையில் எடுத்துக் கொண்டிருந்த ஆள், "வந்தே மாதரம்! பாரதமாதாவுக்கு" என்று கோஷம் கொடுத்துவிட்டு, "சகோதரர்களே! இதோ மாதிரிக்கு ஒரு முறை சுட்டுக் காட்டுகிறேன். எல்லாரும் நன்றாகக் கவனித்துக்கொள்ளுங்கள்" என்று கூறித் துப்பாக்கியை மேலே தூக்கிச் சுழற்றி மனத்துக்குத் தோன்றிய திசையில் குறி வைத்துக் குதிரையை அழுத்தினார். உட்கார்ந்திருந்தவர்கள் எல்லாரும் எழுந்திருந்து நின்றதால், பேயாண்டி அம்பலம் குறிவைத்த திசை எனக்குத் தெரியவில்லை.

ஆனால், அவர் அப்படிக் குதிரையை அமுக்கிக் கொண்டிருந்தபோது முன் குடுமியோடு இருந்த ஆள் - நம்பிராஜ ஐயர் கணீரென்ற குரலில் கூறிய சொற்கள், என் உடம்பு புல்லரித்து நடுங்கும்படி செய்தன.

"பேயாண்டீ! நீ இப்போது சுடுகின்ற குண்டுகள் காட்டிக் கொடுக்கும் துரோகி ஒருவனின் வலது புஜத்துக்கு யமனாகப் போகின்றன என்று என் மனத்தில் பகவதி சொல்கிறாள், அப்பா." நின்றவர்களின் நிழல், விளக்கு ஒளியை மறைத்து விட்டது. குதிரை அழுத்தப்பட்டது. குண்டுகள் படீரென்று வெடிக்கும் ஓசை! ஆனால் இதென்ன? ஐயோ! என் பக்கத்தில் பதுங்கிக் கொண்டிருந்த நடராஜ அம்பலம் அல்லவா பயங்கரமாக அலறிக்கொண்டு கீழே சாய்கிறார்!

என் உடம்பு நடுங்கியது. சட்டென்று விஸிலை எடுத்து இரைந்து ஊதினேன். போலீஸார் 'தடதட' வென்று ஓடிவரும் ஓசை கேட்டது. பக்கத்தில் விழுந்து கிடந்த நடராஜ அம்பலத்தைக் கீழே குனிந்து பார்த்தேன். அவர் வலது புஜத்தில் துப்பாக்கிக்

குண்டுகள் பாய்ந்து ரத்தம் வடிந்து கொண்டிருந்தது. அதிர்ச்சியில் பிரக்ஞை இழந்திருந்தார் அவர்.

இதற்குள் நம்பிராஜ ஐயர், "வந்தே மாதரம்! ஓடுங்கள், ஓடுங்கள், போலீஸ் துரத்துகிறது" என்று இரைந்து கூறுவதையும், அதை அடுத்துக் கதர்க் குல்லாய்காரர்கள் திசைக்கொருவராக ஓடுவதையும் கண்டேன். போலீஸ்காரர்கள் அப்போதுதான் தகரக் கொட்டகையை நெருங்கியிருந்தார்கள்.

கடைசியில், நம்பிராஜ ஐயரும், பேயாண்டி அம்பலமும் எங்களிடம் சிக்கிக்கொண்டார்கள்! லைசென்ஸ் இல்லாத அந்தத் துப்பாக்கிகளும் கைப்பற்றப்பட்டன. தகரக் கொட்டகையில் அரிக்கேன் விளக்கு வெளிச்சத்தில் பேயாண்டிக்குக் கைகளில் விலங்கு மாட்டிக்கொண்டிருந்தார்கள். அடுத்தாற்போல, நம்பிராஜ ஐயருக்கு மாட்டவேண்டும்.

இந்த நிலையில் நம்பிராஜ ஐயர் திடீரென்று நாலடி முன்னால் நடந்து என் அருகே வந்து விறைப்பாக நின்றுகொண்டு, என்னை ஏற இறங்க ஒருமுறை பார்த்துவிட்டுக் கூறினார்: "ஓய் இன்ஸ்பெக்டரே! உம்முடைய கம்பளிக் கோட்டை உடனே கழற்றிக் கீழே வையும் ஐயா! இல்லையானால், இன்னும் சில நிமிஷத்தில் சாகப் போகிறீர்!"

"இந்தாரும், நம்பிராஜ ஐயரே! உம்முடைய மாந்திரீகம், வாக்கு சக்தி, கருநாக்கு இதெல்லாம் எங்கிட்டே செல்லாது... சும்மா எதையாவது பிதற்றாதேயும்!" என்றேன் நான்.

"நான் பிதற்றவில்லை. பகவதி சொல்கிறாள். சற்றுமுன் நீர் புதருக்குள் ஒளிந்திருந்தபோது, உமக்குத் தெரியாமலே ஒரு விஷஜந்து உம்முடைய கோட்டுப் பையைத் தனது தற்காலிக வாசஸ்தலமாக ஸ்வீகரித்துக் கொண்டிருக்கிறது. என் நாக்கு கருநாக்கு. பொய் அதில் பிறக்காது. சந்தேகமாயிருந்தால், இதோ நீரே உம் கண்களால் பாருமேன்!" இப்படிக் கூறிக்கொண்டே நான் எதிர்பாராத விதமாக என்மேல் பாய்ந்து, என் கம்பளிக் கோட்டைக் கழற்றிக் கீழே வீசி அறைவது போல எறிந்தார் நம்பிராஜ ஐயர்.

என்ன ஆச்சரியம்! ஒரு பாக நீளத்துக்குப் பளபளவென்று கண்ணைப் பறிக்கும் நிறத்தோடு ஒரு பச்சைப் பாம்பு கோட்டுப்பையிலிருந்து சீறிக்கொண்டு வெளிவந்தது. கான்ஸ்டபிள் ஒருவன் லத்திக் கம்பால் பாம்பை அடித்துக் கொன்றான்.

"என்ன, இன்ஸ்பெக்டர்! நம்புகிறீரா?" - நம்பிராஜ ஐயர் சிரித்துக்கொண்டே கேட்டார். நான் அவருக்குப் பதில் சொல்லாமலே கான்ஸ்டபிளை நோக்கி, "இவருக்கு விலங்கு மாட்டு அப்பா!" என்றேன். அவன் விலங்கு மாட்டினான். இதற்குள் வலது தோளில் குண்டு பட்டுக் காயமடைந்து கிடந்த நடராஜ அம்பலத்துக்குப் பிரக்ஞை வந்திருந்தது. கைத்தாங்கலாக இரண்டு கான்ஸ்டபிள்கள் அவரை லாரி இருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றனர். கைது செய்யப்பட்டவர்களோடு நாங்களும்

லாரிக்குச் சென்றோம். லாரி ஒன்றரை மணி சுமாருக்குக் கோடைக்கானலுக்குப் புறப்பட்டது.

இடையில் ஒரு பாட்டம் பெய்து ஓய்ந்திருந்த மழையும் இடியும், மீண்டும் ஆரம்பமாகியிருந்தன.

லாரி போய்க்கொண்டிருக்கும்போதே, “ஏன் ஸார் இன்ஸ்பெக்டர் ? எங்களைக் கோடைக்கானலுக்குத்தானே கொண்டுபோகிறீர்கள்?” என்று எதையோ நினைத்துக் கொண்டு கேட்பவர்போல, நம்பிராஜ ஐயர் திடீரென்று கேட்டார்.

“அதை நீர் ஏன் ஐயா கேட்கிறீர்? எங்கே கொண்டு போக வேண்டுமோ, அங்கே கொண்டுபோக எங்களுக்குத் தெரியும். நீர் உம்முடைய கருநாக்கை அடக்கிப் பேசாமல் வாரும்” என்று அழுத்தலாக அவருக்குப் பதில் கூறினேன் நான்.

“நான் அதற்குச் சொல்ல வரவில்லை, சார்! உங்கள் கோடைக்கானல் ஹில் ஸ்டேஷனில் இப்போது மனிதர்கள் தங்குவதற்கு முடியாதே என்றுதான் விசாரித்தேன்.”

“வாயை வைத்துக்கொண்டு சும்மா வாரும். மனிதர்கள் தங்க வசதி இல்லாவிட்டால் போகிறது; உங்களைப் போன்ற புரட்சிப் புலிகள் எல்லாம் தங்கலாம். அல்லவா” என்றேன்.

“எங்களை ‘மிருகங்கள்’ என்று மறைமுகமாக நீங்கள் குத்திக் காட்டுவது எனக்குப் புரிகிறது, இன்ஸ்பெக்டர். ஆனால் இந்த மிருகங்கள் தங்குவதற்குக்கூட இடம் ஹில் ஸ்டேஷனில் இப்போது கிடையாதே? அவ்வளவேன் சார்? ஹில் ஸ்டேஷனே இப்போது இல்லை! போங்கள்!”

“ஏன்?...” நான் கேட்டேன்.

“சற்று முன் வீழ்ந்த பயங்கரமான இடி விபத்துக்கு ஆளாகி, உங்கள் ஹில் ஸ்டேஷன் தரை மட்டமாகி விட்டதற்காக என் ஆழ்ந்த அனுதாபங்கள் இன்ஸ்பெக்டர்!”

“என்ன? இடி விபத்தா?” ஆச்சரியம் தாங்கமுடியாமல் கூவியது என் வாய். டிரைவரை லாரியை வேகமாகச் செலுத்தும்படி தூண்டினேன்.

**வி**ரைவில் லாரி கோடைக்கானலை அடைந்து ஸ்டேஷன் வாசலில் போய் நின்றது.

அவசர அவசரமாகக் கீழே இறங்கிப் பார்த்தேன். கண்களைக் கசக்கிக்கொண்டு இமைக்காமல் பார்த்தேன். எங்கள் ஸ்டேஷன் கட்டிடம் நொறுங்கித் தரை மட்டமாக்கப்பட்டிருந்தது, இடி விபத்தால்!

“என்ன இன்ஸ்பெக்டர், நான் சொன்னது நிஜம்தானே?”

*திரும்பிப் பார்த்தேன். நம்பிராஜ ஐயர் சிரித்த முகத்தோடு, கை விலங்குகளை ஆட்டியவாறே, லாரியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தார்.*

**ந**ண்பர் பட்டாபி நாராயணன் இவ்வாறு கதையைக் கூறி முடித்தபோது, நாங்கள் வத்தலகுண்டை அடைந்திருந்தோம்.

"அந்த நம்பிராஜ ஐயர் இப்பொழுது ஜீவிய வந்தராக இருக்கிறாரா?" என்று நண்பரை நான் கேட்டேன்.

"ஆகா! பேஷாக இருக்கிறார். சர்க்கார் மானியமாகக் கிடைத்த தியாகி நிலம் ஐந்து ஏக்கர், பெரியாற்றுக்கால் பாசனத்தில் வாய்த்திருக்கிறது. அந்த வருமானத்தைக் கொண்டு வேம்பத்தூரில் சுகவாசம் செய்கிறார்! 'வாக்கு சக்தியுள்ளவர்' என்ற 'கெத்து' இன்னும் ஊர் உலகத்தில் அவருக்கு இருந்து கொண்டுதான் இருக்கிறது!" என்று கூறிக்கொண்டே மாமனார் வீட்டில் நுழைந்தார் நண்பர் பட்டாபி.

(1963-க்கு முன்)



## 78. கடுவாய் வளைவு

செங்கோட்டையிலிருந்து திருவனந்தபுரம் செல்லும்போது, புனலூர் வரையிலும், மலைத்தொடர்களின் நடுவேயும், பள்ளத்தாக்குப் பகுதியிலுமாக இயற்கை வளமிக்கக் காட்சிகளுக்கு ஊடே புகைவண்டி செல்கிறது. இந்த இயற்கைக் காட்சிகளில் மயங்கிவிட்டவர்கள், செங்கோட்டையிலிருந்து புனலூர் வரை எத்தனை ஸ்டேஷன்கள் இருக்கின்றன, அவைகளுக்கு என்னென்ன பெயர்கள் என்பதையெல்லாம் மறந்துவிடுவதுதான் வழக்கம்!

இந்த வழியில் மலையடிவாரத்துப் பள்ளத்தாக்கில் பள்ள பகவதியாபுரம் என்ற முதல் ஸ்டேஷனை அடுத்து, மலைமேல் உள்ள ஆரியங்காவு என்ற ஸ்டேஷன் இருக்கிறது. இவ்விரண்டு ஸ்டேஷன்களுக்கும் நடுவில் முக்கால் மைல் தொலைவு இருளடைந்த மலைக் குகையினுள்ளேயே புகைவண்டி செல்வதை மட்டும் எவரும் நிச்சயமாக மறந்திருக்க மாட்டார்கள்.

ஆரியங்காவிலுள்ள சாஸ்தா கோவில் செங்கோட்டை, தென்காசிப் பகுதிகளில் பிரசித்தமானது. வரப்பிரசாத சக்தி மிகுந்த தெய்வம் என்று மக்கள் சாஸ்தா கோவிலுக்குச் சென்று வருகிறார்கள்.

குற்றாலத்தில் சீஸனுக்காகப் போய்த் தங்கியிருந்தேன். என்னுடைய செங்கோட்டை நண்பர் சிவனுக் கரையாளரைத் தற்செயலாக அருவிக்கரையில் சந்திக்க நேர்ந்தது.

"குற்றாலம் குற்றாலம் என்று இங்கேயே கிடந்து மடிகிறீர்களே, ஸார்! நாளைக்கு ஆரியங்காவு வரையில் போய்விட்டு வரலாமே" என்றார் அவர்.

நான் அதற்கு இணங்கினேன். கரையாளர் நிறைந்த தெய்வ பக்தியுடையவர். தமிழ் நாட்டின் பெருமைக்குக் காரணமான பழம் பண்பாட்டை அழிக்கின்ற எந்தச் செயலையும் துணிந்து வெறுப்பவர். புளியரை, ஆரியங்காவு, பகவதியாபுரம் முதலிய பகுதிகளில், எஸ்டேட் மானேஜராக இருந்தவர். அந்த நாட்களில் வருமானத்தில் 'நாலுகாசு' மீதம் பிடித்துச் சிறிது சிறிதாக உள்ளூரிலேயே நிலபுலங்களை வாங்கிச் சேர்த்துக் கொண்டபின், வேலையை விட்டுவிட்டார். இவர் சுபாவத்தில் நல்ல மனிதர்.

மறுநாள் காலை, நானும் சிவனுக்கரையாளரும் செங்கோட்டையிலிருந்து காலை ஒன்பது மணிக்குப் புறப்படும் திருவனந்தபுரம் பாசஞ்ஸரில் ஆரியங்காவுக்குப் போய்ச் சேர்ந்தோம்.

ஆரியங்காவு ஸ்டேஷனில் இறங்கியதும் நான் பிரமித்துப் போனேன், 'நாம் தமிழ் நாட்டிலுள்ள ஒரு மலைத்தொடரின் நடுவேதான் இருக்கிறோமா? அல்லது காஷ்மீரில்

ஏரிக்கரையிலுள்ள பழத் தோட்டங்களின் நடுவிலோ, அல்லது 'குலு' பள்ளத்தாக்கிலோ இருக்கிறோமா?' என்று எனக்குச் சந்தேகமாகப் போய்விட்டது!

எத்தனை எத்தனை விதமான மரங்கள்? எத்தனை மலர்கள்! எவ்வளவு நிறங்கள்! எத்தனை வகைப் பழ மரங்கள்! எவ்வளவு செடி கொடிகள்! எங்கும் ஒரே பசுமை! அங்கங்கே அற்புதமான கீத ஓசையோடு கலகலவெனப் பாயும் நீரூற்றுகள்; சுற்றிலும் மேகமென்கின்ற மெல்லிய வெள்ளைச் சல்லாத் துணியைப் போர்த்து விளங்கும் மலைச் சிகரங்கள். அழகு! அழகு! ஒரே இயற்கையின் எழில்!

"கரையாளரே! சாஸ்தாவைக் கும்பிடுவதற்கு முன்னால், முதலில் உம்மை ஒருதரம் கும்பிடலாம் போலத் தோன்றுகிறது ஐயா! நேற்றுவரை என்னால் கற்பனைகூடச் செய்திருக்க முடியாத இடத்துக்கு என்னைக் கூட்டிக்கொண்டு வந்துவிட்டீரே!"

"இப்பொழுதே அதிகமாகப் புகழ்ந்து விடாதீர்கள் ஸார்! இன்னும் பிரமாதமான இடங்களை எல்லாம் இனிமேல்தான் பார்க்கப் போகிறோம். முக்கியமாக இதன் கிழக்கே தேயிலைத் தோட்டங்களுக்குப் பக்கத்தில், 'கடுவாய் வளைவு' என்று ஒரு இடமிருக்கிறது. அது இயற்கை யழகின் சிகரம் மட்டுமல்ல; பயங்கர நிகழ்ச்சிகளின் சிகரமும்கூட."

"ஆமாம். பயங்கரத்தின் சிகரமாக விளங்குவதற்கு அப்படி அங்கே என்னதான் ஆபத்திருக்கிறது?"

"பயந்துவிடாதீர்கள், ஸார்! அது மிக அடர்த்தியான மலைப்பகுதி. இந்தப் பக்கத்தில் இதற்கு மற்றொரு பெயர் 'புலிகளின் கோட்டை' என்பது. இங்கே வேட்டைக்கு வந்து போகிற வெள்ளைக்காரர்கள் வைத்த பேர் ஸார், அது!"

"ஐயையோ! வேண்டாம் கரையாளரே! நான் சினிமாவில் நிறையப் புலிகளைப் பார்த்திருக்கிறேனே..."

"முதலில் கோவிலுக்குப் போகலாம். அடுத்த திட்டத்தைப் பற்றிப் பின்பு யோசிப்போம். நீங்கள் இப்போதிருந்தே நடுங்க வேண்டாம்!"

**ஆ**ரியங்காவு ரயில்வே ஸ்டேஷன் ஊரைவிட மேட்டின் மேல் அமைந்திருந்த தனால், படி வழியாக இறங்கித் திருவனந்தபுரத்திற்கு மலைவழியாகச் செல்லும் சாலை மேல் நடந்தோம். பத்து, இருபது கெஜதூரம் சென்றதும் ஐந்தாறு டீக் கடைகளுக்கு நடுவே, செம்மண்பட்டை அடித்த வாயில் ஒன்று தென்பட்டது. பகலிலேயே கும்மென்று இருள் சூழுமாறு மரஞ் செடி கொடிகள் அடர்ந்து வளர்ந்திருந்தன. கூரை வேய்ந்து தாழ்வான மண் சுவர்களால் அமைக்கப்பட்டிருந்த அந்தக் கிராமாந்தரத்து டீக்கடைகளில் மலையாளத் தினப் பத்திரிகைகளைப் படித்துக்கொண்டு, சிலர் அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர். தமிழும் மலையாளமும் கலந்த கதம்ப பாஷையில் அவர்கள் பேச்சு அமைந்திருந்தது. சாரல் விழுந்தபடி குளிர் மூட்டமாக இருந்த அந்தப் பருவச் சூழ்நிலையில், உடம்புக்குச் சூடேற்றுவதற்காக எத்தனை டீ வேண்டுமானாலும் குடிக்கலாம்! டீக் கடைகளில் பத்திரிகையும் கையுமாகக் கூடி

அரட்டையடித்துக் கொண்டிருந்தவர்கள், கால் மணி நேரத்திற்கு ஒரு டீ வீதம் பருகிக் கடைக்காரர்கள் 'நம்பிக்கை' மோசம் போகாமல் பார்த்துக் கொண்டிருந்தனர்.

கரையாளரை அவர்களுக்கு நன்றாகத் தெரிந்திருக்கும் போலும். கடையில் உட்கார்ந்து, ஊர்வம்பு பேசிக்கொண்டிருந்தவர்கள் அவரைக் கண்டதும் மரியாதையோடு எழுந்திருந்து வணங்கி வரவேற்ற விதத்திலிருந்தே அது தெரிந்தது. கரையாளர் மலையாளத்தில் அவர்களோடு, ஏதோ பேசினார்.

சிறிது நேரத்தில் ஒரு ஜீப் வந்தது. அதை எஸ்டேட் கட்டிடத்திலிருந்து 'டிரைவ்' செய்துகொண்டு வந்த மலையாளி, எங்கள் அருகில் கொண்டுவந்து நிறுத்தினான். கரையாளரும் நானும் ஏறிக்கொண்டோம். அவர் அவனிடம் மலையாளத்தில் ஏதோ கூறினார். ஜீப் புறப்பட்டது. ஏற்றமும் இறக்கமுமான மலை ரஸ்தாவில், வானளாவி வளர்ந்திருந்த தேக்கமரங்களின் இடையே குளிர்ந்த காற்று முகத்தில் வந்து மோத, அது ஊர்ந்து சென்றது.

"ஸார்! புலிகளுக்கும் அவைகள் இருக்கின்ற இடத்துக்கும் தானே நீங்கள் பயப்படுகிறீர்கள்? புலிகளைப் பற்றிய கதையைச் சொன்னால்கூட நீங்கள் பயப்படுவீர்களோ?"

சிவனுக்கரையாளர் ஜீப்பில் சென்றுகொண்டிருக்கும் போதே பேச்சைத் தொடங்கினார். கதை என்றால் நானா சும்மா விடுகிறவன்?

"ஏன்? ஏதாவது 'ரெடிமேடாக' வைத்திருக்கிறீர்களா? இருந்தால் சொல்லுங்கள்!"

கரையாளர் தமக்கே உரிய அனுபவ பாணியில் கூற ஆரம்பித்தார்.

"'புலிகளின் கோட்டை' என்று கூறினேனே 'கடுவாய் வளைவு' பிரதேசத்தைப் பற்றி. அந்த இடத்தினிடையேதான் எங்கள் 'எஸ்டேட் பங்களா' அமைந்திருந்தது. 'பிரவிருத்தி' என்று வந்த பிறகு ஆபத்துள்ள வனாந்தரம் ஆபத்தில்லாத நகர வாழ்வு என்று வித்தியாசம் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? எங்காவது வாழ்ந்துதானே ஆக வேண்டியிருக்கிறது?

பங்களாவைச் சுற்றி ஆழமான குழி வெட்டியிருந்தார்கள். கதவுகள் எல்லாம் இரும்பால் அமைக்கப்பட்டிருந்தன. ஜன்னல்களை உயரமாகத் தரைக்கெட்டாமல் வைத்திருந்தார்கள். இரண்டு மூன்று துப்பாக்கிகளும் பங்களாவில் இருந்தன. இவ்வளவு தற்காப்புச் சாதனங்களையும் நம்பித்தான், நானும் குடும்பத்தோடு அந்தப் பங்களாவில் வசிப்பதற்குச் சம்மதித்தேன்.

ஆனால், இவர்கள் கொடுத்திருந்த இந்த ஆயுதங்களை எல்லாம்விட உன்னதமான ஓர் ஆயுதம் என்னிடம் இருந்தது. அது கடவுளால் எனக்குக் கொடுக்கப்பட்டது. அதுதான் என் சொந்த மனோதைரியம்.

மாலை ஐந்தரை மணி ஆகிவிட்டால், என்ன தலைபோகிற காரியம் இருந்தாலும், விடிந்து பத்து மணியாவதற்கு முன்பும் மாலை ஐந்தரை மணிக்குப் பின்பும் பங்களா

வாசலைக் கடந்து செல்வதில்லை; செல்லக் கூடாது. கண்டிப்பாக இதை அமுல் நடத்தினோம்.

எஸ்டேட் காரியமாகக் கொல்லம், புனலூர், கொட்டாரக்கரை என்று நான் வெளியூர்களுக்கு அடிக்கடி போய் வரவேண்டியிருக்கும். சில சமயங்களில் இரவு ரெயிலில் ஊருக்குத் திரும்புவேன். ஆனால், அப்படித் திரும்புகிற நாட்களில் ஆரியங்காவு ஸ்டேஷனிலேயே இறங்கிப் படுத்துக் கொள்வேனே தவிர, இரவில் மலை வழியாக எஸ்டேட் பங்களாவுக்குப் போகமாட்டேன். விடிந்த பிறகு பத்து மணிக்கு மேல்தான் போவேன். இந்த வழக்கத்துக்குச் சோதனைபோல் ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது.

அப்போது இங்கே மழை சீஸன். கைவசமிருந்த, உலர்த்திப் பாடம் செய்யப்பட்ட தேயிலையை மேலும் வைத்துக் கொண்டிருந்தால் கெட்டுப் போய்விடும். எப்படியாவது மொத்த விற்பனைக்கு ஒப்பந்தம் செய்து கொண்டுதான் திரும்பவேண்டும் என்று நான் வெளியூர்ச் சுற்றுப் பிரயாணத்தை மேற்கொண்டிருந்தேன்.

ஐந்தாறு நாட்களாக வெளியூர்களில் சுற்றினேன். கடைசியில் கொல்லத்திலுள்ள 'ஸோல் ஏஜண்ட்' ஒருவர் அகப்பட்டார். மறுநாள் எழுத்து மூலம் அவரிடம் உடன்படிக்கை செய்துகொண்டு, ஊர் திரும்பலாம் என்று இருந்தேன் நான்.

ஆனால், என்னுடைய துரதிஷ்டமோ, என்னவோ; அன்று மாலையே ஊருக்குத் திரும்ப வேண்டியதாயிற்று. ஊரிலிருந்து என் மனைவி தந்தியடித்திருந்தாள்.

"குழந்தை பகவதிக்கு மலேரியாக் காய்ச்சல். அபாயம், உடனே வரவும்."

உடன்படிக்கையைத் தபால் மூலம் செய்து கொள்ளலாம் என்றெண்ணித் தந்தி கிடைத்த உடனே ரெயிலேறி விட்டேன். குழந்தையின் காய்ச்சல் தீர்ந்து நல்லபடி ஆக வேண்டுமே என்ற பிராத்தனையைத் தவிர, என் மனம் வேறெதையுமே அப்பொழுது நினைக்கவில்லை. 'குழந்தையின் உயிருக்கே நாம் போவதற்குள் ஆபத்து நேர்ந்து விடுமோ?' என்ற ஒரு பயமும் மனத்தில் எழுந்து குழப்பிக்கொண்டிருந்தது.

ஆரியங்காவு ஸ்டேஷனில் நான் இறங்கும்போது இரவு மணி ஏழேகால். நல்ல நிலாக் காலமானாலும், மழை மேகம் இருளாகக் கப்பி வான வெளியை மூடியிருந்தது. 'இஇ' என்ற ஓசையைத் தவிர நிசப்தமும், இருட்டும் குடிகொண்டிருந்தன. சாதாரணமாக நான் ஊருக்குத் திரும்பியிருந்தால் அப்படியே ஸ்டேஷன் 'வெயிட்டிங் ரூமி'ல் படுத்துக் கொண்டிருந்து விட்டுக் காலையில்தான் போவேன்.

ஆனால், அன்றோ குழந்தை பகவதியின் மலேரியாக் காய்ச்சல் என்னைத் துடிதுடிக்கச் செய்துகொண்டிருந்தது. 'என்ன ஆனாலும் சரி; இப்போதே கடுவாய் வளைவுக்குப் போய் எஸ்டேட் பங்களாவை அடைந்துவிடுவது' என்று தீர்மானித்துக்கொண்டேன்.

அதிருஷ்டவசமாக, என் கைப் பையில் 'மூன்று ஸெல் டார்ச் லைட்' ஒன்று இருந்தது. வெளியூர்களுக்குச் செல்லும்போது, அதை நான் கையோடு கொண்டுபோவது வழக்கம்.

மனத்தைத் திடப்படுத்திக் கொண்டேன். உடலையும் உயிரையும் சர்வத்தையும் விதிகளின் கைகளில் ஒப்படைத்து விட்டதாக எண்ணிக்கொண்டு, 'கடுவாய் வளைவு'க்குச் செல்லும் மலை ரஸ்தாவில் நடந்தேன்.

மனம் என்னவோ, நான் தைரியமாகக் காலை எட்டி வைத்து வேகமாய் நடப்பதாக எண்ணிக்கொண்டிருந்தது! ஆனால், உண்மையில் கால்களின் நடையில் ஒரு நடுக்கம், ஒரு தயக்கம் இருப்பதை நானே உணரமுடிந்தது. தேள் என்று தெரிந்துகொண்டே அதன் கொடுக்கைத் தடவிப் பார்ப்பது போலிருந்தது என் செயல். இதை நீங்கள் அசட்டுத் துணிச்சல் என்பீர்களோ, அல்லது பாராட்டவேண்டிய தைரியம் என்பீர்களோ; எனக்குத் தெரியாது.

'படக் படக்' என்று கொள்ளை போகிறாற்போல் அடித்துக் கொள்ளும் மனமும், நடக்கத் தயங்கிக் கொண்டே நடக்கும் கால்களுமாக நான் சென்று கொண்டிருந்தேன். கால்கள் பழக்கமான வழியில் தடம் தெரிந்து நடந்து கொண்டிருந்தன. 'டார்ச்சு லைட்' கையில் இருந்ததே ஒழிய, அதை உபயோகிக்கவே எனக்குப் பயமாக இருந்தது. வெளிச்சமில்லாமல் இருட்டிலேயே நடந்துவிட்டால் அபாயமோ, ஆபத்தோ எதையுமே பார்க்காமலேயே போய்விடலாம். வழியோரத்தில் டார்ச்சை அடித்துப் பார்க்கப்போய், அங்கே ஏதாவது ஒரு பயங்கர மிருகம் முடங்கிக் கிடப்பதைக் கண்கள் கண்டுவிட்டால், பின்பு கால்கள் மரத்துப் போய் அப்படியே நிற்கும்படி ஆகிவிடும்!

வழியின் பயங்கரத் தன்மையாலும், குழந்தையைப் பற்றிய கவலையாலும் என் மனம் இருண்டிருந்தது. வழியும் இருண்டிருந்ததால், மனம் இந்த இருட்டை விரும்பியது.

சர்வ சாதாரணமாகப் பயங்கர மிருகங்கள் பழகுகிற இடமாகையினால், தொலைவிலும் சமீபத்திலும் அவைகள் இருப்பதற்குரிய முழக்கங்கள் அடிக்கடி கேட்டுக்கொண்டே இருக்கும். ஒவ்வொரு முழக்கம் கேட்டு முடியும்போதும், என் உடலில் உள்ள மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கும். காற்றினால் சலசலக்கும் புதர்களிலிருந்து கொடிய மிருகம் ஒன்று சிலிர்த்துக்கொண்டு கிளம்புவது போல மனத்தில் பயங்கரக் கற்பனைகள் தாமாகவே தோன்றிவிடும்.

"ஆயிற்று! இதோ இந்த மலைத் திருப்பத்தில் திரும்பி, கிழக்கே பதினைந்து - இருபது கெஜம் நடந்துவிட்டால் 'கடுவாய் வளைவு', 'எஸ்டேட் பங்களா' கண்ணுக்குத் தெரியும். ஆனால் திருப்பமும், பதினைந்து இருபது கெஜ தூரமும் சாமானியமான இடங்களா? நினைக்கும்போதே உடம்பு புல்லரித்தது.

திருப்பத்தின் முகப்பில் யாரோ பெரிய தேக்கு மரம் ஒன்றை வெட்டிக் கொண்டிருந்தார்கள் போலும். காட்டிலாகா அதிகாரிகளின் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு இரவோடிரவாகத் தேக்கு மரம் வெட்டிக்கொண்டு போகும் மரத் திருடர்கள் அந்தப் பகுதியில் அதிகம். வெட்டுகிற ஓசை மிக அருகில் கேட்டதால், நான் நடந்து கொண்டிருந்த திருப்பத்திற்கு இருபது இருபத்தைந்து தப்படித் தொலைவில் அவர்கள் வெட்டிக் கொண்டிருக்க வேண்டும் என்று என்னால் அனுமானிக்க

முடிந்தது. அவர்களையும், அவர்களுடைய மரம் திருடும் சாமர்த்தியத்தையும் பற்றி வியந்துகொண்டே திருப்பத்தை அடைந்தேன். வெட்டுவதற்காக வெளிச்சம் வேண்டிச் சிறிதாகத் தீ மூட்டியிருந்தனர் அவர்கள்.

திடுதிடுப்பென்று ஒருவிதமான முடை நாற்றம் என்னைத் திணற அடித்தது. நான் திடுக்கிட்டேன். 'எந்த மிருகம் மிக அருகில் இருந்தால் அந்த மாதிரி மாமிச ரத்தமுடைய நாற்றம் வரும்' என்பது எனக்குத் தெரியும். அந்தத் திருப்பத்தின் பெயரை ஒட்டித்தான் 'கடுவாய் வளைவு' என்ற பெயரே அந்தப் பிரதேசத்திற்கு ஏற்பட்டது. என் உடல் வெட வெடவென்று நடுங்கியது. கைகால்கள் உதறலெடுத்தன. உடம்பில் அங்கங்கே ரத்தம் ஓடியதா உறைந்து போய்விட்டதா என்றே தெரியவில்லை! கண்கள் மிரள மிரளச் சுற்றிலும் நோக்கின. எதற்கு நான் பயந்து நடுங்கினேனோ 'அது' ரஸ்தாவின் மேலேயே வாலை முறுக்கியவாறு நின்று கொண்டிருந்தது!

மேட்டில் தேக்க மரம் வெட்டப்பட்டுக் கொண்டிருந்த இடத்துக்கு நேர் கீழே, ரஸ்தாவின் மேல் 'அது' நின்று கொண்டிருந்ததனால், அவர்கள் மூட்டியிருந்த தீ வெளிச்சத்தின் மங்கலான ஒளியில் நான் அதைக் காணமுடிந்தது.

மனிதவாடை தட்டுப் பட்டுத்தான் 'அது' அந்த இடத்தைவிட்டுப் போகாமல், அடித்த முளைமாதிரி வாலை முறுக்கிக் கொண்டு நிற்கிறது என்பதை நான் தெரிந்து கொண்டேன். பிரகாசமாக எரியும் இரண்டு சிவப்பு மின்சார விளக்குகளைப் போன்ற அந்தக் கண்கள், மரம் வெட்டும் ஓசை வந்த மேட்டை வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவர்கள் மூட்டியிருந்த தீயே அதை அங்கே தடுத்து நிறுத்தியிருக்கிறது என்பது எனக்குப் புரிந்துவிட்டது. தவிர, திருட வந்திருக்கும் அவர்கள் துப்பாக்கி முதலிய ஆயுத வசதிகளோடுதான் இந்த நேரத்தில் இந்த இடத்துக்கு வந்திருக்க முடியும்! துப்பாக்கியால் சுடும்போதுகூடச் சுடுபவர் மேல் ஆக்ரோஷமாக எதிர்த்துப் பாயும் மிருகத் தன்மை வாய்ந்த மிருகமது. ஆனால் தீ எரிந்து கொண்டிருந்தால் மட்டும் அதைக் கண்டு தயங்கி நின்றுவிடும் சுபாவம் அந்த மிருகத்துக்கு உண்டு.

ஓடவும் முடியாமல், நிற்கவும் முடியாமல் அப்படியே நின்றேன் நான். நாக்கு அடித் தொண்டையில் ஒட்டிக் கொண்டது. 'எங்கே ஓடுவது? எப்படித் தப்புவது?' எதையுமே பிரக்ஞையோடு சிந்திக்க முடியவில்லை என்னால்! 'இன்றைக்கு நம்முடைய உயிர் இந்தக் கடுவாய்ப் புலியால் அடித்துக் கொல்லப்பட வேண்டும் என்பதுதான் ஈசுவர சித்தம் போலும்' என்றெண்ணி, ஒடுங்கிவிட்டது என் உணர்வு.

கை நடுக்கத்தால் கையிலிருந்த 'டார்ச்' கீழே விழுந்து ஓசை உண்டாக்கிவிட்டது. சிறிய ஓசைதான்! ஆனால் அந்தப் பயங்கர மிருகத்தின் கூரிய செவிகளுக்கு அது போதாதா, நான் நிற்பதைத் தெரிந்து கொள்வதற்கு?

அப்பப்பா! மேட்டைப் பார்த்து வாலை முறுக்கிக் கொண்டிருந்த அந்த மிருகம் எவ்வளவு வேகமாக என் பக்கம் திரும்பியது என்று நினைக்கிறீர்கள்? இப்போது நினைத்தாலும் குடல் நடுங்குகிறது. தீப்பந்தங்களின் ஜ்வாலை போன்ற கண்களுடன 'அது' என்னைப் பார்த்துப் பாய்ச்சலுக்குத் தயாராகிவிட்டது. நான் உயிரோடு

செத்துக் கொண்டிருந்தேன். அது கொல்வதற்கு முன்பே - அது என்னை அறைந்து கொல்ல யத்தனிப்பதற்கு முன்னால் 'பயம்' என்ற கடுவாய் என் தைரியத்தை அறைந்து கொன்று விட்டது!

வாட்ட சாட்டமான அதன் உடல் பின்னுக்குப் பதுங்கி வளைந்து பாயத் தயாராகப் பம்மியது. நான் கண்களை இறுக மூடிக் கொண்டேன். அலற வேண்டும்போல இருந்தது. நா எழவில்லை. அடுத்த நொடி என் மார்பிலும் முகத்திலும் பிச்சுவாக் கத்திகளைப் போன்ற கூரிய நகங்கள் மோதிக் கிழிக்கும் என்று எதிர்பார்த்தேன். எனக்கும் அதற்கும் இடையில் பத்து அல்லது பன்னிரண்டடி இடைவெளி இருக்கலாம்.

ஒரு நொடியாயிற்று! 'சடசட'வென்று ஏதோ முறிந்து விழும் ஓசை என் செவிகளை அதிரச் செய்தது. அதையடுத்து, ஒரு புலியின் பெரிய முழக்கம். வயிற்றிலே ஐந்தாறு துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்ததும் பரிதாபகரமாக அலறுமே அந்த மாதிரி அலறல்! காடே கிடுகிடுத்தது.

'என்மேல் புலி பாயவில்லை. நான் உயிரோடுதான் இருக்கிறேன்' என்பதை உறுதி செய்துகொண்ட பின், மெல்லக் கண்களைத் திறந்தேன். ஈனஸ்வரத்தில் அதே மிருகத்தின் வேதனை அலறல் என் செவிகளில் கேட்டுக் கொண்டிருந்தது. எதிரே பார்த்தேன்; என்ன கோரம்? அந்தப் பயங்கர மிருகத்தின் உடல் பருத்த தேக்கு மரக்கட்டைக்கிடையில் சிக்கி நசுங்கிக் கொண்டிருந்தது. சுற்றி ரத்த வெள்ளம் தேங்கியிருந்தது. ஈனஸ்வரத்தில் வந்துகொண்டிருந்த மெல்லிய அலறலும் சிறிது சிறிதாக ஓய்ந்தது.

தரிசு நிலத்தில் பாய்ந்த வாய்க்கால் தண்ணீர்போல, ஏறக்குறைய பிரேத மாகிவிட்ட என் உடம்பில் தைரியம் 'குபுகுபு' வென்று எங்கிருந்தோ வந்தது! சிறிது நாழிகைக்கு முன் துப்புரவாக் வெளியேறியிருந்த பொருளல்லவா அது?

அப்போது என் மனத்தில் என்ன தோன்றிற்று தெரியுமா? ஆண்டவன்தான் எவ்வளவு நல்லவன்? க்ஷணப் போதில் குறுக்கிட்டு விளைவை எப்படி மாற்றிவிட்டான்! திருடர்கள் வெட்டிக் கொண்டிருந்த தேக்கு மரமாக இருந்து, சரியாகப் புலி என்மேல் பாயப் பதுங்கிய அதே நேரத்தில், தான் வெட்டுண்டு முறிந்து, அதன் மேல் பாய்ந்து ஆண்டவனே எனக்காக ஓர் அற்புதமான திருவிளையாடலை நடத்திவிட்டதுபோலத் தோன்றியது எனக்கு. 'அழிந்துவிட்டோம்' என்று கருதிய என் உயிரை, அழியாமற் காத்தும், 'அழித்துவிடப் போகிறோம்' என்று கருதிப் பாய்ந்த அதன் உயிரை அழியச் செய்தும், அந்த இரவில் விதியின் மூலம் விளையாடிய இறைவனைக் கைகூப்பி வணங்கினேன்.

துணிச்சலோடு கீழே விழுந்திருந்த 'டார்ச்சை' எடுத்து மரத்தை நோக்கி ஒளியைப் பரவச் செய்தேன். அருகில் சென்று பார்த்தேன். சரியாகப் புலியின் நடு வயிற்றில் விழுந்திருந்தது மரம். மூன்று யானைகள் இருக்கவேண்டிய அவ்வளவு சுற்றுப் பருமன் உடைய மரம் அது.

புலி நல்ல ஜாதிக் கடுவாய். ஆகையால் பார்ப்பதற்குப் பதினாறடி வேங்கை மாதிரி இருந்தது. நசுங்கிச் செத்துக் கிடந்த அதைப் பார்க்கும்போது, 'மனித உயிருக்கு ஆண்டவன்தான் எஜமானன்! அவனுடைய ஆணை, விதி என்ற வடிவில் துணை செய்தாலொழிய, எந்த ஒரு துஷ்ட ஜந்துவும் மனிதனைக் கொல்ல முடியாது!' - இப்படி ஓடியது என் எண்ணம்.

மேலும், அங்கே தாமதித்தால் மரத்தை வெட்டித் தள்ளியவர்கள் வருவார்கள்; அவர்கள் கண்களில் தென்பட்டால், விசாரணைக்கு ஆளாக நேரிடும். அதனால் உடனே திருப்பத்தைக் கடந்து பங்களா காம்பவுண்டை நோக்கி நடந்தேன். போகும்போது அந்த மரத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொள்ளவேண்டும் போலத் தோன்றியது எனக்கு.

அப்படியே செய்துவிட்டு, மலேரியாக் காய்ச்சலினால் துன்புறுகிற என் குழந்தையைக் காணத் துடிக்கும் ஆவலோடு விரைவாகச் சென்றேன்." கரையாளர் கூறி முடித்தார்.

**ஜீ**ப் ஒரு பெரிய பங்களாவின் முன் போய் நின்றது. ஒரு மலைத் திருப்பத்தை அடுத்து அடர்ந்த மலைப் பகுதியினிடையே அது அமைந்திருந்தது. கரையாளர் கூறிய சம்பவத்தில் வந்த பங்களா மாதிரியே, சுற்றி ஆழமான குழி வெட்டியிருந்தது. அடர்த்தி என்றால் அப்படி இப்படிப்பட்ட அடர்த்தி இல்லை. இரண்டு அடர்ந்த மலைப்பகுதி அது.

கரையாளர் என்னைப் பங்களாவிற்குள் அழைத்துச் சென்றார். அங்கிருந்தவர்கள் அன்போடு வரவேற்றனர். தேநீரும் நேந்திரங்காய் வறுவலும் சாப்பிடக் கிடைத்தன.

"இந்த மலைப்பகுதிகளில் இயற்கை அழகு எப்படி இருக்கிறது? இங்கே இன்னும் கொஞ்சம் சுற்றிப் பார்க்கலாமா?" கரையாளர் தேநீரைப் பருகிவிட்டு என்னைப் பார்த்துக் கேட்டார்.

"ஆகா! கட்டாயம் பார்க்கலாம். எவ்வளவு அற்புதமான இடமாக இருக்கிறது? என்ன 'ஸீனரிகள்'!"

தேனீரைக் குடிப்பதற்குக் கையிலெடுத்துக் கொண்டே கூறி வியந்தேன் நான்.

"இந்த இடத்தின் பேர் என்ன தெரியுமா?"

"என்னவாம்? சொல்லுங்களேன்."

"இதுதான் சார் 'கடுவாய் வளைவு!'"

பயத்தில் தேநீர்க் கிண்ணத்தைக் கீழே போட்டு உடைத்துவிட்டேன். என் மேலெல்லாம் டீ சிந்திவிட்டது. கதைகளில் ஆயிரம் தத்துவம் பேசலாம். ஆனால் உணர்ச்சி வருகிறபோது, பயன் என்னவோ பயமாகத்தானே இருக்கிறது!

(1963-க்கு முன்)

## 79. மணக்கும் திருட்டு!

இன்னும் ஓரிரு மாதம் தொடர்ந்து இப்படியே நடந்தால், 'ஃபாரஸ்டு கார்டு' பரசுராம், அந்த வேலையில் இருப்பதற்கே தகுதியில்லை என்பது போலாகிவிடும். அவருடைய உத்தியோகத்துக்கு, அது ஒரு சோதனைக் காலமாக வாய்த்திருந்தது. சோதனையில் வெற்றி பெறுவதற்காக, அவரும் தான் இராப் பகல் பாராமல், காட்டிலும் மலையிலும் அலைந்துகொண்டிருந்தார். அலைந்து பயன் என்ன? யாரோ அவருக்கு ஆகாதவர்கள் மேலதிகாரிகளின் சந்தேகத்தை அவர் மேலேயே திருப்பிவிட்டுவிட்டார்கள்.

விஷயம் வெறொன்றும் இல்லை; இதுதான்: அவருடைய 'ஏரியா'வுக்கு உட்பட்ட 'ரிசர்வ் ஃபாரஸ்'டில் சந்தன மரங்கள் அதிகம். சர்க்காருக்கு அவைகளால் அதிக வருமானம். இப்பொழுது சில நாட்களாகத் தொடர்ந்து சந்தன மரங்கள் களவு போய்க் கொண்டிருந்தன. சந்தன மரங்களுக்கு வரிசை நெம்பர், தனி ரிஜிஸ்தர் எல்லாம் உண்டு. நாளைக்கு எப்போதாவது வருஷாந்திர 'இன்ஸ்பெக்ஷன்' நடந்தால் ரிஜிஸ்தரில் உள்ள நெம்பர்களின்படி மரங்கள் இருக்க வேண்டும். இல்லையானால் மேலதிகாரிகள் அவரைத் தான் குடைவார்கள். பரசுராம்தான் அவைகளை வெட்டி, அங்கிருந்து இரகசியமாகக் கடத்திக் கள்ள விற்பனை செய்வதாக யாரோ 'மொட்டை மனு' வேறு எழுதிப் போட்டிருந்தார்கள்.

சிந்தனையில் லயித்தவராய், வீட்டு வாசலில் உட்கார்ந்தார் பரசுராம். வேலைக்காரச் சின்ன மாயன், வீட்டு வாசலிலிருந்து காட்டிலாகா அலுவலகத்திற்குப் போகும் வழியைப் பெருக்கித் தூய்மை செய்து கொண்டிருந்தான். வீட்டுக்கு அடுத்த கட்டிடம் காட்டிலாகா அலுவலகம்.

"எசமான், பண்ணையார் ஐயா வாராருங்கோ..."

பரசுராம் திரும்பிப் பார்த்தார். தொலைவில் பண்ணையார் சிவஞானம் பிள்ளையின் ஜீப் கார், முக்கித் திணறி மலைத் திருப்பத்தில் ஏறிக் கொண்டிருந்தது.

'அடேடே! நான் இலாகா வேலைகளினால் ஒரே தொல்லையிலே மாட்டிக் கொண்டிருக்கிறேன். இப்போது இந்த மனுஷன் எங்கே வந்து சேர்ந்தார்? ஒரு மணி நேரம், இரண்டு மணி நேரம் பேசாமல் எழுந்திருக்கமாட்டாரே?'

அவர் தமக்குள் அலுத்துக்கொண்டார். சிவஞானம் பிள்ளைக்கு அந்த மலையடிவாரத்தில் ஐம்பது அறுபது ஏக்கர் நிலம் அடங்கிய பெரிய பண்ணை ஒன்றிருந்தது. நிலங்களுக்கு நடுவே, நாலைந்து இறவைக் கிணறுகளும் இருந்தன. மழைக் காலத்தில் மலை ஓடைகளிலிருந்து வரும் நீரையும், மற்ற நேரங்களில் இறவைக்

கிணறுகளையும் கொண்டு, அவர் விவசாயம் நடத்தி வந்தார். அந்த 'ஏரியா'வில் கொஞ்சம் செல்வாக்குள்ள பெரும்புள்ளி என்ற முறையில், பரசுராமுக்குப் பழக்கமானார். பழக்கம் வளர்ந்து, தினம் பரசுராமுடன் ஏதாவது வெகுநேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுப் போவது பண்ணைப் பிள்ளையின் 'மாமூ'லாகி விட்டது.

"வாங்க! வாங்க! ஏது இப்படி இந்தப் பக்கமா?..."

சிவஞானம் பிள்ளை ஜீப்பிலிருந்து இறங்கினார்.

"வேறே எதுக்கு வரப் போறேன்? எல்லாம் உங்களைப் பார்த்து நாளாச்சேன்னுதான்..."

"ரொம்ப சந்தோஷம்..."

"ஆமா! இதென்ன? நான் கேள்விப் படறது நெசந்தானா? யாரோ சந்தன மரங்களைக் கடத்தராங்களாமே?"

"அதையேன் கேட்கிறீங்க? ஒரு மாசமா எனக்கு ராத்திரித் தூக்கமில்லே. புலி, கடுவாய்க்குப் பயப்படாமே இருட்டிலேயே சுத்தறேன். அப்படியும் ஆள் இன்னார்தான்னு கண்டுபிடிக்க முடியலே, போங்க!"

"நீங்க சும்மா இருங்க, ஸார்! இதை இப்படியே விடறதாவது? நான் கவனிக்கிறேன். உங்க பேரிலே அவப்பேரு ஏற்பட்டா அது எனக்கில்லியா?"

"என்னமோ, கூட இருந்து ஒருத்தருக்கொருத்தர் உபகாரமாத் திருட்டைக் கண்டுபிடிச்சுட்டா, சர்க்காருலே என் தலை உருளாது!"

"நான் சொல்றபடி கேளுங்க! இந்த மலையிலே திரியற பளிஞர்களை எல்லாம் பிடிச்சு, ஒரு நாளு கட்டி வச்சு உதைச்சா உண்மையைக் கக்கிடுவாங்க!"

"சே! சே! பளிஞங்க கள்ளங்கபடமில்லாத சாதியாச்சே! அவுங்க மேலே எனக்குக் கொஞ்சம் கூடச் சந்தேகமே இல்லை." பரசுராம் பண்ணைப் பிள்ளையின் கருத்தை மறுத்தார்.

"அதெல்லாம் நீங்க கொஞ்சம்கூட இரக்கப்படக் கூடாது ஸார். இப்போ எனக்குப் பண்ணை வேலையா கொஞ்சம் அலைய வேண்டியிருக்கு. நாளைக்கு என் ஆள்கள் ஏழெட்டுப் பேரைக் கூட்டி வர்றேன். எல்லாப் பளிஞர்களையும் பிடிச்சு, மேலே ஆகவேண்டியதைப் பார்ப்போம்." பண்ணைப்பிள்ளை வழக்கத்துக்கு விரோதமாகச் சீக்கிரமாகவே பேச்சை முடித்துக்கொண்டு கிளம்பி விட்டார்.

"சரி! நீங்க போயிட்டு வாங்க." இந்த மட்டில் சுருக்கக் கிளம்பினாரே என்ற மகிழ்ச்சியில், அவருக்கு விடை கொடுத்து அனுப்பினார் பரசுராம்.

பண்ணையார் சிவஞானம் பிள்ளை ஜீப்பில் ஏறிக்கொண்டு கிளம்பினார். ஜீப் மலைப் பாதையில் இறங்கி மறைந்தது.

"எசமான்..." சின்ன மாயன் விளக்குமாற்றைக் கீழே போட்டுவிட்டு அருகில் வந்தான்.

"என்னடா? எதுக்குக் கூப்பிட்டே?"

"பண்ணைப் பிள்ளை எமப் புளுவுங்க! இது விசயத்திலே அவரைக்கூட நீங்க நம்பறது..."

"சீ! போடா... முட்டாப் பயலே. ஒன்னை ஒண்ணுங் கேக்கலை நான்! வேலைக்காரனா லட்சணமா வேலையைப் போய்ப் பாரு."

சின்னமாயனுக்குப் படீரென்று முகத்தில் அறைந்தாற் போல் இருந்தது, இந்தப் பதில். தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டு, திரும்பிப் போய்த் தன் வேலையைக் கவனிக்கத் தொடங்கினான்.

"துப்புச் சொல்றானாம், துப்பு! அவரு கண்ணுக்குக் கண்ணாப் பழகற மனுஷன். ஏதோ கொஞ்சம் வழவழன்னு பேசுவாரு... இந்த அற்பச் சந்தனக்கட்டையைத் திருடித்தானா பிழைக்கணும்?"

"அதுக்கு இல்லீங்க! ரொம்ப நாளைக்கு முன்னே அவரு இப்படியெல்லாம்.."

"பேசாதே! உன் வேலையைப் பாரு!" சின்ன மாயன் குனிந்த தலை நிமிராமல், விளக்குமாற்றை எடுத்து வழியைப் பெருக்க ஆரம்பித்துவிட்டான்.

அப்போது சின்னமாயனுடைய மனைவி வேலாயியிடம் பரசுராமின் மனைவி குடத்தைக் கொடுத்துத் தண்ணீருக்கு அனுப்பினாள். வேலாயி வீட்டுக் கொல்லைப் பக்கம் இருக்கிற கிணற்றடிக்குப் போகாமல், காம்பவுண்டைத் தாண்டி வெளியேறுவதைப் பார்த்த பரசுராம் அவளைக் கைதட்டி அழைத்தார். கொல்லையில் கிணறு இருக்கிறபோது, அவள் ஏன் குடத்தை எடுத்துக்கொண்டு வெளியே போகிறாள் என்று சந்தேகம் தோன்றியது அவருக்கு.

"ஏஞ்சாமீ? கூப்பிட்டீங்களா?" அவர் கை தட்டி அழைத்த சத்தம் கேட்டு, வேலாயி குடத்தோடு வந்து நின்றாள்.

"குடத்தைத் தூக்கிக்கிட்டு எங்கே போறே நீ? கொல்லைக் கிணத்துலே தண்ணி இல்லையா?"

"அம்மா குளிக்கிறபோது புத்தம் புதுச் சோப்புக் கட்டியை முழுசா கெணத்துலே கை தவறிப் போட்டுட்டாங்க... சோப்புக் கரைஞ்சு தண்ணி நாறுதுங்க..."

"அதுனாலே?..."

"நீ போயி, வேறெங்காச்சும் தண்ணி எடுத்துக்கிட்டு வான்னு, அம்மா கொடத்தைக் கொடுத்தாங்க. சோப்புத் தண்ணியை வச்சுச் சமைக்க முடியுங்களா?"

"இங்கே பக்கத்துலே வேறே எங்கேயும் தண்ணீர் கிடையாதே? அருங்கோடையாச்சே! ஊற்றுத் தண்ணீர்கூட இருக்காதே?"

"என்னங்க செய்யிறது? அடிவாரத்திலே போயி, பண்ணையாரு இறவைக் கிணத்துலே இருந்துதான் கொண்டாரணும்."

"அதுக்கு இங்கேருந்து ஒரு மைலுக்கு மேலே நடக்கணுமே?"

"நடந்துதான் ஆகணுஞ் சாமி! வேறே வழியில்லையே?"

"சரி! சரி! போய்ச் சுருக்க எடுத்துக்கிட்டு வா. சமையல் சீக்கிரமா ஆகணும்." பரசுராம்அவளைத் துரிதப்படுத்தி அனுப்பினார். அவள் போனபின் சின்னமாயனைக் கூப்பிட்டார். அவன், தான் செய்து கொண்டிருந்த வேலையை முடித்துவிட்டு வந்தான்.

"சின்னமாயா! சாப்பாட்டுக்கு மேலே நாம ரெண்டு பேரும் சந்தனக் காட்டுக்குள்ளே போய் 'ரிசர்வ் ஃபாரஸ்டி'லே ஒளிஞ்சிருக்கணும். நாளைக்கு விடிகிற நேரம் வரை அங்கேயிருந்து நகரக் கூடாது. துப்பாக்கிகளை எடுத்து ரவைகளை அடைச்சு வை. ராத்திரிக்குச் சாப்பாடு, கூஜாவிலே தண்ணி, எல்லாம் அங்கேயே கொண்டு போயிடணும். இன்னிக்கு எப்படியும் உளவு தெரிஞ்சுக்காமே விடறதில்லை."

"சரிங்க" என்றான் சின்னமாயன்.

"மத்தியானம் இரண்டு மணிக்குப் புறப்படலாமா? நீ என்ன நினைக்கிறே?"

"அப்படியே செய்வோமுங்க."

"சரி! போ! போய் அதற்கு ஆகவேண்டியதைக் கவனி."

சின்னமாயன் துப்பாக்கியை எடுத்து 'லோட்' பண்ணுவதற்காக, ஆபீஸ் சாவியை வாங்கிக்கொண்டு போனான். பரசுராம் குளிக்கப் போனார். கிணற்றுத்தண்ணீர் ஒரு முழு 'மைசூர் சாண்டல்' சோப்பை முழுங்கிக் 'கமகம'த்து கொண்டிருந்தது. 'குளிப்பதற்குப் பரவாயில்லை' என்று குளித்து முடித்தார்.

அவர் குளித்து 'டிரஸ்' பண்ணிக்கொண்டு, வெளிவாசல் பக்கம் வருவதற்கும், வேலாயி தண்ணீர்க் குடத்தோடு காம்பவுண்டுக்குள் நுழைவதற்கும் சரியாக இருந்தது.

"இது என்னங்க எசமான்? அந்தப் பண்ணைப்பிள்ளை கிணத்துலே தங்கத்தையா பொதச்சு வச்சிருக்காரு? ரொம்ப அநியாயமாயில்லே இருக்கு?"

"ஏன்? என்ன நடந்தது?"

"ஒரு கொடம் தண்ணி எடுத்துக்கிட்டாக் கிணறு வத்தியா போயிடும்? அவரோட வேளையாளு, "யாரா இருந்தாலும் கண்டிப்பா கிணத்துலே இறங்க விடப் படாதுன்னு ஐயா உத்தரவு!" அப்படின்னு என்னை மறிச்சு நிறுத்திட்டான்."

"நீ சொல்லப்படாதோ; நான் ஃபாரஸ்டு கார்டு ஐயா வீட்டுலே இருந்து வரேன்னு?"

"சொல்லிப் பார்த்தேனுங்களே! அப்படியும் அவன் முடியாதுன்னுட்டான். கடைசியிலே துணிஞ்சு ஒரு பொய் சொன்னேனுங்க. காரியம் முடிஞ்சுட்டுது."

"என்ன பொய் அது?" பரசுராம் சிரித்துக்கொண்டே கேட்டார்.

"'உங்க பண்ணையார் ஐயா, இப்போ அங்கேயேதான் எங்க எசமானோட உக்காந்து பேசிக்கிட்டிருக்கார். நம்ப கிணத்துல போய் எடுத்திட்டுவான்னு அவருதான் சொல்லி அனுப்பிச்சாரு. நீ மாட்டேன்னா நேரே போயி அவரிட்ட சொல்லுவேன்' என்றேன். அந்த ஆள் பயந்து போய், 'அப்பிடியானா எடுத்துக் கிட்டு போ'ன்னுட்டான்!"

"சரி! எப்படியானா என்ன? தண்ணீர் கொண்டு வந்திட்டே?"

"ஆமாங்க."

"உள்ளே கொண்டுபோய்க் கொடு; சமையல் சீக்கிரமா ஆகணும்."

வேலாயி தண்ணீர்க் குடத்தை உள்ளே கொண்டு போனாள். சின்னமாயன் ஆபீஸ் சாவிக் கொத்தோடு திரும்பி வந்தான்.

"என்னடா?"

"எல்லாம் தயாரா வச்சிட்டேனுங்க."

"சரி! நீ வேலாயியைக் கூட்டிட்டுப் போயி உன் சாப்பாட்டை முடிச்சுக்க. இராத்திரிப் பாட்டுக்கு ஏதாவது கட்டி வாங்கிக்க. சீக்கிரமா வா!"

"இதோ வந்திடறேனுங்க." அவன் சாவியைக் கொடுத்துவிட்டுப் போனான். பரசுராம் இருந்த காம்பவுண்டுக்குள்ளேயேதான் அவன் குடிசையும் இருந்தது. சாவிக் கொத்தைக் கையில் வைத்துக்கொண்டு, வாசலில் குறுக்கும் நெடுக்குமாக உலாத்திக் கொண்டிருந்தார் பரசுராம்.

பதினொன்றரை மணி சுமாருக்குச் "சாப்பிட வரலாம்" என்று உள்ளேயிருந்து அழைப்புக் கொடுத்தாள் அவர் மனைவி. பரசுராம் உள்ளே போனார்.

இலை போட்டுக்கொண்டு உட்கார்ந்தார். சாப்பிட ஆரம்பிப்பதற்கு முன்னால், நாலு மடக்குத் தண்ணீரைக் குடித்துக் கொள்வது அவர் வழக்கம். "அலமேலு, டம்ளரில் தண்ணீர் கொடு!" என்றதும் அவர் மனைவி தண்ணீர் கொடுத்தாள். பரசுராம் குடிப்பதற்காக அதைக் கையில் எடுத்தார். உதட்டருகே டம்ளரைக் கொண்டு போனவர், முகத்தைச் சுளித்தார்.

"ஏய்! நீ என்ன எங்கிட்ட விளையாடறியா? சோப்புத் தண்ணியையா நான் குடிக்கணும்?"

"யார் விளையாடறது? நானா? நீங்களா? வேலாயி கொண்டு வந்தாளே, பண்ணையார் கிணத்துத் தண்ணீர்; அதைத்தான் டம்ளர்லே விட்டு வச்சேன்!"

"நிசம்மாவா?"

"அதிலே சந்தேகமா, என்ன? இதோ இந்தக் குடத்தையே பாருங்களேன்!" அவர் மனைவி குடத்தையே தூக்கிக் கொண்டு வந்து பக்கத்தில் வைத்துவிட்டாள்.

அவர் குடத்தருகே மூக்கைத் தாழ்த்தி முகர்ந்து பார்த்தார். அதே வாசனை ஐமாய்த்தது. சந்தன அத்தர் 'எஸென்'ஸில் நாலைந்து துளியைத் தண்ணீரில் ஊற்றி விட்டால் எப்படி மணக்குமோ, அந்த மாதிரி.

"இதுதான் வேலாயி கொண்டுவந்த தண்ணியா?"

"எனக்கு உங்ககிட்டப் பொய் சொல்லி என்ன ஆகணும்? சத்தியமா இதுதான் அவ கொண்டு வந்தது."

"அலமேலு! பூஜைக்குச் சந்தனம் அரைப்பாயே! அரைச்ச கையோட குடத்துத் தண்ணீரைப் புழங்கினாயோ?"

"இன்னிக்கு நான் சந்தனமே அரைக்கல்லியே? அவ தண்ணியைக் கொண்டுவர போதே, அது அப்படித்தான் வாடை அடிச்சுது?"

"சந்தனத்தை அரைச்சுக் கலக்கின மாதிரின்னா வாடை வரது?"

"யாரு கண்டா? இறவைக் கிணறுதானே? சந்தனக் கட்டை ஏதாவது தப்பித் தவறி விழுந்து அழுகிப் போயிருக்குமோ, என்னவோ?"

அலமேலு சாதாரணமாகத்தான் இந்தச் சந்தேகத்தைக் கிளப்பினாள்.

பளிச்சென்று மின்வெட்டுப் போலப் பரசுராமின் மனத்தில் ஒரு யோசனை எழுந்து நின்றது.

"அலமேலு, நிச்சயமா வேலாயி கொண்டுவந்த போதே இந்த வாடைதான் அடிச்சுதா?"

"நான் என்ன குழந்தையா, உங்ககிட்டப் பொய் சொல்றதுக்கு? இதே சந்தன வாடைதான்! வேலாயியை வேணும்னா கேட்டுப் பாருங்களேன்!"

"இந்தா, கொஞ்சம் இரு! சோற்றை இலையிலே போடாதே! நான் இப்போ சாப்பிடலை."

"ஏன்? பசிக்காதோ?"

"ஓர் அவசரமான காரியம்; போயிட்டு வந்திடறேன். அந்தச் சின்னமாயன் குடிசையிலே இருப்பான். ஒரு சத்தம் போடு; நான் கூப்பிட்டேன் என்று!" அலமேலு சின்னமாயனைக் கூப்பிடப் போனாள்.

"என்னங்க எசமான்?"

"புறப்படு, போகலாம்! சாப்பாடுகூட அப்புறம்தான்."

"எங்கே எசமான்?"

"நீ பேசாமே எங்கூட வா சொல்றேன்!"

பரசுராம் சின்னமாயனை அழைத்துக்கொண்டு, அரை மணி நேரத்தில் சிவஞானம் பிள்ளையின் பண்ணையிலுள்ள இறவைக் கிணற்றுக்குப் போய்ச் சேர்ந்தார். வேலாயி

அடையாளம் சொல்லியிருந்த கிணற்றருகில் போய் நின்று கொண்டார்கள் இருவரும். கிணற்றுக்குக் காவல் இருந்ததாக வேலாயி சொன்ன ஆள், அப்போது அங்கேயில்லை. சாப்பிடப் போயிருந்தானோ என்னவோ? அதுவும் அவர்களுக்கு வசதியாகவே போயிற்று.

"டேய் உனக்கு முக்குளி நீச்சுத் தெரியுமாடா சின்னமாயா?"

"நல்லாத் தெரியுமுங்க!"

"கிணற்றிலே இறங்கி முக்குளிச்சுப் பாரு, சொல்றேன் - ஏதாவது கட்டிப் போட்டிருக்கான்னு?"

சின்னமாயன் வேஷ்டியை வரிந்து கட்டிக்கொண்டு கிணற்றில் குதித்தான்.

பத்து நிமிஷம் அவன் உள்ளேயே துழாவினான். மேலே நாலா புறமும் நீர்க் குமிழிகளும், தண்ணீர் வண்டலும் குபுகுபுவென்று வருவதிலிருந்து, பரசுராம் அவன் உள்ளே நாற்புறமும் துழாவுகிறான் என்பதை அனுமானித்துக் கொண்டார்.

சின்னமாயன் தண்ணீரிலிருந்து வெளியேறிப் படிவழியே மேலே வந்தான். அவன் முகத்தில் ஆச்சரியமும் பரபரப்பும் சாயையிட்டிருந்தன.

"எசமான்! கட்டு கட்டா சந்தன மரம்... கிணறு தாங்காமக் கெடக்கு!"... சின்ன மாயன் ஆச்சரியம் தாங்காமல் இரைந்து கூறினான்.

"உஸ்ஸ்! வாயை மூடு! கத்திக் காரியத்தைக் கெடுத்துடாதே!" பரசுராம் ஆள்காட்டி விரலை உதட்டில் வைத்துஅவனுக்கு ஜாடை காட்டினார்.

"நான் அப்பவே சொன்னேனே, கேட்டீங்களா? பண்ணை பிள்ளை, பழைய எசமான் காலத்துலேயே, ரெண்டு மூணு தரம் சந்தன மர விவகாரத்திலே அகப்பட்டுக்கிட்டிருக்காரு; அவரை நம்பக் கூடாதுன்னு!"

"சின்னமாயா! நீ பேசாமே இருக்கமாட்டே? எனக்குப் படுகோபம் வரும்."

சின்னமாயன் 'கப்சிப்' என்று அடங்கிவிட்டான்.

பரசுராம் பைக்குள்ளிருந்த காகிதம் ஒன்றை எடுத்துப் பேனாவால் ஏதோ எழுதினார்.

"இந்தா, ஓடு! போயி, இதை ஸ்ரீ வில்லிபுத்தூர் போலீஸ் ஸ்டேஷனிலே கொடு. சப்-இன்ஸ்பெக்டர் இருப்பார். ஒண்ணரை மணிக்குள்ளே இங்கே வரச்சொல்லு. நான் சாப்பிடாமே இங்கேயே காத்திருப்பேன்.

"ஆகட்டுங்க!" சின்னமாயன் அதை வாங்கிக்கொண்டு ஓடினான்.

அது காட்டழகர் கோவில் ஃபாரஸ்ட் ஏரியா. அங்கிருந்து சண்பகத் தோப்பு வழியாகப் போனால், நாலு மைலில் ஸ்ரீவில்லிபுத்தூர் பெரிய நகரம். அந்த நகரத்துக்குத்தான் போலீஸ் உதவி வேண்டிச் சின்னமாயனை அனுப்பிவிட்டுக் காத்திருந்தார் பரசுராம்.

எதிர்பார்த்ததற்கு முன், பகல் ஒரு மணிக்கே போலீஸை லாரியோடு அழைத்துக் கொண்டு வந்துவிட்டான் சின்னமாயன். கடிதத்தில் பரசுராம் வேண்டிக் கொண்டிருந்தபடி கிணற்றுத் தண்ணீரை இறைப்பதற்காக 'பாட்டரி செட்,' 'மோட்டார்-பம்ப்' ஆகிய சாதனங்களோடு வந்திருந்தார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

பகல் மூன்று மணிக்குத்தான் கிணற்றிலிருந்த எல்லாத் தண்ணீரையும் வற்றச் செய்ய முடிந்தது. அதற்குள் பரசுராம் வீட்டிற்குப் போய்ச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு வந்துவிட்டார்.

சுமார் பத்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள, இருநூறு இராத்தலுக்கு மேற்பட்ட சந்தன மர முண்டுகள் கிணற்றுக்குள்ளிருந்து வெளியேற்றப்பட்டன. இதற்குள் கிணற்றை காவல் செய்வதற்கெனப் பண்ணைப்பிள்ளையால் நியமிக்கப்பட்டிருந்த காவலாள் வந்து சேர்ந்தான். அவனைப் பிடித்து அடித்து மிரட்டியதன் விளைவாக, அவன் சப் இன்ஸ்பெக்டரிடம் "எல்லாம் பண்ணை எசமான் வேலைதானுங்க" என்று உண்மையைச் சொல்லிவிட்டான்.

ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து மலைக்குப் போகும் வழியில் மொட்டைப் பத்தான் வெளியிலிருந்த பண்ணைப்பிள்ளையின் பங்களாவுக்குப் போய் அவரைக் கைது செய்தனர். அப்போது பரசுராமும் உடன் இருந்தார்.

"பிள்ளைவாள், சந்தனம் மணம் நிறைந்த பொருள்தான், திருடிச் சேர்த்தீர்கள். வாசனைப் பொருள்களைக் கள்ளக் கடத்தல் செய்து பணம் சேர்க்கும் முயற்சியினால், உங்களோடு கபடமின்றிப் பழகும் எனக்கே மோசம் செய்தீர்கள். திருடிய சந்தனம்தானே அது? இன்னும் தண்ணீரில் ஊறிய விசேஷத்தால் அபாரமாக மணக்கிறது. ஆனால், உங்களைத்தான் இப்படி நாறவைத்து விட்டது. இந்த நாற்றம் இலேசில் போகுமா?" பரசுராம் உருக்கமாகக் கூறினார். பிள்ளை பதில் பேசாமல் அவரை முறைத்துப் பார்த்தார். அலமேலு கிணற்றில் போட்ட சோப்பை வாழ்த்திக் கொண்டே வீடு திரும்பினார் பரசுராம்.

**(1963-க்கு முன்)**

## 80. கண்மாய் உடைப்பு

கிராம முன்சீப் பரமசிவம் பிள்ளைக்குத் திக்கென்றது. நாலைந்து விநாடிகள் ஒன்றுமே தோன்றாமல், பிரமை பிடித்துப்போய், சிலைபோல் நின்றுவிட்டார் அவர்.

ஆறு மைல் சுற்றளவுள்ள பெரிய கண்மாய் உடைந்து, பிரவாகம் ஊரை நோக்கி வருகிறது என்றால், அந்தச் செய்தி யாரைத்தான் திடுக்கிடச் செய்யாது?

ஊரெல்லாம் ஒரே கலவரமாகி விட்டது. கூச்சலும் கூப்பாடுமாக, மண் வெட்டியை எடுத்துக்கொண்டு ஓடுவோர் ஒரு பக்கம்; அணையிட்டு அடைப்பதற்காக வைக்கோற் பரணைகளையும் மணல் அடைத்த சாக்கு மூட்டைகளையும் தூக்கிக்கொண்டு ஓடுவோர் ஒரு பக்கம். போர் வந்தவுடன் உண்டாகிற படைகளின் எழுச்சிபோல, வற்றாயிருப்பு ஊர் முழுவதிலும் கண்மாய் உடைப்பு பெரிய குழப்பத்தை உண்டாக்கி விட்டது.

ஊருக்கு மேற்கே மலைச் சரிவில் கண்மாய். அது நீர் நிரம்பி அலைமோதிக் கொண்டிருக்கிற கடல்போல இருந்தது. கண்மாய்க்கு முன்புறம் கண்ணுக்கெட்டிய தூரம் வரை கதிர் வாங்கும் பருவத்தில் இருந்தன நெற் பயிர்கள். இந்தப் புறம் ஊர்.

இப்படிப்பட்ட ஒரு நிலையில், நட்ட நடுவில் மடையிருந்த இடத்திற்கு அருகில் கரை உடைத்துக் கொண்டது என்றால், அந்தப் பயங்கரத்தை என்னென்பது! பரமசிவம் பிள்ளை தலையாரியையும் வெட்டியானையும் அழைத்துக் கொண்டு கரைக்கு ஓடினார். போகும்போதே ரெவின்யூ இன்ஸ்பெக்டருக்கு ஆள் அனுப்பினார். கலெக்டருக்குத் தந்தி பறந்தது.

பயமும், பரபரப்பும், குழப்பமுமாக ஊர் அல்லோலகல்லோலப்பட்டதே ஒழிய, ‘எப்படி கண்மாய் உடைந்தது? ஏன் உடைந்தது?’ என்பதை யாருமே சொல்லவில்லை. அது யாருக்கும் தெரியவுமில்லை.

ஊராருக்குக் கவலை ஒருவிதத்தில் இல்லை; பலவிதத்தில் கவலை! சமுத்திரம் போலத் தேங்கி நிற்கிற தண்ணீர் உடைத்துக் கொண்டால், அதற்கு முன்புறமிருக்கிற விளைநிலங்கள் பயிர்களோடு அழிந்து போகுமே என்ற கவலை; தண்ணீர் முழுவதும் உடைத்துக்கொண்டு போய்விட்டால் அந்த வருஷ மகசூலே இல்லாது போய்விடுமே என்ற ஏக்கம்; உடைத்துக்கொண்டு வருகிற தண்ணீர் ஊருக்குள் புகுந்து, வீடு வாசல்களை அழிக்காமல் விடவேண்டுமே என்று மற்றோர் பெரிய பயம்! இப்படியாக ஊர் மக்கள் எல்லோருமே கவலையில் ஆழ்ந்திருந்தார்கள். சிறுவர் சிறுமியர்களுக்கும், விடலைப் பிள்ளைகளுக்கும் இதையெல்லாம்விட பெரிய கவலை ஒன்று ஏற்பட்டிருந்தது; ‘என்றும் காணமுடியாத பெரிய வெள்ளம் கண்மாய் உடைத்துக்

கொண்டு வருகிறது. 'அந்த வெள்ளத்தைப் பார்க்கப் போகக்கூடாது' - என்று தாய் தந்தையர்கள் தங்களை வீட்டில் அடைத்து வைக்கிறார்களே!' என்பதுதான், இளம் உள்ளங்களின் அந்தக் கவலை!

குழந்தைகளை அடக்கிவிட்ட பெரியவர்கள், தங்கள் ஆசையை மட்டும் அடக்க முடியவில்லை! வீடுகளின்மேல் மச்சுகளில் ஏறி மேற்கே பார்த்தனர்.

என்ன கோரம்? பார்க்கச் சகிக்கவில்லை. மேற்கே கண்ணுக்கெட்டிய தூரம்வரை ஒரே நீர்ப்பிரவாகம். பச்சைப் பசேலென்று நெற்பயிர்கள் தென்பட்ட இடமெல்லாம், காவி நிறச் செந்நீர் மூடி முக்குளித்துப் போகச் செய்திருந்தது.

**செ**ந்நிற மலைப்பாம்பு ஒன்று தென் வடவாகக் கிடப்பதுபோலத்தான் அந்த நீளமான கண்மாய்க் கரையின் நடுவே பயங்கரமான உடைப்பும் அப்போது தென்பட்டது.

மனிதன் கட்டிவைத்த மண் சுவரான கரையை உடைத்துக் கொண்டு, இயற்கை கட்டு மீறும், பிரமிக்கத்தக்க அழகைக் கண்டு வியந்து கொண்டிருந்தார்கள் பெரியவர்கள்.

**க**ண்மாயின் வடபுறத்துக் கரையில் திருவிழாக் கூட்டம். "போடு! எங்கே மணல் மூட்டை?" "கரடு வெட்டிக் கொண்டு வா." "கொண்டா, வைக்கோற் பரணையை!" "அடே! தள்ளி நில்லு! விழுந்தால் செத்துப் போவே!" இப்படியாக ஒரே கூக்குரல்.

'ஹோ' வென்று உடைத்துக் கொண்டு, ஓடும் தண்ணீரின் இரைச்சலையும் மீறிக்கொண்டு, அங்கே கூடியிருந்தவர்களின் இரைச்சல் கேட்டது.

கரையின் தெற்கு முனைக்குப் போவதற்கு வழியில்லாமல் வெள்ளம் சூழ்ந்து விட்டதால், வடபுறத்துக் கரையில்தான் ஊரார் அடைக்க முயன்று கொண்டிருந்தனர். வடபக்கம் மலைச் சரிவைச் சேர்ந்த மேடாக இருந்ததனால் போகவரப் பாதை இருந்தது.

உடைப்பின் வடக்கு முனையில் நிகழ்ந்துகொண்டிருந்த அடைப்பு முயற்சிகளில் ஈடுபட்டிருந்தோர், தென்முனையில், ஒரு வியக்கத்தக்க காட்சியைக் கண்டனர்.

பன்னிரண்டு பதின்மூன்று வயது மதிக்கத்தக்க ஒரு குடியானப் பெண் கையில் தொரட்டுக் கம்புடனும் மேய்ப்பதற்காகக் கொணர்ந்திருந்த் ஏழெட்டு ஆடுகளுடனும் தன்னந்தனியே உடைப்பின் தெற்கு முனையில் நின்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தாள்.

'அவள் என்ன கூச்சலிடுகிறாள்? ஏன் கூச்சலிடுகிறாள்?' என்பதே வடக்கு முனையில் நின்று கொண்டிருந்தவர்களின் செவிகளில் கேட்கவில்லை. வெள்ளத்திற்கு அப்பால் மறுகரையில் தனியே அகப்பட்டுக் கொண்டதனால், பயந்து போய்க் கூச்சலிடுகிறாள் என்றே எல்லாரும் எண்ணிக் கொண்டிருந்தனர்.

மணல் மூட்டைகளும், வைக்கோற் பரணைகளும், கூடை கூடையாகக் கரடுகளும் உடைப்பில் விழுந்தன. உடைப்பு அடைப்பட்டுவிடும் என்ற நம்பிக்கையில் அவர்கள்

எடுத்துக் கொண்ட பிரயாசைதான் இவ்வளவும். ஆனால் அடைக்கக் கூடிய அளவை மீறிவிட்ட வெள்ளம், மணல் மூட்டைகளையும், வைக்கோற் பரணைகளையும் தன்னுடைய சமாளிக்க முடியாத வேகத்தில், இழுத்துக் கொண்டு போயிற்றே தவிர தடைப்பட்டு நிற்பதாகத் தோன்றவில்லை.

பரமசிவம் பிள்ளை உதட்டைப் பிதுக்கினார். "அடைப்பதை நிறுத்துங்கள். வேகமாக ஓடிப்போய், வடக்கு மூலையிலுள்ள வடிகால்களைத் திறந்துவிடுங்கள். தண்ணீர் இரண்டு பக்கமாகக் கழிந்து போனால் ஊருக்கும் வீடு வாசல்களுக்குமாவது சேதம் ஏற்படாமல் காப்பாற்றலாம்."

பிள்ளையின் யோசனை மற்றவர்களுக்கும் சரியென்றே பட்டது. உடைப்பை எந்த வகையிலும் இனிமேல் அடைக்க முடியாது என்று தோன்றியதால், அந்த முயற்சியை யாவரும் கைவிட்டனர். முழுத்தண்ணீரும் உடைப்பு வழியாகவே வெளியேறுமானால், வயல் வரப்புக்கள் மட்டுமில்லாமல், கீழே பள்ளத்தாக்கிலுள்ள ஊரும் மூழ்கிவிட வேண்டியதுதான். ஊருக்கு அந்தக் கதி நேராமல் காப்பதற்குத்தான் கிராம முன்சீப் பரமசிவம் பிள்ளை வடக்கு மூலையிலுள்ள கலுங்கலின் வடிகால்களைத் திறந்துவிடும் படி சொன்னார்.

கரையில் உடைத்துக் கொண்ட இடத்தைவிட வடிகால் இருந்த இடம் தாழ்ந்த மட்டமாகையினால், வடிகாலைத் திறந்துவிட்டால் உடைப்பில் வெள்ளம் குறைந்து மட்டுப்பட்டு உடைப்பை அடைக்க வசதியாக இருக்கும்.

பரமசிவம் பிள்ளை கூறியதைக் கேட்டவுடன் அடைக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்த அத்தனை பேரும், வடக்கு மூலையிலிருந்த கலுங்கலை நோக்கி ஓடினர்.

ரெவின்யூ இன்ஸ்பெக்டர், தலையாரி, வெட்டியான் இவர்கள் புடைசூழக் கிராம முன்சீப் பிள்ளை மட்டும் உடைப்பின் அருகிலேயே நின்று கொண்டிருந்தார்.

எதிரே தென் கரையிலிருந்து முன்போலவே கூச்சல் போட்டுக் கொண்டிருந்தாள் அந்தப் பெண்.

மணியம் பரமசிவம் பிள்ளையின் மனத்தில் என்ன தோன்றியதோ தெரியவில்லை. அவர் ரெவின்யூ இன்ஸ்பெக்டரைப் பார்த்துக் கூறினார். "இன்ஸ்பெக்டர் சார்! உடைப்பு எப்படி நிகழ்ந்தது என்பதை யாருமே பார்க்கவில்லை. அதோ எதிர்க்கரையில் தன்னந்தனியே நின்று கொண்டு, கூப்பாடு போடும் அந்த ஆட்டுக்காரப்பெண் பிள்ளையைப் பாருங்கள். உடைப்பு ஆரம்பமான போதே அவள் தென்கரையில் ஆடு மேய்த்துக்கொண்டிருந்திருக்க வேண்டும். பயந்து போய் அங்கேயே நின்றுவிட்டாள். உடைப்பின் காரணம் அவளுக்குத் தெரிந்திருக்கலாம்!"

"அவள் ஏதோ கூப்பாடு போடுகிறாளே? அது உங்கள் காதில் விழுகிறதா?" என்று இன்ஸ்பெக்டர் கேட்டார்.

"எப்படிங்க விழமுடியும்? தண்ணி பாயிற சத்தந்தான் காதைத் தொளைக்குதே!"

வெட்டியான் அவருக்கு முன்சீப்பின் சார்பாகச் சமாதானம் கூறினான்.

*"அந்தப் பெண் யார் மகள்? உனக்குத் தெரிகிறதாடா?"*

*"வீரையாக் கோனான் மகள், தங்கம் மாதிரி அசப்பிலே தெரியுதுங்க."*

*"போன மாதம் கல்யாணங் கட்டிக் கொடுத்தானே அந்தப் பொண்ணாடா?"*

*"அது மாதிரிதான் தோணுதுங்க, எசமான்!"*

*"ஏன் இப்படி வாய் கிழியக் கத்துது? பாவம்! வெள்ளம் வடிந்தால் தானாக இக்கரைக்கு வந்திட்டுப்போவுது?... அது என்ன கூப்பாடு போடுகிறதென்றே காதில் விழவில்லையேடா?"*

*"மேய்ச்சலுக்குக் கொண்டு வந்த ஆடுகளில் ஏதாவது வெள்ளத்தில் விழுந்துவிட்டதோ என்னவோ?"*

*"அட! ஏதோ உசிரைப் பறி கொடுத்திட்டாப்பிலே இல்லே கத்தித் தொலைக்குது!"*

*"என்ன வேண்டுமானாலும் கத்தட்டும்! விடு... இப்போது யார் அங்கே போவது? வெள்ளம் வடிகிறவரை எதுவும் செய்ய முடியாது. வாருங்கள், நாமும் கலுங்கல் பக்கமாகப் போகலாம்."*

*கிராம முன்சீப் பரமசிவம் பிள்ளை வடக்குப் பக்கமாக நடந்தார். ரெவின்யூ இன்ஸ்பெக்டரும் பின்பற்றினார். தலையாரியும் வெட்டியானும் கூட நடந்தார்கள்.*

*கலுங்கலில் இருந்த நாற்பத்திரண்டு வடிகால்களையும் திறந்துவிட்டார்கள்.*

**இ***ரவு எட்டு எட்டரை மணி சுமாருக்கு உடைப்பில் தண்ணீர் குறைந்து, ஆள் இறங்கலாம் என்ற நிலைமை ஏற்பட்டது. காலை பத்துப் பத்தரை மணி சுமாருக்கு ஏற்பட்ட உடைப்பின் வேகம் தணிய அவ்வளவு நேரமாயிற்று. ஊர்ச் சாவடியில் ரெவின்யூ இன்ஸ்பெக்டரும் கிராம முன்சீப் பரமசிவம் பிள்ளையும் உட்கார்ந்து கொண்டிருந்தனர். கண்மாய் உடைப்பைப் பற்றி ஜில்லா கலெக்டருக்கு அனுப்பவேண்டிய 'ரிப்போர்ட்' விஷயமாக அவர்களுக்குள் பேச்சு நடந்துகொண்டிருந்தது.*

*உடைப்பின் காரணமாக, எதைக் குறிப்பிடுவது என்றுதான் இருவருக்குமே தெரியவில்லை.*

*தென்கரையில் நின்று கூச்சலிட்டுக்கொண்டிருந்த வீரையாக் கோனான் மகள் தங்கத்திற்குத் தெரிந்திருக்குமோ என்று பரமசிவம் பிள்ளைக்கு மனதில் ஒரு சந்தேகம் இருந்தது.*

*அதனால் வெட்டியானை வீரையாக் கோனான் வீட்டிற்குத் துரத்தியிருந்தார் அவர்.*

**இ***ன்ஸ்பெக்டரும், பரமசிவம் பிள்ளையும் வெட்டியானை எதிர்பார்த்தே சாவடியில் காத்துக் கொண்டிருந்தார்கள். மணி ஒன்பதரைக்கும் மேல் ஆகிவிட்டது. வெட்டியான் ஏன், தாமதிக்கிறான் என்பது அவர்கள் இருவருக்கும் புரியவில்லை.*

மணி பத்து ஆவதற்குக் கொஞ்ச நாழிகைக்கு முன்பே வெட்டியான் திரும்பி வந்தான். பரபரப்போடு அவன் மட்டும் தனியாக ஓடி வருவதைப் பார்த்ததுமே பிள்ளை 'ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது' என்று நினைத்தார். தங்கத்தை அழைத்து வரச் சொல்லியல்லவா அவனை அவர் அனுப்பியிருந்தார்? அவனோ தனியாக ஓடிவருகிறானே!...

அவனை ஆசுவாசப்படுத்தி இருவரும் விஷயத்தைக் கேட்டார்கள். கண்மாய் உடைந்ததற்குரிய காரணத்தையா அவன் சொன்னான்? ஓர் அற்புதமான கற்பனைக் கதையைக் கைதேர்ந்த கதாசிரியன் சொல்வது போலிருந்தது அவன் கூறிய விவரம். நம்பவே முடியவில்லை அவர்களால். இப்படியும் நடக்குமா? இதை 'ரிப்போர்ட்'டில் எப்படி எழுதுவது? எழுதினால் யாராவது நம்புவார்களா? என்று திகைத்தனர் இன்ஸ்பெக்டரும் பரமசிவம் பிள்ளையும்.

அப்படி அவன் கூறிய காரணம்தான் என்ன?

வீரையாக் கோனான் தன் மகளைக் கட்டிக்கொடுத்திருந்ததும் உள்ளூரில்தான். தங்கத்தின் புருஷன் பொன்னையாவுக்கு, சொந்தத்தில் ஆடுகள் இருந்தன. அடிக்கடி ஆடுகளை மேய்ச்சலுக்கு ஓட்டிக்கொண்டுபோவது அவன் வழக்கம். காலையில் பொழுது புலருவதற்கு முன்பே ஆடுகளை ஓட்டிக் கொண்டு புறப்பட்டு விடுவான்அவன். தங்கம் எட்டு எட்டரை மணி சுமாருக்கு, அவன் ஆடு மேய்க்கிற இடத்திற்குக் கஞ்சி கொண்டுபோய்க் கொடுப்பது வழக்கமாக இருந்தது.

பிரஸ்தாப சம்பவம் நடந்த அன்று காலையில் கண்மாய்க்கரைப் பக்கமாக ஆடுகளை மேய்ப்பதற்குக் கொண்டு போயிருந்தான் தங்கத்தின் புருஷன்.

வீட்டில் வீரையாக் கோனானுக்கு ஏழெட்டு நாட்களாக உடம்பு சுகமில்லை. காய்ச்சலும் இருமலுமாக வந்து, முடங்கிக் கிடந்தான். உள்ளூர் நாட்டு வைத்தியர் வந்து கையைப் பிடித்துப் பார்த்துவிட்டு, இரண்டு மூன்று வேளை கண்டங்கத்திரி வேரினால் கஷாயம் கொதிக்க வைத்துக் கொடுக்கும்படி சொல்லிவிட்டுப் போயிருந்தார்.

தங்கம் அக்கம் பக்கத்தில் கண்டங்கத்திரி வேரைத் தேடி அலைந்து பார்த்தாள். கிடைக்கவில்லை.

"ஏம்மா! இங்கே அதைத் தேடி அலையிறே? உன் புருஷனுக்குக் கஞ்சி கொண்டு போயி கொடுக்கிறப் பக்கமாகக் கரையிலே இருந்தா நாலு வேறு பிடுங்கித் தரச் சொல்லி, வாங்கிட்டுவா!" என்றான் வீரையாக் கோனான்.

தங்கம் கஞ்சிக் கலயத்தோடு கண்மாய்க் கரைக்குப் புறப்பட்டாள். கண்டங்கத்திரி வேரைக் கொண்டு வந்து கஷாயம் போடவேண்டும் என்று, வழக்கமாகப் புறப்பட்டுச் செல்லும் நேரத்திற்கு முன்பே புறப்பட்டாள். வேரை வெட்டுவதற்காக ஒரு சின்ன மண்வெட்டியையும் எடுத்துக் கொண்டு போனாள்.

கண்மாய்க் கரையில் ஒரு மரத்தடியில் அவள் புருஷன் பொன்னையாவுக்குக் கஞ்சி ஊற்றி உண்ணச் செய்தபின், 'கண்டங்கத்திரி வேர் வேண்டும்' என்பதைப் பிரஸ்தாபித்திருக்கிறாள்.

"நீ இங்ஙனே குந்திக்கிட்டிரு, ஆடுக காடுகரைகளிலே நுழைஞ்சிடாமே பாத்துக்க... அந்த மம்மட்டியேக் கொடு.. நான் போயி, அந்த வேரை வெட்டிக்கிட்டு வாரேன்" என்று அவளை அங்கே மரத்தடியில் இருக்கச் செய்துவிட்டு, கையில் மண் வெட்டியோடு கண்மாய்க் கரைமேல் ஏறிப் புறப்பட்டான் அவன்.

கண்மாய்க் கரையில் குறுக்கும் நெடுக்குமாகக் கண்டங்கத்திரி வேரைத் தேடி அலைந்து கொண்டிருந்தான் தங்கத்தின் புருஷன். அவன் எந்தெந்த இடங்களில் அலைந்தானோ அங்கெல்லாம் அந்த வேர் கிடைப்பதற்குரிய கண்டங்கத்திரிச் செடி படர்ந்திருக்கவில்லை. தாகத்திற்குத் தண்ணீர் பருகிவிட்டு, இன்னும் சில இடங்களில் தேடிப் பார்க்கலாம் என்ற கருத்துடன், மண்வெட்டியைக் கரையின் மேல் வைத்துவிட்டு மடையின் பக்கமாக இறங்கினான் அவன்.

தண்ணீரைப் பருகுவதற்காக மடைப் பக்கம் குனிந்தவனுடைய பார்வை, மடையோரத்தில் நிலைத்தது. அவன் முகம் மலர்ந்தது. மடையின் காரைச் சுவருக்கும், மண் கரைக்கும் நடுவே இருந்த இடுக்கில் ஓர் இரண்டு பாக நீளத்திற்குப் பரவிப் படர்ந்து வேரோடியிருந்தது கண்டங்கத்திரி.

அவ்வளவுதான்! தாகத்தையும்கூட மறந்துவிட்டு, மண்வெட்டியை எடுத்துக் கொண்டு வந்து, வேரைத் தோண்டும் முயற்சியில் இறங்கினான்.

கண்மாயில் கரை முட்ட முட்டத் தண்ணீர் அலைமோதுகிறது. மடைப் பக்கத்தின் கரையின் அகலம் ஏற்கெனவே மிகவும் குறைவு. மண்ணோ உதிர்த்து வைத்த பிட்டு மாதிரி நனைந்து போயிருந்த சிவப்புக் கரம்பை மண். மடையின் கரைச் சுவரோ, நீரில் நனைந்து நெகிழ்ந்திருந்தது. கண்டங் கத்திரிச் செடி வேரோடியிருந்த இடமோ, நல்ல மூட்டு வாய் கரையும் மடையும் பொருந்துகிற மெல்லிய வளைவு.

அந்த வளைவில் ஒரே வரிசையில் இரண்டு மூன்று நண்டுகள் பொந்து தோண்டினால்கூட ஆபத்து. அப்படிப்பட்ட இடம் அது.

அந்த முட்டாள் பொன்னையாவுக்கு அதையெல்லாம் யோசிக்க நேரம் ஏது? அவனுக்கு வேண்டிய கண்டங்கத்திரி வேர் அங்கே படர்ந்திருக்கிறது. அது போதும். சுவரில் கடப்பாறையால் ஓங்கி அறைவதுபோலப் பிரம்மாண்டமான அலைகள் கரையின் ஈரமண் மேலும், மடைச் சுவரின் மேலும் மோதி அறைந்து கொண்டிருக்கின்ற நிலையில், அவன் கையிலிருந்த மண்வெட்டி சதக் சதக்கென்று பாய்ந்தது.

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்தாவது முறையாக அவன் மண்வெட்டியைத் தூக்கி வெட்டுவதற்காக ஓங்கியபோது புலுபுலுவென்று மண் சரிந்தது. கையிலிருந்த

மண்வெட்டி சரிந்த மண்ணுக்குள் புதைந்துவிட்டது. கண்மூடித் திறப்பதற்குள் ஒரு பெரிய அலை மண்சரிந்த இடத்தில் வந்து மோதியது.

அடுத்து 'ஹோ' வென்று தண்ணீர் எதையோ உடைத்துக் கொண்டு பாயும் பெரிய சப்தம் அந்தப் பிராந்தியத்தில் பயங்கரமாக எதிரொலித்தது. பொன்னையா தண்ணீரில் மிதந்தான். எவ்வளவுதான் நீச்சல் தெரிந்தவனாக இருக்கட்டுமே; மேட்டிலிருந்து பள்ளத்தில் உடைத்துப் பாயும் தண்ணீரில், எதிர்நீச்சுப் போட யாரால் முடியும்? மகாகோரமாகச் சுழித்தோடிய உடைப்பு வெள்ளம், அவனை நீந்தவும் விடவில்லை; கரை சேரவும் விடவில்லை. தன்னோடு இழுத்துக் கொண்டு போயிற்று.

தங்கமும் இந்த உடைப்பின் பயங்கர இரைச்சலைக் கேட்டாள். ஆடுகளை விட்டு விட்டுத் தென்பக்கத்துக் கரைமேல் ஏறி ஓடி வந்தாள். தன் புருஷன் என்ன ஆனான் என்றே அவளுக்குத் தெரியவில்லை. எதிரே உடைந்து மூளியாக நிற்கும் வடக்குப் பக்கத்துக் கரையைத்தான் அவளால் காண முடிந்தது. சிறிது நேரத்தில் வடபக்கத்துக் கரையில் அடைப்பு வேலைக்காக ஊர் ஜனங்கள் கூட்டமாக வந்தபோது, தென்கரையில் நின்றுகொண்டிருந்த அவள் கையிலிருந்த தொரட்டுக் கம்பை ஆட்டி, அவர்களைப் பார்த்துக் கூச்சல் போட்டாள். ஆனால் அவள் கூச்சலை யாரும் கவனிக்கவே இல்லை.

"ஏண்டா, இதெல்லாம் நிஜந்தானாடா?"

"ஐயோ! சாமீ, நீங்க வேணும்னா அங்கே போயிப் பாருங்க - அந்தப் பொன்னையாப் பய சவத்தை; குறுக்குத் துறை மதகிலே சிக்கிக் கிடந்திச்சாம். கொண்டாந்து போட்டிருக்காங்க..." வெட்டியான் அழுத்தமாகக் கூறினான்.

மூளியாக உடைந்து நிற்கும் கண்மாய்க்கரை, மூளியாக வெறுமை தவழும் தங்கத்தின் கழுத்து, இரண்டும் ஒரே சமயத்தில் உருவெளித் தோற்றமாகப் பரமசிவம் பிள்ளைக்குத் தோன்றின. ரெவின்யூ இன்ஸ்பெக்டர் பெருமூச்சு விட்டார்.

'வீரையாக் கோனான் மருமகன் வேர்வெட்டப் போனார்போல' என்று காலப்போக்கில் ஒரு பழமொழியே வற்றாயிருப்பு கிராமத்தில் உண்டாகி விட்டது!

**(1963-க்கு முன்)**

## 81. நல்ல (பாம்பு) தீர்ப்பு

வீரநாராயணன் மனைவி குனிந்த தலை நிமிராது பஞ்சாயத்தாருக்கு முன்னால் நின்று கொண்டிருந்தாள். வட்ட வட்டமாக வெள்ளி மெட்டிகளை அணிந்திருந்த அவள் கால் விரல்கள், தரையைக் கீறிக் கொண்டிருந்தன. அவள் பெயர்தான் நீலம்மாள். நிறம் என்னவோ செந்தாழம் பூ நிறந்தான்! 'கருகரு'வென்று வளர்ந்திருந்த நீண்ட அளக பாரத்தைக் கோணல் கொண்டையாக அள்ளி முடித்திருந்தாள். அப்படி முடிவது குல வழக்கம்.

"என்னம்மா? சும்மா நிற்கிறே! பஞ்சாயத்தார் கேட்கிற கேள்விக்குப் பதில் சொல்லு!"

நாட்டாண்மைக்காரத் தேவர் அவளை விரட்டினார். நீலம்மாள் பதில் சொல்ல வில்லை. வழக்கில் வாதியான வேலப்பனும், பிரதிவாதியான வீரநாராயணனும் நாட்டாண்மைக்காரருக்கு இரண்டு புறத்திலும் நின்றுகொண்டிருந்தார்கள்.

வீரநாராயணன் வாட்ட சாட்டமான ஆள். ஆறரை அடி உயரம்; கம்பீரமான முகம். பெருந்தன்மை ஒளிரும் கண்கள். அந்த முகத்துக்குரியவரின் ஆண்மையை எடுத்துக் காட்டுவது போன்ற மீசை. இறுகிப் பரந்த பாறை போன்ற மார்பு, வாளிப்பும் வண்மையும் நிறைந்த கை, கால்கள். வாதியாகிய வேலப்பனைப் பற்றித் தனியாக வருணிக்க வேண்டிய அவசியமே இல்லை. வீரநாராயணனுக்கு நேர் எதிரிடையான தோற்றமும் உயரமும் உடையவர் என்று சொன்னால் மட்டும் போதும்.

ஊர்ப் பஞ்சாயத்தாருக்கு முன்னால், இவர்கள் வழக்கு விசாரணை நடந்து கொண்டிருந்தது. வழக்கு நீலம்மாள் சம்பந்தமானதுதான். பஞ்சாயத்தார் வழக்கின் உண்மையை அறிவதற்காக அவள் சாட்சியத்தை விசாரித்தனர்.

ஆனால், அந்தப் பெண் வாயைத் திறந்து பதில் சொன்னால்தானே? பஞ்சாயத்தாரின் பொறுமையைத்தான் சோதித்துக் கொண்டிருந்தாள். நாழிகை ஆக ஆகப் பஞ்சாயத்தார்களுக்கு ஆத்திரம் வளர்ந்துகொண்டே போயிற்று.

"நீ என்னம்மா, பொண்ணு! இத்தனை பேரு பெரியவங்களாகக் கூடி விளையாடவா செய்கிறோம்? நியாயம் தெரியறத்துக்காகக் கேட்டா, ஊமை வேஷம் போடறியே! நீ சொன்னாத்தானே வழக்கு நடக்கும்?"

ஆனால் அவள் வாயைத் திறக்கவேயில்லை.

"அவ ஏன் பேசுறா? மாமனும் மருமகளுமாகச் சேர்ந்துகிட்டு, என்னை உயிரோட சாக அடிக்கலாமின்னு திட்டமில்ல போடுறாங்க?" - வீரநாராயணன் மீசை துடிதுடிக்க, கண்கள் சிவக்கப் பஞ்சாயத்தாரை நோக்கி ஆத்திரமாகப் பேசினான்.

அந்தப் பேச்சைக் கேட்டு நீலம்மாள் முகத்தைச் சுளித்து அருவருப்போடு காதைப் பொத்திக் கொண்டாள். வேலப்பன் நின்று கொண்டிருந்த விதத்திலிருந்து அவன் மனநிலையை அளந்தறிவது கடிதாக இருந்தது. இடித்து வைத்த புளி மாதிரி, அடித்துவைத்த சிலை மாதிரி, 'உம்'மென்று நின்று கொண்டிருந்தான் அவன். நேரம் கழிந்து கொண்டேயிருந்தது.

வழக்கு இதுதான்:-

வீரநாராயணன் மனைவி நீலம்மாள், தன் மாமன் வேலப்பனின் பணக்கார வாழ்வுக்கு ஆசைப்பட்டு, அவனோடு போய்விட்டாள். இந்த மாதிரிப் போவதும் வருவதும் அந்தச் சாதியில் முன் காலத்தில் பெரிய ஒழுக்கக்கேடு இல்லை; சகஜம்தான். ஆனால் முறைப்படி பஞ்சாயத்தாரிடம் சொல்லிப் பழைய கணவனைத் 'தீர்த்துக் கட்டி'த் தள்ளிய பின்பே, புதியவனோடு போகவேண்டும். 'தீர்த்துக் கட்டுதல்' என்றே இந்த வழக்கத்துக்குப் பெயர். குல நடைமுறைப்படி ஆண், பெண் இரு சாராருக்கும் முறையாகத் 'தீர்த்துக் கட்டி'க் கொள்வதற்கு உரிமை உண்டு. இப்போது அரசியல் சட்ட உரிமைப்படி, விவாகரத்து செய்துகொள்ளலாமல்லவா? இது மாதிரி என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

வேலப்பனுக்கு ஏராளமான நில புலன்களும், கையில் வளமான ரொக்கமும் இருந்தது. கட்டிய மனைவி இறந்துபோனதால், ஓரிரண்டு வருஷம் ஏகாங்கியாகக் காலந் தள்ளினான். நீலம்மாள் அவனுக்கு அக்காள் மகள். ஆனால் அவள் ஏற்கனவே வீரநாராயணனுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தாள். ஆனாலும் ஆசை யாரைத்தான் விட்டது? வேலப்பன் நீலம்மாளிடம் பணத்தாசையைக் கிளப்பிவிட்டு, வலையை விரித்தான். வீரநாராயணனோடு உழைத்து, உழைத்து அரை வயிற்றை நிரப்பிக் கொண்டிருந்த நீலம்மாள், மெல்ல மெல்ல அவன் வலையில் விழுந்துவிட்டாள்.

முறைப்படி தீர்த்துக் கட்டிக் கொள்ளாமல் வீரநாராயணனின் மனைவியாக இருந்துகொண்டே, வேலப்பனோடு உறவு வைத்துக் கொண்டுவிட்டாள் நீலம்மாள். இது ஊர்முறைக்கும் குலமுறைக்கும் முரணானது. விஷயம் வீரநாராயணனுக்குத் தெரிந்துவிட்டது. அவனுக்கு ஏற்பட்ட கோபத்தில் வேலப்பனையும், நீலம்மாளையும் அப்படியே கூண்டோடு கைலாசத்திற்கு அனுப்பியிருக்க முடியும். ஆனால் பஞ்சாயத்து முறைக்குக் கட்டுப்பட்டு, அவர்களிடம் புகார் செய்தான்.

வழக்கு விசாரணையில்தான், நீலம்மாள் பஞ்சாயத்தாருக்கு முன்னால் எதுவும் பேசாமல் மௌனம் சாதித்து விட்டாள். நீலம்மாள் உண்மையை ஒப்புக் கொண்டாலொழிய பஞ்சாயத்தாருக்குத் தீர்ப்பு வழங்க நியாயம் கிடைக்காது. வீரநாராயணனுடைய புகாரை உண்மையாகக் கொள்ளலாம். ஆனால் சரியான ருஜு இல்லை. வழக்காடும் இருவர் கூறுவதை மட்டும், சாட்சியமின்றி ஒப்புக்கொள்வது பஞ்சாயத்து வழக்கமில்லை. பஞ்சாயத்தார் என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்து மலைத்தனர். வேறு ஒரு வழியும் தோன்றவில்லை.

*கடைசியில் தீராதபட்சம் ஒரே ஒரு வழி உண்டு. பெரும்பாலும் அந்த வழியை அமுல் நடத்துவதில்லை. அது மகாகோரமானதுகூட. தலைமுறை தலைமுறையாக அவர்கள் பஞ்சாயத்து முறையில் அது ஒரு வழக்கமானாலும், பத்து வருஷம், இருபது வருஷங்களில் எப்போதாவது ஏகதேசத்தில்தான் அந்த மாதிரிப் பயங்கரம் நிகழும்.*

*ஒரு சாட்சியமும் கிடைக்காதபோது, தெய்வ சாட்சியை நாடுவது என்று ஒரு வழக்கம். தெய்வ சாட்சியென்றால் சாமானியமானதில்லை. சத்தியத்தோடு உயிரைப் பணயம் வைத்து விளையாடுவதைப் போலத்தான், அதுவும். அந்தச் சாதியாரிடம் இருந்த அந்த வழி வழி வந்த வழக்கத்தை நினைத்தாலே நமக்கெல்லாம் நடுக்கமெடுக்கும்!*

*ஊர் மாரியம்மன் கோயிலில், ஒடுங்கிய வாயை உடைய இரண்டு செப்புக் குடங்கள் இருக்கின்றன. பாம்பாட்டியைக் கூப்பிட்டு, இரண்டிலும் இரண்டு நல்ல பாம்புகளைப் பிடித்து உயிரோடு அடைப்பார்கள். வாதியும், பிரதிவாதியும் பஞ்சாயத்தாருக்கு முன்னால் மூன்று முறை குடங்களுக்குள் கையை நுழைக்க வேண்டும். பாம்பு கடிப்பதையும் கடிக்காததையும் பொறுத்து நியாயம் தீர்மானம் செய்யப்படும். குடத்தில் அடைபட்ட பாம்புகளால் விளையும் விளைவையே அவர்கள் தெய்வ சாட்சியாகக் கருதினார்கள். இது வழக்கம்தான். இருக்கிற நிலைமையைப் பார்த்தால் வழக்கு இந்தத் தெய்வ சாட்சி என்கிற பயங்கரமான எல்லையை வந்து அடையும் போலத்தான் தோன்றியது. ஊமை போல நின்ற நீலம்மாளே அப்படி ஒரு தவிர்க்க முடியாத அவசியத்தைத் தீராதபட்சமாக ஏற்படுத்திவிட்டாள். வேறு என்ன செய்வது? பஞ்சாயத்தார்கள் தங்கள் கடமையைச் செய்துதானே ஆகவேண்டும்?*

*இந்த முறையில் ஒரு வசதியும்கூட இருந்தது. கடைசி விநாடியில், குற்றம் செய்தவன் பாம்புக்குப் பயந்து குடத்துக்குள் கையை விடுவதற்கு முன்பே, நடுங்கி உண்மையை ஒப்புக்கொண்டு விடுவதும் உண்டு! அப்படி நேர்ந்தால் வழக்குக் கஷ்டமின்றி முடிந்துவிடும்.*

*பஞ்சாயத்தார் இரண்டு மூன்று நாள் அவகாசம் பொறுத்துப் பார்த்தார்கள். நீலம்மாள் எதையும் கூற மறுத்துவிட்டாள்.*

*மாரியம்மன் கோவில் பூசாரி செப்புக் குடங்களைக் கொண்டு வந்து பஞ்சாயத்தாருக்கு முன்னால் வைத்தான். நாட்டாண்மைக்காரர் பாம்பு பிடிக்கும் பிடாரனை அழைத்துக் குடங்களைக் கொடுத்து, "இரண்டிலும் சரி சமமானதாக, நல்ல பாம்புகளை அடைத்துக் கொண்டு வா" என்று அனுப்பினார்.*

*தெய்வ சாட்சியை அறியக் குடத்தில் கையை நுழைப்பதற்குப் பூரண சம்மத மென்று வேலப்பன், வீரநாராயணன் இருவருமே துணிந்து இணங்கி விட்டனர். ஆனால் இவ்வளவுக்கும் காரணமான நீலம்மாள் மட்டும் கடைசிவரை வாயைத் திறக்கவேயில்லை.*

இரண்டு மூன்று தலைமுறையாக கையாளப்படாத இந்தச் சோதனை நடக்கப் போகும் செய்தி ஊரையே ஆச்சரியத்தில் ஆழ்த்தியிருந்தது. ‘தெய்வம் குடத்தில் உள்ள பாம்பின் மூலமாக, எப்படித் தீர்ப்பு வழங்குகிறது’ என்ற விந்தையைக் காணத் துடிக்கும் ஆவல் எங்கும் நிறைந்திருந்தது. வீரநாராயணனாவது கொஞ்சம் கவலைப்படுவது போல, வாட்டமாகக் காணப்பட்டான். வேலப்பனோ, பாம்பு தன்னை நிச்சயமாகக் கடிக்காது என்று பலரிடமும் சிரித்துப் பேசி வந்ததோடன்றி, உண்மையிலேயே கவலையில்லாமல் குஷாலாகச் சுற்றித்திரிந்து கொண்டுமிருந்தான். அவன் நம்பிக்கை மற்றவர்களை வியக்கச் செய்தது.

**அ**ன்று வெள்ளிக்கிழமை. மாலை ஆறு நாழிகைக்குத் தெய்வ சாட்சியைப் பரிசோதிப்பது என்று பஞ்சாயத்தார் முடிவு செய்திருந்தனர். நாலரை நாழிகை வரை எதிர்பார்த்தனர். இருவரில் யாராவது ஒருவர் பாம்புக்குப் பயந்து கொண்டு, குற்றத்தைத் தாமாக வலுவில் ஒப்புக் கொள்ளலாம் என்று எதிர் பார்த்தது வீணாயிற்று. வேலப்பன் கடைசிவரை ‘கல்லுளி மங்கனாகவே’ நடித்துவிட்டான். வீரநாராயணன் என்ன செய்வான், பாவம்? குற்றம் செய்திருந்தால்தானே அவன் குற்றத்தை ஒப்புக் கொள்ள முடியும்? ஐந்து நாழிகைக்குப் பஞ்சாயத்தார் நாட்டாண்மைத் தேவர் தலைமையில் மாரியம்மன் கோவிலின் முன் மண்டபத்தில் கூடினர். மண்டபத்தில் எள் போட்டால் விழ இடமில்லை. இந்த அதிசயத்தைப் பார்க்க ஊரே கூடியிருந்தது. ஆனால் இத்தனை வம்புக்கும் காரணமான நீலம்மாள் மட்டும் அங்கு வரவேயில்லை.

பாம்புப் பிடாரன் செப்புக் குடங்களை ஆடாமல் அசையாமல் எடுத்துக்கொண்டு வந்து பஞ்சாயத்தாருக்கு முன்னால் வைத்துவிட்டு ஒதுங்கி நின்றான். அவன் கையில் மகுடியும் வேரும் இருந்தன. பாம்பு குடத்தில் தங்காமல் ஓட முயன்றாலோ அநாவசியமாக வழக்கில் சம்பந்தப்படாதவர்களைக் கடிக்க முயன்றாலோ, அவன் அவற்றை உபயோகப்படுத்துவது வழக்கம். அந்த முன்னெச்சரிக்கைக்காகவே அவன் அவற்றைக் கையில் வைத்துக் கொண்டிருந்தான்.

**வீ**ரநாராயணனும் வேலப்பனும் பஞ்சாயத்தாருக்கு முன்னால் குடங்களுக்கு அருகே வந்து நின்றனர். மாரியம்மன் கோவில் பூசாரி வழக்கப்படி, இருவர் கழுத்திலும் இரண்டு செவ்வரளி மாலைகளைக் கொண்டுவந்து போட்டு, நெற்றியில் குங்குமப் பொட்டுக்களை இட்டான். வாழ்வோ, சாவோ தெய்வத்தை நம்பி அதன் துணையோடு துணிந்து இறங்கும் பண்பட்டமுறை அது. அந்த மாலைக்கும் பொட்டுக்கும் ‘தடை காப்பு’ என்பது அவர்கள் பஞ்சாயத்தில் வழங்கும் பெயர். குற்றம் செய்யாதவனைக் குடத்துக்குள்ளே இருக்கும் பாம்பு கடிக்காமற் தடுப்பதற்காகவே அம்மன் இடுகின்ற அரளி மாலையும் குங்குமப் பொட்டும் அமைவதினாலேயே ‘தடை காப்பு’ என்ற பெயர் ஏற்பட்டிருந்தது.

“என்னப்பா பிடாரன்! அம்மன் சாட்சியா ரெண்டு குடத்திலேயும் சாதி நல்ல பாம்புதானே இருக்குது?” நாட்டாண்மைக்காரர் விசாரித்தார். பிடாரன் ‘ஆமாம்’ என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டினான்.

"ஊராருக்கு ஒரு வார்த்தை! எல்லாரும் நல்லதை எண்ணி அம்மனைக் கும்பிடுங்க. நீலம்மா விஷயமா, இவங்க ரெண்டு பேருக்கு ஏற்பட்ட வழக்குக்கு மகமாயி பத்திரகாளி, மாரியம்மா தீர்ப்பு வழங்கப்போறா! நியாயம் தெரியப் போகுது... நீதி வெளிவரப் போகுது."

மண்டபத்தில் சூன்ய அமைதி. கூடியிருந்தவர்கள் மூச்சுவிடும் ஓசைகூடக் கேட்கவில்லை. எல்லா விழிகளும் செப்புக் குடம், அவற்றருகில் நீதிக்காக உயிரைப் பணயம் வைத்து நின்றுகொண்டிருப்போர் மீதே நிலைத்திருந்தன.

"அப்பா, வீரநாராயணா! வேலப்பா! தெய்வத்தை மனசிலே நினைச்சு ஆளுக்கு ஒரு குடத்தில் மூணு தரம் கையை நுழைச்சு எடுங்க; பார்ப்போம்." கூடியிருந்தோர் விழிகளில் ஆவல் தவழ்ந்தது.

நாட்டாண்மையின் உத்தரவு கிடைத்து விட்டது. வேலப்பன் கீழே வைத்திருந்த இரண்டு குடங்களையும் ஓரிரு விநாடிகள் உற்று உற்றுப் பார்த்தான்! பின்பு வடபுறமாக இருந்த குடத்தில், முகம் மலரக் கையை நுழைத்தான்.

வீரநாராயணனோ ஒன்றையும் பார்க்கவில்லை. வேலப்பன் எடுத்ததுபோக, எஞ்சியிருந்த குடத்தில் கவலை நிறைந்த முகத்தோடு கையை நுழைத்தான்.

வீரநாராயணன் மூன்று முறைக்கு மேலும், ஒன்பது பத்துமுறை குடத்தில் கையை நுழைத்து எடுத்து விட்டான்! அவன் குடத்தில் பாம்பு இருந்ததாகவே தெரியவில்லை. வேலப்பன் குடத்தில் கையை நுழைக்கும்போது மகிழ்ச்சியோடு நுழைத்தான். ஆனால், உள்ளே நுழைத்த கையை வெளியே எடுக்கவேயில்லை. குடமும் கையுமாக அலறித் துடித்தான் அவன். உள்ளிருந்து ஏதோ அவன் கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

"எங்கே அந்தப் பிடாரப் பயல்? அயோக்கியன்! மோசம் பண்ணிப்பிட்டான்! காசு வாங்கிக்கிட்டு ஏமாத்திப்புட்டான்... ஐயோ! எத்தனை கடிதான் பொறுப்பேன்? கையை வெளிலே எடுக்க வரலியே? ஏதோ இறுக்கிப் பிடிச்சிருக்கே" - வேலப்பன் குடமும் கையுமாக நெருப்பில் விழுந்த புழுப்போலத் துடித்தான்.

"ஐயோ! சாமீ... நான் ஒண்ணும் மோசம் பண்ணலியே... நீங்க சொன்னபடி ஒங்க குடத்திலே சாரைப் பாம்பைத் தானே அடைச்சேன்! அவர் குடத்திலே தானே 'நல்லதே' அடைச்சேன்." பிடாரன் கத்தினான்.

கூடியிருந்த மக்கள், பஞ்சாயத்தார், வீரநாராயணன், யாருக்குமே எதுவும் தெளிவாக விளங்கவில்லை. ஒரு முழுமனிதனை உயிரோடு நெருப்பின் மீது தூக்கிப் போட்டால், அவன் எப்படித் துள்ளி விழுந்து துடிப்பானோ, அப்படித் துடித்துக் கொண்டிருந்தான் வேலப்பன். குடத்திற்குள்ளிருந்து, அவன் வலது கை வெளிவரவேயில்லை. குடத்திற்குள்ளே 'படபட'வென்று சவுக்கினால் ஓங்கியடிப்பது போன்ற ஓசை மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது.

'விறுவிறு' வென்று அவன் உடம்பு நீலம் பாரித்தது. உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால்வரை 'வெடவெட' வென்று நடுங்கின. கண் பஞ்சடைந்தது. கண்களில் நீர் மல்க வீரநாராயணனை நோக்கியும், அம்மன் சந்நிதியை நோக்கியும் தனியாக ஒரு கையைத் தூக்கி வணங்கினான் வேலப்பன். அவன் கை நுழைந்திருந்த செப்புக் குடத்திற்குள்ளிருந்து 'படபட'வென்ற ஓசை வருவது மட்டும் நிற்கவில்லை.

இந்த நெருக்கடியான குழப்பம் நிறைந்த சந்தர்ப்பத்தில் பாம்புப் பிடாரன் கூட்டத்தை விலக்கிக்கொண்டு மண்டபத்திலிருந்து நழுவ முயன்று கொண்டிருப்பதை நாட்டாண்மைக்காரர் பார்த்து விட்டார்.

அவ்வளவுதான்! ஒரே தாவாகத் தாவி அவன் பிடரியில் கை வைத்து இரண்டு அறை கொடுத்தார். பாம்புப்பிடாரன், "ஆ! அப்பா அடிக்காதீங்க சாமீ" என்று அலறினான்.

"எங்கேடா ஓடறே? இரகசியத்தை எல்லாம் சொல்லிவிட்டு, அப்பறம் ஓடலாம்! இப்ப என்ன அவசரம்? வா இப்படி... முதல்லே குடத்திலே இருக்கிற பாம்புகளிடமிருந்து இந்தப் பய கையை வெளியே எடு. அப்புறம் பாம்புகளை வெளியேற்றிவிட்டு விவரத்தைப் பஞ்சாயத்தாருக்குச் சொல்லு."

பிடாரன் திருட்டு விழி விழித்துக்கொண்டே நாட்டாண்மைக்காரரின் கட்டளைக்குப் பணிந்தான். கையை இறுக்கிக் கொண்டிருந்த பாம்புகள் விடுவதற்காக குடத்தின் வாயருகே குனிந்து, மகுடியை வாசித்தான். பிடாரன் நீண்டநேரம் மகுடி வாசித்த பிறகு வேலப்பனின் கை நெகிழ்ந்தது. விறைத்துப் போய் இரத்த ஓட்டம் நின்று நீலம் பரவியிருந்த அந்தக் கையை, மெல்ல வெளியே எடுத்ததும் வேலப்பன் தரையில் சாய்ந்தான்.

குடத்தை அடைத்துக்கொண்டிருந்த கை வெளியே வந்ததோ இல்லையோ? அதே வேகத்தில் 'மூசு மூசென்று' சீறிக்கொண்டு ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவாறே சரிஜோடியான ஒரு நல்ல பாம்பும், சாரைப் பாம்பும் வெளியே பாய்ந்தன. சமாளிக்க முடியாத வேகத்தில் யாரும் காணக்கூடாத எக்கச் சக்கமான நிலையில் வெளி வந்த அந்தப் பாம்புகளைக் கண்டு பிடாரன் வெலவெலத்துப் போனான். அவனுக்கே ஒன்றும் புரியவில்லை. எப்படி அவை ஒன்று சேர்ந்தன என்பதை அனுமானிக்க நேரம் இல்லை; கை நடுங்க, உடல் பதற, வியர்க்க, விருவிருக்க மகுடியை ஊதினான். அந்த நிலையில் அவைகளைக் கட்டுப் படுத்துவதற்காக அவன் மகுடி ஊதவில்லை என்றால் அவனுடைய உயிருக்கே ஆபத்து. உடலும் உள்ளமும் தழுவி 'நல்லதும்' சாரையுமாக அனுராகச் சேர்க்கையில் ஈடுபட்டு மகிழும் அந்த நிலையில், மனிதர் பார்த்தால் ஓட ஓட விரட்டிக் கடிக்காமல் விடாது. மண்டபத்தில் கூடியிருந்த கூட்டம் பின்னுக்குத் தள்ளி விலகி நின்று கொண்டது. பஞ்சாயத்தார் ஒதுங்கி நின்றார்கள். வீரநாராயணனும் ஒதுங்கி அவர்களோடு நின்றான். வேலப்பனின் சடலமும் இரண்டு செப்புக் குடங்களும்தான் நடுவில் கிடந்தன. சடலத்தின் அருகே இரத்தம் பிரவாகிப்பதுபோலக் கிடந்தது செவ்வரளி மாலை.

பாம்புகள் நடுவே பின்னிப் பிணைந்து, தம்மை மறந்த இன்ப வெறியின் போதையில், ஆடித் திளைத்துக்கொண்டிருந்தன. பிடாரனுக்கு ஊதி ஊதி மூச்சே மகுடிக் குழாய் வழியே வெளியேறி, செத்து விடுவான்போல இருந்தது. பாவம்! அவன் உடம்பிலிருந்து வியர்வை ஆறாகப் பெருகி வடிந்து கொண்டிருந்தன. கன்னங்கள் இரண்டும் ஊதி ஊதி அப்பமாகக் கன்றிவிட்டன. கண்கள் நெருப்புத் துண்டுகளாகச் சிவந்துவிட்டன. பாம்புகள் பிரியவில்லை. ஆட்டத்தையும் நிறுத்தவில்லை.

"சரி! காசுக்காக நியாய துரோகம் செய்த இந்தப் பயல் பிடாரனும் மூச்சுத் திணறிச் சாகத்தான் போகிறான். தப்புவதற்கு வேறு வழியில்லை" என்று தனக்குள் தீர்மானித்துக் கொண்டு விட்டார் நாட்டாண்மைக்காரர். அத்தனை பேரும் நெஞ்சு படபட என்று அடித்துக் கொள்ள, அந்தக் காட்சியை மிரண்ட நோக்கோடு பார்த்துக் கொண்டிருந்தனர். 'பிடாரன் செத்தான்' - என்றே தீர்மானிக்க யாரும் தயங்கவில்லை.

இந்தச் சமயத்தில் ஓர் ஆச்சரியம் நடந்தது! யார் செய்த புண்ணியமோ, அல்லது பிடாரனின் நல்ல காலமோ, அம்மன் கோவில் பூசாரி சூடத்தைக் கொளுத்தி சந்நிதி வாசற்படியில் வைத்தான். மகுடிக்கு அடங்காத பாம்புகள், சத்தியத்துக்காவது அடங்குகின்றனவா பார்ப்போம் என்று, சூடம் கொளுத்தி அம்மனைத் தியானித்தான். ஆடிக்கொண்டிருந்த பாம்புகள் வாயிற்படியில் எரிந்து கொண்டிருந்த சூடச் சுடரை வெறித்து நோக்கின. என்ன விந்தை! தெய்வம் இல்லை என்கிறார்களே, ஒரு சிலர்! ஆடிக்கொண்டிருந்த பாம்புகள் தனித்தனியே பிரிந்தன. வாயிற்படியில் எரிந்து கொண்டிருந்த சுடரைக் கடந்து, அம்மன் சந்நிதிக்குள் சரேலென்று பாய்ந்தன. அவை மறுபடியும் வெளியே வந்து விடாமல் இருப்பதற்காகக் கதவை இழுத்து, இறுக்கிச் சாத்தி வெளிப்புறம் தாழ் போட்டான் பூசாரி. பிடாரன் மகுடியைக் கீழே போட்டுவிட்டு நிம்மதியாக மூச்சு விட்டான். யாரோ ஓடிப்போய் கோவில் தோட்டத்திலிருந்து அவனுக்கு இரண்டு இளநீர் வெட்டிக் கொண்டு வந்து கொடுத்தார்கள். இளநீரைக் குடித்து ஆசுவாசப்படுத்திக் கொண்டான் அவன்.

"ஐயா! சாமி, என்னை மன்னிச்சிடுங்க. இந்தப் பாவி வேலப்பன் பிணமாகக் கெடக்கானே, இவனோட காசுக்கு ஆசைப்பட்டு, என்னென்னமோ செஞ்சிட்டேனுங்க."

"ஒரு செப்புக் குடத்திலே கழுத்தோரம் சுண்ணாம்பினாலே அடையாளம் பண்ணி, அதுலே மட்டும் சாரைப் பாம்பை அடைச்சிடு! ஒனக்கு வேணும்கிறதைத் தரேன்னான். வவுத்துக் கொடுமைங்க; சரின்னிட்டேன். சுண்ணாம்பாலே அடையாளம் போட்ட குடத்திலே சாரையையும் இன்னொரு குடத்திலே 'நல்லதை'யும் புடிச்சு அடைச்சேன். ஆனாப் பாருங்க... எனக்கும் தெரியாம இது நடந்திடுச்சு. நல்லதும் சாரையும் பக்கத்திலே இருந்தா ஒண்ணை ஒண்ணு தழுவிப் பிணையாமப் போவாதுங்க. அது பாம்புக பளக்கமுங்க. எனக்குத் தெரியாமலே, நல்லதும் சாரை இருந்த குடத்திலே போய்ப் பிணைஞ்சிடுச்சிங்க."

நீலம்மாள் கதை, ‘அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதையாக முடிந்ததே’ என்று வருந்தினர் பஞ்சாயத்தார். நீலம்மாளே விரும்பி வந்தாலும், அவள் தனக்கு வேண்டாம் என்று மறுத்துவிட்டான் வீரநாராயணன். பஞ்சாயத்தார் தீர்ப்புக் கூற இனி என்ன இருக்கிறது? கூற வேண்டியதைத்தான், பாம்புகள் கூறிவிட்டனவே.

பூசாரி மறுபடியும் சந்நிதியின் கதவைத் திறந்து, சூடம் கொளுத்திக் காட்டினான். இரண்டு பாம்புகளும் அம்மனுடைய தலையில் கிரீடம் வைத்ததுபோலப் பிணைந்து ஆடிக்கொண்டிருந்தன. நியாயத்தின் இருப்பிடம் அந்தத் தலைதானோ என்னவோ?

(1963-க்கு முன்)



## 82. எங்கிருந்தோ வந்தது!

மூணாறிலிருந்து உடுமலைக்குப் புறப்படும் கடைசி பஸ் புறப்பட்டுவிட்டது. எஸ்டேட் வாசலிலிருந்த டீக்கடையில் தோட்டத் தொழிலாளர்களின் கூட்டம் நிறைந்திருந்தது. டீக்கடை ராமுண்ணி நாயர் ஓய்வு ஒழிச்சலின்றிச் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்தான். நாயர் டீக்கடையில் வியாபாரம் உச்ச நிலையை அடையும் நேரம் அதுதான். தோட்டத் தொழிலாளிகள் கொழுந்து போட்டுவிட்டு, அன்றாடக் கூலியை வாங்கிக்கொண்டு வெளி வரும்போது, நாயருடைய கடையில் தேங்காய் எண்ணெயில் வறுத்த நேத்திரங்காய் வறுவல் கமகமத்துக் கொண்டிருக்கும்.

அரையணாவுக்கு வறுவலையும், ஒரு டீயையும் சாப்பிடாமல் அங்கிருந்து நகர எப்படிப்பட்ட ஆளுக்கும் மனம் வராது. நாயர் கடைக்கு விளம்பர போர்டு கிடையாது. உட்காரப் பெஞ்சுகள்கூடக் கிடையாது. வாசலில் சொதசொதவென்று ஈரம் கசிந்து கொண்டிருக்கும். ஆனாலும் வியாபாரத்துக்கு மட்டும் குறைவில்லை. நாயர் கடை வியாபார ரகசியமெல்லாம், அந்த நேந்திரங்காய் வறுவலின் மணத்துக்குள்தான் அடங்கியிருந்தது.

அந்த இடம் மூணாறில் ஒரு கேந்திர ஸ்தானம். தேயிலைத் தோட்டங்களின் பிரதேசத்துக்கு நடுமையான சாலை அது. ஆல்வாய், உடுமலை, பொள்ளாச்சி முதலிய வெளியூர் பஸ்கள் வந்து நிற்குமிடம். புறப்படுமிடமும் அதுதான்.

அப்போது மாலை ஆறரை மணிக்கு மேலிருக்கும். பிசுபிசுவென்று இளஞ்சாரல் தூறிக்கொண்டிருந்தது. தொழிலாளிகள் கூட்டம் குறைந்துவிட்டது. சாவகாசமாகக் கணக்கு வழக்குகளை முடித்துக்கொண்டு தோட்டக் கங்காணிகள் வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். முதுகுகளில் தேயிலைக் கொழுந்து பறிக்கும் நீண்ட கூடைகளோடு, கூலிக்காரப் பெண்கள் காலனிகளை நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். ஏற்கனவே மேகங்கள் கும்மென்று இருண்டிருந்தன. இப்போது அந்தி இருட்டும் சேர்ந்து கொண்டது. மலை முகடுகளைப் பாலாடைபோல் வெண்ணிற மூடுபனி போர்த்திருந்தது. காட்டுக் கோழிகள், மிளாமான்கள், யானைகள் ஆகிய வனவிலங்குகள் தொலைவில் இருப்பதற்கு அறிகுறியான ஒலிகள் மங்கலாகக் கேட்டுக் கொண்டிருந்தன.

எஸ்டேட்டுகளில் இரவுக் காவலுக்குப் போகும் பாராக்காரர்கள், கரும் பூதங்களைப் போலப் பெரிய பெரிய கம்பளி அங்கிகளைப் போட்டுக் கொண்டு போனார்கள். மலை நடுவே இருந்த மெயின் ரஸ்தாவின் ஜீப்கள், தோட்டத்து லாரிகள், டாக்ஸிகள், சர்வீஸ் பஸ்கள் சதா போன வண்ணமேயிருக்கும். இன்று ரஸ்தாவில் சூனிய அமைதி குடி புகுந்திருந்தது.

**ரா**முண்ணி நாயர் டீக்கடையை இழுத்து மூடுவதற்குத் தயாராகி விட்டான். மேற்குப் பக்கம் ரஸ்தாவிலிருந்து வந்த ஒரு புத்தம் புதிய 'ஹில்மன்' கார் நாயர் கடை வாசலில் வந்து நின்றது. காருக்குள் வேட்டையாடும் துப்பாக்கிகளோடு, வெள்ளைக் காரர் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்தில் ஒரு வெள்ளைக்கார யுவதியும் வீற்றிருந்தாள். அவருடைய மனைவியாகத்தான் இருக்கவேண்டும். காரை 'டிரைவ்' செய்துகொண்டு வந்த ஆள் யாரோ உயர்ந்த உத்தியோகத்தில் இருப்பவர் மாதிரி இருந்தார். தோற்றத்திலிருந்து மலையாளி என்றே அனுமானிக்க முடிந்தது.

"நாயர்...! நாயர்...!"

"யாரு மேனன் ஸாரா?" கடையின் உட்புறத்திலிருந்த ராமுண்ணி நாயர் கேட்டுக் கொண்டே வெளியே வந்தான்.

"என்னப்பா, நீ இன்னும் தயாராகவில்லையா?"

"இதோ ஒரு விநாடியிலே வந்து விடுகிறேனுங்க" என்று கூறி உள்ளே சென்றான் நாயர். கால்நாழிகையில் டீக்கடைக்குள்ளிருந்து வேட்டையாடுவதற்குரிய ஆடையோடு துப்பாக்கி சகிதம் வெளியே வந்தான். டிரைவருக்கு அருகில் நாயர் உட்கார்ந்து கொண்டதும் கார் புறப்பட்டு மூணாறில் சோத்துப்பாறை என்ற மலைக்குச் செல்கிற ரஸ்தாவில் சென்றது.

ராமுண்ணி நாயர் அந்தப் பிராந்தியத்தில் பெயர் பெற்ற ஷிகாரி (வேட்டை நிபுணன்). டீக்கடையோடு வேட்டையாடப் போவதும், வேட்டையாட வருபவர் களுக்கு கைட் (வழிகாட்டி) ஆகச் செல்வதும் அவனுக்கு உபதொழில்கள். அதில் நல்ல வருமானமும் உண்டு.

**அ**ன்று மாலையும் அப்படித்தான் ஒரு 'சான்ஸ்' அவனுக்குக் கிடைத்திருந்தது. அர்ச் வுட் என்ற வெள்ளைக்காரத் துரைக்குச் சொந்தமான தேயிலைத் தோட்டத்தில் யானை ஒன்று புகுந்து அழித்து வந்தது. நாள் தவறாமல் தொடர்ந்து ஒரு வார காலமாக இப்படி யானையால் தோட்டத்திற்குத் தீங்கு ஏற்படவே, 'அகப்பட்டால் அந்த யானையைச் சுட்டு விடலாம்' என்று பி.டபிள்யூ. டி - அனுமதி பெற்றார் அர்ச் வுட் துரை. எஸ்டேட் மானேஜரான கோப்பு மேனன் டீக்கடை நாயரைத் துரையின் உதவிக்கு அழைத்திருந்தார்.

எஸ்டேட் அருகில் யானை பழகுகிற இடத்தில் உயர்ந்த மரங்களுக்கு இடையே மூங்கில் கழிகளால் ஒரு பரண் கட்டப்பட்டிருந்தது. அந்தப் பரணின்மேல் இரவு முழுவதும் காத்திருந்து, எப்படியாவது யானையை வேட்டையாடி விடவேண்டும் என்று துரை, மேனன், நாயர் மூவரும் சேர்ந்து திட்டமிட்டிருந்தார்கள். துரையின் அருமந்த மனைவி லில்லி அர்ச் வுட் வேட்டையைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்பட்டதால் அவளையும் உடனழைத்துச் சென்றனர். எஸ்டேட் கட்டிடத்தில் இருந்த 'ஷெட்டில்' காரை நிறுத்திவிட்டு யானை வேட்டைக்காகப் போட்டிருந்த பரண்மேல் அவர்கள் எல்லாரும் ஏறி நின்றுகொண்டனர்.

*நாலைந்து பெரிய சிங்கோனா மரங்களின் கிளைகள் சந்திக்கும் இடத்தில், மூங்கில் கழிகளால் எழுபதடி உயரத்தில், பத்து இருபது அடி நீள, அகலத்துக்கு அந்தப் பரண் அமைக்கப்பட்டிருந்தது. மலைச் சரிவிலிருந்த எஸ்டேட்டுக்குள் மிருகங்கள் எந்த வழியாகப் பிரவேசிப்பது வழக்கமோ, அந்த வழியிலேயே பரண் இருந்தது.*

*அவர்கள் பரணில் ஏறுகிறபோது ஏழேகால் மணி. 'கீ-இ-இ' என்ற சிள்வண்டுகளின் ஓசை; அடர்ந்த இருட்டு. நான்கு பேர் கையிலும் 'டார்ச்லைட்' இருந்தன. பரண்மேல் மூங்கில் உறுத்தாமல் இருப்பதற்காகக் கித்தான்கள் ஒன்றின் மேல் ஒன்றாக விரிக்கப்பட்டிருந்தன. இதனால் சிமெண்டு பூசிய தரையைப் போலப் பரண் சமதளமாகத் தோன்றியது.*

*எல்லாருடைய துப்பாக்கிகளையும் வாங்கிப் பரணின் ஒரு மூலையில் சேர்த்து வைத்திருந்தான் நாயர். அர்ச்வுட்டும் திருமதி அர்ச்வுட்டுமாக ஆங்கிலத்தில் ஏதோ சுவாரஸ்யமான சம்பாஷணையில் ஈடுபட்டிருந்தனர். ராமுண்ணி நாயரும் கோப்பு மேனனும் பரணின் மற்றொரு மூலையில் உட்கார்ந்து கொண்டு, அடர்ந்து புதர் செறிந்த வழியில் யானை வருகிறதா என்பதை 'டார்ச் லைட்'டை அடித்துப் பார்த்துக் கொண்டிருந்தனர்.*

*"நாயர், அதை நீ நேரில் பார்த்ததில்லையே? யானை படு முரடு. அதோடு இப்போது அதுக்கு மதம் பிடித்த நிலை. உயரமே பன்னிரண்டடி சொல்லலாம். கொம்புகள் இரண்டரை அடிக்குக் குறையாது."*

*"இதைவிட முரட்டு யானையெல்லாம், இந்த நாயர் கைத்துப்பாக்கியாலே குண்டு வாங்கிச் செத்துருக்குதுங்க. இதென்ன பிரமாதம்!"*

*"அது என்னமோ நாயர்! இன்றைக்கு இதைக் கொன்று தொலைக்காமல் திரும்புவதில்லை என்று துரை கங்கணம் கட்டிக்கொண்டு வந்திருக்கிறார். இந்தப் பதினைந்து நாளைக்குள்ளே மட்டும் இந்த யானையினாலே, பத்தாயிரத்துக்கு மேல் நஷ்டம் என்றால் பார்த்துக் கொள்ளேன்?"*

*"யானை மட்டும் இன்றைக்கு வரவேண்டும். மூன்று பேரும் துப்பாக்கியை எடுக்க வேண்டியது. அது வந்ததும் குறி பார்த்து நான் 'ரைட்' கொடுத்ததும் 'பயர்' பண்ணிவிட வேண்டியது."*

*"மூன்று குண்டுகளையும், அதற்கும் அதிகமாக வாங்கிக் கொண்ட பின்னும் அது தறிகெட்டு ஓடுமே, அப்பா!'*

*"அதை ஓடவிடாமல் செய்வதற்கு ஒரு வழி இருக்குதுங்க. தொடர்ந்து மர்ம ஸ்தானங்களாகப் பார்த்து நான் சுடுவேன். எப்படியும் அது விழுந்துதான் ஆகணும்."*

*"உனக்கில்லாத சாமர்த்தியமா, நான் சொல்லிக் கொடுக்கப் போகிறேன். நீதான் வேட்டைக்கென்றே பிறந்தவன்ஆயிற்றே! துரையின் நன்மதிப்பை அடைய உனக்கு ஒரு நல்ல வாய்ப்பு."*

"அட! இதென்ன பிரமாதமுங்க? மூன்றாம் வருஷம் நாகர்கோவில் பக்கத்திலே, பாலமோர் எஸ்டேட்டிலே ஒரு வேட்டைக்குப் போயிருந்தேன். என் கையிலே இருந்ததெல்லாம் ஒரே ஒரு இரட்டைக் குழாய் 'ரைபிள்'தான். இப்போதாவது பரண்மேல் இருக்கோம். அப்போ தரையிலே ஒற்றையாக நேருக்கு நேர் நின்றே, இரண்டு 'கொம்பன்'களைச் சுட்டுத் தள்ளினேன். 'பாலமோர்' எஸ்டேட்டே ஆச்சரியப்பட்டது!"

"ராமுண்ணி, நீ சொல்லவா வேண்டும்? உன்னைப் பற்றி எனக்குத் தெரியாதா என்ன?"

"இருங்க! இருங்க! புதரிலே ஏதோ சலசலப்புக் கேட்கிறாப் போல் இருக்கிறது. அந்த டார்ச்சை இப்படிக் கொடுங்க."

ராமுண்ணி நாயர் கோப்பு மேனன் கையிலிருந்த டார்ச்சை வாங்கி வழிமேல் அடித்துப் பார்த்தான். ஒன்றும் தெரியவில்லை.

துரை ஆங்கிலத்தில் கோப்பு மேனனிடம் ஏதோ கேட்டார். மேனன் அதற்கு ஆங்கிலத்திலேயே மறுமொழி கூறினார். அடுத்து திருமதி துரையும் தனது கீச்சுக் குரலில் ஏதோ கேட்டாள். மேனன் அதற்கும் பதில் சொன்னார்.

"ஒன்றுமில்லை! நேரம் கழிந்துகொண்டே இருக்கிறதே? இன்று அது வராதோ?' என்று கேட்டார். 'வழக்கப்படி இன்றைக்கும் வந்துதான் தீரும்' என்று நான் பதில் சொன்னேன். 'மிருகங்கள் வழக்கமான பாதைகளை ஒரு போதும் மறக்க மாட்டா' என்று படித்திருப்பதாக 'அம்மா' கூறினார்கள். 'அது உண்மைதான்' என்றேன் நான்" என்றார் மேனன், நாயரிடம்.

* * *

சடசடவென்று மரங்கள் முறிபடுகிற ஓசை. கோடைக்காலத்து இடிபோல ஒரு யானையின் பிளிறல். இருளை ஊடுருவிக்கொண்டு வந்த அந்தப் பயங்கரப் பிளிறலும் மரங்கள் முறிபடுகிற ஓசையும் பரண் மேலிருந்ததால் யாவரையும் குலை நடுங்கச் செய்தன. திருமதி அர்ச்வுட், துரையின் முதுகுக்குப் பின்னால் ஒடுங்கி மறைந்து கொண்டாள். முகத்தில் வெளிறலும் கண்களில் மிரட்சியுமாக அவள் பயந்து நடுங்கினாள். துரைக்கும் கோப்புமேனனுக்கும் கூட உள்ளூற நடுக்கம்தான். ஆனால் அதை நாயருக்குத் தெரியாமல் மறைத்துக் கொண்டு, தைரியசாலிகளாக நடித்தனர்.

உண்மையிலேயே பயப்படாமலும் நிதானத்துடனும் இருந்தவன் ராமுண்ணி நாயர் மட்டும்தான்.

"சப்தம் போடாமல் இருங்கள். கொஞ்ச அரவம் அதன் காதில் பட்டாலும் போதும். வந்த வழியே திரும்பி ஓடத் தொடங்கிவிடும்; அல்லது கீழே வந்து; மரத்தை ஆட்டி அசைத்து நம்முடைய உயிருக்கே உலை வைத்து விடும்." உடனிருந்தவர்களை எச்சரித்துவிட்டு ஓசைவந்த திக்கை நோக்கி டார்ச் லைட்டின் ஒளியைப் பாய்ச்சினான் நாயர்.

ஏறக்குறைய இருபது கெஜ தூரத்தில் ஒரு சிறு கருங்குன்று கனவேகமாக உருண்டு வருவதுபோல் அந்தக் கொம்பன் யானை அட்டகாசமாகப் பாய்ந்து வந்து கொண்டிருந்தது. குன்றின் நுனியில் இரண்டு வெள்ளைப் பிறைகள் முளைத்த மாதிரி நீண்ட தந்தங்கள் டார்ச் ஒளியில் மின்னின.

மகா தீரர்களைப்போல பேசிக் கொண்டிருந்த அர்ச்வுட் துரையும் துரையம்மாளும், கோப்பு மேனனும் பரணின் மேல் இருந்த இடம் தெரியவில்லை. மூலையில் பம்மிப் பதுங்கிக் கொண்டு விட்டனர்.

நாயர் அது வந்துகொண்டிருந்த திசையில் விளக்கைப் பாய்ச்சவும், அது சட்டென்று பதினைந்து கெஜ தூரத்தின் வழியிலேயே நின்று விட்டது. அநுபவஸ்தனான தானே தவறு செய்துவிட்டதை நாயர் அப்போதுதான் உணர்ந்தான். 'டார்ச்'சை அணைத்து ஏற்றியதால் யானை சந்தேகமுறக் காரணமாக நடந்துகொண்டு விட்டோம் என்று தோன்றியது அவனுக்கு. கப்பென்று 'டார்ச்சை' அணைத்துவிட்டு அவன் பேசாமல் இருந்தான்.

"என்னப்பா நாயர்?... ஏன் லைட்டை அணைச்சுட்டே?" கோப்பு மேனன் மெல்லிய குரலில் அவன் காதருகே முணு முணுத்தார்.

"உஷ்! பேசாமல் இருங்கள். எல்லாம் நான் கவனித்துக் கொள்கிறேன். கேட்கிறபோது துப்பாக்கியை மட்டும் அந்த மூலையிலிருந்து எடுத்துக் கொடுங்கள், போதும்..." நாயர் மேனனை எச்சரித்தான். ஆரம்பத்தில் திட்டமிட்டிருந்தபடி மேனனும் துரையும் வேட்டையில் பங்கு கொண்டு யானையைச் சுடும் முயற்சியில் ஈடுபடுவதை இப்போது அச்ச மிகுதியினால் கைவிட்டு விட்டனர்.

விளக்கொளி நின்று போன பின் கால் நாழிகை அமைதியில் கழிந்தது. ஒருவிதமான சலனமும் ஓசையும் கேட்காததால் யானை நின்ற இடத்தைவிட்டு முன்புறத்திலோ பின்புறத்திலோ நகரவில்லை என்று தெரிந்தது.

சுடுவதற்குக் குறி வசதியாக அமைய வேண்டுமானால் அது இன்னும் அருகில் வரவேண்டுமென்பது நாயர் கருத்து. தாங்கள் உட்கார்ந்திருக்கிற பரணுக்கு நேராக அது வந்தவுடன் விளக்கை அடித்துக் குறி பார்க்கவேண்டும். குறிபார்த்த வேகத்திலேயே அது ஓட முயல்வதற்குள் குண்டுகளைச் சரமாரியாக அதன் உடலில் பாய்ச்சி முடித்துவிட வேண்டும்.

இந்தத் தீர்மானத்துடன் மேலும் சில விநாடிகள் பொறுமையைக் கடைப்பிடித்துப் பரண்மேல் அமைதியாக இருந்தான் அவன்.

'சொத்'தென்று துப்பாக்கிகளின் மேலே ஏதோ விழுந்த மாதிரி ஓசை கேட்டது.

"மேனன் ஸார்! அது என்ன? துப்பாக்கி மேலே ஏதோ விழுகிறாப்போல ஓசை கேக்குதே?"

"ஒன்றுமில்லை நாயர்! மரத்திலிருந்து ஏதோ சுள்ளி முறிந்து விழுந்திருக்கும். நீ காரியத்தைக் கவனி." நாயருக்கும் மேனனுக்கும் இடையில் மிக மெல்லிய குரலில் இந்தச் சம்பாஷணை நடைபெற்றது.

நாயர் கண்களையும் காதுகளையும் கூர்மையாக்கிக் கொண்டு கவனித்தான். யானை நகரவில்லை. கொம்பை ஆட்டிக்கொண்டு, அமைதியாக நின்ற இடத்திலேயே நிற்பது டார்ச்சின் உதவியின்றியே தெரிந்தது.

மீண்டும் 'சொத்'தென்ற ஓசையுடனே துப்பாக்கிகளின் மேல் ஏதோ விழுந்தது. நாயர் துப்பாக்கிகளைப் பரணின் வடக்கு மூலையில், மரப் பொந்திற்கருகில் வைத்திருந்தான். இப்பவும் முன்போலவே ஏதாவது சுள்ளிதான் விழுந்திருக்கும் என்று சமாதானமடைந்தான்.

குண்டு வெடிக்கும் குழாய்களை வடபுறம் யானை வருகிற பாதையை நோக்கியும், கைப்பிடிகளைப் பரணின் பக்கமாக இருக்கும்படி துப்பாக்கிகளை வைத்த நினைவு அவனுக்கு ஞாபகத்தில் இருந்தது.

மேனனின் உதவியின்றி நாயரே, தான் உட்கார்ந்த இடத்திலிருந்து கை நீட்டி எடுக்கக் கூடிய சமீபத்தில்தான் துப்பாக்கிகள் இருந்தன.

யானை பரணுக்கு அருகில் வரவேண்டியதுதான் பாக்கி. நாயர் துப்பாக்கியைக் கைநீட்டி எடுத்துவிடுவான். துரையின் கையிலும் மேனன் கையிலும் நாயர் கையிலும் தனித்தனியே டார்ச் லைட்டுகள். இருந்தன. 'யானை அங்கே வருகிற வரை' வெளிச்சம் போட்டு அதை மிரட்டி ஓட்டி விடக் கூடாது' என்றுதான் பேசாமல் ஒண்டிக் கொண்டு பரணில் இருந்தனர்.

கொஞ்ச நாழிகை ஆயிற்று. யானை பழைய பாய்ச்சலோடு மீண்டும் முன்னேறியது. பரணுக்கு அருகிலும் வந்துவிட்டது. அப்பப்பா! என்ன பயங்கரமான மதவெறி? மலையே அதிர்ந்து போகும்படியாகப் பிளிறிக்கொண்டு, கொம்புகளை ஆட்டியபடியே கீழே வந்து விட்டது. குறி பார்க்க வசதியாக சமீபத்தில் யானை வரவும், நாயர் லைட்டை அடித்துக் குறி பார்த்துக்கொண்டே கையைத் துப்பாக்கியின்மேல் வைத்தான். துப்பாக்கி அவன் கையில் வரவில்லை. ஆனால், என்ன ஆச்சரியம்?... அவன் தொடுவதற்கு முன்பே தானாகவே எல்லாத் துப்பாக்கிகளும் படீர்படீரென்று வெடித்தன. அத்தனைக் குழாய்களிலிருந்தும் குண்டுகள் வடக்கு நோக்கிப் பாய்ந்தன. துப்பாக்கிப் புகையும் அதன் நெடியும் பரண்மேற் சூழ்ந்தது.

யானை முன்னிலும் அதிக பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு வந்த வழியே திரும்பி ஓடலாயிற்று. 'இதென்ன மாயமா? சூன்யமா? துப்பாக்கிகளை ஒருவரும் தொடாமலிருக்கும்போதே வெடிக்கின்றனவே! வேட்டைக்கு வாகாக வந்து நின்ற யானை ஒரு நொடியில் தப்பி ஓடிவிட்டது. நாயருக்கு ஏமாற்றம் தாங்க முடியவில்லை.

"வாட்? வாட்!" துரை ஆச்சரியத்தோடு வினாவினார். "என்ன நாயர்? இதென்ன துப்பாக்கி தானாக வெடிக்கிறது!" மேனன் வியந்தார்.

"வாட்-ஏ ஒண்டர்புல் இன்ஸிடெண்ட் (என்ன ஆச்சரியகரமான நிகழ்ச்சி)" - திருமதி அர்ச்வுட் கீச்சுக் குரலில் இரைந்து கத்தினாள். நாயர் ஆச்சரியந் தாங்காமல் குண்டுமாரி பொழிந்து கொண்டிருந்த துப்பாக்கிக் குவியலை நெருங்கி அவற்றின்மேல் டார்ச் ஒளியைப் பரவவிட்டான்.

என்ன விந்தை! அவனுக்கு அதைக் கண்டு வியப்பதா? ஆத்திரப்படுவதா! என்றே புரியவில்லை!

"அப்போதே - சொத் என்று சத்தம் கேட்டபோதே நினைத்தேன்!" என்று நாயர் முணுமுணுத்தான். மற்ற மூவரும் நெருங்கிப் பார்த்தனர்.

இரண்டு பெரிய உடும்புகள் துப்பாக்கிகளை ஒன்று சேர்த்துக் கட்டிக்கொண்டு அவற்றின் குதிரைகள் இருந்த பக்கமாக அழுத்தி, இறுக்கி இழுத்துக் கொண்டிருந்தன.

திட்டமிட்டு முன்னேற்பாட்டோடு செய்த பெரிய காரியத்தை, கேவலம் இரண்டு உடும்புகள் படுதோல்வியடையச் செய்துவிட்டன. அவைகள் எங்கிருந்து வந்தன? எங்கிருந்தானால் என்ன? எங்கிருந்தோ வந்தன; வேட்டை தவறியது தவறியதுதானே!

**(1963-க்கு முன்)**



# நா. பார்த்தசாரதியின் நாவல்கள்

## சரித்திர நாவல்கள்

மணிபல்லவம்
பாண்டிமா தேவி
நித்திலவல்லி
வெற்றிமுழக்கம் (உதயணன் கதை)
மகாபாரதம் (அறத்தின் குரல்)
கபாடபுரம்
வஞ்சிமாநகரம்

## சமூக நாவல்கள்

பொன் விலங்கு
குறிஞ்சிமலர்
சத்திய வெள்ளம்
சமுதாய வீதி
(சாகித்திய அகாதமி பரிசு)
துளசி மாடம்
(இராஜா சர் அண்ணாமலை இலக்கியப் பரிசு)
சாயங்கால மேகங்கள்
(தமிழ்நாடு அரசு பரிசு)
ஆத்மாவின் ராகங்கள்
பிறந்தமண்
கோபுர தீபம்
நீலநயனங்கள்
கற்சுவர்கள்
பொய்ம் முகங்கள்
நெற்றிக்கண்
அனிச்சமலர்
நெஞ்சக்கனல்
நினைவின் நிழல்கள்
நிசப்த சங்கீதம்
மனக்கண்
சுலபா
அநுகிரகா
பட்டுப்பூச்சி
புதுமுகம்

## கவிதை

மணிவண்ணன் கவிதைகள்

